


மகரிஷி தயானந்த சரஸ்வதி

அருளிய

# சத்தியார்த்தப் பிரகாசம்

## (உண்மை விளக்கம்)

தமிழாக்கம் :

கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார்

(யோக சமாஜம், சென்னை-[illegible])

வெளியீடு :

ஆரிய சமாஜம் (சென்ட்ரல்)

34-A, ஆதியப்ப நாயக்கன் தெரு

சென்னை-600001

1974

[விலை ரூ. 20

ஓம்

மகரிஷி தயானந்த சரஸ்வதி

அருளிய

# சத்தியார்த்தப் பிரகாசம்

## (உண்மை விளக்கம்)

தமிழாக்கம் :

கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார்

(யோக சமாஜம், சென்னை-20)

வெளியீடு :

ஆரிய சமாஜம் (சென்ட்ரல்)

34-A, ஆதியப்ப நாயக்கன் தெரு

சென்னை-600001

1974 [விலை ரூ. 20




மகரிஷி தயானந்த சரஸ்வதி

அருளிய

# சத்தியார்த்தப் பிரகாசம்

## (உண்மை விளக்கம்)

தமிழாக்கம் :

கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார்

(யோக சமாஜம், சென்னை-20)



வெளியீடு :

ஆரிய சமாஜம் (சென்ட்ரல்)

34-A, ஆதியப்ப நாயக்கன் தெரு

சென்னை-600001

1974

[விலை ரூ. 20

*First Edition—1974*

MAHARISHI DAYANANDA SARASWATI'S

# SATYARTHA PRAKASH
## (TRUTH-LIGHT)

*Tamil Rendering by:*

KAVIYOGI MAHARISHI

SHUDDHANANDA BHARATI

*(Yoga Samaj, Madras-20)*



ARYA SAMAJ (CENTRAL)

34-A, AUDIAPPA NAICKEN STREET

MADRAS-600001

1974

*Printed at*

Kabeer Printing Works, 193, Triplicane High Road,
Madras-600005



மகரிஷி தயானந்த சரஸ்வதி

# FOREWORD

I deem it a privilege to write a brief foreword to this book, the Tamil translation of "Satyartha Prakash." We are deeply beholden to Kaviyogi Shuddhananda Bharati for giving us a faithful version in Tamil of Swami Dayanand's *Magnum Opus*. The book could not be published earlier though the manuscripts have been with us for some years now. It was because the book had to be edited suitably in tune with the original in Hindi. We had been feeling that this very important piece of work could be done effectively only by one who is not only well versed in Tamil but is also thoroughly conversant with the principles of Arya Samaj. There is no doubt that we have in Sri T. Narayanji a gentleman who has these qualities to an admirable extent. He is one of the earliest Arya Samajists in Madras and has been the General Secretary of the organization for a number of years. We are happy that he took up the responsibility of editing the Tamil translation and has done it with his characteristic sincerity and skill. It is due to his strenuous efforts that the work has been completed satisfactorily and in a short time. We record our heartfelt appreciation of his labours in this direction. By his devoted work, he has absolved himself to a great extent of "Rishi Rin."

I hope and trust the book will have wide diffusion and awaken in the readers true faith.

Satya Dev

President
Arya Samaj (Central) Madras.

Madras
1—8—1974

" முத்தமிழ்ப்பண்ணை "
வைரி செட்டிப்பாளையம்-621012.
திருச்சி மாவட்டம்.

# பொருளடக்கம்

## நான்காம் அத்தியாயம்

## பனிரண்டாம் அத்தியாயம்

## பதிப்புரை

மகரிஷி தயானந்தரின் சத்தியார்த்தப் பிரகாசம் அல்லது உண்மை விளக்கம் உலகப் பொதுநூல், அறிவுச் சுரங்கம், ஆத்மீகப் புரட்சி நூல். இந்நூலே பாரத தருமத்தைப் பாருக்கு விளக்கும் பரிதி போன்றது. இந்நூலைக் கற்றவர் பன்னூலைக் கற்றவர் ஆவார். நமது பாரதப் பண்பாட்டின் முழு உருவமும் வேதக் கலையாக உருவெடுத்து நிற்கிறது. " வேதத்தினும் சாத்திரம் வேறில்லை " நாஸ்தி வேதாத் ஸமம் சாஸ்த்ரம் " என்பது பழமொழி. இன்று புராதன வேதக் கலையை நாம் அறிகிறோம், அதன் அனுஷ்டானப் பயனைப் பெறுகிறோம் என்றால் அதன் பெருமை மகரிஷி தயானந்தரையே சாரும். அவரே பாரத மறு மலர்ச்சியின் தந்தை.

தயானந்த முனிவரின் அற்புத நூலான சத்தியார்த்தப் பிரகாசத்தை நல்ல தமிழில் மொழிபெயர்த்து வெளியிடத் துடித்தோம். அதற்குத் தக்க அருட்புலவர் யார் ? கவியோகி மகரிஷி சுத்தானந்தரே யாவார். அவர் எங்கே யிருக்கிறார் ? அரவிந்தாசிரமத்தில் மௌன நிஷ்டையில் ஆழ்ந்திருக்கிறார். மேலே அரவிந்தர் ; கீழே சுத்தானந்தர். அவர் அறையில் யாரும் புக முடியாது ; அவர் யாரையும் பார்ப்பதில்லை ; பேசுவதில்லை ; உணவு, பழமும் கடலையும் ஒருவேளை. அவர் கருவி கரணங்களை ஒடுக்கிக் கண் மூடி மகா துரிய சமாதியில் ஆழ்ந்திருந்தார்.

ஒருநாள் ஆரிய சமாஜம் புகுந்து அவர் ஜன்னல் திரையைத் தூக்கி ஒரு சீட்டை உள்ளே வைத்தது. ஆரியபவன் சர்மாஜீ, நான் (நாராயணன்), கங்காப்பிரசாது, முதலிய ஆரியசமாஜிகள் சுத்தானந்தரைப் பார்த்தோம். சுத்தானந்தர் ஒளிப் பிழம்பாகத் தவக்கனல் புன்னகைக்க எங்களுக்குத் தரிசனம் அளித்தார். சர்மாஜீ காந்தத்தில் சிக்கியது போலத் திகைத்துநின்றார். கங்காப் பிரசாதர், " நான் தயானந்தரைச் சிறு வயதில் பார்த்தவன் ; நான் நீதிபதியா யிருந்தவன் ; அகில உலக ஆரிய சமாஜத் தலைவன். வேத தர்மத்தைப் பரப்ப தயானந்தர் எழுதிய சத்தி

யார்த்தப் பிரகாசத்தைத் தாங்கள் தமிழில் மொழிபெயர்த்துத் தர வேண்டும். தாங்களே அதற்கு ஏற்றவர் '' என்று வணக்கமுடன் சொன்னார். சுத்தானந்தர் இணக்கமுடன், '' சத்தியார்த்தப் பிரகாசமே எனக்கு வழிகாட்டிய நூல்; தயானந்தரை வேதத் தந்தையாகக் கருதி வணங்குகிறேன். ஆரிய சமாஜத்தின் நேரிய நண்பன் யான்; இதோ தங்கள் விருப்பம் நிறைவேறுகிறது '' என்று உடனே பேனாப் பிடித்தார். ஸ்ரீ கங்காப் பிரசாதர் விருப்பப் படி சுத்தானந்தருக்கு நான்கு வேதங்களையும், தயானந்தரைப் பற்றிய ஆங்கில இந்தி நூல்களையும் அனுப்பினோம். நான் சுத்தானந்தருக்கு ஒரு கட்டுக் காகிதம் தந்தேன். மூன்றே மாதங்களில் அத்தனைக் காகிதங்களும் தமிழ் சத்தியார்த்தப் பிரகாசமாகிவிட்டன. '' மொழிபெயர்ப்பு தயார், நாராயணர் வருக, பெறுக!'' என்று கடிதம் வந்தது. துள்ளிக் குதித்து ஓடினேன் புதுவைக்கு. எனக்கு மட்டும் சுத்தானந்தரைப் பார்க்கத் தனிச் சலுகையிருந்தது. அவர் ஜன்னல் முன்னாலே நின்றேன்; திரை தூக்கியது; புன்னகை மின்னியது; சுத்தானந்தர் நிஷ்டையிலிருந்து எழுந்தார். சத்தியார்த்தப் பிரகாசம் எழுதிய காயிதம். அடுக்குகளை என் கையில் வைத்தார்; கைதாங்க முடியவில்லை; மகிழ்ச்சி தாங்கவில்லை. எனது குருநாதரான சுத்தானந்த மகரிஷியின் கருணையை என்னென்பது!

'' தயானந்தரின் வரலாறும் எழுதவேண்டும் '' என்றேன். புன்னகையுடன் பேனா குணுகுணு என்று காயிதத்தில் ஓடியது; ஒரே மாதத்தில் தயானந்த ஜோதி உருவாகியது. அதை 1948ஆம் ஆண்டு வெளியிட்டோம். சத்தியார்த்தப்பிரகாசத்தை அச்சிட்டு வழங்க ஆர்வம் கொண்டிருந்த ஆரிய பெருமகன் ஸ்ரீ மாணிக்ஜி சர்மா இவ்வுலகை நீத்தார். ஆகவே சத்தியார்த்தப் பிரகாசம் வெகு நாட்களாக மூலையில் உறங்கிக்கொண்டிருந்தது.

பல வருடங்களுக்குப் பிறகு, 1972ஆம் ஆண்டு, இதை அச்சிட சென்னை ஆரிய சமாஜக் கமிட்டி தீர்மானித்தது. ஆனால் அதைச் சுற்றி சில வாக்குவாதப் புயல்கள் வீசின. முடிவில் சென்னை ஆரிய சமாஜத் தலைவர், ஸ்ரீ சத்யதேவ் அவர்களின் முயற்சியால், ஹோஷியார்பூர் பன்மொழிப் புலவர்கள் குழுவின் ஹிந்தி, தமிழ், சம்ஸ்கிருதம் வித்வான்கள் பரிசீலித்து, ' சுத்தானந்தர் மொழி பெயர்ப்பு தமிழ் நடையில் சிறந்து, மூலத்திற்கு சரியானது; இதையே ஏற்கவேண்டும் ' என்று தெரிவித்தனர்.

ஆகவே இதை வெளியிட சென்னை ஆரிய சமாஜம் முடிவு செய்தது; அதற்கான பொருளையும் ஒதுக்கியது. டில்லி, சர்வ தேசிக ஆரிய பிரதிநிதி சபையின் (International Aryan League, Delhi) பொருளுதவியும் ஓரளவுக்குக் கிடைத்தது.

ஆனால் கிறிஸ்து இஸ்லாம் பற்றிய பகுதிகளை இன்னும் சுத்தானந்தர் மொழிபெயர்க்கவில்லை. சுத்தானந்தர் எல்லா மதங்களிலும் "ஏகம் ஸத்" உணர்பவர். பிற மதக் கண்டனங்களை ஒப்புவாரா என்று ஐயுற்றேன். "வேலை நடக்கட்டும்; 13, 14, வரும்" என்றார். ஒரே மாதம், பைபிள் குரான் எல்லாம் ஆராய்ந்து நூலை முடித்துக் கொடுத்துவிட்டார். ஒவ்வொரு சமயத்தின் மூலங்களையெல்லாம் புரட்டிப் பார்த்து, தயானந்தரின் உள்ளத்தை உணர்ந்து, வேதத்தையும் ஆராய்ந்து சுத்தானந்தர் இந்தத் தெளிவான தமிழ் சத்தியார்த்தப் பிரகாசத்தை ஆக்கினார்.

இந்நூலை இவ்வளவு அழகாக வெளியிட்டுத் தந்த கபீர் அச்சகத்திற்கும், அச்சுத்தாட்களைப் பார்த்து திருத்தி உதவிய அன்பருக்கும் நன்றி. இந்த மாபெரும் ஞான-வேள்விக்குப் பொருளுதவிய புரவலருக்கும் மிக மிக நன்றி. சர்வதேசிக ஆரிய பிரதிநிதி சபையின் நிர்வாகிகளுக்கும் எமது நன்றி.

சுத்தானந்தர் மகரிஷி, தவம் பெற்ற தவம், சமயோக சித்தர், யோக விஞ்ஞானி, ஜீவன் முக்தர், கல்விக் கடல், அருட்கவி. சிறுவயதிலிருந்தே பராசக்தியருளால் பாடத் தொடங்கி இன்றும் இளம் பொலிவுடன் தியானத்தில் இறைவனைப் பாமலரால் வழி படுகிறார். இவர் வாழ்க்கை முழுவதும் அருள் இயக்கம். ஆயிரத்திற்கு மேல் நூல்களை பல துறைகளில் உலகிற்கு ஈந்த கவியரசர், கலையரசர், பன்மொழிப் புலவர் சுத்தானந்தர். இவரது நூல்கள் உலகப் புகழ்பெற்றவை. அவர் உலகிற்குச் செய்துள்ள அறிவுப் பணி அளவற்றது.

அவர் ஆரிய சமாஜத்திற்குச் செய்துள்ள தொண்டுகள் மிகப் பலவாம். ஆரிய சமாஜம் மிகவும் கடமைப் பட்டு அவருக்கு எப்படி நன்றி செலுத்துவது? அவரையே கேட்டேன். அவர் புன்னகைத் தவழ "இன்னும் இன்னும் பேறுவுக்கு ஒட்டமளியுங்கள்; ஓயாது வேலை கொடுங்கள்" என்றார்.

சத்தியார்த்தப் பிரகாசம் பற்றித் தொடர்பாக வாரச் சொற்பொழிவாற்றி வேத வாழ்வை விளக்கம் செய்ய மகரிஷி சுத்தானந்தர் முன் வந்துள்ளார். அதற்கு ஆரிய சமாஜம் ஆக்கம் தரும்; பொது ஜனங்கள் எழுக; வருக; அறிவுப் பயன் பெறுக!

உலக மக்கள் ஓர் குலமாக வாழ இறைவன் அருள் புரிவானுக!

ஸ்வஸ்தி: பந்தாம் அனுசரேம
சூர்ய சந்த்ர மஸாமிவ

இரவியும் மதியும் போலே இன்புறு வழியிற் செல்வோம்.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

ஆரிய சமாஜ் (சென்ட்ரல்)
34-A ஆதியப்ப நாய்க்கன் தெரு,
சென்னை-600001
12-7-1974

T. நாராயணன்
பொதுச் செயலாளர்

# வழிகாட்டிய ஒளி

[கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார்]

நான் தூய வேதகுலத்திற் பிறந்தேன்; வேதமும் கற்றேன்; எனினும் ஆங்கிலப் பாதிரிமார் உறவால் நமது மொழி, வழிகளைப் புறக்கணித்து, கிறிஸ்துவ சமயத்திலும் புகத் துடித்தேன். என்னை மதம் மாற்றி அமெரிக்காவுக்கு அனுப்பி, ஒரு பிஷப் ஆக்கவும் முயற்சிகள் நடந்தன. ஏசுநாதர் வரலாற்றை நாடகமாக எழுதி அறிஞர் முன் நடித்தேன்; கவிதையாகப் பாடினேன். சாது சுந்தரசிங் என்னைக் கவர்ந்தார்; இருவரும் கைலைமலையில் கூடி மனித சமுதாயத்தைச் சிலுவை யடியில் ஒன்று கூட்ட திட்டமிட்டோம். "இந்தியா கிறிஸ்துவமாகுமா?" என்ற உரையாடலில் எனக்கு இடம் கிடைத்தது. மாபெரும் கிறிஸ்துத் திருநாளில் அக்கூட்டம் நடக்கிறது. கிறிஸ்துவம் பற்றிப் பேச ஏராளமான நூல்கள் உண்டு. நமது வேத தருமம் பற்றிப் பேச ஆதார நூல் எங்கே என்று தேடினேன்.

அப்போதுதான் 'சத்தியார்த்த பிரகாசம்' என் கையிற் கிடைத்தது. அதை உதவினவர் M. J. சர்மா, ஆரியசமாஜி. அவர் யூனானி ஆயுர்வேத மருத்துவர். நல்ல மருந்துகள் செய்து மதுரை மீனாட்சியம்மன் கோவில் முன்னே, அந்திக் கடைப் பொட்டலில் விற்று அதில் வந்ததைக்கொண்டு குடும்பம் நடத்தி வேதப் பிரசாரமும் செய்துவந்தார். அவர் தேள்கடி மருந்தும் விற்றார். ஒரு கூண்டில் தேள்களைக் கொண்டுவந்து 'தேள், கொட்டிக் கொள்றான்; மருந்து போட்றான், விஷம்போறான்' என்று கொச்சைத் தமிழ் பேசி மருந்து விற்றார். ஒரு நாள் நான் தைரியமாக தேள் கொட்டிக் கொண்டேன்; மருந்து தடவினார். கடிவலி நின்றது.—அதுமுதல் அவருக்கு என்னிடம் அன்பு. "சர்மாஜீ என்னைப் பர சமயத் தேள் கொட்டி விஷம் ஏறுகிறது. நான் மதம் மாறும் நிலை வந்துள்ளது, என்னை மீண்டும் வேத நிலைக்குத் திருப்பும் மருந்துள்ளதா?' என்று கேட்டேன். சர்மாஜீ 'இதோ சத்தியார்த்தப் பிரகாசம் படியுங்கள்; இது நல்ல மருந்து; இதன் மருத்துவர் தயானந்தர்' என்று தந்தார். ஆங்கிலம் இந்தி—இரண்டிலும் சத்தியார்த்த பிரகாசம் படித்தேன்; தயானந்தர் வரலாற்றையும் படித்தேன்;

உடனே மறுமலர்ச்சி பெற்றேன். மாபெரும் கூட்டத்தில் மாபெரும் பாதிரியார் முன்னே வேத விளக்கம் செய்தேன். "இதோ தயானந்தரின் சத்திய ஜோதி நூல்; இது நமது இந்தியர் மனதிற் புகுந்து, வாழ்விற் பொலிந்தால், ஆட்களைச் சுற்றிக் கும்மாளம் போடும் எந்தச் சமயமும் பலிக்காது; வேத தருமமே இந்நாட்டில் விளங்கும். அதன் ஒளியில் வேறு போட்டிச் சமயங்கள் மங்கிப்போகும்" என்று வீறிட்டேன். அதனால் எனக்கு வந்த சோதனையும் வாதனையும் சொல்லி முடியாவாம். எனினும் சத்தியார்த்தப் பிரகாசம் என் வாழ்வில் பெரும் புரட்சியை உண்டாக்கியது. எனக்கு வழிகாட்டிய ஒளி அதுவே; அதனாலேதான் இன்று நான் சனாதன வேத தரும யோகியாயிருக்கிறேன். தயானந்தர் போலவே வாழவேண்டும் என்று என் உள்ளம் துடித்தது. அவர் அடிச்சுவட்டிலேயே ஆர்வமுடன் நடந்தேன். நான் ஆரிய சமாஜத்திடம் அளவற்ற அன்பு மேவினேன்.

வேதம் காட்டும் சமயோக சித்திபெறவே நான் அரவிந்த பகவான் திருவடியில் கால் நூற்றாண்டு கடுந் தவம் புரிந்தேன். அந்தக் காலமே எனது ஆயுட் காப்பியமான பாரதசக்தியும் முற்றுப்பெற்று அரவிந்தர் அருளால் வெளி வந்து உலாவியது.

அந்தக் காலம் என்னைப் பார்க்கப் பல அறிஞரும் அன்பரும் வந்ததுண்டு. மௌனமாகவே எழுத்தில் அவர்களுடன் தொடர்பு கொண்டேன்.

அவருள் அன்புமணி ஆரிய நாராயணன் (T. நாராயணன்) ஒருவர். இவர் சமய சஞ்ஜீவியாக எனக்குச் செய்த உதவிகள் மிகப் பல. இவர் நவமணி புலவர். பொதுநலச் செம்மல்; மனத்திட்பமும் வினைத்திட்பமும் கொண்ட மாண்பினர்.

நான் ஆழ்ந்த மௌனத்தில் ஒருமை கொண்டிருந்த நாட்களில், இவர் என்னை அடிக்கடி காண்பதுண்டு. ஒருதரம் வள்ளல் ஆரியபவான் மாணிக்ஜீ சர்மாவை அழைத்து வந்தார்; சத்தியார்த்தப் பிரகாசத்தை மொழிபெயர்க்க வேண்டும் என்று வள்ளல் சர்மா வேண்டினார். பிறகு வந்தார் கங்காப் பிரசாது. இவர் ஆரியசமாஜத் தலைவர்; முதல் நீதிபதியாயிருந்தவர். தேரிகருவால் சமஸ்தானத்தில் நீதி செலுத்திப் பல நன்மைகள் செய்தார். இவர் தத்துவ வித்தகர்; தயானந்தரை நேரே கண்டவர். அரிய அறிவுப் பணிபுரிந்தவர். சர்வ தேசிய

ஆரியப் பிரதிநிதி சபைத் தலைவர். இவர் என்னிடம் பேரன்பு பாராட்டி "சத்தியார்த்த பிரகாச"த்தைத் தமிழாக்க வேண்டினார். இந்தியிலும் ஆங்கிலத்திலும் உள்ள எல்லா ஆரியசமாஜ நூல்களுடன் நான்கு வேதத் தொகுதிகளையும் எனக்கு உதவினார். அத்தனையும் ஆய்ந்து கற்றேன். சூபா கு நதல ஆசிரியர் சந்திர காந்தரும், வேதமார்த்தாண்டர் தருமதேவரும் என்னை ஊக்கினர். சத்தியார்த்தப் பிரகாசத்தை மளமளவென்று தமிழாக்கி நாராயணனிடம் அளித்தேன்.

ஸ்ரீ அரவிந்தர் இந்த முயற்சியை அறிந்து "பத்து சமுல்லாசங்களைத் தமிழாக்கினால் போதும்" என்றார். பத்து சமுல்லாசங்களை முடித்து நாராயணனிடம் தந்தேன். மண்டனப் பகுதி முற்றிற்று; கண்டனப் பகுதியைக் கண்டு கலங்கினேன். ஏனெனில் நான் உலகச் சமயங்களைக் கற்று நின்றுள்ளேன். எதிலும் ஒருமை காண்பதே என்னியல்பு. நான் சமணம், பௌத்தம், கிறிஸ்துவம், இஸ்லாமியம் ஆகிய பல சமயங்களை ஊன்றிக் கற்று நின்று பார்த்துள்ளேன். அததன் பொதுநிலையறங்களை பாரத சக்தி மகா காவியத்திற் செப்பனிட்டுப் பாடியுள்ளேன். பாரத சக்தி சாதன காண்டத்தில் உலகச் சமயங்கள் தத்துவங்கள் யோக மார்க்கங்களை விளக்கி எதற்கும் முரணில்லாத சமயோகத்தைப் பாடியுள்ளேன்.

ஒரேகடவுள், ஒரேயுலகம்
ஒரே யான்ம நேயர் நாம்
ஒரே வானக் குடைநிழலில்
ஒருமை கொண்டுவாழுவோம்
உழைத்துப்பிழைக்கும் உரிமைகூடி
ஒரேகுலமாய் வாழுவோம்
உள் அன்புசூழு வோம்

என்பது என் சமயோக முழக்கம். பிற மதங்களில் உள்ள முத்துக்களை பாரத சக்தியிற் கோத்து வேண்டாத குப்பைகளை ஒதுக்கித் தள்ளி மனித சமுதாய ஒன்றியத்திற்கு வழி வகுத்துள்ளேன். நான் எப்படி சத்தியார்த்தப் பிரகாசத்தில் உள்ள கண்டனப் பகுதிகளை எழுதமுடியும் என்று நீண்டகாலம் சிந்தித்து, மீண்டும் 11, 12, 13, 14-ம் சமுல்லாசங்களை ஆராய்ந்தேன். குப்பை மேவிய வீட்டைக் கூட்டிச் சுத்தம் செய்ய

இப்பகுதி உதவும் என்றே உணர்ந்தேன். சிரத்தானந்தர் ஒரு முறை அவ்வாறே கூறினார். தயானந்தருடன் உள்ளொருமை கொண்டு தியானித்தேன். "உண்மை ஒளி காட்ட வேண்டு மானால், பொய்க் குப்பையைத் நீக்கித் தள்ளவேண்டும். எந்தச் சமயத்தையும் குறை கூறல் என் விருப்பமன்று. அவற்றிற் படர்ந்த குப்பை கூளங்களை அள்ளிக் கொட்டித் தெள்ளிய அறிவுடன் பார்த்தால் எல்லாம் "எகம் ஸத்" என்ற வேத உண்மையில் ஒன்றுகூடும்" என்று தயானந்தர் என்னுள் உணர்த்தினார். ஆதலால் புராணி குராணி கிராணி—ஆராய்ச்சி செய்து சத்தியார்த்தப் பிரகாசம் 11, 12, 13, 14-ம் சமுல்லா சங்களை முடித்துக் கொடுத்தேன். சர்மா, கங்காப்பிரசாதின் ஆவி மகிழ இந்தப் பணி நிறைவேறியது.

இந்த மொழிபெயர்ப்பை இவ்வளவு அழகாக வெளியிட்டுத் தமிழுலகிற்குத் தந்த ஆரிய சமாஜத்திற்கு மிகமிக நன்றி. இதன்பால் பெரு முயற்சி மேவிய என் ஞானச்சேய் ஸ்ரீ ஆரிய நாராயணருக்கு மனங்கனிந்த நன்றி. இனி இந்த நூற் பயனைக் கேளுங்கள்.

## வேதக்கலை விளக்கம்

உலகின் ஆத்மாலயம் பாரத புண்ணிய பூமியாகும், இது தவ முனிவர் நாடு; இதன் அருள் நூல்களெல்லாம் ஆவேச முனிவரால் ஆயின. வேதமே இதன் போதம், யோகமே இதன் வாழ்வு.

வேதமும் வாழ்வும் ஒன்றும்
　　வீரமும் அறமும் ஒன்றும்
காதலும் கற்பும் ஒன்றும்
　　கண்ணுடன் கருணை ஒன்றும்
போதமும் குணமும் ஒன்றும்
　　புதுமையும் பண்டும் ஒன்றும்
நீதியும் அருளும் ஒன்றும்
　　நெறியினிற் பெரியநாடே.

இந்த நாட்டு மக்கள் ஆத்மிக சமயோகத்தில் ஊறித் திளைத்த வர்கள். யோகமும் தியாகமும், வேத தருமத்தின் உள்ளமும் உயிர் ஓட்டமும் ஆகும்.'

ஈதலில் இன்பங்கண்டார்
இன்பத்திற் கடவுள்கண்டார்
மாதரில் அன்னைகண்டார்
மண்ணிடை விண்ணைக்கண்டார்
காதலிற் கலையைக் கண்டார்
கலையினில் வாழ்வைக் கண்டார்
சாதலும் பிறப்பு மில்லாத்
தம்மையே கண்டார்மாதோ.

பாரதப் பண்பாடு மனித வாழ்விற்கு அமரத் தன்மை யளிப்பதாகும். உடல் அழியும்; அதில் அழியாத சுத்தாத்மா உள்ளது. இரண்டிற்கும் தொடர்பூட்டுவது உள்ளம். உள்ளத்தை அன்பு வெள்ளமாக்கி ஆத்மானந்தக் கடலிற் சேர்ப்பதே அமர வாழ்வாகும். ஆனந்தத்திலிருந்தே உலகுயிர்கள் எழுந்து, ஆனந்தத்தில் வாழ்ந்து, ஆனந்தத்திற் கலக்கின்றன. உண்மையறிவின்பமே, சத்து சித்து ஆனந்தமே, வாழ்வின் குறிக்கோள். இந்த வாழ்விற்கு வழிகாட்டுவன நான்கு வேதங்கள்—ருக், யஜுஸ், சாமம், அதர்வணம். ருக்வேதம் தேவர்களையும் தெய்வத்தன்மையும் பற்றிச் சொல்லும்; யஜுர்வேதம் மானிடம் தெய்வத் தன்மை பெறும் ஆசார அனுஷ்டான வேள்விகளை விளக்கும். சாமவேதம் ஆத்மக் கலை விளக்கமாகும்; அதர்வண வேதம் வாழ்வில் வரும் இடர்களைத் தவிர்த்து உடலுறுதியும் உள்ளுறுதியும், தேஜசும் ஓஜசும், பிரமவர்ச்சசும் பொலிய வாழும் மந்திரங்களை விளக்கும்.

நான்கு வேதத்திலும் நான்கு மகா வாக்கியங்கள் உண்டு.

1. ருக்வேதம்: ப்ரக்ஞானம் ப்ரஹ்மம்: விழித்த தன் அறிவே கடவுள்.

2. யஜுர்வேதம்: அஹம் ப்ரஹ்மாஸ்மி: என்னுள் நான் என்றெழுந்து வாழ்வை இயக்குவதே கடவுள்.

3. சாமவேதம்: தத்வமஸி; நீஅது; என்முன்னால் இயங்கும் உயிர்க்குலமும் கடவுள் மயமே.

4. அதர்வணவேதம்: அயமாத்மா ப்ரஹ்மம்: நான் என்றெழும் ஆத்மாவே கடவுள்.

(மகா. கோ)
மேற்கூறிய நான்கு மகாவாக்கியங்களின் பொருள் ...ரியுகீதை அத்தியாயம் 28. நான்கு மகாவாக்கியார்த்தம் கூறுவதற்கு ...மாண் படுவது - ஆகவே மேற்கூறிய அறியாமை...

அதாவது கடவுளன்றி நான், நீ, அவன், அவள், உலகம் எதுவும் இல்லை.

இந்தக் கடவுளுணர்வைப் பெறுவதற்கு நான்கு யோகங்கள் உள்ளன. (1) இராஜயோகம் (2) கர்மயோகம் (3) பக்தியோகம் (4) ஞானயோகம். மனோஜயமே ராஜயோகம்; செய்யும் தொழிலே வழிபாடாகச் செய்வதே கருமயோகம். உள்ளத்தில் உள்ள பொருளை அன்பு செய்வதே பக்தியோகம்; அதை மூளையில் அறிந்து காப்பதே ஞானயோகம். நான் என்பதை அறிவதே ஞானம். நான், ஞான், ஞானம்! Gnosis, knowledge எல்லாம் ஒரு பொருட் சொற்கள்.

இந்த நான்கு யோகங்களையும் பயில நான்கு ஆசிரமங்கள் உள்ளன: (1) பிரமசரியம்; இது யோகமும் கல்வியும் கலையும் வளர்க்கும் பருவம் (2) கிரஹஸ்தம் (இல்லறம்); இது மனைவி மக்களுடன் வாழும் கர்ம யோகம் (3) வானப்ரஸ்தம் (தனி வாழ்க்கை); வீட்டுப் பொறுப்பை மக்களிடம் விட்டு இறைவனை அன்பு செய்து வாழும் பக்தியோகம் (4) சந்யாசம் (துறவு); இது எல்லா மனப் பற்றுக்களையும் துறந்து இறைவனுடன் இரண்டறக் கலந்து வாழும் ஞானயோகம். இதற்கு உறுதுணை தர்மம் அர்த்தம், காமம், மோட்சம், (அறம், பொருள், இன்பம், வீடு) ஆகிய நான்கு புருஷார்த்தங்களாகும். இவற்றிற்கு நான்கு சாதனங்கள் உண்டு: சரியை (ஒழுக்கம்), கிரியை (வழிபாடு), யோகம் (மனஒருமை), ஞானம் (தன்னறிவு). நான்கு வேதாந்த சாதனங்கள் உண்டு: (1) நித்யாநித்ய விவேகம் (உள்ளது இல்லதுணர்வு) (2) இம்மை அம்மை நலப் பற்றின்மை (3) ஷட்சம்பத்தி (சமம், தமம், திதீக்ஷை, உபரதி, சிரத்தை, சமாதானம்) (4) முமுக்ஷுத்வம் (முக்தியில் ஆர்வம்); ஜாக்ரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் ஆகிய நான்கு உணர்நிலையிலும் ஆத்மா நான் என்ற உணர்வை மறவாது வாழ்வதே அமைதி தரும்.

மனம் புத்தி சித்தம் அகங்காரம் ஆகிய நான்கு அந்தக் கரணங்களையும் பழக்கி ஆத்ம உணர்வில் உய்ப்பதே வேதம் கண்ட சமயோகம். "ஸம் கச்சத்வம் ஸம்வதத்வம், ஸம்வோ மனும்ஸிஜானத" என்ற வேதப்பொருளும் நாம் எந்த நிலையிலும் ஆத்ம சமயோகத்தில் வாழவேண்டும் என்பதே.

இந்த வேதக்கலையான ஆன்மநேய உரிமையை சத்யார்த்தப் பிரகாசம் தெளிவாக விளக்குகிறது. இந்நூல் மிகத் தெளிவாக வேத தருமத்தையும், வாழ்வில் மனிதர் செய்ய வேண்டிய எல்லாச் சடங்குகளையும் விளக்குகிறது. பிரமசரியக் கல்வி, இல்லற ஒழுக்கம், தனி வாழ்வின் பயிற்சி, துறவியாக யோகத்தில் வாழ்ந்து செல்லல்; இந்த வாழ்வில் தொழில், வாணிகம், அரசியல், பொதுநலம் எல்லாம் எப்படி நிகழவேண்டும் என்பதைத் தயானந்தர் மனு பராசர ஸ்மிருதியுடன், சதபதப் பிராமணத்தையும் கொண்டு விளக்குகிறார். தயானந்தர் உலகுக்கு அளித்த வேதர்மப் பொக்கிஷமே சத்தியார்த்தப் பிரகாசம். தயானந்தர் 12-6-1874-ல் இந் நூலை எழுதத் தொடங்கினார். இந் நூல் எழுந்து இப்போது ஒரு நூற்றாண்டாகிறது. இந் நூல் வெளியீட்டை சத்தியார்த்தப் பிரகாச நூற்றாண்டாகவே கொண்டாடலாம் (12-6-1974-ல்).

1875-ல் காசி, ஸ்டார் அச்சுக்கூடத்தில் சத்தியார்த்தப் பிரகாசம் முதற் பதிப்பு வெளி வந்தது. திருத்தமான இரண்டாம் பதிப்பு வேத யந்திராலயத்தில் தயானந்தராலேயே வெளியிடப் பெற்றது. அவரே அச்சுத்தாட்களைத் திருத்தினார். இந்நூலுக்கு எதிர்ப்புப் புயல் வீறிட்டது. எதிர்ப்பெல்லாம் விதிர்ப்புறச் செய்து, தயானந்தர் பதினேழாண்டுகள் சத்திய வேத முழக்கம் செய்தார். முதல் ஒன்பதாண்டுகள் சமஸ்கிருதத்திலேயே பேசி வித்வத் சபை நடத்தி மூடப் பிடிவாதங்களை முறியடித்தார்; பிறகு இந்தியில் இடிமுழக்கம் செய்து, பொது மக்களை எழுப்பினார்.

பல ஆண்டுகள் சுவாமிகள் எழுதாமல் பேசியே வந்தார். ஜயக்ருஷ்ணதாசர் (காசி டிபுடி கலெக்டர்) தயானந்தர் சொற்பொழிவுகளை எழுதி நூலாக வெளியிடத் தூண்டினார். சுவாமிகள் சொல்லச் சொல்லப் பண்டிதர்கள் எழுதிவந்தனர்.

சத்யார்த்தப் பிரகாசம் முதற் பத்து சமுல்லாசங்கள் சுபக்ஷம்; மற்றவை பரபக்ஷம், பிற மதங்களில் உள்ள குறைகளையும் வேத தருமத்தின் நிறைவையும் பேசுவன. நூல் முடிவில் தயானந்தர் தமது கொள்கைகளைச் சுருக்கமாக விளக்குகிறார்.

ஆதியில் பாரத வாசிகள் வேத வழியே ஒரே சீரிய ஆரிய குலமாகவே வாழ்ந்தனர். வேத தருமம் மூலையில் ஒதுக்கப்பட்டு

அன்னிய ஆள்-சுற்றி மதங்கள் புகுந்து ஒற்றுமையைக் குலைத்த தால் நாம் பிரிவுண்டு, பிளவுண்டு, கிலியுண்டு, நலிவுண்டு, அன்னிய ஆதிக்கத்திற்குப் பலியுண்டு வீழ்ந்தோம். இந்தியா இணைந்து உண்மையும் திண்மையும் கொண்டு வாழவேண்டு மானால் தயானந்தர் காட்டிய வழியே செல்ல வேண்டும். பாரத சக்தியைப் போற்றி வளர்க்க வேண்டும்.

சத்தியார்த்தப் பிரகாசம் வேதக் கடலைக் கடைந்தெடுத்த அமுத கலசம். இதன் அமுதத்தை அருந்தி அமர வாழ்வெய்தி அனைவரும் அறிவுண்மை யன்பின்ப அமைதி பெற்று வாழ்க!

சத்தியப் பிரகாசம் பொலிகவே—இங்கு
சாந்தமாக மாந்தர் வாழ்கவே
ஒத்து நல்லுளங் குலவியே—வேத
ஓம் இசைத்து யோகம் ஒளிரவே

மனிதவாழ்வு புனிதமாகவே—எங்கும்
வளமை பொங்கி இளமை இலகவே
இனிய ஞான வேள்வி பொலிகவே—அதில்
எழுங்கனல் இகலை வெல்கவே

ஆண்மை ஆண்மை என்று கூறுவோம்—வாரீர்
ஆரிய சமாஜ தீரரே
கேண்மை கொண்டு மேன்மை சேருவோம்—என்றும்
கீர்த்தியுண்டு நேர்த்தியாகவே!

பாரதாத்ம சக்தி வாழ்கவே—என்றும்
பரமயோக சித்தி வாழ்கவே
ஈரக் கருணை வெள்ளம் பொங்கவே—அன்பும்
இயலறமும் இலக எங்குமே!

12–6–74 —சுத்தானந்த பாரதி

# மகரிஷி தயானந்தர்

[கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார்]

## பாரதச் சோலை

பாரத நாடு சமயோகச் சோலை. அதில் எத்தனையோ தத்துவக் கனி மரங்கள் பூத்துப் பழுத்து ஆத்ம ரசம் பொழி கின்றன. அத்தனையும் வேத வூற்றுப் பாய்ந்து செழிக்கின்றன. இந்தச் சோலையை வளர்த்த தோட்டக்காரர் பலர்—அனைவரும் கர்ம - பக்தி - ஞான - ராஜயோகிகள். இவர்கள் எத்தனையோ இடர்களைப் பொறுத்து, எத்தனையோ நச்சுப் பாம்பு தேள் பூரான் கடிகளைத் தாங்கி, வைராக்கியம் என்ற மண்வெட்டி பிடித்துத் தோட்டத்தைச் செப்பனிட்டனர். தெய்வ முனிவர் இங்கே தவம் புரிந்தனர்.

ஆனால், இந்தச் சோலைக்கு வேலியில்லை; கண்ட பேர் கண்டபடி புகுந்து கனிகளை யுண்டு, கருணையின்றி மரங்களை வெட்டி யெரிக்கத் தொடங்கினர். காலம் அலங்கோலமாக மாறியது.

## வேதவழியில்

வேத வழியில் முட்கள் அடர்ந்தன; புதர்கள் மண்டின; பாம்பு, தேள், எலி, பெருச்சாளிகள், நரி, புலி, ஓநாய்கள் தோட்டத்திற் பதுங்கி தோட்டக்காரரையே பதம் பார்த்தன. வேத ஊற்றில் நஞ்சைக் கலந்தன—ஊற்றின் வழியடைத்தது. குயிலும் மயிலும், கிளியும், மைனாவும் அழகு செய்த சோலையில் ஆந்தைகள் புகுந்தன; நரிகள் ஊளையிட்டன. புல்லுருவிகள் அடர்ந்தன; களைகள் கனத்தன.

## அந்த ஆத்மதீரர்

ஐயோ நமது அமரபாரதச் சோலை இப்படிப் போனதே, என்றொரு ஆத்மதீரர் நெஞ்சு படபடக்கச் சுற்றிப் பார்த்தார். இந்தச் சோலையில் தவம் புரிந்த தெய்வச் சுடர்கள் எங்கே? இதன் அருட் பொலி வெங்கே? ஆண்மையும் வீரமும், அறிவும் ஆற்றலும் ஒண்மையும் திண்மையும் ஓங்கிய ஆண்கள் எங்கே? கற்பும் பொற்பும் கனலும் பெண்மை எங்கே? மேற்கும் கிழக்கும் மேவி வணங்கிய வேதப் பண்பாடெங்கே? ஒரே கடவுள், ஒரே

உலகம், ஒரே ஆன்ம நேயராய், ஒரே வானக்குடை நிழலில், ஒருமை கொண்டு வாழ்ந்த அன்புச் சமுதாயம் எங்கே?

## வேற்றுமைக் கந்தல்

சமயோகச் சோலையில் முட்புதர்களும் புல்லுருவிக் களை களும் மூடப்பதர்களும் மூண்டனவே! ஆளைச் சுற்றி மேள மடித்து, ஆர்ப்பாட்டம் செய்யும் போலிச் சமயங்களின் ஆணவப் பறைக்கொட்டு, வேதயாழின் இனிய கீதத்தை விழுங்கியதே!! அனுத்மக் கசுமாலங்கள் அரசியல் வெறியுடன் எழுந்து, இரும்புக் கால்களால் அறத்தை மிதித்தனவே! வீதிக்கொரு சமயம், வீட்டுக்கொரு சாதி, ஊருக்கொரு அவதாரம், ஆளுக் கொரு அதிகார பீடம், தம்பட்ட மடித்து விளம்பரம் பறக்கின்ற னவே...பொது மக்கள் எது உண்மை என்று அறியாது குருட் டுத்தனமாக இருட்டில் நடந்து மூடப் பிடிவாதங்களில் முட்டிக் கொள்கிருர்களே—எத்தனை வேற்றுமைகள்! எத்தனை வீண் சடங்குகள்! எத்தனைக் கட்டுக் கதைகள்! எத்தனை மாய மயக்குகள்!......

## உண்மை எங்கே?

உண்மை எங்கே? ஒளி எங்கே?—என்று ஒரு மகான் பர பரப்புடன் தேடினுர், ஓடினுர், வாடினுர். அவர் கண்கள் கருணைக் கண்ணீர் வடித்தன—அவர் உள்ளம் பாரத சமுதாயப் பண் பாட்டை ஊக்கத் துடித்தன—அவர் சிந்தை வேதவூற்றிற் குளித்தது; அவர் கைகள் ஊற்றுக் கண்களில் அடைந்த மாசு களையும் பாசிகளையும் நீக்கின—அவரது பிரமசரிய தீரம் சோலை யில் அடர்ந்த மூடப் புதர்களை தவக்கனலால் எரித்தது. பாம்பு தேள், நரி, புலி, ஓநாய்கள் அவரைக் கடித்தன. அவற்றை பிரமசரிய பலத்தால் வாரியடித்துப் பிளந்தெறிந்து, அந்தக் கருணை வள்ளல், சோலையை நீவிச் சுத்தம் செய்தார். அதன் இருளைப்போக்க சத்திய தீபத்தைத் துலக்கினுர்—சத்தியார்த்தப் பிரகாசம்.

## சத்திய ஜோதி

இந்த மகரிஷி புங்கவரே தயானந்த சரஸ்வதி என்னும் சத்திய ஜோதி. உலகம் எத்தனையோ அருளாளரைக் கண்டிருக் கிறது. அதன் விளம்பரப் பலகையில் எத்தனையோ பெயர்கள் மினுக்கு மின்சார வெளிச்சம் போடுகின்றன. ஆனுல் மனித

ருடன் மனிதராகப் பழகி நேருக்கு நேராக உண்மையைத் திண்மையுறப் பேசி, தனியே நின்று புதிய பாரதத்தைப் புலரச் செய்தது ஒரு மகானே! தயானந்த சரஸ்வதியே.

## தயானந்த வள்ளல்

ஒரு கோவணம் கட்டிய பிரமசாரி—பொன்னுடலும் திண் மனமும் பெற்ற வேத வித்தகச் சிங்கம், காலத்தின் எதிர்ப்பு களைக் காலால் எற்றித்தள்ளி, வேதச்சோலையில் வெற்றி மாளிகை அமைத்து, அதன் உச்சியில் சத்தியார்த்தப் பிரகாசத் தைக் கலங்கரை விளக்குப் போலக் கதிர் வீசி நிலவச் செய்தார். அவர் செய்த சத்தியபோதனைகளுக்கு வேதனை களும் வாதனைகளும் சோதனைகளும் வந்தன. ஆனால், அந்த உத்தமரின் ஓங்காரக் கொடி இன்று ஒளி வீசிப் பறக்கிறது! "சதிய மேவ ஜயதே — உண்மையே வெல்லும்" என்ற அவரது சங்கநாதம், பாரதக் கொடியில் பட்டொளி வீசிப் பறக்கிறது...இந்தியாவின் பொதுமொழி இந்தியே என்று அவர் வைத்த சட்டம் இன்று நிறைவேறுகிறது. இந்த ஒரு மகா புருஷர் வந்திராவிட்டால் 1857-ம் ஆண்டிலேயே இந்திய வேத தருமத்தை இழந்து பர தருமத்திற்கு மீளா அடிமையாகியிருக் கும். இந்த மகானையறிந்து சத்தியார்த்தப் பிரகாசத்தைப் படித்திராவிட்டால் நானே சாது சுந்திரசிங்குடன் பெரிய சர்ச்சுக் கட்டிச் சிலுவை யேந்தித் திரிந்திருப்பேன். பல்லாயிரக் கணக்கான இளைஞரை தயானந்த ஜோதி மீட்டது: என் வாழ்வில் நூறு யோக தீரரைக் கண்டு பழகியிருக்கிறேன்— அவருள் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு உணர்வைத் தூண்டிய தயானந்தருக்கு முதல் வணக்கம் செலுத்துகிறேன். அவர் நாட்டிய ஆரிய சமாஜத்தின் எளிய தோட்டக்காரனை— தான், பேனு முனையில் இச்சிறு தொண்டு செய்கிறேன்—ஓம் தயானந்த ஓம்.

தயானந்த ஜோதி என்ற நூலில் அவரது தியாக வரிசை களை யோக விழிகளால் பார்த்துப் படலம் படலமாகப் படம் பிடித்திருக்றேன்.

சத்தியார்த்தப் பிரகாசத்தில் சுருக்கமாக தயானந்தர் பிடித்த அறிவொளி எப்படி எழுந்தது என்ன செய்தது என்பதை காபினெட் படமாகப் பிடித்துக் காட்டிப் பிறகு சுடரோவி யத்தை விளக்குகிறேன்.

## மூல சங்கரர்

கதியவார் மோர்வி சமஸ்தானத்தில் டங்காரா என்ற ஊர் இருக்கிறது. அதில் அறிவும், ஒழுக்கமும், வேதக் கல்வியும் சிறந்த ஒரு செல்வர் இருந்தார். அவர் பெயர் கர்ஸன்ஜிலால்; அவர் தீவிரமான சிவபக்தர்; கர்மகாண்ட விதிகளினின்று இம்மிகூடப் பிசகாத வைதிகர். அவர் செய்த தவப்பயன், ஓர் அருள் மைந்தனாகப் பழுத்தது! அந்த மகனே, மூல சங்கரன். தயாராம் என்ற பெயரும் அவருக்கு இருந்தது. தந்தையின் உறுதியும், தாயின் அன்பும் இரக்கமும் மூலசங்கரின் வாழ்வில் ஊறின. மூலசங்கரருக்கு ஐந்தாண்டில் ஆரிய பாஷை தொடங்கப்பட்டது; எட்டு வயதில் உபநயனம் நடந்தது. காயத்ரி, சந்தியாவந்தனம், புருஸூக்தம், ருத்திரம் முதலியவற்றைத் தந்தையே கற்றுக்கொடுத்தார். பிறகு யஜுர் வேதம் கற்றுக்கொடுக்கப்பட்டது. பிள்ளை, தம்மைப்போலவே வைதிகப் பழமாவானென்று தந்தை எண்ணினார். ஆனால் இந்தப் பிள்ளையின் உள்ளே ஒரு சுதந்தரச் சிங்கம் கர்ஜித்தெழுந்தது!

## ஞானோதயம்

மஹா சிவன் ராத்திரி வந்தது. அப்போது பதினான்கு வயதுள்ள மூலசங்கரனும் தந்தையின் விருப்பப்படி சிவராத்திரி மகா விரதம் எடுத்து, இரவு முழுவதும் பட்டினி யிருந்து, ஜடேசர் கோயிலில் கண் விழித்திருந்தான். வேதமும், மந்திரமும், வழிபாடும், தோத்திரமும், மூலசங்கரரை விழித்திருக்கச் செய்தன. நள்ளிரவு வழிபாடுகள் ஆயின. பக்கத்தில் நோன்பிருந்தவர் குர்குர் குறட்டை தெறிக்கத் தொடங்கினர். தந்தையும் துயிலின்வலைப்பட்டார்; கோயில் பூசாரியும் கண்ணயர்ந்தான். ஆலயம் குரலடங்கி யிருந்தது. எங்கும் அமைதி. நமது மூலசங்கரன் லிங்கத்திற்கு அருகே சென்று, அதையே பார்த்துக் கொண்டிருந்தான். லிங்கம் அன்று மிகச் சிறப்பாக அலங்கரிக்கப்பட்டது. அதன் எதிரே நிவேதனங்கள் மூடி வைக்கப்பட்டிருந்தன. திடீரென்று எலிகள் வந்து நிவேதனங்களை உருட்டி லிங்கத்தின் மேல் சடுகுடு விளையாடின. மூலசங்கரன் மனதிலும் சந்தேக எலி சடுகுடு பாய்ந்தது. "எல்லா முணர்ந்து, எல்லாம் படைத்து, எல்லாமளித்து, எல்லாம்வல்ல இறைவன் இதுவல்ல; இது கல்லே; கடவுள் இல்லே..." என்று தந்தையை எழுப்பி

வாதாடினான். சட்டெனத் திரும்பி, வீடு சென்று, அன்பு வடிவான தாயார் கொடுத்த பணிகாரங்களை உண்டான். தந்தைக்கு இவனது அவநம்பிக்கை பிடிக்கவில்லை. வீரசைவ ராகிய தந்தை பிள்ளைக்குப் புத்தி சொன்னார், மிரட்டினார். ஒன்றும் பயன்படவில்லை. தயாராம், உருத்தொழுகையை உதறித் தள்ளினான்.

## விரக்தி

ஒருநாள் தனது தங்கை பேதி கண்டு திடீரென்று இறந்தாள். மூலசங்கரன், உடலின் பொய்யுறவை நினைத்து வைராக்கியமுற்றான். பிறகு, தன்னை மிகவும் அன்புடன் நேசித்த மாமனும் இறந்தான். 'நேற்றிருந்தவர் இன்றில்லை' யென்னும் பெருமையுள்ள இப்புவியின் நாடகத்தை எண்ணி எண்ணி வருந்தி, சாவை வெல்ல ஒரு வழி காணவேண்டுமென்று, நமது வீரவாலிபன் உறுதி பூண்டான். அவனுக்கு இப்போது வயது பத்தொன்பது. தந்தை இந்த மைந்தனை மணமென்னும் நுகத்தடியில் பிணைத்துக் கட்டப் பெரிதும் முயன்றார். சுதந்தர வுள்ளங் கொண்ட மூலசங்கரன் குடும்பக் கூட்டில் அடைபடாது, தப்ப ஒருவழி தேடினான். பிள்ளை மணவினை வேண்டாம் என்று மன்றாடியதின்பேரில் தந்தை ஓர் ஆண்டிற்கு அதை ஒத்தி வைத்தார். மூலசங்கரன் கல்வியில் பேரார்வமுற்று, தன்னைக் காசியில் இருக்கும் ஆரியக் கல்லூரிக்கு அனுப்பும்படி தந்தையைக் கேட்டான். மகனுடைய மனப்போக்கை அஞ்சிய தந்தை, பக்கத்துக் கிராமத்திலுள்ள ஒரு பண்டிதரிடம் அவனை அனுப்பினார். அங்கும் மூலசங்கரனுக்கு உலகிலுள்ள சாவும், பிணியும், தீதும், பொய்யும், மனிதன் இவையின்றி இன்புறும் மருந்துமே நினைப்பு. இதைக்கண்ட உபாத்தியாயர், எங்கேயாகிலும் தப்பி விடுவான் என்று அஞ்சி, மறுபடி தகப்பனாரிடமே பையனை அனுப்பிவிட்டார். கர்ஸன்லால் பையனுடைய விவாகத்திற்கு மும்முரமாக ஏற்பாடு செய்தார். மூலசங்கரனுடைய மனம் வீட்டில் நிலைகொள்ளவில்லை. தன் எதிரே பரிசுத்தமான ஞான ஊற்றைக் காண்பவன், வெறும் வறுந்தரத்தில் தாகத்துடன் எத்தனை நாள் தவிப்பான்? தன் சுயேச்சைக்குப் பொன், விலங்குகளைத் தயார் செய்யும் தந்தையைத் தப்பிப் பிழைக்கத் தீவிரமாக எண்ணினான் வாலிபன்.

## துறவு

நள்ளிரவு; சுற்றத்தாரைக் கடைசியாக ஒருமுறை பார்த்து, வீட்டினின்று மூலசங்கரன் தப்பினான். தீ வீட்டினின்று வெளி வருபவன் போல் தன் வீட்டைத் துறந்து ஓடிய நமது வீரத் துறவி, இரவில் ஒரு கிராமக் கோயிலில் தங்கிக் கால்நடையாக ஸயால் என்ற சிற்றூர் சேர்ந்தான்; அங்கு 'சுத்த சைதன்யன்' என்ற பெயருடன் பிரம்மசாரிக் கோலம் பூண்டு, யோகம் பயிலத் தொடங்கினான். அங்கிருந்து வைராகிகளுடன் கோடகங்காரா சென்று, பிறகு சித்திபூருக்குப் புறப்பட்டான்; வழியில் ஒரு பைராகி அடையாளங் கண்டுபிடித்துப் பையனைக் கண்டதாகத் தமது நண்பரான கர்ஸன்ஜிலால்ஜிக்குத் தகவல் எழுதினார்.

## தந்தையின் விந்தைக் காவல்

நமது சைதன்யர், சித்திபுரியில் நீலகண்ட மஹாதேவாலயத் தில் நல்ல துறவிகளிடையே இருந்தார். ஒருநாட் காலை திடீ ரென்று கர்ஸன்லால்ஜீ எதிரே நின்றார். சேவகரும் கூட வந்திருந் தனர். பிரம்மசாரிக் கோலம் பூண்ட செல்வனைத் தந்தை சீறி வெகுண்டார்; காவியுடையைப் பறித்தெறிந்தார். சுத்த சைதன் யருக்கு வெள்ளை யுடுத்தித் தன் ஜாகைக்கு இட்டுச் சென்று காவலில் வைத்திருந்தார். வெள்ளை யுடுத்தினால் அவருடைய துறவும் வெளுத்துப் போகும் என்று தந்தை எண்ணினார் போலும்!

காவலர் கண்ணில் திரிபோட்டுக் காக்கின்றனர். இரவு மூன்று மணி; காவலரை உறக்கம் மயக்கியது; எது சமயம் என்று கண்கொட்டாது பார்த்திருந்த சுத்த சைதன்யர், விருட் டென்று இருட்டில் தப்பினார்; கோவில் கோபுரத்தைச் சார்ந்து இலையடர்ந்திருந்த அரசமரத்தின் உச்சியில் ஏறி ஒளிந்துகொண் டார். தந்தைக்குத் தூக்கிவாரிப் போட்டது. சேவகர் பரபரத்து ஊரை அலசிப் பார்த்து அலுத்தனர். பையனைக் காணோம். 'இவ் வளவுதான் இவன் விதி' என்று தந்தை ஊருக்குச் சென்றார். பக லெல்லாம் அடர்ந்த கிளைகளில் ஒளிந்திருந்த சுத்த சைதன்யர், இரவில் கீழே யிறங்கி ஆமதபாத் வழியே சென்று பரோடாவை அடைந்தார். அங்கு சேதன மடத்தில் சுவாமி ப்ரஹ்மானந்தர் அன்பு கிடைத்து; வேதாந்தம் பயின்றார்.

## நாடெல்லாம் சுற்றினார்

உண்மை யொளியைத் தேடி நமது துறவி புறப்பட்டார். அடர்ந்த காடு, மலை, கணவாய், ஆற்றோரங்களூடு, பசி, தாகம், இடர்களைப் பொறுத்துச் சென்றார்; துறவிகளையும் அறிவாளிகளையும் நாடி, வேதமும் யோகமும் பயின்றார்; நருமதை நதிக் கரையில் பல அரிய சாதுக்களைக் கண்டார்; சச்சிதானந்த பரமஹம்ஸர், பிரேமானந்தர் முதலியோர் உறவால் பெரும் பயன் அடைந்தார். பூரணானந்தர் என்ற மராட்டியத் துறவியிடம் ஸந்யாசம் பெற்று, "தயானந்த சரஸ்வதி" என்ற தீக்ஷா நாமம் பூண்டார்; யோகானந்தரிடம் ஹடராஜ யோகங்களைப் பயின்றார்; கிருஷ்ண சாஸ்திரியாரிடம் இலக்கணம் கற்றார்; மற்றொரு பண்டிதரிடம் வேதமோதினார்; ஜ்வாலானந்தர், சிவானந்தர் முதலிய யோகிகளிடம் சாதனம் செய்தார்; பிறகு ஹரித்வாரம், ரிஷிகேசம் சென்று இரண்டு பிரம்மசாரிகளுடன் "தேரி" என்ற ஊரில் வாம மார்க்கிகளையும், தந்திர நூல்களையுங் கண்டு அருவருத்துக் காஷ்மீரம் சென்றார். கங்காகிரி பெரியாரிடம் சில காலம் இருந்தார்; பிறகு இமாலயக் காடுகளிலும் மலைகளிலும் சுற்றி மஹான்களைத் தேடினார்.

ஓகி மடத்தில் மஹந்து தன் பட்டத்தைத் தயானந்தருக்கு அளித்தார். மடத் தலைமையை விரும்பாது, நமது வீரத் துறவி ஜோஷி மடம் சேர்ந்து ஆங்கு பல யோகிகளையும் பெரியோர்களையுங் கண்டார். அங்கிருந்து பதரி நாராயணம் சென்றார். பசிக்குப் பனிக்கட்டியை உண்டும் மலை மீதேறி யோகிகளைத் தேடினார். குளிரில் வாடித் திரும்பி, ராமபூர் வழியே துரோண சாகரம் சேர்ந்து, மீண்டும் துணிந்து கங்கைக் கரையை அடைந்தார். இங்கொரு பிணம் மிதந்து வந்தது. தமது கையில் ஒரு ஹடயோக நூலும் இருந்தது. ஆற்றில் நீந்தி, பிணத்தைக் கரை சேர்த்து அறுத்துப் பார்த்தார்.; ஹடதாந்திர நூல்கள் சொல்லும் ஆதார சக்கரங்கள் புலப்படவில்லை. 'அவை பொய்' யென்று அறிந்து பிணத்துடன் நூலையும் ஆற்றில் வீசினார். அதன்பின் மீண்டும் நருமதையை நோக்கித் திரும்பினார். அடர்ந்த காடுகளூடு சென்று களைத்து, அகாலத்தில் ஒரு சிற்றூரை அடைந்தார். ஜனங்களைத் தொந்தரவு செய்ய மனமின்றி, நதியில் மூழ்கி வந்து தியானம் செய்யும்போது, கிராமத் தலைவன் பால் கொணர்ந்து கொடுத்தான்.

## குரு விரஜானந்தர்

இவ்வாறு அறிவும், தவப்பொலிவும் பெற்றுப் பதினைந் தாண்டுகள் சுற்றி, தயானந்தர் வடமதுரையில் ஒரு பெரிய மஹான் இருப்பதாகக் கேள்வியுற்று அங்கே போந்தார். அவரே விரஜானந்த ஸ்வாமிகள். இவர் 1779-ல் பஞ்சாபைச் சேர்ந்த கர்தார்பூரில் பிறந்த அந்தணர். ஐந்து வயதில் அம்மை வார்த்துக் கண்ணிழந்தார்; சிறு வயதில் பெற்றோரையும் இழந்து இடர்ப்பட்டு, உலகை வெறுத்துக் கிளம்பி ரிஷிகேசத் தில் மூன்றாண்டுகள் காயத்திரித் தியானம் செய்து சித்திபெற்று ஹரித்வாரம் சென்றார். அங்கு பரமானந்தரிடம் ஸந்யாசம் பெற்று வியாகரணமும் சாஸ்திரங்களும் கற்றுத் தேர்ந்தார். இவருடைய தெள்ளறிவை வியந்து, "ப்ரஜ்ஞானசக்ஷு ஸ்வாமி" என்று அறிஞர் பெயரிட்டனர். சிலகாலம் ஆழ்வார் மன்னர் வேண்டுகோட்படி அவர் அரண்மனையில் தருமசாஸ் திரம் பாடஞ் சொல்லிக்கொண்டிருந்தார். அதன்பின் மதுரை யில் தங்கி பல சீடர்களுக்கு வேதாந்தக் கல்வி பயிற்றினார். விரஜானந்தர், பண்டிதர்களைவிட மகரிஷிகள் வாக்கையே மதித்து வேதப்பிரசாரம் செய்தார். அதனை உலகிற்குப் பய னுரும்படி விளக்க ஒரு தக்க சீடனை எதிர்பார்த்திருந்தார்.

## என் மகனே!

1860-ல் தயானந்தர் விரஜானந்தர் கதவைத் தட்டினார். "யார்?"; "தயானந்தன்." "இலக்கணம் படித்திருக்கிறாயா?"; "ஸரஸ்வதி முதலிய சில நூல்கள் பார்த்திருக்கிறேன்." கதவு திறந்தது; ஆளை நோட்டம் பார்த்தார். "என் மகனே! மஹா பாரதத்திற்கு முன் எழுதப்பட்ட வேதவுரை, மஹரிஷிகள் வாக்கு; அதையே நீ பயில், பின்னே எழுதப்பட்டது பண்டிதர் சரக்கு; அதை வீசி யெறி" என்றார்.

## குரு தட்சிணை

தயானந்தர், விரஜானந்தரிடம் இரண்டரை ஆண்டுகள் மிகவும் வணக்கத்துடனும் கருத்துடனும் வேதக் கல்வி கற்றார். மிகவும் பொறுமையுடன் குருசேவை செய்தார். குரு, தன்னைச் சினங்கொண்டு அடித்தால், "சுவாமி! என்னை அடிப்பதனால் தங்கள் கை நோகுமென்று அஞ்சுகிறேன்" என்று இரங்குவார்!

தான் படித்து முடிந்ததும், குருவுக்கு தக்ஷிணையாகக் கொஞ்சம் கிராம்புகளைச் சமர்ப்பித்து, "ஸ்வாமி! உடல் பொருள் ஆவி அனைத்தும் தங்களுடையதே" என்றார். விரஜானந்தர், "பொறுமை மிகுந்த அருமைச் செல்வனே! இருளும் இடர் களும் உலகைக் கவர்ந்தன; சாதியும் வகுப்புச் சண்டையும் வலுத்தன; ஓரிறைவனை வணங்கி, ஒரு குலம்போல் மாந்தர் வேதப்பொருள் அறிந்தொழுக, அருமறை முனிவர் பெருமை விளங்க, சாதி சமயச் சச்சர வொழிய, உண்மையொளியை உலகெலாம் பரப்புதி; வேதக் கொடியை விண்ணுற வுயர்த்துதி; சேவை செய்; அதுவே குரு தட்சிணை. அன்பனே! உனக்கு ஆண்டவன் அருள்க!" என்று ஆசிகூறி அனுப்பினார்.

## ஞானப் போர்

குருவின் கட்டளையைப் பெற்று வணங்கித் தயானந்தர் அருட்பணி விரதம் பூண்டு, சுத்த பிரம்மசரியத்தால் தாம் அடைந்த தேஜஸ், ஓஜஸ், வீரியம், ஞானம் எல்லாம் உலகின் தொண்டிற்கே பலிதானமாக்கினார். தயானந்தர் திடபலமுள்ள கம்பீரமான வேதச் சிங்கம்; அவர் அறிவையும், ஆளையும், குரலையும், மொழியையுங் கண்டு எதிரிகள் நடுங்கினர். ஒரு சமயம் ஒரு பெரிய குதிரை வண்டியை ஒரு கையால் நிறுத் தினார்; மற்றொரு முறை தன்னைக் கொல்ல வந்த ஒரு பகைவன் வாளைப் பிடுங்கி முறித்தெறிந்தார்! ஒரு பகைவன் வீசிய பாம்பைப் பிளந்து வீசினார்!

இருளிலும் அடிமை யிடர்களிலும் பரிதவிக்கும் பாரத மக்களிடம் பரிவுடனும், வேதாவேசத்துடனும் எழுந்தார் தயானந்தர். மதுரையினின்று ஆக்ரா வந்தார்; அங்கு சந்தியா புஸ்தகம் எழுதி, முப்பதினாயிரம் படிவங்கள் ஜனங்களுக்கு இனாமாகத் தரச் செய்தார். ஜெயபூரில் புராணங்களையும், உருவணக்கத்தையும் கண்டித்தார்.

## கொலையை வென்ற கலை

ஜெயபூரில் பலரை ஊன் மது விலக்கச் செய்தார். ஆஜ்மீரில் பூஜ்யர் கிரே (Rev. Grey) டேவிட்சன் (Davidson) முதலிய ஆங்கிலேயரால் நன்கு மதிக்கப் பெற்றார். அதன் பிறகு, ஹரித்வாரம் கும்பமேளத்தில் கணக்கற்ற ஸந்யாசிகள், வைராகிகள், கோசாயிகள், உதாஸிகள், மன்னர், செல்வர்களிடையே,

தமது 'பரமத கண்டன த்வஜ'த்தை நாட்டினர். போலி யொழுக்கங்களை மண்டையி லடித்தார். அனுப்ஷஹரில் ஒரு சாஸ்திரி தயானந்தருடன் வாதாடித் தோற்று, விக்கிரகங்களை ஆற்றில் எறிந்து பணிந்தார். கரண்சிங் என்ற செல்வன், விக்ரக வாதம் புரிந்து தோற்று, தயானந்தரைக் கொல்ல வாளை ஓங்கினன்; அப்போதும் தயானந்தர் தமது கொள்கையே பேசினர். பிறகு அவன் கொலையாளிகளை விடுத்தான். மஹானை அணுகத் தைரியமில்லாது கொலைஞர் திரும்பினர். அனுப்ஷஹரில் ஒரு பகைவன் வெற்றிலையில் விஷம் வைத்துக் கொடுத்தான்; உண்டார் மஹான்; மயக்கம் வந்தது; உடனே நௌலியும், தௌதியும் செய்து விஷத்தைக் கக்கி நலமடைந்தார்! இதை யறிந்த நண்பர், 'அப் பாவியைச் சிறைக்கு அனுப்ப வேண்டும்' என்றனர். "மக்களைச் சிறையிட நான் வரவில்லை; அவர்களை மடமை யிருளினின்று விடுக்கவே உலகிற்கு வந்தேன்" என்று தடுத்தார் மஹான்!

வைதிகர் தீ போலக் கிளம்பினர்; தயானந்தர், அவர்கள் சூழ்ச்சிகளையும் வாதங்களையும் துணிந்து எதிர்த்து வென்று தன் 'ஓரிறை' வாதத்தை நிலைநிறுத்தினர். கான்பூரில் ஒரு பெரும் பண்டித சபையை வெற்றிகொண்டார்.

## காசியில் வெற்றிமுரசு

22-10-1869-ல் தயானந்தர் வைதிகக்கோட்டையான காசிநகர் வந்தார். பண்டிதர்கள் ஒன்று சேர்ந்து, சாஸ்திரங்களைப் புரட்டி, மேற்கோள்களைத் திரட்டிக்கொண்டு தடபுடலாக வந்து சூழ்ந்து வாதம் புரிந்தார்கள். மூலைக்கொரு கேள்வி கேட்டனர்; வேதச் சிங்கம் சடசடவென்று உண்மை முழக்கம் செய்தார்! கூச்சலிட்டனர்; மண்ணும் சாணியும் எறிந்தனர்; எக்களித்தனர்; எல்லாம் பொறுத்து எதிரிகள் வாயை அடக்கி, சத்திய வேதத்தை நிலைநாட்டினர் தயானந்தர். ஆயிரக்கணக்கான அன்பர் தயானந்தரை அடைந்ததைக் கண்டு, பண்டிதர் கூட்டம் வெட்கியது. காசி மன்னனே முடிவில் தயானந்தரைப் போற்றிப் பணிந்தான். ஒரு பகைவன் மீண்டும் வெற்றிலையில் விஷம் வைத்துக் கொடுத்தான்; அதை உடனே கக்கி விட்டார் மகான். தயானந்தர் மூன்று முறை காசிக்கு வந்து வேதவுண்மையை எல்லாருக்கும் உபதேசித்தார். பாட்னா, மாங்கீர்,

பாகல்புரி முதலிய இடங்களில் வெற்றி பெற்று 15-12-1882-ல் தயானந்தர் கல்கத்தா வந்தார்.

அங்கே நான்கு மாதம் பல அறிஞர்களுடன் அளவளாவினர்; அனைவரும் தயானந்தரை ஆதரித்தனர். ப்ரம்ஹ ஸமாஜத்தார் அவரை மனமார வரவேற்றனர்; கேசவசந்திரர் அன்புடன் ஆதரித்து, அவர் மொழிகளைப் பருகினர். அவரை வடமொழி பயிலச் சொன்னர் தயானந்தர். இராமகிருஷ்ண பரமஹம்ஸரும் தயானந்தரைப் பார்த்தார்.

## பகைவர் கொடுமை!

முன்னே சென்ற இடங்களை மீண்டும் பார்த்து, வேதக் கொடியைப் பலமாக ஊன்றி, பிருந்தாவனம் ராதாமேளத்தில் அரிய பணி புரிந்து, 1875-ல் தயனந்தர் பம்பாய் சேர்ந்தார். இங்கே வல்லபாசாரியார் மதத்தைக் கண்டிக்கவே, மதத் தலைவனை ஜீவன்ஜீ, தயானந்தரின் சமையல்காரனுக்கு ஆயிர ரூபாய் லஞ்சங் கொடுத்து நஞ்சு வைக்கச் சொன்னன். இதை அறிந்த வீரத் துறவி சமையல்காரனைக் கூர்ந்து நோக்கிக் கேட்டார்; அவன் பிழையை ஒப்புக்கொண்டான்; மஹான் அவனையும் மன்னித்தார். பண்டிதர்களை யெல்லாம் அனுப்பி, வீணகவே, மீண்டும் தயானந்தரைக் கொல்ல ஜீவன்ஜீ கொலைஞரை ஏவினன். கொலைஞர், மகானின் வீரத் துணிவையும் கருணையையும் கண்டு மனம் மாறிச் சென்றனர். இங்கே மீண்டும் ஒரு பெரிய சபை கூட்டி, எதிர்த்த புராணப் பண்டிதர்களை வாயொடுக்கி "நதஸ்ய ப்ரதிமா அஸ்தி" (கடவுளுக்கு வடிவமில்லை) என்று அழுத்தமாகத் தன் கொள்கையைச் சிம்மம் போல் முழக்கி வெற்றி பெற்றார்.

## ஆரிய சமாஜம்

பிறகு அன்பர் வேண்டுகோட்படி ஆரிய தருமப் பிரசாரத்திற்காக பம்பாயில் ஆரிய சமாஜம் ஒன்று நிறுவவேண்டிய விதி நியமங்களை வகுத்தார். பூனவில் இந்து சங்கத்தில் பதினைந்து சொற்பொழிவுகள் ஆற்றினர். அங்கும் பண்டிதர்கள் முட்டுக் கட்டை போட்டு இடர் செய்தனர்.

இந்த வேதச் சிங்கத்தின் முன், இடர்கள் தவிடுபொடியாயின. பம்பாயில் தனது வெற்றிக்கொடியை நாட்டியதும்

மீண்டும் ஒருமுறை வட இந்தியாவைச் சுற்றிப் பிரசாரம் செய் தார். இக் காலம் ருக்வேதாதிபாஷ்ய பூமிகையும், இன்னும் பல நூல்களையும் எழுதினர்.

## டில்லியில் வேதக்கொடி

1876இல் டில்லி தர்பாரின்போது தயானந்தர் அங்கு சென்று முகாம் போட்டார். பல மன்னரும் அறிஞரும் அவர் கொள்கைகளைக் கேட்டு மெச்சினர். சாந்துபூரில் ஒரு சர்வமத சபை கூடிற்று. அங்கே தனது வேதக் கொடியை உயர்த்தினர். "கடவுள் எப்போது எப்படி உலகைப் படைத் தார்? கடவுள் எங்கும் நிறைவா? அருள் நூல்கள் எவை? முக்தி யாவது என்ன? அது எங்ஙனம் எய்தும்?"—என்று பல கேள்விகள் கேட்டனர். "இயற்கையினின்று இறைவன் உலகை யாக்கினர். இறைவனைப் போலவே இயற்கையும் என்றுமுள்ளது. உலகத்திற்கு மன்வந்திரக் கணக்குப்படி 1,960,852,976 ஆண்டு கள் ஆயின. உயிர்கள், அறம், பொருள் இன்பம் வீடடையச் சாதனமாகவே ஆண்டவன் உலகை யாக்கிறான். துக்க நிவிருத் தியே முக்தி. நல்லொழுக்கம், தெள்ளறிவு, வேதமோதல், நல் லோர் உறவு, யோகத்தால் புலன்களைப் பொய்யினின்று விலக்கித் தன்னை மெய்வழிச் செலுத்தல், ஈசுவரத் தியானம், இவையே வேதவழி. 'பரம்பொருளே! எங்கும் நிறைந்தவனே! பொய்யி னின்று உண்மைக்கும், துன்பத்தினின்று இன்பத்திற்கும், இரு ளினின்று ஒளிக்கும் என்னை நடத்தியருள்' என்று வணக்கம் செலுத்துக; இவற்றல் முக்தி யின்பம் எய்தும்" என்று சரியான விடை யளித்துப் பெரும் புகழ் பெற்றர். இந்து, இஸ்லாம், கிறிஸ் தவ அறிஞரும் தயானந்தரை நன்கு மதித்தனர். லூதியானுவில் ஒரு சண்டமாருதம் வீசி, மஹான் லாகூர் சென்றர். லாகூரில் ஆரிய சமாஜம் ஏற்பட்டது.

## பஞ்சாபில் வேதசமாஜங்கள்

குருநானகரை ஈன்ற பாஞ்சாலம், ரிஷி தயானந்தரை நன்கு போற்றியது. "கடவுள் ஒருவன்; அருவன்; எங்கும் நிறைவு; சாதி வேற்றுமை மடமை" என்னும் உணர்வு சீக்கியர் குருதி யில் ஊறிப் போயிருந்தது. தயானந்தரின் ஆரிய தருமக் கொடி அங்கு பலமாக வேரூன்றியது. தயானந்தர் புறமத மயக்கங்களி

னின்று வாலிபர்களை வேதவழிக்குத் திருப்பினர். லாகூர், குரு தாஸபுரம், ஜலந்தர், டேராடுன், பெரோஜ்புரி, ராவல்பிண்டி, ஜீலம், வாஜிரபாது, குஜரன், மூல்தான், ருக்ரி, அலிகரா, மீரட், ஆஜ்மீர், லக்னோ, முதலிய பல இடங்களில் சமாஜங்கள் உண்டாயின. ஆங்காங்கு புராணிகர்கள், வாமாசாரிகள், வேததரும விரோதிகள் வாயொடுங்கினர். காசியில் ஆரியசமாஜமும் அச்சுக் கூடமும் ஏற்பட்டது. மஹான் சென்றவிடமெல்லாம் இன்று, பொது நிலயங்களும், கலாசாலைகளும், வேதமந்திரங்களும், சமாஜங்களும் பொலிகின்றன! மீண்டும் ஹரித்வாரம் கும்பமேளத்திற்குச் சென்று, வேத கர்ஜனை செய்து, ஆரியக் கொடியைப் பலமாக ஊன்றினர்.

## பிளாவட்ஸ்கி

1875-ல் பம்பாயில் தியாசபி சங்கம் ஏற்படுத்திய ப்ளாவட்ஸ்கி ஆல்காட்டை தயானந்தர் மீரட்டில் சந்தித்து, அவர்களுடைய சமரஸ நோக்கத்தை வியந்து, சிலகாலம் அச் சங்கத்திற்குத் துணை செய்தார். பிறகு அதன் உறவை நீக்க நேர்ந்தது.

## வேதச் சூருவளி

ஆக்ராவில் ஆயிரக்கணக்கான அன்பர் ஆரிய சமாஜிகளாயினர். ஆஜ்மீரில் தயானந்தர் தீ விபத்தால் வருந்திய ஏழைகளுக்குப் பேருதவி செய்தார். இச்சமயம் பம்பாய் ஆரிய சமாஜம் முறைப்படி அமைந்து ஆண்டு விழா நடத்தியது. அதில் தயானந்தர் ஆரியவேத தருமத்தைப் பற்றி வீரமாகப் பேசினர். அதன்பின் உதயபுரி மன்னன் ஸாஜன்சிங்கிற்கு ஆரியதரும நீதி புகட்டினர். அங்கு ஒரு பரோபகார சபையும் ஏற்படுத்தினர். தம் பொருளை நிர்வகிக்கத் தயானந்தர் அச் சபைக்கு உரிமை தந்தார். வேத நூல்கள் அச்சிடல், வேத தருமப் பிரசாரம், பொதுக் கல்வி—இம் மூன்றிற்கே தமது பொருளைச் செலவிட வேண்டுமெனக் குறித்தார். உதயபுரி மன்னர் அவர் பணிக்குப் பெரும் பொருள் ஈந்தார். வீர எழுச்சி தரும் சித்தூர்க் கோட்டையில் ஒரு குருகுலம் அமைக்க விரும்பினர் ரிஷி. அங்கு சமாஜம் ஏற்பட்டது.

## இறுதி நாள்

ஷாஹபூரில் சில நாட்கள் தங்கி, மன்னர் வேண்டுகோட்படி ஜோதிபுரிக்குச் சென்றார். அங்கே அரசனும் அவனை அண்டிய பிரபுக்களும் தீய வாழ்வில் மூழ்கியிருந்ததைத் தயானந்தர் பலமாகக் கண்டித்து, அறவழி புகட்டினார். ராதார் மன்னன் ஜஸ்வந்த சிங்கிற்கு மன்னறம் விளக்கினார். ஜஸ்வந்த சிங்கனோ, நன்னிஜான் என்ற ஒரு பொல்லாத வேசை வலையில் பலமாகச் சிக்குண்டான். அவள் வைத்தது சட்டம். தயானந்தர் வியபிசாரத்தைக் கண்டித்து சூடுபெறப் பேசினார். ஒரு நாள் சுவாமிகள் மகாராஜாவைப் பார்க்க வந்தார். அப்போது நன்னிஜான் மகாராஜா பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள். சுவாமிகளுக்கு கோபம் வந்தது. "சிங்கம் போல் இருக்க வேண்டிய அரசர்கள், இந்த நாய்களோடு உறவு கொள்வதா" என்று சொன்னார். இதில் பொறாமையுற்ற அவ் விலைப்பெண், தயானந்தரின் உணவில் சமயற்காரன் மூலம் விஷத்தைக் கலந்து கொடுத்துவிட்டாள்.

## பலிதானம்

அந்த வஜ்ர தேகமும் வயிற்று நோயால் வருந்தியது. என்ன வைத்தியம் செய்தும் தீரவில்லை. அங்கிருந்து மஹான் அபு பர்வதம் சென்று, ஆஜ்மீரை அடைந்தார். வைத்தியர் ஆனமட்டும் பார்த்தனர். நாடெல்லாம் செய்தி பரவியது; தந்திகள் குவிந்தன; அன்பர் குழுமினர்; ஆவலாகப் பல கேள்விகள் கேட்டனர். "இறைவனிச்சையில் இருக்கிறேன்; இவ்வுடற் கவலை வேண்டாம்; நல்ல வழியில் இறைவன் உங்களை நடத்துக! நீங்கள் சுகமாய் வாழ்க!" என்றார். இறுதி நாளில் வேத மந்திரங்கள் ஓதினார்; காயத்ரி ஜபம் செய்தார். "எல்லாம் வல்ல அருளிறைவா! நின் உளம் நிறைவேறுக! ஓம்!" என்று தமது உடற் சட்டையை 30–10–1883-ல் உதறிச் சென்றார்.

இந்தியரின் கண்ணில் கண்ணீர் பெருகியது. ஆங்கிலரும் அமெரிக்கரும் அனுதாபம் காட்டினர். தயானந்தருக்குப் பிறகு லஜபதிராய், சிரத்தானந்தர் ஆகிய இரண்டு வீரச் சிங்கங்களும் ஆரிய சமாஜத்தைப் பலப்படுத்தினர்.

## சத்தியார்த்தப் பிரகாசம்

நவயுக பாரதத்திற்கு, தயானந்தரே சுக்கிரோதயம். அவரே நம் நாட்டின் ஒற்றுமைக்குத் தடையாயிருக்கும் ஜாதி வேற்றுமைகளை நீக்கினார். வேதத்தை எல்லோருக்கும் பொது வாக்கினார்; உருவணக்கத்தைத் எதிர்த்தார். ஆரியத்தில் இணையற்ற தேர்ச்சியுள்ள தயானந்தர், பல பாடசாலைகளை ஏற்படுத்தினார். அவற்றிற்கு வேண்டிய வேத பாடப் புஸ்தகங்களைத் தாமே எழுதினார்; வேதாந்தப் பிரகாசிகை யென்னும் இலக்கண நூலும், சத்தியார்த்தப் பிரகாசம் என்னும் ஆரிய தரும நூலும் இன்னும் பற்பல அரிய நூல்களையும் எழுதிக் குவித்தார். ஹிந்தி பாஷைக்குத் தேவநாகரி எழுத்துகளை அவரே முதலில் அமைத்தார். சாதி வேற்றுமை, தீண்டாமை, பாலிய விவாகம் முதலியவற்றைச் சமூகத்தினின்று விரட்டினார். ஆண்களுக்கு இருபத்தைந்திலும், பெண்களுக்குப் பதினாறு வயதிலுமே விவாகம் செய்ய வேண்டுமென விதித்தார். பெண்களுக்குரிய சுதந்தரத்தை நிலைநாட்டினார், ஆரிய மதத்தினின்று பிறமதம் புக்கவரைச் சுத்திசெய்து மறுபடி ஆரிய மதத்தில் சேர்த்துக்கொண்டார். பிரம்மசரியத்தை வற்புறுத்தி, ஆரிய சமூகத்தின் சக்தியைப் பெருக்கினார். 'இந்து' என்ற வார்த்தை வேதங்களில் இல்லை; அது பிறநாட்டார் நம்மை அழைத்த பெயர். ஆதலால் சமாஜத்திற்கு "ஆரிய சமாஜம்" என்று பெயரிட்டார். வேத தருமம், சமரஸ உறுதி, தேச ஒற்றுமை, அறிவு வளர்ச்சி, வீரக்கலை இவையே ஆரிய சமாஜம் உபதேசிப்பது.

## வேத தருமம்

பரம்பொருள் ஒருவன், அருவன், முதல்வன், தூயன், உண்மை யறிவின்பச் சுடர், எல்லாம் வல்லவன், எங்கும் நிறைந்தவன், எல்லையற்றவன், முதலீறற்றவன், பிறப்பிறப் பில்லோன், ஒப்புயர்வற்றோன், என்று முள்ளவன், அனைத்துளும் விளங்குவோன், எல்லாம் படைத்தவன்!

அவனை 'ஓம்' என்க; அவனையே வணங்குக!

வேதமே உண்மை அறிவு நூல்; அதைக் கற்றறிந்து கற்பித்து விளக்குதல் ஆரியர் கடன்.

மனிதா! உண்மையைப் போற்றிப் பொய்யை மறுக்கத் தயங்காதே. தருமம் அதருமம், சரி பிசகு எதுவெனஅறிந்து செய்வன செய். உடல் நலம், ஆன்ம நலம், சமுதாய நலம் போற்றி அருட்பணி புரிவதே ஆரியசமாஜத்தின் முதன்மையான நோக்கம் என்பதை அறி.

மடமையை விலக்கு, அறிவைத் துலக்கு; சுயநலம் விடுத்து, அனைவருக்கும் பொதுநலம் புரிந்து நலம் பெறு.

24 அல்லது 48 வயது மட்டும் ஆண்களும், 16 அல்லது 24 வயது மட்டும் பெண்களும் தூய பிரம்மசரியம் காக்க வேண்டும்.

மாணவர்க்கு பிரம்மசரிய குருகுலங்களில் அறிவு, ஆற்றல், ஒழுக்கம், ஆத்மசக்தி, உடலுரன் வளர்க்கும் கல்வி பயிற்ற வேண்டும். சிற்றின்ப நூல்கள், கதைகள் காட்சிகள், வசை மொழிகள் ஒழிக. ஊன், மது, முட்டை, வெங்காயம், அழிந்த உணவு, புகையிலை, கஞ்சா, எச்சில் உணவுகள் ஒழிக.

பசிக்குத் தக்க அளவு உண்க; புலன்களை அடக்குக; பிராணயாமம் செய்க.

இரண்டுமணி நேரமாவது பரம்பொருள் வணக்கம் நாடோறும் புரிக; சாதி வேற்றுமை யொழிக; இல்லற தருமத்தை முறையுடன் போற்றுக: மனிதா! உலகை அஞ்சாது, உண்மையைக் கடைபிடி. வேதம் எல்லோருக்கும் பொது.

இதுவே தயானந்தர் முழக்கம்; வாளிற்கும் நஞ்சிற்கும், தீதிற்கும் சூழ்ச்சிக்கும், மாந்தர் இகழ்ச்சிக்கும், கல்லிற்கும், கொலைஞருக்கும் அஞ்சாது, உண்மையைக் கர்ஜித்துச் சென்ற தயானந்தர், நமது உள்ளத்தில் என்றும் வாழ்க! உலகில் ஆரிய தருமம் ஓங்கிப் பரவுக! வேதமும், வேதக் கலையும் தழைத் தோங்குக!

ஓம் தத்ஸத்

ஓம்

சச்சிதானந்தேஸ்வராய நமோ நம:

# முன்னுரை

ஸத்யார்த்தப் பிரகாசம் என்னும் இந்நூலின் முதற்பதிப்பை வெளியிட்ட போதும், அதற்கு முன்னும், நான் சமஸ்கிருதமே பேசி, அதிலேயே எழுதி போதித்து வந்தேன். எனது தாய் மொழி குஜராத்தியானதால், ஹிந்தியில் விசேஷ பாண்டித்ய மின்றி, நூலில் சில குறைகள் புகுந்தன. இப்போது ஹிந்தி பாஷையில் பேச, எழுத நல்ல பழக்கம் ஏற்பட்டுவிட்டது. இதனால் நூலை இலக்கணப்படி திருத்தி, இரண்டாம் பதிப்பு வெளியிட்டிருக்கிறேன். இதில் இங்குமங்கும் சொற்களையும், தொடர்களையும் மாற்றி யிருக்கிறேன். நூலின் நடை நன்று யிருக்கவே அவ்வாறு செய்திருக்கிறேன். ஆனால் பொருளில் வேறுபாடில்லை. புதிய விஷயங்களைச் சேர்த்திருக்கிறேன். நூலை நன்றாகச் சோதித்து, முதற் பதிப்பிற் புகுந்த பிழைகளைத் திருத்திவிட்டேன். இதுவே சுத்தப் பதிப்பு.

இந்நூல், பதினான்கு அத்தியாயங்களைக் கொண்டது. இவற்றில் முதற்பத்தும் முதற்பாகம்; மற்ற நான்கும் இரண்டாம் பாகம். ஒரு காரணத்தால் முதற்பதிப்பில் வெளியிடாத இறுதி இரண்டத்தியாயங்களையும், எனது சித்தாந்தம் என்னும் பகுதியையும், இப்பதிப்பிற் சேர்த்திருக்கிறேன்.

முதல் அத்தியாயம் :—கடவுளின் ஓங்கார நாமங்களை விளக்கும்.

இரண்டாம் அத்தியாயம் :—மக்களைப் பயிற்றல்.

மூன்றும் அத்தியாயம் :—பிரம்மசரியம், கற்றல் கற்பித்தல், மெய்நூல், பொய்நூல், கல்விமுறை இவற்றை விளக்கும்.

நான்காம் அத்தியாயம் :—திருமணம், இல்லற ஒழுக்கம் இவற்றை விளக்கும்.

ஐந்தாம் அத்தியாயம்:—வானப்பிரஸ்த ஸந்யாஸ ஆசிரம விதிகள்.

ஆறும் அத்தியாயம் :—இராஜ தருமம்.

ஏழாம் அத்தியாயம் :—வேத ஈசுவர விஷயம்.

எட்டாம் அத்தியாயம் :—உலகின் படைப்பு, காப்பு, அழிவின் விளக்கம்.

ஒன்பதாம் அத்தியாயம் :—வித்தை, அவித்தை, பந்தம், மோட்சம் இவற்றின் விளக்கம்.

பத்தாம் அத்தியாயம் :—ஆசாரம், அனுசாரம், உண்ணத் தக்கது, உண்ணத்தகாதது, இவற்றைக் குறித்தது.

பதினோராம் அத்தியாயம் :—ஆரியாவர்த்தத்திலுள்ள மத மதாந்தரங்களின் கண்டனம்.

பனிரண்டாம் அத்தியாயம் :—சாருவாக, பௌத்த, ஜைன மத விஷயம்.

பதிமூன்ரும் அத்தியாயம் :—கிறிஸ்துமத விஷயம்.

பதினன்காம் அத்தியாயம் :—முகம்மதிய மத விஷயம்.

இறுதியில், எனது கொள்கையான ஸநாதன வேத தருமத்தின் சிறப்பை விளக்கி யிருக்கிறேன்.

மெய்யை மெய்யென்றும், பொய்யைப் பொய்யென்றும் காட்டி, சத்தியப் பொருளை விளக்குதலே இந்நூலின் முக்கிய மான குறிப்பாகும். மெய்யைப் பொய்யாகவும், பொய்யை மெய் யாகவும் காட்டுதல் உண்மை விளக்கமாகாது. எந்தப் பொருள் எப்படியுள்ளதோ, அதை அப்படியே பேசுவதும், எழுதுவதும் கருதுவதுமே உண்மையாகும். பக்ஷபாதி, தன் பொய்யை மெய் யென்றும், எதிராளியின் மெய்யைப் பொய்யென்றும் வாதிக் கிறுன். அதனுல் அவன் உண்மையை அறியான். ஆதலால் ஜனங்கள், தாங்களே உணர்ந்து, பொய்யைத் தள்ளி, மெய்யைக் கொண்டு இன்புறும் பொருட்டு, எழுத்தாலும், பேச்சாலும், அறிவாளிகள் ஸத்யார்த்த ஸ்வரூபத்தை (மெய்பொருள் வடிவை) விளக்குவது கடமையாயிருக்கிறது. மனிதான்மா மெய் இன்னது, பொய் இன்னது என்றறியும். எனினும், சுயநலம், பிடிவாதம், துராக்கிரகம், மடமை முதலிய பிழைகளால் மனிதன் மெய்யை விட்டுப் பொய்யில் விழுகிறுன். ஆனுல் இந்நூலில் இந்தப் பேச்சேயில்லை. எவர் மனசையும் புண்படுத்துவதோ, எவரையும் துன்புறுத்துவதோ நமது நோக்கமில்லை. மனித ஜாதியின் உன்னதி, உபகாரம், மனிதர் மெய் பொய் உணர்ந்து, பொய்யை விலக்கி மெய்யைத் தழுவுதல்—இவையே நமது உத்தேசம். மனித ஜாதியை உயர்த்த, இதைவிட வேறு வழியேயில்லை.

இந்த பக்கம் - "கீதை சொல்லுகிறபடி" என்று கீதை - பிரமாண
301 ஆம் பக்கம் கீதை சொல்லுவது மெய்யல்ல. பொய் -
அப்பிரமாணம் என்றிரு
இவரது முன் பின் முரணும் அறிவுக்கு தயானந்தரின்
3 மடமை

முன்னுரை

இந்நூலில் உள்ள குறைகள், அச்சுப்பிழைகள், இன்னது இப்படி யிருக்கலாம் என்பவற்றைத் தெரிவித்தால் திருத்திக் கொள்ளலாம். ஆனல் பக்ஷபாதத்தால் எழுதும் கண்டனம் கவனிக்கப்படமாட்டாது. மனித ஜாதிக்குப் பயனாகும் கருத்துக் களை உண்மையானல் பார்த்து ஒப்புக்கொள்வோம்.

இன்று ஒவ்வொரு மதத்திலும் பல அறிஞர் இருக்கிறார்கள். அவர்கள் பக்ஷபாதத்தைவிட்டு, ஒவ்வொன்றிலும், எல்லாருக்கும் நன்மையான, யதார்த்தமான, பொதுவுண்மையை ஏற்று, வேறுபாடுகளை ஒதுக்கித்தள்ளி, ஒருவருக்கொருவர் அன்புடன் பழகினல், உலகிற்கு நலமாகும். ஏனெனில் வித்துவான்களின் விரோதங்களால், அறியா மக்களிடையே பகை முதிர்ந்து, துயரைப் பெருக்கி, இன்பத்தைக் கெடுக்கிறது. சுயநலவாதி களுக்கு இனிதாகும் இத்துன்பம், எல்லா மனிதரையும் துன்பக் கடலில் ஆழ்த்துகிறது. இதனல் உலக மக்களின் நன்மையைக் கருதி ஏதாயினும் செய்பவரைச் சுயநலமிகள் எதிர்த்து இடர் கட்டை போடுகின்றனர். "सत्यमेव जयते नानृतं सत्येन पन्था विततो देवयान:" "சத்தியமே வெல்லும், அசத்தியமன்று; வித்துவான்கள் மெய்வழி நடப்பர்" என்ற வேத வசனத்தை உணரும் நல்லோர், பரோபகாரத்தை அசட்டை செய்யார்; உண்மைப்பொருள் விளக்கத்தைக் கைவிடார். கல்வி, தருமம் ஆகிய விஷயங்கள் கீதை சொல்லுகிறபடி முதலில் விஷம் போல் இருந்தாலும், பிறகு அமுதம்போல் இனிக்கும். † "यत्तदग्रे विषमिव परिणामेऽमृतोपमम्" இந்த விஷயங்களை மனதில் வைத்துக்கொண்டே இந்நூலை எழுதியிருக்கிறேன். இதைப் படிப்பவரும் கேட்பவரும், அன்பு கூர்ந்து, இந்நூலில் உள்ள உண்மைப்பொருளைச் சிந்தித் தறிவார்களாக.

எல்லா மதங்களிலும் உள்ள முரணற்ற உண்மைகளெல் லாம் இதிற் சேர்த்திருக்கிறேன். பொய்களைக் கண்டித்திருக் கிறேன். அவற்றில் திறந்தும் மறைந்தும் உள்ள ஊழல்களை யெல்லாம் பண்டித பாமரர் அனைவர் முன்பும் அம்பலப்படுத்தி யிருக்கிறேன். இதனல் அவர்கள் தங்களுள் ஆராய்ந்து, ஒருவருக்கொருவர் அன்புகொண்டு ஒரு சத்ய தர்மத்தைத் தழுவ இயலும். நான் ஆரியாவர்த்தத்தில் பிறந்து வசிக்கிறேன். எனினும் அதிலுள்ள மத மதாந்தரங்களில் புகுந்த பொய்களைப் போற்ருமல், அம்பலப்படுத்துகிறேன். அதுபோலவே பிற மதங் களின் விஷயத்திலும் செய்கிறேன். என்னவரைப் போலவே

† பகவத்கீதை அத்தியாயம் 18 - சுலோகம் 37 -
"யத்ததக்ரே விஷம் இவ பரிணாமே அம்ருத உபமம்" =
எது முதலில் விஷம் போலும் முடிவில் அமிருதத்துக்கு ஒப்பாகவும்

அன்னியரையும் மனித சமுதாயத்தின் முன்னேற்றத்திற்காகவே ஒன்றுக மதிக்கிறேன். நல்லோர்கள் இவ்வாறே செய்ய வேண்டுகிறேன். இக்காலம் பக்ஷபாதிகள் தங்கள் மதத்தையே உயர்வாகப்பேசி, பிறர் மதத்தைத் தாழ்வாக இழித்துப் பிறர் முன்னேற்றத்தைக் கெடுக்கின்றனர். இந்தியாவில் இன்றுள்ள ஒரு மதத்திற்கே சலுகை காட்டினுல் நானும் அத்தகைய பக்ஷபாதியாவேன். ஆனுல் இது மனிதன் பெருமைக்குத் தாழ்வாகும். பலமுள்ள முரட்டு மிருகங்கள் மெலிந்தவற்றைத் துன்புறுத்துகின்றன, கொல்லுகின்றன. மனிதனும் அப்படிச் செய்தால், அவன் விலங்கேயாவான். பலவனுகி, மெலிந்தவருக்குப் பாதுகாப்பளிப்பவனே மனிதன். சுயநலங்கொண்டு பிறரைத் துன்புறுத்தும் மனிதன், விலங்குக்கு அண்ணனுகிருன்.

முதல் பதினேரத்தியாயங்களில், பாரதநாட்டினர் சமயங்களைப் பற்றியே சிறப்பாக ஆராய்ந்திருக்கிறேன். இந்த அத்தியாயங்களில் சொல்லப்பட்ட மதம் வேத சம்மதமானதால் நான் உண்மையெனக் கொள்கிறேன். சமீபத்தில் உண்டான புராணம், தாந்திரம் முதலிய நூல்களைக் கண்டனம் செய்திருக்கிறேன். இவற்றை விடுக்கவேண்டும். பன்னிரண்டாம் அத்தியாயத்தில் சாருவக மதத்தை ஆராய்ந்திருக்கிறேன். அது நாஸ்திக வாதத்தில், கடவுளில்லை யென்பதில் ஜைன பௌத்த சமயங்களைப் போன்றதே. இது பெரிய நாஸ்திக மதம். இதை அவசியம் தடுக்கவேண்டும். ஏனெனில் பொய்ச் சமயங்களைத் தடுக்காவிட்டால் உலகில் பெருந்தீங்கு விளையும். பன்னிரண்டாம் அத்தியாயத்தில், பௌத்த ஜைன மதங்களும் சாருவாகத்துடன் ஆராயப்படும். அவற்றிற்குள்ள ஒற்றுமை வேற்றுமைகளை அங்கே காட்டியிருக்கிறேன். விபரங்களுக்கு வாசகர் அந்த அத்தியாயத்தைப் பார்க்கவும். தீபவம்சம், பௌத்தமத சங்க்ரஹம், ஸர்வதர்சன சங்க்ரஹம், போன்ற நூல்களை ஆதாரமாகக் கொண்டே அம்மதத்தை ஆராய்ந்திருக்கிறேன்.

ஜைன மதத்திற்கு ஆதாரமான நூல்களில் நான்கு மூல சூத்திரங்களாவன :

I. 1. ஆவச்யக சூத்ரம் 2. விசேஷ ஆவச்யக சூத்ரம் 3. தச வைகாலிக சூத்ரம் 4. பாக்ஷிக சூத்ரம்.

II. பதினேரங்கங்களாவன : 1. ஆசாராங்க சூத்ரம் 2. சுகடாங்க சூத்ரம் 3. தாணுங்க சூத்ரம் 4. ஸமவாயாங்க

சூத்ரம் 5. பகவதீ சூத்ரம் 6. ஞாதாதர்மகதா சூத்ரம் 7. உபாசக தசா சூத்ரம் 8. அந்தகட தசா சூத்ரம் 9. அநுத்த ரோவ வாயீ சூத்ரம் 10. விபாக சூத்ரம் 11. பிரச்ன வியாகரண சூத்ரம்.

III. பன்னிரண்டு உபாங்கங்களாவன: 1. உபவாயீ சூத்ரம் 2. ராய பாஸோநி சூத்ரம். 3. ஜீவாபிகம சூத்ரம். 4. பன்னவணு சூத்ரம். 5. ஜம்பூத்வீப பன்னதீ சூத்ரம். 6. சந்த பன்னதீ சூத்ரம். 7. ஸூர பன்னதீ சூத்ரம். 8. நிரியாபலீ சூத்ரம். 8. கப்பியா சூத்ரம். 10. கபவடீசயா சூத்ரம். 11. பூப்பியா சூத்ரம். 12. புப்ய சூலியா சூத்ரம்.

IV. ஐந்து கல்ப சூத்ரங்களாவன: 1. உத்தரா த்யயன சூத்ரம். 2. நிஷீத சூத்ரம். 3. கல்ப சூத்ரம். 4. வ்யாவஹார சூத்ரம். 5. ஜீத கல்ப சூத்ரம்.

V. ஆறு சேதங்கள்: 1. மஹா நிஷீத ப்ருஹத் வாசனு சூத்ரம். 2. மஹா நிஷீத லகு வாசனு சூத்ரம். 3. மத்யம வாசனு சூத்ரம். 4. பிண்ட நிருக்தி சூத்ரம். 5. ஒக நிருக்தி சூத்ரம். 6. பர்யூஷனு சூத்ரம்.

VI. பத்து பயன்னு சூத்ரம்: 1. சதுஸ்சரண சூத்ரம். 2. பச்சகாண சூத்ரம். 3. ததுலவையாலிக சூத்ரம். 4. பக்தி பரிஞான சூத்ரம். 5. மஹா ப்ரத்யக்யாந சூத்ரம். 6. சந்தா விஜய சூத்ரம். 7. கணீ விஜய சூத்ரம். 8. மரணஸமாதி சூத்ரம். 9. தேவேந்த்ரஸ்தமன சூத்ரம். 10. ஸம்ஸார சூத்ரம். நந்தீ சூத்ரம், யோகோத்தார சூத்ரம் இவையும் பிரமாணமாக ஒப்புக்கொள்வர்.

VII. பஞ்சாங்கங்களாவன: 1. முன் சொன்னவற்றின் விரிவுரை, 2. நிருக்தி. 3. சரணீ. 4. பாஷ்யம் இந்நான்கும் அவயவங்கள். மேற்சொன்ன நூல்களின் மூலமெல்லாம் சேர்த்து ஐந்தாம் அங்கமாகும்.

தூண்டியர்கள் அவயவங்களை நம்புவதே இல்லை. இவற்றைத் தவிர ஜைனர்கள் நம்பும் பல்வேறு நூல்கள் உண்டு. அவர்கள் சமயத்தைப் பன்னிரண்டாம் அத்தியாயத்தில் ஆராய்வோம். ஜைனக் கிரந்தங்களில் இலட்சக் கணக்கான புனரோக்திகள் உள்ளன. அசமணர் கையில்படும் அல்லது வெளியாகும் நூல்களை ஆதாரமில்லை என்னும் வழக்கம் சில ஜைனர்களிடையே உண்டென்பதை நினைக்கவும். சிலர் நம்பிச் சிலர் மறுக்கும் நூல்

களை ஆதாரமில்லையென்பது அசம்பாவிதமாகும். எந்த ஜைன னும் நம்பாத நூல்கள் அத்தாட்சியாகா. அத்தகைய நூல்களை நான் எடுத்தாளவில்லை. எனது கண்டனம் அந்தந்த நூல்களை நம்புவோர்களுக்கேயாம். தாம் நம்பும் புத்தகத்தையே சபை யிலோ தர்க்கத்திலோ மறுக்கும் ஜைனர்களும் உண்டு. ஜைனர்கள் மற்றவர் பார்க்காமல் தங்கள் நூல்களை மறைத்து வைக்கிறார்கள். ஆட்சேபகர்களுக்குப் பதில் சொல்லமுடியாத பல அபத்தங்கள் நிறைந் திருப்பதனாலேதான், ஜைனர்கள் பிறர் பாராமல், கேளாமல், படியாமல் தங்கள் நூல்களை மறைக்கின் றனர். பொய்யை ஒழிப்பதே அதற்குப் பதிலாகும்.

பதின்மூன்றும் அத்தியாயத்தில் கிறிஸ்து மதத்தை ஆராய்ந் திருக்கிறேன். கிறிஸ்தவர் பைபிளை அறநூலாகக் கருது கின்றனர். இதன் விசேஷத்தைப் பதின்மூன்றும் அத்தியாயத் திற் காண்க. பதிநான்காம் அத்தியாயத்தில் முஸல்மான் சமயத்தை ஆராய்ந்திருக்கிறேன். இம்மதத்தினருக்குக் குரானே மூல புத்தகமாகும். இதன் விசேஷங்களைப் பதிநான்காம் அத்தியாயத்திற் காண்க. பிறகு வேத தர்மத்தைப் பற்றி எழுதி யிருக்கிறேன். பகைமன மில்லாமல் பார்ப்பவருக்கு, இந்நூலில் ஆசிரியர் நோக்கம் தெளிவாகும்.

வாக்யார்த்தத்திற்கு நான்கு காரணங்கள் வேண்டும் :

1. ஆகாங்க்ஷை—பேசுவோன் அல்லது ஆசிரியர் கருத்தை ஆராய்தல்.
2. யோக்யதை —கருத்தின் தகுதி. நீர் பாய்கிறது என் பதில் நீருக்குத் தகுந்த செயலே காணும்.
3. ஆஸத்தி —சம்பந்தம் பார்த்துப் பதமமைத்துச் சொல்லல், எழுதல்.
4. தாத்பரியம் —ஆசிரியரின் கருத்தறிந்த பொருள் கோடல்.

மதவெறியால் பல அடம்பிடித்த துராக்ரகிகள், ஆசிரியர் அபிப்பிராயத்திற்கு எதிரிடையாகக் கற்பனைப் பொருள் கூறு கிறார்கள். மத வெறிகொண்டவர்களே இவருள் முதன்மையான வர்கள். மத மோகத்தால் அவர்கள் புத்தி இருளாகிக் கெடு கிறது. நான், புராணம், ஜைன பௌத்த கிரந்தங்கள், பைபிள், குரான் இவற்றைப் பாரபக்ஷமில்லாமற் படித்தேன். அவற்றி

லிருக்கும் குணங்களைக் கொண்டு குற்றங்களைத் தள்ளினேன். மனித ஜாதியின் உன்னதிக்கே இம்முயற்சி செய்தேன். பிறரும் அவ்வாறு செய்க. இம்மதங்களில் குறைகளைச் சுருக்கமாகக் காட்டியிருக்கிறேன். ஜனங்கள் மெய் பொய் இன்னதென்ற றிந்து, பொய்யை விலக்கி மெய்யைப் போற்ற வேண்டுமென்றே வற்புறுத்துகிறேன். மனித ஜாதியில் பிரிவினை கிளப்பிப் பகை யுண்டாக்கி, ஒருவருக் கொருவர் விரோதம் பாராட்டிச் சண்டை யிட்டு அடித்துக் கொள்ளல், அறிஞர் செயலாகாது. அறியா தார் நான் சொல்வதை தப்பர்த்தம் செய்வது உறுதி. ஆனால் அறிவாளிகள் எனது உத்தேசத்தை அறிந்து கொள்வார்கள். அதுவே நான் இந்நூலை எழுதியதற்குக் கைம்மாறாகும். இந்த நூலை எல்லா நல்லோர் முன்னும் நிவேதிக்கிறேன். அவர்கள் இதைப்படித்து உண்மையை ஏற்று, என் முயற்சி பலிக்கச் செய்க. பக்ஷபாத மில்லாமல் சத்தியார்த்தத்தை தைரிய மாகத் துணிந்து வெளியிடல் எனக்கும் நல்லோருக்கும் முதன்மை யான கடமையாகும் என்று நினைக்கிறேன்.

ஸர்வாத்மா, ஸர்வாந்தர்யாமி, சச்சிதானந்த பரமாத்மா, கருணைப்பூத்து, இந்தக் கருத்து பரவி நிலைபெற அருளுக!

அறிவு மணிகளுக்கு அதிகஞ் சொல்லத் தேவையில்லை.

॥ अलमतिविस्तरेण बुद्धिमद्वरशिरोमणिषु ॥

உதயபூர் மஹாராணா அரண்மனை,<br>
விக்ரம ஆண்டு 1939<br>
பாத்ரபத, சுக்லபக்ஷம்<br>
1882. கி.பி.

(சுவாமி)<br>
தயானந்த சரஸ்வதி



சச்சிதானந் தேஶ்வராய நமஃ।

# சத்தியார்த்தப் பிரகாசம்



## முதல் அத்தியாயம்

## கடவுளின் ஓங்காராதி நாம விளக்கம்

ॐ शन्नो मित्रः शं वरुणः शन्नो भवत्वर्यमा। शन्न इन्द्रो बृहस्पतिः शन्नो विष्णुरुरुक्रमः॥ नमो ब्रह्मणे नमस्ते वायो त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि। त्वामेव प्रत्यक्षं ब्रह्म वदिष्यामि ऋतं वदिष्यामि सत्यं वदिष्यामि तन्मामवतु तद्वक्तारमवतु। अवतु मामवतु वक्तारम्॥ ओ३म् शान्तिश्शान्तिश्शान्तिः॥ १॥

[ஓம்! மித்திரனும் வருணனும் எமக்கு நலம்மருள்க! அர்யமான் எமக்கு நலமருள்க! இந்திரனும் பிருஹஸ்பதியும் எங்கும் நிறைந்த விஷ்ணுவும் எமக்கு நலமருள்க! பிரம்மத்திற்கு வணக்கம்! வாயுவே உனக்கு வணக்கம்! நீயே பிரத்யக்ஷப் பிரம்மம்; நீயே கண்கண்ட பிரம்மம் என்கிறேன்; சரியானதைச் சொல்லுகிறேன். சத்தியஞ் சொல்லுகிறேன். அது என்னைக் காக்கட்டும்; ஆசிரியரை அது காத்தருள்க! எம்மைக் காத்தருள்க! ஆசிரியரைக் காத்தருள்க. ஓம் சாந்தி: சாந்தி சாந்திஃ]

ஓம்! இறைவா, நண்பா, புனிதா, உலகநாதா, கருணை செய்! எல்லாம் வல்ல எல்லாம் அறிந்த கடவுளே, அனைத்தையும் நீ தாங்குகிறாய்; எமக்கு அறிவும் ஆற்றலும் அளி! எங்கும் நிறைந்த சர்வேசா, நலமருள்! பிரம்மமே வணக்கம்! எல்லாம் வல்ல பரம்பொருளே, எங்கள் இதயவாசனே, நீயே முற்றினுன். நீயே எங்கள் உண்மையிறைவன். வேதமே உன் சம்மதம்; அதையே நான் பின்பற்றி உபதேசிப்பேன். மன மொழி மெய்களில் நான் உண்மையா யிருப்பேன். நீயே என் புகல். நான்

உன் ஊழியன். உண்மையே பேசுவேன்; நான் மாரு உறுதியுடன் உன் இச்சைவழி நிற்பேஞக! உன் இச்சையே மெய்யறம்; அதற்கு மாருனது பொய், அதர்மம். என்னைப் புகல் தந்து காப்பாற்று! எல்லாரும் உன் உண்மையைப் பற்றிக் கடைத்தேறி இன்புறுக!

ஓங்கார சப்தமே பரமேச்வரனின் சர்வோத்தம நாமமாகும். இதில் அ, உ, ம் என்ற மூன்றெழுத்துக்கள் சேர்ந்திருக்கின்றன. இந்த ஒரு பெயரிலிருந்தே பரமேசனின் பல பெயர்கள் போந்தன. அகாரத்திலிருந்து விராட், அக்னி, விச்வாதி; உகாரத்திலிருந்து ஹிரண்யகர்பன், வாயு, தைஜஸ்; மகாரத்திலிருந்து ஈச்வரன், ஆதித்யன், பிராக்ஞாதி நாமங்கள் போந்தன. இந்தப் பெயர்களெல்லாம் சர்வேச்வரனுக்கே உரியதென்று வேதாதி சத்திய சாஸ்திரங்கள் தெளிவாக விளக்குகின்றன.

**வினு:**—விராடாதி நாமங்கள் பரமேச்வரனைத் தவிர வேறு வஸ்துக்களுக்கு இல்லையா? பிரம்மாண்டம், பிருதிவி, ஆதி பூதம், இந்திராதி தேவதைகளின் பெயர்கள், வைத்திய சாத்திரங்களில் (சுக்கு முதலிய) மூலிகைகளுக்குக்கூட வழங்குகின்றனவே?

**விடை:**—ஆம், பரமாத்மாவுக்குந்தான் வழங்குகின்றன.

**வினு:**—இப்பெயர்கள் தேவதைகளையே குறிப்பன என்று ஏன் கொள்ளக்கூடாது?

**விடை:**—தங்கள் கொள்கைக்குப் பிரமாண மென்ன?

**வினு:**—தேவதைகள் பிரசித்தமானவை, உத்தமமானவை, அதனுல் அவ்வாறு கொள்கிறேன்.

**விடை:**—அப்படியாஞல், கடவுள் அப்பிரசித்தரா, தேவதைகளை விட உத்தமரல்லரா? அவரைவிடப் பெரியார் யார்? இப் பெயர்கள் பரமேசனுக்கும் பொருந்துமென்பதை நீர் ஏன் ஒப்பவில்லை? கடவுளே சுப்ரசித்தராகவும் சர்வோத்தமராகவும் இருக்கையில், அவரினும் உயர்ந்த பொருள் எது? தங்கள் வாதம் மெய்யன்று. அதில் மிகவும் குற்றங்கள் உள்ளன. "उपस्थितं परित्यज्यानुपस्थितं याचत इति बाधितन्यायः" முன்னுல் சோறு வைத்துச் சாப்பிடச் சொன்னுல், அதை விட்டு சோற்றுக்கு அலைபவன் அறிவாளியாகமாட்டான். ஏனெனில் அவன் முன்னே உள்ளதை விட்டு இல்லதற்குச் சிரமப்படுகிருன். தங்கள் பேச்சும்

அப்படித்தான். ஏனெனில் விராடாதி நாமங்கள் பரமேசனுக்கும் பிரமாண்டாதிக்கும் இருக்க, அதைவிட்டு தேவதைகளுக்கென்று கொண்டு சிரமப்படுகிறீர். இது பிரமாணமுமன்று பொருத்தமுமன்று. அததற்குப் பொருத்தமான பொருள் கொள்ளவேண்டும். உதாரணமாக "சைந்தவம்" என்பது, உப்பிற்கும் குதிரைக்கும் பெயர். "हे भृत्य! त्वं सैन्धवमानय" "சேவகா சைந்தவங்கொண்டு வா" என்றால், அவன் சிந்தித்துப் பார்த்து, உசிதமானதைக்கொண்டு வரவேண்டும். எஜமானன் சாப்பிடும் போதானால் உப்பைக் கொண்டு வரவேண்டும்; வெளியே போகும்போதானால் குதிரையைக் கொண்டு வர வேண்டும். வெளியே புறப்படும் போது உப்பையும், சாப்பிடும்போது குதிரையையும் கொண்டுவந்தால் எசமான் கோபித்து, "நான் கேட்டதைச் சமயமறிந்து சிந்தித்துக்கொண்டு வரவில்லை. உனக்குப் புத்தியில்லை; போ, என் முன் நிற்காதே" என்பான். அதே மாதிரி ஒரு வார்த்தையைச் சமயோசிதமாக சிந்தித்துப் பொருள் செய்யவேண்டும். இதை நாமும் அனைவரும் அறியத்தகும். இதற்கு வேதப்பிரமாணம் சொல்லுகிறேன் கேளும்.

1. ओ३म् खम्ब्रह्म ॥ १ ॥ யஜு. 40-17.

2. ओमित्येतदक्षरमुद्गीथमुपासति ॥ २ ॥

சாந்தோக்ய உபநிஷத். மந்-1.

3. ओमित्येतदक्षरमिद॰ सर्वं तस्योपव्याख्यानम् ॥ ३ ॥

(மாண்டூக்ய மந்-1).

4. सर्वे वेदा यत्पदमामनन्ति तपा॰सि सर्वाणि च यद्वदन्ति ।
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं संग्रहेण ब्रवीम्योमित्येतत् ॥

(கடோபநிஷத் வல்லி-2. மந்-15).

5. प्रशासितारं सर्वेषामणीयांसमणोरपि ।
रुक्माभं स्वप्नधीगम्यं विद्या त्तं पुरुषं परम् ॥ ५ ॥

6. एतमग्निं वदन्त्येके मनुमन्ये प्रजापतिम् ।
इन्द्रमेके परे प्राणमपरे ब्रह्म शाश्वतम् ॥ ६ ॥

(மனு 12 ஸ்லோ. 122, 124).

7. स ब्रह्मा स विष्णुः स रुद्रस्स शिवस्सोऽक्षरस्स परमः स्वराट्।
स इन्द्रस्स कालाग्निस्स चन्द्रमाः ॥ ७ ॥ கைவல்ய உபநிஷத்.

8. इन्द्रं मित्रं वरुणमग्निमाहुरथो दिव्यस्स सुपर्णो गरुत्मान्।
एकं सद्विप्रा बहुधा वदन्त्यग्निं यमं मातरिश्वानमाहुः ॥ ८ ॥
ருக்-1-164-46.

9. भूरसि भूमिरस्यदितिरसि विश्वधाया विश्वस्य भर्त्री।
पृथिवीं यच्छ पृथिवीं दृꣳह पृथिवीं मा हिꣳसीः ॥ ९ ॥
யஜுர்-13-18.

10. इन्द्रो मह्ना रोदसी पप्रथच्छव इन्द्रः सूर्यमरोचयत्।
इन्द्रेह विश्वा भुवनानि येमिर इन्द्रे स्वानास इन्दवः ॥ १० ॥
சாமவேதம்-6-8-2.

11. प्राणाय नमो यस्य सर्वमिदं वशे।
यो भूतः सर्वस्येश्वरो यस्मिन्त्सर्वं प्रतिष्ठितम् ॥ ११ ॥
அதர்வம்-11-2-4-1.

பொருள் :

1. ஆகாசம் போன்று எங்கும் நிறைந்த ஓமே பிரம்மம் பரம்பொருள். (யஜுர்வேதம்)

"अवतीत्योम्, आकाशमिव व्यापकत्वात् खम्, सर्वेभ्यो बृहत्त्वाद् ब्रह्म"

2. ஓம் எனப்படும் அழியாப் பரம்பொருளே நமது வணக்கத்திற்குரியது (சாந்தோக்யம்)

3. எல்லா வேத சாஸ்திரங்களிலும் பரமேசனின் முக்கிய நாமம், உண்மைப் பெயர் "ஓம்" எனப்படுகிறது. மற்றதெல்லாம் குணப் பெயரே. (மாண்டூக்ய உபநிஷத்)

4. எல்லா வேதங்களும், தபானுஷ்டானங்களும் எந்நிலையை விரும்புமோ, எதையே வணங்கத் தக்கதாக உரைக்குமோ, எதை இச்சித்துப் பிரம்மசரியம் காக்கின்றனரோ, அந்தப் பதத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். அதுவே ஓம். (கடோபநிஷத்து)

5. எல்லாருக்கும் குரு, அணுவினும் நுண்ணியவன் அதிசூக்ஷ்மன், சுப்ரகாசன், நிலைத்த புத்தியால் சமாதியில் அறியப்படுபவன், அந்தப் பரமபுருஷனை அறியவேண்டும்.

6. சுப்ரகாசனானதால் அவனை அக்னி, விஞ்ஞான ஸ்வரூபமானதால் மனு, அனைவரையும் பாதுகாப்பதால் பிரஜாபதி, எல்லா ஐசுவர்யங்களும் சக்திகளும் பொருந்தியதனால் இந்திரன், எல்லாருக்கும் உயிரளிப்பதால் பிராணன், சாசுவதமாக எங்கும் நிறைந்திருப்பதால் பிரம்மம் என்றும் அவரவர் அழைக்கின்றனர். அவன் ஒருவனே—(மனுஸ்மிருதி)

7. அவனே பிரஹ்மம், பரம்பொருள், உலகை ஆக்கினோன்; எங்கும் நிறைந்த விஷ்ணு; தீயரை அழிக்கும் உருத்திரன்; இன்பமளிக்கும் மங்கல மயனான சிவன். என்றுமுள்ள அக்ஷரன், அழிவிலி, தானே இறைவன் (यः सर्वमश्नुते न क्षरति न विनश्यति तदक्षरम्) உலகரசன் ஸ்வராட் (यः स्वयं राजते स स्वराट्); பிரளயத்தில் அனைத்தையும் எரித்தழிக்கும் காலாக்னி, (योऽग्निरिव कालः कलयिता प्रलयकर्त्ता स कालाग्निरीश्वरः) காலத்தை வகுக்கும் சந்திரன், அவனே எல்லாம். (கைவல்ய உபநிஷத்து)

8. இரண்டற்ற ஒரு பொருள் சத்து, உண்மை. அதையே அறிஞர் பலவிதமாக அழைக்கின்றனர். அதையே இந்திரன், மித்திரன், வருணன், அக்னி, பொலிவு மிக்க திவ்யன், (द्युषु शुद्धेषु पदार्थेषु भवो दिव्यः) உலகைக் காக்கும் நிறைவான செயலோனான ஸுபர்ணன், (शोभनानि पर्णानि पालनानि पूर्वाणि कर्माणि वा यस्य सः सुपर्णः) பேரியல்பனான கருத்மான், (यो गुर्वात्मा स गरुत्मान्) காற்றைப் போல பலவனான மாதரிஸ்வான் (यो मातरिश्वा वायुरिव बलवान् स मातरिश्वा) என்பர். (ருக்வேதம்) மற்றப் பெயர்கள் பின்னே வரும்.

9. அனைத்திற்கும் நிலைக்களமான பூமி, உலகைத் தந்தவன், உலகைத்தாங்குவோன் என்பர். (भवन्ति भूतानि यस्यां सा भूमिः)

10. இந்திரன் என்பது இறைவன் பெயரே. (சாமவேதம்)

11. எல்லா உடல்களும், புலன்களும் பிராணவசப்பட்டிருப்பது போலே, உலகெல்லாம் இறைவன் வசத்தில் உள்ளது. அனைத்திற்கும் அவனே நிலைக்களன்—(அதர்வண வேதம்)

இந்த மேற்கோள்களின், உண்மைப் பொருளை நன்று உணர்ந்தால் ஓம் அக்னி முதலிய நாமங்கள் பரமேசனையே

குறிக்கும் என்பதை நன்கு அறிந்துகொள்ளலாம். வியாகரணம், நிருக்தம், பிராம்மணம், சூத்ரங்கள் முதலிய ரிஷி வாக்குகளும் விரிவுரைகளும் பரமேசனின் ஏகத்வத்தை நிலை நாட்டுகின்றன. இறைவனுக்கு ஓம் என்பதே உண்மைப் பெயர். அக்னி முதலியவை அவனையே சிறப்பிக்கும் சிறப்புப் பெயர்களாகும். தோத்திரம், தொழுகை, உபாசனைகளில் முற்றறிவன், எங்கும் நிறைந்த வியாபகன், சுத்தன், பழையோன், சநாதனன், படைப்புத் தலைவன், முதலிய பெயர்கள் ஒரு பரம் பொருளையே சிறப்பிப்பதாகக் கருதவேண்டும். அடியில்வரும் பெயர்கள் இயற்கைப் பொருள்களையே குறிக்கும்.

ततो विराडजायत विराजो अधि पूरुष: । श्रोत्राद्वायुश्च प्राणश्च मुखादग्निरजायत । तेन देवा अयजन्त । पश्चाद्भूमिमथो पुर: ॥

யஜு. அத். 3.

तस्माद्वा एतस्मादात्मन आकाश: सम्भूत: । आकाशाद्वायु: । वायोरग्नि: । अग्नेराप: ः अद्भ्य: पृथिवी । पृथिव्या ओषधय: । ओषधिभ्योऽन्नम् । अन्नाद्रेत: । रेतस: पुरुष: । सवा एष पुरुषोऽन्नरसमय: ॥

—தைத்திரீயம். ப்ரம்மானந்தவல்லி—1.

இவை யஜுர்வேத, தைத்ரியோபநிஷத் வாக்கியங்கள். இவற்றில் வரும் விராட், புருஷன், தேவன், ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், பூமி முதலிய பெயர்கள் லௌகிக பதார்த்தங்களைக் குறிக்கும். ஏனெனில் உற்பத்தி, ஸ்திதி, நாசம், சிற்றறிவு, சடத்தன்மை, காட்சிப்பொருள்—இவற்றைக் குறிக்கும் இடங்களில் பரமேசன் என்று பொருள் செய்யலாகாது. அவர் பிறப்பு முதலிய விவகாரங்களுக்கு அப்பாலானவர். மேற்சொன்ன மந்திரங்களில் விவகாரங்களே காண்கின்றன. ஆதலால் இங்கே விராட் ஆதிநாமங்கள் உலகப்பொருள்களாகவே கொள்க; சர்வக்ஞாதி விசேஷணங்கள் காணுமிடங்களில் மட்டுமே பரமபொருளைக் குறிக்கவேண்டும். இச்சை, துவேஷம், முயற்சி, சுகம், துக்கம், சிற்றறிவுகளைக் குறிக்குமிடங்களில் ஜீவனை வைத்துப் பொருள் செய்யவேண்டும். ஏனெனில் பரமேசனுக்கு ஜனன மரணாதி அவஸ்தைகள் ஒருக்காலுமில்லை. இங்கே விராடாதி நாமங்கள் ஜன்மாதிகளைக் கொண்டதால் ஜட-ஜீவாதிகளையே குறிக்கும்; பரமேசனைக் குறிக்கா.

இனி விராடாதி நாமங்கள் பரமேசனைக் குறிக்கும் வகையைக் கீழே தருகிறேன்.

## ஓங்காரப் பொருள்

1. விராட் : என்பது 'ராஜ்ரு' (பொலிவித்தல்) என்னும் தாதுவிலிருந்து வருகிறது. அத்துடன் 'வி' சேர்ந்து விராட் ஆனது. 'வி' என்றால் விவிதம். "यो विविधं नाम चराऽचरं जगद्राजयति प्रकाशयति स विराट्" பலவகையாக உலகைப் பிரகாசிக்கச் செய்யும் இறைவன் விராட் புருஷன்.

2. அக்னி : (अञ्चू गतिपूजनयोः (अग, अगि, इण्गत्यर्थक) கதி, பூஜை என்னும் பொருளுள்ள "அஞ்சு" என்னும் தாதுவினின்று வந்தது.

"गतेस्त्रयोऽर्थाः ज्ञानं गमनं प्राप्तिश्चेतिः पूजनंनाम सत्कारः"
"योऽञ्चति अञ्चयतेऽगत्यङ्गत्येति वा सोऽयमग्निः"—

ஞானேச்வரன், ஸர்வக்ஞன், அறிந்துணர்ந்து, அடைந்து பூஜிக்கத் தக்க பரமேசன் அக்னியாவான்.

3. விச்வன் : (विश - प्रवेशने) 'விச'—புகுந்துறைதல் என்னும் தாதுவிலிருந்து 'விச்வ' வந்தது.

"विशन्ति प्रविष्टानि सर्वाण्याकाशादीनि भूतानि यस्मिन् यो वाऽऽकाशादिषु सर्वेषु भूतेषु प्रविष्टः सः विश्व ईश्वरः" ॥

ஆகாசாதி பூதங்களிலெல்லாம் புகுந்துறைபவன், எல்லாம் தன்னுள் உறைந்திடப் பெற்றவன் இறைன்.

4. ஹிரண்யகர்பன்: "ज्योतिर्वै हिरण्यं तेजो वै हिरण्यमित्यैतरेये शतपथे च ब्राह्मणे" "यो हिरण्यानां सूर्यादीनां तेजसां गर्भ उत्पत्तिनिमित्तमधिकरणं स हिरण्यगर्भः" (ஹிரண்யம் - ஒளி. கர்பம் - மூலம்) சூரியன் முதலிய ஒளிப் பொருள்களுக்கெல்லாம் மூலமும், இருப்பிடமும், ஆதாரமுமான ஜோதிஸ்ரூபன், பரமாத்மா. ஹிரண்யகர்பனே முதல்வன், ஆதிப்பொருள். அவனே பூத வுல கிறைவன், உலகைத் தாங்குவோன்; சூரியனைத் தாங்குவோன். இன்பமயனை அவனை வணங்குவோம் என்பது யஜுர்வேத வாக்கு :—

ओम् हिरण्यगर्भः समवर्त्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत्
स दाधार पृथिवीं द्यामुतेमां कस्मै देवाय हविषा विधेम ॥

யஜு. 13–4.

5. வாயு : (वा गतिगन्धनयो :) "வா" என்னும் தாதுவி லிருந்து வருகிறது. 'गन्धनं हिंसनम्'.

"यो वाति चराऽचरञ्जगद्धरति बलिनां बलिष्ठः सः वायुः"

எங்கும் ஓடிப்பரவி, உலகுயிருக்குக் காரணமாகி, உலகின் அழிவுக்கும் ஏதுவாகி, ஒப்பற்ற பலம் பொருந்திய இறைவனே வாயு.

6. தேஜன் : (तिज निशाने) திஜ (ஒளிர்) என்ற தாதுவி லிருந்து வருகிறது. 'திஜ' தத்திதமானால் 'தேஜஸ்' ஆகிறது. தேஜோன் மயனுகி, சூரியன் முதலியவற்றிற்கு ஒளி தருவோன் ஈசன்.

7. ஈச்வரன் : (ईश ऐश्वर्ये) 'ஈச' ஐசுவரியம் என்னும் தாது விலிருந்து உண்டானது.

"य ईष्टे सर्वैश्वर्यवान् वर्त्तते स ईश्वरः"

எல்லையற்ற சக்திமான், ஞானவான், இறைவன், அனந்த ஐச்வரியன், மெய்யன்.

8. ஆதித்யன் : (दो अवखण्डने) "தோ" தாதுவிலிருந்து "அதிதி"யாகி தத்தித விருத்தியால் "ஆதித்ய" சப்தமுண்டா கிறது.

"न विद्यते विनाशो यस्य सोऽयमदितिः। अदितिरेव आदित्यः"

என்றும் அழியாத இறைவன்.

9. ப்ராக்ஞன் : (ப்ர = முழு, ஜ்ஞ = அறிதல்) (ज्ञा अवबोधने) 'ப்ர' தாதுவிலிருந்து 'ப்ரக்ஞ' ஆகி, தத்தித செய்வதால் "ப்ராக்ஞன்" சப்தம் ஜனிக்கிறது.

"यः प्रकृष्टतया चराऽचरस्य ज्ञाता व्यवहारं जानाति स प्रज्ञः। प्रज्ञ एव प्राज्ञः"

அண்ட சராசர விவகாரங்களெல்லாம் முற்றிலும் அறிந்த சர்வக்ஞுன இறைவன்.

[இந்த ஒன்பதில் முதல் மூன்று அ, 3—6 உ, 7—9 ம், சேர்ந்து ஓங்காரத்தின் விளக்கங் காண்க.]

இவ்வாறே வேதத்தில் வரும் இறைவனது குணப் பெயர்களுக் குப் பொருள் ஓங்காரத்திலிருந்தே செய்யவேண்டும். நாம் முத லில் குறித்த "சந்நோ மித்ரஃ ஸம் வருணஃ" என்ற பாசுரத்தில்

வரும் "மித்ராதி" பெயர்களும் பரமாத்மாவையே குறிக்கும். ஏனெனில் தோத்திரம், பிரார்த்தனை, உபாசனை, வணக்கம் எல்லாம் உயர் பொருளுக்கே உரியன. குணம், கர்மம், இயல்பு, உண்மை, நீதி முதலியவற்றில் அனைவரையும் மிஞ்சிய பெரும் பொருளே உயர் பொருளாம். மிகச் சிறந்த மகோன்னதமான பொருள் பரமேசனே. அவனினும் பெரும் பொருள், பரசுத்த வஸ்து முன்னுமில்லை, இன்றுமில்லை, இனியுமில்லை. அவனினும் சிறந்தது எப்படியிருக்க முடியும்? பரமேசனிடம் நிறைந்துள்ள சத்தியம், நியாயம், தயை, சர்வக்ஞாதி அனந்த குணங்கள், ஜடம் ஜீவன் ஆகிய எந்த வஸ்துவிடமும் காண முடியாது. சத்தியப் பொருளின் குண கர்ம ஸ்வபாவங்களும் சத்தியமே. ஆதலால் எல்லா மனிதரும் பரமேசனையே துதி, பிரார்த்தனை, உபாசனை செய்க. அவனைத் தவிர வேறெதற்கும் வணக்கஞ் செய்யற்க. ஏனெனில் பிரம்மா, விஷ்ணு, மகாதேவன், தைத்தியர், தானவர்களும், வித்வான்களும், அசுரர்களும் முன்னே பரமேச்வரனையே துதித்து, பிரார்த்தித்து, உபாசித்தனர்; வேறெவரையுமில்லை. எல்லாரும் அப்படியே செய்யவேண்டும். இதைப் பற்றி 7, 9வது அத்தியாயங்களில் விரிவாகச் சொல்லப் படும்.

வினா :— மித்திரன் என்றால் நண்பன்; இந்திரன் முதலானோர் தேவதைகள் என்று கொள்ளலாமே.

விடை :— இங்கே இப்படி அர்த்தம் செய்யக் கூடாது. ஏனெனில் ஒருவனுக்கு மித்திரனாயிருக்கும் மனிதன் இன்னொருவனுக்குச் சத்துருவா யிருக்கிறான்; மற்றொருவரிடம் உதாசீனனா யிருக்கிறான். இறைவனோ எல்லாருக்கும் மித்திரனாவான். எவருக்கும் அவன் பகைவனன்று, உதாசீனனன்று; எந்த மனிதனும் அவனைப் போல் இருக்க முடியாது. ஆதலால் பரமாத்மா தான் மித்திரன் என்பதன் முதன்மையான பொருள். சாதாரண நண்பன் என்பது துணைப் பொருளாகும்.

10. மித்திரன் :— (ञिमिदा स्नेहने) "க்த்ர" ப்ரத்யயம் சேர்ந்த "ஞிமித" தாதுவிலிருந்து "மித்ர" சப்த முண்டாகிறது.

" मेद्यति स्निह्यति स्निह्यते वा स मित्रः ", எல்லாருக்கும் நண்பனாகி, எல்லாரும் சிநேகிக்கத் தக்கவன், பிரேமமூர்த்தி.

11. வருணன் :— (वृञ् वरणे, वर ईप्सायाम्) “உனன்” ப்ரத்யயம் சேர்ந்த “வ்ருஞ்” தாதுவிலிருந்து ‘வருண’ சப்த மாகிறது.

“यः सर्वान् शिष्टान् मुमुक्षून् धर्मात्मनो वृणोत्यथवा यः शिष्टैर्मुमुक्षु-भिर्धर्मात्मभिर्व्रियते वर्य्यते वा स वरुणः परमेश्वरः”

உண்மையும், முக்தியும் வேண்டும் புலவர், புண்ணியர் நாடும் புண்ணியன். “वरुणो नाम वरः श्रेष्ठः” வரன், சிறந் தோன்.

12. அர்யமான் :— (ऋ गतिप्रापणयोः) யத் ப்ரத்யயம் சேர்ந்த “ரு” தாதுவிலிருந்து “அர்ய” சப்தமாகிறது. ‘அர்ய’ ‘மாங், மானே’ தாதுவிலிருந்து ‘கனின்’ ப்ரத்தயயம் சேர்ந்து “அர்யமா” சப்தமாகிறது.

“योऽर्य्यान् स्वामिनो न्यायाधीशान् मिमीते मान्यान् करोति सोऽर्य्यमा”

நல்லாருக்கு நலமும், பொல்லாருக்குத் தண்டனையும் தரும் நீதிக் கடவுள்; இருவினைப் பயன்களைத் தருபவன்.

13. இந்திரன் :— (इदि परमैश्वर्ये) ‘இதி’ தாதுவிலிருந்து ‘ரன்’ ப்ரத்யயம் செய்வதால் “இந்திர” “य इन्दति परमैश्वर्यवान् भवति स इन्द्रः परमेश्वरः” பரமைச்வர்யவான், எல்லாம் வல்ல கடவுள்.

14. ப்ருஹஸ்பதி :— (पा रक्षणे) “ப்ருஹத்” தின் “பா” தாது, ப்ருஹத்தின் ‘த’கார லோபமடைந்து, ‘ததி’ ப்ரத்யயத் தால் கூடி “பிருஹஸ்பதி” ஆகிறது.

“यो बृहतामाकाशादीनां पतिः स्वामी पालयिता स बृहस्पतिः”

பெரியோன், ஆகாசாதி பிரம்மாண்டங்களின் தலைவன்.

15. விஷ்ணு :— (विष्लृ व्याप्तौ) “நு” ப்ரத்யயம் சேர்ந்த “விஷ்ல்ர் = வியாபி” தாதுவினின்று “விஷ்ணு” சப்த மாகிறது.

“वेवेष्टि व्याप्नोति चराऽचरं जगत् स विष्णुः”

அண்ட சராசரங்களிலும் வியாபித்து நிற்கும் இறைவன்; எங்கும் நிறைந்தவன்.

16. உருக்கிரமன் :— "उरुर्महान् क्रमः पराक्रमो यस्य स उरुक्रमः"

அனந்த பராக்ரமனுன கடவுள்.

17. பிரஹ்மா :— (वायो ते ब्रह्मणे नमोऽस्तु) (बृह बृहि वृद्धौ)

அனைத்திற்கும் உறையுளான பெரியோன் "ப்ருஹ" தாது விலிருந்து "பிரஹ்மா" உண்டாகிறது.

அனைத்திலும் மேலோன், பெரியோன், எங்கும் நிறைந்த பரம்பொருள். சத்தியன், உண்மையாளரைக் காப்பவன்; அவனையே வணங்கவேண்டும். மனம் அவனிடம் நிலைத்து, அவன் ஆணையைப் புரியவேண்டும். அவனே நம்மைக் காக்க வல்லவன். அவன் நமக்கு பரம சாந்தியைத் தருவான். "நமது ராகத்வேஷங்களால் வரும் அத்யாத்மிக துக்கம், பகைவர், புலி, பாம்புகளால் வரும் 'ஆதி பௌதிக' துக்கம், குளிர், வெப்பம், மனம் இந்திரியங்களால் வரும் 'அதி தெய்விக' துக்கம் ஆகிய துக்கங்களிலிருந்தும் எங்களை விடுவித்து நாங்கள் தர்மத்தை நன்ருக பயின்று, நித்தியமான சத்திய வழிப்பற்றிப் பேரின்ப மடைய அருள்புரிவாயாக, பரப்பிரம்மமே வணக்கம்!" என்று பிரம்மத்தை உபாசிக்க வேண்டும்.

18. சூரியன் :—"सूर्य आत्मा जगतस्थुषश्च" ஜடஜீவ உலகிற்கெல்லாம் உயிராயிருக்கும் சுப்ரகாசன், சேதன அசேதன வஸ்துக்களுக் கெல்லாம், இயற்கைப் பொருள்களுக்கெல்லாம் ஆத்மாவான பரஞ்சோதி.

19. ஆத்மா :—"अत सातत्यगमने" 'அத' தாதுவிலிருந்து 'ஆத்மா' என்ற சப்தமாகிறது.

योऽतति व्याप्नोति स आत्मा ஜடஜீவ வுலகெங்கும் பரவி நிறைந்த பொருளை.

20. பரமாத்மா :—"परश्चासावात्मा च य आत्मभ्यो जीवेभ्यः सूक्ष्मेभ्यः परोऽतिसूक्ष्मः स परमात्मा" ஜீவனைவிட, இயற்கை, ஆகாசம் இவற்றைவிட மேலானவன், சிறந்தோன்; ஆகாசத்தைவிட சூக்ஷ்மமாகி அனைத்திலும் அந்தர்யாமியாக நிறைந்தவன்.

21. பரமேச்வரன் :—"य ईश्वरेषु समर्थेषु परमः श्रेष्ठः स परमेश्वरः" ஒப்புயர்வற்ற சர்வ சக்திமானுன எல்லாம் வல்ல இறைவன்.

22. ஸவிதா :—(षुञ् अभिषवे, षूङ् प्राणिगर्भविमोचने) 'षूङ्' தாதுவிலிருந்து 'ஸவிதா' உண்டாகிறது.

"अभिषवः प्राणिगर्भविमोचनं चोत्पादनम्। यश्चराचरं जगत् सुनोति सूते वोत्पादयति स सविता परमेश्वरः" உலகை ஆக்கும் கர்த்தாவாதலால், இறைவன் "ஸவிதா."

23. தேவன் :—(दिवु क्रीडाविजिगीषाव्यवहारद्युतिस्तुतिमोदमदस्वप्नकान्तिगतिषु) 'திவ்' தாதுவிலிருந்து உண்டாகிறது. சுத்தன், உலகாடல் செய்வோன்.

"यो दीव्यति क्रीडति स देवः" பிறர் உதவியின்றி தனது சுயம் சக்தியால் செயல் புரிவோன்; திருவிளையாடல் புரிவோன்.

"विजिगीषते स देवः" வெல்ல முடியாத சக்திமான், வெற்றியளிப்பவன்.

"व्यवहारयति स देवः" நியாயாநியாயம் அறிந்து அதற்குத் தகுந்த நியதி செய்பவன்.

"यश्चराचरं जगत् द्योतयति" ஒள்ளியன், ஒளி தருவோன்.

"यः स्तूयते स देवः" போற்றுதற்குரியன்.

"यो मोदयति स देवः" ஆனந்தஸ்வரூபன், அணுவும் துயரில்லாதவன். பிறர் துயரை துடைத்து ஆனந்தமளிப்பவன்.

"यो माद्यति स देवः" எப்போதும் சந்தோஷமாயிருப்பவன், சோகமற்றவன், சக்திமான். பிறர் சோகத்தை ஒழித்து இன்பமளிப்பவன்.

"यः स्वापयति स देवः" பிரளய காலத்தில் எல்லா ஜீவராசிகளையும் உறங்கச் செய்பவன்.

"यः कामयते काम्यते वा स देवः" நல்லோரும் அறவோரும் விரும்பி அடையத் தக்கவன்.

"यो गच्छति गम्यते वा स देवः" எங்கும் இயங்கி நிறைவானவன், அறிதற்குரியவன். அவனே தேவன்.

24. குபேரன் :—(कुबि आच्छादने) 'குவி' தாதுவிலிருந்து உண்டாகிறது.

"यः सर्वं कुवति स्वव्याप्त्याच्छादयति स कुबेरो जगदीश्वरः" யார் தனது ஜோதியால் அனைத்தையும் ஆதரித்துக் கவர்ந்து நிற்கும் பரமாத்மன்.

25. பிருதிவி: (प्रथ विस्तारे) ப்ரத என்ற தாதுவிலிருந்து 'பிருதிவி' என்ற சொல் சித்தமாகிறது.

"यः पृथते सर्वजगद्विस्तृणाति स पृथिवी" பரந்த உலகை விரிந்து பரவச் செய்தவன்.

26. ஜலம்: (जल घातने) ஜல என்ற தாதுவிலிருந்து உண்டாகிறது.

"जलति घातयति दुष्टान्, संघातयति-अव्यक्तपरमाण्वादीन् तद् ब्रह्म जलम्" தீயரைப் புடைப்பவன், பரமாணுக்களைச் சேர்த்தும் பிரித்தும் வகுத்தும் உலகை ஆக்கியழிக்கும் இறைவன்.

27. ஆகாசன்: "काशृ दीप्तौ" "காச்ரு" தாதுவிலிருந்து உண்டானது "यः सर्वतः सर्वं जगत् प्रकाशयति स आकाशः" உலகை யெல்லாம் ஒளியுறுத்துவோன், ஜகத்பிரகாசன்.

28. அன்னம்: (अद भक्षणे) அத என்ற தாதுவிலிருந்து 'அன்ன' என்ற சொல் உண்டாகிறது.

உண்பவன், தன்னுள் உலகை யெல்லாம் அடக்கியவன். அத்திப் பழத்தில் தோன்றி, நின்று, மறையும் புழுப் போல், உலகம் பரமாத்மனிடம் தோன்றி, நின்று, லயமாகிறது. பூதங்களை உண்பதனால் இறைவன் 'அன்னம்' 'அன்னாத' 'அத்தா' எனப்படுகிறான்.

अद्यतेऽत्ति च भूतानि तस्मादन्नम् तदुच्यते ॥ १॥

अहमन्नमहमन्नमहमन्नम्। अहमन्नादोऽहमन्नाद्रोहमन्नादः॥ २॥

தைத்திரீய உபநி-2-10.

"நான் அன்னம், நான் அன்னம், நான் அன்னம், நான் அன்னமுண்பவன்" என்று தைத்திரியம் சொல்லுகிறது.

अत्ता चराचरग्रहणात् (வேதாந்த தர்சனம் 1-2-9) 'சராசரங்களை உண்கிறான்' என்கிறது வேதாந்த தர்சனம், அல்லது வியாச முனி இயற்றிய சாரீரிக சூத்திரம்.

29. வசு: (वस निवासे) "வஸ" = வசி தாதுவிலிருந்துண்டானது.

"वसन्ति भूतानि यस्मिन्नथवा यः सर्वेषु भूतेषु वसति स वसुरीश्वरः" அனைத்திலும் உறைபவன், அனைத்திற்கும் உறையுள்.

30. ருத்ரன்: (रुदिर् अश्रुविमोचने) 'ருதிர்' என்ற தாதுவிலிருந்து வந்தது. 'यो रोदयत्यन्यायकारिणो जनान् स रुद्रः।' பாபிகளையும் துஷ்டர்களையும் அழச்செய்பவன் ருத்திரன்.

"यन्मनसा ध्यायति तद्वाचा वदति यद्वाचा वदति तत् कर्मणा करोति यत् कर्मणा करोति तदभिसम्पद्यते" "மனதால் நினைத்ததை மனிதன் பேசுகிறான். பேசியதைச் செய்கிறான். செய்கையின் பலனை அடைகிறான்" என்று யஜுர்வேத ப்ராஹ்மணம் சொல்லுகிறது.

விதைக்கேற்ற விளைவு, வினைக்கேற்ற பலன் வருகிறது. நியாய தேவனான ருத்திரன் தீயருக்குத் தீப்பயனளித்து, வருந்தச் செய்கிறான். அதனால் அப்பரமன் உருத்திரனாகிறான்.

31. நாராயணன்:

आपो नारा इति प्रोक्ता आपो वै नरसूनवः। ता यदस्यायनं पूर्वं तेन: नारायण: स्मृत: ॥ (மனு-1-10).

நாரா=நீர் அல்லது நரஜீவர்; அயனம் = வாசம். எல்லா ஜீவர்களிடமும் குடிகொண்டிருப்பவன் நாராயண பிரம்மம்.

32. சந்திரன்: (चदि आह्लादे) சதி என்ற தாதுவிலிருந்து 'சந்திரன்' வருகிறது.

"यश्चन्दति चन्दयति वा स चन्द्रः" (சதி = மகிழ்வித்தல்) ஆனந்த ஸ்வரூபன், எல்லாருக்கும் இன்பமளிப்பவன்.

33. மங்களன்: (मगि गत्यर्थक) மகி என்ற தாதுவிலிருந்து 'மங்களம்' ஆகிறது.

"यो मङ्गति मङ्गयति वा स मङ्गलः" எல்லாருக்கும் மங்களமளிக்கும் இறைவன்.

34. புதன்: (बुध अवगमने) புத என்ற தாதுவிலிருந்து வந்தது. (புத - அறிதல்)

"यो बुध्यते बोधयति वा स बुधः" முற்றறிவன், அறிவளிப்பவன்.

ப்ருஹஸ்பதி:—இதன் பொருள் முன்பே விளக்கப்பட்டிருக்கிறது.

35. சுக்கிரன்: (ईशुचिर् पूतिभावे) சுசிர் என்ற தாதுவிலிருந்து உண்டானது "यः शुच्यति शोचयति वा स शुक्रः"

(சுசிர்=தூயுறுத்தல்) சுயம் சுத்தனாய் ஜீவர்களுக்குப் தூய்மை யளிக்கும் சுத்த பரமாத்மன்.

36. சனைச்வரன்: (चर गतिभक्षणयोः) "சனைச்" உபபதம் பெற்ற "சர" தாதுவிலிருந்துதித்து. "यः शनैश्चरति स शनैश्चरः" எதையும் எளிதாக தைரியமாக அடையும் பரமாத்மன்.

37. ராகு: (रह त्यागे) என்ற தாதுவிலிருந்து வந்தது "यो रहति परित्यजति दुष्टान् राहयति त्याजयति वा स राहुरीश्वरः" ஏகாந்த ஸ்வரூபன், துஷ்டர்களைக் கை விடுபவன்; முக்தர்களை துஷ்டர்களினின்று விடுவிப்பவன்.

38. கேது: (कित निवासे रोगापनयने च) கித என்ற தாதுவிலிருந்து உண்டானது.

"यः केतयति चिकित्सति वा स केतुरीश्वरः" உலகில் இடங் கொண்டு முமுக்ஷுக்களுக்கு முக்திபெறுங் காலத்தில் நோய் வராமல் பாதுகாப்பவன், நோயிலி, சாவிலி, நித்ய பரமாத்மன்.

39. யக்ஞன்:— (यज देवपूजासंगतिकरणदानेषु) யஜ தாது விலிருந்துண்டானது. "यज्ञो वै विष्णुः" என்கிறது சதபதம் "यो यजति विद्विद्भिरिज्यते वा स यज्ञः" பொருள்களை ஒன்று சேர்த்து, உலகை ஆக்கி, எங்கும் நிறைந்தவன்; எல்லா ரிஷி களும் முனிவரும் பூஜிக்கத் தக்கவன், பூஜிக்கப்பட்டவன்.

40. ஹோதா:— (हु दानाऽदनयोः, आदाने चेत्येके) "ஹு" தாதுவிலிருந்து ஆனது. "यो जुहोति स होता" ஜீவர்களுக்குத் தரத் தக்கதைத் தந்து, பெறத் தக்கதைப் பெறுவோன்.

41. பந்து:— (बन्ध बन्धने) "பந்த்" தாதுவினாலானது.

"यः स्वस्मिन् चराचरं जगद् बध्नाति बन्धुवद्धर्मात्मनां सुखाय सहायो वा वर्त्तते स बन्धुः"

*லோக லோகாந்தரங்களைத் தன்னில் இணைத்து வைப்பவன்; தனது தர்ம நியமத்தில் உயிர்களை இணைப்பவன்; பந்துக்களைப் போல் ஆதரித்துக் காத்து, அனைவரையும் மகிழ்விப்பவன், இறைவன்.*

42. பிதா:—(पा रक्षणे) "பா" தாதுவிலிருந்து ஆனது. "यः पाति सर्वान् स पिता" ஒரு தந்தை தன் மக்கள் நலத்தை

வேண்டுவதுபோல், எல்லா உயிர்களின் நன்மையையும் வேண்டிக் காப்பாற்றும் அன்புக் கடவுள்.

43. பிதாமஹறன் :—"यः पितॄणां पिता स पितामहः"

தந்தைக்குத் தந்தை. தந்தைக்கும் தந்தையாயிருந்து ஜீவர்களைக் காப்பவன்.

44. பிரபிதாமஹறர் :—"यः पितामहानां पिता स प्रपितामहः"

தந்தை தந்தைக்கும் தந்தை; அதாவது அனைவருக்கும் ஆதியானவர், பெரியவர்.

45. மாதா :—"यो मिमीते मानयति सर्वान् जीवान् स माता"

ஒரு தாயார் பேரன்பும் மகிழ்ச்சியுங் கொண்டு தனது குழந்தைகளின் நலத்தையும் செழிப்பையும் வேண்டுகிறள்; அதே போல் தான் படைத்த உயிர்களின் நலத்தையும் இன்பத்தையும் வேண்டும் இறைவன் மாதா, தாய், அன்னை எனப்படுகிறன்.

46. ஆசார்யன் :—(चर गतिभक्षणयोः) "आङ्" சேர்ந்த 'சர' தாதுவிலிருந்து உண்டானது.

"यः आचारं ग्राहयति सर्वा विद्या बोधयति स आचार्य ईश्वरः"

சத்யாசாரமும், வித்தையும், ஞானமும் அளிக்கும் ஞான மூலமான இறைவன்.

47. குரு :—(गॄ शब्दे) 'க்ரு' தாதுவிலிருந்துண்டானது.

यो धर्म्यान् शब्दान् गृणात्युपदिशति स गुरुः।

स पूर्वेषामपि गुरुः कालेनानवच्छेदात् ॥

யோக சூத்திரம் சமாதிபாதம்–26

எல்லா வித்தைகளுக்கும் ஞானங்களுக்கும் ஆசான். வேதத்தை உபதேசிப்பவன். சிருஷ்டி காலம் முதலே அக்னி, வாயு, ஆதித்யன், ஆங்கிர, ஆதி ஆசிரியர்களுக்கும் குரு நாதன்; அழிவற்றவன்; இறைவன். காலத்தால் அழியாதவன் ப்ரஹ்மா குரு.

48. அஜன் :—(अज गतिक्षेपणयोः, जनी प्रादुर्भावे) "அஜ" தாதுவிலிருந்துண்டாகிறது.

"योऽजति सृष्टिं प्रति सर्वान् प्रकृत्यादीन् पदार्थान् प्रक्षिपति जानाति वा कदाचिन्न जायते सोऽजः"

இயற்கையின் அவயவங்களையும், ஆகாசாதிபூத பரமாணுக் களையும் ஒன்று சேர்ப்பவன்; உடலுடன் உயிரைக் கூட்டு வோன்; பிறப்பை யளிப்பவன்; தான் பிறவாதான்.

49. பிரஹ்மன் :— बृह बृहि वृद्धौ இத்தாதுகளிலிருந்து 'ப்ரஹ்மா' சொல் பிறந்தது. "योऽखिलं जगन्निर्माणेन बृंहति वर्द्धयति स ब्रह्मा" உலகை ஆக்கிப் பலவாகப் பெருகச் செய்பவன்.

"ஸத்ய, ஞானம், அநந்தம் ப்ரஹ்ம" என்பது தைத் திரிய உபநிஷத் வாக்கு.

50. ஸத்யன் :—सन्तीति सन्तस्तेषु सत्सु साधु तत्सत्यम्। 'ஸத்' என்றால் உள்ள பொருள். இறைவன் என்றும் உயிருக் குயிராயுள்ள மெய்ப்பொருளாவான்.

51. ஞானம் :— यज्जानाति चराचरं जगत्तज्ज्ञानम्। உலகெல் லாம் அறிந்தவன், எல்லாரும் அறியத்தக்கவன், பரமன்.

52. அனந்தம் :—न विद्यतेऽन्तोऽवधिर्मर्यादा यस्य तदनन्तम्॥ இவ்வளவு நீளம் உயரம் அகலம் குட்டை நெட்டை என்னுமல், எல்லையற விரிந்தவன்.

53. ஆதி "यस्मात् पूर्वं नास्ति परं चास्ति स आदिरित्युच्यते"
54. அனுதி "न विद्यते आदि: कारणं यस्य सोऽनादिरीश्वर:"

ஆதி காரணமும், இறுதியும் இல்லாமல் என்றும் எக்காலமும் இருக்கும் நித்தியன்.

55. ஆனந்தன் :—(टुनदि समृद्धौ) டுனதி என்ற தாதுவி லிருந்துண்டானது.

"आनन्दन्ति सर्वे मुक्ता यस्मिन्यद्वाय: सर्वान् जीवानानन्दयति स आनन्द:";

முக்த ஜீவர்களுக்குப் பேரின்ப மளிக்கும் ஆனந்த ஸ்வ ரூபன். தர்மாத்மாக்களை இன்புறுத்துவோன்.

56. ஸத் :—(अस भुवि) அஸ என்ற தாதுவிலிருந்துண் டானது.

"यदस्ति त्रिषु कालेषु न बाध्यते तत्सद् ब्रह्म"

சென்ற, நிகழ், வருங் காலங்களிலும் மாறுபாடின்றி காலத்தை வென்று நிலைத்திருக்கும் சத்தியப் பொருளான பரமேசன்.

57. சித் :-(चिति संज्ञाने) சிதி என்ற தாதுவால் உண்டானது.

"यश्चेतति चेतयति संज्ञापयति सर्वान् सज्जनान् योगिनस्तच्चित् परं ब्रह्म"

ஜீவர்களுக்கு உண்மை யின்னது பொய் யின்னது என்றறிவித்து, ஞானத்தைத் தூண்டும் சேதன ஸ்வரூபன்.

58. சச்சிதானந்த : சத், சித், ஆனந்தன் ; உண்மையறிவின்பன்.

59. நித்தியன் : "यो नित्यध्रुवोऽचलोऽविनाशी स नित्यः" உறுதியாக நிலேத்து நிற்கும் அழிவற்ற பரமேசன்.

60. சுத்தன் : (शुन्ध शुद्धौ) சுந்த என்ற தாதுவிலிருந்து வந்தது.

"यः शुन्धति सर्वान् शोधयति वा स शुद्ध ईश्वरः"

தான் பரிசுத்தனுய், பிறரை அசுத்தம் நீக்கிச் சுத்தமாக்கும் இறைவன்.

61. புத்தன் : (बुध अवगमने) புத என்ற தாதுவிற்கு 'க்த' ப்ரத்யயம் சேர்ந்து 'புத்த' சப்தமாகிறது.

"यो बुद्धवान् सदैव ज्ञाताऽस्ति स बुद्धो जगदीश्वरः"

எல்லாம் அறிபவன், எல்லாரும் அறியவேண்டிய பரமாத்மன்.

62. முக்தன் : (मुच्लृ मोचने) முஞ்ச் என்ற தாதுவிலிருந்து 'முக்த' ஆகிறது.

"यो मुञ्चति मोचयति वा मुमुक्षून् स मुक्तो जगदीश्वरः"

எல்லா ஆன்மாக்கஃாப் பாவங்கள் அசுத்தங்களிலிருந்தும், தீமை துயரங்களிலிருந்தும் விடுவிப்பவன்.

"अत एव नित्यशुद्धबुद्धमुक्तस्वभावो जगदीश्वरः"

இதனுல் இறைவன் நித்ய, சுத்த, புத்த, முக்த சுபாவனுகிருன்.

63. நிராகாரன் : (डुकृञ् करणे) நிர், ஆங்பூர்வக க்ரு தாதுவிலிருந்துண்டானது "निर्गत आकारात्स निराकारः" உருவற்றவன், உடலெடுக்காத அனுதி முக்தன்.

64. நிரஞ்சனன் : (अञ्जू व्यक्तिम्लक्षणकान्तिगतिषु) அஞ்ஜு என்ற தாதுவிலிருந்து வந்தது.

"अञ्जनं व्यक्तिर्म्लक्षणं कुकामइन्द्रियैः प्राप्तिश्चेत्यस्माद्यो निर्गतः पृथग्भूतः स निरञ्जनः"

உருவம், நிறம், தீநெறி, தீய ஆசைகள், இந்திரிய விஷயங்கள்—இவற்றினின்றும் வேறுபட்டவன்; பரிசுத்தன்.

65. கணபதி, 66. கணேஷ்: (गण सख्याने) கண் என்ற தாதுவிலிருந்துண்டானது. 'கண' அத்துடன் ஈச, பதி முதலியவை சேர்த்தால் கணேசன் கணபதி ஆகிறது.

"ये प्रकृत्यादयो जडा जीवाश्च गण्यन्ते संख्यायन्ते तेषामीशः स्वामी पतिः पालको वा"

இயற்கையிலுள்ள ஜட, ஜீவ கணங்களுக்கெல்லாம் தலைவனும், காப்பாளனுமான ஈசன்; கணங்களின் தலைவன்.

67. விசுவேச்வரன்: "यो विश्वमीष्टे स विश्वेश्वरः" அகில உலகின் முதவன்.

68. கூடஸ்தன்: "यः कूटेऽनेकविधव्यवहारे स्वस्वरूपेणैव तिष्ठति कूटस्थ ईश्वरः"

ஸர்வாந்தர்யாமியாகி, எல்லா விவகாரங்களையும் தாங்கி, தான் எந்த விவகாரத்தாலும் மாற்ற மடையாத பரமேசன்.

69. தேவி: "தேவன்" என்ற சொல்லின் பொருளிலேயே "தேவி" என்பதையும் கொள்க. கடவுளை ஆண், பெண், அலி ஆகிய முப்பாலும் குறிக்கும். தேவன் என்பது ஆண் பால்; தேவி என்பது பெண் பால். "ब्रह्म चितिरीश्वरश्चेति" எப்போது ஈஸ்வர விசேஷணமோ அப்போது "தேவ" சப்தமும், எப்போது "விசேஷிய" மாகுமோ அப்போது "தேவீ" சப்தமும் இறைவன் பெயராகும்.

70. சக்தி: (शकॢ शक्तौ) சகல என்ற தாதுவிலிருந்து வந்தது.

"यः सर्वं जगत् कर्तुं शक्नोति स शक्तिः"

சகல உலகைப் படைக்க வல்லவன்; சக்தி பெற்றவன்.

71. ஶ்ரீ: (श्रिञ सेवायाम्) ச்ரிஞ் என்ற தாதுவிலிருந்து வந்தது.

"यः श्रीयते सेव्यते सर्वेण जगता विद्वद्भिर्योगिभिश्च स श्रीरीश्वरः"

வித்வான்களும், யோகிகளும் சேவை செய்யும் இறைவன்.

72. லக்ஷ்மீ: (लक्ष दर्शनाङ्कनयोः) லக்ஷ என்ற தாதுவிலிருந்து ஆனது.

"यो लक्षयति पश्यत्यङ्कते चिह्नयति चराचरं जगदथवा वेदैराप्तैर्योगिभिश्च यो लक्ष्यते स लक्ष्मीः सर्वप्रियेश्वरः"

உலகைக் காண்பவன், அதற்குரிய சின்னங்களைத் தருகிறவன். உதாரணமாக உடலுக்கு கண், மூக்கு; மரத்திற்கு இலைகள், மலர்கள், கனிகள், வேர்கள்; இயற்கைக்கும் தண்ணீருக்கும் கருமை, வெண்மை, சிகப்பு முதலிய நிறங்கள்; தரைக்கு மண் கல்; சூரிய சந்திரர் முதலிய சின்னங்களைப் படைத்து அவற்றை சாட்சியாகப் பார்த்திருக்கிறன். அவன் அனைத்தினும் பொலிவுடைய அழகன். அவனே வேதாதி சாஸ்திர, தார்மிக வித்வான்களாலும் யோகிகளாலும் இலட்சியமாகக் கொண்டு அறியத் தக்கவன்.

73. ஸரஸ்வதி: (सृ गतौ) ஸ்ரு என்ற தாதுவிலிருந்து வந்த சொல். "सरो विविधं ज्ञानं विद्यते यस्यां चितौ सा सरस्वती" எல்லையற்ற உலகறிவும், சப்தார்த்த சம்பந்த ஞானமுங் கொண்ட இறைவன்.

74. ஸர்வ சக்திமான்: "सर्वाः शक्तयोविद्यन्ते यस्मिन् स सर्वशक्तिमानीश्वरः" பிறர் துணையின்றித் தானே தன் சக்தியால் தனது காரியங்களைச் செய்யும் இறைவன்.

75. நியாயகாரி: (णीञ् प्रापणे) ணீஞ் என்ற தாதுவிலிருந்தானது. प्रमाणैरर्थपरीक्षणं न्यायः என்று 'வாத்ஸ்யாயன முனிவர் நியாயம்' என்பதைப் பற்றி சொல்லுகிறர். "पक्षपातराहित्याचरणं न्यायः" பிரத்யக்ஷ அனுமானதி பிரமாணங்களால் உண்மையென நிச்சயிக்கப் பெற்றவன் நியாயன்.

"न्यायं कर्तुं शीलमस्य स न्यायकारीश्वरः"

பக்ஷபாதமில்லாமல், தர்மத்தை நடத்துகிறவன், நேர்மையான நியாயமே இயல்பான ஈசன், நியாயகாரி.

76. தயாளு: (दय दानगतिरक्षणहिंसादानेषु) தய என்ற தாதுவிலிருந்தானச் சொல்.

"दयते ददाति जानाति गच्छति रक्षति हिनस्ति यया सा दया, बह्वी दया विद्यते यस्य स दयालुः"

அபயமளிப்பவன், அனைத்தும் அறிபவன், நல்லோரைக் காப்பவன், பொல்லோரை அழிப்பவன்.

77. அத்வைதன்:

"द्वयोर्भावो द्वाभ्यामितं सा द्वितान्द्वीतं वा सैव तदेव वा द्वैतम्, न विद्यते द्वैतं द्वितीयेश्वरभावो यस्मिंस्तदद्वैतम्" எனின்

"सजातीयविजातीयस्वगतभेदशून्यं ब्रह्म"

இரண்டற்ற ஒருவன். மனிதனுக்கு மனிதன் ஓரினமாயிருப்பது (சுஜாதி) போல்; மனிதனும் கல்லும் வேறினமா யிருப்பது விஜாதி போல். உடலில் கண், மூக்கு, காது முதலிய பகுதி உறுப்புகள் போல் அவனுக்கிணையாக இனம் சுஜாதி, விஜாதி பகுதி எதுவுங் கிடையாதாம். அவன் ஒப்புயர்வற்ற ஒரே பரம்பொருள்.

78. நிர்க்குணன்:

"गण्यते ये ते गुणा वा यैर्गणयन्ति ते गुणाः, यो गुणेभ्यो निर्गतः स निर्गुण ईश्वरः"

சத்வ ரஜோ, தமகுணங்கள், ரூபம் ரஸம், பரிசம், கந்தாதி விஷயங்கள், ஜீவகுணமான அற்பபலம், சிற்றறிவு, ராகத்வேஷாதிகள், அவித்தை முதலியன இல்லாதவன்; ஓசை, பரிசம், உருவம், நிறம்முதலியன அற்றவன்-"अशब्दमस्पर्श मरूपमव्ययम्" என்பது உபநிஷத் வாக்காகும்.

79. ஸகுணன்: "यो गुणैः सह वर्तते स सगुणः" முற்றறிவு, பரிசுத்தம், அனந்தபலம் முதலிய குணங்களைக் கொண்ட பரமாத்மன். உலகில் ஒவ்வொன்றும் சகுணமும் நிர்க்குணமுமா யிருக்கிறது. சேதன குணமில்லாத ஜடங்கள் நிர்க்குணம்; தங்கள் சொந்தத் தன்மையை விளக்கும் போது சகுணம். ஜடத் தன்மையின் வேறுபட்ட ஜீவன் நிர்க்குணம். தனக்குரிய இச்சாதி குணங்களுடன் கூடியபோது சகுணம். அதுபோலவே இறைவனும் குண ரகிதனாகும் போது நிர்க்குணன்; தனக்குரிய சர்வக்ஞாதிகுணமுடன் விளங்கும்போது சகுணனாவான்.

80. அந்தர்யாமி: "अन्तर्यन्तुं नियन्तुं शीलं यस्य सोऽयमन्तर्यामी" சேதன, அசேதன உலக மெங்கும் பரவி அனைத்தையும் ஆளுகிற இறைவன்.

81. தர்மராஜ்: "यो धर्मे राजते स धर्मराजः" அதர்மம் அற்று, தர்மத்தையே விளக்கும் அறவோன்.

82. யமன்: (यमु उपरमे) யமு என்ற தாதுவிலிருந்தானது. "यः सर्वान् प्राणिनो नियच्छति स यमः" அநியாயமில்லாதவன், எல்லா பிராணிகளுக்கும் தக்க கர்ம பலனையளிக்கும் நீதிமான்.

83. பகவான்: (भज सेवायाम्) பஜ என்ற தாதுவிலிருந்து வந்தது. "भजः सकलैश्वर्यं सेवनं वा विद्यते यस्य स भगवान्"

எல்லா ஐச்ர்வயங்களும் நிறைந்தவன், சர்வ சக்திமான், பஜிக்கத் தக்கவன்.

84. மனு : (मन ज्ञाने) மன் என்ற தாதுவிலிருந்து ஆனது. "यो मन्यते स मनुः" விக்ஞானசீலன், நினைக்கத் தக்கோன்.

85. புருஷன் : (पृ पालनपूरणयोः) ப்ரு என்ற தாதுவிலிருந்து வந்தது. "यः स्वव्याप्त्याचराऽचरं जगत् पृणाति पूरयति वा स पुरुषः" உலகெலாம் நிறைவானவன் (பரிபூரணன்).

86. விசுவாம்பரன் : (डुभृञ् धारणपोषणयोः) டுப்ருஞ் என்ற தாதுவிலிருந்து ஆன சொல். "यो विश्वं बिभर्ति धरति पुष्णाति वा स विश्वम्भरो जगदीश्वरः" உலகைத் தரித்துப் போஷிக்கும் பரமாத்மன்.

87. காலன் : (कल संख्याने) கல தாதுவிலிருந்து ஆனது. "कलयति संख्याति सर्वान् पदार्थान् स कालः" உலகிலுள்ள எல்லாப் பொருள்களையும், உயிர்களையும் வகுத்துக் கணக்கிடுவோன்.

88. சேஷன் : (शिष्लृ विशेषणे) சிஷ்ர் என்ற தாதுவிலிருந்துண்டானது. "यः शिष्यते स शेषः" உற்பத்தி பிரளயங்களில் அழியாத சேஷ, மிகுதி யாகயிருக்கும் நித்தியன்.

89. ஆப்தன் : (आप्लृ व्याप्तौ) ஆப்ல்ரு தாதுவிலிருந்தான சொல். "यः सर्वान् धर्मात्मन आप्नोति वा सर्वैर्धर्मात्मभिराप्यते छलादिरहितः स आप्तः" ஸத்யோபதேசிகன், சகல வித்யாயுக்தன், தர்மாத்மாக்கள் அடையத் தக்கவன், கபடமற்றவன்.

90. சங்கரன் : (डुकृञ् करणे) டுக்ருஞ் என்ற தாதுவிலானது. "यः शं कल्याणं सुखं करोति स शङ्करः" ஆன்மாக்களுக்குச் சுகமளிப்பவன், நன்மை செய்பவன்.

91. மஹாதேவன் : "यो महतां देवः स महादेवः" அறிஞரில் அறிஞன்; சூரியாதி பதார்த்தங்களுக்கும் பிரகாசமளிக்கும் பரஞ்சோதி.

92. பிரியன் : (प्रीञ् तर्पणे कान्तौ च) தாதுவிலிருந்தானது. "यः पृणाति प्रीयते वा स प्रियः" எல்லா தர்மாத்மாக்கள், முமுக்ஷுக்கள், சிஷ்டர்களுக்கும் இனிதானவன்; அன்பு நிறைந்தவன், விரும்பத்தகுந்தவன் ஆகிய பரமாத்மன்.

93. ஸ்வயம்பு : (भू सत्तायाम्) பூ தாதுவிலிருந்துண்டானது. "यः स्वयं भवति स स्वयंभूरीश्वरः" தானே தானவன், வேறெதனின்றும் உற்பத்தியாகாதவன், சுயம்பு.

94. கவி : (कु शब्दे) கு தாதுவிலிருந்து வந்தது. "यः कौति शब्दयति सर्वा विद्याः स कविरीश्वरः" எல்லாமறிந்தவன், வேதத்தால் எல்லா ஞானமும் உபதேசிக்கும் பரமாத்மன்.

95. சிவன் : (शिवु कल्याणे) சிவு தாதுவிலிருந்தானது "बहुल-मेतन्निदर्शनम्" கல்யாண ஸ்வரூபன், இன்ப வடிவோன்.

96. ஸ்வராட் : சுயஞ்சோதி யிறைவன்.

97. ஸுபர்னன் : உலகை காத்து, அளிக்கும் விசுவாத்மன்.

98. மாதரிஸ்வான் : காற்றைப்போல சக்தி நிரம்பிய சர்வ வல்லவன்.

99. பூமன் : அனைத்திற்கும் உறையுளான பெரியோன்.

100. கருத்மான் : பேராற்றல்கொண்ட இறைவன்.

இங்கே பரமேசனின் நூறு பெயர்களையே குறித்தோம். ஆனால் இவற்றைத் தவிர பரமாத்மானுக்கு எண்ணற்ற பெயர்கள் உண்டு. ஏனெனின் பரமேசன் அனந்த குண கர்ம சுபாவன். அதனால் அவனுக்கு அனந்த நாமங்களுண்டு. அவனது ஒவ்வொரு குண கர்ம ஸ்வபாவத்திற்கும் ஒவ்வொரு பெயரிருக்கிறது. நான் இங்கே குறித்த பெயர்கள் சமுத்திரத்தில் ஒரு துளியைப்போலும், ஏனெனில் வேதாதி சாஸ்திரங்களில் பரமேசனுக்கு எண்ணற்ற குணகர்ம ஸ்வபாவங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றைப் படித்தறிக. மற்றப் பொருள்களின் அறிவும் வேதாதி சாஸ்திரங்களைப் படிப்பதனாலேயே நிறைவாகும்.

வினா : மற்ற நூலாசிரியர்கள் நூலின் முதல் இடை கடையில் மங்களாசரணம் செய்வதுபோல், தாங்கள் ஏன் செய்யவில்லை ?

விடை : நாம் அப்படி செய்வது சரியன்று. முதலிடை கடையில் மட்டும் மங்களாசரணம் செய்பவன், இவற்றிற்கு நடுவே அமங்கலமும் எழுதலாம்.

"मङ्गलाचरणं शिष्टाचारात्फलदर्शनाच्छ्रुतितश्चेति"

(சாங்கியம் : 5–1)

'வேதத்திற் சொல்லிய இறைவன் ஆணையை, நியாயமாக, நேர்மையாக, பக்ஷபாதமின்றி, உண்மையாக எங்கும் என்றும் கடைப் பிடித்து நடப்பதே மங்களாசரணம்', என்பது சாங்கிய சாத்திர சம்மதமாகும். நூலில் ஓர் இடத்தில் மங்கலமும் மற்றோரிடம் அமங்களமும் குறிப்ப தன்று. நூலின் ஆரம்பத்தி லிருந்து முடிவு வரையில் உண்மை கடைப் பிடிப்பதே மங்களா சரணமாகும். மகான்களான வேத ரிஷிகளின் வாக்கை இங்கே குறிக்கிறேன்.

यान्यनवद्यानि कर्माणि तानि सेवितव्यानि नो इतराणि ।

(தைத்ரியம்: 7-11)

"யான்யந வத்யானி கர்மாணி, தானி ஸேவித வ்யானி நோ இதராணி" என்பது தைத்திரிய உபநிஷத் வாக்காகும். "சந்தானங்களே! நிந்தையற்ற தர்ம யுக்தமான செயல்களையே நீங்கள் செய்யத் தகும்; அதர்மமன்று" என்பது கருத்து. இக் கால கிரந்தங்கள் ஸ்ரீ கணேசாய நமஃ, ஸீதா ராமாப்யாம் நமஃ, ராதா க்ருஷ்ணாப்யாம் நமஃ, ஸ்ரீ குரு சரணாரவிந்தாப்யாம் நமஃ, ஹனுமதே நமஃ, துர்காயை நமஃ, வடுகாய நமஃ, பைரவாய நமஃ, சிவாய நமஃ, ஸரஸ்வத்யை நமஃ, நாராயணாய நமஃ முதலியவை காண்கின்றன. மகர்ஷிகள் எழுதிய வேத கிரந்தங்களில் எந்த இடத்திலும் இத்தகைய மங்களாசரணம் காணப்படவில்லை. ஆதலால் வேத சாஸ்திர மறிந்த வித்வான்கள் இப் பழக்கத்தை மித்தையென்று மறுக்கிறார்கள். வேதங்களில் 'ஓம்', அது போன்ற சப்தங்களே காண்கின்றன. நான்கு வேதங்களில் முதலிலும் இவையே காண்கின்றன. எங்கும் ஸ்ரீ கணேசாய நமஃ போன்ற சப்தங்களில்லை. வைதீகர் 'ஹரி ஓம்' என்று எழுதி ஓதுவதெல்லாம் புராண தாந்திரிய ஜனங்களின் பொய்க் கற்பனை யாகும். வேதாதி சாஸ்திரங்களில் முதலில் ஹரி சப்தம் எங்குமே யில்லை. ஓம் அல்லது அத சப்தமே காண்கின்றன. உதாரண மாக சில வரிகளைத் தருகிறேன்.

"अथ शब्दानुशासनम्" अथेत्ययं शब्दोऽधिकारार्थः प्रयुज्यते ।

அத சப்தானு சாஸனம் (வியாகரண மஹாபாஷ்யம்.)

"अथातो धर्मजिज्ञासा" अथेत्यानन्तर्ये वेदाध्ययनानन्तरम् ।

அதாதோ தர்மஜிக்ஞாஸா (பூர்வ மீமாம்ஸம்.)

"अथातो धर्मं व्याख्यास्यामः" अथेति धर्मकथनानन्तरम् धर्मलक्षणं विशेषेण व्याख्यास्यामः ।

அதாதோ தர்மவ்யாக்யாஸ்யாமஃ (வைசேஷிக தர்சனம்.)

" अथ योगानुशासनम् " अथेत्ययमधिकारार्थः ।

அதயோகானு சாஸனம் (யோக சாஸ்திரம்.)

" अथ त्रिविधदुःखात्यन्तनिवृत्तिरत्यन्तपुरुषार्थः " सांसारिकविषयभोगानन्तरं त्रिविधदुःखात्यन्तनिवृत्त्यर्थः प्रयत्नः कर्तव्यः ।

அத த்ரிவிததுக்காத்யந்தானிவ் ருத்திரத்யந்த புருஷார்த்த (சாங்க்ய சாஸ்திரம்.)

" अथातो ब्रह्मजिज्ञासा " । चतुष्टयसाधनसम्पत्त्यनन्तरं ब्रह्म जिज्ञास्यम् ।

அதாதோ ப்ரஹ்மஜிக்ஞஸா (வேதாந்த ஸூத்ரம்.)

" ओमित्येतदक्षरमुद्गीथमुपासीत " ।

ஓமித் யேததக்ஷர முத்கீத முபாஸீத (சாந்தோக்ய உபநிஷத்.)

" ओमित्येतदक्षरमिदꣳ सर्वं तस्योपव्याख्यानम् ।

ஓமித் யேததக்ஷரமிதம் ஸர்வம் (மாண்டூக்ய உபநிடதம்.)

இங்கே இறைவனைப்பற்றிச் சிறிது எழுதப்பெற்றது. வரும் அத்தியாயத்தில் குழந்தைகளுக்குப் பயிற்சியளிப்பதைப்பற்றிச் சொல்லப்படும்.

ஸ்ரீமத் தயானந்த ஸரஸ்வதி சுவாமிகள் அருளிய
சத்யார்த்தப் பிரகாசத்தில்
கடவுளின் ஓங்காராதி நாம விளக்கும்
முதல் அத்தியாயம்
முற்றிற்று.

ஓம்

# இரண்டாம் அத்தியாயம்

# பால சிக்ஷை

## (குழந்தைப் பயிற்சி)

मातृमान् पितृमानाचार्यवान् पुरुषो वेद ॥ சதபத ப்ராஹ்மணம்

"அன்னையும், அப்பனும், ஆசாரியனுமான பரம புருஷனை அறிக." (மாத்ருமான், பித்ருமான், ஆசார்யவான் புருஷோ வேத) என்பது சதபத ப்ராஹ்மண வசனம். முதலில் அன்னை, இரண்டாவது தந்தை, மூன்றாவது ஆசாரியன் ஆகிய போதகர்களிடம் பயின்றவனே அறிவாளி மனிதனாகிறான். தர்மவான்களாகவும், வித்துவான்களாகவும் உள்ள தாய் தந்தையரைப் பெற்ற குலமும், குழந்தைகளும் பாக்யவான்கள். குழந்தைகளுக்குத் தாயிடமிருந்து கிடைக்கும் உபதேசமும், உபகாரமும் வேறு யாரிடமிருந்தும் கிடைப்பதில்லை. அன்னை போலக் குழந்தைகளிடம் யாரும் அன்பு வைக்க முடியாது; இதம் செய்ய முடியாது. அறிவும், அறமும் வளரும் தாயை உடையவனே மாத்ருமான், தாயுடையான் ஆவான். "प्रशस्ता धार्मिकी माता विद्यते यस्य स मातृमान्" கர்பதானம் முதல் பூர்ணவித்தையும் அடையுமட்டும் மக்களுக்கு நன்னெறியை உபதேசிக்கும் தாய் பாக்யவதியாவாள்.

### கர்பதான விதிகள்

மாதா பிதாக்கள், கர்பதானத்திற்கு முன்பும், இடையும், பின்பும் மதுவகைகள், துர்கந்தமுள்ளவை, சத்தற்ற வறட்டுணவுகள், புத்தி நாசஞ் செய்யும் உணவுகள் இவற்றை உண்ணக் கூடாது. சாந்தம், ஆரோக்கியம், பலம், புத்தி, பராக்கிரமம், சுசீலம் முதலிய நற்குணங்களை வளர்க்கும் நெய், பால், தயிர், வெண்ணெய், சர்க்கரை, தான்யங்கள் முதலிய சிறந்த அன்ன பானுதிகளையே உபயோகிக்க வேண்டும். அதனால் ஆண் பெண் வீரியம் மாசற்று, திண்மையுற்று, உத்தம குணங்கள் நிறைந்திருக்கும். ருதுவாகி பதினாறு நாட்கள் வரையில் கர்பதானத்திற்கு ஏற்ற நாட்களாம். இவற்றுள், முதல் நான்கு நாட்களும், ஏகாதசியும், திரயோதசியும் கூடா நாட்கள். இவற்றை விலக்கி

பத்து நாட்கள், இரவு கர்பதானம் செய்வது நலமாகும். தாரமாய் பதினாறும் நாளுக்குப் பிறகு மீண்டும் மேற்சொன்ன நாட்கள் வருமட்டும் சேர்க்கை கூடாது. கருத்தரித்தால் ஒரு வருஷம் சேர்க்கை கூடாது. சரீர ஆரோக்கியம், ஒருவருக்கொருவர் மகிழ்ச்சி, எத்தகைய துயருமின்மை ஆகிய நிலையிலேயே சதிபதிகள் கூடவேண்டும். உணவு உடுக்கை விஷயங்களில் சரகர், சுச்ருதர் எழுதிய விதிகளையும், ஆண் பெண் இன்புறுவதற்கு மனு ஸ்மிருதியிற் கண்ட விதிகளையும் பின்பற்ற வேண்டும். கர்பதானத்திற்குப் பிறகு தாய் உணவு, ஆடை விஷயங்களில் மிக்க கவனமாயிருக்க வேண்டும். பிறகு ஓராண்டு மட்டும் ஆண் பெண் சேர்க்கை கூடாது. பிள்ளை பிறக்கு மட்டும் புத்தி, பலம், அழகு, ஆரோக்கியம், பராக்கிரமம், சாந்தம் முதலிய குணங்களை வளர்க்கும் உணவுகளையே உட்கொள்ள வேண்டும்.

குழந்தை பிறந்து தொப்புள் கொடியை அறுத்த பிறகு, நறுமண நீரில் அதை குளிப்பாட்டுக. பிறகு நெய் முதலிய நன் மணங்களால் ஓமம் செய்க. (குழந்தைக்குச் செய்யவேண்டிய "ஜாத கர்ம" சடங்குகள் ஸம்ஸ்கார விதியில் விளக்கமாகக் காண்க). குளிப்பு உணவு விஷயத்தில் தாயையும் கவனிக்க வேண்டும். தாயும் பிள்ளையும் படிப்படியாக உடல் நலமும், உறுதியும் பெறவேண்டும். தாய், தாய்ச்சி இருவரும் பாலில் நல்ல சத்தேறும்படியான நல்லுணவுகளைப் புஷ்டியாக உண்ண வேண்டும். தாய் முதல் ஆறு நாளே குழந்தைக்குப் பால் கொடுக்கலாம். பிறகு தாய்ச்சி பால் தருக. தாய்ச்சி நல்ல அன்ன பானதிகளை உட்கொள்ளும்படி பெற்றோர் கவனிக்க வேண்டும். தாய்ச்சி வைக்க இயலாத பெற்றோர், பசும்பால் அல்லது ஆட்டுப் பாலுடன் சம பங்கு நன்னீர் சேர்த்துக் கொடுக்கலாம். புத்தி, ஆரோக்யம், பராக்கிரமங்களை வளர்க்கும் நல்ல மூலிகைகளை நீரில் ஊற வைத்துக் காய்ச்சி, வடிகட்டிப் பாலுடன் சேர்க்கலாம். பிரசவமான பிறகு தாயும் குழந்தையும் காற்று வீசும், சுத்தமான, வாசனையும் அழகுள்ள வஸ்துக்களும் நிரம்பிய, மற்றோர் அறையில் வசிக்க வேண்டும். அவர்கள் சுத்தமான காற்றில் உலாவ வேண்டும். தாய்ச்சி பாலோ, பசும்பாலோ, ஆட்டுப் பாலோ அகப்படாவிட்டால், உசிதமானதைச் செய்யவேண்டும். பிரசவித்த தாயின் அம்ஸமே குழந்தை. பிரசவத்தால் தாய் துர்பலமாகிறாள். அத்துடன் குழந்தைக்கும் பால் தரக்கூடாது.

பால் ஊறிவராதபடி மார்பில் தக்க மூலிகைகளால் பற்றுப் போட வேண்டும். அதனால் தாய் இரண்டு மாதத்தில் இளம் பொலிவு பெறுவாள். அதுகாறும் கணவன் பிரமசரியம் காக்க வேண்டும். இந்திரிய நிக்ரகம் செய்யவேண்டும். இவ்வாறு செய்யும் ஸ்திரீ புருஷருக்கு நல்ல சந்தானங்களும், நீளாயுளும், தார்மிக சக்தியும், பல பராக்கிரம புத்தியும் எய்தும். ஆண் பெண்கள் தமது மர்ம ஸ்தானங்களைப் பாதுகாக்க வேண்டும். புருஷன் வீர்ய பலத்தை வளர்க்க வேண்டும். அதனால் மறுபடி பிறக்கும் குழந்தைகள் சிறந்தவர்களாவார்கள்.

## குழந்தை வளர்ச்சி

தாயார் குழந்தைகளைச் சரியானபடி பயிற்ற வேண்டும். கெட்ட நடத்தையைத் திருத்தி ஒழுக்கத்தை நேர்த்தியாக்க வேண்டும். பேசத் தொடங்கியதும் குழந்தை அழுத்தந் திருத்த மாகச் சொற்களை உச்சரிக்கக் கற்பிக்க வேண்டும். ஒலிகள் பிறக்கும் உறுப்புக்களைக் கவனிக்க வேண்டும் உதாரணமாக உதடுகள் பொருந்தி உச்சரிப்பதைக் கவனிக்க வேண்டும். குறில், நெடில், எழுத்துக்களைத் தெளிவாக உச்சரிக்க வேண்டும். குழந்தையின் குரல், மதுர கம்பீர சுந்தரமாயிருக்க வேண்டும். இனிய தீங்குரலைப் பயிற்ற வேண்டும். பேச்சில் எழுத்து, மாத்திரை, பதம், வாக்கியம், புணர்ச்சி, நிறுத்தம் முதலிய வற்றைக் கவனித்துத் திருத்த வேண்டும். கொஞ்சம் கொஞ்சம் பேசி, பேச்சறியும் பருவத்தில், குழந்தைக்கு இனிய மொழி களால், பெரியவாள், சின்னவாள், மரியாதைக் குரிய தாய் தகப்பனர், அரசர், வித்துவான்கள் முதலியோர் முன் எப்படிப் பேசவேண்டும், அமரவேண்டும் என்பதைக் கற்பிக்க வேண்டும். அதனால் பலர் கௌரவிக்கும்படி வாழலாம். புலனடக்கம், கல்வி வளர்ச்சி, சத்சங்கம் இவற்றில் பிரியமுண்டாகும்படி பெற்றோர் குழந்தைகளைப் பயிற்ற வேண்டும். குழந்தைகள் வீண் விளை யாட்டு, அழுகை, கேலிச்சிரிப்பு, சண்டை, பெருமிதம், சோகம், பொருள்களிடம் பேராசை, பொறாமை, துவேஷம் இவற்றை ஒழிக்க வேண்டும். அவர்கள் மர்ம ஸ்தானங்களில் கைபோட்டுச் சேட்டை பண்ணலாகாது. அதனால் கை அசுத்தமாகிறது. வீரிய நஷ்ட முண்டாகிறது. அலித்தனமும் ஏற்படுகிறது. உண்மை பேசவும், தைரிய சௌகரியமாக நடக்கவும், மலர்ந்த முகத்துடனிருக்கவும் குழந்தைகளைப் பழக்க வேண்டும். ஐந்து

வயதில் அக்ஷராப்யாசம் தொடங்கி, தேவநாகரி கற்பிக்க வேண்டும். காலத்திற்கேற்ற பிறமொழி எழுத்துக்களையும் பயிற்ற வேண்டும். அதன் பிறகு நல்ல கல்வி, உண்மை, அறம், கடவுள், அன்னை, தந்தை, குரு, அறிஞர், அதிதி, அரசர், ஜனங்கள், குடும்பம், பந்துக்கள், சகோதர சகோதரிகள், சேவகர் ஆகியவர்களிடம் எப்படி நடக்க வேண்டும் என்பதை விளக்கும் வேத மந்திரங்கள், சுலோகங்கள், சூத்திரங்கள், கத்ய பத்யங்களைப் பாடம் பண்ணச் செய்யவேண்டும். இதனால் தூர்த்தர்கள் அவர்களை ஏமாற்றுமல் கவனமாயிருக்க முடியும். அத்துடன் கல்வியறிவுக்கும், பகுத்தறிவிற்கும் முரணான, பூத பிரேத பிசாசுகள், மூடப்பழக்கங்கள் இவற்றில் மயங்காமல், இவற்றைப் பொய் என்று எதிர்க்கப் பழக்குக. பிரேதம் என்றால் பிணம், இறந்த உடல்.

गुरोः प्रेतस्य शिष्यस्तु पितृमेधं समाचरन् ।
प्रेतहारैः समं तत्र दशरात्रेण शुध्यति ॥ (மமனு-5-65).

இறந்த குருவின் பிணத்தைத் தூக்கிச் சென்று, பிரேத சம்ஸ்காரம் செய்த பிறகு, சிஷ்யனும் அவனுடன் சேர்ந்து பிரேதத்தைத் தூக்கினவர்களும், பத்து நாட்களில் பரிசுத்தமடைகிறார்கள். தசராத்ரேண சுத்யதி—என்பது மனுவாக்கு, பிண வுடலை எரித்த பிறகு, அது பூதமாகிறது; அதாவது இறந்தொழிந்தது. பிறந்து இறந்து மண்ணானவர்கள் பூதஸ்தர்களாவார். பிரம்மா முதல் தற்கால அறிஞர் வரையில் இதை நம்புகின்றனர். அறியாதவன் மூட நம்பிக்கைக்காரன், சந்தேகப் பேர்வழி, அற்பரை நேசிப்பவன் பேய், பிசாசு, பூதம், சாகினி, டாகினிகளால் மயங்கித் தொல்லைப் படுகிறான். அச்சமும் ஐயமுமே இதற்குக் காரணம். ஆள் இறந்த பிறகு, அவனவன் பாப புண்ய பலன்களை அனுபவிக்க, ஜீவன் கடவுளாணையால் மறுபிறப் பெடுக்கிறது. நித்தியக் கடவுளின் இந்த நியமத்தை, ஆணையை மீறுகிறவனும் உண்டா? பிறந்தவர் இறந்து வினைப் பயனை அனுபவிக்க மறு பிறப் பெடுக்கும் சட்டத்தை யார் மீற முடியும்?

## பேய் பிசாசுகளின் பொய் நாடகம்

வைத்திய ஞானமும், சாஸ்திர ஞானமும் அறியாத மூட ஜனங்கள், ஸன்னிபாத ஜ்வரம் போன்ற தேகரோகமும்,

பைத்தியம் போன்ற மனோரோகமும், பூத பிரேத பிசாசு பிடித்த கோளாறென்று நம்புகின்றனர். அவற்றிற்கு மருந்தாலும் பத்தியத்தாலும் சிகிச்சை செய்யாமல், மூட ஜனங்கள், தூர்த்தரும் அயோக்கியர்களும், மகாமூர்க்கரும், அநாசாரிகளும், சுயநலப் புலிகளும், ஏமாற்றக்காரரும், முட்டாள்களும், பித்தரமானவருமான ஆபாசம் பிடித்தவர்களிடம் நம்பிச் செல்கிறர்கள். இந்தப் போக்கிரிகள், ஆளைத் தந்திரமாக மயக்கி, வஞ்சித்து, யந்திர தந்திர மந்திர ரக்ஷா பந்தன ஜாலக்ருகளால் பணம் பறித்து வயிறு பிழைக்கின்றனர். அதனுல் பண நஷ்டம், குழந்தைகளுக்குத் துயரம், பிணி முதிரும் துன்பம் எல்லாம் வந்து சேருகின்றன. அறிவுக் கண்ணில்லாத பணக்காரர், இந்தச் சுயநலம் பிடித்த மூடப் படுபாவிகளிடம் சென்று "மஹாராஜ்! இந்தப் பையன், பெண், மனைவி மனிதனுக்கு என்ன பிடித்ததோ தெரியவில்லையே!" என்று முறையிடுகிருர்கள். அவர்கள், "இவருக்கு உடம்பில் பெரிய பூதம், பேய் பிசாசு பைரவன், சீதளி அம்மன் பிடித்திருக்கிறது. இதற்குத் தக்க உபாயம் செய்யாவிட்டால் ஆளின் உயிரையே வாங்கிவிடும்! பொங்கல் வை! காவு கொடு!! காணிக்கை கொடு!!! மந்திரம், ஜபம், புரஸ்கரணங்களால் இவற்றை சட்டென்று ஓட்டியடிக்கிறேம்" என்கின்றனர். அந்த மூடர் அல்லது அவர் உறவினர், "மஹாராஜ்! எங்கள் சொத்தெல்லாம் செலவழிந்தாலும் பரவாயில்லை; இவனைக் குணப்படுத்துங்கள்" என்று முறையிடுகிருர். இந்த ஏமாளிகளைக் கண்டுகொண்ட அந்த மூர்க்கர், "சரி, கொண்டா இந்தச் சாமான்கள்; இவ்வளவு தட்சிணை வை; தேவதைக்குக் காணிக்கை கொடு, கிரகங்களின் தொல்லைத் தீர்க்க இன்ன தானம் செய்" என்று பணம் பறிக்கின்றனர். பிறகு நோயாளி முன் தாளம், மிருதங்கம், தௌல், உடுக்கைகளை அவர்கள் அடித்துப் பாடி ஆவேசம் நடிக்கின்றனர். அவருள் ஒரு பாகண்டி, மருள் வந்தவன்போலப் பித்துப் பிடித்துக் கூத்தாடி "ஹா! இவன் உயிரை வாங்கி விடுவேன்" என்று கூச்சலிடுகிருன். இதைக் கண்டு வெருண்ட முட்டாள், "ஐயா! எப்படியாவது இவனைக் காப்பாற்று. என்ன வேண்டுமானுலும் பெற்றுக் கொள்" என்று காலில் விழுந்து கெஞ்சுகிருன். தூர்த்தன் இன்னும் உச்சக் குரலில் "அடே, நான் ஹனுமானுக்கும். கொண்டாடா, மிட்டாய், எண்ணெய், கால்மணங்கு ரொட்டி, சிவப்பு லங்கோடி கொண்டா! நான் தேவி, பைரவியாக்கும்! ஹா...எனக்கு ஐந்து புட்டி சாராயம், இருபது கோழி, ஐந்து ஆட்டுக்கடா,

மிட்டாயி, துணி எல்லாம் கொண்டாடா!'' என்று ஆடுகிருன். ''சாமி! நீ கேட்டதை வாங்கிக்கொள்'' என்று மூடன் கெஞ்சுகிருன். மூர்க்கன் இன்னும் ஆவேசத் தாண்டவம் புரிகிருன். ஆனல் அறிவாளி, ''இந்தா காணிக்கை'' என்று செருப்படி கொடுத்துச் செவிட்டில் இரண்டு வாங்கினல், ஹனுமான், பைரவி யெல்லாம் ''போதும் பூசை'' என்று பறந்தோடும். ஏனெனில் இதெல்லாம் அறியாதவரிடம் பணம் பறிக்கும் வேலைதான்.

## சோதிடப் புளுகு

இதே மாதிரி அறியா மாக்கள் சோதிடனிடம் சென்று, ''ஹே மஹாராஜ், இவனுக்கு என்ன கோளாறு'' என்று நோயாளியைக் காட்டுகின்றனர். சோதிடன் ''ஐயா சூரியாதி கிரகங்கள் இவனுக்கு எதிரிடையா யிருக்கின்றன. அதற்கு சாந்தி பாடம், பூஜை, தானம் செய்தால் சுகமாகும். இல்லையோ கிரகப் பீடை யால் ஆள் மாண்டு போவான்'' என்று மிரட்டுகிருன்.

ஆட்சேபகர்: அது சரி சோதிடரே, மண்ணைப் போலவே சூரியாதி கிருகங்களும் ஜடப்பொருள்கள். அவை வெப்பமும் ஒளியும் அளிப்பது தவிர வேறென்றும் செய்ய முடியாதே. சினந்தால் துன்பமும், மகிழ்ந்தால் இன்பமுந் தர இவையென்ன சேதன ஜீவரா? அல்லவே:

**கேள்வி**:—இந்த உலகில் அரசன், பிரஜை, சுகி, துக்கி என்றிருப்பது கிரக பலனுலில்லையோ?

**விடை**:—இவை அவன் பாப புண்ணிய பலன்.

**வினு**:—அப்படியானல் சோதிட சாத்திரம் பொய்யா?

**விடை**:—அப்படியில்லை. அதில் கணிதம், பீஜகணிதம், க்ஷேத்ர கணிதம் சம்பந்தமானவை மெய்யே. பலன் சொல்லும் லீலைதான் முழுப் பொய்.

**வினு**:— அப்படியானல் ஜாதகம் பயனற்றதா?

**விடை**:—ஆம் ஜாதகம் ஜன்மபத்திரம் அன்று. அதைச் சோக பத்திரமென்னவேண்டும். ஏனெனில் குலத்திற்குக் குழந்தை பிறந்த மகிழ்ச்சி, புரோகிதன் ஜன்ம பத்திரம் கணித்து, கிரகப் பலன் சொல்லுமட்டுமே இருக்கிறது. குழந்தை பிறந்ததும், புரோகிதன் ஜன்மபத்திரம் கணிக்க வேண்டு மென்கிருன். மாதா பிதாக்கள், ''மஹாராஜ், மிகவும் நல்ல

ஜாதகம் கணியுங்கள்,'' என்கின்றனர். பணக்காரராஞல் சிவப்பும் மஞ்சளும் மின்ன அழகான ஜன்ம பத்திரம்; ஏழையாஞல் சாதாரண வெள்ளைப் பத்திரம் கணித்துத் தரு கிருர் சோதிடர். ''நல்ல ஜாதகந்தானே?'' என்று பெற்ருேர் ஆவலாகக் கேட்கின்றனர். சோதிடன் ''உள்ள படி படிக்கிறேன்'' என்று தொடங்குகிருன். இவனது ஜன்ம நக்ஷத்திரம் மிக நன்று. மித்திரக் கிரகங்கள் நன்ரு யிருக்கின்றன. ஆதலால் இவன் பெரும் தனவாஞகவும், கீர்த்திமாஞகவும் விளங்குவான். சபைகளில் உயர்ந்த மதிப் புறுவான். நல்ல ஆரோக்யத்துடன் ராஜாவா விருப் பான்.'' ''ஆஹா நல்ல ஜோதிஷர்'' என்று பெற்ருேர் மெச்சுகின்றனர். ஆஞல் இதஞல் தன் காரியம் ஆகா தென்று சோதிடர் அறிவார். தன் வேலையைத் தொடங்கு கிருர். ''இவையெல்லாம் நல்ல கிரகங்கள். ஆஞல் இன் னின்ன கெட்ட கிரகங்கள் உள்ளன. அவை சேரும்போது, எட்டு வயதில் இவன் இறந்து போகலாம்!'' என்கிருர். இதைக் கேட்டதும் குழந்தை பிறந்த சந்தோஷ மெல்லாம் போய், பெற்ருேர் சோகந் ததும்ப ''ஐயா! இதற்குப் பரி காரமென்ன?'' என்று கேட்கின்றனர். ''பரிகாரம் செய்யுங் கள்'' என்கிருர் சோதிடர். ''என்ன பரிகாரம் செய் வோம்'' என்று பெற்ருேர் விஞவுகின்றனர். ''இன்னின்ன தானம் செய்யுங்கள், கிரகமந்திர ஜபம் வையுங்கள், நித்தியம் பிராமண போஜனம் செய்வியுங்கள், நவக்ரகங் களின் விக்னம் நிவாரணமாகலாம்.'' 'ஆகலாம்' என்ற அனுமானம் ஒரு தந்திரப் பேச்சு. ஏனெனில், குழந்தை இறந்து போஞல், ''நாமென்ன செய்வது? பரமேசனை மிஞ்சி ஒன்றுமில்லை...என்ஞல் ஆனதெல்லாம் நான் செய் தேன், நீங்களும் செய்தீர்கள். இவன் வினை இப்படியானது'' என்பான் சோதிடன். குழந்தை பிழைத்துவிட்டாலோ, ''பாருங்கள் என் மந்திரம்; தேவதை பிராஹ்மணர் சக்தி எவ்வளவு பார்த்தீர்களா! பிள்ளை பிழைத்தான்'' என்று ஜம்ப மடிப்பான். இவர் ஜப பாடம் பலிக்காவிட்டால் இந்த தூர்த் தரிடமிருந்து செலவு தொகையை இரண்டு மூன்று பங்கு வசூலித்து விடவேண்டும். குழந்தை பிழைத்தாலுங்கூட அப்படியே வசூலிக்க வேண்டும். ஏனெனில், சோதிடரே, ''இவன் கருமம், பரமேசன் இச்சையை யாரே மாற்ற முடியும்'' என்பது போலவே, பெற்ருேரும், ''குழந்தை

பிழைத்தது அவன் கருமபலனாலும் பரமேசன் இச்சையாலுமே...உனது ஜபத்தாலன்று" என்று திருப்பி வாங்க வேண்டும். "புண்யதானம் செய்" என்று பொருளை வாங்கிக்கொள்ளும் போலிக் குருமாருக்கும் மேற்படி சோதிடருக்குச் சொன்னது போலவே செய்க.

சீதளி (அம்மை) மந்திர தந்திர யந்திரம் இவற்றைக் குறித்தும் சொல்ல வேண்டும். இவையும் பக்கா மோசடியே. "நாங்கள் மந்திரம் ஜபித்தால், தாயத்து கட்டினால், யந்திரம் செய்தால், எனது சாமி, குரு அந்த மந்திர யந்திர சக்தியால் உமது தடைகளை நீக்கும்" என்று யாராவது சொன்னால், "ஐயாவே, நீர் சாவையும், ஈச்வர நியமத்தையும், கர்ம பலனையும் தடுக்க முடியுமா? உன் மந்திரத்திற்குப் பிறகு கூட எத்தனையோ பிள்ளைகள் இறக்கிறார்கள். உன் வீட்டிலேயே சாகிறார்களே. அவர்களை நீர் சாவினின்றும் தடும், பார்ப்போம். உம்மையே நீர் சாகாமல் தடுக்க முடியுமா?" என்று கேட்டு விடவேண்டும். இக்கேள்விகளுக்கு அவர்கள் பதிற் சொல்ல முடியாது. இவனிடம் நமது பருப்பு வேகாதென்று ஓட்டமெடுப்பார்கள். இவ்வாறு மூட வியாபாரங்களை விட்டொழித்து, அறவோரையும், எல்லா நாட்டறிஞரையும், உலகோபகாரிகளையும் ஜனங்கள் ஆதரிக்க வேண்டும். கரவற்ற உள்ளத்துடன், பொதுஜனங்களுக்குக் கல்வி புகட்டும் புலவர்களைப் போற்ற வேண்டும். இக்கடமையை விடவே கூடாது. இரசவாதிகள், மாரண, மோகன, உச்சாடன, வசீகரணம் முதலிய மந்திரப் புரட்டர்கள், இவர்களை மகாபாதக வஞ்சகர்களாகக் கருத வேண்டும். சிறுவயதிலேயே குழந்தைகளுக்கு இந்த மோசடிகளிற் சிக்காமல் எச்சரிக்கை செய்யவேண்டும். பிறகு இந்தச் சூதுகளால் அவர்கள் வருந்த நேரிடாது.

## வீரியங் காத்தல்

வீரியங் காத்தல் இன்பம், வீரிய நஷ்டம் துன்பம் என்பதை இளைஞர் அறியவேண்டும். வீரியத்தைக் காப்பவன் உடலில் ஆரோக்யம், புத்தி, பலம், பராக்கிரமம் முதலியன பெருகிச் சுகமோங்குகிறது. காதல் கதைகளைப் படித்தல், காமிகள் உறவு, காம நினைவு, பெண்களைக் கண் போடல், அவர்களுடன் அளவளாவல், அணைதல், புணர்தல் ஆகியவற்றை அறவே ஒழித்து, பிரம்சாரிகள் தனியே யிருந்து நல்ல பயிற்சியும், கல்வி

வளர்ச்சியும் பெறவேண்டும். அப்போதே விந்தடக்கம் சித்திக்கும். வீரிய தமன மில்லாதவன் உடல் இளைத்து நபும்ஸகனுகி, குலம் நலிந்து, நல்ல குணமிழந்து, ஸ்கலித நோயுற்று, மெலிந்து, ஒளியிழந்து, அறிவு தேய்ந்து, உற்சாகமற்று, தைரியம், சாமர்த்தியம், பலம், பராக்ரமாதி தன்மைகளற்று வாழ்வை இழக்கிருன். "இந்த வயதிலேயே நீங்கள் நல்ல கல்வியும் அறிவும் வளர்த்து, வீரிய ரக்ஷணமும் செய்யவிட்டால், பிறகு வேறு சமயம் வாய்க்காது" என்று பெற்ருேர் பிள்ளைகளுக்கு எச்சரிக்கை செய்யவேண்டும். "நாங்கள் இருக்கும் போதே நீங்கள் கல்வி முற்றி, உடலுறுதியும் பெற்றுக் கொள்ள வேண்டும்" என்று வற்புறுத்த வேண்டும். இதே மாதிரி மற்ற முக்கியமான போதனையும் செய்யவேண்டும். இதனுலேதான் "மாத்ருமான் பித்ருமான்" என்ற மொழிகள் இந்த அத்தியாய முதலிற் காண்கின்றன.

## ஒழுக்கம்

பிறந்தது முதல் ஐந்து வயது வரையில் தாயும், ஆறு முதல் எட்டு வரையில் தந்தையும் பயிற்ற வேண்டும். ஒன்பது வயதில் துவிஜர்களுக்கு உபநயனம் செய்து பிள்ளைகளை ஆசார்ய குலத்திற் கனுப்பவேண்டும். நிறைவாகக் கற்ற வித்வான் அல்லது விதுஷி வித்தியாதானம் செய்யலாம். ஆண்களைப் போல பெண் குழந்தைகளையும் கல்வி பயிற்சிக்கு, பெண் குரு குலத்திற்கனுப்ப வேண்டும். சூத்திராதிகள் உபநயனமில்லாமலே குருகுலத்திற்கனுப்பலாம். பிள்ளைகளுக்குச் செல்லங் கொடுக்கச் கூடாது. பெற்ருேர் அவர்கள் பிழைகளைக் கண்டித்துத் தண்டிக்க வேண்டும். அப்படிப்பட்ட பிள்ளைகளே தக்க அறிஞராவார்.

सामृतैः पाणिभिर्घ्नन्ति गुरवो न विषोक्षितैः ।
लालनाश्रयिणो दोषास्ताडनाश्रयिणो गुणाः ॥

(மகா பாஷ்யம் அ-8-1-8.)

பெற்ருேரும், குருவும், தங்கள் பிள்ளைகளையும், மாணவரையும் சிக்ஷித்து, வளர்க்கும் கையால் அமிர்தம் ஊட்டுகின்றனர். செல்லங் கொடுத்துத் தடவி வளர்க்கும் கையால் விஷமூட்டுவது போலாவார்கள். லாலனத்தால் தோஷமும், தாடனத்தால் குணமும் உண்டாகிறது என்பது மஹா பாஷ்ய வாக்கு. பிள்ளைகளும் தண்டிக்கும் போது மகிழ்வும், தடவிக் கொடுக்கும் போது

ஆயாசமும் காட்டுக. ஆனால் மாதா, பிதா, ஆசாரியர்கள் வெறுப்பு பொறாமைகளால் குழந்தைகளை அடிக்கக்கூடாது. வெளிக்குப் பயங்காட்டி உள்ளே கருணையுட னிருக்கவேண்டும். திருட்டு, விபசாரம், சோம்பல், அகம்பாவம், குடி, பொய்யுரை, பொறாமை, ஹிம்ஸை, வெறுப்பு, குரூரம், மோகம் இவை அறவே ஒழியும்படி குழந்தைகளைக் கண்டித்துப் பயிற்றவேண்டும். சத்யா சாரத்தைப் பயிலச் செய்யவேண்டும். ஏனெனில் ஒருமுறை முன்னே திருட்டு, விபசாரம், செய்து பொய் பேசினவனைச் சாகுமட்டும் நம்பமாட்டோம். வாக்குறுதியை மறுத்தலைப்போல் ஒருவனுக்கு வேறு கெடுதலில்லை. ஆதலால் கொடுத்த வாக்கை அப்படியே நிறைவேற்ற வேண்டும். "உம்மை இன்ன நேரம் சந்திக்கிறேன், நீர் என்னை இந்த நேரம் சந்திக்கலாம்; உமக்கு இன்ன சாமான் இன்ன நாளில் தருவேன்" என்றால், அப்படியே நிறைவேற்றவேண்டும். இன்றேல் யாரும் உன்னை நம்ப மாட்டார்கள். ஆதலால் எல்லாரும் உண்மை பேசி, சொன்னதை நிறைவேற்ற வேண்டும். வீண் அபிமானம், வஞ்சனை, கபடு, நன்றிக்கேடு இவை தன் இருதயத்தைத் துன்பமாக்கும் என்றால், பிறரை எவ்வளவு துன்புறுத்தாது. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசி, சுய லாபத்திற்காகப் பிறரை மயக்கி ஏமாற்றல் கள்ளத்தனமாகும். பிறர் செய்த நன்மையை மறத்தலாகும். பிள்ளைகள் பொறுமை யிழந்து கடுமையாகப் பேசக்கூடாது. அமைதியாக இனிமையாகப் பேசவேண்டும். வீண் பேச்சின்றி அளவுடன் பேசவேண்டும். பெரியாரை மரியாதை செய்யவேண்டும். அவர்கள் வரும்போது எழுந்து நின்று "நமஸ்தே" என்று வணங்கி உயர்ந்த ஆஸனம் தந்து அமர்த்த வேண்டும். அவர்களுக்கு முன் உயர்ந்த பீடத்தில் உட்காரக்கூடாது. சபைகளில் பிறர் எழுப்பிவிடாமல், தகுதிக் கேற்ற இடத்தில் பிள்ளை உட்காரவேண்டும். எவரையும் பகைக்கக்கூடாது. குணத்தைப் போற்றிக் குற்றங்கடிய வேண்டும். நல்லாறைப் பேணி, பொல்லாரை விலகவேண்டும். உடல், மனம், நல்ல பொருளைக்கொண்டு, தாய் தந்தை குருமார் சேவையைக் கருத்துடன் செய்யவேண்டும்.

यान्यस्माकꣳ सुचरितानि तानि त्वयोपास्यानि नो इतराणि ॥

(தைத்ரீ. 7-11)

"குரு நல்லொழுக்கத்துடன் நன்னடையே பயிற்றுக. மாறான தீயொழுக்கம் கூடாது" என்பது தைத்திரிய

வாக்காகும். அறவினைகளை கொண்டு பிறவினைகளை நீக்க வேண்டும். சத்தியம் எதுவோ அதையே அறிந்து பிரசாரம் செய்க. தீய நடையாளரையும் பாகண்டிகளையும் நம்பக்கூடாது. மாணவர் உத்தம கர்மங்களில் மாதாபிதா ஆசாரியர்களைப் பணிந்து நடக்கவேண்டும். தர்மம், வித்தை, நல்லொழுக்கங்களைப் பற்றி மாதா பிதாக்கள் வீட்டில் சொல்லிக் கொடுத்ததையும், நிகண்டு, நிருக்தம், வேத மந்திரம், பிற சூத்திரங்களையும் ஆசாரியர் பாடம் பண்ணச்சொல்லி மாணவனுக்கு விளக்க வேண்டும். முதல் அத்தியாயத்திற் சொல்லியபடி அவர்கள் பரமேசனை உபாசிக்கவேண்டும். ஆரோக்கியம், கல்வியறிவு, பலம் இவை பெருகும்படி உண வுடை விவகாரங்களைச் செய்ய வேண்டும். அதாவது பசியளவிற்குச் சிறிது குறைந்தே உண்ணவேண்டும். ஊன் மது கூடாது. ஆழந் தெரியாத நீர்த் துறைகளில் இறங்கக்கூடாது. முதலை முதலிய கெட்ட விலங்குகளாலும், மூழ்குவதாலும் ஆபத்து நேரிடும். 'नाविज्ञाते जलाशये'—ஆழந்தெரியாத ஜலாசயத்தில் குளிக்காதே' என்பது மனுவாக்கு.

दृष्टिपूतं न्यसेत्पादं, वस्त्रपूतं जलं पिबेत् ।
सत्यपूतां वदेद्वाचं, मनः पूतं समाचरेत् ॥ (மனு. 6-46)

—கீழே மேலே பார்த்து நட. நீரைத் துணியால் வடிகட்டிக் குடி. சத்தியத்தால் வடிகட்டி வார்த்தை பேசு. மனத்தில் விசாரித்து ஒன்றைச் செய்.

माता शत्रुः पिता वैरी येन बालो न पाठितः ।
न शोभते सभामध्ये हंसमध्ये बको यथा ॥
(சாணக்ய நீதி 2-11)

"பிள்ளையைப் படிக்கவைக்காத தாய் சத்துரு, தகப்பன் வைரி; அன்னக் குழாத்தில் வாத்துப் போல் அவன் கற்ற வரிடையே பொலிவிழக்கிறான்.

என்பது சாணக்ய நீதி வாக்கியமாகும்.

குழந்தைகளுக்கு உயர்ந்த கல்விப் பயிற்சி யளித்து, அறமும், சபை நிறைந்த அறிவும் பெறச் செய்வது தாய் தந்தையர் கடமையும் பரம தருமமும் கீர்த்தியுமாகும். அவர்கள் உடல்

மனம் தனம் அனைத்தையும் தியாகம் செய்தும் இதை நிறை வேற்ற வேண்டும்.

பால சிக்ஷையைப் பற்றி இங்கே சுருக்கமாக எழுதப் பெற்றது. புத்திமான்கள் இதினின்று பலவற்றை அறிவார்கள். அறிவாளிக்கு ஒரு மொழி போதும்.

ஸ்ரீமத் தயானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள் அருளிய
சத்யார்த்தப் பிரகாசத்தில் பால சிக்ஷை என்னும்
இரண்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

ஓம்

# மூன்றும் அத்தியாயம்

# கல்விப் பயிற்சி முறை

## கல்வியே நல்லணி

இந்த மூன்றும் அத்தியாயத்தில் கற்றல் கற்பித்தல் முறையைக் குறித்து விளக்குகிறேன். மக்களுக்கு உத்தம வித்தை, பயிற்சி, குணம், வினைதிட்பம், நல்லியல்பு—ஆகிய அணிகளைச் சூட்டல் மாதா பிதா பந்துக்களின் கடமையாகும். தங்கம், வெள்ளி, முத்து, மணி நகைகளைப் பூட்டுவதால், மனிதன் ஆத்மாவை அழகு செய்யமுடியாது. ஏனெனில் நகை யணிகளால் தேகாபிமானம், விஷயாஸக்தி, சோரபயம், சாவுகூட ஏற்படும். நகை போட்ட குழந்தைகளுக்கு துஷ்டர்களால் சாவு நேர்வதை உலகிற் காண்கிறோம்.

विद्याविलासमनसो धृतशीलशिक्षाः,
सत्यव्रता रहितमानमलापहाराः ।
संसारदुःखदलनेन सुभूषिता ये,
धन्या नरा विहितकर्मपरोपकाराः ॥

[வித்யா விலாஸ மனஸோ த்ருதி சீல சிக்ஷாः
ஸத்யவ்ரதா ரஹிதமான மலபஹாராः ।
ஸம்ஸார துःக தலனேன ஸுபூஷிதா யே,
தன்யா நரா விஹித கர்ம பரோபகாராः ॥]

கல்வியில் ஈடுபட்ட மனம், இனிய தூயதன்மையும், சத்திய விரதமும் கொண்டது; சுயநல அபிமானமும் செருக்கும் அழுக்கு மற்ற ஒழுக்கமுள்ளது. உலகோர் துயரைத் தீர்க்கும் பொதுநலப் பணியே அணிந்தது. அது வேதத்தில் விதித்த பரோபகார வினைகளைச் செய்யும்; இத்தகைய ஆண்களும் பெண்களுமான நரர், தன்யராவார்.

## குருகுலவாசம்

எட்டு வயதானதும் ஆண்குழந்தைகளை ஆண் பள்ளிக்கூடத்திற்கும், பெண்குழந்தைகளை பெண் பள்ளிக்கூடத்திற்கும் அனுப்பவேண்டும். நடத்தை கெட்ட ஆண் அல்லது பெண்

ஞசிரியரிடம் குழந்தைகளைப் படிக்க வைக்கக்கூடாது. நல்ல புலவரும் அறவோருமாகிய ஆசிரியரே கற்பிக்கத் தகுந்தவ ராவார். பள்ளிக்கூடத்திற்கனுப்புமுன், துவிஜர்களின் ஆண் பெண் குழந்தைகளுக்கு உபநயனம் செய்யவேண்டும். பாடசாலை ஏகாந்தமான இடத்திலிருக்க வேண்டும். ஆண் பள்ளிக்கூடத்தி லிருந்து பெண் பள்ளிக்கூடம் மூன்று மைலாவது தள்ளியிருக்க வேண்டும். ஆண்பள்ளிக்கூட ஆசிரியரும், ஊழியரும் ஆண்க ளாகவே யிருக்கவேண்டும்; பெண் பள்ளிக்கூடத்தில் பெண்க ளாகவே யிருக்கவேண்டும். ஆண் பள்ளிக்கூடத்தில் ஐந்து வய துப் பெண் கூட நுழையக் கூடாது. பெண் பள்ளிக்கூடதில் ஐந்து வயது ஆண் பையன் கூட நுழையக்கூடாது. பிரம்மசாரி அல்லது பிரம்மசாரிணியா யிருக்குமட்டும், மாணவ மாணவிகள், ஒருவரை யொருவர் ஆசையாகப் பார்த்தல், தொட்டுக்கொள்ளல், தனித் திருத்தல், பேசுதல், காமக் கதைகள் சொல்லல், விஷய நினைப்பு, கூடிவிளையாடல், காமச் சிந்தனை ஆகிய எட்டும் கூடாது. மாணவ மாணவிகள் இவற்றை விடுத்து, உத்தம வித்தை, பயிற்சி, சீலம், நற்குணம், சரீர ஆத்யாத்மிக பலம்—இவற்ருல் இன்புறச் செய்ய வேண்டியது ஆசிரியர் கடமையாகும். பள்ளிக்கூடம் ஊருக்கு ஐந்து மைலுக் கப்பாலேதான் இருக்கவேண்டும். ஏழை, பணக்காரன், அரசன், ஆண்டி என்ற வேறுபாடே யின்றி, தூய உணவு, நன்னீர், ஆடை, இருக்கை முதலியவற்றை எல்லாருக்கும் சரிசமனுகத் தரவேண்டும். அவர்கள் பெற்ரு ரைப் பார்க்கக் கூடாது. கடித விவகாரங் கூடாது. இவ்விதமாக உலக நினைப்புகளை ஒழித்து, வித்யார்த்திகள் கல்வியில் கருத் தூன்றவேண்டும். அவர்கள் செல்லுமிடங்களில் ஆசிரியரும் உடன் செல்லவேண்டும். அதனுல் அவர்கள் கெட்ட சேட்டையோ, சோம்பலாக வீண்காலம் போக்கவோ முடியாது.

कन्यानां संप्रदानं च कुमाराणां च रक्षणम् ॥ (மனு. 7-152)

'அரச நியமும், ஜனநியமும் சேர்ந்து, பிள்ளைகளையும் பெண்களையும் ஐந்து அல்லது எட்டு வயதில் பள்ளிக்கூடத்திற்கு அனுப்புவதைக் கட்டாயமாக்க வேண்டும். அனுப்பாதவர்கள் தண்டனைக்குட்படுவார்கள்' முதல் உபநயனம் வீட்டிலும் இரண்டாம் உபநயனம் ஆசார்ய குருகுலத்திலும் நடக்க வேண்டும். மாதா பிதாக்கள் அல்லது ஆசிரியர் பிள்ளைகளுக்கு அர்த்தத்துடன் காயத்திரி மந்திரத்தை உபதேசிக்கவேண்டும்.

## காயத்திரி மந்திரம்

ओ३म् भूर्भुवः स्वः। तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि धियो यो नः प्रचोदयात्। (யஜுர். 36-3)

ஓம் பூர் புவः ஸ்வः! தத் ஸவிதுர் வரேண்யம்
பர்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோ
நः ப்ரசோதயாத் (யஜுர் வேதம் 36-3)

ஓம் :—என்பதன் பொருள் முதல் அத்தியாயத்திலேயே விளக்கப்பட்டது. (பக்கம் 14)=பிரம்மம்.

பூ :—"भूरिति वै प्राणः" "यः प्राणयति चराऽचरं जगत् स भूः स्वयंभूरीश्वरः" எல்லா உலகிற்கும் ஆதாரமான பிராணிகளிடம் பிரியனை, சுயம்பு, உயிரினும் அரிய பரமாத்மன்.

புவ :—"भुवरित्यपानः" "यः सर्वं दुःखमपानयति सोऽपानः." துயரில்லாதவன், நினைப்பவர் துயர்களையும் பிணிகளையும் தீர்ப்பவன் ஆகிய பரமாத்மன்.

ஸ்வ :—"स्वरिति व्यानः" "यो विविधं जगत् व्यानयति व्याप्नोति स व्यानः" நாறு ஜகத்தில் உயிர்க்குயிராக நிறைந்து, அனைத்திற்கும் ஆதாரமாயிருக்கும் பரமாத்மன்.

ஸவிது : "यः सुनोत्युत्पादयति सर्वं जगत् स सविता तस्य" உலகை யெல்லாம் படைத்தவன், எல்லா ஐசுவரியங்களையும் கொடுப்பவன்.

தேவஸ்ய :—"यो दीव्यति दीव्यते वा स देवः" சர்வசுகதாயகன், எல்லாரும் அடைய விரும்பும் பரமாத்மனுடைய.

வரேண்யம் :—"वर्त्तुमर्हम्" மிகச் சிறந்த, பரம பரிசுத்தமான, (நமது வணக்கத்திற்குரிய) இறைவன்.

பர்க :—"शुद्धस्वरूपम्" தானே சுத்த ஸ்வரூபியாய், பிறரையும் சுத்தப்படுத்தும் சேதன ப்ரம்ம ஸ்வரூபன்.

தத் :—அத்தகைய பரமாத்மன் பெருமையை.

தீமஹி :—"धरेमहि" (நாம்) தியானிப்போமாக! (அதனால் பயனென்ன?)

ய :—அந்த ஜகதீச்வரன்

ந :—"अस्माकम्" நமது

திய :—புத்திகளை

ப்ரசோதயாத் :—“ प्रेरयेत् ” தீவினையினின்று விலக்கி ஒளியுறுத்தி நடத்துவான்.

ஹே பரமேச்வரா! ஹே சச்சிதானந்த ஸ்வரூபா! ஹே நித்ய சுத்த புத்த முக்தஸ்வபாவா! ஹே பிறப்பில்லாத மாசற்ற நிர்விகாரா! ஹே ஸர்வாந்தர்யாமி! ஹே ஸர்வாதார ஜகத்பதே! உலகை யெல்லாம் படைத்தவனே! அநாதியே! விசுவாம்பரனே! எங்கும் நிறைந்தவனே! கருணையமுதக் கடலே! நீயே சிருஷ்டி ஜகத்தின் உயிர்; நீ பூரணானந்தன், உனது தியானமே துன்பங் களையும் துயரங்களையும் துடைக்கும். நீயே உலகத்தைத் தாங்கு வோன். நீயே சர்வபிதா, உனது புனிதத் தன்மையை நாங்கள் தியானிப்போமாக! எங்கள் புத்தியை நீ நடத்து. நீயே எம் இறைவன். நினக்கே எமது வணக்கம். நீ ஒப்புயர்வற்ற தனிப் பரம்பொருள், நீயே எமது தந்தை, அரசன், நீதிபதி, நீயே இன்ப மளிப்பவன்.

இவ்வாறு காயத்திரி உபதேசம் செய்து, ஸந்த்யோபா ஸனைக்கு வேண்டிய ஸ்நானம், ஆசமனம், பிராணாயாமம் முதலிய வற்றைச் செய்யக் கற்பிக்கவேண்டும். ஸ்நானத்தால் உடலின் புற வுறுப்புக்கள் சுத்தமும் ஆரோக்யமும் நலமும் பெறுகின்றன.

अद्भिर्गात्राणि शुध्यन्ति, मनः सत्येन शुध्यति ।
विद्यातपोभ्यां भूतात्मा, बुद्धिर्ज्ञानेन शुध्यति ॥ (மனு. 5-109)

“ நீரால் உடல்கள் சுத்தமாகின்றன. மனம் சத்தியத்தால் சுத்தமாகிறது. வித்தை, தபம் அதாவது எல்லாக் கஷ்டங்களை யும் சகித்து தர்மத்தையே அனுஷ்டிப்பதால் ஜீவாத்மா சுத்தி யடைகிறது; ஞானத்தால் புத்தி திட நிச்சயங்கொண்டு சுத்தமா கிறது ” என்று மனு சொல்லுகிறார். இதனால் சாப்பிடு முன் குளிக்க வேண்டும் என்றறிக.

## பிராணாயாமம்

பிராணாயாமம் என்பது மூச்சடக்கல்.

योगाङ्गानुष्ठानादशुद्धिक्षये ज्ञानदीप्तिराविवेकख्यातेः ॥

(யோக சூத். சாதனபாதம்-28)

“ பிராணாயாமம் அசுத்தங்களை ஒழித்து, அறிவை ஒளி யுறுத்துகிறது. முக்தி பெறுமட்டும் ஆத்மாவின் ஞானம் அதனால் வளர்கிறது ” என்பது யோகசாஸ்திர வாக்காகும்.

दह्यन्ते ध्मायमानानां धातूनां हि यथा मलाः ।
तथेन्द्रियाणां दह्यन्ते दोषाः प्राणस्य निग्रहात् ॥ (மனு. 6-71)

நெருப்பில் வாட்ட வாட்ட தங்கம் முதலிய உலோகங்களின் மாசு நீங்குகிறது போலவே, பிராண நிக்ரஹத்தால் மன இந்திரியாதி தோஷங்கள் நலிந்து பரிசுத்த முண்டாகிறது. (மனு)

प्रच्छर्दनविधारणाभ्यां वा प्राणस्य॥ (யோக ஸூத். சமாதிபாதம் 35)

வேகமாக வமனம் செய்யும்போது, வயிற்றிலிருக்கும் அன்னமும் நீரும் வெளியேறுவது போலவே, மூச்சையும் முடிந்த மட்டிலும் அடக்கி, வேகமாக வெளியிடவேண்டும்; மூலேந்திரியத்தை மூச்செல்லாம் வெளியேறு மட்டும் மேலே இழுத்துக் கொண்டிருக்கவேண்டும். இதில் கஷ்டமுண்டானல் மெல்ல மெல்ல மூச்சை யிழுத்து பிறகும் அதேமாதிரி திறமையும் விருப்பமும் உள்ள மட்டும் செய்யவேண்டும். மனத்தில் ஓம் என்று ஜபம் செய்யவேண்டும். இதனுல் ஆத்மாவும் மனமும் பரிசுத்தமும் உறுதியும் அடையும். பாஹ்ய விஷயம் என்பது மேற் சொன்னபடி முடிந்த மட்டும் மூச்சை வெளியே நிறுத்தலாம். அப்யந்தரம் என்ருல், முடிந்தவரையில் பிராணனை உள்ளே நிறுத்தலாம். ஸ்தம்பனவ்ருத்தி என்பது நினைத்த மாத்திரத்தில் திடீரென்று மூச்சை நிறுத்துவதாம். பாஹ்யாந்தர க்ஷேபி—பிராணம் உள்ளிருந்து வெளியேறும்போது அதற்கு மாருக அதை வெளியேற்ருமல் மூச்சை உள்ளேயிழுத்தல்; மூச்சு வெளியிலிருந்து உள்ளேறும்போது மூச்சை உள்ளிருந்து வெளியேவிட்டுப் பழகல். இப்படி எதிரிடையாகச் செய்வதால், உள் வெளி மூச்சுகள் அடக்கப் பெற்று, பிராணம் வசப் பட்டு, மனமும் புலனும் சுவாதீனமாகின்றன. உடலுறுதியாவதால் புத்தி அதி சூக்ஷ்மமாகி கடினமும் நுட்பமும் ஆன விஷயங்களைக்கூட எளிதில் அறிகிறது. இதனுல் மனிதன் புருஷார்த்தத்தையடைய உடலில் வீரிய விருத்தியைப் பெருக்கி, திடபல பராக்ரம ஜிதேந்திரியனுகி எல்லா சாத்திரங்களையும் சிறிது காலத்தில் அறிய வல்லவனுகிருன். பையன்களைப் போலவே பெண்களும் யோகாப்யாஸம் செய்யவேண்டும்.

உண்ணல், உடுத்தல், இருத்தல், எழுதல், நடத்தல், பேசல், சிறியவர் பெரியவர்களிடம் பழகுதல், எப்படி என்று ஆசிரியர் உபதேசிக்கவேண்டும்.

## சந்தியோபாஸனை

சந்த்யோபாஸனையை பிரஹ்ம யக்ஞம் என்பதுமுண்டு. உள்ளங்கையில் தொண்டை நனையப் போதுமான தண்ணீர் வைத்து, உதடுகளால் உறிஞ்சி உட்கொள்ளல் ஆசமனம். ஆசமனம் தொண்டை நெஞ்சு வறட்சியைப் போக்கும். நடு விரல் மோதிர விரல் இரண்டாலும் நீரை கண், வாய், மூக்கு, முகம் முதலிய அங்கங்களில் தெளித்துக்கொள்வது மார்ஜனம். இது தூங்கு மூஞ்சித் தனத்தையும் சோம்பலையும் ஒழிக்கும். அப்படியில்லாவிட்டாலும், தண்ணீர் அகப்படாவிட்டாலும். இதை விட்டுவிடலாம். மந்த்ர ப்ராணயாமம், மனஸா பரிக்ரமணம் (நாலுதிசை கீழ் மேல் மனதைச் சுழற்றல்) உபஸ்தானம் (உயிர் ஒளி, அறிவின் மூலமாகக் கடவுளை யறிதல்), பரமேச்வரஸ்துதி, பிரார்த்தனை, உபாசனைகளின் முறையை ஆசிரியர் கற்பிக்கவும். பிறகு பிழைகளை வருந்தி இனிப் பாபமே செய்யாமல் உறுதிக்கொள்ளலான அகமர்ஷணம்—இவையே சந்தியோபாஸனக் கிரமம். இச் சந்த்யோபாஸனையை ஏகாந்தமான இடத்திற் செய்க.

अपां समीपे नियतो नैत्यिकं विधिमास्थित: ।
सावित्रीमप्यधीयीत गत्वारण्यं समाहित: ॥ (மனு. 2–104)

'வனம் போன்ற ஏகாந்த ஸ்தானத்தில், நீரின் அருகே இருந்து அமைதியாக, நித்ய கர்மானுஷ்டானங்களைச் செய்து, ஏகாக்கிரத்துடன் காயத்திரியை ஜபித்து, அதன் பொருளைத் தியானம் செய்க.' (மனு). மானசிக ஜபம் உத்தமம்.

## தேவயக்ஞம் அல்லது அக்னி ஹோத்ரம்

தேவயக்ஞம்: இரண்டாவது பெரிய நித்திய நியமமாகும். இது அக்னி ஹோத்திரத்தாலும், அறிவாளிகளுடன் சேர்ந்து அவர்களுக்குப் பணி செய்வதனாலும் இயலும். சந்தியும் அக்னி ஹோத்திரமும் தினம் இரண்டு வேளை செய்க—காலை மாலை. இந்த இரண்டு வேளைதான் பகலும் இரவும் சந்திக்கின்றன. சுமார் ஒரு மணி நேரமாவது தியானம் செய்ய வேண்டும். சமாதிஸ்தரான யோகிகள் பரமாத்ம தியானம் செய்வது போலவே சந்தியோபாஸனையும் செய்க. சூரியோதயத்திற்குப் பிறகும் சூரியாஸ்தமனத்திற்கு முன்பும் அக்னிஹோத்ரம் செய்க.

அக்னி ஹோத்திரத்திற்கு மண் அல்லது உலோகத்தால் வேதி (ஓமகுண்டம். படம் 1) அமைக்கவேண்டும். ஓம குண்டத்தின் மேற்புறம் 12 அல்லது 16 அங்குலம் சவுக்கம், அடிப்புறம் மூன்று அல்லது நான்கு அங்குலம் சவுக்கமாக இருக்கலாம். கீழ்ச் சதுக்கம் மேல் சவுக்கத்தில் நாலிலொருபங்கு. வேதியடியில் கொஞ்சம் சந்தனம், பலா, அல்லது மாங்குச்சிகளைப் பரப்புக. மத்தியில் தீமூட்டவேண்டும். அதன் மேல் சமித்துக்களைப் போடவேண்டும். பிறகு வாசனைச் சாமான்கள் கலந்து வெண்ணெய் காய்ச்சிய நெய்யால் மந்திரத்திற்கு ஒரு கரண்டி வீதம் ஆகுதி வழங்கவேண்டும். வேதியுடன் படத்திற் காட்டிய படி 1 ப்ரோக்ஷணீபாத்திரம் (ஜலப்பாத்திரம் படம் 2), 1 ப்ரணீத பாத்ரம் (ஜலக்கரண்டி படம் 3) ஆக இரண்டு; 1 நெய்க் கிண்ணமும் (படம் 4), மரம், வெள்ளி அல்லது தங்கத்தாலான கரண்டியும் (படம் 5) வேண்டும். ஓமத்திற்கு அடியில் வரும் மந்திரங்களும் காயத்திரியும் ஏற்றவையாம்.

ओं भूरग्नये प्राणाय स्वाहा । भुवर्वायवेऽपानाय स्वाहा । स्वरादित्याय व्यानाय स्वाहा । भूर्भुवः स्वरग्निवाय्वादित्येभ्यः प्राणापानव्यानेभ्यः स्वाहा ॥

இத்தகைய அக்னிஹோத்திர மந்திரங்களை உச்சரித்து, ஒவ்வோர் ஆகுதி வழங்குக. அதிக ஆகுதி வழங்கும் போது

ओं विश्वानि देव सवितर्दुरितानि परासुव ।
यद्भद्रं तन्न आसुव ॥ (யஜுர். 30–3)

இந்த மந்திரத்தாலும் முன் சொன்ன காயத்திரி மந்திரத்தாலும் ஆகுதி வழங்குக. ஓம், பூ:, ப்ராண முதலிய பதங்கள் பரமேசனையே குறிக்கும். இவற்றின் பொருளை முன்பே விளக்கினோம். எல்லாப் பிராணிகளின் சுகத்திற்கே பரமேசன் உலகிலுள்ள வஸ்துக்களைப் படைத்திருக்கிறான். ஆதலால் உலகோர் அவற்றைக் கொண்டு பரோபகாரம் செய்யவேண்டும். ஸ்வாஹா ஸப்தம் ஆத்மாவில் ஞானமுதிப்பதுபோல வாக்கிலும் உதிக்கச் செய்யும்.

**வினா :** ஹோமத்தால் நன்மை யென்ன?

**விடை :** கெட்ட காற்றாலும் நீராலும் உயிர்களுக்குப் பிணியும் துயரும் வரும். நல்ல காற்றாலும் நீராலும் ஆரோக்யமும் பிணியற்ற சுகமும் உண்டாகும் என்பதை எல்லாரும் அறிவர்.

வினா : அப்படியானால் சந்தனாதிகளைப் பூசிக்கொண்டு நெய் முதலியவற்றை உட்கொள்வதால் அதிக நலமாகுமே. இவற்றைத் தீயில் கொட்டி வீணாக்குவது அறிவாகுமா?

விடை : உனக்கு பதார்த்த வித்தை தெரிந்தால் இப்படிப் பேச மாட்டாய். ஏனெனில் எந்த பதார்த்தமும் வீணாவதில்லை. ஓமம் நடக்கிற இடத்திலிருந்து எட்ட நின்றாலும், சுகந்தத்தை முகர்கிறாய். துர்கந்தம் ஒழிகிறது. தீயில் போட்ட நறுமணப் பொருள், வீணாவதில்லை. அது சூக்ஷ்மமாக வெகுதூரம் பரவி, துர்கந்தத்தை நீக்குகிறது என்பதை அறிவாயாக.

வினா : அப்படியானால் குங்குமப்பூ, கஸ்தூரி, கற்பூரம், மணமலர், அத்தர் முதலிய வாசனைப் பொருள்களை வீட்டில் சும்மா வைத்திருந்தாலே போதுமே?

விடை : இந்த மணப் பொருள்களுக்கு வீட்டில் தீயகாற்றை போக்கி நல்ல வாடையை உள்ளே பிரவேசிக்கச் செய்யும் திறமையில்லை. அக்னிக்கே அந்தத் திறமையுண்டு.

வினா : அப்படியானால் மந்திரஞ் சொல்லி ஓமம் வளர்ப்பதன் பயனென்ன?

விடை : மந்திரங்கள் ஓமத்தின் பயனை விளக்கும். ஆவிர்த்தி செய்வதால் மந்திரங்கள் பாடமாகும். இது வேதத்தை ஓதி, என்றும் காப்பாற்றப் பயனாகும்.

வினா : ஓமம் செய்யாவிட்டால் பாபமா?

விடை : ஆம். ஒரு மனிதன் தன் உடலழுக்கு நாற்றத்தால் காற்றையும் நீரையும் கெடுத்து நோய் பிறக்கக் காரணமாகிறான். அதனால் பிராணிகளுக்குத் துயர் விளைவிக்கிறான். ஓமம் செய்யாதவனுக்கும் இத்தகைய பாபம் விளைகிறது. ஓமத்தால் சுமந்த புகை எழுப்பிக் காற்றையும் நீரையும் சுத்தப் படுத்திப் பாப நிவாரணமாக வேண்டும். நெய் போன்றவற்றை உண்பதால் ஒருவருக்கே நன்மை. ஒரு மனிதன் உபயோகிக்கும் நெய் முதலிய மணப் பொருள்களை ஓமம் செய்தால், இலட்சக் கணக்கானவர் களுக்கு உபகாரமாயிருக்கும். நெய் பால் போன்ற உத்தம வஸ்துக்களைச் சாப்பிடாதவன் உடல் மனம் உறுதிபெறா. அவற்றைப் சாப்பிடத்தான் வேண்டும். ஆனால் ஓமம்

செய்யவும் வேண்டும். தினம் ஓமம் செய்தல் நமது கடமையாகும்.

**வினா:** ஒரு மனிதன் எத்தனை ஆகுதி அளிக்க வேண்டும்? ஆகுதிக்கு எவ்வளவு நெய் விடவேண்டும்?

**விடை:** ஒவ்வொருவரும் பதினாறு ஆகுதி வழங்க வேண்டும். அரைத் தோலா (அரை ரூபாய் எடை) அல்லது அதிகம் ஒரு ஆகுதிக்கு வழங்கல் நல்லது. ஆர்ய சிரோமணிகளான ரிஷிகள், மகரிஷிகள், அரசர், மகா ராசாக்கள் ஆகியோர் முற்காலம் அதிகமாக ஓமம் செய்தனர், செய்வித்தனர். ஆரிய வர்த்தத்தில் இவ்வாறு ஓமம் அமோகமாக நடந்த காலத்தில், ஜனங்கள் பிணி யின்றிச் சுகமாக வசித்தனர். இப்போதும் ஓமம் நடந்தால் அவ்வாறிருக்கலாம். கற்றல், கற்பித்தல், ஸந்த்யோபாஸனை, ஈச்வரனைத் தோத்திரம் செய்தல், உபாசித்தல் முதலியன பிரஹ்ம யக்ஞம் ஆகும். அக்னி ஹோத்ரம் முதல் அசுவமேதயாகம் வரையில் தேவ யக்ஞமாகும். இவை யிரண்டும் பிரமசாரிகள் செய்ய வேண்டியவையாம்.

ब्राह्मणस्त्रयाणां वर्णानामुपनयनं कर्त्तुमर्हति । राजन्यो द्वयस्य । वैश्यो वैश्यस्यैवेति । शूद्रमपि कुलगुणसंपन्नम् मन्त्रवर्जमनुपनीतमध्यापयेदित्येके ॥

"பிராமணன் தனக்கும், தன் கீழிருக்கும் க்ஷத்திரிய, வைசியருக்கும் உபநயனம் செய்யலாம். க்ஷத்திரியன் க்ஷத்திரியருக்கும், வைசியருக்கும்; வைசியர் வைசியருக்கே யக்ஞோபவீதம் செய்து படிக்க வைக்கலாம். சூத்திரருக்கு உபநயனமில்லை. நல்ல லட்சணமும், அறிவும், தன்மையுமுள்ள சூத்ரருக்கு வேதந் தவிர மற்ற சாத்திரங்களைக் கற்பிக்க வேண்டுமென்பது பல ஆசாரியர்களின் சம்மதமாகும்" (சுச்ருதர்).

ஐந்து அல்லது எட்டு வயதில் பையனை ஆண் பள்ளிக் கூடத்திற்கும், பெண்ணைப் பெண் பள்ளிக்கும் அனுப்ப வேண்டும்.

षट्त्रिंशदाब्दिकं चर्य्यं गुरौ त्रैवेदिकं व्रतम् । तदर्धिकं पादिकं वा ग्रहणान्तिकमेव वा ॥ (மனு 3–1.)

மாணவன் 9, 18, 36 ஆண்டுகளில் அல்லது வேதங்களை முற்றக் கற்குமட்டும் பிரம்மசரியம் காக்கவேண்டும். ஒருவன்

எட்டு வயதில் கல்வி தொடங்கினால், ஒரு வேதத்திற்கு 12 ஆண்டுகள் வீதம், மூன்று வேதங்கள் 36 ஆண்டுகளில் அதாவது 44 வயதில் முற்றக் கற்கிறான். 18 ஆண்டுகள் கற்பவன் 26ம் வயதில் கல்வி முற்றுகிறான். 9 ஆண்டு கற்பவர், முதன்மை யாகப் பெண்கள், 17 ஆண்டில் கல்வி முற்றுகிறார்கள். பிறகு இல்லறம் புகுவர். இல்லற வாழ்விலும் கற்பதை மறக்கக்கூடாது. கல்வி முற்றுமட்டும் பிரம்மசரியம் அவசியமாகும்.

## பிரஹ்மசரியம்

*கீழ், நடுத்தரம், உத்தமம் என்று பிரமசரியம் மூவகையாகும்.*

पुरुषो वाव यज्ञस्तस्य यानि चतुर्विंशति वर्षाणि तत्प्रातः सवनं चतुर्विंशत्यक्षरा गायत्री गायत्रं प्रातःसवनं, तदस्य वसवोऽन्वायत्ताः प्राणा वाव वसव एते हीदꣳसर्वं वासयन्ति ॥ १ ॥

तञ्चेदेतस्मिन् वयसि किञ्चिदुपतपेत्स ब्रूयात्प्राणा वसव इदं मे प्रातःसवनं माध्यन्दिनꣳ सवनमनुसंतनुतेति माहं प्राणानां वसूनां मध्ये यज्ञो विलोप्सीयेत्युद्धैव तत एत्यगदो ह भवति ॥ २ ॥

अथ यानि चतुश्चत्वारिꣳशद्वर्षाणि तन्माध्यन्दिनꣳसवनं चतुश्चत्वारिꣳशदक्षरा त्रिष्टुप् त्रैष्टुभं माध्यन्दिनꣳ सवनं तदस्य रुद्रा अन्वायत्ताः प्राणा वाव रुद्रा एते हीदꣳ सर्वꣳ रोदयन्ति ॥ ३ ॥

तं चेदेतस्मिन्वयसि किञ्चिदुपतपेत्स ब्रूयात्प्राणा रुद्रा इदं मे माध्यन्दिनꣳसवनं तृतीयसवन मनुसन्तनुतेति माहं प्राणानाꣳ रुद्राणां मध्ये यज्ञो विलोप्सीत्युद्धैव तत एत्यगदो ह भवति ॥ ४ ॥

अथ यान्यष्टाचत्वारिꣳ शद्वर्षाणि तत्तृतीयसवनमष्टा चत्वारिꣳशदक्षरा जगती जागतं तृतीयसवनं तदस्यादित्यान्वायत्ताः प्राणा वावादित्या एते हीदꣳ सर्वमाददते ॥ ५ ॥

तं चेदेतस्मिन् वयसि किञ्चिदुपतपेत्स ब्रूयात् प्राणा आदित्या इदं मे तृतीयसवनमायुरनुसंतनुतेति माहं प्राणानामादित्यानां मध्ये यज्ञो विलोप्सीयेत्युद्धैव तत एत्यगदो हैव भवति ॥ ६ ॥

*இவை சாந்தோக்யோப நிஷத்தின் வாக்குகளாகும்.*

*(ப்ரபாடம் 3, கண்டம் 26)*

1. *கீழ்த்தர பிரம்மசரியம்:*— மனிதன் அன்னபானாதி களால் ஆகிய சரீரந் தாங்கிய ஜீவாத்மா. அவன், அவன்

வாழ்க்கை, மிக நற்குணங்களும், நற்செயல்களும் நிரம்பிய வேள்வியாக வேண்டும். அவன் உடலுறுதியுடன் நீளாயுள் வாழவேண்டும். இதற்குக் குறைந்தது 24 ஆண்டுகளாவது பிரம்மசரியம் வகித்து, வேதமும், நல்ல கலைகளும் பயில வேண்டும். (காயத்திரிக்கும் 24 எழுத்துக்கள்).

இக்காலம் அவன் ஆசைகளை அடக்கி ஜிதேந்திரியனு யிருக்க வேண்டும். பிரம்மசரியத்தால் வீரியபலம் பெருகி, சரீரத்திலும் பிராணனிலும் மனதிலும் சுபகுணங்கள் பொலியும். 25 ஆண்டுகளுக்கு முன்பு யாராவது மணம் புரிய அல்லது விஷயபோகம் அனுபவிக்கத் தூண்டினுல், பிரம்மசாரி இவ்வாறு பதில் சொல்ல வேண்டும். "ஐயா, பாருங்கள்! எனது வீரியமும் புத்தியும், உடலும் பூரண வளர்ச்சிப் பெற்று பிரதம பிரம்மசரியத்தால் உறுதியாகாவிட்டால், நடுத்தரமான பிரம்மசரியம் காப்பதெப்படி? கீழ்த்தரமான பிரிம்மசரியம் நடுத்தர பிரம்மசரியத்திற்குத் துணையாகும். நான் முட்டாளன்று. வீரிய சக்தியைக் கண்டபடி வீணுக்கினுல், என் உடல், உயிர், மனம், ஆத்மா எல்லாம் பாழாகும். அதைக் காத்தால் நற் குணமும், வீறும் பெருகி நான் பெரிய காரியங்களைச் சாதிக்கலாம். என் விலையுயர்ந்த வாழ்வை வீணுக்கி தர்மார்த்த காம மோட்சமாகிய நான்கு புருஷார்த்தங்களையும் இழக்கமாட்டேன். கிருஹஸ்தம், வானப்ரஸ்தம், ஸந்யாஸம் ஆகிய மற்ற மூன்று ஆசிரமங்களுக்கும் ஊற்றுக்கண் பிரம்மசரியம்; அதை யிழந்தால், நான் கெட்டழிவேன். எனது பிரம்மசரியத்தைத் தடை செய்யாது போம்! 44 ஆண்டுகள் பிரம்மசரியம் காப்பவனது பிராணன், இந்திரியம், அந்தக்கரணம், ஆத்மா எல்லாம் பலம் பொருந்தி, துஷ்டர்களை வீழ்த்தி, சிஷ்டர்களைக் காக்கும் திறமை பெருகும். முதல் பிரம்மசரியத்தைக் காப்பவன் 70, 80 வயது வரையில் ஆரோக்கிய திடகாத்திரத்துடன் நன்று வாழ்வான். ஆதலால் உன்னைப் போன்ற மூடர் பேச்சைக் கேட்டு, என் பிரம்மசரியத்தை இழக்கமாட்டேன்."

2. நடுத்தர பிரம்மசரியம்:— திருஷ்டுப் சந்தஸில் 44 எழுத்துக்கள் இருப்பது போல, 44 ஆண்டுகள் விரதங் காப்பவன் நடுத்தர பிரம்மசரியாவான். அவன் இந்த பிரம்மசரியத்தால் ருத்ரசக்தி பெறுகிருன். அவனைப் பகைவர் நடுங்குவர். நல்லோருக்கு அவன் ஆதரவாளன். இத்தகைய பிரம்மசரியத்தை விட்டுவிடும்படி யாராவது சொன்னுல், "ஐயா

பிரும்மசரியத்தால் வரும் இன்பத்தை பிரம்மசாரி யல்லாதவன் கனவிலும் காணமுடியாது. உலகில் வெற்றி பெறவேண்டு மானுலும், தர்மார்த்த காமங்களை அனுபவிக்க வேண்டு மானுலும், பிரம்மசரியம் வேண்டும். அதனுல் உயர்ந்த இன்பம், நல்ல கல்வியறிவு, நற்குணங்கள், திட சரீரம், திடமனம், நீளாயுள், நன்மகிழ்ச்சியெல்லாம் எய்தும். உன்னைப் போன்ற மூடர் பேச்சைக்கேட்டு பால்ய விவாகத்தால் என்னையும் குலத்தையும் கெடுக்கமாட்டேன். போம்.'' என்ன வேண்டும்.

3. உத்தம பிரம்மசரியம்: ஜகதீ சந்தத்தில் 48 எழுத்துக் களிருப்பது போல், 48 ஆண்டு பிரம்மசரியம் வகிப்பவன் உத்தம பிரம்மசாரி யாவான். இந்தப் பிரம்மச்சரியத்தால் ஒருவர் தீர்க்கப்பிராணன், நிறைவான கல்வி, நானூருண்டுகள் வரை யிலுங்கூட ஆயுள், சிறந்த குணங்கள் பெற்ருேங்குவர். இந்த பிரமசரிய விரதத்தைப் பங்கம்செய்ய யாராவது முனைந்தால், "போ முட்டாளே! உன் ஆபாசவார்த்தையால் நான் கெடேன். பரமாத்மா எனது விரதத்தைக் காக்கட்டும். அதனுல் உன்னைப் போன்ற மூடருக்கும் புத்திசொல்லி, உனது பிள்ளைகளுக்கும் பிரம்மசரியத்தால் வரும் இன்ப வாழ்வைச் சொல்லுவேன்'' என்க.

ஸுஸ்ருத ஸுத்ரஸ்தானம் 35-ம் அத்தியாயத்தில் இவ்வாறு சொல்லப்படுகிறது :

चतस्रोऽवस्थाः शरीरस्य वृद्धिर्यौवनं संपूर्णता किञ्चित्परिहाणिश्चेति। आषोडशाद्वृद्धिः। आपञ्चविंशतेर्यौवनम्। आचत्वारिंशतः संपूर्णता। ततः किञ्चित्परिहाणिश्चेति ॥

पञ्चविंशे ततो वर्षे पुमान् नारी तु षोडशे।
समत्वागतवीर्यौ तौ जानीयात्कुशलो भिषक् ॥ ७ ॥

இந்தச் சரீரத்திற்கு நான்கு பருவங்கள் உண்டு: (1) வளர்ச்சிப் பருவம். 16 லிருந்து 25 வயது மட்டும்; உடலின் தாதுக்களை விருத்தி செய்யும் காலம் (2) யௌவன பருவம் 25 வயதின் முடிவு 26 வயதின் ஆரம்பம் (3) முதிர்ச்சிப்பருவம் 25 - 40 வரை. அப்போது தசைநாறுகளும் தாதுக்களும் கொழுமையுற்று நிறைவுறும் (4) கிஞ்சித் பரிஹாணி பருவம். உடலின் சகல அவயங்களும் பூரண மடைந்த நிலை. அதன் பிறகு கிழப்பருவம் அடைகிறது. இதில் தாதுக்கள் உடலில் தங்காமல் கனவு, வேர்வை இவற்றினுல் நஷ்டமாகும். மனிதன்

40 வயதில் மணம் புரிதல் வேண்டும். 48 வயதில் மணம்புரிதல் மிக்க நலம்.

வினு: இந்த பிரம்மசரிய நியமம் இருபாலருக்கும் பொருந்துமா?

விடை: இல்லை; மனிதன் 25, 30, 36, 40, 48 ஆண்டுவரை பிரம்மசரியம் காத்தால், பெண்டிர் 16, 17, 18, 20, 24 வயது மட்டும் பிரமசரியம் காக்கலாம். இந்த நியமம் திருமணம் புரிந்துகொள்பவருக்கே. மணம் புரிய விருப்பமில்லாமல், ஆயுளெல்லாம் பிரம்மசரியம் காப்பது உத்தமம். ஆனால், இது பூரண ஞானமும், மனோஜயமும், கொண்ட மாசற்ற ஜிதேந்திரிய யோகிகளுக்கே முடியும் என்பதை நினைக்க வேண்டும். காம வேகங்களை யடக்கி இந்திரியங்களை வசப்படுத்தல் கடினமான வேலை.

தைத்திரீயோபநிஷத் வாக்கியத்தைக் காண்போம்:

(1) ऋतं च स्वाध्यायप्रवचने च ।
(2) सत्यं च स्वाध्यायप्रवचने च ।
(3) तपश्च स्वाध्यायप्रवचने च ।
(4) दमश्च स्वाध्यायप्रवचने च ।
(5) शमश्च स्वाध्यायप्रवचने च ।
(6) अग्नयश्च स्वाध्यायप्रवचने च ।
(7) अग्निहोत्रश्च स्वाध्यायप्रवचने च ।
(8) अतिथयश्च स्वाध्यायप्रवचने च ।
(9) मानुषं च स्वाध्यायप्रवचने च ।
(10) प्रजा च स्वाध्यायप्रवचने च ।
(11) प्रजनश्च स्वाध्यायप्रवचने च ।
(12) प्रजातिश्च स्वाध्याय प्रवचने च ।

(தைத்ரீயோபநிஷத் ப்ரபா 7 அனு 9)

இது ஆசிரியர் மாணவர் ஆகிய இருவருக்கும் ஏற்பட்ட விதியாகும்.

(1) உண்மையாக நடந்து அவர்கள் படிக்கட்டும்; கல்வி பயிற்றட்டும்.

(2) சத்தியங்காத்து, படிக்கட்டும், போதிக்கட்டும்.

(3) தவம்புரிந்து, அறவோராய், வேதாதி சாஸ்திரியங்களை படிக்கட்டும் போதிக்கட்டும்.

(4) புலன்களையடக்கி யாண்டு, படிக்கட்டும் போதிக்கட்டும்.

(5) மனோ விருத்திகளைக் கட்டுப்படுத்திப் படிக்கட்டும், போதிக்கட்டும்.

(6) அக்னி, மின்சாரம், ஒளி முதலிய இயற்கைச் சக்திகளை ஆராய்ந்தறிந்து படிக்கட்டும், போதிக்கட்டும்.

(7) தினம் அக்னி ஹோத்திரம் செய்து, படிக்கட்டும் போதிக் கட்டும்.

(8) அதிதிகளை உபசரித்து, படிக்கட்டும் போதிக்கட்டும்.

(9) மனிதசமுதாயத்திற்குரிய கடமைகளைச் செய்து, பொது நலம் புரிந்து படிக்கட்டும் போதிக்கட்டும்.

(10) தனது மரபையும் அரசையும் பரிபாலித்து, படிக்கட்டும் போதிக்கட்டும்.

(11) வீர்யத்தைக் காத்து, படிக்கட்டும் போதிக்கட்டும்.

(12) தனது மக்களையும் சீடரையும் பேணிப் படிக்கட்டும் போதிக்கட்டும்.''

இதனால் எந்நிலையிலும் எல்லா ஆசிரமத்திலும் கல்விப் பயிற்சி இன்றியமையாததெனக் கொள்க.

## பிரம்மசரிய நியமம்

यमान् सेवेत सततं न नियमान् केवलान् बुधः ।
यमान् पतत्यकुर्वाणो नियमान् केवलान् भजन् ॥ (மனு. 4-204)

'' அறிவாளி யமநியமங்களைக் கடைப்பிடிக்க வேண்டும். ஒன்றை விட்டு மற்றொன்றைப் போற்றுவோன் கேடுறுவான். யமம் நியமம் இரண்டையும் சேர்த்தே பயில்க.''

तत्राहिंसा सत्यास्तेयब्रह्मचर्यापरिग्रहा यमाः ॥
(யோகசூத், சாதனபாதம்—30)

(1) வைராக்கியமான அஹிம்ஸை (2) மனமொழி மெய்களில் சத்தியம், (3) திரிகரணங்களாலும் திருடாமை (4) ஜனனேந் திரியங்களை அடக்கியாளும் பிரம்மசரியம், (5) பிறர் பொருள்

அவாவாமை, தன் பொருளின் அகம்பாவமின்மை, அபரிக்ரகம்— இவை யமமாகும்.

शौचसन्तोषतपः स्वाध्यायेश्वरप्रणिधानानि नियमाः ॥

(யோகசூத், சாதனபாதம்—32)

(சௌசம்) குளிப்புகளால் உடம்பு சுத்தமாதல்; (ஸந்தோஷம்) எப்போதும் லாபநஷ்ட சுகதுக்கங்களைப் பாராட்டாமல், சோம்ப லில்லாமல் உரிய கடமையை மகிழ்வுறச் செய்தல் (தப) தவம்; இடர்களை வென்று மனமடக்கிக் கடமைகளைத்தல், (ஸ்வாத்யாயம்) படித்துக் கல்வி வளர்த்தல், (ஈச்வர ப்ரணிதானம்), பக்தியுடன் இறைவனுக்குத் தன்னை அர்ப்பணித்தல்—ஆகிய ஐந்தும் நியம மாகும்.

மனுவின் உபதேசங்களைக் கேளுங்கள் :—

कामात्मता न प्रशस्ता न चैवेहास्त्यकामता ॥

काम्यो हि वेदाधिगमः कर्मयोगश्च वैदिकः (மனு. 2-2)

ஆசையை முற்றிலும் துறக்க முடியாது. ஆசை ஆர்வமாக வேண்டும். ஆர்வமில்லாவிட்டால் வேதநூல் கற்பதும் நல்ல கர்மங்களைச் செய்வதும் நிகழாவாம்.

स्वाध्यायेन व्रतैर्होमैस्त्रैविद्येनेज्यया सुतैः ।

महायज्ञैश्च यज्ञैश्च ब्राह्मीयं क्रियते तनुः ॥ (மனு. 2-28)

எல்லா வித்தைகளையும் கற்று, கற்பிக்கவேண்டும். பிரமசரிய விரதம் கடைப் பிடிக்க வேண்டும். உண்மை பேச வேண்டும். அக்னி ஹோத்ராதி ஓமங்களைச் செய்யவேண்டும். பொய் விலக்கி உண்மையைப் போற்றவேண்டும். வேத சம்பந்தமான கர்மோ பாஸனையுடன் ஞான வித்தைகளைப் பயிலவேண்டும். பருவ காலங்களுக்குரிய ஓமங்களைச் செய்யவேண்டும். நல்ல சந்தானங் களைப் பெறவேண்டும். இறைவன், தேவர், பிதுர்க்கள், உலகுயிர் கள், அதிதிகளுக்குச் செய்யும் கடமையாகிய மகா யக்ஞத்தைக் காக்கவேண்டும். நல்ல கலைகளை வளர்த்து சமுதாய சேவை செய்யவேண்டும். இவற்றால் மானிடர் அந்தணராகின்றனர். இவையின்றி அந்தண்மை வாய்க்காது.

इन्द्रियाणां विचरतां विषयेष्वपहारिषु ।

संयमे यत्नमातिष्ठेद्विद्वान् यन्तेव वाजिनाम् ॥ (மனு- 2-88)

புலன்கள் மனத்தைத் தீயசெயலுக்கு இழுத்துச் செல்லும். விஷயாதிகளில் கொண்டு தள்ளும். அறிவாளி திறமையான சாரதிபோல் புலன்களான குதிரையை அடக்கி நேர்வழியே செலுத்தவேண்டும். ஏனெனில்—

इन्द्रियाणां प्रसङ्गेन दोषमृच्छत्यसंशयम् ।
सन्नियम्य तु तान्येव ततः सिद्धिं नियच्छति ॥ (மனு. 2-93)

இந்திரிய வசப்பட்ட ஜீவாத்மா பல தோஷங்களை யடைகிறது. அதை அடக்கி யாண்டாலே சித்தி பெறலாம். வாழ்வில் வெற்றி யடையலாம்.

वेदास्त्यागश्च यज्ञाश्च नियमाश्च तपांसि च ।
न विप्रदुष्टभावस्य सिद्धिं गच्छन्ति कर्हिचित् ॥ (மனு. 2-97)

தீமையாளன், வேதம் தியாகம், யக்ஞம், நியமம், தவம் ஆகிய அருஞ் செயல்களில் வெற்றி பெறமாட்டான்.

वेदोपकरणे चैव स्वाध्याये चैव नैत्यिके ।
नानुरोधोऽस्त्यनध्याये होममन्त्रेषु चैव हि ॥ १ ॥
नैत्यिके नास्त्यनध्यायो ब्रह्मसत्रं हि तत्स्मृतम् ।
ब्रह्माहुतिहुतं पुण्यमनध्यायवषट्कृतम् ॥ २ ॥ (மனு. 2-105-106)

எப்போதும் மூச்சுவிடுவது போல் வேதபாடம், ஸந்த்யோபாஸனை, பஞ்ச மகா யக்ஞாதி ஓமக்கிரியைகளைத் தினந்தோறும் செய்யவேண்டும். அவற்றிற்கு ஓய்வுநாளில்லை. (1) அநத்யாய நாளில் செய்தாலும் இவற்றிற்கு பலனுண்டு. என்று செய்தாலும் உண்மைக்கும் நன்மைக்கும் புண்ணியப் பலனும், தீமைக்குத் தீப்பயனும் வாய்க்கும். ஆதலால் நல்ல கர்மாக்களைத் தினமும் செய்க. மனிதன் எப்போதும் பாபத்தை வெறுத்துப் புண்ணியமே போற்றவேண்டும். (2)

अभिवादनशीलस्य नित्यं वृद्धोपसेविनः ।
चत्वारि तस्य वर्द्धन्त आयुर्विद्या यशो बलम् ॥ (மனு-2-121)

இனிய நல்லொழுக்கமும், முதியோரைப் பணிதலும் உடையவன் ஆயுள், வித்தை, புகழ், பலம் ஆகிய நான்கிலும் விருத்தியடைகிறான்.

अहिंसयैव भूतानां कार्यं श्रेयोऽनुशासनम् ।
वाक् चैव मधुरा श्लक्ष्णा प्रयोज्या धर्ममिच्छता ॥
(மனு. 2-159)

பகைமை தவிர்த்து எல்லா உயிர்களுக்கும் இன்ப வழியை இன்சொற்களால் உபதேசிக்கவும் ; தர்ம உன்னதி வேண்டுவோன் எப்போதும் சத்திய வழியிற் செல்க.

यस्य वाङ्मनसे शुद्धे सम्यग्गुप्ते च सर्वदा ।
स वै सर्वमवाप्नोति वेदान्तोपगतं फलम् । (மனு. 2-160)

மனே வாக்கு சுத்தமுடையவன், அடக்க முடையவன் எல்லா வேதாந்த ஞானப் பயனையும் அடைகிறான்.

संमानाद् ब्राह्मणो नित्यमुद्विजेत विषादिव ।
अमृतस्यैव चाकाङ्क्षेदवमानस्य सर्वदा ॥ (மனு. 2-162)

உலகின் ஸம்மானத்தை என்றும் விஷம் போலவும், அது செய்யும் அவமானங்களை அமுதம் போலவும் கருதும் அந்தணனே வேதத்தையும் பரமேசனையும் அறிவான்.

अनेन क्रमयोगेन संस्कृतात्मा द्विजः शनैः ।
गुरौ वसन् संचिनुयाद्ब्रह्माधिगमिकं तपः ॥ (மனு. 2-164)

இம்மாதிரியே உபநயனமான த்விஜ பிரமசாரியும் பிரம்ம சாரிணியும், மெல்ல மெல்ல பிரம்ம ஞானத்தைத் தரும் வேதாப் யாஸம் செய்க. அதுவே அவர் உயர் கடன், தவம்.

योऽनधीत्य द्विजो वेदमन्यत्र कुरुते श्रमम् ।
स जीवन्नेव शूद्रत्वमाशु गच्छति सान्वयः ॥ (மனு, 2-168)

வேத மோதாமல் மற்ற விஷயங்களில் பொழுதை வீணுக்கும் ஒருவன் தன் புத்திர பௌத்திராதிகளுடன் சூத்ரத்வ மடைகிறன்.

பிரம்மசரியங் காத்துக் கல்வி பயிலும் பையனும், கன்னியும் இந்த விதிகளை அனுஷ்டிக்க வேண்டுமென்று மனுதர்மம் சொல்லுகிறது:—

वर्जयेन्मधु मांसञ्च गन्धं माल्यं रसान् स्त्रियः ।
शुक्तानि यानि सर्वाणि प्राणिनां चैव हिंसनम् ॥ 1 ॥
अभ्यङ्गमञ्जनं चाक्ष्णोरुपानच्छत्रधारणम् ।
कामं क्रोधं च लोभं च नर्त्तनं गीतवादनम् ॥ 2 ॥

द्यूतं च जनवादं च परिवादं तथाऽनृतम् ।
स्त्रीणां च प्रेक्षणालम्भमुपघातं परस्य च ॥ 3 ॥

एकः शयीत सर्वत्र न रेतः स्कन्दयेत्क्वचित् ।
कामाद्धि स्कन्दयन् रेतो हिनस्ति व्रतमात्मनः ॥ 4 ॥

(மனு. 2-177-130)

மது, மாமிசம், கந்தம், மாலை, சுவைகள், ஆண் பெண் சேர்க்கை, புளிப்பான பண்டம், பிராண ஹிம்சை இவற்றை நீக்குக. (1)

அங்கங்களைத் தேய்த்தல், அப்யங்கனம், குறிகளைப் பிசைதல், கண்ணுக்கு மையிடல், செருப்புப் போடல், குடை பிடித்தல், காமம், குரோதம், லோபம், மோகம், அசூசை, பயம், சோகம், துவேஷம், கானம், நர்த்தனம், வாத்தியம் வாசித்தல் (2) சூது, வீண்வம்பு, கோள், நிந்தை, பொய்யுரை, பெண்களை உற்றுப் பார்த்தல், ஆலிங்கனம், பிறருக்குத் தீங்கு செய்தல் முதலியவற்றை விட்டுவிட வேண்டும் (3)

பிரம்மசாரி தனியே படுக்க வேண்டும். ரேதஸை வீணுக்கக் கூடாது. காமத்தால் அதை வீணுக்குவோன் விரத பங்கமடைகிறுன். (4)

ஆசிரியர் மாணவர்களுக்கு இவ்வாறு உபதேசிக்க வேண்டும். இது தைத்ரீய வாக்கு :—

वेदमनूच्याचार्योऽन्तेवासिनमनुशास्ति । सत्यं वद । धर्मं चर । स्वाध्यायान्मा प्रमदः । आचार्याय प्रियं धनमाहृत्य प्रजातन्तुं मा व्यवच्छेत्सीः । सत्यान्न प्रमदितव्यम् । धर्मान्न प्रमदितव्यम् । कुशलान्न प्रमदितव्यम् । भूत्यै न प्रमदितव्यम् । स्वाध्यायप्रवचनाभ्यां न प्रमदितव्यम् । देवपितृकार्याभ्यां न प्रमदितव्यम् । मातृदेवो भव । पितृदेवो भव । आचार्यदेवो भव । अतिथिदेवो भव । यान्यनवद्यानि कर्माणि तानि सेवितव्यानि नो इतराणि । यान्यस्माकं सुचरितानि तानि त्वयोपास्यानि नो इतराणि । ये के चास्मच्छ्रेयांसो ब्राह्मणास्तेषां त्वयासनेन प्रश्वसितव्यम् । श्रद्धया देयम् । अश्रद्धया देयम् । श्रिया देयम् । ह्रिया देयम् । भिया देयम् । संविदा देयम् । अथ यदि ते कर्मविचिकित्सा वा वृत्तविचिकित्सा वा स्यात् । ये तत्र ब्राह्मणाः सम्मर्शिनो युक्ता अयुक्ता अलूक्षा धर्मकामाः स्युर्यथा ते तत्र वर्तेरन् ।

तथा तत्र वर्तेथाः। एष आदेश एषउपदेशः। एषा वेदोपनिषद्। एतदनुशासनम्। एवमुपासितव्यम्। एवमुचैतदुपास्यम्॥

(தைத்ரீயம்—ப்ரபாடம் 7—அநு-11-கண்-1, 2, 3, 4).

"மாணவ மணிகாள்! உண்மை பேசுங்கள், தருமம் பேணுங்கள். கல்வியை வழுவாதீர். பிரம்மசரியங் காத்து, கல்வி முற்றி, ஆசாரியருக்குப் பிரியமான தட்சிணை அளித்து, மணம் புரிந்து, மரபை வளருங்கள். உண்மை வழுவாதீர். அறம் வழுவாதீர். திறமையும் புலமையும் வளருங்கள். செல்வம் பெருக்குங்கள். படிப்பையும், போதிப்பதையும் விடாதீர். தேவர், பெரியார் பணி செய்க. மாதா, பிதா, ஆசாரியர், அதிதி, சீரிய மேலோர்களை, தெய்வ விசுவாசத்துடன் வணங்கிச் சேவை செய்க. அறவினைகளையே போற்றுக. பிறவினை தவிர்க்க. நன்னடையே பயில்க. தீ நடை விலக்குக. அறிவும் சீலமுங் கொண்ட அந்தணர் நம்மிடையே வந்தால், வரவேற்று, அமர்த்தி, உபசரித்து, அவர்கள் அருகிருந்து பழகவேண்டும். கொடுப்பதை மனமாரத் தருக. மனமின்றித் தரற்க. வளமுறக் கொடுமின், நாணுடன், பயபக்தியுடன், கருணையுடன் கொடுமின்; இடம்பத்திற்கும், பகட்டிற்கும், பேர் புகழிற்குங் கொடுக்காதீர். கர்மம், சீலம், உபாசனை, ஞானம் இவற்றில் சந்தேக மேற்பட்டால், அறிவாராய்ச்சியிற் சிறந்து, ஓரகமற்ற நடு நிலையாளராய், வஞ்சமற்ற, நேர்மையாளராய், அறநெறியாளரான தர்மாத்மாக்களிடம் கேட்டுத் தெளிமின். அவர்கள் யோக யுக்தாரானலும் சரி, யோகிகளில்லாவிட்டாலும் சரி; அந்த தர்மாத்மாக்கள் வழியைப் பின் பற்றுக. இதுவே ஆதேசம், உபதேசம், ஆணை. இதுவே வேதோப நிஷதம். இதுவே கட்டளை. இதைப் பேணுக. ஆம் இதைப் போற்றுக!

## ஆசாரம்

மனுதர்ம சாஸ்திரம் சொல்வதைக் கேளுங்கள் :—

1. अकामस्य क्रिया काचिद् दृश्यते नेह कर्हिचित्।
 यद्यद्धि कुरुते किञ्चित् तत्तत्कामस्य चेष्टितम्॥ (மனு. 2-4)

விருப்பமின்றி வினையில்லை. செயல்களெல்லாம் விருப்பத்தின் விளைவே.

2. आचारः परमो धर्मः श्रुत्युक्तः स्मार्त्त एव च।
 तस्मादस्मिन्सदा युक्तो नित्यं स्यादात्मवान् द्विजः॥ 1॥

3. आचाराद्विच्युतो विप्रो न वेदफलमश्नुते ।
आचारेण तु संयुक्तः संपूर्णफलभाग्भवेत् ॥ 2 ॥
(மனு-1-108, 109)

வேதம் ஸ்மிருதி சம்மதமான ஆசார சீலனாயிருப்பதே கற்றல் கேட்டலின் பயனாகும். ஆசாரமே பரம தர்மம். ஆதலால் அறிவாளி எப்போதும் ஆசார சீலனாயிருக்க வேண்டும். (1)

ஆசாரமில்லாத அந்தணன் வேதத்தின் பலனை அடைவதில்லை. தர்மாசரணமுள்ளவன் வேதத்தின் முழுப் பயனையும் அடைகிறான். (2)

4. योऽवमन्येत ते मूले हेतुशास्त्राश्रयाद् द्विजः ।
स साधुभिर्बहिष्कार्यो नास्तिको वेदनिन्दकः ॥ (மனு-2-11)

வேதத்தையும் அதை ஆச்ரயிக்கும் ஆப்தர்கள் அருளிய சாஸ்திரத்தையும் அவமதிப்பவன் நாஸ்திகன், வேதநிந்தகன். அவனை நல்லோர் ஜாதி, பந்தி, தேசத்திலிருந்தும் அவனை விலக்கவேண்டும். ஏனெனில்:—

5. वेदः स्मृतिः सदाचारः स्वस्य च प्रियमात्मनः ।
एतच्चतुर्विधं प्राहुः साक्षाद्धर्मस्य लक्षणम् ॥ (மனு-2 12)

வேதம், ஸ்மிருதி, வேத சம்மதமான மனுஸ்மிருதி போன்ற சாஸ்திரம், ஸதாசாரம் (வேத ஒழுக்கம்), ஆத்ம திருப்திதரும் சத்தியம்—இந்த நான்குமே தர்மத்தின் லக்ஷணம் என்பர். பக்ஷபாதமில்லாமல், நியாயமாக, உண்மையை நேர்மையாக உணர்த்தும் வேதாதிகளே தர்மமாம். அவற்றிற்கு எதிரிடையாக பக்ஷபாதமும், அநியாயமும், அசத்தியமுங் கொண்டவை அதர்மமாகும். அவற்றை விலக்கவேண்டும்.

6. अर्थकामेष्वसक्तानां धर्मज्ञानं विधीयते ।
धर्मं जिज्ञासमानानां प्रमाणं परमं श्रुतिः ॥ (மனு-2-13)

பொருளா (அர்த்தம்)சையும், காம வெறியு மில்லாத மனிதனே தர்ம ஞானத்தை அறிகிறான். அவனே அறவோன். தர்மத்தை அறிய விரும்புவோருக்கு வேதமே உயர்ந்த சுருதிப் பிரமாணமாகும்.

இம்மாதிரியே ஆசாரியர் தமது சீடருக்கு உபதேசம் செய்க.

## எல்லாரும் கற்கட்டும்

அரசர், மற்ற க்ஷத்திரியர், வைசியர், உத்தம சூத்திரர் முதலிய வர்களுக்கு அவசியம் கல்வி புகட்டுக. கல்வி பிராமணனுக்கு மட்டும் உரித்தன்று. பிராமணனுக்கு மட்டும் கல்வி, மற்றவருக் கில்லை யென்றால், அறிவு, தர்மம், ராஜ்யம், தனம் முதலியவை அபிவிருத்தி யடையா. ஏனெனில் பிராமணன் படித்தும், படிப்பித் தும், க்ஷத்திரியாதிகளிடம் பொருள் பெற்றுப் பிழைத்தலையே தொழிலாகக் கொண்டவன். அந்தணர் அறவோர்; அவர்கள் க்ஷத்திரியாதிகளின் அச்சமின்றி வாழவேண்டும். க்ஷத்திரியர் களுக்கு நல்ல கல்வி யில்லாவிட்டால் நீதியறியாமல், முரட்டுத்தன மாக நடப்பார்கள். சரியான கட்டுப்பாடின்றி, கண்டிப்பின்றி மற்றவர்களும் கெடுவார்கள். நல்ல கல்வி யிருந்தால் பொய் விவகாரங்களை நம்பி ஏமாறாமல், மனம் போனபடி நடக்காமல், உண்மையறிந்து நடப்பார்கள். பிராமணருடைய உபதேசங் களும் அறிவும் அவர்களால் உணரப்படும். க்ஷத்திரியாதிகள் நல்ல கல்வி கற்றால், பிராமணர்களும் அதற்குமேல் அறிவை வளர்த்து, இன்னும் தீவிரமாக அறநெறியில் ஒழுகுவார்கள். அப்போது அவர்கள் சுயநலப் பொய் நடையால், பாசாங்கால் பிறரை ஏமாற்ற முடியாது. ஆதலால் பிராமணர் தங்கள் நலத் திற்காகவே அறிவு, அறம், அரசியல், பொருட் கலைகளை வளர்க்கும் வேதாதி சத்திய சாஸ்திரங்களை க்ஷத்திரியாதிகளுக்கு அதிகமாகப் புகட்ட வேண்டும். அவர்கள் பிக்ஷையால் ஜீவிப்ப தில்லையாதலால் அறிவுத்துறையில் பக்ஷபாதமாக நடக்க மாட்டார்கள். எல்லா வகுப்பினரும் கற்றிருந்தால், பொய்ப் பாசாங்கு, மோசடி விவகாரங்களுக்கு ஒருவரும் துணிய மாட்டார். இதனால் எல்லா வர்ணங்களிலும் ஆண், பெண் அனைவரும் அவசியம் கற்கவேண்டும். அவர்களிடையே தர்மப் பிரசாரம் பலமாக நடக்கவேண்டும்.

### சத்திய பரீக்ஷை

படிப்பதையோ போதிப்பதையோ அடியில் வரும் ஐந்து விதமாகப் பரீக்ஷை செய்துகொள்ள வேண்டும் :—

1. எதெது வேதத்திற் கநுகூலமாக, இறைவன் குணம், கர்மம், சுபாவாதிகளை விளக்குமோ, அது உண்மை. அதற்கு எதிரானது பொய்.

2. இயற்கை நெறிக்கு ஒத்தவை உண்மை; மற்றவை பொய். உதாரணமாக மாதா பிதாக்களின் சேர்க்கை யில்லாமல் குழந்தை பிறந்தது என்னும் கட்டுக் கதை பொய். அது இயற்கைக்கு விரோதமானது.

3. அறவோரும், அறிஞரும், மெய்யரும், கரவற்றவருமான ஆப்தர், சீரியர் உபதேசங்களும், அவற்றுடன் ஒத்தவையும் உண்மை. அவற்றிற்கு எதிரானவை பொய்.

4. தனக்கு ஆத்ம சுத்தியும், அறிவு வளர்ச்சியும் தருபவை; அதாவது தனக்கு சுகம், பிரியம், துக்கம் வெறுப்பாயிருப்பது போலவே, எல்லாருக்கும் இருக்கும் ஆதலால், பிறருக்கு இன்னலின்றி இன்பமாக நடக்கவேண்டு மென்றுணர்த்துவன மெய் நூல்கள்; மற்றவை பொய்.

5. பிரத்யக்ஷம், அனுமானம், உபமானம், சப்தம், ஐதிஹ்யம், அர்த்தாபத்தி, ஸம்பவம், அபாவம்- ஆகிய எட்டு பிரமாணங்களால் ஒன்றை நிதானித் தறிக. நியாய சாத்திரத்தின் முதல் இரண்டத்தியாய சூத்திரங்களைக் கொண்டு இவற்றை விளக்குவோம்.

1. பிரத்யக்ஷம் :—

(१) इन्द्रियार्थसन्निकर्षोत्पन्नं ज्ञानमव्यपदेश्यमव्यभिचारि व्यवसायात्मकं प्रत्यक्षम् ॥

(நியாயசூத்திரம் 1-1-4)

ஐந்து புலன்களாலும் உற்றுணவதாம். கண்ணால் ஒளி; காதால் ஓசை, மூக்கால் மணம், நாவால் சுவை, உடலால் ஸ்பரிசம் அறிகிறோம். இப்புலனறிவு மனத்தில் சுழன்று ஆத்ம ஸம்யோகத்தால் அறிவாகிறது. இது நேரறிவு, பிரத்யக்ஷப்பிரமாணம். இது பொருளையே குறிக்கும்; பொருளின் பெயர் மட்டும் பிரமாணமன்று. உதாரணமாக ஜலம் என்ற மொழி பிரத்யக்ஷமன்று. ஒருவனை ஒருவன் தாகத்திற்கு ஜலம் கொண்டு வா, என்கிறான். அவன், 'இதோ ஜலம்', என்று கொண்டு வந்து வைக்கிறான். நாம் காணும் அந்த ஜலமே பிரத்யக்ஷப்பிரமாணம். ஜலம் என்ற வார்த்தை நான்காவதான சப்தப் பிரமாணமாகும். இந்த ஞானம் மாறுதலா யிருக்க வேண்டும். இராத்திரி ஒன்றைக் கண்டு, மனிதன் என்றெண்ணி, பகலில் அதுவே தூண் என்றால் அது பிரத்யக்ஷமாகாது.

மனிதனென்று எண்ணி நூனுக மாறும்படியாயிருக்கும் அறிவுக்கு அவ்யபிசாரி ஞானம் எனப்படும். மாரு அறிவு, உறுதியான பொருளறிவுதான் பிரத்யக்ஷம். அது நிச்சயஞானம். இதுவோ அதுவோ என்ற ஐயமில்லாதது; அதாவது "வ்யவஸாயாத்மகம்" என்ருல் நிச்சயமானது. உதாரணமாக, தூரத்தில் ஓர் ஆற்ருேட்டத்தைக் கண்டு, அது ஆரு அல்லது யாராவது வெள்ளேத் துணி உலர்த்தியிருக்கிருர்களா, என்பது; அதோ நிற்பது தேவதத்தனு, யக்ஞதத்தனு, என ஐயுறல் பிரத்யக்ஷமன்று. பிரத்யக்ஷஞானம் கண்ணுக்கு மெய்யாக (அவ்யபதேஸ்ய), தெளிவாக (அவ்யபிசாரி) நிச்சயமாக அறிவதாகும்.

**2. அனுமானம் :—**

अथ तत्पूर्वकं त्रिविधमनुमानं पूर्ववच्छेषवत्सामान्यतो दृष्टञ्च ॥

(நியாயசூத்திரம் 1-1-5)

தெரிந்த ஒன்ருல் தெரியாத ஒன்றை, கால தேசத்தில் நடந்த ஒன்ருல், தூரத்திலிருந்து பாராமலே மற்ருென்றை ஊகித்தறிதலே அனுமானமாம். உதாரணமாக ஒரு பிள்ளேயைக் கண்டால் தகப்பன் நினைவு வருகிறது. மலேமேல் புகையைக் கண்டால் தீயும் இருப்பதை அறிகிருேம். உலகின் மக்கள் படும் இன்ப துன்பங்களேக் கண்டு இவை முன் வினைப் பயன் என்பதை ஊகிக்கிருேம்.

அனுமானம் மூன்று வகைப்படும்:— (1) பூர்வ வத் அனுமானம்: மேகத்தைப் பார்த்து மழையை, கலியாணத்தைப் பார்த்து மக்கட் பேற்றை, படிக்கும் மாணவரைப் பார்த்து அவர்கள் வித்வான்களாவதை ஊகிப்பது போல், ஒரு காரணத்தைக் கொண்டு காரியத்தை ஊகிப்பது (2) சேஷவத் அனுமானம்: காரியத்திலிருந்து காரணத்தை ஊகிப்பது. உதாரணமாக ஆற்று வெள்ளத்தைக் கண்டு நல்ல மழை பெய்திருப்பதையும், குழந்தையைக் கண்டு தந்தையையும், சிருஷ்டியுலகைக் கண்டு அதன் அனுதி காரண கர்த்தாவான இறைவனிருப்பதையும், பாப புண்ணியங்களேக் கண்டு சுகதுக்க ஞானத்தையும் ஊகிக்கிருேம். (3) ஸாமான்ய த்ருஷ்டானுமானம்: காரிய காரண சம்பந்தமின்றி இரண்டிற்கும் ஒரு பொருத்தமிருப்பதைக் கொண்டு ஊகிப்பது. உதாரணமாக இரண்டு இடங்கள் இருக்கின்றன. ஒருவன் முதலிடத்தி லிருந்து நகர்ந்தாலே இரண்டாம் இடத்திற்குச் செல்வான். அவன் இரண்டாம்

இடத்தில் இருப்பதைக் கண்டால், முதலிடத்திலிருந்து நகர்ந்திருப்பதை ஊகிக்கிறோம்.

அனுமானம் என்றால் :—

" प्रत्यक्षस्य पश्चान्मीयते ज्ञायते येन तदनुमानम् " ।

அனுமானம் பிரத்யக்ஷத்திலிருந்தே ஊகிக்கப்படுவன. புகையைக் கண்ணுரக் கண்டே நெருப்பை ஊகிக்கிறோம்.

3. உபமானம் :—

प्रसिद्धसाधर्म्यात्साध्यसाधनमुपमानम् ॥ (நியாய சூத். 1-1-6)

இது போல் அது என்றதும், அதை உவமையால் ஊகித்துக் கண்டுபிடிப்பதே உபமானப் பிரமாணமாகும். उपमीयते येन तदुपमानम्— இஃது உபமானத்திலிருந்து உபமீயத்தைக் காண்பது. எஜமான் சேவகனிடம் "விஷ்ணுமித்திரனை அழைத்து வா" என்கிறான். "அவனை நான் என்றும் கண்டதில்லையே" என்றான் சேவகன். "அவன் இந்த தேவதத்தனைப் போலவே யிருப்பான்" என்கிறான் எசமான். அந்த அடையாளத்தை வைத்துக் கொண்டு, சேவகன் தேவதத்தனைப் போன்ற ஒரு ஆளைச் சந்திக்கிறான். அவனே விஷ்ணுதத்தன். அவனை அழைத்து வருகிறான். 'சடை எருமை, எருமைக்கடா மாதிரியிருக்கும்,' என்றால், காட்டில் அதைப் போலக் காணும் மிருகத்தை அடையாளம் கண்டுபிடிக்கிறான் ஒருவன்.

4. சப்தப்பிரமாணம் :—

आप्तोपदेशः शब्दः ॥ (நியாய சூத். 1-1-7)

பூர்ண வித்வான், தர்மாத்மா, பரோபகாரப் பிரியன், சத்திய வாதி, ஜிதேந்திரிய புருஷன், தன்னை யறிந்தவன், ஆத்மசுகி, சர்வாத்ம சமரஸன், தான் அடைந்த இன்பத்தை எல்லாரும் அடையும்படி எல்லாரிடமும் அன்பு கொண்டு உபதேசிப்பவன், பார்முதல் பரமன் வரையிலுள்ள ஞான மறிந்து உபதேசிப்பவன் ஆப்தன். பரிபூர்ண ஆப்தனான இறைவன் அருளிய வேத தர்மத்தை உபதேசிப்பவன் ஆப்தன். அவன் சொல்லும், பரிபூர்ண ஆப்தனான இறைவன் அருளிய வேதமும் சப்தப் பிரமாணமாகும்.

5. ஐதிஹ்யப் பிரமாணம் :

न चतुष्ट्वमैतिह्यार्थापत्तिसम्भवाभावप्रामाण्यात् ॥

(நியாயசூத். 2-2-1)

ஒருவனது ஜீவன சரித்திரம், இதிகாசம், அவன் இப்படியிருந்தான் இப்படிச் செய்தான் என்று அது வர்ணிக்கும். பூர்வ இதிகாசத்தைக் கொண்டே தற்காலப் பிரச்சினைகளையும் தீர்க்கலாம். இதிகாசங்களிலிருந்து கண்டுகொள்வதே ஐதிஹ்யப் பிரமாணம்.

6. அர்த்தாபத்தி :

"अर्थादापद्यते सा अर्थापत्तिः" केनचिदुच्यते "सत्सु घनेषु वृष्टिः सति कारणे कार्यं भवति" इति। किमत्र प्रसज्यते? असत्सु घनेषु वृष्टिरसति कारणे च कार्यं न भवति ॥

ஒரு உண்மையிலிருந்து முடிவுகட்டுவது. உதாரணமாக மேகத்திலிருந்து மழை பொழிகிறது, என்றால் மேகமின்றி மழையில்லை என்றறிகிறோம். காரணத்திலிருந்து காரியம் வருகிறதென்றால் காரணமின்றிக் காரியமில்லை என்பதை அறிகிறோம்.

7. ஸம்பவம் : "सम्भवति यस्मिन् स सम्भवः" இது நடந்திருக்கும் என்று உறுதிகொள்வது. இயற்கைக்கு அனுகூலமான நடப்பே ஸம்பவம். தாய் மகவைப் பெற்றாள் என்பது ஸம்பவம். மாதா பிதாக்களின்றிக் குழந்தை பிறந்தது, இன்னான் செத்தாரை எழுப்பினான், மலையைத் தூக்கினான், கடலில் கல்லை மிதக்க விட்டான், சந்திரனைத் துண்டு துண்டாக உடைத்தான், பரமேசன் (நரயோனியில்) அவதரித்தான், மனிதனுக்குக் கொம்பு முளைக்கக் கண்டான், மலடி மகனுக்கும் மகளுக்கும் மணம் நடந்தது—இப்படிப்பட்ட புளுகுகளெல்லாம் இயற்கை விதிக்கு விரோதமானவை. இவை அஸம்பவம்.

8. அபாவப் பிரமாணம் : न भवन्ति यस्मिन्—सोऽभावः ॥ இல்லாததைக் கொண்டு இருக்குமிடம் காணல். "யானையைக் கொண்டு வா" என்கிறான் எசமான். சேவகன் யானைக் கொட்டாரத்தில் பார்க்கிறான். இல்லை. ஆதலால் வேறிடத்தில் இருக்கவேண்டுமென்று ஊகித்துத் தேடிக் கொண்டு வருகிறான்.

எட்டுப் பிரமாணங்களையும் இங்கே சுருங்கக் கூறினோம். சப்தத்தை ஐதிஹ்யத்திலும், அனுமானத்தில் அர்த்தா

பத்தியையும், ஸம்பவம், அபாவம் ஆகியவற்றையும் சேர்த்து விட்டால், பிரமாணங்களை நான்கில் அடக்கலாம்.

இவ்வாறு ஐந்து வகையாகப் பரீக்ஷை பண்ணியே ஒன்றில் மெய் பொய்யை அறிய வேண்டும்.

## திரவிய ஞானம் (பொருளறிவு)

धर्मविशेषप्रसूताद् द्रव्यगुणकर्मसामान्यविशेषसमवायानां पदार्थानां साधर्म्यवैधर्म्याभ्यां तत्त्वज्ञानान्निःश्रेयसम् ॥ (வைசேஷிகம்—1-1-4)

அறநெறி நடந்து, தூய்மை யுற்ற மனிதன், பொருள்களின் தன்மை, செயல், ஸாமான்யம், பொதுமை, சிறப்பு, ஒப்புமை ஆகியவற்றைத் தன் சொரூப ஞானத்தால் அறிந்து, அவற்றின் காரண காரியங்களை உணர்ந்து கையாண்டு மோட்ச மடைகிறான்.

पृथिव्यापस्तेजोवायुराकाशं कालो दिगात्मा मन इति द्रव्याणि ॥

(வைசேஷிகம்—1-1-5)

மண், நீர், தீ, காற்று, ஆகாயம், காலம், திசைகள், ஆத்மா, மனம் ஆகியவை நவதிரவியங்கள், ஒன்பது பொருள்கள்.

क्रियागुणवत्समवायिकारणमिति द्रव्यलक्षणम् ॥

(வைசேஷிகம்—1-1-15)

"क्रियाश्च गुणाश्च विद्यन्ते यस्मिंस्तत् क्रियागुणवत्" கிரியையும் குணமும், அல்லது குணம் மட்டும் கொண்டவை பொருளாம். மண், நீர், தீ, வாயு, மனம், ஆத்மா ஆகிய இந்த ஆறு திரவியமும், கிரியையும் குணமும்கொண்டவை. ஆகாசமும், காலம், திசை ஆகிய மூன்றும் கிரியை யில்லாக் குணப் பொருள்கள். (ஸமவாயி) "समवेतुं शीलं यस्य तत् समवायि, प्राग्वृत्तित्वं कारणं समवायि च तत् कारणं च समवायिकारणम्." "लक्ष्यते येन तल्लक्षणम्." ஒன்றுக்கொன்று கலக்கும் குணமுள்ள பொருளுக்கு ஸமவாயி எனப்படும். பொருள்கள் காரண காரியங்களாற் கலந்து காணும். அப்படி சேருவதற்கு, பூர்வகாலத்திலிருக்கிற காரணத்திற்கு ஸமவாயி காரணம் எனப்படும். அவைகளால் இலக்ஷியம் அறியப்படும். எப்படி கண்களினால் உருவத்தின் அறிவு புலப்படுமோ. எதனால் இலட்சியத்தை அறியமுடியுமோ அதற்கு இலக்ஷண மெனப்படும்.

ஒன்பது பொருள்களையும் விளக்குவோம். இங்கே சொல்லப் பட்டவை யெல்லாம் வைசேஷிக சாத்திரம் முதல் இரண்டு அத்தியாயங்களில் அடங்கியவையாம்.

பிருதிவி அல்லது மண் :

रूपरसगन्धस्पर्शवती पृथिवी ॥ (வைசேஷிகம் 2-1-1)

உருவம், சுவை, மணம், பரிசங்களுடன் கூடியது பிருதிவி. அவற்றுள் உருவமும், சுவையும், ஸ்பரசமும், அக்னி, ஜலம் வாயுவின் சேர்க்கையால் எழுவன.

व्यवस्थितः पृथिव्यां गन्धः ॥ (வைசேஷிகம் 2-2-2)

மண்ணிற்கு மணம் இயற்கையாம். அதே மாதிரி நீருக்குச் சுவை, தீக்கு உருவம், காற்றுக்கு ஸ்பரிசம், ஆகாசத்திற்கு சப்தம் இயற்குணங்களாம்.

ஆபஸ் (நீர்) :

रूपरसस्पर्शवत्य आपो द्रवाः स्निग्धाः ॥ (வைசேஷிகம் 2-1-2)

உருவம், ரசம், பரிசத்துடன் கூடியது திரவம், நீர். ரசமே அதன் இயல்பு. உருவமும் பரிசமும் அக்னி வாயு சம்பந்தத்தால் உண்டாவன.

अप्सु शीतता ॥ (வைசேஷிகம் 2-2-5)

ஜலத்திற்கு சீதள குணம் இயல்பு.

தேஜஸ் அல்லது தீ :

तेजो रूपस्पर्शवत् ॥ (வைசேஷிகம் 2-1-3)

தீ உருவமும், ஸ்பரிசமும் கொண்டது. அதற்கு உருவம் இயற்கை. ஸ்பரிசம் வாயுவின் சேர்க்கையால் வருவது.

வாயு :

स्पर्शवान् वायुः ॥ (வைசேஷிகம் 2-1-4)

ஸ்பரிச குணமுடையது வாயு. இதிலும் வெப்பம் குளிர், தீ, நீர் சேர்க்கையால் வரும்.

ஆகாசம் :

त आकाशे न विद्यन्ते ॥ (வைரசஷிகம் 2-1-5)

ஆகாசத்தில் ரூப, ரச, கந்த ஸ்பர்சாதிகள் இல்லை. சத்தமே அதன் குணம்.

निष्क्रमणं प्रवेशनमित्याकाशस्य लिङ्गम् ॥ (வைசேஷிகம் 2-1-20)

மூச்சாக உள்ளே சென்று வருவதால் ஆகாசம் உணரப் படுகிறது.

कार्यान्तराप्रादुर्भावाच्च शब्दः स्पर्शवतामगुणः ॥

(வைசேஷிகம் 2-1-25)

மண் முதலியவற்றின் காரியங்களும், ஸ்பர்சாதி தன் மாத்திரைகளும் ஆகாசத்திற் கில்லை. அது சப்த மாத்திரமே யாகும். சப்தமும் ஆகாசத்திலேதான் உண்டு. மற்றவற்றி லில்லை. காற்றில்லாத இடத்தில் மணி ஒலிக்காது.

காலம் :

अपरस्मिन्नपरं युगपच्चिरं क्षिप्रमिति काललिङ्गानि ॥

(வைசேஷிகம் 2-2-6)

இறந்தகாலம், நிகழ்—வருங்காலம், ஒருமுறை (யுகபத்), மந்தம் (சிரம்), தீவிரம் (க்ஷிப்ரம்) என்று காலத்தைக் குறிப்பர்.

नित्येष्वभावादनित्येषु भावात्कारणे कालाख्येति ॥

(வைசேஷிகம் 2-2-9)

காலம் நித்தியபதார்த்தங்களில் அன்றி அநித்திய பதார்த்தங் களில் ஆக்கமுடையது. ஆகவே காலமே காரணம்; அதுவே பலனளிப்பது.

திசை :

इत इदमिति यतस्तद्दिश्यं लिङ्गम् ॥ (வைசேஷிகம் 2-2-10)

திசை என்பது இப்புறம், அப்புறம், வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு, மேல், கீழ் என்று இடங் குறிப்பதாகும்.

आदित्यसंयोगाद् भूतपूर्वाद् भविष्यतो भूताच्च प्राची ॥

(வைசேஷிகம் 2-2-14)

சூரியன் உதிக்கும் பக்கமே கிழக்கு; அஸ்தமிக்கும் பக்கம் மேற்கு. கிழக்கே திரும்பி நிற்கும் மனிதனுக்கு வலதுகைப் பக்கம் தெற்கு, இடதுகைப் பக்கம் வடக்காகும்.

एतेन दिगन्तरालानि व्याख्यातानि ॥ (வைசேஷிகம் 2-2-16)

தென்கிழக்கு ஆக்னேய திசை, தென்மேற்கு நைஸ்ருதி, வட மேற்கு வாயவி திசை, வடகிழக்கு ஈசானிய திசை எனப்படும்.

## மனோமய ஜீவன்

इच्छाद्वेषप्रयत्नसुखदुःखज्ञानान्यात्मनो लिङ्गमिति ॥

(ந்யாயசூத் 1-10)

விருப்பு, (இச்சா) வெறுப்பு, (த்வேஷ) முயற்சி, (ப்ரயத்ன) இன்பம் துன்பம், (சுக: துக்க) அறிவு (ஜ்ஞானம்) ஆகிய உணர்ச்சி பெற்றது மனம் அல்லது லிங்கசரீரம். வைசேஷிகம் மனோமய ஆத்மாவை இவ்வாறு வர்ணிக்கிறது.

प्राणाऽपाननिमेषोन्मेषजीवन मनोगतीन्द्रियान्तर्विकाराः
सुखदुःखेच्छाद्वेषप्रयत्नाश्चात्मनो लिङ्गानि ॥ (வைசேஷிகம் 3-2-4)

பிராண (வாயுவை உட்கொள்ளுதல்), அபானன் (உள் வாயுவை வெளிவிடுதல்), இமைத்தல் (நிமேஷ), கண்களை மேற்புறம் செலுத்தல் (உன்மேஷ), உயிர்த்தல், (ஜீவன்) நினைத்தல் (மனஃ) அல்லது உள்ளுணர்ச்சி (ஞானம்), நடத்தல் (கதி), இந்திரியங்களை விஷயங்களில் செலுத்தி அறிதல் பசி, தாகம், ஜுரம், பீடை ஆதி விகாரங்களை பெறுதல் (அந்தர்விகார), இன்பதுன்பம், விருப்பு வெறுப்புக்கள், முயற்சிகளை நடத்தல் எல்லாம் (ஆத்மலிங்கம்) ஜீவாத்மாவின் குணகர்மமும் குறியுமாகும்.

युगपज्ज्ञानानुत्पत्तिर्मनसो लिङ्गम् ॥ (ந்யாயசூத் 1-1-16)

ஒரே காலத்தில் இருபொருள்களை அறியமுடியாதது எதுவோ அதை மனம் என்பார்கள்.

பொருளின் குணம் :

रूपरसगन्धस्पर्शाः संख्यापरिमाणानि पृथक्त्वं संयोगविभागौ
परत्वाऽपरत्वे बुद्धयः सुखदुःखे इच्छाद्वेषौ प्रयत्नाश्च गुणाः ॥

(வைசேஷிகம் 1-1-6)

உருவம், ரஸம், கந்தம், ஸ்பரிசம், எண், அளவு, தனிமை, சேர்க்கை, பகுப்பு, பரத்வம், அபரத்வம், புத்தி. சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, திடம், திரவம், சிநேகம், ஸம்ஸ்காரம், தருமம், அதருமம், சத்தம் ஆகிய இருபத்து நான்கும் பொருட் குணமாகும்.

द्रव्याश्रयगुणवान् संयोगविभागेष्वकारणमनपेक्ष इति गुणलक्षणम्

(வைசேஷிகம் 1-2-16)

ஒரு பொருளைச் சார்ந்தது, தனக்கெனத் தன்மையுள்ளது. மற்றொரு குணத்தினின்று தனித்துள்ளது. பகுப்பு, தொகுப்புக்களுக்குக் காரணமாகாதது—அதுவே குண மெனப்படும்.

श्रोत्रोपलब्धिर्बुद्धिनिर्ग्राह्यः प्रयोगेणाऽभिज्वलित आकाशदेशः शब्दः ॥

(மகாபாஷ்யம்)

"சப்தம் என்பது காதால் வாங்கி, புத்தியால் ஏற்கப்பட்டு, வாக்கினுல் விளக்கி, ஆகாசத்தில் இடங்கொண்டது" என்கிறது மகாபாஷ்யம்.

கண்ணுல் காண்பது உருவம், நாவால் உணர்வது (ரஸம்) சுவை, மூக்கால் முகர்வது (கந்தம்) மணம். தோலால் உணர்வது ஸ்பரிசம், ஒன்று இரண்டு என்று எண்ணக்கூடியது எண், கனம் லேசு என்று அளந்தறிவது பரிமாணம் (அளவு), வெவ்வேருயிருப்பது (ப்ரதக்த்வம்) தனிமை, ஒன்றிலொன்று சேர்ந்திருப்பது ஸம்யோகம் அல்லது சேர்க்கை, பல துண்டாகப் பிரிவது விபாகம் (பகுப்பு), ஒன்றனும் உயர்ந்தது பரம் (மேல்), தாழ்ந்தது அபரம் (கீழ்), நலந் தீதறிவது பகுத்தறியும் புத்தி, சுகம் ஆனந்தம், துக்கம் கிலேசம், விருப்பு ராகம், (இச்சை), வெறுப்பு, துவேஷம், புருஷார்த்தத்திற்காகப் பல முயற்சிகளைச் செய்வது பிரயத்னம், கனமாயிருப்பது குருத்வம், லேசாயிருப்பது லகுத்வம், நீராயிருப்பது திரவத்வம், அன்புடன் ஒட்டுறவா யிருப்பது சிநேகத்வம், இன்னொன்றின் சேர்க்கையால் வரும் கர்ம வாஸனையே ஸம்ஸ்காரம், நியாய வைராக்கியமே தருமம், அநியாயம் செய்தல் அதர்மம். இவை பொருளின் இருபத்துநான்கு குண விளக்கமாம்.

उत्क्षेपणमवक्षेपणमाकुञ्चनं प्रसारणं गमनमिति कर्माणि ॥

(வைசேஷிகம்—1-1-7)

ஏற்றம் (உத்க்ஷேபணம்), இறக்கம் (அவக்ஷேபணம்), சுருக்கம் அல்லது சங்கோசம் (ஆகுஞ்சனம்), விரிவு (ப்ரஸாரணம்), போக்கு வரவு, சுற்றல் (கமனம்) இவை கருமங்கள்.

एकद्रव्यमगुणं संयोगविभागेष्वनपेक्षकारणमिति कर्मलक्षणम् ॥

(வைசேஷிகம்—1-1-17)

"एकद्रव्यमाश्रय आधारो यस्य तदेकद्रव्यं न विद्यते गुणो यस्य यस्मिन् वा तद् गुणं संयोगेषु विभागेषु चापेक्षारहितं कारणं तत्कर्म-

लक्षणम् ।'' अथवा ''यत् क्रियते तत्कर्म, लक्ष्यते येन तल्लक्षणम्, कर्मणो लक्षणं कर्मलक्षणम्'' ॥

பொருளின் குண மின்லாமல் அது சேரவும் பிரியவும் காரணமாயிருப்பது கர்ம லக்ஷணமாகும்.

द्रव्यगुणकर्मणां द्रव्यं कारणं सामान्यम् ॥ (வைசேஷிகம்—1-1-18)

பொருளின் குண கர்மத்திற்குக் காரணமா யிருப்பது ஸாமான்ய திரவியமாகும்.

द्रव्याणां द्रव्यं कार्यं सामान्यम् ॥ (வைசேஷிகம்—1-1-23)

திரவியங்களின் காரியமான பொருள் சாமான்ய காரிய திரவியமாகும்.

द्रव्यत्वं गुणत्वं कर्मत्वञ्च सामान्यानि विशेषाश्च ॥
(வைசேஷிகம்—1-2-5)

திரவியங்களில் திரவியத்வம், குணங்களில் குணத்வம், கர்மங்களில் கர்மத்வம்—இவற்றில் ஸாமான்யம் விசேஷம் என்று இரண்டுண்டு. ஏனெனில், திரவியங்களில் திரவியத்வம் ஸாமான்யம்; ஆனல் குண கர்மங்களில் திரவியத்வம் விசேஷம்.

सामान्यं विशेष इति बुद्ध्यपेक्षम् ॥ (வைசேஷிகம்—1-2-3)

ஸாமான்யம், விசேஷம்—இவை இரண்டும் புத்தி அபேக்ஷை யால் உண்டாகின்றன. உதாரணமாக மனிதருக் கெல்லாம் மனிதத் தன்மை சாதாரணமாகும். ஆனல் மிருகத் தன்மையினும் அது விசேஷமாகும் ஆண்மை, பெண்மை என்பது ஸாமான் யமே; ஆனல் பிராமணன் க்ஷத்திரியன் வைசியன் என்ற வகுப்பை நோக்கினல் விசேஷமாகிறது. இதேமாதிரி அனைத் திலும் பொதுவும் (ஸாமான்யமும்) சிறப்பும் (விசேஷமும்) அறிக.

इहेदमिति यतः कार्यकारणयोः स समवायः ॥
(வைசேஷிகம்—7-2 26)

உறவுகளிற் பலவகையுண்டு. உறுப்பில் உறுப்பும் (கையில் விரல்போல), காரியமும் கர்த்தாவும், குணம் குணி, ஜாதி வ்யக்தி, காரியம் காரணம், இவை நித்திய ஸம்பந்த முடையவை. இப்பிரியா உறவிற்கே ஸமவாய ஸம்பந்தம் என்று பெயர்.

வெவ்வேறான பொருள்களின் கூட்டுறவிற்கு ஸம்யோகம் என்று பெயர். அது அநித்திய ஸம்பந்தம், எப்பொழுதும் பிரியத் தக்கது.

द्रव्यगणयोः सजातीयारम्भकत्वं साधर्म्यम् ॥

(வைசேஷிகம்—1-1-6)

ஒரே ஜாதியும் ஒத்த தன்மையும் கொண்டு பல வடிவாகக் கூடியது ஸாதர்மியம் எனப்படும். உதாரணமாக மண்ணும் நீரும் பூதங்கள், ஜடவஸ்துக்கள் பல வடிவாகத் தக்கவை. மண்ணைப் பானையாக்கலாம். நீரைப் பனிக் கட்டியாக்கலாம். இந்த விதத்தில் மண்ணும் நீரும் ஸாதர்ம்ய ஸம்பந்தமுடையவை.

ஸாதர்ம்யத்திற்கு எதிரானதன்மை வைதர்ம்யம்.

द्रव्यगुणयोर्विजातीयारम्भकत्वं वैधर्म्यम् ॥

பொருளிலும் குணத்திலும் அது வேறுபட்டது. உதாரணமாக மண் திடப்பொருள்; நீர் திரவப் பொருள். மண் உலர்ச்சியுடையது; மணமுடையது நீர் நிராளமானது, சுவையுடையது. இவ்வகையில் அது மண்ணினின்றும் வேறுபட்ட வைதர்ம்ய ஸம்பந்தமுடையது.

कारणभावात्कार्यभावः ॥ (வைசேஷிகம்—4-1-3)

காரணத்தினின்றே காரியம் உருவாகிறது.

न तु कार्याभावात्कारणाभावः ॥ (வைசேஷிகம்—1-2-2)

காரியத்தின் அபாவத்தால் காரணத்தின் அபாவம் உண்டாவதில்லை.

कारणाऽभावात्कार्याऽभावः ॥ (வைசேஷிகம்—1-2-1)

காரணமின்றிக் காரியமில்லை, காரியம் இல்லா விட்டாலும் காரணம் உண்டு.

कारणगुणपूर्वकः कार्यगुणो दृष्टः । (வைசேஷிகம்—2-1-24)

காரணத்தில் குணம் இருப்பதுபோல் காரியத்திலும் குணமுண்டு. காரணம் குண பூர்வகம். காரியம் குணங் காண்பது.

अणु महदिति तस्मिन्विशेष भावाद्विशेषा भावाच्च ।

(வைசேஷிகம்—7-1-11)

பரிணமம் சிறிது அல்லது சூக்கும (அணு), பெரிது (மகத்து) என்று இருவகை. குண்டுமணி அணுவினும் பெரிது, மாங்

காயினும் சிறிது. மரத்தைவிட மலை பெரிது, ஆனால் அது பூமியைவிடச் சிறிது.

सदिति यतो द्रव्यगुणकर्मसु सा सत्ता ॥ (வைசேஷிகம்—1-2-7)

இருப்பது ஸத்து; திரவியம், குண கர்மங்களுடன் இருக்கும் பொருள் ஸத்து அஃது அனைத்திற்கும் பொது. 'ஸத் த்ரவியம், ஸத்குணம் ஸத்கர்மம்' என்று நிகழ்கால சப்தமாகிய 'ஸத்' வரும்.

भावोऽनुवृत्तेरेव हेतुत्वात्सामान्यमेव ॥ (வைசேஷிகம்—1-2-4)

இவ்வாறு அனைத்துடனும் இயங்கும் இந்த ஸத்து ரூப பாவனையை 'ஸத் மஹாஸாமான்யம்' எனப்படும். அதுவே உள்ள பொருள். இந்த விதி அபாவத்திற்கு (இல் - பொருளுக்கு) இல்லை.

## அபாவம் (அஸத்து) அல்லது இல்-பெருள்

அஃது ஐந்து வகையானது:

क्रियागुणव्यपदेशाभावात्प्रागसत् ॥ (வைசேஷிகம்—9-1-1)

1. ப்ராக்—பாவம் (प्रागभाव) ப்ராக்—முன்னே; செய்யு முன்னே இல்லாதது. உதாரணமாக நெய்யுமுன் ஆடையில்லை; வனையுமுன் பானையில்லை.

2. सदसत् ॥ (வைசேஷிகம்—9-1-2)

ப்ரத்வம் ஸாபாவம் (प्रध्वंसाभाव) செய்யப்பட்டு இருப்பது; ஆனால் உடைந்து நஷ்டமடைவது.—ஒரு பானை உருவாகிறது; ஆனால் உடைந்து உருவழிகிறது. இது ஸதஸத்—உள்ளதில்லதாம்.

3. सच्चासत् ॥ (வைசேஷிகம்—9-1-4)

அன்யோன்ய பாவம்: (अन्योन्यभाव) தன் சம்பந்தப்பட்ட மட்டில் உள்ளது; இன்னொன்றைச் சம்பந்தப் படுத்தும்போது இல்லாதது. ஸச்சாஸத். "अगौरश्वोऽनश्वो गौः" ஒரு பசு உள்ளது; ஒரு குதிரை உள்ளது; பசு பசுவாகவே உள்ளது. அது குதிரையாகாது. குதிரை குதிரையாகவே உள்ளது. பசுவாக இல்லை. பசுவிடம் குதிரை அபாவம்.

4. यच्चान्यदसदतस्तदसत् (வைசேஷிகம்—9-1-5)

அத்யந்த அபாவம் (अत्यन्ताभाव) இருக்கவே முடியாதது. முன் சொன்ன அபாவங்களினின்றும் முற்றிலும் வேறுபட்டது. உதாரணமாக—கொம்பு முளைத்த மனிதன்; ஆகாசத் தாமரை; மலடிமகன்—இவை நிச்சயமாக இல் பொருள்களாம்.

5. नास्ति घटो गेह इति सतो घटस्य गेहसंसर्गप्रतिषेधः ।

(வைசேஷிகம்—9-1-10)

ஸம்ஸர்க ப்ரதிஷேதம் (संसर्ग प्रतिषेधः) ஒரு பொருள் குறித்த இடத்தில் இல்லாதது; வேறிடத்தில் இருப்பது. பானை வீட்டில் இல்லை என்றால் வீட்டிற்கும் அதற்கும் ஸம்பந்தமில்லை, அது வேறிடத்தில் இருக்கிறது என்பதை அறிகிறோம்.

## வித்தையும் அவித்தையும்

इन्द्रियदोषात्संस्कारदोषाच्चाविद्या ॥ (வைசேஷிகம்—9-2-10)

அவித்தை, மடமை இந்திரிய தோஷத்தாலும், ஸம்ஸ்கார தோஷத்தாலும் உண்டாகிறது.

तद्दुष्टज्ञानम् ॥ (வைசேஷிகம்—9-2-11)

அது துஷ்ட விபரீத ஞானம். அறிவீனம் அல்லது அவித்தை, தத்துஷ்ட ஞானம்

अदुष्टं विद्या ॥ (வைசேஷிகம்—9-2-12)

வித்தை என்பது யதார்த்தமான மெய்யறிவு—அதுஷ்டம் வித்யா.

पृथिव्यादि रूपरसगन्धस्पर्शा द्रव्या नित्यत्वादनित्याश्च ॥

(வைசேஷிகம்—7-1-2)

एतेन नित्येषु नित्यत्वमुक्तम् ॥ (வைசேஷிகம்—7-1-3)

காரிய ரூபமான மண், நீர் முதலிய பொருளும், அவைகளிலுள்ள ரூப, ரஸ, கந்த, ஸ்பரிச குணங்களும் அநித்தியம். உதாரணமாக பஞ்ச பூதத்தால் ஆன உடல் மாறி மண்ணுகிறது. இவற்றின் காரண ரூபமான பூமி முதலிய நித்திய பொருள்களின் கந்த முதலிய குணங்கள் நித்தியம்.

सदकारणवन्नित्यम् ॥ (வைசேஷிகம்—4-1-1)

காரணமில்லாமல் எதிலிருந்தும் தோன்றுமல் தானே தானாக நின்று நிலைக்கும் பொருள் நித்தியம். "सदकारणवदनित्यम्" ஒரு காரணங் கொண்டு செய்யப்பெற்றது அநித்தியம்.

அறிவூகம் நான்கு வகைப்படும் :

यस्येदं कार्यं कारणं संयोगि विरोधि समवायि चेति लैङ्गिकम् ॥

(வைசேஷிகம்—9-2-1)

இன்னதற்கு இந்தக்காரியம் அல்லது காரணம் முதலியவை, சமவாயீ, ஸம்யோகீ, ஏகார்த்தஸமவாயீ, விரோதி என்ற நான்குவித இலிங்கலிங்கிகளின் சம்பந்தத்தினால் அறிவு உண்டாகிறது.

விளக்கம்:—

காரணத்திலிருந்து காரியம் அறிவது: ஒருவன் தூரத்தில் கைதட்டுவதைக் கண்டால், சத்தம் உண்டாவதை எதிர்பார்க்கிறோம்.

காரியத்திலிருந்து காரணம் அறிவது—மேற்படி சத்தம் கேட்டதும் அதோ ஒருவர் கைதட்டுகிறார் என்றறிவது.

1. ஸமவாயம் : ஆகாசம் என்றாலே எங்கும் பரவியது என்றறிகிறோம். இவ்வாறு பொருளும் தன்மையும் சமமாகச் சேர்ந்திருப்பது ஸமவாயம். ஸமவாய சம்பந்தம் சூரியனும் கதிர்களும் போலப் பிரிக்கமுடியாத உடனுறவு.

2. ஸம்யோகம் : சேர்ந்திருப்பது ; உடல் என்றாலே தோலுங் கூடத்தான் என்று உடனே உணர்வது.

3. ஏகார்த்த ஸமவாயி : ஒன்றைச் சொன்னால் அப்பொருளின் மற்றச் சிறப்பை அறிவது. ஆரஞ்சுத்தோல் நிறம் பார்த்து இது பழுத்திருக்கிறது, மென்மை, சுவையுள்ளது என்றறிகிறோம்.

4. விரோதி : எதிரிடையானவற்றால் அறிவது. வெளுப்பு என்றால் அதற்கு எதிரிடையான கறுப்பின் நினைப்பு வருகிறது. இனிப்பு என்றால் கசப்பின் நினைப்பும் வருகிறது. பாம்பு படமெடுத்துச் சீறினால், அருகே கீரிப்பிள்ளை அல்லது பகைவர் இருப்பதாக ஊகிக்கிறோம்.

नियतधर्मसाहित्यमुभयोरेकतरस्य वा व्याप्तिः ॥ (ஸாங்க்ய 5-29)

निजशक्त्युद्भवमित्याचार्याः ॥ (ஸாங்க்ய 5-31)

आधेयशक्तियोग इति पञ्चशिखः ॥ (ஸாங்க்ய 5-32)

வியாப்தி என்பது ஒன்றில் மற்றொன்று அவசியம் இருப்பது. புகை என்றால் தீயிருக்கும் ; தீயில்லாது புகையில்லை. ஒன்று

மற்றொன்றை தொடர்கிறது. இரண்டிற்கும் நிலையான சம்பந்த முள்ளது.

ஸாதனத்தால் ஸாத்யம் அறிகிறோம். புகையால் நெருப்பை யறிகிறோம். சில சமயம் சாதனம் தானே தனித்திருப்பதுண்டு. தீயெல்லாம் எரிந்த பிறகும் புகை தானே தனியாகச் சுழன்றுக் கொண்டிருப்பதுண்டு. இதுவும் வியாப்தியே. இப்புகையின் காரணமும் முன் எரிந்த தீ தான்.

ஆதார ஆதேய சம்பந்தமும் வியாப்தியே. சக்தி ஆதேயம், சக்திமான் ஆதாரம். ப்ருத்வியில் புத்தி ஆதாரப்பட்டிருக்கிறது. பெரியதில் சிறியது, உயரத்தில் தாழ்ந்தது ஆதாரப்பட்டிருக் கிறது.

இவையெல்லாம் சாத்திர நியாயக் கோட்பாடுகள். உபாத்தி யாயர் இந்த மாதிரி தர்க்க நியாயரீதியாக ஒவ்வொன்றையும் அலசிப் பார்த்து, மாணவர் உண்மையை அறியச் செய்ய வேண்டும். இன்றேல் அவர்கள் சரியான உண்மையை அறிய முடியாது. இவ்வாறு சோதித்துப் பார்த்து உண்மையெனத் தெளிந்த நூல்களையே மாணவருக்குப் புகட்டவேண்டும். பரீட் சையில் விருத்தமாகத் தோன்றிய நூல்களை அறவே விலக்க வேண்டும்.

लक्षणप्रमाणाभ्यां वस्तुसिद्धिः ॥

இலக்ஷணப் பிரமாணத்தாலேயே பொருளை உறுதி செய்க. "गन्धवती पृथिवी" மண் என்றால் அது மணத்தைத் தன் மாத்தி ரையாகக் கொண்டது என்று நேர்முகமாக அறிகிறோம். இதேபோல் பதார்த்தங்களின் மெய் பொய்யறிந்து கற்றாலே கல்வி முழுப் பயனுமளிக்கும்.

## பாட முறை

இனி படிக்கும் முறையையும், படிப்பிக்க வேண்டிய விதியை யும் அறிவோம்:—

1. பாணினி முனிவர் இயற்றிய சிக்ஷை எழுத்திலக்கணம், உச்சரிப்பு பாணினி இதைச் சூத்திரங்களாக எழுதியிருக்கிறார். இன்ன எழுத்தை இன்ன இடத்தில் இன்ன முயற்சியால் இப்படித் திருத்தமாக உச்சரிக்க வேண்டும் என்று ஆசிரியர் பயிற்றுக. உதாரணமாக, "ப" என்பதை உதட்டில் மூச்சமுத்தி உச்சரிக்க வேண்டும். இந்த மாதிரியே எல்லா எழுத்துக்களின் உச்சரிப் பையும் மாதா, பிதா, ஆசிரியர்கள் கற்பிக்க வேண்டும்.

2. பிறகு இலக்கணம் (வியாகரணம்):—பாணினி வ்யாகரணத்தில் பிரதம அஷ்டாத்யாயி சூத்திரங்களைப் பாடம் பண்ணி வைக்க வேண்டும். உதாரணமாக முதலில் வ்ருத்திராதைச் (वृद्धिरादैच्) என்னும் சூத்திரத்தைச் சொல்லிப் பிறகு, வ்ருத்தி: + ஆத் + ஐச் (वृद्धिः, आत्, ऐच्) அல்லது ஆதைச் என்று பதச்சேதம் செய்க. பிறகு ஆச்ச, ஐச்ச, ஆதைச (आत् च ऐच् च आदैच्) என்று ஸமாஸத்தை கற்பித்து, பிறகு "आदैचां वृद्धिसंज्ञा क्रियते" அதாவது ஆ, ஐ, ஔ முதலியவைகளுக்கு 'வ்ருத்தி' என்ற விரிவுரையும், ஒவ்வொரு மொழியின் சந்தி (புணர்ச்சி) விதிகளையும் இலக்கணப் பொருத்தமும் சொல்லுக. பிறகு தாது பாடமும், பதங்களின் பல பிரயோகங்களையும் சொல்லி சிலேட்டிலாவது காகிதத்திலாவது எழுதிப் பழக்கச் செய்க. சந்தி விகாரங்களில் எந்தெந்தச் சூத்திரங்கள் எதற்குப் பொருந்துமோ அவற்றை உடனுடன் விளக்கிப் பாடம் செய்யச் சொல்ல வேண்டும். பிறகு உணாதி கணபாடம், ஸர்வ ஸுபந்தங்களையும் நன்ருகப் பாடம் பண்ணி, மீண்டும் சங்கா, சமாதானம், வார்த்திகம், காரிகை, பரிபாஷைகளைப் பாடம் சொல்லுக. இவ்வாறு பாணினி அஷ்டாத்யாயின் த்விதீயானு வ்ருத்தியைக் கற்பிக்கலாம். பிறகு பாணினிக்குப் பதஞ்ஜலி எழுதிய மஹாபாஷ்யத்தைத் தொடங்கலாம். பாணினி மஹரிஷி ஆயிரம் சுலோகத்திற்குள், அகில ஸப்தார்த்தங்களையும் இலக்கணங்களையும் விளக்கியிருக்கிருர். பதஞ்ஜலி முனிவர் விரிவுரை எழுதியிருக்கிருர். நல்லறிவாளரான ஆசிரியர் பயிற்றிக் கருத்துள்ள மாணவர் கற்ருல், தினம் அக்கறையாகப் படித்தால், ஒன்றரை ஆண்டில் அஷ்டாத்யாயியும், ஒன்றரை ஆண்டில் மஹபாஷ்யமும் முடித்து, மூன்ருண்டுகளில் வியாகரணப் புலமை நிறைவாகப் பெறலாம். அதனுல் வைதிக, லௌகிக சப்தங்களெல்லாம் நன்கறிந்து, மற்றச் சாத்திரங்களை மிக்க எளிதாகக் கற்கலாம். ஆனுல் மற்ற சாஸ்திரங்களைவிட வியாகரணம் அதிக சிரமமே. மூன்ருண்டுகள் பாணினி படிப்பதின் பயன், ஐம்பதாண்டுகள் ஸாரஸ்வதம், சந்திரிகா, கௌமுதி, மனோரமாதி இலக்கணங்களைப் படித்தாலும் வராது. பெரிய மஹரிஷிகள் பெரிய விஷயங்களை மிகத் தெளிவாகவும் எளிதாகவும் தங்கள் நூல்களில் விளக்கியிருக்கிருர்கள். அற்பமனிதர் அவர்கள் அறிவை அணுக முடியாது. குறைந்த நேரத்தில் சாத்திரத்தை எளிதாக மாணவர் அறிந்து கொள்ளவே அப்பெரியார்கள் நூலெழுதினர். அற்பர்

சுற்றி வளைத்துக் கடின பதங்களைப் போட்டு, படிப்பவருக்கு மிக்க வருத்தத்தைத் தருகின்றனர். மலையைக் கெல்லி ஒரு சல்லி தங்கம் எடுப்பது போலத்தான் அவர்கள் நூலைப்படிப்பது. அருட் புலவர் நூல்களைக் கற்பது அறிவுக் கடலில் ஒரு தரம் ஆழமூழ்கி, விலை யுயர்ந்த முத்துக்களை ஏராளமாக எடுப்பது போலாகும்.

3. வ்யாகரணம் முடிந்த பிறகு, யாஸ்கமுனிவர் இயற்றிய நிகண்டையும் நிருக்தத்தையும் ஆறு அல்லது எட்டு மாதங் களிற் படித்து விடலாம். மற்ற நாஸ்திகர் எழுதிய அமரகோஷா திகளில் காலத்தை வீணாக்காதீர்.

4. பிறகு பிங்கல முனிவர் அருளிய சாந்தோக்ரந்தம், யாப்பிலக்கணம் கற்கலாம். அதில் வைதிக, லௌகிக சந்தங்களை, யாப்பமைதிகளை முற்றிலும் அறியலாம். பிறகு சுயமாகக் கவிப் புனையப் பழகலாம். இதற்கு நான்கு மாதங்கள் போதும். அற்ப வித்வான்கள் எழுதிய விருத்தரத்நாகரம் போன்ற நூல் களைப் பல்லாண்டுகள் கற்றுச் சிரமப்பட வேண்டியதில்லை.

5. பிறகு மனுஸ்மிருதி, வால்மீகி ராமாயணம், பாரதத் திலிருந்து உத்யோக பார்வத்திலுள்ள விதுரநீதி போன்ற பகுதி கள், தீமையை நீக்கி நன்மையை ஆக்கும் உணர்ச்சி தரும் காவி யங்கள்—இவற்றை முறையாகக் கற்கலாம். காவியங்களைப் பதம் பிரித்து, அன்வயித்து, விசேஷ்ய விசேஷணங்களையும் பாவார்த் தங்களையும் நன்குணர்ந்து ஆசிரியர் போதிக்க, மாணவர் கற்க வேண்டும். ஓராண்டில் காவிய இலக்கியத்தை முடித்துவிடுக.

6. பிறகு பூர்வமீமாம்ஸம், வைசேஷிகம், நியாயம், யோகம், ஸாங்க்யம், வேதாந்தம் ஆகிய ஆறு சாத்திரங்களையும், மஹர் ஷிகள் வியாக்யானம் அல்லது உத்தம வித்வான்களின் சரள மான வியாக்யானங்களைக் கொண்டு கற்க வேண்டும். ஆனால் வேதாந்த சூத்திரம் படிப்பதற்கு முன், ஈச, கேன, கட, ப்ரச்ன, முண்டக, மாண்டூக்ய, ஐதரேய, தைத்திரீய, சாந்தோக்ய, பிருஹ தாரண்யகம் ஆகிய பத்து உபநிஷத்துக்களையும் பாஷ்ய விருத்தியுடன் இரண்டு வருஷத்திற்குள் படித்து முடிக்க வேண்டும்.

7. பிறகு, ஆறாண்டுகளுக்குள், ஐதரேயம், சதபதம், ஸாமம், கோபதம், ஆகிய நான்கு பிராமணங்களையும், ருக், யஜுர், ஸாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களையும், ஸ்வரம், சப்தம், அர்த்தம், ஸம்பந்தம், கிரியைகளுடன் படிப்பது

நல்லது. பொருளில்லாமல் பொட்டைப் பாடம் பண்ணுவதில் பயனில்லை.

स्थाणुरयं भारहारः किलाभूदधीत्य वेदं न विजानाति योऽर्थम्।
योऽर्थज्ञ इत्सकलं भद्रमश्नुते नाकमेति ज्ञानविधूतपाप्मा॥

(நிருக்தம்—1-18)

"ஸ்வரத்துடன் வேதத்தை உருத்தானி அர்த்தம் தெரியாதவன், அனுபவிக்க முடியாமல் இலை, பூ, கனி, கிளைகளைப் பாரமாகச் சுமக்கும் மரம் போலும், தான் உண்ண முடியாமல் தானிய பாரம் சுமக்கும் பொதியாடு போலுமாவான். வேதத்தைப் பொருளறிந் தோதியவன், ஞானத்தால் பாவம் விலகி, பூரணனந் தனுகி, எல்லா இன்பங்களையும் பெறுகிறுன். இம்மை மறுமைப் பயன்களை அடைகிறுன்" என்று நிருக்தத்தில் யாஸ்கர் சொல்லுகிறுர்.

उत त्वः पश्यन्न ददर्श वाचमुत त्वः शृण्वन्न शृणोत्येनाम्। उतो त्वस्मै तन्वं विसस्रे जायेव पत्य उशती सुवासाः॥

(ருக்—10-71-4)

அவித்வான், கற்றறியாதான், பார்த்துக் கொண்டே ஒன்றையும் காணுன்; செவித்தும் எதையும் கேளான், பேசியும் ஒன்றும் சொல்லான்; அவன் வித்யாவாணியின் ரகசியத்தை அறியான். கணவனிடம் உண்மையான காதல் கொண்ட மனைவி, உயர்ந்த அணிகளால் தன்னை அலங்கரித்துக் கொண்டு அவனிடம் வருவது போலவே, அருமையறிந்து ஓதிக் கல்வியிற் சிறந்த வித்வான்களுக்கே வேதஞானம் தனது சொரூபத்தை விளக்கும்.

ऋचो अक्षरे परमे व्योमन् यस्मिन्देवा अधि विश्वे निषेदुः।
यस्तन्न वेद किमृचा करिष्यति य इत्तद्विदुस्त इमे समासते॥

(ருக். 1-164-39)

வேதப் பொருளுணர்ந்த பிறகு அதன் வழி நின்று பரமாத்ம சித்தி பெறுதலே அறிஞன் கடமையாம். பரமேசன் எங்கும் நிறைந்தவன், அழிவில்லாதவன், அனைத்தினும் சிறந்த பொருள்; எல்லா வித்வான்களையும், உலகையும், சூர்யாதிகளையும் தாங்கும் சக்திமான், பரமசுத்தன். வேதங்களின் தாத்பர்யமே அவன். அவனை அறியாவிட்டால் ருக்வேதாதிகளை ஓதி ஒரு பயனுமில்லை. நன்ருகக் கற்று தர்மாத்ம யோகியாகி, பிரம்மத்தை யறிந்தவனே, பரமேஸ்வரனில் நிலைத்து முத்தியடைந்து பரமானந்தனுகிறுன்,

என்பது ருக்வேத வாக்காகும். அதனால், படிப்பதை அர்த்த ஞானத்துடனே படிக்கவேண்டும்.

8. இவ்வாறு வேதமோதிய பிறகு, மாணவன் உபவேதங்களைக் கற்கவேண்டும். அவையாவன.—

(க) ஆயுர்வேதம்:—சரகர், ஸுச்ருதர் போன்ற ரிஷிகள் அருளிய வைத்திய சாஸ்திரங்களை அர்த்தம், கிரியை சஸ்த்ரம், சேதனம், பேதனம், லேப, சிகித்ஸை, நிதானம், ஔஷதம், பத்யம், சரீர, தேச கால வஸ்து குணம், இவற்றின் விளக்கத்துடன் நான்காண்டுகளில் கற்கலாம்.

(ங) தனுர்வேதம்:—இது அரசியற்கலை. இதில் அரசனைப் பற்றியது, ஜனங்களைப் பற்றியது, என்று இரு பகுப்புண்டு. 1. அரசவை நடத்தல், சேனைத் தலைமை வகித்தல், அஸ்த்ரசஸ்த்ர வித்தை, பலவகையான வியூகம் வகுத்துப் போர்ப் பயிற்சி செய்தல், பகைவரையும் துஷ்டர்களையும் சேனு பலத்தால் அழித்து, நல்லோரைக் காத்தல், இவை அரசியற்பணி, இவை இராணுவக் கலையாம். 2. பிரஜைகளைக் காத்து, அவர்கள் சொத்து சுகங்களைப் போற்றி, தேசச் செழிப்பிற்கான அபி விருத்திகளைச் செய்து, நீதிகாத்து, குடிகளை மகிழ்வித்தல் ஆட்சிக் கலையாகும். இக்கலைகளை இரண்டாண்டுகள் பயின்ற பிறகு, காந்தர்வ வித்தை பயிலவேண்டும்.

(ச) காந்தர்வ வேதம்:—இசைக்கலை. இதில் ஸ்வரம் ராகம், ராகிணி, ஸமயம், தாளம், க்ராமம், தானம், வாத்யம், ந்ருத்யம், கீதம் முதலியவற்றை முடிந்தமட்டும் கற்கலாம். முக்கியமாக சாமவேத கீதத்தை வாத்தியங்களில் மீட்டிப் பாடலாம். நாரத ஸம்ஹிதம் போன்ற ரிஷிகிரகந்தங்(ஆர்ஷகிரந்தங்) களைப் படிக்கவேண்டும். ஆனால் வேசையும் விஷயலோலரும் போல் கழுதைத் தொண்டையெடுத்து, அசங்கியப் பாடல்களைக் கத்தக் கூடாது; வீண் ஆலாபனம் கூடாது.

(ஞ) சில்பவித்தை (அர்த்தவேத):— வேதக் கிளையில் சிற்பக்கலை அழகுக் கலையாகும். இதில் சித்திரம், செதுக்கு வேலைகள், அணிவேலைகள், யந்திர வேலைகள் முதலியன சேரும். பதார்த்த குண விக்ஞானம், அழகுறச் செய்தல், (க்ரியாகௌஶலம்), பலவித பதார்த்தங்களை அமைத்தல், மண்முதல் விண் வரையிலுள்ள பொருள்களின் அறிவு, இன்னும் ஐச்வரியத்தை வளர்க்கும் எல்லாத் தொழிற்கலைகளையும் கற்கவேண்டும்.

(ட) ஜோதிஷம் :—இதில் பீஜகணிதம், இலக்கக் கணிதம், க்ஷேத்ர கணிதம், பூகோளம், ககோளம், வானசாத்திரம், பூகர்ப்ப வித்தை, இவை அடங்கும். இவற்றை இயன்ற மட்டும் இரண்டாண்டுகளிற் கற்கலாம். ஆனால் கிரகம், நக்ஷத்திரம், ஜன்ம பத்திரம், ராசி, முகூர்த்தாதிகளால் பலன் சொல்லி ஆளை மிரட்டும் நூல்களை அபத்தமென்று விலக்க வேண்டும்; படிக்கவும் கூடாது. கற்பிக்கவும் கூடாது. தேசச் செல்வத்தைப் பெருக்கும் எல்லாக் கைத்தொழில்களையும், யந்திரத் தொழில்களையும் கற்க வேண்டும்.

மேலே சொன்ன முறையில் இருபதாண்டுகளில் முற்றுப் பெறும் கல்வி, வேறுவழியில் ஒரு நூற்றாண்டிலும் இயலாது. இருபது, இருபத்தோராண்டுகளில் ஆசிரியரும் மாணவரும் முயன்று, எல்லா உத்தம வித்தைகளையும் கலைகளையும் கற்று மனிதப் பிறவியின் பயனடைந்து, ஆனந்தமாயிருக்கலாம். ரிஷிகள் அருளிய நூல்களையே மாணவர் படிப்பது நலம்; அவர்கள் பெரிய வித்வான்கள், சாஸ்திரக்ஞர்கள், தர்மாத்மாக்கள். அற்ப அறிஞர் நூல்களை நாம் கண்டிக்கிறோம்; இவர்கள் ஓரக முடையவர்கள், அபக்குவர்கள்; அவர்கள் நூலும் அப்படியே யிருக்கும்.

## ரிஷி க்ரந்தங்கள்

வியாசர் விரிவுரையுடன் பூர்வமீமாம்ஸம், கௌதமமுனிவர் உரையுடன் வைசேஷிகம், வாத்ஸ்யாயன முனிவர் உரையுடன் நியாய சூத்ரம், வியாஸர் இயற்றிய உரையுடன் பதஞ்சலியோக சூத்ரம், பாகுரி முனிவர் பாஷ்யத்துடன் கபிலரின் ஸாங்க்ய சூத்ரம், வாத்ஸ்யாயனர் அல்லது பௌதாயன முனிவர் இயற்றிய பாஷ்யத்துடனும் விருத்தியுடனும் வியாஸரின் வேதாந்த சூத்ரம் (பிரஹ்ம சூத்ரம்), இவற்றைப் படியுங்கள், கற்பியுங்கள். இவற்றுடன் கல்பமும் அங்கமும் சேர்க்கலாம். ரிக், யஜுர், ஸாம, அதர்வண, வேதங்கள் ஈச்வரனால் அருளப்பட்டவை. அதைப்போலவே ஐதரேய, சதபத, ஸாம, கோபத ஆகிய நான்கு ப்ராஹ்மணங்களும்; சிக்ஷை கல்பம், வியாகரணம், நிகண்டு நிருக்தம் சந்தஸ், ஜோதிஷம் ஆகிய ஆறு வேதங்களாலும், மேற்சொன்ன மீமாம்ஸாதி ஆறு உபாங்கங்களும், ஆயுர் வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்தவேதம், ஆகிய நான்கு உபவேதங்களும், ஆகிய முனிகள் அருளிய கிரந்தங்களை

ஓதுக. இவற்றிலும் வேத விருத்தமானதை விலக்க வேண்டும். ஏனெனில் வேதங்கள் ஈசன் அருளியவை, மாசற்றவை. தாமே தமக்குப் பிரமாணமான(ஸ்வத: ப்ரமாணம்) மெய் நூல்கள்; மற்றக் கிரந்தங்க ளெல்லாம் (பரத: பிரமாணம்) வேதத்தையே ஆதீனமாகக் கொண்ட கிரந்தங்களுக் கெல்லாம் வேதங்களே பிரமாணமாகும். வேதங்களுக்கு விசேஷ விளக்கம் "ருக்வேதாதி பாஷ்ய பூமிகையில்" (ரிக்வேதாதி முன்னுரையில்) உள்ளது; அதில் அறிக. இந்த நூலிலும் பிற்பகுதியில் விளக்குவேன் காண்க.

விலக்கவேண்டிய நூல்களிற் சிலவற்றை இங்கே குறிக்கிறேன்:— இவை பொய் நூல்கள்.

1. வியாகரணத்தில்— காதந்தரம், ஸாரஸ்வதம், சந்த்ரிகம், முக்தபோதம், கௌமுதி- சேகரம், மனோரமாதி நூல்கள்.

2. அகராதிகளில்— அமரகோசம் முதலியன.

3. சந்தஸில்— வ்ருத்தரத்நாகரம் முதலியன.

4. சிக்ஷை (எழுத்திலக்கண விளக்கம்)— "அதசிக்ஷாம் ப்ரவக்ஷ்யாமி பாணினீயம் மதம யதா" இத்யாதி இடைச்செருகல்கள்.

5. ஜோதிஷத்தில்—சீக்ரபோதம், முஹூர்த்த சிந்தாமணி, முதலிய ஜாதகநூல்கள்.

6. காவியங்களில்— நாயகபேதம், குவலயானந்தம், ரகுவம்ஸம், மாகம், கிரதார்ஜுனீயம் முதலியன.

7. மீமாம்ஸம்—தர்மஸிந்து, வ்ரதார்காதி.

8. வைசேஷிகம்—தர்க்கஸங்க்ராதி.

9. நியாயம்—ஜாகதீசிஆதி

10. யோகம்—ஹடப்ரதீபிகா.

11. ஸாங்க்யம்—ஸாங்க்யதத்வ, கௌமுதிஆதி.

12. வேதாந்தம்—யோகவாசிஷ்டம், பஞ்சதசி முதலியன.

13. வைத்ய சாத்திரம்—ஸாரங்கதாரம் முதலியன.

14. ஸ்மிருதிகளில்— இடைச் செருகல் நீக்கி மனுஸ்மிருதி மட்டும் கொள்க; மற்றெல்லாம் தள்ளுபடி.

15. எல்லாத் தந்திர நூல்களும், புராணங்களும், உபபுராணங்களும், துளசி இராமாயணமும், ருக்மணி மங்களமும்—

இவை போன்ற கற்பனைப் புரட்டுகள் நிரம்பிய மித்யாக் கிரந்தங்களையும் விலக்குக.

**வினு:** என்ன இந்த கிரந்தங்களில் சிறிதும் உண்மை இல்லையா?

**விடை:** சிறிது உண்மை உண்டுதான். ஆனால் அது பொய்க் குப்பை கூளங்களால் நிரம்பியிருக்கிறது. விஷம் சிறிது கலந்தாலும் அதி உத்தம அன்னத்தையும் புசிக்க லாயக்கில்லை; குப்பையில் கொட்ட வேண்டியதுதான். அது போலவே பொய் கலந்த நூல்களையும் விலக்குக.

**வினு:** என்ன நீர் புராண இதிஹாஸங்களை நம்பவில்லையா?

**விடை:** நம்புகிறோம்; ஆனால் உண்மையைத் தான், பொய்யை நம்போம்.

**வினு:** அதில் எது மெய்? எது பொய்.

**விடை:** ब्राह्मणानीतिहासान् पुराणानि कल्पान् गाथा नाराशंसीरिति।
(க்ரஷ்ய. சூத். 3-3-6)

என்பது க்ருஹ்ய சூத்ர வசனமாகும். இதிஹாஸம், புராணம், கல்பம், காதா, நாராசம்ஸீ ஆகிய ஐந்து பெயர்கள், ஐதரேய, சதபத, ஸாம, கோபத பிராஹ்மணங்களுக்கே யாகும். பகாவதாதி நூல்கள் உண்மையான புராணங்களன்று.

**வினு:** கண்டனம் செய்த நூல்களிலும் உண்மையானதை நீர் ஏன் அங்கீகரிக்கலாகாது?

**விடை:** அவற்றில் காணும் உண்மையெல்லாம் வேத சாஸ்திரங்களைச் சேர்ந்தவை. பொய்யெல்லாம் சொந்தக் கட்டுமானங்கள். ஆதலால் வேத சாஸ்திரங்களை ஏற்றாலே உண்மையை ஏற்றதாகிறது. பொய்நூல்களில் உண்மை தேடுவோன் உண்மையுடன் பொய்யையும் உட்கொள்கிறான். பொய்யும் அவனைப் பற்றிக் கொள்கிறது. ஆதலால் असत्यमिश्रं सत्यं दूरतस्त्याज्यमिति। விஷங்கலந்த அன்னம் போல் பொய் கலந்த மெய்யையும் போலி நூல்களையும் ஒழிக்கவேண்டும்.

**வினு:** சரி; உமது மதமென்ன?

**விடை:** வேதம். வேதம் எதெதை ஏற்கிறதோ அதததை ஏற்போம்; எதெதை விலக்கச் சொல்லுகிறதோ அதததை விலக்குவோம். வேதமே முழு உண்மை. ஆதலால் எமது சமயம்

வேத தர்மமேயாகும். இவ்வாறே அனைவரும், முதன்மையாக ஆசிரியர், ஐக்யமத்யத்திற்காக வேதத்தை ஏற்க வேண்டும்.

**வினா:** தாங்கள் உண்மைக் கிரந்தம் என்று நவிலும் மற்ற சாஸ்திரங்களிலும் பரஸ்பர விரோதம் உள்ளதே. மெய்—பொய்க் கலப்புள்ளதே. உதாரணமாக சிருஷ்டி விஷயத்தில் ஆறு சாஸ்திரங்களும் வேறுபடுகின்றன. மீமாம்ஸம் கர்மம், வைசேஷிகம் காலம், நியாயம் பரமாணு, யோகம் புருஷார்த்தம், ஸாங்க்யம் ப்ரக்ருதி, வேதாந்தம் பிரஹ்மத்திலிருந்து சிருஷ்டி ப்ரபஞ்சம் எழுந்ததாகச் சொல்லுகின்றனவே. இது பரஸ்பர விரோத மில்லையா?

**விடை:** முதலில் வேதாந்தம், ஸாங்கியந் தவிர, பிற நான்கு சாஸ்திரங்களிலும் சிருஷ்டியைப் பற்றி சிறப்பாக சொல்லப் படவில்லை. இதில் விரோதமில்லை உமக்கு விரோத அவிரோத ஞானமே இல்லை. உம்மைக் கேட்கிறேன், விரோதம் எங்கிருந்து வருகிறது? ஒரே விஷயத்திலா, வெவ்வேறு விஷயத்திலா?

**வினா:** ஒரே விஷயத்தைப் பற்றிப் பலபல விருத்தமான அபிப்பிராயங்கள் கூறுவதே விரோதம். இங்கே 'சிருஷ்டி' ஒரே விஷயமே.

**விடை:** அறிவு, வித்தை ஒன்று இரண்டா? ஒன்றே என்கிறாய். அறிவு ஒன்றானால், வியாகர்ணம், வைத்யம், ஜோதிஷம் என்ற பகுப்பெதற்கு? ஒரே வித்தையின் பல கிளைகள் தனி தனிக் கலைபோலப் பயிலப் படுகின்றன. அது போலவே சிருஷ்டியின் ஆறு பான்மைகளும் ஆறு சாஸ்திரங்களில் வெவ்வேறாகக் காண்கின்றன. அவை விரோத மில்லையே. ஒரு பானை வனைய முயற்சி, சமயம், நினைப்பு, மண் அதற்கேற்ற சாமான்களைச் சேர்த்தல், பிரித்தல், குலாலனின் தன்மை, ஆகிய ஆறு காரணங்கள் வேண்டியிருப்பது போலவே, உலகின் ஆறு காரணங்கள், ஆறு சாத்திரங்களிலும் வெவ்வேறாகச் சொல்லப் பெற்றிருக்கின்றன. மீமாம்ஸத்தில் கர்ம காரணம், வைசேஷிகத்தில் காலம், நியாயத்தில் உபாதான காரணம், யோகத்தில் புருஷார்த்தம், ஸாங்கியத்தில் தத்வபரிணமகாரணம், வேதாந்தத்தில் ஈச்வரன் நிமித்தக் காரணம் என்று சொல்லப் பெற்றிருக்கிறது. இதில் விரோதமில்லை. வைத்திய சாத்திரத்தில் நிதானம், சிகித்சை, ஔஷதம்,

தானம், பத்தியம், ஆகிய விஷயங்கள் தனித்தனிப் பகுதி களிற் சொல்லப் பெற்றிருக்கின்றன. எனினும் எல்லாம் நோய் தீர்க்கும் வழிதான். இதேமாதிரிதான் உலக சிருஷ்டியை பற்றி ஆறு சாஸ்திரங்களும் தனித்தனியே கூறுகின்றன. இதைப் பற்றி சிருஷ்டி ப்ரகரணத்தில் விரிவாகச் சொல்லுவேன்.

கல்விக்குக் கெடுதலான பழக்க வழக்கங்களை யெல்லாம் ஆசிரியரும் மாணவரும் நீக்குக. தீயர் உறவு, குடி, விபசாரம் போன்ற தீய பழக்கங்கள் பால்ய, விவாகம், அதாவது ஆண்கள் இருபத்தைந்து பெண்கள் பதினாறு வயதிற்குள் மணம்புரிதல், பூரண பிரம்மசரியம் பேணாமை, மாதா பிதா, அரசர், வித்வான் கள், வேத சாஸ்திர பிரசாரம் இவற்றில் கருத்தில்லாமல் இருப் பது, பெருந்தீனி, அதிகநேரம் கண்விழித்தல், அதிகம் உறங்கல், படிப்பில் சோம்பல், கபடம், அறிவே உலகிற் சிறந்த பொருளென நம்பாமை, பலம், புத்தி, பராக்ரமம், ஆரோக்யம், அரசாட்சி, செல்வம் எல்லாந் தரும் பிரம்மசரியத்தில் கருத்தின்மை, ஈச்வர தியானத்தை விட்டு, மற்ற கல் முதலிய ஜடவஸ்துக்களைக் கடவு ளென்று பூஜை செய்து காலத்தை வீணாக்காமல், மாதா, பிதா, அதிதி, ஆசிரியர், வித்வான்களை உண்மையான மூர்த்தியாக நினைத்து சேவை செய்து, நல்லுறவு கொள்ளாமை, அவரவர் வர்ண தர்ம நியமங்களை விட்டு, நெற்றியில் குறுக்கும் நெடுக்கும் பட்டை போடல், பொட்டு வைத்தல், துளசி ருத்ராக்ஷமாலை யணிதல், ஏகாதசி திரயோதசி விரதமிருத்தல், காசி முதலிய தலங்களுக்கு யாத்திரை செய்தல், ராம, கிருஷ்ண, நாராயண, சிவ, பகவதி, கணேசாதி நாமங்களை நினைத்தாலே பண்ணின பாபம் தூர ஓடிப்போகும் என்று நம்புதல், பாகண்டிகளின் உபதேசத்தால் கல்வியில் கருத்திழத்தல். சிறந்த சாத்திரங்களைக் கற்று, அறிவை வளர்த்து, யோகம் பயின்று, ஈச்வரத்தியானத் தால் பெறும் முக்தியின்பத்தை, பாகவதாதி புராணங்களைக் கேட்டே யடையலாம் என நம்புதல், பணஞ் சேர்ப்பதில் மோகங் கொண்டு கல்வியில் கருத்தின்மை, இங்குமங்கும் வீணலைச் சல்—இப்படிப்பட்ட பொய் வழக்குகளில் உழன்று, பிரமசரிய வித்யா. லாபத்தை யிழந்து ஜனங்கள் நோயும் மடமையும் கொண்டு வருந்துகின்றனர்.

இன்று சில மாமூல் பிராமணர்கள், சுயநலத்தால், பொய் யுபதேசங்களால், ஜனங்களைத் தங்கள் வஞ்ச வலையிற் பிடித்து, அவர்கள் கற்பதையும் அறிஞருடன் கலப்பதையும் கெடுத்து,

அவர்களுடைய உடல், மனம், பொருள், அனைத்திற்கும் தீங்கு செய்கிறார்கள். க்ஷத்திரியாதி சாதிகள் படித்த வித்வான்களாவார்களானால், தமது வஞ்சகத்தையும் ஜாலத்தையும் அறிந்து கொண்டு தமது வலையைத் தப்பிவிடுவார்கள், தமது சாயம் வெளுத்துப் போகும், தம்மிடம் வணக்கமில்லாது நடப்பார்கள், என்று நினைக்கிறார்கள். அரசரும் மக்களும் இத்தீமைகளைத் தூர விலக்கி யொழித்துத் தங்கள் பையன்களுக்கும், பெண்களுக்கும் நிறைவான கல்வியளிக்க, உடல், பொருள், மனம் ஊன்றிப் பாடுபடவேண்டும்,

**வினா:** என்ன பெண்களும் சூத்ரர்களுங் கூட வேதம் படிப்பதா? அவர்களும் படித்தால் நமது கதியென்ன ? அவர்கள் படிக்க வேதப் பிரமாண மில்லையே; ஆனால் படிக்கக்கூடாது என்றுமிருக்கிறது:—

स्त्रीशूद्रौ नाधीयातामिति श्रुतेः ॥

இந்தச் சுருதியில் ஸ்திரீகளும், சூத்ரர்களும் படிக்கக் கூடாது என்றிருக்கிறதே

**விடை:** ஆண் பெண் அடங்கலும், மனிதஜாதி முழுதுமே வேத கல்வி கற்க உரிமையுண்டு. பெண்களுக்கும் சூத்திரருக்கும் வேதக் கல்வி மறுக்கிற நீ கிணற்றில் விழுந்து சாவது நலம். நீ சொன்ன கோட்பாடு உனது பொய்ச் சரக்கு, வெறும் கட்டுமானம். அது எந்தப் பிராமண கிரந்தத்திலும் இல்லை. எல்லா மனிதரும் வேதத்தை கற்கவும் கேட்கவும் அதிகாரம் உண்டென்று யஜுர் வேதம் இருபத்தாறும் அத்தியாயம் இரண்டாம் மந்திரத்திற் காண்கிறது. கேள்:

यथेमां वाचं कल्याणीमावदानि जनेभ्यः ।

ब्रह्मराजन्याभ्यां शूद्राय चार्याय च स्वाय चारणाय ॥ (யஜுர் 26-2)

பரமேசன் சொல்லுகிறான், "(யதா) எவ்வாறு நான் (ஜனேப்ய:) மனித ஜாதியின் பேரின்பத்திற்காகவே (இமாம்) இந்த (கல்யாணீம்) இவ்வுலகுக்கு இன்பத்தையும் முக்தியின்பத்தையும் அளிக்க வல்ல (வாசம்) ரிக், யஜுர், ஸாம, அதர்வண வேத வாக்கை (ஆ, வதானி) உபதேசித்தருளினேனோ, அவ்வாறே நீங்களும் எல்லோருக்குமே இதைச் சொல்லுங்கள்." இங்கே 'ஜனம்' என்னும் பதத்திற்கு துவிஜர்கள் என்று பொருள் கொள்ளவேண்டும், ஏனெனில் ஸ்மிரிதி முதலிய கிரந்தங்களில் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் முதலிய வர்ணத்தவர்களுக்கே

வேதங்களைப் படிக்க உரிமையுண்டு; மற்ற ஸ்திரீ, சூத்ரர்களுக்கு இல்லை!' என்று கேள்விபோடும் சில சுயநலமிகளுக்கு பரமேசுவரனே மந்திரத்தின் பிற்பகுதியில் விடை அளிக்கிறான்: (பிரஹ்ம ராஜநாப்யாம்) பிராமணர்களும் க்ஷத்திரியர்களும், (அர்யாய) வைசியர்களும், (சூத்ராய) சூத்ரர்களும், (ஸ்வாய) பெண்களும், வேலையாட்களும், (அரணாய) மிகவும் கீழாகக் கருதப்படுபவர்களும் கூட இன்புறும்படியே நான்கு வேதங்களையும் சொன்னேன்.'' ஆனபடியால் வேதங்களை எல்லோருக்கும் சொல்லுங்கள் என்பது இறைவன் கருத்து. எல்லோரும் வேதம் கற்று, விளக்கி, விக்ஞானத்தை வளர்த்து, நல்லன பழகித் தீயன விலக்கி, துயரொழித்து, பரமனை யடைந்து பேரின்பம் பெற வேண்டும். சொல்லு இப்போது; உன் வார்த்தையை நம்புவதா, இறைவன் வாக்கை நம்புவதா? நிச்சயமாக இறைவன் வாக்கைத் தான் நம்ப வேண்டும். இவ்வளவு சொல்லியும் நம்பாதவன் நாஸ்திகனே; ''नास्तिको वेदनिन्दकः வேதத்தை அறியாது நிந்திப்பவன் நாஸ்திகன் என்பது மனுவாக்கு. என்ன பரமேசன் சூத்ரர் நலத்தை விரும்ப வில்லையா? பிராமணரே வேதம் கேட்கத் தகும் சூத்ரர் கேட்கக் கூடாது என்னும் பக்ஷபாதியா இறைவன்? அப்படி அவன் சூத்ரர்கள் படிக்கக் கூடாது கேட்கக் கூடாது என்று நினைத்திருந்தால், அவர்களுக்கு வாயும் காதும் எதற்காக அளித்தான்? பரமாத்மா மண், நீர், தீ, காற்று, சூரியன், அன்னாதிகளை எல்லோருக்குமே பொதுவாக படைத்தது போலவே, வேதத்தையும் அனைவருக்கும் பொதுவாக அருளினான். சூத்ரர்கள் படிக்கக் கூடாது என்று எங்காவது தடையிருந்தால், படித்துப் படித்துச் சொல்லியும் அறியமுடியாத மூட மதியாளரையே அது குறிக்கும். அப்படிப்பட்ட நீர் மூடரைத்தான் சூத்ரர்கள் என்ற பதம் குறிக்கும். அவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பது ஏருது; அது வீண் முயற்சி.

## பெண்கல்வி

பெண்களுக்குக் கல்வி மறுப்பது உன் மடமுட்டாள் சுயநலத்தையே காட்டுகிறது. கன்னிகைகள் கற்க வேண்டுமென்பதற்கு அதர்வண வேத பிராமணத்தைக் கேள்.

ब्रह्मचर्येण कन्या युवानं विन्दते पतिम् ॥ (அதர்வம்—11-24-3-13

ஆண் பிள்ளைகள் பிரம்மசரியங் காத்து, கல்விகற்று, நல்ல யுவதிகளை மணந்து வாழ்க்கை நடத்துவது போலவே, (கன்யா)

கன்னிகைகளும், (ப்ரஹ்மசர்யேன) பிரம்மசரியங் காத்து வேதாதி சாஸ்திரங்களைக் கற்றுத் தேர்ந்து அறிஞராகி, (யுவானம்) தமக்கினிய அறிவாளரான வாலிபரை (விந்ததே) அடைகிறார்கள். மணம் புரிந்து கொள்க என்பது வேதவாக்கு. இதனால் ஸ்திரீகளும் பிரம்மசரியங் காத்து கல்வி கற்க வேண்டு மென்பது நன்று புலனாகிறது.

வினா: என்ன பெண்ணுமா வேதம் கற்பது?

விடை: அவசியம் கற்க வேண்டும். கேள். சிரௌதசிருதி வாக்கு:—"इमं मन्त्रं पत्नी पठेत्"—"யக்ஞத்தில் பத்தினிப் பெண்ணும் இந்த மந்திரத்தைச் சொல்லட்டும்." வேத சாஸ்திரக் கல்வி யில்லாமல் பெண்கள் வேள்வியில் வேத மந்திரங்களை எப்படி ஸ்வரத்துடன் சொல்லமுடியும்? படிக்காமல் சம்ஸ்கிரதம் பேச முடியுமா? பாரத வர்ஷத்தில் கார்கி போன்ற பெண்மணிகள் உயர்ந்த கல்வி கேள்வியிற் சிறந்து வேத வித்துக்களாயி ருந்தனர். சதபத ப்ராஹ்மணத்தில் இதைப் பற்றிக் காண்கிறது புருஷன் வித்வானாயிருந்து ஸ்திரீ அறிவிலியாயிருந்தாலும், பெண் படித்து ஆண் மடையனாயிருந்தாலும், குடும்பம் அமைதியாக நடக்குமா? தினம் தேவாசுர யுத்தமாகத்தானே இருக்கும். அவல வாழ்வு! அதில் சுகமேது? பெண்கள் படிக்காவிட்டால் பெண்பள்ளிக்கூட உபாத்தியாயர்கள் எங்கிருந்து வருவார்கள்? ஆண், பெண் இருபாலரும் கற்காவிட்டால் அரசியலும் நடவாது, குடும்பமும் அமைதியாக நடக்காது ஆணுக்குப் பெண், பெண்ணுக்கு ஆண் பிடித்தமாயிருந்து, பெண் வீட்டுக்காரியங்களை நன்றாக நிர்வகித்துக் குடும்ப வாழ்க்கை சுகமாயிருக்க வேண்டுமானால், இருவரும் நல்ல கல்விப் பயிற்சி பெற்றே தீரவேண்டும்.

ஆரிய வர்ஷத்தில் பழைய க்ஷத்திரிய ஸ்திரீகள் தனுர் வேதத்தில் அதாவது போர்க்கலையில் கூடத் தேர்ச்சி பெற்றி ருந்தனர். இன்றேல் கைகேயி தசரதருடன் போர்களத்திற்குச் சென்றுதவியதுபோல், அவர்கள் தங்கள் கணவருக்குத் துணை செய்திருக்க முடியுமா? ஆதலால் பிரம்ம க்ஷத்ரியருக்கு எல்லா வித்தைகளும், வைசியருக்கு வியவாகார வித்தையும், சூத்ரருக்கு சமையலும், சேவை செய்யும் கலைகளும் அவசியம் பயிற்ற வேண்டும். ஆண்கள் வியாகரணம், தர்மம், விவகாரக் கல்வி யெல்லாம் கற்பது போலவே, பெண்களும் இலக்கணம், தர்மம், வைத்தியம்,

கணிதம், சிற்ப வித்தை, முதலியவற்றை அவசியம் நன்றாகக் கற்க வேண்டும். இவ்வாறு கற்காவிட்டால், பெண்கள் மெய் பொய்யறிந்தொழுகுதல், கணவனிடம் அனுகூலமாக நடத்தல், நன் மக்களைப் பெற்று வளர்த்துக் கல்வி தந்து ஆளாக்கல், வீட்டுக் காரியங்களை நல்ல முறையில், செய்தல் நிர்வகித்தல் முடியாது; வைத்திய ஞானம் இல்லாவிட்டால் சுகாதாரப்படி அன்னபானாதி களைத் தந்து, விட்டாரைப் பேண முடியாது; பிணி நோய்க் காடாகும். வைத்திய வித்தை தெரிந்தால் சுகவழி நடந்து இன்புறலாம். கலைப் பயிற்சியிருந்தால், வீட்டை அழகுற அமைத்துப் பாதுகாத்து அணி செய்யலாம். அணிமணிகளை நேர்த்தியாகத் தயாரிக்கலாம். கணித வித்தை தெரியாவிட்டால் வீட்டுக் கணக்கைச் சரிவர வைத்துக்கொள்ள முடியாது. வேதாதி சாஸ்திரங்கள் தெரியாவிட்டால் அறவழி நடக்காமல், அதர்மத்திலிருந்து தப்பமுடியாமல் வருந்த நேரிடும். தங்கள் பிள்ளைகளுக்கு பிரமசரியக் கல்வி கற்பித்து அறிவும் ஒழுக்கமும் உடலுறுதியும் மனவுறுதியும் தந்து, ஆளாக்கிய பெற்றோர் வாழ்க! அப்பிள்ளைகள் அறிவறிந்து, ஒழுகி, மாதா, பிதா, பதி, மாமனார், மாமியார், அரசர், ஜனங்கள், சுற்றத்தார், இஷ்டமித்திரர், குழந்தைகள் ஆகிய எல்லோரிடமும் தர்ம ரீதியாக நடந்து கொள்வார்கள்.

அறிவு வற்றாச் செல்வ நிதி. செலவிடச் செலவிடப் பெருகும் செல்வம். மற்றச் செல்வங்கள் செலவிட்டால் குறையும். தாய பாகத்தாரும் பறித்துப் பங்குபோட்டுக் கொள்வார்கள். வித்யா நிதிக்குத் தாயா பாகத்தார் அல்லது திருடரின் அபாயமில்லை. இந்த வித்யா நிதியை அரசரும் மக்களும் காத்து வளர்க்க வேண்டியது கடமையாகும்.

कन्यानां संप्रदानं च कुमाराणां च रक्षणम् ॥ (மனு. 7-152)

எல்லாக் கன்னிகைகளையும் சிறுர்களையும் சரியான வயதில் (ஐந்து அல்லது எட்டுவயதில்) பள்ளிகூடத்திற்கனுப்பி பிரம சரிய கல்வி தந்து ஆளாக்குவது அரசன் கடமையாகும். பெண்கள் 16 வயது வரை ஆண்கள் 25 வயது வரையிலாவது கற்க வேண்டும். அதற்கு முன் விவாகம் கூடாது. எட்டு வயதிற்கு பிறகு பிள்ளைகளை வீட்டில் வைத்துக்கொள்ளக் கூடாது. பள்ளிக் கூடத்திற்கு அனுப்ப வேண்டும். இந்த விதிகளை மீறும் மாதா பிதாக்களை அரசர் தண்டிக்க வேண்டும். ஆசார்ய குலத்தில் கல்வி முற்றித் திரும்பிய பிறகே (ஸமாவர்த்தன ஸம்ஸ்காரம் முடிந்த பிறகே) கல்யாணப் பேச்சு.

सर्वेषामेव दानानां ब्रह्मदानं विशिष्यते ।
वार्यन्नगोमहीवासस्तिलकाञ्चनसर्पिषाम् ॥ (மனு. 4-233)

ஜலம், அன்னம், பசு, பூமி, ஆடை, எள்ளு, தங்கம், நெய், ஆகிய பல தானங்களைச் செய்வதினும் வேதவித்யா தானமே சிறந்தது என்று மனு கூறுகிறார். மன மொழி மெய்யால் பொருளால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு வரையில் எல்லாரும் கல்வி வளர்ச்சிக்குத் தொண்டு செய்யுங்கள். பிரமசரிய வித்தையும் வேத தர்மமும் வளரும் நாடு, சௌபாக்கியங்களை அடைந்து செழிக்கும்.

இவ்வாறு பிரமசரிய சிக்ஷையைபற்றி இங்கே சுருங்க எழுதினோம். அடுத்த நான்காம் ஸமுல்லாஸத்தில் பிரம்மசாரி குருகுலத்திலிருந்து திரும்பிவந்து இல்லற வாழ்க்கை நடத்துவதை பற்றி எழுதுவோம்.

ஸ்ரீமத் தயானந்த ஸரஸ்வதி சுவாமிகள் அருளிய
சத்தியார்த்தப் பிரகாசத்தில்
கல்விப் பயிற்சியைப் பற்றிய
மூன்றும் அத்தியாயம்
முற்றிற்று.

## நான்காம் அத்தியாயம்

# திருமணமும் இல்லற ஒழுக்கமும்

वेदानधीत्य वेदौ वा वेदं वापि यथाक्रमम् ।
अविप्लुतब्रह्मचर्यो गृहस्थाश्रममाविशेत् ॥ (மனு. 3-2)

மனு ஸ்மிருதி சொல்கிறது :—

“மாசற்ற பிரமசரியங் காத்து, ஆசாரிய குலத்தில் நான்கு, மூன்று, இரண்டு அல்லது ஒரு வேதமாவது முற்றக் கற்றுத் திரும்பிய ஆண் அல்லது பெண் இல்லறம் (க்ரஹஸ்தாச்ரம்) புகுக.”

तं प्रतीतं स्वधर्मेण ब्रह्मदायहरं पितुः ।
स्रग्विणं तल्पमासीनमर्हयेत्प्रथमं गवा ॥ (மனு. 3-3)

“தனக்குரிய சிஷ்ய தர்மத்தை நிறைவேற்றி, ஆசாரியரிடம் வேதஞானமான பிரம்மதாயத்தை அடைந்த பிரமசாரி, மாலைகளால் அலங்கரித்த மஞ்சத்தில் அமர்ந்திருக்கும் ஆசாரியருக்குக் கோதானம் செய்து வணங்குக. அவ்வாறே கல்வி முற்றிய கன்னிகை விஷயத்திலும் (கன்னிகை) தகப்பனுர் கோதானம் செய்க.”

गुरुणानुमतः स्नात्वा समावृत्तो यथाविधि ।
उद्वहेत द्विजो भार्यां सवर्णां लक्षणान्विताम् ॥ (மனு. 3-4)

குருவின் ஆணையை ஏந்தி, மங்கள ஸ்நானம் செய்து, முறைப்படி வீட்டிற்குத் திரும்பி வந்து, பிரம்ம க்ஷத்ரிய வைசிய பிரமசாரி தனது வர்ணத்திற்கேற்ற அழகியை மணம் புரிக.”

### பெண்ணிலக்கணம்

असपिण्डा च या मातुरसगोत्रा च या पितुः ।
सा प्रशस्ता द्विजातीनां दारकर्मणि मैथुने ॥ (மனு. 3-5)

தாய் வழியில் ஆறு தலைமுறையில் வராத, பிதாவின் சகோத்ரமில்லாத, கன்னிகையை மணத்தல் நலமாகும். ஏனெனில்,

परोक्षप्रिया इव हि देवाः प्रत्यक्षद्विषः ॥ (சதபதம்)

மறைவிலிருக்கிற பொருளைப் போல, முன்னிருக்கிற பொருளை நாம் அவ்வளவாக விரும்புவதில்லை என்று சதபத ப்ராஹ்மணம் சொல்லுகிறது. கற்கண்டின் இனிமையைக் கேட்டு அதை உண்டறியாதவன், அதைப்பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறான். நாம் அறியாத ஒரு மனிதனைப் பற்றி யாராவது பெரும் புகழ் பேசினால், அவனைப் பார்க்க ஆசைப்படுகிறோம். அதேபோல, தன் மாதா குலத்திற்குக் கிட்ட இல்லாமல், தன் கோத்திர முமில்லாத புதிய பெண்ணை, பிள்ளை அதிகமாக விரும்புவான். நெருங்கிய உறவிற்கும் தூர உறவிற்கும் மணம் புரிதலின் பலனைக் காண்க:—

1. பிள்ளைப்பருவத்தில் அருகருகிருந்து ஆடி, நேசித்து, சண்டைப் போட்டு, அவரவர் குண தோஷங்களைக் கண்டறிந்து, பாலிய சேட்டைகளைக் கண்டு, ஒருவரை யொருவர் நிர்வாண மாகவும் பார்த்தவர்கள் மணம் புரிந்தால், ஒருக்காலும் ஒருவரை யொருவர் காதலிக்க முடியாது.

2. நீரும் நீரும் சேர்ந்தால் வேறுபாடில்லை. அதுபோல மாதா பிதாக்களின் கிட்ட உறவில் மணம் புரிந்தால், தாதுக்கள் சரியாகத் திண்மையுறச் சேரா. சந்ததி தழைக்காது.

3. பாலுடன் கற்கண்டு, சுக்கு முதலிய ஓஷதிகள் சேர்ந் தால் சுவை அதிகமாகும். அது போல மாதா பிதாக்களின் குலத் திற்கு அன்னியமான சுற்றத்தில் மணம்புரிதல் இருபாலருக்கும் வாழ்வின்பத்தை அதிகமாக்கும்.

4. ஓர் இடத்தில் நோயானவன், இடம் மாற்றி இன்னொரு தேசத்தின் காற்றால் நோய் தீர்வது போலவே, தூரதேச விவாகம் இருவருக்கும் நலந் தரும்.

5. கிட்டச் சம்பந்தத்தால் உறவினர் நெருங்கி யிருக்க நேரிடும். அதனால் ஒரு குடும்பத்தின் சுகதுக்கங்கள் இன்னொரு குடும்பத்தையும் தாக்கும். குடும்பக் கலகங்கள் வளரும். தூர சம்பந்தம் அன்பு நாளை நீண்டு வளர்க்கும்; உறவினரிட மிருந்து தள்ளியிருப்பவன் பாசம் அதிகமாகும். கிட்ட நெருங்கி னால் இது முடியாது; சண்டைதான் பெருகும்.

6. தூரதேச சம்பந்தத்தால் அத்தேசப் பொருள்களும் வர்த்தமானங்களும் எளிதில் கிடைக்கும். இவ்வாறு தேசத்திற்கு தேசம் நேசமுண்டாகும். கிட்டச் சம்பந்தத்தில் இவ்வாறு இயலாது. இதனாலேதான் ஒரு கன்னிகைக்கு துஹிதா (தூர இருந்து வந்தவள்) எனப்பெயர் வந்தது.

दुहिता दुर्हिता दूरे हिता भवतीति ॥ (நிருக்தம். 3-4)

"தூர இருந்து வந்த துஹிதா ஹிதாயாயிருக்கிறாள்" என்பது நிருக்த வாக்கியமாகும்.

7. பெண்ணுறவாளர் தூர இல்லாமல் கிட்ட இருந்தால், அடிக்கடி பெண் வருவாள். அப்பொழுதாவது மரியாதைக்குத் தரவேண்டியிருக்கும். பெற்றோர் அதனால் கையிளைக்கவும் நேரிடும்.

8. கிட்டக் கிட்ட இருந்தால் சிறுக்கெண்ணாலும் கோவித்துக் கொண்டு சண்டையிட்டுப் பெண் தாய் வீட்டிற்கு ஓடுவாள். பிறந்த வீட்டுச் சலுகையால் செருக்கேறி, கணவனிடம் சரியாக நடந்து கொள்ளமாட்டாள். ஒருவருக்கொருவர் பகையும் சண்டையுந்தான் மிச்சம். ஏனெனில் பெண்கள் எளிதாகச் சினந்து முகங்கோணுவார்கள், எளிதாகவும் மகிழ்வார்கள்.

இக்காரணங்களால் பிதாவின் கோத்திரத்திலோ, தாயின் ஆறு தலைமுறையிலோ, கிட்ட ஊரிலோ மணம் புரிதல் நன்றன்று.

महान्त्यपि समृद्धानि गोऽजाविधनधान्यतः ।
स्त्रीसंबन्धे दशैतानि कुलानि परिवर्जयेत् ॥ (மனு. 3-6)

கொழுத்த பணம், தான்யம், பசு, குதிரை, ஆடு, யானை, அரசுசெல்வங்களை நிரம்பியிருந்தாலும், அடியிற்காணும் பத்துக் குலங்களில் விவாகத் தொடர்புகொள்ளக் கூடாது.

हीनक्रियं निष्पुरुषं निश्छन्दो रोमशार्शसम् ।
क्षय्यामयाव्यपस्मारिश्वित्रकुष्ठिकुलानि च ॥ (மனு. 3-7)

நல்லொழுக்கமில்லாதது, ஸத்புருஷர் இல்லாதது, வேதாத்யயனமில்லாதது, உடலில் நீண்டு தடித்த மயிருள்ளது, மூலம், காசம், இழுப்பு, மந்தம், உப்பசம், வலிப்பு, யானைக்கால், மேகம், வெள்ளை குஷ்டம், கருங் குஷ்டம் முதலிய நோய்களைக் கொண்டது. ஏனெனில் இந்தக் குற்றங்களெல்லாம் சந்ததிகளுக்கும் ஒட்டும். ஆதலால் உத்தம குலத்தில் தோன்றிய மாசற்ற யுவனும் யுவதியும் மணம் புரிந்துகொள்ள வேண்டும்.

नोद्वहेत्कपिलां कन्यां नाऽधिकाङ्गीं न रोगिणीम् ।
नालोमिकां नातिलोमां न वाचाटान्न पिङ्गलाम् ॥ (மனு. 3-8)

கபில நிறக்கன்னி, தன்னைவிடப் பெரியவள், அதிகப் பெருமனும் பலமும் கொண்டவள், ஈடற்றவள், சீக்குக்காரி, வழுக்கை, கூந்தலில்லாதவள், அதிக மயிருள்ளவள், வம்படிக் கிறவள், பூனைக்கண்ணி. இவர்களையும் மணக்கக் கூடாது.

नर्क्षवृक्षनदीनाम्नीं नान्त्यपर्वतनामिकाम् ।

न पक्ष्यहिप्रेष्यनाम्नीं न च भीषणनामिकाम् ॥ (மனு. 3-9)

அசவனீ, பரணீ, ரோஹிணீ, சித்திரை, ரேவதி போன்ற நட்சத்திரப் பெயர்கள்; துளசி, ரோஜா, சம்பா முதலிய மரப்பெயர்கள்; கங்கா, யமுனா முதலிய நதிப்பெயர்கள்; விந்தியம், இமாசலம். முதலிய மலைப்பெயர்கள்; சாண்டாலி முதலிய கீழ்மையான பெயர்கள்; கோகிலா மைனா முதலிய பறவைப் பெயர்கள்; நாகீ, புஜங்கா முதலிய பாம்புப் பெயர்கள்; மாதோ தாஸி, மீராதாஸி முதலிய அடிமைப் பெயர்கள், பீமகுமாரி, சண்டிகா, காளி முதலிய பயங்கரப் பெயர்களையுடையவர்களுடன் மணம்புரியக் கூடாது. ஏனெனில் இப்பெயர்கள் அருவருப்பானவை; மற்றப் பொருள்களுக்குரியவை.

अव्यङ्गाङ्गीं सौम्यनाम्नीं हंसवारणगामिनीम् ।

तनुलोमकेशदशनां मृद्वङ्गीमुद्वहेत्स्त्रियम् ॥ (மனு. 3-10)

குறையற்ற, கோமளமான அங்கமுடையாள், அழகிய பெயரால், அன்னம் போலும் குஞ்சரம் போலும் நடையாள், கூந்தலழகி, முத்துப் போன்ற பல் வரிசையாள், மெல்லிய உடலாள், அவளையே யுவன் வரிக்கவேண்டும்.

## வயது

**வினா:** விவாக சமயம் எது? எப்படிப்பட்ட மணம் நல்லது?

**விடை:** பெண்ணுக்கு 16 முதல் 24 வயதிற்குள், ஆணுக்கு 24 முதல் 48 வயதிற்குள் விவாக காலமாகும். 16 வயதுப் பெண்ணை 25 வயது ஆடவன் மணப்பது கீழ்த்தரமானது. 18 அல்லது 20 வயதுப் பெண்ணை 35 அல்லது 40 வயதினன் மணப்பது நடுத்தரமானது. 24 வயதுப் பெண்ணை 48 வயது ஆண் மணப்பதே முதல் தரமான திருமணமாகும். பிரமசரியங் காத்து நல்ல கல்வி பயின்று, மேதாவிகளாகி, அறிந்த ஸ்வயம்வரமே சரியான மணவினையாகும். இவ்வாறு பிரமசரியங் காத்துக் கல்வி நிறைந்த மணவினை

புரியும் சதிபதிகள் நிரம்பிய தேசம் இன்புறச் செழிக்கும். பிரமசரிய மில்லாமல், கல்வியையும் அசட்டை செய்து, ஈடில்லாமல் பாலிய விவாகம் புரியும் நாடு துயரில் ஆழும். ஏனெனில் பிரமசரியக் கல்வி நிறைந்தபின் மணப்பதே வாழ்க்கை சிறந்து திருந்தும் வழி. அஃதின்றேல் வாழ்க்கை கெட்டழியும்.

**வினா :**

अष्टवर्षा भवेद् गौरी नववर्षा च रोहिणी ।
दशवर्षा भवेत्कन्या तत ऊर्ध्वं रजस्वला ॥ 1 ॥
(பாராசர ஸ்மிருதி 7-6-8)

माता चैव पिता तस्या ज्येष्ठो भ्राता तथैव च ।
त्रयस्ते नरकं यान्ति दृष्ट्वा कन्यां रजस्वलाम् ॥ 2 ॥
(சீக்ரபோத. 1-54-15)

"எட்டு வயதில் கௌரி, ஒன்பதில் ரோஹிணீ, பத்தில் கன்னிகை, பிறகு ரஜஸ்வலையாகிறாள் பெண். (1)

பத்து வயது வரை மணமாகாத கன்னிகையை, ரஜஸ்வலையாகிப் பார்த்தால் மாதா, பிதா, அண்ணன்மார்கள் நரகில் வீழ்வர். (2) அதாவது பத்து வயதிற்கு முன்பே கன்னிக்கு மணம் புரியவேண்டும்" என்று பராசரர் ஸ்மிருதியிலும், சீக்ர போதத்திலும் சொல்லுகின்றனவே.

**விடை :** உமது பராசரர் கிடக்கட்டும், பிரம்மா சொல்வதைக் கேளும் :

ब्रह्मोवाच

एकक्षणा भवेत् गौरी द्विक्षणेयन्तु रोहिणी ।
त्रिक्षणा सा भवेत्कन्या ह्यत ऊर्ध्वं रजस्वला ॥ 1 ॥
माता पिता तथा भ्राता मातुलो भगिनी स्वका ।
सर्वे ते नरकं यान्ति दृष्ट्वा कन्यां रजस्वलाम् ॥ 2 ॥
(ப்ரம்மபுராணம்)

(பொருள்): (1) "பரமாணு ஒரு தட்டவை ஸ்கலிதமாகும் காலத்திற்கு 'க்ஷணம்' என்பார்கள். பெண் பிறந்து ஒரே க்ஷணத்தில் கௌரியாகிறாள்; இரண்டாவது க்ஷணமே ரோஹிணீ; மூன்றாங் கணத்தில் கன்னி, நான்காங் கணத்தில் ரஜஸ்வலையாகிறாள். (2) இவ்வாறு ரஜஸ்வலையாவதற்குள் கலியாணம் செய்யாவிட்டால் மாதா, பிதா, அண்ணன், அக்காள்,

மாமா ஆகிய ஒருவர் பாக்கியில்லாமல் நரகத்தில் வீழ்வார் !...... கவனம் ''

விஞ : இந்த ஸ்லோகம் பிரமாணமில்லையே ?

விடை : என்ன பிரம்மா சொன்ன இந்தச் சுலோகம் பிரமாண மில்லையென்றால், உன் பராசரர் சுலோகம் பிரமாணமாய் விடுமோ ?

விஞ : ஹ ! ஹா ! பராசரரும் காசிநாதரும் உமக்குப் பிரமாண மில்லையா ? அழகுதான் !

விடை : ஹா ! ஹா ! அழகுதான் ; ஐயா, அழகுதான். உமக்குப் பிரம்மாஜி பிரமாணமில்லையோ ? பராசரரையும் காசிநாத ரையும் விட பிரம்மாஜி பெரியவரில்லையா ? நீர் பிரம்மாஜி யின் சுலோகத்தை ஒப்பாவிட்டால், நான் பராசர காசிநாத சுலோகத்தை ஒப்பவே மாட்டேன்.

விஞ : உமது சுலோகம் அஸம்பவம். குழந்தை பிறப்பதற்கே 1000 விநாடிகள் ஆகுமே. இரண்டு மூன்று விநாடிகளுக்குள் பெண் குழந்தைக்கு எப்படி விவாகம் நடத்துவது. அப்படி செய்வதனாலும் என்ன பலனாகும்.

விடை : எமது சுலோகம் அஸம்பாவமானல் உமதும் அப்படியே. ஏனெனில் எட்டு, ஒன்பது, பத்து வயதிலும் மணம் புரிதல் பலனாகாது. ஏனெனில் இருபத்தைந்து வயதிலேதான் மனிதன் உடல் நிறைவாகி, வீரியம் திண்மை யுறுகிறது. பதினாறு வயதிலேதான் பெண்ணின் உடல் உறுதியாகி கர்பாசயம் திண்மையுற்றுக் குழந்தை பெறத் தயாராகும் ;*

---

* தன்வந்தரி சுச்ருத சாஸ்திரத்தில் சொல்லுகிறார் :

ऊनषोडशवर्षायामप्राप्तः पञ्चविंशतिम् ।
यद्याधत्ते पुमान् गर्भं कुक्षिस्थः स विपद्यते ॥
जातो वा न चिरं जीवेज्जीवेद्वा दुर्बलेन्द्रियः ।
तस्मादत्यन्तबालायां गर्भाधानं न कारयेत् ॥

1. பதினாறு வயதிற்கும் குறைந்த பெண், இருபத்தைந்து வயதிற்குக் குறைந்த ஆணால் கருத்தரித்தால், பூர்ணகாலம்வரை கரு வளராமல், காய் விழும்.

2. குழந்தை பிறந்தாலும் அற்பாயுளே. இருந்தாலும் சோனியாயிருக்கும். ஆதலால் அதிபால்யத்தில் கர்பதானம் செய்யக்கூடாது.

ஆகவே சாஸ்திர நியமமாகவும், சிருஷ்டி நியம முறையிலும் சிந்தித்தால், "16 வயதிற்குக் குறைந்த பெண்ணுக்கும் 25 வயதிற்குக் குறைந்த ஆணுக்கும் மணம் நடக்கக்கூடாது" என்று புலனாகிறது.

எட்டு வயது பெண், குழந்தை பெறாள்; அது முடியாத காரியம். மேலும் கௌரி, ரோஹிணீ, என்ற பெயர்களும் அஸம்பாவிதமே. 'கௌரி' என்றால் அழகி என்பது பொருள். கௌரி என்று பெயர் வைத்த பெண் காளி கறுப்பியாகவும் அமையலாம், மேலும் கௌரி மஹாதேவன் மனைவி, ரோஹிணி வாசுதேவன் மனைவி. புராணிகர் இருவரையும் அன்னை யென்பர். அவர்களைக் கன்னியாக மதித்தால் பிறகு மாதவுடன் விவாகம் புரிவதெப்படி? அது தருமமா? ஆதலால் எனது சுலோகத்தைப் போலவே உமதும் கட்டுமானம். பிரம்மா பெயரால் நான் செய்ததைப்போல், பராசரர் பெயர் வைத்து யாரோ செய்த வேலை அது. இவற்றை விட்டு வேதவாக்கையே ஆதாரமாகக் கொள்ளவேண்டும். மனு சொல்லுகிறார்:

त्रीणि वर्षाण्युदीक्षेत कुमार्यृतुमती सती ।
ऊर्ध्वं तु कालादेतस्माद्विन्देत सदृशं पतिम् ॥ (மனு.9-90)

குமாரி ருதுவாகி மூன்றாண்டுகள் காத்திருக்க வேண்டும். நல்ல யுவனை தேடிக்கொள்ள வேண்டும். முப்பத்தாறு தடவை தூரமான பிறகே சரியான கணவனைத் தேடி, மணக்க வேண்டும். இதற்கு முன்பு கூடாது.

काममामरणात्तिष्ठेत् गृहे कन्यर्तुमत्यपि ।
न चैवैनां प्रयच्छेत्तु गुणहीनाय कर्हिचित् ॥ (மனு. 9-89)

ஈடில்லா மணத்தைவிட ஆணும் பெண்ணும் ஆயுளெல்லாம் தனித்திருப்பதே நலம். எதிரிடையான குணம், நடத்தை உள்ளவர்கள் மணம் புரிந்துக் கொள்ளக் கூடாது. ஆணும் பெண்ணும் தங்கள் குண கர்ம சுபாவத்தில் ஒற்றுமையுள்ளவர்களையே மணக்கவேண்டும்.

## விவாக முறை

**வினா:** விவாகம் மாதா பிதாக்கள் ஆதீனத்தில் நடப்பதா? அல்லது பெண்ணும் பிள்ளையும் விரும்பியபடி நடப்பதா?

**விடை:** பெண்ணும் பிள்ளையும் விரும்பி மணப்பதே நலம். மாதா பிதாக்கள் விவாக ஏற்பாடு செய்தாலும், பெண்ணுக்கும் பிள்ளைக்கும் பிடித்திருக்கவேண்டும். ஏனெனில், தாங்களே தேர்ந்தறிந்து மணப்பதால், சதிபதிகளிடம் அன்பு மிகும், பகையிராது; நல்ல சந்தானமுண்டாகும்.

திருப்தியில்லாத, ஈடில்லாத கலியாணம் கவலையே தரும். விவாகத்திற்கு கன்னியும் வரனுமே முதன்மை; மாதா பிதாக்களன்று. வது வரர் பரஸ்பரம் மகிழ்வுற்றால் வாழ்வு இன்புறும்; இன்றேல் துன்புறும்.

सन्तुष्टो भार्यया भर्त्ता भर्त्रा भार्य्या तथैव च ।
यस्मिन्नेव कुले नित्यं कल्याणं तत्र वै ध्रुवम् ॥ (மனு. 3-60)

மனுவாக்கு :—

எந்தக் குலத்தில் கணவன் மனைவியிடம், மனைவி கணவனிடம் மகிழ்ச்சி கொள்கின்றாரோ, அந்தக் குலத்தில் இன்பம், செல்வம், புகழ் எல்லாமே செழிக்கும். கணவன் மனைவி கலகம் நிறைந்த குலத்தில் துன்பம், தரித்திரம், அமைதியின்மை முதலியன குடிகொள்கின்றன.

ஆகையால் ஆரிய வர்த்தத்தில் பரம்பரையாக நடந்துவரும் ஸ்வயம்வர விவாகமே சிறந்தது. கல்வி, விநயம், சீலம், அழகு, வடிவு, ஆயுள், பலம், குலம், உடலின் பருமன் இவை பொருத்தமாயிருக்கவேண்டும். அப்போதே காதலர் வாழ்க்கை இன்புறும்; இன்றேல் சுகமில்லை; இளமணம் இன்புறாது.

ருக்வேத வாக்கைக் கேளுங்கள் :

1. युवा सुवासाः परिवीत आगात्स उ श्रेयान्भवति जायमानः ।
तं धीरासः कवय उन्नयन्ति स्वाध्यो मनसा देवयन्तः ॥
(ருக். 3-8-4)

2. आ धेनवो धुनयन्तामशिश्वीः शबर्दुघाः शशया अप्रदुग्धाः ।
नव्या नव्या युवतयो भवन्तीर्महद्देवानामसुरत्वमेकम् ॥
(ருக். 3-55-16)

3. पूर्वीरहं शरदः शश्रमाणा दोषा वस्तोरुषसो जरयन्तीः ।
मिनाति श्रियं जरिमा तनूनामप्यनु पत्नीर्वृषणो जगम्युः ॥
(ருக். 1-179-1)

1. எந்த புருஷன் (பரிவீதஃ) உபவீதம் தரித்து, பிரமசரிய விரதம் பூண்டு, கல்வி சிறந்து, அழகும், ஒழுக்கமும் நிறைந்து (ஸுவாஸாஃ) தூய ஆடையையும் (யுவா) நல்ல இளம் பொலிவும் கொண்ட வாலிபம் அடைந்து, குருகுலத்திலிருந்து திரும்பியதும் (ஆகாத்) இல்லறம் புகுவானோ, (ஸ, உ) அவன் கல்வியும்

(ஜாயமானஃ) பிரசித்தியும் (ஶ்ரேயான்) திருவும் புகழும் சிறந்து, (பவதி) விளங்குவான். (ஸ்வாத்யஃ) உத்தம தியான (மனஸா) விக்ஞான சீலரும் (தேவயந்தஃ) மேன்மேலும் அறிவை வளர்க்கும் (தீராஸஃ) தீரர்களான (கவயஃ) கவிகள், புலவர்கள் (தம்) அந்த புருஷனை (உன்னயந்தி) உயர்த்திவைத்து மரியாதை செய்கிறார்கள். பிரமசரியம் கல்வியில்லாமல் விவாமணம் புரிவோர் சீர் கெட்டு அழிவர். அவர்களை அறிஞர் மதியார்.

2. (அப்ரதுக்தாஃ) இன்னும் கறக்கப்படாத (தேனவஃ) காமதேனு போன்று விளங்கும். (அஶிஶ்வீஃ) பால்ய நிலையை நீங்கி வயதுவந்த (ஶபர்துகாஃ) சகல விவகாரங்களின் ஞானமும் பெற்று மணவாழ்வின் பொறுப்பேற்கத்தக்க (ஶஶயாஃ) தமரிப்பருவத்தைத் தாண்டிய (நவ்யா நவ்யா) பூரண பிரமசரியத்துடன் புதுபுது கல்விகளைக் கற்று, அறிவும் பொலிவும் மிகுந்து (பவந்தீ) விளங்கும் (யுவதயஃ) குணவதிகளான யுவதிகள் (தேவானும்) பூரண பிரமசரிய நியமத்துடன் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கும் வித்வான்களை (ஏகம்) ஒருமை யாருடைய (மஹன்) மகா (அஸுரத்வம்) சாஸ்திரக் கல்வி நிறைந்து விளங்கும் (தமக்கு ஈடான) யுவர்களை மணம் புரிந்து (அது நயந்தாம்) கர்பம் தரிப்பார்களாக! மக்களைப் பெறுவார்களாக!

கன்னிகை தன் பால்ய பருவத்தில் மனதிலுங்கூட ஆண்களைப்பற்றி நினைக்கக்கூடாது. ஏனெனில் பால்ய விவாகத்தால் ஆண்களைவிட பெண்களுக்குக் கெடுதல் அதிகம்.

3. (நு) வேகமும் (ஶஶ்ரமணஃ) சுறுசுறுப்பும், பலமும் (வ்ருஷணஃ) வீர்யபலமும், வாலிபத் தெம்புமுடைய இளங்காளைகள் (பத்னீஃ) மனங்கொண்ட பத்தினிகளை (ஜகம்யுஃ) அடைந்து, மணந்து நூறாண்டு அல்லது அதற்கும் அதிக ஆண்டுகள் இன்புற்று, நன்மக்களைப் பெற்று வாழ்வார்கள்; அவ்வாறே ஆண் பெண் அனைவரும் வாழ்க! (பூர்வீஃ) கடந்து சென்ற (ஶாதஃ) பருவமும், வருடங்களும் (ஜரயந்தீஃ) மூப்பளிக்கும் (உஷஸஃ) விடியற்காலையும் (வஸ்தோஃ) பகல் (தோஷா) இரவும் (தநூனும்) உடல் (ஸ்ரீயம்) வனப்பப் பறித்து (ஜரிமா) முதுமையுறச் செய்வதால் (அஹம்) நான்—ஆண், பெண், (உ) உயர்முறையில் (அபி) நிச்சயமாக பிரமசரியத்தால் உடலை உறுதிச் செய்து, கல்வியும் ஒழுக்கமும் சிறந்து, இளம்பொலிவும் பலமும் பெற்ற பிறகே மணம்புரிவேன்: இந்த விதியை வழுவுவோர் வேதவிரோதிகள்; அவர்கள் இன்புறுவதில்லை.

ரிஷி, முனிகள், அரசர், மஹாராஜாக்கள் மற்ற ஜனங்கள் அனைவரும் மேற்சொல்லிய படியே பிரமசரியத்தால், கல்வியறிவும் உடலுறுதியும் பெற்ற பிறகு, சுயம்வர மணம் புரிந்தமட்டும், இந் நாடு செழித்து முன்னேறியது. பிரமசரியக் கல்வியின்றி, இள மணமும் புரிந்து வரவே, இந்தியா வரவரச் சீர்கெட்டழிந்தது. இத்தீய பழக்கத்தை ஒழித்து, அறிவு, குண கர்ம சுபாவத்தா லான வர்ண தர்மத்தின் படி, நல்லோர் மேற்குறித்தவாறே சுயம் வர மணம்புரிக ; நாடு முன்னேறும்.

**வினு :** தந்தை, தாய் பிராமணர்களாயிருந்தால் குழந்தைகள் பிராமண—பிராமணியாகும். பெற்றோர் வேறு வர்ணத்தவர் களாயிருந்தால், அவர்கள் சந்தானம் என்றும் பிராமணராக முடியுமா? (பிராமணன் மகனே பிராமணன் ; மற்றோர் மகன் பிராமணனாக முடியுமா?)

**விடை :** முடியும் ; முன்னே பலர் ஆனார், ஆகிறார், இன்னும் ஆவார். சாந்தோக்ய உபநிஷத்தில் வரும் ஜாபாலி இன்ன குலமெனத் தெரியாது ; மஹாபாரதத்தில் விசுவாமித்திரர் க்ஷத்திரிய வர்ணம், மாதங்கரிஷி சண்டாளகுலம்—இவர்கள் அந்தணரானார்கள். இன்றும் உத்தம வித்யாசீலர் பிராமண ராக மதிக்கப்படுகின்றார்கள் ; மூடர் சூத்ரராக மதிக்கப்படு கிறார்கள் ; இனியும் அவ்வாறே நடைபெறும்.

**வினு :** நன்றாயிருக்கிறதே ! ரஜ—வீரியத்தில் உண்டான ஒருவர் சரீரம் மாறி இன்னொரு வர்ணத்தவராக எப்படி ஆகமுடியும்?

**விடை :** ரஜ—வீரியச் சேர்க்கையால் மட்டும் பிராமண சரீரம் வருவதில்லை. மனு சொல்லுகிறார் கேளும் :—

स्वाध्यायेन जपैर्होमैस्त्रैविद्येनेज्यया सुतैः ।
महायज्ञैश्च यज्ञैश्च ब्राह्मीयं क्रियते तनुः ॥ (மனு. 2-28)

இந்த சுலோகத்தின் பொருள் முன்பே வந்துள்ளது. ஆனாலும் இங்கு கருத்தைத்தருவோம். (ஸ்வாத்யாயேன) கற்று, கற்பித்தல் (ஜபை:) ஜபம், ஆத்மவிசாரம் (ஹோமை) நானுவித ஹோமம் செய்தல் (த்ரைவித்யேன) ஸப்தார்த்தம், ஸ்வரோச் சாரண ஸஹிதம் வேதபாராயணம் (இஜ்யயா) பௌர்ணமாச, இஷ்டி யக்ஞம் முதலியவைகளை அனுஷ்டித்தல் (ஸுதை:) பிரமசரியக் கல்வியானதும் முறைப்படி மணம்புரிந்து நன் மக்களைப் பெறுதல் (மஹாயஜ்ஞைஶ்ச) பிரஹ்ம, தேவ, பிதுர்,

அதிதி, வைஸ்வதேவாதி யக்ஞங்களைச் செய்தல் (யஜ்ஞைஶ்ச) அக்னிஷ்டோமம் செய்தல், வித்வான்களுடன் கூடல், மெய்யுரை, பரோபகாரம் முதலியன காத்தல், சிற்பம் முதலிய கலைப்பயிற்சி, துஷ்டாசாரத்தை விலக்கி, சிறந்த நன்னெறியில் நடத்தல்— இவற்றால் (இயம் தனுஃ) இவ்வுடல் (ப்ராஹ்மீ) பிராஹ்மணீயம் (க்ரியதே) அடைகிறது. என்ன இந்த சுலோகம் தங்களுக்குத் தெரியாதா? தெரிந்தும் ஏன் ரஜ—வீரியச் சேர்க்கையால் வர்ண பேதமுண்டாவதாக நினைக்கிறீர்? நான் மட்டுமன்று; பரம்பரையாகப் பலர் இவ்வாறே கருதுகின்றனர்.

**வினா:** என்ன நீர் பரம்பரையைக் கண்டிக்கிறீரா?

**விடை:** உன் விபரீத அர்த்தத்தைக் கண்டிக்கிறேன்.

**வினா:** எனது விபரீதம்; உமது நேர்மை என்பதை எப்படிக் கண்டீர்? காட்டும் பிரமாணம்!

**விடை:** நீ பரம்பரை யென்பது ஆறேழு தலைமுறை வழக்கந்தான்; நான் சொல்வது வேதகாலம். உலக சிருஷ்டி காலத்திலிருந்து வழிவழியாக வந்தது. உலகில் நல்ல பிள்ளை பெற்றோருக்குக் கெட்ட பிள்ளை பிறக்கிறது; நல்ல பிள்ளைகளுக்குக் கெட்ட பெற்றோர் அமைகின்றனர். சில வேளை இருவரும் நல்லவராகவோ கெட்டவராகவோ காண்கின்றனர். அப்படியிருக்கும் போது, பிராமணப் பிள்ளைகள் ஏன் சூத்ரராகக் கூடாது; சூத்ரர் ஏன் பிராமணராகக் கூடாது? நீங்களெல்லாம் பிரமை பிடித்தலைகிறீர்கள். மனு மஹராஜ் சொல்வதைக் கேளுங்கள்.

येनास्य पितरो याता येन याताः पितामहाः ।
तेन यायात्सतां मार्गं तेन गच्छन्न रिष्यते ॥ (மனு. 4-178)

தகப்பன் பாட்டன் வழியே தனயர் செல்க; ஆனால், சத்திய வந்தர்களான முன்னோர் வழியே பின்பற்றுக! தீயரானால் அவர் வழிச் செல்லற்க. ஏனெனில் உத்தம தர்மாத்மாக்கள் வழியே சென்றால் துயரில்லை. இதை அறியவில்லையா?

**வினா:** ஆம். அறிகிறோம்.

**விடை:** இறைவன் விளக்கிய (வேதநெறியே) ஸநாதன தர்மம்; அதற்கு எதிரானதெல்லாம் ஸநாதனமே அன்று, இதை எல்லாரும் அறியவேண்டுமா இல்லையா?

**வினா:** ஆம். அவசியம்.

விடை: இதை மறுப்பவனை இவ்வாறு கேட்க வேண்டும். ஒருவன் தந்தை ஏழை; மகன் பணக்காரனானான்; என்றால் பிதாவின் தரித்திராவஸ்தையில் அபிமானங் கொண்டு, பணத்தை தூர எறிந்துவிடுவதா? அப்பன் குருடானால் பிள்ளையும் கண்ணை அவித்துக் கொள்வதா? அப்பன் தீச்செயல் செய்தால் பிள்ளையும் செய்யவேண்டுமா? இல்லை இல்லை; நற்செயலே செய்து, தீச்செயலை நீக்குதல் மனிதர் கடமையாகும். பிறவியால் ஜாதி பேசி குண கர்மத்தை மறுப்பவனை இப்படிக் கேட்க வேண்டும். "ஐயா, ஒரு பிராமணன், கிறிஸ்து, முஸல்மான் மதத்தில் சேர்ந்தால் அவனை பிராமணன் என்பதில்லையே; ஏன்? அவன் பிராஹ்மண ஆசாரங்களை விட்டதனால் என்பீர். ஆதலால் பிறவியாலன்று, ஆசார சீலத்தினாலேதான், உத்தம கர்மத்தினாலேதான் ஒருவனை பிராமணனெனலாம். உத்தம குண கர்ம சுபாவங் கொண்டவன் பிறவியில் கீழா யினும், ஒழுக்கத்தில் மேலான அந்தணனேயாவான். மேலான பிறப்பாளன் கீழான செயல் செய்தால், அவன் கீழ்மகனே.

வினா:

ब्राह्मणोऽस्य मुखमासीद् बाहू राजन्यः कृतः।

ऊरू तदस्य यद्वैश्यः पद्भ्यां शूद्रो अजायत ॥ (யஜுர். 31-11)

யஜுர் வேதம் 31ம் அத்தியாயம் 11ம் மந்திரம் சொல்லு கிறது.

"பிராமணன் பரம புருஷனுடைய முகத்திலிருந்து உண்டானான், க்ஷத்திரியன் புஜத்திலிருந்து, வைசியன் தொடையிலிருந்து, சூத்ரன் பாதங்களிலிருந்து உண்டானார்." முகம் அல்லது புயம் தொடையாகாது; பாதம் முகமாகாது; அதுபோல் பிராமணன் க்ஷத்ரியாதிகளாகான்; க்ஷத்ரியாதிகள் பிராமணராகார்.

விடை: இம்மந்திரத்திற்கு நீர் செய்த பொருள் சரியில்லை. ஏனெனில் "புருஷன்" என்பது அருவாக நிறைந்த பரமாத்மாவைக் குறிக்கும். அருவான பொருளுக்கு முகம், தோள் முதலிய உறுப்புக்களில்லை; அப்படி உறுப்புகளிருந் தால், இறைவன் எங்கும் நிறைந்து, எல்லாம் வல்லவனாய், உலகைப் படைத்து, காத்து அழித்து, ஜீவர்களின்

நல்—தீவினைக் கேற்ற நீதி செய்த, எல்லாம் அறிந்தவனும், பிறப்பிறப்பற்ற சிறப்புடையோனை முடியாது. ஆதலால் இந்த மந்திரத்தின் உண்மைப் பொருள் இதுவே: (அஸ்ய) நிறைவான பரமாத்மாவின் படைப்பில், முகத்தைப் போன்று (அறிவொழுக்கங்களாற் சிறந்த) உத்தமன் (பிராஹ்மண:) பிராமணன்; (பாஹு) "பாஹுர்வை பலம் வாஹுர்வை வீர்யம்" (ஸதபதப்ராஹ்மணம்) பாஹு என்பது பலம், வீர்யம். இறைவன் படைப்பில் பலவானும், வீறு பெற்றவனும் (ராஜன்ய:) க்ஷத்திரியன்; ஊரு என்பது தொடை. தொடையின் பலத்தால் தேச தேசமாகச் சென்று வந்து வாணிகஞ் செய்து சமுதாயச் செல்வத்தைப் பெருக்குகிறவன் (வைச்ய:) வைசியன்; (பத்ப்யாம்) பாதத்தைப் போல மிகத் தாழ்வான நிலையில் அறிவு குறைந்திருக்கிறவன் (சூத்ர) சூத்ரன்; அதுவுமன்றி ஸதபதப்ராஹ்மணத்தின் கருத்தும், பொருளும் இதுவே:

यस्मादेते मुख्यास्तस्मान्मुखतो ह्यसृज्यन्त । इत्यादि ।

(சதபதம். 6-1-1-10)

பிராமணர் ஜனசமுதாயத்தின் முக்கியத் தலைவர்களாதலால் முகமெனப்பட்டனர். உறுப்புகளில் தலை சிறந்தது. அதுபோல, நிறைவான கல்வியும், மேலான குணமும், நற்செயலும் நல்லியல்பும், உடைய தலையான மனிதனே பிராமணன் எனப் படுகிறான். அருவான பரமேசனுக்கு முகாதி அங்கங்கள் இல்லையாதலால், பிராமணன் அவன் முகத்திலிருந்து பிறந்தான் என்பது அபத்தம். அது மலடி தன் மகனுக்கு மணம் புரிந்தாள் என்பது போன்று பொய்யாகும். ஒருவன் எதிலிருந்து பிறக்கிறானோ அந்த உருக்கொள்ளுகிறான். பிராமணன் முகத்திலிருந்தே பிறந்தான் என்றால் அவன் உருவம் முகம்போல உருண்டையாக மட்டும் இருக்க வேண்டும். க்ஷத்திரியன் வடிவம் புஜமாயிருக்க வேண்டும்; வைசியன் உருவம் தொடை போலும், சூத்ரன் உருவம் அடிபோலும் (பாதம்போல்) இருக்க வேண்டும்; அப்படியில்லை. நீ சொல்லுவது போலவே பிறந்ததாக வைத்துக் கொள்ளுவோம். நீ பிராமணன்! யார் முகத்திலிருந்தும் பிறக்கவில்லை; எல்லோரையும் போல் தாயின் கர்ப்பாசயத்திலிருந்தே பிறந்தாய். நீ புருஷன் முகத்தில் பிறக்காமல் பிராமணன் என்று உன்னை அபிமானிப்பதேன்? ஆதலால் உன்

அர்த்தம் வியர்த்தம். நான் சொல்வதே சரி. பிறரும் அப்படியே சொல்லியிருக்கிறார்கள்.

शूद्रो ब्राह्मणतामेति ब्राह्मणश्चैति शूद्रताम् ।
क्षत्रियाज्जातमेवन्तु विद्याद्वैश्यात्तथैव च ॥ (மனு. 10-65)

சூத்ரனாகப் பிறந்த போதிலும் குண கர்ம சுபாவங்களால் அவன் பிராமணன், க்ஷத்திரியன், வைசியனாக ஆகிறான். அப்படியே பிராமணன், க்ஷத்திரியன், வைசியன் குலத்திலுதித்தும் கீழான குணகர்ம வியல்புடையனானால் அவன் சூத்ரனாகிறான். அதேமாதிரி க்ஷத்திரியனும் அந்தண்மையால் பிராமணனாவான்; கீழியல்பினர் கீழானவராவார்கள். அதாவது நான்கு வர்ணங்களில் எவனெவன் எந்தெந்த வர்ண தருமத்தைக் காக்கிறானோ, அததுவாகிறான். சாதி பிறப்பினாலன்று, ஒழுக்கத்தினாலமைவது. ஆபஸ்தம்ப சூத்திரத்தைக் கேள்:—

धर्मचर्य्यया जघन्यो वर्णः पूर्वं पूर्वं वर्णमापद्यते जातिपरिवृत्तौ ॥ 1 ॥
अधर्मचर्य्यया पूर्वो वर्णो जघन्यं जघन्यं वर्णमापद्यते जातिपरिवृत्तौ ॥ 2 ॥

ஆபஸ்தம்ப (2-5-11-10, 11)

தர்மாசரணத்தால் கீழான வர்ணத்தானும் உத்தம வர்ணத்தை அடைகிறான். ஒருவன் எதற்குத் தகுதியோ அந்த வருணத்தில் வைத்து மதிக்கப்படுவான். (1). அதர்மாசரணத்தான் உயர் (பூர்வ) குலத்திற் பிறந்தவனேனும் கீழ்வரிசையில் வைத்தெண்ணப்படுவான். அவனை அந்த வர்ணமென்றே சொல்ல வேண்டும். (2) ஆண்களைப் போலவே பெண்களையும் இவ்வாறே வைத்து மதிக்கவேண்டும். இவ்வாறானால் அவரவர் தத்தமது வர்ணதர்மத்தைப் பழுதில்லாமல் பாதுகாத்துப் பரம சுத்தர்களாக வாழ்ந்து மேலோங்க முயல்வார்கள். அதனால் எந்த வர்ணத்திற்கும் நிந்தையும் கீழ்த்தனமும் உண்டாவதில்லை.

வினா: ஒருவருக்கு ஒரே மகன் அல்லது மகள்; அவர்களும் பிற ஜாதியில் கலந்து போனால், பெற்றோருக்கு யார் சேவை செய்வார்? வம்சச் சேதம் உண்டாகாதா? இதற்கென்ன வழி சொல்லுகிறீர்?

விடை:—எவர் சேவையும் வருந்தாது; வம்ச சேதமும் ஆகாது. ஏனெனில் தமது மகன் அல்லது மகளுக்குப் பதில் வித்யா சபையும் ராஜசபையும்* வர்ணத்திற்கேற்ற குழந்தைகளைத் தரும். ஆதலால் சமுதாயக் குழப்பம் ஏற்படாது. பெண்

* இச்சபைகளின் விளக்கத்தை ஆறும் அத்தியாயத்தில் காண்க.

களின் பதினாறுவது வயதிலும், ஆண்களின் இருபத்தைந்தாம் வயதிலும், அவரவர் கல்வி குணம் கர்மம் சுபாவம் முதலியவைகளைச் சோதித்து, தகுதி பார்த்து, வர்ணத்தைத் தீர்மானிக்க வேண்டும். அந்த முறைப்படியே பிரம்ம வர்ணம் பிராஹ்மணியுடன், க்ஷத்திரிய வர்ணம் க்ஷத்திரியையுடன், வைசிய வர்ணம் வைசியையுடனும், சூத்ர வர்ணம் சூத்ரருடனும் மணங்களைச் செய்து வேண்டும். அப்போது அவரவர் வர்ணத்தைப் போற்றி ஒருவருக்கொருவர் அன்புடன் அவரவர் கடமையைச் செய்வார்கள்.

இனி நான்கு வர்ணங்களின் குணம், கர்மம், கடமைகளை ஆராய்வோம்.

## நால் வருணத்தார் கடமைகள்

மனு விதிப்படி :

(அ) अध्यापनमध्ययनं यजनं याजनं तथा ।
दानं प्रतिग्रहश्चैव ब्राह्मणानामकल्पयत् ॥ (மனு. 1-88)

(ஆ) शमो दमस्तपः शौचं क्षान्तिरार्जवमेव च ।
ज्ञानं विज्ञानमास्तिक्यं ब्रह्मकर्म स्वभावजम् ॥ (பக. கீதை. 18-42)

ஓதல், ஓதுவித்தல், வேள்வி செய்தல், வேள்வி செய்வித்தல், ஈதல், ஏற்றல் ஆகிய ஆறும் அந்தணர் கடமை. ஆனால் "प्रतिग्रहः प्रत्यवरः" (மனு)—பிறரிடம் கையேந்தி வாங்குதல் தாழ்வு என்றும் மனு சொல்லுகிருர். (அ)

1 (ஶம:) மனத்தை அதர்மத்திற் புகாமல் சமமாகக் காத்தல், 2 (தம:) புலன்கள் தீய ஆசைகொள்ளாமல் மனத்தைச் சமநிலையில் நிறுத்தி, அதர்மத்தில் சுழலாது இந்திரியங்களை அடக்கி யாளல், 3 (தப:) பிரஹ்மசரியாதி விரதங்களைக் காத்து ஜிதேந்திரியனாகத் தவம்புரிதல், 4 (ஶௌச) உள்ளே மண்டிய ராகத்வேஷங்களையும் உடலழுக்குகளையும் கழுவித் தூயனாயிருத்தல்.* அதாவது உண்மை பொய் எதுவென ஆய்ந்தறிந்து,

* மனு சொல்கிருர் :

अद्भिर्गात्राणि शुध्यन्ति मनः सत्येन शुध्यति ।
विद्यातपोभ्यां भूतात्मा बुद्धिर्ज्ञानेन शुध्यति ॥ (மனு. 5-109)

குளிப்பதால் தேக சுத்தியாகும், மனம் சத்தியத்தால் சுத்தியாகும், பூதாத்மா வித்தையாலும் தவத்தாலும் சுத்தியாகும், புத்தி ஞானத்தால் சுத்தியாகும். இத்தகைய தூய்மை பெறுதல் அந்தணர் கடமையாம்.

உண்மையைப் போற்றி பொய்யை விட்டுவிடுதலால் உண்மையான தூய்மை பெறமுடியும். 5 (சாந்தி) இசை வசை, சுக துக்கம், குளிர் வெப்பம், பசி தாகம், மானாபமானம், நலந்தீங்கு, இன்பம் இடும்பை ஆகிய இரு விகாரங்களில் மாறுபடாமல் திடவுறுதியுடன் தனது தருமத்தைக் காக்கும் சாந்தம் அமைதி), 6. (ஆர்ஜவ) இனிய நன்னடை, எளிமை, செருக்கின்மை கொண்ட நேரிய ஒழுக்கம்—ஆர்ஜவம், 7 (ஜ்ஞானம்) எல்லா வேத சாஸ்திரங்களையும் நிறைவாகக் கற்று, கற்பிக்கும் திறமை பெற்று, ஜடசேதன வஸ்து நிச்சயத்துடன் அறிவறிந்தொழுகும் ஞானம், 8 (விஜ்ஞானம்) இயற்கை முதல் இறைவன் வரையில் உள்ள எல்லாப் பொருள்களின் தன்மையும் அறிந்து அனைத்தையும் தக்கபடி பயன்படுத்துவது விஞ்ஞானம். 9 (ஆஸ்திக்யம்) வேதம், இறைவன், முக்தி, முன்பின் பிறப்பு, தர்மம், வித்தை, ஸத்ஸங்கம், மாதா, பிதா ஆசார்ய அதிதி சேவை, இவற்றை இகழாது, கைவிடாது போற்றுதல் ஆஸ்திக்யம், நம்பிக்கை—இவையே பிரம்ம கர்மம் (பிராமணர் கடமை) என்று கீதை சொல்லுகிறது (ஆ). மனு சொல்லிய ஆறும், இந்த ஒன்பதும் சேர்ந்து பதினைந்து கடமைகள் அந்தணருக்குரியன.

## க்ஷத்திரியர் கடமைகள் பதினொன்றாகும்

(அ) प्रजानां रक्षणं दानमिज्याध्ययनमेव च ।
विषयेष्वप्रसक्तिश्च क्षत्रियस्य समासतः ॥ (மனு. 1-89)

(ஆ) शौर्यं तेजो धृतिर्दाक्ष्यं युद्धे चाप्यपलायनम् ।
दानमीश्वरभावश्च क्षात्रं कर्म स्वभावजम् ॥

(பகவத் கீதை. 18-43)

1. (ப்ரஜாநாம் ரக்ஷணம்) நல்லோரைப் போற்றித் தீயரை அடக்கி ஓரகமின்றி பொது ஜனங்களைக் காப்பாற்றல் 2. (தான) அறிவு, அறம், உண்மை, நீதி, தக்காரைப் போற்றல்—ஆகிய வழியில் பொருளை அளித்தல் 3. (இஜ்யா) அக்னி ஹோத்ராதி யக்ஞங்களைச் செய்தல், செய்வித்தல், 4. (அத்யயன) வேதாதி சாஸ்திரங்களைப் படித்தல், படிப்பித்தல் 5. (விஷயேஷ்வ) விஷயாதிகளில் பிடிப்புறாமல் ஜிதேந்திரியனாகி உடல் மன ஆத்ம உறுதி பெறுதல் (அ), 6. (சௌர்ய) ஆயிரக்கணக்கான பகைவர் சூழ்ந்தாலும் அஞ்சாதெதிர்த்துப் போர்புரியும்

சௌரியம் 7. (தேஜ:) சோர்வின்றி திடமாக சக்திப் பொலிவுடன் தேஜஸ்வியாயிருத்தல் 8. (த்ருதி) அஞ்சாத்துணிவு, 9. (தாக்ஷ்ய) அரசியல் விவகாரங்களில் நீதி யறிந்து சாதுர்யமாக நடத்தல், 10. (யுத்தே) களத்தில் புறங்காட்டாமல் போர்க்கலை யறிந்து பகைவரை வெல்லல் 11. (தானமீஸ்வாபாவ) வரையாத பயனுள்ள தானங்களைச் செய்தல், எல்லாரிடமும் ஓரகமின்றி நேர்மையாகப் பழகி நீதி செய்தல் இவையே க்ஷத்திரியர் கடமை யாகும். (ஆ)

## வைசியர் கடமைகள்

पशूनां रक्षणं दानमिज्याध्ययनमेव च ।
वणिक्पथं कुसीदं च वैश्यस्य कृषिमेव च ॥ (மனு. 1-90)

(1) பசுச் செல்வத்தை வைத்து, வளர்த்து பெருக்குதல், (2) உண்மைக் கல்வியோங்க தானஞ் செய்தல், (3) அக்னி ஹோத்ராதி யக்ஞம் செய்தல், (4) வேதாதி சாஸ்திரங்களைப் படித்தல், (5) எல்லா வகையான பயனுள்ள வியாபாரங்களையும் செய்தல்; வட்டி வியாபாரம் செய்தல். அதாவது நூறுக்கு 4, 6, 8 அல்லது 16 வரை வருடத்திற்கு வட்டி வாங்கலாம். இதைவிட அதிகமாகக்கூடாது. நூறு வருடங்களானாலும் 1 ரூபாய்க்கு இரண்டு ரூபாய் கொடுக்கப்பட்டால், அசலும் வந்ததாகக் கருதி அதன் பிறகு வட்டி வாங்கலாகாது. (6) நிலம் பயிரிடல் முதலியவைகளாம்.

## சூத்ரரின் கடமை

एकमेव तु शूद्रस्य प्रभुः कर्म समादिशत् ।
एतेषामेव वर्णानां शुश्रूषामनसूयया ॥ (மனு. 1-91)

செருக்கு, நிந்தை, பொறாமை யில்லாமல், இயன்ற மட்டும் பிரம க்ஷத்திரிய வைசியருக்குப் பணிந்து, பொதுநலத் தொண்டு செய்தலே சூத்ரரின் ஒரே கடமையாகும்.

இவ்வாறு நான்கு வர்ணங்களின் கடமைகளும் சொல்லப் பெற்றன. இந்த வர்ண பேதம் பிறப்பினால் அன்று, குணகர்ம சுபாவத்தாலும் அறிவாற்றலாலும் வருவது. ஒவ்வொருவரும் அவரவர் தகுதிக் கேற்ற வர்ணத்தில் மதிக்கப்பெறுவர். இந்த முறையில் அறிவு முன்னேற்றம் எய்தும். உத்தம வர்ணத்தவர்

தமது பிள்ளைகள் மூடர்களானால் சூத்ரராக வேண்டியதுதான் என்றும், பிள்ளைகள் தாம் சரியாகப் படித்து வித்வான்களாகா விட்டால் இழி நிலையடைவாரென்றும் பயந்து, தமது கல்வி யொழுக்கங்களை உயிர்போலக் காப்பார்கள். கீழ் வகுப்பினர் அந்தண்மை யெய்த மகிழ்வுடன் முயல்வார்கள். கல்விக்கும் தருமப் பிரசாரத்திற்கும் அந்தணருக்கு அதிகாரம் தருவது நலம். ஏனெனில் அறிவிலும் அறநெறியிலும் சிறந்த அவர்கள் அக்கடமையை நன்றாக நிறைவேற்ற முடியும். க்ஷத்திரியருக்கு அரசியல் அதிகாரம் தந்தால் அரசிற்குக் கேடும் இடரும் வராமலிருக்கும். பசு வளர்த்தல், வாணிகம் முதலியவற்றை வைசியரிடம் ஒப்பிக்க வேண்டும்; அவர்களே இக்காரியங்களை நன்றாக நிறைவேற்றுவார்கள். சூத்ரர் அதிகக் கல்வியில்லாத வர்களாதலால், தேகப் பிரயாசைப்பட்டு, சமுதாயத் தொண்டு செய்யலாம். இவ்வாறு அவரவர் தகுதிக்குத் தக்கபடி வர்ணமும் கடமையும் அமைந்து, அவரவருக்கு ஏற்ற அதிகாரந் தந்து நாட்டை முன்னேற்றல் அரசர் முதலியோர் கடமை யாகும்.

## விவாஹ லக்ஷணம்

ब्राह्मो दैवस्तथैवार्षः प्राजापत्यस्तथाऽसुरः ।
गान्धर्वो राक्षसश्चैव पैशाचश्चाष्टमोऽधमः ॥ (மனு. 6-21)

விவாகம் எட்டு வகையாகும்: பிரஹ்ம, தேவ, ஆர்ஷ, பிராஜாபத்ய, அசுர, காந்தர்வ, ராக்ஷஸ, பைசாச விவாகங்கள்.

1. பிரஹ்ம விவாகம்: பிரமசரியத்தால் நிறைவான கல்வியும் அறநெறியும், சீலமும் பொலியும் வாலிபனும் கன்னியும் ஒருவருக் கொருவர் மன மொப்பிச் செய்து கொள்வதாகும்.

2. தேவம்: பெரிய வேள்வியில் ரித்விக்காயிருந்து காரியம் நடத்தும் அறிஞருக்கு, பெண்ணை நன்றாயலங்கரித்துத் தந்தை தருவது தேவ விவாகமாகும்.

3. ஆர்ஷம்: வரனிடம் ஏதாவது பணம் வாங்கிக் கொண்டு பெண்ணைத் தருதல் ஆர்ஷம்.

4. பிரஜாபத்யம்: விவாக தர்மாபிவிருத்திக்கே இருவரும் மனமொப்பிக் கூடுதல் பிராஜாபத்யம்.

5. ஆஸுர: வரனும் கன்னியும் ஏதாவது வாங்கிக் கொண்டு மணம் புரிதல் ஆஸுரம்.

6. காந்தர்வ: நியமமின்றி காலமின்றி காமத்தால் ஒருவரையொருவர் விரும்பிச் சேர்தல் காந்தர்வம்

7. ராக்ஷஸ: போர் புரிந்து பலாத்காரமாகத் தூக்கிச் சென்று அல்லது வஞ்சகத்தால் பெண்ணைக் கூடல் ராக்ஷஸம்.

8. பைசாச: உறங்கும் அல்லது மது மயக்கங் கொள்ளும் அல்லது பைத்தியப் பெண்ணைப் பலாத்காரமாகக் கூடல் பைசாசம்.

இந்த எட்டு வகை மணங்களில் பிரஹ்ம விவாகமே மிகச் சிறந்தது; தேவமும் பிரஜாபத்யமும் நடுத்தரம்; ஆர்ஷ, ஆஸுர, காந்தர்வ விவாகங்கள் கீழ்த்தரமானவை; ராக்ஷஸம் அதமம்; பைசாசம் அதி அயோக்யத்தனமானது.

## விவாக முறை

கலியாணமாகுமுன் ஆணும் பெண்ணும் தனியே சந்திக்கக் கூடாது. அதனால் கெடுதலுண்டாகும், தூஷணைக்கு இடமாகும். இரு பாலாரும் பிரமசரியக் கல்வி முடிய ஓராண்டு அல்லது ஆறு மாதத்திற்கு முன் விவாக காலமாகும். அச்சமயம், பெண்ணின் படத்தைப் பிள்ளையின் கலாசாலைத் தலைவனுக்கும், பிள்ளையின் புகைப் படத்தைப் பெண் கலாசாலைத் தலைவிக்கும் அனுப்பவேண்டும். பிறந்தது முதல் நாளது வரையில் அவரவர் வாழ்க்கை நிகழ்ச்சிகளைத் தாங்கிய இதிகாசக் குறிப்பு அல்லது தினசரிக் குறிப்புகளையும் பள்ளித் தலைவருக்கு அனுப்ப வேண்டும். அதிலிருந்து இருபாலாரின் குண கர்ம சுபாவம் தெரியும். எல்லாம் பொருந்தி யிருந்தால், ஒருவர் படம் குறிப்புகளை மற்றொருவரிடம் தந்து பார்க்கச் சொல்லவேண்டும். பிறகு சம்மதம் கேட்கவேண்டும். இருவருக்கும், மனம் பிடித்துச் சரியென்றால், படிப்பை முடித்து, ஆசாரியன் ஆசியுடன் வீடு திரும்பலாம். அவர்கள் விரும்பினால் ஆசாரியர் முன்னிலையிலேயே மணவினையை முடிக்கலாம். இன்றேல் மாதா பிதாக்கள் வீட்டில் திருமணம் நடத்தல் நலம். வது வரர் ஆசாரியார், பெற்றோர், அறிஞர் முன்னிலையில் பேசிக்கொள்ளவும், சாஸ்திரார்த்தம் செய்யவும் தூண்டவேண்டும். இரகசிய விஷயங்களை ஒருவருக்கொருவர் எழுதி தெரிவிக்கச் சொல்லலாம். சந்தேகங்களைக் கேட்டறியச் சொல்லவேண்டும். இருவரும் உறுதியான

அன்பு தளிர்த்து கலியாணம் செய்துகொள்ள ஆவலானால், அவர்களுக்கு அன்று முதல் புஷ்டியான நல்லுணவளித்து, உடலைத் திடமாக்கவேண்டும். பிரமசரிய விரதத்தாலும் படிப்பின் கடுமையாலும் இளைத்த அவர்கள் உடல், வளர்பிறைபோல் பெருகச் செய்யவேண்டும். பெண் தூரங் குளித்த பிறகு குறித்த நாளில் திருமண மண்டபம் அமைத்து, ஓம குண்டம் நாட்டி, தீ வளர்த்து, அதில் நெய்யும் நல்ல வாசனைச் சரக்குகளும் போட்டு ஓமம் செய்க. ஆண் பெண் அறிஞரையும் புலவரையும் ஏற்று மரியாதை செய்க. கர்ப்பதானத்திற்கு ஏற்ற சமயத்தில், ஸம்ஸ்கார விதியை அனுசரித்து, எல்லாக் கருமங்களையும் செய்து, நள்ளிரவு அல்லது பத்து மணிக்கு எல்லார் முன்பும் சந்தோஷமாக இருபாலாரும் பாணிக்கிரகணம் முதல் விவாகச் சடங்குகளெல்லாம் முடித்து, தனியிடத்தில் கூடவேண்டும். புருஷன் கலவி முறைப்படி வீர்யத்தை அளிக்கவேண்டும்; மனைவி அதை முறைப்படி இழுத்துக்கொள்ளவேண்டும். இயன்ற மட்டும் விந்தைக் காக்கவேண்டும். ஏனென்றால் வீரியம் அபூர்வ வஸ்து. வீரியஸ்தம்பனம் வல்லவருக்கு அதிக உத்தம சந்தானமுண்டாகும். வீரியம் கருப்பையிற் புகும்போது, மூக்குடன் மூக்கு, கண்ணுடன் கண் வைத்து எல்லா அங்கங்களும் அலுங்காமல், உடல் அசையாமல் அப்படியே இன்பத்தில் சொக்கிப் போகவேண்டும். உடம்பு இங்கு மங்கும் கோணக்கூடாது, அசையக் கூடாது. பெண் வீரியம் கருப்பையிற் புகும்போது அபான வாயுவை மேலே யிழுத்து, யோனியைக் குவித்திழுத்து வீரியத்தை வாங்கிக்கொள்ள வேண்டும். கர்ப்பத்தில் ஸ்திரம் செய்துக்கொள்ளவேண்டும்.* காரியம் ஆனதும் இருவரும் சுத்த ஜலத்தில் ஸ்நானம் செய்யவேண்டும். தெரிந்த பெண் கருத்தரித்ததை உடனே அறிவாள். மற்றவர் மாதவிடாயாகாதிருந்ததும் அறிவார். சுக்கு, மஞ்சள், ஏலம், கிராம்பு, கஸ்தூரி, சாலாமிஸ்ரி, போட்டுக் காய்ச்சி ஆறிய பாலை யருந்தி, இருவரும் தனித்தனியே படுக்கவேண்டும். இதெல்லாம் இரகசிய சமாசாரமாதலால், அதிகம் சொல்ல முடியாது; இவ்வளவு போதும். கர்ப்பதானம் செய்ய விரும்பும் போதெல்லாம் இதே விதியைப் பின்பற்றவேண்டும். கருத்தரித்தபின் ஓராண்டு ஆண் பெண் சேர்க்கை கூடாது.

---

* இது ரகஸ்யமான விஷயம். இதிலிருந்தே மற்ற சகலவற்றையும் அறிக. இதற்குமேல் இதைப் பற்றி எழுதுவது உசிதமாக தோன்றவில்லை.

அப்படியானால் நல்ல பிள்ளை பிறக்கும், இரண்டாவது பிள்ளையும் நன்றாயிருக்கும். இந்த நியமந் தப்பினால் வீரியம் வீணாகும், ஆயுள் நலியும், பிணி பெருகும். கணவன் கனவிலும் வீரியத்தை வீணாக்கக்கூடாது. ஆதலால் தம்பதிகள் அன்புடன் அளவளாவவேண்டும். கணவன் வீரியத்தைக் காக்கவேண்டும். கனவிற்கூட விந்தழியாதபடி உணவுகளில் கவனமாயிருக்க வேண்டும். மனைவி கருப்பத்தைக் கவனமாகக் காக்கவேண்டும். கருப் பையிலுள்ள குழந்தை நல்ல வடிவும் எழிலும், கொழுமை யும், பலமும், பராக்கிரமும் பெருகிப் பத்து மாதத்தில் சுகப் பிரசவம் ஆகச் செய்யவேண்டும். நான்காம் மாதத்திலிருந்து கவனமாயிருக்கவேண்டும். எட்டாம் மாதத்திலிருந்து அதிகக் கவனமாயிருக்கவேண்டும். கர்ப்ப ஸ்திரீ பேதிக்குச் சாப்பிடக் கூடாது; காரம், மயக்கந் தரும் பண்டம், சத்தற்ற வறட்டுணவு, அறிவையும் பலத்தையும் கெடுக்கும் பதார்த்தங்களை உண்ணக் கூடாது; நெய், பால், நல்ல அரிசி, கோதுமை, உளுந்து, பாசிப்பயறு முதலானவை சேர்ந்த அன்ன பானாதிகளை உட்கொள்ளவேண்டும்.

## பிள்ளை பேறு

கர்ப்பத்தில் இரண்டு ஸமஸ்காரங்கள் (சடங்குகள்) நிகழும். ஒன்று நான்காவது மாதம் பும்ஸவனம், எட்டாமாதம் ஸீமந்தம். இவற்றைச் சிறப்பாக நடத்தினால் பலனுண்டு. பிரசவ சமயம் சுக்குக் கஷாயம், சௌபாக்ய சுக்கு மருந்து—இதில் பால் வெண்ணெய், காரசாரமான சரக்குகள் சுக்கு எல்லாம் சேரும். உடலுக்குத் தெம்பளிக்கும், இரண்டையும் தயாராக வைத்துக் கொடுக்கவேண்டும். பிரசவமானதும், சுகந்த வெந்நீர் வெது வெதுப்பாக வைத்திருந்து, தாயையையும் சேயையும் நீராட்ட வேண்டும். இருவரையும் கவனமாகப் பாதுகாக்கவேண்டும். குழந்தையின் தொப்புள் கோடியில் நான்கங்குலத்தில் ஒரு மெதுவான நூலைக்கட்டி அதற்குமேல் ஒரு சொட்டு இரத்தமும் சிந்தாதபடி கொடியை அறுக்கவேண்டும். பிறகு பிரசவ அறையைச் சுத்தம் செய்து நறுமண நெய் முதலியவற்றால் ஓமம் செய்க. பிறகு தந்தை குழந்தையின் காதில் "வேதோஸி" (உன்பெயர் வேதம்) என்று சொல்லுக. உடனே தேனும் நெய்யும் கலந்து, அதில் தங்கக் கம்பியைத் தோய்த்து, அதனால் குழந்தை நாவில் ஓம் என்றெழுதி, அந்தத் தேன் நெய்க்

கலப்பை நக்கவிடவேண்டும். பிறகு குழந்தையைத் தாயிடம் தருக. இதன் பிறகே வேண்டுமானால் பாலூட்டவும். தாய்க்குப் பாலில்லாவிட்டால் நன்ருகச் சோதித்து, ஒரு தாய்ச்சி வைக்கவும். இதன் பிறகு காலை மாலை நறுமண நெய் முதலிய வற்ருல் ஓமம் செய்து, பரிசுத்தமான, காற்ருடும் அறையில் தாயும் குழந்தையும் சென்றிருக்கவேண்டும். முதல் ஆறு நாளைக்குத் தாயே பால் கொடுக்கலாம். பிறகு தாதியிடம் விடுக. உடல் உறுதி பெற, தாய் சத்தான உணவு கொள்க. மர்மஸ்தானத்தையும் கவனித்து முன்னிலைக்குக் கொண்டு வருக. ஆருவது நாள் தாய் வெளியே வரலாம். குழந்தைக்குப் பால் தரும் தாதியை நல்லுணவளித்துப் போற்றவேண்டும்.

தாய் குழந்தையிடம் கண்ணுங் கருத்துமாயிருந்து எவ்வித மான கெட்ட பழக்கமும் கிட்டவராது காக்கட்டும். பால் வழியாமல் முலைக்காம்பில் பற்றுக்கள் போடுக. உண்ணல் பருகலில் மிக்க கவனமாயிருக்கட்டும். பதிஞேராம் நாள் ஸம்ஸ்கார விதி நியமப்படியே நாமகரணுதிகளைச் செய்க. மனைவி மீண்டும் தூரமாகிக் குளித்த பிறகு உடலுறுதியைப் பார்த்து மேற்கண்ட விதிப்படியே ருதுதானம் செய்க.

## பெண்ணை மகிழ்வித்தல்

ऋतुकालभिगामी स्यात्स्वदारनिरतः सदा ॥ (மனு. 3. 45)

ब्रह्मचार्य्येवं भवति यत्र तत्राश्रमे वसन् ॥ (மனு. 3-50)

மனைவியால் மகிழ்ச்சிகொண்டு, எட்டு விலக்கு நாட்களில் புணராமல் ஒதுங்கியிருந்து, பிறகு முறைப்படி எவன் கர்ப்ப தானம் செய்கிருஞே அவன் இல்லறத்தாருயினும் பிரம்மசாரிக் குச் சமானமாவான்.

सन्तुष्टो भार्यया भर्त्ता भर्त्रा भार्या तथैव च ।
यस्मिन्नेव कुले नित्यं कल्याणं तत्र वै ध्रुवम् ॥ 1 ॥
यदि हि स्त्री न रोचेत पुमांसन्न प्रमोदयेत् ।
अप्रमोदात्पुनः पुंसः प्रजनं न प्रवर्त्तते ॥ 2 ॥
स्त्रियां तु रोचमानायां सर्वं तद्रोचते कुलम् ।
तस्यां त्वरोचमानायां सर्वमेव न रोचते ॥ 3 ॥

(மனு. 3-60, 61, 62)

கணவனிடம் மனைவி, மனைவியிடம் கணவன் திருப்தியுடன் மகிழ்ந்து வாழும் வீட்டில் நித்ய கல்யாணமும் சகல சௌபாக்கியமும் பொலியும். கலகமுள்ள வீட்டில் துயரும் வறுமையுமாகத் தானிருக்கும். (1)

மனைவி கணவனைப் பிரியமாக நேசிக்கா விட்டால், கணவனுக்கு அவளிடம் காதலுண்டாகாது, பிறகு நல்ல குழந்தைகளும் உண்டாகா; குழந்தை பிறந்தாலும் குணம் சரியாயிராது, (2)

மனைவி மகிழ்வுடனிருந்தால் குலமும் மகிழ்வுறும். அவள் முகத்தைத் தூக்கிக்கொண்டு சதா கோபமும் துயரமாயிருந்தால், குடும்பமும் துக்கமாகவே யிருக்கும். (3)

पितृभिर्भ्रातृभिश्चैताः पतिभिर्देवरैस्तथा ।
पूज्या भूषयितव्याश्च बहुकल्याणमीप्सुभिः ॥ 1 ॥
यत्र नार्यस्तु पूज्यन्ते रमन्ते तत्र देवताः ।
यत्रैतास्तु न पूज्यन्ते सर्वास्तत्राफलाः क्रियाः ॥ 2 ॥
शोचन्ति जामयो यत्र विनश्यत्याशु तत्कुलम् ।
न शोचन्ति तु यत्रैता वर्द्धते तद्धि सर्वदा ॥ 3 ॥
तस्मादेताः सदा पूज्या भूषणाच्छादनाशनैः ।
भूतिकामैर्नरैर्नित्यं सत्कारेषूत्सवेषु च ॥ 4 ॥ (மனு. 3-55-59)

பெண்களைப் புருஷர் மிக்க அன்புடனும் மரியாதையுடனும் நடத்தவேண்டும். தந்தை, உடன்பிறந்தார், கணவன், அவன் உடன்பிறந்தார்—அனைவரும் அவர்களுக்கு (பெண்களுக்கு) நல்ல ஆடை ஆபரணங்களை அளித்து மகிழ்விக்க வேண்டும். (1)

பெண்களை (பூஜிக்கும்) கௌரவிக்கும் வீட்டில் தேவதைகளும் மகிழ்வுடன் விளங்குவார்கள். எங்கே அவர்களை அவமரியாதை செய்கிறார்களோ, அங்கே குடும்பக் காரியங்கள் அம்பலமாகும் (2).

பெண்கள் துயரப்படும் குலம் அழியும். அவர்கள் இன்புறும் குலம் செழிக்கும். (3)

ஆதலால் குலச்செழிப்பும் செல்வமும் வேண்டும். ஆடவர் பெண்களை எப்போதும் ஆடை யாபரணங்களால் மகிழ்வித்து நன்கு மதிக்கவேண்டும். உத்ஸவ காலங்களில் நல்ல விருந்துணவுகளால் உற்சாகப்படுத்த வேண்டும். (4)

மேலே காட்டிய சான்றுகளில் குறித்த 'பூஜை' என்பது மரியாதைசெய்தல் கௌரவித்தல் என்பதாம். பகலிலும் இரவிலும்

முதலில் சந்திக்கும்போது அல்லது பிரியும்போது ஒருவரை யொருவர் "நமஸ்தே" என்று சொல்லி மரியாதை செய்க.

## பெண்ணின் கடமை

सदा प्रहृष्टया भाव्यं गृहकार्येषु दक्षया ।
सुसंस्कृतोपस्करया व्यये चामुक्तहस्तया ॥ (மனு. 5-150)

மனைவி மகிழ்ச்சியுடன் வீட்டுக் காரியங்களை சாமர்த்திய மாகக் கவனிக்கவேண்டும். பாத்திரம், பண்டம், ஆடையணி களையும், எடுபிடி சாமான்களையும், உணவுகளையும் சுத்தமாகவும் அழுக்கு தூசி படியாமலும் போற்ற வேண்டும். வீண்செலவு செய்யாமல் சிக்கனமாகக் குடும்பம் நடத்தவேண்டும். நல்ல மருந்துபோல் உடலுக்கு உறுதிதரும்படி சுசிருசியாகச் சமைத்து உணவளிக்க வேண்டும். வீட்டுக் கணக்கெழுதிக் கணவனிடம் காட்டவேண்டும். வேலையாட்களைச் சரியானபடி ஏவி, மனையில் எல்லாம் ஒழுங்காக நடக்கச் செய்யவேண்டும்.

स्त्रियो रत्नान्यथो विद्या सत्यं शौचं सुभाषितम् ।
विविधानि च शिल्पानि समादेयानि सर्वतः ॥ (மனு. 2-240)

உத்தமப் பெண்ணையும், இரத்தினம், வித்தை, சத்தியம், சுத்தம், நல்லுரை, பலவித சிற்பவேலைகள் ஆகியவற்றையும் சமமாக எத் தேசத்திலிருந்தும், எம்மனிதர்களிடத்திலிருந்தும் ஒருவன் அடையத்தகும்.

सत्यं ब्रूयात प्रियं ब्रूयान्न ब्रूयात् सत्यमप्रियम् ।
प्रियं च नानृतं ब्रूयादेष धर्मः सनातनः ॥ 1 ॥
भद्रं भद्रमिति ब्रूयाद्भद्रमित्येव वा वदेत् ।
शुष्कवैरं विवादं च न कुर्यात्केनचित्सह ॥ 2 ॥

(மனு. 4-138-139)

எப்போதும் பிரியமுள்ள சத்தியமே பேசுக. நலமே பேசுக. பிறருக்குத் தீங்கான பிரியமற்ற உண்மையைப் பேசாதே. உதாரணமாக ஒற்றைக்கண்ணனை 'ஒரக்கண்ணன்' என்னாதே; அவன் வருந்துவான். பிறரை மகிழ்விக்கவும் பொய் பேசாதே. இதுவே அறம் (1). பிறர்க்கினியதை இனிது பேசுக. அகாரண மாகப் பிறரிடம் பகையோ வீண் விவாதமோ வைத்துக் கொள்ளற்க. பிறருக்கு நன்மையானதை அவர் மனம் வருந்தினும் தைரியமாகச் சொல்லுக.

पुरुषा बहवो राजन् सततं प्रियवादिनः ।
अप्रियस्य तु पथ्यस्य वक्ता श्रोता च दुर्लभः ॥

(உத்யோகபர்வம்—விதுரநீதி)

மகாபாரதத்தில் விதுரர் திருதராஷ்டிரரைப் பார்த்து "அரசே! உலகில் நம்மைப் பிரியமாக முகத்துதி பேசும் ஆட்கள் மிகப் பலர். காதுக்கு அப்பிரியமாய் (இனிமையற்ற) வாழ்வுக்கு மிக்க நல்லதான சத்தியத்தைச் சொல்பவரும் அரியர்; கேட்பவரும் அரியரே."

ஏனெனில் நேருக்கு நேராக ஒருவர் குறையைக் சொல்லுவதும், தமது குறைகளை ஒப்புவதும், கேட்பதும், பின்புறம் பிறர் குணங்களைப் புகழ்வதும் நல்லோர் இயல்பாகும். முன்னே குணங்களைப் பேசி துதி செய்து, பின்னால் தோஷங்களைச் சொல்லி தூற்றுதல் தீயார் இயல்பாகும். பிறரிடம் தன் குறைகளை ஒளிக்காமல் ஒப்புக்கொள்ள வேண்டும். அப்படியில்லாதவன் குறை நீங்கிய குணவனாகமாட்டான். என்றும் எவரையும் நிந்தியாதீர்.

गुणेषु दोषारोपणमसूया अर्थात् दोषेषु गुणारोपणमप्यसूया ।
गुणेषु गुणरोपणं दोषेषु दोषारोपणं च स्तुतिः ॥

குணத்தைத் தோஷமாகவும், தோஷத்தைக் குணமாகவும் திரித்துத் தூற்றலே நிந்தையாகும். குணத்தில் குணத்தையும், தோஷத்தில் தோஷத்தையும் காணல் துதியாகும். அதாவது நிந்தை பொய், துதி மெய்யுரையாகும்.

बुद्धिवृद्धिकराण्याशु धन्यानि च हितानि च ।
नित्यं शास्त्राण्यवेक्षेत निगमांश्चैव वैदिकान् ॥ 1 ॥
यथा यथा हि पुरुषः शास्त्रं समधिगच्छति ।
तथा तथा विजानाति विज्ञानं चास्य रोचते ॥ 2 ॥

(மனு. 4-19-20)

அறிவு, செல்வம், சுகம் இவற்றை வளர்க்கும் வேதசாஸ்திரங்களை இருபாலரும் ஓதுக. பிறர்க்கும் சொல்லுக. பிரமசரியாஸ்ரமத்தில் படித்தவைகளை இருபாலரும் படித்து ஆராய வேண்டும். (1) ஏனெனில் சாஸ்திரங்களை ஆராய ஆராய மனிதன் அறிவு வளர்ந்து, விஞ்ஞானக் கல்வியிலும் சுவையுண்டாகிறது. (2)

## பஞ்சமகா யஞங்கள்

ऋषियज्ञं देवयज्ञं भूतयज्ञं च सर्वदा ।
नृयज्ञं पितृयज्ञं च यथाशक्ति न हापयेत् ॥ 1 ॥ (மனு. 4-21)
अध्यापनं ब्रह्मयज्ञः पितृयज्ञश्च तर्पणम् ।
होमो दैवो बलिर्भौतो नृयज्ञोऽतिथिपूजनम् ॥ 2 ॥ (மனு. 3-70)
स्वाध्यायेनार्चयेदृषीन् होमैर्देवान् यथाविधि ।
पितृन् श्राद्धैश्च नृनन्नैर्भूतानि बलिकर्मणा ॥ 3 ॥ (மனு. 3-81)

இல்லறத்தார் ஐந்து யக்ஞங்களைச் செய்க: ரிஷியக்ஞம், தேவயக்ஞம், பூதயக்ஞம், பிதுர்யக்ஞம், அதிதியக்ஞம்.

வேதத்தியானமே பிரம்மயக்ஞம் அல்லது ரிஷியக்ஞம்; தர்ப்பணம் பிதுர்யக்ஞம்; ரிஷிகளை வேதம் ஓதுவதால், தேவர்களை ஹோமத்தால், பிதுர்க்களை தர்ப்பணத்தால், உயிர்களை அன்னமளிப்பால் திருப்தி செய்க.

மேற்படி ஐந்து வேள்விகளில் இரண்டை பிரமசரியப் பகுதியில் விளக்கினோம். வேத சாஸ்திரம் ஓதல் ஓதுவித்தல், சந்தியோபாஸனை, யோகப்பயிற்சி இவை ரிஷியக்ஞம் அல்லது பிரம்மயக்ஞமாம். தேவயக்ஞம் என்பது வித்வான்களின் சங்கம், சேவை, பரிசுத்தம், நற்குணம், மெய்யுரை, அறிவு வளர்ச்சி இவற்றுடன் நெய் முதலிய நறுமணப் பொருள்களைப் பெய்து ஹோமம் செய்தலாம். இந்த இரண்டு யக்ஞங்களையும் காலை மாலை இருவேளையும் செய்க.

सायं सायं गृहपतिर्नो अग्निः प्रातः प्रातः सौमनसस्य दाता ॥ 1 ॥
प्रातः प्रातर्गृहपतिर्नो अग्निः सायं सायं सौमनसस्य दाता ॥ 2 ॥
(அதர். 19-7-3, 4)

तस्मादहोरात्रस्य संयोगे ब्राह्मणः सन्ध्यामुपासीत ।
उद्यन्तमस्तं यान्तमादित्यमभिध्यायन् ॥ 3 ॥
(ஷட்விம்சப்ராம்மணம் 4-5)

न तिष्ठति तु यः पूर्वां नोपास्ते यस्तु पश्चिमाम् ।
स शूद्रवद्बहिष्कार्यः सर्वस्माद् द्विजकर्मणः ॥ 4 ॥ (மனு. 11-103)

பிரதி சாயங்காலமும் செய்த ஹோமம் மறுகாலை வரையில் காற்றைச் சுத்தமாகவும் சுக காரியாகவும் காக்கிறது. ஒவ்வொரு காலையும் செய்த ஹோமம் சாயங்காலம் வரையில் காற்றைச் சுத்தமாக்கி புத்தி, பலம், ஆரோக்கியங்களைப் பேணுகிறது.

(1, 2) ஆதலால் பகலும் இரவும் சந்திக்கும் வேளையில், அதாவது சூரியோதய சூரியாஸ்தமன சமயங்களில் அந்தணர் ஸந்தியோபாஸனை செய்க. (3) காலை மாலை இவ்வாறு சந்தி ஹோமம் செய்யாதவனை நல்லறிவாளர் த்விஜ கர்மங்களிலிருந்து பகிஷ்கரித்து சூத்ரருடன் சேர்க்கவும்.

**வினா:** நாளைக்கு மூன்று வேளை ஏன் சந்த்யா செய்யக் கூடாது?

**விடை:** பகலும் இரவும் மூன்று வேளை சந்திக்கிறதில்லையே. இருளும் ஒளியும் காலை மாலை இரண்டு வேளையே சந்திக்கின்றன. இதை நம்பாமல் மத்யானங் கூடச் செய்யவேண்டுமென்பவனை நடு ராத்திரியிற்கூட சந்த்யா செய்யச் சொல்ல வேண்டும். அப்படிச் செய்யச் சம்மதமானால் ஒவ்வொரு மணியும் மணியும், நொடியும் நொடியும் சந்திக்கும்போதெல்லாம் சந்த்யா செய்யட்டுமே. இது முடியவே முடியாது. மத்யான சந்த்யாவிற்கு எங்குமே சாஸ்திரப் பிரமாண (ஆதாரம்)மில்லை. திரிகாலம் என்பது இறந்த, நிகழ், வருங்காலங்களையே குறிக்கும். ஆதலால் இரண்டே வேளை சந்தி செய்தலே போதும்.

**பிதுர் யக்ஞம்:** மூன்றாவது பித்ருயக்ஞம் என்பது புலவர், முனிவர், ஆசிரியர், கற்றோர், தாய் தந்தையர் முதலிய எல்லாப் பெரியாரையும் வணங்கிப் பணி செய்தலாம். இதில் சிரார்த்தம் தர்ப்பணம் என இரண்டு வகையுண்டு. சிரார்த்தம் 'ஸ்ரத்'—உண்மை என்பதிலிருந்து வந்தது.

"श्रत्सत्यं दधाति यया क्रियया सा श्रद्धा, श्रद्धया यत् क्रियते तच्छ्राद्धम्"

உண்மையை சிரத்தையுடன், கருத்துடன் பேணி நல்வினை செய்தலே சிரார்த்தமாகும். அப்படியே "तृप्यन्ति तर्पयन्तियेन पितॄन् तत्तर्पणम्" தாய் தந்தை பெரியாரைத் திருப்தி செய்யும் நல்வினைகளே தர்ப்பணம். சிரார்த்தமும் தர்ப்பணமும் உயிரோடிருப்பவர்களுக்கே யொழிய இறந்தாருக்கன்று.

தர்ப்பணம் மூன்று வகையாகும். 1. தேவ தர்ப்பணம் 2. ரிஷி தர்ப்பணம் 3. பித்ரு தர்ப்பணம்.

## தேவ தர்ப்பணம்

ओं ब्रह्मादयो देवास्तृप्यन्ताम् । ब्रह्मादिदेवपत्न्यस्तृप्यन्ताम् ।
ब्रह्मादिदेवसुतास्तृप्यन्ताम् । ब्रह्मादिदेवगणास्तृप्यन्ताम् ॥

इति देवतर्प्पणम् ॥

வித்வாம் ஸோஹி தேவாஃ "विद्वांसो हि देवा:" சதபதம் 3-5-610). அருட்புலவனே தேவன் என்கிறது ஸதபத ப்ராஹ்மணம். நாலு வேத மறிந்தவரை 'பிரஹ்ம' என்பர்; அதற்குக் குறைந்து கற்றவர் தேவர், வித்வான் எனக. அறிஞரான அவர் பத்னியர் பிரஹ்மணி அல்லது தேவி எனப்படுவர். இவர்களுக்கும் தூய மக்களுக்கும், சீடருக்கும் சேவை செய்து திருப்தியளித்தலே தேவ தர்ப்பணம்.

## ரிஷி தர்ப்பணம்

ओं मरीच्यादय ऋषयस्तृप्यन्ताम् ।
मरीच्याद्यृषिपत्न्यस्तृप्यन्ताम् ।
मरीच्याद्यृषसुतास्तृप्यन्ताम् ।
मरीच्याद्यृषिगणास्तृप्यन्ताम् ।

பிரம்மாவின் பேரனாகிய மரீசியைப் போன்று கற்றுணர் புலவர்களுக்கும், அவர் மனைவிக்கும் அவர்களுக் கிணையாகக் கற்ற பெண்களுக்கும், மக்களுக்கும் உறவினருக்கும், மாணவருக்கும், சேவகருக்கும் சேவை செய்தலே ரிஷி தர்ப்பணமாகும்.

## பித்ரு தர்ப்பணம்

பிதுர்க்களான பெரியோரை நல்ல அன்ன வஸ்திரங்களால் மகிழ்வித்தலே பிதுர் தர்ப்பணமாம். அடியிற் காணும் நல்லோரே பிதுர்க்கள்.

ओं सोमसद: पितरस्तृप्यन्ताम् । अग्निष्वात्ता: पितरस्तृप्यन्ताम् । बर्हिषद: पितरस्तृप्यन्ताम् । सोमपा: पितरस्तृप्यन्ताम् । हविर्भुज: पितरस्तृप्यन्ताम् । आज्यपा: पितरस्तृप्यन्ताम् । [सुकालिन: पितरस्तृप्यन्ताम् ।] यमादिभ्यो नम: यमादींस्तर्पयामि । पित्रे स्वधा नम: पितरं तर्पयामि । पिता: महाय स्वधा नम: पितामहं तर्पयामि । [प्रपितामहाय स्वधा नम: प्रपितामहं तर्पयामि ।] मात्रे स्वधा नमो मातरं तर्पयामि । पितामह्यै स्वधा नम: पितामहीं तर्पयामि । [प्रपितामह्यै स्वधा नम: प्रपितामहीं तर्पयामि ।] स्वपत्न्यै स्वधा नम: स्वपत्नीं तर्पयामि । सम्बन्धिभ्य: स्वधा नम: सम्बन्धिनतस्तर्पयामि । सगोत्रेभ्य: स्वधा नम. सगोत्रांस्तर्पयामि ॥

சோமஸத்: "ये सोमे जगदीश्वरे पदार्थविद्यायां च सीदन्ति ते सोमसदः।" பரமாத்மா, பதார்த்த வித்தை இவற்றில் புலமை பெற்ற அறிஞர்.

2. அக்னிஷ்வாதா: "येऽग्निर्विद्युतो विद्या गृहीता ते अग्निष्वात्ताः" தீ மின்சாரம் காந்தம் ஒளி முதலிய விஞ்ஞானப் பொருளறிஞர்.

3. பர்ஹிஷத்: "ये बर्हिषि उत्तमे व्यवहारे सीदन्ति ते बर्हिषदः" அறிவு வளர்ச்சியிலும் உத்தம விவகாரங்களிலும் ஈடுபட்டவர்கள்.

4. சோமபா: "ये सोममैश्वर्यमोषधीरसं वा पान्ति पिबन्ति वा ते सोमपाः" ஐசுவரியத்தைக் காப்பாற்றி, சிறந்த மூலிகை ரசங்களைப் பருகி, நோயற்றவர்களாகி, மற்றவர்களைப் பருக வைத்து நோயற்றவராக்குவோர் சோமபா எனப்படுவர்.

5. ஹவிர்புஜா: ये हविर्होतुमत्तुमर्हं भुञ्जते भोजयन्ति वा ते हविर्भुजः" இன்னலற்ற சாத்விக உணவுகளையே உண்ணும் அறிஞன், மது மாமிசங்களை விலக்கினவன் ஹவிர்புஜன் ஆவான்.

6. ஆஜ்யபா: "य आज्यं ज्ञातुं प्राप्तुं वा योग्यं रक्षन्ति वा पिबन्ति ते आज्यपाः" அடைதற்கும் அறிதற்கும் அரிய பொருளைப் போற்றுவோன். நெய், பால் முதலிய சத்தான வஸ்துக்களை உண்பவன் ஆஜ்யபா ஆவான்.

7. சுகாலின்: "शोभनः कालो विद्यते येषान्ते सुकालिनः" அறமும் உண்மையும் ஓங்கவே நாளைக் கழிப்பவன் சுகாலின் எனப்படுவான்.

8. யமன்: ये दुष्टान् यच्छन्ति निगृह्णन्ति ते यमा न्यायाधीशाः" தீயரைப் புடைத்து, நல்லோரைக் காத்து நீதி செய்வோனே எமன்.

9. பிதா: "यः पाति स पिता" மக்களை நன்முறையில் காப்பவனே பிதா.

10. பிதாமஹ: "पितुः पितापितामहः" தந்தையின் தந்தை பிதாமஹர். (பாட்டன்)

11. ப்ரபிதாமஹ: "पितामहस्य पिता प्रपितामहः" பாட்டனின் தந்தை ப்ரபிதாமஹ.

12. மாதா: "या मानयति सा माता" குழந்தையைச் சோறூட்டிப் போற்றி வளர்ப்பவளே மாதா.

13. பிதாமஹி: "या पितुर्माता सा पितामही" தகப்பன் தாய் பிதாமஹி.

14. ப்ரபிதாமஹி: "पितामहस्य माता प्रपितामही।" அவளுக்கும் (பிதாமஹிக்கும்) தாய் பிரபிதமஹி.

15, 16, 17 மனைவி, சகோதரி, தன் கோத்திரத்தைச் சேர்ந்தவர்களுக்கு மரியாதைக் காட்டி, ஆடையுணவளித்து, வண்டியளித்து மகிழ்வித்து, உடல் நலமுறப் பேணலே சிரார்த்தம் அல்லது தர்ப்பணம் எனப்படும்.

## நான்காவது வைசுவதேவ யக்ஞம்

உணவு தயாரானதும், பக்குவ உணவுகளில் உப்பு, புளிப்பு, காரலை நீக்கி, நெய் சர்க்கரைகளால் ஆன அன்னத்தைச் சிறிது பிசைந்து, அடுப்புத் தீயில் சிறிது தனியாக எடுத்து, அதில் போட்டு ஹோமம் செய்வதே வைசுவதேவம்.

"वैश्वदेवस्य सिद्धस्य गृहेऽग्नौ विधिपूर्वकम्।
आभ्यः कुर्याद्देवताभ्यो ब्राह्मणो होममन्वहम्॥ (மனு. 3-8-4)

பாகசாலையில் ஆக்கிய உணவுகளில் சிறிதெடுத்து, (அடியில் வரும் மந்திரத்துடன்) காற்று சுத்தமாக, அக்னியில் ஹோமம் செய்க என்கிருர் மனு.

## ஹோம மந்திரம்

ओं अग्नये स्वाहा। सोमाय स्वाहा। अग्निषोमाभ्यांस्वाहा। विश्वेभ्यो देवेभ्यः स्वाहा। धन्वन्तरये स्वाहा। कुह्वै स्वाहा। अनुमत्यै स्वाहा। प्रजापतये स्वाहा। सह द्यावापृथिवीभ्यां स्वाहा। स्विष्टकृते स्वाहा॥

ஒவ்வொரு மந்திரத்துடனும் எரியில் ஒவ்வொரு ஆகுதி வழங்குக. பிறகு தட்டில் அல்லது தரையில் இலை போட்டு, அதன் மேலே கிழக்கிலிருந்து முறையாக நாலா திசையிலும் இந்த மந்திரங்களைச் சொல்லி உணவு வைக்கவும்.

ओं सानुगायेन्द्राय नमः। सानुगाय यमाय नमः। सानुगाय वरुणाय नमः। सानुगाय सोमाय नमः। मरुद्भ्यो नमः। अद्भ्यो

नमः। वनस्पतिभ्यो नमः। श्रियै नमः। भद्रकाल्यै नमः। ब्रह्मपतये नमः। वास्तुपतये नमः। विश्वेभ्यो देवेभ्यो नमः। दिवाचरेभ्यो भूतेभ्यो नमः। नक्तञ्चारिभ्यो भूतेभ्यो नमः। सर्वात्मभूतये नमः॥

(மனு. 3-87 லிருந்து 91 வரை)

இவ்வாறு வைத்த உணவை யாராவது அதிதியிருந்தால் தருக இன்றேல் தீயிலிடுக. பிறகு சோறு, பருப்பு, கறி வகை, ரொட்டி முதலிய உப்பிட்ட உணவுப் பண்டங்களை, ஆறு பாகங்களாகப் பூமியில் வைக்கவும். இதற்கு பிரமாணம்:

शुनां च पतितानां च श्वपचां पापरोगिणाम्।
वायसानां कृमीणां च शनकैर्निर्वपेद्भुवि॥ (மனு. 3-92)

இதன் பிரகாரம்

"श्वभ्यो नमः, पतितेभ्यो नमः, श्वपग्भ्यो नमः, पापरोगिभ्यो नमः, वायसेभ्यो नमः, कृमिभ्यो नमः:"

இம்மந்திரங்களை உச்சரித்து வைத்த அன்னத்தைப் பசித்தவர், தாழ்ந்தவர், வருந்துவோர், பாபரோகிகள், நாய், புழு, காக்காய்களுக்குப் போடுக. இங்கே நம: என்றால் அன்னம் என்று பொருள். இதிலிருந்து நாய், காக்கை, பாவிகள், சண்டாளர்கள், பாபரோகிகள், புழு முதலிய ஜீவராசிகளுக்கு அன்னமிடவேண்டும் என்று மனு முதலான ஸ்மிரிதிகள் கூறுகின்றன. இவ்வாறு ஹவனம் செய்தால் அட்டிற் காற்று தூயுறும். அன்னம் அளிப்பதால் நாம் பல உயிர்களுக்கு அறியாமற் செய்த தீங்குகளுக்கும் பரிகாரமாகும்.

## அதிதி யக்ஞம்

ஐந்தாவது அதிதி யக்ஞம்: அகஸ்மாத்தாக நமது மனைக்கு வருபவரே அதிதி. தர்மாத்மா, ஸத்யோபதேசிகர், எல்லாருக்கும் நன்மை புரிய எங்கும் சஞ்சரிப்பவர், பூரண வித்வான், பரம யோகி, ஸன்யாஸி முதலிய பெரியார் வந்தால் முதலில் பாத்யம் அர்க்யம், ஆசமனீயம் ஆகியவற்றிற்கு நீரளித்து, ஆஸனம் தந்து உட்காரச் செய்து, மரியாதை செய்து நல்ல அன்னமும் பானமும் அளித்து மகிழ்விக்கவும். பிறகு அவர்களுடன் உறவாடி தர்ம அர்த்த காம மோக்ஷ (அறம், பொருள், இன்பம், வீடு) மளிக்கும் அருளறிவையும் பொருளறிவையும் அறிந்தொழுகுக. இல்லறத்தார் அரசரைக் கூட ஏற்று விருந்தோம்பலாம்.

ஆனால்

पाषण्डिनो विकर्मस्थान् बैडालवृत्तिकान् शठान् ।
हैतुकान् बकवृत्तींश्च वाङ्मात्रेणापि नार्चयेत् ॥ (மனு. 4-30)

(பாஷண்டி) வேத நிந்தை செய்யும், வேத விரோத வாழ்க்கை நடத்துபவர் (விகர்மஸ்த) வேத விரோதமான காரியங்களைச் செய்பவர் (பைடால வ்ருத்தி) பூனை பதுங்கிப் பதுங்கி எலி முதலியவற்றைப் பாய்ந்து பற்றிக் கொன்று தின்பது போன்ற வஞ்சக் கயவர், பொய்யர், பிறரை ஏமாற்றி வயிற்றை நிரப்பும் கபடர் (ஶட) மூர்க்கர், தூராக்ரகர், செருக்காளர், உருத்திராக்ஷப் பூனைகள், சுயபுத்தி யின்றி மற்றவர் சொல்வதைக் கேளாத (ஹைதுக) வரட்டு வாதிகள், தற்கால வேதாந்திகள் போல நானே பிரமம், உலகம் மாயை, வேதாதி சாஸ்திரங்களும் இறைவனும் கற்பனை என்று ஜம்பமடிக்கும் அறிவிலிகள், (பகவ்ருத்தி) ஒற்றைக் காலில் நிற்கும் கொக்கு பசக்கென்று மீனைக் கொத்திச் சாப்பிடுவது போல், தற்கால வைராகிகளையும் காக்கிகளையும் போல் சுயநலப்புலிகள், தீய எண்ணமுடைய நாஸ்திகர்கள் இவர்களைச் சொல்லாலும் மரியாதை செய்யற்க. இவர்களை மரியாதை செய்தால் (இவர்கள்) தொகையில் பெருகி அதர்மமே செய்வார்கள். தாங்களும் மடக் காரியங்கள் செய்து, தம்மைச் சார்ந்தோரும் அறியாமைக் கடலில் ஆழச் செய்வார்கள்.

## பஞ்சமஹா யக்ஞத்தின் பலன்களாவன

பிரம்ம யக்ஞத்தால் வித்தை, ஒழுக்கம் தர்மம் இனிய நடைமுறைகளை ஒருவன் அடைகிறான். அக்னி ஹோத்திரத்தால் காற்று, மழை, நீர் அனைத்தும் சுத்தமாகி, உலகிற்கு நலமாகிறது. தூய காற்றை உயிர்ப்பதால், தூய நீரையும் உணவையும் கொள்வதால், உடல் ஆரோக்கியமடைகிறது. புத்தி, பலம், பராக்கிரமங்கள் வளர்கின்றன. தர்மார்த்த காம மோக்ஷ அனுஷ்டானங்கள் பூரா நிறைவேறுகின்றன. அதனால் இதற்குத் தேவ யக்ஞம் எனப் பெயர்வந்தது. பிதுர் யக்ஞத்தால் மாதா பிதா ஞானிகள் மகாத்மாக்கள் சேவை கிடைக்கிறது. அதனால் ஞானம் வளர்கிறது. அதனால் மெய் பொய் யறிந்து, மெய்யைக்கொண்டு பொய்யை ஒதுக்க இயலும். மேலும் மாதா, பிதா, ஆசாரியர் சிறுவயதில் பிள்ளைகளுக்குச் சேவை செய்தார்கள். அதற்குக் கைமாறாக, பிள்ளைகள் அவர்களுக்குச் சேவை செய்வது கடமையாகும்; அது நன்றியு

மாரும். பல்வைசுவ தேவத்தின் பலன்களை முன்பே கூறினோம். அதிதி யக்ஞத்தால் உத்தமர்களை வளர்க்கிறோம். உத்தம அதிதிகளின்றேல் ஒரு தேசம் மேன்மை பெறாது. அவர்கள் எல்லா நாடுகளிலும் சஞ்சரித்து, சத்தியோபதேசம் செய்வதால், சகஜமாக எல்லா கிருஹஸ்தருக்கும் சத்திய விக்ஞானம் எய்துகிறது. மனித சமுதாயத்தில் அவர்களால் ஒரே உண்மை அறம் நிலைநிற்கிறது. அதிதிகளின்றி ஐயந் தீராது; ஐயந்தீராமல் நிச்சய அறிவு வராது; நிச்சய ஞானமின்றிச் சுகமில்லை.

## ஒழுக்க விதிகள்

மனு சொல்லும் இவ்விதிகளைப் பின்பற்றுக:

ब्राह्मे मुहूर्त्ते बुध्येत धर्मार्थौ चानुचिन्तयेत् ।
कायक्लेशांश्च तन्मूलान् वेदतत्त्वार्थमेव च ॥ (மனு. 4-92)

காலை (நான்காம் ஜாமத்தில்) நான்கு மணிக்கே விழித்தெழுந்து, தர்மார்த்தத்தை நினைக்கவும்; உடலின் பிணி, அது போம் வழிகளைக் கருதுக. பிறகு உடலின் மூலமும், வேத தத்துவார்த்தமுமான பரமாத்மனைத் தியானிக்கவும். அதர்மம் என்றும் செய்யற்க. ஏனெனில்

नाधर्मश्चरितो लोके सद्यः फलति गौरिव ।
शनैरावर्त्तमानस्तु कर्त्तुर्मूलानि कृन्तति ॥ (மனு. 4-172)

அதர்மத்திற்குத் தண்டனை கிடைத்தே தீரும். ஆனால் அப்போதைக்கு அதன் பலன் தெரிவதில்லை. ஆதலால் அஞ்ஞானிகள் அதர்மம் செய்யக் கூசுவதில்லை. ஆனால் அதர்மம் செய்யச் செய்ய, அது சுகத்தின் வேரை அறுத்துத் தள்ளிக் கொண்டு வரும் என்பதை நினைக.

अधर्मेणैधते तावत्ततो भद्राणि पश्यति ।
ततः सपत्नाञ्जयति समूलस्तु विनश्यति ॥ (மனு. 4-174)

அதர்மன் மானிட ஒழுக்கத்தின் மரியாதையை விடுத்து, மடையுடைத்துத் தண்ணீர் வழிந்தோடும் குளத்தைப் போல, நிறைகெட்டு, பொய் கபடம், தன்னைக் காக்கும் வேதத்தை நிந்தித்தல், நன்றி கெட்டதனம், மோசம் இவற்றால் ஊரை ஏமாற்றிப் பிழைக்கிறான். அன்ன பானம், ஆடை, நகைநட்டு, வண்டி, பட்டம், பதவி, எதிரிகளையும் வென்ற செருக்கு

செல்வாக்கு, பேர் புகழ், பெருமை முதலியவற்றைப் பெறுகிறான்! இப்பொய் மினுக்குகள் எத்தனை நாள்? முடிவில் வேர் அறுந்த மரம்போல் சமூலமும் நாசமாய் அழிகிறான்.

सत्यधर्मार्यवृत्तेषु शौचे चैवारमेत्सदा ।
शिष्यांश्च शिष्याद्धर्मेण वाग्बाहूदरसंयतः ॥ (மனு. 4-175)

அறிஞர் ஓரகமின்றி வேத தர்மத்திலிருந்து உண்மையை யறிந்துகொண்டு, பொய்யை விலக்கி, பரிசுத்தராக உதார குணத்துடன் மாணவருக்கு அறவழி போதிக்கட்டும்.

ऋत्विक्पुरोहिताचार्यैर्मातुलातिथिसंश्रितैः ।
बालवृद्धातुरैर्वैद्यैर्ज्ञातिसम्बन्धिबान्धवैः ॥ 1 ॥
मातापितृभ्यां यामीभिर्भ्रात्रा पुत्रेण भार्यया ।
दुहित्रा दासवर्गेण विवादं न समाचरेत् ॥ 2 ॥ (மனு. 4-179, 180)

வேள்வி செய்பவர் (ருத்விக்), உத்தம காரியத்தில் ஈடுபட்ட புரோகிதர், கல்வி புகட்டும் ஆசாரியர், மாமனார், அதிதி, தன்னை அண்டியவர், குழந்தைகள், முதியோர், பிணியால் வருந்துவோர், வைத்தியர், தன்னைச் சேர்ந்த உறவினர், சம்பந்திகள், நண்பர், மாதா, பிதா, சகோதரி, சகோதரன், மக்கள், மனைவி, சேவகர் ஆகியவர்களுடன் அமைதி கெடும் விவாதம் செய்யக் கூடாது; விரோதித்துச் சண்டையும் செய்யக்கூடாது.

अतपास्त्वनधीयानः प्रतिग्रहरुचिर्द्विजः ।
अम्भस्यश्मप्लवेनेव सह तेनैव मज्जति ॥ (மனு. 4-190)

முதலாவது பிரமசரிய தபஸ், சத்தியவாக்கு இரண்டும் இல்லாதவர், இரண்டாவது அத்யயனம் இல்லாதவர், கல்லாதவர், மூன்றாவது பேராசையுடன் பிறர் பொருளை வாங்கிக்கொள்ளப் பறப்பவர்கள்—இம் மூவரும் துராசைச் சுமையால் கடல் கடக்கக் கல்படகில் ஏறியது போல், துக்க சாகரத்தில் தாமும் மூழ்கி, தமக்கு ஈந்தவர்களையும் மூழ்கடிக்கின்றனர்.

त्रिष्वप्येतेषु दत्तं हि विधिनाप्यर्जितं धनम् ।
दातुर्भवत्यनर्थाय परत्रादातुरेव च ॥ 1 ॥
यथा प्लवेनौपलेन निमज्जत्युदके तरन् ।
तथा निमज्जतोऽधस्तादज्ञौ दातृप्रतीच्छकौ ॥ 2 ॥ (மனு. 4-193, 194)

விதிப்படி ஈட்டிய நற்பொருளாயினும் இந்த மூவருக்கும் தரக்கூடாது. அதனால் கொடுத்தவருக்கும் இம்மையிலும், வாங்கினவனுக்கு மறுமையிலும் நாசம் உண்டாகிறது. (1)

கல்படகில் நீரைக் கடப்பவர் ஆழ்வது போலத்தான் பாத்திரமறியாது கொடுக்கும் அறிவிலியும், வாங்கும் அறிவிலியும் வகைக்கெட்டுத் துன்பத்தில் ஆழ்கின்றனர். (2)

## பாகண்டிகளின் இலட்சணம்

धर्मध्वजी सदा लुब्धश्छाद्मिको लोकदम्भकः ।
बैडालव्रतिको ज्ञेयो हिंस्रः सर्वाभिसन्धकः ॥ 1 ॥

अधोदृष्टिर्नैष्कृतिकः स्वार्थसाधनतत्परः ।
शठो मिथ्याविनीतश्च बकव्रतचरो द्विजः ॥ 2 ॥ (மனு. 4-195, 196)

போலிகள் அறஞ்செய்யாமலே, தாம் பிரமாதமாகச் செய்து விட்டதாகக் கொடிகட்டி உலகை ஏமாற்றுவார்கள். எப்போதும் லோபிகள், வஞ்சர், உலகோர் முன் தமது புகழைத் தம்பட்டமடித்து இடம்பம் பேசுவோர், உயிர்க் கொலைஞர், பிறரை விரோதிப்பவர்கள், நல்லோர் பொல்லோர் அனைவருடனும் கூடி இரண்டு பக்கமும் விஷமம் செய்பவர்கள்—இவர்களைப் பதுங்கியிருந்து திடீரென எலி மேற் பாயும் பூனைப்போன்ற, நீசனெனக் கருதி விலக்குக. (1) கீர்த்திக்காகக் கீழே நோக்குவோர், சிறு குற்றம் செய்துவிட்டாலும் கோபங் கொண்டு பழிவாங்கி உயிரைப் போக்கவும் துணிபவர்கள், கபடம், அதர்மம், விசுவாச காதகங்களாற்கூடச் சுயநலக் காரியங்களை நிறைவேற்றுவோர்கள்; பிசகென்றறிந்ததையும் விடாப் பிடியாகக் கொள்ளும் மடையர், சாது மாதிரிப் பொய் வேடம் போட்டு, ஏமாற்றுகிறவர்கள்—கண்ணை மூடியிருந்து பசக்கென்று மீனைக் கொத்தும் வஞ்சகக் கொக்கு போன்ற நீசர்களென்று கருதுக. இவர்களே பாகண்டிகள் என்றுக் கருதி விலக்குக. இவர்களை நம்பவும் கூடாது; இவர்களுக்குச் சேவையும் செய்யக்கூடாது. (2)

धर्मं शनैः सञ्चिनुयाद् वल्मीकमिव पुत्तिकाः ।
परलोकसहायार्थं सर्वभूतान्यपीडयन् ॥ 1 ॥

नामुत्र हि सहायार्थं पिता माता च तिष्ठतः ।
न पुत्रदारं न ज्ञातिर्धर्मस्तिष्ठति केवलम् ॥ 2 ॥

एक: प्रजायते जन्तुरेक एव प्रलीयते ।
एकोऽनुभुङ्क्ते सुकृतमेक एव च दुष्कृतम् ॥ 3 ॥

(மனு. 4-238, 239, 240)

एक: पापानि कुरुते फलं भुङ्क्ते महाजन: ।
भोक्तारो विप्रमुच्यन्ते कर्ता दोषेण लिप्यते ॥ 4 ॥

(மகாபாரதம் - உத்யோகபர்வம் - ப்ரஜாகரபம்-32 3-42)

मृतं शरीरमुत्सृज्य काष्ठलोष्ठसमं क्षितौ ।
विमुखा बान्धवा यान्ति धर्मस्तमनुगच्छति ॥ 5 ॥ (மனு. 4-241)

கரையான் மெல்ல மெல்லத் தன் புத்தை எழுப்புவது போலவே, ஆண் பெண் அனைவரும், எவ்வுயிருக்கும் இன்னலின்றி வாழ்ந்து, பரலோக சுகத்திற்காக இங்கே தர்மத்தைச் சேர்க்கவேண்டும். (1) ஏன்? பரலோகத்தில் தந்தை, தாய், மகன், மனைவி, சுற்றத்தார் யாரும் உதவிக்கு முன்னிற்கமாட்டார்கள். கேவலம் நாம் செய்த தர்மமே நம்மைக் காக்க முன்னிற்கும்.— தர்மஸ்திஷ்டதி கேவல: (2). உயிர்கள் தனியாகவே பிறக்கின்றன; தனியாகவே இறக்கின்றன. தாம் செய்த நல் தீவினைப் பயன்களைத் தாமே தனியாக அனுபவிக்கின்றன. (3) இவையெல்லாம் மனுவாக்குகள்.

குடும்பத்தில் ஒருவன் செய்த பாபத்தின் பலனை (அதாவது பாபவினையால் சம்பாதித்த பொருளை) அந்தக் குடும்பமே அனுபவிக்கிறது. அவன் செய்த பாபத்தில் குடும்பம் சம்மந்தப் படுவதில்லை. அவன் செய்த பாபத்தின் தோஷ பாகத்தை அதர்மம் செய்த அவனே அனுபவிக்கிறான் (மகாபாரதம்) (4). ஆள் இறந்ததும் உறவினர் அவனை மண்ணும் கட்டையும் போலச் சுடு காட்டில் உருட்டி விட்டு, கட்டையால் எரித்து, மண்ணில் புதைத்துச் செல்கிறார்கள். அவனுயிருடன் செல்வது தருமமொன்றே (5).

तस्माद्धर्मं सहायार्थं नित्यं सञ्चिनुयाच्छनै: ।
धर्मेण हि सहायेन तमस्तरति दुस्तरम् ॥ 1 ॥
धर्मप्रधानं पुरुषं तपसा हतकिल्बिषम् ।
परलोकं नयत्याशु भास्वन्तं खशरीरिणम् ॥ 2 ॥ (மனு. 4-242-243)

ஆதலால் மறுமைக்குத் துணையாக மனிதன் தர்மத்தையே தினம் சேர்க்கவேண்டும். தருமப் படகினால் தான் துக்க

சாகரத்தை, துன்ப இருளைக் கடக்க முடியும் (1). அறத்தையே முதன்மையாகக் கருதிச் செய்பவன், பாவம் விலகி, பரலோகத்தில் ஆகாசத்தையே தன் சரீரமாகவும், ஜோதிர்மயமாகவும் உள்ள பரமாத்மாவை அடைகிறான்.

दृढकारी मृदुर्दान्तः क्रूराचारैरसंवसन् ।
अहिंस्रो दमदानाभ्यां जयेत्स्वर्गं तथाव्रतः ॥ 1 ॥
वाच्यर्था नियताः सर्वे वाङ्मूला वाग्विनिःसृताः ।
तांस्तु यः स्तेनयेद्वाचं स सर्वस्तेयकृन्नरः ॥ 2 ॥
आचाराल्लभते ह्यायुराचारादीप्सिताः प्रजाः ।
आचाराद्धनमक्षय्यमाचारो हन्त्यलक्षणम् ॥ 3 ॥
(மனு. 4-246-256-156)

திடமுயற்சியாளன், கோமள சுபாவன், ஜிதேந்திரியன், ஹிம்சை குரூரம், தீச்செயல்களைச் செய்யும் துஷ்டர்களைச் சேராதவன், அஹிம்ஸா தர்மத்தைக் காப்பவன், தர்மாத்மா, மனத்தை அடக்கியவன், வித்யாதானம் செய்கிறவன்—அவன் சுவர்க்கானந்தத்தை அடைகிறான். (1) எல்லா விவகாரங்களையும் நிச்சயப்படுத்துவது வாக்கு, வாணி. அனைத்திற்கும் மூலமாயிருப்பது வாக்கு. தன் வாக்கை எவன் காக்காமல் பொய்யாக்குகிறானோ, எவன் நாவால் பொய் சொல்லுகிறானோ, அவன் திருட்டுக் குற்றம் செய்தவனாகிறான். (2) ஆசாரத்தாலே தான் ஆயுள் விருத்தி, உத்தமமான பிரஜைகள், அக்ஷயமான தனம் எல்லாம் உண்டாகும். ஆகையால் பொய் முதலிய அதர்மங்களைத் தூரத் தள்ளி, பிரமசரியம், ஜிதேந்திரியத்வம் முதலிய தர்மாசாரங்களைக் கைப்பற்றி, தீமைகளை நலித்து நல்லொழுக்கம் பயில்க (3). ஏனெனில்

दुराचारो हि पुरुषो लोके भवति निन्दितः ।
दुःखभागी च सततं व्याधितोऽल्पायुरेव च ॥ (மனு. 4-157)

தீய ஒழுக்கமுள்ளவன் நல்லோரால் நிந்திக்கப் பெற்று, உலகில் துயரப்பட்டு, பிணி வருந்தி, அற்பாயுளுக்கு இரையாகிறான். ஆகையால் ஒருவன்:

## சுயாதீனம்

यद्यत्परवशं कर्म तत्तद्यत्नेन वर्जयेत् ।
यद्यदात्मवशं तु स्यात्तत्तत्सेवेत यत्नतः ॥ 1 ॥

सर्वं परवशं दुःखं सर्वमात्मवशं सुखम् ।
एतद्विद्यात्समासेन लक्षणं सुखदुःखयोः ॥ 2 ॥ (மனு. 4-159-160)

பராதீனத்திலிருக்கும் வினைகளை முயலாமல் விட்டுவிட்டு, சுயாதீனத்திலிருக்கும் காரியங்களையே முயன்று சுதந்தரமாக நிறைவேற்றுக (1). ஏனெனில் பராதீனமாக வாழ்வதெல்லாம் துக்கமே தரும்; சுயாதீனமா யிருப்பதெல்லாம் சுகமே தரும். இதுதான் சுருக்கமாக சுகதுக்க லட்சணமாகும். (2)

## தாம்பத்யம்

ஆனால் ஒருவருக்கொருவர் ஆதீனப்பட்டுச் செய்ய வேண்டிய காரியங்களை அவரவர் சம்மத மறிந்தே செய்யவேண்டும். உதாரணமாக ஒரு குடும்பத்தில் ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் மன மொத்துப் பிரியமாக, அனுகூலமாக நடக்க வேண்டும். பகையும் விபசாரமும் கூடா. கணவன் ஆணைப் படியே மனைவி வீட்டுக் காரியங்களை நிர்வகித்து நடத்த வேண்டும். வெளிக் காரியங்கள் கணவன் ஆதீனத்திலிருக்க வேண்டும். தீய வழியில் பிடி படாமல் ஒருவரை யொருவர் தடுக்க வேண்டும். விவாகம் ஆனதுமே சதிபதிகள் நக சிக பரியந்தம் ஒருவருக்கொருவர் சார்புள்ளவர்கள். ஒருவர் நடை யுடை பாவனை மற்றொருவரைச் சாரும். இருவர் உள்ளும் உணர்வும் ஒன்று. ஒருவர் விருப்பத்திற் கெதிராக மற்றொருவர் நடக்கக் கூடாது. கணவன் மனைவியின் மேல், மனைவி கணவன் மேல் திருப்தியா யிருக்க வேண்டும். பிராமண வகுப்பானால், கணவன் தன் பிள்ளைகளுக்கும், மனைவி பெண்களுக்கும் கல்வி புகட்டி, பல விஷயங்களைப் போதித்து அவர்களை வித்துவான்களாக்குக. கணவன் மதிக்க வேண்டிய தேவியே மனைவி; மனைவி மதிக்க வேண்டிய தேவனே கணவன். குருகுலத்தி லிருக்குமட்டும் இருபாலாரும் ஆசாரியர்களையே மாதா பிதாக்களாகக் கருதுக; ஆசாரியர்களும் மாணவ மாணவிகளைத் தமது மக்களைப் போல கருதுக.

## ஆசாரியர் ஒழுக்கம்

மகாபாரதம் உத்யோக பர்வத்தில் 32-ம் அத்தியாயத்தில் விதுரர் சொல்லும் நீதிமொழிகளாவன :—

आत्मज्ञानं समारम्भस्तितिक्षा धर्मनित्यता ।
यमर्था नापकर्षन्ति स वै पण्डित उच्यते ॥ 1 ॥

निषेवते प्रशस्तानि निन्दितानि न सेवते ।
अनास्तिक: श्रद्दधान: एतत्पण्डितलक्षणम् ॥ 2 ॥
क्षिप्रं विजानाति चिरं शृणोति, विज्ञाय चार्थं भजते न कामात् ॥
नासम्पृष्टो ह्युपयुङ्क्ते परार्थे, तत्प्रज्ञानं प्रथमं पण्डितस्य ॥ 3 ॥
नाप्राप्यमभिवाञ्छन्ति नष्टं नेच्छन्ति शोचितुम् ।
आपत्सु च न मुह्यन्ति नरा: पण्डितबुद्धय: ॥ 4 ॥
प्रवृत्तवाक् चित्रकथ ऊहवान् प्रतिभानवान् ।
आशु ग्रन्थस्य वक्ता च य: स पण्डित उच्यते ॥ 5 ॥
श्रुतं प्रज्ञानुगं यस्य प्रज्ञा चैव श्रुतानुगा ।
असंभिन्नार्यमर्याद: पण्डिताख्यां लभेत स: ॥ 6 ॥

(மஹாபாரதம் உத்யோகபர்வம் விதுரப்ரஜாகர அத். 32-ன் ஸ்லோகங்கள்)

ஆத்மஞானி, சோம்பலற்ற முயற்சியாளன். சுகதுக்கம், லாபநஷ்டம், மானாபிமானம், இகழ்ச்சி புகழ்ச்சிகளில் கலக்கமோ களிப்போ கொள்ளாத சமசித்தமுடையவன், தருமத்தில் என்றும் உறுதிகொண்டவன், விஷய வஸ்துக்களால் கவரப்படாதவன்—அவனே பண்டிதன், அறிஞன் ஆவான். ( ) எப்போதும் அரத் தொண்டு செய்வோன், அதர்ம காரியங்களை விட்டு விலகுவோன், நாத்திகமற்றவன், கடவுள், வேதம், சத்திய ஒழுக்கம் இவற்றை நிந்திக்காத ஆஸ்திகன், இறைவனிடம் சிரத்தைக் கொண்ட பக்தன்—அவனே பண்டிதனாவான். இவையே பண்டிதலட்சணம் (2). கடினமான பாடங்களையும் சீக்கிரம் அறிந்துக் கொள்பவன், நீண்டகாலம் சாஸ்திரங்களைப் பாடம் கேட்டு ஞானவிசாரம் செய்பவன், அறிந்த வித்தையைப் பரோபகரமாகத் தருகிறவன், சுயநலத்திற்காக யாதும் செய்யாத பொதுநலப் பிரியன், அறிவறிந்தவன், கேட்டு சமயமறிந்தாலொழியத் தன் அபிப்பிராயத்தைச் சொல்லாதவன். இதுவே முதலறிவு; அவனே அறிவறிந்த சிறந்த பண்டிதனாவான் (3). கிடைக்கக் கூடாத (யோக்யமற்ற) பொருளை அவாவாதான், இழந்த பொருளுக்காக வருந்தான், ஆபத்துக்களில் கவலைப்பட்டு தைரியமிழக்காதவன்—அந்த மனிதனே புத்திமானான பண்டிதனாவான் (4). எல்லா வித்தைகளையும் தெளிந்தறிந்து வினா விடைகளில் தேர்ந்தவன், சாஸ்திரங்களை நயமாக எடுத்துரைப்பவன், தருக்கம் ஸ்மிருதி முதலிய நூல்களை நன்கறிந்துரைப்பவன், அவனே பண்டிதனெனப் படுகிறான் (5). கேட்டறிந்த உண்மைக்குப் பொருந்திய மெய்யறிவாளன், கேள்விக்கேற்ற மெய்யறிவாளன், தர்மபுருஷர்

களான ஆசிரியர்களை மதிப்பவன், மரியாதையை மீருதவன்—அவனே பண்டிதன் எனப்படுகிருன் (6). இவ்வாறு போதிக்கும் ஆண் பெண் ஆசிரியர் இருக்குமிடமே, வித்தையும் தருமமும் உத்தம ஆசாரமும் செழித்து, நித்தம் ஆனந்தம் ஓங்கும்.

## கல்லாத மூடன் தன்மை

அடியில் வரும் சுலோகங்களும் மஹாபாரதம் உத்யோக பருவத்தில் விதுரர் சொல்லும் நீதிகளே :

अश्रुतश्च समुन्नद्धो दरिद्रश्च महामनाः ।
अर्थांश्चाऽकर्मणा प्रेप्सुर्मूढ इत्युच्यते बुधैः ॥ 1 ॥

अनाहूतः प्रविशति ह्यपृष्टो बहु भाषते ।
अविश्वस्ते विश्वसिति मूढचेता नराधमः ॥ 2 ॥

(மகாபாரதம் உத்யோக பர்வம் விதுரப்ரஜாகர அத், 32-ன் வசனமாகும்.)

சாஸ்திரங்களைப் படிக்காதவன் கேட்காதவன், மண்டைக் கருவம் பிடித்தவன், தரித்திரனுயிருந்தும் பெரிய ஆகாசக் கோட்டைக் கட்டுகிறவன், உழைக்காமல் கர்மசித்தி பெற முயல்பவன்—அவனை அறிஞர் மூடனென்பர் (1). அழைக்காமல் சபையிலாவது பிறர் வீட்டிலாவது நுழைபவன், தகுதியற்ற இடத்தில் உட்காருவோன், கோராமல் சளசளவென்று பேசுவோன், நம்பத்தகாத மனிதரையும் பொருள்களையும் நம்பித் திரிவோன், அவன் மூடன், மனிதப் பதர் ஆவான் (2).

இப்படிப்பட்ட மூடர், ஆசிரியர், உபதேசிகர், குருக்கள் அல்லது மதிப்பிற்குரியவராளுல், அங்கே மடமையும், அதர்மமும், பிணக்கும், கலகமும் பகையும் வேற்றுமையும் பெருகி துக்கக் காடாயிருக்கும்.

## மாணவர் தீமைகள்

आलस्यं मदमोहौ च चापलं गोष्ठिरेव च ।
स्तब्धता चाभिमानित्वं तथाऽत्यागित्वमेव च ॥
एते वै सप्त दोषाः स्युः सदा विद्यार्थिनां मताः ॥ 1 ॥
सुखार्थिनः कुतो विद्या कुतो विद्यार्थिनः सुखम् ।
सुखार्थी वा त्यजेद्विद्यां विद्यार्थी वा त्यजेत्सुखम् ॥ 2 ॥

(விதுரப்ரஜாகர (அத் 39) தின் வாக்யம்)

ஆலஸ்யம், சோம்பல், குடிவெறி, லாகிரி வஸ்துக்களில் மயங்கல், மோகம், சபலசித்தம், வீண்கதை பேசி இங்குமங்கும் திரிதல், படிக்க வணங்காமை, வணங்கா முடம், வீண்செருக்கு, தியாகமின்மை, சுயநலம் இந்த ஏழும் மாணவர்களைத் தீண்டும் குற்றங்களாகும் (1). சுகந்தேடுகிறவனுக்கு வித்தை யேது? வித்யார்த்திக்குச் சுகமேது? சுகந்தேடுகிறவன் கல்வியை விடுக. கல்வி தேடுகிறவன் சோம்பற் சுகத்தை விடுக (2).

விஷய சுகங்களை விட்டொழித்தாலொழிய வித்தை கற்க முடியாது.

## நன் மாணவர் இயல்பு

सत्ये रतानां सततं दान्तानामूर्ध्वरेतसाम् ।
ब्रह्मचर्यं दहेद्राजन् सर्वपापान्युपासितम् ॥

(மகாபாரதம்—உத்யோகபர்வம்)

எப்போதும் உண்மை யொழுக்கம் பூண்டு, புலனடக்கமும்
ஊர்த்துவ ரேதசும் பிரமசரியமும் கொண்டவர்களே, மாசற்ற
வித்வான்களாவார்கள். ஆகையால் ஆசிரியரும் மாணவரும்
சுபலக்ஷணங்களுடன் விளங்கவேண்டும். தங்கள் மாணவரை,
வாய்மையே பேசி, உண்மையே நினைத்து, மெய்ம்மையே
செய்யும் சத்தியராகவும், ஜிதேந்திரியர்களாயும், சீலர்களாயும்,
சுப குணரளாயும், சரீர ஆத்ம பலபூரணராயும், வேத சாஸ்திரங்
களின் வித்வான்களாகவும் ஆக்குக. கெட்ட சேட்டைகளி
லிருந்து விலக்கி, கல்வியில் முயற்சியைச் செலுத்தச் சொல்ல
வேண்டும். வித்யார்த்திகள் எப்போதும் இந்திரியங்களை
வென்றடக்கி, குரு பக்தியுடன் கல்வியிலும் ஆராய்ச்சியிலும்
உழைத்து, நிறைவான கல்வி, ஆயுள், பரிபூரணமான தர்மம்
புருஷார்த்தங்களைப் பெறுவதில் கருத்தூன்றவேண்டும். இவ்
வாறு கல்வி புகட்டுவது பிராமணர் தருமமாகும். க்ஷத்திரியர்
கடமை இராஜ தருமமாகும். அதைப்பற்றிப் பிறகு விவரிக்கப்
படும்.

வைசியர் கடமை: வைசியர் பிரமசரியங்காத்து வித்தை பயிலவேண்டும். பிறகு மணம் புரியலாம். அவர்கள் பல நாட்டுப் பாஷைகளைக் கற்றல், பலதுறை வணிகமுறை அறிதல், பல சரக்குகளின் விலைவாசி யறிதல், மலிவாக வாங்கல், விற்றல், தீபதீபாந்தரங்களுக்குச் சென்று வருதல், லாபமான

வேலைகளைச் செய்தல், பசு வளர்த்தல், பயிர்களை நிரம்ப விளைவித்தல், செல்வச் செழிப்புறல், தங்கள் செல்வத்தைக் கல்வியும் அறமும் ஓங்கச் செலவிடல், கபடின்றி உண்மையாக, யோக்கியமாகத் தொழிலை நடத்தல், பண்டங்களை வீணாக்காமல் பதனமாகக் காத்தல்—இவையே வைசியர் கடமையாகும்.

சூத்திரர் கடமை: சூத்திரர் எல்லாத் தொண்டிலும் திறமையாளராய், சமையல் வேலையில் தேர்ந்தவராய், மிக்க அன்புடன் துவிஜர் பணி செய்தல்; அவர்கள் தருவதைக் கொண்டு ஜீவித்தல் ஆகிய கடமைகளைச் செய்க. துவிஜர்கள் இவர்களுக்கு அன்ன வஸ்திரம், வீடு தந்து, மணம் புரிந்து இல்லறம் நடத்தவும் குறைவின்றி உதவி செய்க. அல்லது மாதச் சம்பளந் தருக.

நான்கு வருணத்தாரும் ஒருவருக்கொருவர் அன்பாதரவாக நடந்து, சுக துக்க லாப நஷ்டங்களில் அனுதாபத்துடன் பங்கு கொண்டு, ஐக்கியமாக அரசாங்கமும், சமுதாயமும் உன்னதி பெற்று முன்னேறவே உடல், மனம், பொருள் எல்லாம் தியாகம் செய்க.

கணவனும் மனைவியும் என்றும் பிரிந்திருக்கக் கூடாது. ஏனெனில்

पानं दुर्जनसंसर्गः पत्या च विरहोऽटनम् ।
स्वप्नोऽन्यगेहवासश्च नारीसन्दूषणानि षट् ॥ (மனு. 9-13)

கள், கஞ்சா முதலியன, மயக்கமுண்டாக்கும் மதுபானம், தீயர் உறவு, கணவனை விட்டோடல், போலித் துறவிகளை நாடி இங்கு மங்கும் அலைதல், பிறர் வீட்டில் உறங்கல், அன்னியர் மனையில் வசித்தல்—ஆகிய ஆறும் பெண்களுக்கு தோஷமாகும். ஆண்களுக்கும் இந்த விதியே பொருந்தும். அலுவலாகப் பிற நாடு செல்லல் அல்லது இறத்தல் ஆகிய இரண்டு சமயங்களில் சதிபதிகள் பிரிய நேரிடலாம். பிற ஊர் செல்வோரும், நீண்ட காலம் பிரிந்திருக்கக் கூடாது. மனைவியையும் உடனழைத்துச் செல்வது நலமாகும்.

## மறுமணம்

வினா: ஆணும் பெண்ணும் பல மணங்கள் செய்துகொள்ளலாமா? கூடாதா?

விடை: ஒரே சமயத்தில் கூடாது.

**வினா:** வெவ்வேறு சமயத்தில் அல்லது சந்தர்ப்பத்தில் பல மணங்கள் செய்துக் கொள்ளலாயா?

**விடை:** ஆம்.

सा चेदक्षतयोनिः स्याद्गतप्रत्यागतापि वा ।
पौनर्भवेन भर्त्रा सा पुनः संस्कारमर्हति ॥ (மனு. 9-176)

*பாணிக்ரஹணம் மட்டுமாகி, ஸம்யோகமாகாத, சாந்தியாகாதவர்கள் புனர் விவாகம் செய்துக் கொள்ளலாம். ஆனால் தேக சம்பந்தமான பிறகு (கணவனிறந்தால்) பிரம்ம க்ஷத்திரிய வைசிய ஸ்திரீகள் மறுமணம் செய்துக்கொள்ளக் கூடாது.*

**வினா:** மறு மணத்தால் என்ன கெடுதல்?

**விடை:** 1. ஆண் பெண்களிடையே அன்பு நிறைவாகாது. ஏனெனில் விரும்பியபோது, அவன் அவளைக் கைவிட்டு வேறொருத்தியுடன், அவள் வேறொருவனுடன் சேர இடமாகும். 2. சதி அல்லது பதி இறந்த பிறகு மறுமணம் புரிந்தால் முதல் பதி அல்லது சதியின் சொத்து, பொருள்களை எடுத்துக்கொண்டு போவார்கள். அதனால் குடும்பத்தில் சண்டையுண்டாகும். 3. நல்ல குடும்பங்களின் பெயர் அழிந்து சொத்து சுகங்கள் சின்ன பின்னமாகும். 4. ஸ்திரீ, புருஷர் இருபாலாரின் கற்பும் அழியும்.

இத்தகைய பிசகுகள் ஏற்படுமாதலால் துவிஜர்கள் மறுமணமாவது பல மணமாவது செய்துக்கொள்ளக் கூடாது.

**வினா:** சந்ததியில்லாமல் இறந்தால் குலம் நலியுமே. மறுமணம் புரியாவிட்டால் ஆணும் பெண்ணும் காமவேகத்தால் விபசாரம் செய்து கருச்சிதைவு முதலிய பல தீச்செயல்களுக்கு இடமாகும். அதனால் மறுமணமே நலமாகும்.

**விடை:** இல்லை யில்லை. ஆணும் பெண்ணும் சரியானபடி பிரம்மசரியம் அனுட்டித்தால் கெடுதல் ஏதும் விளையாது. குலபரம்பரை விளங்க வேண்டுமானால் தம்மினப் பையனைத் தெத்தெடுத்துக் கொள்ளலாம். பிரம்மசரியத்தைக் காக்க முடியாவிட்டால் நியோகத்தால் குழந்தைகள் பெறலாம்.

**வினா:** மறு மணத்திற்கும் நியோகத்திற்கும் வேறுபாடென்ன?

**விடை:** 1. விவாகமான பெண் தகப்பன் வீட்டை விட்டுக் கணவன் வீட்டிலேயே வசிக்கிருள். பிறகு பிதாவுடன்

விசேஷ சம்பந்தம் இருப்பதில்லை. நியோக செய்துக் கொண்ட விதவையும் இறந்துபோன தன் கணவன் வீட்டிலேயே வசிக்கிறாள். 2. கலியாணமான பெண்களின் பிள்ளைகள் அவர்கள் கணவரின் சொத்துக்குரியவராகிறார்கள். நியோக விதவையின் பிள்ளைகள், கர்ப்பதானம் செய்பவனின் சந்ததி யன்று, கோத்திரமுமன்று; அவன் சொத்திற்குரியவர்களுமன்று. அவர்கள் (அக்குழந்தை) தாயின் முன் கணவன் கோத்திரம்; அவன் பிள்ளைகள்; அவன் சொத்திற்கே உரியவர்களாய் அவன் வீட்டிலேயே வசிக்கிறார்கள். 3. மணம் புரிந்த சதிபதிகள் ஒருவருக்கொருவர் சேவை செய்வது கடமை. நியோக ஸ்திரீ-புமான்களுக்கு இச்சம்பந்தமில்லை. ஒப்பந்தம் முடிந்ததும் ஒட்டுறவில்லை. 4. மணவாளர் சம்பந்தம் சாகுமட்டும் இருக்கும். நியோக சம்பந்தம் காரியமானால் அத்துடன் சரி. 5. விவாகமான ஸ்திரீ-புருஷர்கள் வீட்டுக் காரியங்களை சேர்ந்து நிர்வகித்து நடத்தவேண்டும். நியோகத்தில் ஸ்திரீ-புருஷர்கள் அவரவர்கள் வீட்டுக் காரியங்களை ஒருவருக்கொருவர் சம்பந்தமின்றி தனித்தனியே கவனித்துக் கொள்ளுகிறார்கள்.

வினா: விவாகத்திற்கும் நியோகத்திற்கும் உரிய நியமங்கள் ஒன்றா வெவ்வேறா?

விடை: சிறிது வேறுபாடுண்டு. 1. மணம் புரிந்த சதிபதிகள் பத்துக் குழந்தைகள் வரையிற் பெறலாம். நியோகிகள் இரண்டு அல்லது நான்கு குழந்தைகளுடன் நிற்கவேண்டும். 2. கன்னிக்கும் குமரனுக்கும் திருமணம் நடக்கிறது. நியோகம் விதவைக்கும் விதவனுக்கும் நடக்கிறது. அது குமரிக்கும் குமரனுக்கும் அன்று. 3. மணமான தம்பதிகள் எப்போதும் சேர்ந்து வாழலாம். நியோகிகள் அப்படியன்று. கர்ப்பதானத்தின் போது தான் அவர்கள் சேர்ந்திருப்பார்கள். இரண்டாவது கர்ப்பத்துடன் நியோக ஸ்திரீ புருஷ சம்பந்தத்தை நிறுத்திக் கொள்ளவேண்டும். நியோக புருஷனும் அப்படியே. இரண்டாவது கர்ப்பத்துடன் நிற்கவேண்டும். நியோக புருஷனுக்காகப் பெற்ற குழந்தையை நியோக விதவை இரண்டு மூன்றாண்டுகள் வளர்த்து, அப்புருஷனிடம் தந்துவிட வேண்டியது. இவ்வாறு ஒரு கைம்பெண் தனக்காக இரண்டு குழந்தைகளையும், நான்கு

நியோக புருஷர் ஒவ்வொருவருக்கும் இரண்டு குழந்தைகளையும் பெற்றுத் தரலாம். இவ்வாறே ஒரு விதவனும் தனக்காக இரண்டு குழந்தைகளும், தனது நியோக விதவைகள் நால்வருக்கும் இரண்டிரண்டு குழந்தைகளும் உற்பத்தி செய்யலாம். இவ்வாறு நியோகத்தால் பத்துக் குழந்தைகள் பெறலாம். இதற்கு வேதக் கட்டளையுள்ளது:

इमां त्वमिन्द्र मीढ्वः सुपुत्रां सुभगां कृणु ।
दशास्यां पुत्राना धेहि पतिमेकादशं कृधि ॥ (ருக். 10-85-45).

"வீறு பெற்றபலவானே! செல்வனே! (மீட்வః இந்த்ர) நீ மனைவி அல்லது நியோக விதவைகளை மகிழ்வித்து நல்ல குழந்தைகளைப் பெறு. மணந்தவளிடம் பத்துக் குழந்தைகளைப் பெற்ற பிறகு அவளை உன் குடும்பத்தின் பதினோராவது நபராகக் கருதுக. பெண்ணே! நீ கணவனால் அல்லது நியோக புருஷனால் பத்துக் குழந்தைகளைப் பெற்று அந்த ஆண்பிள்ளை (புருஷனை)யைக் குடும்பத்தின் பதினோராவது ஆளாகக் கருது."

பிரம க்ஷத்ரிய வைசிய சதிபதிகள் பத்துக் குழந்தைகளுக்கு மேல் பெறக்கூடாது என்பது வேதக் கட்டளை. ஏனெனில் அதற்கதிகம் பெற்றால் சோனிகளாய், அறிவிலிகளாய் அற்பாயுளாய் முடியும். அத்தகைய பெற்றோரும் நோயாளராய், அற்பாயுசாய் முதுமையில் பெருந்துயர் வருந்துவார்கள்.

**வினா:** இந்த நியோக விஷயம் விபசாரம் போலத் தெரிகிறதே?

**விடை:** கலியாணமாகாத இருவர் புணர்ச்சியே விபசாரம் எனப்படும். அதுபோல் முறைப்படி நியோக விதியை மேற்கொள்ளாமல் கூடுவது விபசாரம் எனப்படும். முறையாக மணந்தவர் சேர்க்கை விபசாரமாகாததுபோல் முறையான நியோகச் சேர்க்கையும் விபசாரமாகாது. சாத்திர விதிப்படி ஒரு குமரி மணந்த குமரனைக் கூடுவதை பாவம், வெட்கம், விபசாரம் எனப்படுவதில்லையோ அதுபோலவே வேத விதிப்படி நியோகங் கொண்டு கூடுதல் களவொழுக்கமாகாது.

**வினா:** இருந்தாலும் நியோகம் வேசித்தனம் போலிருக்கிறதே?

**விடை:** இல்லை. ஏனெனில் வேசிக்கு நிச்சய புருஷனோ நியாயமோ கிடையாது; வரம்பு கிடையாது. நியோகம்,

விவாகம் போலவே நியமமுடையது. தன் பெண்ணை முறையாகக் கலியாணம் செய்து ஒருவனுக்குத் தருவதில் எப்படி வெட்கப்பட வேண்டியதில்லையோ அதுபோல் நியோகத்திலும் வெட்கத் தக்கதில்லை. விபசார ஸ்திரீ புருஷர் மணமான பிறகும் தங்கள் துன் மார்க்கத்தை விட்டு விடுவார்களா?

வினா: எங்களுக்கு நியோகம் பாபமாகத் தோன்றுகிறதே?

விடை: நியோகத்தைப் பாபமென்று நினைத்தால் கலியாணத்தையும் ஏன் நினைக்கலாகாது? நியோகத்தைப் தடுப்பதே பாபம். ஏனெனில் பெரிய வித்வான்கள் யோகிகளைத் தவிர, ஈச்வர சிருஷ்டி கர்மானுகூலமான ஸ்திரீ புருஷர்களுக்குரிய இயற்கையான கவர்ச்சியை யாராலுந் தடுக்க முடியாது. கள்ளப் புணர்ச்சியால் கர்பமாகிக் கருவுடைத்தலும் காய் விழச் செய்தலும் சிசுக் கொலையும் ஏற்படுகின்றன. அவற்றால் விதவையும் கள்ளக் காதலனும் வருந்த நேரும். இது மகா பாபமில்லையா? இளமையில், விஷய சுகம் அனுபவித்து மக்களைப் பெற வேண்டுமென்ற ஆசை அதிகமாயிருக்கிறது. அதைச் சட்டத்தால் அல்லது சமூகக் கட்டுபாட்டால் தடுத்தால் வாலிபர் இரகசியமாக விபசாரம் செய்வார்கள்; கெட்டுப் போவார்கள்.

புலன்களை அடக்க வல்லவர்களுக்கு நியோகமோ கடிமணமோ தேவையில்லை. அடக்க முடியாதவர்கள் அவசியம் கலியாணமாவாது நெருக்கடியில் நியோகமாவது செய்துகொள்ள வேண்டும். அதனால் விபசாரம் குறையும். காதலால் நல்ல குழந்தைகள் உண்டாகி மனித வர்க்கம் செழிக்கும், கருச்சிதைவு சிசுக்கொலை இவை ஒழியும்.

கீழ் மக்களுடன் பெண்களும், வேசிகளுடன் ஆண்களும் புணர்தல், துன்மார்க்கம், குலக்கேடு, வம்சநாசம், ஆண் பெண் துயர்கள், கவலைகள், கர்ப்பஹத்தி முதலிய பல பாபங்கள், மணம் நியோகம் இவற்றால் ஒழியும். ஆதலால் நியோகம் செய்ய வேண்டும்.

வினா: நியோகத்தில் அனுசரிக்கும் விதிகள் என்னென்ன?

விடை: திருமணம்போல் நியோகமும் வெளிப்படையாக உலகறிய நடக்கும். விவாகத்திற்கு நல்லோர் அனுமதியும், காதலர் திருப்தியும் வேண்டும். அப்படியே நியோகத்திற்

கும். நியோகங் கொள்ளும் காதலர் தங்கள் குடும்ப உறவினர் முன், சந்தானத்திற்காகவே நியோகங் கொள்வ தாகவும், நியோக உத்தேசம் நிறைவேறியதும் பிரிவோம் என்றும் பகிரங்கஞ் செய்ய வேண்டும். இதற்கு எதிராக நடப்பவர்கள் பாபிகள். அவர்கள் சாதி அல்லது அரச தண்டத்திற் குரியவர் ஆவார்கள். நியோக தம்பதிகள் மாதம் ஒரு முறை கர்பதானம் செய்க. கரு நிலைத்த பின் ஓராண்டு பிரிந்திருக்க வேண்டும்.

**வினா:** நியோகம் தங்கள் பந்துவர்க்கத்தில் நடக்கவேண்டுமா அல்லது வேறு வர்க்கத்திலா?

**விடை:** தன் குலம், தன்னின் உயர் குலப் பூமான்களுடன் பெண்கள் நியோகங் கொள்ளலாம். அதாவது வைசியப் பெண் வைசியர், க்ஷத்திரியர் அல்லது பிராமணருடன், க்ஷத்திரியப் பெண் க்ஷத்திரியர் அல்லது பிராமணருடன் நியோகங் கொள்ளலாம். வீரியம், சமவீரியம் அல்லது உத்தம வீரியத்துடன் சேரவேண்டும்; தன்னினும் கீழான வீரியத்துடன் சேரக்கூடாது என்பதே இதன் பொருள். வேத விதிப்படியே மணமோ நியோகமோ புரிந்து மரபை வளர்த்தலே மானிடப் பிறவியின் பயனாகும்.

**வினா:** மறுமணம் புரியாமல் நியோகங் கொள்வது புருஷ னுக்கு என்ன அவசியம்?

**விடை:** வேதாதி சாஸ்திர விதிப்படி ஆண் பெண்கள் ஒரு முறையே மணந்துக் கொள்ளலாம்; இரண்டாந் தடவை கூடாது என்பதை முன்னே சொன்னேன். கன்னி பிரம்ம சாரியைத்தான் மணக்க வேண்டும். விதவன் ஒரு கன்னியை மணத்தலும், விதவை ஒரு பிரம்மசாரியை மணத்தலும் குற்றமாகும். பிரம்மச்சாரி விதவையையாவது, கன்னிகை விதவனையாவது மணக்க விரும்ப முடியாது. கன்னி விதவனை மணக்காவிட்டால், பிரம்மசாரியும் விதவையையும் மணக்காவிட்டால் அப்போது ஆண் பெண்கள் நியோகம் புரிவதே கதியாகும். மேலும் ஒத்தவர்களை கூட்டுதலே தருமச் சம்மதமாகும்.

**வினா:** வேதாதி சாஸ்திரங்களில் விவாக விதியிருப்பதுபோல் நியோகத்திற்கும் ஆதாரமுண்டா?

**விடை:** பல ஆதாரங்கள் உண்டு. சிலவற்றை இங்கே காண்க:

कुहस्विद्दोषा कुह वस्तोरश्विना कुहाभिपित्वं करतः कुहोषतुः । को वां शयुत्रा विधवेव देवरं मर्यं न योषा कृणुते सधस्थ आ ॥ (ருக். 10-40-2)

उदीर्ष्व नार्यभि जीवलोकं गतासुमेतमुप शेष एहि ।
हस्तग्राभस्य दिधिषोस्तवेदं पत्युर्जनित्वमभि सं बभूव ॥

(ருக். 10-18-8)

"ஸ்திரீபுமான்களே" (தேவரம்) நியோகக் கணவனுடன் கூடிய விதவை போலும், முறையாக மணம் புரிந்த நாயகி கணவனுடன் கூடுவதுபோலும், நீங்கள் ஒரே படுக்கையிற் கூடிக் குழந்தைகளைப் பெறக் கடவீர். நீங்கள் இருவரும் இரவிலும் பகலிலும் எங்கே இருந்தீர்கள்? வேண்டிய பதார்த்தங்களை எங்கிருந்து பெற்றீர்கள்? எங்கு வசித்தீர்கள்? எங்கே துயின்றீர்கள், நீங்கள் யார், எந்த ஊர்?

இவ்வாறு வீட்டார் அனுதாபத்துடன் கேட்பதே அவர்கள் நியோகத்தை ஒப்பியதாகும். எங்கிருந்தாலும் ஸ்திரீபூமான்கள் சேர்ந்திருக்க வேண்டும்; குமாரி குமரனைக் கலியாணம் செய்துக் கொள்வதே போல, விதவையும் தக்க ஆண்மகனுடன் நியோகங் கொள்ளலாம் என்பது இதிலிருந்து விளங்கும்.

வினா: இறந்த கணவனுக்குத் தம்பி (தேவர*)யில்லா விட்டால், விதவை யாருடன் நியோகம் கொள்வது?

விடை: தேவரருடன் நியோகம் கொள்ளவேண்டும். ஆனால் "தேவர" என்ற சொல்லுக்கு நீங்கள் கொள்ளும் பொருள் சரியல்ல. பாருங்கள் நிருக்தத்தை:

1. देवरः कस्माद् द्वितीया वर उच्यते । (நிருக்தம் 3-15)

தன் புருஷனுடைய தமயன், தம்பி, உறவு, சுற்றம் யாராயினும் ஒரு விதவையின் இரண்டாம் புருஷன் 'தேவர' எனப்படுகிறான். இவர்களில் ஒருவரைக் கூடிச் சந்தானம் பெறலாம்.

2. ஓ (நாரி) கைம்பெண்ணே! (ஏதம் கதாஸு) இறந்த கணவனுக்காகத் துக்கப்படுவதை விட்டு (சேஷீ, அபிஜீவ லோகம்) இருப்பவருள் ஒருவரைத் (உபைஹி) தேர்ந்தெடுத்துக் கொள். (உதீர்ஷ்வ) ஆனால் ஒன்று நிச்சயித்துக் கொள். (ஹஸ்தக்ராபஸ்யதிதிஷோ:) உன் நியோகம் அந்தப் புமான் சந்த

* தேவர என்ற சொல்லுக்கு கணவன் தம்பி என்பது பொதுவாக நிலவியுள்ள பொருள்.

திக்காஞல் (இதம் ஜனித்வம்) பிறக்கும் குழந்தை (பத்யுஃ) அவ ஞுக்கே (பதிக்கே) சேரும். உன் சந்ததிக்காஞல் பிறக்கும் குழந்தை (தவ) உனக்குரியது, (அபிஸம் பபூத) இதை நினை. உனது நியோகக் கணவனும் இவ்வாறே நடக்கக் கடவான்.

अदेवृघ्न्यपतिघ्नीहैधि शिवा पशुभ्यः सुयमाः सुवर्चाः ।

प्रजावती वीरसूर्देवृकामा स्योनेममग्निं गार्हपत्यं सपर्य ॥

(அதர். 14-2-18)

அதர்வண வேதம் சொல்லுகிறது :

"பதிக்கோ, தேவருக்கோ துக்கமளிக்காத பெண்ணே! இல்லறத்தில் உயிர்களுக்கு நன்மை செய்யும் நீ, நல்ல தர்ம நியமங்கொண்டு திருவும், சகல சாத்திர அறிவும் கொண்ட உத்தம வீரதீர புத்திர பௌத்திராதிகளைப் பெறவேண்டி, இரண்டாவதாக நியோகக் கணவனை விரும்புகிருய். இன்பமளிக்கும் பதி அல்லது தேவரை அடைந்து கிரஹஸ்த தர்மத்திற்குரிய ஹோமாதிகளை நன்று நடத்துவாயாக.

(மனு.9-69)

"तामनेन विधानेन निजो विन्देत देवरः ।

"சேர்க்கையாகாத (அக்ஷதயோனி) இளம் விதவை இறந்த கணவனின் தம்பி அல்லது தமயனை மணம் புரியலாம்."

விஞ : ஒரு பெண் அல்லது ஆண் எத்தனை நியோகம் செய்யலாம்? நியோக பதிகளுக்கும் பெயரென்ன?

सोमः प्रथमो विविदे गन्धर्वो विविद उत्तरः ।

तृतीयो अग्निष्टे पतिस्तुरीयस्ते मनुष्यजाः ॥ (ருக். 10-85-40)

விடை : 'ஏ பெண்ணே' இனிய குணங்களுடைய விவாகமான உனது முதல் மணவாளன் சோமன் எனப்படுகிருன். நீ நியோகம் செய்த இரண்டாங்கணவன் மற்ருெரு பெண்ணுடன் சேர்க்கையானவனுதலால் கந்தர்வன் எனப்படுகிருன். மூன்ருங்கணவன் மோகக்கனல் கொண்டவனுதலால் அக்னி எனப்படுகிருன். நான்கிலிருந்து பதிஞேராம் கணவர் வரையில் மனுஷ்யர் எனப்படுகின்றனர். "இமாத்வமிந்த்ர......பதிமேகாதசம்க்ருதி" என்ற வேத வாக்கின்படி மனிதன் பதிஞேரு பெண்கள் வரையில்

நியோகங் கொள்ளலாம். பெண் பதினொரு ஆண்களை நியோகிக்கலாம்.

வினு: "ஏகாதசம்" பதினோராண்கள் என்பதைப் பத்து மக்கள் கணவனுடன் பதினொரு ஆண்கள் என்று கொள்ளக் கூடாதா?

விடை: அப்படிக்கொண்டால் "विधवेव देवरम्" "விதவேவ தேவரம்—தேவரை வரித்த விதவை, "देवरः कस्माद् द्वितीयो वर उच्यते,". "தேவர: கஸ்மாத் த்வதீயோ வர உச்சயதே" நியோகம் செய்த இரண்டாங் கணவன் தேவரனுவான், 'தேவரனுக்குத் துக்கம் விளையாத பெண்ணே', 'இரண்டாங் கணவன் கந்தர்வனுவான்' என்பது போன்ற வேதவாக்குகள் பொய்க்கும். உன் அர்த்தப்படி பார்த்தால் பெண்ணுக்கு இரண்டாங்கணவனே கூடாது.

### மனு சொல்லுகிறார்

देवराद्वा सपिण्डाद्वा स्त्रिया सम्यङ् नियुक्तया ।
प्रजेप्सिताधिगन्तव्या सन्तानस्य परिक्षये ॥ 1 ॥

ज्येष्ठो यवीयसो भार्य्यां यवीयान्वाग्रजस्त्रियम् ।
पतितौ भवतो गत्वा नियुक्तावप्यनापदि ॥ 2 ॥

औरसः क्षेत्रजश्चैव ॥ 3 ॥ (மனு. 9-58, 59, 159)

குழந்தையில்லாமல் இறந்தவன் மனைவி, கணவன் (மனைவியையிழந்த) தம்பி, அல்லது தமயன், அல்லது மைத்துனன், அல்லது கணவனின் ஆருவது வமிசத்திற்குட்பட்ட உறவின் முறையாருடன் நியோகம் செய்துகொள்ளலாம். குழந்தையாசை இருந்தால் மட்டும் இப்படி நியோகம் செய்ய வேண்டும். குழந்தை பெறும் அவசியமோ ஆவலோ இல்லாத தம்பி மனைவியை, அண்ணன் மோகத்தால் அணுகுவதும், அண்ணன் மனைவியைத் தம்பி யணுகுவதும் மிகவும் இழிவாகும். இரண்டாங் கர்ப்பத்துடன் நியோகம் சரி. ஆண் பெண் இருவருக்கும் குழந்தைகள் வேண்டுமானுல் இருவரும் நான்கு குழந்தைகளைப் பெறலாம். அதன் பிறகு புணர்ச்சி கூடாது. மேற்கொண்டு மக்கள் வேண்டுமானுல் இன்னொரு நியோகம் கொள்ளவேண்டும். இவ்வாறு பத்துக் குழந்தைகள் பெறலாம். அதற்கப்புறம் கூடுகிறவர், காமவெறியர், மதியீனர். நியோகம்

சந்தானத்திற்கே யன்றி மிருகங்கள் போலக் காமக் கிரீடைக் கன்று.

**வினு:** ஒரு பெண் நியோகங்கொள்வது பதி இறந்த பின்பா? முன்பா?

**விடை:** கணவன் உள்ளபோதும் நியோகம் கொள்ளலாம்.

अन्यमिच्छस्व सुभगे पतिं मत् ॥ (ருக். 10-10)

குழந்தை தரமுடியாத கணவன் மனைவியை நோக்கி, "சுபவதியே! என்னுல் மக்களைப் பெறக் கருதாதே. இன்னொரு புருஷனைச் சேர்ந்து சந்ததி பெறு" என்று சொல்லுகிருன். இது ருக்வேத வாக்கு. நியோகப் பெண் தனது சொந்தப் பதிசேவையில் கருத்துடனிருக்க வேண்டும். இவ்வாறே சந்ததி யுண்டுபண்ணமுடியாமல் நோய் முதலியவற்ருல் வருந்தும் மனைவியும் "நாதா! என்னுல் மக்களைப் பெறும் ஆசை வேண்டாம். தாங்கள் தக்க விதவையுடன் நியோகங்கொண்டு மரபை வளருங் கள்" என்று சொல்ல வேண்டும். இதே மாதிரிதான் சரித்திரத்தில் பாண்டு பத்தினிகளான குந்தியும் மாத்ரியும் நியோகங்கொண்டு மரபை வளர்த்தார்கள். அதே மாதிரி வியாசர் தம் சகோதரர்களான விசித்திரவீரியனும், சித்திராங்கதனும் இறந்த பிறகு, அவர்கள் மனைவியரான அம்பிகையைப் புணர்ந்து திருதிராட்டிரனையும், அம்பாலி கையைப் புணர்ந்து பாண்டுவையும், தாசி *ஸ்திரீ ஒருவளால் விதுரனையும் பெற்ருர்.

प्रोषितो धर्मकार्यार्थं प्रतीक्ष्योऽष्टौ नरः समाः ।
विद्यार्थं षड्यशोऽर्थं वा कामार्थं त्रींस्तु वत्सरान् ॥ 1 ॥
वन्ध्याष्टमेऽधिवेद्याब्दे दशमे तु मृतप्रजा ।
एकादशे स्त्रीजननी सद्यस्त्वप्रियवादिनी ॥ 2 ॥ (மனு. 9-76-81)

குலப் பெண், தனது கணவர் தர்மார்த்தமாகப் பரதேசஞ் சென்றிருந்தால் எட்டாண்டுகள், கல்வி புகழுக்காகச் சென்றிருந் தால் ஆருண்டுகள், பொருளீட்டல் முதலிய விருப்பங்களை நிறை வேற்றச் சென்றிருந்தால் மூன்ருண்டுகள் பொறுத்திருந்து பிறகு

* தாசி என்ருல் பணி, சேவை செய்பவள் என்று கொள்க.

நியோகம் கொண்டு சந்ததி வளர்க்கவேண்டும். சொந்தக் கணவன் வந்ததும் நியோக பதியை விலக்கவேண்டும். (1) அதே மாதிரி புருஷனும் மனைவி மலடானால் கலியாணமானது முதல் எட்டாண்டுகள், குழந்தைகளெல்லாம் இறந்தால், பத்தாண்டுகள், பெண் குழந்தைகளே பெற்றால் பதினோராண்டுகள் பொறுத்தும், அடங்காப் பிடாரி, சண்டைக்காரி, வாய்ப் பட்டியானால் உடனேயும் நியோகம் செய்துகொண்டு மற்றொரு பெண்மூலம் சந்ததியை வளர்க்கவேண்டும்.

அவ்வாறே புருஷன் பொறுக்கமுடியாத இடும்பை செய்தால், துயரீந்தால், நோயாளியானால், மனைவியும் நியோகங்கொண்டு அதனால் பிறக்கும் மகவிற்குக் கணவனின் சொத்தைத் தர வேண்டும். இத்தகைய பிரமாணங்களாலும் யுக்தியாலும் ஸ்வயம்வர விவாகம் அல்லது நியோகங்கொண்டு அவரவர் குலத்தைச் செழிப்புறப் பெருமைப்படுத்துங்கள். விவாகத்தால் பிறந்த 'ஔரஸ்' புத்திரன், தந்தையின் சொத்திற்குரியவனாதல் போலவே, நியோகத்தாற் பிறந்த 'க்ஷேத்ரஜ' புத்திரனும் தயா பாகத்திற்குரியவனாகிறான்.

ஆணும் பெண்ணும் வீர்யத்தையும் ரஜத்தையும் விலை காணாப் பொருள்களாக மதிக்கவேண்டும். இந்த அமூல்ய வஸ்துவை பரஸ்திரிகமனத்தாலோ, வேசை மயக்கத்தாலோ, துஷ்டர் சேர்க்கையாலோ வீணாக்குபவர் மகா மூடர்களே யாவார். ஏனெனில் உழவன் அல்லது தோட்டக்காரன் மூடனாயிருந்தாலும், தன் வயல் அல்லது தோட்டத்தைத் தவிர பிறர் பூமியில் வித்து நடமாட்டான். சாதாரண விதைக்கே இவ்வாறானால், மிகச் சிறந்த மானிடமான மரத்தை வளர்க்கும் வித்தைக் கெட்ட நிலத்தில் விதைப்பவன், அந்த மூடனைவிட மகா மூர்க்கனாவான். ஏனெனில் அதன் பலன் அவனுக்குக் கிடைப்பதில்லை. आत्मा वै जायते पुत्रः ॥ (ஆத்மா வை ஜாயதே புத்ரஃ) மகன் தந்தையின் ஆத்மாவேயாகிறான் என்பது பிராஹ்மண வாக்கு.

अङ्गादङ्गात्सम्भवसि हृदयादधिजायसे ।
आत्मा वै पुत्रनामासि स जीव शरदः शतम् ॥ (நிருக்த. 3-4)

"குழந்தாய் என் ஒவ்வோர் உறுப்பினின்றும் போந்த வீரியத்தினின்றும், என் உள்ளக் கிளர்ச்சியிலிருந்தும் நீ உண்டானாய். ஆதலால் நீ என் ஆத்ம சமானன். எனக்கு முன்னே நீ இறக்காதே. ஐயா, நீ நூறாண்டு வாழ்ந்திரு."

மகாத்மாக்களின் உடலை உண்டாக்கத்தக்க வீரியத்தை வேசை முதலிய கெட்ட பெண்களிடம் பெய்தலும், கெட்ட விதையை நல்ல நிலத்தில் நடலும் மகா பாபமாகும்.

வினா: மணமே புரிவதேன்? அதனால் கட்டும் கவலையும் உண்டாகின்றன; துன்புற வேண்டியிருக்கிறதே. யாருக்கு எவர் விருப்பமோ அவருடன் கூடி வாழ்ந்து, விருப்பமற்றால் பிரிந்து போதல் நலமன்றோ?

விடை: இந்த விவகாரம் பசு பட்சிகளுக்குச் சரி. மனிதருக்கன்று. விவாக நியமமில்லாவிட்டால், இல்லறத்தின் நல்ல நல்ல செயல்களெல்லாம் தட்டுக் கெட்டு அழியும். ஒருவருக்கொருவர் வணங்கிச் சேவை செய்யார். எல்லாரும் படு விபசாரத்தில் முதிர்ந்து, பிணி சுமந்து மெலிந்து, அற்பாயுளாய் இறப்பார்கள். எவரிடமும் எவரும் பயமும் நாணமுமின்றி நடப்பார்கள். முதுமையில் யாரும் உதவ மாட்டார்கள். மகா விபசாரத்தால் நலிந்து அற்பாயுளாய் குலம் நசிக்கும். நாதனோ, தாயபாகியோ இல்லாமல் சொத்து நஷ்டமாயொழியும். எந்தப் பொருளையும் எவரும் நீடித்துக் காக்க முடியாதுபோகும். பெருஞ்செயல்களைச் செய்ய யாருக்கும் அதிகாரமிராது.—இத்தகைய பிழைகளை நீக்க மணம் புரிதலே மிகச் சிறந்ததாகும்.

வினா: ஒரே மணம் புரியவேண்டும்; ஒரு கணவனுக்கு ஒரு மனைவி, ஒரு மனைவிக்கு ஒரே கணவன் என்ற நியமமிருக்கிறதே. மனைவி கர்ப்பவதியானால் அல்லது தீராத நோயாளியானால், அதே மாதிரி கணவனும் வியாதிக்காரனானால் என்ன செய்வது? இளமையின் ஆசைகளைக் கட்டுப்படுத்த முடியாதே!

விடை: இந்தக் கேள்விக்குப் பதில் நியோக விஷயமாகச் சொல்லப் பெற்றது. மனைவி கர்ப்பவதியான போது கணவன் ஓராண்டு காமத்தை அடக்க முடியாவிட்டால், ஒரு விதவையுடன் அல்லது தீரா நோயாளியின் மனைவியுடன் நியோகங் கொண்டு குழந்தை பெறலாம். ஆனால் அவன் வேசியிடம் போகக்கூடாது; விபசாரமும் செய்யக்கூடாது.

அடைதற்கரியதை அடையவும், அடைந்ததைக் காக்கவும், காத்ததை வளர்க்கவும், பொருட் செழிப்பை தேசோபகாரத்தில்

செலவிடவும் வேண்டும். மேற்சொன்னபடி எல்லா வகையாலும் தத்தம் வருணாசிரம தருமங்களை மிகவும் உற்சாகமாகப் போற்றி, உடல் மனம் பொருள்களால் எல்லாரும் பரமார்த்தம் பெற வேண்டும். மாதா, பிதா, மாமன், மாமி இவர்களுக்கு அத்யந்த சிசுருஷை செய்யவேண்டும். நண்பர், அக்கம் பக்கத்தார், அரசர், புலவர், வைத்தியர், சத்திய புருஷர்களிடம் அன்பு வைக்க வேண்டும். தீயரையும் அதர்மிகளையும் அலட்சியம் செய்து வெறுக்காமல், அவர்களையும் நல்வழிக்குக் கொண்டுவர முயற்சி செய்யவேண்டும். தன் பிள்ளைகளின் கல்விக்கும், அவர்களை வித்வானாக்கவும் கூடுமான வரையில் அன்புடன் நன்முறையில் பொருளைச் செலவிடுக. அவர்களை நிறைவான புலவர்களாகவும், நல்ல கலைப் பயிற்சியாளராகவும், அறவோராக வும், பாரமார்த்திகளாகவும், மோக்ஷ சாதகராகவும், பரமானந்த ராகவும் முன்னேறச் செய்க. மேலும், உண்மையற்ற கீழே குறித்தவை போன்ற சுலோகங்களை நம்பக்கூடாது:

पतितोऽपि द्विजः श्रेष्ठो न च शूद्रो जितेन्द्रियः ।
निर्दुग्धा चापि गौः पूज्या न च दुग्धवती खरी ॥ 1 ॥

अश्वालम्भं गवालम्भं संन्यासं पलपैतृकम् ।
देवराच्च सुतोत्पत्तिं कलौ पञ्च विवर्जयेत् ॥ 2 ॥

नष्टे मृते प्रव्रजिते क्लीबे च पतिते पतौ ।
पञ्चस्वापत्सु नारीणां पतिरन्यो विधीयते ॥ 3 ॥

"பதிதனானாலும் துவிஜனே சிரேஷ்டனான்; ஜிதேந்திரியனானாலும் சூத்திரன் சிறந்தவனன்று. பால் கொடுக்கும் கழுதையை விட பால் கொடா பசுவே மேல் (1) அசுவமேதம் கோமேதம் சந்யாஸப் பிதுர்களுக்கு மாமிச பிண்டம், நியோகம் இவற்றைக் கலியுகத்தில் செய்யக்கூடாது. (2) புருஷன் போன விடந் தெரியாத போது, இறந்த போது, துறந்த போது, அலியான போது, ஜாதி விலக்கான போது, இந்த ஆபத்து சமயத்தில் மனைவி மற்றொரு புருஷனைக் கூடலாம்." (3)

இவை பராசர முனியின் பெயரில் கற்பிதமான ஸ்லோகங்கள்.

இவற்றைப் பிரமாணமாகக் கொள்ளற்க. தீமை செய்யும் துவிஜன் மேலாம்! நன்மை செய்யும் புண்ணியனான சூத்திரன்

கீழாம்! இதைவிட பக்ஷபாதமான, அநியாயமான அதர்மம் வேறுண்டா? பால் தரும் பசுக்களை இடையர் காப்பது போல், சுமை தூக்கும் கழுதையை வண்ணார் காக்கவில்லையா? இந்த உபமானமும் விஷமத்தனமானது. ஏனெனில், துவிஜரும் சூத்திரரும் அசல் மனிதர். பசுவும், கழுதையும் வேறு வகை விலங்குகள். உபமானம் பொருந்தாது. இது அறிஞர் ஏற்கத் தக்கதன்று. (1) குதிரை யாகம், பசு யாகம் முதலியவை வேத சம்மதமேயில்லை. கலியுகத்தில் மட்டும் இந்த யாகங்கள் விலக்கென்றால், திரேதாயுகத்தில் நடந்தன என்பதாகிறது. சிறந்த யுகத்தில் இக்கெட்ட காரியங்கள் நடந்திருப்பதாக கருதுவதே பிசகு. ஸந்யாஸம் வேதாதிகளின் சம்மதம். அதைக் கண்டிப்பது காரணமற்றதாகும். புலாலுணவு தீதெனில் எப்போதுந்தான் விலக்கு. தேவரத்தால் நியோகத்தால் மகப்பேறெய்துவது வேதத்தில் விதிக்கப்பட்டதெனின் இந்த சுலோக கர்த்தா ஏன் குலைக்கிறார்? (2)

கணவன் பரதேசம் போன காலத்தில் இல்லாள் நியோகம் செய்துக் கொண்டால், அவன் வந்த பிறகு அவள் யாருக்கு மனைவி? விவாக பதிக்கே என்று சொன்னால் ஒப்புவோம். ஆனால் பராசரத்தில் இதைப்பற்றிப் பேச்சில்லையே? பெண்களுக்கு ஐந்தாபத்தை விட வேறு இல்லையா? கணவனின் தீரா நோய், சண்டை, மனத் தாங்கல் முதலியவை வருகின்றனவே (3) ஆகவே இத்தகைய சுலோகங்களை ஒருக்காலும் நம்பக் கூடாது.

**வினா:** நீர் பராசர முனி வசனத்தைக் கூட நம்பவில்லையே! ஏன் ஐயா?

**விடை:** யார் வசனமானாலும் வேத விரோதத்தை நம்ப முடியாது. மேலும் இவை பராசர வாக்கன்று. புராணங்களில் பிரம்மா சொன்னார், வசிஷ்டர் சொன்னார், ராமர் சொன்னார், சிவன் சொன்னார், விஷ்ணு சொன்னார், தேவி சொன்னாள் என்ற ரகத்தைச் சேர்ந்தவை இவை. இந்தப் பெரியார்களைப் போட்டுப் புத்தகம் எழுதினால் உலகம் நம்பும், தமக்கும் நன்றாகப் பிழைப்பு நடக்கும் என்றுதான் சிலர் இப்படிப்பட்ட அனர்த்த கிரந்தங்களைச் செய்கிறார்கள். சில இடைச் செருகல்களைத் தவிர மனுஸ்மிருதியே வேதானுகூலமானது. மற்றவை பொய் நூல்களென்க.

**வினா:** இல்லறம் மற்ற ஆசிரமங்களினும் சிறுமையா பெருமையா?

**விடை:** அவரவர் கடமைக் கேற்றபடி எல்லாம் பெருமை தாம். இருப்பினும், மனு இல்லறத்தை உயர்வாகச் சொல்லுகிறார்:

यथा नदीनदाः सर्वे सागरे यान्ति संस्थितिम् ।
तथैवाश्रमिणः सर्वे गृहस्थे यान्ति संस्थितिम् ॥ 1 ॥ (மனு. 6-90)

यथा वायुं समाश्रित्य वर्त्तन्ते सर्वजन्तवः ।
तथा गृहस्थमाश्रित्य वर्त्तन्ते सर्व आश्रमाः ॥ 2 ॥

यस्मात्त्रयोऽप्याश्रमिणो दानेनान्नेन चान्वहम् ।
गृहस्थेनैव धार्य्यन्ते तस्माज्ज्येष्ठाश्रमो गृही ॥ 3 ॥

स संधार्यः प्रयत्नेन स्वर्गमक्षयमिच्छता ।
सुखं चेहेच्छता नित्यं योऽधार्यो दुर्बलेन्द्रियैः ॥ 4 ॥ (மனு. 3, 77-79)

எல்லா ஆறுகளும் ஓடைகளும், அலைந்து திரிந்து கடலிலே தாம் சேர்ந்து நிலைக் கொள்ளுகின்றன. அதுபோல் மற்றெல்லா ஆசிரமங்களும் இல்லறத்திலேயே நிலைப்புக் கொள்ளுகின்றன. இல்லறமின்றி எந்த ஆசிரம விவகாரமும் நிறைவேறாது. (1)

காற்றிலேதான் எல்லா உயிர்களும் உயிர்க்கின்றன. அதுபோல் இல்லறத்திலேதான் பிரம்மசரியம், வானப்ரஸ்தம், சந்யாஸமாகிய மற்ற ஆசிரமங்கள் பிழைத்திருக்கின்றன. (2)

பிரம்மசாரி, வானப்ரஸ்தன், சந்யாஸி ஆகிய மூன்று ஆசிரமிகளுக்கும், தானம் அன்னம் அளித்துக் காப்பது கிரகஸ்தாசிரமம். ஆகையால் இல்லறமே மிகச் சிறந்த ஆசிரமமாகும். (3)

இகபரசுகத்தை, அழிவற்ற மோக்ஷத்தை விரும்புவோர், இல்லறங் காக்கக் கடவர். இந்த இல்லறம், பேடி, துர்பலர்களுக்கும், புலனடக்க மற்றவர்களுக்கும் தகுதியன்று. (4)

இவ்வுலக விவகாரமெல்லாம் இல்லறத்திலிருந்தே உண்டாகின்றன. இல்லறமின்றி மக்கட் பேறில்லை, அஃதின்றேல் பிரமசாரி வானப்ரஸ்தன், துறவியாகியோர் எங்கிருந்து முளைப்பார்? இல்லறத்தை இகழ்பவன் இகழத்தக்கவன், புகழ்பவனே, புகழத்தக்கவன். ஆனால் ஆண் பெண்கள் நல்ல கல்வி

கற்று, புருஷார்த்திகளாய் எல்லா விவகாரங்களையும் அறிந்தவர்களாயிருந்தாலொழிப, இல்லறத்தில் இன்புற முடியாது. இதனால் பிரமசரியமும் முன்சொன்ன ஸ்வயம்வரமும் இல்லற இன்பத்திற்கு முதன்மையாகும்.

இங்கே திருமணத்தையும் இல்லறத்தையும் பற்றிச் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. இனி வானப்ரஸ்த, சந்யாஸ ஆசிரமத்தைப் பற்றி எழுதுவோம்.

ஸ்ரீமத் தயானந்த ஸரஸ்வதி சுவாமிகள் அருளிய
ஸத்யார்த்தப் பிரகாசத்தில் திருமணத்தையும்
இல்லறத்தையும் பற்றிய
நான்காம் அத்தியாயம்
முற்றிற்று.

## ஐந்தாம் அத்தியாயம்

# வானப்பிரஸ்தமும் ஸந்யாஸமும்

ब्रह्मचर्याश्रमं समाप्य गृही भवेत् गृही भूत्वा वनी भवेद्वनी भूत्वा प्रव्रजेत् ॥

சதபதம். 14

பிரமசரியாசிரமும் முடிந்த பிறகு இல்லறம், இல்லறம் நிறைவேறிய பிறகு (வனத்தறம்) வானப்ரஸ்தம், வானப்ரஸ்தம் நிறைவேறியதும் துறவறம். இந்தக் கிரமத்தில் ஆசிரமங்களை அனுஷ்டித்தலே மனிதனுக்கு நலமாகும், கடமையுமாகும்.

एवं गृहाश्रमे स्थित्वा विधिवत्स्नातको द्विजः ।
वने वसेत्तु नियतो यथावद्विजितेन्द्रियः ॥ 1 ॥
गृहस्थस्तु यदा पश्येद्वलीपलितमात्मनः ।
अपत्यस्यैव चापत्यं तदारण्यं समाश्रयेत् ॥ 2 ॥
संत्यज्य ग्राम्यमाहारं सर्वं चैव परिच्छदम् ।
पुत्रेषु भर्यां निःक्षिप्य वनं गच्छेत्सहैव वा ॥ 3 ॥
अग्निहोत्रं समादाय गृह्यं चाग्निपरिच्छदम् ।
ग्रामादरण्यं निःसृत्य निवसेन्नियतेन्द्रियः ॥ 4 ॥
मुन्यन्नैर्विविधैर्मेध्यैः शाकमूलफलेन वा ।
एतानेव महायज्ञान्निर्वपेद्विधिपूर्वकम् ॥ 5 ॥ (மனு. 6, 1-5)

மனுதர்மம் சொல்லுகிறது :

பிரமசரியங் காத்து, ஸ்நாதகனான துவிஜன், இவ்வாறு இல்லறம் நடத்திய பிறகு, நியமப்படி புலன்களை அடக்கி வென்று வானப்ரஸ்தனாகி வனம் புகுக (1) தலை நரைத்து, தோல் திரைத்து, மக்களுக்கு மக்கள் பிறந்ததைப் பார்த்த பிறகே, பேரன் பேர்த்தி எடுத்த பிறகே, ஒருவன் வானப்ரஸ்தம் கொண்டு வனத்தில் வாழ்க (2) ஊரில் உண்ணும் சுவையான உணவுகள், உடுக்கும் அழகான ஆடைகள், ஆகியவற்றை விடுத்து, மனைவியைப் பிள்ளைகளிடம் ஒப்பித்து அல்லது உடனழைத்துக் கொண்டே வனம் புகவேண்டும் (3) அக்னி ஹோத்ரத்திற்கு வேண்டிய எல்லாச் சாமான்களையும் எடுத்துக் கொண்டே ஊரை

நீத்து வனத்தில் புலனடக்கி வாழவேண்டும் (4) தானிய வகைகள், சோறு, காய் கறி கனி கிழங்கு இவற்றால் முறையாகப் பஞ்ச மகா யக்ஞங்களைச் செய்து, விருந்தோம்பித் தானும் பிழைக்க வேண்டும் (5)

வானப்பிரஸ்தன் வாழும் முறை :

स्वाध्याये नित्ययुक्तः स्याद्दान्तो मैत्रः समाहितः ।
दाता नित्यमनादाता सर्वभूतानुकम्पकः ॥ 1 ॥

अप्रयत्नः सुखार्थेषु ब्रह्मचारी धराशयः ।
शरणेष्वममश्चैव वृक्षमूलनिकेतनः ॥ 2 ॥ (மனு. 6-8-26)

ஸ்வாத்யாய அதாவது கற்றல் கற்பித்தலில் தினம் கருத்தூன்றி, ஜிதாத்மனாய், எல்லாருக்கும் நண்பனாய், புலனடக்கி, வித்யாதானம் செய்து, பரம தயாளுவாய், எவரிடமும் எதையும் தானமாக வாங்காதவனாய் வானப்ரஸ்தன் வாழ்க (1) தேக சுகத்திற்காக முயலாமல், மனைவி உடனிருந்தும் பிரமசரியங்காத்து, காமத்திற்கு இடந்தராமல் தரையில் படுத்து, தனக்குப் பிரியமான தன்னுடையதும் மற்றவரதும் பொருள்களில் மமதை கொள்ளாமல், ஆசையை அடக்கி, மரத்தடியில் வசித்து வரவேண்டும். (2)

முண்டகோபநிஷத்து சொல்லுகிறது :

तपःश्रद्धे ये ह्युपवसन्त्यरण्ये शान्ता विद्वांसो भैक्षचर्यां चरन्तः ।
सूर्यद्वारेण ते विरजाः प्रयान्ति यत्रामृतः स पुरुषो ह्यव्ययात्मा ॥
(முண்டகம்-1-2-11)

வனத்தில் கருத்துடன் தவம் புரிந்துகொண்டு, சத்தியசீலனாய், பிக்ஷையெடுத்துக் கொண்டு, வனத்தில் வசிக்கும் சாந்தனை அறிஞன் தீமை யொழிந்து, அழிவற்ற புருஷோத்தமனாய், பிறப்பில்லாத சுத்தனாய், உயிர்க்குயிராயிருக்கும் பரமாத்மாவை அடைந்து பரமானந்தனாகிறான்.

## வானப்பிரஸ்த விதிகள்

अभ्यादधामि समिधमग्ने व्रतपते त्वयि ।
व्रतञ्च श्रद्धां चोपैमीन्धे त्वा दीक्षितोऽअहम् ॥ (யஜுர். 20-24)

"நான் அக்னி ஹோமம் செய்து, தீக்ஷிதனாகி, விரதம், சத்தியங்காத்தல், சிரத்தை முதலியவற்றை அடைவேன், என்ற உறுதியுடன் வானப் பிரஸ்தனாகி பலவகைத் தவம் புரிவேனாக." நல்லோர் கூட்டம், யோகப் பயிற்சி, ஆத்மவிசாரம், நல்ல சிந்தனை, ஞானம், பரிசுத்தம் இவற்றை அடைக. பிறகு துறவை விரும்பினால் மனைவியைப் பிள்ளைகளிடம் அனுப்பித் துறவு பூண்க. இதுவே வானப்ரஸ்தாசிரமச் சுருக்கமாகும்.

## துறவு (ஸந்நியாஸ விதி)

वनेषु च विहृत्यैवं तृतीयं भागमायुषः ।
चतुर्थमायुषो भागं त्यक्त्वा सङ्गान् परिव्रजेत् ॥ (மனு. 6-33)

மனித வாழ்வின் மூன்றும் பாகம், அதாவது ஐம்பது முதல் ஏழுபது வயது மட்டும், மேற்சொன்னபடி வானப் பிரஸ்தனாயிருந்து, பிறகு வாழ்வின் நான்காம் பாதத்தில், எல்லா உறவுகளையும் விட்டு, ஸர்வ ஸங்கபரித்யாகியாய் துறவறம் பூண்க.

வினா: இல்லறம் வனத்தறம் இன்றி நேராகத் துறவறங் கொள்வது பாபமா, அன்று?

விடை: பாபம் இருக்கலாம், இல்லாதிருக்கலாம்.

வினா: இருவிதமாகவும் எப்படி யிருக்கலாம்?

விடை: இருவிதம் ஒன்றுமில்லை. பால சந்யாசியாகி பிறகு விஷயங்களிற் சிக்கியோன் மகா பாபி யாகிறான். விஷயாசக்தி யற்று முக்தனானவன் மகாத்மாவான சத்திய புருஷனாகிறான்.

यदहरेव विरजेत्तदहरेव प्रव्रजेद्वनाद्वा गृहाद्वा ब्रह्मचर्यादेव प्रव्रजेत् ॥

(ப்ராமணக்ரந்தம்)*

வைராக்கியம் பிறந்ததும் வீட்டிலிருந்தாவது காட்டிலிருந்தாவது துறவு கொள்ளலாம். இது பிராஹ்மணக்ரந்த வாக்கு. மேற்சொன்ன முறை முதலாவது. இல்லறத்திலிருந்து வானப்பிரஸ்தமின்றியே துறப்பது இரண்டாவது முறை. மூன்றாவது, விஷய போகம் காமம் இவற்றை அடக்கி ஜிதேந்திரியனான வித்வான் பிரமசரியத்திலிருந்து பொதுப் பணி

* ஜபலோபனிஷத் 4—1.

இச்சையால் நேராகத் துறவறங் கொள்ளல்—ஆக மூன்று வகையாகத் துறவு நிகழும். வேதத்தில் यतय: ब्राह्मणस्य, विजानत:†† போன்ற ஆதாரங்கள் இதற்குண்டு. ஆனால்,

नाविरतो दुश्चरितान्नाशान्तो नासमाहित: ।
नाशान्तमानसो वापि प्रज्ञानेनैनमाप्नुयात् ॥ (கடோபநிஷத் 2-23)

துராச்சாரத்தை விடாதவனும், சாந்தமற்றவனும், மனச் சாந்த மற்று உள்ளம் இறைவனுடன் யோகத்தில் ஒன்றாமல் ஒழுக்கமில்லாதவனும், துறவு கொள்வதில் பயன் இல்லை. ஏனெனில் அவன் ப்ரக்ஞானத்தால், அந்தர் ஞானத்தால், பரமாத்மனை அறியமாட்டான்.

ஆகையால்,

यच्छेद्वाङ्मनसी प्राज्ञस्तद्यच्छेद् ज्ञान आत्मनि ।
ज्ञानमात्मनि महति नियच्छेत्तद्यच्छेच्छान्त आत्मनि ॥
(கடோபநிஷத். 3-13)

அறிவாளியான துறவி அதர்மங்களிலிருந்து வாக்கையும் மனதையுந் திருப்பி, ஞானத்திலும் அனுபூதியிலும் செலுத்துக. ஞானாத்மாவை, தன்னறிவை பரமாத்மாவிடம் உய்க்கவும். விக்ஞானத்தால் சாந்தமயமான அந்தராத்மாவில் நிலைத்திருக் கட்டும்.

परीक्ष्य लोकान् कर्मचितान् ब्राह्मणो निर्वेदमायान्नास्त्यकृत: कृतेन ।
तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् समित्पाणि: श्रोत्रियं ब्रह्मनिष्ठम् ॥
(முண்டகம் 2-12)

உலக போகங்களெல்லாம் கர்மத்தாலே வருகின்றன. இதை யறிந்த பிராஹ்மணன் அல்லது துறவி, மன வைராக்கிய னாகவேண்டும். பரமாத்மா கர்மத்தால் ஆக்கப்படாதவன். அவனைக் கேவலம் கருமத்தாலேயே அடையமுடியாது. ஆதலால் அவன் விக்ஞானம் அல்லது அருளறிவைப் பெறுதற்கு வேத வித்தனாகவும், பிரஹ்ம நிஷ்டனுமாகவும் உள்ள குருவை அடைந்து, சமித்தை அளித்து, வணக்கத்துடன் சந்தேகங்களைக் கேட்டுத் தீர்த்துக்கொள்க.

†† ருக்வேதம் 6—18.

ஆனால் போலித் துறவிகளை விலக்க வேண்டும் :

अविद्यायामन्तरे वर्तमानाः स्वयं धीराः पण्डितम्मन्यमानाः ।
जङ्घन्यमानाः परियन्ति मूढा अन्धेनैव नीयमाना यथान्धाः ॥ 1 ॥
अविद्यायां बहुधा वर्तमाना वयं कृतार्था इत्यभिमन्यन्ति बालाः ।
यत्कर्मिणो न प्रवेदयन्ति रागात् तेनातुराः क्षीणलोकाश्च्यवन्ते ॥ 2 ॥

(முண்டகம் 2-8,9)

தாங்களே அக்ஞானத்தில் உழன்றுகொண்டு, தங்களை மகா வித்வான்களென்றும், ஒப்பற்ற ஸ்வயந் தீரர்களென்றும் செருக் காடுவோர் போலிகள். நீச கதியடையும் இந்த நிர்மூடர் பிறருக் குப் பாதை காட்டுதல், குருடன் குருடனை வழி நடத்துவதே போலும்; இருவரும் படுகுழியில் விழவேண்டியதுதான் (1).

அவித்தையில் வெகுவாய் உழலும் இவர்கள், தங்களைக் கிரு தார்த்தர்களென்று சிறுபிள்ளைத்தனமாக நம்பி, ராகத்வேஷங்க ளால் மோகங் கொண்டு, கேவலம் கர்ம காண்டத்தில் சுழன்று, ஒன்றும் அறியா அறிவிலிகளாய், பிறப்பிறப்பாகிய துயரில் விழு கிறார்கள். (2) அதனால் உண்மைத் துறவி :

वेदान्तविज्ञानसुनिश्चितार्थाः संन्यासयोगाद्यतयः शुद्धसत्त्वाः ।
ते ब्रह्मलोकेषु परान्तकाले परामृताः परिमुच्यन्ति सर्वे ॥ †

(முண்டகம் 3-2-6)

வேத வேதாந்த ஞானத்தைப் பொருளுணர்ந்து கற்று, நிச்சய புத்தியுடன் அனைத்தையும் துறந்த சந்யாச யோகியாகி, அந்தக் கரண சுத்தியுடைய யதியானவன், பரமேசனைக் கலந்து சுத்த முக்தனாய் நீண்ட காலம், ஆனந்தம் அனுபவித்து, முக்தியின்பம் நிறைவேறியதும், இவ்வுலகிற்குத் திரும்பவும் வருகிறான். முக்தி யின்றி துன்பம் நீங்காது. ஏனென்றால்

न वै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्त्यशरीरं वाव सन्तं न प्रियाप्रिये स्पृशतः ॥

(சாந்தோக்யம் 8-12)

உடலைச் சுமப்பவர் சுக துக்கத்திலிருந்து விலக முடியாது. தேக பந்தத்தை விட்டு, சர்வ வ்யாபியான பரமேசனருளால் சுத்த முற்ற ஜீவனே, முக்தியின்பம் பெறுகிறது. உலகின் விருப்பு வெறுப்புகள் முக்த ஜீவனை அணுகாவாம். இதனால் சதபதப்ராஹ் மணம் சொல்லுகிறபடி

† இதன் மற்றொரு பாடம் ஒன்பதாம் அத்தியாயத்தில் காண்க.

पुत्रैषणायाश्च वित्तैषणायाश्च लोकैषणायाश्च व्युत्थायाथ भिक्षाचर्यं चरन्ति ॥ १ ॥ † (சதபதம் 14-5-2-1)

துறவிகள் உலகப் புகழாசை, தன லாபம், செல்வ போகம், கௌரவம், புத்திர மோகம் இவற்றை விட்டு, பிச்சையெடுத்துண்டு, இரவும் பகலும் மோக்ஷ சாதனத்திலேயே தத்பரராகுகிறார்கள்.

प्राजापत्यां निरूप्येष्टिं तस्यां सर्ववेदसं हुत्वा ब्राह्मणः प्रव्रजेत् ॥ 1 ॥
(யஜுர்வேதப்ராம்மணம்)

प्राजापत्यां निरूप्येष्टिं सर्ववेदसदक्षिणाम् ।
आत्मन्यग्नीन्समारोप्य ब्राह्मणः प्रव्रजेत् गृहात् ॥ 2 ॥

यो दत्वा सर्वभूतेभ्यः प्रव्रजत्यभयं गृहात् ।
तस्य तेजोमया लोका भवन्ति ब्रह्मवादिनः ॥ 3 ॥ (மனு. 6-38-,39)

பசுபதியான இறைவனை அடையவே ஞானவேள்வி செய்து, அவ்வேள்வித் தீயில் பூணூல், சிகை, முதலியவற்றை அறுத்து வீசி, ஆகவனியாதி பஞ்சாக்னி (ஐந்தீ)யில் பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமான் ஆகிய பஞ்சப் பிராணனையும் ஏற்றி, அதாவது தூலமான அக்னியை விட்டு சூக்ஷ்மப் பிராணாக்னிகளை யோக சாதனத்தால் வளர்க்க முற்பட்டு, பிரஹ்ம ஞானியான பிராமணன் வீட்டைத் துறந்து துறவி (சந்யாசி) யாகுக. (1, 2). எல்லா உயிர்களுக்கும் அபயதானம் கொடுத்து, வீட்டைத் துறந்தவன், பிரம்மவாதி பரமேசனை விளக்கும் வேத ஞானமறிந்து உபதேசிக்கும் அருட்புலவன், சரியான துறவியாகி, தேஜோமயமான ஜோதி லோகத்தை அல்லது ஆனந்த ஸ்வரூபத்தை அடைகிறான்.

## சந்யாசி தர்மம்

வினா: சந்யாசியின் தருமம் என்ன ?

விடை: ஓரகமின்றி நடுநிலையில் நடத்தல், உண்மை யுறுதி, பொய் விலக்கல், வேதஞ் சொல்லும் பரமேசன் ஆணையைப் போற்றல், பரோபகாரம், மெய்யுரை முதலியன எல்லா ஆசிரமிகளுக்கும், மனிதர் அனைவருக்கும் பொது மறை

†. பிரஹதாரகண்யகத்தில் 5-1

யாம். ஆனால் துறவிகளுக்கு மனு தருமம் அடியில் வரும் விசேஷ தருமத்தை விதிக்கிறது :

दृष्टिपूतं न्यसेत्पादं वस्त्रपूतं जलं पिबेत् ।
सत्यपूतां वदेद्वाचं मनःपूतं समाचरेत् ॥ 1 ॥

क्रुद्ध्यन्तं न प्रतिक्रुध्येदाक्रुष्टः कुशलं वदेत् ।
सप्तद्वारावकीर्णां च न वाचमनृतां वदेत् ॥ 2 ॥

अध्यात्मरतिरासीनो निरपेक्षो निरामिषः ।
आत्मनैव सहायेन सुखार्थी विचरेदिह ॥ 3 ॥

क्लृप्तकेशनखश्मश्रुः पात्री दण्डी कुसुम्भवान् ।
विचरेन्नियतो नित्यं सर्वभूतान्यपीडयन् ॥ 4 ॥

इन्द्रियाणां निरोधेन रागद्वेषक्षयेण च ।
अहिंसया च भूतानाममृतत्वाय कल्पते ॥ 5 ॥

दूषितोऽपि चरेद्धर्मं यत्र तत्राश्रमे रतः ।
समः सर्वेषु भूतेषु न लिंगं धर्मकारणम् ॥ 6 ॥

फलं कतकवृक्षस्य यद्यप्यम्बुप्रसादकम् ।
न नामग्रहणादेव तस्य वारि प्रसीदति ॥ 7 ॥

प्राणायामा ब्राह्मणस्य त्रयोऽपि विधिवत्कृताः ।
व्याहृतिप्रणवैर्युक्ता विज्ञेयं परमन्तपः ॥ 8 ॥

दह्यन्ते ध्मायमानानां धातूनां हि यथा मलाः ।
तथेन्द्रियाणां दह्यन्ते दोषाः प्राणस्य निग्रहात् ॥ 9 ॥

प्राणायामैर्दहेद्दोषान् धारणाभिश्च किल्बिषम् ।
प्रत्याहारेण संसर्गान् ध्यानेनानीश्वरान् गुणान् ॥ 10 ॥

उच्चावचेषु भूतेषु दुर्ज्ञेयामकृतात्मभिः ।
ध्यानयोगेन संपश्येद् गतिमस्यान्तरात्मनः ॥ 11 ॥

अहिंसयेन्द्रियासङ्गैर्वैदिकैश्चैव कर्मभिः ।
तपसश्चरणैश्चोग्रैस्साधयन्तीह तत्पदम् ॥ 12 ॥

यदा भावेन भवति सर्वभावेषु निःस्पृहः ।
तदा सुखमवाप्नोति प्रेत्य चेह च शाश्वतम् ॥ 13 ॥

चतुर्भिरपि चैवैतैर्नित्यमाश्रमिद्विजैः ।
दशलक्षणको धर्मः सेवितव्यः प्रयत्नतः ॥ 14 ॥
धृतिः क्षमा दमोऽस्तेयं शौचमिन्द्रियनिग्रहः ।
धीर्विद्या सत्यमक्रोधो दशकं धर्मलक्षणम् ॥ 15 ॥
अनेन विधिना सर्वांस्त्यक्त्वा संगाञ्शनैः शनैः ।
सर्वद्वन्द्वविनिर्मुक्तो ब्रह्मण्येवावतिष्ठते ॥ 16 ॥

(மனு. அத். 6. ஸ்லோ. 6-46-48-49-52-60-66-67-70, 73-75-80-81-91-92)

அங்கும் இங்கும் பார்க்காமல் கீழே பார்த்து நட ; துணியால் நீரை வடிகட்டிக் குடி ; மெய்யுரையே பேசு. உண்மை, பொய்களை மனதால் ஆராய்ந்து செய்வன செய். (1)

உபதேசம் அல்லது ஸம்வாதம் செய்யும்போது, வேறு துறவியிடம் சினங்கொண்டு நிந்திக்காதே. பிறர் சினந்தாலும் தான் சினக்கக் கூடாது. அவர்கள் நன்மைக்கே நல்லுரை சொல்க. வாய், இரண்டு மூக்குத் தொளைகள், இருவிழிகள், இரு செவிகள் ஆகிய ஏழு வழியாகவும் வரும் வாக்குகளில் பொய் கலக்கக் கூடாது. யாதாலும் எப்போதும் உண்மையே பேசுக. (2)

ஆத்மாவிலும் பரமாத்மாவிலும் விருப்புடன் நிலைகொண்டு, வேறெதையும் விரும்பாமல், மது மாமிசாதி தீய உணவுகளையும் உடைமைகளையும் விடுத்து, தனக்குத் தானே துணையாய், ஏகாங்கியாய், ஆத்ம சுத்தத்துடன் மாந்தருக்கு அறமும் அறிவும் பரவ உபதேசித்துத் திரிக. (3)

குடுமி, நகம், தாடிமீசைகளை வெட்டியெடுத்து, காவி உடையணிந்து, சுத்த தண்டு கமண்டலந் தாங்கி, எவ்வுயிர்க்கும் இன்னலின்றி, தன்னையடக்கிய துறவி உலாவுக. (4)

புலன்களை அடக்கி, விருப்பு வெறுப்புக்களைப் போக்கி, எவ்வுயிரும் தன்னுயிர் போலக் கருதி, அஹிம்ஸ விரதம்பூண்டு, துறவியானவன் பேரின்ப மளிக்கும் மோட்சம்பெற முயல்க. (5)

இசை வசைகளால் மாறுபடாமல் துறவறம் பூண்டவன், தனக்குரிய தர்மத்தை நிறைவேற்றுக. ஓரகமின்றி எல்லா உயிர்களிடமும் அன்பு பேணி, தானுந் தர்மாத்மாவாய் மாந்தரையும் தர்மாத்மாக்களாக்கவே துறவி பாடுபட வேண்டும். வெறும் தண்டு கமண்டலம், காஷாயம் பூண்பதே துறவறமன்று.

எல்லார்க்கும் தர்மோபதேசஞ் செய்து, வித்யா தானமும் செய்து, மனித ஜாதியை உயர்த்தலே துறவியின் கடமையாகும். (6)

வெறும் பேச்சாலே பயனில்லை. தேத்தாங் கொட்டை என்றுலே மண்டி நீர் தெளிந்து விடாது. கொட்டையை அரைத்துச் சேர்த்தாலே தெளிவுறும். பயிற்சியாலே தான் பரிசுத்தம் எய்தும். (7)

ஆகவே துறவி முறைப்படி ஏழு வியாகிருதி ஓங்கார மந்திரத்தை மாத்திரையாகக் கொண்டு, கூடியவரை பிராணுயாமம் செய்யவேண்டும். ஆனல் நாளைக்கு மூன்றுக்குக் குறையாமல் பிராணுயாமம் செய்யவேண்டும். பிராணுயாமம் ஆத்ம சுத்தி யளிக்கும். இது துறவிக் குரிய பரம தபசாகும். (8)

ஏனெனில் தீயில் காய்ச்சி உருக்கிப் புடம் வைத்த உலோகம் களிம்பு நீங்கி ஒளிர்வதுபோல், மூச்சடக்கிப் பிராணுயாமம் செய்வதால் இந்திரியங்களின் தோஷங்கள் பஸ்மீகரமாகி, அந்தக் கரணம் ஒளிபெறும். (9)

துறவிகள் பிராணுயாமத்தால் ஆத்மா அந்தக்கரணம் இந்திரியங்களின் தோஷங்களையும் தாரணத்தால் சகல பாபங்களையும், பிரத்யாஹாரத்தால் ஸங்கதோஷம், தியானத்தால் அநீச்வரதோஷம் அதாவது இன்பம் துன்பம் அவித்தைகளால் ஜீவனிற் படியும் தோஷங்களை எரிக்கவேண்டும். (10)

இந்த தியானயோகத்தால் சிறிது பெரிது உயர்வு தாழ்வின்றி, எல்லா வஸ்துக்களிலும் உயிர்களிலும் பரமாத்மானின் வியாபகத்தை உணர்ந்து, தன் ஆத்மாவும், அந்தர்யாமி பரமேசனின் வியாபகத்தையும் காண்க. யோகமில்லாதவர் அப்படிக் காணமுடியாது. (11)

எவ்வுயிரிடமும் பகையின்றி, இந்திரிய விஷயங்களை விட்டு, வேத சம்மதமான கர்மாக்களுடன் அதி தீவிரமாகத் தவம்புரிந்து, மோக்ஷ பதவிபெற மேற்சொன்ன துறவிகளே தக்கவர். பிறர் அல்லர். (12)

துறவியானவன் எப்பொருளிலும் ஆசைப் பற்றின்றி, உள்ளும் புறமும் பரிசுத்தனுகிருன். பரிசுத்த நினைவுடனும் செயலுடனும் பொலியும் உண்மைத் துறவி, உடலிருக்கும் போதும் இறந்த பிறகுங் கூடப் பரம சுகமடைகிருன். (13) இதனுல்.

பிரமசாரி, கிரகஸ்தன், வானப்ரஸ்தன், சந்யாசி ஆகிய அனைவருக்கும் அடியிற்காணும் பத்து தர்மங்களைக் கடைப் பிடிக்க வேண்டியது அவசியமாகும் (14)

தர்மத்தின் பத்து லட்சணங்கள் :

1. த்ருதி - எப்போதும் தைரியமாயிருப்பது 2. க்ஷமா - இகழ்ச்சி புகழ்ச்சி, மானுபமானம். இலாப நஷ்டங்களில் பொறுமையா யிருத்தல். 3. தமம் - மனதை அதர்ம நினைவி னின்றுத் திருப்பி தர்மசாதனத்தில் உய்த்தல் 4. அஸ்தேயம் - கள்ளாமை, உத்தரவில்லாமல் வஞ்சகமாகவோ, வேதவிருத்த மான ஒழுக்க மற்ற வழிகளிலோ, பிறர் பொருளைக் கவர்தல் 5. சௌசம் - விருப்பு வெறுப்புகளின்றி அகத்தையும், தண்ணீர் மண் மார்ஜனம் முதலியவற்றால் புறத்தையும் சுத்தமாக்குதல் 6. இந்திரிய நிக்ரஹம் - புலன்களை அதர்ம காரியங்களிலிருந்து திருப்பி தருமச் செயல்களில் ஊக்குதல். 7. தீ: - மதிமயக்கும் திரவியங்கள், துஷ்டர் உறவு, சோம்பேறித் தனம், செருக்கு முதலியவற்றை விடுத்து, தூய புணவுண்டு, நல்லாரை நட்டு, யோகப் பயிற்சியால் புத்தியைத் தெளிவாக்கி வளர்த்தல். 8. வித்தை - இயற்கை முதல் இறைவன் வரையிலுள்ள எல்லாப் பொருள்களையும் உள்ளவாறு அறிதல், மெய்யறிவை வளர்த்தல், பொருள்களைத் தக்கபடி உபயோகித்தல், இதுவே வித்தை. இதற்கு எதிரிடையான அசத்திய வழி அவித்தையாகும். 9. சத்தியம் - ஆத்மாவைப்போல மனத்தில், மனத்திற்போல வாக்கில், வாக்கிற்போல் செயலில் சத்தியங் காத்தல் எதையும் உள்ளதை உள்ளபடி அறிதல், உள்ளபடி சொல்லல், அப்படியே செய்தல். 10. அக்ரோதம் - சினம் முதலிய கெட்ட குணங்களை விட்டு, சாந்தம் முதலிய நற்குணங்களைப் போற்றல் முதலியவை தர்மலட்சணங்களாகும். இப் பத்தறங்களையும், பக்ஷபாதமற்ற நியாய முறைகளையும், எல்லா ஆசிரமிகளும் கடைப்பிடிக்க வேண்டும். வேத முறைப்படி இவற்றைப் பயின்று, பிறர் அற வழி நடக்கச் செய்தலே துறவிகளுக்குச் சிறப்பான கடமை யாகும் (15)

இவ்வாறு படிப்படியாகத் தீய உறவுகளை விட்டு, சுக துக்காதி துவந்தங்களிலிருந்து விடுபட்டு, துறவி பிரம்மத்தில் நிலைக் கொள்ளுகிறான். இல்லறம் முதலிய எல்லா ஆசிரமத்திலிருப் பவர்களின் ஐயங்களையும் தீர்த்து, பொய் அதர்ம விவகாரங்களி

லிருந்து நீக்கி, அவர்களை மெய்யற வழியில் நடத்துதலே துறவிகளின் தலையாயக் கடமையாகும். (16)

**வினு:** துறவறம் அந்தணருக்கே உரியதா? க்ஷத்திரியாதிகளுக்கும் உரியதா?

**விடை:** அந்தணருக்கே துறவறங்கொள்ள அதிகாரமுண்டு. அந்தணர் என்போர் நிறைவான அறிஞர், அறவோர், பரோபகாரிகள் என்றறிக. பிறப்பில் எவ்வருணத்தவராயினும் சரி, பூரண வித்தை, தர்மம், தெய்வ வழிபாடு, வைராக்கியம், பரோபகாரமில்லாதவர் துறவிகளாதலால் உலகிற்கு எப்பயனுமில்லை. ஆதலால் அந்தணருக்கே துறவுரிமை யுண்டு; மற்றவருக்கல்லை யென்று சுருதிகள் ஓதுகின்றன. மனு மகராஜ் சொல்லுகிறுர்:

एष वोऽभिहितो धर्मो ब्राह्मणस्य चतुर्विधः।
पुण्योऽक्षयफलः प्रेत्य राजधर्मान् निबोधत ॥ (மனு. 6-97)

"ரிஷிகளே! பிரமசரிய, கிரகஸ்த, வானப்ரஸ்த, ஸந்யாஸ ஆசிரமங்களைக் காத்தால் பிராஹ்மணர் கடமை. இகத்தில் புண்ணிய ஸ்ரூபத்தையும், உடல் நீத்த பிறகு பரத்தில் முக்தி ரூபமான அழியா ஆனந்தத்தையும் அளிப்பது துறவறமே. இதன் பிறகு ராஜ தருமத்தைச் சொல்லுவேன் கேளுங்கள்."

இதனுல் அந்தணருக்கே துறவறம்; க்ஷத்திரியாதிகளுக்கு பிரமசரியமே உரிமை யெனத் தெளிவாகிறது.

**வினு:** துறவறம் கொள்வதின் அவசியமென்ன?*

**விடை:** உடலுக்குத் தலை எவ்வளவு அவசியமோ அவ்வளவு சமுதாயத்திற்கு ஸந்யாச ஆசிரமம் அவசியமாகும். ஏனெனில் அஃதின்றி கல்வியும் அறமும் வளர்ச்சி பெறு. மற்ற ஆசிரமங்களில் கல்வி பயிலல், குடும்ப நிர்வாகம், தவசாதனம் முதலிய வேலைகள் இருப்பதால், அவகாசம் மிகக்குறைவு. பக்ஷபாதமின்றி நடத்தல் மற்ற ஆசிரமங்களுக்கு முடியாது. சந்யாஸிகள் ஸர்வதோமுகமாய், முழுக் கருத்துடன் உலகோபகாரம் செய்யலாம். அப்படி மற்ற ஆசிரமிகளால் முடியாது. சத்தியமான பரமாத்ம ஞானம் முதல் இயற்கைப் பொருளறிவு வரையில் அறிவதற்கு வேண்டிய

* இந்த வினுவிற்கு விஸ்தாரமான விடை ந்யாய தர்சனத்தின் 4-1-58-61 ஸ்லோகங்களின் வாத்ஸ்யாயன பாஷ்யத்தில் காண்க.

அவகாசம் துறவிக்குண்டு; மற்றவர்களுக்கில்லை. பிரம்ம சாரியாயிருந்து துறவு பூண்டவர்கள் உலகிற்குச் செய்யும் சத்திய போதனையை, உன்னதச் செயல்களை, கிருஹஸ்த வானபிரஸ்தா சிரமத்திலிருந்து சந்யாசம் பூண்டவர் செய்ய முடியாது.

**வினா.** ஸந்யாசம் கடவுளாணைக்கு விரோதமானது. ஏனெனில் மனித வர்க்கத்தை வளர்த்தலே இறைவன் இச்சை. இல்லற மின்றேல் மக்கள் இல்லை. துறவே முதன்மை யென்று எல்லாரும் துறவிகளானால் மனித வர்க்கமே அற்றுப் போகுமே?

**விடை:** நல்லது; மணம் புரிந்தும் பலருக்கு மக்களுண்டாவ தில்லையே. அப்படி உண்டாகியும் சீக்கிரம் இறந்து போகின்றனர். இவை இறைவனிச்சைக்கு விரோதமில்லையா என்றால், 'முயன்று வெற்றி பெறாவிட்டால் குற்றமில்லை. यत्ने कृते यदि न सिध्यति कोऽत्र दोषः ॥* என்று கவி வாக்கை சொல்வீர். இல்லறத்தில் எத்தனையோ பேர் மக்களைப் பெற்றும், தங்களுக்குள் சண்டையிட்டுச் சாகிறார்கள். இது சமுதாயத்திற்குப் பெருந் தீங்காகுமே. பகையால் ஏகச் சண்டை நடக்கிறது. அப்போது துறவி வேத தருமத்தை உபதேசித்து, ஒருவருக்கொருவர் அன்புடன் நடக்கச் செய் தால், இலட்சக் கணக்கான மனிதர்களைக் காக்கிறான், ஆயிரக் கணக்கான கிருகஸ்தர்களுக்குச் சமானமாக அவன் மனித ஜாதியை வளர்த்தவனாகிறான். துறவறம் அரிது. எல்லாரும் துறவியாக முடியாது. விஷய ஆசையை எல்லாரும் விட்டு விடமுடியாது. துறவிகளின் உபதேசத்தால் அறவழி சென்ற மாந்தரெல்லாம், அவர்களுக்கு ஞான புத்திரர்களே யாவார்கள்.

**வினா:** நீர் இப்படிச் சொல்லுகிறீர்கள். துறவிகளோ 'எங்களுக்கு ஒரு கர்மாவுமில்லை; ஊரில் அன்ன வஸ்திரம் கிடைக்கிறது; ஆனந்தமாயிருக்கிறோம்; அவித்யா ரூப மான ஸம்சாரத்தின் பிடுங்கல் எங்களுக்கேன்?' என்கிறார்கள் 'நான் பிரம்மம்' என்பதில் மகிழ்ச்சிகொண்டு, எவனாவது கேள்விகேட்டால் "நீயும் பிரம்மந்தானே; உனக்கும் பாப புண்ணியமில்லை. சீதோஷ்ணம் உடலையும், பசி தாகம்

* பஞ்சதந்த்ர, மித்ரபேத 1-3.

பிராணத்தையும், சுகதுக்காதிகள் மனத்தையும் தாக்கும் விகார தர்மமாகும். உலகம் மித்தை, பொய். உலக விவகாரங்களெல்லாம் மனோகல்பிதம்; எல்லாம் பொய். ஆதலால் இதில் புத்திமான்கள் சிக்கமாட்டார்கள். பாபபுண்ணியமென்பதெல்லாம் பஞ்சேந்திரிய விவகாரம். ஆத்மாவிற்கு அந்தக் கட்டுபாடில்லை!'' என்றெல்லாம் சொல்லுகிறார்களே. தாங்கள் வேறு விதமாகச் சொல்லுகிறீர்களே! யார் சொல் உண்மை? எது பொய்? யாரை நம்புவது?

**விடை:** என்ன அவர்களுக்கு நற் காரியங்களைச் செய்யும் கடமை கூட இல்லையா? மனுஜி वैदिकैश्चैव कर्मभिः ॥ † தர்மயுக்தமான, சத்திய கர்மங்களான வைதீக கருமங்களைத் துறவிகளும் அவசியம் செய்யவேண்டும், என்று எழுதியிருக்கிறாரே. ஊண் உடை ஆகிய செயல்களை விடமுடியுமா? இந்தச் செயல்களையே விடமுடியாதவர் உத்தமமான கர்மங்களை விட்டால், பதிதர்களாய், பாபிகளாய் ஏன் வருந்தார்கள்? கிருஹஸ்தர்களிடமிருந்து அன்னபானாதிகள் மட்டும் பெற்றுக்கொண்டு, அவர்களுக்குப் பிரத்யுபகாரம், கைம்மாறு செய்யாவிட்டால், துறவிகள் மகாபாபிகளாக மாட்டார்களா? கேளாத காதும், காணாத கண்ணும் எப்படி வீணாகுமோ அப்படியே ஸத்யோபதேசமும், வேதாதி சாஸ்திரப் பிரசாரமும் விசாரமும் செய்யாத ஸந்யாசி, பூமிக்கு வீண் பாரந் தவிர வேறில்லை. 'மாய உலகின் தொல்லை நமக்கேன்' என்றெல்லாம் எழுதுவோரும் பேசுவோரும் உபதேசஞ் செய்வோரும், மித்யா ரூபங்களாய் பாபத்தை வளர்க்கும் பாவிகளாகிறார்கள். சரீராதிகளாற் செய்யுங் கருமங்களும் ஆத்மாவினாலே தான் செய்யப்படுகின்றன. அவற்றின் பலாபலன்களைப் புசிப்பதும் ஆத்மாவேயாம். ஜீவனையே பிரம்மம் என்பவர், அவித்தையில் உறங்குகிறார்கள். ஏனெனில் ஜீவன் அற்பன், சிற்றறிவன்; பிரம்மமான பரமன் எங்கும் நிறைந்த முற்றறிவன். பிரம்மம், நித்ய சுத்த புக்த முக்த ஸ்வபாவமுள்ளது. ஜீவன் ஒருகால் பத்தனையும், சிலகால் முக்தனையும் உள்ளது. பிரம்மம் ஸர்வவியாபி, ஸர்வக்ஞன், சதானந்த முக்தன். ஆதலால் அங்கே அவித்தையோ மயக்கமோ கிடையாது. ஜீவனே சிலகால் அவித்தை, சிலகால் வித்தையாய் (அறிவாய்) இருக்கிறது. அறிவும்

† மனு 6-75

அறியாமையும் அதற்கியல்பு. பிரம்மத்திற்குப் பிறப் பிறப்புத் துன்பங்களில்லவே யில்லை. ஜீவனுக்கு இவை உண்டு. ஆதலால் ஜீவனை பிரம்மம் என்னும் அவர்கள் உபதேசம், சுத்தப் பொய்.

**வினு:** துறவிகள் எல்லா வினைகளையும் ஒழித்தவர்கள். அவர்கள் தீயையோ தாதுவையோ பணத்தையோ தீண்டார், அதாவது அக்னி காரியங்கள் செய்யார், பணம் வைத்துக் கொள்ளார் என்ற பேச்சு மெய்யா, பொய்யா?

**விடை:** முழுப் பொய்.

सम्यङ् नित्यमास्ते यस्मिन् यद्वा सम्यङ् न्यस्यन्ति दुःखानि कर्माणि येन स संन्यासः स प्रशस्तो विद्यते यस्य स संन्यासी ॥

பிரம்மத்தை யறிந்து, துஷ்ட கர்மங்களை விட்டு, நற்குண முடையோன், பிறரையும் நற்குணிகளாக்குவோன் உண்மையான துறவியாவான். நல்வினை செய்து தீவினையை நலிப்பவனே துறவி.

**வினு:** கற்பித்தலும், உபதேசித்தலும் இல்லறத்தார் செய்கிருர்கள்; அதற்கு மறுபடி ஸந்யாசி எதற்கு?

**விடை:** எல்லா ஆசிரமிகளும் சத்தியோபதேசம் செய்க, கேட்க. ஆயினும் சந்யாசிகளின் அவகாசமும் நிஷ்பக்ஷபாதமும் கிருஹஸ்தருக்கிருக்க முடியாது. பிராமணர்களில் ஆண்கள் ஆண்களுக்கும், பெண்கள் பெண்களுக்கும் படிப்பும் சத்தியோபதேசமுந் தருதல் கடமையாகும். ஆனுல் யாத்திரை செய்து அறிவைப் பரப்ப சந்யாசிகளுக்குள்ள அவகாசமும் சௌகரியமும் கிரஹஸ்த பிராமணர்களுக்குக் கிடையாது. பிராமணன் வேதவிருத்தமான காரியஞ் செய்தால், கண்டித்துத் திருத்த சந்யாசிக்கே உரிமையுண்டு. இவ்வற்ருல் துறவறம் இருப்பதே நலம்.

**வினு:** "एकरात्रिं वसेद् ग्रामे" (*) 'ஓர் இரவுக்கு மேல் துறவி ஓர் கிராமத்தில் தங்கக் கூடாது' என்பது மெய்யா?

**விடை:** இதில் சிறிது உண்மையுண்டு. ஏனெனில் ஒரே இடத்தில் வசிப்பதால் உலகிற்கு அதிக நன்மையில்லை. அந்த இடத்தின் அபிமானம் ஏற்படுகிறது. இராகத்வேஷமும் அதிகரிக்கிறது. ஆனுல் ஒரே இடத்தில் வசிப்பதால் சிறப்பான நன்மை ஏற்படு மென்ருல் வசிக்கலாம். உதாரண

மாக ஜனகராஜரிடம் பஞ்சசிகையாதி சந்யாசிகள் நான்கு நான்கு மாதங்களும் மற்ற சந்யாசிகள் பல ஆண்டுகளும் இருந்துதவினர். ஒன்று சேர்ந்து ஓரிடம் இருக்கக்கூடாது என்பது இக்காலப் பாகண்டிகள் (போலித் துறவிகள்) ஏற்படுத்தியது. ஒரேயிடத்தில் அதிக காலம் சேர்ந்திருந்தால்

(நாரத பரிவ்ராஜ கோபநிஷத். 4-15, 3-11.)

தங்கள் வஞ்சமும் கரவும் வெட்ட வெளிச்சமாகும். போலித் தொழில் முன்னேறாது என்றஞ்சியே அப்படிச் சொல்லு கின்றனர்.

**வினா :**

यतीनां काञ्चनं दद्यात्ताम्बूलं ब्रह्मचारिणाम् । *
चौराणामभयं दद्यात्स नरो नरकं व्रजेत् ॥

துறவிகளுக்குப் பொன், பிரம்மசாரிகளுக்கு தாம்பூலம், திருடர்களுக்குப் புகல் அளித்த நரர் நரகமடைவார் என்பது உண்மையா? துறவிகளுக்குப் பணந் தரலாகாதா?

**விடை :** இது வர்ணாசிரம விரோதிகள், சம்பிரதாயிகள், சுயநலப் புலிகள், பௌராணிகர்கள் முதலியோர் கட்டுமானமாகும். துறவிகளுக்குப் பணம் வந்தால் இவர்களை அதிகமாகக் கண்டனஞ் செய்வார்கள், தங்களுக்குத் தீங்கு நேரிடும்; தங்கள் ஆதீனத்தில் இல்லாமல் அவர்கள் சுயேச்சையா யிருப்பார்கள், பிக்ஷை முதலியவற்றிற்கும் தம்மைச் சார்ந் திருக்க மாட்டார்கள், அப்படியானால் தங்களுக்குப் பயப்பட மாட்டார்கள் என்று நினைத்தே இப்படிச் சொல்லுகிறார்கள். மூர்க்கர், முரடர், சுய நலமிகளுக்கும் தானங் கொடுப்பது சிறப்பானால், தூய துறவிகளுக்குத் தருவதில் குற்றமொன்று மில்லையே? "विविधानि च रत्नानि विविक्तेषूपपादयेत् ॥"

(மனு 11-6)

பலவகையான பொன்னும் மணியும் துறவிகளுக்குத் தர வேண்டும்" என்று மனுஜி சொல்லுகிறார். பொன் கொடுப் பது நரகமளிக்கும் என்று நீ சொன்ன சுலோகம் முழுப் பிசகு. துறவிகளுக்கு வெள்ளி, வைரம், மணிகள் அளிப்ப தால் சுவர்க்கமே கிடைக்கும்.

---

* போலி பராஸர ஸ்மிருதி 1-60

வினா: அந்தச் சுலோகம் தப்பிதமாகச் சொல்லப்பட்டது. "यतिहस्ते धनं दद्यात्" துறவிகள் கையில் பணந் தரலே நரகம் என்றிருக்க வேண்டும்.

விடை: இதுவும் மூடர் கற்பனையே. கையில் கொடுப்பதுதான் நரகமென்றால், பாத காணிக்கையாக அல்லது மூட்டை கட்டிக் கொடுத்தால் சுவர்க்கமடையலாமா? இக்கற்பனைகள் நம்பத் தகாதவை. ஸந்யாசிகள் தங்கள் யோக க்ஷேமத்திற்கு மேல் பணம் வைத்திருந்தால் வஞ்சருந் திருடரும் பறித்துக் கொள்வார்கள். அல்லது உலக மோகம் பற்றிக் கொள்ளும் என்பது உண்மை. ஆனால் அறிவாளிகள் தகாத காரியங்களில் மோகங் கொண்டலையமாட்டார்கள். வீண் விவகாரத்தில் இறங்கமாட்டார்கள். ஆசை வலையிற் பட மாட்டார்கள். ஏனெனில் அவர்கள் பிரமசரிய கிரஹஸ்தாசிரம ஒழுக்கத்திலிருந்து எல்லாம் பார்த்தவர்கள். பிரமசரியத் துறவிகளும் வைராக்கிய சீலர்களாதலால் உலக மாயத்திற் சிக்கிக்கொள்ளார்.

வினா: சிரார்த்தத்தில் அழைத்தோ அழைக்காமலோ சந்யாசி வந்துண்டால், பிதுர்க்கள் ஓடிப்போய் நரகத்தில் விழுவார்களாமே! மெய்தானா?

விடை: முதலில் 'இறந்த பிதுர்க்கள் வருகிறார்கள், சிரார்த்த பிண்டம் அவர்களுக்குப் போய்ச் சேரும்' என்பது அசம்பாவிதம், அபத்தம். வேதம் அப்படிச் சொல்லவில்லை. அறிவிற்கும் இது பொருந்தாப் பொய். அவரவர் செய்த நலந் தீதிற்குத் தக்கபடி இறைவனாணையால் பிறவியெடுக்கும் போது, சிரார்த்தத்திற்குப் பிதுர்க்கள் வருவதெப்படி? ஆதலால் இந்தப் பேச்சு வயிற்றுப் பிழைப்பிற்காகவே புராணிகளும் பைராகிகளும் செய்த கற்பனையாகும். துறவிகள் இந்த மூடக் கொள்கையைக் கட்டாயம் கண்டிப்பார்கள். ஆகவே சந்யாசிகள் செல்லுமிடங்களில் வேத விரோதமான இந்தச் சிரார்த்தத்தை ஆதரிக்கும் பாகண்டிகள் பறந்தோடுவார்கள் என்பதுண்மை.

வினா: பிரம்மசரியநியத்திலிருந்தே ஸந்யாசிகளானோர் தம்மை நிர்வகிப்பது கடினம்; காமத்தைத் தடுத்தலும் மிகக்கடினம்; ஆதலால் கிருஹஸ்த, வானபிரஸ்தாசிரமத்தால் வயது அனுபவமும் முதிர்ந்த பிறகு, துறத்தல் நலமாகாதா?

**விடை:** தன்னைச் சமாளித்துப் புலன்களை அடக்க முடியாதவர்கள் துறக்க வேண்டியதில்லை. இந்திரியங்களை அடக்க முடிந்தவர்கள் ஏன் துறவிகளாகக் கூடாது? விஷயங்களில் தீமையும், விந்தைக் காத்தலின் நலத்தையும் அறிந்தவன் மனம், ஒருக்காலும் விஷய சுகங்களிற் செல்லாது; அவனுடைய வீரியம் ஞான விசாரத்திற்கே விறகு போலாகிறது. மருந்தும் வைத்தியமும் நோயாளிக்கே அவசியம்; நோயற்றவனுக்கன்று. அதேமாதிரி கல்வி வளர்ச்சியும் அறிவினையும், உலகிற்கெல்லாம் பொது நலமே வாழ்வின் பயனெனக் காணும் ஆண் பெண்கள், விவாகமே செய்துகொள்ளமாட்டார்கள். முற்காலம் பஞ்சசிகாதி புருஷர்களும் கார்கி போன்ற பெண்களும் அவ்வாறே செய்தனர். தக்க அதிகாரி புருஷர் துறவிகளாகத் தகும். அனதிகாரிகள், தகாதவர், துறந்தால் தாமும் கெட்டுப் பிறரையும் கெடுப்பார்கள். ஸம்ராட் சக்கரவர்த்தி ஆவதுபோல் பரிவ்ராட் ஆன துறவி உலககுரு வாகிருர். அரசனுக்குத் தன் தேசம் அதற்குச் சம்பந்தமான நாடுகளில் மரியாதையுண்டு; துறவினரோ எல்லாராலும் உலகில் பூசிக்கப் பெறுவர்.

*विद्वत्वं च नृपत्वं च नैव तुल्यं कदाचन ।
स्वदेशे पूज्यते राजा विद्वान् सर्वत्र पूज्यते ॥

(சாணக்கிய நீதி ஸார ஸங்கரஹ ஸ்லோ. 1)

இது சாணக்ய நீதி சாஸ்திர சுலோகம். வித்துவானையும் அரசனையும் ஒப்பிட்டுப் பார்க்க முடியாது, அதாவது அரசன் கற்ருேனுக்குச் சமமாகான். அரசனுக்குத் தன் அரசிலே தான் மரியாதை. வித்வானை உலகோரெல்லாம் மரியாதை செய்கிருர்கள்; கற்ருேனுக்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு. அவனுக்கு எங்கும் புகழ். ஆதலால் கல்வி கற்கவும், தானே அறிவை வளர்க்கவும், பலவாறுதலுமே பிரம்மசரியத்தின் நோக்கம். உத்தம விவகாரங்களைக் கைக்கொண்டு நல்வழி யொழுகலே இல்லறத்தின் நோக்கம். ஆத்ம விசாரம், தியானம், விக்ஞானம், தவவொழுக்கம்

---

* தமிழிலும் இதே கருத்தை ஔவையார் தன் செய்யுளில் கூறியதை ஒப்பிட்டுப் பார்க்க:

மன்னனு மாசறக் கற்ருேனுஞ் சீர்தூக்கின்
மன்னனிற் கற்ருேன் சிறப்புடையன்—மன்னனுக்குத்
தன்தேச மல்லால் சிறப்பில்லை; கற்ருேர்க்குச்
சென்றவிட மெல்லாம் சிறப்பு.

ஆகியவையே வானபிரஸ்தம் காப்பதின் நோக்கம். வேதாதி சாஸ்திரங்களை அறிந்து பிரசாரம் செய்தல், கெட்ட விவகாரங்களை ஒழித்து அறவினைகளில் ஈடுபட்டுத் தொண்டு செய்தல், சத்தியோபதேசம், பிறர் ஐயந்தீர்த்தல் முதலியவற்றிற்கே ஸந்யாஸ ஆசிரமம் ஏற்பட்டது. சத்தியோபதேசமே சந்நியாச ஆசிரமத்தில் முதன்மையாகும். அதைச் சரிவரச் செய்யாதவர் நரக கதியடைவர். சத்யோபதேசம், வேதாதி சாஸ்திரங்களைப் பயிற்றல், அறம் வளர்த்தல், பிறர் சந்தேகங்களைத் தீர்த்தல், உலகை முன்னேற்றல் இவையே துறவிகளுக்கு மேன்மையான கடமைகளாம்.

**வினு:** பைராகி, குஸாயி, காகி முதலிய கும்பல்களை ஸந்யாசிகளாகச் சேர்த்து மதிக்கலாமா?

**விடை:** கூடாது. ஏனெனில் அவர்களிடத்தில் சந்யாஸ லக்ஷணம் ஒன்று கூடக் கிடையாது. அவர்கள் வேத விருத்த மார்க்கத்தில் நடக்கிறார்கள்; தங்கள் சம்பிரதாய குருக்களின் வார்த்தையை வேதத்திற்கும் அதிகமாக மதிக்கிறார்கள். தங்கள் மதத்தையே புகழ்கிறார்கள். பொய்யுலக வியாபாரத்தில் பிடிபட்டு, சுயநலத்திற்காகப் பிறரை வசப்படுத்தி, பிறருக்கு நல்வழி காட்டாமல் பிசகான வழியில் நடத்தி, அவர்களைப் படுகுழியில் வீழ்த்துகிறார்கள். எல்லாம் சுயநலமே; ஆதலால் இவர்களைத் துறவிகளுடன் சேர்க்கக் கூடாது. இவர்களைச் சந்தேகமில்லாமல் 'சுயநல ஆசிரமத்திலே' தான் சேர்க்கவேண்டும்.

தாமே அறவழி நின்று, உலகையும் அறவழி செலுத்துவோர், இம்மை மறுமையில் தாமும் இன்புற்றுப் பிறரும் உலகமும் இன்புறச் செய்வோர்களே தர்மாத்மாக்கள்; அவர்களே உண்மையான துறவிகள். அவர்களே மகாத்மாக்கள்.

இவ்வாறு இங்கே ஸ்ந்யாச ஆசிரமத்தைப் பற்றிச் சுருங்கச் சொன்னோம். இனி ராஜ-பிரஜா தருமத்தைக் குறித்து எழுதுவோம்.

ஸ்ரீமத் தயானந்த ஸரஸ்வதி சுவாமிகள் அருளிய
ஸத்யார்த்தப் பிரகாசத்தில் வானபிரஸ்த
ஸந்யாச ஆசிரம விளக்கமான
ஐந்தாம் அத்தியாயம்
முற்றிற்று




## ஆரும் அத்தியாயம்

# இராஜ தர்மம்

राजधर्मान् प्रवक्ष्यामि यथावृत्तो भवेन्नृपः ।
संभवश्च यथा तस्य सिद्धिश्च परमा यथा ॥ 1 ॥

ब्राह्मं प्राप्तेन संस्कारं क्षत्रियेण यथाविधि ।
सर्वस्यास्य यथान्यायं कर्त्तव्यं परिरक्षणम् ॥ 2 ॥ (மனு—7-1,2).

மனு மகாராஜன் முனிவர்களுக்குச் சொல்லுகிருர், "இது காறும் நான்கு வருணம், நான்கு ஆசிரமங்களை விவகரித்தோம். இனி மன்னறம் கூறுவோம். எப்படிப்பட்ட அரசன் வேண்டும்; அவன் தகுதி என்ன; அவனைத் தேர்வதெப்படி, அவன் மேலான வெற்றி, பரமசித்தி, பெறுவதெப்படி என்பதை விளக்குவோம் (1) சிறந்த அறிவாளன் அந்தணனுகிருன்; அதேபோல அறிவும் நல்ல கல்வியும் கொண்ட க்ஷத்ரியன், நீதி செலுத்தி அரசைப் பாதுகாக்கத் தக்கவனுகிருன் (2) அதன்முறை :

त्रीणि राजाना विदथे पुरूणि परि विश्वानि भूषथः सदांसि ॥

(ரிக் 3-38-6).

இறைவன் அருளுகிருன் "மன்னன் மக்கள் இருவர் நன்மைக்கும், வித்யார்ய சபை (கல்வி மன்றம்), தர்மார்யசபை (அறமன்றம்), ராஜார்ய சபை (அரசவை) ஆகிய மூன்று சபைகளை விளக்குக. அவை தத்தமக்குரிய கடமைகளை ஆராய்ந்து, விவாதித்து, முடிவு கண்டு அனைவருக்கும் கல்வி, உரிமை, நீதி, அறம், ஒழுக்கம், செல்வம் பொலியச் செய்க."

तं सभा च समितिश्च सेना च ॥ 1 ॥ (அதர். 15-2 9-2)

सभ्य सभां मे पाहि ये च सभ्याः सभासदः ॥ 2 ॥

(அதர். 19-7-55-6)

அந்த மூன்று சபைகளும், இராணுவசபையும் சேனையும் சேர்ந்து ஒருமித்து நாட்டைக் காவல் புரிக. (1) "அவைத் தலைவர்களே! நீங்கள் சபையின் (தர்மங்கள்) சட்ட திட்டங்களை

யும், சபை நிறைவேற்றிய தீர்மானங்களையும் போற்றுக. அங்கத்தினரும் (சபாசத்கள்) அவருடன் இணைக. எல்லாரும் கூடி சபை ஒழுங்கைக் காக்கவும்'' என்று அரசன் சபைக்குப் பேசவேண்டும். (2) அதாவது ஒருவனுக்கே சுயேச்சதிகாரம் தரக்கூடாது. சபாபதியான அரசன் சபையைச் சார்ந்திருக்க வேண்டும்; அரசன் அரசவையை அனுசரிக்க வேண்டும்; குடிகள் ராஜசபையை அனுசரிக்க வேண்டும், இன்றேல்,

राष्ट्रमेव विश्या हन्ति तस्माद्राष्ट्री विशं घातुकः ।
विशमेव राष्ट्रायाद्यां करोति तस्माद्राष्ट्री विशमत्ति न पुष्टं पशुं मन्यत
इति ॥

(சதபதம். 13-2-3 7-8)

குடிகளைச் சாராத தனிக்காட்டு ராஜா, சுயேச்சாதிகாரத்தால் ஜனங்களை நலித்தொழிப்பான். பருத்துக் கொழுத்த பசுக்களை, சிங்கம் போன்ற ஊனுண்-விலங்குகள் அடித்துண்பது போல், சுயேச்சாதிகாரத் திமிர்பிடித்த அரசனும் பிரஜைகளை அடித்துச் சாப்பிட்டு விடுவான்; அவன் யாரும் தன்னை மிஞ்ச விடமாட்டான். செல்வரைக் கொள்ளையடித்து, அநியாயத் தண்டனையால் சொத்தைப் பறித்துச் சுயநலத்திற்கே பயன் படுத்திக் கொள்வான். ஆதலால், ஒருவனுக்கே சுயேச்சாதிகாரம் தரக்கூடாது.

ஆகையால்,

इन्द्रो जयाति न परा जयाता अधिराजो राजसु राजयातै ।
चर्कृत्य ईड्यो वन्द्यश्चोपसद्यो नमस्यो भवेह ॥

(அதர்.—6-10-98-1)

மனிதீர்! மனித சமுதாயத்தில் யார் ஐஸ்வர்யவானாக, பகைவரை வெல்பவனாக, எதிரிகளால் வெல்லப்படாதவனாக, மன்னருள் மன்னனாக விளங்குகிறானோ, அவனே ஸபாபதியாகத் தக்கவன். புகழத் தக்க குணம், செயல், தன்மையுள்ளவன், வணங்கத் தக்கவன்; எளிதாக அணுகி நேசித்து மரியாதை செய்யத்தக்கவன்; எல்லாரும் மதிக்கத் தக்கவனையே அவைத் தலைவனாக, அரசனாகக் கொள்வீர்.

इमन्देवा असपत्न ँसुवध्वं महते क्षत्राय महते ज्यैष्ठ्याय महते
जानराज्यायेन्द्रस्येन्द्रियाय ॥

(யஜுர். 9-40)

புலவீர்! நீதிமான், ஓரகமில்லான், சிறந்த அறிவாளி, பண்பன், அனைவருக்கும் நண்பனானவனையே ஏகமனதுடன் சபைத் தலைவன் அல்லது அரசனாகத் தேர்மின். இதனாலேதான் தேசமக்களான நீவிர், உலகாட்சி பெற்று, அரசோங்கி, வள மோங்கி, முறைசெய்து, நாடாண்டு, உலகப் பகைவரின்றி பெருமை பெறுவீர்.

स्थिरा वः सन्त्वायुधा पराणुदे वीळू उत प्रतिष्कभे ।
युष्माकमस्तु तविषी पनीयसी मा मर्त्यस्य मायिनः ॥ (ருக். 1-39-2)

இறைவன், அருளுகிறான், "அரசர்காள்! உங்கள் ஆயுதங்கள் (குண்டு, துப்பாக்கி,) வில், அம்பு, வாள், வெடிமருந்து முதலிய அஸ்திர சஸ்திரங்கள்) பகைவரைத் தடுத்து வென்று முறியடிக்கும்படி பலமாக, உறுதியாக, புகழ்நாட்டக் கூடியபடி இருக்கட்டும். நீங்கள் என்றும் வென்று நிலவும்படி சேனுபலம் பெறுக. ஆனால் இந்த வெற்றி தரும் சேனுபலம், அநியாயமான இழி செயலாளருக்குக் கூடாது. அதாவது அறத்தால் அரசு வளரும்; தீவினையால் அரசன் அழிந்தொழிகிறான்.

ஆகையால் வித்யாசபைக்கு கசடற கல்விக் கற்ற மஹா வித்வான்களை, தர்மசபைக்கு தார்மீக வித்வான்களை, இராஜ சபைக்கு இசை பெற்ற தர்மாத்மாக்களையே தேர்ந்தெடுக்க வேண்டும். அனைத்தினும் மிகச்சிறந்த குணம், கர்மம், இயல்பு கொண்ட மகா புருஷரையே அரசவைத் தலைவராக்குக. இம் மூன்று சபைகளும் கூடியே சட்ட திட்டங்களை வகுத்து, அம் முறையே எல்லாரும் நடக்கட்டும். பொது நல நியமங்களைப் பணிந்து போற்றுக; தனது நன்மைக்குரிய தனிக் காரியங்களில் சுயேச்சையாகுக.*

## சபாபதி

इन्द्रानिलयमार्काणामग्नेश्च वरुणस्य च ।
चन्द्रवित्तेशयोश्चैव मात्रा निर्हृत्य शाश्वतीः ॥ 1 ॥
तपत्यादित्यवच्चैष चक्षूंषि च मनांसि च ।
न चैनं भुवि शक्नोति कश्चिदप्यभिवीक्षितुम् ॥ 2 ॥
सोऽग्निर्भवति वायुश्च सोऽर्कः सोमः स धर्मराट् ।
स कुबेरः स वरुणः स महेन्द्रः प्रभावतः ॥ 3 ॥

(மனு: 7—4, 6, 7)

* இச்சுயேச்சையால் பொதுநலம் பாதிக்கப்படக் கூடாது.

சபைத் தலைவன் (சபேசன்) செல்வம் சேர்ப்பதில் மின்சார சக்தி போன்ற வேகமுள்ளவனும், உயிர்களிடம் உயிர் (வாயு) போல் அன்பும் கொண்டவன்; பிறர் மனம் அறிவான்; எமன் போல் பட்சபாதமற்ற நியாயமுள்ளவன்; சமத்துவன்; சூரியன் போல தர்ம நியாய வித்யாப் பிரகாசன்; மடமை யிருளைப் போக்குவோன்; அநியாயத்தை நீக்குவோன். தீயைப்போல் பகைவரைச் சுட்டழிப்பான்; வருணன் போல், சிறைக் காவலன் போல் தீயவரைக் கட்டிப்போட்டு அடக்குவோன்; சந்திரனைப் போல் சீரியரை மகிழச்செய்வோன்; குபேரன்போல் பொக்கி ஷத்தை நிறைவாக்குவோன்.(1)

சபாபதி சூரியன்போல பிரதாபி, உள்ளும் புறமும் அனைவர் மனதிலும் பய பக்தியுண்டாக்க வல்லவன், உலகில் எவரும் உறுத்து நோக்கமுடியாத கம்பீரன்.(2)

அக்னி, வாயு, சூரியன், சந்திரன், நீதிபதி, நிதிபதி, சிறைக்காவலன் போலத் தீயரை அடக்கியாண்டு, மின்சாரம் போல் சக்தி பெற்றவனே சபாபதியும் சபேசனுமாயிருக்கத் தக்கவன்.(3)

உண்மை அரசன் யாரென்றால்:

स राजा पुरुषो दण्डः स नेता शासिता च सः ।
चतुर्णामाश्रमाणां च धर्मस्य प्रतिभूः स्मृतः ॥ 1 ॥

दण्डः शास्ति प्रजाः सर्वा दण्ड एवाभिरक्षति ।
दण्डः सुप्तेषु जागर्त्ति दण्डं धर्मं विदुर्बुधाः ॥ 2 ॥

समीक्ष्य स धृतः सम्यक् सर्वा रञ्जयति प्रजाः ।
असमीक्ष्य प्रणीतस्तु विनाशयति सर्वतः ॥ 3 ॥

दुष्येयुः सर्ववर्णाश्च भिद्येरन्सर्वसेतवः ।
सर्वलोकप्रकोपश्च भवेद्दण्डस्य विभ्रमात् ॥ 4 ॥

यत्र श्यामो लोहिताक्षो दण्डश्चरति पापहा ।
प्रजास्तत्र न मुह्यन्ति नेता चेत्साधु पश्यति ॥ 5 ॥

तस्याहुः संप्रणेतारं राजानं सत्यवादिनम् ।
समीक्ष्यकारिणं प्राज्ञं धर्मकामार्थकोविदम् ॥ 6 ॥

तं राजा प्रणयन्सम्यक् त्रिवर्गेणाभिवर्धते ।
कामात्मा विषमः क्षुद्रो दण्डेनैव निहन्यते ॥ 7 ॥

दण्डो हि सुमहत्तेजो दुर्धरश्चाकृतात्मभिः ।
धर्माद्विचलितं हन्ति नृपमेव सबान्धवम् ॥ 8 ॥
सोऽसहायेन मूढेन लुब्धेनाकृतबुद्धिना ।
न शक्यो न्यायतो नेतुं सक्तेन विषयेषु च ॥ 9 ॥
शुचिना सत्यसन्धेन यथाशास्त्रानुसारिणा ।
प्रणेतुं शक्यते दण्डः सुसहायेन धीमता ॥ 10 ॥

(மனு : 7; 17—19; 24—28; 30; 31)

*சட்டமே அரசன், தலைவன், நியாயாதிகாரி, சாசனன்; சட்டமே நான்கு வர்ணத்திற்கும் ஆசிரமத்திற்கும் உறுதி யளிக்கிறது. தர்மமே உலகை ஆளுகிறது.(1) சட்டமே ஜனரக்ஷகன்; அதுவே பிரஜைகளைக் காக்கிறது, ஆளுகிறது. எல்லாரும் உறங்கும் போது அது விழித்திருக்கிறது. அதனால் அறிஞர் சட்டமே தர்மம் என்பர்.(2) நேர்மையாகச் செலுத்தினால் சட்டமே எல்லா மக்களையும் மகிழ்விக்கிறது. நேர்மை பிசகினால் சட்டமே அரசனையும் அழிக்கிறது (3) சட்டம் குலைந்தால் எல்லா வர்ணமும் குலையும்; ஒழுங்கீனம் ஏற்படும். உலகம் குழப்பத்திலாழும். (4)

சட்டம் கார் வண்ணமும் செவ்விழியும் கொண்ட பயங்கர புருஷன்; அது தீமைகளை அழித் துலாவினால், நீதித்தலைவன் ஓரகமற்ற அறிவாளியானால், மக்கள் கலக்கமில்லாமல் மகிழ்வர். (5) உண்மையே பேசுவோன், சிந்தனையாளன், சிறந்த அறிஞன், அறம் பொருள் இன்பப் பேற்றில் நிபுணன்; அவனையே புலவர் சட்டமாளத் தக்க தலைவனாகக் கருதுவர்.(6) நன்றாகச் சட்டம் செலுத்தும் அரசன் தர்மார்த்த காம சித்தி பெறுகிறான். காமுகன், விஷயாசக்தன், கபடன், அற்பன், நீச புத்தியுடைய அரசனைச் சட்டமே ஒழித்து விடும்.(7) சட்டத்தின் ஆற்றலும் பெருமையும் மிகப்பெரிது, அது தேஜோன் மயமானது. அதை அறிவிலியும் அதர்மனும் கொண்டு செலுத்த முடியாது. அறம் பிழைத்த காவலனை அவன் குடும்பத்தோடு அதுவே அழித்தும்விடும்.(8) ஏனெனில் பெரியார் துணையற்றவன், கல்வியற்ற மூடன், நற்

* "தண்ட" என்ற சொல்லை "சட்டம்" என்று தமிழாக்கியிருக்கிறோம். இந்த பாவவாசகபதம் "நியாய தண்டனையை" குறிக்கிறது. மனு இப்பதத்தை பல பொருள்கொள்ளும் 'தண்டனை. தவறை ஒழித்த நற்செயற்க் கருவி" என்ற முறையில் உபயோகிப்பதால், இவ்வார்த்தைக்கு "சட்டம்" என்று மொழி பெயர்ப்பு பொருந்தும்.

பயிற்சியற்றவன், விஷயாசக்தனாயுள்ளவன் ஒருகாலும் சட்டம் செலுத்த முடியாது.(9) தூய்மை, வாய்மை, நூலறிவு, நீதியறிவு, ஒழுக்கம், பெரியார் துணைகொண்ட அறிவாளியே, நீதி வழுவாது சட்டம் செலுத்த வல்லவனாவான்!

ஆகையால்,

सैनापत्यं च राज्यं च दण्डनेतृत्वमेव च ।
सर्वलोकाधिपत्यं च वेदशास्त्रविदर्हति ॥ 1 ॥

दशावरा वा परिषद्यं धर्मं परिकल्पयेत् ।
त्र्यवरा वापि वृत्तस्था तं धर्मं न विचालयेत् ॥ 2 ॥

त्रैविद्यो हैतुकस्तर्की नैरुक्तो धर्मपाठकः ।
त्रयश्चाश्रमिणः पूर्वे परिषत्स्याद्दशावरा ॥ 3 ॥

ऋग्वेदविद्यजुर्विच्च सामवेदविदेव च ।
त्र्यवरा परिषज्ज्ञेया धर्मसंशयनिर्णये ॥ 4 ॥

एकोपि वेदविद्धर्मं यं व्यवस्येद् द्विजोत्तमः ।
स विज्ञेयः परो धर्मो नाज्ञानामुदितोऽयुतैः ॥ 5 ॥

अव्रतानाममन्त्राणां जातिमात्रोपजीविनाम् ।
सहस्रशः समेतानां परिषत्त्वं न विद्यते ॥ 6 ॥

यं वदन्ति तमोभूता मूर्खा धर्मतद्विदः ।
तत्पापं शतधा भूत्वा तद्वक्तृननुगच्छति ॥ 7 ॥

(மனு. 12; 100; 110-115)

சேனாதிபதி, ராஜ்யாதிகாரி, நீதிபதி, ஸவாதிகாரியான அரசன்— ஆகிய நான்கு முக்கிய உத்யோகஸ்தர்களும் வேதசாஸ்திர நிபுணராய், கல்வி நிறைந்தவராய், தர்மாத்மாக்களாய், ஜிதேந்திரியர்களாய், நல்லொழுக்கமுடையவர்களாய் இருக்கவேண்டும். அதாவது சைனியத்தின் முதன்மை அதிகாரியும், ராஜ்ஜியத்தின் முக்கிய தலைவனும், முக்கிய நீதிபதியும், பிரதான தலைவனான அரசனும் சகல கலைகளிலும் புலமையுள்ள வித்வான்களாய் இருக்கவேண்டும். (1) பத்தறிஞர் அல்லது மூன்று புலவர் கொண்ட சபை தீர்மானித்த தர்மநியாயத்தை மீறற்க. (2) நான்கு வேதம், நியாய சாஸ்திரம், நிருக்தம், தர்மசாஸ்திரப் புலமையுள்ள அறிஞரே சபை கூடுக. ஆனால் பிரம்மசாரி, இல்லறத்தான், வானபிரஸ்தன் ஆகியவர்கள் கொண்ட சபையானால் இதில் குறைந்தபட்சம் பத்து அறிஞர்கள் இருக்கவேண்டும். (3) ருக், யஜுர், ஸாமவேதமறிந்த மூவர்

கூடிச்செய்த தர்மவிதியை யாரும் மீறக்கூடாது. (4) நான்கு வேதமறிந்த துவிஜோத்தமனான ஒரு துறவியின் தீர்ப்பே முடிவானது, ஆதாரமுள்ளது, உயர்ந்தது. அதை யாரும் மீறக் கூடாது. எண்ணற்றவராயினும் அறிவிலிகளின் தீர்ப்பைக் கொள்ளக்கூடாது. (5) வேதக் கலை யறிவற்றவர், பிரமசரிய் ஒழுக்கமற்றவர், சத்தியாதி விரதமற்றவர், பொய்யர், இழிநடை வேதியர்* ஆயிரம் கூடினாலும் சபையாகாது. (6) அறிவிலிகள், வேத ஞானமற்ற மூர்க்கர் செய்த சட்டங்களைப் பின்பற்றக் கூடாது. ஏனெனில் மூர்க்கர் வழியைப் பின்பற்றினால் நூற்றுக் கணக்கான பாபங்களுக்குள்ளாக நேரிடும். (7)

ஆதலால் வித்யா, தர்ம, ராஜ்ய சபைகளில் மூர்க்கருக்கு இடந்தரக்கூடாது. அறிஞரையும் அறவோரையுமே எப்போதும் சபையிற் சேர்க்கவேண்டும்.

त्रैविद्येभ्यस्त्रयीं विद्यां दण्डनीतिं च शाश्वतीम् ।
आन्वीक्षिकीं चात्मविद्यां वार्त्तारंभांश्च लोकतः ॥ 1 ॥
इन्द्रियाणां जये योगं समातिष्ठेद्दिवानिशम् ।
जितेन्द्रियो हि शक्नोति वशे स्थापयितुं प्रजाः ॥ 2 ॥
दश कामसमुत्थानि तथाष्टौ क्रोधजानि च ।
व्यसनानि दुरन्तानि प्रयत्नेन विवर्जयेत् ॥ 3 ॥
कामजेषु प्रसक्तो हि व्यसनेषु महीपतिः ।
वियुज्यतेऽर्थधर्माभ्यां क्रोधजेष्वात्मनैव तु ॥ 4 ॥
मृगयाक्षो दिवास्वप्नः परीवादः स्त्रियो मदः ।
तौर्यत्रिकं वृथाटया च कामजो दशको गणः ॥ 5 ॥
पैशुन्यं साहसं द्रोह ईर्ष्यासूयार्थदूषणम् ।
वाग्दण्डजं च पारुष्यं क्रोधजोऽपि गुणोऽष्टकः ॥ 6 ॥
द्वयोरप्येतयोर्मूलं यं सर्वे कवयो विदुः ।
तं यत्नेन जयेल्लोभं तज्जावेतावुभौ गणौ ॥ 7 ॥
पानमक्षाः स्त्रियश्चैव मृगया च यथाक्रमम् ।
एतत्कष्टतमं विद्याच्चतुष्कं कामजे गणे ॥ 8 ॥
दण्डस्य पातनं चैव वाक्पारुष्यार्थदूषणे ।
क्रोधजेऽपि गणे विद्यात्कष्टमेतत्त्रिकं सदा ॥ 9 ॥

---

* பிறப்பில் வேதியன், ஆனால் இழி நடையுடையால் அந்தண் இலக்கணத்திற்கு அப்பாற்பட்டவன்.

सप्तकस्यास्य वर्गस्य सर्वत्रैवानुषङ्गिणः ।
पूर्वं पूर्वं गुरुतरं विद्याद्व्यसनमात्मवान् ॥ 10 ॥
व्यसनस्य च मृत्योश्च व्यसनं कष्टमुच्यते ।
व्यसन्यधोऽधो व्रजति स्वर्यात्यव्यसनी मृतः ॥ 11 ॥
(மனு. 7 ; 43-53)

நான்கு வேதங்களின் கர்ம, உபாஸன, ஞானவித்யா பாகங்களைப் பயின்றவர்களில், மூன்று வித்யையான ஸநாதன மான தண்டநீதி, நியாயவித்தை, ஆத்மவித்தை அல்லது பரமாத்ம ஸ்வபாவத்தை விளக்கும் பிரம்மவித்தை யறிந்தவர், உலகுடன் பேச்சுவார்த்தை நடத்தும் வகையறிந்தவரே அரசவையில் அங்கத்தினர் அல்லது தலைவராகுக. (1) சபை அங்கத்தினரும் சபாபதியும் புலன்களை வசப்படுத்தி, அதர்மத்தை விலக்கி, தர்ம மார்க்கத்திற் செல்க. இதற்காக இரவு பகலாக உரிய காலத்தில் யோகம் பயில்க. காலை மாலை தியானம் செய்க. மனம் உயிர் உடலை அடக்கியாளுக! ஏனெனில் இந்திரியங்களை (மனம், உயிர், உடலை) அடக்கியாளா தவன், ஜனங்களையும் வசப்படுத்தி ஆளமுடியாது (2) காமத்தால் பத்துத் துயர்கள், கோபத்தால் எட்டுத் துயர்கள் விளையும், இவற்றில் பட்டவன் மீளுவதரிது ; தீவிரப் பயிற்சியால் இவற்றை நீத்துப் பிறரும் நீக்கச்செய்க (3) ஏனெனில் காமத்தினால் வரும் பத்துத் தீமைகளில் பிடிபட்டவன், தன் அரசையும், செல்வத் தையும், அறத்தையும் இழக்கிறான். கோபத்தால் வரும் எட்டுத் தீமைகளிற் சிக்கின மன்னன் உயிரையும் இழக்கிறான் (4) காமத் தால் வரும் பத்துத் தீமைகளாவன : மிருகவேட்டை, சூதாட்டம், பகலுறக்கம், காமப் பேச்சு, (பரநிந்தை, வம்பு), அதிகமான பெண்சேர்க்கை, கள் கஞ்சா அபினி உண்ணல், பாட்டு வாத்யம், நாட்டியம், வீணாக இங்குமங்கும் திரிதல் (5) கோபத்தால் வரும் எட்டுத் தீமைகளாவன : கோளேற்றல், பிற மாதரை பலாத்கார மாக இழுத்தல், துரோகம், பிறர் மேன்மையிற் பொறாமை, அசூயை, பிறரிடம் குற்றங் காணல், பரநிந்தை, தீயவழிகளில் பணத்தை ஒழித்தல், கடுஞ்சொல் வழங்கல், அநியாய தண்டனை (6) காமக் குரோதத் தீமைகளால் வரும் லோபத்தை, தன் னாசையை விட்டு விடுக! சுயநல ஆசையே தீமையைத் தூண்டு கிறது. அதை விட்டொழிக்கக் கடவீர் (7) மதி மயக்கும் மது பானம், சூதாட்டம், அதிகப் பெண்ணுறவு, வேட்டையாடல்— இவை நான்கும் காமத்தால் வரும் கொடிய தீமைகளாம் (8)

நிரபராதிகளைத் தண்டித்தல், கடுஞ்சொல் வழங்கல், வீண்பணச் செலவு—இம்மூன்றும் கோபத்தால் வரும் பெருங் கேடுகளாம் (9) காமக் குரோதமான ஏழு தீமைகளில் பின்னதை விட முன்னது கொடிது! வீண் செலவினும் சுடு மொழி, கடு மொழியினும் அநியாயத் தண்டனை, அதனினும் மிருகவேட்டை, அதனினும் அதி ஸ்த்ரீ சங்கம், அதனினும் சூதாட்டம், அதனினும் கொடிது மதுபானமாகும் (10) தீமையிற் சிக்குவதை விடச் சாவது மேல். தீயர் அதிகம் வாழ்ந்தால் மிகமிகப் பாபம் செய்து, இழிந்திழிந்து, அதிகமான துன்பமே அனுபவிப்பார்கள். தீங்கற்றவர் இறந்தும் இன்பமே சேர்வர். இதனால் அரசரும் எல்லா மாந்தரும் வேட்டை, கட்குடி, காமாதித் தீமைகளை அறவே நீக்கி, தார்மீக குண கர்ம சுபாவங்களை எப்போதும் வளர்த்து நற்செயல்களையே செய்க.

அரசன், அரசவை அங்கத்தினர், அமைச்சர்—இவர்கள் எப்படிப் பட்டவர்களாக இருக்கவேண்டும்.

मौलान् शास्त्रविद: शूरॉल्लब्धलक्षान् कुलोद्गतान् ।
सचिवान्सप्त चाष्टौ वा प्रकुर्वीत परीक्षितान् ॥ 1 ॥
अपि यत्सुकरं कर्म तदप्येकेन दुष्करम् ।
विशेषतोऽसहायेन किन्नु राज्यं महोदयम् ॥ 2 ॥
तै: सार्द्धं चिन्तयेन्नित्यं सामान्यं सन्धिविग्रहम् ।
स्थानं समुदयं गुप्तिं लब्धप्रशमनानि च ॥ 3 ॥
तेषां स्वं स्वमभिप्रायमुपलभ्य पृथक् पृथक् ।
समस्तानाञ्च कार्य्येषु विदध्याद्धितमात्मन: ॥ 4 ॥
अन्यानपि प्रकुर्वीत शुचीन् प्राज्ञानवस्थितान् ।
सम्यगर्थसमाहर्तॄनमात्यान्सुपरीक्षितान् ॥ 5 ॥
निवर्त्ततास्य यावद्भिरितिकर्त्तव्यता नृभि: ।
तावतोऽतन्द्रितान् दक्षान् प्रकुर्वीत विचक्षणान् ॥ 6 ॥
तेषामर्थे नियुञ्जीत शूरान् दक्षान् कुलोद्गतान् ।
शुचीनाकरकर्मान्ते भीरूनन्तर्निवेशने ॥ 7 ॥
दूतं चैव प्रकुर्वीत सर्वशास्त्रविशारदम् ।
इङ्गिताकारचेष्टज्ञं शुचिं दक्षं कुलोद्गतम् ॥ 8 ॥
अनुरक्त: शुचिर्दक्ष: स्मृतिमान् देशकालवित् ।
वपुष्मान्वीतभीर्वाग्मी दूतो राज्ञ: प्रशस्यते ॥ 9 ॥

(மனு. 7; 54-57; 60-64)

அரசன் நன்ருகப் பரீக்ஷித்து, ஏழெட்டு நன் மந்திரிகளைக் கொள்க. அவர்கள் தன்னரசில் தனது நாட்டவராகவும், வேத வித்துக்களாகவும், சூர வீரராகவும், ஜயலக்ஷ்ய புருஷர்களாகவும் குலோத்தமர்களாகவும் இருக்க வேண்டும் (1) ஏனெனில் எளிதான காரியத்தைக் கூடத் துணையின்றி, தனியே சாதிப்பது கடினமென்ருல், மகத்தான அரசாட்சியைத் தனியாக எப்படி நிர்வகிக்க முடியும்? ஆதலால், ஒரே அரசனையோ ஒரே மூளையையோ அரசாட்சி சார்ந்திருப்பது மிகக் கெடுதலாகும் (2) ஆதலால் சபாபதியான அரசன் தேர்ச்சி பெற்ற அமைச்சருடன் இவற்றைத் தினமும் ஆராய வேண்டும்: (1) சமாதானம் (2) பகை, போர் (3) பாதுகாப்பு—தன் அரசை அமைதியாகக் காவல் புரிந்து, காலம் கருதி அடக்கமாயிருத்தல் (4) தக்க சமயத்தில் சரியான பலத்துடன் எழுந்து தீய பகைவரைத் தாக்குதல் (5). மூலபலம், அரசசேனை, நிதிச் சாலைகளையும் உள் விவகாரங்களையும் பாதுகாத்தல் (6) வென்ற நாடுகளில் அல்லல் நீக்கி அமைதியை நிலை நாட்டுதல் (3) அமைச்சர், அங்கத்தினரின் தனித்தனி அபிப்பிராயங்களையும் கேட்டறிந்து, பெரும்பாலர் சம்மதப்படியே தனக்கும் குடிகளுக்கும் நலமானதையே அரசன் செய்ய முனைக. (4) மற்றும் சுத்தாத்மாக்களாய், அறிவாளராய், நிச்சய புத்தியுள்ளவர்களாய், பதார்த்தங்களைச் சேர்ப்பதில் அதி சதுரரான அனுபவசாலிகளை நன்ருகச் சோதித்து அரசன் மந்திரிசபையிற் சேர்க்கவேண்டும் (5) நல்ல சக்திமான்கள் பலவான்கள், பெருந் திறமையாளர், சதுரர்களை அரசகாரியத்திற்கு வேண்டுமட்டும் மன்னன் தன் ஊழியராகக் கொள்க (6) இவர்கள் ஆதீனத்தில் சூர வீர பலவான்களை நற்குலத்தவரைப் பொறுப்பான பெரிய காரியங்களுக்கும், பயந்த சுபாவமுள்ளவர்களை உள் இலாகாவுக்கும் நியமிக்கவேண்டும் (7) குலச் சிறப்பு, பரிசுத்தம், முகக்குறியால் அகத்தையும், நிகழ் குறியால் எதிர்காலத்தை அறிந்து, இங்கிதம் தெரிந்து, சகல சாஸ்திர ஞானம் உள்ள சதுரரைத் தூதராகக் கொள்ளுக. (8) அரச காரியத்தில் உற்சாகமும் விருப்பமும் கொண்டே தேச பக்தர், களங்கமற்றவர், மாசற்றவர், சதுரர், நல்ல ஞாபக சக்தர், தேச காலவர்த்தமானத்திற் கேற்றபடி நடப்பவர், அழகிய வடிவினர், அஞ்சா நெஞ்சர், சொல்வளம் கொண்டவர்களே அரசன் தூதராவதற்கு யோக்கியர். (9)

## அதிகாரம்

யாருக்கு என்னென்ன அதிகாரம் தருவது என்பதை மனு சொல்லுகிறார் :

अमात्ये दण्ड आयत्तो दण्डे वैनयिकी क्रिया ।
नृपतौ कोषराष्ट्रे च दूते सन्धिविपर्ययौ ॥ 1 ॥
दूत एव हि संधत्ते भिनत्त्येव च संहतान् ।
दूतस्तत्कुरुते कर्म भिद्यन्ते येन वा न वा ॥ 2 ॥
बुद्ध्वा च सर्वं तत्त्वेन परराजचिकीर्षितम् ।
तथा प्रयत्नमातिष्ठेद्यथात्मानं न पीडयेत् ॥ 3 ॥
धनुर्दुर्गं महीदुर्गमब्दुर्गं वार्क्षमेव वा ।
नृदुर्गं गिरिदुर्गं वा समाश्रित्य वसेत्पुरम् ॥ 4 ॥
एकः शतं योधयति प्राकारस्थो धनुर्धरः ।
शतं दश सहस्राणि तस्माद्दुर्गं विधीयते ॥ 5 ॥
तत्स्यादायुधसम्पन्नं धनधान्येन वाहनैः ।
ब्राह्मणैः शिल्पिभिर्यन्त्रैर्यवसेनोदकेन च ॥ 6 ॥
तस्य मध्ये सुपर्याप्तं कारयेद् गृहमात्मनः ।
गुप्तं सर्वर्तुकं शुभ्रं जलवृक्षसमन्वितम् ॥ 7 ॥
तदध्यास्योद्वहेद्भार्यां सवर्णां लक्षणान्विताम् ।
कुले महति सम्भूतां हृद्यां रूपगुणान्विताम् ॥ 8 ॥
पुरोहितं प्रकुर्वीत वृणुयादेव चर्त्विजम् ।
तेऽस्य गृह्याणि कर्माणि कुर्य्युर्वैतानि कानि च ॥ 9 ॥

(மனு. 7;65, 66, 68, 70, 74-78)

அமைச்சனுக்குத் தண்டாதிகாரம் தந்து யாருக்கும் அநியாய தண்டனை விழாது காக்கவும். நிதிச்சாலையும் அரசாங்க விவகாரமும் அரசன் வசம் இருக்கவேண்டும்; மற்ற நிர்வாகப் பொறுப்பு சபையினுதீனத்தில் இருக்கவேண்டும். சண்டையும் சமாதானமும் தூதன் அதிகாரத்திலிருக்கவேண்டும். (1) தூதன் ஒற்றுமை யற்றவரை சமாதானமாக்குவான். சேர்ந்துவரும் துஷ்டப் பகைவரைப் பிரிப்பான். பகைவருள் வேற்றுமை யுண்டாக்கி, அவர்களைக் கலைத் தொழிப்பதே அவன் வேலை. (2) எதிரி ராஜ்யங்களின் உத்தேசம், சூழ்ச்சிகளை நன்கு ஆராய்ந்து உண்மையறிந்து மன்னன், சபாபதி, தூதன், சபை அங்கத்தினர் அனைவரும், தம் அரசிற்கு இன்னல் வராத வகையைத்

தேடவேண்டும். (3) அழகிய மரமடர்ந்த காடு நிறைந்த வளமான நிலத்தில் வீரப் படையரண், மண்—மதிலரண், நீரரண், காட்டரண், மலையரண் சூழ நல்லநகர் அமைத்து மன்னன் வாழவேண்டும். (4) அந்த நகர் சுற்றிக் கோட்டை கட்டுக; ஏனெனில் அதன் பிராகாரத்துள்ளேயிருந்து ஒரு வில்வீரன், புறத்தேயுள்ள நூறுபேருடன் போர்கொடுக்க முடியும். நூறு வில்லர் பதினாயிரம் பேரைப் பொருதமுடியும். ஆகவே கோட்டை அவசியம். (5) அந்தக் கோட்டையில் அஸ்த்ர சஸ்த்ரங்கள், தன தான்யாதிகள், வாகனங்கள், கல்வி போதிக்கவும் நல்லுபதேசம் செய்யவும் தக்க அந்தணர், கைத்தொழில் நிபுணர், சிற்பிகள், யந்திரக் கலைவாணர்களைக் கூட்டுக. புல் பூண்டு நன்னீர்—நிரம்பச் செய்க. (6) அதன் நடுவே அரசன் தனது அரசியல் நிர்வாகத்திற்கு மாளிகை அமைக்கவேண்டும். அதில் மலர், மரம், நீர்த்தடம் (நந்தவனம், தோட்டம், குளம், கிணறு) எல்லாம் இனிதமைந்து, எல்லாப் பருவ காலங்களிலும் சுகமாயிருக்க வேண்டும். (7) பிரம்மசரியக் கல்வி முடிந்து, அரசகாரியங்களை ஒழுங்கு செய்த பிறகு, அழகும், குணமும், மனவிருப்பமும், அன்பும், பண்பும், உயர்குலமும் பொருந்தி அறிவொழுக்கங்களில் தனக்கேற்றவளான ஒரு க்ஷத்திரியக் கன்னியை அரசன் மணம் புரிந்து இல்லறம் புரிக. கொண்ட மனைவியைத் தவிர வேறு பெண்களை அவன் கண்ணெடுத்தும் பார்க்கக் கூடாது. (8) சந்தி யக்ஞம் ஓமாதிகளைச் சரிவரச் செய்ய அரசன் தன் அரண்மனையில், புரோகிதரையும் ரித்விக்குகளையும் வைத்துக்கொள்ளவேண்டும். அரசாங்க காரியங்கள் குறையின்றி நன்கு நடைபெற, அரசன் கண்ணும் கருத்துமாயிருக்கவேண்டும். (9)

## வருமானம்

सांवत्सरिकमाप्तैश्च राष्ट्रादाहारयेद्बलिम् ।
स्याच्चाम्नायपरो लोके वर्त्तेत पितृवन्नृषु ॥ 1 ॥

अध्यक्षान् विविधान् कुर्यात् तत्र तत्र विपश्चितः ।
तेऽस्य सर्वाण्यवेक्षेरन्नृणां कार्याणि कुर्वताम् ॥ 2 ॥

आवृत्तानां गुरुकुलाद्विप्राणां पूजको भवेत् ।
नृपाणामक्षयो ह्येष निधिर्ब्राह्मो विधीयते ॥ 3 ॥

समोत्तमाधमै राजा त्वाहूतः पालयन् प्रजाः ।
न निवर्त्तेत संग्रामात् क्षात्रं धर्ममनुस्मरन् ॥ 4 ॥

आहवेषु मिथोऽन्योन्यं जिघांसन्तो महीक्षितः ।
युध्यमानाः परं शक्त्या स्वर्गं यान्त्यपराङ्मुखाः ॥ 5 ॥
न च हन्यात्स्थलारूढं न क्लीबं न कृताञ्जलिम् ।
न मुक्तकेशं नासीनं न तवास्मीति वादिनम् ॥ 6 ॥
न सुप्तं न विसन्नाहं न नग्नं न निरायुधम् ।
नायुध्यमानं पश्यन्तं न परेण समागतम् ॥ 7 ॥
नायुधव्यसनं प्राप्तं नार्तं नातिपरिक्षतम् ।
न भीतं न परावृत्तं सतां धर्ममनुस्मरन् ॥ 8 ॥
यस्तु भीतः परावृत्तः सङ्ग्रामे हन्यते परैः ।
भर्तुर्यद्दुष्कृतं किञ्चित्तत्सर्वं प्रतिपद्यते ॥ 9 ॥
यच्चास्य सुकृतं किंचिदमुत्रार्थमुपार्जितम् ।
भर्ता तत्सर्वमादत्ते परावृत्तहतस्य तु ॥ 10 ॥
रथाश्वं हस्तिनं छत्रं धनं धान्यं पशून् स्त्रियः ।
सर्वद्रव्याणि कुप्यं च यो यज्जयति तस्य तत् ॥ 11 ॥
राज्ञश्च दद्युरुद्धारमित्येषा वैदिकी श्रुतिः ।
राज्ञा च सर्वयोधेभ्यो दातव्यमपृथग्जितम् ॥ 12 ॥

(மனு. 7; 80-82, 87, 91-97)

அரசன் ஆப்த புருஷர்கள் (நல்லோர்) மூலம் ஆண்டு தோறும் வரிவசூலிக்கட்டும். சபாபதியான மன்னனும் மற்ற அதிகாரிகளும் சபைகூடி—வேதானு கூலர்களாய், குடிகளுக்குத் தந்தை போல நலம்புரிக. (1) அரசாங்கத்தின் பல பல இலாக்காக்களுக்குத் தனித்தனி அத்யக்ஷரை நியமித்து, அரசாங்க ஊழியர் குறித்தபடி காரியம் செய்வதை மேற்பார்க்கவேண்டும். கடமையை ஒழுங்காகச் செய்தவர்களுக்குச் சன்மானமும், கடமை வழுவினோருக்குத் தண்டனையும் தருக. (2) அரசனின் அழியாப் பொக்கிஷம் வேத பிரசாரமே. பிரம்மசரியம் காத்து, குருகுலங்களிலிருந்து கற்றுத் தேர்ந்து வரும் வேத வித்துக்களுக்கும், ஆசிரியர்களுக்கும் அரசனும், அரசவையும் உரிய மரியாதை செய்க. இதனால் அறிவு பெருகி நாடு நலம் பெறும். (3) தனக்குச் சமமான, மேலான அல்லது கீழான அரசன் போர் முறுக்கினால், குடிகள் நலத்தைக் கோரும் மன்னன், அவனை எதிர்க்கப் பின்வாங்கக்கூடாது. க்ஷத்திரிய தர்மத்தைக் கருதித் தானும் சாதுரியமாகப் போர் தொடுத்து வெல்லவேண்டும். (4) போர்க்களத்தில் பகைவரை அஞ்சாது

எதிர்த்துப் போராடி முறியடிக்கும் மன்னர் இன்புறுவர். அவர்கள் பின்வாங்கக்கூடாது. சிலசமயம் பதுங்கியிருந்து பாய்க; மூர்க்கப் புலி தீமேல் பாய்ந்து இறப்பது போலச் செய்யாது, சாமார்த்தியமாகப் போரில் வெல்க. (5) போரில் புறம் நிற்பவரை, அலிகளை, கை கூப்பினவரை, தலைவிரி கோலமாயிருப்பவரை, சும்மா உட்கார்ந்திருப்பவரை, "நீயே சரண்" என்பவரை அடிக்கக்கூடாது. (6) உறங்குவோரை, மூர்ச்சித்தவரை, நிர்வாணரை, நிராயுதரை, போர்க் கொடுக்காத வரை, சும்மா பார்த்திருப்பவரை, பகையில்லாதவரை, அனுசாரிகளை அடிக்கக் கூடாது. (7) புண்பட்டு வருந்துவோர், துக்கிகள், நொந்தோர், அசக்தர், அஞ்சினோர், களத்தினின்று ஓடுவோர், சாதுக்கள், தர்மாத்மாக்கள், இவர்களை அடிக்கக் கூடாது. இவர்களைச் சிறைப்பிடித்து வைத்து, உணவு தந்து பாதுகாக்க வேண்டும். காயம்பட்டவருக்குச் சரியான சிகிச்சை செய்ய வேண்டும். அவர்களை எவ்விதமும் துன்புறுத்தக் கூடாது. அவர்களுக்குத் தக்க வேலை தருக. பெண்கள், பாலர், கிழவர், ஆதுரர், சோகப்பட்டவர் மேல் அம்பெய்யக் கூடாது. பெண்டிரைச் சகோதரிகள் போலக் கருதுக; அவர் குழந்தைகளைத் தன் குழந்தைகள் போலப் பாதுகாத்திடுக. பெண்களைக் காம விழியாற் காணக்கூடாது; போர் ஓய்ந்து அமைதி நிலவியதும், மறு போர் செய்ய மாட்டார்கள் என்றறிந்தவர் அனைவரையும் மரியாதையுடன் அவரவர் வீட்டிற்கு அனுப்புக. போர் புரியக் கூடும் என்று சந்தேகப்பட்டவரைக் காவலில் வைக்கவும். (8) போரில் புறங்காட்டி ஓடும் கோழையைப் பகைவர் கொன்றால் அவனுக்கு சரியான தண்டனை கிடைத்ததென்றறிக. எஜமானத் துரோகத்திற்குத் தண்டனை அவசியமே. (9) அவன் முன்னே செய்த நல்வினைப் பயனெல்லாம் இகபரசுக மெல்லாம் எசமானனையே சேரும். புறங்காட்டி ஓடும் போது கொல்லப்படும் கோழைக்கு இன்பமில்லை; நற்கதியில்லை; அவன் செய்த நல மெல்லாம் கோழைத்தனத்தால் ஒழியும். வீறுடன், அற நம்பிக் கையுடன் போர் புரியும் வீரனே வாகை சூடுகிறான். (10) போரில் வீரரோ, அதிகாரிகளோ பற்றிக் கொண்டுவரும் தேர், யானை, குதிரை, குடை, தன தான்யாதிகள், பசுக்கள், பெண்டிர், எண்ணெய், நெய்போன்ற சாமான்களை அவரவருக்கு உரியதாக்குக. இவற்றை அரசன் பற்றிக் கொள்ளக் கூடாது. (11) ஆனால் போர் வீரர்களும் தாம் வென்ற பொருள்களில் பதினாறில் ஒரு பங்கு (1/16) அரசனுக்குத் தர வேண்டும். அரசனும் தனக்குக்

கிடைத்த வெற்றிப் பொருள்களில் பதினறில் ஒரு பங்கு, போர் வீரருக்குப் பங்கு வைக்க வேண்டும். போரில் இறந்த வீரர் பாகத்தை அவர் மனைவி மக்களுக்குத் தந்து அவர்களைப் பாது காக்க வேண்டும். அவர் மக்கள் தகுதி பெற்றதும் அதிகாரம் தருக. தன் அரசிற்குப் பெரும் புகழும் வளமும் வெற்றியும், இன்பமும் வேண்டும்யாரும், இந்த மரியாதையை மீறக் கூடாது. (12)

अलब्धं चैव लिप्सेत लब्धं रक्षेत्प्रयत्नत: ।
रक्षितं वर्द्धयेच्चैव वृद्धं पात्रेषु नि:क्षिपेत् ॥ 1 ॥

अलब्धमिच्छेद्दण्डेन लब्धं रक्षेदवेक्षया ।
रक्षितं वर्द्धयेद् वृद्धया वृद्धं दानेन नि:क्षिपेत् ॥ 2 ॥

अमाययैव वर्त्तेत न कथंचन मायया ।
बुध्येतारिप्रयुक्तां च मायां नित्यं स्वसंवृत: ॥ 3 ॥

नास्य छिद्रं परो विद्याच्छिद्रं विद्यात्परस्य तु ।
गूहेत्कूर्म इवाङ्गानि रक्षेद्विवरमात्मन: ॥ 4 ॥

बकवच्चिन्तयेदर्थान् सिंहवच्च पराक्रमेत् ।
वृकवच्चावलुम्पेत शशवच्च विनिष्पतेत् ॥ 5 ॥

एवं विजयमानस्य येऽस्य स्यु: परिपन्थिन: ।
तानानयेद्वशं सर्वान् सामादिभिरुपक्रमै: ॥ 6 ॥

यथोद्धरति निर्दाता कक्षं धान्यं च रक्षति ।
तथा रक्षेन्नृपो राष्ट्रं हन्याच्च परिपन्थिन: ॥ 7 ॥

मोहाद्राजा स्वराष्ट्रं य: कर्षयत्यनवेक्षया ।
सोऽचिराद् भ्रश्यते राज्याज्जीविताच्च स बान्धव: ॥ 8 ॥

शरीरकर्षणात्प्राणा: क्षीयन्ते प्राणिनां यथा ।
तथा राज्ञामपि प्राणा: क्षीयन्ते राष्ट्रकर्षणात् ॥ 9 ॥

राष्ट्रस्य संग्रहे नित्यं विधानमिदमाचरेत् ।
सुसंगृहीतराष्ट्रो हि पार्थिव: सुखमेधते ॥ 10 ॥

द्वयोस्त्रयाणां पञ्चानां मध्ये गुल्ममधिष्ठितम् ।
तथा ग्रामशतानां च कुर्य्याद्राष्ट्रस्य संग्रहम् ॥ 11 ॥

ग्रामस्याधिपतिं कुर्याद्दशग्रामपतिं तथा ।
विंशतीशं शतेशं च सहस्रपतिमेव च ॥ 12 ॥

ग्रामे दोषान्समुत्पन्नान् ग्रामिकः शनकैः स्वयम् ।
शंसेद् ग्रामदशेशाय दशेशो विंशतीशिनम् ॥ 13 ॥
विंशत शस्तु तत्सर्वं शतेशाय निवेदयेत् ।
शंसेद् ग्रामशतेशस्तु सहस्रपतये स्वयम् ॥ 14 ॥
तेषां ग्राम्याणि कार्याणि पृथक्कार्याणि चैव हि ।
राज्ञोऽन्यः सचिवः स्निग्धस्तानि पश्येदतन्द्रितः ॥ 15 ॥
नगरे नगरे चैकं कुर्यात्सर्वार्थचिन्तकम् ।
उच्चैः स्थानं घोररूपं नक्षत्राणामिव ग्रहम् ॥ 16 ॥
स ताननुपरिक्रामेत्सर्वानेव सदा स्वयम् ।
तेषां वृत्तं परिणयेत्सम्यग्राष्ट्रेषु तच्चरैः ॥ 17 ॥
राज्ञो हि रक्षाधिकृताः परस्वादायिनः शठाः ।
भृत्या भवन्ति प्रायेण तेभ्यो रक्षेदिमाः प्रजाः ॥ 18 ॥
ये कार्यिकेभ्योऽर्थमेव गृह्णीयुः पापचेतसः ।
तेषां सर्वस्वमादाय राजा कुर्यात्प्रवासनम् ॥ 19 ॥

(மனு. 7 ; 99, 101, 104-7, 110-117, 120-124)

அரசனும் அரசவையும் தேவையானதை முயன்று பெறுக;
பெற்றதைக் காக்கவும், காத்ததை வளர்க்கவும், வளர்ந்த
செல்வத்தை தர்மபிரசாரம், வேதமார்க்க உபதேசம், வித்யார்த்தி
கள், திக்கற்றவர், அனாதைகள் வாழப் பயன்படுத்துக (1). நான்கு
புருஷார்த்தப் பயனையும் அறிந்து, சோம்பலை விட்டு தினம்
பலவகை முயற்சிகளில் அரசாங்கம் ஈடுபடவேண்டும். அடையத்
தக்கதை அரசன் சட்டப்படி அடைக; அடைந்ததைக் கவன
மாகக் காக்க; காத்ததை லாபகரமாகப் போட்டு வளர்க்க.
வளர்த்த செல்வத்தை மேற்சொன்ன அறவினைகளில் ஊக்குக (2).
யாரையும் வஞ்சித்துச் செழிக்க வேண்டாம். அனைவரிடமும் கபட
வஞ்சமற்றுப் பழகி, தன்னைக் கவனமாகக் காத்துக்கொண்டு
வருக; பகைவர் சூதை அறிந்து பரிகாரம் தேடுக (3). தன்னிட
முள்ள மெலிவைப் பகைவர் அறியாதிருக்கட்டும். பகைவர்
மெலிவை அரசன் அறிக. தன் அங்கங்களை உள்ளே இழுத்தடக்
கும் ஆமை போலவே, தாக்கு நிலைகளைப் பகைவர் அறியாது
மறைத்துப் பாதுகாக்கவும் (4). மீனைக் கொத்தித் தின்னும் ஒரே
சிந்தனையில் கொக்கு அடங்கியிருப்பது போலவே, அரசனும்
பொருளைச் சேர்க்கும் முறையை அடக்கமாகச் சிந்திக்கட்டும்.
பொருளும் பலமும் சேர்ந்ததுமே சிங்கம் போல் வீறுடன் பாய்ந்து

பகைவரை வெல்லட்டும். சிறுத்தைப் போலப் பதுங்கிப் பாய்ந்து பகைவரைப் பிடிக்கட்டும். பலவான் சத்துரு துரத்திஞல், முயல் போல் ஓடித் தப்பி, பிறகு சமயம் பார்த்து தந்திரத்தால் வந்து பகைவரைப் பற்றி வீழ்த்துக (5). இப்படிப்பட்ட ஜெயசீல சபாபதியின் (அரசனின்) நாட்டில் திரியும் திருடர், கொள்ளைக்காரர், துஷ்டர்களைச் (ஸாம) சமாதானமாகவும் (தாம) பொருள் கொடுத்தும், (பேத) பிரித்தும் வசப்படுத்துக; மீறிஞல் (தண்டம்) கடுமையாகத் தண்டித்து அடக்குக (6). உழவன் பதரைப் பிரித்து தானியத்தை முழுதாகச் சேமிக்கிருன். அதுபோல திருடரையும் கொள்ளைக்காரரையும் ஒழித்து, மன்னன் தன் அரசைக் காப்பாற்றுக (7). மோகத்தாலும் அவிசாரத்தாலும் கடமை காக்காமல் அரசை துர்பலப் படுத்தி மக்களை வருத்தும் மன்னன், தன் காலத்திலேயே கிளைகளோடு அழிந்துபோவான் (8). உடல் நலிவதால் பிராணிகளின் உயிரும் நலிவது போலவே, ஜனங்களை நலிப்பதால் அரசனும் குலத்தோடு நலிகிருன் (9). ஆதலால் அரசனும் அரசவையும் தினமும் நல்லாட்சி நிலவச் செய்க. அதற்கான முயற்சிகளை ஊக்குக! ஆட்சிமுறையில் கருத்தூன்றி வெற்றிபெறும் மன்னன், மேன்மேலும் இன்புறுவான் (10). இதற்காக இரண்டு, மூன்று, ஐந்து, நூறு கிராமங்களிடையே அரசாங்க ஸ்தானங்கள் (அலுவலகங்கள்) நாட்டித் தக்க யோக்கியமான அதிகாரிகளை நியமித்து முறையாக நல்லாட்சி நடத்துக(11). ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒவ்வொரு அதிகாரி, அப்படிப்பட்ட பத்து கிராமங்களுக்கு இரண்டாம் அதிகாரி, இருபது கிராமங்களுக்கு மூன்றும் அதிகாரி, நூறு கிராமங்களுக்கு நான்காம் அதிகாரி, ஆயிரத்திற்கு ஐந்தாம் அதிகாரியை நியமிக்க வேண்டும். ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு பட்வாரி, பத்து கிராமங்களுக்கு ஒரு தாஞ (கிளை போலிஸ் ஸ்டேஷன்), இரண்டு தாஞவுக்கு மேல் ஒரு பெரிய தாஞ (தலைமை போலிஸ் ஸ்டேஷன்), ஐந்து தாஞவுக்குமேல் ஒரு தகசீல், பத்துத் தகசீல்களுக்கு மேல் ஒரு ஜில்லா அதிகாரி அல்லது கலெக்டர் இன்றிருப்பதைக் காண்க. இது மனுதர்ம சாஸ்திர முறையாகும் (12). இவ்வாறு ஆட்சிமுறை வகுத்த பிறகு, ஒவ்வொரு கிராமாதிபதியும் தினம் கிராமத்தில் நடக்கும் குற்றங்களை, இரகசியமாக தசக் கிராமாதிபதிக்கு அறிவிக்கவேண்டும். அந்த தசக்கிராமாதிபதி, அதேமாதிரி தசக்ராம வர்த்தமானங்களை, இருபது கிராமாதிபதிக்கு தினம்தினம் அறிவிக்கவேண்டும் (13). இருபது கிராமாதிபதி தன் கிராம வர்த்தமானங்களை சத (நூறு) கிராமாதிபதிக்கும்,

இந்த நூறு கிராமாதிபதி தன் இலாகா வர்த்தமானங்களை ஸஹஸ்ர (ஆயிரம்) கிராமாதிபதிக்கும் தினம் தெரிவிக்கவேண்டும். இந்த ஆயிரம் கிராமாதிபதி பதினாயிரம் கிராமாதிபதிக்கும், அவன் லக்ஷக்ராமாதிபதிக்கும், அவன் கோடிக் கிராமத்தை ஆளும் இராஜ சபைக்கும், இராஜ சபைகள் ஸர்வபௌம சக்கரவர்த்தி மஹாராஜா சபைக்கும் எல்லாம் விளக்கமாக அறிவித்தல் வேண்டும். இதுவே உலகப் பிரதிநிதியான ஸர்வதேச சபையாகும் (14). பதினாயிரம் கிராமங்களுக்கு இரண்டு சபாபதிகளை நியமிக்கவேண்டும். ஒருவர் ராஜசபா நாயகராகுக; மற்றொருவர் சோம்பலற்று சுறுசுறுப்பாக சுற்றுப்பிரயாணம் செய்து, நியாயாதிகாரிகள் முதலிய ராஜ்ய உத்தியோகஸ்தரின் வேலைகளை மேற்பார்த்து நடத்தவும் (15). பெரிய பெரிய நகரங்களில் ஒவ்வொரு நகரசபை மாளிகை எழுப்புக. அது அழகாக, உயரமாக, விசாலமாக, சந்திரன்போல் குளுமையாக அமைக. அங்கே முதிர்ந்த அறிவாளரும், பெரியோரும் கூடி நாடுயர, அரசுயர, மக்கள் முன்னேற, அறிவு விளங்கத் தக்க ஆட்சிமுறைகளை ஆராய்க. (16). சுற்றதிகாரியான சபாபதி ஒற்றருடன் நாடெங்கும் சென்று அரச ஊழியரின், பிரஜைகளின் குண தோஷங்களை இரகசியமாக நன்று அறிக. குற்றவாளிகளைத் தண்டித்து குணவான்களைப் போற்றுக. இந்த ஒற்றர் க்ஷத்திரியர் அல்லது வேறினத்தராயிருக்கலாம் (17). அறவோர், அறிஞர், அனுபவிகள், குலசீலர்களை அரசன் ஜன ரக்ஷணத்திற்கு அமர்த்துக. இவர்கள் ஆதீனத்தில் திருடர், கொள்ளைக்காரர், தீயர்களை ஊழியத்தில் அமர்த்தவும். இதனால் தீயர் திருந்துவர்; மக்கள் சுகமும் சொத்தும் பத்திரமாயிருக்கும் (18). வாதி பிரதிவாதிகளிடமிருந்து லஞ்சம் வாங்கி அநியாயத் தீர்ப்புக் கூறும் அரசபுருஷரைத் தண்டித்து, சொத்தைப் பறிமுதல் செய்து, இனித் திரும்பியே வாராமல் நாடு கடத்துக. அப்படித் தீவிரமாகத் தண்டிக்காது போனால், அவர்களைப் போல் மற்ற ஆட்களும் குற்றம் செய்யத் துணிவார்கள். அவர்கள் தண்டனை பிறருக்கு எச்சரிக்கையாகும். ஆனால் இருக்குமட்டும் அவர்களைக் காப்பாற்றவேண்டும்.

அரச உத்தியோகஸ்தர்கள் குறைவின்றி நன்று வாழ, ஆண்டு தோறும் அல்லது மாதந் தோறும் பணத்தாலோ நிலத்தாலோ உதவுக. முதியோருக்கு பாதிச் சம்பளம் உதவுக. அவர்கள் உயிருடனிருக்குமட்டும் இந்தச் சலுகை. ஆனால் அவர்கள் மக்களுக்கு, குணத்திற் கேற்ப உத்தியோகம் அவசியம் தருக.

அகால மரணமெய்திய உத்தியோகஸ்தர் மனைவி மக்களைக் காத்து உத்தியோகம் தருவது மன்னன் கடமை. ஆனால் மனைவி மக்கள் தீய நடத்தையிலிறங்குவார்களானால் எந்த விதமான உதவியும் தரலாகாது. மன்னன் இந்த நீதியை என்றும் கடைப் பிடிக்க வேண்டும். (19)

## வரிகள்

यथा फलेन युज्येत राजा कर्त्ता च कर्मणाम् ।
तथावेक्ष्य नृपो राष्ट्रे कल्पयेत्सततं करान् ॥ 1 ॥
यथाल्पाऽल्पमदन्त्याऽऽद्यं वार्योकोवत्सषट्पदाः ।
तथाल्पाऽल्पो ग्रहीतव्यो राष्ट्राद्राज्ञाब्दिकः करः ॥ 2 ॥
नोच्छिन्द्यादात्मनो मूलं परेषां चातितृष्णया ।
उच्छिन्दन्ह्यात्मनो मूलमात्मानं तांश्च पीडयेत् ॥ 3 ॥
तीक्ष्णश्चैव मृदुश्च स्यात्कार्यं वीक्ष्य महीपतिः ।
तीक्ष्णश्चैव मृदुश्चैव राजा भवति सम्मतः ॥ 4 ॥
एवं सर्वं विधायेदमितिकर्तव्यमात्मनः ।
युक्तश्चैवाप्रमत्तश्च परिरक्षेदिमाः प्रजाः ॥ 5 ॥
विक्रोशन्त्यो यस्य राष्ट्राद्ध्रियन्ते दस्युभिः प्रजाः ।
संपश्यतः सभृत्यस्य मृतः स न तु जीवति ॥ 6 ॥
क्षत्रियस्य परो धर्मः प्रजानामेव पालनम् ।
निर्दिष्टफलभोक्ता हि राजा धर्मेण युज्यते ॥ 7 ॥

(மனு. 7; 128, 129, 139, 140, 142-144)

அரசனும் குடிகளும் நலமுறும்படி, அரசவையுடன் ஆராய்ந்து, மன்னன் வரி விதிக்கட்டும். (1) அட்டை இரத்தத்தை, கன்று பாலை, வண்டு தேனை சிறிது சிறிதாகவே உட்கொள்வது போலவே, அரசனும் மக்களிடமிருந்து சிறிது சிறிதாக ஆண்டு வரி வசூலிக்கட்டும். (2) பேராசையால் அரசன் தன் சுகத்தையும் குடிகள் சுகத்தையும் கெடுக்கக்கூடாது. ஏனெனில் சுக வாழ்வின் வேரை அறுப்பவன் தனக்கும் பிறர்க்கும் கேடு தேடுகிறான். (3) அரசன் வெம்மையாகவும் மென்மையாகவும் இருந்து காரியம் சாதிக்கட்டும். தீயரிடம் கடுமையாகவும், நல்லோரிடம் அன்பாகவும் நடக்கும் மன்னனை உலகம் மதிக்கும். (4) இவ்வாறு அரசியல் முறை வகுத்து மன்னன் கண்ணும் கருத்துமாகக் குடிகளை ஆளுக. (5) திருடரும் குண்டரும், உயிரையும் பொருளையும் கொள்ளையடித்து நாசம் செய்வதைச் சகியாமல்,

அலறும், ஜனங்களின் அல்லலைத் தீர்க்காத அரசனும் அமைச்சரும் செத்தவரே யாவர்; அவர்கள் உயிர்ப் பிணங்களே! அவர்கள் மகா துக்கத்தை அனுபவிப்பார்கள். (6) குடிகளைக் காத்தலே பரம அரச தருமமாகும். மனுஸ்மிருதி ஏழாம் அத்தியாயத்திற் சொன்னபடி, சபையமைத்த முறைசெய்யும் காவலன் இன்புறுவான்; அதற்கு மாறுன மன்னன் துன்புறுவான். (7)

## நாட் கடமை

उत्थाय पश्चिमे यामे कृतशौच: समाहित. ।
हुताग्निर्ब्राह्मणांश्चाच्चर्य प्रविशेत्स शुभां सभाम् ॥ 1 ॥
तत्र स्थिता: प्रजा: सर्वा: प्रतिनन्द्य विसर्जयेत् ।
विसृज्य च प्रजा: सर्वा मन्त्रयेत्सह मन्त्रिभि: ॥ 2 ॥
गिरिपृष्ठं समारुह्य प्रासादं वा रहोगत: ।
अरण्ये नि:शलाके वा मन्त्रयेदविभावित: ॥ 3 ॥
यस्य मन्त्रं न जानन्ति समागम्य पृथग्जना: ।
स कृत्स्नां पृथिवीं भुङ्क्ते कोशहीनोऽपि पार्थिव: ॥ 4 ॥

(மனு. 7; 145-148)

அரசன் இரவு கடைசி ஜாமத்தில் எழுந்து, சௌசாதிகளை முடித்து, அமைதியாக பரமேசனைத் தியானித்து, ஓமம் செய்து, அறிஞரான அறவோரை வணங்கி, உணவு கொண்டு அரசவை செல்க. (1) அங்கு காத்து நிற்கும் பிரஜைகளுக்கு மரியாதை செய்து, அனுப்பி விட்டு, பிறகு முக்கிய மந்திரியுடன் அரச விவகாரம் பேசுக. (2) பிறகு அவருடன் உலாவச் செல்க; மலைச்சிகரம், ஒரு தனி வீடு அல்லது அமைதியான வனத்தில் அமர்ந்து, மந்திரியுடன் அமைதியாக விருப்பு வெறுப்பின்றி, ஆலோசனை செய்க. (3) பிறர் அறியமுடியாத பரம இரகசியம் —அப்படிப்பட்ட மாண்புள்ள, மாசற்ற, பரோபகாரமான ரகசியங்களைக் காக்கும் வேந்தன், நிதி யில்லாதவனுறுலும் உலகை ஆள வல்லவனுவான். ஆதலால் மந்திராலோசனை செய்யாமல், அரசன் தன் மனப்படி எந்தக் காரியத்தையும் செய்யக் கூடாது. (4)

## இராஜ தந்திரம்

आसनं चैव यानं च संधिं विग्रहमेव च ।
कार्यं वीक्ष्य प्रयुञ्जीत द्वैधं संश्रयमेव च ॥ 1 ॥

संधिं तु द्विविधं विद्याद्राजा विग्रहमेव च।
उभे यानासने चैव द्विविधः संश्रयः स्मृतः ॥ 2 ॥
समानयानकर्मा च विपरीतस्तथैव च।
तथा त्वायतिसंयुक्तः संधिर्ज्ञेयो द्विलक्षणः ॥ 3 ॥
स्वयं कृतश्च कार्यार्थमकाले काल एव वा।
मित्रस्य चैवापकृते द्विविधो विग्रहः स्मृतः ॥ 4 ॥
एकाकिनश्चात्ययिके कार्ये प्राप्ते यदृच्छया।
संहतस्य च मित्रेण द्विविधं यानमुच्यते ॥ 5 ॥
क्षीणस्य चैव क्रमशो दैवात्पूर्वकृतेन वा।
मित्रस्य चानुरोधेन द्विविधं स्मृतमासनम् ॥ 6 ॥
बलस्य स्वामिनश्चैव स्थितिः कार्यार्थसिद्धये।
द्विविधं कीर्त्यते द्वैधं षाड्गुण्यगुणवेदिभिः ॥ 7 ॥
अर्थसंपादनार्थं च पीड्यमानः स शत्रुभिः।
साधुषु व्यपदेशार्थं द्विविधः संश्रयः स्मृतः ॥ 8 ॥
यदावगच्छेदायत्यामाधिक्यं ध्रुवमात्मनः।
तदात्वे चाल्पिकां पीडां तदा सन्धिं समाश्रयेत् ॥ 9 ॥
यदा प्रहृष्टा मन्येत सर्वास्तु प्रकृतीर्भृशम्।
अत्युच्छ्रितं तथात्मानं तदा कुर्वीत विग्रहम् ॥ 10 ॥
यदा मन्येत भावेन हृष्टं पुष्टं बलं स्वकम्।
परस्य विपरीतं च तदा यायाद्रिपुं प्रति ॥ 11 ॥
यदा तु स्यात्परिक्षीणो वाहनेन बलेन च।
तदासीत प्रयत्नेन शनकैः सांत्वयन्नरीन् ॥ 12 ॥
मन्येतारिं यदा राजा सर्वथा बलवत्तरम्।
तदा द्विधा बलं कृत्वा साधयेत्कार्यमात्मनः ॥ 13 ॥
यदा परबलानां तु गमनीयतमो भवेत्।
तदा तु संश्रयेत् क्षिप्रं धार्मिकं बलिनं नृपम् ॥ 14 ॥
निग्रहं प्रकृतीनां च कुर्याद्योऽरिबलस्य च।
उपसेवेत तं नित्यं सर्वयत्नैर्गुरुं यथा ॥ 15 ॥
यदि तत्रापि संपश्येद्दोषं संश्रयकारितम्।
सुयुद्धमेव तत्रापि निर्विशंकः समाचरेत् ॥ 16 ॥

(மனு. 7; 171-176)

அரசரும் அமைச்சரும் தீர ஆராய்ந்து இந்த ஆறில் ஒன்றைச் சமயோசிதமாகச் செய்வதை, இலட்சியமாகக் கொள்க: 1. நின்ற நிலையில் உறுதியாக இருத்தல் (ஆஸன) 2. பகைவன் மேல் போரெடுத்தல் (யான) 3. பகைவருடன் சமாதானம் செய்தல் (ஸந்தி) 4. தீய பகைவரைப் பொருதல் (விக்ரஹ) 5. படையை இருபக்கமாகப் பிரித்து பகைவரைத் தாக்கி வெல்லல் (த்வைதம்) 6. தன் கை மெலிந்தால் ஒரு பலவான் நல்லரசைத் துணைக் கோடல் (ஸம்ஷ்ரய) (1). சமாதானம், போர், எதிர்ப்பு, இருப்பு, பிரிப்பு, நட்பு, ஆகியவற்றில் இரண்டுவகையுண்டு (2). சமாதானம் (ஸந்தி) இருவகையாகும்

1. எதிரியுடன் சேர்தல் 2. அவனை எதிர்க்க மற்றொரு பலவானுடன் கூடல். நிகழ், எதிர்கால நடப்புகளை ஆராய்ந்து மன்னன் ஸந்தி செய்க. (3) சண்டை (விக்ரஹ) இருவகைத்து: 1. காலத்திலோ அகாலத்திலோ தனக்கோ, சுதேசத்திற்கோ தீமை செய்த பகையைப் பொருதல் 2. தனது நேச தேசத்திற்கு அல்லது நேச மன்னனுக்குக் குற்றம் செய்த பகைவனுடன் போராடல் (4). போரெடுத்தல் (யானம்) இருவகை: அகஸ்மாத்தாக ஒரு காரியத்திற்காக 1. தனித்து அல்லது 2. நேச மன்னன் துணைக் கொண்டு பகைவர்மேல் படையெடுத்தல் (5). இருப்பு (ஆஸனம்) இருவகை: 1. தன் கை மெலிந்தபோது 2. நேசர் தடுத்த போது—அமைதியாக இருத்தல் நலம் (6). காரிய சித்திக்காகவே சேனாபதி, சேனையை—இரு பிரிவாக்கி வெற்றி பெறுதலே இரு பிரிப்பாகும் (த்வைதம்) (7). தன் காரியம் கை கூட 1. தன்னினும் பலவான் அரசன் அல்லது 2. மஹாத்மனைச் சரண் புகுதலே இரண்டுவிதமான ஆஸ்ரயமாகும் (8). தற்போது போர்புரிதல் தீது, பிற்காலம் புரிந்தால் தனக்குச் செழிப்பும் வெற்றியும் உண்டாகும் என்று தோன்றினால், சமாதானம் செய்து கொண்டு தக்க காலம் வரும் மட்டும் தைரியமாகக் காத்திருக்கவும் (9). தனது பிரஜைகளும், சேனையும், தானும் மிக உயர்வும் உற்சாகமுமாயிருக்கும் போது பகைவனைப் பொருதக் கிளம்புக (10). தனது சேனாபலம் களிப்பு, மகிழ்வு, வளமை, கிளர்ச்சியுடனிருக்கும் போது, எதிரி பலம் இதற்கு மாறாக மெலிந்திருக்கும் போது, பகைவனுடன் போர் தொடங்குக (11) தனது சேனையும் வாகனமும் மெலிவெய்தினதும் மெல்ல மெல்லப் பகைவரை அமைதியாக்கித் தன்னிடத்திலே யிருக்கச் செய்க (12) பகைவன் அதிபலவான் என்றறிந்தும், தன்

சேனையை இருபங்காக்கியோ, இரண்டாகப் பிரித்தோ வளைத்து வெல்க (13). இதோ சத்துரு படையெடுக்கப் போகிறான் என்றறிந்தும் உடனே தார்மிக பலமுள்ள ஓர் அரசனைத் துணைக் கொள்க (14) தன் பிரஜைகளை அமைதியாக்குவதில், தன் படையை அடக்குவதில், எதிரியைத் தடுப்பதில் உதவினவனைக் குருவென நினைத்து தினம் சேவை செய்க (15). ஆனால் தனக்கு அவ்வாறுதவிய ஆளிடம் வஞ்சச் சூழ்ச்சிபாகிய குற்றங் கண்டால் அவனுடன் தைரியமாகப் போர் செய்து வெல்க (16).

தார்மீக ராஜாவுடன் ஒருக்காலும் யுத்தம் செய்யற்க. அவனுடன் எப்போதும் நேசமாயிருக்கவும். துஷ்டரை மேற் சொன்ன வகையில் வெல்க.

## மிஞ்ச விடாதே

सर्वोपायैस्तथा कुर्यान्नीतिज्ञः पृथिवीपतिः ।
यथास्याभ्यधिका न स्युर्मित्रोदासीनशत्रवः ॥ 1 ॥
आयतिं सर्वकार्याणां तदात्वं च विचारयेत् ।
अतीतानां च सर्वेषां गुणदोषौ च तत्त्वतः ॥ 2 ॥
आयत्यां गुणदोषज्ञस्तदात्वे क्षिप्रनिश्चयः ।
अतीते कार्यशेषज्ञः शत्रुभिर्नाभिभूयते ॥ 3 ॥
यथैनं नाभिसंदध्युर्मित्रोदासीनशत्रवः ।
तथा सर्वं संविदध्यादेष सामासिको नयः ॥ 4 ॥

(மனு. 7; 177-180)

நீதியறிந்த திறமையுள்ள பிருதிவீபதியான அரசன், தனது நேசனோ, பகைவனோ, நடுவனோ (மத்யஸ்தன்) தன்னை பலத்தில் மிஞ்சாதபடி வழிசெய்க (1). இப்போது செய்யும் காரியம், இனி நடக்க வேண்டிய காரியங்கள் என்னென்ன என்றும், எதைச் செய்து முடித்தோம் என்றும் ஆராய்ந்து, குண தோஷங்களை அறிந்து நலம் புரிக (2). இனிச் செய்யும் காரியங்களின் குண தோஷங்களை, நன்மை தீமைகளை அறிந்து, உறுதி கொண்டதை உடனே செய்து, செய்த காரியங்களை ஆராய்ந்து இனிச் செய்ய வேண்டிய மிச்சத்தையும் அறியும் மன்னனைப் பகைவர் வெல்ல முடியாது (3) சபாபதியான மன்னன் நேச—உதாசீன—சத்துரு பலங்கள் அளவோடிருக்கச் செய்க. அவர்கள் வலையில் விழாத முறையில் அரசன், ராஜபுருஷர்கள் (அதிகாரி

கள்) நடந்து கொள்ள வேண்டும். எதுவும் மட்டுக்கு மிஞ்ச விடற்க. இதை சபாபதியான அரசன் புறக்கணிக்கலாகாது. சுருக்கமாக இதுதான் அரச தந்திரம் அல்லது ராஜநீதி (4).

## போர் முனையில்

कृत्वा विधानं मूले तु यात्रिकं च यथाविधि ।
उपगृह्यास्पदं चैव चारान् सम्यग्विधाय च ॥ 1 ॥

संशोध्य त्रिविधं मार्गं षड्विधं च बलं स्वकम् ।
सांपरायिककल्पेन यायादरिपुरं शनैः ॥ 2 ॥

शत्रुसेविनि मित्रे च गूढे युक्ततरो भवेत् ।
गतप्रत्यागते चैव स हि कष्टतरो रिपुः ॥ 3 ॥

दण्डव्यूहेन तन्मार्गं यायात्तु शकटेन वा ।
वराहमकराभ्यां वा सूच्या वा गरुडेन वा ॥ 4 ॥

यतश्च भयमाशंकेत्ततो विस्तारयेद् बलम् ।
पद्मेन चैव व्यूहेन निविशेत सदा स्वयम् ॥ 5 ॥

सेनापतिबलाध्यक्षौ सर्वदिक्षु निवेशयेत् ।
यतश्च भयमाशङ्केत् प्राचीं तां कल्पयेद्दिशम् ॥ 6 ॥

गुल्मांश्च स्थापयेदाप्तान् कृतसंज्ञान् समन्ततः ।
स्थाने युद्धे च कुशलानभीरूनविकारिणः ॥ 7 ॥

संहतान् योधयेदल्पान् कामं विस्तारयेद् बहून् ।
सूच्या वज्रेण चैवैतान् व्यूहेन व्यूह्य योधयेत् ॥ 8 ॥

स्यन्दनाश्वैः समे युध्येदनूपे नौद्विपैस्तथा ।
वृक्षगुल्मावृते चापैरसिचर्मायुधैः स्थले ॥ 9 ॥

प्रहर्षयेद् बलं व्यूह्य तांश्च सम्यक् परीक्षयेत् ।
चेष्टाश्चैव विजानीयादरीन् योधयतामपि ॥ 10 ॥

उपरुध्यारिमासीत राष्ट्रं चास्योपपीडयेत् ।
दूषयेच्चास्य सततं यवसान्नोदकेन्धनम् ॥ 11 ॥

भिन्द्याच्चैव तडागानि प्राकारपरिखास्तथा ।
समवस्कन्दयेच्चैनं रात्रौ वित्रासयेत्तथा ॥ 12 ॥

प्रमाणानि च कुर्वीत तेषां धर्म्यान्यथोदितान् ।
रत्नैश्च पूजयेदेनं प्रधानपुरुषैः सह ॥ 13 ॥

आदानमप्रियकरं दानञ्च प्रियकारकम् ।
अभीप्सितानामर्थानां काले युक्तं प्रशस्यते ॥ 14 ॥

(மனு. 7; 184-192, 194-196, 203, 204,)

பகைவருடன் போர் தொடுக்கு முன் அரசன் தனது நாட்டுப் பாதுகாப்பிற்குத் தக்க ஏற்பாடு செய்க. போர் முனைக்கு வேண்டிய எல்லாச் சாமான்களையும் முறைப்படி தயார் செய்க—படைகள், வண்டி, வாகனம், அஸ்திரசஸ்த்ரங்கள்—முதலியன. ஒற்றரை நாற்புறமும் அனுப்பி உளவு பார்க்கவும். பிறகு போரில் இறங்குக. (1) தரை, நீர் (கடல், நதி); ஆகாசம் ஆகிய மூன்று வழிகளையும் சரிபார்த்து, தரை வழியே தேர், பரி, யானையிலும், நீரில் கப்பலிலும், ஆகாயத்தில் விமானங்களிலும் படை செலுத்துக. வேண்டுமளவு காலாட் படை, குதிரைப் படை, யானைப்படை, தேர்ப் படை, போர்க் கருவிகள், அன்னபானுதிகளை உடன் எடுத்துச் செல்க. தக்கபலத்துடன், ஏதாவது காரணம் வைத்துப் பகைவன் தலைநகரை நோக்கி மெல்ல மெல்லச் செல்க. (2). உள்ளே பகையுறவு கொண்டு, புறத்தே நட்பாடி, எதிரிக்கு இரகசியச் செய்தியனுப்பும் ஒற்றரிடம் கவனமாயிருக்கவும். அவர் போக்கு வரவு பேச்சு அனைத்தையும் கவனித்து, உஷாராயிருக்கவும், சாவதானமாகப் பேசுக. உட்பகை கொண்ட புற நண்பன் கொடும் பகைவனுவான் (3). அரசன், அரசஊழியர்கள், அதிகாரிகள், ஜனங்களனைவரும் போர்க்கலை பயிலவேண்டும். தேர்ச்சிபெற்ற போர் வீரரே நன்ருகச் சண்டை போட முடியும். போர் வீரர்களை இந்த ஒழுங்குகளில் வியூகம் வகுத்து போர்புரியப் பயிற்றுக: 1. தண்ட வ்யூகம்—கம்பு போல் ஒரே வரிசையாகச் சேனையைச் செலுத்தல் 2. சகடம்—வண்டி போல் 3. வராஹவ்யூகம்—பன்றி போல் ஒருவர் பின் ஒருவர் ஓடி பிறகு கூட்டமாகச் செல்லுதல் 4. மகரவ்யூகம்—நீரில் முதலை செல்வது போல் 5. சூசிவ்யூகம்—முன்பாகம் கூர்ந்தும், அடிப்பாகம் போகப் போக பருத்து முள்ள ஊசிபோல வகுத்தல். கருடம்—பருந்து போல் மேலும் கீழும் துள்ளிப் பாய்ந்து போர் செய்யும் திறமையுண்டாக்குக (4). எங்கே சத்துரு பயமோ அங்கே சேனையை நாட்டுக. தாமரை மலர் போல் பத்மவ்யூகம் கட்டி நாற்புறமும் சேனையுடன் தலைவர் அணிவகுத்து நின்று நடுவே அரசன் இருக்க வேண்டும் (5). சேனுதிபதிகளும், அணித்தலைவரும் அதாவது ஆணையிடுவோரும், போர் தொடுக்கும் வீரரும், எட்டுத் திக்கிலும் பரவி யிருக்கட்டும். சண்டை

நடக்கும் திசையை எல்லாரும் பார்த்து நிற்கட்டும். ஆனால் மற்றப் பக்கத்திலும் சரியான காவலிருக்கட்டும். இன்றேல் பகைவர் பின்னாலும் பக்கத்திலும் தாக்கலாம் (6). போர்க்கலை வல்ல சூரர், தார்மிஷ்டர், சண்டையிற் சதுரர், தாக்குவதிலும் தடுப்பதிலும் சமர்த்தர், அஞ்சா நெஞ்சர், மனவிகாரமற்றவர், நம்பிக்கையுள்ளவர்களைச் சேனையில் நாற்புறமும் நிறுத்துக (7). கொஞ்ச ஆட்களைக் கொண்டு அதிகமான ஆட்பலமுள்ள பகைவருடன் போர் புரிய நேர்ந்தால், சேனைமுழுவதும் நெருங்கி யமைத்துப் போர் தருக; அல்லது சமயத்திற்குத் தக்கபடி படைகளைப் பரவலாக வைத்துப் போர் புரிக. எதிரி ஊர், கோட்டை, அல்லது படை யணிக்குட் புகுந்து போராட வேண்டுமானால், சூசி வியூகம் அல்லது வஜ்ரவ்யூகம் செய்து இரு கூர்வாள் அல்லது இரண்டு பக்கமும் வெட்டும் வாளைப்போல் எதிரிப் படையைப் பிளந்து தம் படையை நடத்திப் போர் புரிந்தே முன்னேறுக. எதிரி குண்டு துப்பாக்கி வெடிகளைப் பிரயோகித்தால், சர்பவ்யூகம் செய்து அதாவது பாம்பு போல் ஊர்ந்து ஊர்ந்து அருகே சென்று துப்பாக்கி வீரரை பிடிக்கவும். அல்லது துப்பாக்கிகளைப் பற்றி அவர்களை சுடுக. அல்லது முதிய வீரரைக் குதிரையில் ஏற்றித் துப்பாக்கிகளுக்கு முன் ஓடச் செய்க. பகைவர் நடுவே நடுவே நல்ல பலவான்களையும் ரணசூரரையும் வைத்துத் தாக்குக, சுட்டுத் தள்ளுக; அல்லது தாக்கிச் சின்ன பின்னமாக்கிப் பகைவரைப் பிடிக்கவும் (8). சமபூமியில் போராடும் போது, காலாட்படை, குதிரைப்படை, தேர்களைக் கொண்டு சமர்புரிக. கடலில் கப்பல்களைக் கொண்டும், ஆழமற்ற நீரில் யானையேறியும், மரத்தின் கிளை நடுவேயிருந்தும் அம்பெய்து போரிடுக; மணற் பூமியில் கத்தி கேடயம் சூலத்தைக் கொண்டு போர் புரிக (9). போர் நடக்கும் போது வீரரைக் களிப்புடன் உற்சாகப் படுத்துக. போர் முடிந்து சமர் சூரரையும், உண்மை வீரரையும் மகிழ்வுறுத்த இன்னுரையாடி ஔஷதம், அன்ன பானம், உடை, அஸ்தரசஸ்த்ரம் மற்றும் தேவையானதைத் தருக. அவர்கள் வசதிகளைக் கவனித்து எல்லா வகையிலும் உதவுக. வியூகமில்லாது தனியே சண்டையிடாதிருக்கவும். தம் படைகளின் நடை முறையைக் கவனிக்கவும். படைவீரர் தங்கள் கடமையை நன்றியுடன் செய்கிறார்களா, இல்லையா என்று எப்போதும் கண்காணிக்கவும் (10). சமயம் ஏற்பட்டால், பகைவரைச் சுற்றி வளைத்து முற்றுகையிட்டுத் தடுத்து, அவர் நாட்டிற்குப் புல், நீர், உணவு, விறகு எவையும் போகாமல் தடுத்து, நஷ்டம்

விளைத்து வருத்துக (11). பகைவரின் ஏரி, குளங்கள், நகர மதில்கள், அகழிகளை அழித்தொழிக்கவும். இரவில் பகைவரைப் பயமுறுத்துக; வெற்றிக்கு வேண்டிய மற்றைய உபாயங்களைச் செய்க (12). பகைவரை வென்றதும், அவர்களிடமிருந்து ஒரு பிரமாணம், உடன்படிக்கை எழுதி வாங்குக. அவசியமானால் எதிரி அரசவம்சத்தில் ஒரு தார்மிக புருஷனைத் தேர்ந்து அரசனாக்குக. "தங்கள் ஆணைப்படி அதாவது தர்ம நீதி நியாயம் தவறாது, பிற ஜனங்களின் நலமே கருதி ஆட்சி புரிவேன்" என்று இவனிடம் எழுதி வாங்க வேண்டும். நியாயப்படி ஆள அவனுக்குப் புத்தி சொல்லி, இனித் தொல்லை வராதபடி அவனிடம் தக்க அறிவாளிகளை மந்திரிகளாக நியமிக்க வேண்டும். தோற்ற அரசனுக்கு ரத்னம் முதலிய உத்தமப் பொருள்களைத் தந்து மரியாதை செய்க. அவனை ஜீவனத்திற்கும் திண்டாட விடும்படியான அற்பத்தனம் வேண்டாம். அவனைச் சிறையிலிட்டாலும் தன் தோல்வியை மறந்து சந்தோஷமாயிருக்கும்படி அவன் அந்தஸ்திற்கேற்றபடி மரியாதை செய்க (13). ஏனெனில் இவ்வுலகில் பிறர் பொருளைப் பற்றிக் கொள்வது வெறுப்பிற்கும், பிறருக்குக் கொடுப்பது அன்பிற்கும் காரணமாகிறது. பிறருக்கீவதே மகிழ்ச்சி. தக்கதைத் தக்க காலத்திற் செய்துதவுக. வெல்லப்பட்டவன் விரும்பிய பொருளைத் தருவது மிக நல்லது. அவனை ஒருக் காலமும் திட்டிச் சிரித்துக் கேலி செய்து இகழக் கூடாது; தோல்வியைக்கூட நினைப்பூட்டக் கூடாது. அவனைத் தன் சகோதரன் போலவே மிக மரியாதையுடன் நடத்துக (14).

## நண்பன் யார்

हिरण्यभूमिसंप्राप्त्या पार्थिवो न तथैधते ।
यथा मित्रं ध्रुवं लब्ध्वा कृशमप्यायतिक्षमम् ॥ 1 ॥
धर्मज्ञं च कृतज्ञं च तुष्टप्रकृतिमेव च ।
अनुरक्तं स्थिरारम्भं लघुमित्रं प्रशस्यते ॥ 2 ॥
प्राज्ञं कुलीनं शूरं च दक्षं दातारमेव च ।
कृतज्ञं धृतिमन्तञ्च कष्टमाहुररिं बुधाः ॥ 3 ॥
आर्य्यता पुरुषज्ञानं शौर्य्यं करुणवेदिता ।
स्थौललक्ष्यं च सततमुदासीनगुणोदयः ॥ 4 ॥

(மனு. 7; 208-211)

பொன்னும் மண்ணும் பெற்றதனால் மட்டும் மன்னன் செழிப்புறமாட்டான். அதைவிட உறுதியான, அன்பான, எதிர் காலப் பலனை ஆராயும் தீர்க்க சிந்தனையுள்ள, வினைத் திட்பமுள்ள நண்பனைப் பெறுதலே மேலானது. அத்தகைய நண்பன் மெலிந்த (துர்பலன்) வனாய் காரிய சித்திக்கு உதவாதவனாயினும், அந்த நண்பனைப் போற்றுதல் மன்னனுக்குப் புகழைத்தரும். (1). மெலியவனானாலும் அறமறிந்து செய்ந் நன்றிமிகுந்து இனிய தன்மையும், அனுராகமும், விடாமுயற்சியும் கொண்ட நண்பனைக் கொண்ட மன்னன், பெருமை யடைகிறான் (2). அறிவாளி, குணசீலன், மனவிசாலி, சூரன், வீரன், சதுரன், ஞாதா, கொடை வள்ளல், நாலுந் தெரிந்தவன், தைரியவான், உறுதியும் பொறுமையும் கொண்ட புத்திமானை அரசன் விரோதித்துக் கொள்ளவே கூடாது. அப்படி விரோதிப்பவன் துன்பமே அடைவான் (3). மெச்சத் தக்க நற்குணன், அன்பான நண்பன், நல்லவர் கெட்டவர் யாரென்றறிபவன், வீர சூர சௌரியன், கருணை நெஞ்சன், இரகசியத்தை வெளியில் விடாதவன்—அவனே உதாசீனன் ஆவான் (4).

## அரசன் நித்தியக்கடன்

एवं सर्वमिदं राजा सह संमन्त्र्य मन्त्रिभिः ।
व्यायाम्याप्लुत्य मध्याह्ने भोक्तुमन्तःपुरं विशेत् ॥ 5 ॥

(மனு. 7 ; 216)

அரசன், முன் சொன்னது போல் அதிகாலையில் எழுந்து, சௌசாதிகளை முடித்து, ஸந்தி ஜபம், அக்னிஹோத்ரம் செய்து, மற்றவர்களையும் செய்வித்து, மந்திரிகளுடன் ஆராய்ந்து, சபைக்கு வர வேண்டும். அங்கே தனது சேவகர், சேனைத் தலைவர்களைப் பார்த்து, அவர்களை உற்சாகப் படுத்தி, கவாத்து முதலிய ராணுவப் பயிற்சிகளை நடத்திக் காண வேண்டும். யானை, குதிரை, பசு நிலையங்கள், ஆயுதச் சாலை, வைத்திய (மருத்துவ) சாலை, பொக்கிஷச்சாலை, எல்லாம் கவனித்துப் பார்வை யிட்டு, அவற்றிலுள்ள குறைகளை அகற்ற வேண்டும். பிறகு உடற் பயிற்சி சாலை சென்று தேகப் பயிற்சி செய்து கொள்ள வேண்டும். பிறகு தன் மனைவி முதலானவர் இருக்கும் அந்தப்புரத்திற்கு மதியம் உண்ணச் செல்ல வேண்டும். உணவை நன்றாகச் சோதிக்க வேண்டும். புத்தி, பல பராக்கிரமங்களை வளர்த்து, நோயைத் தவிர்த்து, நலம் செய்யும் சுத்தமான பலவகை

அன்னம், பானம், வெஞ்சனம், சுவையும் மணமும் உள்ள பலரகமான பண்டங்களை உண்ண வேண்டும். இவ்வாறு அரசன் வாழ்ந்து தனது குடிகளின் நலத்தைப் பேணுக.

## எவ்வளவு வரி?

पञ्चाशद्भाग आदेयो राज्ञा पशुहिरण्ययोः ।
धान्यानामष्टमो भागः षष्ठो द्वादश एव वा ॥ (மனு. 7; 130)

வியாபாரிகளிடமிருந்தும் சில்பி களிடமிருந்தும் அவரது தங்கம் வெள்ளியில் வரும் லாபத்தில் ஐம்பதில் ஒரு பங்கு வரி வசூலிக்கலாம். நெல் போன்ற உணவு தானியவகை வருமானங்களில் ஆறில், எட்டில் அல்லது பன்னிரண்டில் ஒரு பங்கு வரி வசூலிக்கலாம். பணத்திற்குப் பதில் பண்டமாகவும் வரி பெறலாம். ஆனால் உழவரும் தொழிலாளரும் செல்வம், அன்ன பானாதிகளுக்குக் கஷ்டப்பட்டு வறுமையுறாமல் இருக்கும் முறையில் வரி வாங்க வேண்டும். ஏனெனில் செல்வம், உடல்நலம், அன்னபானாதி செளகரியங்களுடன் குடிமக்கள் மகிழ்வுடன் வாழ்ந்தாலே, மன்னன் புகழ் உயரும். அரசன் குடிமக்களைத் தன் மக்களாகக் கருதிச் சுகமளிக்கட்டும். குடிகள் அரசனையும் அரசபுருஷரையும் தந்தைப் போலக் கருதுக. அமைச்சரையும் அரசவூழியரையும் தமது ரக்ஷகராகக் கருதுக. வளம் பெருக்கும் உழவரும் தொழிலாளருமே அரசனுக்குச் சக்தியாவர்; அரசன் இவர்களைப் போற்றுக. அரசன் இவர் காவலனாவான். குடிகளின்றி அரசனேது? அரசனின்றேல் மக்கள் யாருடைய குடி மக்களாவது? அவரவர் சொந்தக் கடமை செய்வதில் அரசனும் குடிகளும் தனித்தனியே சுதந்திரமாக இருக்கலாம். ஆனால் சேர்ந்து செய்யும் தேசப்பணியில் அனைவரும் அன்யோன்யமாக ஒத்துழைப்பது கடமையாகும். அரசர் குடிகள் சம்மதத்திற்கு எதிர் செய்யற்க. குடிகளும் அமைச்சரும் அரசன் விருப்பத்திற்கும் எதிர் செய்யற்க. இவ்வாறு சுருக்கமாக அரசனின் அரசியற் கடமைகளைச் சொன்னோம். இதை 'அரசியல்' அல்லது 'பொலிடிக்ஸ்' (Politics) என்பர். இதைப்பற்றி விரிவாக படிக்க விரும்புவோர் நான்கு வேதம், மனுஸ்மிருதி, சுக்ரநீதி, மஹாபாரதம் முதலிய நூல்களை ஆராய்க. நீதிமுறை மனுஸ்மிருதியில் 8–9 வது அத்தியாயத்தில் விளக்கிய முறையில் அமைக்க. அதை இங்கும் சுருக்கிச் சொல்லுவோம்.

## நீதி முறை

प्रत्यहं देशदृष्टैश्च शास्त्रदृष्टैश्च हेतुभिः ।
अष्टादशसु मार्गेषु निबद्धानि पृथक् पृथक् ॥ 1 ॥

तेषामाद्यमृणादानं निक्षेपोऽस्वामिविक्रयः ।
संभूय च समुत्थानं दत्तस्यानपकर्म च ॥ 2 ॥

वेतनस्यैव चादानं संविदश्च व्यतिक्रमः ।
क्रयविक्रयानुशयो विवादः स्वामिपालयोः ॥ 3 ॥

सीमाविवादधर्मश्च पारुष्ये दण्डवाचिके ।
स्तेयं च साहसं चैव स्त्रीसंग्रहणमेव च ॥ 4 ॥

स्त्रीपुंधर्मो विभागश्च द्यूतमाह्वय एव च ।
पदान्यष्टादशैतानि व्यवहारस्थिताविह ॥ 5 ॥

एषु स्थानेषु भूयिष्ठं विवादं चरतां नृणाम् ।
धर्मं शाश्वतमाश्रित्य कुर्यात्कार्यविनिर्णयम् ॥ 6 ॥

धर्मो विद्धस्त्वधर्मेण सभां यत्रोपतिष्ठते ।
शल्यं चास्य न कृन्तन्ति विद्धांस्तत्र सभासदः ॥ 7 ॥

सभां वा न प्रवेष्टव्यम् वक्तव्यं वा समंजसम् ।
अब्रुवन्विब्रुवन्वापि नरो भवति किल्बिषी ॥ 8 ॥

यत्र धर्मो ह्यधर्मेण सत्यं यत्रानृतेन च ।
हन्यते प्रेक्षमाणानां हतास्तत्र सभासदः ॥ 9 ॥

धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः ।
तस्माद्धर्मा न हन्तव्यो मा नो धर्मो हतोऽवधीत् ॥ 10 ॥

वृषो हि भगवान् धर्मस्तस्य यः कुरुते ह्यलम् ।
वृषलं तं विदुर्देवास्तस्माद्धर्मं न लोपयेत् ॥ 11 ॥

एक एव सुहृद्धर्मो निधनेऽप्यनुयाति यः ।
शरीरेण समं नाशं सर्वमन्यद्धि गच्छति ॥ 12 ॥

पादोऽधर्मस्य कर्त्तारं पादः साक्षिणमृच्छति ।
पादः सभासदः सर्वान् पादो राजानमृच्छति ॥ 13 ॥

राजा भवत्यनेनास्तु मुच्यन्ते च सभासदः ।
एनो गच्छति कर्त्तारं निन्दार्हो यत्र निन्द्यते ॥ 14 ॥

(மனு. 8-3-8, 12-19)

சபை, அரசன், நீதியர் அனைவரும் தேசாச்சாரத்திற்கும், தர்ம சாஸ்திரங்களுக்கும் பொருந்தும்படி கீழ்க்கண்ட பதினெட்டு

வகையாக வகுக்கப்பெற்றுள்ள விவாத விவகாரங்களைத் தினந் தோறும் தீர்க்கட்டும். சாஸ்திரங்களில் காணாத புதுச் சட்டங்கள் வேண்டுமானால் அரசன்—குடிகள் கலந்தாலோசித்து தேச நலனுக் கேற்ற சட்டங்களைச் செய்யலாம் (1) பதினெட்டு விவகாரங்களாவன: 1. கடன் அடைக்காதது (ருணதானம்) 2. கொடுத்துவைத்த பொருளைத் தரமறுத்தல் (நிக்ஷேபம்) 3. ஒருவன் பொருளை இன்னொருவன் விற்பது (அஸ்வாமி விக்ரயம்) 4. ஒருவன்மேல் சிலர் கட்சிகட்டித் துன்புறுத்தல் (ஸம்பூய சமுத்தானம்) 5. கொடுக்கவேண்டியதைக் கொடாதிருத்தல் (தத்தஸ்யாளப கர்மம்) 6. தொழிலாளிக்குக் கூலி குறைப்பது, மறுப்பது (வேதனஸ்யைவ சாதனம்) 7. ஒப்பந்தத்திற்கு எதிர் செய்தல் ஸம்விதஸ்ச வ்யதிக்ரமம்) 8. கொள்வினை கொடுப்பினைத் தகராறு (க்ரயவிக்ரயானுசயம்) 9. பசு முதலிய பிராணிகளின் சொந்தக்காரனுக்கும் வளர்ப்பவனுக்கும் சண்டை 10. எல்லைச் சண்டை 11. ஒருவனை கொடூரமாக அடித்ததின் பிராது 12. கொடுஞ் சொல், தீச்சொல், பழிச்சொல் 13. களவு, கன்னம், கொள்ளை 14 பலாத்காரச் செயல் 15. ஆண் பெண் வியப சாரம் 16. சதிபதி தர்மந் தவறுதல், இல்லறப் பிழைகள் 17. தாயபாகச் சண்டை 18. சேதன, அசேதனப் பொருள் களைப் பணயம் வைத்துச் சூதாடுதல். இந்தப் பதினெட்டுமே மனிதருள் விவாத காரணங்களாகும் (2, 3, 4, 5). இந்த விவாதங்களை நன்குக ஆராய்ந்து, பக்ஷபாதமில்லாமல், ஸநாதன தருமத்தைப் போற்றி நீதிபதி தீர்ப்பளிக்கட்டும் (6) அதர்மம் தருமத்தைப் புண்படுத்துகிறது; தருமம் நீதிமன்றத்தை நாடு கிறது; அங்கே தருமத்தின் புண்ணை ஆற்றுவாரில்லை, தருமத் திற்கு நியாயம் கிடைக்கவில்லை எனில், மன்றத்தார் அனைவரும் அதர்மிகள், தர்மத்தைப் புண்படுத்திய குற்றவாளிகளாவார்கள் (7) அறவோர், தர்மாத்மாக்கள் மன்றம் புகக்கூடாது; புகுந்தால் உண்மையே பேசுக. மன்றத்தில் நடக்கும் அநியாயத்தைப் பார்த்துக்கொண்டு சும்மா இருந்தாலும், உண்மைக்கும் நியாயத் திற்கும் மாறாகக் கூறினாலும், மகா பாபியாவான் (8). தர்மத்தை அதர்மமும், சத்தியத்தை அசத்தியமும், நீதிபதிகள் கண் ணெதிரே அழிக்கும் மன்றில் உள்ளவர், அனைவரும் செத்தவரே. அவருள் யாரும் உயிரோடிருப்பவர் அன்று (9). தன்னை அழித்த வனை தர்மம் அழிக்கிறது; தன்னைக் காத்தவனை தர்மம் காக்கிறது. ஆதலால் யாரும் தர்மத்தை மீறி நடக்கக்கூடாது. தர்மத்தை அழித்தால், நம்மை அது அழிக்கும் என்ற பயமிருக்கட்டும் (10).

தர்மமே எல்லாச் செல்வமும் தருகிறது; இன்பம் பொழிகிறது. அதை மீறுகிறவனைக் கீழ்மகனாகக் கருதுவர் அறிவாளர். ஆகையால் யாரும் தர்மத்தை மீறி நடக்கக்கூடாது (11). இந்த உலகில் உண்மை நண்பன் அறமே. இறந்த பிறகும் உடன் வருவது அதுவே. எல்லாப் பொருளும் பற்றும் உடலுடன் ஒழியும். அறம் மனிதனைக் கைவிடாது (12). அரசவையில் பக்ஷபாதத்தால் அநியாயம் நடந்தால், அங்கே அதர்மம் நான்கு விபாகமாகப் புகும்.—ஒன்று அதர்மகர்த்தாவுக்கு, இரண்டு சாட்சிக்கு, மூன்று மன்ற அங்கத்தினர்களுக்கு, நான்கு அதர்ம சபாபதியான அரசனுக்குப் போகும் (13). இகழ்ச்சிக்குரியவரை இகழ்ந்து, புகழ்ச்சிக்குரியாரைப் புகழ்ந்து, தண்டனைக்குரியவரைத் தண்டித்து, மதிப்பிற்குரியாரை மதிக்கும் மன்றத்தில், அரசனும் அங்கத்தினரும் பாபம் விலகி, பரிசுத்தமடைகிறார்கள். பாவிக்கே பாவம் சேர்கிறது.

## சாட்சிகள்

आप्ताः सर्वेषु वर्णेषु कार्याः कार्येषु साक्षिणः ।
सर्वधर्मविदोऽलुब्धा विपरीतांस्तु वर्जयेत् ॥ 1 ॥

स्त्रीणां साक्ष्यं स्त्रियः कुर्युर्द्विजानां सदृशा द्विजाः ।
शूद्राश्च सन्तः शूद्राणामन्त्यानामन्त्ययोनयः ॥ 2 ॥

साहसेषु च सर्वेषु स्तेयसंग्रहणेषु च ।
वाग्दण्डयोश्च पारुष्ये न परीक्षत साक्षिणः ॥ 3 ॥

बहुत्वं परगृह्णीयात्साक्षिद्वैधे नराधिपः ।
समेषु तु गुणोत्कृष्टान् गुणद्वैधे द्विजोत्तमान् ॥ 4 ॥

समक्षदर्शनात्साक्ष्यं श्रवणाच्चैव सिध्यति ।
तत्र सत्यं ब्रुवन्साक्षी धर्मार्थाभ्यां न हीयते ॥ 5 ॥

साक्षी दृष्टश्रुतादन्यद्विब्रुवन्नार्यसंसदि ।
अवाङ्नरकमभ्येति प्रेत्य स्वर्गाच्च हीयते ॥ 6 ॥

स्वभावेनैव यद्ब्रूयुस्तद् ग्राह्यं व्यावहारिकम् ।
अतो यदन्यद्विब्रूयुर्धर्मार्थं तदपार्थकम् ॥ 7 ॥

सभान्तः साक्षिणः प्राप्तानर्थिप्रत्यर्थिसन्निधौ ।
प्राड्विवाकोऽनुयुञ्जीत विधिनाऽनेन सान्त्वयन् ॥ 8 ॥

यद् द्वयोरनयोर्वेत्थ कार्येऽस्मिन् चेष्टितं मिथः ।
तद्ब्रूत सर्वं सत्येन युष्माकं ह्यत्र साक्षिता ॥ 9 ॥

सत्यं साक्ष्ये ब्रुवन्साक्षी लोकानाप्नोति पुष्कलान् ।
इह चानुत्तमां कीर्तिं वागेषा ब्रह्मपूजिता ॥ 10 ॥
सत्येन पूयते साक्षी धर्मः सत्येन वर्द्धते ।
तस्मात्सत्यं हि वक्तव्यं सर्ववर्णेषु साक्षिभिः ॥ 11 ॥
आत्मैव ह्यात्मनः साक्षी गतिरात्मा तथात्मनः ।
नाऽवमंस्थाः स्वमात्मानं नृणां साक्षिणमुत्तमम् ॥ 12 ॥
यस्य विद्वान् हि वदतः क्षेत्रज्ञो नाभिशङ्कते ।
तस्मान्न देवाः श्रेयांसं लोकेऽन्यं पुरुषं विदुः ॥ 13 ॥
एकोऽहमस्मीत्यात्मानं यत्त्वं कल्याण मन्यसे ।
नित्यं स्थितस्ते हृद्येष पुण्यपापेक्षिता मुनिः ॥ 14 ॥

மனு. 8, 63 ; 68 ; 72-75 ; 73-81 ; 83 ; 84 ; 86 ; 91)

அறவோர், புலவர், வஞ்சமற்றவர், பலவித அறச் சிறப்புகளை நன்கறிந்தவர், பேராசையற்றவர், மெய்யர்—இவர்கள் எந்த வர்ணமாயினும் நியாயம் நிலைநிறுத்தச் சாட்சி சொல்லட்டும்; இதற்கு எதிரிடையானவர் சாட்சிக்குத் தக்கவரல்லவர் (1). பெண்களுக்குப் பெண், துவிஜருக்குத் துவிஜர், சூத்திரருக்குச் சூத்திரர், கீழானவர்களுக்குக் கீழானவர் சாட்சியாகுக (2). பலாத்காரம், திருட்டு, வியபிசாரம், வசவு, கடுமொழி, அடித்தல் முதலிய தீச்செயல்களுக்கு, அதிக சாட்சி விசாரணை தேவையில்லை; மிக அவசியமுமில்லை. ஏனெனில் இக்குற்றங்கள் மறைவாக நடப்பன; சாட்சி கிடைப்பதும் அரிது (3). இருபுறமும் அதிகமான சாட்சிகள் இருக்குமாயினும், பொருத்தமில்லாவிட்டாலும் பெரும்பாலோர் சாட்சியத்தை உண்மையாகக் கொள்க; இருபுறமும் சமமாயிருந்தால் உத்தமர் சாட்சியைக் கொள்க; இருபுறமும் உத்தமர்களே சாட்சிகளாயிருந்தால், அறிஞர், முனிவர், மஹரிஷிகள், யதிகள் ஆகிய பெரியார் சாட்சியை மதித்துத் தீர்ப்பு சொல்லுக (4). சாட்சி இருவகையாகும்: 1. நேரே கண்டவர் 2. கேட்டவர். நியாய சபையில் சாட்சிகள் உண்மையே பேசவேண்டும். மெய்ச் சாட்சி தண்டிக்கத் தக்கவனில்லை; பொய்ச் சாட்சியைத் தக்கபடி தண்டிக்க வேண்டும் (5). அரசவை அல்லது உத்தமர் சபையில் கண்டொன்று, கேட்டொன்று சொல்லும் பொய்யர் நாக்கைத் துண்டிக்கத் தகும். அப்பொய்யர் துன்ப நரகத்தில் வாழ்ந்து, இறந்த பிறகும் சுகங்கெட்டு வருந்துவர் (6). வழக்கில் ஒருவன் இயல்பாகச் சொல்லுவதையே சாட்சியாகக் கொள்ளுக; சொல்லி

வைத்து அல்லது கற்பித்து ஒப்பிப்பதையெல்லாம் நீதிபதி வீணென ஒதுக்குக (7). வாதி பிரதிவாதிகளுக்கு முன்னே மன்றத்தில் நிற்கும் சாட்சிகளைப் பார்த்து, நீதிபதியும், வக்கீல் அல்லது பாரிஸ்டரும் அமைதியாகவே இவ்வாறு பேசுக (8). ஓ சாட்சிகளே, இந்த விவகாரத்தில் உங்கள் சாட்சி வேண்டியிருக்கிறது; இருதரப்பிலும் நீங்கள் கண்டறிந்ததை உண்மையாகச் சொல்லுங்கள் (9). உண்மையே சொல்லும் சாட்சி ஜன்மாந்திரத்தில் நல்ல பிறப்பும் நல்ல நிலையும் அடைந்து சுகப்படுகிறான். இம்மை மறுமைகளில் சிரோங்குகிறான். ஏனெனில் இசையும் வசையும் சொல்லால் வரும் என்பது வேத சம்மதம். மெய்யன் இசை பெறுகிறான்; பொய்யன் வசை சுமக்கிறான் (10). உண்மை பேசுவதால் சாட்சி பரிசுத்தமடைகிறான்; சத்தியத்தால் தர்மம் செழிக்கும். ஆதலால் சர்வவர்ண சாக்ஷிகளும் உண்மையே பேசுக (11). ஆத்மாவே ஆத்ம சாட்சி; ஆத்மாவே ஆத்மகதி; மனிதீர்! இதையறிந்து ஆத்ம வஞ்சனையில்லாமல், ஆத்மா, மனம், சொல்லில் உண்மையாயிருங்கள். இதற்கு மாறானது பொய்மையாகும் (12). க்ஷேத்ரக்ஞனை அந்தராத்மா ஐயுறாது பேசும் புலவரையே, அறிஞர் உத்தம புருஷராகக் கருதுவர். அதாவது மனச்சாட்சி மகிழும்படி உண்மையே பேசுவோன் பெருமையடைவான் (13). பேரின்பம் விரும்பும் மனிதா, உன் பொய்யை யாராலும் அறிய முடியாது என்றெண்ணி, பொய் சொல்லி இன்புறாதே! அது சரியில்லை. உன் இதயத்தில் பரமேச்வரன், அந்தராத்மனாயிருந்து, நீ செய்யும் புண்ணிய பாபங்களை சதா கவனிக்கிறான். அந்தப் பரமாத்மனுக்குப் பயந்து என்றும் உண்மையே பேசு, உண்மையாயிரு (14).

लोभान्मोहाद्भयान्मैत्रात्कामात्क्रोधात्तथैव च ।
अज्ञानाद्बालभावाच्च साक्ष्यं वितथमुच्यते ॥ 1 ॥
एषामन्यतमे स्थाने यः साक्ष्यमनृतं वदेत् ।
तस्य दण्डविशेषांस्तु प्रवक्ष्याम्यनुपूर्वशः ॥ 2 ॥
लोभात्सहस्रदण्डयस्तु मोहात्पूर्वन्तु साहसम् ।
भयाद्द्वौ मध्यमौ दण्डयौ मैत्रात्पूर्वं चतुर्गुणम् ॥ 3 ॥
कामाद्दशगुणं पूर्वं क्रोधात्तु त्रिगुणं परम् ।
अज्ञानाद्द्वे शते पूर्णे बालिश्याच्छतमेव तु ॥ 4 ॥

उपस्थमुदरं जिह्वा हस्तौ पादौ च पञ्चमम् ।
चक्षुर्नासा च कर्णौ च धनं देहस्तथैव च ॥ 5 ॥
अनुबन्धं परिज्ञाय देशकालौ च तत्त्वतः ।
सारापराधौ चालोक्य दण्डं दण्ड्येषु पातयेत् ॥ 6 ॥
अधर्मदण्डनं लोके यशोघ्नं कीर्तिनाशनम् ।
अस्वर्ग्यञ्च परत्रापि तस्मात्तत्परिवर्जयेत् ॥ 7 ॥
अदण्ड्यान् दण्डयन् राजा दण्ड्यांश्चैवाप्यदण्डयन् ।
अयशो महदाप्नोति नरकं चैव गच्छति ॥ 8 ॥
वाग्दण्डं प्रथमं कुर्याद्धिग्दण्डं तदनन्तरम् ।
तृतीयं धनदण्डं तु वधदण्डमतः परम् ॥ 9 ॥

(மனு. 8; 118-121; 125-129)

லோபம், மோகம், பயம், சிநேகம், காமம், குரோதம், அஞ்ஞானம், சிறுபிள்ளைத் தனங்களால் கொடுக்கும் அத்தாட்சிகளை எல்லாம் பொய்யெனத் தள்ளுக (1) இவற்றில் எக்காரணங் கொண்டும் பொய் சாட்சி சொல்பவனை, சரியானபடி தண்டிக்க வேண்டும் (2) லோபத்தால் பொய்சாட்சி சொல்லுகிறவனுக்கு ரூ. 15–10–0 அபராதம்; மோகத்தால் பொய்சாட்சி சொல்லுகிறவனுக்கு ரூ. 3–2–0; பயத்தால் பொய்சாட்சி சொல்லுகிறவனுக்கு ரூ. 6–4–0; நேசத்தால் பொய்சாட்சி சொல்லுகிறவனுக்கு ரூ. 12–8–0 (3). காமத்தால் பொய்சாட்சி சொல்லுகிறவனுக்கு ரூ. 25–0–0; குரோதத்தால் பொய்சாட்சி சொல்லுகிறவனுக்கு ரூ. 46–14–0; அக்ஞானத்தால் பொய்சாட்சி சொல்லுகிறவனுக்கு ரூ. 6–0–0; சிறுபிள்ளைத் தனத்தால் பொய்சாட்சி சொல்லுகிறவனுக்கு ரூ. 1–9–0 அபராதம் போடுக (4). குறி, வயிறு, நாக்கு, கை, கால், கண், காது, மூக்கு, உடல், பொருள் ஆகிய பத்தின் மேல் தண்டனை விதிக்கலாம் (5). ஆனால் மேலே குறித்த, குறிக்கப்படும் தண்டனைகள் குற்றவாளியின் நிலைமை, இடம், காலத்திற் கேற்றவாறே விதிக்கவேண்டும். பரம ஏழைக்குக் குறைந்த அபராதமும், தக்க செல்வருக்கு இரண்டு, மூன்று, நான்கு பங்கும் அபராதம் போடுக (6). இவ்வுலகில் அதர்ம தண்டனை விதிப்பவருக்கு, சென்ற—நிகழ்—எதிர்காலத்திலும், மறுபிறப்பிலும் வரும் புகழெல்லாம் போய்விடும். மறுமையிலும் அவன் துன்புறுகிறான். ஆகையால் அதர்ம - தண்டனையை

ஒருக்காலும் விதிக்கக்கூடாது (7). தண்டிக்க வேண்டியவரைத் தண்டிக்காது, குற்றமற்றவரைத் தண்டிக்கும் அரசன், வாழ்வில் பழி சுமக்கிறான்; இறந்த பிறகும் பெருந் துன்பமடைகிறான். ஆதலால் அபராதிகளை என்றும் தண்டிக்கவும்; நிரபராதிகளை ஒருக்காலும் தண்டிக்கக்கூடாது (8). முதல்முறை குற்றத்திற்கு வாக்தண்டம், எச்சரிக்கை; இரண்டாம் முறை கடுஞ்சொல், "சை இப்படிக் கெட்டகாரியம் நீ ஏன் செய்தாய்" என்று கண்டித்தல்; மூன்றும் தடவை அபராதம்; நான்காம் தடவையும் குற்றம் செய்தால் சவுக்கடி, பிரம்படி, சிறை அல்லது சிரச்சேத தண்டனை விதித்தல் (9).

## தண்டனை முறை

येन येन यथाङ्गेन स्तेनो नृषु विचेष्टते ।
तत्तदेव हरेदस्य प्रत्यादेशाय पार्थिवः ॥ 1 ॥

पिताचार्य्यः सुहृन्माता भार्य्या पुत्रः पुरोहितः ।
नादण्ड्यो नाम राज्ञोऽस्ति यः स्वधर्मे न तिष्ठति ॥ 2 ॥

कार्षापणं भवेद्दण्ड्यो यत्रान्यः प्राकृतो जनः ।
तत्र राजा भवेद्दण्ड्यः सहस्रमिति धारणा ॥ 3 ॥

अष्टापाद्यन्तु शूद्रस्य स्तेये भवति किल्विषम् ।
षोडशैव तु वैश्यस्य द्वात्रिंशत् क्षत्रियस्य च ॥ 4 ॥

ब्राह्मणस्य चतुःषष्टिः पूर्णं वापि शतं भवेत् ।
द्विगुणा वा चतुःषष्टिस्तद्दोषगुणविद्धि सः ॥ 5 ॥

ऐन्द्रं स्थानमभिप्रेप्सुर्यशश्चाक्षयमव्ययम् ।
नोपेक्षेत क्षणमपि राजा साहसिकं नरम् ॥ 6 ॥

वाग्दुष्टात्तस्कराच्चैव दण्डेनैव च हिंसतः ।
साहसस्य नरः कर्त्ता विज्ञेयः पापकृत्तमः ॥ 7 ॥

साहसे वर्त्तमानन्तु यो मर्षयति पार्थिवः ।
स विनाशं व्रजत्याशु विद्वेषं चाधिगच्छति ॥ 8 ॥

न मित्रकारणाद्राजा विपुलाद्वा धनागमात् ।
समुत्सृजेत् साहसिकान्सर्वभूतभयावहान् ॥ 9 ॥

गुरुं वा बालवृद्धौ वा ब्राह्मणं वा बहुश्रुतम् ।
आततायिनमायान्तं हन्यादेवाविचारयन् ॥ 10 ॥

नाततायिवधे दोषो हन्तुर्भवति कश्चन ।
प्रकाशं वाऽप्रकाशं वा मन्युस्तन्मन्युमृच्छति ॥ 11 ॥
यस्य स्तेनः पुरे नास्ति नान्यस्त्रीगो न दुष्टवाक् ।
न साहसिकदण्डघ्नौ स राजा शक्रलोकभाक् ॥ 11 ॥

(மனு. 8 ; 334-338, 344-347, 350, 351, 386)

எந்தெந்த உறுப்பினுல் எப்படிப் பிறருக்குத் தீங்கு செய்கிருனே அந்தந்த உறுப்பை அறுத்து, அரசன் பிறருக்கும் எச்சரிக்கையாயிருக்கச் செய்க (1). தந்தை, ஆசாரியன், நண்பன், மனைவி, மகன், புரோஹிதன்—யாரானுலும் சரி, தன்னறம் பேணுதவரை தாட்சண்யமில்லாமல் அரசன் தண்டிக்க வேண்டும். நியாயத்திற்கு உற்ருர் உறவினர் என்றில்லை (2). ஒரு குற்றத்திற்காகச் சாதாரண மனிதனுக்கு ஒரு பைசா அபராதம் போட்டால், அரசனுக்கு ஆயிரம் பைசா போட வேண்டும். அதாவது சாதாரண மனிதனைவிட அரசனுக்கு ஆயிரம் மடங்கு அதிக தண்டனை தரவேண்டும். மந்திரி அல்லது திவானுக்கு 800 மடங்கு, அவனுக்கும் கீழ் அதிகாரிக்கு 700 மடங்கு, அவனுக்கும் கீழிருப்பவனுக்கு 600 மடங்கு; இவ்வாறே அதிகாரியின் தரத்திற்குத் தக தண்டனை விதிக்கவேண்டும். மிகக் கீழுள்ள சேவகனுக்கும் 8 மடங்குக்கு குறையாத அபராதம் போடலாம். பொதுஜனங்களைவிட அரச ஊழியருக்கு அதிக தண்டனை விதிக்கவேண்டும். இன்றேல் அரச ஊழியர் பொது மக்களை அழித் தொழிப்பர்—ஆட்டைவிடச் சிங்கம் அதிக தண்டனையாலேதான் அடங்கும். ஆதலால் அரசன் முதல் சிறிய சேவகன் வரையில் உத்யோகஸ்தருக்கு அதிகமான தண்டனை விதிக்கவேண்டும் (3). பகுத்தறிவிருந்தும் திருடுகிறவனுக்கு எட்டு மடங்கு அதிகமான தண்டனை விதிக்கவும். அவ்வாறே வைசியனுக்குப் பதினறு மடங்கு, க்ஷத்திரியனுக்கு முப்பத்திரண்டு மடங்கு (4). பிராமணனுல் 64 அல்லது 100 அல்லது 120 மடங்கு அதிக தண்டனை விதிக்கவேண்டும். ஏனெனில் அறிவு, புகழ், ஆதிக்கம், செல்வாக்கு அதிகமாக ஆக, தண்டனையும் அதிகப்படவேண்டும் (5). தன் அரசு அறமும் செல்வமும் செழித்து வாழ விரும்பும் மன்னனை, பலாத்காரக் கொடுமை செய்யும் கொள்ளைக்காரரை, ஒரு கணங்கூடத் தாமதியாமல் தண்டிக்கவேண்டும் (6).

## அருஞ்செயல் புருடனின் லக்ஷணம்

பொல்லாங்கு சொல்பவனும் திருடனும் தண்டிக்க வேண்டிய வர்களே; ஆனால் சாகசமாக பலாத்காரம் செய்பவன் மஹா பாபி, துஷ்டன்; அவனை அதிகம் தண்டிக்கவேண்டும் (7). அப்படிக் கொடிய காரியம் செய்பவரைத் தண்டிக்காமல் சும்மா விடுகிற மன்னன், பொதுஜன வெறுப்பை அடைந்து அழிந்து போவான் (8). நண்பரானாலும் சரி, பெரும் பொருள் கிடைப்ப தானாலும் சரி, ஒதுக்கித்தள்ளி அடாதன செய்து உயிர்களைத் துன்புறுத்தும் துஷ்டர்களை மன்னன் தண்டிக்காது விடக் கூடாது (·). குரு, தன் மக்கள் போன்ற பாலர், தந்தை போன்ற விருத்தர், பிராமணர், நிரம்பப் படித்தவர்—யாரானாலும் சரி—தர்மத்தை விட்டு அதர்ம முறையில் நிரபராதிகளைக் கொடிய முறையில் கொலை செய்வார்களானால், அப்படிப்பட்ட துஷ்டர் களுக்கு முதலில் கொலைத் தண்டனைக் கொடுத்து தண்டிக்க வேண்டும். பிறகு மற்ற விசாரணை (10). வெளிப்படையாக அல்லது மறைவாக மகா பாபிகளை மன்னன் கொல்வதால் எந்தவித பாபமுமில்லை. அது சினத்தைச் சினம் கொன்று பழிக்குப் பழி வாங்குவதே யாகும் (11). திருடர், விபசாரர், தீச்செயலாலர், வஞ்சகர், சாகசர், கொள்ளைக்காரர், சட்டத்தை மீறும் துஷ்டர் இல்லாத அரசே அரசு; அதை ஆளும் மன்னனே மன்னன்; அவன் சிரேஷ்டன் (12).

भर्त्तारं लंघयेद्या स्त्री स्वज्ञातिगुणदर्पिता ।
तां श्वभिः खादयेद्राजा संस्थाने बहुसंस्थिते ॥ 1 ॥

पुमांसं दाहयेत्पापं शयने तप्त आयसे ।
अभ्यादध्युश्च काष्ठानि तत्र दह्येत पापकृत् ॥ 2 ॥

दीर्घाध्वनि यथादेशं यथाकालङ्करो भवेत् ।
नदीतीरेषु तद्विद्यात्समुद्रे नास्ति लक्षणम् ॥ 3 ॥

अहन्यहन्यवेक्षेत कर्मान्तान्वाहनानि च ।
आयव्ययौ च नियतावाकरान्कोषमेव च ॥ 4 ॥

एवं सर्वानिमान्राजा व्यवहारान्समापयन् ।
व्यपोह्य किल्बिषं सर्वं प्राप्नोति परमां गतिम् ॥ 5 ॥

(மனு. 8 ; 371-372 ; 406 ; 416 ; 420).

ஒரு மனைவி, சாதிக் குணச் செருக்கால், கணவனை விட்டு வியபிசாரம் செய்தால், அவளைப் பல ஆண் பெண்கள் முன்னே

நிறுத்தி தண்டித்து, நாய்களைவிட்டுக் கடித்துக் கொள்ளச் செய்க (1). அதே மாதிரி தனது மனைவியைக் கை விட்டு, பரஸ்த்ரீ அல்லது வேசையிடம் செல்லும் பாவியை, பழுக்கக் காய்ச்சின இரும்புப் படுக்கையில் போட்டுப் பலர் முன்னே தீயை வைத்து எரித்துக் கொல்லவும் (2).

**வினா:** அரசன், அரசி அல்லது நீதிபதி, அல்லது அவர் மனைவி வியபிசாராதி கெட்டச் செயலைச் செய்தால் யார் அவர்களைத் தண்டிப்பது?

**விடை:** சட்டசபை அல்லது நீதிமன்றம். அவர்களுக்கு சாதாரண பிரஜைகளைவிட இன்னும் அதிகமான தண்டனை விதிக்கவேண்டும்.

**வினா:** அரசன் முதலியோர் இவர்களிடம் தண்டனை ஏற்பார்களா?

**விடை:** அரசன் யார்? அவனும் ஒரு மனிதன்—ஒரு புண்யாத்மா, பாக்கியசாலி. அவனைத் தண்டிக்காவிட்டால், அவனும் தண்டனையை ஏற்காவிட்டால், பொதுமக்கள் தண்ட நீதியை மதிப்பார்களா? மேலும் ஜனங்கள், மந்திரிகள், சபையோர் கூடி தர்ம தண்டனை தந்தால் தனியாக அரசன் என்ன செய்யமுடியும்? இவ்வாறு தண்டிக்காதுபோனால் அரசனும், பிரதானிகளும், மற்ற செல்வாக்குள்ள சாமர்த்தியசாலி அதிகாரிகளும், அநியாயத்தில் மூழ்கி, தர்மநியாயத்தையும் சிதைத்து, ஜனங்களை நாசம் செய்வார்கள். தாங்களும் அழிவார்கள். "நியாயமான தண்ட நீதியே அரசன், அதுவே தர்மம்" என்ற வேத வாக்கைக் கருதுக. அதை மீறினவனைவிட இழிவானவன் இல்லை.

**வினா:** அவ்வளவு கடுமையான தண்டனை விதித்தல் உசிதமா? மனிதன் ஒரு அங்கத்தை ஆக்க முடியுமா? இறந்தவனைப் பிழைப்பிக்க முடியுமா? ஆகையால் கடுந் தண்டனை உசிதமற்றது.

**விடை:** இதைக் கடுந்தண்டனை என்பவர்கள் அரச நீதி சரியாக அறியவில்லை என்றுதான் சொல்லவேண்டும். ஒருவனுக்கு இத்தகைய தண்டனை யளித்தால், மற்றப் பிரஜைகளும் கெட்ட காரியம் செய்யத் துணியமாட்டார்கள். தீமை நீத்து அறவழியில் உறுதியாய் நடப்பார்கள்.

உண்மையை ஆராய்ந்தால் ஒவ்வொருவரின் பங்கிற்கும் ஒரு கடுகளவு தண்டனைக்கூட வராது. ஆயிரம் பேருக்கு கடுகச் சுமை பாரமாகுமா? லேசான தண்டனை தீச்செயல்களை அடக்காது; அதற்கு மாருக தீச்செயல்களும் தீமைகளும் அதிகப்படும். நீங்கள் சொல்லும் லகு அல்லது சுக தண்டனை என்பது கோடிக்கணக்காய் கோடி மடங்கு கடின மாகிறது. ஆயிரம் பேர் அடங்கிய ஒரு சமுதாயம் இருக் கிறது; ஒவ்வொருவரும் ஒரு மணங்கு தண்டனை பெற்ருல் ஆயிரம் மணங்கு மொத்தமாகும். இப்படிப்பட்ட சிறு அல்லது லேசான தண்டனையைக் கண்டு துஷ்டர்கள் பயப்பட மாட்டார்கள். ஆனுல் ஒருவனுக்கே நூறு மணங்கு தண்டனை விழுகிறதென்று வைத்துக்கொள்வோம்; அதைக் கண்டு பிறர் குற்றம் செய்ய பயப்பட்டு அடங்கி நடப்பார்கள். அதனுல் பதின்மடங்கு குற்றம் குறையும். ஆயிரம் பேருக்குமே நூறு மணங்கு தண்டனைதான். அதனுல் லகு தண்டனை குற்றச் சுமையை அதிகமாக்கு கிறது என்பதை உணரலாம். ஆகவே உண்மையில் கடுந்தண்டனையே லகு தண்டனையாகும்.

ஆறுகள், ஓடைகள், கடற்குடாக்கள், கழிமுகங்களிற் செல்லும் கப்பல்களுக்கு, அவை போக்குவரவு செய்யும் தூரத்திற்கும், தேசத்திற்கும் ஏற்றபடி மன்னன் சுங்கம் விதிக்கட்டும். சமுத்திரச் சுங்கத்தை நிர்ணயிக்க முடியாது; அதைச் சமயத்திற் கேற்றபடி விதிக்கலாம். அரசாங்கத்திற்கும் கப்பல்காரர்களுக்கும் அனுகூலமான முறையில் சுங்கம் விதிக்க விதிகளைச் செய்க. தேச தேசாந்தரம், தீப தீபாந்தரங்களுக்குக் கப்பலிற் செல்லும் தன் பிரஜைகளை, எல்லா விதத்திலும் பாது காக்க வேண்டும்; அவர்களுக்கு இன்னல் வராது கவனிப்பது அரசாங்கக் கடமையாகும் (3).

இதிலிருந்து நம் தேசத்தினர் முன்காலத்தில் கப்பல்கட்டி திரைகடலோடியும் வாணிபம் செய்து திரவியம் தேடினுர்கள் என்பது உறுதியாகிறது; 'கப்பலோட்டும் தொழில் இத் தேசத்தில் முற்காலத்திலில்லை' என்பர் பொய்யர் என்று தெளிவாகிறது.

அரசன் தனது தினசரிக் கடமை முடிந்ததும் யானை, குதிரை முதலிய வாகனங்களைப் பார்வை யிட்டு, வரவு செலவுத்

திட்டங்களை கணக்கிட்டறிந்து, கஜானாவைச் சோதித்து, பொன் மணிச் சுரங்கங்களைப் பார்வையிட்டு, நாட்டு நன்மைக்கேற்ற பல காரியங்களின் பலனை ஆராய்ந்தறிந்து, அரசாங்கக் காரியங்களில் தீவிரப்படுக (4). இவ்வாறு எல்லாக் கடமைகளையும் சரிவர நிறைவேற்றும் மன்னன், பாபம் நீங்கிப் பரமகதியான மோட்ச சுகம் பெறுவான் (5).

**வினா :** சம்ஸ்க்ருதக் கலையில் ராஜநீதி நிறைவாயிருக்கிறதா அல்லது குறைவா?

**விடை :** நிறைவாயிருக்கிறது. ஏனெனில் இப்போது உலகெங்கும் வழங்கும் ராஜ நீதியும், இனி வழங்கப் போவதும் எல்லாம் சம்ஸ்க்ருதக் கலையினின்றே வருவன. இதுகாறும் சொல்லப்படாத விதிகளுக்கும் அதில் இடம் உண்டு :

प्रत्यहं लोकदृष्टैश्च शास्त्रदृष्टैश्च हेतुभिः। (மனு 8-3)

"சிறந்த வித்வான்களைக் கொண்ட அரசவை, அரசனுக்கும், பிரஜைகளுக்கும் சுகத்தைத் தரும் தர்ம நியமங்களை வகுத்து நாட்டுக" என்ற மனுவாக்கே அதற்கு அத்தாட்சியாகும். அரசன் முடிந்தமட்டும் பாலிய விவாகத்தைத் தடுக்க வேண்டும். வயது வந்த யுவர்கள் கூட மனப் பொருத்தமில்லாமல், சம்மத மில்லாமல் விவாகம் செய்யக் கூடாது; அதை அனுமதிக்கவும் கூடாது. பிரம்மசரியத்தைப் போற்றுக. வியபிசாரம், பலதார மணம் இவற்றைத் தடுக்கவேண்டும். இதனால் உடலும் ஆத்மாவும் பூர்ணபலம் பெறும். அறிவாற்றல் மட்டுமே போதாது; கல்வியறிவே கருதி உடல் வலிவில்லாத நூறு வித்வான்களை ஒரு நல்ல பலசாலி வென்று விடுவான். இதற்கு மாறாக தேகபலத்தையே வளர்த்து ஆத்மபலமே இல்லாது போனால், புத்தி பலமில்லாது போனால், உத்தமமான அரசியல் கடமை நிறைவேறாது. சரியான பயிற்சியும் அறிவும் ஆற்றலும் கொண்டு கடமை காக்கா விடில், நாட்டில் ஒழுங்கிராது. ஒருவருக் கொருவர் பகைத்துச் சண்டை போட்டு, நாடு சின்னபின்னமாகச் சிதறி அழியும். ஆதலால் ஆத்மபலத்தையும் வளர்க்கவேண்டும்; தேகபலத்தையும் வளர்க்கவேண்டும். வியபிசாரமும், அதிகமான விஷயபோகமும் போல், உடலையும் உயிரையும், ஆத்மாவையும் நலிப்பன வேறொன்றுமில்லை. முக்கியமாக க்ஷத்திரியர் உடலுறுதியும் நல்ல பலமும் பெற வேண்டும். அவர்கள் விஷயா சக்தர்களானால் ராஜதர்மம்

நஷ்டப்படும். யதா ராஜா ததா ப்ரஜா—அரசெப்படி பிரசை யப்படி—என்பதைக் கருத்தில் கொள்ளவேண்டும். ஆதலால் அரசரும், அரசாங்கத்தினரும் என்றும் தீய ஒழுக்கம் பேணுது, எல்லாருக்கும் உதாரணமாகும்படி தர்மநியாயத்தைக் கடைபிடிக்கவேண்டும்.

இவ்வாறு மன்னறம் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. விரிவாக வேண்டுவோர் வேதம், மனு ஸ்ம்ருதியில் அத்தியாயம் ஏழு—எட்டு—ஒன்பது, சுக்ரநீதி, விதுரப்ரஜாகரம், மஹா பாரதம் சாந்திபர்வத்திலுள்ள ராஜதர்மம் ஆபத்தர்மம் முதலான நூல்களைப் பார்த்தறிந்து, மண்டலாதிபதிகளாக, ஸர்வபௌம சக்ரவர்த்திகளாக அரசாளட்டும்.

"वयं प्रजापतेः प्रजा अभूम"। (யஜுர். 18-29).

நாம் ஜனத்தலைவருன பரமாத்மாவின் பிரஜைகள்; அவனே அரசர்க் கரசன்; உண்மை வேந்தன்; உலகவேந்தன்; நாமெல்லாம் அவனது பணிவான தொண்டர், அன்பர், என்ற யஜுர் வேத வாக்கை உணர்வோம். அவன் படைத்த உலகில் அவன் திருவருள் நம்மை அரசத் தலைவனும், அரசாட்சித் தொண்டருமாக்கி யாளுக! நமது கைகளால் அவனது சத்திய நியாயம் வளரச் செய்க!

இனி இறைவனைக் குறித்தும் வேதம் பற்றியும் எழுதுவோம்.

ஸ்ரீமத் தயானந்த ஸரஸ்வதி சுவாமிகள் அருளிய
ஸத்யார்த்தப் பிரகாசத்தில் இராஜதர்மம்
என்ற ஆறும் அத்தியாயம்
முற்றிற்று.

## ஏழாம் அத்தியாயம்

# கடவுளும் வேதமும்

1. ऋचो अक्षरे परमे व्योमन्यस्मिन् देवा अधि विश्वे निषेदुः ।
यस्तन्न वेद किमृचा करिष्यति य इत्तद्विदुस्त इमे समासते ॥

(ருக். 1-164-39).

2. ईशा वास्यमिदं सर्वं यत्किञ्च जगत्यां जगत् ।
तेन त्यक्तेन भुञ्जीथा मा गृधः कस्य स्विद्धनम् ॥

(யஜுர் 40-1.)

3. अहं भुवं वसुनः पूर्व्यस्पतिरहं धनानि सं जयामि शाश्वतः ।
मां हवन्ते पितरं न जन्तवोऽहं दाशुषे विभुजामि भोजनम् ॥

4. अहमिन्द्रो न परा जिग्य इद्धनं न मृत्यवेऽवतस्थे कदाचन ।
सोममिन्मा सुन्वन्तो याचता वसु न मे पूरवः सख्ये रिषाथन ॥

(ருக். 10-48-1, 5.)

5. अहं दां गृणते पूर्व्यं वस्वहं ब्रह्म कृणवं मह्यं वर्धनम् ।
अहं भुवं यजमानस्य चोदितायज्वनः साक्षि विश्वस्मिन् भरे ॥

(ருக். 10-49-1).

முதல் மந்திரத்தின் பொருள் கல்விப் பயிற்சி முறையை விளக்கும் மூன்றும் அத்தியாயத்தில் விளக்கப் பெற்றுள்ளது. அதன் கருத்து :

1. "பரமாத்மா தேவதேவன்; திவ்ய குணகர்ம வித்யா சம்பன்னன். பூமி, சூரியன் முதலிய எல்லா உலகும் அவனிடமே நிலைக் கொண்டுள்ளன. அவன் ஆகாசம் போல் எங்கும்

நிறைந்தவன், பரமேசன். அவனை அறியாத, மதியாத, நினையாத மாக்கள் மந்தமதி பிடித்த நாஸ்திகர். அவர் என்றும் துன்பக் கடலில் ஆழ்வர். ஆண்டவனை அறிந்த அனைவரும் இன்புறுவார்கள்.''

**வினா:** வேதத்தில் அநேக ஈசரைக் காண்கிறோமே; இதை நீர் ஒப்புவீரா இல்லையா?

**விடை:** ஒப்பமாட்டோம்; ஏனெனில் ஈசன் அநேகம் என்பதை நான்கு வேதங்களிலும் எழுதக் காணோம். ஆனால் ஈசன் ஒருவனே என்றெழுதி யிருப்பதைக் காண்கிறோம்.

**வினா:** வேதத்தில் பலதேவதைகள் காணப்படுவதன் கருத்தென்ன?

**விடை:** தேவதை என்றால் திவ்யகுணம், நல்லியல்பு கொண்டது என்பதாம். பூமி ஒரு தேவதை; ஆனால் அது கடவுளென்றோ உபாசனைக்குரியதென்றோ எங்கும் சொல்லப்படவில்லை. மேற்சொன்ன மந்திரத்திலேயே ''எல்லாத் தெய்வங்களும் அவனிடம் நிலைக் கொண்டுள்ளன; அவனே அறியவும் வணங்கவும் தக்க இறைவன்'' என்பதை ஆராய்ந்து பார். தேவதை என்றால் ஈசன் என்று கொள்வது முழு பிசகாகும். இறைவன் தேவதேவன், மஹாதேவன், அதனால் அவனே உலகை ஆக்கி, அளித்து, ஊழிமுதல்வனாய், நீதித் தலைவனாய், விளங்குகிறான். ''த்ரயஸ்த்ரிம்ஶத்த்ரிஶதா:'' என்பது வேதப் பிரமாணம்; இதன் வியாக்யானம் சதபத ப்ராம்மணத்தில் உள்ளது. அதாவது முப்பத்தி மூன்று தேவதைகள் உண்டு—பிருதுவி (பூமி), ஜலம், அக்னி, வாயு, ஆகாசம், சந்திரன், சூரியன், நக்ஷத்திரம்—இவை சிருஷ்டிக்கு நிலையமானதால் அஷ்டவசுக்கள் எனப்படும். பிராணன், அபானன், வியானன், (உதானன்), ஸமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன், ஜீவாத்மா—இந்த பதினொன்றும் நீங்கினால் உடல் அழியும்; துக்கம் வரும்; உற்றார் உறவினர் அழுவர். அதனால் இவை ஏகாதச ருத்ரர் எனப்பட்டன. வருஷம் பன்னிரண்டு மாதத்திற்கும் பன்னிரண்டு ஆதித்யர் என்பர்-எல்லார் ஆயுளையும் கொண்டு செல்லுவதால். மின்சாரம் எல்லா வளமைக்கும் சக்தியளிப்பதால் இந்திரன் எனப்பட்டது. யக்ஞம் பிரஜாபதி எனப்படும். ஏனெனில் இதனால் காற்று,

மழை, நீர், மூலிகைகள் பரிசுத்தமடையும் பலவிதமான சிற்பக் கலை வளர மனிதருக்குப் பயனுகும். வித்வான்களுக்கு இதனுல் பெருமையும் கௌரவமும், குடி மக்களுக்கு (பிரஜைகளுக்கு) ப் பாதுகாப்பும் உண்டாகும். இவற்றில் மேற்குறித்த முப்பத்து மூன்று குணங்களும் சேர்ந்து தேவதைகளாகும். இவற்றிற்கெல்லாம் அதிபதியாகவும், பெரியானுகவும் இருப்பதால், பரமாத்மாவை முப்பத்து நான்காம் தேவதை என்றும், உபாஸனைக்குத் தக்கவன் என்றும் சதபத ப்ராம்மணத்தின் பதினுன்காம் காண்டத்திலும் மற்ற கிரந்தங்களிலும் விளக்கமாக கூறப்பட்டிருக்கிறது. இந்தச் சாத்திரங்களைப் பார்ப்பவர் வேதத்தில் அநேக ஈசுவரர் உண்டென்னும் மயக்க வலையில் விழ மாட்டார்கள். உள்ளது ஒன்றே, ஒரே பரம்பொருளே.

2. மனிதீர், இந்த உலகமெல்லாம் ஒரே பரம்பொருள் பரவி நிற்கிறது; அதையே ஈசன் என்பர். அவனே நியந்தா; மனிதீர், அவனுக்குப் பயந்து நடமின். அநியாயமாகப் பிறர் பொருளைக் கவரப் பேராசைப்படாதீர் அநியாயத்தை விட்டு விடுவீர். நேர்மையான தர்மசாதனத்தால் ஆத்மானந்தம் அனுபவிப்பீர்.

3. இறைவன் வேதத்தில் எல்லாருக்கும் உபதேசிக்கிருன்: ஏ மனிதீர்! நான் இறைவன்; உலகிற்கு முன் இருந்தவன்; உலகிற்கெல்லாந் தலைவன், முதல்வன், ஜகத்பதி. நான் ஸநாதனன், பழம்பொருள், ஜகத்காரணன், செல்வந் தரும் வள்ளல், பிள்ளைகள் பிதாவைச் சார்வது போல், எல்லா வுயிர்களும் என்னைச் சார்ந்து உய்க. எல்லாரும் இன்புற்று சுகவாழ்வு பெறவே பலவகை உணவுப் பொருள்களை வகுத்திருக்கிறேன்.

4. நான் பரம ஐஸ்வர்யவான், சூரியன் போன்று உலகிற்கு ஒளி. எனக்குத் தோல்வியே கிடையாது. நான் வெல்லொணுதவன் (அபராஜயன்); என்னைச் சாவு அணுகாது. (நான் ம்ருத்யுஞ்ஜயன்). நானே உலகம் என்னும் தனத்தை நிலை நாட்டுகிறவன்; எல்லா உலகையும் ஆக்குகிறவன் என்று அறிமின். ஜீவர்காள், என்னையே அறிமின்; என்னை உபாசித்து விக்ஞானுதி ஐஸ்வர்யங்களையும் பெறுமின். எனது நட்புறவை அகலாதீர்.

5. மனிதீர்! சத்தியமே பேசி என்னைத் துதி செய்யும் மெய்யன்பருக்கு ஸநாதன ஞானுதி ஸம்பத்துகளைத் தருகிறேன்.

எனது சொரூபத்தை விளக்கும் வேத ப்ரம்மத்தை நானே பொலி விக்கிறேன். வேதத்தால் நான் எல்லாருக்கும் உண்மையறிவைப் புகட்டுகிறேன். நன்மைகளை ஊக்குகிறேன். நல்லோர் செய்யும் வேல்விப் பயன்களை நானே தருகிறேன். இவ்வுலக காரியங்களை நடத்துகிறவன், உலகில் உள்ளதனைத்தையும் தாங்குவோன். ஆதலால் நீங்கள் என்னை விட்டு, எனது ஸ்தானத்தில் வேறெதையும் வைத்து வழி படாதீர்; எனக்குச் சமானமாக எதையும் ஒப்பாதீர், அறியாதீர்.

हिरण्यगर्भः समवर्त्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत्।
सदाधार पृथिवीं द्यामुतेमां कस्मै देवाय हविषा विधेम॥

(யஜுர் 13-4)

இது யஜுர் வேத மந்திரம்: "மனிதீர், சிருஷ்டிக்கு முன்பே இறைவன் இருந்தான்; சூரியாதி தேஜோ (ஒளிநிறை) லோகங்களின் பிறப்பும், நிலைப்பும், காப்பும் அவனாலேதான். பூமி முதல் சூரியலோகம் வரையில் எல்லாப் படைப்புகளையும் அவனே தாங்கி நிற்கிறான். உற்பத்தி ஆனது, ஆகிறது, இனி ஆவது அனைத்திற்கும் முதல்வன் அவனே. சுகஸ்வரூபனான அந்தப் பரமாத்மனையே நாம் அன்புடன் பூஜிப்போமாக."

**வினா:** கடவுள், கடவுள் என்கிறீரே; அவர் இருக்கிறாரா? எப்படி நிரூபிப்பீர்?

**விடை:** பிரத்யாக்ஷாதி பிரமாணத்தால்.

**வினா:** பிரத்யக்ஷாதி பிரமாணத்தால் கடவுளை ஒருக்காலும் விளக்க முடியாதே!

**விடை:**

इन्द्रियार्थसन्निकर्षोत्पन्नं ज्ञानमव्यपदेश्यमव्यभिचारि व्यव-
सायात्मकं प्रत्यक्षम्॥

(நியாயம் 1-4)

கௌதம மஹர்ஷியின் நியாய தர்சனம் சொல்லுவதாவது:— மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகள், பரிசம், சுவை, ஒளி, மணம், ஒலி, இன்பதுன்பம், மெய், பொய் ஆகிய விஷயங்களுடன் சம்பந்தப்படும் போது உண்டாகும் அறிவே, ப்ரத்யக்ஷம் என்பது; ஆனால் அது ஐயமற்றதாயிருக்க வேண்டும்.

இப்போது ஆராய்ந்தால், மனம், இந்திரியங்களால் குணங்கள் புலனாகின்றன; குணி புலனாவதில்லை. உதாரணமாக இந்திரியங்களால் ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தங்களை உணர்ந்து, நாம் அந்தக் குணப் பொருள்களை அறிகிறோம். இந்திரியங்கள் மனதுடனும், மனம் ஆத்மாவுடனும் கூடி இந்த அறிவு வருகிறது, அதேமாதிரி தோன்றும் உலகின் படைப்புத் திறனை, சிருஷ்டியின் சிறப்பை, (பிராணிகளின்) அறிவு முதலிய தன்மைகளை ஆராய்ந்தால், பரமாத்மனையும் நிதர்சனமாக அறியலாம். நாம் நல்லது கெட்டது (களவு கெட்டது, பரோபகாரம் நல்லது) செய்யும் போது ஜீவன் மனதை, மனம் புலனைத் தூண்டி எல்லாம் விரும்பிய விஷயத்தில் ஈடு படுகின்றன. உடனே அந்தக் காரியம் பாபமானால் ஆத்மாவில் பயம், சந்தேகம், வெட்கம் ஆகிய உணர்ச்சிகள் எழும்; நல்ல காரியமானால் தைரியம், நிஸ்ஸந்தேகம், ஆனந்தம், உற்சாகம் உள்ளத்தில் எழும். இவை ஜீவாத்மாவாலன்று; பரமாத்மாவினால் எழுவன. ஜீவாத்மா பரிசுத்தமாகி பரமாத்ம தியானத்திலேயே லயித்தால் (தத்பரமனால்) தன்னையும் அறிகிறது, பரமாத்மனையும் அறிகிறது. இதுவே ப்ரத்யக்ஷஞானம். கடவுள் இருப்பதை நாம் ப்ரத்யக்ஷமாகக் காணலாம்; எனில் அனுமானாதிகளால் கடவுளறிவைப் பெறத் தடையென்ன? காரியங் கண்டால் காரணத்தை ஊகிக்கிறோமன்றோ?

**வினா:** இறைவன் எங்குமிருப்பவனா அல்லது குறித்த இடத்தில் வசிப்பவனா?

**விடை:** இறைவன் சர்வவியாபி, எங்குமிருப்பவன். ஏனெனில் ஒரே இடத்தில் இருந்தால் ஸர்வாந்தர்யாமி, எல்லாருள்ளும் இருப்பவன், எல்லாம் அறிபவன், எல்லாம் இயற்றுவோன், இயக்குவோன், தோற்றுவோன், அனைத்தையும் தாங்குவோன், ஊழி முதல்வன் ஆகமுடியாது. கர்த்தா இல்லாத இடத்தில் அந்த கர்த்தாவின் காரியம் நடைபெறுவது அசாத்தியம்; நடக்காது.

**வினா:** பரமன் தயாளு; நியாயகாரியா இல்லையா?

**விடை;** ஆம். பரமன் இரண்டும்.

**வினா:** இந்த இரண்டு குணங்களும் எதிர்மறையானவை; நியாயமாயிருந்தால் தயவாயிருக்க முடியாதே; தயவாயிருந்தால் நியாயமாயிருக்க முடியாதே. ஏனென்றால் மிகை

குறையில்லாமல் வினைக்கேற்ற இன்ப துன்பந் தருவதே நியாயம் என்பர். அபராதியைக் கூட தண்டிக்காமல் விடுவதே கருணையாகும், தயையாகும்.

விடை: நியாயத்திற்கும் தயைக்கும் பெயரளவிலேதான் பேதம். நியாயத்தால் உண்டாகும் பலனே, தயவாலும் உண்டாவது. குற்றத்தினின்று விடுபட்டு இனித் துன்பம் அடையாதிருப்பதே தண்டனையின் நோக்கம்; பிறர் துன்பந் தீர்ப்பதே தயையாகும். தயைக்கும் நியாயத்திற்கும் நீர் கொண்ட பொருள் பொருத்தமில்லை. அவனவன் குற்றத்திற்கும், தீமைக்கும் தக்க தண்டனை விதிப்பதே நியாயமாகும். குற்றவாளியைத் தண்டிக்கா விட்டால் தயையே அழியும். ஏனெனில் அபராதியான திருடனைச் சும்மா விட்டுவிட்டால் ஆயிரம் தர்மாத்மாக்களுக்கு இன்னல் விளைகிறது. ஒருவனைத் தண்டிக்காது விடுவதால் ஆயிரம் பேருக்குத் துன்பம் விளையுமானால் அது எப்படித் தயையாகும்? திருடனைச் சிறையிலிட்டு மேலும் தீங்கிழைக்காமல் தடுப்பதே தயை. அவனை ஒழிப்பதால் ஆயிரம் பேருக்குத் தயை காட்டியதாகும்.

வினா: பின்னே 'தயை', 'நியாயம்' என இரண்டு வார்த்தைகள் இருப்பானேன்? இரண்டின் பொருளும் ஒன்றானால் இரண்டு வார்த்தைகள் வீண்; ஒரே வார்த்தை போதும். இரண்டிருப்பதால் அவற்றின் பொருள் ஒன்றல்ல என்றாகிறது.

விடை: ஒரு பொருளுக்குப் பல பெயர், பல பெயர்களுக்கு ஒரே பொருள் இருப்பதில்லையா?

வினா: உண்டு.

விடை: எனில் இன்னும் சந்தேகமேன்?

வினா: உலகில் தினம் கேள்விப்படுவதால்.

விடை: உலகில் மெய் பொய் இரண்டும் சொல்லக் கேட்கிறோம். ஆனால் அவற்றை ஆராய்ந்து பகுத்தறிவது நமது கடமை. கடவுளின் பூர்ண தயவைப் பாரும். எல்லா உயிர்களின் நன்மைக்கும் உலகில் எத்தனையோ வஸ்துக்களைப் படைத்து அனைத்தையும் இனமாகத் தந்திருக்கிறார். இதினும் பெரிய தயவுண்டோ? இருப்பினும் நியாயத்தின் பலனும் நேரடி

யாக விளங்குகிறது. ஏனெனில் உலகில் இன்ப துன்ப நிலையில் ஏற்றத்தாழ்வு இருக்கிறது. எல்லாரும் இன்புறக் கருதி துன்ப விடுதலைக்காகச் செயல் புரிதல் தயை; குற்றவாளியைத் தக்கபடி சிறையிட்டு அல்லது ஒறுத்துக் குற்றம் கடிதல் நியாயம் எனப்படும். இரண்டிற்கும் பேதம் இவ்வளவே. எல்லாரும் துக்கமும் பாபமும் எய்தாது காப்பதே இரண்டின் பயனுமாகும்.

**வினா:** ஈச்வரன் உருவனா அருவனா?

**விடை:** அருவன், நிராகாரன், நிர்க்குணன். ஏனெனில் உருவிருந்தால் அவன் எங்கும் நிறைந்திருக்க முடியாது; அஃதின்றேல் அவன் எல்லாம் அறிந்தவனாயிருக்க முடியாது. அளவிட்ட பொருள்களின் குண கர்ம சுபாவங்களும் அளவாகவே யிருக்கும்; அவை குளிர், வெப்பம், பசி, தாகம், பிணி, குற்றம் குறை சிதைவுகளுக்கு உட்படும். இறைவனுக்கு இவை இல்லை; ஆதலால் அவன் அருவன், நிராகாரன். உருவிருந்தால் அவனுக்கு மூக்கு, காது, கண் முதலிய அவயவங்களும் இருக்கும்; அவற்றைச் செய்ய ஒருவன் வேண்டும். பல உறுப்புக்கள் சேர்ந்த ஒன்றை ஆக்கவும், அருவான அறிவன் இருக்க வேண்டும். இறைவன் தன் உருவைத் தானே செய்து கொண்டான் என்று வாதித்தாலும், அப்போதும் உருவாவதற்கு முன் அருவாயிருந்தான் என்று ஏற்படுகிறது. ஆதலால் பரமாத்மனுக்கு என்றும் உடல், உரு, இல்லை. அவன் அருவன் ஆனதாலேதான் சூக்ஷ்ம காரணத்தால் உலகை யெல்லாம் உருவாக்குகிறான்.

**வினா:** கடவுள் சர்வசக்திமானா இல்லையா?

**விடை:** ஆம். ஆனால் நீர் கொள்ளும் அர்த்தத்தில் இல்லை. ஆக்கல், அளித்தல், நீக்கல், ஜீவர்களுக்குப் புண்ணிய பாவங்களை வகுத்தல் ஆகிய தனது காரியங்களில், சிறிதும் பிறர் உதவியை நாடுவதில்லை; இறைவன் தனது எல்லையற்ற வல்லமையாலேயே தனது காரியத்தை நிறைவேற்றுகிறான்.

**வினா:** தனக்கு மேல் யாரும் இல்லை; ஆதலால் இறைவன் விரும்பியதெல்லாம் செய்து முடிப்பான் என்றே நாங்கள் நம்புகிறோம்.

விடை: அவர் எதை விரும்புவார்? அவர் எதையும் விரும்புவார், எல்லாம் செய்வார் என்றால், நாமும் உம்மிடம் கேட்கிறோம், "பரமேச்வரன் தற்கொலை செய்து கொள்வாரா? தன்னைப் போலப் பல தெய்வங்களை ஆக்குவாரா? கடவுள் அறிவிலி யாவாரா, திருட்டு வியபிசாராதி பாபங்களைச் செய்து துன்பப்படுவதும் முடியுமா? இக்காரியங்கள் கடவுளின் குண கர்ம சுபாவத்திற்கு விரோதமானவை. அதுபோலத் தான் விரும்பியதெல்லாம் செய்வாரா என்ற உமது கேள்வியுமாகும். சர்வசக்திமான் என்பதற்கு நாம் கூறிய விளக்கமே சரியானது.

வினா: பரமேசன் அனாதியா, ஆதியுள்ளவனா?

விடை: அவன் அனாதி; அவனுக்கு ஆதியில்லை, தொடக்கமில்லை. இதைப்பற்றி முதல் அத்தியாயத்தில் விளக்கியிருப்பதைப் பார்த்துக் கொள்ளும்.

வினா: பரமேச்வரன் எதை விரும்புகிறான்?

விடை: அனைவர் நலத்தையும் இன்பத்தையுமே விரும்புகிறான். ஆனால் தன் சுயேச்சாதிகாரத்தால் ஒருவரை ஒருவருக்குக் (பாபம் செய்யாமல்) கீழாக்குவதில்லை.

வினா: பரமனுக்குத் துதி, பிரார்த்தனை, உபாசனை, வழிபாடு செய்யவேண்டுமா இல்லையா?

விடை: செய்யவேண்டும்.

வினா: துதிப்பவருக்கு இறைவன் பாபமன்னிப்புத் தருவாரா?

விடை: மாட்டார்.

வினா: அப்படியானால் துதி, பிரார்த்தனை செய்வானேன்?

விடை: அப்படிச் செய்வதன் பலன் வேறு.

வினா: என்ன?

விடை: துதியால் கடவுளிடம் அன்புண்டாகிறது; தெய்வ குண கர்ம சுபாவங்களை நினைத்துத் தனது குணகர்ம சுபாவங்களைத் திருத்திக் கொள்ளலாம். பிரார்த்தனையால் பணிவு, தைரியம், உற்சாகம், தெய்வசகாயம்—இவை உண்டாகும். உபாசனையால் கடவுட் கலப்பும், கடவுட் காட்சியும், சாட்சாத்காரமும் எய்தும்.

வினு : இவற்றைத் தெளிவாக்க வேண்டும்.

விடை : யஜுர் வேதம் இறைவனைத் துதிக்கிறது.

स पर्यगाच्छुक्रमकायमव्रणमस्नाविरꣳ शुद्धमपापविद्धम् ।

कविर्मनीषी परिभूः स्वयंभूर्याथातथ्यतोऽर्थान् व्यदधाच्छाश्वतीभ्यः समाभ्यः ॥ (யஜுர் 40-8)

"அந்தப் பரமாத்மன் அனைத்திலும் நிறைந்தவன், தீவிர சக்திமான், அனந்த பலவான், சுத்தன், சர்வக்ஞன், சர்வாந்தர்யாமி, அனைத்தையும் ஆளுவோன், பழம் பொருள், சநாதனன், ஸ்வயம் சித்தன், பரமேசன், சுயம்பு. அநாதிகாலம் முதல் அவன் ஜீவர்களுக்கு வேதத்தால் மெய்யறிவை விளக்குகிறான்." இப்படி இறைவனை அவனது குணங்களால் துதிப்பது சகுணஸ்துதி.

அவன் உடலைப் பூண்பதில்லை; பிறப்பதில்லை, சிதைவதில்லை. நாடி முதலிய பந்தங்களில் கட்டுப் படுவதில்லை; பாபம் செய்வதில்லை; நோவு, துன்பம், மடமையற்றவன்; விருப்பு வெறுப்பற்றவன்—இவ்வாறு குணுதிதனைப் பரம்பொருளைத் துதிப்பது நிர்குணத் துதியாகும். பரமனின் குணகர்மஸ்வபாவங்களைத் துதித்துத் தானும் அவற்றைப் பேணவேண்டும். அவன் நியாயகாரியானுல் தானும் நியாயகாரியாக வேண்டும். சும்மா பரமன் குணகீர்த்தனம் செய்து, நடத்தை வழுவழாவானுல் துதிப்பது வீணே. இவை வேதமுறை பிரார்த்தனை மந்திரங்கள் :

यां मेधां देवगणाः पितरश्चोपासते ।

तया मामद्य मेधयाऽग्ने मेधाविनं कुरु स्वाहा ॥ 1 ॥ (யஜுர் 32-14)

तेजोऽसि तेजो मयि धेहि ।

वीर्यमसि वीर्यं मयि धेहि ।

बलमसि बलं मयि धेहि ।

ओजोऽस्योजो मयि धेहि ।

मन्युरसि मन्युं मयि धेहि ।

सहोऽसि सहो मयि धेहि ॥ 2 ॥ (யஜுர் 19-9)

यज्जाग्रतो दूरमुदैति दैवन्तदु सुप्तस्य तथैवैति ।

दूरंगमं ज्योतिषां ज्योतिरेकन्तन्मे मनः शिवसङ्कल्पमस्तु ॥ 3 ॥

येन कर्मण्यपसो मनीषिणो यज्ञे कृण्वन्ति विदथेषु धीराः ।
यदपूर्वं यक्षमन्तः प्रजानां तन्मे मनः शिवसङ्कल्पमस्तु ॥ 4 ॥

यत्प्रज्ञानमुत चेतो धृतिश्च यज्ज्योतिरन्तरमृतं प्रजासु ।
यस्मान्नऋते किंचन कर्म क्रियते तन्मे मनः शिवसङ्कल्पमस्तु॥5॥

येनेदं भूतं भुवनं भविष्यत्परिगृहीतममृतेन सर्वम् ।
येन यज्ञस्तायते सप्त होता तन्मे मनः शिवसङ्कल्पमस्तु ॥ 6 ॥

यस्मिन्नृचः साम यजूंषि यस्मिन्प्रतिष्ठिता रथनाभा विवाराः ।
यस्मिँश्चित्तं सर्वमोतं प्रजानां तन्मे मनः शिवसङ्कल्पमस्तु ॥ 7 ॥

सुषारथिरश्वानिव यन्मनुष्यान्नेनीयतेऽभीशुभिर्वाजिन इव ।
हृत्प्रतिष्ठं यदजिरं जविष्ठं तन्मे मनः शिवसङ्कल्पमस्तु ॥ 8 ॥

(யஜுர் 34, 1-16)

1. ஹே அக்னே, (ஜோதி வடிவான பரமேசே), வித்வான் களும், ஞானிகளும் யோகிகளும் எந்த மேதைக்காக, அறிவுக்காக உன்னை உபாசிக்கிறார்களோ, அந்த மேதையை அறிவை எங்களுக்குக் கொடுத்தருள்வாயாக !

2. அக்னியே நீதேஜஸ் (ஒளி); என்னையும் தேஜோன் மயமாக்கியருள் !

நீ அனந்தபராக்ரமன் ; என்னையும் பூர்ண பராக்ரம சாலியாக்கு !

நீ வீரியன் ; என்னையும் வீரியனாக்கு !

நீ அனந்த சாமர்த்தியன், பெருந்திறலோன் ; என்னையும் சாமர்த்தியசாலியாக்கு !

நீ ஓஜஸ், திவ்வியசக்தி, என்னையும் ஓஜோமயனாக்கு !

நீ தீயரைச் சினப்பவன், நானும் அவ்வாறு செய்ய அருள் !

நீ நிந்தை துதி அபராதம் எல்லாம் பொறுப்பவன் ; எனக் கும் பொறுமையருள் !

3. ஹே தயாநிதே ! என் மனம் விழிப்பில் நெடுந்தூரம் செல்கிறது ; திவ்யகுண நிறைவாயிருக்கிறது ; உறக்கத்தில் அதுவே சுஷுப்தியில் ஆழ்ந்து விடுகிறது ; அல்லது கனவில் பல இடங்களிற் சுழன்று திரிகிறது. ஒளிக்கு ஒளியே, ஒருவனே, என் மனம் எப்போதும் தனக்கும் எல்லா உயிர்களுக்கும் நலமே

கருதுக. யாருக்கும் தீங்கு நினையாதருள். கருணைக் கடலே! உன் அருளால் சிவசங்கல்பமே யாகுக!

4. ஹே ஸர்வாந்தர்யாமீ! மனமே கர்மநிலையம். அதுவே தார்மிக வித்வான்கள் வேள்வியிலும், போரிலும் அரிய செயல் களைச் செய்யத் தூண்டுகிறது. மனம் அரிய திறமையும் பெரு மையும் கொண்டு மாந்தர் அந்தக்கரணமாக விளங்குகிறது. இந்த எனது மனம் அதர்மத்தை அறவே நீத்து, என்றும் அறமே புரிந்து சிவசங்கல்பமாயிருக்க அருள்!

5. இறைவா! இம்மனம் சிறந்த ஞானக் களஞ்சியம்; உணர்ச்சிக்கும் பகுத்தறிவிற்கும் இருப்பிடம். மாந்தருள் அழி வற்று நிலவுவது; இதுவே புலன்களுக்கு விளக்கு. மனமின்றி மனிதன் யாதும் செய்ய முடியாது. இந்த என் மனது துஷ்ட குணங்களை நீத்துத் தூய குணங்களையே விரும்பி, சிவசங்கல்ப மாயிருக்க அருள்!

6. ஹே ஜகதீச்வரா, உலகிறைவா, மனத்தினாலேதான் யோகிகள், சென்ற நிகழ் எதிர்கால நிகழ்ச்சிகளை அறிகின்றனர். அதுவே பரமாத்மாவுடன் அழிவற்ற ஜீவாத்மாவை இணைத்து முக்காலமும் அறியச் செய்கிறது. அதில் அறிவும் செயலும் நிலைகொண்டுள்ளன. ஐந்து ஞானேந்திரியங்களும் புத்தியும் அதில் இணைந்துள்ளன. அது ஆத்மாவுடன் கூடி நிற்கிறது. அதுவே யோக யக்ஞத்தை வளர்க்கிறது; இறைவா, இந்த என் மனது அஞ்ஞானத்துயரை நீத்து, யோக விக்ஞானமயமாக சிவ சங்கல்பமாக வருள்.

7. பரமாத்மனே, பரமேச்வரா! இரத நாபியில் ஆரைகள் இணைந்ததுபோல ருக், யஜுஸ், சாம வேதங்கள் மனதில் இணைந்துள்ளன; அதர்வணமும் அதிலேயே நிலைகொண் டுள்ளது. எல்லாம் அறிந்து, எங்கும் நிறைந்து, மக்களுள் சாக்ஷீ சேதனனுயிருக்கும் இறைவனை விளக்கும் எனது மனம், அவித்தையை விட்டு, என்றும் வித்யா ஞானத்தையே விரும்பி சிவசங்கல்பமாயிருக்க அருள்.

8. அனைத்தையும் அடக்கியாளும் இறைவா! 'குதிரையைக் கடிவாளம்போலும், கடிவாளத்தைச் சாரதிபோலவும், மனம் மனிதரை இங்குமங்கும் அலைவிக்கிறது. உள்ளத்தில் அது வீற்றிருந்து செயலாற்றலைத் தூண்டுகிறது. கதிகாட்டி வேக

மளிக்கிறது. எனது மனம் அதர்மத்தினின்று விலகி, அறவழி யில் சிவசங்கல்பத்துடன் செல்லவருள்!

अग्ने नय सुपथा राये अस्मान् विश्वानि देव वयुनानि विद्वान्।
युयोध्यस्मज्जुहुराणमेनो भूयिष्ठां ते नम उक्तिं विधेम ॥

(யஜுர் 40-16)

ஹே பரமாத்மனே, இன்பவள்ளலே, சுயம் ப்ரகாச ஸ்வரூபனே, எல்லாம் அறிபவனே, எம்மைச் சுப—வழியில் நடத்திப் பரிபூரண திவ்ய ஞானம் பெறச் செய். பொய்யும் தீமையுமான நெறியினின்று எம்மைத் தனித்து வைப்பாயாக! எம்மைத் தூய்மையாக்கு! அதற்காக உன்னைப் பணிந்து போற்றுகிறோம்.

मानो महान्तमुत मा नोऽर्भकं मा न उक्षन्तमुत मा न उक्षितम्।
मानो वधीः पितरं मोत मातरं मानः प्रियास्तन्वो रुद्र रीरिषः ॥

(யஜுர் 16-15).

ஹே ருத்ரா! (தீயர் தீமைக்கேற்றப் பலனைத் தந்து அவர்கள் வருந்தச் செய்யும் பரமா). எங்களைச் சேர்ந்த சிறியோர், பெரியார், தாய் தந்தையர், அன்பான உறவினர் கரு, உடல்களை அழிக்காமல் பாதுகாத்தருள். உனது தண்டனைக்குள்ளாக்காமல் நன்னெறியில் எம்மை நடத்தியருள்.

असतो मा सद्गमय तमसो मा ज्योतिर्गमय मृत्योर्माऽमृतं गमयेति ॥

(சதபதம் 14, 8, 1, 30.)

பரம குருவான பரமாத்மனே! நீ எங்களைப் பொய் வழி யினின்று மெய்வழிக்கு, சன்மார்க்கத்திற்கு நடத்து; மடமை யிருளினின்று அறிவொளிக்கு நடத்து; சாவு நோவுகளினின்று அமரானந்த சுதந்தரத்திற்கு நடத்து.

பரமனின் நற்குணங்களைப் போற்றி செய்வது சகுணோ பாஸனை; அவனைக் குணரகிதனாக, தீய குற்றங் குறை களினின்று விலகித் தியானிப்பதே நிர்க்குணோபாஸனையாகும். துதியுடன் ஒழுக்கம் வேண்டும். நல்லறிவுக்காக இறைவனை வேண்டுவோன் அதற் கேற்ற பயிற்சிகளைச் செய்யவும் வேண்டும். முறையீட்டின் கருத்தை நிறைவேற்ற முயல வேண்டும். புருஷார்த்த சித்திக்காகப் பாடுபடவேண்டும். ஒரு முயற்சியுமில்லாமல் இவ்வாறு முறையிடக்கூடாது.

"ஹே பரமேச்வரா! என் பகைவரை அழி; என்னை எல்லாரையும்விடப் பெரியவனாக்கு; என்னை எல்லாரும் வணங்கட்டும்; எல்லாரும் எனக்கு அடிமையாகட்டும்..." இவ்வாறு இரண்டு சத்துருக்கள் ஒருவர் நாசத்திற்கு ஒருவர் பிரார்த்தனை செய்தால், இறைவன் இருவரையும் நாசம் செய்து விடுவாரா என்ன? அன்பு அதிகமாயுள்ளவர் முறையீடு நிறைவேறும் என்று சிலர் சொல்லலாம். அப்படியானால் பக்தி குறைந்தவன் எதிரி அந்தக் குறைந்த அளவிலாவது நாசமடையவேண்டுமே. இத்தகைய மூடப் பிரார்த்தனைகள் எழுந்தால், "ஹே பரமேச்வரா! எங்களுக்கு ரொட்டித் தட்டி ஊட்டு; எங்கள் வீட்டைக் கூட்டு; வேட்டித் துவைத்துக் கொடு; வயலை உழு, தோட்டம்போடு" என்று கூடப் பரம் பொருளை ஏவத் தொடங்குவார்கள். இவ்வாறு பரமேசன் மேல் பாரம் போட்டு, அவனை வேலை ஏவவிட்டுச் சும்மா இருக்கும் சோம்பேறிகள் முழு மடையராவார்கள். 'சுறுசுறுப்பாக வேலை செய்' என்பது பரமன் ஆணை; அதை மீறினவர் இன்புறமாட்டார்.

कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेच्छतꣳ समाः । (யஜுர் 40-12.)

பரமன் ஆணையிடுகிறான்:— மனிதன் நூறு ஆண்டுகள் அதாவது ஆயுள் முழுவதும் தொழில் செய்தே பிழைக்க வேண்டும்; சோம்பல் கூடவே கூடாது. படைப்பில் எத்தனை உயிர்கள் உள்ளன; அத்தனையும் தத்தம் வினையை முயற்சியைச் செய்தே வாழ்கின்றன. எறும்பு முதலியன எப்போதும் உழைக்கின்றன. பூமியும், கிரகங்களும் சதா சுழல்கின்றன. மரஞ் செடிகள் வளர்ந்து முதிர்கின்றன; அழிகின்றன. மனிதன் இவற்றினின்றும் பாடம் கற்கவேண்டும். தன் முயற்சியாளனுக்குப் பிறர் உதவியும் கிடைப்பது போல, அறநெறியாளனுக்கு ஆண்டவன் துணை செய்கிறான். உழைக்கும் யஜமானனுக்குச் சேவகர் நன்றாக உழைப்பார்; சோம்பேறிக்கன்று. கண் காணப் பிரியமுள்ளவனுக்கே காட்சிகள் காட்டலாம்; குருடனுக்கன்று. அதே மாதிரி எல்லாருக்கும் நலங்கோரினாலே இறைவன் அருளுவான்; பிறர் தீமையைக் கோரும் பிரார்த்தனை பலிக்காது. வெல்லம் 'இனிப்பு இனிப்பு' என்றால் அவனுக்கு வெல்லமும் கிடைக்காது, வெறும் வாயும் இனிக்காது. முயற்சி செய்பவனுக்கே விரைவாக அல்லது நிதானமாக வெல்லம் கிடைக்கும்.

இனி மூன்றாவது உபாஸனை.

समाधिनिर्धूतमलस्य चेतसो निवेशितस्यात्मनि यत्सुखं भवेत् ।
न शक्यते वर्णयितुं गिरा सदा स्वयन्तदन्तःकरणेन गृह्यते ॥
(உபநிஷத்.)*

உபாசனைப் பற்றி உபநிஷத்து சொல்லுவதாவது: சமாதி யோகத்தால் அவித்யாதி மலங்கள் ஒழிந்தவன், ஆத்மஸ்தனுகிப் பரமாத்மனிடம் சித்தம் லயித்தவன், அவன் அனுபவிக்கும் பரமாத்மயோக சுகத்தை வாயுரையால் வர்ணிக்கமுடியாது. ஏனெனில் ஜீவாத்மா அந்தப் பரம சுகத்தை அந்தக்கரணத்தால் அனுபவிக்கிறது.

உபாசனை என்ருல் அருகே அமர்தல் என்று பொருளாகும். அஷ்டாங்க யோகத்திஞல் பரமாத்மனை அணுகலாம்; அவனை எங்கும் நிறைந்தவன், உள்ளத்தான் என்றுணரலாம். இந்த ப்ரத்யக்ஷானுபூதிக்கு வேண்டிய சாதனங்களைத் தீவிரமாகச் செய்யவேண்டும்.

பதஞ்ஜலியோக ஸூத்ரம் சொல்லுவதாவது:

तत्राऽहिंसासत्यास्तेयब्रह्मचर्यापरिग्रहा यमाः ॥
(சாதனபாதம் 30)

உபாசகனுக்கு ஆரம்பப்படிகள் இவையே (1) யாரிடமும் பகை கூடாது; எல்லாரிடமும் அன்பாயிருக்க வேண்டும். (2) உண்மையே பேசவேண்டும்; ஒருக்காலும் பொய் சொல்லக் கூடாது. (3) திருடக் கூடாது; நேர்மையாக நடக்கவேண்டும். (4) காமத்தை அடக்கி ஜிதேந்திரியனுக வேண்டும். (5) எதிலும் அபிமானம் வைக்காது ஆசையை அடக்கவேண்டும். இந்த ஐந்து ஒழுக்கமும் உபாஸனுயோகத்தின் முதல் அங்கமாகும்.

शौचसन्तोषतपःस्वाध्यायेश्वरप्रणिधानानि नियमाः ॥
(சாதனபாதம் 32)

நியமம் ஐந்தாகும்: (1) விருப்பு வெறுப்பு ஒழிவதால் அகத்தூய்மை, நீராட்டுதலால் புறத்தூய்மையுறல். (2) அறவழி முயற்சி; அதில் நன்மை வந்தால் மகிழ்ந்து போகாமல், தின்மை வந்தால் சோர்ந்து போகாமல் எப்போதும் சோர்வின்றி அகமகிழ்வுடனிருத்தால், ஸந்தோஷம். (3) என்ன வந்தாலும் மனங்கலங்காமல், இன்ப துன்பங்களைப் பொறுத்து அதர்மத்தை விடுத்து தர்மசாதனமே செய்தல், தவம் (4) எப்போதும்

* மைத்ராயணிய—4-3-9

உண்மையான நூல்களைக் கற்றல், கற்பித்தல், சத்புருஷர் சங்கம், பரமாத்ம நாமமான ஓங்காரத்தைப் பொருளறிந்து தினம் ஜபித்தல்—இவை ஸ்வாத்யாயமாகும். (5) ஜீவாத்மாவைப் பரமாத்மனுக்கே அர்ப்பணித்தல் கடவுள் வணக்கம்.

இந்த ஐந்தும் சேர்ந்து உபாஸன யோகத்தின் இரண்டாம் படியான நியமமாகும். மற்ற ஆறு அங்கச் சாதனங்களெல்லாம் யோக சாஸ்திரத்தில் அல்லது நாம் எழுதிய ருக்வேதாதி பாஷ்ய பூமிகாவிற் கண்டு கொள்க.

உபாஸனை செய்ய விரும்புவோர், தூய தனி இடத்தில் ஆஸனம் போட்டமர்ந்து, பிராணாயாமம் செய்க; புற விஷயங்களிலிருந்து இந்திரியங்களைத் தடுத்து, மனதை நாபி, இதயம், கழுத்து, கண், உச்சி அல்லது முதுகெலும்பின் ஓரிடம் உறுதியாக ஊன்றி, ஆத்ம-பரமாத்ம விவேசனம் செய்து, பரமாத்மாவை ஸம்யமத்தால், ஆழ்ந்த தியான சமாதியால் கலந்திடுக. இந்தச் சாதனத்தால் ஆத்ம சுத்தியும் அந்தக்கரண சுத்தியும், எய்தி, ஸத்ய தர்சனத்தில் பூரணம் கனியும். தினம் ஞானமும் விஞ்ஞானமும் (அறிவும் தெளிவும்) பெருகி, முத்தி சித்திக்கிறது. இருபத்து நான்கு மணி நேரத்தில் ஒரு மணியாவது இவ்வாறு தியானோபாஸனை செய்பவன், எப்போதும் உன்னத நிலையடைகிறான்.

இறைவனை முற்றறிவு ஆகிய குணங்களால் வழிபடுதல் ஸகுணோபாசனை; சப்தம், ரூபம், ரஸம், கந்தம், ஸ்பர்ஸம் ஆகிய குணமில்லாது, ஆத்மாவின் உள்ளும் புறமும் அதி சூக்ஷ்ம நிறைவாக உபாஸித்து, பரமேசனிடம் உறுதியாக நிலைத்தலே நிர்குணோபாஸனையாகும்.

இதன் பலன்: குளிரால் நடுங்குகிறவன் தீயண்டை போனதும், குளிர் விட்டுச் சூடு பிறக்கிறது. அதுபோல் பரமேசன் அருகே சென்றதுமே, துக்க தோஷங்களெல்லாம் விலகி, பரமாத்ம குண கர்ம சுபாவங்களைப் போலவே, ஜீவாத்ம குணகர்ம சுபாவங்களும் பரிசுத்தமாகின்றன. இதனால் அவசியம் பரமேசன் துதி பிரார்த்தனைகளைச் செய்ய வேண்டும். இதைவிட மற்றொரு பலனுண்டு. அதாவது ஆத்ம பலம் மிகப் பெருகும். இதனால் துக்கம் வந்தால், முன் போல் பதறாமல் பொறுக்கும் சக்தியுண்டாகும். இது சாமான்யமா? பரமனைத் துதி பிரார்த்தனை உபாஸனை

செய்யாதவன், நன்றிகெட்ட மூர்க்கனுவான். இந்த உலகில் உயிர்களின் சுகத்திற்கே எல்லாப் பொருள்களேயும் அளித்த அந்த இறைவனே மறத்தல், பரமேசனே மதியாது துதியா திருத்தல் நன்றிகெட்ட மடமையேயாகும்.

வினு: பரமேசனுக்குக் கண், காது முதலிய உறுப்புக்கள் இல்லேயே; எனில் அவன் இந்திரியங்கள் செய்யக்கூடிய காரியங்களே எப்படிச் செய்கிருன்?

விடை:

अपाणिपादो जवनो ग्रहीता पश्यत्यचक्षुः स शृणोत्यकर्णः।
स वेत्ति वेद्यं न च तस्यास्ति वेत्ता तमाहुरग्र्यं पुरुषं पुराणम् ॥

(ஸ்வேதாஸ்வதரம் 3-19)

உபநிஷத் கூறுகிறது: பரமேச்வரனுக்குக் கை இல்லே; ஆனுல் சக்திவடிவான கையால் அனைத்தையும் அமைக் கிருன், ஏற்கிருன்; கால்கள் இல்லே; எனினும் எங்கு மிருப்பதால் அனைத்தினும் வேகவானு யிருக்கிருன்; கண்ணில்லே ஆனுல் அனைத்தையும் நன்ருகப் பார்க்கிருன்; காதில்லே எனினும் எல்லார் பேசுவதையும் கேட்கிருன்; அந்தக்கரணம் இல்லே; ஆனுல் உலகையெல்லாம் அறி கிருன்; அவன் பெருமையை, எல்லேயை அறிவார் இல்லே. அவன் அனைத்தினும் பழம்பொருள், பரம்பொருள், பூரணன், எங்கும் நிறைந்தவன். ஆதலால் அவனேப் புருஷன் என்பர். அவன் தனது வல்லமையால், இந்திரியங் களாலும் அந்தக்கரணத்தாலும் நடக்கும் தொழில்களேச் செய்கிருன்.

வினு: பலர் அவனே நிஷ்க்ரியன், வினேயிலி, நிர்குணன் என்பதேன்?

விடை:

न तस्य कार्यं करणं च विद्यते न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते।
परास्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च ॥

(ஸ்வேதாஸ்வதரம் 6-8)

உபநிஷத்து வாக்காவது: "பரமாத்மா (காரியம் செய்ய) எவ்வித மாறுதலும் அடைவதில்லே; அவர் தொழில் செய்ய உபகரணங்களும், சாதனங்களும் தேவையில்லே. அவருக்கு

ஒப்பும் உயர்வும் எதுவுமில்லை. அவர் சர்வோத்தம சக்திமான். அவரிடம் அளவற்ற அறிவும் திறனும் தொழிலும் இயல்பாகவே உண்டு. அவர் நிஷ்க்ரியரானால், செயலற்றவரானால் உலகின் ஆக்கம், நிலைப்பு, நீக்கம் ஆகிய முத்தொழில் நடக்காது. அவர் எங்கும் நிறைவு, அறிவு; சைதன்யம்; அவரிடம் செயல்வீறு உண்டு.

வினா: அவர் செயல் புரிவாரானால் அவர் செயல் அந்தமா அனந்தமா? எல்லையுள்ளதா, எல்லையற்றதா?

விடை: தேச காலங்களில் எவ்வளவு தகும் என்று நினைக்கிறானோ, அவ்வளவு செய்கிறான் பரமன். அதில் மிகை குறையில்லை. ஏனெனில் அவன் வித்துவான், முற்றறிஞன்.

வினா: பரமேசன் தன் அந்தத்தை அறிவாரா, இல்லையா?

விடை: பரமாத்மா பூரண ஞானி. பொருளின் இயல் நிலையை உள்ளபடி அறிவதே, அறிவு என்பர். பரமேசன் அனந்தன்; ஆதலால் தன் அனந்தத்தை அறிவதே அறிவு; அதற்கு மாறானது அஞ்ஞானம், மடமை. அந்தத்தை அனந்தமாகவும், அனந்தத்தை அந்தமாகவும் கருதுதல் மனமயக்கமாகும். यथार्थदर्शनं ज्ञानमिति ॥ யதார்த்த தரிசனமே ஞானம். எதற்கு எவ்வாறு குண கர்ம சுபாவம் அமைந்ததோ, அவ்வாறே அறிதல் ஞானம், விஞ்ஞானம் ஆகும்; அதற்கு மாறானது அஞ்ஞானம்.

## கடவுள் விளக்கம்

பதஞ்ஜலியோக சூத்திரம் சொல்லுகிறது:

क्लेशकर्मविपाकाशयैरपरामृष्टः पुरुषविशेष ईश्वरः ॥

(யோக சூத்திரம்-சமாதிபாதம் 24)

அஞ்ஞானம், துயரம், துக்கம், நலம், தீது, விருப்பு, வெறுப்பு இரண்டின் கலப்பு ஆகிய பலனைத் தரும் கர்மவாசனைகளினின்றும் விலகிய பரம புருஷன், ஈசுவரன்.

வினா: சாங்கிய சாத்திரம் சொல்லுவதாவது:

ईश्वरासिद्धेः ॥ 1 ॥ (சாங். 1-12)

प्रमाणाभावान्न तत्सिद्धिः ॥ 2 ॥ (சாங். 5-10)

सम्बन्धाभावान्नानुमानम् ॥ 3 ॥ (சாங்க்யம். 5-11)

இறைவன் உள்ளதைக் கண்ணுக்கு நேரே காட்ட முடியாது (1); அவ்வாறு பிரத்யக்ஷமாகக் காட்ட முடியாவிடில் அனுமானாதிப் பிரமாணமும் இயலாது (2) வியாப்தி; சம்பந்தம் இல்லாததால் அனுமானாதிகளும் விளக்க முடியாது. பிரத்யக்ஷ அனுமானாதிகளில்லாததால் சப்தாதிப் பிரமாணமும் செல்லாது. ஆதலால் கடவுள் இருப்பதை உறுதிப் படுத்தி விளக்க முடியாது (3).

விடை: அப்படியில்லை. இச்சூத்திரங்களின் பொருள் வேறு. ஈசுவரன் இருப்பதற்குப் பிரத்யக்ஷ பிரமாணம் இல்லை என்பதே, இச்சூத்திரங்களின் கருத்து. அவன் இந்த உலகின் உபாதான காரணனுமில்லை. புருஷ விலக்ஷணன் ஆன இறைவன் பரிபூரணன், பரமாத்மன். ஆகவே அவன் புருஷன் எனப்படுகிறான். உடலுள் வசித்திருப்பதால் ஜீவனுக்கும் புருஷன் எனப் பெயர். அதே அத்தியாயத்தில் சாங்கிய சாத்திரமியற்றிய கபிலர் கூறுகிறார்:

प्रधानं शक्तियोगाच्चेत्सङ्गापत्तिः ॥ 1 ॥

सत्तामात्राच्चेत्सर्वैश्वर्यं ॥ 2 ॥

श्रुतिरपि प्रधानकार्य्यत्वस्य ॥ 3 ॥

(ஸாங்க்யம் அ. 5-8, 9, 12)

புருஷன் பிரதான சக்தியுடன் கலந்திருந்தால், பரமன் கூட்டுப் பொருளான பற்றாகிவிடும். அதாவது பிரகிருதி சூக்ஷ்மாணுக்களுடன் கூடிக் காரியப் படுகிறதைப்போல், பரமனும் சூக்ஷ்ம ரூபத்திலிருந்து தூல உருக்களாக மாற வேண்டியிருக்கும். ஆனால் அதுபோல் இறைவன் மாறுவதில்லை; அவன் தூலவுருக் கொள்வதில்லை. ஆதலால் பரமன் உலகின் உபாதான காரணனில்லை; நிமித்தக் காரணன் (1). பரமேசன் சர்வ சக்திமான்; பூரண ஐஸ்வரியன். அவன் தனது சேதன சக்தியிலிருந்தே உலகை உண்டாக்கி யிருந்தால், அதுவும் பூரண ஐஸ்வர்யமயமாயிருக்க வேண்டும்; அப்படியில்லை. ஆதலால் பரமன் உலகின் உபாதான காரணன் இல்லை; நிமித்தக் காரணனே யாவான் (2). உபநிஷத்தும் பிரதானமான பிரகிருதியே உலகின் உபாதானகாரணம் என்கிறது (3).

अजामेकां लोहितशुक्लकृष्णां बह्वीः प्रजाः सृजमानां स्वरूपाः ।

(ஸ்வேதாஸ்வதரம் 4-5)

பிறப்பற்ற பிரகிருதி ஸத்வ, ராஜஸ, தாமஸ குணமுள்ளது. அதுவே பரிணமைப்பட்டுப் பல பொருள் வடிவமாகிறது. புருஷனுக்குப் பரிணமமில்லை, உருமாற்றமுமில்லை. அவன் எப்போதும் கூடஸ்தன், தன்னிலையன், நிர்விகாரியா யிருப்பவன். ஆதலால் சாங்கிய கர்த்தாவான கபிலாச்சாரியாரை நிரீச்வரவாதி என்பவனே நிரீஸ்வரவாதி. கபிலாச்சாரியார் நிரீஸ்வரவாதி யில்லை.

மீமாம்ஸம் தர்மம், தர்மி (இறைவன்) பற்றியும், வைசேஷிகம் ஈசனைப் பற்றியும், நியாயம் ஆத்மா பற்றியும், பேசும். இவை நிரீச்வர வாதமில்லை. ஏனெனில் எங்கும் நிறைந்து, எல்லாம் அறிந்த, தர்மகுணமயனை (अतति सर्वत्र व्याप्नोतीत्यात्मा) எல்லா வுயிர்களுக்கும் ஆத்மாவான பொருளையே மீமாம்ஸம், வைசேஷிகம், நியாயம் முதலியன ஈசனைக் கருதுகின்றன.

வினு: ஈசன் அவதரிக்கிருனு இல்லையா?

விடை: இல்லை. ஏனெனில் யஜுர்வேதம் अज एकपात् । (34–53) सपर्यगाच्छुक्रमकायम् ॥ (40–8) அவன் பிறப்பதில்லை, அவன் எங்கும் பரவிய சுத்தன், உடலிலி—என்னும் இத்தகைய வாக்குகளால் பரமேச்வரன் பிறப்பதில்லை என்பது தெளிவு.

வினு: கீதையில் ஸ்ரீ கிருஷ்ணன்

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥

(பகவத்கீதை, அத். 4-7)

'எவ்வப்போது அறம் குன்றி அதர்மம் ஓங்குகிறதோ, அவ்வப்போது நான் அவதரிக்கிறன்' என்கிருனே?

விடை: இது வேதத்திற்கு முரண்; ஆகவே இதைப் பிரமாணமாக ஏலோம். தர்மாத்மா கண்ணன் அறங்காக்க யுகத்திற்கு யுகம் பிறந்து, தீயரை அழித்து, சிறந்த நல்லோரைக் காப்பேன் என்ருல் குற்றமில்லை. ஏனெனில் परोपकाराय सतां विभूतयः। பரோபகாரத்திற்கே ஸத்புருஷர் உடல், பொருள், மனம் எல்லாம் அர்ப்பணிக்கின்றனர். ஆனல் ஸ்ரீகிருஷ்ணன் ஒருக் காலும் கடவுளாக முடியாது.

வினா: அப்படியானல் இறைவன் இருபத்து நான்கு அவதாரம் எடுக்கிறன் என்பதை மக்கள் ஒப்புவதேன்?

விடை: வேத ஞானமில்லாத வகுப்பு வாதிகளின் உளறல், அவிவேகம்—இவற்றல் மயக்க வலேயில் பட்டு, மக்கள் இப்படி பொய்களை நம்புகிறர்கள்.

வினா: கடவுள் அவதரிக்கா விட்டால் கம்ஸ ராவணுதி துஷ்டர் எப்படி நலிவர்?

விடை: முதலில் பிறந்தவன் இறப்பது உறுதி. இரண்டாவது கடவுள் முன் கம்சனும், ராவணனும் ஒரு புழுபோல்வர். அவதார சரீரமில்லாமலே ஈச்வரன் உலகை ஆக்கி, அளித்து, நீக்கிட வில்லேயா? அவர் சர்வ வ்யாபியாதலால் கம்ஸ ராவணுதி சரீரத்திலும் பூரணமாகக் குடி கொண்டிருக்கிறர்; விரும்பிய போது அவர்கள் மர்மத்தைச் சோதித்துக் கொல்ல முடியும். அனந்த குண கர்ம சுபாவயுக்தரான பரமாத்மா ஓர் அற்ப மனிதனைக் கொல்ல, நரவுடலெடுத்து, ஜனன மரணத்திற்கு உள்ளா வதாம்! விந்தை! அப்படிச் சொல்லுகிற மாக்கள் அறிவிலி முட்டாள்கள் என்றே சொல்ல வேண்டும். பக்தர் உய்வுக்குப் பரமன் அவதரிக்கிறன் என்பதும் சரியன்று. பரமன் ஆணைப்படி நடக்கும் பக்தரை உய்விக்க அவனுக்குத் திறமையுண்டு. இயற்கை, யுலகம், சூரிய சந்திராதிகளைப் படைத்துக் காத்து அழிக்கும் சர்வேச்வரனுக்கு, கம்ச ராவணுதி வதமும், கோவர்த்தன கிரியை எடுப்பதும் ஒரு பெரிய காரியமா என்ன? கடவுளின் சிருஷ்டி அற்புதங்களை நினைப்பவருக்கு அவனுக்கு இணை யாரும் இல்லே, இருக்கப் போவதுமில்லே—"न भूतो न भविष्यति" என்பது தெரியும். யுக்தி மூலம் பார்த்தாலும் கடவுளுக்குப் பிறப்பில்லே. எல்லேயற்ற ஆகாசம் கல்பத்தில் நுழைந்தது; கைப்பிடியில் இருந்தது என்றல், அது மெய்யாகாது. ஏனெனில் ஆகாசம் அனந்தம், எங்கும் நிறைந்தது. ஆகாசம் வெளியே வருவதில்லே, உள்ளே செல்வதில்லே. அதேமாதிரியே எல்லேயற்ற, எங்கும் நிறைந்த பரமாத்மனுக்கும், என்றும் போக்கு வரவு, பிறப் பிறப்பு இருக்க முடியாது. தான் இல்லாத இடத்தில் போக்கு வரவு சாத்தியம். கடவுளென்ன கர்ப்பத்தில் முன்பே இல்லேயா? அதற்குப் புறத்தும் இல்லேயா? அவர் ஏன் உள்ளே போய் வெளியே

வரவேண்டும். அறிவற்றவர்களே இறைவனைப் பற்றி இப்படி நினைப்பர், புகல்வர். ஆதலால் கடவுளுக்குப் போக்கு வரத்தும், பிறப்பிறப்பும் ஒருக்காலும் இருக்க முடியாது. இயேசு (Jesus Christ) முதலியோரும் ஈசன் அவதாரமில்லை என்பதை அறிக. ஏனெனில் அவர்களும் ராக த்வேஷம், பசிதாகம், பயம், சோகம், துக்கம், சுகம், ஜனன மரணுதி குணங்களைக் கொண்ட மனிதர்களே.

**வினு:** ஈசன் பக்தருக்குப் பாப மன்னிப்புத் தருகிருனு இல்லையா?

**விடை:** இல்லை, ஏனெனில் பாபத்தை மன்னித்தால் அவரது நியாயம் பழுதாகும். மனிதரெல்லாம் மகா பாபிகளாவார்கள். ஏனெனில் மன்னிப்பு உண்டு என்பதை அறிந்ததுமே அவர்கள் பயமில்லாமல் உற்சாகமாகப் பாபம் செய்வார்கள். ஓர் அரசன் ஒரு குற்றவாளியைச் சும்மா மன்னித்து விட்டு விட்டால், அவன் உற்சாகமாக மேன் மேலும் பெரிய பெரிய பாபக் குற்றங்களைச் செய்வான். ஏன்? அரசனிடம் கூழைக் கும்பிடு போட்டு நடித்தால் மன்னித்து விடுவான் என்ற எண்ணத்தால், அவனைப் பார்த்து, குற்றமற்றவரும் கூசாமல் குற்றமும் பாபமும் செய்யத் தொடங்குவார்கள். ஆதலால் வினைக் கேற்ற பலன் கொடுப்பதே பரமன் செயலாகும்; குற்றத்தை மன்னிப்பதன்று.

**வினு:** ஜீவன் சுதந்திரனு, பரதந்திரனு?

**விடை:** ஜீவன் தனது கடமை செய்வதில் சுதந்திரன். அதன் பலனை அனுபவிப்பதில் தெய்வ நியதிக்கு உட்பட்ட பரதந்திரன். எவன் தன்னுரிமையுடன் செயல் புரிகிருனே அவனே கர்த்தா—"स्वतन्त्रः कर्त्ता"* என்பது பாணினி வியாகரண உண்மை.

**வினு:** 'சுதந்திரன்' என்ருல்?

**விடை:** உடல், உயிர், பொறிபுலன் உட்கரணம் எல்லாம் யார் சுயாதீனத்தில் உள்ளதோ, அவனே சுதந்தரன். ஆத்மா சுதந்தரனுயில்லாது போனுல் புண்ணிய பாபப் பலன்களை நுகர முடியாது. சேவகன் எசமானைப் பணிகிருன்; சேனை வீரர் சேனுதிபதியைப் பணிந்து அவன் ஆணைப்படியே போரில் பலரை கொல்லுகிருர்கள்; அவர் அபராதிகளல்லர்.

அதேமாதிரி பரமன் ஆதீனத்தில் அவன் ஆணையால் செயல் புரிந்தால், ஜீவன் பாப புண்ணிய பலன்களில் கட்டுப் பட மாட்டான். பலத்தை நுகர்பவன் பரமன் ஆவான். சுவர்க் கம் நரகம் என்னும் இன்ப துன்ப நுகர்வும் பரமேசனையே சேரும். உதாரணமாக ஒரு பலவான் தனது வாளால் இன் னொருவனைக் கொல்லுகிறான். கொலையாளியைப் பிடித்துத் தண்டிக்கிறார்கள்; வாளையன்று. அவ்வாறே பராதீனமான ஜீவன் பாப புண்ணியத்தை நுகர்வதில்லை. இதனால் தனது திறமைக்கேற்ற முயற்சியில் ஜீவன் சுதந்தரமாயிருக்கிறது; அது பாபம் செய்தால், அது தெய்வதண்டனைக்குள்ளாகும். ஆதலால் வினைபுரிதல் சுதந்தரம், பாவத்தால் வரும் துன்பத்தை வருந்துவதில் ஜீவன் பராதீனமாயிருக்கிறது.

**வினா:** பரமனே ஜீவனைப் படைத்து, அதற்குத் திறமையும் தராவிட்டால், அதனால் எதுவும் செய்யமுடியாது; அதனால் பரமன் இச்சையாலேதான் ஜீவன் செயல் புரிகிறது அல்லவா?

**விடை:** ஜீவன் உற்பத்தி செய்யப்படடதில்லை; அதுவும் ஈசனைப் போல், உலகின் உபாதான காரணமாகிய மூலப் ப்ரகிருதி போல் அனாதியாகும். ஜீவனின் உடலும், புலன் களும் பரமனால் ஆக்கப் பெற்றவை; ஆனால் அவை ஜீவா தீனம். மனோ வாக்கு காயத்தால் செய்யும் கர்ம பலனை அனுபவிப்பவர், செய்பவரே; இறைவனில்லை. உதாரண மாக ஒருவன் மலையிலிருந்து இரும்பு எடுத்தான்; அந்த இரும்பை ஒரு வியாபாரி வாங்கினான்; அதை ஒரு கருமான் வாங்கி வாள் செய்தான்; அவனிடமிருந்த வாளை ஒரு சிப்பாயி வாங்கிச் சென்று, அதனால் ஒருவனைக் கொன்று போட்டான். இப்போது தண்டனை யாருக்கு? இரும்பு உற்பத்தி செய்தவனுக்கோ, எடுத்த வனுக்கோ, வாள் வடித்த கருமானுக்கோ, வாளுக்கோ அன்று; வாளினால் கொலை செய்த சிப்பாயிக்கே அரசன் தண்டனை தருவான். இதே மாதிரி, சரீராதிகளை உற்பத்தி செய்யும் பரமன் அவற்றின் கர்மபலனை நுகர்வதில்லை; ஜீவனையே அனு பவிக்கச் செய்கிறான். கடவுளே கர்மத்தைச் செய்வதானால், எந்த ஜீவனும் பாபம் செய்ய முடியாது. ஏனெனில் பரமேசன் சுத்தன், தார்மீகன்; ஆதலால் எந்த ஜீவனையும் பாபம் செய்யத் தூண்டமாட்டான். ஆகவே தன் வினை

செய்வதில் ஜீவன் சுதந்தரனே. ஜீவன் தனது வேலையில் சுதந்தரமாயிருப்பது போலவே பரமன் தனது வேலையில் சுதந்தரமாயிருக்கிருன்.

வினு: ஜீவன், ஈசன்—இருவரின் சொரூபம் என்ன? குண கர்ம சுபாவம் என்ன?

விடை: இரண்டும் சேதன சொரூபம், அறிவுரு. இரண்டும் இயல்பில் தூயன, அழிவற்றன, அறத்தன்மையன. ஆனல் படைத்தல், காத்தல், அழித்தல், அனைத்தையும் முறைப் படுத்தல், ஜீவரின் பாப புண்ணிய பலன்களைத் தருதல் முத லானவை பரமேசனின் தார்மீக கர்மங்களாகும். பிள்ளைப் பேறு, மரபை வளர்த்தல், சிற்பம் முதலிய கலைகளைப் பரவச் செய்தல் ஜீவ வினையாகும். அது நல்லதுமாகும் பொல் லாததுமாகும். ஈசனுக்கு நித்தியஞானம், ஆனந்தம், அனந்தபலம் ஆகிய குணங்களுண்டு. ஜீவன் குணங்கள்:

इच्छाद्वेषप्रयत्नसुखदुःखज्ञानान्यात्मनो लिङ्गमिति ॥

(ந்யாயம் 1; 1; 10)

प्राणापाननिमेषोन्मेषमनोगतीन्द्रियान्तरविकाराः ।
सुखदुःखेच्छाद्वेषौ प्रयत्नाश्चात्मनो लिङ्गानि ॥

(வைசேஷிகம் 3; 2; 4)

(இச்சா) பொருளடைவில் விருப்பம், (த்வேஷம்) துன்பத்தில் வெறுப்பு (ப்ரயத்னம்) முயற்சி (சுகதுக்கம்) இன்ப துன்ப வுணர்ச்சி, (ஜ்ஞானம்) ஞானம்—இவை ஜீவன் குணங்க ளென்பது நியாய சூத்திரம் சம்மதம்; வைசேஷிகத்திற்கும் இவை பொது. ஆனல் வைசேஷிகத்தில் (ப்ராண) பிராணனை உயிர்த்தல், (அபான) அபானனை விடுத்தல், (நிமேஷ) கண்ணிமைத்தல், (உன்மேஷ) கண்மலர்த்தல், (மன) நான் என்ற நினைவும் அகங்காரமும், (கதி) சலனம், செல்லல், (இந்த்ரிய) புலன்களை அடக்கி நடத்தல், (அந்தவிகார) பசி தாகம், மகிழ்ச்சி, சோர்வு முதலிய உள்விவகாரம்—இவையும் ஜீவாத்ம குணங்களாகும். இக்குணங்களே அதைப் பரமாத்மாவினின்றும் வேறுபடுத்துவன. ஜீவாத்மா ஸ்தூல வஸ்துவன்று; அது புலன்களுக்கு எட்டாதது. இக்குணங் கள் இருப்பதனல் ஆத்மாவின் இருப்பை அறிகிருேம். ஆத்மா உடலில் இருக்குமட்டுமே இக்குணங்கள் விளங்கும். ஜீவாத்மா உடலை உதறிச் சென்ருல், இக் குணங்களும்

உடலில் இராவர்ம். பொருளைச் சார்ந்தே குணம் விளங்கும். பொருள் மறைந்தால் அதன் குணமும் மறையும். குணம் அதை ஒட்டியதே. விளக்கும் சூரியனும் இருந்தால் வெளிச்சம் உண்டு. ஒளி அவற்றின் தன்மை. அவை யின்றி ஒளி யில்லை. அவ்வாறே கடவுளும் ஆன்மாவும் குணங்களால் அறிவாகும்.

**வினா:** பரமேசன் முக்காலும் அறிந்தவன், அதனால் எதிர்கால நிகழ்ச்சிகளையும் அறிவான், அவன் எப்படி நிச்சயிக்கிருனே அப்படியே ஜீவனும் நடக்கும். அதனால் ஜீவனுக்குச் சுதந்தரமில்லை; ஜீவனின் பாப காரியங்களுக்காக ஈசன் தண்டனை தரமுடியாது. ஏனெனில் தனது திரிகால ஞானத்தால் ஈசன் தீர்மானிக்கிற படியே ஜீவனும் நடக்கிறது.

**விடை:** இறைவனை முக்கால ஞானி என்பது மூடத்தனமாகும். ஏனெனில் வந்து சென்றதே இறந்த காலம்: இனி வருவதே எதிர்காலம் என்பர். இறைவனுக்கு வந்து சென்ற ஞானம் இனி வரும் ஞான மென்பதுண்டோ? பரமேசன் ஞானம் எப்போதும் ஏகரசம், அழியாதது, பிரிவற்றது உள்ளபடி யிருப்பதாகும். இறந்த எதிர் காலங்கள் ஜீவர்களுக்கேயாம். ஜீவரின் கர்மம் பற்றிப் பேசும்போது இறைவனை முக்கால அறிவன் என்பர். இயல்பாக அவ்வாறில்லை. ஜீவன் சுதந்தரமாகச் செய்வது போலவே, இறைவனும் சுதந்தரமாக அறிகிருன். இறைவன் அறிந்தபடியே ஜீவனும் செயல் புரிகிறது. அதாவது இறைவன், சென்ற, நிகழ், வரும் காலமெல்லாம் அறிவதிலும் கர்மப்பலனளிப்பதிலும் சுதந்தரன். ஜீவனே சிற்றறிவன்; நிகழ்காலமே சிறிது அறிவான்; தனது வினை புரிதலில் சுதந்தரன். ஈச ஞானம் அனுதி; அது கர்மத்தையும் அறியும்; அதற்கேற்ற தண்டனை விதிக்கவும் அறியும். இருவகையறிவும் அதற்கு உண்டு. கர்மஞானம் உண்மையானல் தண்ட ஞானம் பொய்யாகுமா? ஆதலால் இதில் ஒரு தோஷமும் இல்லை.

**வினா:** ஆத்மா உடலில் (பரவியுள்ளதா) ஒன்று அல்லது தனித்தொரு இடத்தில் உள்ளதா?

**விடை:** தனித்துள்ளது. எல்லா உடலிலும் ஒரே ஜீவாத்மா பரவியிருந்தால் விழிப்பு, துயில், சுஷுப்தி (ஆழ்ந்த உறக்

கம்), ஜனன மரணம், ஸம்யோகம், வியோகம், சேர்க்கை, பிரிவு, போக்கு வரவு முதலியன ஒருக் காலும் நிகழாவாம். ஜீவன் சிற்றறிவு, சிற்றியல்புடையது. அது நுண் பொருள், சூக்ஷ்ம வஸ்து. பரமன் சூக்ஷ்மத்திலும் அதி சூஷ்மன், அனந்தன், ஸர்வக்ஞன், ஸர்வவியாபி. ஜீவன் வியாப்யம்; பரமன் வியாபகன், ஜீவனில் பரமன் வியாபித்துள்ளான். இதுவே இரண்டிற்கும் உள்ள உறவாகும்.

வினு: ஓரிடத்தில் ஒரு வஸ்து இருக்கும் போது மற்றொரு வஸ்து புக முடியாது. அதனுல் ஜீவேஸ்வரர் ஸம்யோக சம்பந்த முடையவர்; வ்யாப்ய வியாபக சம்பந்த மன்று.

விடை: சமநிலைப் பொருள்களுக்கு இந்த விதி பொருந்தலாம். வேற்று நிலைப் பொருள்களுக்கன்று. இரும்பு ஸ்தூலம், மின்சாரம், தீ, சூக்ஷ்மம். மின்சாரம் இரும்பில் பரவி அதே இடத்தில் இருக்கிறது. ஜீவாத்மாவை விடப் பரமாத்மா அதி சூக்ஷ்மமானது. அதனுல் பரமாத்மா வியாபகன்; ஜீவன் வியாப்யமாகும். சேவகன் எசமான், ஆதாரம் ஆதேயம்; சுவாமி தொழுபவன், அரசன் பிரஜைகள், தந்தை தனயன் உறவும், ஜீவ-ஈசருக்குப் பொருந்தும்.

வினு: ஜீவனும் ஈசனும் வெவ்வேருனல்.

प्रज्ञानं ब्रह्म ॥ 1 ॥ [ஞானம் கடவுள்] (ஐதரேய 5-3)

अहं ब्रह्मास्मि ॥ 2 ॥ [நானே ப்ரஹ்மம்] (ப்ரஹதாரண்யக 1-4-10)

तत्त्वमसि ॥ 3 ॥ [அதுவே நீ] (சாந்தோக்யம் 6-8-7)

अयमात्मा ब्रह्म ॥ 4 ॥ [ஆத்மா ப்ரஹ்மம்] (மாண்டூக. 2)

என்ற மஹா வேதவாக்கியங்களின் பொருள் என்ன?

விடை: இவை வேத வாக்கன்று. இவை பிராமண கிரந்தங்களின் வாக்கு. இவை மஹா வாக்கியம் என்று சத்திய சாஸ்திரங்களில் எழுதப்படவில்லை. இவற்றின் பொருளாவது: அஹம்=நான், ப்ரஹ்ம=பிரம்மத்தில், அஸ்மி= இருக்கிறேன். இது தத்ஸ்ய உபாதி—ஒன்றில் அடங்கிய பொருளைக் குறிக்க அந்த ஒன்றையே குறிப்பது. ஊர்க் காவலின் கூவல் என்கிறோம். காவல் கூவுவதில்லை; காவலரே கூவுகின்றனர். காவல் என்பது காவலரைக் குறிக்கும். அவ்வாறே அஹம் பிரம்பம் என்பதற்குப்

பொருள் அறியவேண்டும். சிலர் எல்லாந் தான் பிரம்மத்தில் உள்ளது; ஜீவனை மட்டும் குறித்துச் சொல்லுவதில் என்ன விசேஷம் என்று கேட்கின்றனர். எல்லா வஸ்துக்களும் பிரம்மத்தில் இருப்பது மெய்தான்; ஆனால் ஜீவன் அதே தர்ம யுக்தமானது, தெய்வத் தன்மையுள்ளது. மற்ற வஸ்துக்களைவிடப் பரமனுக்கு அருகே இருப்பது. ஜீவனுக்குப் பிரம்ம ஞானமும், முக்தியில் ஸாக்ஷாத்கார ஸம்பந்தமும் உண்டு. ஜீவன் பிரம்மத்தின் முன்னிலையிலிருக்கும். அதனால் ஜீவன் பிரம்மத்துள் இருப்பதாகும். ஜீவனுக்கும் பிரம்மத்திற்கும் ஸஹகாரி ஸம்பந்தமே; ஆகவே ஜீவனும் பிரம்மமும் ஒன்றல்ல. நானும் அவனும் ஒன்று, என்று இரண்டு நண்பர் அன்பினால் கூறுவர். அதுபோல் ஸமாதிஸ்தனான ஜீவன் தீவிரமான அன்பில் ஆழ்ந்து நானும் பிரம்மமும் ஒன்று என்னலாம். அதாவது ஒரே இடத்தில் அவிரோதியாய் இருக்கிறோம் என்பதாகும். பரமேசன் குண கர்ம சுபாவம்போல் தனது குண கர்ம சுபாவங்களையும் தெய்வத் தன்மையாக்கிய ஜீவன், ஸாதர்மியத்தால் ஒத்த தன்மையால், பிரம்மத்துடன் ஒருமைப் பட்டதாகச் சொல்லலாம்.

**வினா:** சரி. அப்படியானால் தத் (அதுவாகிய பிரம்மமாக) த்வம். (நீ), அஸி (இருக்கிறாய்). 'ஹே ஜீவனே! நீயே அந்த பிரம்மம்' என்ற வாக்கியத்திற்கு என்ன பொருள் கொள்கிறீர்.

**விடை:** 'தத்' (அது) என்ற சொல்லுக்கு என்ன பொருள் கொண்டாய்?

**வினா:** பிரம்மம்.

**விடை:** அது 'பிரம்மம்' என்பது எவ்வாறு அறிந்தாய்?

**வினா:** सदेव सोम्येदमग्रं आसीदेकमेवाद्वितीयं ब्रह्म ॥ இதன் பூர்வ வாக்கியத்திலிருந்து.

**விடை:** நீ இந்த சாந்தோக்ய உபநிஷத்தைப் பார்த்தது கூட இல்லை யெனத் தெரிகிறது. சரியாகப் பார்த்திருந்தால் 'பிரம்ம' சப்தத்தின் பாடமே அதில் இல்லை யென்று உணர்வீர். ஏன் புனைந்துரைக்கிறீர்? சாந்தோக்யத்தின் சரியான பாடம் இதுதான்:

सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम् ॥ (சாந்தோக். 6-2-1)

'ப்ரம்ம' சப்தமே அந்த வரியில் இல்லையே.

**வினு:** சரி. அப்படியானல் 'தத்' சப்தத்திற்கு என்ன பொருள் கொள்கிறீர்?

**விடை:**

स य एषोणिमा। ऐतदात्म्यमिदꣳ सर्वं तत्सत्यꣳ स आत्मा तत्त्वमसि श्वेतकेतो इति ॥ (சாந்தோக். 6-8-7)

அந்தப் பரமாத்மனே அறியத் தக்கவன். அவன் மிக நுட்பமானவன். அவனே இந்த உலகிற்கும் உயிர்களுக்கும் ஆத்மா. அவன் ஸத்ய ஸ்வரூபன். தானே தன் ஆத்மா. அன்பு மகனே, சுவேதகேதுவே! அதை அறி. तदात्मकस्तदन्तर्यामी त्वमसि ॥ அந்தப் பரமாத்மா அந்தர்யாமியுடன் நீ கூடி நிற்கிருய். அது உன்னிலும் உள்ளது, என்பதே உபநிஷத்திற்கு முரணில்லாத விளக்கம். ஏனெனில் ப்ரஹதாரண்யத்தில் மஹர்ஷி யாக்ஞவல்கியர் தன் மனைவி மைத்ரேயிக்குச் சொல்லுகிருர்: "ஹே மைத்ரேயி,

य आत्मनि तिष्ठन्नात्मनोन्तरोऽयमात्मा न वेद यस्यात्मा शरीरम्।
आत्मनोन्तरो यमयति स त आत्मान्तर्याम्यमृतः ॥

(ப்ரஹதாரண்யகம்)

"பரமேசன் ஆத்மாவில், ஜீவனில் இருக்கிருர். ஆனல் அவர் ஜீவாத்மனிடமிருந்து தனித்தவர். பரமாத்மா தம்முள் இருப்பதை, மூட ஜீவாத்மா அறியாது. உடலில் உயிர்போல், உயிரில், ஜீவனில் பரமாத்மா விளங்குகின்ருர். ஜீவாத்மாவில் இருந்தே, அதனின்றும் தனித்திருந்து, அதன் புண்ய பாபங்களுக்குச் சாட்சியாய், அவற்றின் பலன்களை ஜீவனுக்குத் தந்து, அதை நியமப்படுத்தி வைக்கிருர். அந்த அழிவற்ற சொரூபமே உன்னுள், உன் ஆத்மாவில் பரவி நிற்கிறது. அதை அறிந்து கொள்". இந்த வாக்கியத்திற்கு வேறு பொருள் யாராவது சொல்ல முடியுமா? "अयमात्मा ब्रह्म" என்பதற்குப் பொருள் இதுவே. சமாதி நிலையில் யோகிக்குப் பிரம்மம் உணர்வாகிறது. அப்போது என்னுள் வியாபித்த இதே பிரம்மமே, அனைத்துள்ளும் வியாபித்திருக்கிறது என்கிருன். இதிலிருந்து இந்தக்

கால வேதாந்திகள் ஜீவப்ரம்ம ஏகத்வம் பற்றிப் பேசுகிறார்கள்; ஜீவனையும் பிரம்மத்தையும் ஒன்றாக்குகிறார்கள். அவர்கள் வேதாந்த சாஸ்திரத்தை அனுபவித்து அறியாதவர்கள்.

வினா: பகவான் சொல்லுகிறார்:

अनेन आत्मना जीवेनानुप्रविश्य नामरूपे व्याकरवाणि ॥

(சாந்தோக். 6-3-2)

तत्सृष्ट्वा तदेवानुप्राविशत् । (தைத்ரீயம்-ப்ரம்மான-6)

நான் உலகையும் உடலையும் படைத்து, உலகெல்லாம் பரவி நிற்கிறேன். ஜீவரூபமாக உடலிற் புகுந்து பல நாம ரூப பேதங்களில் விளங்குகிறேன் (சாந்தோக்யம்)

பரமேசன் உலகையும் உடலையும் ஆக்கி அவற்றுட் புகுந்துறைகிறான் (தைத்தீரியம்).

இப்படிப்பட்ட சுருதிகளுக்கு வேறு பொருள் செய்வதெப்படி?

விடை: பதம், பதவுரை, வாக்கியப் பொருள் விளக்கம், இவைகளை நீ அறிந்தால் இப்படிப் பொருள் கொள்ள மாட்டாய். இங்கே பிரவேசம், அனுப்ரவேசம் (பின் பிரவேசித்தது) என்று இரண்டு பதங்கள் உண்டு. ஒருவர் பிரவேசித்தப் பிறகே இன்னொருவர் அனுப்ரவேசமாவார். உடலில் ஜீவாத்மா புகுந்த பிறகு பரமன் புகுந்துறைகிறான்; வேதத்தின் மூலம் நாம ரூப வித்தையெல்லாம் விளக்குகிறான். உடலில் ஜீவனைப் புகுத்திப் பிறகு அதனுள் தானும் அனுப்ரவேசிக்கிறான். "அனு" என்பதன் பொருளையறிந்தால் உனக்கு இந்த விபரீதமான தப்பர்த்தம் தோன்றாது.

வினா: सोऽयं देवदत्तो य उष्णकाले काश्यां दृष्टः स इदानीं प्रावृट्समये मथुरायां दृश्यते ॥ "கோடையில் காசியில் பார்த்த தேவதத்தனை, மாரியில் மதுரையில் கண்டேன்" என்கிறான் ஒருவன். இதில் காசி, கோடை, தேசம் காலம் இரண்டையும் விட்டு ஆளைமட்டும் கருதினால், தேவதத்தன் இருப்பது மட்டும் தெளிவாகிறது. இந்தப் பொது முறைப்படி ஈஸ்வரனிடம் பரோக்ஷம், தேசம் காலம் மாயை உபாதிகளை விடுத்து, ஜீவனிடம் தேசம் காலம் அவித்தை சிற்றறிவு

களின் உபாதிகளை விடுத்து, சேதனத்தை மட்டும் குறிப்பாகக் கொண்டால், இரண்டிலும் பொதுத் தன்மைகளையே கருதினால், இரண்டிலும் பிரம்மம் இருப்பது உறுதியாகிறது. பாகத்யாக லக்ஷணப்படி (பொதுக் குணங்களை ஏற்று வேறு பாடான பாகத்தை ஒதுக்கல்) ஈசனிடமிருந்து எல்லா மறிதல் முதலிய குணங்களையும், ஜீவனிடமிருந்து சிற்றறிவு முதலியனவற்றையும் விலக்கினால், சேதனத்தை மட்டுமே லக்ஷியமாகக் கொண்டால், அத்வைத சித்தி கிடைக்கிறது. இதற்கு என்ன சொல்வீர்?

**விடை:** நீர் முதலில் ஜீவ—ஈசரை நித்தியம் என்று நினைக்கின்றீரா? அனித்தியமென்று?

**வினா:** இரண்டும் உபாதியில் பிறப்பதால் அநித்தியம் என்றே கருதுகிறேன்.

**விடை:** அந்த உபாதி நித்யமா அநித்யமா—என்ன நினைக்கிறாய்?

**வினா:** எங்கள் நம்பிக்கையில்:

जीवेशौ च विशुद्धाचिद्विभेदस्तु तयोर्द्वयोः ।
अविद्या तच्चितोर्योगः षडस्माकमनादयः ॥ 1 ॥
कार्य्योपाधिरयं जीवः कारणोपाधिरीश्वरः ।
कार्य्यकारणतां हित्वा पूर्णबोधोऽवशिष्यते ॥ 2 ॥

இந்த சுலோகங்கள் 'ஸம்க்ஷேப ஸாரீரக' பாஷ்யம். இவைகளின் காரிகைகளில் உள்ளன. வேதாந்திகளாகிய நாங்கள் ஆறு பதார்த்தங்களை அநாதி என நம்புகிறோம். அவையாவன: 1. ஜீவன் 2. ஈசன் 3. ப்ரஹ்மம் 4. ஜீவேசருக்குள்ள விசேஷ பேதம் 5. அவித்யா அக்ஞானம் 6. அவித்தைக்கு சேதனத்திற்கும் உள்ள சம்பந்தம். ஆனால் பிரம்மமே ஆதியந்தமற்றது; மற்றவை ஆதியற்றவை, அந்தமுள்ளவை; பிராக்பாவத்தைப் போல் (தற்போதிருந்து பிற்போது இல்லாதவை) அக்ஞானம் உள்ள வரையில், இந்த ஐந்தும் இருக்கும். இந்த ஐந்தின் ஆதி தெரியவில்லை; அதனால் அநாதி. ஞானம் வந்ததும் இவை ஒழியும். ஆதலால் இவை அழி பொருள்கள் எனப்படும்.

**விடை:** நீ கூறிய இரண்டு சுலோகங்களும் பிசகானவை. ஏனெனில் உன் மதப்படி அவித்தையுடன் சேராத

ஜீவனும், மாயையுடன் கூடாத இறைவனுமில்லை. "नचिचतोपरि:". நீ கருதிய ஆறுவது பொருளும் இல்லை. ஏனெனில் அந்த அவித்தை—மாயை இரண்டும், ஜீவன்—ஈசன் இரண்டிலும் கலந்தொழிகின்றன மாயை வித்தை இரண்டின் சேர்க்கையில்லாமல் இறைவன் உண்டாவதில்லை. பிறகு ஈசுவரனை அவித்தையினின்றும், பிரம்மத்தினின்றும் தனித்தெண்ணுதல் வீணாகிறது. ஆதலால் உமது சித்தாந் தத்தில் பிரம்மம், அவித்தை ஆகிய இரண்டு பொருள் களே உறுதிப்படுகின்றன; ஆறன்று. ஈச்வரனும் ஜீவனும் கார்யோபாதி, காரணோபாதிகளால் சித்தமாகின்றன என் கிறீர். அனந்த, நித்ய, சுத்த, முக்த சுபாவமான சர்வ வியாபி பிரம்மத்தில், அஞ்ஞானம் உண்டென்று விளக்கி னாலே, உன் சித்தாந்தம் பலிக்கும். ஒரே இடத்தில் தன்னைச் சார்ந்த, தன் விஷயமான அக்ஞானம் அனாதியாக பிரம்மத் தில் இருப்பதாகக் கருதினால், பிரம்மம் சுத்தமாயிருக்க முடியாது. மேலும் அக்ஞானம் ஒரே இடத்தில் இருப்ப தென்றால், அது பரிச்சின்னமாதலால் இங்கு மங்கும் வந்து போய்க்கொண்டே யிருக்கும். எங்கெங்கே அது செல் கிறதோ அங்கங்கே உள்ள பிரம்மமும் அஞ்ஞானியாகும்; எங்கிருந்து போகிறதோ அங்கங்கே பிரம்மம் ஞானியாகும். ஆதலால் எந்த இடத்திலும் பிரம்மம் அனாதி, சுத்த ஞான மயமானது என்று சொல்ல முடியாது. அஞ்ஞான எல்லைக் குள்ளிருக்கும் பிரம்மம் அஞ்ஞானத்தை அறியும். உள்ளும் புறமும் உள்ள பிரம்மம் இரண்டு வகைப்படும், அக்ஞான யுக்தமானது, அக்ஞான ரஹிதமானது. இப்படிப் பிரிப்ப தால் பிரம்மத்திற்குப் பழுதில்லை என்பாயா. அப்போது பிரம்மம் அகண்டமாயிருக்க முடியாது. அக்ஞானமும், விபரீத ஞானமும் குணமானதால், ஒரு பொருளின் நித்திய சம்பந்தத்தினாலேயே இருக்க முடியும். சமமான சம்பந்தத் தால் அநித்தியமாகவும் இருக்க முடியாது. மேலும் உடலில் ஓரிடம் புண்ணானால் உடல் முழுதும் துன்புறுகிறது. பிரம்மத்திற்கு ஓரிடம் அக்ஞானம், சுக துக்கக் கிலேசாதி கள் நேர்ந்தால், பிரம்மம் முழுதையும் அவை பாதிக்கும். அந்தக்கரண உபாதியால் பிரம்மம் ஜீவனாகிறது என் பாயா? நான் கேட்கிறேன்! பிரம்மம் எங்கும் பரவியதா? எல்லைக் குட்பட்டதா? அது எங்கும் பரவியது. உபாதியால் பரிச்சின்னமானது. அதாவது ஓரிடமிருப்பது, ஒவ்வொன்றி

லும் தனித்தனியாயிருப்பது என்பாயாளுல் அந்தக் கரணம் அலேகிறதா இல்லேயா?

வேதாந்தி: அலேகிறது.

தயானந்த்: அந்தக் கரணத்துடன் பிரம்மமும் அலே கிறதா அல்லது நிலேப்பாயிருக்கிறதா?

வேதாந்தி: நிலேப்பாயிருக்கிறது.

தயானந்த்: அப்போது அந்தக் கரணம் விடும் இடத்தில் பிரம்மம் மெய்ஞானமும், அந்தக் கரணம் தொடும் இடத்தில் சுத்தப் பிரம்மம் அஞ்ஞானமும் அடைகிறது. அதாவது ஒரு நொடி ஞானி, ஒரு நொடி அஞ்ஞானியாகிறது. இதனுல் பந்த மோக்ஷமும் நொடிப் பொழுதில் மாறும். ஒருவன் கண்டது கேட்டதை இன்னெருவன் நினைப்பதற்கு முடியாதது போலவே, நேற்றுக் கண்டது கேட்டதை இன்று நினைப்பது முடியாது. ஏனெனில் தான் கண்டு கேட்ட இடம் காலம் வேறு; தான் நினைத்துப் பார்க்கும் இடம் காலம் வேறு.

பிரம்மம் ஏகம் ஆனுல் ஏன் எல்லாம் அறியாது? அந்தக் கரணம் துண்டு துண்டாயிருக்கிறது; பிரம்மமும் தனித் தனியா யிருக்கிறது என்பாயா? அந்தக் கரணம் ஜடம்; அதில் அறிவு இல்லே. கேவலம் பிரம்மமோ அந்தக்கரணமோ ஞான நிலேய மில்லே; அந்தக் கரணத்துடன் கூடிய சிதாபாஸமே ஞானமா கிறது; அதுவும் சேதனமே. அந்தக்கரணத்தின் மூலம் ஞான மாக விளங்குகிறது என்ருல் அது ஏன் கண் மூலம் மிகச் சிற்றறி வைப் பெற்றிருக்கிறது? இதனுல் காரணோபாதி காரியோபாதி களின் கூட்டுறவால் பிரம்மம், ஜீவன், ஈசன் இவைகளே நிரூபிக்க முடியாது. பிரம்மத்தின் பெயரே ஈசுவரன். பிரம்மத்தி னின்று வேருக, அனுதியாக, இயல்பாக, உண்டாக்கப்படாமல் அமிர்த ஸ்வரூபமாக ஜீவிக்கும் பொருளின் பெயரே ஜீவன். சிதாபாஸத்தின் பெயரே ஜீவன் என்ருல் அது க்ஷணபங்குரம்; ஆதலால் அழிக்கத்தக்கது. ஏனெனில் மோக்ஷ சுகத்தை யார் புசிப்பது? ஆதலால் பிரம்மம் ஜீவனுவதில்லே; ஜீவனும் பிரம்ம மாவதே யில்லே; ஆகப்போவதும் இல்லே.

வினு: அப்படியானுல்

“सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयं” (சாந்தோக்யம் 6-2-1)

"அருமை மகனே! முதலில் இருந்தது ஒன்றே; கடவுளே பிறிதில்லை" என்று சாந்தோக்யம் சொல்லும் அத்வைதம் எப்படி சித்திக்கும்? எங்கள் மதப்படி பிரம்மத்தினும் வேறில்லை. தன் இனம், பிறிதினம், தன் அங்கப்பகுதி எதுவும் இல்லை. ஒரே அபேத ப்ரம்மமே உண்டு. ஜீவன் வேறு என்றால் அத்வைத சித்தி எப்படி முடியும்?

விடை: இந்த மயக்கத்தில் விழுந்து அஞ்சுவதேன். விசேஷ்ய விசேஷண சம்பந்தமான அறிவைப் பெறு; அதன் பயன் என்ன? (வ்யாவர்த்தகம் விசேஷணம் பவதீதி) விசேஷணம் பேதப்படுத்திக் காட்டுகிறது என்று சொல்வீரானால், (ப்ரவர்த்தகம் ப்ரகாசகமபி விசேஷணம் பவதீதி) பேதத்தைக் காண்பிப்பதோடு, அது சொல்லை விளக்கப்படுத்துகிறது என்றும் சொல்லலாமே. ஆதலால் மேற்சொன்ன வாக்கில் அத்வைதம் என்பது பிரம்மத்திற்கு அடைமொழி, விசேஷணம். அநேக ஜீவ-தத்துவங்களிலிருந்து பிரம்மம் தனித்தது என்பது அடைமொழியின் கருத்து; பிரம்மம் ஒன்றே என்பது விளக்கம். எவ்வாறெனில்

"अस्मिन्नगरेऽद्वितीयो धनाढ्यो देवदत्तः"

"अस्यां सेनायामद्वितीयः शूरवीरो विक्रमसिंहः" ॥

"இந்நகரின் ஒரே செல்வன் தேவதத்தன்", "இச் சேனையில் சூரவீரன் விக்ரமசிங்கன் ஒருவனே; அவனுக்கு நிகரில்லை" என்ற உதாரண வாக்கியங்களைக் காண்க. இதன் கருத்தென்ன? இந்த நகரில் தேவதத்தனைவிடச் செல்வனில்லை; இச்சேனையில் விக்ரம சிங்கன் போலச் சூர வீரனில்லை என்பதாம். ஆனால் தேவதத்தனை விடக் குறைவான செல்வர், விக்கிரம சிங்கை விடக் குறைவான வீரர் உண்டு, என்பதை அது மறுக்கவில்லை. அதே மாதிரியே ஜீவனும், பிரகிருதியும் பிரம்மத்திற்குச் சமானமில்லை; அதனினும் குறைந்தவை. இதனின்று எப்போதும் பிரம்மம் ஒன்றே, ஜீவனும் இயற்கையும் பல பான்மையன—என்பது உறுதியாகும். இவற்றினின்று பிரம்மத்தைத் தனிபடுத்தி, பிரம்மத்தின் ஒருமையை, ஒப்புயர்வின்மையை விளக்கவே, அத்வைதம் அல்லது அத்விதீயம் என்ற அடைமொழி வழங்கப்பெற்றது. இதனால் ஜீவனோ, இயற்கையோ, காரியரூபமான ஜகத்தோ அபாவம் என்பதன்று; இல்லை என்பதன்று; எல்லாம் உண்டு, உண்மை. ஆனால் பிரம்

மதத்திற்குச் சமான மன்று என்பதே கருத்து. இதனால் அத்வைதத்திற்கோ துவைத்ததிற்கோ பாதகம் உண்டாவதில்லை. பதறுமல் இதைச் சிந்தித்து அறிந்துகொள்ளலாம்.

வினு: பிரம்மம் சத்து, சித்து, ஆனந்தம்; ஆத்மாவுக்கும் இருக்கை, விளக்கம், அன்புருவம் உண்டு. இரண்டும் ஒன்றே என்பதை மறுப்பதேன்?

விடை: அதே தன்மைகள் சிறிது இருந்தால் ஒன்ருகி விட முடியாது. மண்ணும் சடம்; நீரும் நெருப்பும் ஜடத் தோற்றம். எனில் இவை ஒன்ருயிருக்க முடியாது. இவற்றின் தன்மைகள் வெவ்வேருகும். மண் மணம் வரட்சி, கடினம் கொண்டது; நீர் தண்மை, ரஸம், மென்மை கொண்ட திரவம். அக்னி ரூபம் எரிப்பு ஆகிய தன்மை கொண்டது; இவற்றுள் ஒருமையில்லை. மனிதனும், புழுக்களும் கண்ணல் காணல், வாயால் உண்ணல், காலால் நடத்தல் உண்டு; ஆனல் இரண்டும் ஒன்றன்று; வடிவில் வேறு. மனிதனுக்கு இரண்டு கால், எறும்புக்குப் பல கால். இப்படியே பார்த்துக்கொள்ளவும். பரமேச்வரனுக்கு அனந்த ஞானம், ஆனந்தம், பலம், கிரியாசக்தி உண்டு; அவன் குற்றமற்றவன்; அவன் எங்கும் வியாபித்தவன். ஜீவன் சிற்றறிவு, அற்ப பலம், சிற்றுரு, சிற்றியல்புள்ளது; குற்றம் நிறைந்தது, மட்டுப்பட்டது. அதனல் பிரம்மத்தினிடமிருந்து வேறுபட்டது; பிரம்மமும் ஜீவனும் ஒன்ருகாவாம். இரண்டின் சொரூபமே வெவ்வேறு. பரமன் அதிசூக்ஷ்மன்; ஜீவன் பரமனைவிடக் கொஞ்சம் ஸ்தூலமானது.

வினு:

अथोदरमन्तरं कुरुते ।

अथ तस्य भयं भवति द्वितीयाद्वै भयं भवति ॥

இது ப்ரஹதாரண்ய (1–4–2) வசனம். "பிரம்மத்திற்கும் ஜீவனுக்கும் சிறிது பேதம் கற்பித்தாலும், ஒருவன் பயத்திற்குள்ளாகிருன். ஏனெனில் பயம் தன்னின்று அன்று; பிறிதினின்று வருகிறது. இது ஜீவ ப்ரம்ம ஒருமையைக் காட்டவில்லையா?

விடை. இதன் அர்த்தம் இதுவில்லை; சரியான பொருளைக் கேள்: பரமேச்வரனை மறுத்து அல்லது தேச கால பரிச்

சின்னன் என்று எல்லேப்படுத்தி, அவனது குண கர்ம ஸ்வ பாவத்திற்கு எதிராக நடக்கும் ஜீவன், பிறரைப் பகைக்கும் ஜீவன், பயத்திற்கு உள்ளாகிறது. "இறைவனுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்" என்பது, ஒரு மனிதனேப் பார்த்து அலக்ஷியமாக "உன்னே மதியேன்; நீ என்ன செய்துவிட முடியும்" என்பது போலாம். பிறருக்குத் தீங்கு செய்தல், பிறரைத் துன்புறுத்தல்—இவற்ருல் ஒருவனுக்குப் பயம் உண்டாகிறது. மனமொத்தவர் அச்சமின்றி அன்புடன் ஒன்ருயிருப்பார்கள். தேவதத்தன், யக்ஞதத்தன், விஷ்ணு தத்தன்—மூவரும் ஒன்று என்கிரேம். அவர்கள் ஒத்த மனத்தவர் என்பது பொருள். இந்த மன ஒருமையே இன்ப வழி; ஒருமையற்ற மன வேறுபாடே துன்பமும் துயரமும் ஆகும்.

**விண:** பிரம்மமும் ஜீவனும் எப்போதும் ஒன்ருகவும், பலவாகவும், தனித்தனியே இருக்குமா? அல்லது எப்போதாவது ஒன்று சேருமா?

**விடை:** முன்பே இதற்கு ஒருவாறு விடை கூறினேம். ஸாதர்மியத்தால், ஒத்த தன்மையில் நெருங்கிய சம்பந்தமிருப்பதால் ஒருமை உண்டு என்னலாம். உதாரணமாக ஆகாசமும் ஒரு அணுப்பொருளும் அசேதனம். அந்த ஜட நுண்ணணு எப்போதும் ஆகாசத்தில் வசிக்கிறது; இரண்டும் ஒன்ருயிருக்கின்றன. ஆனல் ஆகாசம் எங்கும் பரவியுள்ளது, சூக்ஷ்மமானது, அருவானது, அனந்தமானது. ஜடம் கனம், அளவு, மட்டுள்ளது. இக்குணங்களால் இரண்டும் தனித்துள்ளன. ஆனல் ஜடம் ஆகாசத்திலிருந்து பிரிந்து வாழமுடியாது. அதன் இருப்பிற்கு ஆகாசம் அவசியமானது. இந்தச் சேர்க்கையால் இரண்டும் ஒன்று. ஆனல் ஒவ்வாக் குணங்களால் இரண்டும் வெவ்வேருகும். இதே மாதிரி ஜீவனும் பூமி முதலிய ஜடப்பொருள்களும், கடவுளேப் பிரிந்து நிலேத்திருக்க முடியாது. அவன் அவற்றுள் பரவி நிற்கிருன். இவ்வாறு அவை கடவுளுடன் ஒன்று; ஆனல் இயல்பால் வெவ்வேறு. ஒரு வீடு கட்டு முன்பு, மண், நீர், இரும்பு முதலிய கட்டிடச் சாமான்கள் தனித்தனியாக ஆகாசத்தில் இருந்தன. வீடு கட்டிய பிறகும் அவை ஆகாசத்திலேயே இருக்கின்றன. வீடு இடிந்து சாமான்கள் நாலுபுறமும் சிதறிப்போனலும், எல்லாம்

ஆகாசத்திலேயே இருக்கும்; அதாவது சுருங்கக் கூறின், முக்காலமும் அவை ஆகாசத்தினின்று பிரியாது. அதற்குரிய தனித் தன்மைகளால் ஒன்றாகவும் இருக்கமுடியாது. இது முக்காலும் உண்மை. இவ்வாறே ஜீவனும் உலகப் பொருள்களும் ஈச்வர வியாபக முடையன; அவை தனித்திருந்ததில்லை, இருக்கிறதில்லை, இருக்கப் போவதுமில்லை. அவ்வாறே அவை ஒன்றாகவும் இருக்க முடியாது. ஓரக் கண்ணன் தெருவின் ஒரு பக்கத்தையே பார்த்துச் செல்வது போல், தற்கால வேதாந்திகள் பரமனுக்கும் ஜீவனுக்கும் உள்ள தொடர்பைக் கவனிக்கிறார்களே யொழிய, வேறுபாட்டைக் கருதுவதில்லை. ஸகுண நிர்க்குணம், அன்வயம் (தொடர்பு), வ்யதிரேகம் (எதிரிடை), ஸாதர்மியம் (ஒத்த தன்மை), வைதர்மியம் (வேறுபாடு), விசேஷ பாவனை (தனிச்சிறப்பு) இவையில்லாத பொருள் உலகில் இல்லை.

வினா: பரமன் சகுணனா, நிர்குணனா?

விடை: இரண்டுந்தான்.

வினா: ஒரே உறையில் இரண்டு வாட்களை வைப்பதெப்படி? ஒரே பொருளில் உரு - அரு இரண்டும் எப்படிக் கூடும்?

விடை: ஜடத்திற்கு உருவம் முதலிய தன்மைகள் உண்டு; சேதனத்திற்கு ஞானம் முதலிய தன்மைகள் உண்டு. அவை ஜடத்திற்கு இல்லை. சேதனத்தில் இச்சாதி குணங்கள் உண்டு. ஜடத்திற்குரிய உருவம் இல்லை.

"यद्गुणैस्सह वर्त्तमानं तत्सगुणम्"

"गुणेभ्यो यन्निर्गतं पृथग्भूतं तन्निर्गुणम्"

குணங்களுடன் கூடியது ஸகுணம்; குணரஹிதமானது நிர்க்குணம். தத்தமக்குரிய தன்மைகளுடன் கூடிய எல்லாப் பொருள்களும் சகுணம்; நிர்குணமும் ஆகும். கேவலம் சகுணமோ நிர்குணமோ உள்ள பதார்த்தம் எதுவும் இல்லை. ஒவ்வொன்றிலும் சகுண நிர்க்குணங்கள் சேர்ந்தே யுள்ளன. அதேமாதிரியே பரமனும், அனந்த ஞானம், பலம் முதலிய குணங்களுடன் கூடியபோது சகுணம்; ஜடத்திற்குரிய ரூபம், ஜீவனுக்குரிய துவேஷாதி குணங்களின்மையால் நிர்க்குணம் என்பார்கள்.

**வினா:** உலகில் நிராகாரத்திற்கே நிர்க்குணம், உருவுள்ளதற்கு சகுணம் என்பர்; அதாவது பரமேஸ்வரன் பிறவாதபோது நிர்க்குணம், அவதரிக்கும்போது ஸகுணம், என்பர்.

**விடை:** இந்தக் கற்பனை அஞ்ஞானிகளும் அறிவிலிகளும் செய்தது. அறியா மக்கள் மிருகங்கள் போலக் கத்துகிறார்கள். ஸந்நிபாத ஜ்வரம் பிடித்த மனிதன் கண்டபடி பிதற்றுவதைப் போல், இந்த அறிவிலிப் பேச்சும் எழுத்துமாகும். இவை வீண்குப்பை என்று நினைக்கவும்.

**வினா:** பரமேச்வரன் விருப்பமுள்ளவரா, விரக்தரா?

**விடை:** இரண்டுமில்லை. ஏனெனில் விருப்பம் அல்லது ராகம், புறத்தே உன்னினும் சிறந்த பொருள்மேல் ஏற்படுவது. பரமேச்வரனுக்கு அன்னியமான உத்தமப் பொருள் இல்லை. ஆதலால் அவனுக்கு ராகமில்லை; ஆசையில்லை. இருப்பதைத் துறந்தவனே விரக்தன். ஈச்வரன் சர்வ வ்யாபியாதலால் எதையும் விட்டு நிற்க முடியாது. ஆதலால் அவன் விரக்தனல்லன்.

**வினா:** இறைவனுக்கு இச்சையுண்டா, இல்லையா?

**விடை:** நீர் நினைக்கும் இச்சையில்லை. ஏனெனில் இச்சை என்பது இல்லாததை அடைய விரும்புவது; தனக்கு இன்பத்தைத் தரும் உயர்ந்த பொருளைப் பெற விரும்புகிறது. ஈச்வரனிடம் இல்லாத பொருள் ஏது? அவன் அடையாத வஸ்து ஏது? அவன் சர்வோத்தமன், பூரணசுகி. வேறு சுகத்தின் அபிலாஷை அவனுக்கில்லை. ஆதலால் இறைவனுக்கு இச்சை இருக்க முடியாது. ஆனால் அவரிடம் எல்லாம் அறியும் தன்மையுள்ளது; ஆகவே அவர் ஈக்ஷணர். சகல சிருஷ்டிக்கும் நாயகர்.

இவ்வாறு ஈஸ்வர விஷயம் சுருங்கச் சொன்னோம். அறிவாளிகளுக்கு இது போதும்.

## வேதம்

இனி வேத விஷயத்தை எழுதுகிறோம்:

यस्मादृचो अपातक्षन् यजुर्यस्मादपाकषन् ।
सामानि यस्य लोमान्यथर्वाङ्गिरसो मुखम् ।
स्कम्भन्तं ब्रूहि कतमः स्विदेव सः ॥ (அதர். 10-23, 4-20)

ருக் வேதம், யஜுர் வேதம் சாம வேதம், அதர்வண வேதம் ஆகிய நான்கும், எந்தப் பரமாத்மனிடமிருந்து வந்தது? அந்தத் தேவன் யார்? அனைத்தையும் படைத்து வகித்து நடத்தும் பரம் பொருளே அவன்.

स्वयम्भूर्याथातथ्यतोऽर्थान् व्यदधाच्छाश्वतीभ्यः समाभ्यः ।

(யஜுர் 40-8)

அவன் சுயம்பு, ஸர்வவியாபகன், சுத்தன், ஸநாதனன், நிராகாரன், பரமேஸ்வரன். ஸநாதன ஜீவரூபமான பிரஜை களின் இன்பத்திற்காக, வேதத்தால் முறையாக அறிவை யெல்லாம் உபதேசிக்கிறான்.

**வினா:** பரமேஸ்வரனை நீர் உருவன் என்கிறீரா, அருவன் என்கிறீரா?

**விடை:** அருவனே என்கிறேன்.

**வினா:** அப்படியானால் வேதங்களை வாயில்லாமல் எப்படி உபதேசிக்க முடியும்? ஏனெனில் எழுத்தை உச்சரிக்க நாக்கும் அண்ணுக்கும் அவசியம் வேண்டுமே?

**விடை:** பரமேசன் சர்வசக்திமான்; சர்வவியாபகன். ஜீவர் களுக்கு வேத வித்தையை உபதேசிக்க அவனுக்கு வாய் போன்ற அவயவம் வேண்டியதில்லை. ஏனெனில் பிறருக்குச் சொல்லவே வாயும் நாக்கும் தேவை. தனக்குத் தெரிந்து கொள்ள அவை தேவையில்லை. வாய் நாக்கு ஆகிய உறுப்புக்கள் இல்லாமலே மனதில் அநேக விவகார விசாரங் களும், சப்தோச்சாரணங்களும் நடக்கின்றன. காதுகளை விரல்களால் மூடிக்கொண்டு கவனி. வாயும் நாக்கும் உதடும் இல்லாமலே, எத்தனையோ சத்தங்கள் உண்டாவதை உணர்வோம். அதேமாதிரி இறைவன் அந்தர்யாமியா யிருந்து ஜீவருக்கு உபதேசித்தார். மேலும் பிறருக்கு அறிவுறுத்தவே உச்சரிப்பு தேவை. பரமன் எங்கும் அருவாய் நிறைந்திருப்பதால், ஜீவனுள்ளிருந்தே ஜீவாத்மா வுக்கு நிலவச் செய்கிறான். பிறகே மனிதன் தன் வாயால் உச்சரித்துப் பிறருக்குச் சொல்லுகிறான். ஆதலால் நீ கடவுளுக்குக் கற்பிக்கும் தோஷம் செல்லாது.

**வினா:** பரமன் வேதத்தை எப்போது எந்த ஆத்மாவில் பிரகாசப் படுத்தினார்?

விடை :

अग्नेर्ऋग्वेदो वायोर्यजुर्वेदः सूर्यात्सामवेदः ॥ (சதபதம் 11-4-2-3)

சிருஷ்டி தொடக்கத்தில் பரமாத்மா, அக்னி, வாயு, சூரியன், அங்கிரஸ் ஆகியோருக்கு முறையே ருக், யஜுஸ், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களையும் உணர்த்தினர்.

வினா :

योवै ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै ॥ (ஸ்வேதாஸ்வதரம் 6-18)

இது உபநிஷத்து வாக்கு. இதன்படி பிரம்மாவுக்கே இறைவன் வேதத்தை உபதேசித்தார்; நீர் அக்னியாதி ரிஷிகளுக்கு என்கிறீரே?

விடை : பிரம்மாத்மாவில் அக்னியாதிகள் மூலம் உபதேசித்தார். மனு எழுதியிருப்பதைப் பாருங்கள் :

अग्निवायुरविभ्यस्तु त्रयं ब्रह्म सनातनम् ।

दुदोह यज्ञसिद्ध्यर्थमृग्यजुःसामलक्षणम् । (மனு 1-23)

பரமாத்மா ஆதியில் மனிதரைப் படைத்தார். பிறகு அக்னியாதி நான்கு ரிஷிகள் மூலம் பிரம்மாவுக்கு வேதம் அளித்தார். அந்தப் பிரம்மா அக்னி, வாயு, சூரியன், அங்கிரஸ் ஆதிரிஷிகளிடம் ருக், யஜுஸ், சாமம், அதர்வணம் ஆகிய வேதங்களை கிரகித்தான் என்று மனு சொல்லுகிறர்.

வினா : அந்த நால்வருக்கே வேதம் விளக்கி மற்றவருக்கு விளக்காதது பரமாத்மாவின் பக்ஷபாதம் அல்லவா?

விடை : இந்த நால்வரும் எல்லா ஜீவர்களைக் காட்டிலும் அதிக பரிசுத்தர்களாயிருந்தார்கள். ஆதலால் அவர்களுக்கு சுத்த வித்தையான வேதத்தை உபதேசித்தார் பரமாத்மா.

வினா : ஏதாவது ஒரு நாட்டு பாஷையில் உபதேசிக்காமல் சம்ஸ்க்ருதத்தில் ஏன் உபதேசித்தார்?

விடை : மற்ற தேச பாஷைகளில் விளக்கினல் பரமன் பக்ஷபாதியாவான். ஏனெனில் எந்த தேச பாஷையில் உபதேசிக்கிறரோ, அந்த பாஷை மக்களுக்கு வேதம் படிக்க எளிதாகும். பிறருக்குக் கடினமாகும். அதனலே தான் வேறெந்த பாஷையிலு மின்றி சம்ஸ்கிருதத்தில் விளக்கினர். வேத

பாஷையே மற்றெல்லாப் பாஷைகளுக்கும் மூலகாரணம். அதனாலே தான் அதில் வேதப் பிரகாசம் செய்தார். ஈசன் படைத்த பூமி முதலியவை எல்லா நாடுகளுக்கும் மக்களுக்கும் ஒன்றே; அவையே சில்பாதி வித்தைகளுக்கெல்லாம் காரணம். அதுபோல் பரமாத்ம வித்தைக்கும் ஒரே பாஷை வேண்டும்; அப்போது தான் சிறிது பயிற்சியினால் எல்லாரும் படிக்கவும் போதிக்கவும் முடியும். எனவே இறைவன் பக்ஷபாதியில்லை. சம்ஸ்கிருதம் எல்லா பாஷைகளுக்கும் மூலமாயிருக்கிறது.

**வினா:** வேதம் ஈசன் அருளியது, பிறர் செய்த தன்று என்பதற்கு அத்தாட்சி என்ன?

**விடை:** ஈசன் சுத்தன், எல்லாக் கலையும் அறிந்தவன், மாசற்ற குணமும் செயலும் இயல்பும் கொண்டவன், தயாளு; அவனது குண கர்ம சுபாவங்களைச் சொல்லும் வேதமும் ஈசன் அருளியதே; பிறர் செய்ததன்று. சிருஷ்டிக் கிரமம் (படைப்பு முறை) ப்ரத்யக்ஷாதி பிரமாணம், ஆப்தர்களான அறிஞர் உரை, சுத்தாத்மாக்களான ரிஷிகள் உரை ஆகியவற்றுள் மாறுபாடின்மை அல்லது முரண்பாடின்மை—இந்த லக்ஷணங்களுடன் கூடியது ஈச்வர வாக்காகும். ஈசன் அறிவு மாசற்றது; அதுபோல் மாசற்ற அறிவை விளக்குவதே அருள்வாக்கு. ஈசன் சிருஷ்டிக் கிரமம், காரியம், காரணம், ஜீவ தத்துவம்—இவற்றை உள்ளது உள்ளபடி சொல்லுவதே தெய்வ நூலாகும். பிரத்யக்ஷாதி ப்ரமாணம், சுத்தாத்மஸ்வபாவம்—இவற்றை முரணின்றி விளக்குவது வேதம் ஒன்றே. பைபிளில்லை, குரானில்லை—இதை பைபிள் குரான் பற்றிய 13வது 14வது பகுதியில் (அத்தியாயங்களில்) விவரமாகக் காணலாம்.

**வினா:** வேதம் ஈசனிடத்திலிருந்து வர அவசியமில்லையே; மனித அறிவே கிரமமாக மேன் மேலும் வளர்ந்து புஸ்தகம் எழுதுமே?

**விடை:** ஒருக் காலும் முடியாது. காரணமின்றிக் காரியமில்லை. சிருஷ்டி அதிசயங்களைப் பார்த்து, காட்டு மனிதன் புலவனாவதில்லை. இன்றும் கற்றலொழிய யாரும் புலவனாக முடியாது. சிருஷ்டியாதியில் ரிஷிகளுக்கு வேத வித்தையைக் கற்

பிக்கா திருந்தால் உலகெல்லாம் அறிவில்லாது போயிருக்கும். உதாரணமாக ஒரு குழந்தையைப் பிறந்ததிலிருந்தே தனியே ஓர் இடத்தில் அறிவிலிகள் அல்லது விலங்குகளிடையே விட்டு வைத்திருந்தால், சேர்க்கைக்குத் தக்கபடியே மாறிவிடும். பில்லர் போன்ற காட்டு மக்கள் இதற்கு உதாரணம். கல்வியறிவு ஆரியவர்த்தத்திலிருந்தே பரவியது. அதுகாறும் எகிப்து, யூனானி, (க்ரீஸ்) ஐரோப்பா முதலிய தேசங்களின் பூர்வீகரிடையே கல்வி மணமே கிடையாது. ஆயிரம் லக்ஷம் கோடிக்கணக்கான ஆண்டுகள் அமெரிக்காவில் காட்டுமிராண்டிகள் நிரம்பியிருந்தனர். கொலம்பஸும் ஆங்கிலேயரும் சென்ற பிறகே கல்வி யறிவு பெற்று அமெரிக்காவில் புலமை பொலிந்தது. இவ்வாறே மனிதரும் சிருஷ்டி ஆதியில் பரமாத்மனிடமிருந்து வித்தைகளைப் பெற்று, காலக் கிரமத்தில் வித்வான்களாகப் பொலிந்தனர். பதஞ்ஜலி யோக சூத்திரம் சொல்லுகிறது.

स पूर्वेषामपि गुरुः कालेनानवच्छेदात् ॥

(யோகசூத்திரம்-சமாதிபாதம் 26)

இந்தக் காலம் குருவிடம் படித்து நம்மவர் வித்வான்களாவது போலவே பரமேஸ்வரனிடம் படித்து அக்னி முதலிய ரிஷிகள், சிருஷ்டி காலத்தில் வித்வான்களானார்கள். ஜீவர்கள் சுஷுப்தியிலும், பிரளயத்திலும் அறிவுமழுங்கிப் போகிறார்கள். பரமாத்மா அப்படியாவதில்லை. அவரது ஞானம் நித்தியமானது. ஆதலால் நிமித்தமின்றி, காரணமின்றிக் காரியம் நிகழாது என்பது நிச்சயமாக அறிவீராக.

வினா: வேதம் சம்ஸ்க்ருத பாஷையிலே விளக்கமானது; அக்னி முதலிய ரிஷிகள் சம்ஸ்கிருதம் அறியாதபோது வேதத்தை எப்படிப் புரிந்துகொண்டார்கள்?

விடை: பரமேசன் அறிவித்தான். தர்மாத்மாக்களான யோக முனிவர் எவ்வெப்பொழுது எதெதன் பொருளை அறிய பரமேஸ்வர ஸ்வரூபத்தை தியான சமாதியில் கலந்திருந்தார்களோ, அவ்வப்பொழுது அந்தந்த மந்திரங்களின் பொருளை விளக்கி யருளினார். அவ்வாறு பல யோகாத்மாக்கள் உள்ளத்தில் வேதார்த்தம் விளங்கியது. அந்தந்த முனிவர் இதிஹாஸ பூர்வமாக நூல்களை இயற்றினர். 'பிரம்மம்' என்றால் வேதம். அதன் விளக்கமே பிராஹ்மணம். அவ்வாறு பிரம்

மம் விளங்கிய வேதத்திற்கு ப்ராஹ்மணம் என்று பெயர். மேலும்,

ऋषयो (मन्त्रद्रष्टयः......मन्त्रान्सम्प्रादुः ॥ (நிருக்தம், 1-10)

நிருக்தம் சொல்லுகிறது. மந்திரார்த்தம் (மறைபொருள்) அருளிய ரிஷியின் பெயர் அந்த மந்திரத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. அதற்கு முன்னே அந்த மந்திர விளக்கம் யாராலும் செய்யப்பட்டதில்லை. அதனுலேதான் நினைவிற்காக மந்திரத்துடன் ரிஷி நாமமும் காணும். அந்த ரிஷிகள் மந்திரகர்த்தாக்கள் அல்லர்; அப்படிச் சொல்வோர் பொய்யர். ரிஷிகள் மந்த்ரார்த்தஞ் சொன்னவர்களே.

வினு: வேதம் என்பது எந்த நூலுக்குப் பெயர்?

விடை: ருக், யஜுஸ், ஸாம, அதர்வண மந்த்ர ஸம்ஹிதைகளுக்கே வேதம் என்று பெயர்.

வினு:

मन्त्रब्राह्मणयोर्वेदनामधेयम् ॥

'மந்த்ரங்களும் பிராம்மணங்களும் வேதமே' என்று காத்யாயனர் செய்த பிரதிக்ஞா ஸூத்ரம் சொல்லுகிறதே, அதன் அர்த்தமென்ன?

விடை: ஒவ்வொரு மந்த்ர ஸம்ஹிதையின் முதலிலும், அதன் அத்யாயங்களின் முடிவிலும், வேதம் என்ற வார்த்தை தொன்று தொட்டு எழுதியிருக்கக் காணலாமே. பிரஹ்மணங்களின் முதலிலும் முடிவிலும் அப்படியிராதே. நிருக்தம்

इत्यपि निगमो भवति । इति ब्राह्मणम् ॥ (நிருக், 5-3-4)

இது வேதம்; இது ப்ராஹ்மணம் என்கிறது.

छन्दोब्राह्मणानि च तद्विषयाणि ॥ (அஷ்டாத். 4-2-66)

இது பாணினி அஷ்டத்யாயி ஸூத்ரம். இதிலிருந்து வேதம் மந்த்ரபாகம், பிராஹ்மணம் அதாவது வியாக்யான பாகம் என்பது தெளிவாகிறது. இன்னும் விரிவாக அறியவேண்டுமானுல் எனது 'ருக்வேதாதி பாஷ்ய பூமிகை'யில் பார்க்கலாம். அநேகப் பிராமாணங்களுக்கு விருத்தமாயிருப்பதால் (முரணுயிருப்பதால்), நீ குறித்தது காத்யாயினி வாக்கல்ல என்பதைத் தெளிவுபடுத்தியிருக்கிறேன். இந்த வாக்கை ஒப்பினுல் வேதம் ஸநாதனம் ஆகாது. ஏனெனில் பிராம்மணங்களில் பல ரிஷி, மஹ

ரிஷி, ராஜாதிகள் வரலாறுகள் காண்கின்றன. வரலாறுகள் ஒருவர் பிறந்த பிறகே எழுதப்பெறும். அந்த நூல்களும் அவர்கள் பிறந்த பிறகே உண்டானவை. வேதத்தில் யார் வரலாறும் இல்லை. அதில் வித்யா போதத்திற்கேற்ற சப்தப் பிரயோகங்களே உண்டு. எந்தச் சிறந்த மனிதன் பெயரும், கதையும் வேதத்தில் இல்லை.

**வினா:** வேதத்திற்கு எத்தனை சாகைகள் (கிளைகள்)

**விடை:** ஆயிரத்து நூற்றிருபத்தேழு (1127)

**வினா:** சாகைகள் என்றால் என்ன?

**விடை:** வியாக்யானத்திற்கே சாகை யென்பர்.

**வினா:** உலகில் வித்வான்கள் வேதத்தின் அவயவ விபாகங்களையே சாகை என்கிறார்களே.

**விடை:** நிதானத்துடன் சிந்தித்துப் பார்த்தால் சரியே. ஏனெனில் உள்ள சாகைகளெல்லாம் ஆஸ்வலாயனர் முதலிய ரிஷிகளின் பெயரால் விளங்குகின்றன. மந்த்ர ஸம்ஹிதை பரமேச்வரன் பெயரால் விளங்கும். நான்கு வேதங்களும் பரமேசன் அருளியன என்று ஒப்புவது போலவே, சாகைகளும் ஆஸ்வலாயனர் முதலிய அந்தந்த ரிஷிகள் அருளியதென்று ஒப்புகிறோம். மேலும் எல்லாச் சாகைகளிலும் வேத மந்திரத்தைச் சார்ந்தே வியாக்யானம் விளங்கும். உதாரணமாக தைத்திரிய சாகையில் "இஷேத்வோர்ஜேத்வேதி" முதலான மந்திரங்களின் தொடக்கம்கொண்டு, விளக்கம் கூறுகிறது. வேதத்தில் வேத மந்திரமே காணும். வேத சம்ஹிதைகளில் எந்த மேற்கோளும் இராது. ஆதலால் பரமன் அருளிய நான்கு வேதமும் மூல விருக்ஷம்; ஆஸ்வலாயனாதி சாகைகளெல்லாம் ரிஷி—முனி வாக்கு; ஈசவாக்கில்லை. இவ்விஷயத்தில் அதிக விரிவான விளக்கம் வேண்டுமானால் "ருக்வேதாதி பாஷ்ய பூமிகை"யில் காண்க. மாதா பிதாக்கள் தங்கள் மக்களின் மேன்மைக்காக கருணை வைக்கிறார்களோ அதுபோலப் பரமாத்மாவும் சகல மனிதர் மேலும் கிருபை கூர்ந்து வேதத்தை அருளியிருக்கிறார். அதனால் மனிதன் மடவிருள், மயக்கம் நீங்கி, வித்யா விஞ்ஞான சூரியனை அடைந்து, பேரின்பம் பெற்று வாழலாம்; அறிவையும் சுகத்தையும் விருத்தி செய்க.

விஞ: வேதம் நித்தியமா? அநித்தியமா?

விடை: வேதம் நித்தியம், ஏனெனில் பரமேசன் நித்தியம்; அவன் ஞானுதி குணங்களும் நித்தியம். நித்ய வஸ்துவின் குண கர்ம சுபாவங்களும் நித்தியமே. அநித்தியப் பொருளின் குணமும் அநித்தியமே.

விஞ: என்ன, இந்தப் புத்தகமும் நித்தியமா?

விடை: இல்லை; புத்தகம் காகிதம் மையால் ஆனது; அது எப்படி நித்தியமாகும்? ஆனுல் இதிலுள்ள சொல்லும் பொருளும் நித்தியம்.

விஞ: ஈஸ்வரன் ரிஷிகளுக்கு ஞானத்தை அருளினுன். ரிஷிகள் அந்த ஞானத்தால் வேதம் செய்தனர்; மெய்தானே?

விடை: ஜ்ஞேயம் (அறியும் பொருள்) இல்லாமல் ஞானமில்லை. வேதம் காயத்ரியாதி சந்தங்களும், ஷட், உதாத்த, அனுதாத்தா முதலான ஸ்வரங்களும், ஞானப் பொருளும் நிறைந்துள்ள பொக்கிஷம். காயத்ரி போன்ற சந்தஸை நிர்மாணிக்க சர்வக்ஞனைத் தவிர வேறு யாருக்கும் திறமையில்லை. இப்படி எல்லா அறிவும் நிறைந்த சாஸ்திரத்தை ஆக்கும் வல்லமை யாருக்காவது உண்டா? வேதங்களைப் படித்த பிறகு வியாகரணம், நிருக்தம், சந்தஸ் ஆதி நூல்களை வேத வித்தை விளங்க வேண்டி, ரிஷிகள் எழுதியளித்தார்கள். பரமேசன் வேதம் அருளாவிட்டால் இந்த நூல்களை யாரும் செய்திருக்கமாட்டார்கள். ஆதலால் வேதம் பரமேசன் அருளியதே. உலக மெல்லாம் இதையே பின் பற்றவேண்டும். உம் மதம் என்ன? என்று யாராவது கேட்டால் "எங்கள் மதம் வேத மதம்; நாங்கள் வேதோபதேசத்தையே மதிக்கிறோம்" என்று சொல்லவேண்டும்.

இங்கே ஈச்வரனையும் வேதத்தையும் பற்றிச் சுருக்கமாக விளக்கினேம். இனி சிருஷ்டியைப் பற்றி விளக்குவோம்.

ஸ்ரீமத் தயானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள் அருளிய
ஸத்யார்த்தப் பிரகாசத்தில் ஈஸ்வர—வேத
விளக்கமான ஏழாம் அத்தியாயம்
முற்றிற்று.

## எட்டாம் அத்தியாயம்

# ஆக்கல் அளித்தல் நீக்கல்

इयं विसृष्टिर्यत आ बभूव यदि वा दधे यदि वा न ।
यो अस्याध्यक्षः परमे व्योमन्त्सो अङ्ग वेद यदि वा न वेद ॥ 1 ॥

तम आसीत्तमसा गूढमग्रे प्रकेतं सलिलं सर्वमा इदम् ।
तुच्छयेनाभ्वपिहितं यदासीत्तपसस्तन्महिना जायतैकम् ॥ 2 ॥
(ருக். 10; 129; 7, 3)

हिरण्यगर्भः समवर्त्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत् ।
स दाधार पृथिवीं द्यामुतेमां कस्मै देवाय हविषा विधेम ॥ 3 ॥
(ருக் 10; 121; 1)

पुरुष एवेदं सर्वं यद्भूतं यच्च भाव्यम् ।
उतामृतत्वस्येशानो यदन्नेनातिरोहति ॥ 4 ॥ (யஜுர் 31; 2)

यतो वा इमानि भूतानि जायन्ते येन जातानि जीवन्ति ।
यत्प्रयन्त्यभिसंविशन्ति तद्विजिज्ञासस्व तद् ब्रह्म ॥ 5 ॥
(தைத்ரீ-ப்ருகு 1)

மனிதா! விதவிதமான சிருஷ்டிகளை ஆக்கி, அளித்து, நீக்குவோன் எவனோ, அவனே உலகநாதன்; அவனது நிறைவால் இவ்வுலகு தோன்றி, நிலைத்து, கலைகிறது; அவனே பரமாத்மா; அவனை அறி; வேறெவரையும் சிருஷ்டி கர்த்தாவாகக் கருதாதே. (1)

சிருஷ்டிக்கு முன் இவ்வுலகெல்லாம் இருள் சூழ்ந்திருந்தது; ஒன்றும் அறியமுடியாத இரவாயிருந்தது; ஆகாசம் போலிருந்தது. அனந்த பரமேசன் முன் இவ்வுலகம் துச்சமாயிருந்தது. பிறகு பரமேசன் தனது வல்லமையால் காரண ரூபமாயிருந்ததைக் காரிய வடிவாக்கினான். (2)

மனிதா! சூரியன் முதலிய தேஜோன்மய வஸ்துக்களின் ஆதாரம் எவனோ, இவ்வுலகிற்கும் இனி வரும் உலகிற்கும் ஒப்பற்ற தலைவன் எவனோ, உலகம் உண்டாவதற்கு முன்பே இலகி நிற்பவன் எவனோ, மண்ணிலிருந்து வான்சுடர் வரையில்

உலகை உண்டாக்கியவன் அவனே; அந்தப் பரமாத்ம தேவனையே அன்புடன் வணங்கு. (3)

மனிதீர்! அனைத்திலும் பூரண புருஷன், அழிவில், ஜகத் காரணன், ஜீவேசன், இயற்கை முதலிய ஜட வஸ்துக்களையும் ஜீவனையும் மிஞ்சியவன்; அவனே புருஷன்; சென்ற, நின்ற, இனி வரும் உலக முதல்வனும் அவனே. (4)

எந்தப் பரமாத்ம ரசனையால் மண்ணுதி பூதங்கள் உண்டாயினவோ, எதனால் அவை வந்து ஜீவிக்கின்றனவோ, எதில் எல்லாம் சென்றடங்குமோ, அதை அறிய விரும்பு—அதுவே பிரம்மம். (5)

जन्माद्यस्य यतः। என்பது சாரீரக சூத்திரம் (1-1-2)

எதனின்று இவ்வுலகம் தோன்றி, நின்று, எதில் ஒழிகிறதோ அதுவே பிரம்மம்; அதுவே அறியத் தக்க பொருள்.

வினா: இவ்வுலகம் பரமேஸ்வரனிடமிருந்து உற்பத்தியானதா அல்லது வேறிடமிருந்தா?

விடை: பரமாத்மா இதன் நிமித்தக் காரணமே; இதன் உபாதான காரணம் பிரகிருதி.

வினா: என்ன பிரகிருதி பரமேசனிடமிருந்து தோன்றவில்லையா?

விடை: இல்லை. அது அனாதி.

வினா: ஆதி யார்? அனாதி பொருள் எத்தனை?

விடை: ஈசன், ஜீவன், ஜகத்காரணமான பிரகிருதி—இம்மூன்றும் அனாதி.

வினா: இதற்குப் பிரமாணம் என்ன?

விடை:

द्वा सुपर्णा सयुजा सखाया समानं वृक्षं परिषस्वजाते।

तयोरन्यः पिप्पलं स्वाद्वत्त्यनश्नन्नन्यो अभिचाकशीति ॥ 1 ॥

(ருக் 1; 164; 20)

शाश्वतीभ्यः समाभ्यः ॥ 2 ॥ (யஜுர் 40-8)

பிரம்மம் ஜீவன் இரண்டும் என்றும் உள்ளவை. சேதனத்தி லும் பாலனாதி குணங்களில் ஒத்தவை; ஜீவன் பிரம்ம நிறைவு; இரண்டும் நெருங்கிய தொடர்புடையன; அனாதி சம்பந்த முடையன. அதேமாதிரி உலகம் பலவினைக் கிளைகளைக் கொண்டது. அது ஊழியில் சின்னா பின்னமாகும்; அதன் மூலம் பிரகிருதி. பிரகிருதி மூன்றாவது அனாதி பதார்த்தம். ஜீவன், பிரம்மம், பிரகிருதி ஆகிய மூன்றின் குண கர்ம சுபாவங்களும் அனாதியே. ஜீவன் பிரம்மம் இரண்டில், ஜீவன் ஒன்றே இந்த ஸம்ஸார விருக்ஷத்தின் பாப புண்ய பலன்களை நுகர்கிறது. பரமாத்மா கர்ம பலனை நுகர்வதில்லை. பரமாத்மா உள்ளும் புறமும் எல்லாப் பக்கமும் ஒளி வீசி விளங்குகிறான். ஜீவன், ஈசன், பிரகிருதி இவை தனித்தனியானவை. ஆனால் என்றும் உள்ளவை (அனாதி) (1) பரமாத்மா ராஜன்; என்றுமுள்ள சநாதன ஜீவப்ரஜைகளுக்கு வேதத்தின் மூலம் எல்லா வித்தைகளையும் போதிக்கிறான்.

अजामेकां लोहितशुक्लकृष्णां बह्वीः प्रजाः सृजमानां स्वरूपाः ।
अजो ह्येको जुषमाणोऽनुशेते जहात्येनां भुक्तभोगामजोऽन्यः ॥
(ஸ்வேதாச்வதரோபநிஷத் 4-5)

இது உபநிஷத் வாக்கு. பிரகிருதி, ஜீவன், பரமாத்மா இம் முப்பொருளுக்கும் பிறப்பில்லை. அதாவது இவை ஜன்ம மெடுப்பதில்லை; ஜன்மம் மற்றவை. இவை சகல ஜகத் காரண மாகும். இவற்றிற்குக் காரணமில்லை. அனாதி ஜீவன், அனாதி யான ப்ரகிருதியில் பிடிபட்டு அதன் பலனைப் புசிக்கிறது. பரமாத்மா அதில் பிடிபடவில்லை; அதன் பலனும் புசிப்பதில்லை.

ஈச—ஜீவ லக்ஷணம், ஈஸ்வரனைப் பற்றிய முன் பகுதியில் சொல்லியாயிற்று. இப்போது பிரகிருதி லக்ஷணம் சொல்லு வோம்.

## பிரகிருதி லக்ஷணம்

सत्त्वरजस्तमसां साम्यावस्था प्रकृतिः प्रकृतेर्महान् महतोऽहङ्कारो-ऽहङ्कारात् पञ्चतन्मात्राण्युभयमिन्द्रियं पञ्चतन्मात्रेभ्यः स्थूलभूतानि पुरुष इति पंचविंशतिर्गणः ॥
(சாங்க்யம் 1-61)

சத்வம் (சுத்தம்), ரஜ: (வீறு), தம: (மந்தம்—ஜாட்யம்) ஆகிய முக்குணத் தொகுப்பே பிரகிருதி. அதனின்று மஹத்

தத்துவ புத்தியும், அதனின்று அஹங்காரமும், அதனின்று (அஹங்காரத்தினின்று) பஞ்ச தன் மாத்திரையான சூக்ஷ்ம பூதமும், தசேந்திரியம், பதினோராவதான மனமும், பஞ்ச தன் மாத்திரையினின்று மண்ணுதி பஞ்ச பூதங்களும் உண்டாகின் றன. இந்த இருபத்து நான்கும் புருஷன் அல்லது ஜீவாத்மா பரமாத்மாவுடன் சேர்ந்து இருபத்தைந்து தத்துவங்களாம். இவற்றுள் பிரகிருதி அவிகாரிணி—இயற்கையாக உள்ளது. மஹத் தத்துவம் அஹங்காரம், ஐந்து சூக்ஷ்ம பூதம் இவை பிரகிருதி காரியம். இந்திரியங்கள் மனம், ஸ்தூல பூதங்களின் காரணமாகும். புருஷன் அல்லது ஜீவாத்மா எதற்கும் உபாதான காரணமோ காரியமோ இல்லை.

**வினு :**

सदेव सोम्येदमग्र आसीत् ॥ 1 ॥ (சாந்தோ. ப்ர 6. 2. 1)

असद्वा इदमग्र आसीत् ॥ 2 ॥ (தைத்திரீய—ப்ரஹ்ம—அ. 7)

आत्मैवेदमग्र आसीत् ॥ 3 ॥ (ப்ரஹ. 1-4-1)

ब्रह्म वा इदमग्र आसीत् ॥ 4 ॥ (சதபத 11. 1. 11. 1)

ஹே ச்வேதகேது ! சிருஷ்டிக்குமுன் இப் பிரபஞ்சம் இருந் தது (1) அஸத்தாயிருந்தது (2) ஆத்மாவாயிருந்தது (3) பிரம்ம மாயிருந்தது (4) என்று உபநிஷத்துகள் கூறுகின்றனவே. மேலும்

तदैक्षत बहु: स्यां प्रजायेयेति ।
सोऽकामयत बहु: स्यां प्रजायेयेति ॥

(தைத்திரீயம்-ப்ரம்மானந்தவல்லி 6).

அந்தப் பரமாத்மா தன் இச்சையால் பல வடிவானுர் என் கிறது தைத்திரீயம்.

सर्वं खल्विदं ब्रह्म नेह नानास्ति किञ्चन । (உபநிஷத்)

இந்த வுலகெல்லாம் பிரம்மமே ; இதில் பிரம்மத்தைத் தவிர வேறு இல்லை ; எல்லாம் பிரம்மமே—இது நிச்சயம் என்கிறது இந்த உபநிஷத்து வாக்கியமும்.

**விடை :** இந்த வசனங்களை அனர்த்தம் செய்வதேன் ? ஏனென் ருல் அதே உபநிஷத்தில் :

(एवमेव खलु) सोम्यान्नेन शुङ्गेनापो मूलमन्विच्छाद्भिस्सोम्य शुङ्गेन तेजोमूलमन्विच्छ तेजसा सोम्य शुङ्गेन सन्मूलमन्विच्छ सन्मूलाः सोम्येमाः सर्वाः प्रजाः सदायतनाः सत्प्रतिष्ठाः । (சாந்தோக். 6-8-4)

"ஹே, ஸ்வேதகேது, அன்ன ரூபமான பிருதிவி காரியத்திலிருந்து ஜலரூபமான மூல காரணத்தை அறி; காரிய ரூபமான நீரிலிருந்து தேஜோரூபமான மூலத்தையும், தேஜஸ்ரூப காரியத்திலிருந்து ஸத்ரூபகாரணமான நித்தியப் பிரகிருதியை அறி. நித்திய பிரகிருதியே சகல ஜகத்தின் மூல இருப்பிடமும் ஆதாரமும் ஆகும். சிருஷ்டிக்கு முன்பு இவ்வுலக மெல்லாம் அசத்தைப் போல், ஜீவாத்மா, பிரம்மம் பிரகிருதியில் லீனமாயிருந்தது; உள்ளுறைந்திருந்தது, அது இருந்தது; ஆனால் தற்போதுள்ள வடிவில் இல்லை. 'ஸர்வம் கல்விதம்' என்ற உம் வசனம், இங்கிருந்து பாரை, அங்கிருந்து செங்கல் எடுத்து ஜாலவித்தகன் வீடுகட்டுவது போலிருக்கிறது. ஏனெனில்

सर्वं खल्विदं ब्रह्म तज्जलानिति शान्त उपासीत । (சாந். 3-14-1)

என்பது சாந்தோக்யம்;

नेह नानास्ति किंचन ॥ (கடோ. 2-4-11)

என்பது கடோபநிஷத்து. நீர் இவ்விரண்டையும் கலந்து சொல்லுகிறீர். உறுப்புக்கள் உடலுடன் இருக்குமட்டும் பயனுண்டு. பிரிந்தால் பயனில்லை. அதே மாதிரி ஒரு வாக்கியமும் இருக்கவேண்டிய பிரகரணத்தில் (அமைப்பில்) இருந்தால் பொருள் வரும். இடம் பெயர்ந்தால் அல்லது வேறு வாக்கியத்திற் புகுந்தால் அனர்த்தமாகும். இந்த உபநிஷத்து வாக்கியங்களின் பொருளைக் கேளும்: "ஜீவனே, எந்த பிரம்மத்திலிருந்து உலகம் தோன்றி நிலைக்குமோ, எதனால் அது உயிர்ப்பதோ அந்தப் பிரம்மத்தை உபாசி. அவன் வல்லமையே உலகை ஆக்கி, தாங்கி நடத்துகிறது; அதனாலேதான் உலகமே விளக்கமாகிறது. அதைத் தவிர வேறெதையும் உபாசிக்கக்கூடாது. ஆகவே நீ பிரம்மத்தையே உபாசனை செய். அது சின்மாத்ரம், அகண்ட ஏகரஸம்; அந்த பிரம்ம ஸ்வரூபத்தில் நானா வஸ்துக் கலப்பில்லை; ஆனால் நானா வஸ்துக்களும் தனித்தனி வடிவில் பரமேச்வரன் ஆதாரத்தில் நிலைகொண்டுள்ளன.

வினா: ஜகத்தின் காரணம் எத்தனை?

விடை: மூன்று ; 1. நிமித்தம் 2. உபாதானம் 3. ஸாதாரணம். எதனால் காரியம் நடக்கிறதோ, எஃதின்றிக் காரியம் நடக்காதோ, தான் மாறாமல் மற்றதை மாற்றுகிறதோ அது நிமித்த காரணம். எதில்லாமல் எதுவும் நடக்காதோ, எது உரு மாற்றமும் விகாரமும் அடைகிறதோ அது உபாதான காரணம். செயலுக்குச் சாதனமாகி, சாதாரண நிமித்தமாயிருப்பது சாதாரண காரணம்.

நிமித்த காரணம் இரண்டு வகைப்படும். முதல் நிமித்த காரணம் எல்லாப் பொருள்களையும் ஆக்கி, தாங்கி, நீக்கித் தொழில் நடத்தும் பரமாத்மன். இரண்டாவது பரமன் சிருஷ்டித்த பொருள்களைக்கொண்டு பல காரியங்களைச் செய்யும் ஜீவன் சாதாரண நிமித்தக் காரணம். இந்த உலகப் படைப்பில் பயனாகும் சாமக்கிரியையான பரமாணுப் பிரகிருதியே உபாதான காரணம். அது ஜடம்; தானே எதையும் ஆக்கவோ அழிக்கவோ முடியாது. ஒரு சேதன வஸ்து அதை ஆக்கினால் ஆகும்; அழித்தால் அழியும். சில சமயம் ஜடத்துடன் ஜடம் சேர்ந்து ஆக்கலும் நீக்கலும் சம்பவிக்கும். உதாரணமாக ஆண்டவன் ஆக்கிய வித்து மண்ணில் விழுந்து நீருண்டு மரமாகின்றது ; தீயில் விழுந்தால் எரிந்தழிகின்றது. ஆனால் அனைத்தையும் முறையாகச் செய்தலும் அழித்தலும் இறைவன் அல்லது ஜீவனின் ஆதீனத்தில் உள்ளன. ஒரு வஸ்துவைச் செய்ய அறிவு, பார்வை, ஆற்றல், கை முதலிய பலவகைச் சாதனங்கள் வேண்டும். காலமும் இடமும் வேண்டும். இவை யெல்லாம் சாதாரண காரணங்களாகும். ஒரு பானை வனைய வேண்டும்; அதற்குக் குயவன் நிமித்தக் காரணம், மண் உபதான காரணம், தண்டசக்கரம் முதலியவை சாதாரண நிமித்தம். இடம், காலம், ஆகாசம், பிரகாசம், கண், கை, அறிவு, செயல் முதலியவை நிமித்த காரணம் ஆகும். இந்த மூன்று காரணங்களின்றி எந்தப் பொருளும் ஆவதுமில்லை ; அழிவதுமில்லை.

வினா: தற்கால வேதாந்திகள் பரமேசனே உலகின் நிமித்த உபாதான காரணங்கள் என்கிறார்களே!

यथोर्णनाभिः सृजते गृह्णते च ॥ (முண்டகம் 1-1-7).

இது உபநிஷத்து வாக்கியம். வெளியிலிருந்து எதையும் பெறாமல், தன்னுள்ளிருந்தே சிலந்தி நூல் இழுத்து வலை பின்னி அதில் தானே விளையாடுகிறது. அதேமாதிரி பிரம்மனும் தன்

னிடமிருந்தே உலகை உண்டாக்கி தானே உலக வடிவாகி அதில் அவனே விளையாடிக் கொண்டிருக்கிறான். 'நான் நானாரூபமான உலகாகுக !' என்று பிரம்மன் விரும்பினான். நினைத்ததுமே உலக வடிவானான் பரமன். ஏனெனில்

आदावन्ते च यन्नास्ति वर्त्तमानोऽपि तत्तथा ॥ (கௌடபாதீயம் 31).

இது மாண்டுக்யோபநிஷத்தின் (கௌடபாதீய) காரிகை. முதலிலும் இறுதியிலும் இல்லாத வஸ்து, தற்காலத்திலும் இருக்க முடியாது. சிருஷ்டி ஆதியில் உலகில்லை ; பிரம்மமே இருந்தது. பிரளயாந்தத்தில் உலகம் இருக்காது. பிரம்மமே நிலைக்கும். அப்படியானால் இன்று உலகெல்லாம் ஏன் பிரம்ம மயமாயிருக்கக் கூடாது ?

விடை : நீ சொல்லுகிறபடி உலகின் உபாதான காரணம் பிரம்மமானால், பிரம்மம் பரிணாமி, நிலை மாற்றமடையும், விகாரி என்பதாகும். மேலும் உபாதான காரணத்தின் குண கர்ம சுபாவம் அதன் காரியத்திலும் பிரதிபலிக்கும்.

(வைசேஷிகம் 2-1-24)

कारणगुणपूर्वकः कार्यगुणो दृष्टः ॥

உபாதான காரணத்தைப் போலவே காரியத்தின் குணமாகிறது. பிரம்மம் சச்சிதானந்த ஸ்ரூபம் ; உலகம் காரிய ரூபம் ; அஸத்து, இன்பமற்றது : பிரம்மம் சுயம்பு, ஜகம் உண்டானது. பிரம்மம் புலனாகாதது, உலகம் புலனாவது. பிரம்மம் அகண்டம், உலகம் கண்டம். பிரகிருதி முதலியவை பிரம்மத்திலிருந்து உண்டானால், அவற்றின் ஜடத்தன்மை பிரம்மத்திற்கும் இருக்கும். அல்லது அவையும் பரம்பொருள் போலச் சேதனமாயிருக்கவேண்டும். நீர் சொல்லும் சிலந்தியின் உதாரணம் உம் கொள்கைக்கு சாதகமில்லை. அதற்கு அது எதிரிடையானது. ஏனெனில் சிலந்தியின் ஜடவுடலே நூலுக்கு உபாதானகாரணம் ; ஜீவாத்மா நிமித்தகாரணம். இதுவும் பரமாத்ம ரசனையின் அற்புதமே. ஏனெனில் மற்ற பிராணிகளின் உடல்களிலிருந்து இப்படி நூல் வராது. அதேமாதிரி வியாபகமான பிரம்மம் தன்னுள் பரவிய பிரக்ருதியிலிருந்தும், பரமாணுவிலிருந்து தூலவுலகை ஆக்கி, புறத்தே உருவாக்கி, அதிற் பரவி, சாக்ஷீபூதனாய் ஆனந்தமயனாய் இருக்கிறான். கடவுள் தான் பரவலாயிருக்க விரும்பினான் ; ஆனான் ; என்று நீர் மொழி பெயர்த்த வாக்கியத்தின் மெய்பொருள் இதுவே. இறைவன் உள்ளத்தால் "உலகையெல்லாம் தோற்றி—விளங்குவேன்" என்று சிந்தித்

தான். உலகம் உண்டான பிறகே கடவுள் அதிலுள்ள ஸ்தூல பதார்த்தங்களுடன் கலந்து, ஜீவர்களின் விசாரம், ஞானம், தியானம், உபதேசம், கேள்வி முதலியவற்றால் விளக்கமாகிறான். பிரளய காலத்தில் தன்னையும் முக்த ஜீவர்களையுந் தவிர அவனை யாரும் அறியார். நீர் சொன்ன சூத்திரம் பிசகு. சிருஷ்டிக்கு முன்பு, உலகம் ஸ்தூலமாக இல்லாதுபோனாலும், விளக்கமற்று சூக்ஷ்மமாகவே யிருந்தது. பிரளயத்தின் பிறகும் அதாவது பிரளய ஆரம்பத்திலிருந்து மறு சிருஷ்டிவரை, இவ்வுலகம் சூக்ஷ்மமாகி, விளக்கமற்று இருக்கும். ஏனெனில்

तम आसीत्तमसा गूढमग्रे। (ருக் 10, 129, 3).

आसीदिदं तमोभूतमप्रज्ञातमलक्षणम्।
अप्रतर्क्यमविज्ञेयं प्रसुप्तमिव सर्वत:॥ (மனு 1-5).

ஆதியில் அனைத்தும் இருள். உலகை இருள் கவிந்திருந்தது.

தொடக்கத்தில் உலகை இருள் கவர்ந்திருந்தது. அது அறிவிற்கும் புலனுக்கும் விளங்காதிருந்தது. உருவற்று உறங்கிக் கிடந்தது. பிரளயத்திலும் அதன் பின்பும் அவ்வாறே உலகம் இருக்கும். தற்போது அது தெளிவாக பல குறி குணங்களுடன் புலனாகிறது. அந்த உரையாசிரியர் (கௌடபாதர்) காரிகை 'தற்போதும் உலகம் இல்லை' என்றதும் பொருந்தாது. ஏனெனில் நேரடியாகக் கண்டறிந்த ஒன்று இன்மையாகாது.

வினா: உலகைப் படைப்பதால் கடவுளுக்கு லாபமென்ன?

விடை: படைக்காததால் என்ன லாபம்?

வினா: படைக்காவிட்டால் அவன் ஆனந்தமாயிருந்திருப்பான்; ஜீவர்களுக்கும் இன்ப துன்பமிராது.

விடை: இது சோம்பேறி, தரித்திரர் பேச்சு. தீரபுருஷர் பேச்சன்று. பிரளயத்தில் ஜீவர்களுக்கு என்ன சுக துக்கமுண்டு? உலகின் சுக துக்கங்களைக் கணக்கிட்டால் சுகம் பல மடங்கு அதிகமாகவே யிருக்கிறது. பல சுத்தாத்மாக்கள் முக்தி சாதனத்தால் பேரின்பம் அடைகின்றனர். பிரளயத்தில் ஜீவர் ஜடவுறக்கத்தில் ஆழ்ந்து கிடப்பர். உலகைப் படைக்காவிட்டால் பூர்வ பாபபுண்ணிய பலன்களை ஜீவர்களுக்கு இறைவன் எப்படி ஊட்டுவான்? ஜீவர்கள்

எப்படிக் கர்ம பலன்களை நுகர முடியும்? உன்னிடம் யாராவது " கண்ணினால் என்ன பலன்?" என்று கேட்டால், காணலே பயன் என்பாய். அவ்வாறே இறைவனிடம் உலகை ஆக்கவல்ல அறிவும், வினையும், திறனும் உள்ளன. அவற்றால் என்ன பலன்? உலகை உண்டாக்குவதே பலன்; வேறில்லை. இறைவனிடம் நியாயம், தயை, தாரணை முதலிய குணங்கள் உள்ளன; அவன் உலகைப் படைத்தாலே இக் குணங்களும் விளக்கமாகும். உலகை ஆக்கி, அளித்து, அழித்து நடத்துவதனாலேயே, கடவுளின் அனந்த சக்தி பயன்படுகிறது. கண்ணின் இயல்பு காண்பது போலவே இறைவன் இயற்குணமும் உலகைப் படைத்து, உயிர்களுக் கெல்லாம் எண்ணரிய பொருள்களைத் தந்து பரோபகாரம் செய்தலேயாகும்.

**வினா :** விதை முதலா, மரம் முதலா?

**விடை :** விதையே; ஏனெனில் பீஜம் (விதை) ஹேது, நிதானம், நிமித்தம், காரணம், விதை எல்லாம் ஒரு பொருட் சொற்களே. காரணத்தின் பெயரே வித்து, பீஜம்; அது காரியத்தின் முன்பே இருக்கவேண்டும்.

**வினா :** பரமேசன் சர்வ சக்திமான்; ஆனால் அவன் காரணம்—ஜீவன் இரண்டையும் உண்டாக்க முடியுமே! அப்படிச் செய்ய முடியாவிட்டால், அவன் சர்வ சக்திமான் ஆக முடியாதே!

**விடை :** 'சர்வ சக்திமான்' என்பதன் பொருளை முன்பே எழுதியாயிற்று. அசம்பவமான காரியங்களைச் செய்பவன் சர்வ சக்திமானா என்ன? அப்படிச் செய்வதானால்—அதாவது காரணமின்றிக் காரியம் செய்வதானால், இன்னொரு கடவுளை ஆக்கித் தான் சாவானா? கடவுள் ஜடமாய், துக்கியாய், அநியாயக்காரனாய், அசுத்தனாய், கெடுவினையாளனாய் ஆக முடியுமா? சுபாவ நியமங்களை (இயற்கைத் தன்மையை) அதாவது தீயின் சூட்டை, நீரின் தண்மையை, மண்ணின் ஜடத்தன்மையை—விபரீத குணமாக ஈசுவரனாலும் மாற்ற முடியாது. ஈசுவரனின் நியமம் சத்தியம், பூரணம், (உண்மை, நிறைவு). அவன் இயல்பை மாற்றி யமைக்க முடியாது. பிறர் துணையின்றி அவன் எல்லாக் காரியங்

களையும் நிறைவேற்றுவான், என்பதே சர்வ சக்திமான் என்பதன் பொருளாகும்.

வினு: ஈசன் உருவனு அருவனு? அருவனுனல் கை முதலிய உறுப்புக்களின்றி உலகை எப்படி ஆக்க முடியும்? உருவனுனல் ஆட்சேபணை இல்லை.

விடை: ஈசுவரன் அருவனே. உடல் கொண்டவன் இறைவனல்லன். ஏனெனில் உடல் கொண்டவன் ஆற்றல் அளவுள்ளது; அவன் இடம், காலம், பசி தாகம், குளிர், வெப்பம், சிதைவு, பிரிவு நோய்நொடிகளுக்கு ஆளானவன். அவனிடம் ஜீவ குணம் இருக்கும்; தெய்வத்தன்மைகள் இரா. நீயும் நானும் உடல் கொண்டவர்கள். பிரகிருதி, அணு, பரமாணுக்களை நாம் வசப்படுத்தி ஆள முடியாது. அவ்வாறே உடலெடுத்த பரமனும் சூக்ஷ்ம பதார்த்தங்களால் தூலவுலகை ஆக்க முடியாது. பரமேச்வரனுக்குப் பூத சரீரம், இந்திரியம், கைகால்கள் இல்லை. ஆனுல் அவனுக்கு அனந்த சக்தி, பலம், பராக்ரமம் உண்டு; அதனுல் அவன் எல்லாம் செய்கிறுன். அவன் செய்வதைப் பிரகிருதி—ஜீவன் செய்ய முடியாது. அவன் பிரகிருதியினும் சூக்ஷ்மன், ஜீவனை விட நுட்பமானவன்; இரண்டிலும் அவன் நிறைந்திருக்கிறுன். அதனுலேதான் அவற்றை அடக்கி ஆண்டு, ஜகதாகாரமாக்குகிறுன்.

வினு: மக்கள் முதலிய பிராணிகளில் தாய் தந்தையர் உருவே பிள்ளைகளின் உருவாகிறது. அவர்கள் அருவானுல் பிள்ளைகளும் அருவாவார்; அது போலவே பரமேச்வரன் நிராகாரனுல் (அருவனுனல்) அவன் படைத்த ஜகமும் (உலகும்) நிராகாரமாகவே இருக்கவேண்டுமே?

விடை: உன் கேள்வி சிறுபிள்ளைத்தனமானது. ஏனெனில் பரமன் உலகின் உபதான காரணமில்லை; நிமித்த காரணமென்பதை முன்பே விளக்கினேம். தூலமாயிருப்பது ஜகத்தின் உபதான காரணங்களான பிரகிருதியும் பரமாணுவுமே. அவை முற்றிலும் அருவன்று; பரமனை விட நுண்மை குறைந்தவை. அவனைவிடப் பருமன். ஆனுல் மற்றப் பொருள்களைவிட நுண்மையானவை.

வினு: காரணமின்றியே பரமேசன் காரியம் செய்ய முடியாதா?

**விடை:** முடியாது; ஏனெனில் யாதானும் ஒரு வடிவில் இல்லாததை இருப்பதாகச் சொல்ல முடியாது. மலடிகள் பெற்ற மகனுக்கும் மகளுக்கும் கலியாணமானது; அவர்களிடம் மானிடக் கொம்பின் வில் இருந்தது; அவர்கள் ஆகாசப் பூமாலை சூடினர். கானல் நீரில் ஆடினர்; கந்தர்வ லோகத்தில் வசித்தனர்; அங்கே மேகமின்றி மழை பொழிந்தது. பூமியின்றி எல்லா உணவும் விளைந்தது.''—இவ்வாறு ஒருவன் கப்ஸா அடித்தால் நம்புவோமா? அது போலத்தான் காரணமின்றிக் காரியம் நிகழ்வதும் ஆகும். ''அம்மா அப்பா இல்லாமல் நான் பிறந்தேன். வாயில் நாக்கில்லை; ஆனால் பேசுவேன்; பொந்தில் பாம்பில்லை, ஆனால் ஒன்று கிளம்பியது. நான் எங்குமில்லை; இவர்களும் யாங்குமில்லை; ஆனால் நாமெல்லாம் இங்கே வந்திருக்கிறோம்.''—இது போன்ற நடக்கியலாத பேச்சுகளெல்லாம் பைத்தியக்காரன் உளரலேயாகும்.

**வினா:** காரணமின்றிக் காரியம் இல்லையெனில் காரணத்தின் காரணம் எது?

**விடை:** கேவலம் காரண ரூபமாயிருப்பது எதன் காரியமும் ஆகாது. ஒன்றின் காரணமாகவும் மற்றொன்றின் காரியமாகவும் இருப்பதைப் பிரதிகாரணம் என்கிறோம். உதாரணமாக வீட்டின் காரணம் மண்; மண் தண்ணீரின் காரியம். ஆதி காரணம் பிரகிருதி, இயற்கை. அது அனாதி என்றுமுள்ளது.

मूले मूलाभावादमूलं मूलम् ॥ (ஸாங்க்யம் 1-67)

''வேருக்கு வேர் கிடையாது; மூல காரணத்திற்கும் காரணம் இல்லை.'' என்பது சாங்கிய தரிசனம். காரணமற்ற ஒன்று எல்லா காரியத்திற்கும் காரணமாகிறது. ஏனென்றால் எந்தக் காரியத்திற்கும் தொடக்கத்தில் மூன்று காரியங்கள் அவசியம் இருக்கவேண்டும். உதாரணமாக வேட்டி நெய்வதானால் சேனியன், பஞ்சு - நூல், தறி இம்மூன்றும் வேண்டும். அதேமாதிரி உலக சிருஷ்டிக்கு முன்பும் பரமேச்வரன், பிரகிருதி, காலம், ஆகாசம், ஜீவன் இவை அனாதியாக இருந்தன. இவற்றால் ஜகம் உண்டானது. இவற்றுள் ஒன்று இல்லாது போனாலும் உலகம் தோன்றியிருக்காது.

## நாஸ்திக வாதம்

अत्र नास्तिका आहुः-शून्यं तत्त्वं भावो विनश्यति वस्तुधर्मत्वा-
द्विनाशस्य ॥ 1 ॥ (சாங்க்யம் 1-44)

अभावाद्भावोत्पत्तिर्नानुपमृद्य प्रादुर्भावात् ॥ 2 ॥

ईश्वरः कारणं पुरुषकर्माफल्यदर्शनात् ॥ 3 ॥

अनिमित्ततो भावोत्पत्तिः कण्टकतैक्ष्ण्यादिदर्शनात् ॥ 4 ॥

सर्वमनित्यमुत्पत्तिविनाशधर्मकत्वात् ॥ 5 ॥

सर्वं नित्यं पञ्चभूतनित्यत्वात् ॥ 6 ॥

सर्वं पृथग् भावलक्षणपृथक्त्वात् ॥ 7 ॥

सर्वमभावो भावेष्वितरेतराभावसिद्धेः ॥ 8 ॥ (ந்யாயம் 4-1)

இங்கே நாஸ்திக வாதிகள் சொல்லுகிறார்கள் :

முதல் நாஸ்திகன் : "சூனியமே உள்ள பொருள். சிருஷ்டிக்கு முன்பும் சூனியம், முடிவும் சூனியம். ஏனெனில் இப்போது உள்ளதெல்லாம் (நிகழ்காலத்தில் உள்ள பொருளெல்லாம்) கடைசியில் இல்லதாகிச் சூனியமாகும்.

விடை : சூனியம் என்றால் ஆகாசம், தோன்றாப் பொருள், அவகாசம், பிந்து எல்லாம் ஆகும். சூனியம் ஜடம்; அதில் எல்லாப் பதார்த்தங்களும் மறைந்துறையும். எப்படி புள்ளியிலிருந்து கோடும், கோட்டிலிருந்து வட்டம், சதுரம் முதலிய வடிவுகளும் வருகின்றனவோ, அப்படியே பூமி, மலை முதலியன ஈச்வர ரசனையால் உண்டாகின்றன. சூனியத்தை அறிந்தவன் சூனியனாயிருக்க முடியாது. சூனியம் இன்மையில்லை; அதுவும் ஒரு புள்ளியே. (1)

இரண்டாவது நாஸ்திகன் : அல்லதிலிருந்து உள்ளது வருகிறது. உதாரணமாக விதை பிளக்காமல் முளை கிளம்பாது; ஆனால் விதையைப் பிளந்து பார்த்தால் முளையில்லை. எப்படி முதலில் முளை காண்பதில்லையோ, அதுபோல அல்லதிலிருந்தே உள்ளது வந்தது.

விடை : விதை பிளப்பதேன்? அதைப் பிளந்து முளை கிளம்பும் சக்தி வித்தில் முன்பே இருந்தது. இன்றேல் விதை முளைக்கவே முளைக்காது. (2)

மூன்றாவது நாஸ்திகன் : வினைக்குத் தக்க பலனை ஒருவன் அடைவதில்லை. எத்தனையோ வினைகள் பலனற்றுப் போவதைக் காண்கிறோம். ஆதலால் கர்ம பலன் ஈஸ்வராதீனம் என்பது புலனாகிறது. எந்த வினைப்பயனை இறைவன் விரும்புகிறானோ அதையே தருகிறான்; அவன் விரும்பாத வினைப்பயனைத் தருவதில்லை. ஆதலால் கர்ம பலன் ஈஸ்வராதீனம். (கர்ம பலன் இறைவன் விருப்பம்).

விடை : கர்மபலன் ஈச்வராதீனமானால் கர்மம் செய்யாமலேயே இறைவன் பலனைத் தராததேன்? இதனால் ஜீவன் செய்யும் வினைக்கேற்ற பலனையே இறைவன் தருகிறான். (3)

நான்காவது நாஸ்திகன் : நிமித்தமில்லாமலே பதார்த்தங்கள் உண்டாகின்றன. மிருதுவான, வழவழப்பான கரு வேலங் கிளையிலிருந்து மிக கூரிய முட்கள் உண்டாகின்றன. இதனால் சிருஷ்டி ஆரம்பத்தில் சரீராதி பதார்த்தங்களெல்லாம் நிமித்த காரணமில்லாமலே உண்டாகின்றன என்பது விளங்கும்.

விடை : எதிலிருந்து பொருள் உண்டாகின்றதோ அதுவே அதன் நிமித்தமாகும். முள்ளற்ற மரங்களில் ஏன் முள் உண்டாதில்லை?

ஐந்தாவது நாஸ்திகன் : எல்லாப் பொருள்களும் தோன்றி அழிகின்றன. ஆதலால் எல்லாம் அநித்தியம்.

श्लोकार्धेन प्रवक्ष्यामि यदुक्तं ग्रन्थकोटिभिः ।

ब्रह्म सत्यं जगन्मिथ्या जीवो ब्रह्मैव नापरः ॥

இப்படி ஒரு நூல் கூறுகிறது. நவீன வேதாந்திகள் ஐந்தாவது நாத்திகர்கள் குழுவைச் சேர்ந்தவர்கள். ஏனெனில் கோடிக்கணக்கான கிரந்தங்களின் முடிவான கருத்து என்ன வென்றால் 'பிரம்மம் ஸத்யம்; ஜகம் மித்தை; ஜீவன் பிரம்மமே; வேறில்லை' என்பது நவீன வேதாந்திகளின் முடிவு.

விடை : நித்தியம் நித்தியமானால் எல்லாம் அநித்தியம் என்பது பொய்.

வினா : எல்லாம் நித்தியம் என்பதும் அநித்தியமே. உதாரணமாக நெருப்பு விறகை எரித்துத் தானும் எரிந்துபோகிறது.

விடை : அறிவிற்கும் புலனாவது பொய்யன்று, இன்மையன்று. பரம சூக்ஷ்ம காரணமும் அநித்தியமன்று. வேதாந்திகள்

பிரம்மத்திலிருந்தே உலகம் வந்ததாகக் கருதுகிறார்கள்; பிரம்மம் உண்மையானால் அதன் காரியமான உலகம் பொய்யாகாது. உலகம் கனவு, கயிற்றிற் பாம்புபோலக் கற்பிதம் என்பதும் பொருந்தாது. ஏனெனில் கற்பனையும் ஒரு குணம்; குணம் ஒரு பொருளை ஒட்டினது. அதனின்று வேறுபட்டிராது. கற்பனையின் கர்த்தா நித்தியமானால் அவனது கற்பனையும் நித்தியமாகவே யிருத்தல் வேண்டும். இன்றேல் அவனும் அநித்தியனேயாவான். விழிப்பில் கண்டு கேளாததைக் கனவில் காணமுடியாது. உலகப் பொருள்களைப் புலன்கள் காண்கின்றன. இந்தப் புலக் காட்சிகள் அறிவில் பதிந்து ஸம்ஸ்காரங்களாகி, வாஸனா ரூபமான அறிவாக மாறி, ஆத்மாவில் நிலைக்கொள்ளுகின்றன. அவற்றையே கனவில் நேராகக் காண்கிறோம். ஆழ்ந்த உறக்கத்தில் புறப் பொருள்களை உணரோம்; எனினும் புறப் பொருள்கள் உண்டு; அதுபோலவே பிரளயத்திலும் காரணத் திரவியம் உண்டு. பிறவிக் குருடனுக்கு ஒளி, உரு, நிறக்கனவுகள் காண்பதில்லை. அவ்வாறே மனப் பதிவின்றி, ஸம்ஸ்காரமின்றிக் கனவுக் காட்சியில்லை. ஆதலால் புறத்தே இயங்கும் பொருள்களெல்லாம் அகத்தே பதிந்து அறிவாகின்றன.

**வினா:** விழிப்பில் காண்பன கனவிலும், கனவில் காண்பன ஆழ்ந்த உறக்கத்திலும் (ஸுஷுப்தியிலும்) அநித்தியமாகின்றனவே; அவ்வாறே விழிப்பில் காணும் பொருள்களையும் கனவாகவே கருதவேண்டும்.

**விடை:** கூடாது; ஒருகாலும் முடியாது. ஏனெனில் கனவிலும் ஆழ்ந்த உறக்கத்திலும் புறப்பொருள்களை அறியாவிட்டாலும் அவை உள்ளன; அவை இல்லாது போகவில்லை. உதாரணமாக நமக்குப் பின்னேயுள்ள பொருள்களை நாம் காணுமல் இருந்தாலும் அவை உள்ளன. அவ்வாறேதான் கனவு, ஆழ்ந்த உறக்க நிலையும் ஆகும். ஆதலால் நாம் முன்பே சொன்னபடி பிரம்மம், ஜீவன், ஜகத் காரணமான பிரகிருதி—இம் மூன்றும் அனாதி, நித்தியம். இதுவே சத்தியம்.

**ஆறாவது நாஸ்திகன்:** பஞ்சபூதங்களும் நித்தியம், அதனால் சகல உலகும் நித்தியம்.

விடை: இது மெய்யன்று; பதார்த்தங்கள் தோன்றியழிவதைத் தினம் காண்கின்றோம். அவை நித்தியமானால் புறவுலகிற் காணும் உடல்களெல்லாம், வீடுவாசல், துணிமணிகளெல்லாம் நித்தியமாயிருக்கவேண்டும். இவை தோன்றி அழிவதைக் கண்டுகொண்டே யிருக்கிறோம். ஆதலால் காரிய வஸ்துக்கள் நித்தியமாகா.

ஏழாவது நாஸ்திகன்: எல்லா வஸ்துக்களும் தனித்தனியானவை. ஒன்றில் மற்றொன்று காண்பதில்லை. ஒன்றோடொன்று பொருந்துவதில்லை.

விடை: பகுதிகளில் தொகுதியுள்ளது; ஆகாசம், இடம், காலம், பரமாத்மா, ஜாதி, வகுப்புகள் தனித்தனியாயினும் சமுதாயத்தில் ஒன்றே. இவையின்றி எதுவும் தனித்து வாழாது. அவை இயல்பில் வேறுபட்டாலும் தொகுப்பில் ஒன்றே. இவ்வாறு பகுப்பில் தொகுப்பிருக்கிறது.

எட்டாவது நாஸ்திகன்: எல்லாம் ஒன்றையொன்று விலக்குகின்றன. ஒன்று ஒன்றாகாது. "अनश्वो गौः अगौरश्वः ॥" பசு குதிரையில்லை; குதிரை பசுவாகாது. ஆதலால் எல்லாம் வடிவங்களும் அல் - வடிவங்களே, அபாவ வடிவங்களே.

விடை: எல்லா வஸ்துக்களும் விலக்கியல்புடையன, இதரேதராபாவமுடையன. ஆனால் எதுவும் தன்னைத்தானே விலக்குவதில்லை. "गवि गौरश्वेऽश्वो भावरूपो वर्तत एव" குதிரை பசுவாகாது, பசு குதிரையாகாது. ஆனால் குதிரை குதிரைத் தன்மை, பசு பசுத் தன்மையுடனிருக்கும்; அபாவம் என்றுமில்லை. வஸ்துக்கள் அபாவமானால் விலக்கியல்பு, இதரேதராபாவம் எப்படி வரும்?

ஒன்பதாம் நாஸ்திகன்: உலகம் இயல்பாக உண்டாகிறது. சோறும் நீரும் சேர்ந்து அழுகினால் அதில் புழுக்கள் உண்டாகும்; விதை, மண், நீர் கலந்து புல், மரம் முதலிய தாவரங்கள் உண்டாகும். காற்றும் கடலும் சேர்ந்தால் அலைகள் எழும்; அலைகளால் நுரை (சமுத்திரபேனு) கிளம்புகிறது. மஞ்சள், சுண்ணும்பு, எலுமிச்சைச் சாறுடன் சேர்ந்து சிகப்பான ஹாரதியாகும். இதேமாதிரி உலகமும் இயல்பான தத்துவ குணங்களால் உண்டாகிறது. இதைச் செய்தவன் யாருமில்லை.

விடை: இயல்பால் உலகு உண்டானால், அது நலியாது; நலியும் இயற்கை என்றால் ஆக்கம் பெறாது. ஆக்கமும் அழிவும்

இயற்கைச் செயலென்றால், இரண்டும் நடக்காது. ஆக்கம் அழிவிற்கு நிமித்தகாரணம். ஒன்று வேண்டுமென்றால் அதுவும் ஆகி அழியும் பொருளுக்கு அப்பாற் பட்டிருக்க வேண்டும். ஆக்கம் அழிவுகள் இயற்கையாகவே நடந்தால், காலக் கட்டுப்பாடின்றி எந்த நேரமும் நடக்கும். மேலும் இறைவனில்லாமலே இயற்கையால் ஆக்கம் அழிவு நிகழுமானால், இவ்வுலகின் அருகில் இன்னொரு பூகோளமோ, சந்திரசூரியரோ உண்டாகாமலிருப்பதேன்? மேலும் இப்போது தோன்றி வளர்வன இறைவன் உண்டாக்கிய விதை, தன்மை, நீர் முதலியவற்றின் சேர்க்கையினால் செழிக்கின்றன. அவனின்றிப் புல் பூண்டு, மரம், புழுக்கள் எவையும் உண்டாகாவாம். மஞ்சள், சுண்ணும்பு, எலுமிச்சைச் சாறு, முதலியவை பல இடங்களிலிருந்து வந்து தாமே கலப்பதில்லை. ஒருவர் கலந்தால் கலக்கும். அதுவும் அளவுப்படி கலந்தாலே ஹாரதியாகும்; மிகை குறையானால் ஹாரதி வராது. அதுமாதிரியே பிரகிருதியும் பரமாணுவும் தக்க அறிவும் யுக்தியும் கொண்டு பரமேசன் கலந்தாலொழிய ஜடபதார்த்தங்கள் தொழிற்பட்டு உருவாகமுடியாது. ஆகையால் சிருஷ்டி இயற்கையாலன்று பரமேச்வர ரசனையால் உண்டாகிறது.

கேள்வி. இவ்வுலகிற்கு கர்த்தா முன்னில்லை, இன்றில்லை, இனியும் இரான். இது அனாதி காலமாக அப்படியே இருந்துவருகிறது; இதற்கு ஆக்கமும் இல்லை; அழிவும் இல்லை.

விடை: கர்த்தா இல்லாமல் எந்தச் செயலும், செய்பொருளும் உண்டாகாது. சம்யோக வியோகத்தால் இங்கே உண்டாகும் மண்ணாதி வஸ்துக்களெல்லாம் அனாதியாயிருக்க முடியாது. சேர்க்கையால் உண்டானதெல்லாம் அதற்கு முன் இருந்ததில்லை. பிரிந்த பின்னும் இருப்பதில்லை. இதை நீ ஒப்பாவிட்டால், கடினமான பாறை, வைரம், இரும்பு இவற்றைத் துண்டு துண்டாக்கி பொடியாக்கி உருக்கிப் பார். அவை தனித்தனி அணுச்சேர்க்கை என்றறிவாய். ஒருநாள் அவை துண்டுதுண்டாகப் பிரிந்துப் போகும்.

வினா: அனாதி இறைவன் இல்லை; யாராவது ஒருவன் யோகப் பயிற்சியால், அணிமாதி சித்தியால், சர்வக்ஞாதி

குணங்களைக்கொண்ட ஞானியாகிறன்; அந்த ஜீவனையே பரமேச்வரன் என்கிறர்கள்.

**விடை:** அனுதி ஈஸ்வரன் உலகைப் படைக்காவிட்டால், சாதனத்தால் சித்திபெறும் ஜீவனுக்கு ஆதாரமான நிலம், உடல், இந்திரியங்களை யார் உண்டாக்கினர்? இவையின்றி ஜீவன் சாதனம் செய்யமுடியாதே, சாதனமின்றி சித்தி எப்படி வரும்? ஜீவன் அப்படிச் சாதனுசித்தி பெற்றும் ஈச்வரனுக்குச் சமானமாக முடியுமா? பரமன் ஸ்வயம் சித்தன்; சனுதனன், அனுதிசித்தன், அனந்தசித்தன். ஜீவ ஞானம் எவ்வளவு உச்சமாக வளர்ந்தாலும் மட்டுப்பட்டதே, பரிமிதமானதே. மனிதன் திறமையும் ஓரளவே. அவன் அனந்த ஞானி, அனந்த சத்திமானுக முடியாது. இதுகாறும் எந்த யோகியும், இறைவனின் சிருஷ்டிக்கிரமத்தை மாற்றிய தில்லை. இனியும் மாற்றமுடியாது. அனுதிசித்தனை பரமேச்வரன் கண்ணுல் காண, காதால் கேட்கவேண்டும் என்று விதித்தான். எந்த யோகியும் இவ்விதியை மாற்ற முடியாது. ஜீவன் ஒருகாலும் ஈசனுக முடியாது.

**வினு:** கல்ப கல்பாந்திரங்களிலும் ஈச்வரன் சராசரங்களை வெவ் வேறுவிதமாக சிருஷ்டிக்கிருரா அல்லது ஒரேவிதமாகவா?

**விடை:** அது இப்போது இருப்பது போலவே முன்னும் இருந்தது. இனியும் இருக்கும். வித்தியாசம் ஒன்றுமிருப்ப தில்லை. வேதம் சொல்லுகிறது:—

सूर्याचन्द्रमसौ धाता यथापूर्वमकल्पयत् ।
दिवं च पृथिवीं चान्तरिक्षमथो स्वः ॥ (ருக். 10, 190, 3)

"பரமேச்வரன் (தாதா) எப்படி முன்னே சூரியன், சந்திரன், மின்னல் (மின்சாரம்), பூமி, அந்தரிக்ஷம் முதலிய வற்றைப் படைத்தாரோ, அப்படியே இப்போதும் படைத்திருக் கிருர். பின்பும் அப்படியே படைப்பார்." ஆகவே இறைவன் செயல் மாசற்றது; எப்போதும் அது ஒரே நிதானமாயிருக்கும். சிற்றறிவும், தேயும்புத்தியும் கொண்டவன் செயலே குற்றம் நிரம்பியிருக்கும்; இறைவன் செயல் நிறைவானது.

**வினு:** சிருஷ்டி விஷயத்தில் வேதாதி சாஸ்திரங்களுள் ஒருமையா, முரணு?

**விடை:** ஒருமையே; முரணில்லை.

**வினு:** முரணில்லை யென்றால் தைத்திரிய உபநிஷத்தில் இவ்வாறு காண்பானேன்?

तस्माद्वा एतस्मादात्मन आकाशः सम्भूतः। आकाशाद्वायुः। वायोरग्निः। अग्नेरापः। अद्भ्यः पृथिवी। पृथिव्या ओषधयः। ओषधिभ्योऽन्नम्। अन्नाद्रेतः। रेतसः पुरुषः। स वा एष पुरुषोऽन्नरसमयः॥

(தைத்திரீயம்—ப்ரம்மானந்தவல்லி 1)

பிரகிருதி காரண வடிவப் பொருள்; அதிலிருந்து பரமன் எங்கும் நிறைந்த ஆகாசத்தை விளக்கினார்; உண்மையில் ஆகாசம் உண்டாக்கப் பெற்றதன்று; ஏனெனில் ஆகாசத்தை விட்டுப் பிரகிருதியும் பரமாணுவும் எங்கே த்ங்கும்? ஆகாசத்திலிருந்து வாயு, பிறகு அக்கினி; அக்கினிக்குப் பிறகு ஜலம், ஜலத்திற்குப் பிறகு மண், மண்ணிலிருந்து ஓஷதி, ஓஷதியிலிருந்து அன்னம், அன்னத்திலிருந்து வீரியம், வீரியத்திலிருந்து உடலும் போந்தன. இங்கே (தைத்திரியத்தில்) ஆகாசத்திலிருந்து சாந்தோக்யத்தில் அக்கினியிலிருந்து, ஐதரேயத்தில் ஜலத்திலிருந்து சிருஷ்டி உண்டானதாகச் சொல்லப்படுகிறதே; வேதத்தில் சில இடங்களில் புருஷன் சில இடங்களில் ஹிரண்ய கர்ப்பன், மீமாம்ஸத்தில் கர்மம், வைசேஷிகத்தில் காலம், நியாயத்தில் பரமாணு, யோகத்தில் புருஷார்த்தம், சாங்கியத்தில் பிரகிருதி, வேதாந்தத்தில் பிரம்மத்திலிருந்து சிருஷ்டி வந்ததாகக் காண்கிறோம். இவற்றில் எது மெய் எது பொய்?

**விடை:** இதெல்லாம் மெய்தான் பொய்யில்லை. விபரீத அர்த்தம் செய்வதே பொய். ஏனெனில் பரமேச்வரன் நிமித்தம், பிரகிருதி உலகின் உபாதான காரணம். ஊழியின் பிறகு, ஆகாசாதிக் கிரமத்தில் சிருஷ்டி யுண்டாகிறது; எந்தெந்தப் பிரளயம் உண்டாகிறதோ, அததனின்று சிருஷ்டி உண்டாகிறது. அதாவது ஆகாசம் அல்லது வாயுப் பிரளயம் இல்லாமல் அக்னிப் பிரளயம் ஏற்பட்டால், அக்னிக்கிரமத்தில், அக்னியும் மின்சாரமும் இன்றி ஜலப் பிரளயம் வந்தால், அடுத்த சிருஷ்டி ஜலக் கிரமத்தில் உண்டாகிறது. அதாவது எந்தெந்த பிரளயம் எதெதுவரை ஆகிறதோ, அந்தந்த நிலைப்படி சிருஷ்டி ஆரம்பமாகிறது. புருஷன் அல்லது ஹிரண்யகர்பன் என்பதெல்லாம் ஈச்வரன் பெயர்கள் என்பதை முதல் அத்தியாயத்திலேயே சொன்னோம். ஆனல் ஒரே விஷயத்தைப்பற்றி முரணுகப்

பேசுவதே விரோதம் என்பது. முன் சொன்ன ஆறு சாஸ்திரங்களிலும் காணும் சிருஷ்டிக் கிரமங்களில் முரண் இல்லை. ஆறு சாஸ்திரங்களும் விரோதமின்றி ஒன்றோடொன்று இணைந்திருப்பதைப் பார்:

மீமாம்சம் "வினை முயற்சியின்றி உலகில் எதுவும் உண்டாக்க முடியாது" என்கிறது.

வைசேஷிகம் "காலஞ் செலவிட்டாலன்றி ஒன்றும்செய்ய முடியாது" என்கிறது.

நியாயம் "உபாதான காரணமின்றி எதுவும் செய்ய முடியாது" என்கிறது.

யோகம் "வித்தை ஞான விசாரமின்றி எதுவும் இயலாது" என்கிறது.

சாங்க்யம் "தத்துவச் சேர்க்கையின்றி எதுவும் நடக்காது" என்கிறது.

வேதாந்தம் "கர்த்தாவின்றி எப்பொருளும் உண்டாகாது" என்கிறது.

இவ்வாறு சிருஷ்டி ஆறு காரணங்களால் நடக்கிறது. அந்த ஆறு காரணங்களின் விளக்கம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சாஸ்திரத்தில் உள்ளது. இதனால் அவற்றுள் விரோதம் சிறிதும் இல்லை. ஆறு பேர் சேர்ந்து ஒரு வீட்டுக் கூரை மேய்வதுபோலவே, ஆறு சாஸ்திரங்களும் சேர்ந்து சிருஷ்டி காரியத்தை விளக்குகின்றன. ஒருவன் ஆறுபேரை யானை பார்க்க அழைத்துச் சென்றான். அவருள் ஐவர் குருடர்; ஒருவன் மந்தக்கண்ணன். ஒவ்வொருவருக்கும் யானையின் ஒவ்வோர் உறுப்பைக் காட்டி யானை எப்படியிருக்கிறது என்று அவன் கேட்டான். அவருள் குருடன் 'கம்பம் போல்' என்றான்; மற்றொருவன் 'விசிறிபோல்' என்றான்; மூன்றாமவன் 'உலக்கைப்போல்' என்றான்; நான்காமவன் 'துடைப்பம்போல்', ஐந்தாமவன் 'மேடை' என்றான்; ஆறாமவன் 'ஒரு எருமைக் கடாவை நான்கு தூண்கள் தாங்கி நிற்கின்றன' என்றான். இவ்வாறே தற்காலத்தவர் ரிஷி வாக்குகளைக் கற்காமல், சம்ஸ்கிருதத்திலும் பிற மொழிகளிலும் சிற்றறிவாளர் கற்பனை செய்த அனரிய அபக்குவ நூல்களைப் படித்து, ஒருவரை ஒருவர் இகழ்வதில் மகிழ்ந்து, வீண் குதர்க்கமும் பொய்வாதமும் பேசித் திரிகிறார்கள். இவர்கள் உரை அறிவாளர் மதிக்கத் தக்கதன்று. ஏனெனில் குருடனைப் பின்பற்றும் குருடருக்குத் துன்பமே கதி.

அற்பக் கல்வியும் சுயநலமும் இந்திரிய சுகமும் தேடும் தற்கால மாக்கள் உலகை நாசம் செய்கிறார்கள்.

வினா: காரணமின்றிக் காரியம் இல்லை. எனில் காரணத்திற்குக் காரணம் ஏன் இல்லை?

விடை: அடா அப்பாவி! உன் மூளையைக் கொஞ்சம் செலுத்திப் பார்க்கக் கூடாதா? பாரப்பா, உலகில் இரண்டே பதார்த்தங்கள் உண்டு; ஒன்று காரணம்; மற்றொன்று காரியம். காரணம் காரியமாகாது; காரியம் காரணமாகாது. மனிதன் சிருஷ்டியை உள்ளபடி அறியாதமட்டும், உண்மையறிவும் மலராது.

नित्यायाः सत्त्वरजस्तमसां साम्यावस्थायाः प्रकृतेरुत्पन्नानां परमसूक्ष्मानां पृथक् पृथग्वर्त्तमानानां तत्त्वपरमाणूनां प्रथमः संयोगारम्भः संयोगविशेषादवस्थान्तरस्य स्थूलाकारप्राप्तिः सृष्टिरुच्यते ।

பிரகிருதி நித்யஸ்வரூபம்; அது சத்வ, ரஜோ, தமோ குணங்கள் ஒருங்கே சேர்ந்தது. அதனின்று வந்த முதல் தத்துவ அவயவம் அதி சூக்ஷ்மமான பரமாணுவே. இப்பரமாணுவின் சேர்க்கையே முதல் சிருஷ்டி. பரமாணுக்கள் தனித் தனியாக இயங்கும்; அது பல வகையில் பல நிறையில் கூடிப் பல நுட்பமான, பருமனான உருக்களைத் தாங்கும்; இவை பெருகிப் பெருகியே உலக சிருஷ்டியாகும். சிருஷ்டி என்பது பரமாணுச் சேர்க்கையே. இந்தச் சேர்க்கைக்கு முன்பே இருந்ததும், இச் சேர்க்கை கலைந்த பிறகும் இருப்பதுமான பொருளே காரணம் என்பது. இந்தச் சேர்க்கைக்குப் பிறகு உண்டாவதே காரியம்; அது கலைந்த பிறகு இராது. காரணத்தின் காரணம், காரியத்தின் காரியம், கர்த்தாவின் கர்த்தா, சாதனத்தின் சாதனம், சாத்தியத்தின் சாத்தியம் என்ன என்று கேட்பவன், பார்த்தும் குருடன், கேட்டும் செவிடன், அறிந்தும் மூடனுவான். கண்ணுக்குக் கண், விளக்குக்கு விளக்கு, சூரியனுக்குச் சூரியன் எப்போதாவது இருக்க முடியுமா? எதனின்று ஒன்று உண்டாவதோ அது காரணம்; உண்டாகும் பொருள் காரியம். காரணத்தைக் காரிய ரூபமாக்குவோன் கர்த்தா. பகவத் கீதை சொல்லுகிறது:

नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः ।

उभयोरपि दृष्टोन्तस्त्वनयोस्तत्त्वदर्शिभिः ॥ (பகவத்கீதை 2-16)

அஸத்திற்கு இருப்பில்லை; ஸத்திற்கு இன்மையில்லை. இந்த இரண்டின் பான்மையும் தத்துவ தரிசிகள் கண்டறிந்தனர். மற்ற

பக்ஷபாதமுள்ள, கருத்தற்ற மாசுற்ற அறிவிலிகளுக்கு; இந்த விஷயம் எப்படி எளிதில் விளங்கும்? ஏனெனில் கற்றுத் தெளிந்து நல்லோர் உறவால் முழுதும் ஆராய்ந்தறியாதவன் மயக்க வலையில் சிக்கியலைகிறான். எல்லா வித்தைகளையும், சித்தாந்தங்களையும் கற்றறிந்தவர், அறிய முயலுவோர், அறிந்து பிறருக்கு நேர்மையாகத் தெளிவுறுத்துவோர் வாழ்க! அவர்களே தன்யர்கள்! (புண்ணியர்கள்!) இதிலிருந்து இவ்வுலகு காரணமின்றி உண்டானது என்பவன், என்றும் அறியாதவன் என்றாகிறது.

சிருஷ்டி காலம் வந்ததும் பரமாத்மா பரம சூக்ஷ்மாணுக்களைக் கூட்டுகிறான். இந்தப் பரம சூக்ஷ்மப் பிரகிருதி காரணத்திலிருந்து, முதலில் வரும் சிறிது தூல வஸ்துவே மஹத் தத்துவம் எனப்படும். அதினினும் கொஞ்சம் பருமனாக வருவது அஹங்காரம்; அஹங்காரத்திலிருந்தே ஐந்து சூக்ஷ்ம பூதங்களும், மெய் வாய் கண் மூக்கு செவி ஆகிய பஞ்ச ஞானேந்திரியங்களும், வாக்கு, கை, கால், கருவாய், எருவாய் ஆகிய பஞ்ச கர்மேந்திரியங்களும், பதினோராவது தத்துவமான மனமும் உண்டாகின்றன. பிறகு ஐந்து தன்மாத்திரைகள் பல ஸ்தூலாவஸ்தைகளை யடைந்து, முறையாக ஐந்து ஸ்தூல பூதங்களாகின்றன. அவையே உலகோருக்குப் புலனாவன. அவற்றினின்று பல விதமான மூலிகைகள், மரஞ்செடிகள், அவற்றினின்றும் அன்னம், அன்னத்திலிருந்து வீரியம், வீரியத்திலிருந்து சரீரம் உண்டாகும். ஆனால் ஆதி சிருஷ்டியில் புணர்ச்சி யில்லை. ஏனெனில் ஆண் பெண் உருவங்களைப் படைத்து ஜீவ ஸம்யோகம் செய்த பிறகே மைதுன சிருஷ்டி நடக்கிறது.

அறிஞர்கள் கண்டு வியக்கும்படியான ஞான சிருஷ்டி உடலில் நடப்பதைப் பார்! உள்ளே எலும்புத் தொகுப்பு, நாடி நரம்பு பின்னல், இதில் மாமிசம் அப்பி, மயிர் நகங்களுடன் கூடிய தோல் போர்த்திருக்கிறது. இதயம், கல்லீரல், மண்ணீரல், நுரையீரல் (காற்றுப்பை) இந்திரியங்களெல்லாம் எவ்வளவு நன்றாயமைந்துள்ளன! தலை, மூளையின் அமைப்பு, கண் நரம்புகள், கண்ணின் நுட்ப நரம்பு வலைகள், ஜவ்வுகள், இந்திரிய போகவுணர்வு, ஜீவனின் ஜாக்ர-ஸ்வப்ன-சுஷுப்தி அவஸ்தைகளை அனுபவிக்கும் நிலையங்களின் நிர்மாணம், தாதுக்களின் அமைப்புகள் இன்னும் உடலின் கலையழகு நிரம்பிய அற்புதங்களைப் பரமேச்வரனைத் தவிர வேறு யார் செய்யமுடியும்! இதைத்

தவிர பலவகையான ரத்னங்கள், அணி செய்யும் பூமி, ஆல் போன்ற மரங்களை அடங்கிய விதைகளின் அதி சூக்ஷ்ம ரசனை, பச்சை, வெள்ளை, மஞ்சள், கருமை, செம்மை முதலிய வர்ண ஜாலங்களுடன் கூடிய இலை, பூ, பழம், கிழங்குகள், வேர்கள்; இனிப்பு, துவர்ப்பு, உப்பு, உரப்பு, கசப்பு, புளிப்பு முதலிய பல சுவைகள், நறுமண பூக்கள், இலைகள், கனிகள், கந்தமூல பலாதிகள், தானியங்கள்—இவற்றைப் பரமேச்வரனைத் தவிர வேறு யார் செய்யமுடியும்? கோடிக்கணக்கான கோளங்கள், சூரிய சந்திரர், உலக நிர்மாணம், தாரணம், இயக்கம், நியமங்களெல்லாம் பரமேச்வரனைத் தவிர வேறு யாரும் செய்யமுடியாது.

நாம் ஒரு பொருளைக் காணும்போது இரண்டு ஞானங்கள் உதிக்கின்றன: ஒன்று பொருள் எப்படி யிருக்கிறது என்பது, மற்றொன்று அதைச் செய்வதன் யார் என்னும் அறிவு. ஒரு காட்டில் ஒரு நகை கிடைத்தால் அது தங்க நகை, கலைவல்ல தட்டான் செய்தது என்று அறிகிறோம். இதேமாதிரி பலவிதமான சிருஷ்டி அற்புதங்களைக் கண்டதும், அவற்றைப் படைத்த பரமேச்வரன் ஒருவன் உண்டு என்றறிகிறோம்.

வினா: முதலில் படைக்கப்பட்டது பூமியா மனிதனா?

விடை: பூமி முதலியவையே. ஏனெனில் பூமியின்றி மனிதன் வாழ முடியாது.

வினா: முதலில் படைக்கப்பட்டது ஒரு மனிதனா பல மனிதரா?

விடை: பல மனிதர். ஏனெனில் ஸத்கர்மங்களைச் செய்த ஜீவர்கள் ஈச்வர சிருஷ்டியாக ஆதியில் உண்டானார்கள்.

मनुष्या ऋषयश्च ये । ततो मनुष्या अजायन्ते ॥

(யஜுர் - யஜு.ப்ராம்ம)

"ஆதியில் பல மனிதரும் ரிஷிகணங்களும் உண்டானார்கள்; அவர்களால் மனித மரபு வளர்ந்தது" என்பது யஜுர்வேத வாக்கு. இந்தப் பிரமாணத்தால் ஆதியில் நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான மனிதர் உண்டானார்கள் என்பதாகிறது. சிருஷ்டியை நோக்கும்போது மக்கள் பல தாய் தந்தையரிடமிருந்தே வந்திருக்க வேண்டுமென்று நிச்சயமாகிறது.

வினா: ஆதி சிருஷ்டியில் மனிதர் பாலர், யுவர், விருத்தராகப் படைக்கப்பட்டார்களா அல்லது மூன்றும் சேர்ந்தா?

**விடை:** யுவர்களாகவே மனிதர் படைக்கப்பட்டார்கள். ஏனெனில் பாலர்களானால் அவர்களைப் பாதுகாக்கப் பிற மனிதர் வேண்டும்; விருத்தரானால் புணர்ச்சியால் மரபை வளர்க்க முடியாது.

**வினா:** சிருஷ்டிக்கு ஆரம்ப காலம் உண்டா இல்லையா?

**விடை:** இல்லை. பகலுக்கு முன் இரவு, இரவுக்கு முன் பகல்; பகலுக்கப்புறம் இரவு, இரவுக்கப்புறம் பகல் வந்து கொண்டேயிருப்பது போலவே, சிருஷ்டிக்கு முன் பிரளயம், பிரளயத்திற்கு முன் சிருஷ்டி, சிருஷ்டிக்குப் பிறகு பிரளயம், பிரளயத்திற்குப் பிறகு சிருஷ்டி, அனாதி காலந் தொட்டு இந்தச் சக்கரம் வந்துக் கொண்டிருக்கின்றன. இதற்கு ஆதி அந்தமில்லை. ஆனால் இரவு பகலின் உதயமும், அஸ்தமனமும் கண்ணுக்குப் புலனாகும். அதுபோல் சிருஷ்டிக்கும் பிரளயத்திற்கும் ஆதியந்தம் உண்டு. பரமாத்மா, ஜீவன், ஜகத்தின் காரணம் இம்மூன்றும் இயல்பாகவே அனாதி. உலகின் உற்பத்தி, நிலைப்பு, அழிவுகள் ஆற்றோட்டம்போல் என்றும் உள்ளவை. கோடையில் ஆறு வற்றுகிறது, ஓட்டம் இல்லை; மாரியில் நிறைந்து ஓடுகிறது. இது போலத்தான் உலக ஓட்டமும் என்றறிக. பரமேச்வரன் குணகர்ம சுபாவங்கள் அனாதியாயிருப்பதுபோல் அவன் உலகின் தோற்றம், நிலைப்பு, மறைவுகளும் அனாதியே. ஈச்வரன் குணகர்ம சுபாவங்களுக்கு ஆதியந்தமில்லாதது போலவே அவர் கடமை தொழிலுக்கும் ஆதியந்தமில்லை.

**வினா:** இறைவன் சில ஜீவர்களுக்கு மனிதப் பிறவி, சிலவற்றிற்குச் சிங்கம் போன்ற கொடும் பிறவி, சிலவற்றிற்கு பசு மான் போன்ற சாதுப் பிறவி, சிலவற்றிற்கு மரம், சிலவற்றிற்குப் புழு பூச்சி, பட்சிப் பிறவி தருவானேன்? இதனால் பரமாத்மா பக்ஷபாதமுள்ளவராகிறாரே!

**விடை:** அது பக்ஷபாதமில்லை. முன்வினைப்படியே இறைவன் ஜீவர்களுக்கு உடலைத் தருகிறான்; வினைக்கேற்ற பிறவி தரத் தவறிவிட்டால்தான் பக்ஷபாதமாகும்.

**வினா:** மனிதனின் ஆதி சிருஷ்டி எந்த இடத்தில் நடந்தது.

**விடை:** 'த்ரிவிஷ்டபம்' என்னும் இன்றைய 'திபெத்தில்.'

**வினா:** ஆதி சிருஷ்டியில் இருந்தது ஒரே ஜாதியா பல ஜாதிகளா?

பக்கம் · ௨௧௪ ஜகத்காரிய உலககாரணம் · பரமாணுக்கள் அணுக்களின் சேர்க்கையால் பரமாத்மா உலகத்தினை யமைத்தார்



விடை: இருந்தது ஒரே மனித ஜாதியே. பிறகு ருக் வேதத்தில் சொல்லியபடி ஆரியர் தஸ்யுக்கள் என்ற இரண்டு பெயர்கள் எழுந்தன.

"विजानीह्यार्यान्ये च दस्यवः" (ரிக் 1-51-8)

ஆரியர் சிறந்தவர், நேரியர், அறிஞர், தெய்வத்தன்மையர். தஸ்யுக்கள் துட்டர், திருடர், மூர்க்கர். "उत शूद्रे उतार्ये" என்ற அதர்வ வேத வாக்குப்படி ஆரியருள் பிரம்ம, க்ஷத்ரிய, வைஷ்ய சூத்ரரென்னும் நான்கு பேதங்கள் உண்டாயின. துவிஜ, வித்வான்கள் ஆரியர்களென்றும், மூர்க்கர் அனரியர் என்றும் அழைக்கப்பட்டார்கள்.

வினா: பிறகு அவர்கள் இங்கே இப்படி வந்தார்கள்?

விடை: ஆரியர் அறிஞர்; தஸ்யுக்கள் அறிவிலி அரக்கர்—இவ்விருவருக்கும் ஓயாச் சண்டை நடந்தது. தொல்லை பொறுக்காமல் நல்லோர் ஆரியர் இந்த உத்தம கண்டத்தில் வந்து குடியேறினார்கள். அதனால் இதற்கு ஆர்யாவர்த்தம் என்று பெயருண்டானது.

வினா: ஆர்யா வர்த்தத்தின் எல்லை எது?

விடை:

आसमुद्रात्तु वै पूर्वादासमुद्रात्तु पश्चिमात् ।
नयोरेवान्तरं गिर्योरार्य्यावर्तं विदुर्बुधाः ॥ 1 ॥

सरस्वतीदृषद्वत्योर्देवनद्योर्यदन्तरम् ।
तं देवनिर्मितं देशमार्य्यावर्त्तं प्रचक्षते ॥ 2 ॥ (மனு. 2, 22, 17)

மனு சொல்லுகிறார்: வடக்கே இமாசலம், தெற்கே விந்தியாசலம், கிழக்கிலும் மேற்கிலும் கடல்—இந்த எல்லைக்குட்பட்டதே ஆர்யா வர்த்தம். (1) அல்லது மேற்கே சரஸ்வதி நதி (சிந்து நதி அல்லது அடகம்), கிழக்கே த்ருஷத்வதி அதாவது கிழக்கே நேபாள மலைகளில் உதித்து, அஸ்ஸாமுக்குக் கிழக்கே பிரம்மா (பர்மா)வுக்கு மேற்கெல்லையிற் பாய்ந்து வங்காளக் கடலில் கலக்கும் பிரம்மபுத்ரா நதி, வடக்கே இமாலயம், நடுவே விந்தயம், தெற்கே இராமேஸ்வரம் வரையிலுள்ள பிரதேசமெல்லாம் ஆரிய வர்த்தமே. ஏனெனில் அப்பிரதேசத்தில் தேவர் (வித்வான்கள்) ஆன நேரிய நல்லோர் குடியேறி வசித்தனர்.

வினு: இந்நாட்டிற்கு முன்னே என்ன பெயர் இருந்தது? இதன் பூர்வகுடிகள் யார்?

விடை: முன்னே இதற்கு ஒரு பெயருமில்லை. ஆரியர்களுக்கு முன்னே இத்தேசத்தில் யாரும் வசிக்கவில்லை. ஏனெனில் ஆதி சிருஷ்டிக்குக் கொஞ்ச காலத்திற்குப் பின்பு திபேத்தி லிருந்து ஆரியர் இங்கே வந்து குடியேறி வசித்தனர்.

வினு: சிலர் சொல்லுகிருர்கள் இவர்கள் ஈரானிலிருந்து வந்த னர். அதனுல் அவர் ஆரியர் ஆனுர். முன்னே இங்கே காட்டு மனிதர் வசித்தனர். அவர்களை அசுரர், ராக்ஷஸர் என்றனர்; அதாவது ஆரியர் தம்மைத் தேவர்கள் என்ற னர்; பூர்வீகருடன் போர் நிகழ்ந்தது. அவர்களை அசுரர்கள் என்றும், அவருடன் நடந்த போரை தேவாசுர யுத்தம் என்றும் சொன்னுர்கள். இந்தக் கதை உண்மையா.

விடை: இந்தச் செய்தி முழுப் பொய். ஏனெனில்,

विजानीह्यार्यान्ये च दस्यवो बर्हिष्मते रन्धया शासद व्रतान् ॥ (ருக் 1-51-8)

उत शूद्रे उतार्ये ॥ (அதர் 19-62)

அறவோர், அறிஞர், புனிதர், நல்லோர் ஆரியர் எனப் படுபவர். இத்தன்மைகளுக்கு விரோதமான துஷ்டர், திருடர், அதர்மிகள், அறிவிலிகள், தஸ்யுக்கள் எனப்படுவோர். பிரம்ம க்ஷத்திரிய, வைசியர் ஆரியர்; சூத்திரர் அனுரியர் எனப்படுவார். வேதமே இவ்வாறு சொல்லுவதனுல் அன்னிய நாட்டவரின் கற்பனைகளை அறிவாளர் ஒப்ப முடியாது. தேவாசுர யுத்தங்களில் அர்ஜுனன், மஹாராஜா தசரதர் போன்ற ஆரிய நாட்டார், ஆரியருக்குத் துணை நின்றதால் மிலேச்ச அசுரர் தோற்றனர். இதனின்று ஆரிய வர்த்தத்திற்கு அப்பால், புறம்பே வடக்கு, வட கிழக்கு, கிழக்கு, தென் கிழக்கு, தெற்கு, தென் மேற்கு, மேற்கு, வட மேற்கு—நாற்புற பிரதேசங்களிலும் வசித்த மனி தர்க்கே அசுரர் என்று பெயர். அவர்கள் இமாலயப் பிரதேசங் களைத் தாக்கியபோது, ஆரிய வர்த்த மன்னர் வடக்கே சென்று ஆரியருக்குத் துணைபுரிந்தனர். தெற்கே ஸ்ரீ ராமச்சந்திரனுக்கும் இராவணனுக்கும் நடந்தது தேவாசுர யுத்தமன்று; அதை ராம ராவண யுத்தம் அல்லது ஆரியருக்கும் ராக்ஷஸருக்கும் நடந்த யுத்தம் என்பர். ஆரியர் ஈரானிலிருந்து வந்து காட்டாளரைப்

போரில் வென்று அரசரானார் என்று எந்த சம்ஸ்க்ருத நூலிலும் இதிஹாஸத்திலும் எழுதப்படவில்லை. உண்மை இப்படியிருக்க விதேசிகள் (அந்நியர்கள்) சொல்லுவதை எப்படி நம்புவது?

म्लेच्छवाचश्चार्यवाचः सर्वे ते दस्यवः स्मृताः ॥ (மனு 10-45)

म्लेच्छदेशस्त्वतः परः ॥ (மனு 2-23)

ஆரிய வர்த்தத்திற்குப் புறம்பான நாடுகள் மிலேச்ச தேசம், தஸ்யுதேசம் எனப்படும். ஆரிய நாட்டின் வடகிழக்கு, வடக்கு, வடமேற்கு, மேற்கில் வசித்தவர் தஸ்யு, மிலேச்சர் எனப் பெற்றனர். இன்றும் அபிசீனியர்களின் (நீக்ரோக்கள்) பயங்கர வடிவு ராக்ஷஸ வர்ணனைக்கு ஒத்திருக்கிறது. ஆரிய வர்த்தத்தின் மறுபக்கம் பாதாள தேசத்தில் வசித்தவர் பெயர் நாகர். ஆரிய நாட்டின் காலடியில் இத்தேசம் இருந்ததால் பாதாளம் என்ற பெயர், அந்நாட்டு மக்கள் நாகன் என்ற மன்னன் வழிவந்ததால் நாகர் என்ற பெயர் அவர்களுக்காயிற்று. அந்த வம்சத்தின் பெண்ணான உலோபியை அர்ஜுனன் மணந்தான். இக்ஷ்வாகு வம்ஸத்திலிருந்து கௌரவ பாண்டவ வம்ஸம் வரையில் பூகோளத்தில் ஆர்ய ராஜ்யமும், வேதப் பிரசாரமும் தழைத் தோங்கின. ஆரியவர்த்தமில்லாத மற்ற நாடுகளிலும் வேத தர்மம் அனுசரித்திருந்தனர்.

இதிலிருந்து நாம் உணர்வதென்னவெனில், முதல் அறிஞர் பிரம்மா; அவர் பிள்ளை விராட்! விராட் மைந்தன் மனு; மனுவுக்கு மரீசி முதலான பத்துப் புதல்வர் இருந்தனர். இவருள் ஸ்வயம்பு முதலிய ஏழு மன்னர் மரபிலேயே இக்ஷ்வாகு வம்சம் எழுந்தது. இக்ஷ்வாகரே ஆரியவர்த்தத்தில் குடியேறி அதன் முதல் மன்னரானார். இப்போது விதேசங்களை நாம் ஆளுவ திருக்கட்டும். துர்பாக்கியத்தால் ஆரியரிடையே சோம்பலும், அசட்டையும், பரஸ்பர விரோதமும் மேலிட்டு, முன்னிருந்த அகண்ட, சுதந்திர, சுவாதீன, நிர்பய ராஜ்யம் இப்போது இல்லாமல் போயிற்று. இப்படியே போனால் மீதி கொஞ்சம் இருப்பதும் அன்னியர் அடிக்கீழ்ப்பட்டு நலியும். இப்போது சில அரசர்களே சுதந்தரமாயிருக்கின்றார்கள். கேடுகாலம் வரும் போது சுதேசிகள் பலவகைத் துன்பம் அனுபவிக்கிறார்கள். என்ன சொன்னாலும், பிறர் என்ன செய்தாலும் சுதேச ராஜ்யமே சர்வோத்தமமானது. மத மதாந்தரங்களின் நிர்பந்த மில்லாமல், பக்ஷபாத மில்லாமல், பிதா மாதாபோல் பிரஜை

களிடம் கருணையும் நியாயமும் தயையும் கொண்ட விதேச ராஜ்யங்கூட நிறைவான சுகத்தைத் தரமுடியாது. ஆனால் பல பல பாஷை, மதம், ஆசாரம், பழக்கவழக்க விகாரங்களை விட்டுவிடுவது மிகக் கடினம். இவற்றை விட்டாலொழிய முழுதும் ஒருவருக்கொருவர் உதவியாக மனமொத்து விரும்பியதைச் சாதிப்பது கடினமாகும். இதனால் வேத சாஸ்திர இதி காசங்களில் எழுதியிருப்பதை மதித்து நடப்பது நல்லோர் கடமையாகும்.

**வினா:** உலகம் உண்டாகி எவ்வளவு காலம் இருக்கும்?

**விடை:** *உலகம் உண்டாகி, வேதம் விளக்கமாகி, நூற்றுத் தொன்னூற்று ஆறு கோடியே சில லக்ஷ ஆண்டுகள் ஆயின. இதைப்பற்றி இன்னும் விரிவாக நான் எழுதி யிருக்கிற 'ருக்வேதாதி பாஷ்ய பூமிகை' என்ற நூலில் காண்க.

உலக சிருஷ்டியின் விளக்கம் இவ்வாறு: பிரிக்கமுடியாத மிகச் சிறு துணுக்குப் பரமாணு என்று பெயர். அறுபது பரமாணுக்கள் சேர்ந்து ஒரு அணு; இரண்டு அணுக்கள்கூடி ஒரு த்வியணு (ஸ்தூலவாயு); மூன்று த்வியணுக்கள் சேர்ந்தால் அக்னி; நான்கு த்வியணுக்கள் கூடியது ஜலம்; ஐந்து த்வியணுக்கள் கூடியது ப்ரிதிவி. மூன்று த்வியணுக்கள் கூடி ஒரு த்ரஸரேணு ஆகிறது. அதைப்போல் இரட்டை மடங்கு. ப்ரிதிவி போன்ற பார்க்கும் பொருள்களின் அணுக்கூறுதும். இவ்வாறு அணுச் சேர்க்கையால் படிப் படியாகப் பரமாத்மா உலகாதிகளைப் படைத்திருக்கிறார்.

**வினா:** உலகைத் தாங்குவது யார்? சிலர் ஆயிரம் தலை ஆதிசேஷன் முடிமேல் உலகம் நிற்கிறது என்பர். இன்னும் சிலர் காளைக் கொம்பின்மேல் என்பர்; வேறு சிலர் ஒன்றின் மேலும் நிற்கவில்லை என்பர்; வேறு சிலர் காற்றின் ஆதாரத் தில் நிற்பதாகச் சொல்லுவர்; மற்றும் சிலர் சூரியாகர்ஷணத் தால் நிலைநிற்கிறது என்பர். பின்னும் சிலர் கனமான உலகம் ஆகாசத்தில் கீழே கீழே போய்க்கொண்டிருப்பதாகச் சொல்லுவர். இந்த ஆறு பேர் சொல்வதில் எது உண்மை?

**விடை:** சேஷ சர்ப்பத்தின் மீதும், காளை கொம்பின் மீதும் உலகம் நிற்பதாகச் சொல்பவரை, 'சேஷன், காளைகளின்

* 196,08,52,976 வருடங்கள்.

அப்பா அம்மா பிறந்தபோது (சேஷனும் காளையும் இன்னும் பிறவாதபோது) பூமி யார் தலையில் இருந்தது' என்று கேட்க வேண்டும். பாம்பும் காளையும் எதன் மேல் நிற்கின்றன. காளைக் கொள்கையுள்ள முஸல்மான்கள் பேசமாட்டார்கள். பாம்புக் கொள்கையர் 'பாம்பு ஆமைமேல், ஆமை நீர்மேல், நீர் நெருப்பு மேல், நெருப்பு காற்றுமேல், காற்று ஆகாசத்தின்மேல், நிற்கிறது, என்பர். இவையெல்லாம் எதன்மேல் நிற்பன என்று அவர்களைக் கேட்டால், கட்டாயம் 'பரமேசன்மேல்' என்பர். சேஷனும் காளையும் யார் மக்கள் என்று கேட்டால், காளை பசுவின் கன்று; சேஷன் கச்யபாவின் (கூர்மத்தின்), கச்யபா மரீசியின்; மரீசி மனுவின், மனு விராடனின், விராட் பிரம்மாவின் புதல்வர் என்பர். பிரம்மா சிருஷ்டி ஆதியில் உண்டானவர்; சேஷன் பிறந்தபோது ஐந்து தலைமுறை கழிந்துவிட்டது. அது வரையில் பூமியைத் தாங்கியது யார்? கச்யபர் பிறந்தபோது பூமி யார் தலையில் நின்றது? என்று கேட்டால் 'நீயும் கப்சுப் நானும் கப்சுப்' என்பர். அவ்வளவுதான். சண்டைபோடத் தொடங்குவார்கள்.

இதன் உண்மை: 'சேஷம்' என்றால் 'மீதம்' (பாக்கி) என்றும் பொருளாகும். யாரோ ஒரு கவி "शेषाधारा पृथिवीत्युक्तम्" "சேஷன் ஆதாரத்தில் பூமி நிற்கிறது" என்றார். அதன் பொருளறியாமல் பிறர் பாம்புப் புளுகைக் கட்டி விட்டார்கள். பிரளயகாலத்தில் மாறாது நிலைத்திருப்பது சேஷமாயிருப்பது பரமாத்மாவே. அதன் ஆதாரத்தில் உலகம் இருக்கிறது, என்பதே கவியின் பொருள். "காலத்தால் மாறாது, என்றும் அழிவற்றுள்ள உண்மை (சத்ய) பொருளான பரமேசுவரனே, பூமி சூரியன் முதலிய எல்லா லோகங்களையும் தாங்குகிறான்" என்று ருக்வேதம் சொல்லுகிறது.

सत्येनोत्तभिता भूमिः ॥ (ருக். 10-85-1)

உக்ஷா உலகைத் தாங்குகிறது என்று மற்றொரு ருக்வேத வாக்குள்ளது.

उक्षा दाधार पृथिवीमुत द्याम् ॥ (ருக்வேதம்)

உக்ஷா என்பதற்குக் காளை என்றும் பொருள். யாரோ ஒரு மூடன் இதைக்கொண்டு, காளை பூமியைத் தாங்குகிறது, என்று கதை கட்டிவிட்டான். இவ்வளவு பெரிய பூமியை ஒரு காளை

தாங்குமா, முடியுமா என்று அவனுக்குத் தோன்றவில்லை. இங்கே 'உக்ஷா' என்றால் சூரியன். சூரியன் மழை பொழிவித்து உலகை ஈரமாக்குவதால் சூரியனை 'உக்ஷா' என்பார்கள். சூரியன் ஆகர்ஷண சக்தியால் உலகைத் தாங்குகிறது. ஆனால் ஆண்டவனைத் தவிர வேறு யாரும் சூரியாதிகளைத் தாங்கவில்லை.

**வினா:** சூரியன், பூமிபோன்ற அவ்வளவு பெரிய கிரகங்களைக் கடவுள் எப்படித் தாங்கமுடியும்?

**விடை:** அனந்தமான எல்லையற்ற ஆகாசத்தின் முன், பெரிய பெரிய பூகோளங்கள்கூட, சமுத்திரத்தில் ஒரு சிறு துளியினும் அற்பமானவை. அதுபோல் அனந்த பரமேச்வர சக்தி முன், எண்ணற்ற கோளங்கள் ஒரு பரமாணுவினும் அற்பமானவை. அவன் உள்ளும் புறமும் வியாபகன். "அந்தப் பரமாத்மனே எல்லாருள்ளும் நிறைந்து, எல்லாவற்றையும் தாங்குகிறான். "विभुः प्रजासु" (யஜுர் 32-8) என்பது யஜுர்வேத வாக்காகும். பௌராணிகரும், கிறிஸ்தவரும், இஸ்லாமியரும் சொல்லுகிறபடி ஈச்வரன் விபு, சர்வ வ்யாபியா யில்லாவிட்டால், இந்த சிருஷ்டிகளை யெல்லாம் ஒருகாலும் தாங்கமுடியாது. ஏனெனில் அந்த இடத்தில் இல்லாமல் யாரும் ஒரு வஸ்துவைத் தாங்க முடியாது. சிலர் 'இந்த உலகமெல்லாம் பரஸ்பர ஆகர்ஷணத்தால் தாங்கப்படுகின்றன. இவற்றைத் தாங்க பரமேச்வரன் எதற்கு?' என்று கேட்கின்றனர். 'சிருஷ்டி அனந்தமா ஸந்தமா? என்று அவர்களைக் கேட்கவேண்டும். அனந்தம் என்றால் அது பொய்; ஏனெனில் உருவுகொண்ட எதுவும் அனந்தமாக முடியாது. ஸந்தம் (மட்டுப்பட்டது) என்றால், அதன் எல்லைக்கு அப்பாற்பட்டதைத் தாங்குவது யார்? ஒருங்குப் பொருள்கள் 'சமஷ்டி', தனித்தனியானவை 'வியஷ்டி' என்பர், ஒரு மரக்கூட்டம் சமஷ்டி; தனி மரம் வியஷ்டி. எல்லா பூகோளங்களின் சமஷ்டியே ஜகம். அவையனைத்தையும் ஆகர்ஷித்துத் தாங்கும் முதல்வன் பரமேச்வரனே. அவனைத் தவிர வேறெவரும் அப்படி எல்லா

---

* ருக்வேதத்தில் "उक्षा स द्यावापृथिवी बिभर्ति" (10-31-8) என்றிருக்கிறது.

அதர்வணத்தில் "अनड्वान् दाधार पृथिवीमुत द्याम्" (4-11-1) என்றுள்ளது.

உலகங்களையும் தாங்க முடியாது. ஆகையால் 'स दाधार पृथिवीं द्यामुतेमाम् ॥'' (யஜுர் 13—14) "எவன் பூமிபோன்ற ஒளியற்ற லோக லோகாந்தங்களையும் ஆக்கித் தாங்கு பவனோ, எவன் அனைத்திலும் நிறைந்துள்ளானோ அவனே ஜகத் கர்த்தாவும் தாங்கும் சக்தியும் ஆவான்'' என்று யஜுர்வேதம் பாடுகிறது.

**வினு:** பூமி முதலிய கோளங்கள் சுற்றுகின்றனவா, அல்லது நிலையாயிருக்கின்றனவா?

**விடை:** சுற்றுகின்றன.

**வினு:** சிலர் சூரியன் சுற்றுகிறது; பூமி நிற்கிறது என்பர். சிலர் பூமிசுற்றுகிறது சூரியன் நிற்கிறது என்பர். இவற்றுள் உண்மை எது?

**விடை:** இரண்டும் பாதிப் பொய். ஏனெனில் யஜுர்வேதம் சொல்லுகிறது;

आयं गौ: पृश्निरक्रमीदसदन्मातरं पुरः ।
पितरं च प्रयन्त्स्व: ॥ (யஜுர் 3—6.)

"இவ்வுலகம் ஜலத்துடன் கூடி சூரியனுக்கு நாற்புறமும் சுற்றுகிறது.'' ஆதலால் பூமி சுற்றுகிறது.

आकृष्णेन रजसा वर्त्तमानो निवेशयन्नमृतं मर्त्यं च ।
हिरण्ययेन सविता रथेना देवो याति भुवनानि पश्यन् ॥
(யஜுர் 33—43)

சூரிய ஸவிதா மழைக்கின்றவன்; ஒளியுரு, தேஜோமயன், ரமணீயஸ்வரூபன்; அவன் எல்லா உயிர்கள்மேலும், உயிரற்ற ஜடப்பொருள்கள் மேலும் தன் அமிர்த கிரணங்களைப் பொழிகிறான்; அமுத மழை பொழியச் செய்கிறான். உருவான பொருள்களைக் காட்டுகிறான்; ஆகர்ஷண சக்தியால் எல்லாக் கிரகங்களையும் வசீகரிக்கிறான். எல்லாம் அவனைச் சுற்றி நடக்கின்றன. அவன் தன்னைச் சுற்றி வருகிறான்; பிற கிரகங்களைச் சுற்றவில்லை. ஒவ்வொரு பிரம்மாண்டத்திற்கும் ஒவ்வொரு சூரியனுண்டு. பூமியைப் போன்ற கிரகங்களுக்கு அதுவே வெளிச்சம் தருகிறது.

दिवि सोमो अधिश्रित: ॥ (அதர் 14-1-1)

"சந்திரன் சூரியனால் ஒளிர்கிறது; அதுபோலவே பூமி முதலிய கிரகங்களெல்லாம் சூரிய பிரகாசத்தால் ஒளிர்கின்றன'' என்கிறது

அதர்வவேதம். ஆனால் இரவும் பகலும் எப்போதும் உண்டு. பூமி சூரியனைச் சுற்றுகிறது; எந்தப் பகுதியின் முன் உள்ளதோ அதற்குப் பகலும், சூரியனுக்கு மறைந்த பகுதியில் இரவும் உண்டாகும். உதயம், அஸ்தமனம், ஸந்தி, மத்தியானம், நிசி முதலிய பொழுதுகள் எல்லா நாடுகளிலும் உண்டு. ஆரியவர்த்தத்தில் சூரியோதயமாகும் போது பாதாளத்தில், அதாவது அமெரிக்காவில், சூரியாஸ்தமனமாகும். இங்கே சூரியாஸ்தமனமாகும்போது அமெரிக்காவில் சூரியோதயமாகும். ஆரியாவர்த்தத்தில் நண்பகலானால் அமெரிக்காவில் நள்ளிரவாகும். இங்கே நள்ளிரவானால் அங்கே நண்பகலாகும். 'சூரியனே சுற்றுகிறது; உலகம் நிற்கிறது' என்பவர் அறியாதவர். அவ்வாறானால் சில ஆயிரம் ஆண்டுகள் பகலும் இரவும் அப்படியே இருக்கும்; ஏனெனில் சூரியனை ब्रघ्न: ப்ரதன: என்பார்கள், பூமியைவிட சூரியன் இலட்சம் மடங்கு பெரிது. கோடிக்கணக்கான கோசங்கள் தள்ளியிருக்கிறது. ஆதலால் சூரியன் பூமியைச் சுற்ற நீண்டகாலமாகும். பூமி சிறிதாகையால் விரைவில் சுற்றும். ஒரு மலை கடுகைச் சுற்றிவர நீண்டநேரமாகும். கடுகு மலையை விரைவில் சுற்றும். பூமி தன்னைத்தான் சுற்றிக்கொண்டு சூரியனை வலம் வருவதால்தான், இரவு பகல் கிரமமாக ஆகிறது. சூரியன் சுற்றாது நிலைத்திருப்பதாகச் சொல்லுவோர் வானசாஸ்திரம் தெரியாதார். அப்படி நின்றால் அது ஒரு ராசியிலிருந்து மற்றொரு ராசிக்குச் செல்லமுடியாது. மேலும் சூரியனைப் போன்ற பெருங்கோளங்கள் வானில் அசையாது நிற்கமுடியாது. "உலகம் சுழலவில்லை; ஆனால் கீழேகீழே போகிறது. ஜம்புத்வீபத்தில் இரண்டு ரவிகளும், இரு மதிகளும் உண்டு" என்று ஜைனர் சொல்லுவர். இது பங்கி (கஞ்சா) மயக்கம் போலும்! பூமி கீழேகீழே போனால் காற்று வட்டமில்லாமல் அது சின்னபின்னமாக நொருங்கிப் போகுமே. அதன்கீழ்ப்புறம் இருப்பவர்களுக்குக் காற்று அதிகமிராது. மேல்புறம் உள்ளவருக்கே காற்றோட்டம் மிகுதியாயிருக்கும். இரண்டு சூரிய சந்திரர்கள் இருந்தால் இரவிராது; கிருஷ்ணபக்ஷமிராது. ஆதலால் நம் உலகிற்கு ஒரே மதி; பல கிரகங்களுக்கும் ஒரே சூரியன் உள்ளது என்க.

வினா: சூரிய சந்திர நட்சத்திரங்கள் என்ன வஸ்துக்கள்? அவற்றில் மனிதர் முதலிய உயிர்கள் உண்டா இல்லையா?

விடை: அவை மனிதாதி உயிர்கள் உள்ள உலகங்களே.

एतेषु हीद४ सर्वं वसु हितमेते हीद४ सर्वं वासयन्ते तद्यदिद४ सर्वं वासयन्ते तस्माद्वसव इति ॥ (சத்பதம் 14-6-7-4)

பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம், சந்திரன், நட்சத்திரம், சூரியன் இவை வசுக்கள் என்பர், அங்கே உயிர்களும் பொருள்களும் வசிப்பதால். வசிக்கத் தக்க வீடு வசு. சூரிய சந்திர நட்சத்திரங்கள் உலகைப் போலவே வசு. ஆதலால் இங்குகேபோல் அங்கும் பிரஜைகள் இருக்கச் சந்தேகமென்ன? பரமேசனின் இச்சிற்றுலகம் மனிதாதிகளால் நிரம்பியிருக்கிறது. அந்த உலகங்களென்ன சூன்யமாய்விடுமா? பரமேசன் செய்த எந்தக் காரியமும் வீணாகாது; அப்படியானால் அத்தனை கோடி உலகங்கள் மனுஷ்யாதி சிருஷ்டியின்றி பாழாகுமா? ஆதலால் அங்கேயும் மனிதர் முதலிய உயிர்கள் உண்டு.

வினா: இந்த உலக மனித ஜாதிப் பிறவிகளின் உடல் உறுப்புக்கள் போலவே, அந்த உலகிலும் இருக்குமா?

விடை: உருவங்களிற் சிறிது வேறுபாடிருக்கலாம். இவ்வுலகிலேயே சீனர், எதியோப்பியர், இந்தியர், ஐரோப்பியர் முதலிய பல நாட்டாருள் நிறம், உரு, அமைப்பு, தோற்றங்களில் சிறுசிறு வேறுபாடுகள் காண்கிறோம். இதேமாதிரி லோக லோகாந்தரங்களிலும் பேதம் உண்டாகும். ஆனால் இந்நாட்டில் எதெதன் சிருஷ்டி எப்படி எப்படி யுள்ளதோ அப்படியே மற்ற உலகங்களிலும், அதே இனத்தின் சிருஷ்டியும் இருக்கும். எந்தெந்த இடத்தில் கண்முதலிய அங்கங்கள் உண்டோ, அந்தந்த இடத்திலேயே அதே அவயவங்கள் லோகாந்தரங்களிலும் அதே இனத்திற்கும் இருக்கும்

सूर्याचन्द्रमसौ धाता यथापूर्वमकल्पयत् । (ருக். 10-190)
दिवं च पृथिवीं चान्तरिक्षमथो स्वः ॥

ஏனெனில் பரமாத்மா சூரிய சந்திரர் ஆகாசம், பூமி அந்தரிக்ஷம் முதலிய வஸ்துக்களைப் பூர்வ கல்பத்தில் எப்படி அமைத்தாரோ, அப்படியே இந்தக் கல்பத்திலும், இந்த சிருஷ்டியிலும் அமைத்திருக்கிறார். அவ்வாறே எல்லா லோக லோகாந்தரங்களிலும் ஆக்கியிருக்கிறார். இதில் சிறிதும் பேதமில்லை" என்று ருக்வேதம் ஓதுகிறது.

வினா: இதே வேதம் இங்குபோல் மற்ற உலகங்களிலும் விளக்கமாயிருக்கிறதா?

**விடை :** ஆம் ; ஒரு மன்னனின் அரச நீதி நாடெல்லாம் பரவி யிருப்பதுபோலவே, ராஜ ராஜேஸ்வரனுன பரமாத்மாவின் வேத தர்மம், அவன் படைத்த எல்லா உலகங்களிலும் ஒன்று யிருக்கிறது.

**வினு :** ஜீவனும் பிரகிருதி தத்துவமும் அனுதி ; ஈச்வர சிருஷ்டி யில்லை ; அவை சுதந்தரம் ; ஆதலால் ஈச்வர அதிகாரமும் இவற்றின் மேல் ஏன் செல்ல வேண்டும் ?

**விடை :** அரசன் குடிகள் இருவரும் சமகாலத்தில் வசிக் கிருர்கள் ; குடிகள் அரசன் ஆதிக்கத்தில் இருக்கிருர்கள். அதேமாதிரி ஜீவனும் ஜட பதார்த்தங்களும் பரமேச்வரனின் ஆதிக்கத்தில் இருக்கின்றன. பரமேஸ்வரன் உலகங்களை ஆக்குகிருன் ; ஜீவர்களுக்கு வினைப் பயனைத் தருகிருன். அனைத்தையும் காக்கிருன். அவன் அனந்த சாமர்த்தியவான்; இந்த அற்பத் திறனுள்ள ஜீவனும் ஜடபதார்த்தமும் அவன் ஆதீனத்தில் இருந்தால் என்ன ? கர்மம் செய்யவே ஜீவ னுக்குச் சுதந்தரம் உண்டு. கர்ம பலனை நுகர்வதில் அது ஈச்வர நியதிக்குட்பட்டது ; பராதீனமானது. எல்லா உல கையும் படைத்தலும், காத்தலும், அழித்தலும் எல்லாம் வல்ல சர்வ சக்திமான் பரமேஸ்வரனே.

இதன் பிறகு வித்தை, அவித்தை, பந்தம், மோக்ஷம் ஆகிய விஷயங்கள் எழுதப்படும். இங்கு எட்டாம் சமுல்லாசம் பூர்த்தி யாகிறது.

ஸ்ரீமத் தயானந்த ஸரஸ்வதி சுவாமிகள் அருளிய
ஸத்யார்த்தப் பிரகாசத்தில் சிருஷ்டி, ஸ்திதி,
பிரளய விஷயங்களை விளக்கும் எட்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

## ஒன்பதாம் அத்தியாயம்

# வித்தை, அவித்தை, பந்தம், மோக்ஷம்

विद्यां चाऽविद्यां च यस्तद्वेदोभयं सह ।
अविद्यया मृत्युं तीर्त्वा विद्ययाऽमृतमश्नुते ॥ (யஜுர் 40—14)

யஜுர் வேதம் சொல்லுகிறது : வித்தை, இயலறிவு, ஆத்ம ஞானம் ; அவித்தை கர்மோபாசனை ; இரண்டின் இயல்பையும் அறிந்த மனிதன், அவித்தையால் (கர்மோசனையால்) சாவைத் தாண்டி, வித்தையால் அமுதநிலையான மோக்ஷத்தை அடைகிறான். அவித்தையின் லக்ஷணம் :

अनित्याशुचिदुःखानात्मसु नित्यशुचिसुखात्मख्यातिरविद्या ॥
(பதஞ்ஜலி யோ. சூ. சாதனபாதம் 5)

இது பதஞ்ஜலி யோக சூத்திரத்தின் வாக்கு : நாம் கண்டு கேட்கும் வினையுலகும், வினையுடலும் நிலையற்றவை. இவற்றை என்றும் இருப்பவை என்பதும், யோக பலத்தால் தேவ சரீரங்கள் எப்போதும் அழியாதிருக்கும் என்பது விபரீத புத்தியாகும். இதுவே முதல் தரமான மடமையாகும். மல ஜல மயமான அசுசி ஆபாசக் காம ரூபத்தை, பொய், களவுகளைப் பரிசுத்தமென்று நினைப்பது இரண்டாம் மடமையாகும். துன்பமே தரும் விஷய போகங்களில் அழுந்துவதே சுகம் என மயங்குதல் மூன்றாம் மடமையாகும். அனாத்ம வஸ்துக்களை ஆத்மாவாகக் கருதுவது நான்காவது மடமை. இந்த நான்கு வகையான விபரீதமும் அவித்தையாகும். இதற்கு மாறாக அநித்தியத்தை அநித்தியம், நித்தியத்தை நித்தியம், அசுத்தத்தை அசுத்தம், சுத்தத்தைச் சுத்தம், துக்கத்தைத் துக்கம், சுகத்தைச் சுகம் என்றறிவதே வித்தையாகும்.

वेत्ति यथावत्तत्त्वपदार्थस्वरूपं यया सा विद्या ।

यया तत्त्वस्वरूपं न जानाति भ्रमादन्यस्मिन्नन्यन्निश्चिनोति यया साऽविद्या ॥

ஒரு பொருளின் இயலுரு, மெய்த் தன்மையை அறிவதே வித்தை, அறிவு ; அதன் தத்துவ ஸ்வரூபம், இயலுருவை

அறியாது, மாறுபாடான பொய்த் தோற்றம் புனைதலே அவித்தை, அறியாமையாகும். கர்மமும் உபாஸனையும் அவித்தை; ஏனெனில் அவை ஸ்தூல மனக் கிரியை, அவற்றில் ஆத்மஞான விசேஷமில்லை. அதனாலேதான் சுத்த கர்மம், பரமேச்வர உபாசனை—இரண்டுமின்றிச் சாவையும் துயரையும் தாண்டமுடியாது, என்று வேதமந்திரம் சொல்லுகிறது. சுத்த கர்மம், சுத்தோபாஸனை, சுத்த ஞானம்–இவையே முக்தி தரும். அசுத்த வாழ்வும் உருத் தொழுகையும், பொய்யுரையும், பொய்யறிவும் பந்தமே தரும். மனிதன் ஒரு நொடிகூடக் கர்மம், உபாஸனை, ஞானத்தினின்று விலகியிருக்க முடியாது. ஆதலால் மனிதன் தர்மயுக்தமான, மெய்யுரை ஸத் கர்மங்களைச் செய்யவேண்டும். பொய்யுரை, அதர்மம் இரண்டையும் விடவேண்டும். இவையே முக்தி சாதனமாகும்.

வினா: எவனுக்கு முக்தி கிடைக்காது ?

விடை: பந்தமுள்ளவனுக்கு.

வினா: பந்தமுள்ளவன் யார் ?

விடை: அதர்ம, அக்ஞானாதிகளில் பிடியுண்ட ஜீவன்.

வினா: பந்தமும் மோக்ஷமும் இயல்பாக வருமா அல்லது முயற்சியாலா ?

விடை: முயற்சியால். ஏனெனில் இயல்பாக வந்தால் பந்த முக்திகளுக்கு ஒழிவே யிராது.

வினா:

न निरोधो न चोत्पत्तिर्न बद्धो न च साधकः ।
न मुमुक्षुर्न वै मुक्त इत्येषा परमार्थता ॥

(மாண்டூக்யம். கௌடபாதீய காரிகை 2-32)

இது மாண்டூக்ய உபநிஷத்தில் சொல்லப்பட்டது. ஜீவன் பிரம்மம்; ஆதலால் ஜீவன் ஒருபோதும் மறைந்ததில்லை, பிறந்ததில்லை, அதற்குப் பந்தமில்லை, சாதனத்தால் விடுபடவும் இச்சையில்லை. இதற்கு முக்தியும் இல்லை. பந்தம் இல்லாவிட்டால் முக்திக்கு அவசியமே இல்லையன்றோ ?

விடை: இது நவீன வேதாந்திகளின் பேச்சு; இதில் உண்மையில்லை. ஜீவஸ்ரூபம் அற்பம்; ஆவரணமுள்ளது, அதைப் பாசம் மறைக்கிறது. அது உடலெடுக்கிறது; பிறக்கிறது;

பாப பலன்களை அனுபவிக்கிறது; பந்தப்படுகிறது; அத னின்றும் விடுபடச் சாதனம் செய்கிறது; துக்க நிவர்த்தியை நாடுகிறது. துன்பத்திலிருந்து விடுபட்டுப் பேரின்பம் பெற்றுப் பரமாத்மனை அடைந்து முக்தி சுகம் அனுபவிக் கிறது.

**வினு:** இந்நியதிகளெல்லாம் தேகத்திற்கும், அந்தக் கரணத் திற்குமே; ஜீவனுக்கில்லை. ஏனெனில் ஜீவன் பாப புண்ய ரகிதன், சாக்ஷிமாத்ரன். சீதோஷ்ணாதிகளெல்லாம் சரீர தர்மங்கள். ஆத்மா பற்றற்றது.

**விடை:** தேகமும் அந்தக் கரணமும் ஜடமே; அவற்றிற்குக் குளிர் வெப்பமில்லை, போகமில்லை; மனிதர் போன்ற சேதன ஜீவரே குளிர் வெப்பத்தை உணர்வர், நுகர்வர். அதே மாதிரி பிராணமும் ஜடமே. அதற்குப் பசிதாகம் இல்லை. பிராணநாதனான ஜீவனுக்கே பசி, தாகம் உண் டாகும். அதுபோல் மனமும் ஜடமே; அதற்கு இன்ப துன்ப உணர்விருக்க முடியாது; மனத்தின் மூலம் இன்ப துன்பங்களை நுகர்வது ஜீவாத்மாவே. காது முதலிய புலன் களால் நல்ல தீய சப்தாதி விஷயங்களைக் கிரகித்து, ஜீவன் சுகியாகவோ துக்கியாகவோ ஆகிறது. அவ்வாறே மனம் புத்தி சித்தம் அஹங்காரம் ஆகிய அந்தக்கரணங்களால் சங்கற்ப விகற்பங்களை அறிகிறது, நினைக்கிறது, அபி மானிக்கிறது. அதற்கேற்ற தண்டனையும் பரிசும் அடை கிறது. வாளால் வெட்டியவனே தண்டனை யடைகிறான்; வாள் தண்டனை யடைவதில்லை. அதேமாதிரி தேகேந்திரியம் அந்தக் கரணம், பிராணன் மூலம் ஜீவனே நல்வினை தீவினை புரிந்து, அதற்கேற்ற இன்ப துன்பங்களை அனுபவிக்கிறது. ஜீவன் கர்மங்களுக்கு சாக்ஷியன்று; அதுவே கர்த்தாவும் பலபோகியுமாகும். கர்மங்களின் சாக்ஷி இரண்டற்ற ஏக பரமாத்மனே. கர்மத்தைச் செய்யும் ஜீவன் வினைத்தளைப் பட்டிருக்கிறான். ஜீவன் ஈச்வர சாக்ஷியன்று.

**வினு:** ஜீவன் பிரம்மத்தின் பிரதிபிம்பம். கண்ணாடி துண்டு துண்டாக உடைந்தாலும் பிம்பத்திற்கு எவ்விதமான கேடும் இல்லை. இதேமாதிரி அந்தக் கரணத்தில் பிரம்மத் தின் பிரதிபிம்பமாக ஜீவன் இருக்கிறது; அந்தக்கரணோ பாதியிருக்கு மட்டும் அப்படி யிருக்கும். அந்தக் கரணம் ஒழிந்தால் ஜீவனும் முக்தி பெறும்.

விடை: இது சிறுபிள்ளைத்தனமான பேச்சு. பிரதி பிம்பம் ஓர் உருவத்தின் நிழல். அது ஓர் உருவில் நிழலும் உருவாகும். உதாரணமாக முகம் கண்ணாடி இரண்டும் உருக்களே; இரண்டும் தனித் தனியானவை. அப்படித் தனித்தனி யின்றி உரு நிழல் வராது. உருவம் உள்ளதற்கே பிரதி பிம்பம் கண்ணாடியில் உருவாகும். பிரம்மமோ நிராகாரம், அரு, எங்கும் நிறைந்தது; அதனால் அப்பிரம்மத்திற்கு பிரதிபிம்பம இருக்கவே முடியாது.

வினா: ஆழ்ந்து தெளிந்த நீர்ப் பரப்பில் பரந்த நிராகார ஆகா சத்தின் நிழல் படிவதைப் பாரும்! அது போலவே அந்தக் கரணத்தில் பரமாத்மா பிம்பம் விளங்குகிறது. அதற்கே சிதாபாஸம் (ஜீவ நிழல்) என்கிறோம்.

விடை: இது பிள்ளைப் புத்தியின் உளறல். ஏனெனில் ஆகாசம் காணும் பொருளன்று; கண்ணால் அதைப் பார்க்கவே முடியாது.

வினா: அப்படியா! மேலே நீலமாகத் தூசிபடர்ந்து மப்பாக விரிந்திருப்பது ஆகாசமில்லையா?

விடை: இல்லை.

வினா: அப்படியானால் அஃதென்ன?

விடை: அது மண் நீர் தீயின் சிற்றணுத் தொகுதி. அதில் தெரியும் நீலம் நீராவி அணுக்களே. அவையே மழையாய் வருவன. தூசிப் படர்வு பூமியிலிருந்து காற்றில் எழுந்து மிதக்கும் துகளின் தொகுதியே. இவற்றின் பிரதி பிம்பமே நீரிலும் கண்ணாடியிலும் தெரிவது. ஆகாசத்தின் பிம்பம் அல்ல.

வினா: கடாகாசம், மடாகாசம் மேகாகாசம், மஹதாகாசம்— இவை வெவ்வேறாக விவரிக்கப்படும்; அதேமாதிரி பிரம்மமும் பிரம்மாண்டத்தில் ஈசுவரன், அந்தக் கரணத்தில் ஜீவன் எனப்படும். கடம் உடைந்தால், கடாகாசம் மஹாகாசம்— எனப்படும்.

விடை: இது புத்தியில்லாப் பேச்சு. ஏனெனில் ஆகாசம் என்றும் சின்ன பின்னமாவதில்லை. விவகாரத்திலும் 'கடத்தை, பானையைக் கொண்டு வா' என்கிறோம். கடத்

தின் ஆகாசத்தைக் கொண்டு வா என்பதில்லை. அதனால் நீ சொல்வது பொருந்தாது.

வினு: கடலில் மீன்களும் நீருயிர்களும் நீந்துவன போல, ஆகாசத்தில் பறவைகள் பறப்பன போலவே, சிதகாசப் பிரம்மத்தில் அந்தக் கரணங்கள் திரிகின்றன. அவை ஜடமே. தீயுண்ட இரும்பு போலவே பரமாத்ம ஸத்தால் சேதமாகின்றன. பிரம்மம் ஆகாசம் போல் நிச்சலம். அந்தக் கரணங்கள் மீன் பறவைகள் போல ஆடித் திரிகின்றன. ஆதலால் ஜீவனே பிரம்மம் என்பதில் குற்றமில்லை.

விடை: உனது உதாரணம் சரியில்லை. ஏனெனில் பிரம்மம் ஸர்வவ்யாபி. அதுவே அந்தக் கரணத்தில் ஜீவனுகப் பிரகாசிப்பதெனில், அதற்குத் சர்வக்ஞாதி குணங்கள் இருக்குமா இல்லையா? ஆவரணத்தால் (மறைப்பால்) சர்வக்ஞாதி குணங்கள் ஜீவனுக்கில்லை என்பாயா? பிரம்மத்தை யாதாவது மறைக்க முடியுமா? அது கண்டமா அகண்டமா? பிரம்மம் அகண்டமானுல் அதைப் படுதா போட்டு மறைக்க முடியுமா? படுதா இல்லாவிட்டால் ஜீவனுக்கு சர்வக்ஞத்வம் இல்லாததேன்? 'ஜீவனை பிரம்மம் தனது ஸ்ரூபத்தை மறந்து, அந்தக் கரணத்துடன் அலைவது போலக் காண்கிறது' என்பர் சிலர். அப்படியானுல் அந்தக் கரணத்துடன் அலைந்து திரியும் பிரம்ம பாகமெல்லாம் ஐயம், மயக்கம், அஞ்ஞானம் மேவியிருக்கும். அது விலகிய பாகமெல்லாம் சுத்த, முக்த ஞானமயமாயிருக்கும். இவ்வாறு எல்லாம் படைத்த பிரம்மத்தை அந்தக் கரணம் அலைக்கும்; அதனுல் பந்த முக்தியும் நொடி நொடிப் பொழுதில் மாறும். இப்படி நீ சொல்லும் பிரமாணம் உண்மையானுல், முன்னே கண்டதும் கேட்டதும் கூட, ஜீவனுக்கு நினைவிராது. ஏனென்றுல் அந்தக் கரணம் இடத்திற்கிடம் தாவிக் கொண்டே யிருக்கும். ஆதலால் பிரம்மம் ஒருக்காலும் ஜீவனுகாது, ஜீவனும் பிரம்மமாகாது. இரண்டும் ஒருகாலும் ஒன்ருக முடியாது, அவை எப்போதும் தனித்தனியாகவே யிருக்கும்.

வினு: இதெல்லாம் அத்யாரோபம். ஒன்றில் அதற்குப் புறம்பானதைச் சுமத்தல், நாட்டல் அத்யாரோபம் ஆகும். பிரம்ம வஸ்துமேல் ஜகத்தையும் அதன் விவகாரத்தையும்

சுமத்துவது ஞானசாதகன் (ஜிஜ்ஞாசு) தெரிந்துகொள்ளல் பயனாகும். உண்மையில் எல்லாம் பிரம்மமே.

வினா: அத்யாரோபம் செய்வது யார்?

[இது முதல் வினாவுவோன் சித்தாந்தி (சுவாமி தயானந்தர்) விடை சொல்லுவோன் நவீன வேதாந்தி]

விடை: ஜீவன்.

வினா: ஜீவன் என்றால் யார்?

விடை: அந்தக் கரணம் சூழ்ந்த சேதனமே ஜீவன்.

வினா: அந்தக் கரணத்தில் அடங்கிய சேதனமே பிரம்மமா.

விடை: அதுவே பிரம்மம்.

வினா: என்ன, பிரம்மமே தன்மேல் உலகின் பொய்க் கற்பனையைக் கற்பித்தானா என்ன?

விடை: ஆம். இதனால் பிரம்மனுக்கென்ன கேடு?

வினா: பொய்க் கற்பனை செய்பவன் பொய்யன் அன்றோ?

விடை: இல்லை. மனம் வாக்கினால் ஆகும் கற்பனையும் பேச்சுமே பொய்.

வினா: அப்படியானால் மனவாக்கினால் பொய்க் கற்பனை செய்வதும் பொய்யுரை புனைவதுமான பிரம்மம், கல்பிதமும் மித்யாவாதியும் அல்லவா?

விடை: பரவாயில்லை; நமது இஷ்டம் நிறைவேற வேண்டியதே குறி.

* பலே பொய்வேதாந்திகளே! நீங்கள் உண்மை வடிவும், உண்மை விருப்பும், உண்மை நினைப்புங் கொண்ட பரமாத்மாவைப் பொய்யனாக்கி விட்டீர்கள். இது உங்கள் துர்க்கதிக்குக் காரணமில்லையா? பரமேச்வரன் மித்யா சங்கல்பன், மித்யாவாதி என்று எந்த உபநிஷத்தின் சூத்ரம் அல்லது வேதத்தில் எழுதப் பட்டுள்ளது? திருடன் கொத்தவாலுக்குத் தண்டனை தருவது போலிருக்கிறது உன் பேச்சு. கொத்தவால் சோர (திருட)னைத் தண்டிப்பதே உசிதம்! சோரன் கொத்தவாலைத் தண்டிப்பது விபரீதமாகும். அதேமாதிரி நீ மித்யா சங்கல்பனாகி, மித்யா வாதியாகி அந்தக் குற்றத்தைப் பிரம்மத்தின் மேல் சுமத்துகிறாய்!

* இது தயானந்தர் போதிப்பது.

பிரம்மம், மித்யா ஞானி, மித்யாவாதி, மித்யாகாரியானால், அவன் அனந்தப் பிரம்மனாவது எப்படி? பிரம்மன் ஏகரசன், ஸத்ய ஸ்வரூபன், ஸத்யமானி, ஸத்யவாதி, ஸத்யகாரி! தோஷம் உன்னிடம்; பிரம்மத்திடமில்லை. நீ வித்தை என்பதும் அவித்தை. உன் அத்யாரோபமும் மித்தையே. ஏனெனில் பிரம்மமாகாமல் அஹம் ப்ரம்மா என்கிறாய்; ஜீவன் பிரம்மம் என்கிறாய்; பிரம்மத்தை ஜீவனென்கிறாய்; இது மித்யாஞானமின்றி வேறென்ன? ஸர்வ வ்யாபகன், குறுகல் மடமை கட்டுகளுக்கு உட்படமாட்டான். ஏனென்றால் மடமைச் சிறுமையும் சிற்றறிவும் ஜீவனுக்கே; எல்லாம் அறிந்து எங்கும் நிறைந்த பிரம்மத்திற்கன்று.

## பந்தமும் முக்தியும்

**வினா:** முக்தி என்றால் என்ன?

**விடை:** "मुञ्चन्ति पृथग्भवन्ति जना यस्यां सा मुक्तिः"
விடுதலை பெறுதலே முக்தி.

**வினா:** எதினின்று விடுதலை?

**விடை:** எல்லா ஜீவரும் எதனின்று விடுபட முயல்கிறார்களோ அதனின்று.

**வினா:** ஜீவன் எதனின்று விடுபட வேண்டுவர்?

**விடை:** துக்கத்தினின்று.

**வினா:** விடுதலை பெற்றவர் எதை அடைவது; எங்கே வசிப்பது?

**விடை:** சுகம் அடைந்து பிரம்மத்தில் வசிப்பது.

**வினா:** பந்த முக்திகளின் காரணம் என்ன?

**விடை:** பரமேச்வரன் ஆணையைப் பணிதல்; அதர்மம், அவித்தை, தீ நட்பு, தீய சிந்தனை, தீய வழக்கங்களிலிருந்து விலகுதல்; மெய்யுரை, பரோபகாரம், வித்தை, பட்சபாத மில்லாத நியாயம், தர்மாபிவிருத்தி, முன் சொன்னமாதிரி பரமேசனைத் துதித்து வேண்டுதல், உபாசித்தல், அதாவது யோகம் பயிலல், கல்விகற்றல், கற்பித்தல், அறத்தால் புருஷார்த்தங்களை யடைதல், ஞானவுன்னதி, உத்தம சாதனம் செய்தல், பக்ஷபாதமற்ற தரும நியாயமறிந்து செய்வன செய்தல்—இத்தகைய பயிற்சிகளால் முக்தி கிடைக்கும்;

இவற்றிற்கு எதிராக இறைவன் ஆணையை மீறுதல் முதலிய தீவினைகளால் பந்தம் சுற்றும்.

வினா: முக்தியில் ஜீவன் லயமாகிறதா அல்லது தனித்து விளங்குகிறதா?

விடை: தனித்தே விளங்குகிறது.

வினா: எங்கே அது வசிக்கிறது?

விடை: பிரம்மத்தில்.

வினா: பிரம்மம் எங்கிருக்கிறது? முக்த ஜீவன் ஓரிடம் இருக்கிறதா, விருப்பம்போலச் சுற்றுகிறதா?

விடை: பிரம்மம் எங்கும் நிறைந்துள்ளது. விக்ஞான அனந்த பூரிதமான முக்த ஜீவன் தடையில்லாமல் பிரம்மத்திற் கலந்து எங்கும் சுதந்தரமாகச் செல்லும்.

வினா: முக்த ஜீவனுக்கு ஸ்தூல சரீரம் உண்டா, இல்லையா?

விடை: இருக்காது.

வினா: பிறகு எப்படி அது சுகானந்த முறும்?

விடை: அதற்கு ஸங்கல்பாதி சுபாவ குண சாமர்த்தியம் உண்டு. பூதசரீர சம்பந்தம் மட்டும் இல்லை. ஸதபத ப்ராமணம் கூறுகிறது:

शृण्वन् श्रोत्रं भवति, स्पर्शयन् त्वग्भवति, पश्यन् चक्षुर्भवति, रसयन् रसना भवति, जिघ्रन् घ्राणं भवति, मन्वानो मनो भवति, बोधयन् बुद्धिर्भवति, चेतयंश्चित्तम्भवत्यहङ्कुर्वाणोऽहङ्कारो भवति ॥

(சதபதம் 14)

மோக்ஷத்தில் ஜீவாத்மாவுக்கு உடலும் உருப்புக்களும் இல்லை. தன் இயல்பான சுத்தகுணம் உண்டு; அதனுல் அது கேட்கவேண்டும்போது காதையும், ஸ்பரிசிக்க வேண்டும்போது தோலையும், காணக் கண்ணையும், முகர மூக்கையும், சுவைக்க நாக்கையும், சங்கல்ப விகல்பங்களுக்கு மனத்தையும், நிச்சயிக்கப் புத்தியையும், நினைக்கச் சித்தத்தையும், அகங்கரிக்க அகங்காரத்தையும், தனது இயல்பான சங்கல்ப சக்தியில் ஜீவாத்மா பெறுகிறது. சங்கல்ப மாத்திரத்தில் அது சரீரம் அடைகிறது. பத்த ஜீவன் சரீரத்தால் இந்திரியங்கள் மூலம் தன் காரியம் செய்வது போலவே, தனது சக்தியாலேயே முக்தஜீவன் ஆனந்தபோகம் நுகர்கிறது.

வினா: இந்தச் சக்தியின் தன்மை என்ன? அது எத்தனை வகை?

விடை: முக்கிய சக்தி ஒரே வகைதான். ஆனால் அதில் இந்த இருபத்து நான்கு (24) திறமைகள் உள்ளன: (1) பலம் (2) பராக்கிரமம் (3) ஆகர்ஷணம் (4) பிரேரணை (5) கதி (6) பயம் (7) விவேசனம் (8) செயல் (9) உற்சாகம் (10) சிந்தனை (11) ஸ்மரணை (நினைப்பு) (12) நிச்சயம் (13) இச்சை (14) பிரேமை (15) துவேஷம் (16) சேர்க்கை (17) பிரிவு (18) வகுத்தல் (19) தொகுத்தல் (20) கேட்டல் (21) பரிசனம் (22) தரிசனம் (23) சுவைத்தல் மணம் அறிதல் (24) ஞானம். இவற்றால் முக்தியிலும் ஜீவன் ஆனந்தத்தை அனுபவிக்கிறது. ஜீவன் லயமாகிவிட்டால் முக்தி சுகத்தை அனுபவிப்பது யார்? ஜீவ நாசமே முக்தி என்பர் மகாமூடர்! துக்கங்களினின்று விடுபட்டு எங்கும் நிறைந்த அனந்தானந்த ஸ்ரூபனான பரமேச்வரனின் ஆனந்தத்தில் இருப்பதே, ஜீவனுக்கு முக்தியாகும்.

வேதாந்த சாரீரக சூத்திரம் சொல்வதைக் கேள்:

अभावं बादरिराह ह्येवम् ॥ (வேதாந்த 4. 4. 10)

வியாசர் தந்தை வாதரி (பராசரர்); அவர், முக்தியில் ஜீவனுடன் மனமும் இருக்கும் என்கிறார். அதாவது ஜீவ, மனோ லயத்தைப் பராசரர் ஒப்பவில்லை.

भावं जैमिनिर्विकल्पामननात् ॥ (வேதாந்த 4-4-11)

அவ்வாறே ஆசாரியர் ஜைமினி, முக்த புருஷருக்கு மனத்தைப் போலவே சூக்ஷ்ம சரீரமும் பிராணேந்திரியங்களும் இருப்பதாகச் சொல்லுகிறார். அவர் அபாவத்வத்தை (லயத்தை) ஒப்பவில்லை.

द्वादशाहवदुभयविधं बादरायणोऽतः ॥ (வேதாந்தம் 4-4-12)

வியாச முனிவர் முக்தியில் ஜீவனுக்குரிய சுத்த சாமர்த்தியத் தன்மைகள் உண்டு; அசுத்த, பாப, துக்க, அக்ஞானாதிகள் இல்லை என்கிறார்.

यदा पञ्चावतिष्ठन्ते ज्ञानानि मनसा सह ।
बुद्धिश्च न विचेष्टते तामाहुः परमां गतिम् ॥ (கடோ. 2-6-10)

சுத்த மனதுடன் கூடிய பஞ்சேந்திரியம் ஜீவனைச் சேர்ந்து புத்தி உறுதியாக நிலைப்பதே பரமாத்ம கதி அல்லது முக்தி நிலை என்பது கடோபநிஷத் வாக்காகும்.

சாந்தோக்ய உபநிஷத் வாக்குகளைக் காண்போம் :

य आत्मा अपहतपाप्मा विजरो विमृत्युर्विशोकोऽविजिघत्सोऽपिपासः सत्यकामः सत्यसङ्कल्पः सोऽन्वेष्टव्यः स विजिज्ञासितव्यः सर्वांश्च लोकानाप्नोति सर्वांश्च कामान् यस्तमात्मानमनुविद्य विजानातीति ॥

(சாந். 8-7-1)

स वा एष एतेन दैवेन चक्षुषा मनसैतान् कामान् पश्यन् रमते ॥ य एते ब्रह्मलोके तं वा एतं देवा आत्मानमुपासते तस्मात्तेषां सर्वे च लोका आत्ताः सर्वे च कामाः स सर्वांश्च लोकानाप्नोति सर्वांश्च कामान्यस्तमात्मानमनुविद्य विजानातीति ॥ (சாந். 8-12-5, 6)

मघवन्मर्त्यं वा इदं शरीरमात्तं मृत्युना तदस्याऽमृतस्या शरीरस्यात्मनोधिष्ठानमात्तो वै सशरीरः प्रियाप्रियाभ्यां न वै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्त्यशरीरं वाव सन्तं न प्रियाप्रिये स्पृशतः ।

(சாந். 8-12-1)

பாபம், மூப்பு, மரணம், சோகம், பசிதாகமில்லாத மாசற்ற வஸ்து ; விருப்பிலும் நினைவிலும் உண்மையானது. அதுவே பரமாத்மா. அதையே நாடி, அதையே தேடி யறிய வேண்டும். அந்தப் பரமாத்ம ஸம்பந்தத்திலேதான் 'முக்த ஜீவன் எல்லா உலகங்களையும் எல்லா விருப்பங்களையும் அடைகிறது. அந்தப் பரமாத்ம ஞானத்திலேதான் ஜீவன் மோக்ஷ ஸாதனத்தையும் ஆத்ம சுத்தி சாதனத்தையும் அறிகிறது.

இந்த முக்த ஜீவன் செயல்களை, சுத்த திவ்ய நேத்திரத்தாலும், சுத்த மனஸாலும் கண்டு, அடைந்து இன்புறுகிறது. பிரம்ம லோகத்தில் இருப்பதாவது பரமாத்மனில் நிலைத்திருப்பதே. அப்படி நிலைத்த ஜீவனே முக்தி யின்பம் அடைகிறது. பரமாத்மாவே அனைவருள்ளும் அந்தர்யாமி, அந்தராத்மா. முக்தி வேண்டும் அறிஞர் அதையே உபாசிக்கின்றனர். அதனால் அவர்களுக்கு எல்லா உலகமும், எல்லா செயலும் கைகூடும்; அதாவது அவர்கள் எண்ணிய நிலை, கருதிய செயல் கைகூடும். முக்த ஜீவன் ஸ்தூல சரீரத்தைவிட்டு ஸங்கல்ப சரீரத்தால் ஆகாசத்தில் பரமேச்வரனில் உலாவுகிறது. ஏனெனில் உடல் கொண்டவர் சம்ஸார துக்கத்தினின்று விடுபட முடியாது.

பிரஜாபதி இந்திரனிடம் சொல்லுகிறார், "வணங்கத் தக்க செல்வா, இந்த ஊனுடல் சாவதே; சிங்க வாயில் ஆடுபோல், இவ்வுடல் சாவின் வாயில் உள்ளது. இச்சாவுடல் உடலற்ற,

அழிவற்ற, ஜீவாத்மாவின் இருப்பிடம்; அதனால் ஜீவனும் சுக துக்கப்படுகிறது. ஏனெனில் சரீர ஜீவன் உலகின் இன்ப துன்பங்களில் பிடிபட்டிருக்கிறது. உடலற்ற முக்த ஜீவன் பிரம்மத்தில் வசிக்கிறது; அதை உலகின் சுக துக்கம் அணுகாது. அது எப்போதும் ஆனந்தத்தில் வசிக்கிறது.

வினு: முக்த ஜீவன் மீண்டும் ஜனன மரண துக்கத்தை அடையுமா—மாட்டாதா? ஏனெனில்:

न च पुनरावर्त्तते न च पुनरावर्त्तते इति ॥ (சாந்தோக். 8-15)

முக்த ஜீவன் மீளாது மீளாது என்று சாந்தோக்யமும்

अनावृत्तिः शब्दादनावृत्तिः शब्दात् ॥ (சாரீரிகசூத் 4-4-33)

முக்த ஜீவன் மறுபடி பிறக்காது, பிறக்காது என்று சாரீரக சூத்திரமும்

यद् गत्वा न निवर्त्तन्ते तद्धाम परमं मम ॥ (பகவத் கீதை 15-6)

நான் பரமபதத்தில் இருக்கிறேன். அதை அடைந்த ஜீவன் உலகிற்கு மீளாது" என்று பகவத் கீதையும் சொல்லுகின்றன.

விடை: இக்கூற்று மெய்யில்லை; வேதம் இதை மறுக்கிறது: (கேள்வி பதில்போல் விளக்கியிருக்கிறது.)

कस्य नूनं कतमस्यामृतानां मनामहे चारुदेवस्य नाम ।
को नो मह्या अदितये पुनर्दात् पितरं च दृशेयं मातरं च ॥ 1 ॥
अग्नेर्वयं प्रथमस्यामृतानां मनामहे चारुदेवस्य नाम ।
स नो मह्या अदितये पुनर्दात् पितरं च दृशेयं मातरं च ॥ 2 ॥
(ருக் 1 ; 24 ; 1, 2)

इदानीमिव सर्वत्र नात्यन्तोच्छेदः ॥ 3 ॥ (சாங்க்ய சூத். 1-159)

நாம் யார் பெயரைப் பாவனமாகக் கொள்வது? அழியும் பொருள்களுக் கிடையே, அழியாதிருக்கும் ஜோதி தேவன் யார்? நமக்கு முக்தியின்பமளித்து, அதை உண்ட (அனுபவித்த) பிறகு, இவ்வுலகில் பிறவி யளித்து நமது மாதா பிதாக்களைப் பார்க்கும் மகிழ்வைத் தருவோன் யார்? (1)

இந்தக் கேள்விக்குப் பதில்:

சுயம் பிரகாசஸ்வரூபன், அனுதி, சதா முக்தனை பரமாத்மன் நாமமே பாவனமாகக் கொள்ளுகிறோம். அவனே நமக்கு

முக்தியில் இன்பம் ஊட்டுகிறான்; உலகில் மாதா பிதா சம்பந்தத்தால் பிறவியளித்து மாதா பிதாக்களைக் காணச் செய்கிறான். அந்தப் பரமாத்மனே முக்தியை வகுத்து எல்லாருக்கும் இறைவனாகிறான். (2)

பந்த முக்த ஜீவர் இப்போதிருப்பது போலவே எப்போதும் இருக்கின்றனர்; பந்தமும் முக்தியும் நிரந்தரமில்லை. (3)

வினா :

तदत्यन्तविमोक्षोऽपवर्गः ।

दुःखजन्मप्रवृत्तिदोषमिथ्याज्ञानानामुत्तरोत्तरापाये तदनन्तरापायादपवर्गः ॥ (ந்யாயம் 1-22-2)

துன்பத்தினின்று அறவே நீங்கலே முக்தியாகும். ஏனெனில் மித்யா ஞானம், லோபாதி தோஷம், துர்விஷய ப்ரவிருத்தி இவற்றை விட விடவே, மேன்மேலும் பந்த நிவர்த்தி யுண்டாகும். அதனாலேயே அத்யந்த மோக்ஷம் சித்திக்கும் என்று நியாய சாஸ்திரம் சொல்லுகிறதே?

விடை : அத்யந்தம் என்பதற்கு நிரந்தரம் என்ற பொருளே யிருக்க வேண்டும் என்பதல்ல. அத்யந்தம் என்றால் மிக அதிக என்றும் பொருளாகும்.

“ अत्यन्तं दुःखमत्यन्तं सुखं चास्य वर्त्तते ”

மனிதர் அத்யந்த சுகம், அத்யந்த துக்கம் அனுபவிக்கிறார்கள் என்றால், அதிக சுகம் அதிக துக்கம் என்பதே பொருளாகும்.

வினா : முக்தி நிலையிலிருந்து ஜீவன் மீளுவதாயின், அது முக்தி நிலையில் எவ்வளவு காலம் இருக்கும்?

விடை :

ते ब्रह्मलोकेषु परान्तकाले परामृतात् परिमुच्यन्ति सर्वे ॥

(முண்டக 3-2-6)

முண்டகோபநிஷத்து வாக்கியம் இது. முக்த ஜீவன், முக்தியடைந்து பரமாத்ம இன்பத்தை பராந்தகாலமான மஹா கல்பம் வரை (மஹா பிரளய காலம் வரை) அனுபவித்துப் பிறகு முக்தி சுகத்தை விட்டு உலகிற்கு வருகிறது. இந்த பராந்த காலத்தின் கணக்காவது :—

காலம் நான்கு யுகங்களாக வகுக்கப்பட்டுள்ளது :

| | | |
|---|---|---|
| ஸத்யுகம் | 17,28,000 | ஆண்டுகள் |
| துவாபரயுகம் | 12,96,000 | ,, |
| த்ரேதாயுகம் | 8,64,000 | ,, |
| கலியுகம் | 4,32,000 | ,, |
| ஆக நான்கு யுகமும் (சதுர்யுகம்) | 43,20,000 | ஆண்டுகள் |

2000 சதுர் யுகங்கள் (அதாவது 8640,000,000 ஆண்டுகள் = ஒரு அஹோராத்ரம்)

30 அஹோராத்ரங்கள் = ஒரு மாசம்

12 மாசம் = ஒரு வருஷம்

100 வருஷங்கள் = ஒரு பராந்த காலம்.

அதாவது முக்தி சுகத்தின் காலம் :—

100×12×30×2000× = 3,1140,000,000,000 ஆண்டுகள்

இவ்வளவு ஆண்டுகள் ஜீவன் முக்தி இன்பத்தை அனுபவிக்கும்.

வினா : பிறப்பிறப்பிற்கு மீளா நிலேயே முக்தி நிலே என்று உலகெல்லாம் நூலாசிரியரெல்லாரும் சொல்லுகிறார்களே ?

விடை : இது நடவாத பேச்சு. ஏனெனில் ஜீவனுக்குரிய சரீர சாதனத் திறமை ஓர் அளவுள்ளது ; அதன் பலன் எப்படி அனந்தமாகும்? அனந்தானந்த போகத்திற்குரிய எல்லேயற்ற திறனும், செயலும், சாதனமும் ஜீவனிடம் இல்லே. ஆதலால் அனந்த சுகபோகம் அதற்கு இயலாது. அநித்திய சாதனங்களேக் கொண்டு நித்திய பலனேப் பெற முடியாது. மேலும் முக்தியிலிருந்து எந்த ஜீவனும் திரும்பி வராவிட்டால், உலகில் ஜீவனே இல்லாது போகும்.

வினா : அப்படியில்லே ; எத்தனே ஜீவர் முக்தியடைகிறார்களோ அத்தனே புதிய ஜீவர்களே ஈச்வரன் உலகில் உண்டாக்குவான். ஆதலால் உலகம் ஜீவனற்றுப் போகாது.

விடை : அப்படியானல் ஜீவன் அநித்தியமாகும் ; ஏனெனில் உற்பத்தியானது அழிவது உறுதி. உன் சம்மதப்படி முக்தியடைந்த ஜீவனும் நஷ்டமாவதால், முக்தியே அநித்தியமாகிறது. மேலும் முக்தி நிலேயத்தில் கும்பல் பெருத்துப் போகும். காரணம் அங்கே வருவோர் மிகுதி ; திரும்பிச்

செல்வோரில்லை. கூட்டம் இடித்துப் புகுந்து மிதமிஞ்சிப் போகும். மேலும் துக்கமில்லாது சுகானுபவம் தெரியாது. கசப்பே இல்லாது போனால் இனிப்பென்று எதைச் சொல்வது? இனிப்பே இல்லாது போனால் கசப்பென்று எதைச் சொல்வது? இனிப்பும் கசப்பும் இருந்தால்தான் தாரதம்யம் (வித்தியாசம்) தெரியும். தித்திப்பே சாப்பிட்டவனுக்கு அறுசுவையுண்டவன் சுகம் வராது. மேலும் மட்டான ஜீவ காரியங்களுக்கு ஈச்வரன் மட்டற்ற பலனைத் தந்தால், அவனது நியாயமே பிசகும். சுமக்கக்கூடிய பாரத்தையே ஒருவன் மேல் வைப்பதே அறிவாளிகளுக்கு அழகு. ஒரு மணங்கு சுமப்பவன் தலை மேல் பத்து மணங்கு பாரம் ஏற்றினால், அப்படி ஏற்றியவன் வசை சுமக்கிறான். அதே மாதிரி அற்பத்தினும் அற்பமான சிற்றறிவும், சிறு திறனுங் கொண்ட ஜீவன் மேல், அனந்த சுகபாரத்தை ஏற்றுதல் ஈஸ்வரனுக்குச் சரியில்லை. மேலும் இறைவன் புதுப்புது ஜீவர்களை உற்பத்தி செய்து கொண்டே போனால், உற்பத்திப் பொருள் காலியாய்விடும். எப்படியெனில் ஒரு நிதிச் சாலை எவ்வளவு பெரிதானாலும் செலவே அதிகமாகி வரவே யில்லாது போனால் திவாலாய்விடும். ஆதலால் முக்திக்குச் சென்று அங்கிருந்து திரும்பி வரும் செயலே சரியானது. சிறிது காலம் சிறைவாசம் வேண்டாம், ஆயுட் சிறைவாசம் அல்லது தூக்குத் தண்டனை வேண்டும், அதுவே நல்லது என்பவன் உண்டா? மீளா முக்தியும் ஆயுட் சிறையும் ஒன்றே. அங்கே கடும் வேலையில்லாதிருப்பதே வித்தியாசம். பிரம்மத்தில் லயமாதலும் சமுத்திரத்தில் மூழ்கிச் சாவதும் ஒன்றே.

வினா: பரமேச்வரனைப் போலவே, ஜீவனும் நித்ய முக்தி பூர்ண சுகியானால் தோஷமில்லையே?

விடை: பரமேச்வரன் அனந்த ஸ்வரூபன், அனந்த சாமர்த்திய குண கர்ம ஸ்பாவன். ஆதலால் அவன் ஒருகாலும் துக்க பந்தத்தில் விழ முடியாது. முக்த ஜீவன் சுத்தமானாலும், சிற்றறிவு பரிமித குண கர்ம ஸ்பாவமுள்ளது. அது பரமேச்வரனுக்குச் சமானமாக ஒருகாலும் ஆகாது.

வினா: அப்படியானால் முக்தியும் ஜனன மரணம் போன்றதே; அதை அடைவதற்குச் சிரமப்பட்டுப் பயனென்ன?

விடை: முக்தி ஜனன மரணம் போலன்று. ஏனெனில் முக்தியின்பம் 36,000 தடவை கல்பப் பிரளய காலம் வரையில் நீடிக்கும். இவ்வளவு காலம் துன்பமற்று இன்பமே நுகர்தல் என்ன சாமான்யமா? இன்று சாப்பிடுகிறோம், குடிக்கிறோம்; நாளைக்கும் பசியெடுக்கும் என்பதறிந்து அதற்கு வேண்டியதைத் தயார் செய்கிறோம். பசி, தாகம், அற்பப் பணம், அரசு, புகழ், பெண்டுபிள்ளைகளுக்காகப் பாடு படுவது அவசியமானால், முக்திக்காக ஏன் பாடுபடக்கூடாது? சாவு நிச்சயம்; ஆனாலும் ஜீவனோபாயம் அவசியம் நடக்கிறது; அதேமாதிரி முக்தியிலிருந்து திரும்பிப் பிறப்பது நிச்சயமானாலும், முக்தியடைவது அவசியமாகும்.

வினா: முக்தி சாதனம் என்ன?

விடை: சில சாதனங்களை முன்பே சொன்னோம். மேலும் விசேஷ உபாயங்களை இங்கே சொல்லுவோம்:

I முக்தி வேண்டுவோன் ஜீவன் முக்திப் பெறுக. அவன் பொய்யுரை முதலிய பாப கர்மங்களை ஒழிக்கவேண்டும். பாபத்தின் பலன் துக்கமே. அதை நீத்து சுகபல னளிக்கும் வாய்மை முதலிய அறங்களையே பயில வேண்டும். துக்கத்தை விட்டுச் சுகத்தை வேண்டுவோன் அதர்மத்தை விட்டு தர்மத்தையே செய்க. ஏனெனில் பாபச் செயலே துக்கத்திற்கும் அறச் செயலே சுகத்திற்கும் மூலமாகும்.

II ஸத் புருஷர் சங்கத்தால் விவேகம் வளரும். அதனால் மெய் பொய், அறம் மறம், செய்யத் தக்கது தகாதது இன்னதென்று அறிந்து நடக்கவேண்டும்.

III பஞ்சகோசங்களையும் தனித்தனியே அறியவேண்டும். அவையாவன:

1. அன்னமய கோசம்: தோலிலிருந்து எலும்பு வரையில் உள்ள ஸ்தூல சரீரம் அல்லது மண்ணுடல்.

2. பிராணமய கோசம்: இதில் ஐந்து வாயுக்கள் உள்ளன:

(அ) பிராணன்: இது வெளியிலிருந்து உள்ளே ஈர்க்கும் (வாயு) சக்தி.

(ஆ) அபானன்: இது உள்ளிருந்து வெளியேறும் மூச்சு.

(இ) ஸமானன்: இது நாபியில் இருந்து அன்னரஸத்தையும் இரத்தத்தையும் உடலெங்கும் பரவச்செய்வது.

(ஈ) உதானன்: கண்டத்திலிருந்து அன்ன பானதிகளை உள்ளே செலுத்தி பலமும் வீரியமும் தருவது.

(உ) வியானன்: இதனால் ஜீவன் உடலை அசைத்து எல்லாச் செயலும் செய்கிறது.

தப்புரை X கர்மேந்திரியங்கள் பிராண மய கோசத்தைச் சேர்ந்தவை

3. மனோமய கோசம்: இதில் மனத்துடன் அகங்காரமும், வாக்கு, பாதம், பாணி, பாயு, உபஸ்தம் ஆகிய ஐந்து கர்மேந்திரியங்களும் உள்ளன.

4. விஞ்ஞானமய கோசம்: இதில் புத்தி, சித்தம்; மெய் வாய் கண் மூக்கு செவி ஆகிய ஐந்து ஞானேந்திரியங்களும் உள்ளன. இதனால் ஜீவன் அறிவது, நினைப்பது முதலிய செயல்களைப் புரியும்.

5. ஆனந்த மயகோசம்: இதில் அன்பு, மகிழ்ச்சி, சிற்றின்பம், பேரின்பம், ஆதாரகாரணமான பிருகிருதி—இவை உள்ளன. இந்தப் பஞ்ச கோசத்தினாலேதான் ஜீவன் எல்லா விதமான கர்மம், உபாஸனை, ஞானதி விவகாரங்களைச் செய்கிறது.

IV. (1) ஜாக்ரம், (விழிப்ப), (2) சொப்பனம் (கனவு) (3) ஸுஷுப்தி (ஆழ்ந்த உறக்கம்) ஆகிய மூன்று (ஆத்ம) அவஸ்தைகளையும் முக்த புருஷன் அறியவேண்டும்.

V. நான்கு சரீரங்கள் உண்டு: (1) நாம் பார்க்கும் ஸ்தூல சரீரம் (2) பஞ்சப்ராணன், பஞ்ச ஞானேந்திரியம், பஞ்ச சூக்ஷ்ம பூதம், மனம், புத்தி ஆகிய பதினேழு தத்துவங்கள் அடங்கிய சூக்ஷ்ம சரீரம். இந்த சூக்ஷ்ம சரீரம் ஜனன மரணதிகளிலும் ஜீவனுடனிருக்கும். இந்த சூக்ஷ்ம சரீரம் இருவகை: ஒன்று சூக்ஷ்ம பூதாம்ஸத்தால் ஆகிய பௌதிகம்; மற்றொன்று முக்தியிலும் ஜீவனின் இயற்கைக் குணத்தால் ஆகிய சுபாவிகம். இது ஜீவனுடன் இருக்கும். அதனாலேதான் ஜீவன் முக்தியின்பம் நுகர்கிறது. (3) காரண சரீரம். இது பிரகிருதி ரூபம்; எங்கும் உள்ளது. எல்லா ஜீவர்களுக்கும் ஒன்று. இதனால் ஜீவன் ஸுஷுப்தி அல்லது ஆழ்ந்த உறக்கம் கொள்ளுகிறது. இவையன்றி நான்காவது சரீரம் ஒன்றுண்டு: (4) துரீய சரீரம்: இது சமாதியில் உண்டாகும் சுத்த சரீரம். இதனால் ஜீவன்

சமாதியில் பரமாத்மாவின் ஆனந்தத்தில் திளைக்கும். இதில் உண்டாகும் சக்தி முக்திக்கு உறுதுணையாகும்.

இந்தப் பஞ்சகோச நிலையிலிருந்து ஜீவன் தனிப்பட்டது. உடல் பிணமானதும் ஜீவன் போய்விட்டது என்பது உலக வழக்கம். இந்த ஜீவனே அனைத்தையும் ஏவி, வகித்து, நடத்தி, சாக்ஷியாகவும், கர்த்தாவாகவும், போக்தாவாகவும் விளங்கு கிறது. ஜீவன் கர்த்தா போக்தா இல்லை என்பவன் அஞ்ஞானி, அவிவேகி என்றறிக. ஏனெனில் ஜீவனில்லாமல் சுக துக்க போகமும், பாப புண்யச் செயலும் ஒருகாலும் இயலாவாம். மேற்சொன்ன சரீரங்களின் சம்பந்தத்தால் ஜீவன் பாப புண்ய கர்த்தா, சுகதுக்க போக்தாவாகிறது உண்மைதான். ஆனால் ஜீவனில்லாது இவை பிணமே, ஜடமே, புறப்பொருள்களுடன் புலன்கள் கலந்து, புலன்களுடன் மனம் கலந்து, மனத்துடன் ஜீவாத்மா கூடியபொழுது உயிர் வீறுகொண்டு செயல் புரிகிறது. அப்போது ஜீவன் பகிர் (வெளி)முகமாகி, நல்லது பொல்லாதில் ஈடுபடுகிறது. நல்ல கர்மத்தால் அச்சமற்ற உற்சாகமும் இன்பமும் உள்ளே எழும்; பொல்லதுச் செய்தால் அச்சம், துயரம், வெட்கம் உண்டாகும். இவையே அந்தர்யாமி—பரமாத் மாவின் சிக்ஷை, பயிற்சி யாகும். பரமாத்ம சிக்ஷைக்கு அனு கூலமாக நடப்பவன் முக்தியின்பம் அனுபவிக்கிறான்; அதை மீறி நடப்பவன் பந்தத்தால் வரும் துக்கத்தையே அனுபவிப் பான். இதுகாறும் சொன்னவை முக்தியின் முதற்படிகளாகும்.

அடுத்தபடி அதாவது இரண்டாவது சாதனம் வைராக் கியம்: விவேகத்தால் மெய், பொய் இன்னதென்றறிந்து, பொய்யை விலக்கி, மெய்யைக் கடைப்பிடித்தலே விவேகம். அதுவே வைராக்கியமாகும். மண் முதல் விண் வரையில் உள்ள பொருள்களின் குணகர்ம ஸ்பாவங்களை அறிந்து, கடவுளை உபாசித்து, அவன் ஆணையைப் பணிந்து, அதற்கு விரோத மில்லாமல் சிருஷ்டியுலகின் உபகாரம் பெற்று, பரம்பொருள் வணக்கத்தில் தத்பரனாக வாழுவதே விவேகமாகும்.

அதன் பிறகு மூன்றாவது சாதனம் ஷட்ஸம்பத்தி அதாவது ஆறுவகைக் கருமம் செய்தல்.

(1) சமம்—ஆத்மாவும் அந்தக்கரணமும் அதர்மத்தை விட்டு தர்மாசரணத்தில், அறவொழுக்கத்தில் எப்போதும் உறுதி கொள்ளுதல்.

(2) தமம்—செவி முதலிய இந்திரியங்களையும் உடலையும் வியபிசாரம் முதலிய தீச்செயல்களினின்று விலக்கி, ஜிதேந்திரியம் முதலிய சுபகர்மங்களில் தீவிரப்படுதல்.

(3) உபரதி—தீவினையாளரிடமிருந்து விலகியிருத்தல்.

(4) திதிக்ஷா—இசை வசை, லாபநஷ்டாதிகள் எவ்வளவு வந்தாலும் பொருட்படுத்தாமல், இன்ப துன்பங்களை விட்டு, முக்தி சாதனத்தில் எப்போதும் நிலைத்திருப்பது.

(5) சிரத்தை—வேதாதி சத்திய சாஸ்திரங்களிலும், வேத வழியொழுகிய நிறைமொழி யறிஞரான மகான்களின் சத்தியோபதேசத்திலும் நம்பிக்கை வைத்தல்.

(6) ஸமாதானம்—சித்தத்தின் ஏகாக்ரம்.

இந்த ஆறும் மூன்றுவது சாதனமாகும்.

நான்காவது சாதனம் முமுக்ஷுத்வம்: பசி, தாகங்கொண்டவனுக்கு உணவும் நீருந்தவிர மற்றெதுவும் நன்றாகாது போலவே, முக்தி, முக்தி சாதனந்தவிர வேறெதுவும் மகிழ்வைத் தராத ஆர்வமே முமுக்ஷுத்வம். இந்த நான்குமே முக்தி சாதனமாகும். இந்த நான்கு சாதனங்களில் சித்தியடைந்த ஜீவனே முக்திக்கு அருகதையாகிறது. இந்த நான்கு சாதனங்களுக்குப் பிறகு செய்யவேண்டியவை நான்கு அனுபந்தம் உள்ளன. இவை சாதனத்திற்குப் பிறகு வருவதால் அனுபந்தம் எனப் பெற்றன.

(1) அதிகாரி: மேற்சொன்ன நான்கு சாதனங்களில் பொருந்தினவன் யுக்த புருஷன் அல்லது அதிகாரியாகிறான்.

(2) சம்பந்தம்: பிரம்மத்தை அடைதலில் அதாவது முக்தி சாதனங்கள் போதிக்கும் வேத சாஸ்திரங்களில் தேர்ந்த அறிவும் பயிற்சியும் அனுபவமும்.

(3) விஷயீ: எல்லா சாஸ்திரப் பொருளுமான பிரம்மத்தையும் அதை அடைவதுமே குறிக்கோளாகக் கொண்ட புருஷன் விஷயீ.

(4) ப்ரயோஜன: சர்வ துக்க நிவர்த்தியும் பரமானந்தப் பிராப்தியும் அடைந்து முக்தி சுகம் பெறுதல்.

இந்த அனுபந்தத்திற்குப் பிறகு ச்ரவண சதுஷ்டயம் (கேட்டல் முதலிய நான்கு):

(1) ச்ரவணம் (கேள்வி) : சாந்த தியானத்துடன் வித்வான்களின் உபதேசத்தைக் கேட்டல், முக்கியமாக பிரம்ம வித்தையை மிகவும் கருத்துடன் கேட்கவேண்டும் ; ஏனெனில் இது எல்லா வித்தைகளினும் அதிசூக்ஷ்ம வித்தையாகும். கேட்டலுக்குப் பிறகு,

(2) மனனம் : தனியிடம் அமர்ந்து கேட்டதைச் சிந்தித்தல் ; சந்தேகத்தை மீண்டும் கேட்டறிதல். கேட்கும் போதுகூட உசிதமானால் (சொல்வோர் கேட்பவர் இருவருக்கும் பொருந்துமானால்) சந்தேகத்தைத் தெளியலாம்.

(3) நிதித்யாஸனம் : ச்ரவணம் முடிந்து சந்தேகம் தெளிந்த பிறகு தியான யோகத்தால் கேட்டறிந்ததை சரி பார்த்து சமாதிஸ்தனாய் பொருளை உணர்தல்.

(4) ஸாக்ஷாத்காரம் : பொருளின் ஸ்வரூபம், குணம் ஸ்வபாவங்களை உள்ளபடி யறிந்து தெளிதல். இவை நான்குமே ச்ரவண சதுஷ்டயமாகும்.

முக்தி சாதகன் கோபம், அசுத்தம், சோம்பல், மோகம் ஆகிய தமோ குணங்களைவிட்டு, பொறாமை, வெறுப்பு, காமம், செருக்கு, சஞ்சலம் ஆகிய ரஜோ குணங்களையும் தவிர்த்து, மனவமைதி, பரிசுத்தம், கல்வி வளர்ச்சி, ஞானவிசாரம் ஆகிய சத்வ குணங்களை வளர்க்க வேண்டும். மைத்ரீ (சுகமக்களிடம் நட்புரிமை), கருணை (துன்புறுவோரிடம் தயை), முதிதம் (புண்யாத்மாக்களைக் கண்டு மகிழ்ச்சி), உபேக்ஷை (தீயரிடம் விருப்பு வெறுப்பற்ற உதாசீனம்) இந்த நான்கு குணங்களையும் முக்தி சாதகன் போற்றி வளர்க்க வேண்டும். முமுக்ஷுவானவன் தினம் இரண்டு மணி நேரமாவது அவசியம் தியானம் செய்ய வேண்டும். அதனால் அகமுகமான மனம் முதலிய தத்துவங்கள் புலனாகும். கவனிக்கவும் ! சேதன ஸ்வரூபம் ஞான வடிவம் ; மனத்தின் சாக்ஷி உள்ளே உள்ளது. அதனாலேதான் நாம் அறிவை அறிகிறோம். அமைதி, அலைவு, சாந்தம், சஞ்சலம், கலக்கம் ஆகிய மனோநிலைகளை உள்ளபடி அறிகிறோம். அந்த மாதிரி பிராண இந்திரியாதி காரியங்களை அறிகிறோம் ; முன்னே நிகழ்ந்ததை நினைக்கிறோம். ஒரே காலத்தில் பல பொருள்களை அறிகிறோம் ; மனதில் வைக்கிறோம். இத்தனையினின்றும் நாம் தனித்திருக்கிறோம். அப்படித் தனித்திரா விட்டால் ஆத்மா சுதந்தர கர்த்தாவா யிருக்க முடியாது. மனம், புலன்கள், உடல், உறுப்புக்களைத் தூண்டி நடத்தும் தலைவனாயிருக்க முடியாது.

இவ்வுலகில் ஐந்து கிலேசங்கள் உண்டு :

अविद्याऽस्मितारागद्वेषाभिनिवेशाः पञ्च क्लेशाः ॥ (யோக-2-3)

(1) அவித்தை மடமை : இதன் இயல்பை முதலிலேயே சொன்னோம்.

(2) அஸ்மிதம் : புத்தி ஆத்மாவினின்று வேறல்ல என்பதை அறிதல்.

(3) இராகம் : சுக விருப்பம்.

(4) துவேஷம் : துக்க வெறுப்பு.

(5) அபிநிவேசம் : சாவச்சம். எப்போதும் உயிர் இவ்வுடலிலேயே இருக்க வேண்டுமென்ற விருப்பம், சாவின் துன்பத்தை வெருவி மரணமின்றி, இவ்வுடலிருக்கவேண்டுமென்ற இச்சை. இந்த ஐந்து கிலேசங்களையும், துயர்களையும் யோகாப்யாசத்தாலும் விஞ்ஞானத்தாலும் போக்கி, பிரம்மத்தை அறிந்து பரமானந்தமான முக்தி சுகத்தை அனுபவிக்க வேண்டும்.

வினு : நீர் கருதும் முத்தியைப் பிறர் யாரும் ஒப்பமாட்டார். பிறர் மோட்சத்தினின்றும் அது வேறுபட்டுள்ளது. சிவபுரிக்குப்போய் மோக்ஷ சிலையில் அமைதியாக வீற்றிருப்பதே முக்தி என்பர் ஜைனர். நாலாவது சுவர்க்கத்தில், அணிமணிகளைப் பூண்டு, ஆடிப்பாடி மணம் புரிந்து ஆனந்தத்தை அனுபவிப்பதே கிறிஸ்தவர் மோக்ஷம். அம்மாதிரியே (கிறிஸ்தவர் போல்) ஏழாவது ஆகாசத்தில் முசல்மான் சுவர்க்கம்- வாமமார்க்கிகள் ஸ்ரீபுரத்தை, சைவர் கைலாசத்தை, வைணவர் வைகுண்டத்தையும், கோகுலத்தையும், கோசாயிகள் கோலோகத்தை அடைந்து, நல்ல பெண்கள், சாப்பாடு, துணிமணி, நல்ல சுகங்களை நுகர்ந்து ஆனந்தமாதலே மோக்ஷம் என்பர். புராணிகர் ஈச்வர லோக வாசமான ஸாலோக்யம், ஈச்வருடன் தம்பி போல இருக்கும் ஸானுஜ்யம், உபாஸனு தெய்வத்தின் உருவேயாகும் ஸாரூப்யம் ; இறைவனுக்கு அருகிருந்து சேவை செய்யும் ஸாமீப்யம் ; ஈசனுடன் கூடி வாழும் ஸாயுஜ்யம் ஆகிய ஐந்துவித முக்தியும் வேண்டுபவர். வேதாந்திகள் பிரம்மத்தில் லயமாதலே மோக்ஷம் என்பர்.

விடை : ஜைனர், கிறிஸ்துவர், இஸ்லாமியர் முக்தி விஷயங்களைப் பற்றி 12, 13, 14-ம் ஸமுல்லாஸங்களில் (அத்தியாயங்களில்)

விளக்கலாம். வாமாசாரிகள் ஸ்ரீபுரம் சென்று திருமகள் போன்ற அழகுள்ள பெண்களைக் கூடி, மது மாம்ஸாதிகளைப் புசித்து, ஆடிப்பாடிக் காமக் களியாட்டயர்வதெல்லாம் இந்த உலகில் நடப்பதைவிட விசேஷ மில்லையே. விஷ்ணு, மஹா தேவன் போன்ற ஆண்கள், லக்ஷ்மீ, பார்வதிபோன்ற பெண் களுடன் கூடிக் குலாவும் ஆனந்தபோகம், இங்குள்ள பணக் கார ராஜாக்களிலும் அதிகமாகுமே; அங்கே நோயில்லை, என்றும் இளமை என எழுதியிருப்பதே வித்யாசம். ஆனால் அவர்கள் பேசுவது பொய். ஏனெனில் எங்கே போகமோ, அங்கே ரோகமுண்டு. என்றும் இளமை என்பது பொய். ஏனெனில் போகம் எங்கோ அங்கே ரோகம், ரோகம் எங்கோ அங்கே முதுமையும் அவசியம் இருக்கும். புராணிகளிடம் உங்கள் ஐந்துவித முக்திபோல், பூச்சி, புழு, பறவை, விலங்குகளுக்கும் உண்டு என்க. காரணம் எல்லா உலகங் களும் இறைவனுடைமை; அவற்றுள் எல்லா உயிர்களும் உள்ளன. ஆதலால் அவற்றிற்கு எளிதாக ஸாலோக்ய முக்தி கிடைக்கும். ஈஸ்வரன் எங்கும் நிறைந்திருப்பதால், எல்லாரும் அவன் சமீபத்தில் இருக்கிறார்கள்: ஸாமீப்ய முக்தியும் இயல்பாயிருக்கிறது. எல்லாரும் இறைவனைவிடச் சிறியவரே. எல்லாரும் அவனுறவுள்ள சேதனரே; ஆதலால் ஸானுஜ்ய முக்தியும் இயல்பே. ஸாயுஜ்யமும் இயல்பே. ஏனெனில் எல்லா உயிர்களும் பரமாத்மாவில் அவனுடன் கூடியே உள்ளன. சாதாரணமாகச் சில நாஸ்திகர், சாவுக் குப் பின், தேக தத்துவங்கள் இயற்கைத் தத்துவங்களுடன் கலந்து போவதே மோட்சம் என்கிறார்கள். இந்த முக்தி நாய், கழுதைகளுக்கும் கிடைக்குமே. இவை முக்தியில்லை; இவை ஒரு பந்தச் சிறையே. ஏனெனில் இந்த மக்கள் சிவபுரி, மோக்ஷ சிலை, நாலாம் வானம், ஏழாம் வானம், ஸ்ரீபுரி, கைலாசம், வைகுண்டம், கோலோகம் ஆகிய ஓரிடமே முக்திஸ்தானம் என்கின்றனர். அந்த இடத்தி லிருந்து பிரிந்தால் அவர்கள் முக்தி விசேஷமும் போய் விடும். ஆதலால் அவர்கள் பலமான இருட் சிறையில் அடைபட்ட கைதிகள் போன்றவர்களே; இவர்கள் சிறையை விட்டு வெளியேற முடியாது. இதுவா முக்தி? தங்கு தடை யில்லாமல் ஜீவன் இச்சைப்படி எங்கும் செல்லும்படியிருப் பதே முக்தியாகும். அந்நிலையில் அச்சம், ஐயம், துயரம்

இல்லை. ஜீவனும் உடலும் சேர்வதே பிறப்பு, உற்பத்தி; இரண்டும் பிரிதலே சாவு, பிரளயம். முக்த ஜீவர்களும் குறித்த காலத்திற்குப் பிறகு உலகில் பிறக்கும்.

வினு: பிறவி (ஜன்மம்) ஒன்ரு பலவா?

விடை: பல.

வினு: பிறவி பலவானுல் முன்னே பிறந்ததும் இறந்ததும் ஏன் நினைப்பில்லை?

விடை: ஜீவன் சிற்றறிவன்; முக்கால அறிவு அவனுக் கில்லை. அதனுல் நினைப்பில்லை. ஜீவன் மனதால் அறிகிறது; அந்த மனங்கூட ஒரே சமயம் இரண்டையும் அறியாது, பூர்வ ஜன்மச் செய்தி யிருக்கட்டும்; இந்த பிறப்பிலேயே கர்ப வாசத்திற்குப் பிறகு ஐந்து வயது வரையில் நடந்ததெல்லாம் மனத்திற்கேன் நினைவில்லை? விழிப்பிலும் கனவிலும் எத்தனையோ விவகாரங்கள் நடக்கின்றன; ஆழ்ந்த உறக்க மான ஸுஷுப்தியில் அவை ஏன் நினைவில்லை? பனிரண்டு ஆண்டுகளுக்கு முன் உன் பதின்மூன்ரும் வயதில், ஐந்தாம் மாதம், ஒன்பதாம் தேதி பகல் பத்து மணிக்கு என்ன செய்துகொண்டிருந்தாய் என்று யாராவது கேட்டால், சரியாகச் சொல்ல முடியுமா? அப்போது உன் முகம், கை, செவி, கண், உடல் எந்தப் பக்கம் திரும்பியிருந்தன? எப்படியிருந்தன? உன் மனதில் என்ன நினைவிருந்தது? என்று கேட்டால் சொல்லமுடியுமா? இந்த உடலைப்பற்றியே இவ்வாருனுல், பூர்வ ஜன்ம நினைவைப்பற்றிக் கேட்பது பிள்ளைத்தனமான பேச்சேயாகும். அது நினைவில் இல்லாததே நல்லது; இன்றேல் எல்லாப் பிறவிகளின் துக்கங்களையும் பார்த்துத் துயரால் இறக்க நேரிடும். முன் பின் பிறவி நிகழ்ச்சிகளை முயன்ருலும் யாரும் அறிய முடியாது; ஏனெனில் ஜீவஞானமும் சொரூபமும் அற்பம்; ஈச்வரனே அறியக்கூடியதை ஜீவன் அறிய முடியாது.

வினு: ஜீவனுக்குப் பூர்வஜன்ம ஞான மில்லாவிட்டால், ஈச்வரன் தண்டனைத் தரும்போது அது திருந்த முடியாதே! ஏனெனில் இன்ன காரியம் செய்தேன், அதன் பலன் இது என்று அது அறியாது; பாப கர்மங்களிலிருந்து அது விடுபடுவது எப்படி?

விடை: ஞானம் எத்தனை வகை என்கிருய்?

வினு: பிரத்யக்ஷாதிப் பிரமாணங்களால் எட்டு வகை.

விடை: அப்படியானல் இந்த சுகதுக்க சம்சாரத்தில் அரசு, செல்வம், அறிவு, கல்வி, வறுமை, மடமை, மூர்க்கம் இவற்றைப் பார்த்து பூர்வ ஜன்மத்தை ஏன் அறியக் கூடாது. ஒரு வைத்தியனுக்கும் மற்ருெரு அவைத்திய னுக்கும் நோய் வந்தால் அதன் காரணத்தை வைத்தியன் அறிகிருன். ஏனெனில் வைத்தியன் வைத்திய சாஸ்திரம் படித்தவன்; மற்றவன் படிக்கவில்லை. ஆனல் அவைத்தி யன்கூட என்னிடம் ஏதோ கெடுதலால், ஔபத்தியத்தால் ஜ்வரம் வந்தது என்ற மட்டில் அறிவான். அதுபோலவே உலகில் விசித்திரமான சுகதுக்கங்களைப் பார்த்துப் பூர்வ ஜன்மத்தை ஏன் அனுமானிக்க முடியாது? பூர்வ ஜன் மத்தை ஒப்பாவிட்டால் பரமேச்வரனே பக்ஷபாதியாகிருன். முன்னே பாபம் செய்யாமல், இம்மையில் ஜீவனுக்கு வறுமை யும், துயரும், மடமையும் அவர் தந்ததேன்? பூர்வ புண்ணி யம் இன்றிச் சிலருக்கு அரசும் செல்வமும் தந்ததேன்? பூர்வ பாப புண்ணியத்திற் கேற்றபடியே துக்க சுகங்களைத் தருவத ஞலேதான் பரமேச்வரன் நியாயவானுகிருன்.

வினு: பிறவி ஒரேமாதிரி அமைந்தாலும் இறைவன் நியாய காரியே! சர்வதிகாரி அரசன் செய்வதெல்லாம் நியாயமே. ஒரு தோட்டக்காரன் உபவனத்தில் பெரிய மரங்களையும் சிறிய மரங்களையும் நடுகிருன்; சிலவற்றை வெட்டி விடுகிருன்; சிலவற்றைப் பிடுங்கி எறிகிருன்; சிலவற்றைப் போற்றி வளர்க்கிருன். சொந்தக்காரன் தனக் குரியதை என்ன வேண்டுமானுலும் செய்யலாம். ஈச்வரன் தன் உலகில் என்ன வேண்டுமானுலும் விருப்பம் போலச் செய்யலாம். அவனுக்கு மேல் நீதி செலுத்துவோர் யாருமில்லை; அவனை யார் தண்டிக்க முடியும்; அவன் யாருக்கு அஞ்சவேண்டும்?

விடை: பரமாத்மா எப்போதும் நியாயம் விரும்பிச் செய்கிருர். அவர் ஒரு காலும் அநியாயம் செய்வதில்லை; அதனுலேதான் அவர் பூஜிக்கத் தக்கவராக, உயர்ந்தவராக விளங்குகிருர். நியாய விரோதம் செய்பவன் இறைவனுக முடியாது. ஒரு தோட்டக்காரன் யுக்தியில்லாமல் கண்ட பாதையில் செடி நட்டால், வெட்டத் தகாத மரத்தை வெட்டினுல், தகாததை வளர்த்தால், தக்கதை வளர்க்காது விட்டால் நிந்திக்கப்படு

வான். அதேமாதிரி காரணமில்லாது செய்தால் இறைவனைக் குறை கூறலாம்; கடவுள் நியாயமான காரியத்தையே செய்ய வேண்டும். ஏனெனில் அவர் இயல்பிலேயே பரிசுத்தர், நியாயகாரி. அவர் ஒன்றைப் பைத்தியகாரத்தனமாகச் செய்தால், உலகிலுள்ள ஒரு நல்ல நியாயவாதியை விடத் தாழ்ந்தவராகி மதிப்பை இழந்து விடுவார். இவ்வுலகில் அயோக்கியனைப் போற்றி, யோக்கியமான நல்லவனைத் தண்டிப்பவன் நிந்தைக்குள்ளாகிப் புகழை இழப்பதில்லையா? ஆதலால் இறைவன் அநியாயம் செய்வதில்லை; அதனால் யாருக்கும் அஞ்சுவது மில்லை.

வினு: பரமாத்மா முதலிலேயே யாருக்கு எவ்வளவு தரத் தீர்மானிக்கிருரோ அவ்வளவே தான் தருகிருர்; எவ்வளவு செய்ய வேண்டுமோ அவ்வளவே செய்கிருர்.

விடை: அவனது தீர்மானம் ஜீவர்களின் வினைப்படியே நடக்கும். இன்றேல் அவன் அபராதி, அநியாயகாரி யாவான்.

வினு: பெரியார் சிறியார்—எல்லாருக்கும் சுகதுக்கம் ஒன்றே. பெரியவர்களுக்குப் பெரிய கவலை; சிறியாருக்குச் சிறு கவலையுண்டு. உதாரணமாக ஒரு பெரிய சேட்டுக்கு கோர்ட்டில் லக்ஷரூபா வழக்கிருக்கிறது. அவன் கோடை காலத்தில் பல்லக்கில் ஏறி வீட்டிலிருந்து கச்சேரிக்குச் செல்கிருன். அவன் தெருவில் பல்லக்குச் சவாரி செல்வதைக் கண்டு, அஞ்ஞானிகள், “புண்ணிய பாப பலனைப் பார்; ஒருவன் ஆனந்தமாகப் பல்லக்கேறுகிருன்; போகிகள் தகிக்கும் வெயிலில், காலில் செருப்புக் கூட இல்லாமல் பல்லக்குச் சுமந்து செல்கிருர்கள்” என்பர். ஆனுல் கச்சேரி நெருங்க நெருங்க சேட்ஜியின் சோகமும் சந்தேகமும் அதிகரிக்கின்றன. போகிகளுக்குக் கச்சேரி அணுக அணுகச் சுமை ஒழியுமென்று மகிழ்ச்சியுண்டாகிறது—இதை அறிவாளி அறிவான். கச்சேரிக்குச் சென்றதும் சேட்ஜீ இங்குமங்கும் பரபரக்கிருன். “முதலில் வக்கீலைப் பார்க்கவா அல்லது சிரஸ்தாரிடம் செல்லவா; இன்று வழக்கு வெல்லுமா தோற்குமா என்ன நடக்குமோ தெரியவில்லையே” என்று புலம்புகிருன். பல்லக்குப் போகிகளோ, குஷியாக அமர்ந்து உக்காகுடித்து, அரட்டையடித்து விட்டு ஆனந்தமாக ஒரு

தூக்கம் போடுகின்றனர். சேட்டோ வழக்குவென்ருல் சிறிது மகிழ்கிருன். தோற்ருல் துயரக் கடலில் மூழ்குகிருன். போகிகளோ எப்போதும் போல இருக்கிருர்கள். அரசன் அழகான மெதுவான மெத்தையில் படுத்தாலும் சீக்கிரம் தூக்கம் வருவதில்லே; பாட்டாளி கல்லும் மண்ணும், கரடுமுரடுமான தரையில் படுத்து, ஆழ்ந்து உறங்குகிருன்—கவலேயில்லே. இப்படியே எல்லாம் பார்த்துக்கொள்ளுங்கள்.

விடை: இது அஞ்ஞானிகள் நம்பிக்கை. சுக துக்கம் சமமாயில்லே. சவுகாரை பல்லக்குத் தூக்கியாகச் சொன்ருல் ஆகமாட்டான்; ஆனுல் பல்லக்குத் தூக்கி சவுகாராக விரும்புவான். சுகதுக்கம் சமமாருல் தங்கள் தங்கள் நிலேயை விட்டு கீழிருப்பவர் மேலேற முயலமாட்டார்கள். மாந்தரின் இன்ப துன்ப நிலேகளேப் பார்! வித்துவான், புண்யாத்மா, ஶ்ரீமான், ராஜாவின் ராணி வயிற்றில் பிறக்கிருன் ஒருவன். இன்னொருவன் மகா தரித்திரப் புல்லுக்காரிக்குப் பிறக்கிருன். முன்னவனுக்குப் பிறந்தது முதல் சுகம்; பின்னவனுக்கு எல்லா விதத்திலும் துக்கம் ஏற்படுகிறது. முன்னவன் பிறந்ததும் அவனே நல்ல வாசனேத் தண்ணீரில் கழுவி, தொப்புள் கொடியறுத்து, நல்ல பாலூட்டுகிருர்கள்; பசித்தால் இனிப்புச் சேர்த்து நிரம்பப் பால் தருகிருர்கள். அவனே மகிழ்விக்கத் தாதி, சேவகர் இருக்கிருர்கள்; அவனுக்கு வேண்டிய விளேயாட்டுச் சாமான்கள் உண்டு. நல்ல இடங்களுக்குக் கொண்டு சென்று மகிழ்விக்க வண்டியுண்டு. பின்னவனுக்கோ காட்டில் பிறப்பு; குளிக்கக் கூடத் தண்ணீரில்லே; பால் வேண்டுமானுல் பாலுக்குப் பதிலாகக் கன்னத்தில் அறை கிடைக்கிறது. குழந்தை பரிதாபமாக அழுகிருன்; கேட்பாரில்லே. பூர்வ புண்ணிய-பாப மில்லாமல் இவ்வாறு சுகதுக்கங்கள் வந்தால், பரமேசன் செய்வது குற்றமே. விண்ப் பயனில்லாமல் இன்ப துன்பங்கள் எய்திளுல், சுவர்க்க நரகங்களும் தேவையில்லே. ஏனெனில் விணப் பயனின்றியே யாரை வேண்டுமானுலும் இறைவன் சுவர்க்கத்தில் வைக்கலாம் அல்லது நரகத்தில் தள்ளலாம், அதனுல் நாம் ஏன் தர்மம்செய்யவேண்டும் என்று எல்லாரும் அதர்மமே செய்யத் துணிவார்கள். ஏனென்ருல் தர்மபலன் கிடைப்பது சந்தேகம். எல்லாம் கடவுள் கையிலிருந்து அவன் விரும்பியபடியே காரியம் நடப்பதனுல், யாரும்

பாபத்திற் கஞ்சாது உலகில் பழி பாபமே பெருகி, அறம் நலியும். இதனால் பூர்வஜன்ம புண்ணிய பாபத்திற்கேற்ற படியே இந்த ஜன்மமும், இதன் கர்மானுசாரப்படியே இனி வரும் பிறவியும் இருக்கும் என்பது திண்ணமாகிறது.

**வினா:** மனிதருக்கும் விலங்குகளுக்கும் ஒரேமாதிரி ஜீவனா; தனித்தனி ஜீவனா?

**விடை:** ஜீவன் ஒன்றே; ஆனால் அது பாப புண்யத்திற்கேற்ற படி சுத்தமாகவோ அசுத்தமாகவோ காணும்.

**வினா:** விலங்கான்மா மனிதருள், மனிதான்மா விலங்கினுள்; ஆணான்மா பெண்ணுள், பெண்ணான்மா ஆணுள் புகுவதுண்டா, அன்று?

**விடை:** உண்டு; போய் வருவதுண்டு; ஏனெனில் பாபம் பெருகிப் புண்ணியம் அருகினால், மனிதான்மா பசுவாதி அஃறிணையுடலிற் புகும். அறம் மல்கி, அதர்மம் குறைந்தால், தேவசரீரமான வித்வத் சரீரம் கிடைக்கும். புண்ய பாபம் சரிசமமானால் சாதாரண மனிதப் பிறவி கிடைக்கும். புண்ணிய பாபங்களில் உத்தம, மத்திம, அதம நிலையுண்டு; அதனால் மனிதரும் உத்தம, மத்திம, அதம சரீரிகளாயிருக்கிறார்கள். அதிக பாபத்திற்குப் பலன் விலங்குடலில் பிறத்தலே; பாப புண்யம் சரிநிகரானபோது, மனிதவுடல் எய்தும். ஜீவன் புண்யபலனை நுகர்ந்து மீண்டும் நடுத்தர மனிதனாகப் பிறக்கும். ஜீவன் சரீரத்தை நீத்தலே சாவு (ம்ருத்யு), சரீரத்தில் சேர்ந்திருத்தலே பிறப்பு (ஜன்மம்) சரீரத்தைவிட்டதும் ஜீவன் யமாலயம் செல்லும்; யமாலயம் என்றால் ஆகாசத்திலுள்ள வாயு "यमेन वायुना"—யமேன வாயுனா (யமன் என்றால் வாயு) என்று வேதத்தில் எழுதப்பட்டுள்ளது. கருடபுராணத்தில் கற்பிக்கும் யமனன்று அது. இதன் இசை வகையைப் பதினோறும் அத்தியாயத்தில் எழுதுவேன். தர்ம ராஜாவான பரமேச்வரன் அந்த ஜீவனின் புண்ணிய பாபங்களுக் கேற்ற பிறவியைத் தருகிறான். வாயு, அன்னம், ஜலம் அல்லது சரீர துவாரங்களின் வழியே ஜீவன் இறைவன் ஆணையால் மற்றொரு சரீரத்தில் புகும். புகுந்த பிறகு வீரியத்திற் கலந்து கர்ப்பத்தில் நிலைக்கொண்டு உடல் பூண்டு வெளியேவரும். அது பெண்ணுடல் எடுக்கத் தக்கதானால் பெண்ணுடல், ஆணுடல் எடுக்கத் தக்கதானால்

ஆணுடல் எடுக்கும். அலியுடலானால் ஆண்பெண் சேர்க்கையின் போது ரஜவீரியங்கள் சமமாகக் கலக்கும். இம்மாதிரி ஜீவன் பலவித ஜனன மரணங்களை அடைகிறது. உத்தம கர்மோபாஸனையால், ஞானப் படியேறி முத்தி பெறுமட்டும், இவ்வாறு ஜீவன் பிறந் திறந்தலையும். நல்வினையாற்றலால் ஜீவன் நற்பிறவி எய்தி, முக்திபெற்று மஹா கல்பம் வரையில் பிறப் பிறப்புத் துயரில்லாமல் ஆனந்தமா யிருக்கும்.

வினா: முக்தி ஒரே ஜன்மத்தில் கிடைக்கிறதா, பல பிறவியிலா?

விடை: பல பிறவிகளில்.

भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः ।
क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे ॥ (முண்டகம்—2-2-8)

இந்த ஜீவனின் இதயத்தில், அவித்தை, அக்ஞானதி முடிச்சுக்கள் சிதைந்தால், உடனே ஐயப்பாடு விலகும், தீவினை நலியும். ஆத்மா தன் உள்ளும் புறமும் நிறைந்த பரமாத்மனில் நிலைகொள்ளும்.—என்கிறது முண்டகோபநிஷத்.

வினா: முக்த ஜீவன் பரமேச்வரனுடன் கலந்து போகிறதா, தனியாயிருக்கிறதா?

விடை: தனித்தே இருக்கும். கலந்து போனால் முக்தி சுகத்தை அனுபவிப்பது யார்? முக்தி சாதனங்களெல்லாம் அப்போது வீணாகுமே. கலந்து போவது முக்தியன்று; அது ஜீவ ப்ரளயம் என்றறிக. பரமேசன் ஆணைப்படி நடந்து, முன் சொன்னபடி நற்செயல், நற்சேர்க்கையுடன் யோக சாதனங்களைச் செய்யும் ஆத்மாவே முக்தி பெறும்.

தைத்திரிய உபநிஷத்து சொல்லுகிறது:
सत्यं ज्ञानमनन्तं ब्रह्म यो वेद निहितं गुहायां परमे
व्योमन् । सोऽश्नुते सर्वान् कामान् सह ब्रह्मणा विपश्चितेति ॥
(தைத்ரீய—ஆனந்தவல்லி. 1.)

தன்னுள் நிலைத்து சத்தியம், ஞானம், அனந்தம், ஆனந்த ஸ்வரூபமான பரமாத்மனை அறியும் ஜீவாத்மா, சர்வ வியாபியான பிரம்மத்தில் மேவி, அந்த (விபச்சித்) எல்லயற்ற அறிவுப் பொருளான பிரம்மத்துடன் எல்லா விருப்பங்களும் நிறைவேறப் பெறும். அதாவது கருதிய இன்பங்களை அடைதலே முக்தியாகும்.

**வினா:** உடலில்லாமல் உலகின்பம் நுகர முடியாது. அது போல் முக்தியிலும் உடலில்லாமல் எப்படி ஆனந்தம் நுகர முடியும்?

**விடை:** இதற்கு முன்பே சமாதானம் சொன்னோம். மேலும் கேளும். உலகின்பம் உடலைச் சார்ந்ததே புசிப்பது போல், முக்தி யின்பத்தைப் பரமாத்மாவைச் சார்ந்தே ஜீவாத்மா புசிக்கும். அந்த முக்த ஜீவன் அனந்த வியாபக மான பிரம்மத்திலேயே இச்சைப் படி உலாவுகிறது; சுத்த ஞானத்தால் சகல சிருஷ்டிகளையும் காண்கிறது. வேறு முக்தர்களுடன் கூடுகிறது; சிருஷ்டி வித்தையை முறைப் படி காண்கிறது; கண்ணுக்குத் தெரிவதும் தெரியாததுமான எல்லா உலகங்களிலும் உலாவி, அறிவிற்கு முன் வரும் பொருள்களை யெல்லாம் நோக்குகிறது. ஞானம் பெருகப் பெருக, அதன் இன்பமும் அதிகரிக்கிறது. அதனால் பூரண ஞான மெய்தி, மறைந்த பொருள்களைக் கூடத் தெளிவாகக் காண்கிறது. இதுதான் சுகமே மிகுந்த சுவர்க்க நிலை. விஷய தாகத்தில் சிக்கித் துன்பப்படுவதுதான் நரகம் என்பது. "ஸ்வ" என்றால் சுகம். ஆத்ம சுகமளிப்பது ஸ்வர்க்கம். இதற்கு எதிராக துக்க மோகமளிப்பது நரகம்.

"स्व: सुखं गच्छति यस्मिन् स स्वर्ग:"
"अतो विपरीतो दु:खमोगो नरक इति"

உலக சுகம் சாதாரண சுவர்க்கம்; பரமேச்வர முக்தியால் வரும் பரமானந்தமே சிறந்த சுவர்க்கமாகும். எல்லா ஜீவர்களும் இயல்பிலேயே இன்பத்தை அடைந்து துன்பம் ஒழியக் கருதுகின்றன. ஆனால் பாபத்தையே பற்றிக் கொண்டு, அறமே செய்யாத வரையில், சுகங்கிடைப்பது மில்லை; துக்கத்தினின்று விடுபடுவதும் இல்லை. ஏனெனில் மூலகாரணம் இருக்கு மட்டும் பலனும் ஒழியாது பற்றும்.
छिन्ने मूले वृक्षो नश्यति तथा पापे क्षीणे दु:खं नश्यति ॥

வேரை வெட்டினால் மரம் மடிவது போலவே, பாபம் ஒழிந்தால் துக்கமும் ஒழியும். புண்ணிய பாபங்களின் பல கதிகளை மனுஸ்மிருதி விளம்புகிறதைக் கேள்:

मानसं मनसैवायमुपभुङ्क्ते शुभाऽशुभम् ।
वाचा वाचा कृतं कर्म कायेनैव च कायिकम् ॥ 1 ॥

शरीरजैः कर्मदोषैर्याति स्थावरतां नरः ।
वाचिकैः पक्षिमृगतां मानसैरन्त्यजातताम् ॥ 2 ॥
यो यदैषां गुणो देहे साकल्येनातिरिच्यते ।
स तदा तद्गुणप्रायं तं करोति शरीरिणम् ॥ 3 ॥
सत्त्वं ज्ञानं तमोऽज्ञानं रागद्वेषौ रजः स्मृतम् ।
एतद् व्याप्तिमदेतेषां सर्वभूताश्रितं वपुः ॥ 4 ॥
तत्र यत्प्रीतिसंयुक्तं किञ्चिदात्मनि लक्षयेत् ।
प्रशान्तमिव शुद्धाभं सत्त्वं तदुपधारयेत् ॥ 5 ॥
यत्तु दुःखसमायुक्तमप्रीतिकरमात्मनः ।
तद्रजोऽप्रतिभं विद्यात्सततं हारि देहिनाम् ॥ 6 ॥
यत्तु स्यान्मोहसंयुक्तमव्यक्तं विषयात्मकम् ।
अप्रतर्क्यमविज्ञेयं तमस्तदुपधारयेत् ॥ 7 ॥
त्रयाणामपि चैतेषां गुणानां यः फलोदयः ।
अग्रयो मध्यो जघन्यश्च तं प्रवक्ष्याम्यशेषतः ॥ 8 ॥
वेदाभ्यासस्तपो ज्ञानं शौचमिन्द्रियनिग्रहः ।
धर्मक्रियात्मचिन्ता च सात्त्विकं गुणलक्षणम् ॥ 9 ॥
आरंभरुचिताऽधैर्यमसत्कार्यपरिग्रहः ।
विषयोपसेवा चाजस्रं राजसं गुणलक्षणम् ॥ 10 ॥
लोभः स्वप्नो धृतिः क्रौर्यं नास्तिक्यं भिन्नवृत्तिता ।
यचिष्णुता प्रमादश्च तामसं गुणलक्षणम् ॥ 11 ॥
यत्कर्म कृत्वा कुर्वंश्च करिष्यंश्चैव लज्जति ।
तज्ज्ञेयं विदुषा सर्वं तामसं गुणलक्षणम् ॥ 12 ॥
येनास्मिन्कर्मणा लोके ख्यातिमिच्छति पुष्कलाम् ।
न च शोचत्यसम्पत्तौ तद्विज्ञेयं तु राजसम् ॥ 13 ॥
यत्सर्वेणेच्छति ज्ञातुं यन्न लज्जति चाचरन् ।
येन तुष्यति चात्मास्य तत्सत्त्वगुणलक्षणम् ॥ 14 ॥
तमसो लक्षणं कामो रजसस्त्वर्थ उच्यते ।
सत्त्वस्य लक्षणं धर्मः श्रैष्ठ्यमेषां यथोत्तरम् ॥ 15 ॥

(மனு. 12; 3, 9, 25—33, 35-38)

மனிதன் இவ்வாறு தனது உத்தம, மத்திம, அதம இயல்புகளை அறிக; மத்திம, அதமங்களை விலக்கி உத்தம வியல்பையே போற்றுக. நல்லது பொல்லாததை மனதால் செய்தால் மனம்,

வாக்கால் செய்தால் வாக்கு, உடலால் செய்தால் உடல் மூலம் ஆன்மா இன்ப துன்பமடைகிறது என்பதை அறிக. (1) உடலால் திருட்டு, பரஸ்த்ரீ கமனம்; நல்லோரை அடித்தல் முதலிய தீவினைகளைச் செய்தால், மரம் முதலிய தாவரப் பிறவி எய்தும். வாக்கினால் செய்த பாபங்களுக்குப் பறவை அல்லது விலங்குப் பிறவி வரும்; மனதால் செய்த தீவினைகளுக்குச் சண்டாளாதிப் பிறவி வரும். (2) உடலில் வளம் பெற்ற குணம் ஜீவனையும் தன்மயமாக்குகிறது. அதே குணம் ஜீவனையும் பற்றுகிறது. (3) ஆத்மாவில் ஞான முள்ளபோது சத்வகுணம், அஞ்ஞானமுள்ளபோது தமோ குணம், ராகத் வேஷங்கள் இருக்கும்போது ராஜஸ குணம் மிகுந்ததை அறியவேண்டும். இந்த மூன்று இயற்கைக் குணங்களும் உலகப் பொருள்கள் அனைத்திலும் பரவி யிருக்கின்றன (4). அதன் குறிப்பை இவ்வாறு அறிக:

ஆத்மா மகிழ்ச்சியுடன் மனவமைதியுடன் சுத்த நிலையிலுள்ளபோது ஸத்வகுணம் மேலிட்டு, ராஜச தாமத குணங்கள் கீழிட்டிருப்பதாக அறிக. (5). ஆத்மாவும் மனமும் மகிழ்வின்றித் துக்கப்பட்டு இங்கு மங்கும் விஷயங்களில் திரியும்போது ரஜோகுணம் மேலிட்டு ஸத்வ தமோகுணங்கள் கீழ்ட்டிருப்பதை யறிக (6). ஆத்மாவும் மனமும் உலகப் பொருள் மோகத்தில் பற்றுண்டு, அறிவிழந்து விஷயா சக்தியுடன் கூடி தர்க்க விதர்க்க ரீதியாக எதையும் அறியமுடியாதிருக்கும் நிலையில், தமோகுணம் மேலிட்டு, ஸத்வ ராஜஸ குணங்கள் கீழிட்டிருப்பதை அறிக (7). இனி இம்மூன்று குணங்களின் உத்தம, மத்திம, அதம பலன்களை முழுதாகச் சொல்லுவோம் (8): வேதப் பயிற்சி, அறவொழுக்கம், அறிவு வளர்ச்சி, தூய விருப்பம், புலனடக்கம், அறவினை, ஆத்மசிந்தனை—இவையே ஸத்வகுண லக்ஷணமாம் (9). ஸத்வ தமோ குணங்கள் கரந்து ரஜோ குணம் உதித்ததும் தொடக்கத்தில் ஆசை, அதைரியம், அஸத்கர்மங்களை மேற்கொள்ளல், எப்போதும் விஷய சுகங்களை அனுபவிப்பதில் மகிழ்ச்சி—இவை காணும்; அப்போது நம்மிடம் ராஜஸம் மிஞ்சியிருப்பதாகக் கருதுக (10). தமோகுணம் எழுந்து மற்றிரண்டும் கரந்தபோது, மிகுதியான பேராசை (இதுவே எல்லாப் பாவங்களுக்கும் மூலம்), சோம்பல், தூக்கம், அதைரியம், கொடுமை, நாஸ்திகம் (வேதத்தையும் ஈஸ்வரனையும் கருதாமை), மனக்கலக்கம், அந்தக்கரணச் சிதைவு, ஒருமையின்மை, கெட்ட பழக்கங்களில் பிடிவாதம்—இவை புலனாகும்; அப்போது தமோ

குணத்தின் தன்மையை அறிந்துகொள்க (11). ஒரு காரியத்தைச் செய்ததில், செய்கிறதில், இனிச் செய்வதில் ஜீவன் வெட்கமும் ஐயமும் அச்சமும் கொள்ளும்போது தமோகுணம் மேலிட்டிருப்பதை யறிக (12). பெரும் புகழுக்காகக் காரியம் செய்தல், வறியனுயினும் சாரணர், புலவர், துதிகாரருக்குத் தானம் வழங்கல்.— இவை ரஜோகுணம் மிகுந்திருப்பதற்கு அடையாளம் (13). மனிதான்மா அனைத்தையும் அறிய விரும்புதல், நற்குணங்களை எங்கிருந்தும் ஏற்றல், நல்லது செய்ய நாணுமை, ஆத்மா மகிழும் அறிவினையில் ஈடுபாடு—இவையெல்லாம் ஸத்வகுண மிகையைக் குறிக்கும். (14). தமோகுண லக்ஷணம் காமம்; ரஜோகுண லக்ஷணம் பணங்குவிக்கும் ஆசை; ஸத்வகுணலக்ஷணம் தர்ம சேவை செய்தல்; தமோகுணத்தைவிட ரஜோகுணம், அதைவிட ஸத்வகுணம் சிறந்தது (15).

எந்தெந்த குணத்தினின்றும் ஜீவன் எந்தெந்த நிலையடைகிறது என்பதை இனி எழுதுவோம்:

देवत्त्वं सात्त्विका यान्ति मनुष्यत्त्वं च राजसाः ।
तिर्यक्त्वं तामसा नित्यमित्येषा त्रिविधा गतिः ॥ 1 ॥
स्थावराः कृमिकीटाश्च मत्स्याः सर्पाश्च कच्छपाः ।
पशवश्च मृगाश्चैव जघन्या तामसी गतिः ॥ 2 ॥
हस्तिनश्च तुरङ्गाश्च शूद्रा म्लेच्छाश्च गर्हिताः ।
सिंहा व्याघ्रा वराहाश्च मध्यमा तामसी गतिः ॥ 3 ॥
चारणाश्च सुपर्णाश्च पुरुषाश्चैव दाम्भिकाः ।
रक्षांसि च पिशाचाश्च तामसीषूत्तमा गतिः ॥ 4 ॥
झल्ला मल्ला नटाश्चैव पुरुषाः शस्त्रवृत्तयः ।
द्यूतपानप्रसक्ताश्च जघन्या राजसी गतिः ॥ 5 ॥
राजानः क्षत्रियाश्चैव राज्ञां चैव पुरोहिताः ।
वादयुद्धप्रधानाश्च मध्यमा राजसी गतिः ॥ 6 ॥
गन्धर्वा गुह्यका यक्षा विबुधानुचराश्च ये ।
तथैवाप्सरसः सर्वा राजसीषूत्तमा गतिः ॥ 7 ॥
तापसा यतयो विप्रा ये च वैमानिका गणाः ।
नक्षत्राणि च दैत्याश्च प्रथमा सात्त्विकी गतिः ॥ 8 ॥
यजवान ऋषयो देवा वेदा ज्योतींषि वत्सराः ।
पितरश्चैव साध्याश्च द्वितीया सात्त्विकी गतिः ॥ 9 ॥

ब्रह्मा विश्वसृजो धर्मो महानव्यक्तमेव च ।
उत्तमां सात्त्विकीमेतां गतिमाहुर्मनीषिणः ॥ 10 ॥
इन्द्रियाणां प्रसङ्गेन धर्मस्यासेवनेन च ।
पापान्संयान्ति संसारानविद्वांसो नराधमाः ॥ 11 ॥
(மனு. 12, 40, 42-50, 52)

ஸாத்விக மனிதன் தேவன் (வித்வான்), ரஜோகுணன் நடுத்தர மனிதன், தமோகுணம் தாழ்ந்த நிலையடைகிறான் (1). அதிகத் தாமதகுணர், தாவரம், மரம், புழு பூச்சி, மீன், பாம்பு, ஆமை, பசு, விலங்குப் பிறவி எடுப்பார்கள் (2). மத்திம தாமத குணர், யானை, குதிரை, சூத்திரன், மிலேச்சன், இழிச்செயலான், சிங்கம், புலி, பன்றி முதலிய பிறவி யெடுப்பார்கள் (3). உத்தம தமோகுணர், முகத் துதிக் கவி, சாரணர், அழகிய பறவை, இடம்ப புருஷன் (தன்னலத் தற்புகழோன்), இம்சிக்கும் ராக்ஷஸன், பிசாசு, அனாசாரன் (மது மாமிசம் உண்டு மலினமானவன்) முதலிய பிறவிகளை எடுப்பர் (4). அதம ரஜோகுணன் வாள்வீசுவோன், தோட்டக்காரன், மாலுமி, களைக்கூத்தாடி, ஆயுதம் தாங்கும் சேவகன், சூதாடி, குடியனாகப் பிறப்பான் (5). மத்திம ரஜோகுணன் அரசன், க்ஷத்திரிய வம்ஸ ராஜாக்களுக்குப் புரோகிதன், வாத விவாதன், தூதன், வக்கீல், நீதிபதி, பாரிஸ்டர், படைத்தலைவன் முதலிய பிறவியெடுப்பான் (6) உத்தம ராஜஸ குணன் கந்தர்வன் (பாடகன்), வாத்யக்காரன், யக்ஷன் (செல்வன்), புலவர் தொண்டன், அப்ஸர ஸ்திரீ (அழகி)யாகப் பிறப்பான் (7). தபஸ்வி, யதி, சந்யாஸி, வேதபாடகன், விமான மோட்டி, சோதிடன், தைத்யன் (தேகபலம் வளர்ப்போன்) ஆகிய பிறப்பெய்துவான் கீழ் ஸத்வகுணி (8). மத்திம ஸத்வகுணத் துடன் செயல்புரிந்தோன் ஜீவ யக்ஞ கர்த்தா, பொதுநலத் தலைவன், வேதாந்த ஞானி, வித்துவான், மின்சாரப் புலவன், வானசாஸ்திரி, பூமிசாஸ்திரி, காலக் கலைஞன், ரக்ஷகன், ஞானி, கர்மசித்திக்குச் சேவை செய்பவன், ஆசாரியன் ஆகப் பிறப் பான் (9). உத்தம ஸத்வகுணத்துடன் உத்தம காரியம் செய்பவன், பிரம்மா, எல்லா வேதமும் அறிந்தவன், உலக நிர்மாணி, எல்லா சிருஷ்டி கர்மங்களையும், ஆக்கவேலைகளையும் நிறைவேற்ற வல்லவன், எல்லாக் கலைகளையும் விஞ்ஞானங்களையும் அறிந்து பலவித விமானங்களையும் யந்திரங்களையும் நிர்மாணிக்க வல்லவன், தர்மாத்மா, மிகமேலான அறிவாளி, இயற்கையை அடக்கியாளத்தக்கவன்—ஆகிய பிறவியடைவான் (10). இந்திரி

யங்களுக்கு அடிமையாகி, விஷய சுகமே நாடி, தர்மத்தை விட்டு, அதர்மம் புரிந்து, கடமை வழுவியோர் அறிவிலிகள், கீழ்த்தர மனிதர், இவர்கள் மிகக் கெட்ட துக்க ஜன்ம மடைவார்கள் (11).

இதேமாதிரியே ஸத்வ, ராஜஸ, தாமஸ குணயுக்தராகி, மனிதர் எந்தெந்தக் காரியங்கள் செய்கிறார்களோ அததன் பலனை அனுபவிக்கிறார்கள். முக்தன், முக்குணங் கடந்தவன், குண விகாரங்களில் பிடிபடாதவன் மஹாயோகியாவான். ஆதலால் மனிதர் முக்தி சாதனம் செய்க. பதஞ்ஜலி யோகசாஸ்திரம் சொல்லுகிறது :

योगश्चित्तवृत्तिनिरोधः ॥ 1 ॥ (பத. யோ. சூ. 1-2)

तदा द्रष्टुः स्वरूपेऽवस्थानम् ॥ 2 ॥ (பத. யோ. சூ. 1-3)

மனிதன் மனதை ராஜஸ தாமஸ குணங்களிலிருந்து தடுத்து, சுத்த ஸத்வ கர்மங்களிலிருந்தும் தடுத்து, சுத்த ஸத்வ குணமயமாகுக. பிறகு மனதைப் புலன் வழிச் செல்லாதடக்கி, தர்ம கைங்கரியங்களில் செலுத்தி, பரமாத்ம தியானத்தில் ஒன்றுபட வேண்டும். மனோ விருத்திகளை இவ்வாறு தடுத்துப் பரமாத்மாவில் நிலைநாட்டும் ஒருமையே யோகமாகும் (1). சித்தமடங்கி, ஒருமைப்பட்டால் ஜீவாத்மா பரமாத்மனில் நிலைகொள்ளும். முக்திக்கு இத்தகைய சாதனம் செய்க. (2).

अथ त्रिविधदुःखात्यन्तनिवृत्तिरत्यन्तपुरुषार्थः ॥ (சாங்க்யம் 1-1)

இது சாங்கிய சாஸ்திர ஸூத்ரமாகும். உடலால் வரும் அத்யாத்மிகம், பிற உயிர்களால் வரும் ஆதி பௌதிகம், பெரு மழை, பெருங் குளிர் வெப்பங்களால் வரும் ஆதி தைவிகம், மனச் சஞ்சலத்தாலும், புலன்களின் அலைவாலும் வரும் துன்பங்கள் இன்னல்கள்—இவற்றினின்றும் விடுபட்டு, முக்தி நலம் பெறுதலே புருஷார்த்தமாகும்.

இனி ஆசாரம், அனாசாரம், உணவு நெறி இவற்றைக் குறித்து (அடுத்த அத்தியாயத்தில்) விளக்குவோம்.

ஸ்ரீமத் தயானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள் அருளிய
ஸத்யார்த்தப் பிரகாசத்தில் வித்தை, அவித்தை
மோக்ஷஸாதனங்களைக் குறித்த
ஒன்பதாம் அத்தியாயம்
முற்றிற்று.

## பத்தாம் அத்தியாயம்

# ஆசாரம், அனாசாரம், உண்ணத் தக்கது, தகாதது

இப்போது அறிவினை, ஒழுக்கம், நன்னடை, நல்லோர் உறவு, நல்லறிவுப் பயிற்சியில் விருப்பம் முதலிய ஆசாரங்களைப் பற்றியும், இவற்றிற்கு விரோதமான அனாசாரங்களைப்பற்றியும் எழுதுகிறோம். மனு தர்மம் இரண்டாம் அத்தியாயம் சொல்லுகிறது :

विद्वद्भिः सेवितः सद्भिर्नित्यमद्वेषरागिभिः ।
हृदयेनाभ्यनुज्ञातो यो धर्मस्तन्निबोधत ॥ 1 ॥

कामात्मता न प्रशस्ता न चैवेहास्त्यकामता ।
काम्यो हि वेदाधिगमः कर्मयोगश्च वैदिकः ॥ 2 ॥

सङ्कल्पमूलः कामो वै यज्ञाः सङ्कल्पसंभवाः ।
व्रतानि यमधर्माश्च सर्वे सङ्कल्पजाः स्मृताः ॥ 3 ॥

अकामस्य क्रिया काचिद् दृश्यते नेह कर्हिचित् ।
यद्यद्धि कुरुते किञ्चित् तत्तत्कामस्य चेष्टितम् ॥ 4 ॥

वेदोऽखिलो धर्ममूलं स्मृतिशीले च तद्विदाम् ।
आचारश्चैव साधूनामात्मनस्तुष्टिरेव च ॥ 5 ॥

सर्वन्तु समवेक्ष्येदं निखिलं ज्ञानचक्षुषा ।
श्रुतिप्रामाण्यतो विद्वान स्वधर्मे निविशेत वै ॥ 6 ॥

श्रुतिस्मृत्युदितं धर्ममनुतिष्ठन् हि मानवः ।
इह कीर्तिमवाप्नोति प्रेत्य चानुत्तमं सुखम् ॥ 7 ॥

योऽवमन्येत ते मूले हेतुशास्त्राश्रयाद् द्विजः ।
स साधुभिर्बहिष्कार्यो नास्तिको वेदनिन्दकः ॥ 8 ॥

वेदः स्मृतिः सदाचार स्वस्य च प्रियमात्मनः ।
एतच्चतुर्विधं प्राहुः साक्षाद्धर्मस्य लक्षणम् ॥ 9 ॥

अर्थकामेष्वसक्तानां धर्मज्ञानं विधियते ।
धर्मं जिज्ञासयानानां प्रमाणं परमं श्रुतिः ॥ 10 ॥

वैदिकैः कर्मभिः पुण्यैर्निषेकादिर्द्विजन्मनाम् ।
कार्य्यः शरीरसंस्कारः पावनः प्रेत्य चेह च ॥ 11 ॥

केशान्तः षोडशे वर्षे ब्राह्मणस्य विधीयते ।
राजन्यबन्धोर्द्वाविंशे वैश्यस्य द्व्यधिके ततः ॥ 12 ॥

(மனு 2 ;-1-4, 6, 8, 9, 11, 13, 26, 65)

விருப்பு வெறுப்பற்ற நல்லறிஞர் தினம் செய்யும் நற்கடமைகள், உள்ளத்திலுள்ள ஆத்மா (மனச்சாட்சி) உண்மை என்று அறியும் காரியங்கள்—இவையே தர்மம் என்று கருதி, மனிதர் எப்போதும் கடைப்பிடிக்க வேண்டும். (1) இவ்வுலக வாழ்வில் பேராசையும் கூடாது; ஆசையே அற்றுப் போதலும் கூடாது—இரண்டும் முறையன்று. ஏனெனில் ஆர்வ மில்லாமல் வேதார்த்த ஞானமோ, வேதோக்த கர்மமோ சித்திக்காது. (2) எனக்கு இச்சையில்லை, ஆசையில்லை; நான் நிஸ்ஸங்கல்பனுவேன் என்பது நடக்காது. ஏனெனில் வேள்வி, மெய்யுரை, விரதம், யம நியம தர்மங்களெல்லாம் ஸங்கல்பத்தினுலேதான் நடக்கின்றன. ஏனெனில் கை கால் கண் மனம் அசைவது கூடக் காமத்தால், விருப்பத்தால் ஆகிறது. விருப்பமில்லாவிட்டால் கண்ணை மூடித் திறப்பது கூட முடியாத காரியம். (3) இதனுல் பரிபூரண வேதம், மனுஸ்மிருதி, ரிஷிகள் செய்த சாஸ்திரம், ஸத்புருஷர் ஆசாரம், மனச்சாட்சி மகிழும் செயல்கள் (பயம், சந்தேகம், லஜ்ஜைக்கு இடமில்லாதன)—இவற்றையே மனிதன் பின்பற்றி நடக்கவேண்டும். பொய்யுரை, திருட்டு முதலியன செய்யும்போது, தன்னுள் பயம், சங்கை, லஜ்ஜை அவசியம் உண்டாகும்; ஆதலால் அவை செய்யத் தகாதவை. (4) ஸம்பூர்ண வேதம், சாஸ்திரம், ஸத் புருஷர் ஆசாரம், தன் மனச்சாட்சிக்கு விருத்தமில்லாதது (ஆத்ம சம்மதம்)—இவற்றை நன்ருக ஆராய்ந்து, அறிவுக் கண்ணுல் பார்த்து, வேதப் பிரமாணம், தன் ஆத்மானுகூலம்—இரண்டையும் பற்றி மனிதன் அறவழி நடக்க வேண்டும். (6) வேத தர்மம், வேத விரோதமில்லாத ஸ்மிருதி தர்மம் பற்றி யொழுகும் மனிதன், இகத்தில் கீர்த்தியும் பரத்தில் உத்தம சுகமும் பெறுகிருன். சுருதி (வேதம்), ஸ்மிருதி (தர்ம சாஸ்திரம்) இவற்றைக்கொண்டே செய்யத் தக்கது, தகாததை நிச்சயிக்க வேண்டும். வேதம், வேதானுகூலமான ஆப்த க்ரந்தங்கள் ஆகியவற்றை நிந்திப்பவனை அறிவிற் சிறந்த நல்லோர் ஜாதி ப்ரஷ்டம் செய்க; ஏனெனில் வேத நிந்தை செய்பவன்

நாஸ்திகனுவான். (8) வேதம், ஸ்மிருதி, ஸத்புருஷர் ஆசாரம்,
ஆத்ம உணர்ச்சி (மனச்சாட்சி சம்மதம்)—இந்த நான்கிற்கும்
விருத்தமில்லாது அனுஷ்டிக்கப்படுவதே தர்மம்; இவையே தர்ம
லக்ஷணம், லக்ஷியம். (9) ஆனால் காம காஞ்சன இச்சையில்லா—
தவர்களுக்கே, விஷயா சக்தி யில்லாதவர்களுக்கே தர்மஞானம்
கைகூடும். தர்மத்தை அறிய விரும்புவோருக்கு வேதமே சிறந்த
பிரமாணமாகும். (10) ஆதலால் எல்லாரும் வேதம் விதிக்கும்
புண்ய கர்மங்களைச் செய்யவேண்டும்; பிரம்ம க்ஷத்திரிய வைசி
யர்—தங்கள் சந்தானங்களுக்கு இம்மை மறுமைப் பயனளிக்கும்
நல்ல பரிசுத்த ஸம்ஸ்காரங்களைச் செய்க. (11) பிராமண
னுக்கு 16, க்ஷத்திரியனுக்கு 22, வைசியனுக்கு 24 வயதில்
குடுமிச் சடங்கு (கேசாந்த ஸம்ஸ்காரம்) நடத்துக. உச்சிக் குடுமி
வைத்து, தாடி மீசை தலைமயிர் எல்லாம் க்ஷவரம் செய்துவிடுக.
பிறகு எப்போதும் உச்சிக் குடுமியே வைத்திருக்கவும். குளிர்ந்த
நாட்டார் சௌகரியப்படி முடி வைத்துக்கொள்ளலாம். உஷ்ணப்
பிரதேசத்திலிருப்பவர் சிகையைக் கூட எடுத்து முகக்ஷவரம்
செய்துகொள்ள வேண்டும். ஏனெனில் தலையில் மயிர் வைப்ப
தால் உஷ்ணம் அதிகமாகி, அதனால் புத்தி குறைகிறது. தாடி
மீசையால் சோறு நீர் கூடச் சரியாக உட்கொள்ள முடியாது.
அவற்றில் எச்சில் ஒட்டும். (12)

इन्द्रियाणां विचरतां विषयेष्वपहारिषु ।
संयमे यत्नमातिष्ठेद्विद्वान् यन्तेव वाजिनाम् ॥ 1 ॥

इन्द्रियाणां प्रसङ्गेन दोषमृच्छत्यसंशयम् ।
सन्नियम्य तु तान्येव ततः सिद्धिं नियच्छति ॥ 2 ॥

न जातुकामः कामानामुपभोगेन शाम्यति ।
हविषा कृष्णवर्त्मेव भूय एवाभिवर्द्धते ॥ 3 ॥

वेदास्त्यागश्च यज्ञाश्च नियमाश्च तपांसि च ।
न विप्रदुष्टभावस्य सिद्धिं गच्छन्ति कर्हिचित् ॥ 4 ॥

वशे कृत्वेन्द्रियग्रामं संयम्य च मनस्तथा ।
सर्वान् संसाधयेदर्थानक्षिण्वन् योगतस्तनुम् ॥ 5 ॥

श्रुत्वा स्पृष्ट्वा च दृष्ट्वा च भुक्त्वा घ्रात्वा च यो नरः ।
न हृष्यति ग्लायति वा स विज्ञेयो जितेन्द्रियः ॥ 6 ॥

नापृष्टः कस्यचिद् ब्रूयान्न चान्यायेन पृच्छतः ।
जानन्नपि हि मेधावी जडवल्लोक आचरेत् ॥ 7 ॥

वित्तं बन्धुर्वयः कर्म विद्या भवति पञ्चमी ।
एतानि मान्यस्थानानि गरीयो यद्यदुत्तरम् ॥ 8 ॥
अज्ञो भवति वै बालः पिता भवति मन्त्रदः ।
अज्ञं हि बालमित्याहुः पितेत्येव तु मन्त्रदम् ॥ 9 ॥
न हायनैर्न पलितैर्न वित्तेन न बन्धुभिः ।
ऋषयश्चक्रिरे धर्मं योऽनूचानः स नो महान् ॥ 10 ॥
विप्राणां ज्ञानतो ज्यैष्ठ्यं क्षत्रियाणां तु वीर्यतः ।
वैश्यानां धान्यधनतः शूद्राणामेव जन्मतः ॥ 11 ॥
न तेन वृद्धो भवति येनास्य पलितं शिरः ।
यो वै युवाप्यधीयानस्तं देवा स्थविरं विदुः ॥ 12 ॥
यथा काष्टमयो हस्ती यथा चर्ममयो मृगः ।
यश्च विप्रोऽनधीयानस्त्रयस्ते नाम बिभ्रति ॥ 13 ॥
अहिंसयैव भूतानां कार्यं श्रेयोऽनुशासनम् ।
वाक् चैव मधुरा श्लक्ष्णा प्रयोज्या धर्ममिच्छता ॥ 14 ॥

(மனு 2; 88, 93, 94, 97, 98, 110, 136, 153-157, 159)

குதிரையோட்டி அதை அடக்கி நேர் வழியில் செலுத்துகிறான். அவ்வாறே சித்தம் இந்திரியங்களைக் கவர்ந்து விஷயங்களில் புகுத்தும் அதர்ம வழியினின்றும் அவற்றை அடக்கித் திருப்பி எப்போதும் தர்ம மார்க்கத்திலேயே செலுத்தவேண்டும்—இது மனிதரின் முக்கியமான ஆசாரமாகும் (1). ஏனெனில் இந்திரியங்கள் விஷயப் பற்றிலும் அதர்மத்திலும் புகுவதால் நிச்சயமாக தோஷமுண்டாகிறது; இவற்றை அடக்குவதில் வெற்றியடைந்து அறவழி நடத்தினால் எண்ணியது கைகூடும். (2). விறகும் நெய்யும் போட்டால், தீ மேன்மேலும் எரிகிறது; அது போலவே காம போகத்தால் காமத் தீ ஒருகாலும் தணியாது; அதற்கு மாறாகக் காமம் வளர்கிறது. ஆதலால் மனிதன் சிற்றின்பங்களில் ஒருகாலும் பற்று வைக்கக் கூடாது (3). புலனடக்கமில்லாதவனை 'விப்ரதுஷ்டன்' என்பார்கள். புலனடங்காதவனுக்கு வேதஞானம், தியாகம், கேள்வி, நியமம், அறவொழுக்கம் எவையும் கைகூடா; இவை ஜிதேந்திரிய தர்ம சீலருக்கே கைகூடும் (4). ஆதலால் ஐந்து கர்மேந்திரியங்களையும், ஐந்து ஞானேந்திரியங்களையும் பதினோராவது இந்திரியமான மனதையும், அடக்கி, வசப்படுத்தி நல்லுணவு, நல்லுறக்கம்; யோகம் போற்றி உடலைப் பேணி எல்லாப் புருஷார்த்த சித்தியும்

மனிதன் அடைக. (5) துதித்தால் மகிழான்; நிந்தித்தால் வருந்தான்; இனிய ஸ்பர்சத்தால் சுகமும், கடின ஸ்பர்சத்தால் துக்கமும் கொள்ளான்; அழகுருக் கண்டு அகமகிழான்; அவலட்சணத்தைக் கண்டு அருவருப்படையான்; நல்ல சாப்பாட்டில் இன்புறான்; மட்டமான சாப்பாட்டில் வருந்தான்; சுகந்தத்தில் விருப்பும், துர்க்கந்தத்தில் வெறுப்புங் கொள்ளான்—அவனே ஜிதேந்திரியனாவான் (6). ஒருவர் கேட்டாலொழிய அறிவாளி பேசக்கூடாது; அநியாயக் கிண்டல், வஞ்சக் கேள்விகளுக்கு பதிலே சொல்லாமல், ஜடம் போல் இருக்க வேண்டும். வஞ்சமற்ற ஆர்வங்கொண்ட சாதகர் கேட்காமலே உபதேசம் செய்க (7). (1) செல்வம் (2) குலம், குடும்பம் சுற்றம் (3) வயது (4) உத்தம கர்மம் (5) சிறந்த கல்வி—இவை ஐந்தும் மரியாதைக்குரியன. ஆனால் செல்வத்தை விட உத்தம பந்து, பந்துவை விடப் பெரிய வயது, அதைவிடச் சிறந்த செயல், செயலை விடத் தூய கல்வி யறிவு கொண்டவரைச் சாலவும் மதிக்க வேண்டும் (8). நூறு வயதானாலும் கல்வி யறிவற்றவன் சிறுபிள்ளைக்குச் சமமானவன்; கல்வியறிவிற் சிறந்தவன் பாலனானாலும் முதியவனுக்குச் சமானமானவன். ஏனெனில் சாஸ்திரங்களெல்லாம் அறிவிலியைச் சிறு பிள்ளையாகவும், அறிவாளியைத் தந்தையாகவும் மதிக்கின்றன (9). வயது முதிர்வு, நரைத்த மயிர், பணச் செழிப்பு, குடும்பப் பெருக்கம்—இவற்றால் மனிதர் முதியோராவதில்லை. நம்மிடையே கல்வியறிவில் மிகுந்தவரே முதியோராவார் என்பது மஹாத்மாக்களான ரிஷிகளின் உறுதியாகும் (10). பிராமணன் ஞானத்தால், க்ஷத்திரியர் பலத்தால், வைசியர் தன தானியத்தால், சூத்திரர் அதிக ஆயுளால் முதியோராவார் (11). தலை மயிர் நரைத்ததால் முதியோராவதில்லை; கல்வியில் மிக்க இளைஞனே முதியோனாவான் என்பர் அறிஞர் (12). கல்லாதவன் மரயானை, தோல்மான் போல்வான்; கற்றறிவில்லாதவன் உலகில் பெயருக்கே மனிதன் (13). ஆதலால் கசடறக் கற்று, வித்வான், தர்மாத்மாவாகி, பகையின்றி, எல்லா வுயிர்களும் இன்புற உபதேசம் செய்க. இனிய செஞ்சொல்லால் உபதேசம் செய்க. நல்லுபதேசத்தால் தருமத்தை வளர்த்து, அதர்மத்தை நாசம் செய்வோர் வாழ்க! அவர்களே தன்யர்! (14).

தினம் குளிக்க வேண்டும்; ஆடை, அன்னபானம், இடம் எல்லாம் சுத்தமாக வைத்திருக்க வேண்டும். இவை சுத்தமானால்

மனமும் சுத்தமாயிருக்கும், ஆரோக்கியம் மிகுந்து புருஷார்த்தம் வளரும். மல நாற்றம் போகு மட்டும் சௌச்சம் செய்வதே முறையாகும்.

आचारः प्रथमो धर्मः श्रुत्युक्तः स्मार्त्त एव च । (மனு 1; 108).

வாய்மை யுரைத்தல் முதலிய கர்மங்களைச் செய்தலே வேதம், ஸ்மிருதி முதலிய நூல்கள் கூறும் ஆசாரமாகும், என்கிறார் மனு.

मानो वधीः पितरं मोत मातरम् ॥ (யஜுர் 16-15).

आचार्य उपनयमानो ब्रह्मचारिणामिच्छते ॥ (அதர் 11-15).

मातृदेवो भव । पितृदेवो भव । आचार्यदेवो भव ।
अतिथिदेवो भव ॥ (தைத்ரியாரண்யகம் ப்ர. 7—அனு 11).

மாதா பிதா ஆசாரியர், அதிகளுக்குச் சேவை செய்தல் தேவ பூஜையாகும். உலகிற்கு நலமானதைச் செய்து, தீயதை விடுதலே முக்கியமாக மனிதர் கடமையாகும். நாத்திகன், பொய்யன், நன்றி கொன்றவன், மித்யாவாதி, சுயநலன், வஞ்சன், கபடன் ஆகிய துஷ்டர்களுடன் சேரக்கூடாது. ஆப்தர், தர்மாத்மாக்கள், மெய்யர், பரோபகாரத்தை விரும்புவோருடன் எப்போதும் சேர்ந்திருத்தலே சிறந்த ஆசாரமாகும்.

வினு: ஆரியவர்த்த தேச வாசிகள் அன்னிய நாடுகளுக்குச் செல்வதால் ஆசாரம் நஷ்டமாகுமா இல்லையா?

விடை: இது பொய் மொழி. ஏனெனில் உள்ளும் புறமும் சுத்தமாயிருந்து, மெய்யுரை முதலிய ஆசாரங் கைவந்தவன் எங்கு சென்றாலும் ஆசார சீலனாகவே யிருப்பான். அவன் ஒருக்காலும் தர்மப்பிரஷ்டனாக மாட்டான். ஆனல் ஆரியவர்த்தத்திலேயே துராசாரியாயிருந்தால், அவனே தர்மத்தையும் ஆசாரத்தையும் நஷ்டமாக்கினவனாவான். இதற்குச் சான்றுகள்:

मेरोर्हरेश्च द्वे वर्षे वर्षं हैमवतं ततः ।
क्रमेणैव व्यतिक्रम्य भारतं वर्षमासदत् ॥
स देशान् विविधान् पश्यंश्चीनहूणनिषेवितान् ।

(பாரதம்—சாந்திபர்வம், சுக சம்வாதம்—327

மஹாபாரதம் சாந்தி பர்வத்தில், மோக்ஷார்த்தத்தில், வியாச சுக சம்வாதத்தில் கூறப்பட்டுள்ளது இந்த சுலோகம். ஒரு காலம் வியாசர் தமது புத்திரர் சுகருடனும் சிஷ்யருடனும் பாதாள லோகத்தில் (இது இப்போது அமெரிக்கா எனப்படுகிறது) வசித்து வந்தார். அப்போது சுகர் தந்தையிடம் "ஆத்ம வித்தை என்பது தாங்கள் சொன்ன அளவு தானா, இன்னும் அதிகமா?" என்று கேட்டார். வியாசர் வேண்டுமென்றே இக்கேள்விக்கு பதிற் சொல்லவில்லை. ஏனெனில் முன்பே அதை உபதேசித்திருந்தார். அதற்கொரு சான்று வேண்டும் என்று கருதி வியாசர் சுகரிடம் சொன்னார், "மைந்தா, நீ மிதிலாபுரி செல்; ஜனக மஹாராஜனிடம் இதே கேள்வியைக் கேள். அவர் சரியான பதில் சொல்லுவார்." தந்தை சொற்படியே சுகர் பாதாளத்திலிருந்து மிதிலைக்குப் புறப்பட்டார். முதலில் இமாலயத்திற்கு (மேரு) வடக்கிலும், வட மேற்கிலும் உள்ள ஹரிவம்ஸத்திற்குச் சென்றார். ஹரி என்றால் குரங்கு; குரங்குபோல இரத்த முகமும், பச்சைக் கண்களும் உடையவர்கள் வசிக்கும் ஐரோப்பாவுக்கே ஹரி வம்சம் என்று சமஸ்கிரதத்தில் பெயர் வழங்கியது. பிறகு ஹூணர் வசிக்கும் யஹூதி தேசத்திற்கு (யூதர்நாடான ஸிரியா) சென்று, சீனம் போய் இமாலயம் வந்து, அங்கிருந்து மிதிலை சேர்ந்தார். ஸ்ரீகிருஷ்ணனும் அர்ஜுனனும் அக்னி ஆவி விசையால் ஓடும் கப்பலில் (அச்வதரி) அமெரிக்கா சென்று, ராஜா யுதிஷ்டிரரின் (ராஜஸூய) யாகத்திற்காக உத்தாலக முனிவரைக் கொணர்ந்தனர். திருதிராஷ்டிரர் காந்தார (காந்தஹார்) நாட்டு ராஜபுத்ரியை மணந்தார். பாண்டு மனைவி மாத்ரி இரான் மன்னர் புதல்வி. அர்ஜுனன் பாதாள (அமெரிக்க) நாட்டிளவரசியான உலோபியை மணந்தான். தேச தேசாந்தரம், தீப தீபாந்தரங்களுக்கு பாரதவாசிகள் செல்லாவிட்டால், இவை யெல்லாம் எப்படி நிகழ்ந்திருக்கும்? மனுஸ்மிருதியில், சமுத்திரத்தில் செல்லும் கப்பல்களுக்கு வரிவிதிக்க வேண்டும், என்று எழுதியிருக்கிறது. மஹாராஜா யுதிஷ்டிரர் செய்த ராஜஸூய யாகத்திற்கு, உலக மன்னரை யெல்லாம் அழைக்க பீமன், அர்ஜுனன், நகுலன், சஹாதேவன் ஆகியோர் நான்கு திசைகளிலுமுள்ள நாடுகளுக்குச் சென்றனர். அன்னியநாடு செல்வது தோஷமானால் இவ்வாறு நடந்திராது. ஆர்யவர்த்திகள் வியாபாரத்திற்கும், அரச காரியத்திற்கும் உலகெல்லாம் சென்று சுற்றினர்.

இன்று தீட்டு, தர்மநஷ்டம் என்று அயல்நாட்டுப் பிரயாணத்தை ஏசுவதெல்லாம் மூடர் பிதற்றல், அஞ்ஞானப் பெருக்கமேயாம். அயல் நாடுகளுக்கும், தீவுகளுக்கும் போக்கு வரத்து செய்பவர், பல நாட்டு மக்களுடன் பழகி, அவர்கள் பண்பைப் பார்த்துத் தங்கள் அரசையும், வாணிகத்தையும் வளர்த்து, அச்சமற்ற சூர வீரராகிறார்கள். கெட்ட பழக்கங்களை விட்டு நல்ல பழக்கங்களைக் கொள்ளுகிறார்கள். 'அறிவிலிகாள்! கீழ்த்தர வேசைகளுடன் கூடிக் குலாவினால் ஆசாரம் கெடாது, தர்மம்குறையாது! ஆனால் பிறநாட்டு உத்தம புருஷர்களுடன் அளவளாவினால் தீண்டறும் தோஷமும் வருமோ!' இது முழு முட்டாள்பேச்சைத் தவிர வேறென்ன? மது மாமிசம் புசிப்பவர், உடலும் வீர்யமும் வீச்சு மெடுத்திருக்கும்; அவர்களுடன் கூடி அந்தப் பழக்கங் கொள்ளக் கூடாது என்பதுமட்டுமே சரியே. ஆனால் அன்னியரிடமிருந்து கலைகள், உலகறிவு, நல்லகுணம் விவகாரம் கற்பதால் கெடுத லில்லை. மதுமாமிசாதி கெட்டபழக்கங்களை விட்டு, அவர்களது நல்ல குணங்களைக் கொள்ளவேண்டும்; அதனால் கெடுதலில்லை. அவர்களைக் காண்பதும் தொடுவதும் கூடப் பாபம் என்று கருதும் மூடர், அவர்களுடன் எப்படிப் போர்புரிய முடியும்? ஏனெனில் அவர்களைக் கண்டு தீண்டித்தானே போர் புரிய முடியும்? விருப்பு, வெறுப்பு, அநியாயம், பொய்யுரை ஆகிய குற்றங்களை விட்டு பகையின்மை, அன்பு, பரோபகாரம், நற் பண்புகளை மேற்கொள்ளுதலே உத்தம ஆசாரமாகும் என்று நன் றறிக. தர்மம் என்பது நம் ஆத்மாவையும் வாழ்வுக் கடமையை யும் பொறுத்தது. நமது செய்கை நல்லதானால் அயல்நாட்டுப் பயணம் நமக்குத் தீங்கு செய்யாது. பாபம் செய்தாலே தோஷ முண்டு. நாம் வேததர்மத்தை நன்றாய் அறிந்து, பாகண்ட மதங்களைக் கண்டனமும் செய்து, யாரும் நம்மை ஏமாற்றாது கவனமா யிருத்தல்வேண்டும். தேச தேசாந்தரங்களில், தீப தீபாந்தரங்களில் அரசும் வாணிகமும் நாட்டினாலொழிய சுதேசம் உன்னதி அடையமுடியுமா? முன்னணிக்கு வரமுடியுமா; சுதேசிகள் தங்களுக்குள் மட்டும் வாணிபம்செய்து, பரதேசிகள் அந்த சுதேசிகளுடன் வியாபாரமும் செய்து, அரசியலும் நடத் தினால், அந்த நாட்டில் வறுமையுந் துயருந் தவிர வேறென்ன இருக்கும்? மக்கள் கல்வி கற்று அன்னியநாட்டுப் பிரயாணமும் செய்தால், அறிவாளிகளாகி, நமது மூடவலையில் விழமாட்டார்கள்? நமது பிழைப்பே போய்விடும், மதிப்பும் இறங்கிவிடும், என்ப

தைப் பாகண்டப் போலிகள் அறிவார்கள். அதனாலே தான் உண்பது பருகுவதில் இவ்வளவு தடபுடல் செய்து, யாரும் பிற நாடுகளுக்குச் செல்வதைத் தடுக்கிறார்கள். மது மாமிசங்களை என்றும் மறந்தும் உண்ணக் கூடாது என்பது உண்மையே. போர் நடக்கும்போது கூட *சௌகா (வரம்பு) கட்டிச் சமயல் செய்வது, சாப்பிடுவது போன்ற மூடாசாரங்கள், யுத்தத்தில் தோல்வி வரக் காரணமாயின என்பதை அறிவாளிகள் ஒரு முகமாக தீர்ப்பளித்தனரல்லவா? க்ஷத்திரியர் ஒரு கையால் ரொட்டி நீர் உண்டு; மற்றொரு கையால் பகைவரைப் பொருதுவர். தேர், யானை, குதிரை மேல் ஏறி அல்லது காலால் நடந்து சண்டை போட்டுப் பகைவரை வெல்லுவதே அவர்கள் ஆசாரம், தோற்பதே அனாசாரம். இன்று முட்டாள் ஜனங்கள் சௌகாபோட்டு, பிரிவினை யாடித் தம்முள் பகையாடிப் பகையாடி, உரிமை, இன்பம், செல்வம், அரசு, அறிவு, புருஷார்த்தமெல்லாம் இழந்து, ஏதாவது பதார்த்தம் கிடைத்தால் பொங்கித் தின்று கைக்கட்டிச் சும்மா உட்கார்ந்திருக்கிறார்கள். இவர்கள் ஆரியநாட்டையே சௌகா மயமாக்கிப் பாழ்பண்ணிவிட்டார்கள். ஆம், சாப்பிடும் இடத்தை நன்றாகக் கூட்டி, மெழுகிக் குப்பைகளைத் தூர ஒதுக்கிச் சுத்தமாக வைத்துக்கொள்வது அவசியமே; முஸல்மான்—கிறிஸ்தவர் சமையலறை போல் அசுத்தமாயிருக்கக் கூடாது.

வினா: ஸகரீ நிகரி என்றால் என்ன ?

விடை: ஜலம் வைத்துச் சமைத்தது ஸகரீ, பால், நெய்யில் பக்குவம் செய்தது நிகரீ; இனியது என்பர். இதிலும் ஒரு மோசடி யிருக்கிறது. பாலும் நெய்யும் போட்டுச் செய்த பண்டம் இனிதாகவேயிருக்கும். தங்கள் வயிற்றில் மஸ்தான பதார்த்தங்கள் போவதற்கே நிகரீ நிவேதிக்க வேண்டுமென்று வைத்தனர் பாகண்டர். தீயிலும் காலத்திலும் வெந்து பக்குவமானது நிகரீ அல்லது பக்கா. சமைக்காத பச்சையுணவே ஸகரீ அல்லது கச்சா. சமைத்ததே கூடும். பச்சையுணவு கூடாது என்பதும்

* 'சௌகா' என்றால் 'சதுரம்' என்று பொருள். ஹிந்துக்கள் வீடுகளில் சமையலறையில் சில அடி நீள அகலமுள்ள சதுர இடம் செய்து, அதற்கு ஒரு செங்கல் உயர சுவர்கள் நாற்புறமும் வைத்து, அச்சதுரத்திற்குள்ளேயே சமையல் செய்து, அவ்விடத்திலேயே சாப்பிடுவதுதான் ஆசாரம், மடி என்று நம்புகிறார்கள். இது விசேஷமாக வட இந்தியாவில் தான் பழக்கம்.

பொருந்தாது. ஏனெனில் பச்சைக் கடலையும் சிலர் சாப்பிடுகிருர்கள்.

வினு: துவிஜர் கைச்சமயலே உண்ணவேண்டுமா? சூத்திரர் சமைத்தும் உண்ணலாமா?

விடை: சூத்திரர் சமைத்தே உண்ணலாம். ஏனெனில் பிரம்ம க்ஷத்திரிய, வைசியர், (ஆண் பெண் இரு பாலாரும்) கல்வி வளர்த்தல், அரசை ஆளுதல், பசு, பயிர் வளர்த்தல், வாணிகம் முதலிய காரியங்களில் கவனம் செலுத்த வேண்டும். ஆனுல் சூத்திரர் பாத்திரத்தில் அவர் வீட்டில் சமைத்த உணவை உண்ணவேண்டாம். ஆனுல் ஆபத்துக் காலத்திற்குப் பரவாயில்லை. இதற்குப் பிரமாணம் ஆபஸ்தம்ப தர்ம சூத்திரம் இவ்வாறு கூறுகிறது.

आर्याधिष्ठिता वा शूद्राः संस्कर्त्तारः स्युः ॥

(ஆபஸ்தம்ப தர்மசூத்—2-2-2-4)

ஆரியர் வீட்டில் பண்படாத சூத்திரர் (கல்வியறிவு ஏருதவர்) —ஆண் பெண் இரு பாலாரும்—சமையல் முதலிய தொண்டு செய்யலாம்; ஆனுல் அவர்கள் உடல், ஆடை முதலியவற்றில் சுத்தமாயிருக்க வேண்டும். அவர்கள் சமயல் காரியம் செய்யும் போது துணியால் வாயைக் கட்டிக்கொண்டு செய்க. ஏனெனில் உணவில் அவர்கள் எச்சில் தெறிக்கக் கூடாது; மூச்சும் படக் கூடாது. வாரா வாரம் அவர்கள் க்ஷவரம் செய்துகொண்டு நகத்தையும் எடுக்கவேண்டும்; ஆரியர் உண்டபிறகு அவர்கள் சாப்பிடவேண்டும்.

வினு: சூத்திரர் தொட்ட பக்குவான்னம் சாப்பிடக்கூடாதென்ருல், அவர்கள் கையால் சமைத்ததை எப்படிச் சாப்பிடலாம்?

விடை: இந்தப் பேச்சு வெறும் கற்பனைப் புளுகே. வெல்லம், சீனி, நெய், பால், தயிர், மோர், மாவு, காய் கறி, கனி கிழங்கு சாப்பிட்டவ ரெல்லாம் பிறர் கையால் செய்ததை, உச்சிஷ்டத்தைச் சாப்பிட்டவராவார். ஏனெனில் சூத்திரர், சக்கிலி (சாமர்), பங்கி, முஸல்மானர், கிறிஸ்துவர் முதலியோரே வயலில் கரும்பு வெட்டி, நறுக்கிச் சாறு பிழிந்து காய்ச்சுகின்றனர். அவர்கள் வெளிக்குப் போனுல் கை கால்கூடக் கழுவுவதில்லை. அதே கையால் கரும்பைத் தொட்டுக்

கடித்துச் சாறுறுஞ்சி மீதியை ஆலையில் இடுகிருர்கள். சாறு காய்ச்சும்போதே அதிலேயே ரொட்டி சுட்டுச் சாப்பிடு கிருர்கள். சீனி செய்யும்போது மல மூத்திரம், சாணி, தூசி, சேறு படிந்த பழைய செருப்புத்தோலிஞல் அதைச் சுரண்டி தேய்க்கிருர்கள். அழுக்குப் பானை, எச்சில் பானை ஜலத்தைப் பாலில் கலக்குகிருர்கள். அதே பானையில் வெண்ணெய், நெய் வைக்கிருர்கள். மாவு அறைக்கும் போதும் அழுக்குக் கையால் அதைத் திரட்டுகிருர்கள்; அதில் அவர்கள் வேர்வைத் துளிகளும் கலக்கின்றன. கந்த மூல பழாதிகளிலும் இதே லீலைதான்! இந்தப் பதார்த்தங் களை உண்பவர் எல்லார் கையாலும் உண்டவராவார்.

**விஞ:** பழம், மூலம், கந்தம், ரஸம் இவை கண் மறைவில் தயாரிக்கப்படுபவை; இவற்றை உண்டால் தோஷ மில்லையே?

**விடை:** வாஹ்ஜி வாஹ்! சபாஷ் ராஜா! இப்படிப் பதில் சொல்லாவிட்டால், சாம்பலும் தூசியுமே சாப்பிட வேண்டியிருக்கும். வெல்லம், சர்க்கரை இனிப்பு, பால் மஸ்து—இவற்றைச் சாப்பிடாமல் முடியாது; அதஞல் இவை எங்கிருந்து வந்தாலும் பரவாயில்லை என்ற பொய்ச் சித்தாந்தம் கட்டி விட்டிருக்கிறீர்கள். கண் மறைவில் தயாரித்தது குற்றமில்லை என்ருல், ஒரு தோட்டியோ, முஸல்மானே வேறிடத்தில் மறைவாகச் சமைத்துக் கொடுத்தால் நீ சாப்பிடுவாயா? மாட்டாயாஞல் கண் மறைவிலும் தோஷமுள்ளது என்பதை ஒப்புக் கொண்டே தீரவேண்டும். முஸல்மான்களும், கிறிஸ்துவர் களும் மது மாமிசம் உண்போர்; அவர்கள் கையால் சாப்பிடுவதால் ஆரியர் கூட மது மாமிசம் பழகும் அபாய முள்ளது. ஆரியர் தம்முள் சமமாக அமர்ந்துண்பதில் குற்றமில்லை. சமயம், பொருளாதாரம், (லாப நஷ்டம்), இன்ப துன்பங்களில் எல்லாரும் ஒருமையுடன், ஒருவக்குக் கொருவர் உதவியாக வாழ்ந்தாலொழிய நாம் சுபீட்சமும் முன்னேற்றமும் அடையமுடியாது. சேர்ந்து உண்பதாலும் பருகுவதஞலும் மட்டும் சீர்திருத்தம் வந்துவிடாது. கெட்ட பழக்க வழக்கங்கள் ஒழியாத வரையில், நல்ல பழக்க வழக் கங்கள் பிடிபடாத வரையில், முன்னேற்றத்திற்குப் பதில் ஹானியே (கெடுதலே) வரும். நமக்குள் சண்டை,

மதபேதம், பிரம்மசரியம் காவாமை, கல்லாமை, கல்வி பரப்பாமை, கட்டாய பாலிய விவாகம், சுயம்வரமின்மை, சிற்றின்ப மிகை, விஷயாசக்தி, பொய் புரட்டு, கெட்ட பழக்கம், வேதவித்யாப் பிரசாரமின்மை—இத்தகைய கேடுகளாலேதான் பாரத நாட்டில் அன்னியர் ஆட்சி வந்தது, வலுத்தது. இரண்டு சகோதரர்கள் சண்டை போட்டால் மூன்றாவது அன்னியன் பஞ்சாயத்திற்கு வந்து நம்மிடத்தில் வலுவாக உட்கார்ந்துக்கொள்ளுகிறான். ஐயாயிரம் ஆண்டுகளுக்குமுன் நடந்த மஹாபாரதக் கதை உங்களுக்குத் தெரியாதா? மறந்துவிட்டீர்களா? அந்தப் போரில் வீரர் குதிரைச் சவாரி செய்துக்கொண்டும், ரதம் ஓட்டிக்கொண்டும் உண்டனர். தம்முள் சண்டையே கௌரவ, பாண்டவ, யாதவரை நாசமாக்கியது. அதே நோய் இன்றும் பரவியிருக்கிறது. இந்தப் பயங்கரப் பகை யரக்கன் எப்போது ஒழிவானோ, அல்லது ஆரிய ஜாதியைத் துன்புறுத்தி, துக்க சாகரத்தில் ஆழ்த்துவானோ அறியேன்! அந்த துஷ்ட, குலநாசகன், சுதேச நாசகன், நீசனான துரியோதனின் கெட்டவழியைத்தான் இன்றுவரையில் ஆரியர் பின்பற்றித் துன்பமே பெருகி நிற்கிறார்கள்! இந்த அரசியல் நோய், உட்பகைநோய் ஒழியப் பரமேசன் கருணை செய்க!

## உணவு நெறி

உணவில் கொள்ளத் தக்கதுண்டு; தள்ளத்தக்கதுண்டு; இவை தர்மசாஸ்திரப்படிக்கும், வைத்திய சாஸ்திரப்படிக்கும் ஏற்பட்டன.

अभक्ष्याणि द्विजातीनाममेध्यप्रभवाणि च । (மனு 8-5)

பிரம்ம க்ஷத்திரிய வைஸ்யரும், சூத்திரரும்கூட மல மூத்திரங்களைப் போட்டு விளையும் கனி, கிழங்கு தானியங்களை உண்ணக்கூடாது.

वर्जयेन्मधुमांसं च ॥ (மனு 2-177)

மது மாமிசம், அபினி, பங்கி முதலான லாகிரி வஸ்துக்களை உண்ணக்கூடாது என்பது மனு வாக்கு.

बुद्धिं लुम्पति यद् द्रव्यं मदकारी तदुच्यते । (சாரங்கதர. அ (4-21)

புத்தியைக் கெடுக்கும் பண்டத்தைச் சாப்பிடக்கூடாது. பதங்கெட்டு நாறி அருவருக்கும் உணவை, நன்றாக சமைக்காத

உணவை, மது மாமிசமுண்ணும் மிலேச்சர் (இவர்கள் உடலெல்லாம் மது மாமிச அணுமயம்) கையால் உண்ணற்க! பசு முதலிய பயனுள்ள பிராணிகளைக் கொல்லக்கூடாது. பிறர் கொல்லவும் விடக்கூடாது. ஒரு பசு, பால் நெய் தன் கன்று இவற்றால் 4,75,000 பேருக்கு நன்மை செய்கிறது. சில பசுக்கள் தினம் இருபது சேர், சில இரண்டு சேர் பால் கறக்கும்; இவையிரண்டுவகையிலும் சராசரி பதினொரு சேராகும். சில பசுக்கள் ஆறுமாதம், சில பதினெட்டு மாதம் பால் தரும்; சராசரி பன்னிரண்டு மாதம் பால் தரும். இவ்வாறு கணக்கிட்டால் ஒரு பசு தன் வாணளில் 24960 பேருக்கு திருப்தியாக ஒரு வேளை பால் தருவதாகும். ஒரு பசு தன் ஆயுளில் சுமார் பன்னிரண்டு தடவை கன்று போடுகிறது. இரண்டு செத்தாலும் மீதி பத்துக் கன்று உண்டு.— ஐந்து பசு, ஐந்து காளை என்போம். இந்த பசுக்களும் 124800 பேருக்குத் திருப்தியாக ஒரு வேளை பால்தரும். காளைகளோ வயலை உழுது குறைந்தபட்சம் 5000 மணங்கு உணவு தரும். அதாவது 180 டன்; ஆளுக்கு $\frac{3}{4}$ அல்லது $1\frac{1}{4}$ சேர் வீதம் (அதாவது மூன்று பாவ் $=1\frac{1}{2}$ பவுண்டு) 25,000 பேர் ஒரு வேளை சாப்பிடலாம். பாலும் உணவும் சேர்ந்தால் 374800 பேர் திருப்தியடைகிறார்கள். இரண்டு தொகையும் சேர்த்தால் ஒரு பசு தனது தலைமுறையில் 4,75,600 பேரை ஒரு வேளை காப்பாற்றுகிறது. இவ்வாறே வம்ஸ பரம்பரையாகக் கணக்கிட்டால், பசுவானது கோடிக்கணக்கான மக்களுக்குப் பாலும் உணவும் தருகிறது. இது தவிர காளைகள் மண்ணுழுது, பாரம் சுமந்து, வண்டியிழுத்து, மூட்டை சுமந்து மனிதருக்குப் பேருதவி செய்கின்றன. பசுவின் முக்கியப் பயன் பால் தருவதே. பசுவைப்போல் எருமையும் பயனுள்ளதே; ஆனால் மூளைவளர எருமைப் பாலைவிடப் பசுவின் பாலே சிறந்தது. ஆதலால் ஆரியர் பசுவை மிக மிக உபயோகமான செல்வமாகக் கருதினர். மற்ற அறிவாளிகளும் அவ்வாறே.

ஓர் ஆடு 25920 பேருக்கு ஒரு வேளை பால் தரும். அதே மாதிரி யானை, குதிரை, ஒட்டகம், கழுதை, மாடு முதலியன மனிதருக்குப் பல வகையில் எந்நாளும் மிகமிகப் பயனுள்ளவை. [இதன் விரிவு கோகருணாநிதி என்ற நூலிற் காண்க.] இந்த சாது ஜீவர்களைக் கொல்லுவோர் மனித சமுதாயத்தையே கொலை செய்தவராவார். ஆரிய ராஜ்யத்தில் இந்தப் பயனுள்ள ஜீவர்களை யாரும் கொன்றதில்லை. ஆதலால், மனிதருடன் மற்ற விலங்கு

களும் பரம சாந்தமாக வசித்தன. அவை பாரதத்திலும் உலக நாடுகளிலும் ஆனந்தமாக வளர்ந்தன. ஏனெனில் பால் நெய் யுடன், காளைகள் ஏராளமானதால் அன்னரசம் செழித்தோங்கி யது. மது மாமிசம் உண்ணும் அன்னியர் நமது நாட்டில் வந்து ஆதிக்கம் பெற்றதும், பசு முதலிய பிராணிகளைக் கொன்றுண் ணும் அவர்களால் ஆரியர் துயரம் பெருகியது. விருத்த சாணக் யன் சொல்லுகிறபடி,

नष्टे मूले नैव फलं न पुष्पम् ॥ (வ்ருத்த சாணக்யம் 10-13)

'வேரை அறுத்தால் மரம் மலர் கனி தருவதெப்படி?'

வினு: எல்லாரும் அஹிம்ஸையாளரானால் புலி முதலியன வலுத்து, பசு முதலிய சாதுஜீவர்களை அடித்துண்டு பெருகிப் போகுமே; பிறகு உங்கள் புருஷார்த்தமே வீணுகுமே?

விடை: தீய விலங்குகளையும் மாந்தரையும் தண்டித்தலோ, ஒழித்தலோ அரசாங்கத்தின் கடமையாகும்.

வினு: பிறகு இந்தப் பிராணிகளின் மாமிசத்தை விட்டெறிய வேண்டுமா?

விடை: ஊனை விட்டெறிக; எரிக்க; நாய் முதலிய புலாலுண்ணி களுக்குத் தருக; அல்லது மாமிசம் உண்ணும் யாருக் காவது தருக. அதை மனிதனுனவன் உண்டால் குணம் மாறிக் கொடியவனுவான். ஹிம்ஸை, இன்னல், திருட் டுருட்டு, நன்றிக்கொல்லல், கபடு, சூதுகளால் வந்த பதார்த் தங்களைப் புசித்தல் தீங்காகும். இவை புசிக்கத் தகாதவை; தள்ளத்தக்கவை. அஹிம்ஸா தர்மம் முதலிய செயலால் வரும் பதார்த்தங்கள் உண்ணத்தக்கவை. அரிசி, கோதுமை கந்த மூலபலாதிகள், பால் நெய் முதலியவற்றைப் பக்குவம் செய்து, பசிக்கும்போது மட்டும் உண்க. இதனுல் உடல் நலம், புத்தி பலம், பராக்கிரமம், ஆயுள் எல்லாம் பெருகும். நோய் விலகும். உன் உடம்புக்கு ஒத்துக்கொள்ளாததெல்லாம் நோய் செய்வதெல்லாம் விலக்கத் தக்கன. உடலுக் கினியன, நோய் தடுப்பன ஆகிய பதார்த்தங்களைக் கொள்ளவேண்டும். இவ்வாறுகொள்ளுவன தள்ளுவன இன்னதென்றறிந் துண்க.

வினு: எல்லாரும் ஒரே தட்டில் சேர்ந்து உண்பது நல்லதா கெடுதலா?

விடை : கெடுதலே ; ஏனெனில் ஒவ்வொருவர் இயல்பும் தன்மையும் வெவ்வேருகும். உதாரணமாக குஷ்டரோகிகளுடன் உண்டால் இரத்தம் கெடும் ; அப்படியே மற்ருெருவருடன் சேர்ந்துண்பதும் கெடுதலுண்டாகும் ; அது நல்லதில்லை. ஆதலால் மனு சொல்லுகிருர் :

नोच्छिष्टं कस्यचिद्दद्यान्नाद्याच्चैव तथान्तरा ।
न चैवात्यशनं कुर्यान्न चोच्छिष्टः क्वचिद्व्रजेत् ॥ (மனு 2-56)

பிறருக்கு உன் எச்சிலுணவைத் தராதே ; இன்ஞெருவர் கலத்தில் நீயும் கலந்துண்ணுதே ; மிகையாக உண்ணுதே ; உண்டதும் கை கழுவி, முகங் கழுவித் துடைக்குமுன் இங்கு மங்கும் போகாதே.

விஞ :
"गुरोरुच्छिष्टभोजनम्" (குரோருச்சிஷ்ட போஜனம்)
இவ்வாக்கியத்தின் கருத்தென்ன ?

விடை : குரு சாப்பிட்ட பிறகு மிச்ச மிருக்கும் நல்ல உணவையே புசி ; அதாவது முதலில் குருவுக்குப் போட்டுப் பிறகு சிஷ்யன் சாப்பிடட்டும் என்பதே பொருள்.

விஞ : எச்சில் கூடாதென்ருல் தேன் தேனீ எச்சில், பால் கன்றின் எச்சில், நாம் ஒருபிடி சாப்பிட்ட மிச்சமும் எச்சில் தானே ; இவற்றை மறுபடி சாப்பிடலாமா ?

விடை : தேன் எச்சிலென்பது பெயரளவிலேதான். உண்மையில் தேன் பல மூலிகைகளின் சாரமாகும் ; அதைக் கொள்ளலாம். கன்று மடுக்காம்பிலிருந்து பால் உறிஞ்சிக் குடிக்கிறது. அது உள்ளேயிருக்கும் பாலைப் பருகமுடியாது. அதனுல் பால் எச்சிலில்லை. மடுவை நன்ருகக் கழுவி சுத்தமான பாத்திரத்தில் பால் கறக்க வேண்டும். சாப்பிடும் போது தன் எச்சில் தனக்கு விகாரமில்லை ; மற்றவர் எச்சிலையே உண்ணக்கூடாது. உதாரணமாக ஒருவன் தனது வாய், மூக்கு, காது, கண், எருவாய், கருவாய் மல மூத்திரங்களைத் தொட்டுக் கழுவ அருவருப்பதில்லை. பிறர் மல மூத்திரங்களைத் தொட்டாலே அருவருப்புண்டாகிறது. இந்த விவகாரம் இயற்கையில் விபரீதமில்லை. ஆதலால் மனிதர் மட்டும் பிறர் எச்சிலைச் சாப்பிடா திருப்பது நலம்.

வினு : சதிபதிகள்கூட எச்சில் உண்ணக்கூடாதா ?
விடை : கூடாது ; ஏனெனில் அவர்கள் உடலும் இயலும் வெவ் வேறு.

வினு : யார் கையால் சமைத்ததையும் உண்டாலென்ன ? ஏனென்ருல் பிராமணன் முதல் சண்டாளன் வரையில், எல்லார் உடலும் ஊன் எலும்புத் தோல்தானே ? பிராமணன் உடலில் ஓடும் ரத்தமே சண்டாளனின் உடலிலும் ஓடு கிறது. எல்லார் கையும் ஒன்றுதானே. எந்த மனிதன் செய்த சமையலையும் சாப்பிடுவதில் குற்றமென்ன ?

விடை : குற்றமுண்டு ; பிராமண—பிராமணிகள் உத்தம சுத்த பதார்த்தங்களை உண்பதால் அவர் உடலில் நாற்றமில்லை. சுத்தமான ரஜ வீரியத்தால் அவர் உடல் ஆனது. சண்டாள—சண்டாளி உடல் துர்நாற்ற அணுக்களால் நிரம் பியது ; பிராமணர் உடல் அவ்வாறில்லை. ஆதலால் பிராமணர் போன்ற தூயர் கையால் உண்ண வேண்டும். சண்டாளர், பங்கிகள், சாமரர், கையால் உண்ணக்கூடாது. நல்லது. உன் தாயார், தமக்கை, மாமியார், மதினி, நாட்டுப் பெண், எல்லாருக்கும் உன் மனைவிபோன்றே தோல் எலும்பு இரத்தத்தால் ஆன உடல் என்ருல், உன் மனைவியிடம் போலத் தாய் முதலியோரிடம் பழகுவாயா ? நீயே வெட்கி வாய் மூடு வாய். கையும் வாயும் நல்லுணவைப் புசிப்பது போலவே, துர்நாற்றத்தையும் புசிக்க முடியும் ; அப்படியாருல் விவஸ்தையில்லாது மலாதிகளையும் உட்கொள்வாயா ? இப் படியும் நடக்குமா ?

வினு : சமையலறையை மாட்டுச் சாணம் போட்டு மெழுகுவது போல், மனிதச் சாணம் போட்டு மெழுகிஞலென்ன ? சாணி போட்டு மெழுகினுல் ஏன் அசுத்தம் இல்லை ?

விடை : மனிதர் மலம் போல் மாட்டுச் சாணம் அவ்வளவு நாற்ற மில்லையே ; கோமயம் தரையில் நன்ருகப் பிடிக்கிறது ; துணியைக் கெடுப்பதில்லை ; மண்ணைப்போல் அழுக்குப் படி வதில்லை. உலர்ந்த சாணத்திலிருந்து மண் பெயர்வதில்லை. மண்ணும் சாணமும் பூசி மெழுகிய இடம் பார்க்க மிக்க அழகாயிருக்கும். சமைத்துச் சாப்பிடும் இடத்தில் எச்சில் பருக்கையும், நெய் சர்க்கரை போன்றவையும் சிந்தும் ; ஈ, பூச்சி, புழுக்கள் அவற்றை உண்ண மொய்க்கும். அறையைத்

தினம் கூட்டி மெழுகாவிட்டால் கக்கூஸ் போலாய்விடும்; இதனால் தினம் கூட்டி மண்ணும் சாணியும் போட்டு அறையை மெழுகி மிகவும் சுத்தமாக வைத்திருக்க வேண்டும். சிமெண்ட் வீடானால் தண்ணீரால் கழுவி விட வேண்டும். இதனால் முன் சொன்ன குறை நீங்கும். மியான்ஜீ சமையலறையில் ஒரு பக்கம் கரி, ஒரு புறம் சாம்பல், ஒரு புறம் விறகு, மறுபுறம் உடைந்த பானை சட்டி, எச்சில் தட்டு, இங்கே எலும்புகள், அங்கே ஆட்டுக் கால், மாமிசத் துண்டுகள் எல்லாம் சிதறிக் கிடக்கும். ஈக்களுக்கு நல்ல வேட்டைதான்! யாராவது நல்ல மனிதர் அங்கே போய் உட்கார்ந்தால் நாற்றம் குடலைப் பிடுங்கும்; வாந்தியெடுக்க வேண்டியதுதான்! அந்த இடம் மல அறைதான்! சாணி போட்டுச் சமயலறையை மெழுகுவது தோஷமானால் வீட்டு மண் சுவரைச் சாணியால் பூசுவதேன்? எரு விரட்டி போட்டு அடுப்பெரிப்பதேன்? அந்தத் தீயில் சுருட்டு பற்ற வைத்துப் புகைக் குடிப்பதேன்? இவையெல்லாம் மியாஜீ சமயலறையை அசுத்தப்படுத்தவில்லையோ?

வினா: சமையலறையில் சாப்பிடுவது நல்லதா? அதற்கு வெளியில் சாப்பிடுவது நல்லதா?

விடை: தூய, இனிய, அழகிய இடத்தில் நிம்மதியாக அமர்ந்து உண்பதே நலம். ஆனால் போர்க்களத்தில் குதிரை மேலோ, தரையில் நின்றோ உண்ணலும் உசிதமாகும்.

வினா: தன் கையால் சமைத்ததையே உண்ண வேண்டுமா? பிறர் சமைத்ததை உண்ணலாமா?

விடை: ஆரியருள் பரிசுத்தமாகச் சமைத்ததை ஆரியருடன் கூடியுண்பதில் சிறிதும் தீங்கில்லை. யார் சமைத்தாலும் சுத்தமாயிருந்தால் குற்றமில்லை. பிராமணர் முதலிய மேலோரில் ஆண் பெண் இருபாலரும் சமைப்பது, பாத்திரம் கழுவுவது, கூட்டி மெழுகுவது போன்ற தொல்லையிலும் சமயலறை விவகாரத்திலும் போது போக்கினால், கல்வி, கலை, சுபகுணபிவிருத்தி போன்ற உயர்ந்த காரியங்கள் தடைப்படும். ஒரு உதாரணம் பாருங்கள்; யுதிஷ்டிர மஹாராஜா ராஜஸூய யாகம் செய்தார்; அதற்கு உலகிலுள்ள அரசர், முனிவர், மஹரிஷிகள் எல்லாரும் வந்தனர்; அவர்கள் அனைவரும் ஒரே பாகசாலையிலமர்ந்தே

உண்டனர். முஸல்மானரும் கிறிஸ்தவரும் நம் நாட்டில் புகுந்து, மாட்டிறைச்சியும் கட்குடியும் உண்டாக்கி மதத் துவேஷம் உண்டாக்கவே நம்மில் பகைமை விரோத மனப் பான்மை உண்டாயின; நம்மவர் தம்முள்ளே சண்டை போட்டனர்; அப்போதிருந்தே நமது சமையலறைத் தொல்லையும் தொடங்கியது. சாப்பாடு விவகாரத்தில் பிரிவினை எழுந்தது. அதற்கு முன் காபுல், கந்தார், ஈரான், அமெரிக்கா, ஐரோப்பா முதலிய தேசங்களின் ராஜகன்னி கைகளான காந்தாரி, மாத்ரி, உலோபி முதலியோருடன் ஆரியவர்த்தா இளவரசர் மணவினை நடத்தினர். சகுனி முதலியோர் பாண்டவ கௌரவருடன் உண்டனர்; அவருள் பகையில்லை. ஏனெனில் அப்போது உலகெல்லாம் ஒரே வேத நெறி பரவியிருந்தது. அதில் அனைவருக்கும் உறுதி யிருந்தது. பிறர் இன்ப துன்பம், லாப நஷ்டங்களைத் தமதெனக் கருதி உதவி செய்தனர். அப்போது உலக வாழ் வில் இன்பமிருந்தது. இன்று மதங்கள் பெருகின. இதற்கு நிவாரணம் காண வேண்டுவது அறிவாளர் வேலையாகும். பரமாத்மா எல்லார் மனதிலும் சத்திய தர்மத்தின் விதையை நாட்டுக! அதனால் பொய் மதங்கள் விரைவில் அடியோடொழிக! அறிவாளர் பகையுணர்வை விட்டு உலகில் இன்பம் வளரத் தொண்டு செய்க.

இங்கே ஆசாரம் அனுசாரம் உண்ணத் தக்கது தகாதது பற்றிச் சிறிது விளக்கினோம்.

இந்தப் பத்தாம் அத்தியாயத்துடன் இந்நூலின் முதல்பாகம் முடிகிறது. இந்த பத்து அத்தியாயங்களிலும் இசை வசைகளை (கண்டனம் மண்டனம்) அதிகமாகச் சொல்லவில்லை. ஏனெனில் மெய் பொய் இன்னதென்று விசாரித்து தெளிந்தாலன்றி, ஸ்தூல ஸூக்ஷ்ம கண்டனத்தின் உட்கருத்தை ஜனங்கள் அறிய முடியாது. ஆதலால் முதலில் அனைவருக்கும் உண்மையை அறிவுறுத்தி, இனிவரும் நான்கு அத்தியாயங்களிலும் இசை வசைகளை விசேஷமாக எழுதியுள்ளேன். இந்த நான்கில் முதல் அத்தியாயத்தில் ஆரியாவர்த்தத்தின் மத மதாந்தரம், இரண்டாம் அத்தியாயத்தில் ஜைனமதம், மூன்றும் அத்தியாயத்தில் கிறிஸ்து மதம், நான்காம் அத்தியாயத்தில் முஸல்மான்களின் மத மதாந் தரத்தின் இசைவசைகளை எழுதுவேன். பதினான்கு அத்தியாயங் களின் முடிவில் என்மத விளக்கமும் செய்வேன். விசேஷமான

இவைசைகளை வேண்டுவோர் இந்தக் கடைசி நான்கு அத்தியா யங்களைக் காண்க. சாதாரண இசைவசை வேண்டுவோர் முதல் பத்தில் காண்க. இந்தப் பதினன்கு அத்தியாயங்களை யும் பக்ஷபாதமில்லாமல் நியாய புத்தியுடன் கருத்தூன்றிக் கற்பவர் ஆன்மாவில் சத்திய ஜோதி (உண்மை ஒளி) விளங்கும். அவர்கள் ஆனந்தமய மாவார்கள். வேண்டுமென்றே முரட்டுத் தனமும் பொறுமையும் கொண்டு இவற்றைக் கேட்பவன் நமது நூலின் கருத்தை அறிவது மிகக் கடினமாகும். தக்க ஆராய்ச்சி, அக்கறையில்லாது இதைப் படிப்பது குழப்பத்தில் முடியும். ஆதலால் அறிஞர் மெய்—பொய் யறிந்து, தெளிந்து, மெய்யைக் கொண்டு பொய்யை விட்டொழித்துப் பரமானந்தமடைக; அப்படிச் செய்பவரே குணவான் புருஷரும் அறிஞரும் ஆகி, அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நான்கும் அடைந்து மகிழ்வார்கள்.

ஸ்ரீமத் தயானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள் அருளிய
ஸத்யார்த்தப் பிரகாசத்தில் ஆசாரம்,
அனாசாரம், உணவில் தக்கது தகாதது என்ற
விஷயத்தை விளக்கும்
பத்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

ஸத்யார்த்தப் பிரகாசம் முதற் பாகம்
(பூர்வார்த்தம்)
முற்றிற்று.

ஓம்



சாந்தி சாந்தி சாந்தி!

# அணிந்துரை

ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வேதமதந் தவிர வேறு மதம் இருந்ததில்லை என்பதுறுதி. ஏனெனில் வேதமொழி களெல்லாம் அறிவிற்குப் பொருந்தியுள்ளன. வேதத்தின் ஆக்கம் குறைந்ததால் மஹாபாரதம் எழுந்தது; உலகெல்லாம் மடமையிருள் சூழ்ந்தது; மனிதர் புத்தியும் மயங்கியது; மனம் போனபடி கண்ட கண்ட மதங்கள் எழுந்தன. அம் மதங்களுள் நான்கு மற்ற மதங்களுக்கெல்லாம் மூலமாயின: வேத விருத்தமான (1) புராணி (2) ஜைனீ (3) கிராணீ (4) குரானீ—இவை ஒன்றின்பின் ஒன்ருகத் தொடர்ந்தன. இன்று இந்த நான்கின் கிளைகள் ஆயிரத்திற்குக் குறைவில்லை. இந்த மதத்தினர், அவர் சிஷ்யர், பரிவாரங்களெல்லாம் பெருகி விட்டன. இம் மதங்களைச் சீர்தூக்கி ஆராய்ந்து, மெய் இன்னது பொய் இன்னது என்பதைக் காணவே இந்நூல் ஆக்கப்படு கிறது. இதில் உண்மைக் கொள்கையைப் போற்றுவோம்; பொய்யைத் தூற்றுவோம். இது அனைவருக்கும் உண்மை விளங்கப் பயனுகும். என் அறிவாற்றலுக் கேற்றபடியே இந்த நான்கு மதங்களின் மூலக்கிரந்தங்களை ஆராய்ந்தேன்; அவற்றை ஒளிவு மறைவின்றி அனைவர் முன்னும் சமர்ப்பிப்பதே உசிதமென்று, அப்படியே இந்நூலில் எடுத்தாண்டிருக்கிறேன். ஏனெனில் விஞ்ஞானச் சிறப்பை ஒரு தடவை இழந்தால் மறுபடியும் அதை சகஜமாக அடையமுடியாது. இதைப் பக்ஷபாதமில்லாமல் பார்த்தால், எல்லாரும் சத்திய மத மின்னது, அசத்திய மத மின்னதென்பதை அறிந்துக் கொள்ளலாம். அதனுல் அனைவரும் தாங்கள் அறிந்தபடியே சத்திய மதத்தைக் கைகொண்டு, அஸத்தியத்தை ஒதுக்கித் தள்ளமுடியும். பதினோராவது அத்தியாயத்தில் புராண நூல்களிலிருந்து பத்தி பத்தியாகக் குறித்துள்ளேன். ஆரியதேசத்தை அவை என்ன செய்தன, அவற்றின் குண தோஷங்கள் என்ன என்பதை விளக்கியுள்ளேன். என் கடமையையே நான் செய்துள்ளேன்; அதன் உபகாரத்தை (பலனை), நன்மையை அறியமுடியாதவர் விரோதம் செய்யவேண்டாம். ஏனெனில் எந்த மதத்திற்கும் தீங்கு செய்யவோ பகை மூட்டவோ நான் கருதவில்லை.

ஸத்தாஸத்ய நிர்ணயமே என் குறிக்கோள். மனிதர் எவ்வகையிலும் நேர்மையாக, நியாயமாக வாழவேண்டியது கடமையாகும். ஸத்யாஸத்ய (மெய்பொய்) நிர்ணயம் செய்தலும் செய்வித்தலுமே மனிதப் பிறவியின் பயன்; வாத விவாதம், விரோதம்—இவை மனிதப் பிறவியை வீணுக்கும். மத மதாந்தர விவாதத்தால் உலகில் எவ்வளவு தீயபலன் ஏற்பட்டிருக்கிறது, ஏற்பட்டது, ஏற்படும் என்பதை ஒரகமற்ற அறிஞர் அறிய முடியும். இந்த மனித ஜாதியில் பொய்மத வாதும் சச்சரவும் ஒழியுமட்டும், அன்யோன்ய உறவின் இன்பம் ஏற்படாது. நாமெல்லோரும், முதன்மையாக (விசேஷமாக) அறிஞர்கள் (வித்வான்கள்), பகை பொருமைகளை விட்டு, ஸத்யாஸத்ய நிர்ணயம் செய்தும் செய்வித்தும் (பொய் மெய் அலசி ஆராய்ந்தறிந்து, அறிவித்து) ஸத்தியத்தை ஏற்று, அஸத்தியத்தை ஒதுக்கித் தள்ளவேண்டும், தள்ளுவிக்க வேண்டும்; இது கடினமான காரியமல்ல. அப்போதே நமக்குள் ஒற்றுமையின்பம் இயலும். வித்வான்களின் விரோதமே அனைவரையும் பகை வலையில் பிடித்து வைக்கிறது என்பதுறுதி. இவர்கள் சுயநலம் விட்டுப் பொதுஜன நன்மையை வேண்டிப் பாடுபட்டால், இப்போதே மனித ஜாதியில் ஒற்றுமையுண்டாகும். இதற்கு வேண்டிய யுக்தியை இந்நூல் இறுதியில் எழுதுவேன். சர்வ சக்திமானுன இறைவன் எல்லா ஆன்மாக்களிலும் விளங்கி, அனைவரும் ஒரே வேத மதத்தில் வாழும்படி அருள்புரிக.

அறிஞருக்கு ஒரு மணிமொழி போதும்.

பதிமூன்றாம் அத்தியாயம்

# ஆரியவர்த்த மதங்களின் கண்டன — மண்டனம்

ஆரிய நாட்டில் வாழ்பவர் ஆரியர்; இவர் மதத்தின் இசை வசைகளை இப்போது ஆராய்கிறேன்.

இந்த ஆரியாவர்த்தம் போன்ற வேறுநாடு உலகெங்கும் இல்லை; அதனால் இந்த நாட்டை சுவர்ணபூமி (பொன்னாடு) என்றனர். ஏனெனில் இங்கே பொன்னும் மணியும் (இரத்தினமும்) உண்டாகின்றன. அதனால் சிருஷ்டி ஆதியிலேயே இந்நாட்டில் ஆரியர் வந்து வசித்தனர். சிருஷ்டி விஷயமாகச் சொன்னபோது, ஆரியர் என்பது உத்தம புருஷர் பெயர்; அனாரியர் தஸ்யுக்கள் என்றோம். உலக நாடுகளெல்லாம் இந்நாட்டைப் புகழ்ந்தன. இங்கேதான் பரிஸமணி *உண்டென நம்பின. பரிஸமணிக் கதை பொய்; எனினும் இந்த ஆரிய பூமியே உண்மையான பரிஸமணி. இரும்பு போன்ற வறிய அன்னியர், இதன் ஸ்பரிசம் பட்டதுமே பொன்மயமாகிறார்கள், செல்வச் செழிப்படைகிறார்கள்.

एतद्देशप्रसूतस्य सकाशादग्रजन्मनः ।
स्वं स्वं चरित्रं शिक्षेरन् पृथिव्यां सर्वमानवाः ॥ (மனு, 2–20)

சிருஷ்டி ஆரம்பத்திலிருந்து 5000 ஆண்டுகளுக்கு முன் வரையில், ஆரியரின் ஆதிபத்தியத்தில்—சார்வபௌம சக்கரவத்தியத்தில்—உலகம் இருந்தது. உலகெல்லாம் ஒரே அரசாயிருந்தது; ஆரியர் உலக மன்னராக விளங்கினர். மற்ற நாடுகளில் சிற்றரசுகள் இருந்தன. கௌரவ பாண்டவர் காலம் வரையில் இங்குள்ள அரசரையும், அரசியல் முறையையும் உலகெங்கும் இருந்த மன்னரும், குடிகளும் மதித்துப் போற்றினர். ஏனெனில் சிருஷ்டி முதல் இருந்த மனுஸ்மிருதியே இங்கே அரச நீதிக்குப் பிரமாணமாயிருந்தது. "உலகெங்கும் வாழும் பிரம்ம,

* பரிஸமணி என்பது ஒருவித கல். அஃது இரும்பைத் தொட்டால், இரும்பு தங்கமாகுமென்பார்கள். இது எம்மட்டு உண்மையென்பதை இறைவனே அறிவன்.

ஸத்தாஸத்ய நிர்ணயமே என் குறிக்கோள். மனிதர் எவ்வகை யிலும் நேர்மையாக, நியாயமாக வாழவேண்டியது கடமை யாகும். ஸத்யாஸத்ய (மெய்பொய்) நிர்ணயம் செய்தலும் செய்வித்தலுமே மனிதப் பிறவியின் பயன்; வாத விவாதம், விரோதம்—இவை மனிதப் பிறவியை வீணாக்கும். மத மதாந்தர விவாதத்தால் உலகில் எவ்வளவு தீயபலன் ஏற்பட்டிருக்கிறது, ஏற்பட்டது, ஏற்படும் என்பதை ஓரகமற்ற அறிஞர் அறிய முடியும். இந்த மனித ஜாதியில் பொய்மத வாதும் சச்சரவும் ஒழியுமட்டும், அன்யோன்ய உறவின் இன்பம் ஏற்படாது. நாமெல்லோரும், முதன்மையாக (விசேஷமாக) அறிஞர்கள் (வித்வான்கள்), பகை பொறுமைகளை விட்டு, ஸத்யாஸத்ய நிர்ணயம் செய்தும் செய்வித்தும் (பொய் மெய் அலசி ஆராய்ந் தறிந்து, அறிவித்து) ஸத்தியத்தை ஏற்று, அஸத்தியத்தை ஒதுக்கித் தள்ளவேண்டும், தள்ளுவிக்க வேண்டும்; இது கடினமான காரியமல்ல. அப்போதே நமக்குள் ஒற்றுமை யின்பம் இயலும். வித்வான்களின் விரோதமே அனைவரையும் பகை வலையில் பிடித்து வைக்கிறது என்பதுறுதி. இவர்கள் சுயநலம் விட்டுப் பொதுஜன நன்மையை வேண்டிப் பாடு பட்டால், இப்போதே மனித ஜாதியில் ஒற்றுமையுண்டாகும். இதற்கு வேண்டிய யுக்தியை இந்நூல் இறுதியில் எழுதுவேன். சர்வ சக்திமானை இறைவன் எல்லா ஆன்மாக்களிலும் விளங்கி, அனைவரும் ஒரே வேத மதத்தில் வாழும்படி அருள்புரிக.

**அறிஞருக்கு ஒரு மணிமொழி போதும்.**

## பதின்மூன்ராம் அத்தியாயம்

# ஆரியவர்த்த மதங்களின் கண்டன — மண்டனம்

ஆரிய நாட்டில் வாழ்பவர் ஆரியர்; இவர் மதத்தின் இசை வசைகளை இப்போது ஆராய்கிறேன்.

இந்த ஆரியாவர்த்தம் போன்ற வேறுநாடு உலகெங்கும் இல்லை; அதனால் இந்த நாட்டை சுவர்ணபூமி (பொன்னாடு) என்றனர். ஏனெனில் இங்கே பொன்னும் மணியும் (இரத்தினமும்) உண்டாகின்றன. அதனால் சிருஷ்டி ஆதியிலேயே இந்நாட்டில் ஆரியர் வந்து வசித்தனர். சிருஷ்டி விஷயமாகச் சொன்னபோது, ஆரியர் என்பது உத்தம புருஷர் பெயர்; அனாரியர் தஸ்யுக்கள் என்றோம். உலக நாடுகளெல்லாம் இந்நாட்டைப் புகழ்ந்தன. இங்கேதான் பரிஸமணி *உண்டென நம்பின. பரிஸமணிக் கதை பொய்; எனினும் இந்த ஆரிய பூமியே உண்மையான பரிஸமணி. இரும்பு போன்ற வறிய அன்னியர், இதன் ஸ்பரிசம் பட்டதுமே பொன்மயமாகிறார்கள், செல்வச் செழிப்படைகிறார்கள்.

> एतद्देशप्रसूतस्य सकाशादग्रजन्मनः ।
> स्वं स्वं चरित्रं शिक्षेरन् पृथिव्यां सर्वमानवाः ॥ (மனு, 2–20)

சிருஷ்டி ஆரம்பத்திலிருந்து 5000 ஆண்டுகளுக்கு முன் வரையில், ஆரியரின் ஆதிபத்தியத்தில்—சார்வபௌம சக்கரவத்தியத்தில்—உலகம் இருந்தது. உலகெல்லாம் ஒரே அரசாயிருந்தது; ஆரியர் உலக மன்னராக விளங்கினர். மற்ற நாடுகளில் சிற்றரசுகள் இருந்தன. கௌரவ பாண்டவர் காலம் வரையில் இங்குள்ள அரசரையும், அரசியல் முறையையும் உலகெங்கும் இருந்த மன்னரும், குடிகளும் மதித்துப் போற்றினர். ஏனெனில் சிருஷ்டி முதல் இருந்த மனுஸ்மிருதியே இங்கே அரச நீதிக்குப் பிரமாணமாயிருந்தது. "உலகெங்கும் வாழும் பிரம்ம,

---

* பரிஸமணி என்பது ஒருவித கல். அஃது இரும்பைத் தொட்டால், இரும்பு தங்கமாகுமென்பார்கள். இது எம்மட்டு உண்மையென்பதை இறைவனே அறிவன்.

க்ஷத்ரிய, வைசிய, சூத்ர, தஸ்யு, மிலேச்சர் அனைவரும், தத்தமக்கான கல்வியும் ஒழுக்கமும் வரலாறுகளையும் இதே ஆரிய நாட்டிலுதித்த அந்தண அறிஞரிடம் பயில்க" என்பது மனுவாக்கு. யுதிஷ்டிர மஹாராஜாவின் ராஜஸூய யாகம், மஹாபாரத யுத்தம் வரையில், எல்ல உலகரசுகளும் ஆரிய ராஜ்யத்தின் கீழிருந்தன. கேளுங்கள்! சீனத்து **பகதத்தன்**, அமெரிக்க **பப்ருவாஹனன்**, ஈரோப் நாட்டு **விடாலாக்ஷன்** (பூனைக்கண்ணன்), யூனாதிபன், ஈரான் மன்னனை **சல்லியன்** முதலிய எல்லா அரசரும் ராஜஸூய யாகத்திலும் மஹாபாரதப் போரிலும் (ஆக்ஞைப்படி) முறைப்படி கலந்து கொண்டனர். இரகுவம்சம் ஆண்டபோது இராவணனும் அதன் ஆதீனத்திலிருந்தான். இராமச்சந்திரன் காலத்தில் இராவணன் பகை செய்தான்; இராமன் அவனைத் தண்டித்து, அரசினின்று விலக்கி, அவன் தம்பி விபீஷணனுக்கு (இலங்கை) அரசைத் தந்தான். ஸ்வாயம்பவ ராஜ முதல் பாண்டவர் வரையில், பூமண்டலத்தில் ஆரிய சக்கரவர்த்திகள் அரசாண்டார்கள். அதன்பிறகு உட்பகையால் தம்முள்ளேயே சண்டையிட்டு அழிந்தனர். ஏனெனில் இந்தப் பரமாத்ம சிருஷ்டியில் செருக்கு, அநியாயம், அறிவின்மை கொண்ட மக்களுக்கு நெடுநாள் அரசு நிலைக்காது. மேலும் பணங்கொழுத்து, தன் தேவைக்கு அதிகம் குவிந்துபோனால், சோம்பல், பொறாமை, பகை, காமம், விஷயாசக்தி, புருஷார்த்தமின்மை, இடம்பம், எல்லாம் அதிகரிப்பது உலகின் இயல்பாகும். இதனால் நாட்டில் நல்ல கல்விப் பயிற்சியும் பண்பும் ஒழிந்து, துர்குணம் பெருகி, ஊன் மதுவுண்ணல், பாலிய விவாகம், தான்றோன்றித்தனம், ஆகிய தீமைகள் வளர்கின்றன. போர்க் கலையிலும், போர்த் திறனிலும், படை வலியிலும் உலகில் நமக்கு நிகரில்லை என்று பெருகியதும், மாந்தர் மனதில் செருக்கும் பக்ஷபாதமும் மிகுந்து, அநியாயம் செய்ய முனைகின்றனர். அநியாயம் பெருகியதும் தம்முள் பகைகொண்டு போராடுகிறார்கள்; அல்லது மற்றச் சிறு குலத்தில் ஒரு பலசாலி எழுந்து, அவர்களை எதிர்த்து முறியடிக்கிறான். அவ்வாறே சிவாஜியும் குருகோவிந்த சிங்கனும் எழுந்து, முஸல்மான் அரசைச் சின்னபின்னமாக்கி விட்டனர்.

**अथ किमेतैर्वा परेऽन्ये महाधनुर्धराश्चक्रवर्तिनः केचित् सुद्युम्न-भूरिद्युम्नेन्द्रद्युम्नकुवलयाश्वयौवनाश्ववद्ध्र्यश्वाश्वपतिशशविन्दुहरिश्-**

चन्द्राऽम्बरीषननक्तुसयतिययात्यनरण्याक्षसेनादयः । अथमरुत्तभरत-प्रभृतयो राजानः ॥ (மைத்ரேயீ உபநிஷத்-ப்ர 1 கம் 4)

சிருஷ்டிகாலம் முதல் மஹாபாரதம் வரையில், சக்கரவர்த்திகளும் உலக மன்னரும் ஆரிய குலத்திலேயே உதித்தனர் என்பது மயித்ரேயீ உபநிஷத்து வாக்கியத்தால் விளங்குகிறது. "ஸுத்யும்னன், பூரித்யும்னன், இந்த்ராத்யுமனன், குவலயாஸ்வன், யௌவனாஸ்வன், வத்ரஸ்யவன், அசுவபதி, சஷவிந்து, ஹரிச்சந்திரன், அம்பரீஸஷன், நநக்து, ஸர்யாதி, யயாதி, அநரண்யன், அக்ஷஸேனன், மருத்தன் பரதன் ஆகிய சர்வபௌம சக்கிரவர்த்திகள் பெயர் மனுஸ்மிருதி, பாரதம் முதலியவற்றில் காணும் சுயம்பவாதி சக்கரவர்த்திகளின் பெயர்கள் போலவே புகழ்பெற்றவையாகும். இவைகளை மறுப்பது அஞ்ஞான பக்ஷபாதிகள் வேலையாகும். மேற்சொன்ன மன்னர் மரபு துர்பாக்கியவசமாக நலிந்து, மெலிந்ததால், நாம் அரசிழந்து அன்னியர் அடிக்கீழ் நலிகிறோம்.

**வினு:** அக்னியாஸ்திரம் முதலிய போர் வித்தைகள் பற்றி எழுதியிருக்கிறார்கள். அவை மெய்யா, பொய்யா? அந்தக் காலம் குண்டு துப்பாக்கி யுண்டா?

**விடை:** உண்டு; மெய்தான்; அந்தக் காலத்திலும் வெடி, குண்டு இருந்தது; பதார்த்த வித்தை இதை விளக்கும். முன்பும் விஞ்ஞானத்தால் சுடுகணைகள் செய்தனர்.

**வினு:** அவையென்ன தேவதா மந்திரங்களால் சித்தியாவனவா?

**விடை:** இல்லை; இந்த அஸ்த்ர சஸ்த்ர வித்தை யெல்லாம், நீண்ட "மந்திரத்தால்" மந்திராலோசனையால் அதாவது மந்திரராய்ச்சியால் சித்தியாகிப் பிரயோகிக்கப் பெற்றன. வெறும் மந்திர ஒலியால் பொருள் உண்டாகாது. மந்திரத்தால் தீ எழும் என்பது பொய்; அப்படி தீ எழுவதானல் மந்திரம் ஜபிப்பவன் நாக்கும் நெஞ்சும் அந்தத் தீ சுட்டுச் சாம்பலாகுமே; சத்துருவைக் கொல்ல முயற்சிப்பவன் தானே சாவான்! ஆதலால் 'மந்திரம்' என்பது சிந்தனை, ஆராய்ச்சி; அரசியல் விவகாரங்களை ஆராய்பவனை இராஜ மந்திரி என்கிறோம். ஆராய்ச்சியால் சிருஷ்டி பதார்த்தங்களின் முதல் அறிவு உண்டாகிறது; பிறகு கிரியையால் பலவகைப் பொருளறிவும், காரியத்திறமையும் பெற்றனர்;

அதாவது இயற்கை விஞ்ஞான விதிகளைக் கையாண்டு பல யந்திரங்களைச் செய்தனர்; புதுமை கண்டனர். உதாரணமாக இரும்பினால் ஒரு கணை அல்லது உருண்டை செய்து, அதில் எரி பொருள்களைத் திணித்து அக்னி குண்டு செய்யலாம்; அது காற்றால் புகையும்; வெய்யிலால் தீப் பற்றும்; தீப் பொறியால் வெடிக்கும்.—இதுதான் அக்னி அஸ்திரமாகும். இதைத் தடுக்க வருணாஸ்திரம் விடுவிக்க வேண்டும். பகைவன் நம்மை அழிக்க அக்னியாஸ்திரம் விடும்போது, நமது சேனையைக் காக்கச் சேனாதிபதி வருணாஸ்திரம் விட்டு, அக்கினிக் கணையை அழிக்க வேண்டும். காற்றுப்பட்டதும் வருணாஸ்திரத்தினின்று மேகப் படலம் கிளம்பி, சட்டென்று மழை பொழிந்து அக்னியை அணைத்துவிடும். அப்படிப்பட்ட இரசாயனச் சாமான்களால் இக்கணை செய்யப்பட்டது. இதே மாதிரி எரிந்ததும் எதிரியின் அவயவங்களைப்பற்றி முடக்கும் கணைக்கு நாகபாசம் என்று பெயர். மோகனாஸ்திரத்தை விட்டால் அதிலுள்ள மயக்க மருந்துப் புகை, பகைப் படையை உறக்கி மூர்ச்சிக்கச் செய்யும். இதே மாதிரி பல கணைகள் உண்டு. பாசுபதாஸ்திரம் ஒரு வகை அக்னியாஸ்திரம்; கம்பி, கண்ணாடிக் குழாய் அல்லது வேறொன்றால் மின்சாரம் உண்டாக்கி அதன் கனலால் சத்துருவை அழிக்க வல்லது பாசுபதாஸ்திரம்.

தோப் (துப்பாக்கி), பந்தூக் (சுடிகை) என்பன அன்னிய பாஷை; ஸம்ஸ்கிருதம் அல்லது ஆரியவர்த்த பாஷையன்று. ஆனால் 'தோப்' என்பதை ஸம்ஸ்கிருதத்தில் சதத்வனி என்பர்; 'பந்தூக்' என்பதை ஸம்ஸ்கிருதம் அல்லது இந்திய பாஷையில் 'புசுண்டி' என்பர். ஸம்ஸ்கிருதம் படிக்காதார் பிரமை கொண்டு, என்னென்னமோ உளறிக் கொட்டுகிறார்கள். அதை அறிவாளர் பிராமாணமாகக் கொள்ளமுடியாது. உலகில் பரவிய ஞானமெல்லாம் ஆரியாவர்த்தத்தில் பிறந்தது. இங்கிருந்து அறிவு எகிப்திற்கும், அங்கிருந்து ரோம், அங்கிருந்து க்ரீஸிற்கும், அங்கிருந்து ஐரோப்பிய தேசங்களுக்கும் அங்கிருந்து அமெரிக்கா நாடுகளுக்கும் பரவியது. இன்றும் ஆரிய நாடு போல மற்றெந்த நாட்டிலும் அவ்வளவு ஸம்ஸ்கிருத வித்தைக்குப் பிரசாரம் கிடையாது, ஜர்மனியில் ஸம்ஸ்கிருத வித்தை மிகவும் பரவியிருக்கிறது. மோக்ஷமூலர் (பேராசிரியர் மாக்ஸ் முல்லர்)

போல் அவ்வளவு ஸம்ஸ்கிருதம் யாரும் படித்ததில்லை என்று சிலர் சொல்லுகிறார்கள். இது வெறும் பேச்சு "यस्मिन्देशे द्रुमो नास्ति तत्रैरण्डोऽपि द्रुमायते" 'மரமே முளைக்காத நாட்டில் ஆமணக்கு கூட மரந்தான்' (ஆலையில்லா வூருக்கு இலுப்பைப் பூ சர்க்கரை) என்பது போல, ஸம்ஸ்கிருதமே படிக்காத ஐரோப்பாவில், ஜர்மனியரும் மாக்ஸ் முல்லரும் கற்ற சிறிது ஸம்ஸ்கிருதமே மிகப் பெரிதாக அந்த நாட்டில் மதிக்கப்படுகிறது. நம் ஆரிய நாட்டை ஒத்துப் பார்த்தால் அவர்கள் கற்றது மிகச் சிறிதெனக் காணும். ஜர்மனி நாட்டிலுள்ள ஒரு கல்லூரித் தலைவர் (பிரிஸ்ன்பால்) எனக்கு எழுதிய கடிதத்திலிருந்து, ஸம்ஸ்கிருதத்தில் எழுதின ஒரு கடிதத்தைப் புரிந்துக் கொள்ளக் கூடியவர்கள் கூட அங்கே அரிது என்றறிந்தோம். மாக்ஸ் முல்லரின் ஸம்ஸ்கிருத ஸாஹித்யத்தையும், வேத வியாக்யானத்தில் சிறிதும் நான் பார்த்தேன்; அதிலிருந்து, அவர் ஆரிய நாட்டுப் புலவர் செய்த விரிபொருளை இங்குமங்குமாகப் பார்த்தே ஏதோ தானும் எழுதியிருக்கிறார், என்பதை அறிகிறேன். உதாரணமாக :

"युञ्जन्ति ब्रध्नमरुषं चरन्तं परितस्थुषः ।
रोचन्ते रोचना दिवि" ॥ (ருக் : 1·6 : 1)

இந்த ருக்வேத மந்திரார்த்தத்தில் 'ப்ரத்னம்' (Bradhnam) என்பதற்குக் 'குதிரை' என்று பொருள் கூறுகிறார் முல்லர். சாயணாச்சாரியர் அதற்கு 'சூரியன்' என்று பொருள் செய்தது நன்று. ஆனால் இதற்கு உண்மையான பொருள் 'பரமாத்மா'. இந்த மந்திரத்தின் மெய்ப்பொருளை எனது 'ருக்வேதாதி பாஷ்ய பூமிகை' யிற்காண்க. ஜர்மனியிலும் மோக்ஷமூலரிடமும் ஸம்ஸ்கிருதபாண்டித்யம் எவ்வளவு இருக்கிறது என்பதை மட்டும் இதிலிருந்து அறிந்துக் கொள்ளுங்கள். உலகில் வழங்கும் வித்தையும், மதங்களும் ஆரிய நாட்டினின்றே எழுந்து பரவின என்பது மட்டும் உறுதி. பிரெஞ்சுக்காரரான ஜாகோலியட் (Jacoliot) என்பவர் எழுதியிருக்கும் 'Bible in India' (இந்தியாவில் பைபிள்) என்ற தமது நூலில், 'இந்தியாவே எல்லா அறிவிற்கும் நலத்துக்கும் நிலைக்களன்; இந்நாட்டிலிருந்தே மதமும், கலையும், அறிவும் உலகில் பரவியன' என்று எழுதியிருக்கிறார். அந்தப் பிரெஞ்சுக்காரர் இவ்வாறு ஈசுவரனை வேண்டுகிறார் : "ஹே, பரமேஸ்வர! ஆரிய நாடு முற்காலம், வேதகாலம் எவ்வளவு

உன்னதமாயிருந்ததோ, அவ்வளவு உன்னதமாக என் நாடும் ஓங்கிப் பொலிய வருள்!'' இதை அவர் நூலிற் காண்க. ஸம்ஸ்க்ருதத்தில் உள்ளது போன்ற நிறைவான அறிவு வேறெந்த பாஷையிலும் இல்லை என்று பாதுஷா தாராஷிகோவும் (Darashikoh) உறுதியாக கூறுகிறுர். '' நான் அரபி முதலிய பல பாஷைகளைக் கற்றிருக்கிறேன்; ஆனுல் அவைகள் என் சந்தேகத்தைத் தீர்த்து மனதிற்கு இன்பந் தரவில்லை. ஸம்ஸ்கிருத கிரந்தங்களைப் பார்த்து கேட்டதுமே என் ஐயம் நீங்கி, இன்பம் உதித்தது'' என்று தமது உபநிஷத் விரிவுரையில் தாரா கூறுகிறுர். காசி மானமந்திரத்தில் உள்ள சிசுமார சக்கரம் (இராசி சக்கரம்) பாருங்கள். அதை நன்ருகக் கூட பாது காக்காமல் விட்டிருக்கிறுர்கள். இன்றும் அது எவ்வளவு அழகா யிருக்கிறது. அதிலிருந்து அரிய ககோள விருத்தாந்தங்கள் தெளிவாகின்றன. *ஜயபுரி (ஜெய்பூர்) மன்னர் அதைப் பழுது பார்த்துசெப்பனிட்டு வைத்தால் மிக நன்ருயிருக்கும்,

## ஆரியர் வீழ்ச்சி

இந்தச் சிரோமணி தேசத்திற்கு மஹா பாரத யுத்தம் பெரிய அதிர்ச்சியைக் கொடுத்தது; அதனுல் இன்றுவரை இந்நாடு பழைய நிலையை அடையவில்லை. சகோதரரே சகோதரரை அடித்துக் கொல்லும்போது, தேசம் நாசமாவதில் சந்தேக மென்ன? विनाशकाले विपरीतबुद्धिः ॥ (வ்ருத்த சாணக்ய 16·17) 'விநாச காலே விபரீத புத்தி' என்பது சாணக்ய வாக்கு. நாச காலம் வந்ததும் மதி பிசகி, செயலும் விபரீதமாகிறது. நல்லது சொன்னுல் கெடுதலாகக் கொள்வர்; கெட்டது சொன்னுல் நல்லதாகக் கொள்வர்—மதிகேடர்!. மஹா பாரத யுத்தத்தில் பெரிய பெரிய அறிஞர், அரசர், மஹாராஜர், ரிஷிகள், மஹ ரிஷிகள் பலர் கொல்லப்பட்டனர். எராளமான வீரர் இறந்தனர்; உடனே பாரத வித்தையும் வேத தர்மமும் பிரசாரமில்லாமல் ஒழிந்தன. மக்கள் பகை, பொருமை, செருக்கு, இடம்பம் ஆகிய தீமைகளுக்கு இரையாயினர். பலவான் தேசத்தைக் கைப்பற்றி அரசனுனன். இதேமாதிரி ஆரிய வர்த்தமெல்லாம் துண்டு துண்டு அரசுகளானது. தாய் நாடே இப்படி பிரிந்த பிறகு,

* 'மானமந்திரம்' மகராஜா மான என்பவரால் கட்டப்பட்டது. அவர் ஜெய்பூர் மன்னராகவும் அக்பரின் பிரதான தளபதியாகவும் இருந்தார். ஆகவே இது ஜெய்பூர் அரசர் கோவில்.

அதைச் சேர்ந்த தீப தீவாந்திரங்களின் நிலையைச் சொல்லு வானேன்? எல்லாம் தீர்ந்தன!

## போலிப் பிராமணர்

பிராமணரே வேத வித்தையற்றுப் போனபோது க்ஷத்ரிய, வைசிய, சூத்திரர் வித்தை யற்றுப் போன கதையைச் சொல்லு வானேன்? பரம்பரையாக வேத சாஸ்திரங்களைப் பொருளுடன் ஓதும் பழக்கமே ஒழிந்தது. கேவலம் வயிறு வளர்க்கவே பிராமணர் மாமூலாகப் பாடம் படித்தனர். அதைக் கூட க்ஷத்ரியாதிகளுக்குப் படிப்பிக்க வில்லை. அறிவிலி குருவானால், வஞ்சம், கபடு, அதர்மம் இவையே அவர்களிடம் வளர்ந்தன. பிராமணன் என்போன் பிழைப்பிற்கு வழி தேடினான்; பிராமணருள் கூடிப்பேசி, க்ஷத்திரியாதிகளுக்கு "நாமே உங்கள் பூஜைக்குரிய தேவர்; நாங்கள் சேவை செய்யாவிட்டால் உங்களுக்கு முக்தியில்லை, சுவர்க்கம் கிடைக்காது; நாங்கள் சேவை செய்யாவிட்டால், நீங்கள் நரகத்தில் விழுவீர்கள்" என்று உபதேசித்தார்கள். 'பூர்ண வித்தையும், தார்மீக ஜீவன மும் கொண்டவர்களே பிராமணர்; அவர்களே மரியாதைக் குரியவர்' என்று புனித வேதத்திலும், ரிஷி முனிவர் சாஸ்திரத் திலும் எழுதப்பட்டுள்ளது. ஆனால் இன்று மூர்க்கம், தூர்த்தர், காமிகள், விஷயிகள், கபடர், வஞ்சர், அதர்மிகள் தம்மைப் பிராமணர் என்று, ஜம்பமடிக்கின்றனர். அந்தக் கால மஹா வித்வான்களான தர்மாத்மாக்களின் லக்ஷணம், பெருமை, இந்த மூர்க்கருக்கு வருமா? பொருந்துமா? க்ஷத்திரியர் ஸம்ஸ்க்ருத வித்தையை அடியோடு மறந்தனர்; அந்த நிலையில் இந்தப் போலிப் பிராமணர் கட்டிவிட்ட கப்ஸாக்களை நம்பினர். பிராமணருக்கு இன்னும் தைரியம் அதிகரித்தது. பெயருக்கு பிராமணரான இவர்கள் பேச்சு வலையில், மற்றவர் சிக்கி மயங் கினர். ब्रह्मवाक्यं जनार्दनः ॥ (ப்ரஹ்ம வாக்யம் ஜனார்தன:) (பாண்டவ கீதை) பிராமணர் வாக்கு பரமாத்மன் வாக்கு என்று சொல்லத் தொடங்கினர். க்ஷத்திரியாதிகள் செல்வம் செழித் தனர்; ஆனால் அறிவுக் கண்ணிழந்தனர். இப்படிப்பட்ட பணக் கார சிஷ்யர் கிடைத்ததால் போலிப் பிராமணருக்கு விஷயானந்த உபவனமே கிடைத்தது! "உலகிலுள்ள உத்தம பதார்த்தங் களெல்லாம் பிராமணருக்கே உரியது" என்று உரிமை கொண்டாடினர். இவ்வாறு குண கர்ம சுபாவத்தால் நிர்ண

யிக்கும் வர்ண தர்மத்தையே நஷ்டப் படுத்தி, பிராமணனுக்குப் பிறந்தவனே நித்தியப் பிராமணன் என்றனர். அதனுல் சாகு மட்டும் தாமே தான தருமங்களை வாங்கி வந்தனர்.—நல்ல வருமானம் ! எல்லாம் தம் விருப்பப்படியே செய்தனர். " நாமே பூதேவர் ; எங்கள் சேவை யின்றி யாருக்கும் தேவலோகம் சித்திக்காது !" என்ற வரையில் காரியம் நடத்தினர். இவர்களை, " ஐயா, நீர் எந்த லோகம் செல்வீர் ? நீங்கள் செய்யும் பாபத்திற்கு கோர நரகமே கதி ; புழு, பூச்சி, எறும்புப் பிறவியே உங்களுக்குத் தரும் " என்று சொல்லுங்கள். " நாங்கள் சாபம் தருவோம் ; நீர் அழிவீர், " " ப்ரஹமத்ரோஹி விநஸ்யதி "—பிராமணனுக்குத் துரோகம் செய்தவன் அழிவான் " என்று சீறுவர். பூர்ண வேதஞானி, பரமாத்மஞானி, தர்மாத்மா, உலகோபகாரியான மஹா புருஷரை துவேஷித்தவன் கெடுவான், என்பது மெய்தான். பிரம்மதேஜஸ் இல்லாதவன் பிராமணனில்லை ; பிராமணன் என்ற பட்டம் அவனுக்குத் தகாது ; அவனுக்குச் சேவை செய்யத் தகாது.

## இந்தியப் போப்

**வினு :** அப்படியானுல் நாம் யார் ?

**விடை :** நீர் ' போப் '

**வினு :** போப் என்றுல் யார் ?

**விடை :** ரோமன் பாஷையில் இதன் பொருள் 'பெரிது'; ' போப் ' என்றுல் லத்தீனில் ' தந்தை '. ஆனுல் இப்போதோ வஞ்சனையால் பிறரைக் கொள்ளை யடித்துப் பிழைக்கும் சுயநலப் புலி என்பது பொருளாகும்.

**வினு :** ஆனுல் நாம் பிராமணர், சாது ; ஏனெனில் நம் பிதா பிரமணன், மாதா பிராமணி ; நாம் அந்தச் சாதுவின் சேலா (சிஷ்யன்).

**விடை :** எல்லாம் சரிதான் ; கேள் சகோதரா ! அப்பா அம்மா பிராமணரானுல் பிள்ளை பிராமணனுகான் ; சாதுவின் சிஷ்யனென்றுல் சாதுவாகி விடமுடியாது. உத்தம குண கர்ம ஸ்வபாவத்தாலும், பரோபகாரத்தாலுமே ஒருவன் பிராமணன் அல்லது சாதுவாகிறுன். ரோமன் போப்பு இவ்வாறு சொல்வதாகக் கேள்வி ; " சிஷ்யர்காள், உங்கள் பாபங்களை நம்மிடம் ஒப்புக் கொள்ளுங்கள் ; நாம் மன்னிக்

கிறோம்; நம் சேவை, நம் ஆணையின்றி யாரும் சுவர்க்கத்திற்குச் செல்ல முடியாது; நீங்கள் சுவர்க்கம் செல்ல விரும்பினால் கொடுங்கள் காணிக்கை; நமக்கு எவ்வளவு ரூபா குவிக்கிறீர்களோ அவ்வளவுக்கே உங்களுக்கு சுவர்க்கத்தில் இன்பச் சாமான்கள் கிடைக்கும்.

இதைக் கேட்டு ஒரு புத்தி கெட்ட பணக்காரன் சுவர்க்கம் செல்ல விரும்பி, போப்ஜீக்கு ஏராளமான பணம் தருகிறான். அந்தப் போப்ஜீ, ஏசு-மேரி உருவச் சிலை முன்னே நின்று, இந்த மாதிரி உண்டியில் எழுதிக் கொடுக்கிறான்:—“ஹே! ஏசு பெருமானே! இன்ன மனிதன் சுவர்க்கத்திற்கு வரவேண்டி உன் பெயரால் என்னிடம் ஒரு லக்ஷ ரூபா செலுத்திவிட்டான். அவன் சுவர்க்கத்திற்கு வரும்போது, நின் பரமபிதாவின் வானரசில், ரூ. 25000/-க்கு வீடு, தோட்டம், உல்லாச வனம் தந்தருள்; இன்னும் ரூ. 25000/-க்குக் குதிரைகள், வண்டிகள், வேட்டை நாய்கள், சேவகர் வேலையாட்கள் தந்தருள். மேலும் ரூ. 25000/- க்கு சாப்பாடு, குடி, ஆடை உடுப்புக்கள் முதலிய எல்லாம் தந்தருள். மீதி ரூ. 25000/-த்தை ரொக்கமாகத் தா; அதிலிருந்து இவன் தன் இஷ்ட மித்திர பந்து சகோதரருக்கு விருந்து வைக்கட்டும்”. பிறகு அந்த உண்டியலில் போப்ஜீ கையொப்பமிட்டுத் தன் திருக் கையால் அதை பக்தனுக்குக் கொடுத்து, “நீ மரித்ததும் இந்த உண்டியலை ஒரு பையில் போட்டு, புதை குழியில் உன் தலையின் கீழ் வைத்து உன்னை அடக்கம் செய்ய வேண்டும், என்று இப்போதே உன் குடும்பத்திற்குச் சொல்லி வைக்க வேண்டும். உடனே உன்னைக் கொண்டு போக தேவ தூதர்கள் வருவார்கள். அவர்கள் உண்டியலுடன் உன்னைக் கொண்டு சென்று, அதில் எழுதிய படியே சுவர்க்கத்தில் எல்லாம் தருவார்கள்.” என்பார். இதோ பாருங்கள்! போப்ஜீ சுவர்க்கத்தையே குத்தகைக்குப் பிடித்திருக்கிறார்! ஐரோப்பா மடமையில் மூழ்கி யிருந்த காலம் வரையில், போப்ஜீயின் லீலை நடந்தது. அறிவு வந்த பிறகு, கல்வி பரவிய பிறகு, போப்ஜீயின் மோசடி லீலை அவ்வளவாக நடப்பதில்லை; ஆனால் அஃது அடியோடொழியவும் இல்லை. அதே மாதிரி ஆரிய நாட்டில் போப்ஜீ ஆயிரம் அவதாரம் எடுத்துத் திருவிளையாடல் நடத்துகிறார். அரசரும் பிரஜைகளும் கல்வி கற்க விடுவதில்லை; நல்லோரோடு சேர விடுவதில்லை; இரவும் பகலும் வீண் ஏமாற்றும் வித்தைத் தவிர வேறு

நல்ல காரியம் செய்ய விடுவதில்லை. இவ்வாறு அவர்கள் நாட்டிற்குத் தீங்கு செய்தனர். இந்த மாதிரி வஞ்சங் கபடுகளால் மக்களை ஏமாற்றித் தீய விவகாரம் செய்பவனே 'போப்' என்பதைக் கருத வேண்டும். தார்மீக வித்வான், பரோபகாரியாயிருப்பவன் உண்மையான பிராமணன், சாது என மதிக்கலாம். வஞ்சம், கபடு, சுயநலம் கொண்டு மாந்தரை ஏமாற்றித் தன் காரியத்தைச் சாதிப்பவனே போப் ஆவான். பிரமணன், சாது என்றால் உத்தம புருஷரையே குறிக்கும். இங்கே உத்தம பிராமணரும் சாதுக்களும் வேண்டும். வேதாதி ஸத்கிரந்தங்களை ஸ்வரத்துடன் பாடம் செய்து, பாடம் சொல்லும் அவர்களே, ஆரியர்களை ஜைன, முஸல்மான, கிறிஸ்துவ வலையினின்று விடுவித்து, வேதாதி நன்னூல்களில் விருப்பமுண்டாக்கி, வர்ண தர்மத்தையும் காக்க வல்லவர். வேறு யார் இதைச் சாதிக்க முடியும்? இதுவே பிராமணர் சாதுக்கள் தொண்டு. विषादप्यमृतं 'ग्राह्यम्' (மனு 2-239)—விஷத்திலிருந்தும் அமிர்தம் எடுக்கட்டும் அறிவாளி—என்பது மனு வாக்கு. இந்தப் போப் லீலையிலிருந்தும் ஜைனாதி வலைகளிலிருந்தும் ஆரியர் விடுபட்டிருப்பதே, விஷத்தினின்றும் விலகிய அமுத குணமாகும்.

யஜமானர் கல்வியற்றனர்; போப்புகள் சிறிது பூஜா பாடம் படித்துக்கொண்டனர்; செருக்குண்டனர்; அவர்கள் ஒன்றுகூடி ஆட்சித் தலைவர் முன்வந்து, பிராமணனையும் சாதுவையும் தண்டிக்கக்கூடாது; 'ब्राह्मणो न हन्तव्यः' 'साधुर्न हन्तव्यः' (ப்ராஹ்மணோ ந ஹந்தவ்யம்; ஸாதுர் ந ஹந்தவ்யம்) 'பிராமணனைக் கொல்லக்கூடாது; சாதுவைக் கொல்லக்கூடாது' என்று முழங்கினர். உண்மையான அந்தணரையும் சாதுக்களையும் குறிக்கும் வசனத்தைத் தமக்கு வைத்துக்கொண்டனர். மேலும் முழுப்புளுகுப் புராணங்களைச் செய்து அதில் ரிஷி முனிவர் பெயரைப் புகுத்தி அவர் பெயரால் உபதேசித்து வந்தனர்; தமது பொய் மூட்டைகளுக்கு வேத ரிஷிகளின் முத்திரையிட்டு ஜனங்களை மயக்கினர்; தாம் சட்டத்தின் தண்டனையிலிருந்து தப்பினர். இந்தப் போப்புகளின்றி யாரும் உறங்க, விழிக்க, இருக்க, நிற்க, நடக்க, உண்ண, பருகக் கூட முடியாதபடி விதி செய்தனர். போப்புகளாகிய இந்தப் போலிப் பிராமணரும் சாதுக்களும் தமக்கு யாரும் எதற்கும் என்ன செய்தாலும் தண்டனைத் தரக்கூடாது, மனதாலும் தண்டனை

நினைக்கக்கூடாது என்று அரசரை வற்புறுத்தினர். பிறகு இந்தப் போப்புகள் தங்கள் மனம்போனபடி நடக்கத் துணிந்தனர். இந்தத் தீமை மஹாபாரதப் போருக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வேரூன்றத் தொடங்கியது. அப்போதும் ரிஷி முனிவர் இருந்தனர். இருந்தாலும் சோம்பல், அசட்டை, பொறாமை, பகை ஆகிய தீமைகள், முளைவிட்டுக் கிளைத்து, மரமாகி வளர்ந்துவிட்டன. உண்மை யுபதேசம் செய்பவர் இல்லாதபோது ஆரிய நாட்டில் அவித்தை பரவி, மடமையால் ஒருவருக்கொருவர் சண்டைபோட்டுப் போராடத் தொடங்கினர்.

उपदेश्योपदेष्टृत्वात् तत्सिद्धिः ॥ इतरथान्धपरम्परा ॥

(சாங்க்ய சூத்ர. 3–79, 81)

உத்தம உபதேசகர் வரும்போது தர்மார்த்த காம மோக்ஷ சித்தி நன்று கிடைக்கிறது. உத்தம உபதேசகரும், கேட்போரும் இல்லாவிட்டால் நாட்டை இருட்குலம் கௌவுகிறது. சித்திய புருஷர் எழுந்து சத்தியோபதேசம் செய்யும்போது, இருட்குலம் ஒழிந்து, ஒளிக்குலம் விளங்குகிறது. மீண்டும் அந்தப் போப் கும்பல், தமக்கும், தமது பாத மலருக்கும் பூஜை செய்வதே மக்களுக்குப் பேரின்பம் என்றனர். ஜனங்கள் இவ்வாறு வசப்பட்டுப் பாத பூஜை செய்தனர். உடனே போப் கும்பல் கட்டுக்கடங்காத விஷயா சுகத்தில் ஆழ்ந்து, மாயம் புரிந்தனர்; போலிக் குருமார் வலைபோட்டு சிஷ்யக் கூட்டம் சேர்த்தனர். அந்தோ! வித்தை, பலம், புத்தி, பராக்ரமம், சூரவீராதி சுப குணங்களெல்லாம் ஒழிந்தன! விஷய விருப்பம் பெருகி, மறைவாக மது மாமிசம் உண்ணத் தொடங்கினர். இதனால் எழுந்தது வாமமார்க்கம்.

## வாமமார்க்க கண்டனம்

'சிவன் சொன்னன்', 'பார்வதி சொன்னள்', 'பைரவி சொன்னள்' என்று இப்பெயர்களால் தந்திர நூல்கள் எழுந்தன. அதில் கீழ்வரும் விசித்திர லீலா வாக்கியங்கள் காண்கின்றன:

मद्यं मांसं च मीनं च मुद्रा मैथुनमेव च ।
एते पञ्च मकाराः स्युर्मोक्षदा हि युगे युगे ॥ (1) (காளி தந்த்ர)

प्रवृत्ते भैरवीचक्रे सर्वे वर्णा द्विजातयः ।
निवृत्ते भैरवीचक्रे सर्वे वर्णाः पृथक् पृथक् ॥ (2) (குலார்ணவ தந்த்ர

पीत्वा पीत्वा पुनः पीत्वा यावत्पतति भूतले ।
पुनरुत्थाय वै पीत्वा पुनर्जन्म न विद्यते ॥ (3) (மஹா நிர்வாணதந்த்ர)

मातृयोनिं परित्यज्य विहरेत् सर्वयोनिषु ॥ (4)

वेदशास्त्रपुराणानि सामान्यगणिका इव ।
एकैव शाम्भवी मुद्रा गुप्ता कुलवधूरिव ॥ (5)
(ஞான சங்கலனி தந்த்ரம்)

மது, மாமிசம், மச்சம், முத்திரை, மைதுனம்—இந்தப் பஞ்ச மகாரங்களே ஒவ்வொரு யுகத்திலும் மோக்ஷமளிப்பன. (1)

பைரவி சக்கரத்தில் இருக்குமட்டும் எல்லா வருணத்தாரும் துவிஜரே; பைரவீ சக்கரத்தை விட்டுச் சென்றால் அவரவர் தனித்தனி வருணமாவார். (2)

குடித்துக் குடித்து, இன்னும் குடித்து தரையில் தள்ளாடி விழுமட்டும் குடித்து, எழுந்து மீண்டும் குடிப்பவனுக்கு மறுபிறவி யில்லவே யில்லை. (3)

தாயார் யோனி தவிர மற்றெல்லா யோனிகளிலும் புணர்க!(4)

வேத சாஸ்திர புராணங்களெல்லாம் கணிகை (வேசி) போலும்; சாம்பவீ முத்திரை ஒன்றுதான் அடக்கமுள்ள குலப் பெண் போலும். (5)

பாருங்கள் இந்த முட்டாள் போப்புகளின் மோச லீலையை! வேத விருத்தமான அதர்மச் செயல்களையெல்லாம் வாமாசாரிகள் மேலெனக் கருதினர். மது, மாமிசம், மீன், முத்திரை, பூரி, கச்செளரி, பெரிய ரொட்டி முதலிய பணிகாரங்கள்,—யோனி, ஆதாரம், முத்திரை, மைதுனம்—புருஷர் சிவன், பெண்கள் பார்வதி என்று கருதிக் கூடுதல்—இவையெல்லாம் மோக்ஷந் தருமாம்!!

अहं भैरवस्त्वं भैरवी ह्यावयोरस्तु सङ्गमः ॥

ஆண் பெண் எவரானாலும் சரி, "நான் சிவன், நீ என் பைரவி, பார்வதி, இருவரும் கூடுவோம், கூடுவோம்" என்று கூடுவர். தீண்டத் தகாத நீசப் பெண்ணையும் மிகப் புனிதமாகக் கருதுவர். மாதவிடாயான பெண்ணைத் தொடக்கூடாது என்னுகிறது சாஸ்திரம்; அவளை புனர்தலே வாமாசாரிகள் மிகப் புனித

மாகக் கருதுவர். இவர்களுடைய கச்சடா சுலோகத்தை கேளுங்கள் :

रजस्वला पुष्करं तीर्थं चाण्डाली तु स्वयं काशी चर्मकारी प्रयागः स्याद्रजको मथुरा मता । अयोध्या पुक्कसी प्रोक्ता ॥

(ருத்ரயாமல தந்த்ரா)

ரஜஸ்வலையான பெண்ணுடன் கூடிப் புணர்தல் புஷ்கரணி ஸ்நானம் போலும்; சண்டாளியைப் புணர்தல் காசியாத்திரை போலும்; சக்கிலிச்சியைச் சேரல் பிரயாகை ஸ்நானம் போலும்; வண்ணாத்தியைக் கூடல் மதுரா யாத்திரை போலும்; தட்டுவாணியுடன் லீலை நடத்துவது அயோத்தி யாத்திரை போலாம்!!! மதுவின் பெயர் "தீர்த்தம்"; மாமிசத்தின் பெயர் 'சுத்தம்', புஷ்பம்; மச்சத்திற்கு த்ரீதியா, ஜலதும்பிகை; முத்திரைக்கு சதுர்தீ; மைதுனத்திற்கு பஞ்சமீ; இவ்வாறு குட்டுத் தெரியாது பெயர்களைத் தந்திருக்கிறார்கள். தங்களை கவுலன், கருணை வீரன், சாம்பவன், கணன் என்பர்; வாம மார்க்கமில்லாதவரை, கண்டகன், விமுகன், சுஷ்கபசு என்பர். பைரவீ சக்கரத்தில் சேர்ந்தால் பிராமணன் சண்டாளன் எல்லாரும் துவிஜரே; அதனின்று பிரிந்தால் தங்கள் வருணத்தினராவார்.

வாமாசாரர், பைரவீ சக்கரத்தில் பிந்து, முக்கோணம், சதுரம் அல்லது வட்டம் வரைந்து, அதன்மேல் மதுக் குடத்தைவைத்து, அதற்குப் பூஜை செய்வார். பிறகு இந்த மந்திரம் ஓதுவர்: 'ब्रह्मशापं विमोचय' हे मद्य! 'ஹே. கள்ளே! நீ பிரம்மாதிகளின் சாபத்திலிருந்து விடுபட்டனை.' வாமாசாரிகள் தவிர வேறெவரும் வரமுடியாத இரகசியமான இடத்தில் ஆண்களும் பெண்களும் கூடுகிறார்கள். அங்கே பெண்ணை நிர்வாணமாக்கி ஆணும், ஆணை நிர்வாணமாக்கி பெண்ணும் பூஜை நடத்துகின்றனர். இந்தக் கூட்டத்தில், மனைவி, மகள், தாயார், தங்கை, தமக்கை, நாட்டுப் பெண் போன்ற உறவினர்கள் இருப்பார்கள். பிறகு ஒரு பாத்திரத்தில் மதுவை நிரப்பி, மாமிசமும், பணிகாரமும் சேர்த்து ஓரிடத்தில் வைக்கின்றனர். பிறகு அவர்கள் வாமாசாரியன்* கள்பேலாவைப் (கிண்ணி)யை பிடித்து 'भैरवोऽहम्' 'शिवोऽहम्' (பைரவோஹம் சிவோஹம்), "நான் பைரவன், நான் சிவன்" என்று குடிக்கிறான். பிறகு அதே எச்சில் பாத்திரத்தில் எல்லாரும் கள் ஊற்றிக் குடிக்

* வாமாசாரியன் = வாமமார்க்கிகளின் ஆசாரியன்

கிருர்கள். பிறகு எவளையாவது ஒரு பெண்ணை—எவருடைய மனைவியோ, அல்லது வேசியோ,—நிர்வாணமாக்கிக் கையில் வாள் கொடுத்து, ஹே! தேவீ என்பர்; ஆணை நிர்வாணமாக்கிக் கையில் வாள் கொடுத்து, ஹே மஹாதேவா! என்பர்! பிறகு அவர்கள் உபஸ்த குறிகளுக்கு பூஜை செய்து, தேவியின் அல்லது மஹாதேவனின் எச்சில் கள்ளுப் பேலாவில் கள்ளுண்பர். இப்படிப் பல தடவை குடிப்பர். கள் மயக்கத்தில் யார் மனைவி, கன்னிகை, அக்கா, தங்கை, தாய் என்றும் பாராமல், எவனும் எவளையும் இழுத்துக்கொண்டு, இஷ்டப்பட்டவருடன் கூடி, காமக் களியாட்டயர்வர். குடிவெறி யேறிப்போய், செருப்படி, முஷ்டியுத்தம், மயிர் பிடித்திழுத்தல், ஒருவருக்கொருவர் உதைத்துக்கொள்ளலுடன் சண்டை நடக்கும். சிலர் போதை மீறி வாந்தி யெடுப்பர்; அவரையே அகோரன், பரமசித்தன் என்றுக் கருதுவர். அவர் வாந்தி பண்ணினதை அள்ளி யுண்பவரும் உண்டு. அவன் கீர்த்தி வாய்ந்தவன். இவருள் மஹாசித்தன் லக்ஷணம் இது—கேளுங்கள் :

"हालां पिबति दीक्षितस्य मन्दिरे सुप्तो निशायां गणिकागृहेषु। विराजते कौलवचक्रवर्ती ॥

கள்ளுக்கடையில் 'புட்டி புட்டியாகக் குடித்து, வேசை வீட்டிற் புகுந்து, அவளுடன் விபசாரத் துயில் கொண்டு, இப்படிப்பட்ட அநாசாரச் செயல்களை வெட்கம், மானம், அச்ச மின்றிச் செய்து திரிபவனே தீட்சிதன்; வாமாசாரிகளின் சக்கரவர்த்தியாவான். அதாவது கெட்ட, பாப காரியம் செய்பவன் பெரியவன்; அதினின்று விலகி நல்லது செய்பவன் அற்பன் என்பர்.

पाशबद्धो भवेज्जीवः पाशमुक्तः सदा शिवः ॥

(ஞான சங்கலனி தந்த்ரம்)

"லோக லஜ்ஜை, சாஸ்திர லஜ்ஜை, குல லஜ்ஜை, தேச லஜ்ஜையில் கட்டுப்பட்டவன் ஜீவனுகிருன்; இந்தப் பாசத்தினின்று (லஜ்ஜையினின்று) விடுபட்டு, லஜ்ஜையே இல்லாதவன் சிவனுகிருன்" என்கிறது தாந்திரம்.

உட்டீஸ் தந்திரத்தில் இந்தப் பிரயோகம் காண்கிறது: ஒரு வீட்டில் நான்கு சுவர்களிலும் அலமாரிகள் (மாடங்கள்) இருக்கட்டும்; அவற்றில் சாராயப் புட்டிகளை நிரப்புக. அதிலிருந்து ஒரு புட்டி போடுக; பிறகு இன்னெரு அலமாரிக்கு நடந்தேகி

இன்னொரு புட்டிபோடுக; அங்கிருந்து மூன்ருவது, அதிலிருந்து நான்காவது அலமாரிக்குச் சென்று புட்டி போடுக! கால் நிலைக்காமல் கீழே பிணம் போல விழுமட்டும் புட்டிமேல் புட்டி போடுக! போதை சிறிது தணிந்ததும் எழுந்திருந்து மறுபடி கீழே விழுமட்டும் புட்டி போடுக! இப்படியே மூன்று நான்கு தடவை சுற்றிச்சுற்றி, புட்டி போட்டு விழுந்தால் மறுபிறப்பே இராது!... மெய்தான்! இப்படிப் புட்டி போட்டு கெட்டவருக்கு மறுபடி மனித ஜன்மம் வருவது கடினமே! அவன் இழிகுலத்திலேயே—மிருக யோனியிலேயே—நீண்ட காலம் பிறந்துழல்வான். தாயாரைத் தவிர, மகள், தங்கை, தமக்கை, அண்ணி முதலிய எந்தப் பெண்ணுடனும் கூடலாம், என்பது வாமாசார விதியாகும். இவருள் தசமஹா வித்தை பிரசித்தமானது. அதில் மாதாங்கி வித்தைக் காரன், "அம்மாளைக்கூட விடாது கூடு "मातरमपि न त्यजेत्" என்கிருன்! இப்படிக் கூடும்போது மந்திரம் ஜபிப்பதுண்டு—"எனக்குச் சித்தி வருக"—இதுவே மந்திரம். இந்த மஹா மூர்க்கப் பைத்தியங்கள் போல் உலகில் சிலரும் இருப்பார்களா!!! பொய்ப் பிரசாரம் செய்கிறவன் உண்மையை நிந்தித்தவனுகிருன். வாமாசாரி என்ன சொல்லுகிருன், பாருங்கள்! வேத சாஸ்திர புராணங்களெல்லாம் சாதாரண வேசைகளுக்குச் சமானமாம். இந்தச் சாம்பவி வாமாசாரி முத்திரை குப்த குலஸ்திரீக்குச் சமானமாம்! அதனுலே தான் இந்த வாமாசாரிகள் வேத விருத்தமான மதத்தைக் கிளப்பி யிருக்கிருர்கள். இவர்கள் மதம் மிகவும் பரவியது. பிறகு வேதத்தின் பெயராலும் இந்த வாமமார்க்கிகள் கொஞ்சம் லீலை நடத்தினர்.

(1) सौत्रामण्यां सुरां पिबेत् ॥
प्रोक्षितं भक्षयेन्मांसम् ॥
वैदिकी हिंसा हिंसा न भवति ॥ (மனு 5-27)

(2) न मांसभक्षणे दोषो न मद्ये न च मैथुने ।
प्रवृत्तिरेषा भूतानां निवृत्तिस्तु महाफला ॥ (மனு 5-56)

(1) ஸௌத்ரமணி யக்ஞத்தில் சுராபானம் செய்க. வேள்வியில் மாமிசம் சாப்பிடுவது குற்றமில்லை. வைதிக ஹிம்ஸை ஹிம்ஸையில்லை; அதாவது வேதவேள்வியில் உயிரைக் கொல்வது கொலையாகாது.

(2) புலாலுண்பது, கள்ளுண்பது, மைதுனம் செய்வது இவை குற்றமில்லை. இது உயிரியல்பு தான். ஆனால் இவற்றை விலக்கினால் பெரும்பயனுண்டு என்கிறார் மனு.

ஆனால் 'சுரா' என்பது கள்ளில்லை; அது சோம வல்லியின் ரஸபானமே. வேள்வியில் மாமிசம் உண்பது குற்றமில்லை என்ற பாமரப் பேச்சை, வாமாசாரிகள் கட்டி விட்டிருக்கிறார்கள். வேள்விக் கொலை இமிசையில்லையாம்! அப்படியானால் உன்னையும் உன் குடும்பத்தையும் வெட்டி வேள்வி செய்தால் என்ன நட்டம் என்று கேட்கவேண்டும். ஊன் மதுவுண்ணலும், பரஸ்திரீ கமனமும் பாபமில்லை யென்பது சிறு பிள்ளைத்தனமான பேச்சு. ஏனெனில் உயிர்க் கொலையில்லாமல் புலாலுண்ண முடியாது. குற்றமற்ற பிராணிகளைக் கொல்லுவது தருமமாகாது. மதுபானம் எல்லாவகையிலும் கெடுதலானது. வாமமார்க்க நூல்கள் தவிர மற்றெல்லா நூல்களிலும் கட்குடி தடுக்கப்பட்டுள்ளது. விவாக மில்லாத மைதுனம் தோஷம் இல்லை என்பவனே குற்றவாளி. இப்படிப்பட்ட பாப மொழிகளையும் வாமாசாரிகள் ரிஷி கிரந்தங் களில் சேர்த்து, ரிஷி முனிவர் பெயரால் நூல் செய்து கோமேத, அசுவமேத யக்ஞங்களும் நடத்தப் புகுந்தனர். இந்தச் சாது ஜீவர்களைக் கொன்று ஓமம் செய்தால் யஜமானனுக்கும், கொலை யுண்ட பசுவுக்கும் சுவர்க்கம் கிடைக்குமாம்! பிராமண கிரந்தங் களில் அசுவமேதம், கோமேதம், நரமேதம் ஆகிய சொல்களுக்குச் சரியான அர்த்தம் தெரியாததே இந்த அனர்த்தத்திற்குக் காரண மாகும்.

## வேள்விப் பொருள்

**வினா :** அசுவ, கோ, நரமேத சப்தங்களுக்குப் பொருளென்ன?

**விடை :**

राष्ट्रं वा अश्वमेधः ॥ (சதபத. 13–1–6–3)

अन्न ँ हि गौः ॥ (சதபத. 4–3–1–25)

अग्निर्वा अश्वः ॥ (சதபத. 3–5–1–5)

आज्यं मेधः ॥ (சதபத. 13-2–11–2)

இவை ஸதபதப் பிராமண வாக்குகள். பசு, குதிரை, மனிதரைக் கொன்று ஓமம் செய்ய எங்கும் எழுதப்பட வில்லை. கேவலம் வாமமார்க்கிகளின் நூல்களிலேதான் இந்த அனர்த்தம் காணும். அப்படி ரிஷி கிரந்தங்களில் இருந்தால்

அது வாமமார்க்கிகளின் இடைச் செருகலே என்றறிக. பாருங்கள், சதபத ப்ராம்மணம் கூறுகிறது: தர்ம நியாய மாகக் குடிகளைப் பரிபாலித்து, கல்வியளித்து, நலம் பெறவே நெய் முதலியவற்றால் யஜமானன் ஓமம் செய்தலே **அசுவ மேதமாகும்.** அன்னம், இந்திரியம், கரணம், நிலம் ஆகிய வற்றைச் சுத்தமாக வைத்திருப்பதே **கோமேதம்.** இறந்த பிறகு விதிப்படி மனிதவுடலை எரிப்பதே **நரமேதம்.**

**வினு:** யக்ஞத்தில் யஜமானனும், யாகப் பசுவாதிகளும் சுவர்க் கத்தை அடைகிறார்கள்; ஓமம் செய்ததும் இறந்த பசு உயிர்த்தெழும் என்று யக்ஞ கர்த்தாக்கள் சொல்லுகிறார்கள். இது மெய்யா பொய்யா?

**விடை:** பொய்; சுவர்க்கம் செல்வது உண்மையானால் அப்படிச் சொல்லுவோரைக் கொன்று சுவர்க்கத்திற்கு அனுப்ப வேண்டும்—அல்லது அவர்கள், தங்கள் மாதா பிதா மனைவி மக்களைக் கொன்று, சுவர்க்கத்திற்கு அனுப்பி, ஓம குண்டத்திலிருந்து அவர்களை மீண்டும் உயிருடன் எழுப்ப லாமே? அப்படி ஏன் செய்யவில்லை?

**வினு:** வேள்வியில் வேதமந்திரம் ஓதுகிறார்களே; வேள்விக்கு வேத சம்பந்தம் இல்லாவிட்டால் ஏன் அப்படி ஓதவேண்டும்?

**விடை:** யார் ஓதுவதையும் மந்திரம் தடுக்காது; ஏனெனில் அது ஒரு சப்தம், ஓசை; ஆனால் அதன் பொருள் பசுவைக் கொன்று ஓமம் செய்வதன்று. அக்கினியில் ஹவி, புஷ்டி யான நெய், நல்ல வாசனைத் திரவியங்கள் போட்டு ஹவனம் செய்தால், காற்று, மழை, நீர் எல்லாம் சுத்தமாகி உலகிற்குச் சுகாதாரந் தரும். இது தான் "அக்னயே ஸ்வாஹா" முதலிய மந்திரங்களின் கருத்தாகும். இந்த உண்மைப் பொருளை அந்த மூடர் அறியவில்லை. சுயநலப் பித்தருக்குச் சுயநலந் தவிர வேறென்ன தெரியும், புரியும்? இந்தப் போப்புகளின் அனுசாரமும், செத்தவருக்கு சிரார்த்தம் தர்ப்பணம் செய்வதும் பார்த்து, சகியாமலே மஹா பயங்கர மாக வேத நிந்தனை செய்யும் பௌத்த ஜைன மதங்கள் எழுந்து பரவின. இந்தப் போப்புகள் கோரக்பூர் மன்னனைத் தூண்டி அசுவமேத யாகம் நடத்தினார்கள். அதற்கு மன்னனின் அரசி குதிரையுடன் புணரவேண்டும்;

போப்புகள் அரசியைக் குதிரையுடன் புணர்த்தினர்; அரசி இறந்து போனாள்; அரசன் மனம் வெறுத்து உலகைத் துறந்து, வைராக்கியவானாகித் தன் மகனுக்குப் பட்டம் கட்டி, சாதுவாகி, இந்தப் போப்புகளின் சூழ்ச்சியை அம்பலப்படுத்தினான். உடனே சாருவாகர், ஆபாணகர் என்ற இரண்டு ஜைன பௌத்தக் கிளைச் சமயங்கள் எழுந்தன. அவர்கள் இப்படிப்பட்ட சுலோகங்களை உண்டாக்கினர் :—

(1) पशुश्चेन्निहित: स्वर्गं ज्योतिष्टोमे गमिष्यति ।
स्वपिता यजमानेन तत्र कस्मान्न हिंस्यते ॥

(2) मृतानामिह जन्तूनां श्राद्धं चेत्तृप्तिकारणम् ।
गच्छतामिह जन्तूनां व्यर्थं पाथेयकल्पनम् ॥

—(சர்வதர்சன ஸங்க்ரஹ-சார்வாக தர்சனம்; ஸ்லோ. 4, 5)

(1) பசுவைக் கொன்று வேட்பதால் சுவர்க்கம் செல்லலாம் என்றால், யஜமானன் தன் தகப்பன் முதலியோரைக் கொன்று, வேள்வி செய்து ஏன் சுவர்க்கந்தரக் கூடாது?

(2) செத்தவர் திருப்திக்காக சிராத்த தர்ப்பணம் நடக்கிறதே; அப்படியானால் விதேசம் செல்லும் உறவினர் வழிச் செலவுக்கும் சாப்பாட்டுக்கும் ஒன்றும் எடுத்துச் செல்ல வேண்டியதில்லை போலும்! சிராத்த தர்ப்பணத்தால் செத்தவருக்கு வானுலகில் சோறும் நீரும் போய்ச் சேரும் என்றால், உயிருடன் பரதேசம் சென்றவருக்கு அல்லது வழியில் செல்லுவோருக்கு வீட்டில் சமைத்து, அவர் பெயரால் வைத்த உணவு போய்ச் சேராததேன்? அவன் போன தேசம் இருக்கட்டும், பத்து முழம் தள்ளி யிருப்பவருக்காவது போகுமா? அப்படி போகாதானால், செத்தவருக்கு எப்படி நீரும் சோறும் போய்ச் சேரும்? இவ்வாறு யுக்தி வாதத்தால் ஜைன பௌத்த மதம் மிகவும் பரவலானது. பல அரசரும், ஜமீந்தார்களும், ஜைன பௌத்த மதத்தைத் தழுவினர்; உடனே போப்புகளும் அங்கே சாரத் தொடங்கினர்; ஏனெனில் எங்கே பணம் கிடைக்குமோ அங்கேதான் இவர் மனமும் போகும். இவர்களும் சட்டென்று ஜைனரானார். ஜைன மதத்திலும் வேறு விதமாகப் போப் லீலைகள் புகுந்தன, மிகுந்தன; அதைப் பற்றி பனிரண்டாம் அத்தியாயத்தில் எழுதுவோம்.

பெரும்பாலனவர் ஜைனந் தழுவினர் ; ஆனால் மலைவாசிகள், காசி, கன்னோசி, மேற்கு தெற்கு பிராந்திய வாசிகள் ஜைன மதத்தை ஒப்பவில்லை. ஜைனர் வேதப் பொருள் அறியார் ; போப் லீலைகளை யெல்லாம் வேதத்தின் மேல் சுமத்தி, வேத நிந்தனை செய்யத் தொடங்கினர். அவர்கள் வேதம் ஓதல், ஓதுவித்தல், உபநயனம், பிரமசரியம் முதலிய நியமங்களை நாசப்படுத்தினர். கிடைத்த வேதக் கிரந்தங்களை ஏராளமாக அழித்தனர் ; இடர் செய்தனர். அவர்கள் அதிகாரத்தைக் கைப்பற்றிய பிறகு, யாருக்கும் அஞ்சாமல் தங்கள் மதத்தைச் சேர்ந்த இல்லறத்தாரையும், துறவிகளையும், சாதுக்களையுமே போற்றி, வேதமார்க்கிகளைத் தூற்றி, இழிவுச் செய்து, அநியாய தண்டனை விதிக்கத் தொடங்கினர். தாங்கள் சுகமாக வாழ்ந்து, செருக்கேறித் திரிந்தனர். **ரிஷப தேவர்** முதல் **மஹா வீரர்** வரையில், தங்கள் தீர்த்தங்கரர்களுக்குப் பெரிய பெரிய உருக்கள் நாட்டிப் பூஜை செய்தனர். அதாவது கல் முதலிய உரு வணக்கத்திற்கு அடியாதாரம் (மூலம்) ஜைனம் ; உரு வணக்கம் வேரூன்றியது. பரமேஸ்வர பக்தி குறைந்தது. பரமனுக்குச் செலுத்தும் வணக்கத்தை மக்கள் கல்லுரு முதலிய உருக்களுக்குச் செலுத்தினர். இவ்வாறு முன்னூறாண்டுகள் ஆரிய நாட்டில் ஜைன ராஜ்யம் நடந்தது. ஆரியர் வேதார்த்த ஞான சூனியராயினர். இது 2500 ஆண்டுகளுக்கு முன்னே நிகழ்ந்தது.

## ஸ்ரீ சங்கராசாரியார்

2200 ஆண்டுகளுக்கு முன்பு ஒரு சங்கராசாரியார் எழுந்தார். அவர் திராவிட நாட்டில் பிறந்தவர் ; பிராமணர். பிரமசரியம் காத்து, வியாகரணாதி சாஸ்திரங்களெல்லாம் படித்தார். எல்லாம் கற்ற பிறகு அவர் சிந்தித்தார் : "அஹா ! சத்திய வேத மதம் மறைந்ததே ; நாஸ்திக ஜைன மதம் பரவியதே ; ஜனங்கள் அஞ்ஞானத்தால் அழிகிறார்களே ; இவர்களை எப்படியாவது தடுத்து வேத மார்க்கத்திற்குத் திருப்ப வேண்டும்." அவர் வேத சாஸ்திரமும் நன்று படித்தவரே ; அதோடு ஜைன நூல்களையும் கற்றறிந்தார். யுக்தி வாதம், தர்க்க வாதத்திலும் அவர் நிபுணர். அவர் ஜைன மதத்தை ஒழிப்பது எப்படி என்று ஆலோசித்தார். அதற்கு உபதேசம், சாஸ்திரார்த்தம்—ஆகிய இரண்டையும் ஆயுதமாகக் கொண்டார்.

இந்த உறுதியுடன் அவர் உஜ்ஜியினி நகரம் சென்ருர். அங்கே அப்போது ஸுதன்வா என்ற அரசன் இருந்தான். அவனுக்கு ஜைன கிரந்தமும் சிறிது சமஸ்கிருதமும் தெரியும். அந் நகரில் வேத தர்மோபதேசம் செய்த சங்கார், அரசனைப் பார்த்து, "தாங்கள் சமுஸ்கிரதமும் ஜைன கிரந்தங்களும் படித்திருக் கிறீர்கள்; ஜைன மதத்தை மதிக்கிறீர்கள். ஆதலால் ஜைன பண்டிதர்களுடன் நான் சாஸ்திரார்த்தம் நடத்த வாய்ப்பளி-யுங்கள். வாதில் தோற்றவர் வென்றவர் மதத்தைத் தழுவ வேண்டும்; தாங்களும் வென்றவர் தர்மத்தைத் தழுவ வேண்டும்." என்று வேண்டினுர். ஸுதன்வாராஜா ஜைன மதத்தில் சேர்ந்திருத்தாலும், ஸம்ஸ்க்ருத கிரந்தங்களையும் படித்திருந்ததால்; புத்தியில் கொஞ்சம் வித்யாப் பிரகாசம் இருந்தது. அவன் மனத்தில் விலங்குத் தன்மை படரவில்லை. ஏனெனில் வித்துவாஞனவன் மெய் பொய் ஆராய்ந்து, பொய் விலக்கி மெய்யை ஏற்பான். இதுகாறும் ஸுதன்வா எந்தப் பெரிய வித்வான்-உபதேசகரையும் சந்தித்ததில்லை. ஆதலால் உண்மை எது? ஜைனமா வேதமா—என்ற ஐயம் அவனுள் ளிருந்தது. சங்கராசாரியார் சொன்னதைக் கேட்டதும் மிக்க மகிழ்ச்சிடன், "நான் சாஸ்திரார்த்தம் வைத்து சத்தியம் இன்னது, அசத்தியம் இன்னதென்பதைத் தெளிவேன்" என்ருன். உடனே தூரதூர தேசங்களிலிருந்து ஜைன பண்டிதர் களை வரவழைத்துச் சபை கூட்டினுன் அரசன். சங்கராசாரி யாரின் வேத மதத்திற்கும் ஜைனரின் வேத விரோதி மதத்திற்கும் தர்க்கம் நடந்தது. சங்கராசாரியார் வேத தர்மத்தையே ஸ்தாபனம் செய்தார்; ஜைன மதத்தைக் கண்டித்தார். ஜைனர் தமது மதத்தைப் போற்றி வேதத்தைக் கண்டித்தனர். தர்க்கம் பலநாள் நடந்தது.

**ஜைனர் கொள்கையாவது:** உலகிற்கு சிருஷ்டி கர்த்தா இல்லை; ஜீவனும் ஜகத்தும் அஞதி. இரண்டிற்கும் உற்பத்தியோ நாசமோ இல்லை.

**சங்கர மதமாவது:** அஞதி ஸித்தஞன பரமாத்வே ஜகத் கர்த்தா; ஜீவ, ஜகத்து மித்தை; ஏனெனில் தனது மாயையால் பரமேசனே ஜகத்தை தோற்றினுன். அவனே அதைத் தாங்கு கிருன்; ஊழியில் அழிக்கிருன். இந்த ஜகத்தும் ஜீவனும் கனவு போலாம். பரமேச்வரன் தானே எல்லா வடிவுமாகி விளையாடுகிருன்.

இவ்வாறு பல நாட்கள் வாதம் தொடர்ந்தது. முடிவில் சுருதி யுக்தி பிரமாணங்களால் ஜைன மதம் கண்டிக்கப்பட்டது; சங்கரர் மதம் நிலைநாட்டப் பெற்றது. உடனே ஸுதன்வா ராஜாவும் ஜைன பண்டிதரும் சங்கரமதத்தைத் தழுவி, ஜைன மதத்தை நீத்தனர். இந்தச் செய்தி பெரும் கிளர்ச்சியை உண்டாக்கியது. ஸுதன்வா ராஜா தன் இஷ்ட மித்ர ராஜாக் களுக்கு எழுதி சங்கரரின் சாஸ்திரார்த்தத்தைக் கேட்கச் செய்தான். ஜைனர் முதலில் தோற்றது போல் எங்கும் தோற்றனர். ஸுதன்வாதி அரசர் சங்கராசாரியார் நாடெங்கும் சுற்றிப் பிரசாரம் செய்ய வேண்டிய சௌகரியங்களைத் தந்தனர். அவரது பாதுகாப்பிற்காகக் கூடவே தொண்டரையும் அனுப் பினர். அன்று முதல் ஆரியர் பூணூல் போட்டுக்கொண்டு வேதம் ஓதினர், ஓதுவித்தனர். பத்து வருஷம் ஆரியவர்த்தம் முழுதும் சுற்றி சங்கரர் ஜைன மதகண்டனம் செய்து, வேத மதத்தைப் போற்றி நிலை நாட்டினர். ஜைன விக்ரஹங்கள் தகர்ந்தன; புதையுண்டன. சங்கரர் காலத்தில் உடைந்து புதையுண்ட அந்த விக்ரங்களே இப்போதும் பூமியைத் தோண்டும் போது கிடைக்கின்றன. ஜைனமதத்தை விட்டுச் சங்கரமதம் தழுவினோர் உடைத்துப் போடுவார்கள் என்று பயந்து அந்த விக்கிரங்களைப் பூமியில் புதைத்தனர். அவை இப் போதும் கிடைக்கின்றன. சங்கரர் முன்னேபரவியிருந்த சைவ மதத்தையும் கண்டித்தார்; வாமமார்க்கத்தையும் கண்டித்தார். அந்தக் காலம் நாடு செல்வம் பொழிந்தது; ஜனங்களிடம் சுதேச பக்தி யிருந்தது. சங்கராசாரியாரும், ஸுதன்வாவும் ஜைன மந்திர ஆலயங்களை அழிக்கவில்லை; ஏனெனில் அவற்றில் வேத பாடசாலை வைக்க விரும்பினார்கள். வேதமத ஸ்தாபன மான பிறகு சங்கரர் நாட்டில் வித்யா ப்ரசாரம் செய்யக் கருதினர். அப்போது இரண்டு சிஷ்யர் சேர்ந்தனர்—வெளியே வேத பக்தர்; உள்ளே ஜைனர், கொடிய பகைவர், கபட முனிவர்! சங்கரர் அவர்களிடம் பிரியமாயிருந்தார். சமயம் பார்த்து இந்த வஞ்சச் சீடர் சங்கராசாரியருக்கு விஷம் வைத்து விட்டனர்; அவருக்குப் பசி மந்தமானது; உடம்பில் கொப்புளம் வெடித்து, ஆறு மாதத்திற்குள் ஒப்பிலா மஹான் உடல் நீத்தார். அவர் சாவால் எல்லோருக்கும் மனமொடிந்து போனது. கருதிய வித்தியாப் பிரசாரமும் நடக்கவில்லை. சங்கராசாரியாரின் சிஷ்யர்கள் மட்டும் அவர் செய்த சாரீரக பாஷ்யாதி நூல்களைப் பிரசாரம் செய்தனர். சங்கரர் ஜைனரைக் கண்டனம் செய்யவே

‘ப்ரம்மம் சத்தியம்; ஜகத்மித்தை; ஜீவன் பிரம்மத்தைத் தவிர வேறில்லை’ என்றார். ஜீவ ப்ரம்மைக்கியத்தை உபதேசித்தார். தென்னாட்டில் ச்ருங்கேரி, கிழக்கே பூகோவர்த்தனம், வடக்கே ஜோக்ஷி, மேற்கே துவாரகையில் சாரதா மடங்களை நாட்டி யிருந்தார் அவர். சங்கராசாரியாரின் சிஷ்யர்கள் இப்பீடங்களில் மடாதிபதியாகி செல்வச் செழிப்புடன் ஆனந்தமாயிருந்தனர். ஏனெனில் சங்கராசாரியாருக்குப் பிறகு, அவர் சிஷ்யர் மிகப் பெருமை பெற்றனர்.

## நவீன வேதாந்தம்

ஜீவனும் பிரம்மமும் ஒன்று, உலகம் பொய் என்பது சங்கராசாரியாரின் சொந்த மதமும் நம்பிக்கையுமானால் அது நல்லதில்லை; ஆனால் ஜைனமத கண்டனத்திற்காகவே அவர் அதைச் சொல்லியிருந்தால் கொஞ்சம் பரவாயில்லை. நவீன வேதாந்திகள் மதம் இப்படியிருக்கிறது:

**நவீன வேதாந்தி:** ஆம், உலகம் கனவு, கயிற்றில் பாம்பு, சிப்பியில் வெள்ளி, கானல்நீர், இந்திர ஜாலத்தில் தோன்றும் கந்தர்வ நகரம்; உலகம் பொய், பிரம்மம் ஒன்றே உண்மை.

**சித்தாந்தி:** எதைப் பொய் என்கிறாய்?

**ந. வேதாந்தி:** இல்லாத வஸ்துவை இருப்பது போலத் தோன்றுவதை.

**சித்தாந்தி:** இல்லாத வஸ்துவுக்குத் தோற்றமேது?

**ந. வேதாந்தி:** அத்யாரோபத்தால். (கற்பனையால்)

**சித்தாந்தி:** அத்யாரோபம் என்றால் என்ன?

**ந. வேதாந்தி:** ‘वस्तुन्यवस्त्वारोपणमध्यासः’

(வேதாந்தஸார கண்ட 6)

‘अध्यारोपापवादाभ्यां निष्प्रपञ्चं प्रपञ्च्यते’

(அனுபூதி ப்ரகாஷ. அத். 1–18)

வஸ்து ஒன்றிருக்க அதன்மேல் வேறொன்றை ஏற்றிச் சொல்லுதல் அத்யாரோபம் அல்லது அத்யாஸமாகும். அதை நிராகரிப்பதே அபவாதம். இந்த இரண்டிலும் பிரபஞ்ச ரகித மான பிரம்மத்தின்மேல் பிரபஞ்ச ரூபமான ஜகத்தை விஸ்தரிக் கின்றனர்.

சித்தாந்தி: நீ கயிற்றை வஸ்து என்றும், பாம்பை வஸ்து வில்லை என்றும் நினைத்து, இந்த மயக்க வலையில் விழுந்தாய். பாம்பு வஸ்து வில்லையா என்ன? கயிற்றில் பாம்பு இல்லை என்றால், வேறு இடத்தில் அது உள்ளது; மனதில் அதன் எண்ணம் உள்ளது, சிந்தையில் உள்ளது. அவ்வாறுனல் பாம்பு அவஸ்துவன்று, பொய்யன்று. அதே மாதிரியே தூணில் மனிதன், சிப்பியில் வெள்ளி, முதலியவற்றின் பொருளும் ஆகும். அதே மாதிரி கனவில் காணும் வஸ்துக்களும் மற்றோரிடம் உள்ளன; ஆத்மாவிலும் அதன் ஸம்ஸ்காரம் (நினைவுருவம்) பதிந்துள்ளது. ஆதலால் கனவிலும் வஸ்துமேல் வஸ்துவில்லாததன் அத்யாரோபம் இல்லை. கனவுருவும் பொய் யில்லை.

நவீன வேதாந்தி: நாம் கண்டு கேட்டிராத காட்சிகளை யெல்லாம் கனவில் காண்கிறோமே.—உதாரணமாக ஒருவன் தன் தலை வெட்டப்படுகிறது; தானே அழுகிறான்; ஓர் அருவி மேல் நோக்கிப் பாய்கிறது—இதெல்லாம் உண்மையா?

சித்தாந்தி: இந்த உதாரணங்கூட உனக்குச் சாதகமா யில்லை. ஏனெனில் கண்டு, கேட்காமல் ஸம்ஸ்காரம் (நினைவுரு) வராது. ஸம்ஸ்காரமின்றி நினைப்பில்லை; நினைப்பில்லாமல் நேரடி அனுபவமில்லை. போர்க் களத்தில் இன்னான் தலையை வெட்டினார்கள்; அவன் அண்ணனோ, தந்தையோ யாரோ அழுதார். ஊற்றின் ஜலம் மேலே பொங்கி யெழுந்ததைக் கண்டான் அல்லது கேட்டான். தன் மனதில் இந்த ஸம்ஸ்காரம் பதிகிறது. விழிப்பில் நாம் தனித்திருந்து பதார்த்தங்களைப் பார்க்கிறோம், கேட்கிறோம். கனவில் எல்லாம் நம்முள்ளே காண்கிறோம். கண்டது கேட்டதெல்லாம் கனவில் வரும். தன் தலை அறுந்து தானே அழுவதும், நீர் மேலே பாய்வதும் ஸம்ஸ்காரத்தால் வருவனவே. இது இல்லாத வஸ்துவை இருப்பதாகக் காண்பதன்று. அது சித்திரம் தீட்டுவது போலா கும். சைத்திரிகன் தான் கண்டது கேட்டது ஊகித்ததெல்லாம் மனதில் வைத்துக்கொண்டே காகிதத்தில் படம் வரைகிறான்; வர்ணப் படம் தீட்டுவோன்; தன் மனதிற் படிந்த பிரதி பிம்பத்தையே திரையில் நல்ல உருவாக வரைகிறான்; இன்னும் நினைவிருக்கும் காட்சியைக் கனவில் காண்கிறோம் என்பது உண்மை. உதாரணமாக ஒருவன் தன் ஆசிரியரைக் கனவிற் காண்கிறான்; இன்னொரு கனவில் நீண்டகாலத்திற்கு முன்

கண்டு, கேட்டு, மறந்துபோனதைக் காண்கிறான். சிலவேளை காட்சி, கேள்விக்கு அதீதமான ஞானத்தையும் சாட்சாத்கரிக்கிறான். நீண்ட மறதிக்குப் பிறகு கனவில் காண்பதை முன்னே விழிப்பில் கண்ட கேட்ட நினைவுகூட இருப்பதில்லை. ஆனால் ஜாக்கிரம் போல சொப்பனத்தில் முறையாக நினைக்க முடியாது. பிறவிக் குருடனுக்குக் கனவில் வர்ண வடிவம் வருவதில்லை. ஆதலால் உன் ஆத்யாஸ அத்யாரோப லட்சணம் பொய்யாகும். வேதாந்திகள் விவர்த்தவாதம் அதாவது கயிற்றில் பாம்பு போல் பிரம்மத்தில் உலகம் என்று மதிக்கும் உதாரணமும் பொருந்தாது, தவறானதாகும்.

**நவீன வேதாந்தி :** தாங்கும் பொருளின் அறிவின்றித் தாங்கப்படும் பொருளை அறியமுடியாது. உதாரணமாக கயிறின்றிப் பாம்பை ஊகிக்கமுடியாது. அதிஷ்டானமின்றி அத்யாஸ ஞானமில்லை. முக்காலத்திலும் கயிற்றிற் பாம்பில்லை; ஆனால் இருள் அல்லது வெளிச்சக் கம்மியால் திடிரென்று கயிற்றைப் பார்த்ததும் பாம்பு என்று பயந்து நடுங்குகிறான் மனிதன். விளக்கு வெளிச்சத்தில் பார்த்ததும், பிரமையும் பயமும் நீங்குகின்றன. அதே மாதிரி பிரம்மத்தில் உலகின் கற்பிதமும், சாக்ஷாத்காரமானதும் மறைந்துபோகும். பாம்பு நீங்கிக் கயிறு காண்பது போலவே உலகமாயம் நீங்கி எல்லாம் பிரம்மமாகக் காணலாம்.

**சித்தாந்தி :** பிரம்மத்தில் யார் ஜகத்தைக் கற்பிக்கிறது?

**நவீன வேதாந்தி :** ஜீவன்.

**சித்தாந்தி :** ஜீவன் எங்கிருந்து வந்தது?

**நவீன வேதாந்தி :** அஞ்ஞானத்திலிருந்து.

**சித்தாந்தி :** அஞ்ஞானம் எங்கிருந்து வந்தது? எங்கே இருக்கிறது?

**நவீன வேதாந்தி :** அஞ்ஞானம் அனாதி; பிரம்மத்திலிருக்கிறது.

**சித்தாந்தி :** பிரமத்திலிருக்கிற அஞ்ஞானம் தன்னதா? வேற்றதா? அது யாருடைய அஞ்ஞானம்?

**நவீன வேதாந்தி :** சிதாபாஸத்தின் அஞ்ஞானம்.

**சித்தாந்தி :** சிதாபாஸத்தின் ஸ்வரூபமென்ன?

நவீன வேதாந்தி: அது பிரம்மம்; பிரம்மம் பிரம்மத்தை அறியவில்லை; தன் சொரூபத்தை மறந்தது.

சித்தாந்தி: தன்னை ஏன் மறந்தது?

நவீன வேதாந்தி: அவித்தையால்.

சித்தாந்தி: அவித்தை சர்வவியாபி, ஸர்வக்ஞுன ஒன்றின் குணமா, சிற்றறிவாளர் குணமா?

நவீன வேதாந்தி: சிற்றறிவாளர் குணம்.

சித்தாந்தி: அதனால் உன் மதத்தில் எல்லாம் அறிந்த அனந்த சேதனமான பிரம்மத்தைத் தவிர இரண்டாவது சேதனப் பொருள் உள்ளதா? இல்லையா? சிற்றறிவு எங்கிருந்து வந்தது? சிற்றறிவு பிரம்மத்தினின்று வேறு என்றால் சரி; அப்படி நீ நினைக்கவில்லை. பிரம்மம் தன் சொரூபத்தையே அறியாதுபோனால் அந்த அறியாமை எங்கும் பரவுமே. உடலில் ஓரிடத்தில் புண்ணிருந்தால் வலி உடம்பு முழுதும் பரவுமே. அதுபோலவே பிர்ம்மத்தின் ஏகதேசம் அஞ்ஞானமானால், நோயானால், அதை முழுதும் அனுபவிக்குமே.

நவீன வேதாந்தி: இதெல்லாம் உபாதி தர்மம்; பிரமத்திற்கில்லை.

சித்தாந்தி: உபாதி ஜடமா, சித்தா? மெய்யா பொய்யா?

நவீன வேதாந்தி: அது அநிர்வாசனீயம்; அதை ஜடமா சேதனமா, மெய்யா பொய்யா என்று சொல்லமுடியாது.

சித்தாந்தி: இது வீண் பிதற்றல் ‘वदतो व्याघातः’ (“முன்னுக்குப் பின் முரண்”)! அவித்தை இருக்கிறது என்கிறாய்; அது சித்தா ஜடமா, மெய்யா பொய்யா, என்று சொல்ல முடியாதிருக்கிறாய். தங்கத்தில் பித்தளை கலந்தது போலிருக்கிறது. அதை தங்க வியாபாரியிடம் சோதிக்கத் தந்தால், அவன் இது தங்கமோ பித்தளையோ என்று சொல்ல முடியாது. இது இரண்டின் கலப்பு, என்பது போலிருக்கிறது உன் பேச்சு.

நவீன வேதாந்தி: பாருங்கள்! கடாகாசம், மடாகாசம், மேகாகாசம் எல்லாம் மஹதா காசத்தின் உபாதிகளே; கடம் (பானை), மடம் (வீடு), மேகம் இவற்றில் இருப்பதால் ஒரே ஆகாசம் தனித்தனியாகத் தோன்றுகிறது. உண்மையில் எல்லாம் மஹதாகாசமே. அதேமாதிரி மாயா, அவித்தை

ஸமஷ்டி (கூட்டு), வியஷ்டி (தனிவு), அந்தக்கரணாதி உபாதிகளாலே அஞ்ஞானிகளுக்கு பிரம்மம் தனித்தனியாகக் காண்கிறது. உண்மையில் பிரம்மம் ஒன்றே; அனைத்திலும் அதுவே. கடோபநிஷத் சொல்லுவதைப் பாருங்கள் :

अग्निर्यथैको भुवनं प्रविष्टो रूपं रूपं प्रतिरूपो बभूव ।
एकस्तथा सर्वभूतान्तरात्मा रूपं रूपं प्रतिरूपो बहिश्च ॥

(கடோ. வல்லி 5–மந். 9)

அக்னி நீண்ட, அகன்ற, வட்ட, சிறிய, பெரிய பொருள்களில் நிறைந்து, அவற்றின் வடிவாகிறது; ஆனால் அவற்றினின்றும் தனித்துள்ளது. அதுபோல் சர்வ வியாபியான பரமாத்மா அந்தக் கரணத்தில் வியாபித்து அதன் வடிவாகிறது; ஆனால் அதனின்று தனித்துள்ளது.

**சித்தாந்தி :** இதுவும் வீண் வாதம். ஏனெனில் கடம், மடம், மேகம் இவை ஆகாசத்திலிருந்து தனித்தவை; அதே மாதிரி காரண காரியவடிவான ஜகத்தும் ஜீவனும் பிரம்மத்தினின்றும், பிரம்மம் இவற்றினின்றும் தனித்தது, என்பதை நீ ஏன் அறியவில்லை ?

**நவீன வேதாந்தி :** அக்னி அனைத்திலும் பரவி அததன் வடிவாகக் காண்கிறது. அதே மாதிரி பரமாத்மா ஜட—ஜீவரில் வியாபித்து, அறியாதவருக்குப் பல வுருவாகக் காண்கிறது. உண்மையில் அது ஜடமுமில்லை, ஜீவனுமில்லை. ஆயிரம் நீர்ப் பானைகளில் ஆயிரம் பிரதி பிம்பங்களாகச் சூரியன் காண்கிறது. ஆனால் உண்மையில் சூரியன் ஒன்றே. பானை உடைந்தாலும், தண்ணீர் ஓடினாலும், பரவினாலும் சூரியனுக்குக் கேடில்லை; அதுவும் ஓடிப்போவதில்லை; பரவிப் போவதில்லை. அதே மாதிரி அந்தக்கரணங்களில் பிரம்மத்தின் சிதாபாசம் நிலவுகிறது. அந்தக் கரணம் உள்ளமட்டும் ஜீவன் உள்ளது. ஞானத்தால் அந்தக்கரணம் விலகியதும் ஜீவனெல்லாம் பிரம்ம ஸ்வரூப மாகும். தனது பிரம்ம ஸ்வரூபத்தை அறியாத ஜீவன், சிதாபாசத்தால், தன்னை கர்த்தா, போக்தா, சுகி, துக்கி, பாபி, புண்யாத்மா, ஜனன மரணத் துயர் எல்லாம் தன்னதென நினைத்து, ஸம்ஸார பந்தத்தில் சிக்கி வருந்துகிறது.

**சித்தாந்தி :** இந்த உதாரணமும் வீண் பேச்சே; ஏனெனில் சூரியன் உருவுடையது; நீர்ப் பானையும் உரு கொண்டது;

சூரியன் வேறு நீர்ப் பானை வேறு. அதனாலேதான் பிரதி பிம்பம் உண்டாகிறது. அருவானால், நிராகாரமானால் அதற்குப் பிரதி பிம்பம் ஒரு போதும் இராது. பரமேச்வரன் நிராகாரன்; ஆகாசம் போல் எங்கும் நிறைந்தவன். ஆதலால் பிரம்மம் எதனின்றும் எதுவும் பிரம்மத்தினின்றும் விலகியிருக்க முடியாது. வியாப்ய வியாபக (நிறை-நிறைவு) சம்பந்தத்தால் ஒன்றாகவும் இருக்கமுடியாது. உலகும் கடவுளும் ஒன்றாயிருக்க முடியாது. இரண்டிற்கும் கலந்த தனிமை (அன்வய வ்யதிரேக பாவம்) உறவே; பரமாத்மா உலகுடன் கலந்துள்ளது; ஆனால் அதனுடன் ஒன்றல்ல; பரமாத்மா பொன்னில் மணிபோல், கடத்தில் காற்றுப் போல் தனித்தது. அது ஒன்றானால் எதில் நிரம்பியிருப்பது? அப்போது நிறை நிறைவுறவு இராது—வியாப்ய வியாபக சம்பந்தமிராது. இந்தச் சம்பந்தம் உண்டு. பிரம்மம் சர்வாந்தர்யாமி என்று ப்ரஹதாரண்யகம் தெளிவாகக் கூறுகிறது. *பிரம்மத்திற்கு ஆபாசமும் நிழலும் இல்லை; ஏனெனில் உருவில்லாத பொருளுக்கு நிழலிருக்க முடியாது. அந்தக்கரண உபாதியால் பிரம்மம் ஜீவனாகும் என்பது சிறு பிள்ளைப் பேச்சாகும். அந்தக் கரணம் சலனமுள்ளது. கண்ட துண்டமானது; பிரம்மம் நிச்சலம், அகண்டம்; பிரம்மமும் ஜீவனும் தனித்தனி. இதை ஒப்பாவிட்டால் இதற்குப் பதிற் சொல்லும் பார்ப்போம். எங்கெங்கே அந்தக் கரணம் செல்லுமோ அங்கங்கு பிரம்மம் அக்ஞானி; எங்கெங்கு அந்தக் கரணம் விலகுமோ அங்கங்கு பிரம்மம் ஞானியாகுமா அல்லவா? ஒரு குடையை வெய்யிலில் விரித்துப் பிடித்தால், அதைக் கொண்டு போகும் இடமெல்லாம் வெய்யிலில் தடுக்கப்பட்டு நிழல் இருக்கும்; அது மறைக்காத இடமெல்லாம் ஒளியிருக்கும். அதே மாதிரி அந்தக்கரணம் பிரம்மத்தை ஒரு கணம் அஞ்ஞானி, பந்தன்; மறுகணம் ஞானி, முக்தனாக்கிக் கொண்டிருக்குமே. அகண்டப் பிரம்மத்தில் ஏக தேசம் ஆவரணமானால் சர்வ தேசமும் ஆகும்; அதனால் பிரம்மம் முழுதும் அக்ஞானமாகும். ஏனெனில் அது சேதனம் அந்தக் கரணத்துடன் கூடிய பிரம்மம். மதுரையில் எந்த வஸ்துவைப் பார்க்கிறதோ அதையே அதே அந்தக்கரணத்தால் காசியில் நினைக்க முடியாது; ஏனெனில் அந்தக்கரணம் சலனமுள்ளது; ஒருவன் பார்த்தது மற்றொருவனுக்கு நினைவிராது. "अन्यदृष्टमन्यो न स्मरतीति न्यायात्" யோக சூத்திரம்—விபூதிபாதம்.

* பிரஹதாரண் உபநிஷத் 3–7–3–23.

சூத். 14) என்ற நியாயமுள்ளது. மதுரையில் பார்த்த சிதாபாஸம் காசியில் இராது; ஆனால் மதுரை அந்தக்கரணம் காசியிலுண்டு. அது காசி ப்ரம்மமாகாது. எது பிரம்மமோ அதுவே ஜீவனானால், ஜீவனும் எல்லாம் அறிந்ததாகவேண்டும். பிரம்மத்தின் பிரதி பிம்பம் தனித்திருந்தால், முன்னே கண்டது கேட்டதன் அறிவு எவருக்கும் இராது. பிரம்மம் ஒன்றே ஆதலால் நினைவிருக்கும், அறிவிருக்கும் என்றாலோ, ஓர் இடத்தில் அஞ்ஞானமோ துக்கமோ இருந்தால், பிரம்மம் முழுதிற்கும் அஞ்ஞானமும் துக்கமே நிரம்பியிருக்கும். இந்த உதாரணங்களால் நித்ய சுத்த புத்த முக்த சுபாவமான பிரம்மத்திற்கு, நீ அசுத்த, அஞ்ஞான, பந்த தோஷம் கற்பித்தவனாகிறாய். அகண்டத்தைக் கண்டமாக்கு கிறாய் என்பது புலனாகும்.

**நவீன வேதாந்தி:** கண்ணாடி அல்லது ஜலத்தில் நீலம் அல்லது சாம்பல் வண்ணத்தில் ஆகாய நிழல் கம்பீரமாக படிகிறது; அதுபோலவே நிராகாரப் பிரம்மத்திலும் ஆபாசம் நிழல் படியும். அதுமாதிரி பிரம்மமும் அந்தக்கரணத்தில் நிழலும்.

**சித்தாந்தி :** ஆகாசத்திற்கு உருவமில்லை; அதை யாரும் கண்ணால் காணமுடியாது. காணமுடியாத பொருள் கண்ணாடி யிலோ ஜலத்திலோ எப்படிக் காணும்? அருவுக்கு நீலமோ சாம்பல் நிறமோ ஆகிய எந்தச் சாயையும் இல்லையே.

**நவீன வேதாந்தி:** அப்படியானால் மேலே நீலமாகக் காண்பதும் கண்ணாடியில் நிழலுவதும் எது?

**சித்தாந்தி:** அது மண்ணிலிருந்து எழுந்து மேலே செல்லும் நீர், தூசி, கனலின் அணுக்கூட்டமே. நீராவி மேலேறு விட்டால் மழை எப்படி வரும்? ஆதலால் மேலே கூடாரம் போல் நாம் காண்பது நீரணு வட்டமே. மூடுபனி தூரப் பார்வைக்கு கனமான டேராத் திரைப் போலக் காணும். கிட்டப் போகப்போக மெலிவாகும்; அதுபோல் ஆகாசத்தில் நீராவித் துளிகள் காணும்.

**நவீன வேதாந்தி:** அப்படியானால் எங்கள் கயிறு, பாம்பு, கனவு உதாரணங்கள் பொய்யா?

**சித்தாந்தி:** இல்லை; உன் கருத்தே பொய்! அப்படியே முன்னே எழுதியாயிற்று. அஞ்ஞானம் யாருக்கு என்பதை முதலில் சொல்லு பார்ப்போம்.

நவீன வேதாந்தி: பிரம்மத்திற்கு.

சித்தாந்தி: பிரம்மம் சிற்றறிவா, முற்றறிவா?

நவீன வேதாந்தி: சிற்றறிவுமில்லை முற்றறிவுமில்லை; ஏனெனில் இரண்டும் உபாதி வசப்பட்டவருக்கே.

சித்தாந்தி: எது உபாதி வசப்பட்டது?

நவீன வேதாந்தி: பிரம்மம்.

சித்தாந்தி: அப்படியானுல் பிரம்மமே முற்றறிஞனும் சிற்றறிஞனும் ஆவானல்லவா? இதை ஏன் மறுத்தாய்? உபாதி கற்பிதம் ஆனுல், கற்பனை செய்வோன் யார்?

நவீன வேதாந்தி: ஜீவன் பிரம்மமா, அன்னியமா?

சித்தாந்தி: ஜீவன் அன்னியம்; அது பிரம்ம ஸ்வரூபமானுல் அதில் மித்யா கல்பனை எழாது. அது பிரம்மமாகாது; பொய்க் கற்பனை புனைவது எப்படி மெய்ப் பொருளாகும்?

நவீன வேதாந்தி: சத்தியம் அசத்தியம் (சத்து அசத்து) இரண்டையும் நாங்கள் மித்தை என்கிருேம். சொல்லாலுரைப்பதெல்லாம் மித்தையே.

சித்தாந்தி: நீ சொல்வது நினைப்பதெல்லாம் பொய்யென்ருல், நீயும் பொய் தானே?

நவீன வேதாந்தி: இருக்கட்டுமே; மெய்யும் பொய்யும் நமது கற்பனைதானே; நாம் இரண்டிற்கும் சாட்சியும் ஆதாரமும் ஆவோம்.

சித்தாந்தி: மெய்—பொய்க்கு நீயே ஆதாரமானுல் நீயே செல்வனும் திருடனும் போலாவாய். ஆதலால் உன் பேச்சு பிரமாணமில்லை. ஏனெனில் எப்போதும் உண்மையே கருதி, வாய்மை பேசி, மெய்மை செய்து, மனோவாக்கு காயத்திலும் பொய்யே புரியாதவர் வாக்கே பிரமாணமாகும். உன் பேச்சை நீயே பொய்யாக்குகிருய். ஆதலால் நீயே உனக்குப் பொய்யனுகிருய், மித்யாவாதியாகிருய்.

நவீன வேதாந்தி: பிரம்மத்தைச் சார்ந்து அதையே மறைக்கும் அனுதி மாயையை ஒப்புவீரா?

சித்தாந்தி: மாட்டோம். ஏனெனில் மாயை என்ருல் இல்லாதது; ஆனுல் இருப்பது போலத் தோன்றுவது, என்ற

பொருளிற் கொள்ளுகிறாய். ஊனக் கண்ணிழந்தவரே இவ்வாறு கூறுவர். இல்லாத வஸ்துவுக்குத் தோற்றமிருக்க முடியாது, மலடி மகனுக்குப் பிரதி பிம்பம் இருக்கமுடியாது. "ஸௌமிய, இந்த மக்கள், ஸன்மூலர் 'सन्मूलाः सोम्येमाः प्रजाः' (சாந்தோ. உப. 6–8–4) என்ற சாந்தோக்ய உபநிஷத் வாக்கிற்கு விரோதமாகப் பேசுகிறாய்.

**நவீன வேதாந்தி :** நீர் உம்மினும் பெரிய புலவரான வசிஸ்டர், சங்கரர், நிஸ்சலதாஸ் போன்றவர்களையும், அவர் எழுதிய நூல்களையும் கண்டிக்கிறீரே. எங்களுக்கு வசிஷ்டர், சங்கரர், நிச்சலதாஸ் போன்றோரே பெரிய ஆதாரமாகத் தோன்றுகின்றனர்.

**சித்தாந்தி :** நீ படித்தவனா, படியாதவனா ?

**நவீன வேதாந்தி :** நானும் கொஞ்சம் படித்தவனே.

**சித்தாந்தி :** நல்லது ; வசிஷ்டர், சங்கரர், நிஸ்சலதாஸ் பக்கம் பேசு ; அவர்கள் மதத்தை எம்முன் நாட்டு ; நாம் கண்டனம் செய்கிறோம். வென்றவன் பெரியவன். உன்—அவர் மொழிகள் கண்டிக்க முடியாததாயின், உங்கள் யுக்தி வாதம் கொண்டு எமது வாதத்தைக் கண்டியுங்களேன் பார்க்கலாம்.

## ஜீவப் பிரம்ம பேதம்

சங்கராசாரியர் முதலோர் ஜைன மத கண்டனத்திற்காகவே இந்தக் கொள்கையைக் கையாண்டனர் என்னலாம். ஏனெனில் தேச காலத்திற் கேற்றபடியே தமது பக்கம் வெல்வதற்கு, தமது சொந்த அறிவுக்குப் பொருந்தாத முறையில் கூட வாதாடும் சுய நலப் புலவர் உண்டு. ஜீவேசர் ஒன்று, உலகம் பொய் என்பது சங்கரரின் அந்தரங்க வுண்மையன்று. அப்படி யிருந்தால் அவர் பேச்சில் உண்மையில்லை எண்ணலாம்.

## நிச்சலதாஸ்

நிச்சலதாஸர் பாண்டித்தியத்தைப் பாருங்கள். அவர் விருத்தி ப்ரபாகரத்தில் 'ஜீவனும் ஈசனும் ஒன்று ; இரண்டும் சேதனம் ; ஆதலால் ஜீவனும் பிரம்மமும் அபின்னம், வேறுபாடற்றன' "जीवो ब्रह्माऽभिन्नश्चेतनत्वात्" என்று எழுதுகிறார். இது சிற்றறிஞர் பேச்சு ; ஏனெனில் ஒத்த குணத்தால் மட்டும் இரண்டு வஸ்துக்கள் ஒன்றாவதில்லை ; அவற்றுள்ளும் வேறுபடுங்

குணங்கள் உண்டு. மண்ணும் நீரும் ஜடம்; ஆதலால் ஒன்று "पृथिवी जलाऽभिन्ना जडत्वात्" என்பது பொருந்தாது. அது போலவே நிச்சலதாஸின் விளக்கமும் வீணுகும். ஏனெனில் ஜீவன் சிற்றறிவன், அற்பன், மயங்குவோன்; பிரம்மம் முற்றறிவு, எங்கும் நிறைவு, மயக்கற்ற தெளிவு, கட்டற்றது. இரண்டிற்கும் எவ்வளவோ வேறுபாடுண்டு. ஆதலால் இரண்டும் வெவ்வேறே. மண் மண முள்ளது, கடினம்; தண்ணீர் ரஸம், திரவம்—இரண்டின் தன்மையும் வெவ்வேறு, ஆதலால் இரண்டும் ஒன்ருகா. அதே மாதிரி ஜீவனும் பிரம்மமும் தனித் தனித் தன்மையன. ஆதலால் இரண்டும் ஒன்றினதில்லை; ஒன்றில்லை; இனியும் ஒன்ருகாவாம். நிச்சலதாஸ் பாண்டித் யத்தைக் காட்ட இவ்வளவு போதும்.

## யோக வாசிஷ்டம்

யோகவாசிஷ்டம் நவீன வேதாந்தி செய்ததே. அது வசிஷ்டரோ, வால்மீகியோ செய்த தன்று; ராமச்சந்திரர் கேட்டது மன்று. ஏனெனில் அந்த முனிவர் வேதானுஷ்டனர்; வேதத்திற்கு விரோதமாக எழுதவோ, சொல்லவோ மாட்டார்கள்.

விஞ: வியாஸர் தமது சாரீரிக ஸூத்ரத்தில் ஜீவனும் பிரம்மமும் ஒன்றே என்கிருர். பாருங்கள் :—

1. सम्पद्याऽऽविर्भावः स्वेन शब्दात् ॥ 1 ॥

2. ब्राह्मेण जैमिनिरुपन्यासादिभ्यः ॥ 2 ॥

3. चितितन्मात्रेण तदात्मकत्वादित्यौडुलोमिः ॥ 3 ॥

4. एवमप्युपन्यासात् पूर्वभावादविरोधं बादरायणः ॥ 4 ॥

5. अत एव चानन्याधिपतिः ॥ 5 ॥

—(வேதாந்த சூத்திரம் அத். 4. பா. 4. சூ. 1, 5, 6, 7, 9)

1. 'ஸ்வ' என்ருல் தனது பிரம்ம ஸ்வரூபம். ஜீவன் தன் இயல் நிலை பெற்றதும் பிரம்ம ஸ்வரூபமாக விளங்குகிறது.

2. 'अयमात्मा अपहतपाप्मा' (சாந்தோக்யம் 8-7-1) மாசற்ற நிலையில் நான் சுத்தான்மா—இப்படிப் பட்ட உபநிஷத் வாக்குகள் உள்ளன. 'ஆன்மா கடவுளுக்குரிய தன்மைகளை ஐஸ்வரியங்களை அடையும் ஏதுக்கள் உண்டு; ஆதலால்

ஜீவாத்மா பிரம்மஸ்வரூபத்தில் நிலைபெறும்' என்பது ஜைமினி ஆசாரியர் மதம்.

3. பிருஹதாரண்யத்தில் ததாத்மக ஸ்வரூப நிரூபணம் காண்கிறது. அதாவது 'ஆத்மா கடவுள் தன்மையாகிறது. அப்போது சைதன்ய மயமாயிருப்பதால் பிரம்மத்துடன் ஐக்கிய முக்தி யடைகிறது' என்கிறார் ஔடலோமி ஆசாரியார்.

4. மேற் சொன்னபடி ஐசுவரிய பிராப்தியால் ஜீவன் பிரம்மமாகும் என்பதை வியாசர் மறுக்கவில்லை.

5. ஐசுவரிய சித்தி பெற்ற யோகி, பிரம்மஸ்வரூபமடைந்து, அன்னிய அதிபதியின்றி, தானே தானாக சர்வாதிபதியான பிரம்மஸ்வருபத்தில் முக்தி யடைகிறான்.

விடை : இந்தச் சூத்திரங்களின் பொருள் இவ்வித மில்லை. இவற்றின் உண்மைப் பொருளைக் கேளும் :

1. ஜீவன் மலபரிபாகமாகி, மாசற்று தனது சுத்த நிலை அடையாத வரையில், யோகத்தால் ஐசுவரியத்தைப் பெற்று, அந்தர்யாமி பிரம்மத்தை அடைந்து ஆனந்த நிலைபெற முடியாது.

2. இவ்வாறு பாபமற்ற ஐஸ்வரியம் பெற்ற யோகி பிரம்மத்துடன் முக்தி யின்பம் நுகர்கிறான். இதுவே ஜைமினி ஆசாரியர் மதம்.

3. ஜீவன் அவித்யாதி தோஷமற்று, சுத்த சைதன்ய ஸ்வரூபமானதும் 'ததாத்மகத்வம்'—அதாவது பிரம்ம ஸ்வரூபத்துடன் கூடி நிற்கிறது. [இதுவே ஔடுலோமி ஆசாரியர் மதமாகும்.]

4. சுத்த விக்ஞானமும் யோகசக்தியும் பெற்று, பிரம்மத்துடன் கூடிய சுத்தாத்மா தனது இயல்பான நிர்மல ஸ்வரூபத்தை யடைந்து, ஆனந்த ஜீவன் முக்தனாகிறது, என்பது வியாஸ முனிவர் மதமாகும்.

5. ஸத்ய ஸங்கல்பம் அடைந்த யோகி, பரமேசனை யடைந்து முக்தி சுகம் நுகர்கிறான். அந்த நிலையில் சுதந்தரமாக சுயாதீன மாயிருக்கிறான். உலக வாழ்வில் ஒருவர் இன்னொருவர் மேல் தலைமை வகிப்பர்; முக்தியில் இறைவனே தலைவன்;

முக்த ஜீவர்களெல்லாம் சமானம். அடியில் வரும் வேதாந்த சூத்திரங்களில் வியாஸ முனிவர் இதை வலியுறுத்துகிறார் :

1. नेतरोऽनुपपत्तेः ॥ (1–1–16)

2. भेदव्यपदेशाच्च ॥ (1–1–17)

3. विशेषणभेदव्यपदेशाभ्यां च नेतरौ ॥ (1–2–22)

4. अस्मिन्नस्य च तद्योगं शास्ति ॥ (1–1–19)

5. अन्तस्तद्धर्मोपदेशात् ॥ (1–1–20)

6. भेदव्यपदेशाच्चान्यः ॥ (1–1–21)

7. गुहां प्रविष्टावात्मानौ हि तद्दर्शनात् ॥ (1–2–11)

8. अनुपपत्तेस्तु न शारीरः ॥ (1–2–3)

9. अन्तर्याम्यधिदैवादिषु तद्धर्मव्यपदेशात् ॥ (1–2–18)

10. शारीरश्चोभयेऽपि हि भेदेनैनमधीयते ॥ (1–2–20)

1. பிரம்மமே சிருஷ்டிகர்தா ; ஜீவன் இல்லை ; ஏனெனில் ஜீவன் அற்பம், சிற்றறிவினது, சிறு திறலது ; இது உலகை ஆக்கும் சக்தி யற்றது. ஆதலால் ஜீவன் பிரம்மம் ஆகாது.

2. ஜீவனும் பிரம்மமும் தனித்தனி, பின்னம் ; உபநிஷத்து இதற்கு ஆதாரம் "रसं ह्येवायं लब्ध्वानन्दी भवति—ரஸ மயமான பரமாத்மனை அடைந்து ஜீவன் ஆனந்த மாகிறது" என்பது தைத்திரீய வாக்கு (பிரம்ம வல்லி-7). ரஸானந்த ஸ்வரூபமான பிரம்மத்தை யடைந்து, ஜீவன் ஆனந்த ஸ்வரூபமாகிறது, என்பதில் பிரம்மம் பிராப்தி விஷயம், ஜீவன் பிராப்தியடைவது— இரண்டும் தனித்தனி, ஒன்றில்லை என்பது விளங்கும்.

3. முண்டகோபநிஷதில் பிரம்மலக்ஷணம் இவ்வாறு சொல்லப்படுகிறது :

दिव्यो ह्यमूर्त्तः पुरुषः स बाह्याभ्यन्तरो ह्यजः ।
अप्राणो ह्यमना: शुभ्रो ह्यक्षरात्परतः परः ॥

—(முண்டகோபநிஷத். 2 1-2)

திவ்யம், சுத்தம், அரு, அனைத்திலும் உள்ளும் புறமும் பூரண நிறைவு, பிறப்பிறப்பற்றது, அவதாரமற்றது, உடலற்றது. மூச்சற்றது, உடல் மனக் கலப்பற்றது, ஒளிமயமானது, அக்ஷரம் அழிவற்றது, இயற்கையினும் பரமானது, உயர்ந்தது, அதி

சூக்ஷ்மம், பரபிரம்மம், பரம்பரம்—இதுவே பிரம்மத்தின் சிறப்பாகும். ஜீவன் இரண்டிற்கும் மேற்கண்ட தன்மைகள் இல்லை; ஆதலால் பிரம்மம் இரண்டினும் வேறானது, உயர்வானது.

4. எங்கும் நிறைந்த பிரம்மத்துடன் ஜீவன், ஜீவனுடன் பிரம்மம், யோகக் கலப்பெய்துதலைப் பற்றி உபநிஷத்துக்கள் கூறுகின்றன. சேர்க்கைக்கு இரண்டு தனித் தனிப் பொருள்கள் வேண்டும். ஆதலால் பிரம்மமும் ஜீவனும் தனித்தனியாகும்.

5. பிரம்மம் அந்தர்யாமி; அது ஜீவனில் வியாபித்திருக்கிறது. வியாப்பிய ஜீவன் வியாபகப் பிரம்மத்தினின்றும் வேறுபட்டது; ஏனெனில் நிறை குறைவுக்கு இரண்டும் வெவ்வேறாயிருக்க வேண்டும்.

6. பரமாத்மா ஜீவனிட மிருந்து தனித்தது. அதே மாதிரி இந்திரியம், அந்தக் கரணம், பிருதிவி, ஆதி பூதம், திசை, வாயு, சூரியன்—இவற்றின் திவ்ய குணங்களைப் புசிப்பவர், தேவர்களான வித்வான்கள்; அவர்களிடமிருந்தும் பரமாத்மா தனி நிலையிலிருக்கிறார்.

7. "गुहां प्रविष्टौ सुकृतस्य लोके" (கடோபநிஷத்–1–3–1)—இதய குகையில் இன்ப நிலையத்தில் இரண்டு ஆன்மாக்கள் வசிக்கின்றன—"ஜீவாத்மா பரமாத்மா" என்பது உபநிஷத்வாக்கு. இவ்வாறே உபநிஷத்துக்கள் பல இடங்களிற் கூறுகின்றன. ஆதலால் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் தனித்தனியானவை.

8. "शरीरे भवः शारीरः" சரீரதாரியான ஜீவன் பிரம்மமாகாது; ஏனெனில் பிரம்மத்தின் குண கர்ம ஸ்வபாவம் ஜீவனிடம் இல்லை.

9. திவ்யமனம் இந்திரியம் முதலியவை (அதிதைவம்), மண்ணாதி பூதங்கள் (அதி பூதம்), ஜீவ சமுதாயம் (அத்யாத்மம்), அனைத்திலும் பரமாத்மா அந்தர்யாமியாயிருக்கும். அவரது வியாபகத்வ தர்மத்தை உபநிஷத்துகள் விளக்குகின்றன.

10. ஜீவனும் பிரம்மமும் இயல்பில் வெவ்வேறு. உடல் தாங்கிய ஜீவன் பிரம்மமாகாது என்பது தெளிவு.

இத்தகைய சரீரக சூத்திரங்களினின்றும், பிரம்மமும் ஜீவனும் வேறுபட்டிருப்பதை அறியலாம். இவ்வாறு புது வேதாந்திகளின் உபக்ரம—உபஸம்ஹாரத் கொள்கை—(அதாவது

(உபக்ரம) உலகம் பிரம்மத்தினின்று வந்தது, (உபஸம்ஹார) அதில் லயமாகிறது என்ற கொள்கை பலிக்காது. அவர்கள். பிரம்மம் தவிர வேறு வஸ்துவை ஒப்புவதில்லை. அவர்கள் சித்தாந்தப்படி தோற்றமும் ஒடுக்கமும் பிரம்மத்தில் என்கிறது. இது பிசகு. வேதாதி சாஸ்திரங்களின் முடிவு வேறு. நிர்விகாரி, அபரிணாமி, சுத்த, ஸநாதனப் பிரம்மத்தில், மயக்கற்ற திவ்யப் பிரமத்தில் விகார உற்பத்தி, அஞ்ஞான எழுச்சி ஒரு நாளும் இருக்கமுடியாது. உபஸம்ஹாரத்திலும் (பிரளயம்) பிரம்மமும், பிரகிருதியும், ஜீவனும் தனித்தனியே உள்ளன. ஆதலால் உபக்ரமமும் உபஸம்ஹாரமும் இந்தப் புது வேதாந்திகளின் கற்பனைப் புளுகாகும். இன்னும் சாஸ்திரத்திற்கும், பிரத்யக்ஷாதிப் பிரமாணங்களுக்கும் ஒவ்வாத பல அசுத்தக் கொள்கைகள் புது வேதாந்தத்தில் உண்டு.

## காவியக் காலம்

இதன் பிறகு ஜைனரும், சங்கராசாரியரின் சிஷ்யர்களும் ஆரிய நாட்டில் மதோபதேசம் செய்தனர். கொள்கை விஷயமாக அவருள் கண்டன மண்டனங்கள் நடந்தன. சங்கரர் சென்று முன்னூறுண்டுகளுக்குப் பின், உஜ்ஜைனி நகரில் **விக்ரமாதித்ய** ராஜா புகழ் பெற்றெழுந்து, சிற்றரசரின் சண்டையை ஒழித்து அமைதியை நாட்டினார். அவருக்குப் பிறகு **பர்த்ருஹரி** ராஜா ஆண்டார். அவர் காவ்யாதி சாஸ்திரங்களிலும் இலக்கியங்களிலும் புலவரானார். அவர் வைராக்கியம் பூண்டு அரசைத் துறந்தார். விக்ரமாதித்யனுக்கு ஐநூறுண்டுகளுக்குப் பிறகு **போஜாராஜர்** எழுந்தார். அவர் வியாகரணம், காவியாலகாரங்களை ஊக்கினார். கவிகளை ஆதரித்தார். அக்காலத்தில் **காளிதாஸன்** என்ற ஆடுமேக்கி கூட இரகுவம்ஸாதி காவியங்களைச் செய்தான். யார் நல்ல கவி செய்து கொண்டுவந்தாலும் போஜராஜன் அவருக்குப் பெரும் பொருள் அளித்து மரியாதைச் செய்தான். அவனுக்குப் பிறகு அரசரும் செல்வரும் கல்வியைப் புறக்கணித்தனர்.

## சைவர் எழுச்சி

சங்கரருக்கு முன்னும், வாமமார்க்கிகளுக்குப் பின்னும் சைவாதி சம்பிரதாய மதத்தினர் இருந்தனர். ஆனால் அவ்வளவு பலமாயில்லை. மஹாராஜா விக்ரமாதித்யர் காலத்திலிருந்து சைவர் பலம் அதிகரித்தது. வாமமார்க்கிகளுள் தசமஹா

வித்யாதி கிளைகளைப் போல், சைவருள் பாசுபதர் முதலிய பல கிளைகள் உண்டு. ஜனங்கள் சங்கரரைச் சிவனின் அவதாரம் எனப் போற்றினர். அவரைப் பின்பற்றிய துறவிகளும் சைவ சமயத்தைச் சேர்ந்தனர்; வாமமார்க்கிகளுடனும் கூடினர். வாமமார்க்கிகள் சிவபத்தினியான தேவியை உபாசித்தனர்; சைவர் மஹாதேவனை உபாசித்தனர்; இருவரும் விபூதி உருத்ராக்ஷம் தரித்தனர். ஆனால் சைவர் வாமமார்க்கிகளைப் போல் அவ்வளவு வேத விரோதிகளில்லை. சைவர்கள் இதைப் போலப் பல சுலோகங்களைப் புனைந்துரைத்தனர் :

1. धिक् धिक् कपालं भस्मरुद्राक्षविहीनम् ।

2. रुद्राक्षान् कण्ठदेशे दशनपरिमितान्मस्तके विंशति द्वे,
षट् षट् कर्णप्रदेशे करयुगलगतान् द्वादशान्द्वादशैव ।
बाह्वोरिन्दोः कलाभिः पृथगिति गदितमेकमेवं शिखायाम्,
वक्षस्यष्टाऽधिकं यः कलयति शतकं स स्वयं नीलकण्ठः ॥

1. நெற்றியில் விபூதியும், கழுத்தில் ருத்ராக்ஷமும் இல்லாதவன் ஒழிக! " तं त्यजेदन्त्यजं यथा " (சிவபுராணம் வித்யேஷ்வா ஸம்ஹித 1–23–13). அவனைச் சண்டாளன் போல் ஒதுக்கித் தள்ளுக!

2. கண்டத்தில் 32, சிரத்தில் 40, இரண்டு காதுகளிலும் ஆறு ஆறு, இரண்டு கைகளிலும் பன்னிரண்டு, பன்னிரண்டு, இரு புஜங்களில் 16, 16 சிகையில் ஒன்று, இதயத்தில் 108 ருத்ராக்ஷங்களைத் தரிப்பவன் சாக்ஷாத் மஹாதேவனுக்கே சமானமாவான்.

சாக்தரும் இதை மதித்தனர். பிறகு இந்த வாமமார்க்கிகளும் சைவரும் சேர்ந்து, ஆண் - பெண் குறிகளை (ஜலதாரீ - லிங்கம்) இலிங்கமாக நாட்டிப் பூஜை செய்தனர். இந்தப் பாமரச் செயலை நாம் ஏன் செய்கிறோம் என்ற நாணம் அவர்களுக்குச் சிறிதுமில்லை. கவி ஒருவர் கூறும் வண்ணம் "स्वार्थी दोषं न पश्यति" "சுயநலப் புலிகள் தங்கள் காரியத்தைச் சாதிக்கச் செய்யும் தீமைகளையும் தோஷங்களையும் காணுவதில்லை." தீமைகளையும் நன்மையெனக் கருதுவர். கல்லுருக்களையும் இலிங்கத்தையும் உபாசித்தலே, தர்மார்த்த காம மோக்ஷ சித்தியெனக் கருதினர் வாமசாரரும் சைவரும். போஜராஜனுக்குப் பிறகு ஜைனர் தமது மந்திரங்களில் உருக்களை

வைத்துத் தொழுதனர். அவற்றைத் தரிசிக்க, பரிசிக்க, பூசிக்கப் பலர் வந்தனர். போப் சிஷ்யரும் (வாமர் - சைவர்) அந்த ஜைன ஆலயங்களுக்கு போக வர ஆரம்பித்தனர். இச்சமயம் மேற்கிருந்து முகம்மதியரும், யவனர்களும், அன்னிய மதத்தினரும் ஆரிய நாட்டிற் புகுந்து கொண்டிருந்தனர். அப்போது போப்புகள் இப்படி சுலோகம் பாடிவைத்தனர் :

न वदेद्यावनीं भाषां प्राणैः कण्ठगतैरपि ।
हस्तिना ताडयमानोऽपि न गच्छेज्जैनमन्दिरम् ॥

(பவிஷ்ய புராணம்–ப்ரதிஸர்கம் பர்வ 3 கண்ட 3 அத்யாய 28–சுலோ 53)

எவ்வளவு துக்கம் வந்தாலும், பிராணுபத்து வந்தாலும், சாவே வந்தாலும் சரி, மிலேச்ச பாஷை பேசாதே; யவன பாஷையைச் சொல்லிற் கலக்காதே; மதயானை துரத்தி வந்தாலும் உயிர் பிழைக்க ஜைன மந்திரத்துள்ளே நுழையாதே. ஜைன மந்திரத்தில் நுழைந்து உயிர் தப்புவதை விட யானை மிதித்து இறத்தலே நன்று. இப்படிப்பட்ட தங்கள் சுலோகங்களைப் பிரசாரமும் செய்தனர். அதற்குத் தக்க நூலில் பிரமாணம் காட்டும் என்றுல், இதோ காட்டுவோம் என்பர். காட்டும் என்றுல் மார்க்கண்டேய புராணம் படிப்பர்; துர்க்கா பாடத்தில் தேவீ வர்ணனையைப் பொழிவர். போஜராஜன் அரசில் வியாசர் பெயரால் யாரோ மார்கண்டேய புராணமும் சிவ புராணமும் செய்து வைத்தார். அதையறிந்த போஜன், புராணம் கட்டிய பண்டிதரின் கையை வெட்டித் தண்டித்தான். "புலவர்கள் ஏதாவது காவியம் செய்வதானுல், உங்கள் பெயராலேயே செய்யுங்கள்; ரிஷி முனிவர் பெயரால் செய்யாதீர்" என்று உத்தரவிட்டான். இந்த விவரம் போஜராஜன் எழுதிய 'ஸஞ்ஜீவனி' என்ற இதிகாசத்தில் எழுதப் பெற்றுள்ளது. இந்த நூல் குவாலியரில் 'பிண்ட'(Bhind) என்ற ஊரில், திவாரி பிராமணர் வீட்டில் உள்ளது. லக்குனுவிலுள்ள ராவ் சாஹேபும், அவர் குமஸ்தா ராம்தயாள் சௌபேஜியும் இதைக் கண்ணுல் பார்த்திருக்கிறுர்கள்.

## மகாபாரதம்

தனது அந்த நூலில் போஜராஜன் :

'வியாசர் பாரதத்தில் 4400 சுலோகங்களே எழுதினுர். அவர் சிஷ்யர் 5600 சுலோகங்கள் எழுதினர். இரண்டும்

சேர்ந்து பாரதம் 10000 சுலோகங்களே. விக்கிரமாதித்யன் காலத்தில் 20,000 சுலோகங்களானது. என் தந்தை காலத்தில் 25,000 சுலோகங்கள், என் இளமையில் பாரதம் 30,000 சுலோக கிரந்தமாகப் பெருகியது. இப்படியே பெருகிக்கொண்டே போனால், பாரதம் ஓர் ஒட்டகச் சுமையாய்விடும். இப்படியே பூர்வ ரிஷி முனிவர் பெயரால் புராணம் செய்தால், ஆரிய நாட்டு மக்கள் மயக்க வலையில் வீழ்ந்து, வைதிக தர்மத்தை விட்டு வீழ்ச்சியடைவார்கள்.' என்று எச்சரிக்கை செய்கிறான். இதனால் போஜராஜனுக்குச் சிறிது வேதத்தின்பால் அன்பும் மதிப்பும் இருந்தது என்று தெரிகிறது.

**போஜப் பிரபந்தத்தில் இவ்வாறு எழுதப்பட்டுள்ளது:**

**घटयैकया क्रोशादशैकमश्वः, सुकृत्रिमो गच्छति चारुगत्या ।**
**वायुं ददाति व्यजनं सुपुष्कलं, विना मनुष्येण चलत्यजस्रम् ॥**

போஜ ராஜ்யத்திலும், அருகிலும் அரிய யந்திரச் சிற்பிகள் இருந்தனர். அவர்கள் குதிரை வடிவில் யந்திரம் செய்தனர். அது ஒரு ''கடி''யில் (அதாவது 24 நிமிஷங்களில்) 11 கோஸ் (அல்லது 22 மைல்கள்); ஒரு மணிக்கு 27½ கோஸ் அல்லது 55 மைல் தரையிலும் வானிலும் ஓடும். மனித உதவியின்றி தானே சுழன்று நல்ல காற்று வீசும் யந்திர விசிறியும் செய்தனர். இந்த இரண்டு யந்திரங்களும் இன்றிருந்தால் ஐரோப்பியர் செருக்கு இறங்கிப் போயிருக்கும்.

## பௌராணிக (ஹிந்து)மத உற்பத்தி

போப்ஜீ தன் சிஷ்யருக்குத் தடை யுத்தரவு போட்டும் அவர்கள் ஜைன மதத்திற்குச் சென்று ஜைனக் கதைகளையும் கேட்டனர். ஜைனப் போப்புகள் இந்தப் புராணப் போப்புகளின் சிஷ்யர்களைக் கவர்ந்தனர். புராணிகள் தக்க உபாயம் செய்யா விட்டால் தமது சிஷ்யர் ஜைனராவார் என்பதை உணர்ந்தனர். பிறகு போப்புகள் சபை கூடி ஜைனர் போலவே, அவதாரம், மந்திரம், மூர்த்தி, கதை நூல்கள் அமைத்தனர். ஜைனர்களின் 24 தீர்த்தங்கரர் போலவே 24 அவதார மூர்த்திகளையும் கோயில் களையும் எழுப்பினர். ஜைனரின் ஆதிபுராணம் உத்தர புராணம் போலவே பதினெட்டுப் புராணங்களையும் செய்தனர்.

வைஷ்ணவம் : போஜராஜன் இறந்து 150 ஆண்டுகளுக்குப் பிறகு வைஷ்ணவ சமயம் எழுந்தது. ஆரம்பத்தில் சடகோபர்[1] தீவிர பிரசாரம் செய்யவே கொஞ்சம் வெற்றி பெற்றது; அவருக்குப் பிறகு முனிவாஹனர்[2] என்னும் திருக்குலத்தவர், பிறகு யவனு சாரியர்[3] வைஷ்ணவாசாரியர்களானுர்கள். பிறகு பிராமண குலத்திலுதித்த இராமானுஜர் ஆசாரியராகி வைஷ்ணவ தர்மத்தைப் பரப்பினுர். இக்காலம் சைவர் சிவபுராணம், சாக்தர் தேவீ பாகவதம், வைஷ்ணவர் விஷ்ணு புராணம் செய்தனர். இப்புராணங்களில் ஆசிரியர் பெயரில்லை; ஏனெனில் தன் பெயர் போட்டால் பிரமாண நூலாகாது. ஆதலால் வியாசாதி முனிவர் பெயரால் புராணம் செய்தனர். இந்நூல்களைப் புராணம் என்பது பிசகு; நவீனம் எனவேண்டும். தரித்திரன் மகனுக்கு மஹா ராஜாதி ராஜா என்று பெயர் வைப்பது போல், தற்கால வஸ்துவுக்கு ஸநாதனம் என்று பெயர் வைப்பது போலிருக்கிறது புராணம் என்பது. சமயவாதிகளின் சண்டை சச்சரவுகள் புராணங்களிலும் புகுந்தது.

சாக்தம் : பாருங்கள்! தேவீ பாகவதம்! அதில் ஒரு ஸ்திரீ ஸ்ரீதேவி, அவள் ஸ்ரீபுர அரசியாம்; அவள் எல்லா வுலகையும் ஆக்கினுளாம். பிரம்மா, விஷ்ணு, மஹேஸ்வரரையும் அவளே படைத்தாளாம்! எப்படி? தேவி இச்சை வைத்தாள் கையைப் பிசைந்தாள்; உடனே கையில் ஒரு கொப்புளம் எழுந்தது! அதிலிருந்து பிரம்மா உற்பத்தியானுராம். உடனே, "நீ என்னை விவாகம் செய்து கொள்" என்றுளாம் தேவி; பிரம்மா "தேவீ, நீ என் அன்னை; உன்னை நான் விவாகம் செய்து கொள்ள முடியாது" என்றுராம். மாதாவுக்குக் கோபம் வந்து விட்டது. உடனே மகனைச் சபித்தாள்; பிரம்மா சாம்பலாய் விட்டான்! மறுபடியும் ஸ்ரீதேவி கையைத் தேய்த்தாள்; இன்ெனுரு குழந்தை உண்டானது; அதன் பெயர் விஷ்ணு; அந்தக் குழந்தையிடமும் "நீ என்னை மண" என்றுள்; விஷ்ணுக் குழந்தை மறுத்தது; அதையும் பஸ்மமாக்கி விட்டாள் தேவீ! மறுபடியும் மூன்றுவது குழந்தையை உண்டாக்கினுள். அதற்கு மஹாதேவன் என்று பெயர் வைத்தாள். அதனிடமும், "மஹா தேவா, நீ என்னைக் கலியாணம் செய்து கொள்" என்று கேட்டாள். மஹாதேவன், தாயே உன்னை எப்படி நான்

---

1. நம்மாழ்வார். 2. திருப்பாணுழ்வார். 3. ஆளவந்தார்.

கலியாணம் செய்து கொள்வது ; ஆனால் நீ வேறு உடலெடுத்தால் பார்ப்போம்'' என்றான். தேவி அப்படியே செய்தாள் ; மஹா தேவன் ''சரி, இந்த இரண்டு இடத்திலும் சாம்பல் குவிந்திருக் கிறதே ; அவை என்ன சாம்பல்'' என்று கேட்டான். ''இவை உன் சகோதரர் சாம்பல் ; அவர்கள் என் ஆணையை மீறியதால் சாம்பலாக்கினேன்'' என்றாள். மஹாதேவன், ''நான் தனியா யிருக்கமாட்டேன் ; அவர்களையும் உயிர்த்து எழச்செய் ; இன்னும் இரண்டு பெண்களை உண்டாக்கு. மூன்று பேருக்கும் மூன்று பெண்களுடன் மணமாகட்டும்'' என்றான். தேவி அவ்வாறே செய்தாள். மூன்று பேரும் மூன்று பெண்களை மணந்தனர். சபாஷ் ! என்ன வெட்கம் ! மாதாவை மணக்க மறுத்துச் சொந்தத் தங்கைகளை மணம் புரிந்தனர். இது உசிதமா? பிறகு இவர்கள் இந்திராதி தேவர்களை உண்டாக்கினார்களாம். பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், இந்திரன் ஆகியோர் தேவிக்குப் பல்லாக்குத் தூக்கினார் களாம் ! இப்படிப்பட்ட கப்ஸாக்களை யெல்லாம் எழுதி வைத் தார்கள். 'தேவியின் உடல் எப்படி ஆனது ! அவள் அப்பா, அம்மா யார் ? ஸ்ரீபுரத்தை யார் ஆக்கியது ?' என்று கேட்க வேண்டும். அவர்கள் தேவி அனாதி என்றால், ஸம்யோகத்தால் உண்டான எதுவும் அனாதியன்று. தாயும் சேயும் மணம் புரியக் கூசுவோர் அண்ணனும் தங்கையும் மணம் புரிவது முறையோ, நல்லதோ ? என்று கேட்க வேண்டும். இவ்வாறு தேவீ பாகவதத் தில் மஹாதேவர், பிரம்மா, விஷ்ணுக்களின் சிறுமையும், தேவி யின் பெருமையும் எழுதப்பட்டுள்ளது. அதுபோலவே சிவ புராணத்தில் தேவி முதலியோரை மிகவும் சிறுமைப் படுத்தி யிருக்கிறார்கள். இவர்கள் அனைவரும் மஹாதேவன் தாஸர் ; மஹாதேவன் அனைவருக்கும் இறைவன். ருத்ராக்ஷக் கொட்டையைத் தரித்து, சாம்பலைப் பூசிக் கொண்டாலே முக்தி என்பர் சைவர். அப்படியானால் சாம்பலில் புரளும் நாய், கழுதை, பன்றி முதலிய விலங்குகளும், கொட்டை மாலைகள் அணியும் பில்லரும், மலைக்குறவரும் மோக்ஷமடைய வேண்டு மல்லவா ?

வினா : காலாக்னி ருத்ரோபநிஷத்து நீறணிவதைப் பற்றிச் சொல்லுகிறதே. அது பொய்யா ? 'त्र्यायुषं जमदग्नेः' (த்ராயுஷம் ஜமதக்னே) என்பது யஜுர்வேத வாக்கு ; வேதம் விபூதி பூசச் சொல்லுகிறது. ருத்ரன் கண்ணீராலுண்டான மரத்திலானது ருத்ராக்ஷம் என்று புராணம் கூறுகிறது.

அதனால் அதைத் தரிப்பது புண்ணியம் என்று எழுதப் பட்டுள்ளது. ஒரு ருத்ராக்ஷம் பூண்டாலும் பாபம் விலகும்; சுவர்க்கம் கிடைக்கும்; யம பயம், நரக பயம் விலகும்.

**விடை:** காலாக்னி ருத்ரோபனிஷத்து யாரோ சாம்பல் பூச்சுக் காரன் எழுதியதே. ஏனெனில் "**यस्य प्रथमा रेखा सा भूर्लोकः**" —"முதல் விபூதிக் கோடு பூலோகம்" போன்ற வரிகள் அனர்த்தமாகும். தினம் கையால் போடும் கோடு எப்படிப் பூலோகமாகும். நீ சொன்ன யஜுர்வேத வாக்கு— '**त्र्यायुषं जमदग्नेः**' (யஜு. 3-62) விபூதியையோ திருபுண்ட்ரத்தையோ குறிக்காது. '**चक्षुर्वै जमदग्निः**' (சதபத. 8–1–2–3) என்பது சதபத வாக்கு. "ஹே பரமேச்வரா! எனது கண்ணொளி (த்ராயுஷம்) முந்நூறாண்டுகள் இருக்கட்டும்; நானும் அறவினை செய்து, அதனால் கண்பார்வை மங்காது வாழ்க! என்பது பொருள். கண்ணீரால் மரமுண்டாவது என்ன முட்டாள் தனம்! பரமேச்வரன் படைப்பு முறையை யார் மாற்றமுடியும்? பரமாத்மா ஒவ்வொரு மரத்திலும் விதை ஏற்படுத்தியிருக்கிறார். அதனின்றே மரம் முளைக்கும் வேறு விதமாக முடியாது. அதனால் ருத்ராக்ஷம், பஸ்மம், துளஸீ, கமலாக்ஷம், அருகம்புல், சந்தனம் முதலியவைகளைத் தரிப்பது காட்டுமிராண்டிகள் வேலை. இவை மனிதர் கடமை யன்று. இவ்வாறு வாமமார்க்கிகளும் சைவரும், மித்யாசாரி களாய், வேத விரோதிகளாய், நல்வினைகளைக் கைவிட்டனர். அவருள் உத்தமர் இவற்றையெல்லாம் விட்டு விட்டு, நல்வினை புரிந்தனர். விபூதி, ருத்ராக்ஷத்தால் யமதூதர் பயப்படுவார்களாம்! போலீஸ் சிப்பாயிகூட அவற்றைக் கண்டு பயப்படமாட்டானே. நாய், சிங்கம், பாம்பு, தேள், ஈ, கொசுக்கள்கூட விபூதி, ருத்ராக்ஷம் அணிபவர்களைக் கண்டு அஞ்சுவதில்லை என்றால், நியாயதிகாரியான எம ராஜன் தூதர்களா அஞ்சுவார்கள்!

**வினா:** வாமமார்க்கமும் சைவமும் நன்றாயில்லை. ஆனால் வைஷ்ணவம் நன்றாயிருக்கிறதே.

**விடை:** இதுவும் வேத விரோதமாதலால் அவற்றினும் கெட்டது.

**வினா:** '**नमस्ते रुद्र मन्यवे**' (யஜு. 16–1),(நமஸ்தே ருத்ர மன்யவே). '**शिवाय च शिवतराय च**' (யஜுர். 16–4)—சிவாய

ச சிவதராய ச (யஜுர். 5–21)—வைஷ்ணவமஸி, 'वैष्णवमसि'। 'वामनाय च' (யஜுர். 16–30)—வாமனுயச, 'गणानां त्वा गणपतिं हवामहे' (யஜுர். 23–16)—கணுனும் த்வா கணபதிம் ஹவாமஹே—'भगवती भूयाः' (அதர்வன. 9–10–20) பகவதீ பூயா: सूर्य आत्मा जगतस्तस्थुषश्च'। (யஜுர். 16–46)—ஸுர்ய ஆத்மா ஜகதஸ் தஸ்துஷஸ்ச—இத்தகைய ப்ரமாணங்களால் சைவம் முதலிய மதங்களை வேதம் ஆதரிக்கிறதே; இவற்றைக் கண்டனம் செய்வதேன்?

**விடை:** இவ்வசனங்கள் சைவாதி சம்பிரதாய விளக்கமன்று. ஏனெனில் 'ருத்ர' என்பது பரமேச்வர், பிராணுதி வாயு, ஜீவன், அக்னி முதலியவற்றின் பெயர். குரோத கர்த்த ருத்ரன் அதாவது துஷ்டர்களைத் தண்டிக்கும் பரமாத்மனை வணங்குகிறேன். பிராணனுக்கும் ஜாடராக்னிக்கும் அன்னம் கொடுக்கவேண்டும். (நம இதி அன்னனும—நிகண்டு 2–7) நம என்பது அன்னத்தின் பெயர். உலகிற்கு நலந்தரும் மங்களகரனை பரமாத்மனை வணங்கவேண்டும்.

(1) शिवस्य परमेश्वरस्यायं भक्तः शैवः।

(2) विष्णोः परमात्मनोऽयं भक्तो वैष्णवः'।

(3) 'गणपतेः सकलजगत्स्वामिनोऽयं सेवको गाणपतः'।

(4) 'भगवत्या वाण्या अय सेवकः भागवतः'

(5) 'सूर्यस्य चराचरात्मनोऽयं सेवकः सौरः'।

(1) பரமேச்வரனை சிவனை அன்பு செய்பனே சைவன்.

(2) பரமாத்மாவான விஷ்ணுவை அன்பு செய்பவன் வைஷ்ணவன்.

(3) உலகநாதனை கணபதியைச் சேவிப்பவனே காணபத்யன்.

(4) கலைவாணியை, கலை ஞானத்தைச் சேவிப்பவன், (கலைத்தொண்டு செய்பவன்) பாகவதன்.

(5) அண்ட சராசரங்களினும் நிறைந்த பரமாத்மனை வணங்குவோனே ஸௌர்யன்.

ருத்ரன், சிவன், விஷ்ணு, கணபதி, சூரியன் முதலிய பெயர்கள் பரமேச்வரனைக் குறிக்கும். பகவதி என்பது

உண்மையுரைக்குப் பெயர். இஃதறியாமல் இம்மாதிரி வீண் சண்டை ஏற்படுகிறது. எப்படி யென்றால் :—

ஒரு வைராகிக்கு இரண்டு சிஷ்யர். இருவரும் தினம் குருவின் காலைப் பிசைந்து வந்தனர். ஒருவன் வலதுகாலை, மற்றொருவன் இடது காலைப் பிசைவதென்று பங்கு போட்டுச் செய்தார்கள். ஒரு நாள் ஒரு சிஷ்யன் சாமான் வாங்கக் கடைத் தெருவுக்குச் சென்றிருந்தான். மற்றொருவன் சேவை செய்து கொண்டிருந்தான். வைராகி திரும்பிப் படுத்தார். அதனால் மற்றொரு 'குருபாய்' பிசைய வேண்டிய கால் மேலே யிருந்தது. சிஷ்யன் அதை வலுத்த தடியால் ஒரு போடுபோட்டான். குரு, "அடே துஷ்டா! என்ன செய்தாயடா!" என்று அலறினார். சிஷ்யன் "நான் சேவை செய்ய வேண்டிய கால் மேல் இந்தக் கால் ஏன் ஏறியது!" என்று சீறினான். இதற்குள் கடைக்குப் போன சீடன் வந்தான். பார்த்தான்; தான் பிசையும் கால் வீங்கியிருந்தது. "குருஜீ; என் சேவைக்குரிய காலில் ஏன் வீக்கம்? என்ன நேர்ந்தது" என்று வினவினான். குரு நடந்ததைச் சொன்னார். இந்த மூர்க்கன் ஒரு பேச்சில்லாமல், கப் சுப் என்று ஒரு தடியை எடுத்தான்; குருவின் மற்றொரு காலில் பலமாக ஓங்கிப் புடைத்தான்! குரு வீறிட்டார்! இரண்டு சிஷ்யர்களும் இரண்டு தடி யெடுத்துக் கொண்டு குருவின் இரண்டு கால்களையும் நன்கு புடைத்தனர். கூக்குரல் வலுத்து ஜனங்கள் கூடி, "சாது ஜீ, ஏன் அழுகிறீர்? என்ன நடந்தது?" என்று கேட்டார்கள். ஓர் அறிவாளி, சாதுவை விடுவித்து பிறகு அந்த மூடச் சீடருக்குப் புத்தி சொன்னார். இந்த இரண்டும் உங்கள் குருவின் கால்களே. இரண்டிற்கும் சேவை செய்தால் குரு இன்புறுவார். அவற்றைப் புடைத்தால் அந்த குருவே வருந்துவார்" என்றான் அறிவாளி.

ஒரு குருசேவையில் இரண்டு சீடர் நடத்திய லீலை போலவே, அகண்ட சச்சிதானந்த சொரூப பரமாத்மாவுக்கு விஷ்ணு ருத்ராதி நாமம் இருப்பதை யறியாமல், (இதை முதல் அத்தியாய தில் விளக்கியுள்ளேன்) சத்தியார்த்த மறியாமல், சைவம், வைஷ்ணவம், சாக்தம் முதலிய சம்பிரதாய கூட்டத்தினர் ஒருவருக்கொருவர் தூற்றித் திரிகின்றனர். சிவ, விஷ்ணு நாமங்களெல்லாம் ஒரே அத்விதீய, சர்வ நியந்த ஸர்வாந்தர்யாமி ஜகதீச்வரனின் அநேக குண கர்ம சுபாவங்களை விளக்கும் பெயர்கள் என்பதை மந்த புத்தியாளர் சிறிதும் அறிவதில்லை.

இத்தகைய முட்டாள்கள் இறைவன் சினத்திற்கு உள்ளாகாம லிருப்பார்களா ?

## சக்கிராங்கித வைஷ்ணவர்

சக்கிராங்கித வைஷ்ணவரின் அற்புத மாயத்தைப் பாருங்கள் :

**तापः पुण्ड्र तथा नाम माला मन्त्रस्तथैव च ॥**
**अमी हि पञ्च संस्काराः परमैकान्तहेतवः ॥**
**अतप्ततनूर्न तदामो अश्नुते । इति श्रुतेः ॥**

(பர்தவாஜ சாங்ஹித பரிசிஷ்ட 2-2) அல்லது (ராமானுஜ படல பத்ததி)

இராமானுஜ படல பத்ததி சொல்லுகிறது : (தாப:) " சங்கு, சக்கரம், கதை, பத்மம் முதலிய சின்னங்களால் முத்திராதானம் செய்து கொள்வது ; அதாவது இவற்றைப் பழுக்கக் காய்ச்சி புயத்தில் சுட்டுக் கொண்டு, சுட்ட முத்திரையைப் பாலில் தோய்க்க வேண்டியது ; அந்தப் பாலைச் சிலர் குடிப்பர். அந்தப் பாலில் மனித மாமிசமும் கலந்திருக்கிறது. (முத்திரையில் ஒட்டிய ஊன்). இப்படிப்பட்ட கர்மங்களால் பரமேசனை அடைய மனப் பால் குடிக்கிறார்கள். சங்கு, சக்ர முத்திரையால் சூடு போட்டுக் கொள்ளாது போனால், பரமேசனை அடைய முடியா தாம் ! ஏனெனில் முத்திரதான மில்லாதவன் (ஆம:) அபக்கு வியாம். போலீஸ்காரன் உடுப்பைக் கண்டு மக்கள் அஞ்சுவது போலவே, விஷ்ணு சங்கு, சக்கரம் முத்திரையைக் கண்டு யமராஜனும் யமபடரும் பயப்படுவார்களாம். மேலும் கூறு கிறார்கள் :

**दोहा—बाना बड़ा दयाल का, तिलक छाप और माल ।**
**यम डरपै कालू कहे, भय माने भूपाल ॥**

(பக்தமாலா-நிஷ்ட 6)

பகவானுடைய குறிகளான நாமம், திலகம், முத்திரை, மாலை பூணுதல் பெரும்புண்யம். திரிபுண்டத்தைக் கண்டால் எமனும் அஞ்சுவான். திரிசூலம் போல் நெற்றியில் நாமம் தீட்ட வேண்டும். நாராயணதாஸ், விஷ்ணுதாஸ் என்று தாஸ நாமம் வைத்துக் கொள்ள வேண்டும். தாமரை அல்லது துளஸி மாலை அணிய வேண்டும். ஓம் நமோ நாராயணாய **ओं नमो नारायणाय ॥** என்ற மந்திர ஜபம் செய்ய வேண்டும்.

இது சாதாரண மனிதர் ஜபம். श्रीमन्नारायणचरणं शरणं प्रपद्ये श्रीमते नारायणाय नमः। श्रीमते रामानुजाय नमः (ஸ்ரீ மந்நாராயண சரணம் ஶரணம் ப்ரபத்யே) (ஸ்ரீமதே நாராயணாய நம: ஸ்ரீமதே ராமானுஜாய நம:) என்பவை செல்வருக்கும் கனவான்களுக்கும் மதிக்கத்தக்கவருக்கும் ஆகிய மந்திரம் என்று செய்து வைத்திருக்கிறார்கள். பாருங்கள், இதுவும் வியாபாரமாய் விட்டது! முகத்திற்கேற்ற திலகம்! இந்தப் பஞ்ச ஸம்ஸ்காரங்களே (நாமம், முத்திரை, மாலை, மந்திரம், குரு சரணம்) முக்தி மார்க்கம் என்று சக்கிராங்கிதர் சொல்லுவர். இந்த மந்திரத்தின் அர்த்தம் :

நான் நாராயணனை வணங்குகிறேன்,
நான் லக்ஷ்மீ நாராயணனை வணங்குகிறேன்,
ஸ்ரீமதியுடன் கூடிய நாராயணனை வணங்குகிறேன்,
அதாவது சோபயுக்த நாராயணனை வணங்குகிறேன்,
ஸ்ரீ ராமானுஜருக்கே என் வணக்கம்.

என்பதாம். வாமமார்க்கியின் பஞ்ச *மகாரம் போலவே சக்கிராங்கிதர் பஞ்ச ஸம்ஸ்காரத்தை மதிக்கிறார்கள். சங்கு சக்கிர முத்திரைச் சூடு போடும் போது சொல்லும் வேத மந்திரமும் பொருளும் இவையே :

पवित्रं ते विततं ब्रह्मणस्पते प्रभुर्गात्राणि पर्येषि विश्वतः।
अतप्ततनूर्न तदामो अश्नुते शृतास इद्वहन्तस्तत्समाशत ॥ 1 ॥
तपोष्पवित्रं विततं दिवस्पदे ॥ 2 ॥

(ருக் 6-83-1, 2)

"ஹே பிரமாண்டத்தையும் வேதத்தையும் பாலிக்கும் பிரபுவே! எல்லாத் திறமையும் வாய்ந்த சர்வசக்திமானே, உனது நிறைவால் உலகின் எல்லா உறுப்புக்களிலும் வியாபித்திருக்கிறாய். உனது சுத்த ரூபத்தைப் பரிசுத்தவான்களே அறிவர். பிரமசரியம் மெய்யுரை, பொறி புலனடக்கம், யோகப் பயிற்சி, ஜிதேந்திரியம், ஸத்ஸங்கம் ஆகிய தவத்தினரே நின்னை அறிவார். இஃதின்றி பக்குவமற்ற அந்தக்கரண மற்ற ஆன்மா,

* இதன் விவரம் 358 - ம் பக்கத்தில் காண்க

உனது சொரூபத்தை அடையாது. முன் செய்த தவத்தால் பரிசுத்த மானவரே தவமுயற்சியால் உனது சுத்த ஸ்வரூபத்தை நன்கு அடைவர் (1) பரிசுத்த வாழ்வுடன் தவம் புரிவோரே ஜோதி ஸ்வரூபமாக உலகில் நிறைந்த பரமாத்மனை அடைவர். இப்போது இராமனுஜாதியர் இந்த மந்திரத்திற்குச் சக்கிராங்கிதம் வேண்டுமென்றே பொருள் செய்ததேன்? இப்படி வேதப் பொருளைத் திரிப்பவர் வித்வான்களா, அவித்வான்களா? வித்வான்களானால் இந்த மந்திரத்திற்கு இப்படிப் பொருத்தமில்லாத பொருள் செய்ததேன்? இந்த மந்திரத்தில் வரும் "அதப்ததனு" என்பதற்கு, நகசிக பரியந்தம் உள்ள முழு உடல், என்பதே பொருளாகும். இதை "அதப்த புஜைகதேஶ:" என்று திரித்துச் சூடு போட்டுக்கொள்வது அறிவா? அப்படி உடல் முழுதும் சூடு போட்டுக்கொண்டாலும் மந்திரப் பொருள் வராது. ஏனெனில் உண்மை யுரைத்தல் முதலிய தூய செயலே தவம் (தப) என்பது இதன் பொருள்

ऋतं तपः सत्यं तपः श्रुतं तपः शान्तं तपो दमस्तपः स्वाध्यायस्तपः ॥ (தைத்திரீயம். 10-8)

தூய பாவனை, வாய்மை, உண்மை, மெய்மை, அதர்ம விலக்கு, புலன்கள் தீய வழிச் செல்லாது தடுத்தல், மன மொழி மெய்யால் நல்வினை புரிதல், வேதாதி மெய்யறிவைப் பயிலல், பயிற்றல், வேத வழி நடத்தல் ஆகிய மேலான அறவினைகளே தவமாகும். முத்திரையைக் காய்ச்சிச் சுட்டுக் கொள்ளலன்று. அப்படிச் செய்யும் சக்கிராங்கிதர் தம்மை வைஷ்ணவ சிரேஷ்டராகக் கருதுகின்றனர்; தங்கள் கெடுதலையும் தீச்செயலையும் அவர்கள் உணர்கிறாரில்லை. இச்சக்கிராங்கிதர்களின் முக்கிய புருஷர் சடகோபர். டூம் (தாழ்ந்த) குலத்திலுதித்த நாபாகவியால் இயற்றப்பட்ட சக்கிராங்கிதர் நூலான பக்தி மாலையில் *சடகோபரைப் பற்றி, "சுளகுமுடைந்து விற்றுத் திரிந்த யோகி—"

"विक्रीय शूर्पं विचचार योगी"

என்று பாடுகிறார். வேதம் பயில பிராமணரிடம் சென்றிருக்கலாம்; பிராமணர் மறுத்திருக்கலாம். ஆதலால் பிராமணருக்கு

* நாபாகவியால் எழுதப்பட்ட பக்தி மாலையில் கிடைத்த ஆதாரங்களைக் கொண்டு ஆழ்வாரைப் பற்றி தயானந்தர் எழுதினார். அவர் தென்னாட்டிற்கு வந்து நமது சைவ,வைஷ்ணவ ஆகமம், திருவாய்மொழி தேவாரம் முதலிய நூல்களை

விருத்தமான திலகம், சக்ராங்கிதம் முதலிய சாஸ்திர விருத்தங்களைப் பழக்கினர் என்னலாம். திருக்குலத்திலுதித்த முனிவாஹனரும், பிறகு யமுனசாரியரும் இப்பரம்பரையினர். அவர்களுக்குப் பின் இராமானுஜர் பிராமண குலத்திற் பிறந்து சக்ராங்கிதரானர். இவருக்கு முன் சக்கிராங்கித நூல்களெல்லாம் சுதேச பாஷையிலேயே எழுதப்பட்டன. அவர் கொஞ்சம் ஸம்ஸ்கிருதம் படித்துச் சில கவிதை நூலும், சாரீரக ஸூத்ரத்திற்கும் உபநிஷத்திற்கும் பாஷ்யமும் எழுதினர். அது ஸ்ரீசங்கராச்சாரியார் பாஷ்யத்திற்கு முற்றிலும் எதிரிடை. அவர் சங்கராசாரியாரை மிகவும் நிந்தித்தார். ஜீவனும் பிரம்மமும் ஒன்று; பிரம்மத்தைத் தவிர அன்னிய வஸ்து எதுவுமில்லை. உலகம் மாயாரூபம், அநித்தியம், நிலையற்றது என்பது சங்கரர் அத்வைதம். இதற்கு எதிராக இராமானுஜர் ஜீவன், பிரம்மம், மாயை மூன்றும் நித்தியம் என்றார். சங்கரர் மதமாவது பிரம்மத்தை மிஞ்சி ஜீவனோ மற்றக் காரண வஸ்துவோ இல்லை என்பது; அது சரியில்லை. இந்த அம்சத்தில் இராமானுஜரின் விசிஷ்டாத்வைதம் ஜீவன், மாயை சகிதம் பரமாத்மா ஒருவர் என்பதும், தத்வத்ரயத்துடன் அத்வைதத்தைச் சேர்ப்பதும் வீணாகும். ஜீவன் எப்போதும் பரதந்திரன் ஈஸ்வராதீனன் என்பதும், கண்டிகை, திலகம், மாலை, மூர்த்தி பூஜை ஆகிய பாகண்ட வழக்கங்கள் சக்கிராங்கிதத்தில் உண்டாகும் கெடுதல்களாம். சக்கிராங்கிதர் போல சங்கரமதம் அவ்வளவு வேத விருத்தமில்லை.

## மூர்த்தி பூஜை

**வினா :** மூர்த்தி பூஜை எங்கிருந்து வந்தது?

**விடை :** ஜைனரிடமிருந்து

**வினா :** ஜைனருக்கு எங்கிருந்து வந்தது?

**விடை :** மடமையிலிருந்து.

**வினா :** சாந்தத் தியானத்தில் அமர்ந்த மூர்த்தி தரிசனத்தால், ஜீவனிலும் அதே நல்ல மாறுதல் உண்டாகும், என்பர் ஜைனர்.

கற்றிருந்தால் இம்மதங்களிலுள்ள குறைகளை விசேஷமாக அம்பலப்படுத்தியிருப்பார். சடகோபர் அரசர் மகன் என்பது கதை. அவருக்கு நம்மாழ்வார் என்ற பெயருமுண்டு. முனிவாஹனருக்கு திருப்பாணாழ்வார் என்ற பெயருமுண்டு. யமுனாசாரியார் வேதம் கற்ற வேதியர். ஆளவந்தார் என்பது அவர் மறுபெயர்.

**விடை:** ஜீவன் சேதனம். மூர்த்தி ஜடம். என்ன, ஜீவனும் ஜடமாக மாறுமோ? இந்த மூர்த்தி பூஜை வஞ்சனைப் புரட்டு. இது ஜைனர்களால் உண்டானது. அதனால் 12-ம் அத்தியாயத்தில் இதைக் கண்டிப்போம்.

**வினு:** சாக்தர் முதலியோர் மூர்த்திபூஜை ஜைனர் போல் இல்லையே; ஜைனர் மூர்த்திபோல் வைஷ்ணவ மூர்த்தியில்லையே?

**விடை:** அது சரிதான். சாக்த—ஜைன மூர்த்திகள் ஒன்றுயில்லை; ஏன்? ஜைன மூர்த்திபோல் செய்தால் இவர்களும் சமணம் புகுந்ததாகும். அதனால் சாக்தரும் வைஷ்ணவாதிகளும் ஜைனருக்கு நேர் எதிரிடையாகத் தங்கள் மூர்த்திகளைச் செய்தனர். ஏனெனில் ஒருவரையொருவர் பகைப்பதே அவர் தொழில். ஜைன மூர்த்திகள் அம்மணமாக, துறவு நிலையில் தியானித்திருக்கும். வைஷ்ணவாதி மூர்த்திகள் அதற்கு நேர் எதிரிடையாயிருக்கும். பெண்ணுடன் கூடி சிருங்கார விஷய சுகபோக லீலா வைபவ கல்யாணக் கோலத்துடனிருக்கும், நிற்கும், சயனித்துமிருக்கும். ஜைனர் பூஜையில் சங்கு, மணி, நகரா முழக்கம் இராது. வைஷ்ணவாதிகள் கோலாகல முழக்கம் செய்வர். வைஷ்ணவாதி சம்பிரதாயப் போப்புகள், தங்கள் சிஷ்யக் கும்பலை ஜைனர் வலையில் விழாது தடுத்துத் தங்கள் வலையில் சிக்கவைக்கவே திருலீலை நடத்தினர். வியாசாதி மஹர்ஷிகளின் பெயரை வைத்து, மனம்போனபடி கண்ட கண்ட கதைகளையெல்லாம் பாடிவைத்தனர். அவற்றைப் புராணம் (பழையன) என்று பெயர் வைத்துக் கதா காலட்சேபம் நடத்தினர். இதற்குமேல் ஒரு விசித்திர மாயாஜாலம் புனைந்தனர். கல்லாலும் செம்பாலும் விக்ரகம் செய்து, மறைவாக காடு, மலை பூமிகளில் புதைத்து வைப்பான் ஒரு போப்பு. பிறகு இந்தப் போப்பு தன் சிஷ்யரிடம், "இரவில் என் கனவில் வந்தார்—மஹாதேவர். (பார்வதி, ராதா, கிருஷ்ணு, ஸீதா, ராமா, லக்ஷ்மீ, நாராயணர், பைரவர், ஹனுமான்—இத்யாதி) வந்து, "ஹே பக்தா; நான் இன்ன இடத்தில் (மலையில், காட்டில்) இருக்கிறேன். அங்கிருந்து என்னைக் கொண்டுவா; கோவில் நாட்டு! நீயே என் பூசாரியாயிருந்தால் நான் வேண்டிய வரங்களை, பலன்களைத் தருவேன்,'' என்றுர் என்று ஆவேசம்

நடிப்பான். ஒரு மூடச் செல்வன், போப்ஜியின் லீலையைக் கேட்டு எல்லாம் மெய்யென நம்பி, அந்த மூர்த்தி எங்கே, என்று கேட்பான். போப்ஜி, "அந்த மலையில், அந்தக் காட்டில் மறைந்திருக்கிறார் எம்பெருமான்; வா என்னுடன் காட்டுகிறேன்" என்பான். அந்தப் பரம வஞ்சகனுடன் மூடச் செல்வன் சென்று பார்ப்பான். அதே இடத்தில் மூர்த்தி யிருக்கும். மூடச் செல்வன் வியந்து பயந்து போப்ஜீ காலில் விழுந்து, "சுவாமி உங்கள் மேல் இந்த தேவதை அன்புடன் வந்திருக்கிறது; மூர்த்தியை எடுத்துச் செல்லுங்கள்; நான் கோவில் கட்டுகிறேன். அதில் இந்தத் தெய்வத்தை ஸ்தாபித்துத் தாங்களே பூஜை செய்ய வேண்டும். நாங்கள் இந்த மகிமை பெற்ற தேவதையின் தரிசன பரிசனத்தால் வேண்டிய பலனைப் பெறுவோம்" என்பான். இப்படி ஒருவன் செய்த லீலையைக் கண்டு எல்லாப் போப்புகளும் தங்கள் பிழைப்பு நடக்க இந்தக் கபடத்தால் மூர்த்திகளை நாட்டினார்கள்.

**வினா**: பரமேச்வரன் நிராகாரம்; தியானத்தில் அடைய முடியாதவன். அதனால் மூர்த்தி அவசியம் வேண்டும். மூர்த்தி முன் நின்று கைகூப்பி, பரமேச்வரனையே நினைத்துத் தோத்திரம் செய்தால் என்ன கெடுதல்?

**விடை**: பரமேஸ்வரன் நிராகாரம், ஸர்வவியாபகன்; ஆதலால் அவனுக்கு உருவமைக்க முடியாதே. மூர்த்தி தரிசனத் தாலேயே பரமேச்வரன் நினைவு வருவதால், பரமேச்வரனே படைத்த உலகம், ஜலம், அக்னி, வாயு, வனஸ்பதி ஆகிய அற்புதமான வஸ்துக்கள் உள்ளன; அற்புதமான இயற்கை யழகுள்ளது; மலையுள்ளது—எல்லாம் கடவுள் படைத்த இயற்கை யுருவங்கள்—இவற்றைப் பார்த்துக் கடவுளை நினைக்க முடியாதா? இறைவனாலேயே படைத்த இவ் வியற்கைப் பொருளைக் கொண்டு அப் பரம்பொருள் நினைப்பில் வராவிட்டால் மனிதன் செய்த அற்ப சிலையைக் கண்டதும் எப்படி அவன் நினைப்பு வரும்? உருவைக் கண்டு கடவுளை நினைப்பதென்ற கதை தவறானதே யாகும். ஆகவே உருவில்லாத இடத்தில் கடவுள் நினைப்பு வராது என்றாயிற்று. ஆதலால் தனியாயிருக்கும் போது ஒருவன் ஜார (வியபிசாரம்) சோரம் (திருடுதல்) செய்யத் துணியலாம். ஏனெனில் மூர்த்தி இப்போது நம்மைப்

பார்க்காது என்று அவனுக்குத் தெரியும். அதனால் அவன் தீயனச் செய்யக் கூசமாட்டான். உருத்தொழுகையில் இப்படிப் பல தீமைகள் வருகின்றன. பார் இப்போது! கல்லுருக்களைக் கருதாமல் ஒருவன் எப்போதும் எங்கும் நிறைந்த ஸர்வாந்தர்யாமி, நியாயகாரி பரமேச்வரனே எல்லாம் என்று அறிகிறான், மதிக்கிறான்; அவன் எப்போதும் எல்லாம் அறிந்த பரமேச்வரன் நாம் செய்யும் நல்லது பொல்லதெல்லாம் பார்க்கிறார் என்றுணர்ந்து, ஒரு கணமும் பரமாத்மாவினின்று நாம் பிரிந்ததில்லை என்றறிந்து, செயலில் மட்டுமன்றி சிந்தையிலும் தீங் கிழைக்கமாட்டான். ஏனெனில் மனோ வாக்கு காயத்தால் நாம் கெட்டது செய்தால், அந்தர்யாமி நியாயமாக நம்மைத் தண்டிக்காது விடமாட்டார் என்பதை அவன் அறிவான். நாம ஸ்மரணத்தால் மட்டும் பலனில்லை; சீனி சீனி என்றால் வாய் இனிக்காது; வேம்பு வேம்பு என்றால் கசக்காது; நாக்கினால் சுவைத்தாலே இனிப்பும் கசப்பும் தெரியும்.

வினா: என்ன நாம ஜபம் பிசகா? புராணங்களெல்லாம் நாம ஸ்மரணையின் மஹாத்மியத்தைச் சொல்லுகின்றனவே?

விடை: நீ நாம ஜபம் செய்கிற முறை பிசகு, பொய்?

வினா: ஏன் எங்கள் முறை பிசகு?

விடை: அது வேத விருத்தம்.

வினா: சரி, வேதோக்தமான நாமஸ்மரணை முறையை எங்களுக்குச் சொல்லுங்கள்.

விடை: நாமஸ்மரணம் இவ்வாறு செய்யவேண்டும்: "நியாயகாரி" என்ற ஒரு திவ்ய நாமத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அதன் பொருளைக் கருதுக! கடவுள் பக்ஷபாத மற்றவர்; எல்லோருக்கும் பரமாத்மா நியாயம் தருகிறார். அதை யுணர்ந்து நீயும் எப்போதும் எல்லா விவகாரங்களிலும் நியாயமாயிருக்கவேண்டும்; அநியாயம் செய்யவே கூடாது. இப்படி ஒரு நாமஸ்மரணையால் மனிதனுக்குப் பேரின்ப முண்டாகும்.

வினா: பரமேச்வரன் நிராகாரன் என்பதை நாம் அறிவோம். ஆனால் அவனே சிவன், விஷ்ணு, கணேசன், ஸூரியன், தேவி முதலிய வடிவுடனும், ராமகிருஷ்ணாதி அவதாரமாகவும்

விளங்குகிருன். அதனுலேதான் மூர்த்தி செய்து உபாசிக்கிரேம். இதுவும் பொய்யா என்ன?

விடை: ஆம், ஆம், பொய்! 'அஜ ஏகபாத்' "अज एकपात्" (ருக் 7–35–13), 'அகாயம்' "अकायम्" (யஜுர் 40–8) என்று வேதம் கடவுளைச் சிறப்பிக்கிறது; அதனுல் கடவுளுக்குப் பிறப்பிறப்பில்லை; உடலில்லை. பரமேச்வரனுக்கு அவதாரமே கிடையாது; அதை ஊகிக்கவும் முடியாது. ஏனெனில் அவன் ஆகாசம் போல் எங்கும் நிறைந்தவன்; அனந்தன், சுகதுக்கமில்லாதவன்; நிர்குணன்; அவன் ஒரு சிறு துளி வீரியமாய் கருவிற் புகுந்து உடலெடுப்பான் என்பது எப்படிப் பொருந்தும்? போக்கு வரவு ஓரிடத்திலிருப்பவனுக்கே. பரமன் அசலன், காணக்கூடாதவன், புலனைக் கடந்தவன், ஒவ்வொரு பரமாணுவிலும் நிறைந்தவன், அவனில்லாத ஓரணுக்கூட இல்லை. அவன் அவதரிப்பான் என்பது மலடி மகனுக்குக் கலியாணம் பண்ணிப் பேரனெடுத்த கதைதான்.

வினு: எங்கும் நிறைந்த பரமேசன் மூர்த்தியிலும் இருக்கிருனே; அப்படியாஞல் எந்தப் பொருளிலும் அவனை நினைத்துப் பூஜை செய்யக்கூடாதா? சாணக்கியர் சொல்லுவதைப் பாருங்கள்:

न काष्ठे विद्यते देवो न पाषाणे न मृण्मये ।
भावे हि विद्यते देवस्तस्माद्भावो हि कारणम् ॥

பரமேசன் கட்டை, கல், மண்ணில்செய்த உருவில் இல்லை; அவன் பாவனையில் நினைப்பில் இருக்கிருன். பாவனை எங்கே எப்படியோ, அங்கே அப்படியே பரமன் விளங்குகிருன்.

விடை: பரமேச்வரன் ஸர்வ வியாபியாயிருந்தும், ஏதோ ஒரு பொருளில் அவனைப் பாவித்து, மற்ற பொருள்களில் பாவிக்காமலிருப்பது, உலக சக்கரவர்த்தி தன் பேரரசின் மீது ஆதிக்கமிருந்தும், அவனை ஒரு சிறு குடிலின் தலைவனுக கருதுவது போலாகும். இது பெரிய அவமான மன்ருே? அதே மாதிரி நீயும் பரமனை அவமானம் செய்கிருய். எங்கும் நிறைந்த கடவுளுக்கு வன மலர் கொய்து அணிவதேன்? சந்தனம் இடுவானேன்? தூபம் காட்டுவதேன்? மணி, சேகண்டி, தாள மேளங்கள், கொம்பு, தம்பட்டங்கள்

முழங்குவானேன்? எங்கும் வியாபித்தவன் உன் கையிலும் வியாபித்திருக்கிறனே, நீ கை கூப்பி நிற்பானேன்? அவன் உன் சிரத்திலும் இருக்கிறனே சிரம் வணங்குவானேன்? அன்ன ஜலாதிகளில் இருக்கிறன், நிவேதனம் செய்வானேன்? ஜலத்திலும் உள்ளான் அபிஷேகம் செய்வானேன்? எல்லாப் பொருள்களிலும் அவன் வியாபித்திருக்கிறன், நீ பூசிப்பது வியாபகனையா, வியாப்பியத்தையா? வியாபகனுக்காறல் கல்லு கட்டை மேல் சந்தனம் புஷ்பம் இடுவானேன்? வியாப்பியத்திற்காறல் பரமேச்வரனுக்குப் பூஜை செய்வதாக ஏன் புளுகுகிறய்? நாங்கள் கல்லின் பூசாரி என்று ஏன் உண்மை உரைக்கலாகாது?

சொல் இப்போது உன் பாவனை மெய்யா பொய்யா? மெய்யாறல் உன் 'பாவனையில் சிக்கிப் பரமேசன் பந்தப்படுவார். அப்படியாறல் நீ கூழாங்கற்களில் வைரம், மரகதம், கடல் நுரையில் முத்து, நீரில் பால் தயிர் வெண்ணெய், புழுதியில் மைதா சர்க்கரை முதலியவற்றைப் பாவனையால் உண்டாக்கு பார்ப்போம்! உன் பாவனையில் நீ துன்பத்தை வேண்டவில்லையே, அஃதேன் வருகிறது? எப்போதும் சுக பாவனையே செய்கிறய்; சுகம் ஏன் வரவில்லை? குருடன் நேத்ர பாவனை செய்து பார்வை பெறுததேன்? மரணபாவனை செய்வதில்லையே; ஏன் சாகிறய்? ஆதலால் உன் பாவனை உண்மையில்லை. எது எப்படியோ அதை அப்படியே நினைப்பதே பாவனை.—நீரில் நீர், தீயில் தீயை நினைப்பதுதான் பாவனை. நீரில் தீ, தீயில் நீர் நினைப்பது அபாவனை. உள்ளதை உள்ளபடி யறிதலே ஞானம்; மற்றது அஞ்ஞானம். ஆதலால் நீ அபாவனையைப் பாவனை, பாவனையை அபாவனை என்கிறய்.

**வின:** ஐயா, வேத மந்திரத்திறல் ஆவாஹனம் செய்யாவிட்டால் தேவதை வராது; ஆவாஹனம் செய்ததும் சட்டென்று வந்து, விஸர்ஜனம் செய்ததும் போகும்.

**விடை:** மந்திரோச்சாரணத்தால் தேவதை வருகிறது என்றல் மூர்த்தியில் சேதனமாவதில்லையே; அதற்கேற்ற உணர்வில்லையே. தேவதை விலகும் போது மூர்த்தியும் ஏன் அதனுடன் செல்லவில்லை? தேவதை எங்கிருந்து வருகிறது? எங்கே செல்கிறது? கேளடா குருடா! பூர்ண பரமாத்மா வருவதும் இல்லை போவதும் இல்லை. மந்திர பலத்தால்

பரமாத்மாவை வரவழைக்க முடியுமானால், அதே மந்திரத்தால் செத்துப் போன உன் மகன் உடலில் உயிரை வரவழைக்க முடியாததேன்? பகைவர் உடலிலிருந்து ஜீவனை ஏன் போக்க முடியவில்லை மந்திரத்தால்? கேளப்பா! கபடமற்றவனே! இதெல்லாம் போப்ஜி வேலை; தன் காரியத்தைச் சாதிக்கவே போப்ஜீ உன்னை ஏமாற்றுகிருன். கல்லுருத் தொழுகைக்கும், அதில் பரமாத்மனைப் போக்கு வரவு செய்வதற்கும் ஆதாரமாக ஓர் எழுத்துக்கூடக் கிடையாது வேதத்தில்.

**வினு:** प्राणा इहागच्छन्तु सुखं चिरं तिष्ठन्तु स्वाहा ।
आत्मेहागच्छतु सुखं चिरं तिष्ठतु स्वाहा ।
इन्द्रियाणीहागच्छन्तु सुखं चिरं तिष्ठन्तु स्वाहा ॥

—(ப்ரதிஷ்டாமயூக கிரந்தம்—தாந்திரம்)

(இந்தச் சிலையில் பிராணம் புகுந்து உறைக நீடு! அதில் புலன்கள் புகுந்துறைக! பரமாத்மான் நீடுறைக!) என்ற வேத மந்திரம் உள்ளதே! இல்லையென்று பேசுவதேன்?

**விடை:** மூளையைக் கொஞ்சம் உபயோகித்துப் பார் தம்பீ! இவையெல்லாம் வேத விருத்தம்; வாம மார்க்கிகளின் அண்டப் புளுகு; போப்புகள் திரித்துவிட்ட தாந்திரிகச் சரக்கு. இவை வேத மொழிகளே யில்லை.

**வினு:** என்ன தாந்திரம் புளுகா?

**விடை:** ஆம், முழுப் புளுகு! ஆவாஹனம், பிராணப் பிரதிஷ்டை, பாஷாணமூர்த்தி விஷயமாக ஒரு மந்திரங்கூட வேதத்தில் இல்லை; "स्नानं समर्पयामि" (ஸ்நானம் ஸமர்ப்பயாமி) போன்ற வசனமும் இல்லை. 'ஆலயம் நிருவி, கல்லுருவை, மந்திரத்தால் நாட்டி, சந்தன அக்ஷதைகளால் பூஜி'— ("पाषाणादि मूर्त्तिं रचयित्वा मन्दिरेषु संस्थाप्य गन्धादिभिरर्चयेत्") என்ற துணுக்குக்கூட வேதத்தில் இல்லை.

**வினு:** வேதம் உருவணக்கத்தை விதிக்கவில்லை என்ருலும் கண்டிக்கவில்லையே. அப்படிக் கண்டித்திருந்தால் பூர்வகாலம் உருவணக்கம் இருந்திருக்கவேண்டும் "प्राप्तौ सत्यां निषेधः" —இருந்ததற்கே கண்டனம் உண்டு.

விடை: விதிக்கவில்லை, பரமேச்வரன் இடத்தில் வேறெதையும் வைத்து வணங்கக்கூடாது; அது நிஷேதமே. அதை வேதம் பலமாகக் கண்டிக்கிறது. கேளுங்கள்:—

अन्धन्तमः प्रविशन्ति येऽसम्भूतिमुपासते ।
ततो भूय इव ते तमो य उ सम्भूत्याᳫं रताः ॥ 1 ॥ (யஜுர் 40-9)

न तस्य प्रतिमा अस्ति ॥ 2 ॥ (யஜுர் 32-3)

यद्वाचा नाभ्युदितं येन वागभ्युद्यते ।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते (1)
यन्मनसा न मनुते येनाहुर्मनो मतम् ।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥ (2)
यच्चक्षुषा न पश्यति येन चक्षूंषि पश्यन्ति ।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥ (3)
यच्छ्रोत्रेण न शृणोति येन श्रोत्रमिदᳫं श्रुतम् ।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥ (4)
यत्प्राणे न प्राणिति येन प्राणः प्रणीयते ।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥ (5)

(கேநோபநிஷத் 1-4, 5, 6, 7, 8)

பிரம்மம் பிறப்பற்றது; அஸம்பூதம், வரவற்றது; தோற்ற மற்றது, அனாதி. அதன் இடத்தில் பிரகிருதியை உபாசிப்பவர் மடமையிருளில் துன்பக் கடலில் மூழ்குவர். காரணத்தால் உண்டான காரிய ரூபமான மண்ணாதி பூதம், கல், மரங்களால் ஆன உருக்கள், மனிதவுடல்கள்—இவற்றைப் பரம்பொருளின் இடத்தில் வைத்து வணங்குவோர், அந்த இருளைவிட மகா மூட மடைய துன்ப நரக இருளில் விழுந்து, நீண்டகாலம் பெருந்துயர் அடைவார்கள். (1)

உலகில் நிறைந்த அருவான பரமாத்மனுக்கு உரு, அளவு, வடிவு, மூர்த்தி, இணையாக எதுவும் இல்லை. (2)

இவை கேனோபநிஷத் வாக்குகள்:—

இது ஜலம், பருகு—என்பது போல், சொல்லால் பிரம் மத்தைச் சுட்டிக் காட்ட முடியாது; அது சொல்லுக்கடங்காதது;

ஆனால் அதனின்றே சொல் உதிக்கிறது; அது உள்ளே யிருப்பதனாலே தான் பேச முடிகிறது. அதுவே பிரம்மம்; அதையே உபாசி; வேறெதுவும் உபாசிக்கத் தக்கதன்று. (1)

அது மனதால் நினைக் கொணாதது, மனாதீதம்: அது மனதை அறியும்; அதுவே பிரம்மம் என்றறி; அதையே உபாசி, வேறு ஜீவனை, அந்தக்கரண வஸ்துவை பிரம்மத்தின் நிலையில் வைத்து வணங்காதே (2)

அதைக் கண்ணாற் காண முடியாது; அதனால் கண் காண்கிறது. அதுவே பிரம்மம் என்றறி; அதையே உபாசி; வேறு சூரியன், மின்னல், அக்னி முதலிய ஜடபதார்த்தங்களை உபாசிக்காதே (3)

காதினால் கேட்க முடியாதது; அதனாலேதான் காது கேட்கிறது. அதுவே பிரம்மம் என்றறி. அதையே உபாசி; வேறு சத்தங்களை அதன் இடத்தில் வைத்து உபாசிக்காதே. (4)

பிராணனால் அது நடக்காது; அதனாலேதான் பிராணன் நடக்கிறது; அதுவே பிரம்மம் என்றறி. அதையே உபாசனை செய்; வேறு வாயு முதலியவற்றை அதற்குச் சமானமாக வைத்து வணங்காதே. (5)

இவ்வாறு வேத மந்திரங்கள் உருத்தொழுகையை மறுக்கின்றன. இந்த நிஷேதம் 'பிராப்தம்', 'அப்ராப்தம்' என இருவகை யாகும். ஓரிடம் உட்கார்ந்தவனை அங்கிருந்து எழுந்து செல்லச் செய்வது பிராப்தம். "மகனே திருடாதே; கிணற்றில் விழாதே, தீயரைச் சேராதே, அறிவிலி யாகாதே" என்று தடுப்பது **அப்ராப்தமாகும்.** கடவுள் மனித அறிவிற்கு எட்டாத பொருள். தடுப்பது அப்ராப்த நிஷேத மாகும். மனிதனுக்கு எட்டிய பொருளால் அதை உபாசிப்பது கூடாது. ஆதலால் கல்லுரு முதலிய உருவணக்கம் கண்டிப்பாகக் கூடாது.

**வினா :** மூர்த்தி பூஜையில் புண்ணிய மில்லாவிட்டலும் பாப மில்லையே ?

**விடை :** கர்மம் இருவிதம்—விஹிதம் நிஷித்தம். **விஹிதம்** அறவினை உண்மை பேசுதல் போன்று வேதத்தில் விதிக்கப் பட்ட கடமையாகும். பொய் பேசாதே என்று வேதம் மறுப்பது நிஷித்த மாகும். அறவினை செய்தல் அறம், அதைச் செய்யாதிருத்தல் அதர்மம். பாபம், தீவினை புரிதல்

அதர்மம்; *மறுத்தல் தருமம். வேதம் மறுக்கும் உரு வணக்கம் செய்தல் பாபமேயாகும்.

**வினு:** வேதம் அனுதி; அந்தக் காலம் மூர்த்தி பூஜைக்கு வேலை யில்லாதிருக்கலாம். ஏனெனில் முற்காலம் தேவதை பிரத்யக்ஷமாயிருந்தது. தந்திர புராண காலம் முதல் உரு வணக்கம் நடந்தது. இப்போது மனிதரின் அறிவும் திறனும் குறைவு; பரமனைத் தியானிக்க முடியாது. மூர்த்தித் தியானம் எளிது; அஞ்ஞானிகளுக்கு மூர்த்தி பூஜை வேண்டியிருந்தது. படிப் படியாக ஏறினுல் மாடிக்குப் போகலாம். முதல் படியை விட்டு மேலேற வேண்டுமானுல் முடியாது; ஆதலால் மூர்த்தி பூஜை முதற்படி. அதை வணங்கி வணங்கி, உள்ளம் தூயதாய் அறிவு மலர்ந்த பிறகு பரமாத்ம தியானம் நிலைக்கும். ஒரு வேடன் முதலில் பெருமனை உருவில் குறி வைத்து குண்டோ, நுண்ணிய உருண்டையோ, அம்போ விட்டுப் பிறகு குறியைச் சுடுகிருன். அதே மாதிரி உருவணக்கம் செய்து செய்து, சூக்ஷ்மப் பிரம்மத்தையும் அடைய முடியும். சிறுமிகள் சிறு வயதில் பொம்மைக் குடில் கட்டி விளையாடுகிருர்கள். மணமானதும் பதியுடன் குடும்பம் நடத்துகிருர்கள். இவ்வாறு பார்த்தால் மூர்த்தி பூஜை தீமை யில்லை.

**விடை:** வேதம் விதித்ததே தர்மம்; வேத விருத்தமான செயல் அதர்மம். உன் உரையிலிருந்தே மூர்த்தி பூஜை அதர்மம் என்ருகிறது. வேத விருத்தமான நூல்களை பிரமாணமாகக் கொள்ளல் நாஸ்திகமாகும். கேள் மனுவாக்கை:

(மனு 2-11)

नास्तिको वेदनिन्दकः ॥ 1 ॥

या वेदबाह्याः स्मृतयो याश्च काश्च कुदृष्टयः ।
सर्वास्ता निष्फलाः प्रेत्य तमोनिष्ठा हि ताः स्मृताः ॥ 2 ॥

उत्पद्यन्ते च्यवन्ते च यान्यतोऽन्यानि कानिचित् ।
तान्यर्वाक्कालिकतया निष्फलान्यनृतानि च ॥ 3 ॥

(மனு 12-95, 96)

*அதர்மம் செய்ய மறுத்தல்

வேதத்தை நிந்திக்கிறவன், மறுக்கிறவன், விடுகிறவன், வேதத்திற்கு விருத்தமாக நடக்கிறவன் நாஸ்திகன். (1)

வேதத்திற்கு எதிராகக் கொச்சை மாந்தர் எழுதிய நூல்கள் உலகைத் துன்பக் கடலில் ஆழ்த்தும்; அவை பயனற்றவை, இருள் வடிவானவை, இகபரத்தில் துன்பமே தருபவையாகும் (2)

வேத விருத்தமாக எழுந்த புதிய நூல்களெல்லாம் விரைவில் கெடும். அவற்றை மதிப்பது பயனற்ற பொய்ச் செயலாகும் (3)

இவ்வாறு பிரம்மா முதல் ஜைமினி மஹரிஷி வரையில் வேத விருத்தமானதை ஏற்காது தள்ளி, வேதானுகூலமான ஒழுக்கமே தருமம் என்றனர். ஏனெனில் வேதம் சத்யார்த்தப் பிரகாச மாகும். இதற்கு எதிரான தாந்திர புராண நூல் களெல்லாம் பொய் மூட்டைகளாகும்: அவை கூறும் மூர்த்தி பூஜையும் அதர்ம ரூபமாகும். ஜட பூஜையினுல் மனிதர் அறிவு வளர்வதில்லை. அதனுல் இருக்கும் சிறு அறிவும் மழுங்கிப் போகும். ஞானிகளின் சங்கம், சேவைகளால் ஞானம் வளரும்; கல்லுருக்களால் அன்று. கல்லுருத் தொழுகையால் பரமேச் வரனை தியானிக்க முடியுமா என்ன? முடியவே முடியாது. மூர்த்தி பூஜை படியன்று; அது படுகுழி; அதில் விழுந்தவர் சுக்கு நூருவார்; பிறகு அங்கேயே சாகவேண்டியது தான். சாதாரண தார்மிக வித்வான்களிலிருந்து பரம வித்வான் யோகிகள் சங்கத்தால் நல்ல கல்வியும் அறிவும், உண்மை யுரையும் ஒழுக்கமும் பழகலே பரமேச்வரனை அடையும் படிகளா கும். ஏணியால் மாடிக்கு ஏறலாம்; ஆனுல் மூர்த்தி பூஜையால் யாரும் ஞானியானதில்லை; மூர்த்தி பூஜையால் அஞ்ஞானி களாகி மனிதப் பிறவியை வீணுக்கி இறந்தவர் மிகப் பலர். இன்றும் இனியும் உள்ள உருவணங்கிகளும் அறம் பொருளின்ப வீடிழந்து மனிதப் பிறவியை வீணுக்கினவராவார். மூர்த்தி பூஜை பிரம்மத்தையடைய ஸ்தூல லக்ஷியம் அன்று. தார்மிக வித்வானும் சிருஷ்டி வித்தையுமே ஸ்தூல லக்ஷியம். இது வளர்ந்து, அறிவு மிகுந்து மிகுந்து பிரம்மத்தை அடைய முடியும். மூர்த்தி பூஜை பொம்மை விளையாட்டும் அன்று. அக்ஷராப்யாசமும், நல்லொழுக்கமும் கல்வியும் தொடங்குதலே பொம்மை விளையாட்டுப் போல பிரம்மத்தை அடையும் சாதன மாகும். கேளுங்கள்: நல்ல கல்வி கேள்வி ஒழுக்கமடைந்தவர் நாளடைவில் உண்மைத் தலைவனை கடவுளையடைவர்.

**வினு:** உருவில் மனம் நிலைக்கும்; அருவில் நிலைப்பதரிது; ஆதலால் உருவணக்கம் இருக்க வேண்டியதே.

**விடை: முதலாவது:** உருவணக்கத்தால் மனம் நிலைக்காது; ஏனெனில் மனம் உருவை ஒரேடியாகப் பாவித்து, பிறகு ஒவ்வோர் அவயவமாகச் சுற்றி இன்னென்றின் மேலே பாயும்: மனம் எவ்வளவு சுழன்றாலும் நிராகாரப் பிரம்மம் தியானத்தில் எல்லை காணுது. அங்கே அவயவமில்லை; அதனுல் மனம் சலிப்பதுமில்லை; மனம் பரமாத்மனின் குணகர்ம ஸ்வபாவங்களையே நினைந்து நினைந்து ஆனந்த மயத்தில் நிலைத்து விடுகிறது. உருவில் மனம் நிலைப்பதானுல் உலகோர் மனம் முழுவதும் நிலைத்திருக்க வேண்டுமே! ஏனெனில் ஆண், பெண், பிள்ளை, குட்டி, நண்பர், செல்வம் ஆகிய உருக்களில் மனம் பிடிபட்டு அலைகிறது. யாருக்கும் மனம் நிலைப்பதில்லை: நிராகாரத்திலே தான் மனம் நிலைக்கும்; ஏனெனில் அவயவமில்லாததால் அகண்டத் தியானத்தில் நிலைத்து விடுகிறது. ஆதலால் உருவணக்கம் அறமாகாது.

**இரண்டாவது:** கோடிக்கணக்கான பணம் கொட்டிக் கோவில் கட்டுகிருர்கள். அதனுல் மக்கள் வறுமையும் சோம்பலும் அடைந்து வீணுகிருர்கள்.

**மூன்றுவது:** கோயிலில் ஆண் பெண் கூடுவதால் காமம் விபசாரம் வம்புச்சண்டை தொத்து நோய்கள் உண்டாகின்றன.

**நான்காவது:** கோவில் உருவையே தர்ம அர்த்த காம மோக்ஷ சாதனமாகக் கருதிப் புருஷார்த்த மடையாமல், மற்ற நல்ல சாதனங்களையும் விட்டு மாந்தர் வீணுகின்றனர்.

**ஐந்தாவது:** மக்கள் பல பல பெயர் வடிவுகளில் உருவணக்கம் செய்கிருர்கள். அவை ஒன்றுக்கொன்று விரோதமாயிருக்கின்றன. பூசாரிகளிடையே ஒற்றுமை யில்லை. பகை மதங்கள் உண்டாகின்றன; சண்டை வலுக்கிறது. தேசம் நாசமாகிறது.

**ஆருவது:** விக்கிரகங்களை நம்பி அவை நாட்டைக் காக்கும்; தமக்கு வெற்றியும் பகைவருக்குத் தோல்வியும் தரும் என்று கருதிச் சும்மா இருக்கின்றனர். பலன் என்ன? இவர்

களுக்குத் தோல்வி; பகைவர் நாட்டைப் பற்றுகின்றனர். சுதேசிகள் அரசும் உரிமையும் இழக்கின்றனர். தனமும் சுகமும் பகைவர் கையில் சிக்குகின்றன. சுதேசிகள் ரொட்டிக்காரன் குட்டிக் குதிரைபோலவும், குயவன் கழுதை போலவும் பகைவர் கையில் சிக்கிப் பலவிதத் துயர் அடைகின்றனர்.

**ஏழாவது :** தங்கள் ஆஸனத்தில் தங்களுக்குப் பதிலாக இந்தக் கல்லை வைக்கிறேன் என்றால் ஒருவருக்குக் கோபம் வந்து அடி வசவில் இறங்குவார்! அதேமாதிரி பரமேச்வரனை உபாசனை செய்யுமிடத்தில் கல்லுக்கு அவன் பெயரிட்டு வைத்து, உள்ளத்திலும் அதையே நாட்டினால் அந்த மதி கேடனை, துர்புத்தி பிடித்தவனைப் பரமேசன் ஸத்யநாசம் செய்யமாட்டானா?

**எட்டாவது :** திவ்ய க்ஷேத்ர யாத்திரையால் முக்தி பெற நினைத்துச் சிலர் கோயிலுக்குக் கோயில், தலத்திற்குத் தலம், தேசத்திற்குத் தேசம் அலைவர்; துன்புறுவர். குடும்பக் காரியமும் அலுவலும் கெட்டுப் பரமார்த்தமும் கெட்டு, திருடர் வஞ்சர் கையிற் சிக்கி, உள்ளதும் இழப்பர்.

**ஒன்பதாவது :** உரு வணக்கம் செய்வோர் துஷ்டப் பூசாரிகளுக்குப் பணம் தருகிறார்கள். அவர்கள் அந்தப் பணத்தை வேசை, பரஸ்திரீகமனம், மதுபானம், மாமிசாகாரம், சண்டை சச்சரவு வம்பு தும்புகளில் செலவிடுகிறார்கள். அதனால் காணிக்கை தந்தவன் பலனை யிழந்து சுகமிழந்து துன்பப்படுகிறான்.

**பத்தாவது :** மாதா பிதா முதலிய பெரியோருக்கு மரியாதை காட்டாமல் கல்லுக்கு மரியாதை காட்டி அவர்களை அவமானம் செய்து நன்றி கெடுகின்றனர்.

**பதினொருவது :** அந்த உருவை யாராவது உடைத்தால் அல்லது திருடிச் சென்றால் ஹாஹா என்று அடித்தலறுகின்றனர்.

**பன்னிரண்டாவது :** பூசாரி இன்னொருவளுடன், பூசாரிணி இன்னொருவனுடன் கூடிக் கெட்டு, சதிபதி இன்பத்திற்கே உலை வைக்கிறார்கள்.

**பதிமூன்றாவது :** சேவகன் எசமானைப் பணிவதில்லை; ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கேடு கெட்டலைகின்றனர்.

பதினான்காவது : ஜடத்தை உபாசிக்கிறவன் ஆத்மாவும் ஜடபுத்தியடைகிறது ; ஏனெனில் தியானப் பொருளின் ஜடத்வ தர்மம் அந்தக் கரணத்தின் மூலம் ஆத்மாவைச் சார்கிறது.

பதினைந்தாவது : காற்று நீரைத் தீமணம் தவிர்த்து நன்மணமாக்கவே பரமேசன் மணமலர்களை ஆக்கினான். அவற்றைப் பூசாரி பறித்துப் பறித்து நாசமாக்காவிட்டால், அவை இயற்கையாக வாடுமட்டும், நீண்ட காலம், காற்றையும் நறுமணம் வீசித் தூய்மையாக்கிப் புன்னகை புரிந்துக்கொண்டிருக்கும். பூசாரியால் இம்மலர்கள் அகாலத்தில் உயிரிழந்து மண்ணாகி அழுகி.வீச்சமெடுத்து துர்க்கந்தம் வீசுகின்றன. நல்ல காற்றும் அதனால் கெடுகிறது. கல்லுக்குப் போடவா கடவுள் மணமலர்களைப் படைத்தார் ?

பதினாறுவது : கல்லுக் கணிந்த பூ, சந்தனம் அக்ஷதை எல்லாம் நீரும் சகதியும் சேர்ந்து, அபிஷேகத் தொட்டி அல்லது குண்டத்திற்குள் குவிந்து அழுகித் தீய மலநாற்றம் வீசுகிறது. ஆயிரக் கணக்கான உயிர்கள் அதில் விழுந்து அழுகிப் பிண நாற்றமடிக்கிறது தொட்டி.

இவ்வாறு உரு வணக்கத்திற் பல கெடுதல்கள் உண்டு. ஆதலால் நல்லோர் கல் முதலிய உரு வணக்கத்தை அறவே ஒழிக்க வேண்டும். அவ்வாறு கல்லுரு வணங்கினோர், வணங்குகிறவர், வணங்குவோர் மேற்சொன்ன தோஷங்களினின்று விடுபட்டதில்லை, விடுபடுகிறதில்லை, இனியும் விடுபடமாட்டார்கள் !

வினா : எந்த வகையிலும் மூர்த்திபூஜை கூடாதா ? ஆரிய நாட்டில் பரம்பரையாகப் பஞ்சதேவ பூஜை நடந்து வருகிறதே ; சிவன், விஷ்ணு, அம்பிகை, கணேசன், சூரியன் ஆகியவற்றிற்கு உருச் செய்து பஞ்சாயதன பூஜை நடத்துவது சரிதானே ?

விடை : எந்தவகையிலும் மூர்த்தி பூஜை கூடாது. ஆனால் 'மூர்த்திமான்களான' (கீழே குறித்திருக்கும்) ஐவரை வழிபடலாம் ; அதாவது போற்றி உபசாரம் செய்யலாம். பஞ்சதேவ பூஜை, பஞ்சாயதன பூஜை என்பது மிக நல்ல வார்த்தைகளே. ஆனால் அறிவிலிகள் அதன் மேன்மையான பொருளைவிட்டுக் கீழான பொருளைக் கொண்டனர். இன்று ஜனங்கள் சிவாதி உருவை உண்டாக்கி, உருத் தொழுகை செய்வதைக் கண்டித்துவிட்டோம். வேதோக்தமும் வேதா

னுகூலமான உண்மை பஞ்சாயதன பஞ்சதேவ பூஜையை இப்போது சொல்லுகிறோம்; கேள்:

मा नो॑ वधीः पि॒तरं॒ मोत मा॒तर॑म् ॥ 1 ॥ (யஜுர் 16–15)

आ॒चा॒र्या उपनयमानो॑ ब्रह्म॒चर्येण ब्रह्मचा॒रिणमि॒च्छते ॥ 2 ॥ (அதர்வன 11–5–17)

अति॑थि॒र्गृ॑हा॒ना॒गच्छेत् ॥ 3 ॥ (அதர்வன 15–13–6)

अर्च॑त॒ प्रार्च॑त॒ प्रि॑यमेधा॒सो अर्च॑त ॥ 4 ॥ (ருக் 8–69–8)

त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि त्वामेव प्रत्यक्षं ब्रह्म वदिष्यामि ॥ 5 ॥ (தைத்தீரிய 1–1)

कतम एको देव इति स ब्रह्म त्यदित्याचक्षते ॥ 6 ॥ (சதபத 14–5–7–10)

मातृदेवो भव पितृदेवो भव आचार्यदेवो भव अतिथिदेवो भव ॥ 7 ॥ (தைத்.–சிக்ஷா–11)

पितृभिर्भ्रातृभिश्चैताः पतिभिर्देवरैस्तथा ।
पूज्या भूषयितव्याश्च बहुकल्याणमीप्सुभिः ॥ 8 ॥ (மனு 3-55)

पूज्यो देववत्पतिः ॥ 9 ॥ (மனு 5-154)

முதல் பூஜா மூர்த்தி மாதாவே; அவளை மனம், உடல், பொருளால் சேவை செய்து, மாதா மகிழும்படி மக்கள் நடக்க வேண்டும். அவளை ஒருபோதும் வையக்கூடாது, வருத்தக் கூடாது, அடிக்கக்கூடாது. இரண்டாவது மூர்த்தி பிதா. அவரையும் தாய்போலப் பணிந்து சேவை செய்யவேண்டும் (1) மூன்றாவது கல்வி தரும் ஆசாரிய தேவர். அவருக்கு உடல் பொருள் மனத்தால் (பிரமசரியம் பூண்டு) தூய சேவை செய்ய வேண்டும். (2) நாலாவது அதிதி—அதாவது வித்வான், தர்மாத்மா, கபடமற்றவன், உலகைச் சுற்றி ஸத்யோபதேசத்தால் எல்லாரும் சுகமாயிருக்கப் பணி செய்வோன்—அத்தகைய அதிதி யின் சேவை செய்யவேண்டும். (3) ஐந்தாவது, கணவனைப் பத்தினி, பத்தினியைக் கணவன் பூஜிக்கத் தகும். (8) மேற் சொன்ன பஞ்சமூர்த்திகளே வணங்கத் தக்க தேவர். அவர்களே மக்களைப் பெற்று, வளர்த்து, நல்ல கல்வி தந்து, ஸத்யோப தேசம் செய்து ஆளாக்குகிறார்கள். இவர்களே பரமனை அடை

விக்கும் படிகள். இவர்களுக்குச் சேவை செய்யாமல், வெறும் கல்லுருவைத் தொழும் பாவிகள் வேத விரோதிகளாவார்கள்.

வினு: மாதா பிதாவுக்கும் சேவை செய்வோம்; மூர்த்தி பூஜையும் செய்வோம். அதனுல் தோஷமில்லையே?

விடை: கல்லுரு வணக்கத்தைக் கட்டுடன் விட்டு மாதா பிதாக்களைப் பூஜித்தலே இன்பமாகும். பிரத்யக்ஷமாக நமக்கு சுகமருளும் மாதா பிதாக்களை விட்டுக் கல்லில் முட்டிக் கொள்ளல் மடமையாகும், அனர்த்தமாகும். கல் சாப்பிடாது; அதன் பெயரால் நாமே சாப்பிடலாம். பெற்ருேர் முன் உணவை நிவேதித்தால் சாப்பிட்டுவிடுவர்; தன் வயிற்றை நிரப்பமுடியாது என்றே பூஜாரி இந்தவேலை செய்தான். கல்லுருச் செய்து, அதன் முன் நிவேதனங்களை வைத்து மணியடித்து, ஜல்ஜல் ஜாலர், பூம்பூம் சங்கு, டக டக டங்கா, டங்டங் சேகண்டி எல்லாம் கோலாகாலமாக முழக்கி, கல்லுருக்குக் கட்டை விரலைக் காட்டித் தான் விழுங்குகிருன். ஒருவன் முன் உணவை வைத்து (கட்டை விரலைக் காட்டி)

("त्वमङ्गुष्ठं गृहाण भोजनं पदार्थं वाऽहं ग्रहीष्यामि")

'உனக்குக் கட்டைவிரல் எனக்கு சாப்பாடு' என்று எல்லாம் விழுங்கினவன் கதைதான் பூஜாரி லீலை. பூஜா+அரி = பூஜையாகிய ஸத்கர்மத்திற்குச் சத்துரு (பூஜாரி). இவர்கள் உருக்களைத் தக தகக்க, ஜிலுஜிலுக்க அலங்காரம் செய்து மூடரை மயக்குகின்றனர். வேசையர் போலும் மாப்பிள்ளை போலும் அலங்கரித்து பாமரரை ஏய்த்துப் பணம் பறித்து சுகபோகம் அனுபவிக்கின்றனர். தார்மிக ராஜா இருந்தால், இந்தக் கல்லடியாருக்குக் கல்லுடைத்து, செங்கல் அடுக்கிச் சிற்ருள் வேலை செய்து பிழைக்கச் செய்திருப்பான்.

வினு: ஒரு பெண்ணின் சிலையைக் கண்டால் காம வுணர்ச்சி பிறக்கிறது; அதேமாதிரி சாந்த வைராக்கிய மூர்த்தியைக் கண்டால் சாந்த வைராக்கியம் ஏன் உண்டாகக்கூடாது?

விடை: உண்டாக முடியாது. மூர்த்தியின் ஜடத்தன்மை ஆத்மாவிற் புகுந்தால், ஆராய்திறனே சிதைகிறது. விவேகமின்றி வைராக்கியம், வைராக்கியமின்றி விஞ்ஞானம், விஞ்ஞானமின்றி சாந்தி வராது. நல்லோர் சங்கம், உபதேசம்,

அவர்கள் இதிஹாஸம், நூல்களைப் படித்தல் இவற்ருலேயே அறிவு வருகிறது. ஒருவன் குணத்தை அறியாமல் அவன் உருவை மட்டும் பார்த்துக்கொண்டிருப்பதால் அன்பு வராது. குணஞானத்திலேதான் அன்பு வரும். உருத் தொழுகை போன்ற தீய பழக்கத்திருலேதான் ஆரிய நாட்டில் புருஷார்த்தமில்லாத சோம்பேறிகள், போலிப் பூசாரிகள், கோடிக்கணக்கான வீணர் கும்பல் வலுத்தது. மூடரான அவர்களால் உலகில் மூடத்தனமே பரவுகிறது. பொய் வஞ்சச் சூதும் வலுத்துவிட்டது.

## காசி

**வினு :** காசியில் பாதுஷா ஔரங்கஜேபுக்கு, லாட்பைரவ முதலிய தேவதைகள் பல சமத்காரங்களைக் காட்டின. முஸல்மான் படை கோயிலைத் தகர்க்க வந்தன; அவற்றின் மேல் குண்டு பாய்ச்சின. அப்போது பெரிய பெரிய தேனீக்கள் கிளம்பி சேனைகளைக் கடித்துச் சிதைத்து விரட்டின...ஆச்சரியம் !

**விடை :** அது கல்லின் அற்புதமில்லை. அங்கே தேனீக்கூடு இருந்திருக்கலாம். தேனீ கொடிது. கூட்டைக் கலைத்த வரைத் துரத்திச் சென்று கொட்டும். கல்லிலிருந்து பால் கொட்டியதும் பூசாரி லீலைதான்.

**வினு :** ஒரு மிலேச்சன் தன்னைப் பார்க்கக் கூடாதென்று மஹாதேவன் கிணற்றில் ஒளிந்தான்; வேணிமாதவன் (கண்ணன்) ஒரு பிராமணன் வீட்டிற் புகுந்து ஒளிந்திருந் தான். என்ன இது அற்புதமில்லையா ?

**விடை :** காலபைரவர், லாட்பைரவாதி, பூத ப்ரேத கருடாதி கணங்களெல்லாம் முஸல்மான்களை ஏன் பொருதவில்லை. புராணங்களில் சிவ விஷ்ணுக்கள் திரிபுராதிகளான பல பயங்கர துஷ்டர்களைச் சாம்பலாக்கினர் என்ருல் முஸல் மான்களைச் சாம்பலாக்க முடியாததேன் ? இதிலிருந்து அந்த அப்பாவிக் கல்லுருக்களால் பொருதவோ, போர் வெல்லவோ முடியா தென்று விளங்கவில்லையா? முஸால்மான் சேனை கோயில்களையும் உருக்களையும் தகர்த்துக் கொண்டே காசியை அணுகியது; அப்பேரது பூசாரிகள் மஹார்தேவ லிங்கத்தைக் கிணற்றில் எறிந்து, வேணிமாதவனைப்

பிராமணன் வீட்டில் ஒளித்து வைத்தனர். இதுதான் நடந்தது. காலபைரவருக்குப் பயந்து காசியில் எமதூதர் வருவதில்லை; பிரளய காலத்தில் காசி நாசமாவதில்லை. எனில் மிலேச்ச தூதர் அஞ்சாது வந்ததேன்? நம் அரசர் அரண்மனையை அழித்ததேன்? இவையெல்லாம் போப் மாயையே.

### கயா

வினா: கயா சிராத்தத்தால் பிதுர்க்கள் பாபம் நீங்கி, சிராத்த புண்ணியத்தால் சுவர்க்கமடைகின்றனரே; தங்கள் கையை நீட்டிப் பிண்டம் வாங்கியுண்கின்றனரே; இதுவும் பொய்யா என்ன?

விடை: முழுப் பொய்; பிதுர்க்கள் சுகத்திற்காகப் பிண்டம் வைக்க லட்சக்கணக்கான ரூபாய் செலவாகிறது. அந்தப் பணத்தை கயாவாலாக்கள் வேசைக் களியாட்டத்தில் ஒழிக்கின்றனரே; அந்தப் பாபம் அங்கிருந்து ஏன் ஒழியவில்லை. பிண்டத்தை வாங்கப் பண்டாக்கள் கைகளே நீட்டுகின்றன; வேறு கைகளைக் காணோமே! ஒருவேளை யாரையாவது பூமியில் புதைத்துக் கைகளை மட்டும் நீட்டிவிட்டுப் பிண்டம் வாங்குவதாக வஞ்சனை செய்திருக்கலாம்; அவர் முகத்தைத் தர்ப்பையால் மறைத்திருக்கலாம்—யாரையாவது பிண்டம் தரச் செய்து கையால் வாங்கிக் குழியில் மறைந்திருக்கும் கபடன் விழுங்கி யிருக்கலாம். இதெல்லாம் முட்டாள்களை ஏமாற்றும் கபட லீலை என்பதில் சந்தேகமில்லை. இராவணன் வைத்திநாதனைக் கொண்டுவந்த கதையும் பொய்தான்.

வினா: பாருங்கள்! இலக்ஷக்கணக்கான ஜனங்கள் கல்கத்தா காளி காமாக்ஷி முதலிய தேவிகளை நம்புகிறார்களே—இதுவும் அற்புதமில்லையா?

விடை: இல்லவேயில்லை; குருடர் ஒருவர் பின் ஒருவர் சென்று கிணற்றில் விழுவது போல, அறிவிலி மூடர் மூர்த்தி பூஜையாகிய படுகுழியில் விழுந்து துன்பப்படுகிறார்கள்.

### பூரி ஜகந்நாதம்

வினா: சரி அதிருக்கட்டும். ஜகந்நாதரிடம் பிரயத்யக்ஷ அற்புதம் உள்ளதே. ஜகந்நாதர் உடலை மாற்றும்போதெல்லாம்

ஒரு சந்தனக்கட்டை தானே சமுத்திரத்தில் மிதந்து வரு கிறதே. அடுப்பில் ஒன்றன் மேல் ஒன்ருக ஏழு பானைகள் அடுக்கி வைக்கிருர்கள். அடியிலும் மேலும் உள்ள பானை களில் சோறு சமைகிறது. நடுப்பானையில் பக்குவமாவ தில்லை. அங்கே ஜகந்நாதர் பிரசாதம் சாப்பிடாதவர் குஷ்டம் பிடித்து வருந்துகிருர்கள். தேர் தானே செல் கிறது. பாபிகள் கண்ணுக்கு தரிசனம் கிடைப்பதில்லை. இந்திர தமனன் ஆண்டகாலத்தில் தேவர்களே ஜகந்நாத மந்திரத்தைக் கட்டினர். ஜகந்நாதர் உடலை மாற்றும்போது ஓர் அரசர், ஒரு தச்சன், ஒரு பண்டா இறப்பதுண்டு; இந்த அதிசயங்களைப் பொய் என்று உங்களாலே சொல்ல முடியுமா ?

விடை : பன்னிரண்டாண்டுகள் ஜகந்நாதர் பூஜை செய்த ஒருவர், துறவு பூண்டு என்னை மதுராவில் சந்தித்தார். இந்த விஷயங்களைப் பற்றி கேட்டேன்; எல்லாம் பொய் என்ருர். உடல் மாற்றப் போகும் போதே தோணியில் ஒரு சந்தனக் கட்டையையும் கொண்டு போய் கடலிற் போடு கிருர்களாம்; அலை அடித்து அது கரைக்கு வருகிறது; தச்சன் உருவாக்குகிருன்.

சமயல் நடக்கும்போது கதவுகளை அடைத்து விடுகிருர்கள்; அங்கே பிறர் வரக்கூடாது. தரையில் நாலு புறமும் ஆறு அடுப்புகளும் நடுவே ஒரு வட்ட அடுப்பும் செய்கிருர்கள். அண்டாக்களுக்குக் கீழ்ப்புறம் நெய் மண் சாம்பல் கலந்து தடவி, உலையில் வைத்து அரிசி போட்டுக் கொதிக்க வைக்கிருர்கள். ஆறு அடுப்புகளில் இவை வெந்ததும் அடிப்பூச்சை தட்டிவிடு கின்றனர். இவற்றை நடு அடுப்பில் அடுக்கி நடுவே புதிதாக அரிசி போட்ட பானையை அடுக்குகிருர்கள். மற்ற அடுப்புகளை இரும்புத் தகட்டிஞல் மூடிவிடுகின்றனர். பிறகு தரிசனம் செய்யும் பணக்காரரை அழைத்துக் காட்டுகின்றனர். மேல் பானைகளிலும் கீழ்ப் பானைகளிலும் வெந்த சோறும், நடுப்பானை யில் வேகாத அரிசியும் கண்டவர் வியக்கின்றனர். அறிவிலிச் செல்வர் வெள்ளியும் பொன்னும் அளிக்கின்றனர். சிலர் மாதக் காணிக்கை செலுத்துகின்றனர். நீசரும் சூத்திரரும் கோவிலுக்கு நிவேதனம் கொண்டு வருகின்றனர். நிவேதனம் ஆனதும் அவர்கள் சிறிது உண்பர்; மிச்சத்தைப் பணம் கொடுக்கும் செல்வந்தர் வீட்டுக்கு அனுப்புவர் பண்டாக்கள். சாதுக்களும்

ஏழைகளும் ஆண்டிகளும் எல்லோரும் ஒரே வரிசையாக அமர்ந்து மிச்சத்தை உண்பர். ஒரு பந்தியானதும் அதே எச்சில் இலையில் இன்னொரு பந்தி அமர்ந்துண்ணும்—அதாவது எச்சிலிடத்தில் உண்ணும்—மகா அனுசாரம். அங்கே பல யாத்திரிகள் இந்த எச்சில் உண்ணுமல் தங்கள் கையால் சமைத்துண்டு செல்கிறுர்கள்; அவர்களுக்குக் குஷ்டம் வருவதில்லை. அந்த ஜகந்நாதபுரியிலேயே பலர் பிரசாதம் உண்பதில்லை. அவர்களுக்கும் குஷ்டம் வருவதில்லை. அதே ஜகந்நாதபுரியிலேயே பலர் குஷ்ட நோயால் வருந்துகின்றனர். அவர்கள் தினம் எச்சில் பிரசாதம் உண்டும் குஷ்டம் போவதில்லையே. இந்த ஜகந்நாதில் வாமமார்க்கிகள் பைரவீசக்கரம் அமைந்திருக்கிறுர்கள். அதனுல்தான் அங்கே தங்கை சுபத்திரை அண்ணுக்களான கண்ணன் பலதேவர் நடுவே வைக்கப்படுகிறுள். மனைவியிடத்தில் தாய் ஸ்தானத்தில் சகோதரி அமர்கிறுள். பைரவீ சக்கரம் இல்லாமலிருந்தால் இது எப்போதும் உண்டாயிருக்காது.

இனி ரதத்தின் அற்புதத்தை ஆராய்வோம். தேர்ச் சக்கரத்துடன் ஒரு யந்திர நுட்பம் இணைக்கப்பட்டுள்ளது. அதை முடுக்கிவிட்டால் தேர் ஓடுகிறது; எதிர்ப்புறம் திருகினுல் தேர் நிற்கிறது; பெருங்கூட்டத்தில் நிற்கிறது. அப்போது தானம் செய்யுங்கள்; புண்ணியம் புரியுங்கள்; ஜகந்நாதர் மகிழ்வார்; அப்போது தேர் ஓடும்; நம் தர்மம் வாழ்க ! என்று பூசாரிகள் ஒலமிடுகின்றனர். காணிக்கைகள் வந்து குவியுமட்டும் பூசாரிகள் இப்படிச் சத்தம் போடுகின்றனர். பணம் சேர்ந்ததும் ஒரு 'விரஜவாஸி' நல்ல ஆடையும் சால்வையும் அணிந்து முன்னுல் பிரார்த்தனை செய்கிறுன் :—"ஹே ஜகந்நாத ஸ்வாமீ ! தயவு செய்து தேரை நகர்த்தும்; எங்கள் தர்மத்தைக் காப்பாற்றும் !" என்று வேண்டி சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து ரதத்தில் ஏறிக்கொள்ளுகிறுன். உடனே விசையைத் திருகிவிட்டதும் தேர் அசைகிறது. ஜயகோஷத்துடன் ஆயிரக்கணக்கான பேர் வடம் இழுக்கவே தேர் ஓடுகிறது.

ஜகந்நாதர் கோயிலுள்ளும் இதே தந்திரம் நடக்கிறது. இடம் பெரிது; இருள் அடர்வு; பகலில் கூட விளக்குப் போட்டே பார்க்க முடியும்; அங்கே ஏராளமான ஜனங்கள் கூடுகிறுர்கள். மூர்த்திக்கு முன்னே இரு புறமும் திரை மறைக்கிறது; உள்ளே பண்டா—பூசாரிகள் இருக்கின்றனர். ஒருபுறம் திரையை இழுத்ததும் அது சட்டென்று மூர்த்தியை மறைக்கிறது.

அப்போது பண்டா பூசாரிகள் "கொடுங்கள் காணிக்கை! பாபம் போகும்; பிறகு ஜகந்நாதர் தரிசனம் அளிப்பார்; ஜல்தி காணிக்கை" என்று கூச்சலிடுகின்றனர். காணிக்கைகள் குவிகின்றன. அறியா மக்களைப் பண்டாக்கள் கொள்ளையடிக்கின்றனர். பிறகு திரையை மறுபுறம் இழுக்கின்றனர். மூர்த்தி தெரிகிறது. எல்லாரும் மகிழ்ந்து, "ஜய ஜகந்நாதா" என்று கூவுகின்றனர். ஒருவர் மேல் ஒருவர் இடித்துத் தகர்த்து சிரமப்பட்டுக் கூட்டத்தினின்று தப்பி, மரியாதையின்றி கோவிலினின்று வெளியே தள்ளப்பட்டு வீட்டுக்குத் திரும்புகின்றனர்.

இந்திரிய தமனன் குலம் இன்றும் கல்கத்தாவில் உள்ளது. இந்திரியதமனன் செல்வமன்னன், தேவி உபாசகன். அவன் இலட்சக்கணக்காகப் பணம் செலவிட்டு இந்தக் கோயிலைக் கட்டினான். ஆரியா வர்த்தத்தில் சாப்பாட்டுச் சண்டை ஒழியட்டும் என்றே கட்டினான். ஆனால் இந்த மூடஜனங்கள் வேற்றுமையை ஒழிப்பார்களா? இந்தக் கோயிலைக் கட்டினோர் தேவரில்லை; சிற்பிகளும் வேலைக்காரர்களுமே இதை அமைத்தார்கள். ஜகந்நாதர் உடல் மாற்றும்போது அரசன், பண்டா, தச்சன் இறப்பதில்லை. இம்மூவரும் இங்கே ஆதிக்கம் செலுத்திக் கீழே உள்ளவருக்குத் துன்பம் விளைவித்திருக்கலாம். அவர்கள் அந்த மூவருக்கும் அந்தச் சமயத்தில் நஞ்சிட்டுப் பழிவாங்கியிருக்கலாம். மூர்த்தியின் உள்ளே குடைவுள்ளது; அதில் ஒரு தங்கச் சம்புடத்தில் சாலக்ராமம் வைத்திருக்கிறார்கள். அதற்குத் தினம் அபிஷேகம் செய்து சரணாம்ருதம் தயாரிக்கிறார்கள். இரவில் அதன் மேல் விஷம் தடவியிருக்கலாம். காலையில் சரணாமிருதத்தில் அந்த விஷம் கலக்கும். அதை அரசன், பண்டா, தச்சன் ஆகிய மூவருக்கும் தந்து அவர்கள் இறந்திருக்கலாம். போஜன பட்டர்கள் ஜகந்நாதனை உடல் களையும்போது அந்த மூவரையும் அழைத்துச் சென்றதாகக் கட்டிவிட்டிருக்கலாம். பணமடிப்பதற்காகச் சுய நலவாதிகள் இப்படிக் கதை கட்டிவிடுவதுண்டு.

## இராமேசுவரம்

வினா: இராமேச்வரத்தில் கங்கோத்ரி ஜலம் அபிஷேகமான போது லிங்கம் பெரிதாகிறது என்பதும் பொய்யோ?

விடை: பொய்; அந்த மந்திரத்திலும் பகலிலும் இருட்டே. இரவும் பகலும் அங்கே விளக்கெரிகிறது. அபிஷேக நீர் ஊற்றும் போது, அதில் தீபங்களின் ஒளிபட்டு மின்னிடு

கிறது ; வேறொன்றுமில்லை. கல் பெருப்பதுமில்லை சிறுப்பது மில்லை, இருப்பது போலவே இருக்கும். இப்படியெல்லாம் மூட ஜனங்களை ஏமாற்றுகிறார்கள்.

**வினா :** இராமேச்வரத்தை இராமச்சந்திரனே நிர்மாணித்தான். மூர்த்தி பூஜை வேத விருத்தமானால், இராமச்சந்திரன் மூர்த்தி ஸ்தாபனம் செய்வானேன்? அதை வால்மீகி இராமாயணத்தில் எழுதுவானேன்?

**விடை :** இராமச்சந்திரன் காலத்தில் இலிங்கமும் கிடையாது; அந்தக் கோயிலின் சின்னமும் கிடையாது. தக்ஷிண தேசத்தில் இராமன் என்ற ஒரு அரசன் இந்தக் கோயிலைக் கட்டி இலிங்கம் நாட்டி, இராமேச்வரம் என்ற பெயரும் தந்திருக்கலாம். இராமச்சந்திரன் சீதை ஹனுமாநாதிகளுடன் புஷ்பக விமானத்தில் அயோத்திக்குத் திரும்பும்போது இராமன் சீதைக்குச் சொல்லுகிறான் :

अत्र पूर्वं महादेवः प्रसादमकरोद्विभुः ॥
सेतुबन्ध इति विख्यातम् ॥

(வால்மீகி - லங்கா காண்டம். சர். 125 ஸ்லோகம் 20-21)

ஹே சீதே, உன் பிரிவால் நாங்கள் துன்புற்று (வியாகுலமடைந்து) உன்னைத் தேடியலைந்தோம். இதே இடத்தில் சாதுர் மாசம் பரமேசனை உபாசனை தியானம் செய்தோம். எங்கும் நிறைந்த (விபூ:) தேவதேவனை மஹாதேவன் பரமாத்மாவின் அருளால் எங்களுக்கு வேண்டியதெல்லாம் இங்கே கிடைத்தன. இதோ பார், நாங்கள் இந்த சேது பந்தனம் செய்து இலங்கைக்குச் சென்று இராவணனைக் கொன்று உன்னைக் கொண்டு வந்தோம். இதைத் தவிர வால்மீகி அங்கே வேறெதையும் எழுதவில்லை.

**வினா :** தக்ஷிணத்தில் காலியாகாந்தம் என்ற ஒரு மூர்த்தியுள்ளது; அது இன்றும் ஹுக்கா குடிக்கிறது.

"रङ्ग है कालियाकन्त को।
जिसने हुक्का पिलाया सन्त को॥"

மூர்த்திபூஜை பொய்யானால் இந்தஅற்புதமும் பொய்யாகுமே.

**விடை :** பொய் பொய்! இதெல்லாம் போப் லீலை. உருவின் வாய் ஓட்டை ; அதன் பின் குழாய் ; அது பின்னாலிருக்கும்

அறையில் நுழைகிறது. அங்கே ஹூக்காவைத் தயார் செய்து ஒரு ஆசாமியை இழுத்துப் புகைவிடச் செய்து பூசாரி இங்கே திரை தூக்குகிறான். ஆசாமி பின்னே விடும் புகை இங்கே குப் குப் என்று புறப்படுகிறது. மூர்த்தியின் மூக்கிலும் வாயிலும் உள்ள ஓட்டை வழியே அதே புகை வருகிறது. அதுதான் சமயமென்று பூசாரி மூடர்களிடம் பணமும் பண்டமும் கொள்ளையடித்து, அவர்களைப் பொட்டலாக்குகிறார்கள்.

## துவாரகை

**வினா:** பாருங்கள்! டாக்கோர்ஜி மூர்த்தி துவாரகையிலிருந்து பக்தனுடன் ஓடிப்போனது; அது பல மணங்கு கனமுள்ளது; அது ஒன்றேகால் ரத்தி (2 குண்டுமணி) தங்கத்திற்குச் சரியாக நிறுத்ததே—இதுவும் தந்திரமா?

**விடை:** எல்லா கப்ஸா! பக்தன் அந்த மூர்த்தியைத் திருடிச் சென்றிருக்கலாம். அதை ஒன்றேகால் ரத்தியுடன் நிறுத்ததெல்லாம் வெறும் வாய்வெடியே!

## சோமநாதபுரம்

**வினா:** சோமநாத லிங்கம் தரைக்கு மேலே தொங்கியது ஆச்சரியமல்லவா? இதுவும் பொய்யோ?

**விடை:** ஆம், பொய்தான். கேள்: அதன் (சோமநாத லிங்கத்தின்) மேலும் கீழும் காந்தக்கல் வைத்திருந்தார்கள். அதன் கவர்ச்சியால் (ஆகர்ஷணத்தால்) மூர்த்தி அந்தரத்தில் நின்றது. முகமது கஜினி படையெடுத்த போது நடந்த ஆச்சரியம் கோயில் இடிந்து பூசாரிகள் துன்புற்றதே! பதினாயிரம் பகைவர் இலட்சக்கணக்கான படை வீரரை முறியடித்தோட்டினர். போப் பூசாரிகள் பூசை போட்டு, ஆராதித்து, தோத்திரம் பாடினர்! "ஹே மஹா தேவா! இந்த மிலேச்சர்களை நீ ஒழித்து எம்மைக் காப்பாற்று" என்று வேண்டினர். தங்கள் சீடர்களான அரசருக்கு, "நீங்கள் கவலையற்றிருங்கள்; மஹாதேவர் பைரவரை அல்லது வீரபத்திரரை அனுப்புவார்; இந்த மிலேச்சர்களையெல்லாம் கொன்று போடுவார்; அல்லது கண்ணைக் கெடுப்பார்; இதோ நமது தேவதை கிளர்ந்து

விட்டது—ஹனுமான், துர்கா, பைரவீ எல்லாம் கனவில் வந்து, " நாங்கள் எல்லாக் காரியங்களையும் பார்த்துக் கொள்ளுகிறோம் " என்று அருளினர். அந்த அப்பாவி அரசரும் வீரரும் இந்தப் போப்புகளின் வீண் பேச்சை நம்பிச் சும்மா இருந்தனர். எத்தனையோ சோதிடப் போப்புகள் பகைவரைத் தாக்க நல்லவேளை வரவில்லை என்றனர்; ஒருவன் அஷ்டம சந்திரன் என்றான்; இன்னொருவன் யோகினி தோஷம் என்று சொன்னான். இப்படியே மீன மேஷம் பார்ப்பதற்குள் மிலேச்சப் படைகள் சூழ்ந்து கொண்டன. பூசாரிகள் ஓட்டமெடுத்தனர். எத்தனையோ போப்–பூசாரிகளும் சிஷ்யர்களும் பகைவர் கையில் பிடிபட்டனர். பூசாரிகள் மூன்று கோடி ரூபா பெற்றுக்கொண்டு, கோயிலையும் மூர்த்தியையும் தகர்க்காது விட்டு விடுங்கள் என்று கைகள்கூப்பி கெஞ்சினர். முஸல்மான்கள், " நாங்கள் (புத்பரஸ்த) மூர்த்தி பூசகர் இல்லை, மூர்த்தி நாசகர் (புத்ஷிகன்) " என்று உடனே கோயிலை இடித்தனர். கோயிலின் முகடு இடிந்ததும் காந்தக் கல் விழுந்தது; இலிங்கம் உருண்டு உடைந்தது. அதிலிருந்து பதினெட்டுக் கோடி ரூபாய் பெறுமான இரத்தினங்கள் சிதறின. போப் பூசாரிகள் சவுக்கடி பட்டதும் அலறினர். " எங்கே பொக்கிஷம் " என்று மிரட்டியதும், அடிக்குப் பயந்து பூசாரிகள் உள்ளதைக் கக்கிவிட்டார்கள். முஸல்மான்கள் பணத்தை முழுக்கொள்ளையடித்துப் போப்புகளையும் சிஷ்யர்களையும் உதைத்து அடிமையாக்கினார்கள். பூசாரிகள் பகைவருக்கு மாஅறைத்தனர். புல்வெட்டினர், மலமூத்திரம் அள்ளித் தோட்டி வேலை செய்தனர்; உணவு காணமும், கொள்ளுமே. கல்லைத் தொழுது இப்படிக் கெடுவானேன்! ஏன் பரமேச்வரனை உபாசிக்கவில்லை? உண்மை உபாசனையால் பகைவர் பல்லை உடைத்து நாம் வெற்றிபெற்றிருப்போமே! கவனியுங்கள்! இந்தக் கற்களுக்குப் பதில் அத்தனை சூர வீரர்களை வணங்கி இருந்தால் பாதுகாப்பு கிடைத்திருக்குமே. இத்தனை சிலைகளைப் பூசாரிகள் வழிபட்டும் ஒன்றுவது குதித் தெழுந்து பகைவர் மண்டையில் விழவில்லையே. கல்லைப் போற்றியது போல் அவர்கள் ஒரு சூர வீரனைப் போற்றியிருந்தால், தன்னாலியன்ற மட்டுமாவது பகைவரை அழித்து அன்பரைக் காத்திருப்பானே!

## துவாரகை

**வினு:** துவாராகை ரண்சோட்ஜி (ஸ்ரீ கிருஷ்ணன்) நர்சீமேதாவுக்கு உண்டியல் பத்திரம் அனுப்பி அவன் கடனைத் தீர்த்தாராமே. இதுவும் பொய்யோ?

**விடை:** யாராவது ஒரு சாவுகார் கடனைத் தந்திருப்பார், ஸ்ரீ கிருஷ்ணன் அதை அனுப்பியதாக யாராவது பொய் கட்டிவிட்டிருப்பான். *1914 விக்கிரம சகாப்தத்தில் (1858ஆம் ஆண்டில்) ஆங்கிலேயர் குண்டுவிட்டுக் கோயிலைத் தகர்த்த போது அந்த மூர்த்தி எங்கே போனது? போர் வீரர் பகை வரை தைரியமாகப் பொருது கொன்றனர். ஆனால் கோயில் மூர்த்தி ஓர் ஈயின் காலைக் கூட முறிக்க முடியவில்லை. ஸ்ரீ கிருஷ்ணன் போல் ஒரு வீரன் இருந்திருந்தால் பகை வரை முறியடித்தோட்டியிருப்பான். இந்தக் காக்கும் கல்லுக் கடவுளே அடிபட்டுடையும்போது அதன் அடிமைகள் உதைபடுவதில் வியப்பென்ன?

## ஜ்வாலமுகி (பஞ்சாப்), ஹிங்கலாஜதேவி (சிந்த்)

**வினு:** ஜ்வாலமுகி ப்ரத்யக்ஷதேவி; அனைத்தையும் உண்பவள். பிரசாதத்தில் பாதி தின்று பாதி மீதி வைப்பாள். முஸல்மான் அரசர் அதன் தீச்சுடரை அணைக்க ஒரு கால்வாய் நீரைத் திறந்துவிட்டனர்; இரும்புத் தகடுகளைச் சுற்றிலும் இணைத்தனர்; அம்மன் கனல் அணையவேயில்லை! ஹிங்கலாஜ தேவி நிசியில் மலைமேல் சவாரி செய்கிருள். மலைக்குள் அந்த கர்ஜனை கேட்கிறது. சந்திகூபம் (கிணறு) பேசுகிறது. அங்கே யோனியந்திரத்தில் நுழைந்து வந்தால் மறுபிறப்பில்லை. தாம்ர ரக்ஷை கட்டிக்கொண்டால் மஹா புருஷனுய் விடலாம். ஹிங்கலாஜாவுக்குப் போகாத வரையில் எப்படிப்பட்ட பெரியவரும் அரைகுறையாகவேயிருப்பார்—என்பதெல்லாம் மெய்தானே?

**விடை:** இல்லை; ஏனெனில் அந்த ஜ்வாலாமுகி எரிமலையிலிருந்து தீக்கிளம்புகிறது. அங்குள்ள போலிப் பூசாரிகள் லீலை பலே விசித்திரமானது; அவர்கள் பலே எத்தர்கள். ஒரு கரண்டி நெய்யைத் தீயில் வைத்தால் அது பற்றி எரிகிறது; அதை உடனே எடுத்து எரியை ஊதியணைத்தால்

---

* விக்கிரம சகாப்தம் கிறிஸ்து சகாப்தத்திற்கு 57 வருடம் முந்தியது.

எரிந்தது போக மிச்ச நெய் கரண்டியில் உள்ளது. ஜ்வாலமுகியிடம் நடப்பதும் இதுதான். தீயில் வைத்ததெல்லாம் எரிந்து போவது சகஜம். தீப்பிடித்த காடோ வீடோ சாம்பலாவது போலவே ஜ்வாலமுகியும் மேலே இருப்பதையெல்லாம் தீய்த்துவிடுகிறது. இதில் அதிசயமேயில்லை. ஹிங்கலாஜில் ஆலயம் ஒன்று, குளம் ஒன்று, இங்குமங்கும் நீர்க் குழாய்களுமே உள்ளன; குதிரை சவாரி செய்யும் அம்மன் ஒன்றுமில்லை. இருப்பதெல்லாம் போப் பூசாரிகள் பித்தலாட்ட வேலையே. அங்கே மண் குளம் ஒன்றைத் தோண்டி வைத்திருக்கிறார்கள்; அதிலிருந்து தண்ணீர்க் குமிழ்த்தெழும்; அதைக் கண்ட மூடர் யாத்திரா பலன் கிட்டிவிட்டதாகக் கருதுகிறார்கள். யோனியந்திர மெல்லாம் யாத்திரிகளைக் கொள்ளையடிக்க இந்தப் போப்புகள் செய்த வேலையே. தூம்ர ரக்ஷையும் பூசாரி மோசடி தான். அந்த ரக்ஷை மூட்டையை ஒரு கழுதைமேல் சுமத்தினால் அது மஹா புருஷனாகுமா? நல்ல அறவினைகளாலேதான் ஒருவன் மஹா புருஷனாதல் கூடும்.

## அமிர்தஸரஸ்

வினா: அமிர்தஸரஸ் அமுதமயம்; ஒரு முரேடி மரக்கனி (பூங்காங்கொட்டை) பாதி இனிப்பாயிருக்கிறது. குருதாஸ்பூர் சுவர் சாய்கிறது; ஆனால் விழுவதில்லை. ரேவால்ஸர் குளத்தில் பாறைகள் மிதக்கின்றன. அமரநாதில் சுயம்பு லிங்கம் உள்ளது. இமாயலத்திலிருந்து இரண்டு புறக்கள் பறந்து வந்து தரிசனம் தந்ததும் பறந்து மறைகின்றன. இவை யெல்லாவற்றையும் நம்பமுடியாதா?

விடை: நம்ப முடியாது. பெயரளவில் அது அமுதப்பொய்கை. அது காடு சூழ்ந்திருந்தபோது நன்னீர்த் தடமாயிருந்ததால் அமிர்தஸரஸ் என்று ஜனங்கள் அதை அழைத்தார்கள். அமுதமுண்டவர் இறவார் என்று புராணம் சொல்லுகிறதே. அது மெய்யானால் அமிர்தஸரஸில் நீர் பருகினவர் சாகாதிருக்க வேண்டும். குருதாஸ்புர சுவர் விழாது சாயும்படி அமைந்திருக்க வேண்டும். மூரேடிக் கனியில் தாமரை இணைப்பிருக்கலாம்; அல்லது கட்டுக்கதை யாயிருக்கலாம். ரேவால்ஸர் குளத்தில் பாறை மிதப்பது யந்திரத்திறத்தால் இருக்கலாம். அமரநாதில் பனி மலைகளேயாகும் போது

பனி லிங்கம் ஆவதில் அதிசயமென்ன? புருக்களை அப்படிப் போப்ஜி பழக்கியிருந்து மலைகளின் மறைவிலிருந்து விட்டு, வினோதம் காட்டிப் பொருள் பறிக்கிறார்.

## ஹரத்வார்

**வினா :** ஹரத்வார் சுவர்க்கவாசல்; ஹரகீபைடில் (ஹரிபடியில்) குளித்தால் பாபம் போகும். தபோவனத்தில் வசித்தால் தவசியாகலாம். தேவப்ரயாகை, கங்கோத்ரியில் கோமுகம், உத்தரகாசியில் குப்தகாசி, த்ரியுக நாராயணரின் பவித்திர தரிசனம் கிடைக்கிறது. கேதாரம், பத்திரிநாராயணில் ஆறு மாதம் மனிதரும் ஆறு மாதம் தேவரும் வணங்குகிறார்கள். பசுபதி மஹாதேவன் முகம் நேபாளத்திலும், ஆஸனம் கேதாரிலும், முழங்கால் துங்கநாதிலும், பாதம் அமரநாதிலும் உள்ளன. இவற்றைத் தரிசித்துப் பரிசித்து குளித்தால் முக்தி கிடைக்கும். கேதார் பதிரி நாராயணத்திலிருந்து நேரே சுவர்க்கத்திற்கு செல்ல வேண்டுமானால் அப்படியே போகலாம். இந்தப் பேச்செல்லாம் எப்படி?

**விடை :** ஹரத்வாரம் வடமலை செல்லும் வாசல். ஹரகீபைடி ஸ்நானம் செய்வதற்கு உண்டாக்கப்பட்ட படிகளே. உண்மையில் அதை (ஹாட்பைடி) எலும்புப் படிகள் என்னலாம். பல நாடுகளில் இறந்தவர்களின் எலும்புகளையெல்லாம் அங்கே வந்து போடுகின்றனர். அங்கே குளிப்பதனால் பாபம் போய் விடாது; அனுபவித்தே தீரவேண்டும். முன்னே தவசிகள் இருந்த இடம் தபோவனமானது; இப்போது பிச்சைக் காடாயிருக்கிறது. தபோவனத்தில் போய் இருந்தால் மட்டுமே தவசியாக முடியாது; அங்கே பல பொய்க்குளிகடைகாரரும் உண்டு. தவம் புரிந்தால் தான் ஒருவன் தவசியாகலாம். “हिमवतः प्रभवति गङ्गा” இமயமலை உச்சி கங்கோத்திரியிலிருந்து கங்கை ஓடி வருகிறது. மோசடிக்காரர்கள் பசுவின் முகம் (கோமுகம்) செய்து அவ்வழியே கங்கை வருவதைப் போல் செய்தது, போப் லீலையாயிருக்கலாம். அந்தமலை போப்புகளின் சுவர்க்கம். உத்தரகாசி முதலிய தலங்கள் தியானித்திற்கேற்றவை. ஆனால் இங்கும் வணிகக் கும்பலே அதிகம். தேவபிரயாகைக் கதை புராணிகரின் கப்ஸா லீலையே; கங்கையும் அலகநந்தாவும் அங்கே சந்தித்துக் கலக்கின்றன; ஆகவே அங்கே தேவதைகள்

உள்ளதாக கட்டிவிடா விட்டால், அங்கே யார் செல்வார்கள்? யார் காணிக்கை அவிழ்ப்பார்கள்? அது குப்த காசியில்லை; பிரசித்த காசி? அங்கே ரகசியம் ஒன்றுமில்லை. அங்கே மூன்று தபாக்னி (திரிகாலாக்னி) யில்லை. இந்த போப்பு களின் பத்து இருபது பரம்பரைத் தீ இருக்கலாம். காசி களின் தூனி நெருப்பும் பார்ஸிகளின் கனலும் எப்போதும் கனல்வது போலும், தப்தகுண்டமும் மலைக்குள் உள்ள சூட்டினுல் சூடாகப் பொங்குவதே யாகும். அதனருகே யுள்ள சீத குண்டமும் வியப்பில்லை; மேலிருந்து அங்கே சீத நீர் வருகிறது. கேதாரிநாத் மிக நல்ல இடமே; அங்கே போப்புகளும் சிஷ்யர்களும் ஒரு பாறையின் மீது கோயில் கட்டியிருக்கிருர்கள். அங்கே மஹந்து, பூசாரிகள், மற்றும் பண்டாக்களும் புத்தியைவிட பணம் அதிகமாயுள்ள சீமான் யாத்திரிகள் செலவில், விஷயானந்த போகங்களை அனுப வித்து டம்பமாக வாழ்கிருர்கள். பத்திரிநாத்திலும் மோசடி ஹம்பக் கூட்டம் நிரம்ப உண்டு. அங்கே 'ராவல்ஜீ' முகாமே. அவனுக்கு பல மனைவியர் உண்டு: இவர்கள் நிர்மாணித்திருக்கும் கோவிலுக்கு பசுபதி யென்றும், உள்ளே யிருக்கும் விக்கிரகத்திற்கு பஞ்சமுகி என்றும் பெயரிட்டிருக் கிருர்கள். கேட்பார் இல்லாத இடத்திலே தான் போப் வேலை மலிகிறது; பலிக்கிறது. யாத்திரைத் தலங்களில் உள்ளவர் களைவிட மலையில் வசிப்பவர்கள் கபடமற்றிருக்கிருர்கள்; அவர்களிடம் பணம் பிடுங்கித்தனம் இல்லை; அங்கே நிலமும் அழகாகவும் சுத்தமாகவும் உள்ளது.

## விந்தேச்வரி

விஞ: விந்திய மலையில் எட்டுக் கைக் காளியம்மன் விந்தேச்வரி பிரத்யக்ஷமாயிருப்பது உண்மை. விந்தேச்வரி முக்காலத் திலும் மூவகை உருவந் தரிக்கிருள். அந்த வளைவில் ஈ மொய்ப்பதில்லை. பிரயாகை தீர்த்தராஜா; அங்கே முடி யிறக்கினுல் சித்தியடைகிருர்கள். கங்கை யமுனைச் சங்க மத்தில் குளித்தால் இச்சா சித்தி கிடைக்கும். அயோத்தி தன் ஜனத்தொகையுடன் பல தடவை சுவர்க்கம் சென்றது. திருத்தலங்களில் மிக்கது மதுரை. பிருந்தாவனம் லீலாஸ் தானம். கோவர்த்தனம் விரஜயாத்திரை பரம பாக்கியத்தால் உண்டாவது. சூரிய கிரகணத்தில் குருக்ஷேத்திரத்தில்

இலட்சக்கணக்கான ஜனங்கள் கூடுவது புண்ணியம்— என்ன இவையெல்லாம் பொய்யா?

**விடை:** விந்திய மலையில் கண்ணுரைக் காண்பன மூன்று கல்லுருக்களே. விந்தேச்வரி முக்காலம் மூவுருக் கொள்வ தெல்லாம் பூசாரிகளின் அலங்கார வேலையே. அங்கே ஈக்கள் இல்லையா? என் கண்ணுல் ஆயிரம் இலட்சக் கணக்காகப் பார்த்திருக்கிறேன். பிரயாகையில் முன்னே ஓர் அம்பட்டன் மொட்டையடிப்பதன் பெருமையைப் பற்றிக் கவிபாடி யிருப்பான்; அல்லது போப்புகளுக்கு பணம் கொடுத்துப் பாடச் சொல்லியிருப்பான். பிரயாகையில் மூழ்கி சுவர்க்க லோகம் போவது உண்மையாஞல், அப்படி மூழ்கினவர்கள் பூலோகத்தில் தங்கள் வீடுகளுக்கு வரக் காண்கிருேமே. ஏதோ சிலர் மூழ்கி இறந்திருக்கலாம். அவர்கள் ஜீவனும் ஆகாசத்திற் சுற்றி மறு பிறப் பெடுக்கிறது. பிரயாகை தீர்த்த ராஜ என்பது போப்புகளின் நாமகரணமே. ஜட வஸ்துக் களுள் அரசனும் இல்லை குடிகளும் இருக்க முடியாது. அயோத்தியில் நாய், கழுதை, தோட்டி, சக்கிலி, ஓட்டன் அனைவரும் உள்ளன. இவர்களையெல்லாம் சுமந்துகொண்டு அது மூன்று தரம் சுவர்க்கத்திற்குப் பறந்ததென்பது அசம்பாவிதம், வெறும் கட்டுக் கதையே. அயோத்தி உள்ள படியே இருந்த இடத்திலேயே இருக்கிறது; போப்புகளின் கப்ஸாதான் பறந்துகொண்டிருக்கிறது. நைமிசாரண்யக் கதையும் இதே போப் லீலா புராணமே.

மதுரா மூவுலகினும் சிறந்தது என்பதும் முழுப் பொய். ஆஞல் அங்கே மூன்று லீலா–மிருகங்கள் உள்ளன. அவற்றின் பிடியினின்றும் தப்பிக்கொள்வது கடினம்; நிலம், நீர், அந்தரம் மூன்றிலும் சென்ருலும் கடினம். முதல் மிருகம் சௌபே; குளிக்கப்போகும் வழியில் அவன் குறுக்கிட்டுப் பணம் பறிப் பான், "கொடுங்கள் எஜமான்; கஞ்ஜா, மிளகு, லட்டுசாப்பிட, குடிக்க கொடுங்கள்! எஜமானனுக்கு நலம் பெருக பிரார்த்தனை செய்வேன்" என்று உளறுவான். இரண்டாவது மிருகம் ஆமை. ஆமைகள் கூட்டம் கூட்டமாகயிருக்கும். குளிக்கச் செல்பவரைக் கடித்து வருத்தும். அவற்றை விலக்கிக் குளிப்பது மகா கடினம். மூன்ருவது செங்குரங்குக் கூட்டம். அவை உயர மரங்களிலும் வீட்டுக் கூரைகளிலும் இருக்கும். குல்லா, முண்டாசு, அணி

மணி, செருப்பு எது கிடைத்தாலும் பறித்துக் கொண்டோடும். ஆட்களைக் கடிக்கும், தள்ளும், கொல்லும்—இந்த மூன்றும் போப்புக்கும் அவன் சிஷ்யருக்கும் பூசிக்கத் தக்கவையாகும். மணங்குக் கணக்காக ஆமைக்குக் கடலையும் சோறும், குரங்குகளுக்குக் கடலையும் வெல்லமும், பண்டாக்களுக்கு லட்டுவும் தட்சிணையும் கிடைக்கின்றன. பக்தர் சேவை செய்கின்றனர். பிருந்தாவனம் முன்னே அழகான வனமாயிருக்கலாம். இன்றோ அது வேசை வனமாயிருக்கிறது, ஆசைவனமா யிருக்கிறது. இளங்காதலர், குரு சிஷ்யை லீலைகள் அங்கே அபரிமிதம். அப்படியே கோவர்த்தனத்திலும், தீபமாலைத் திருநாளிலும், விரஜயாத்திரையிலும் போப்புகளுக்குக் கொண்டாட்டமும் பண வேட்டையுமா யிருக்கும்! குருக்ஷேத்திரத்திலும் போப்புகளின் பணமடிக்கிற லீலைதான்! இங்கே போப்பு லீலையைத் தப்பிய சிலரே, தார்மீக பரோபகாரிகளா யிருக்கிறார்கள்.

## மூர்த்திபூஜை காலம்

**வினா:** மூர்த்திபூஜையும் தீர்த்தயாத்திரையும் ஸநாதனமான வழக்கமே. அவை எப்படிப் பொய்யாகும்?

**விடை:** ஸநாதனம் என்று எதைச் சொல்லுகிறாய்? தொன்றுதொட்டு வந்தவையா? இந்த வழக்கமெல்லாம் தொன்றுதொட்டு வந்தவையானால் ரிஷிவாக்கான வேதத்திலும் பிராஹ்மணத்திலும் இவற்றின் பெயர்கூட இல்லாததேன்? இந்த மூர்த்திபூஜை இரண்டரை அல்லது மூவாயிரம் ஆண்டுகளுக்கு இப்பால் வாமாசாரிகளாலும் ஜைனர்களாலும் உண்டானதே. ஆதி ஆரியாவர்த்தத்தில் மூர்த்தி பூஜை இல்லை; தீர்த்தமும் இல்லை. ஜைனர் கிர்நார், பாலிடானா, சிகரம், சத்ருஞ்ஜய், அபூ முதலிய தீர்த்தங்களை உண்டாக்கிய போதே இவர்களும் அதேமாதிரி தலங்களை உண்டாக்கினார்கள். பழைய பண்டாக்களின் பட்டயங்களைப் பார்த்தால் இந்தத் தலங்களெல்லாம் ஐநூறு அல்லது ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவை அல்ல என்ற உண்மை புலனாகும். ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்திய பட்டயம் எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை. ஆதலால் இவை எல்லாம் சமீபத்தில் உண்டானவையே.

**வினா:** தீர்த்த—தல மகாத்மியங்கள் உள்ளன.

"अन्यक्षेत्रे कृतं पापं काशीक्षेत्रे विनश्यति" (காசி மஹாத்மியம் காசி காண்டம்) "மற்றத் தலங்களில் செய்த பாபம் காசியில் நீங்கும்" போன்ற வாக்கியம் மெய்தானே?

விடை: இல்லை; செய்த பாபம் நீங்குமானால், ஏழைக்கு அரசும் செல்வமும், குருடனுக்கு பார்வையும், குஷ்டரோகிக்கு நல்லுடலும் கிடைக்கவேண்டும்; அப்படிக் கிடைக்கவில்லை. இப்படியெல்லாம் பாபபுண்ணியம் போகாது.

வினா:

—गङ्गागङ्गेति यो ब्रूयाद्योजनानां शतैरपि ।
मुच्यते सर्वपापेभ्यो विष्णुलोकं स गच्छति ॥ (1)

(பத்மபுராண 13–2) ப்ரஹ்ம புராணம் 175–82

हरिर्हरति पापानि हरिरित्यक्षरद्वयम् ॥ (2)

(பத்ம புராண உ. க. அ. 72–12)

प्रातःकाले शिवं दृष्ट्वा निशि पापं विनश्यति ।
आजन्मकृतं मध्याह्ने सायाह्ने सप्तजन्मनाम् ॥ (3)

(தீர்த்த தர்பண பண்டா அர்பண–2)

நூற்றுக் கணக்கான மைல் தூரத்திலிருந்து "கங்கே கங்கே" என்று சொன்னாலும், எல்லாப பாபங்களும் விலகி விஷ்ணுலோகத்தை அதாவது வைகுண்டத்தை ஒருவன் அடைகிறான். (1) "ஹரி" என்ற இரண்டெழுத்துச் சொல் எல்லா பாபங்களையும் போக்கும். அப்படியே ராம, கிருஷ்ண, சிவ, பகவதி முதலிய நாமங்களின் மகிமை (2) விடியற்காலம் சிவன், (அதாவது லிங்கம் அல்லது சிவன்) மூர்த்தியை தரிசித்தால் இரவு செய்த பாபம் போகும். நடுப்பகலில் தரிசித்தால் ஜன்மப் பாபம் தொலையும், சாயங்காலம் தரிசித்தால் ஏழுஜன்மப் பாபமும் போகும். (3).

விடை: முழுப் புளுகு என்பதில் சந்தேகமென்ன; இவையெல்லாம் போப்புராணங்களின் சுலோகங்கள். கங்கே கங்கே, ஹரே, ராம், கிருஷ்ண, நாராயண, சிவ பகவதி நாம ஸ்மரணத்தால் ஒருக்காலும் பாபம் போகாது. அப்படிப் போவதானால் உலகில் யாரும் துக்கியாயிருக்க முடியாது. பாபம் செய்யவும் பயப்படமாட்டார். இன்று போப் லீலையால் பாபம் மிஞ்சிவிட்டது; மூடஜனங்கள் நாராயண ஸ்மரணம்,

தீர்த்தயாத்திரை செய்தால் பண்ணின பாபம் போம் என்று நம்புகிறுர்கள். இந்த மூடநம்பிக்கையால் மக்கள் பாபம் செய்து, இகத்தையும் பரத்தையும் நாசமாக்குகிறுர்கள். பண்ணின பாபத்தை அனுபவித்தே தீரவேண்டும்.

**வினு:** அப்படியானுல் எந்த தீர்த்தமும் நாமஸ்மரணமும் உண்மையில்லையா?

**விடை:** ஆம், வேதாதி சத்திய சாத்திரம் ஓதல், ஓதுவித்தல், தார்மிக வித்வான்களின் சங்கம், பரோபகாரம், தர்மானுஷ்டானம், யோகாப்பியாசம், பகையின்மை, வஞ்சமின்மை, மெய்மை, உண்மை, வாய்மை, பிரம்மசரியம், ஆசாரியர்—தாய்—தந்தை அதிதிசேவை, பரமேசனைத் துதித்தல் வணங்கல், உபாசித்தல், புலனடக்கம், சீலம், அறவினை, அமைதி, ஞானம், விஞ்ஞானம் முதலிய சுபகர்மங்களே ஒருவனை துன்பத்தினின்றும் விலக்கும் தீர்த்தமாகும். தலமும் ஜலமும் புண்ணிய தீர்த்தமாகா. ஏனெனில் "जना यैस्तरन्ति तानि तीर्थानि" துன்பத்தைத் தாண்டுவிப்பதே தீர்த்தமாகும். ஜலம் தலமும் அப்படித் தாட்ட முடியா; அவை மனிதனை ஆழ்த்தி ஒழிப்பவையாம். ஆறுகடலைத் தாண்டுவிக்கும் நாவாயைத் தீர்த்தம் என்னலாம்.

समानतीर्थे वासी ॥ (1) (அஷ்டா·4-4-107)

नमस्तीर्थ्याय च ॥ (2) (யஜுர் 16-42)

ஓர் ஆசாரியனிடம் ஒரே சாத்திராப்யாஸம் செய்யும் பிரம்மசாரிகளை ஸதீர்த்த சேவிகள் என்பர்—அதாவது ஒரே தீர்த்தர் அல்லது ஆசாரியரிடம் பயில்பவர் என்பர். வேதாதி சாஸ்திர நிபுணராய், ஸத்ய தர்மசீலரான சாதுக்களுக்கு அன்ன பானுதிகளைத் தந்து அவர்களிடம் அறிவைப் பெறுதல்வேண்டும்; அத்தகைய உத்தமரைத் தீர்த்தர் என வேதம் ஓதும்.

மகத்தான காரியசாதனையே நாமஸ்மரணம்.

यस्य नाम महद्यशः । (யஜுர் அ. 32 மந். 3)

என்பது யஜுர்வேத வாக்காகும். அதாவது பரமேச்வரன் பெயர்கள் அறவினை நலத்தால் எழுந்தன. பிரம்மம், ஈசன், பரமேசன், நியாயகாரி, தயாளு, சர்வசக்திமான் முதலியவை பரம்பொருளின் குண கர்ம சுபாவத்தால் வந்தவை. பிரம்மம்

என்றால் அனைத்தினும் பெரிது; பரமேசன் என்றால் தேவர்க் கிறைவன்; ஈசன் திறமை சான்றவன், நியாயகாரி அநியாய மற்றவன், நேர்மையன், தயாளு அனைத்திடமும் கருணை யுள்ளவன், சர்வசக்திமான்—பிறர் துணையின்றித் தனது திறமை யால் உலகைப் படைத்து, காத்து, அழிக்கவல்லவன்; பிரம்மா—பலவித வஸ்துக்களை ஆக்குவோன்; விஷ்ணு—அனைத்திலும் வியாபித்தருளுவோன்; மஹாதேவன் தேவாதிதேவன்; ருத்ரன் ஊழிமுதல்வன். மனிதன் இத்தகைய பெருங் குணங்களைப் பயின்று, பெருஞ் செயல்களால் பெருமை பெறுக; திறமையால் திறம் பெருக; சமர்த்தருட் சமர்த்தனாகுக; ஒருக்காலும் அதர்மம் செய்யற்க, அனைத்திடமும் பரம தயாளுவாகுக; எல்லாச் சாதனங் களிலும் வல்லவனாகுக; சிற்பவித்தையால் பல பொருள்களைச் செய்க; தன்னைப் போலப் பிறர் இன்ப துன்பங்களையும் உணர்க; எல்லாரையும் பாதுகாத்துதவுக; புலவரிற் புலவனாகுக, தீயரை ஒறுத்து நல்லோரைப் போற்றுக. இவ்வாறு பரமேச நாமங்களின் பொருளறிந்து, பரமன் குணகர்ம வியல்புகளைத் தனது குணகர்ம வியல்பாக்கி, நல்லொழுக்கம் பூணலே பரமேச நாமஸ்மரண மாகும்.

## குருமஹாத்மியம்

**வினா :**

गुरुर्ब्रह्मा गुरुर्विष्णु र्गुरुर्देवो महेश्वरः।
गुरुरेव परं ब्रह्म तस्मै श्रीगुरवे नमः॥ (குருமஹாத்மியம், சுலோ. 19)

இத்தகைய குரு மஹாத்மியம் உண்மைதானே? குருவின் காலைக் கழுவி பாதோதகம் குடித்தல், அவர் ஆணையிட் டதைச் செய்தல்; குரு லோபியானால் வாமனாவதாரமாகக் கருதல், கோபியானால் நரசிம்மாவதாரமாக நினைத்தல், மோகியானால் ராமனாக, காமியானால் கிருஷ்ணாவதாரமாக மதித்தல் வேண்டும். குரு எவ்வளவு பாபியானாலும் நாம் வணக்கமாகவே நடக்கவேண்டும். குருவைத் தரிசிக்க அடி யெடுத்து வைக்க வைக்க அசுவமேத யாகபலன் கிடைக்கும் என்பதெல்லாம் மெய்யா? பொய்யா?

**விடை :** மெய்யில்லை; பிரம்மா, விஷ்ணு, மஹேசன், பரப்ரம் மம் எல்லாம் பரமன் பெயர்களே. குரு ஒருகாலும் பரம னுக்குச் சமானமாகான். இந்த குரு மஹாத்மியமும் குரு கீதையும் பெரிய போப் லீலையே. குரு மாதா பிதா ஆசாரி

யர் அதிதி போன்றவர். குருவுக்குச் சேவை செய்து கல்வி கற்றல் சிஷ்யன் கடமையாகும்; கல்வி கொடுத்தல் குருவின் கடமை. ஆனால் குரு என்பவன் காமக் குரோத லோப மோகனாயிருந்தால், அவனைக் கட்டாயம் விட்டொழிக்க வேண்டும். மெதுவாகப் புத்தி சொல்லவேண்டும், திருந்தா விட்டால் அர்க்கியம் பாத்தியம் சமர்ப்பிக்கவேண்டும்; அதாவது சக்கையாக வெளுக்க வேண்டும், ஒழிக்க வேண்டும். இதில் தோஷ மொன்று மில்லை. கல்வி யொழுக்கத்தால் குருவாகாமல், பூச்சாலும் மாலையாலும் போலி வேடனாகி, வேத விருத்தமான மந்திரங்களை உபதேசிப்பவன் குருவாகமாட்டான்; தனக்குப் பால் கறக்க ஆடுகளை வைத்திருக்கும் இடையன் போல இந்தப் போலிக் குருவும் பணங் கறக்கவே சிஷ்ய, சிஷ்யைக் கும்பலைச் சேர்க்கிறான்.

அவர்கள் :

गुरु लोभी चेला लालची, दोनों खेलें दाव ।
भवसागर में डूबते, बैठ पत्थर की नाव ॥

குரு லோபி, சிஷ்யன் பேராசை பிடித்தவன்—இருவர் திரு விளையாடலும், கல்லுப் படகில் கடல் கடந்த கதையாக துன்பக் கடலில் அவர்களை ஆழ்த்தும். மாணவ மாணவிகள் தனக்கு ஏதாவது தருவார் என குரு எதிர்பார்க்கிறான். குரு உதவாக்கரையானாலும் தங்கள் பாபம் போகும் என்று இவர்கள் நம்புகிறார்கள். இந்த வஞ்சச் சுயநலப் போலிகள் ஒழிக! போலிச் சீடர் ஒழிக! கற்படகேறிகள் போல் அவர்கள் துன்பக் கடலில் மூழ்குவார்கள். பூசாரி புராணி போப் லீலைபோல் இந்த ஆடுமேக்கி குருமார் லீலையும் சுயநலப் புலிகளின் விளையாட்டே யாகும். பரமார்த்த சீலர் தாங்கள் வருந்தியும் உலகிற்கு நன்மை செய்வர். குரு மஹாத்மியமும் குரு கீதையும் அழி செயலாளரான லோப குருமாரின் சரக்குகளேயாம்.

## புராண கர்த்தா யார்?

வினா :

1. अष्टादशपुराणानां कर्त्ता सत्यवतीसुतः ॥
2. इतिहासपुराणाभ्यां वेदार्थमुपबृंहयेत् ॥

(மஹாபாரதம்—ஆதிபர்வம் 1-267)

3. पुराणान्यखिलानि च ॥ (மனு அத். 3 ஸ்லோகம் 232)

4. इतिहासपुराण: पञ्चमो वेदानां वेद: ॥

(சாந்தோக்யம் ப்ரப- 7 காண். 1-4)

5. दशमेऽहनि किंचित्पुराणमाचक्षीत ॥ (சதபதம். 13-3-1-3)

6. पुराणविद्या वेद: ॥ (சூத்ரம்)

1. பதினெட்டுப் புராணத்திற்கும் ஆசிரியர் வியாசரே; வியாசர் சொல்லையே பிரமாணமாக ஏற்கவேண்டும். 2. இதிகாச புராணங்கள் வேதப் பொருளை விளக்குவன. 3. பிதுர் கிரியையின்போது புராண ஹரிவம்சக் கதைகளைக் கேட்கவேண்டும். 4. இதிகாச புராணாதிகள் ஐந்தாம் வேதமென்றறிக. 5. அசுவமேத யாக முடிவில் பத்தாம் நாள் சிறிது புராணக் கதை படிக்கவேண்டும். 6. வேதப் பொருளை விளக்கும் புராணமும் வேதமே. இத்தகைய ஆதாரங்களால் புராணங்கள் பிரமாண நூல்களாகும். அவற்றை ஆதாரமாகக்கொண்ட மூர்த்தி பூஜையும் தீர்த்த தலமும் உண்மையாகும்.

விடை: வியாஸ்ஜீ பதினெண் புராண கர்த்தாவானால் இவ்வளவு கப்ஸா அடித்திருக்க மாட்டாரே. சாரீரக ஸூத்ரம் யோக சாஸ்திர பாஷ்யாதி நூல்களில் வியாஸ்ஜீயின் உள்ளம் விளங்கும். அவர் பெரிய வேத வித்வான், ஸத்யவாதி, தார்மிக யோகி. அவர் இத்தகையப் பொய்க் கதையெல்லாம் திரித்து விட்டிருக்கமாட்டார். பரஸ்பர விரோதமான வகுப்பு வாதிகளின் பொய்ச் சரடுகளே பாகவதாதி புராணங்கள். அவற்றில் வியாஸ்ஜியின் குணங்கள் ஒரு சிறிதும் இல்லை. வேத சாஸ்த்திர விருத்தமான அசத்தியங்களை எழுதுவது வியாஸர் போன்ற வித்வான்களின் வேலையில்லை. இது வேத விரோத சுயநலப் பாமரர் வேலை. மேலும் இதிகாசப் புராணம் என்பதே சிவபுராணாதிகளின் பெயரில்லை

ब्राह्मणानीतिहासान् पुराणानि कल्पान् गाथनाराशंसीरिति ॥

(அஷ்வலாயன க்ரஹ்ய சூத்ர. 3-3-1)

என்பது பிராமண ஸூத்ர வசனம். ஐதரேய, சதபத, சாம, கோபத ப்ராம்மணாதி கிரந்தங்களுக்கே இதிஹாஸம், புராணம், கல்பம், காதா, நாராசம்ஸீ ஆகிய ஐந்து பெயர் களுண்டு. ஜனக—யாக்ஞவல்கிய ஸம்வாதம் போன்றவை

இதிகாசம். உலக உற்பத்தி முதலிய வர்ணனையே புராணம் என்பது. கல்பம் என்பது வேத ஸப்த நிரூபணம், வேத மொழி விளக்கம். காதா என்பது உதாரணக் கதை விளக்கம். நாராசம்ஸீ மனிதரின் இசை வசைகளைக் கதைப்பது. இவற்றாலேயே வேதார்த்தம் விளங்கும். பிதுர் கர்மம் (அதாவது ஞானிகளுடைய சிறப்பைக் கேட்பது) அசுவ மேத முடிவிலும் வியாசர் புராணம் படித்தலும் கேட்டலும் வியாசருக்குப் பிறகே ஏற்பட்டிருக்க வேண்டும், முற்காலத்தில் அன்று. வியாசருக்கு முன் வேதார்த்தம் படித்தலும் படிப்பித்தலும் கேட்டலும் கேட்கச்செய்தலும் வழக்கம். அதனால் அனைத்தினும் பழைய பிராமணக் கிரந்தங்களுக்கே புராணம் என்பது தகும். நவீன பொய்க் கற்பனைகளான குறை நிறைந்த ஸ்ரீமத் பாகவதம், சிவபுராணம் முதலியவற்றிற்கு அப்பெயர் பொருந்தாது. வியாஸஜீ வேதத்தைப் படித்து, வேதார்த்தங்களை போதித்த தால் தான் "வேத வியாஸர்" எனப்பட்டார். ஒரு வட்டத் தின் மத்திய ரேகைக்கு வியாஸ என்பது; அதாவது ருக்வேத ஆரம்பம் முதல் அதர்வ வேதம் முடிவு மட்டும் நான் மறை களையும் ஓதி, சுகர் ஜைமினி முதலிய மாணவருக்கு உணர்த் திய வேத பாரங்கரே வியாசர் ஆனார். அவர் இயற்பெயர் 'கிருஷ்ண த்வைபாயனர்'. வியாசரே வேதத்தை வகுத்தார் என்று சிலர் சொல்லுவதும் பிழையே. ஏனெனில் வியாசரின் தந்தை, பாட்டன், முப்பாட்டன், பராசரர், சக்தி, வசிஷ்டர், பிரம்மாதிகள் நான்கு வேதத்தைப் படித்தனர். வியாசரே வேதத்தை வகுத்திருந்தால் அவர் முன்னோர் அதைப் படித்திருக்க முடியாது.

## புராணப் புளுகு

**வினா:** புராணங்கள் முழுதும் பொய்யா? கொஞ்சம் உண் மையா?

**விடை:** முக்காலே மூன்று வீசம் புளுகு; இங்கு மங்கும் கொஞ்சம் நிஜம் கலந்திருக்கலாம். வேதாதி சாஸ்திரங் களினின்றும் எடுத்தவை நிஜம்; போப்புகளின் புராணச் சரக்குகளெல்லாம் புளுகே. சிவபுராணங்களில் சிவனுக்கே பரத்வம்; மற்ற விஷ்ணு, பிரம்மா, இந்திரன், கணேச, சூரியாதிகள் சிவதாஸர்கள். வைஷ்ணவர்கள் விஷ்ணு

புராணத்தில் விஷ்ணுவைப் பரமாத்மா என்பர்; சிவாதிகளை விஷ்ணுதாஸர் எனக் கருதுவர். தேவீ பாகவதத்தில் தேவியை பரமேஸ்வரி என்பர்; சிவன் விஷ்ணு முதலியோர் அவள் கிங்கரர் என்பர். கணேச கண்டத்தில் கணேசன் ஈசன்; மற்றவர் தாஸர் ஆகின்றனர். இந்தப் பேச்செல்லாம் ஸம்ப்ரதாய போப்புகளின் கட்டுமானந்தவிர வேறென்ன? புராணங்களை ஒருவனே செய்திருந்தால் இப்படி முரண் இராது; தக்க வித்வான் செய்தால் முரணுக்கே இட மிராது. இதில் ஒன்றை மெய்யெனில் மற்றொன்று பொய்; இரண்டாவது மெய்யெனில் மூன்றாவது பொய். மூன்றாவது மெய்யெனில் மற்றதெல்லாம் பொய்யாகும். சிவ புராணி சிவனிடம், விஷ்ணு புராணி விஷ்ணுவிடம், தேவி புராணி தேவியிடம், கணேச புராணி கணேசனிடம், சூரிய புராணி சூரியனிடம், வாயு புராணி வாயுவிடம் உலக உற்பத்தியும் பிரளயமும் உண்டாவதாகச் சொல்வது விரோதமே? உலக உற்பத்திக்குக் காரணமான இந்த மூர்த்திகள் ஒருவரிட மிருந்தொருவர் தோன்றினர்களாம். இவ்வாறு பிறந்தவர் எப்படி சிருஷ்டி காரணமாயிருக்க முடியும் என்று கேட்டால் வாயடைக்க வேண்டியது தான். இவர்கள் உடல்களும் பஞ்ச பூதத் தொகுப்பே எனின் இவர்கள் உலகின் சிருஷ்டி கர்த்தாக்களாவதெப்படி.? இந்த சிருஷ்டிகூடப் பலரை முரண்பட்டுச் சொல்லப்படுகிறது. இது அசம்பாவிதம்.

## சிருஷ்டிக் குழப்பம்

சிவபுராணம் சொல்லுகிறது: சிவன் உலகை சிருஷ்டிப் பேன் என்று நினைத்தாராம். உடனே ஒரு சமுத்திரம் அதில் ஒரு நாராயணன் உண்டானாராம்; அவர் நாபியிலிருந்து கமலம், கமலத்திலிருந்து பிரம்மா உண்டானாராம். பிரம்மா எங்கும் தண்ணீரே கண்டார். அவர் ஒரு கைத் தண்ணீர் எடுத்து, பார்த்துவிட்டு கடலில் எறிந்துவிட்டாராம். அதிலிருந்து ஒரு நீர்க் குமிழி எழுந்ததாம். நீர்க்குமிழியிலிருந்து ஒரு புருஷன் (விஷ்ணு) உதித்தாராம். அவர் பிரம்மாவிடம் "மகனே, உலகை ஆக்கு" என்றாராம். பிரம்மா "நான் உன் மகனில்லை; நீயே என் மகன்" என்றாராம். இருவருக்கும் தர்க்கம் நடந்தது. ஆயிரக்கணக்கான ஆண்டுகள் இருவரும் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்களாம். "நான் சிருஷ்டி செய்ய அனுப்பிய

இருவரும் சண்டைப் போட்டுக்கொண்டிருக்கிறார்கள்" என்று சிவன் நினைத்தாராம். அப்போது இருவருக்கும் இடையே ஒரு சிவலிங்கம் தோன்றி வானளாவியதாம். இருவரும் திகைத்தனர். இதன் அடிமுடியைக் காணவேண்டும். அதன் அடிமுடியைக் கண்டு விரைவில் வருபவன் பிதா, மற்றவன் மகன் என்று சபதம் போட்டுக்கொண்டார்கள். விஷ்ணு கூர்மாரூபமும் (ஆமையாகி), பன்றியாகி கீழே துளைத்துச் சென்றாராம். பிரம்மா அன்னமாகி மேலே பறந்தராம். இருவரும் மனோவேகமாக (அதிவிரைவாக) சென்று ஆயிரக்கணக்கான தேவ ஆண்டுகள் தேடியும் அடிமுடி காணமுடியவில்லையாம்.

மேலே பிரம்மா, கீழே விஷ்ணு திகைத்து நின்று, விரைவில் அடிமுடி கண்டு வந்தவருக்கு மகனாக வேண்டுமே என்று சிந்தித்தார்களாம். அப்போது பிரம்மா ஒரு பசுவும் தாழமரமும் இறங்கி வருவதைக் கண்டாராம். "எங்கிருந்து வருகிறீர்கள்" என்று வினவினாராம். "நாங்கள் ஆயிரம் தெய்வ வருஷங்களாக இந்த லிங்கத்தின் மேலிருந்து இறங்கி வருகிறோம் என்று பசுவும் மரமும் சொன்னவாம். "இந்த லிங்கத்தின் அடிமுடி அறிய உங்களால் முடியுமா" என்று கேட்டாராம் பிரம்மா. அவை முடியாது என்றனவாம். உடனே பிரம்மா "என்னுடன் வாருங்கள்; நான் பசும் பாலால் லிங்கத்தின் சிரசில் அபிஷேகம் செய்து, தாழம் பூவால் அருச்சித்ததாக விஷ்ணுவுக்கு அத்தாட்சி கூறுங்கள்; உங்களை விரும்பிய இடத்தில் நான் சேர்ப்பேன்" என்றாராம். அவர்கள் "நாங்கள் பொய்ச்சாட்சி சொல்லோம்" என்றனராம். "சாட்சி சொல்லா விட்டால் எரித்து விடுவேன்" என்று பிரம்மா மிரட்டினாராம். இரண்டும் பயந்துபோய் "தாங்கள் சொன்னபடியே சொல்லுகிறோம்" என்றனவாம். பிறகு மூவரும் கீழே இறங்கினர். பிரம்மா முதலில் வந்து விஷ்ணுவிடம் "என்ன நீ அடி கண்டு பிடிக்கவில்லையா" என்று கேட்டாராம். விஷ்ணு "என்னால் முடியவில்லை" என்றதும், "நான் முடி கண்டேன்" என்றாராம் பிரம்மா. "அதற்கு யார் சாட்சி" என்று விஷ்ணு வினவினாராம். அப்போது பசுவும் மரமும், "நாங்கள் இருவரும் லிங்க சிரத்திலிருந்தோம்" என்று சாட்சி கூறின. அப்போது, "ஹே தாழமரமே நீ பொய் சொன்னதால் உன் பூ எனக்கோ வேறு தேவர்களுக்கோ பூஜை செய்யத்தகாததாகுக; அப்படிப் பூஜை செய்வோர் அழிக" என்று லிங்கம் சாபமிட்டது.

"ஹே பசுவே எந்த வாயால் நீ பொய் சொன்ஞயோ அந்த வாய் மலம் சாப்பிடுக; உன் முகத்திற்கு யாரும் பூஜை செய்யா தொழிக! உன் வாலுக்கே பூஜை செய்க" என்று சாபமிட்டது. பிரம்மாவுக்கு, "நீ பொய் சொன்னதால் உலகில் யாரும் உன்னைப் பூஜை செய்யாதொழிக!" என்று சாபமிட்டது. "விஷ்ணுவே! நீ என் அடிகாண முடியவில்லை என்று உண்மை சொன்னதால், உன்னை எல்லாரும் வணங்கட்டும்" என்றது. பிரம்மாவும் விஷ்ணுவும் அப்போது இலிங்கத்தைத் துதித்தனர். அதில் மகிழ்ச்சி கொண்டு லிங்கத்திலிருந்து ஒரு சடைமுடி மூர்த்தி புறப்பட்டு "நான் உங்களை சிருஷ்டித் தொழில் செய்யச் சொன்னேனே; அதை விட்டு ஏன் சண்டை போடுகிறீர்கள்" என்று வினவியது. பிரம்மா விஷ்ணுக்கள், "மூலப்பொருள்கள் இல்லாமல் எப்படி சிருஷ்டி பண்ணுவோம்" என்றனர். அப்போது மஹாதேவன் தனது சடையிலிருந்து ஒரு விபூதி உருண்டை எடுத்துக் கொடுத்து, "இதனுல் எல்லா சிருஷ்டியும் செய்யுங்கள்" என்றருளினுர்.

சபாஷ் போப் புளுகு! இந்தப் போப்புகளிடம் "சிருஷ்டி தத்துவமும், பஞ்சமகா பூதங்களும் இல்லாதபோது, பிரம்மா, விஷ்ணு மஹாதேவ சரீரம், ஜலம், கமலம், லிங்கம், பசு, தாழ மரம், விபூதியுருண்டை எல்லாம் உன் அப்பன் வீட்டிலிருந்து வந்ததா என்ன" என்று கேட்டால் தலை குனிவர்.

## பாகவதம்

அவ்வாறே பாகவதத்தில் விஷ்ணுவின் நாபியிலிருந்து கமலம், கமலத்திலிருந்து பிரம்மா, பிரம்மாவின் வலது கால்கட்டை விரலிலிருந்து சுயம்புவும், இடது கால் கட்டை விரலிலிருந்து ஸத்யரூபா ராணியும், லலாடத்திலிருந்து (நெற்றியிலிருந்து) உருத்திரனும், மரீசி முதலிய பத்து புத்திரரும்*, அவர்களிடமிருந்து பத்து ப்ரஜாபதிகளும் உண்டானுர்கள். அவர்களுக்குப் பதின்மூன்று பெண்கள் பிறந்து கஸ்யபரை மணந்தனர். அவருள் திதிக்கு தைத்தியன், தனுவுக்கு தானவன், அதிதிக்கு ஆதித்யன், வினதாவுக்கு பக்ஷி, கத்ருவுக்கு ஸர்ப்பம், ஸரமாவுக்கு நாய் நரி, ஸ்யாலா முதலிய பிற பெண்களுக்கு யானை, குதிரை, ஒட்டகம், கழுதை, எருமை, புல்

* மரீசி, அத்திரி, அங்கிரகன். புலஸ்த்தியன். புலாஹன், ரிது, பிரசேதசன், வசிஷ்டன், ப்ரிகு, நாரதர்.

பூண்டு, கருவை, முட்செடிகள் முதலியன பிறந்தன. வாஹ்ரே வாஹ்! அடடாடடடா! பாகவத புராணிகளின் கஜப் புளுகு என்னே! என்னே! அட வெட்கங்கெட்ட பொய்ச் சரக்கே! மூடக்கச்சந்தியே! ஆண் பெண் வீரியங்களிலிருந்து மானிடம் உண்டாதல் இயற்கை! பசு பட்சி, பாம்பு உண்டாவது முழுப்புளுகு! பரமேச்வரன் சிருஷ்டி முறைக்கு எதிராக யானே, ஒட்டகம், சிங்கம், நாய், கழுதை, மரங்கள், பெண்ணின் கருப் பையில் எப்படி இருக்க முடியும்? சிங்கம் முதலியன பிறந்து பெற்றோரை ஏன் கடித்து விழுங்கவில்லை? மானிடத்தில் பசு பட்சி பிறத்தல் எப்படி? போலிகளும் போலிகளின் புராணப் பொய்களும் ஒழிக! இன்னும் இவர்கள் பொய் வலையில் மாந்தரைப் பிடித்து மயக்குகிறார்கள். இந்தக் குருட்டுப் போலி களும் அவர்களிடம் ஏமாறும் முழுக் குருடர்களான மூடச் சீடரும் இந்த கஜப்புளுகுகளை இன்னும் நம்புகிறார்களே! அட வெட்கக்கேடே! இவர்கள் மனிதரா வேறா என்று வியக்கிறோம்! இந்தப் பாகவதாதி புராணங்களைத் திரித்தவர்கள் கருவிலே ஏன் சிதைந்து போயிருக்கக்கூடாதோ? ஏனெனில் இந்தப் போப் களிடமிருந்து தப்பினால் ஆரியதேசம் துக்கங்களிடமிருந்து தப்பிப் பிழைக்குமே.

வினா: 'யாருக்கு விவாகமோ அவருக்கு கீதம்' என்றபடி இந்தக் கதைகள் பொருத்தமானவையே. விஷ்ணு பக்தன் அவரையே பரமன் மற்றவர் தாஸன் என்கிறான்; சிவபக்தன் சிவனே பரமன் மற்றவர் அவன் கிங்கரர் என்று துதிக் கிறான். பரமேச்வர மாயை எல்லாம் வல்லது. மனிதரிடம் விலங்கும், விலங்கிடம் மனிதரும் உண்டாக்க வல்லது. ஒரு காரணமும் இல்லாமலே மாயையிலிருந்தே பரமன் உலகைத் தோற்றியுள்ளான்; பாருமே! அவனுக்கு முடியாதது எது? அவன் நினைத்தாலும் அதைச் செய்வான்.

விடை: அட அப்பாவி! விவாகத்தின்போது மாப்பிள்ளைக்கு பாட்டுப் பாடுகிறார்கள், உண்மை; ஆனால் பிறரைச் சிறுமை செய்து இகழ்கிறார்களா? மாப்பிள்ளையைப் பரம பிதா என்கிறார்களா? போப்ஜீ! கதைதிரிப்பதில் நீர் பலே பேர்வழி! முகத்துதி பேசும் தலையாட்டைப் பேர்வழிகள் உன்னிடம் பிச்சை வாங்கவேண்டும்! நீ வழிபடுவதே பெரிதென்பாய்; மற்றதைச் சிறுமை செய்வாய். சத்திய

தர்மத்திற்கும் உனக்கும் வெகுதூரம். சுயநலமே உனது தொழில். மாயை மனிதரையே மயக்கும். வஞ்சமும் கபடமும் உள்ளவனிடமே மாயவலை செல்லும். அவனே மாயாவி; கடவுளிடம் வஞ்சமோ கபடமோ இருக்கமுடியாது; ஆதலால் அவனை மாயாவி என்ன முடியாது. ஆதியில் கஷ்யப தம்பதிகளிடம் பசு பக்ஷி பாம்பு மரங்கள் உண்டாயின வென்றால் இன்றும் அப்படி ஆகாததேன்? முன்னே நாம் (எட்டாவது பகுதியில்) எழுதிய சிருஷ்டிக் கிரமமே சரியானது. கீழ்வரும் வாக்கியத்தைப் படித்து போப்ஜீ தப்பர்த்தம் பண்ணி உளறுகிருர் போலும்:

तस्मात् काश्यप्य इमाः प्रजाः (சதபதம் 7-5-1-5)

"ஆதலால் இவ்வுலகம் காச்யப சிருஷ்டி" என்கிறது சதபத பிராமணம். இங்கே "காஸ்யபர்" என்ருல் "கடவுளே"

कश्यपः कस्मात् पश्यको भवतीति ॥ (நிருக்தம் 2-2)

சராசர ஜகத்தை பேதமின்றிக் காண்பவன்; எல்லாவுயிர்களையும் செயல்களையும், அறிவையும் விவகாரமில்லாமல் உள்ளபடி பார்ப்பவனே 'கச்யபன்'—'கடவுள்' என்பது நிருக்தம்.

"पश्यतीति पश्यः पश्य एव पश्यकः"

உள்ளதை உள்ளபடி பார்ப்பவனே 'பஸ்யகர்' பார்ப்பவர்; அவனே கச்யபன். 'आद्यन्तविपर्ययश्च' இம்மகா பாஸ்யத் வசனத்தின் பிரகாரம் முதலெழுத்து கடைசியிலும் கடைசி எழுத்து முதலிலும் மாறி வருவதால் "பஸ்யக" என்பதிலிருந்து "கஸ்யப" ஆகிறது. இந்தப் பொருளறியாத புராணிகர் கஞ்சா வெறியில் தாறுமாருக உளறுகிருர்கள். உதாரணமாக:

## மார்க்கண்டேய புராணம்

மார்க்கண்டேய புராணத்தின் துர்காபாடத்தில் 'தேவரின் உடலிலிருந்து தேஜஸ் உதித்து தேவியானது. அந்தத் தேவி மகிஷாசுரனைக் கொன்ருள். ரக்தபீஜன் உடலிலிருந்து சிந்திய ஒரு துளி ரத்தம் எத்தனையோ அவனைப்போன்ற ரக்தபீஜர்கள் (அசுர கும்பல்) எழுந்து உலகெல்லாம் ரக்தபீஜர் மயமானது; மறுபடி அவனுடலிற் சிந்திய குருதி உலகெங்கும் ஆருகப் பெருகி ஓடியது' என்று முழுப்பொய் திரிக்கப்பட்டுள்ளது. அப்படி உலகெங்கும் ரக்தபீஜர்கள் பெருகி நிறைந்துபோனல், தேவி

யும் அவள் சிங்கமும் படையும் எங்கிருந்தன ? ரக்தபீஜர்கள் தேவியிலிருந்து தூர இருந்தனர் என்ருல், உலகமெங்கும் ரக்த பீஜர்கள் நிறைந்தில்லை என்ருயிற்று. அப்படியே நிறைந் திருந்தார்கள் என்ருல் பசு, பட்சி, மனிதவுயிர்கள், நீர்வாழும் முதலை, ஆமை, திமிங்கலம், மீன்கள், மரஞ்செடிகள் போன்ற தாவரங்களெல்லாம் எங்கிருந்தனவோ ? ஒரு வேளை துர்கா பாடத்தைத் தீட்டிய போப் வீட்டுக்குள் ஓடி அடைக்கலம் புகுந் திருக்கலாம் ! பாருங்கள் ! பங்கி வெறியில் உளறும் இந்த கப்ஸாக் கதை பகுத்தறிவிற்கு ஒப்பாதது !

## பாகவத லீலை

இப்போது 'ஸ்ரீமத் பாகவதம்' என்ற புராண லீலையைக் கேளுங்கள். நாராயணன் பிரம்மாஜீக்கு நான்கு செய்யுளில் பாகவதத்தை உபதேசித்தான் :

ज्ञानं परमगुह्यं मे यद्विज्ञानसमन्वितम् ।
सरहस्यं तदङ्गञ्च गृहाण गदितं मया ॥

(பாகவதம் ஸ்க 2 அத். 9-ஸ்லோ 30)

பாகவதத்தின் வேரே பொய்யானபோது மரமும் பொய் தானே ? இந்தச் சுலோகத்தின் பொருள் : "ஹே பிரம்மாஜீ, தர்மார்த்த காம மோக்ஷாங்கமான எனது பரம ரகசிய விஞ்ஞான யுக்த ஞானத்தை என்னிடமிருந்து ஏற்றுக்கொள்ளும்." விஞ் ஞான யுக்த ஞானம் என்பதே அனுவசியம் ; பரம ரகசியமும் தேவையில்லை, மூல ஸ்லோகம் அனர்த்தமானுல் பாகவத நூலும் அனர்த்தமே. பிரம்மாஜீக்கு ஈசன் வரமளித்தார்.

भावान् कल्पविकल्पेषु न विमुह्यति कर्हिचित् ॥

(பாகவதம் ஸ்க. 2 அத். 9 ஸ்லோ 36)

" நீர் கல்ப சிருஷ்டியிலும் விகல்ப ப்ரளயத்திலும் மோக மடைவதில்லை " என்று எழுதிவிட்டு, மறுபடியும் தசம ஸ்கந்தத் தில் [பத்தாவது அத்தியாயத்தில் ஸ்க. 10 அத். ஸ்லோ. 15, 44] பிரும்மா மோகமடைந்து (கிருஷ்ணனுடைய) கன்றுகளைத் திருடு கிருர்—இவற்றில் ஒன்று மெய் ; மற்றொன்று பொய். இப்படியாக இரண்டும் பொய்யாயிருக்க வேண்டும். வைகுண்டத்தில் விருப்பு, வெறுப்பு, சினம், பொருமை, துக்கம் இல்லையென்ருல்

சனகாதிகளுக்கு வைகுண்ட வாசலில் கோபம் வந்ததேன்? கோபம் வருமிடம் சுவர்கமில்லை; வைகுண்டமில்லை. அப்போது ஜய விஜயர் துவார பாலகராயிருந்தனர். சுவாமியின் ஆணையைக் காத்தல் அவசியமாயிருந்தது. அவர்கள் ஸநத் குமாரரைத் தடுத்ததில் என்ன குற்றம்? அதற்காக அபராதமில்லாமல் சாபமிட்டால் பலிக்காது. 'நீ பூமியில் விழக்கடவது' என்றதால் அங்கே பூமியே இல்லை, அது கீழே எங்கோ உள்ளது என்றாயிற்று. ஆகாசம், வாயு, அக்னி, ஜலம் இருந்தனவென்றால் துவாரம், மந்திரம், ஜலம் இவை எதன் ஆதாரத்தில் நின்றன?

ஜய விஜயர், 'மஹாராஜ்! நாங்கள் எப்போது வைகுண்டம் மீளுவோம்' என்று ஸனகாதி முனிவர்களை துதித்து வேண்டினர். "நீங்கள் அன்புடன் நாராயண பக்தி செய்தால் ஏழாவது ஜன்மத்தில் மீளுவீர்; பகையினால் பக்தி செய்தால் மூன்று ஜென்மத்தில் வைகுண்டம் பெறுவீர்" என்றனர் ஸனகாதி முனிவர். இதைச் சிந்திக்க வேண்டும்: ஜய விஜயர் நாராயண சேவகரே. அவர்களைக் காப்பாற்றி யுதவுவது நாராயணன் கடமையாகும். தமது சேவகரைப் பாதுகாத்து, அவரைக் காரணமின்றித் துன்புறுத்தியவரைத் தண்டிக்காது விடும் எசமானால் என்ன பயன்? அப்படிப்பட்ட எசமானால் சேவகருக்குத் துன்பமே விளையும். தங்கள் கடமையைக் காத்த ஜய விஜயரைப் போற்றி, சாபம் வைத்த சனகாதிகளை நாராயணன் தண்டித்திருக்க வேண்டும். ஏனென்றால் தன் ஆணையை மீறி அவர்கள் வைகுண்டத்திற் புக முயன்றது குற்றமேயாகும். காவலரைச் சினந்து வீண் சண்டையிட்டதேன், சாபம் கொடுத்ததேன்? அவர்களுக்குப் பதிலாக தவறு செய்த சனகாதிகளைப் பூமியில் வீழ்த்தலல்லவா நாராயணனுக்கு நியாயம். நாராயணன் வீட்டிலேயே இந்த அநீதி, ஊழல் என்றால், அவன் தாஸரான வைஷ்ணவர் படும்பாடு குறைந்ததே! அந்த ஜய விஜயர் ஹிரண்யாக்ஷ, ஹிரண்யகசிபுகளாகப் பிறந்தார்களாம். அவருள் ஹிரண்யாக்ஷனை வராஹம் கொன்றதாம். அந்தக் கதை இவ்வாறு:

## வராஹவதாரம்

ஹிரண்யாக்ஷன் பூமியைப் பாயாகச் சுருட்டித் தலைக்கு தலையாணியாக வைத்துக் கொண்டு உறங்கினனும். விஷ்ணு வராஹவதார மெடுத்து பூமியை அவன் தலைமாட்டின்

கீழிருந்து எடுத்து தன் கொம்பினுல் அதைத் தூக்கினுராம். அவன் விழித்தெழுந்தான். இருவருக்கும் சண்டை நடந்தது. வராஹர் ஹிரண்யாக்ஷனைக் கொன்று போட்டார்.

உலகம் உருண்டையா பாய்போலவா என்று கேட்டால் இந்தப் போப்புகளின் வாயடைக்கும்; இவர்கள் பூகோள சாஸ்திரத்தின் சத்துருக்கள். பூமியை அசுரன் பாய்போலச் சுருட்டித் தலைக்கு வைத்துறங்கியபோது இந்தப் போப்புகள் எங்கே படுத்துறங்கினரோ! வராகம் எதன்மேல் அடியெடுத்து வைத்து ஓடி வந்ததோ? வராகம் தன் முகத்தில் பூமியைத் தாங்கிக் கொண்டிருந்தபோது, இருவரும் எதில் நின்றுக் கொண்டு சண்டை போட்டனரோ? அவர்கள் நிற்பதற்கு வேறு இடம் இல்லையே? பாகவத புராணத்தைச் செய்த போப்பின் மார்பின் மீது நின்று சண்டை செய்தார்களோ, என்னமோ? போப்ஜீ எங்கே படுத்தாரோ—இதெல்லாம் கப்ஸா வீட்டில் கப்பா வந்து கப்ஸா அடித்த கதைதான்! மூடர் வீட்டில் புளுகர் வந்தால் புளுகுக்குப் பஞ்சமுண்டோ?

## நரசிங்காவதாரம்

ஹிரண்ய கச்யபன் மகன் பிரகலாதன் விஷ்ணு பக்தனும். தந்தை பையனைப் பாடசாலைக்குப் படிக்க அனுப்பினுர். பையன் ஆசிரியரிடம் தனது சிலேட்டில் நாராயணு, நாராயணு என்று எழுதித் தரச் சொன்னுனும். அதை அறிந்த தந்தை, "என் சத்துருவை ஏன் துதிக்கிருய்" என்று கேட்டாராம். சிறுவன் 'அப்படித் தான் துதிப்பேன்' என்ருனும். உடனே அப்பன் மகனைக் கட்டி மலையிலிருந்து உருட்டித் தள்ளினுன், கிணற்றில் தூக்கிப் போட்டான்; பையனுக்கு ஒரு கெடுதலும் நேர வில்லையாம். பிறகு தந்தை ஒரு தீப்பிழம்பான இரும்புத் தூணைக் காட்டி "இதைத் தழுவிக் கொள்; உன் நாராயணன் உண்மையானுல் உன் உடல் வேகாதிருக்க வேண்டும்" என்ருனும். பிரகலாதன் அவ்வாறே தழுவத் திகைத்து நின்றபோது அதில் நாராயணன் சிறு சிறு எறும்புகளை ஏற்றி தைரியம் கொடுத்தானும். ஐயந் தெளிந்த பிரகலாதன் தூணைத் தழுவியதும் அதிலிருந்து ஒரு நரசிங்கம் புறப்பட்டு அப்பனின் வயிற்றைப் பிளந்து கொன்றதாம். பிரகலாதனைப் பிரியமாக நக்கிக் கொடுத்ததாம். அப்போது, "அன்பா! கேள், வரம்" என்றதாம். பிரகலாதன் தன் பிதா நல்ல கதியடைய

வேண்டினும். 'உன் இருபத்தோரு தலை முறைக்கு மோக்ஷம்' என்றதாம் நரசிங்கம்.

இதோ பாருங்கள்! அடடா என்ன கப்ஸா! மதியீனத்திலும் மதியீனம்! பாகவதம் படிக்கிறவனையோ, கேட்கிறவனையோ மலையிலிருந்து உருட்டினால், எவனும் அவனைக் காப்பாற்ற மாட்டான்; அவன் பொடிப் பொடியாய் சாவானே! பிரகலாதன் தந்தை அவனைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பியது குற்றமா? பையன் படிப்பை விட்டு வைராகியாக முயலும் மூர்க்கனன். தீக் கம்பத்தில் எறும்பு ஏறியது, பிரகலாதனை எரிக்காதுவிட்டது என்ற கட்டுக் கதையை உண்மை என்பவனை அத் தீக்கம்பத்தி லேயே கட்டிப் போடவேண்டும். அக்கம்பம் இவனை எரிக்காது போனால் பிரகலாதனை எரித்திராது. அது நரசிங்கத்தை எரிக்க வில்லையா? மூன்றும் பிறவியில் வைகுண்டம் புக சனகாதிகளுக்கு வரங் கொடுத்ததை உங்கள் நாராயணன் மறந்து விட்டரா? பாகவதத்தின்படி பிரகலாதன் பிரம்மாவிலிருந்து நான்காம் பிறப்பு—பிரம்மா, பிரஜாபதி, கஸ்யபர், ஹிரண்யாக்ஷன் —ஹிரண்யகஸ்யபு. பிரகலாதன் இருப்பத்தோரு படி முன்னோர் நற்கதியடைவதெப்படி? அந்த ஹிரண்யாக்ஷனும் ஹிரண்ய கசிபுவுமே இராவண, கும்பகர்ணர்; பிறகு சிசுபாலர்—தந்த—வக்ரராகப் பிறந்தார் எனில், நரசிம்மர் வரம் எங்கு பறந்து போயிற்று. இப்படிப்பட்ட அபத்தங்களை அறிவீனர்களே பேசு வார்கள், நம்புவார்கள்; வித்வான்கள் பேசவோ, எழுதவோ, கேட்கவோ மாட்டார்கள்.

பூதனை அக்ரூரரின் கதையைப்பாருங்கள்:

रथेन वायुवेगेन ॥ (பாகவதம் 10-39-38)

जगाम गोकुलं प्रति ॥ (பாகவதம் 10-38-24)

கம்ஸன் கண்ணனை அழைத்து வர அக்ரூரரை அனுப்பினான். அக்ரூரர் குதிரை பூட்டிய ரதம் வாயுவேகத்திற் சென்றதாம். சூரியோதயத்திற்குப் புறப்பட்டு நான்கு மைல் உள்ள கோகுலத் திற்கு சூரியாஸ்தமனத்திற்குச் சென்றதாம். பாருங்கள் வாயு வேகத்தை! குதிரை ஒருவேளை பாகவத கர்த்தாவைச் சுற்றிச் சுற்றி வட்ட மிட்டதோ? அல்லது குதிரைப் பாகர் வழிதவறி அக்ரூரருடன் பாகவத புராணக்காரர் வீட்டில் தூங்கிவிட்டார் களோ?

பூதனை சரீரம் ஆறு கோசம் (12 மைல்) அகலம், வெகு நீளமாயிருந்ததாம். கிருஷ்ணன் அவளை மதுரா—கோகுலம் நடுவில் கொன்ருன். அவள் உடல் மதுரையிலிருந்து கோகுலம் வரையில் பரவியிருந்ததாம். அப்படியானல் இந்த ஊர்களுடன் போப்ஜீயின் வீடும் பூதனை உடலினடியில் புதைந்திருக்கும்!

அஜமிலன் கதையும் ஒரு புரளி. அஜமிலன் நாரதர் சொன்னபடியே தன் மகனுக்கு 'நாராயணன்' என்று பெயரிட்டான். சாகுந் தருணத்தில் தன் மகனை அவன் "நாராயணு" என்றழைத்தானும். உடனே ஸ்ரீமந் நாராயணனே அஜமிலன் முன்னே வந்து குதித்தராம். என்ன அவன் மகனை அழைக்கிருன் நம்மை யில்லை என்று நாராயணனுக்குத் தெரியாது போயிற்ரு? இந்தப் பெயருக்கு அவ்வளவு பெருமையானல் இன்று நாராயண ஸ்மரணை செய்பவர் துக்கத்தைப் போக்க அந்த நாராயணன் ஏன் வருவதில்லை? இந்தக் கதை உண்மையானல் கைதிகள் நாராயணு நாராயணு என்று ஜபித்து விடுதலை பெறலாமே!

சுமேரு மலையின் பரிணமம் ஜோதிஷ சாஸ்த்திரத்திற்கே எதிரிடையாயிருக்கிறதே. ப்ரியவிரத் ராஜாவின் தேர்ச் சக்கரம் அழுத்திய பள்ளத்திலிருந்து கடல்கள் பொங்கியதாமே! பூமி நாற்பத்தொன்பது கோடி யோஜனை விஸ்தாரமாமே! பாகவதத்தில் காணும் இத்தகைய புளுகுகளுக்கு எல்லையே இல்லை.

இந்தப் பாகவதம் கீதகோவிந்தம் செய்த ஜயதேவர் தம்பி போபதேவர் (Boba Deva) எழுதியதே யாகும். அவர் "ஹிமாத்ரி" என்ற தான் எழுதிய நூலில் இதற்கு அத்தாட்சியாக ஒரு சுலோகம் எழுதினர். அந்த நூலின் மூன்று ஏடுகள் என்னிடம் இருந்தன. ஒன்று கெட்டுப் போனது. அந்த ஏட்டிலுள்ள சுலோகங்களின் கருத்தை அப்படியே இந்த இரண்டு சுலோகங்களாற் சொல்லுகிறேன். இதை நிச்சயம் செய்து கொள்ள விரும்புவோர் "ஹிமாத்ரி"யை பார்த்துத் தெளியலாம்:—

हिमाद्रेः सचिवस्यार्थे सूचना क्रियतेऽधुना ।
स्कन्धाऽध्यायकथानां च यत्प्रमाणं समासतः ॥ (1)

श्रीमद्भागवतं नाम पुराणं च मयेरितम् ।
विदुषा बोबदेवेन श्रीकृष्णस्य यशोन्वितम् ॥ (2)

கெட்டுப்போன ஏட்டுப் பிரதியில் இவ்வாறு சுலோகம் இருந்தது. அரசனது பிரதம மந்திரியான ஹிமாத்ரி, போபதேவ பண்டிதரிடம், "நீர் செய்த பாகவதம் முழுதும் கேட்க அவகாசம் இல்லை. நீர் அதைச் சுருக்கமாகக் கவிசெய்; அதைப் பார்த்து நான் பாகவத கதையை அறிவேன்" என்று சொன்னார். அதனால் அடியிற்கண்ட குறிப்பை போபதேவர் செய்தார். அதில் கெட்டுப் போன இதழிலிருந்து ஒன்பது சுலோகங்கள் இல்லை. பத்தாம் சுலோகத்திலிருந்து கீழே குறித்திருக்கிறோம். இவை போப தேவர் எழுதியவை :—

बोधन्तीति हि प्राहुः श्रीमद्भागवतं पुनः ।
पञ्चप्रश्नाः शौनकस्य सूतस्यात्रोत्तरं त्रिषु ॥ (10)

प्रश्नावतारयोश्चैव व्यासस्य निर्वृतिः कृतात् ।
नारदस्यात्र हेतूक्तिः प्रतीत्यर्थं स्वजन्म च ॥ (11)

सुप्तघ्न द्रौण्यभिभवस्तदस्त्रात्पाण्डवा वनम् ।
भीष्मस्य स्वपदप्राप्तिः कृष्णस्य द्वारकागमः ॥ (12)

श्रोतुः परीक्षितो जन्म धृतराष्ट्रस्य निर्गमः ।
कृष्णमर्त्ययागसूचा ततः पार्थमहापथः ॥ (13)

[भूधर्मयोः कलेर्भीतिस्ततस्त्राणं परिक्षिता ।
परीक्षतो ब्रह्मशापः प्रायेण शुकसंगमः ॥ (14)]

इत्यष्टादशभिः पादैरध्यायार्थः क्रमात् स्मृतः ।
स्वपरप्रतिबन्धोनं स्फीतं राज्यं जहौ नृपः ॥ (15)

इति वै राज्ञो दार्ढ्योक्तौ प्रोक्ता द्रौणिजयादयः ॥ (16)

इति प्रथमः स्कन्धः ॥ १ ॥

[இதன் பொருளாவது : பாகவதத்தை மீண்டும் சுருங்கச் சொல்லுகிறோம். சூதரும் சௌனகரும் கேட்ட ஐந்து கேள்விக் கும் இங்கே பதில் சொல்லுகிறோம்—அவதாரங்களின் மகிமை, வியாசரின் நிவிருத்தி, நாரதர் தன் பிறப்பு வளர்ப்பைப் பற்றி விளக்கியது, துரோணர் உறங்கிய அர்ஜுன மக்களைக் கொன்றது. பரிக்ஷித்தை கர்பத்தில் பாண்டவ பாணம் காத்தது, பீஷ்மர் தன்னிலையடைந்தது, கிருஷ்ணன் துவாரகை சென்றது; பரிக்ஷித்து பிறந்தது, திருதராஷ்டிரன் போனது, கிருஷ்ணன் உடல் நீத்தது, பாண்டவர் இமாலயம் சென்றது. இவ்வாறு

பாகவதம் முதல் பாகம் பதினெட்டு அத்யாயங்களும் இந்தச் சுருக்கம் பதினெட்டுப் பாதங்களிற் சொல்லப்பெற்றது.]

இவ்வாறு பன்னிரண்டு ஸ்கந்தங்களின் அட்டவணை பண்டித போபதேவர் செய்து மந்திரி ஹிமாத்ரிக்களித்தார். போபதேவரின் ஹிமாத்ரி கிரந்தத்தில் இதன் விரிவைக் காணலாம். இப்படியே மற்றப் புராண லீலைகளையும் அறியலாம். ஒன்றுக்கு மற்றொன்று புளுகில் அப்பனுயிருக்கிறது.

பாருங்கள்! மஹாபாரதத்தில் கிருஷ்ண சரித்திரம் மிகவும் சிறந்ததாயிருக்கிறது. அவனது தன்மை, செயல், நடத்தை எல்லாம் மஹான் என்பதை விளக்குகிறது. பிறப்பு முதல் இறப்பு வரையில் கண்டிக்கத் தக்க எதுவும் கண்ணன் வாழ்வில் இல்லை. ஆனல் பாகவதம் கண்ணனைப் பற்றி அனுசிதமான கதைகளைத் திரித்திருக்கிறது. பால், தயிர், வெண்ணையை திருடுதல், குப்ஜ தாஸியிடம் சேர்க்கை, பிற மாதருடன் ராஸ மண்டலம், லீலை முதலிய புரட்டுகளைக் கண்ணன் மேல் பாகவதம் சுமத்துகிறது. இதைப் படித்தும் கேட்டும் பிற மதத்தினர் கண்ணனைத் தூற்றுகிறார்கள். பாகவதம் இல்லாவிட்டால் மஹாத்மா கண்ணனை இப்படி தவருக நிந்திப்பார்களா? சிவ புராணத்தில் பன்னிரு ஜோதிர் லிங்கத்தைப் பற்றி எழுதியிருக்கிறது. அதில் ஒளியே யில்லை; ஆனல் பெயரோ ஜோதிர் லிங்கம். இரவில் அதைப் பார்க்கவும் முடியாது. இதெல்லாம் போப்ஜீயின் கப்ஸா லீலையே!

## கிருஹ பலம்

வினு: வேதம் கற்கும் திறமை குன்றியது; ஸ்மிருதி கற்றனர்; அதுவும் குன்றவே சாஸ்திரம்; சாஸ்திரம் படிக்குந் திறனும் குன்றவே புராணம் செய்தனர். புராணம் பெண்டிருக்கும் சூத்திரருக்குமே உரியது. ஏனெனில் இவர்களுக்கு வேதம் படிக்கும் உரிமையில்லை.

விடை: இது பொய்; ஏனெனில் திறமை கற்பதிலும் போதிப்பதனுலும் வருகிறது. வேதத்தை கற்கவும் கேட்கவும் எல்லாருக்கும் உரிமை உண்டு. கார்க்கி போன்ற பெண்களும் வேதம் கற்றனர். சாந்தோக்யத்தில் வரும்* ஜானஸ்ருதி போன்ற சூத்திரரும் ரைக்ய முனிவரிடம் வேதம் கற்றனர். யஜுர் வேதம் 26-ம் அத்தியாயத்தின் 2-ம் மந்திரத்தில் மனித

* சாந்தோக்யம் ப்ர. 4. கண 2. ப்ரவாக 2.

ருக்கெல்லாம் வேதம் ஓதவும் கேட்கவும் அதிகாரம் உண்டு என்று தெளிவுப்படுத்துகிறது. பிற்காலம் பொய் நூல்களைப் புனைந்து ஜனங்களைத் தங்கள் சுயநல வலையிற் பிடித்து மெய்நூல்களைப் புறக்கணிக்கச் செய்தவர்கள் மகா பாவிகளல்லவா?

அறிவிலி அப்பாவி மக்களை சிக்கவைத்து வசப்படுத்தும் கிரஹ சக்கரத்தைப் பாருங்கள்! வேத வாக்கியங்களைக் கிரகங்களுக்குச் சூடியிருக்கிறார்கள் :—

1. "आ कृष्णेन रजसा०"

—(யஜுர் 33.43) சூரிய கிரகத்திற்கும்

2. "इमं देवा असपत्नॐ सुवध्वम्०"

—(யஜுர் 9-40) சந்திர கிரகத்திற்கும்

3. "अग्निर्मूर्द्धा दिवः ककुत्पतिः०"

—(ருக் 7 - 44 : 10) செவ்வாய் கிரகத்திற்கும்

4. "उद्बुध्यस्वाग्ने०"

—(யஜுர் 15 : 54) புதனுக்கும்

5. "बृहस्पते अतियदर्यो०"

—(யஜுர் 26 : 3) வியாழனுக்கும்

6. "शुक्रमन्धसः०"

—(யஜுர் 19 : 72) சுக்கிரனுக்கும்

7. "शन्नो देवीरभिष्टय०"

—(யஜுர் 36 : 12) சனிக்கும்

8. "कया नश्चित्र आ भुव०"

—(யஜுர் 27 : 39) ராகுவுக்கும்

9. "केतुं कृण्वन्नकेतवे०"

—(யஜுர் 29 : 37) கேதுவுக்கும்

இம்மந்திரங்கள் உண்மையில் குறிப்பது பின்வருமாறு :

1. சூரியனுக்கும் பூமிக்கும் உள்ள ஆகர்ஷணத்தைக் குறிப்பது.

2. இராஜகுண விதாயகம்.
3. அக்னியைக் குறிப்பது.
4. யஜமானனைக் குறிக்கும்.
5. வித்வான்களைக் குறிப்பது.
6. அன்ன வீரியத்தைக் குறிப்பது.
7. ஜலம், பிராணன், பரமேச்வரனைக் குறிக்கும்.
8. மித்திரரைக் குறிக்கும் மந்திரம்.
9. ஞான சாதன மந்திரம்.

இந்த வாக்கியங்கள் சோதிட கிரகத்தைக் குறிப்பதன்று. அறியாமையால் இவற்றின் பொருளைத் திரித்துக் கூறினர்.

**வினா:** கிரகங்களால் ஏதாவது பலன் உண்டா இல்லையா?

**விடை:** போப் லீலைகட்டும் பொருளில்லை; சூரிய சந்திர கிரணங்களுக்கேற்றபடி குளிர் வெப்ப நிலையும், பருவ காலங்களும் மாறுவதால் உண்டாகும் சுகதுக்கங்களின் பலன் உண்டு. போப் லீலாவாலாக்கள் சொல்லுகிறார்கள். "ஓ, சேட்ஜீ, மஹராஜ், யஜமானரே! இன்று உமக்கு அஷ்டம சந்திரன், சூரியாதிகள் கொடிய வீட்டில் உள்ளன; இரண்டரை வருஷச் சனி உங்கள் காலை பிடித்திருக்கிறது. கொடிய ஆபத்து உண்டாகும்; தாம் வீட்டை விட்டுப் பரதேசத்தில் அலைய நேரிடும். ஆனால் உமது கிரகங்களுக்கு தானம், ஜபம், பூஜை பாடங்களால் சாந்தி செய்தால், துன்பம் விலகும்" "ஹே போப் ஜீ! உனக்கும் கிரகங்களுக்கும் என்ன சம்பந்தம்? கிரகமாவதென்ன?" என்று கேளுங்கள். போப் ஜீ உடனே சொல்லுவார்:

दैवाधीनं जगत्सर्वं मन्त्राधीनाश्च देवताः ।
ते मन्त्रा ब्राह्मणाधीनास्तस्माद् ब्राह्मणदैवतम् ॥

பாருங்கள், அத்தாட்சியை: "உலகம் தேவாதீனம்; தெய்வம் மந்திராதீனம்; மந்திரம் பிராம்மணாதீனம். ஆதலால் பிராமணனே தெய்வம்! ஏனென்றால் மந்திரங்களால் நாங்களே தெய்வத்தை அழைத்து உங்கள் விருப்பத்தை நிறைவேற்றும் அதிகாரமுண்டு. 'எங்களுக்கு இப்படி மந்திர சக்தியில்லாவிட்டால் நாஸ்திகரான நீவிர் எம்மை உலகில் இருக்க விடமாட்டீர்களே."

சத்தியவாதி: அடடா என்ன அத்தாட்சி! கள்ளர், திருடர், கொடுஞ்செயலரும் உங்கள் தேவதையின் ஆதீனத்தில் இருக்கிறுர்களோ? தேவதையே அவர்களால் தீவினை செய்வனவோ? அப்படியாஞல் உங்கள் தேவதைக்கும் அரக்கருக்கும் வேறுபாடில்லையே! உங்கள் ஆதீனத்தில் மந்திரம் இருந்தால், அதனுல் தேவதைகளை வசப்படுத்தி அரசக் கஜாஞவைக் கொள்ளையடித்து வந்து வீட்டில் சொகுசாக சுகமாக வாழலாமே! வீட்டுக்கு வீடு சனி முதலானவர்களும் எண்ணெய் தானம் வாங்கத் திரிவானேன்! யாரை குபேரன் என்று நீங்கள் அழைக்கிறீர்களோ அவரை உம் வசம் செய்துக்கொண்டு உங்கள் வீட்டைச் செல்வ நிறைவாக்குங்களே? ஏழைகளை ஏன் கொள்ளையடிக்கிறீர்கள்? உங்களுக்குத் தானந் தருவதால் சூரியாதி கிரகங்கள் மகிழுமா? இன்றேல் வெகுளுமோ? அப்படியாஞல் அதை நிரூபியுங்கள்! இரண்டு பேர் இருக்கிறுர்கள். ஒருவருக்கு அஷ்டமத்தில் சூரிய சந்திரர்; மற்றவருக்கு மூன்றில். இருவரையும் சித்திரை, வைகாசி வெய்யலில் செருப்பில்லாமல் நடக்கச் சொல்வோம். சூரியன் மகிழ்ந்தவர் காலும் மேலும் சுடக்கூடாது; சூரியன் சினத்தவர் காலும் மேலும் பொசுக்கவேண்டும். குளிர் காலப் பௌர்ணமி நிசியில் இருவரும் நிர்வாணமாக வெட்ட வெளியில் நிற்கட்டும். ஒருவருக்குக் குளிர் மற்றவருக்கு உஷ்ணமாஞல் சந்திரன் ஒருவருக்குக் கொடியனும் மற்றவனுக்கு நல்லவனும் ஆஞன் என்போம். என்ன, இந்தக் கிரகங்கள் உங்கள் சம்மந்திகளா? அவற்றிடமிருந்து கடிதம், தந்தி வருமா? போகுமா? அவற்றிற்கும் உமக்கும் போக்குவரத்துண்டா? உம்மிடம் மந்திர சக்தியிருந்தால் நீரே அரசஞகவோ செல்வஞகவோ ஆகலாமே! அல்லது சத்துருக்களைத் தம் வசம் படுத்தலாமே. இறைவன் ஆணையான வேதத்திற்கு மாருகப் போப்லீலை செய்பவனே நாஸ்திகஞவான். கிரகம் பிடித்தவன் உமக்குக் கிரகதானம் செய்வானேன்? அதைத் தானே புசிக்கலாமே. பிறருக்கன்றி உங்களுக்குத் தானம் தந்தாலே கடவுள் மகிழும் என்றுல், உங்களுக்குக் கிரகங்களுடன் ஒப்பந்தமுண்டோ? உண்டென்றுல் சூரியனை உங்கள் வீட்டிற்கு அழைத்து வாருங்களேன்; வீடு பற்றிச் சாவீர்!

உண்மை என்னவென்றுல் சூரியாதி கிரகங்கள் ஜடம். அவை யாருக்கும் சுகதுக்கம் தரமுடியாது. நீங்கள் இந்தக் கிரகங்களை வைத்து வயிறு வளர்க்கிறீர்கள். நீங்களே ஆளைப்

பிடித்து ஆட்டும் கிரகங்களின் மூர்த்தியாயிருக்கிறீர்கள். ஏனென்றால், கிரகம் என்ற வார்த்தையின் பொருள் உங்களுக்கே பொருந்தும் "ये गृह्णन्ति ते ग्रहा:" (யே கிரஹந்தி தே க்ரஹா:) கிரகிப்பவன் (வாங்குபவன்) கிரகம். அரசர், செல்வர், வணிகர், வறிஞர் வீடுகளுக்கு நீங்கள் போகாத வரையில் நவகிரகங் களின் ஞாபகமேயில்லை. நீங்களே சூரிய சனீஷ்வராதி குரூர வடிவில் அவர்கள் மேலேறி, அவர்களைப் பிடித்து ஆட்டுகிறீர்கள். உங்கள் கொடிய பிடியில் சிக்கினால் விடுதலையில்லை; அப்படிச் சிக்காதவர்களை நாத்திகரென்று வசை கூறித் திரிகிறீர்கள்.

போப்ஜி : ஜோதிடத்தின் கண்கண்ட பலனைப் பார். வானி லிருக்கும் சூரியன், சந்திரன், ராகு, கேது சேர்க்கையின் பலனை கிரகணத்தை முன்பே சொல்ல முடிகிறது. இது கண்கூடாவது போலவே கிரகபலனுமாகும். செல்வன், வறியன், அரசன், ஆண்டை இன்ப துன்பமெல்லாம் கிரகபலனாலாகும்.

சத்தியவாதி : கிரகணக் குறிப்பு கணித வித்தையாலன்றி சோதிடத்தால் எழுவதன்று. கணித வித்தையின் முடிவுகள் உண்மையே. குளிர் வெப்ப இயற்கை நிலையுணர்த்தும் நட்சத் திரக் குறிப்புகள் உண்மையே. மற்றப் பலித வித்தைப் பொய். பூமியும் சந்திரனும் சுற்றிச் சுழலும் கணிதத்தால் சூரிய அல்லது சந்திர கிரகணத்தின் இடம், காலம், இருக்கைப்பற்றி அறிகிறோம்.

छादयत्यर्कमिन्दुर्विधुं भूमिभा: ॥

(கிரகலாகவம். சந்திரகிரஹணாதிகாரம் அத். 4 ஸ்லோ. 4)

இது சித்தாந்த சிரோமணி வசனம். சூரிய சித்தாந்தத்தி னும் இதே காணும். 'சூரியனுக்கும் பூமிக்கும் நடுவே சந்திரன் வந்தால், சூரிய கிரகணம்; சூரியனுக்கும் சந்திரனுக்குமிடையே பூமி வந்தால் சந்திர கிரகணம். அதாவது சந்திரன் நிழல் பூமி மேல்; பூமி நிழல் சந்திரன் மேல் விழும். சூரியன் சுயம்பிர காசம், அதனால் அதன்மேல் எந்தக் கிரகத்தின் நிழலும் படிவ தில்லை. நாம் சூரியன் அல்லது விளக்கின் முன் நிற்கையில், எதிர்ப்புறம் உடல் நிழல் படிவதுபோலவே கிரகணத்திலும் நடக்கிறது. அவரவர் வினையால் அரசன், ஆண்டி, வறியன், செல்வன், சுகி துக்கியாவது தவிர கிரகத்தால் அன்று. எத்த னையோ சோதிடர்கள் கிரகபலன் பார்த்தே தமது மகனுக்கும்

மகளுக்கும் மணவினை செய்கின்றனர். அப்படி மணம் புரிந்தவருள் சண்டை சச்சரவுகளாகின்றன ; சிலர் விதவை, விதவனுவதேன் ? ஜாதகப் பலன் உண்மையானுல் இப்படி நடக்குமா ? ஆதலால் வினைப்பயனே மெய் ; கிரகப்பயன் பொய். இன்ப துன்பங்களுக்கு அது காரணமில்லை. கிரகம் வானில் உள்ளது ; பூமிக்கும் அதற்கும் வெகு தூரம். அதற்கும் வினைக்கும் வினைஞனுக்கும் சம்பந்தமே யில்லை. வினைஞனும் வினைப்பயனுண்பானும் ஆத்மா ; பலனைத் தருவது இறைவன். கிரகப் பலன் உண்மையானுல் இதற்குப் பதிற் சொல்லும் : ஒருவன் பிறந்த நேரத்தை வைத்து துருவ நக்ஷத்திர இருப்பைக்கொண்டு நீர் ஜாதகம் கணிக்கிறீர். அதே நேரம் வேறு பலர் பிறக்கிருர்கள் அல்லவா ? அல்லவென்ருல் பொய் சொல்லுகிறீர் ; ஆம் என்ருல் ஒரு சக்கரவர்த்தி பிறந்த நேரத்தில் பிறந்த மற்றவரும் ஏன் சக்கரவர்த்தியாவதில்லை ? இதெல்லாம் வயிற்றுப் பிழைப்பு வேலைஎன்ருல் எல்லாரும் உம்மை நம்புவர்.

## கருட புராணம்

**வினு :** என்ன, கருட புராணமும் பொய்யா ?

**விடை :** ஆம். பொய்தான்.

**வினு :** ஆனுல் இறந்த ஜீவனுக்கு என்ன கதி ?

**விடை :** அததன் வினைக் கேற்ற கதிதான்.

**வினு :** எமராஜா அரசன், சித்திரகுப்தன் மந்திரி, அவனது அதிபயங்கர கிங்கரர் கருமலை போன்றவர் ; அவர்கள் ஆன்மாக்களைப் பற்றி பாப புண்ணியத்திற்கேற்றபடி நரகத்திலோ சொர்க்கத்திலோ வீசுகிருர்கள். ஆன்மாக்கள் வைதரணி நதியைத் தாண்டவே இங்கே தானம், புண்ணியம், சிரார்த்தம், தர்ப்பணம் கோதானுதிகளைச் செய்கிருர்கள்* இவையெல்லாம் எப்படி பொய்யாகக் கூடும் ?

**விடை :** இதெல்லாம் போப் லீலையின் கட்டுக் கதையே. பிறவுலகில் ஜீவர் யமலோகம் செல்வதாம். யமனும் சித்ராகுப்தனும் அவர்களை விசாரிப்பதாம் ; அப்படியானுல் யமலோகப் பாவிகளை விசாரிப்பதார் ? எங்கே ? யமலோகத்திற்கு

---

* கோதானம் செய்தால் வைதரணி நதிக்கரையில் கோ (பசு) நிற்குமாம். ஆன்மா அதன் வாலைப் பற்றிக்கொண்டு நீந்தி நதியைக் கடக்குமாம்.

நியாயம் வழங்க இன்னொரு யமலோகம் உண்டா? யம கிங்கரர் உடல் மலைபோல் என்றால் அவர்களைக் காண முடியாததேன்? சாகக் கிடக்கிறவன் அறையில் அந்த மலை களின் விரல்கூட நுழைய முடியாதே. அவர்கள் அங்கே எப்படி நுழைவார்கள்; தெருவிலும் சந்திலும் எப்படிப் புகுவார்கள்—மலைபோன்றவர் வந்தால் இடமுண்டா? அவர் கள் தம் உடல்களை அணுமாத்திரம் குறுக்கிக் கொள்வார் களோ? அப்படிக் குறுக்கும்போது மலையளவு எலும்புக் குவியல் எங்கிருக்கும்? போப்பின் வீட்டில் குவிந் திருக்குமோ? வேறு இடம் ஏது? ஒரு காட்டில் தீப்பிடித்தால் அதிலுள்ள எறும்பு முதல் பல்லுயிர்கள் கணத்தில் உடல் பிரிகின்றன. அங்கே கணக்கற்ற யமகிங்கரர் புகுந்தால் இருட்டு கும்மென்றிருக்குமே? ஜீவர்களைப் பிடிப்பதில் அவருள் போட்டி வந்தால், கலகம் உண்டாகுமே. அத்தனை பெரிய கிங்கரரும் அடிசாய்ந்தால் ரகளைதான்! கருட புராணம் படிக்கும், கேட்க்கும் போப்புகள் வீட்டில். அந்த மலையுடல்கள் விழுமே! வீடு நொருங்குமே! போப்புகள் நொருங்கிப் போவார்களே! அவர்கள் வாசல் வழிகளெல் லாம் அடைப்பட்டுப்போகுமே! பிறகு அவர்கள் தப்பி ஓடவும் வழியிராதே! அந்தோ கருடபுராணமே!

## சிரார்த்தம், தர்ப்பணம்

சிரார்த்தம், தர்ப்பணம், பிண்டப் பிரதானாதிகள் இறந்தவர் உயிரைப் போய்ச் சேருவதில்லை. அவை இறந்தவர் பிரதிநிதி யான போப்ஜி வீடு, வயிறு கைகளிலேயே போய்ச் சேருகின்றன. வைதரணியை நீந்திக் கடக்கச் செய்யும் கோதானமோ போப்ஜீ வீட்டுக்கு அல்லது கசாப்புக் கடைக்குப் போய்ச் சேருகிறது. வைதரணிக்குப் பசு போவதில்லை என்றால் அதன் வாலைப் பிடிப்பதெப்படி? பிடிக்கும் கையும் இங்கல்லவா பிணமாகக் கிடக்கிறது! அதை எரிப்பர் அல்லது புதைப்பர்; அது வாலைப் பிடிப்பதெப்படி?

இதை விளக்க ஒரு கதையைச் சொல்லுவோம் :

### குடியானவனின் பசு

ஒரு குடியானவன் இருந்தான்; அவன் பசு நல்ல பால் இருபது சேர் கறந்தது; பால் வெகு ருசியாயிருந்தது; அவன்

பாலை மிக விரும்பிப் பருகினுன். அவ்வப்போது புரோகித னுக்கும் தந்தான். புரோகிதன் ருசிகண்ட பூனையானுன். குடியானவன் கிழத் தந்தை சாகும்போது அந்த மாட்டைத் தானம் வாங்கி விடலாமென்று புரோகிதன் நினைத்தான். கிழவன் சில நாட்களில் சாகக்கிடந்தான். வாய் அடைத்துவிட்டது; கட்டிலிலிருந்து இறக்கி அவன் உடலைத் தரையில் போட்டா யிற்று. மரண சமயம் வந்தது. குடியானவன் உறவு, சுற்றம், நண்பரெல்லாம் அங்கே சூழ்ந்திருந்தனர். வந்தான் போப்ஜீ, "யஜமான், இவன் கையால் கோதானம் செய்யும்" குடியான வன் தந்தை கையில் 10 ரூபாய் வைத்து, சங்கல்பம் சொல்லச் சொன்னுன். உடனே போப்ஜீ, "என்னையா! உன் அப்பன் அடிக்கடி இறக்கிருனு? கொண்டாருமையா அசல் பாற் பசு, இளம் பசு, உத்தமமான பசு! அதைக் கோதானம் செய்யும்."

குடியானவன்: என்னிடம் ஒரே பசுதான் உண்டு; அதைக் கொடுத்துவிட்டால் என் குழந்தைகள் வருந்துமே; அதைத் தரேன். இதோ இருபது ரூபா வைத்துக் கொண்டு சங்கல்பம் சொல்லும். இத்தொகையைக் கொண்டு இன் னொரு பால் மாடு வாங்கிக்கொள்ளலாம்.

போப்ஜீ: "நல்லதப்பா நல்லது! உன் அப்பனை விட இந்தப் பசு பெரிதென்று நினைக்கிருய்! என்ன, உன் அப்பனை வைதரணி நதியில் மூழ்கி வருத்தவா பார்க்கிருய்! நல்ல மகனப்பா நீ!" என்றுன். போப்ஜீ சுற்றியிருந்த சுற்றத் தாரைக் கடைக் கண் விழித்தான். அவர்களை முன்பே சரிபண்ணி வைத்திருந்தான். அவர்கள் போப்ஜீ பக்கம் சேர்ந்து கொண்டு 'கோதானமே தரவேண்டும்' என்றுர் கள். எல்லாரும் சேர்ந்து போப்ஜீக்குப் பசுவை வாங்கித் தந்தார்கள். குடியானவன் ஒன்றும் பேசாமல் தானம் செய்தான். கிழத் தந்தை இறந்தான். போப்ஜீ மாடு, கன்று, கறவைச் செம்பு எல்லாம் வீட்டில் கொண்டுபோய்ச் சேர்த்தான். பிறகு தான் தகனக் கிரியை நடத்தச் சுடு காட்டிற்கு வந்தான்; தகனக்கிரியை நடந்தது; அங்கும் கொஞ்சம் போப் லீலை நடந்தது. தசாஸ்து, பிண்டக் கிரியை எல்லாம் நடந்தன. அதற்கும் குடியாவனனிடமிருந்து புரோகிதன் பணம் பறித்தான். மஹா பிராமணர்களும் பிச்சைக்காரரும் பணம் பறித்து வயிற்றை நிரப்பினர்.

இழுவெல்லாம் முடிந்தன ; குடியானவன் கையிளைத்தான் ; விலைப் பால் வாங்கிக் குழந்தைகளுக்குக் கொடுத்தான். பதினுன்காவது நாள் குடியானவன் போப்ஜீ வீட்டுக்குச் சென்ருன். அவன் அப்போது தான் பால் கறந்து எழுந்தவன். குடியானவனைப் பார்த்து, "எஜமானனே வாரும் அமரும்" என்று உபசரித்தான்.

குடியானவன் : நல்லது புரோகிதரே ! நீரும் இங்கே வாரும்.

போப்ஜீ : சரி ; இந்தப் பாலை வைத்து வருகிறேன்.

குடி : ஊஹூ ; பால் செம்பை இங்கே கொண்டாரும்.

[புரோகிதன் சற்று ஆலோசித்து, பாற் செம்பை முன்னே வைத்து உட்கார்ந்தான்.]

நீர் பெரும் பொய்யன் !

போப் : நாஞ ? என்ன பொய் சொன்னேன்.

குடி : நீர் என்னிடம் கோதானம் பெற்றீரே எதற்காக ?

போப் : உன் தந்தை வைதரணீ நதியை தாண்டத்தான்.

குடி : அப்படியாளுல் பசுவை நீ வைதரணீ நதிக்கரைக்கு ஏன் அனுப்பவில்லை ? (என் பிதாஜீ வைதரணீ நதியைக் கடக்க உன்னை நம்பிப் பசுவைத் தந்தோம் ; அதன் வாலைப் பிடித்தே அவர் நதியை நீந்தித் தாண்ட வேண்டும்.) நீ பசுவை வீட்டில் கட்டிச் சுகமாகப் பால் கறந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கிருயே ! ஐயோ என் தந்தை எத்தனை தடவை அந்த நதியில் தள்ளாடி விழுந்து கஷ்டப்பட்டாரோ ?

போப் : இல்லை இல்லை ; இந்தத் தான பலனுல் அங்கே இன்ெனுரு பசு முளைத்து அது உன் தந்தையைக் கரையேற்றி யிருக்கும்.

குடி : வைதரணீ நதி எங்கே ? இங்கிருந்து எவ்வளவு தூரத்தி லிருக்கிறது ?

போப் : அது சுமார் முப்பது கோடி கோசங்கள் தூரம் இங்கிருந்து. ஏனெனில் உலகின் குறுக்களவே 490,000,000 கோசங்கள் ; அதன் தென்மேற்கே வைதரணீ ஓடுகிறது.

குடி : அவ்வளவு தூரத்திலிருந்து இன்ஞர் தந்தை புண்ணியப் பசுவின் உதவியால் வைதரணீயைக் கடந்தார், என்று தந்தி, கடிதம் ஏதாவது வந்ததா ? காட்டும்.

போப் : எங்களிடம் தந்தி தபால் இல்லை கருட புராணமே உண்டு.

குடி : இந்தக் கருட புராணம் உண்மையென்று எப்படி ஒப்புவோம் ?

போப் : எல்லோரும் ஒப்புகிறபடிதான்.

குடி : இந்தப் புத்தகம் உமது பாட்டன் பூட்டனால் உமது ஜீவனத்திற்காகவே எழுதப் பெற்றது. ஒரு தந்தைக்கு மகன் மேலே தான் பிரியம் அதிகம். எனது தந்தையிடமிருந்து கடிதம் தந்தி செய்தி வந்தால் வைதரணீ நதிக் கரைக்குப் பசுவை அனுப்புவேன். அவர் நதியைக் கடந்த பிறகு பசுவை மீண்டும் வீட்டிற்குக் கொண்டு வருவேன். நானும் குழந்தைகளும் சுகமாகப் பால் கறந்து பருகுவோம்.

போப் : தந்த தானத்தைப் பறித்தால் நரகம் புகுவாய்.

குடி : சுப் ! பேசாதே ! பதிமூன்று நாள் பாலில்லாது நாங்கள் வருந்தினோம். அதன் நஷ்டத்தை உன்னிடம் வாங்குவேன்.

இவ்வாறு சொல்லிக் குடியானவன் பசு கன்று செம்பு— எல்லாம் கொண்டு வீடு சேர்ந்தான்.

இந்தக் குடியானவன் போல் ஆட்களிருந்தால் போப் லீலை செல்லவே செல்லாது.

## யமலோக லீலை

தசகாத்திர பிண்டங்களாய் பத்து அங்கங்களுக்கு சபிண்டிகரணம் செய்வதால், பத்து அங்கங்களுடன் ஆன்மா கூடி கட்டை விரல் பருமன் உடல் ஆகி, ஆன்மா யமலோகம் புகும் என்கிறார் புரோகிதர். அப்படியானால் மரிக்கும் போது யம தூதர் வருவது வீணே. அவர்கள் செத்துப் பதிமூன்று நாட்களுக்குப் பிறகே வரவேண்டும். தசாஸ்துவால் ஆள் உடல் மீள்வதெனில் அது மனைவி மக்களிடம் உள்ள வாஞ்சையால் வீட்டிற்குத் திரும்பி வராததேன் ?

வினா : சுவர்க்கத்தில் ஒன்றும் கிடைக்காது. நாம் செய்யும் தானமே அங்கே கிடைக்கிறது ; ஆதலால் எல்லாத் தானமும் செய்ய வேண்டியதேயாம்.

விடை : சுவர்க்கத்தை விட இந்த உலகமே நல்லது. இங்கே தர்ம சத்திரங்கள் உள்ளன ; மக்கள் தானம் வழங்கு

கிறுர்கள். இஷ்ட மித்திர பந்துக்கள் இருக்கிறுர்கள். ஆடையணிகள் உள்ளன. நீங்கள் சொல்லும் வகையில் சுவர்க்கத்தில் ஒன்றும் கிடைப்பதில்லை ; அவ்வளவு வரண்ட, ஈரமற்ற, தரித்திர சுவர்க்கத்திற்குப் போப்ஜீயே போய் ஆபாசப்படுத்தட்டும். அங்கே நல்லவர்களுக்கு என்ன வேலை ?

வினு : உங்கள் கூற்றுப்படி யமனும் யமலோகமும் இல்லையென்றுல், இறந்த ஜீவன் எங்கே செல்லுகிறது ? அதற்கு நியாயம் வழங்குவது யார் ?

விடை : உமது கருடபுராணச் சரக்கெல்லாம் சரியான பிரமாணமில்லை. வேத வாக்கு உண்மையிதுவே :

यमेन । वायुना । सत्यराजन् ॥

—(ருக் 1-163-2 ; அதர்வன 20-39-4 ; யஜுர் 20-4)

'யமன்' என்றுல் 'வாயு'. உடலை விட்ட உயிர், வாயுவுடன் அந்தரத்தில் இருக்கிறது ; தர்மராஜாவான சத்தியக் கடவுள், பக்ஷபாதமற்ற நடுநிலைப் பெருமான் அனைவருக்கும் நியாயமளிக்கிறுன்.

வினு : அப்படியாளுல் கோதானுதி தானங்கள் யாருக்கும் செய்யலாகாது ; தானம் புண்ணியம் ஒன்றும் செய்யலாகாது என்பது கொள்கையா ?

விடை : நீர் சொல்வது வீண்பேச்சு. ஏனெனில் நல்ல பாத்திர மறிந்து பரோபகாரிகளுக்கு பரோபகாரத்திற்காக தங்கம், வெள்ளி, வைரம், முத்து, மாணிக்கம், அன்ன தானம், ஆடை, வீடு தருதல் அவசியமே, நலமே. ஆளுல் தகுதி யற்றவர்களுக்குத் தானம் தரலாகாது.

## தக்கார், தகவிலர்

வினு : தக்கார் தகவிலர் குறிப்பென்ன ?

விடை : வஞ்சகம், கபடு, சூது, சுயநலம், காமம், குரோதம், லோபம், மோகம் கொண்டவன், பிறருக்குத் தீங்கிழைப்பவன், பேராசையன், பொய்யன், அறிவிலி, தீயர்நேயன், சோம்பன், ஒருவன் கொடுத்தால் அவனையே அடிக்கடி நச்சுகிறவன், வழி மறித்துக் கேட்பவன், விடாமுண்டன், வாசலிலே நின்று பிச்சை கேட்பவன், கொடுக்க முடியாத வனை நச்சுகிறவன், கொடுத்தாலும் திருப்தியற்றவன்,

இல்லையென்றாலும் இன்னும் இரப்பவன், திட்டி ஏசி வைபவன், பல தடவை தந்தும் ஒருதரம் தராது போனால் தூற்றிப் பகைக்கிறவன், ஆஷாடபூதிச் சாது, பிறரைத் தீய வழிகாட்டிக் கெடுப்பவன், வயிறு புடைக்க உண்டும் பஞ்சப் பாட்டுப் படுகிறவன், பிறரை முகத் துதி செய்து வஞ்சிப் பவன், வைத்துக் கொண்டே இல்லை என்பவன், பிறரை ஏமாற்றும் சுயநலப்புலி, இரவும் பகலும் பிச்சைத் தொழிலே செய்பவன், ஒருவன் உண்ண அழைத்தால் கஞ்சா, அபினி சாப்பிட்டுப் பெருந் தீனி தின்பவன், உன்மத்தம் பிடித்த வெறியன், சத்திய மார்க்க விரோதி, சுயநலத்திற்காகப் பொய்வழி செல்கிறவன், போலித் துறவி, தன் சீடருக்குத் தனக்கே தொண்டு செய்ய வேண்டுமென்பவன், பிற உத்தமருக்குத் தொண்டு செய்வதைத் தடுப்பவன், நல் லறிவுக் கல்விக்கு விரோதி, உலக விரோதி, ஆண், பெண், கணவன், மனைவி, தாய், தந்தை, மக்கள், அரசன், குடிகள், இஷ்டமித்திர பந்துக்களை மனம் கசக்கச் செய்பவன்— எல்லாம் மாயை உலகம் பொய் என்றுபதேசம் செய்பவன்— இவர்களே குபாத்திரர், தகவிலர்.

உண்மையான பிரமசாரி, புலனை வென்றவன், வேதாதி வித்தை கற்றவன் கற்பிப்பவன், சுசீலன், சத்தியவாதி, பரோப காரப் பிரியன், புருஷார்த்தன், உதாரன், வித்யா தர்மத்தை உயர்த்துவோன், தர்மாத்மா, சாந்தன், இசை வசைகளால் இன்ப துன்பமடையாதவன், அச்சமற்றவன், உத்ஸாஹி, யோகி, ஞானி, சிருஷ்டித் தன்மை, வேதஞானம், ஈச்வர குணகர்ம ஸ்வபாம் அறிந்து நடப்பவன், நியாயப்படி ஓரகமின்றி யாருக்கும் பாதகமின்றி நடப்பவன், முகத்துதி செய்யாதவன், கேள்விக்குச் சரியான சமாதானம் சொல்பவன், தன்னுயிர் போலவே மன்னுயிரைக் கருதுவோன், பிறர் சுகதுக்க லாப நஷ்டங்களை உணருவோன், அறியாமை, கிலேசம், அடம், துராக்ரகாபிமானமற்றவன், மானாபமானங்களைப் பொருட் படுத்தாதவன், அமுதம் போன்று வசையையும், விஷம்போன்று இசையையும் மதிப்பவன், மகிழ்ச்சியுடன் தருவதை மகிழ்ந்து ஏற்பவன், ஆபத்துக் காலத்திலும் கேட்டதைக் கொடாதவரைத் தூற்றாமல் சினவாமல் உடனே திரும்பிச் செல்பவன், சுக புருஷருடன் நட்பு, துக்கிகளிடம் கருணை, புண்யாத்மாக்களிடம் இன்பம், பாபிகளிடம் உபேக்ஷ (விருப்பு வெறுப்பற்ற நடுநிலை),

சத்தியசந்தன், சத்தியன், சத்தியவாதி, சத்தியகாரி, கபடமற்றவன், வெறுப்பற்றவன், பொருமையற்றவன், பெருந்தன்மையன், சத்திய புருஷன், தர்மயுக்தன், துராசாரமில்லாத சதாசாரி, உடல் பொருள் ஆவியெல்லாம் பரோபகாரத்திற்கே ஈவோன், பிறர் நலத்திற்காகத் தன் உயிரையும் தருவோன், இத்தகைய சுபலட்ணமுள்ளவனே தக்கவன், சுபாத்திரனுவான். ஆனுல் பஞ்சகாலத்திலும், ஆபத்திலும், அன்னபானம் ஆடை மருந்து முதலியவற்றை அனைவரும் பெறத்தக்கவரே.

வினு : கொடையாளி எத்தனை வகை?

விடை : மூவகை—உத்தமன், மத்திமன், அதமன். தேச கால பாத்திரமறிந்து நல்லறிவும், நல்லறமும் வளரத் தருவோன் உத்தமன். புகழுக்கும் சுயநலத்திற்கும் தருவோன் மத்திமன். தனக்கும் பிறருக்கும் நலங்கருதாமல், விலைமாதர், முகத்துதி செய்வோர், கோமாளிகளுக்குக் கொடுப்பவன்; கொடுக்கும்போதே ஏளனம் செய்பவன், பாத்திரமறியாமல் எல்லாம் ஒரு விலை என்று வாதிப்பவன், தர்மாத்மாக்களுக்குத் துக்கம் விளைத்துத் தனக்குச் சுகங்கருதியே தருவோன், இவர்களே நீசர், அதமன். தீரவிசாரித்து தர்மாத்ம வித்வான்களுக்கு மரியாதை செய்பவன் உத்தமன்; சிறிது சோதித்தோ சோதியாமலோ தன் புகழுக்காகத் தருவோன் மத்திமன்; ஆராயாமல் குருட்டுத்தனமாகத் தருவோன் அதமனுவான்.

வினு : தான பலன் கிடைப்பது இங்கா, பரலோகத்திலா?

விடை : எங்கும் கிடைக்கும்.

வினு : பலன் தானுகக் கிடைக்கிறதா? யாராவது தருவதா?

விடை : பலனைத் தருவது ஈச்வரனே. திருடனும் கொள்ளைக்காரனும் தாமே சிறைப்பட விரும்புவதில்லை; அரசனே அவர்களைச் சிறையிடுகிருன். அதுபோலவே கடவுளும் கர்ம பலனைத் தருகிருர். அவர் தர்மாத்மாக்களை திருடன் முதலானவர்களிடமிருந்து காப்பாற்றி, இன்பந் தந்து பாதுகாக்கிருன். எல்லாருக்கும் பாப புண்ணியங்களுக் கேற்றபடி துக்க சுகங்களைப் புசிக்கச் செய்கிருன்.

வினு : கருட புராணுதிகள் வேதார்த்தம் அல்லது வேதத்தை விளக்குகின்றனவா, மேன்மைப்படுத்துகின்றவா?

**விடை :** இல்லை; அவை வேத விரோதமும் மாறுபாடும் செய்கின்றன ; தந்திரமும் அவ்வாறே. புராண தந்திர நூல்களை நம்புகிறவன் ஒருவனுக்கு நண்பன் உலகினுக்குப் பகைவனாகிறான். இந்த நூல்கள் ஒருவருக்கொருவர் பகை மூட்டுவன. மனிதனானவன் இவற்றை நம்பக்கூடாது; அப்படி நம்புகிறவன் மிருகமானவன்.

## உபவாச தினங்கள்

பாருங்கள்? சிவபுராணத்தில் திரயோதசி, திங்கட்கிழமை, ஆதித்ய புராணத்தில் ஞாயிறு; சந்திரகண்டத்தில் சோமகிரகத்தில் கூடிய செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனிக்கிழமைகள்; ராகு கேதுக்கள் நாட்கள்; விஷ்ணு புராணத்தில் ஏகாதசி; வாமனத்தில் துவாதசி; நரசிம்மத்திலும் அனந்த புராணத்திலும் சதுர்தசி, பௌர்ணமி; திக்பாலகருக்குத் தசமி; துர்க்கைக்கு நவமி; வசுக்களுக்கு அஷ்டமி; முனிகளுக்கு ஸப்தமி; கார்த்திகேய சுவாமிக்கு சஷ்டி; நாகனுக்குப் பஞ்சமி; கணேசனுக்கு சதுர்த்தி; கௌரிக்குத் திரிதீயை; அசுவினி குமாரனுக்குத் துவிதீயை; ஆத்யா தேவிக்குப் பிரதமை; பிதுர்களுக்கு அமவாசை—இவை புராணப்படி உபவாச தினங்களாம். 'இந்தக் கிழமை திதிகளில் அன்னபானம் கொள்பவருக்கு நரகமே கதி' என்று எல்லாப் புராணங்களும் எழுதுகின்றன. போப் அல்லது போப் சீடரிடம், "ஐயா! எந்தத் திதி, வாரத்தில் உணவு கொள்வது" என்று கேட்கவேண்டும். ஏனெனில் எல்லாத் திதிகளும் உபவாச தினங்களில் அடக்கம்; சாப்பிட்டால் நரகம்! நிர்ணயசிந்து, தர்மசிந்து, விரதார்க்கா முதலிய கட்டுமான நூல்களில் விரதங்கள் தாறுமாறாகச் சொல்லப்பட்டுள்ளன. சைவர் ஏகாதசியன்று விரதம் காத்தால், பிறர் துவாதசியன்று ஏகாதசி விரதமிருப்பர். இந்த ஏகாதசி விரதமெல்லாம் போப்புகளின் சுயநல லீலையே. பட்டினி கிடந்து சாவதிலும்கூட விவாவதத்தைக் கிளப்புகிறது இந்த விசித்திரமான போப் லீலை? இவர்களுக்குத் தயை சிறிதுமில்லையே!

एकादश्यामन्ने पापानि वसन्ति ॥

(பத்ம புராணம். ப்ரஹ்ம கண்டம். 15-11 ; ஏகாதசி மகாத்மியம்)

'ஏகாதசி சாப்பாட்டில் எல்லா பாபமும் வசிக்கும்.' என்று அவர்கள் சொல்லுகிறார்கள். சாப்பாட்டில் யார் பாபம் வசிக்கிறதென்று

இந்தப் போப்புகளிடம் கேட்கவேண்டும், ' உன் பாபமா ; உன் பிதுர்க்கள் பாபமா? எல்லா பாபமும் ஏகாதசியில் வசிப்பதானால் ஏகாதசியன்று வேறு யாருக்கும் துக்கம் வரக்கூடாதே. அதற்கு மாருக ஏகாதசியன்று பசி தாகாதி துக்கங்கள் ஏற்படுகின் றனவே ; துக்கம் பாப பலனே. அதனால் பட்டினி விரதத்தால் சாவதும் பாபமே. 'இதன் மகாத்மியத்தைப் புகழ்ந்திருக்கிருர் கள். இதைக் கேட்ட பாமர மக்கள் ஏமாற்றமடைகிருர்கள். இவற்றிலுள்ள ஒரு கதை கேளுங்கள் :

## ஏகாதசி புராணம்

பிரம்ம லோகத்தில் ஒரு வேசை, ஏதோ அபராதம் செய்து பூலோகத்தில் விழும்படி சாபம் பெற்ருள். " நான் மீண்டும் எப்படி சுவர்க்கம் சேர்வது " என்று அவள் துதித்து வேண்டி ளுள். " யாராவது உனக்கு ஏகாதசி விரதப் பலனைத் தந்தால் நீ சுவர்க்கத்திற்கு வரலாம் " என்ருர் கடவுள். வேசை விமானத் துடன் ஒரு நகரில் இறங்கினுள். அந்த ஊர் அரசன் " நீ யாரம்மா, எங்கே வந்தாய் " என்று விளுவினுன். அவள் தன் வரலாற்றைச் சொல்லி, " யாராவது எனக்கு ஏகாதசி பலனை அர்ப்பணம் செய்தால், நான் மறுபடியும் சுவர்க்கம் அடைய முடியும் " என்று சொன்னுள். அரசன் தனது நகரெல்லாம் தேடினுன். ஏகாதசி விரதிகள் யாரும் கிடைக்கவில்லை. ஆனுல் ஒருநாள் ஒரு சூத்திரப் பெண் தன் கணவனுடன் சண்டை போட்டு இரவும் பகலும் பட்டினியிருந்தாள். அன்றுதான் தெய்வ வசத்தால் ஏகாதசி. " ஏகாதசி என்று பட்டினியிருக்கவில்லை. நான் சாப்பிடாதிருந்த நாள் தற்செயலாக ஏகாதசியாயிருந்தது" என்ருள் அந்தப் பெண். இந்தப் பெண்ணைப்பற்றி அரசனிடம் சிப்பாய்கள் தெரிவித்து அவளை அரசன் முன் கொண்டுவந் தார்கள். அரசன் வேசை யிறங்கி வந்த விமானத்தைத் தொடும் படி கட்டளையிட்டான். அந்தப் பெண் தொட்டாள். ஹா ஹா ! உடனே வேசையை தூக்கிக்கொண்டு அந்த விமானம் சுவர்க் கத்திற்குப் பறந்ததாம் ! அகஸ்மாத்தாக ஏகாதசி விரதமிருந்த பலன் இதுவானுல், அறிந்து இருந்தால் அடடா அதன் பலனுக்கு அளவுண்டா ?!!! ஐயோ குருட்டுச் சனங்களா ! இந்தக் கதை மெய்யானுல் சுவர்க்கத்தில் கிடைக்காத ஒரு வெற்றிலை அனுப்ப விரும்புகிருேம். ஏகாதசிகாரர்களெல்லாம் விரத பலனைத் தாருங்கள் ! ஒரு வெற்றிலை மேலே சென்ருல் பிறகு இலட்சம் கோடி வெற்றிலை அனுப்பலாம். நாமும் ஏகாதசி விரதம் பரி

பாலிப்போம். அந்த வெற்றிலை சுவர்க்கத்திற்குப் பறந்து செல்லாவிட்டால் பட்டினியிருக்கும் துன்பத்திலிருந்து உங்களை நாம் காக்கிறோம்.

ஆண்டில் வரும் 24 ஏகாதசிகளுக்கும் போப்புகள் பல வகைப் பெயர்களைத் தந்திருக்கிறார்கள். ஒன்றிற்கு ' தனதா ', ஒன்றிற்கு ' காம்தா ', மற்றொன்றிற்கு ' புத்ரதா ', இன்னொன்றிற்கு ' நிர்ஜலா '. எத்தனையோ ஏழைகளும், காமிகளும், மகப்பேறில்லாத கிழவர்களும் ஏகாதசியிருந்து கிழவர்களாய் இறந்து போனார்கள். ஆனால் அவர்களுக்குத் தனமோ, காமமோ, புத்திர பாக்கியமோ கிடைக்கவில்லை. வைகாசி, ஆனியில் சுக்கில பக்ஷத்தில் ஒரு மணி நேரம் நீர் பருகாவிட்டால் சோர்ந்து வருகிறது; அப்போது நிர்ஜல உபவாசமிருந்தால் எவ்வளவு துன்பமாகும். வங்காளத்தில் விதவைகள் இந்த ஏகாதசி தினத்தில் அதிகம் வருந்துகிறார்கள். இந்த தயவற்ற கொடியர் உள்ளத்தில் கருணை சிறிதும் இருந்தால், நிர்ஜலத்திற்குப் பதில் ஜலஏகாதசி, என்று வைத்திருப்பார்கள். புஷ்ய சுக்லபக்ஷ ஏகாதசியை நிர்ஜலம் என்றிருப்பார்கள்—ஈரமற்ற ஏகாதசி! ஆனால் இந்தப் போப்புகளுக்கும் தயை கருணைக்கும் வெகுதூரம். 'ஆள் இருந்தாலென்ன, இறந்தாலென்ன, போப்ஜி வயிறு நிறைந்தால் சரி' என்ற போக்கிலிருக்கிறது காரியம்! கர்ப்ப ஸ்திரீகளும், மணம் புரிந்த யுவரும், குழந்தைகளும் உபவாசமிருக்கக்கூடாது. பசி மந்தமானபோது அல்லது அஜீரணமானபோதே உபவாசமிருக்க வேண்டும். அப்போது பால் அல்லது பானகம் சாப்பிடலாம். பசித்துப் புசியாதவனும், பசியில்லா துண்பவனும், நோய் சுமந்து வருந்துவான். இந்தப் புராணப் பித்தர் பேச்சையோ எழுதினதையோ யாரும் பிரமாணமாக நம்பக் கூடாது.

## மூர்த்தி பூஜை வேத விரோதம்

இப்போது குரு சிஷ்ய மந்திரோபதேசங்களையும் மத் மதாந்தரங்களின் சரித்திரைகளையும் ஆராய்வோம்:

வினா: உருவணங்கி சம்பிரதாயிகள் வேதம் அனந்தம் என்று கூறுகிறார்கள். ருக்வேதம் 21, யஜுர் வேதம் 101, சாம வேதம் 1000, அதர்வ வேதம் 9 சாகைகளுடையது. இவற்றில் சிலவே இப்போதுள்ளன; மற்றவை மறைந்தன.

பின்னவற்றில் உருவணக்கத்திற்கும் தலயாத்திரைக்கும் ஆதாரம் இருக்கலாம்; இன்றேல் அவை புராணங்களில் இடம் பெற்றிரா. காரியத்தால் காரணத்தை ஊகிக்கலாம். புராணங்கள் ஆதரிக்கும் உருவணக்கம் சரியானது, ஒழுங்கானது என்பதில் சந்தேகமென்ன ?

விடை: ஒரு மரத்தை ஒத்திருக்கும் அதன் கிளைகள்; வேறுபாடிராது. அதுபோல் சாகைகள் குறைந்தோ நிறைந்தோ, அதிகப்பட்டோ இருந்தாலும் அவற்றுள் விரோதமிருக்க முடியாது. நமக்குக் கிடைக்கிற சாகை களில் ஜல தலயாத்திரை, மூர்த்தி உபசானைப் பேச்சே யில்லை; மற்றச் சாகைகளிலும் அவ்வாறே யிருக்கவேண்டும். மேலும் நமக்கு நான்கு வேதங்கள் முழுதும் கிடைக் கின்றன; சாகைகள் அவற்றிற்கு முரணுயிருக்க முடியாது; முரணுல் வேத சாகை யாகாது; அவை பரஸ்பர விரோத மானவை; வகுப்புவாதிகள் திரித்த சரக்குகள். நீர் வேதத் தைப் பரமன் வாக்காக ஏற்றுல், 'ஆஸ்வலாயனுதி' ரிஷி முனிவர் பெயரால் வழங்கும் கிரந்தங்களை வேதமென்று கருதுவானேன்? கிளை இலைகளைக் கண்டதும் ஆல், அரசு, மாமரங்களை அடையாளங் காண்கிறோம். நான்கு பிரா மணங்கள், அங்கம், உபாங்கம், உபவேதங்களில் வேதார்த் தத்தைக் காணலாம். அதனுலேதான் அந்நூல்கள் சாகை எனப்பெற்றன. வேத விருத்தமான நூல் பிரமாணமாகாது; அவ்வாறே வேதானுகூலமான நூல் அப்பிரமாணமாகாது. சாகைகள் மூர்த்தி பூஜையை ஆதரிக்கின்றன என்றுல், இருக்கிற சாகைகளில் உள்ள வர்ண தர்மத்திற்கு எதிராக மறைந்த சாகைகள் கூறுகின்றன என்று விவாதிக்கலாம். சூத்திரனையும் பஞ்சமனையும் அவை பிராமணன் என்றன, அநியாயத்தை நியாயம், அகாரியத்தைக் காரியம் கடமை, பொய்யை மெய், மெய்யை அதர்மம் என்று எழுதியிருப்ப தாகச் சாதிக்கலாம்.—இது பொருந்துமா? மறைந்த சாகை களும் கிடைக்கும் வேத சாகைகளைத் தழுவினவே. அவற்றிலும் பிராமணன் பிராமணன், சூத்திரன் சூத்திர னென்றே யிருக்கும் என்பதே பொருந்தும். இன்றேல் வர்ணுச்ரமாதி முறைகள் அநியாயமாக முரண்படும். ஜைமினி, வியாசர், பதஞ்சலி காலம் வரையில் எல்லா வேத சாகைகளும் உருப்படியாகவே யிருந்தனவன்றோ?

அவர்கள் மூர்த்தி பூஜையைப் பற்றிச் சொல்லாத காரண மென்ன? அவர்கள் சொல்லாதவை சாகைகளில் எப்படி யிருக்கக்கூடும்? ஜைமினியின் பூர்வ மீமாம்ஸத்தில் எல்லாம் கர்மகாண்ட விளக்கமே; பதஞ்ஜலி யோக சாஸ்திரம் உபாஸனுகாண்ட விளக்கமே; வியாச முனிவரின் சாரீரிக ஸூத்ரமெல்லாம் ஞானகாண்ட விளக்கமே—இவை வேதானு கூலமானவை. அவற்றில் கல்லுருத் தொழுகையோ, பிராயாகை ஸ்நானமோ இல்லவே யில்லை. எங்கிருந்து எழுதுவது? வேதத்திலிருந்தால் தானே சாகையில் வரும்; ஆதலால் மறைந்த சாகைகளில் மூர்த்தி பூஜை முதலிய வற்றின் குறிப்பே யில்லை. இந்தச் சாகைகள் வேதமில்லை. ஏனெனில் தெய்வ வாக்காகிய வேதங்களுக்கு இவை விளக்கமும் விரிவுரையும் ஆகும்; அவை இதிகாசக் குறிப்பு களும் கொண்டன. இவை வேதத்தில் இல்லை. வேதம் மாந்தருக்கு அறிவைப் புகட்டுகிறது. அதில் எந்த மனிதர் பெயருமில்லை. மூர்த்தி பூஜையை சாஸ்திரங்கள் கண்டிக் கின்றன. பாருங்கள்! மூர்த்தி பூஜையால் ஸ்ரீகிருஷ்ணன், ராமசந்திரன், நாராயணன், சிவன் முதலியோர் நிந்தைக் குள்ளாகின்றனர்; நகைப்பிற்கிடமாகின்றனர். இவர்கள் மகா ராஜாதி ராஜாக்கள்; இவர்களுக்கு ருக்மிணி, சீதை, லக்ஷ்மி, பார்வதி ஆகிய மகா ராணிகள் இருந்தார்கள். பூசாரிகள் இவர்களைக் கோயில் உருச்செய்து வைத்து, இவர்கள் பெயரால் பிச்சை யெடுத்து அவர்களையும் பிச்சைக்காரராக்குகிறார்கள். 'மகராஜ்! ராஜாஜீ! சேட்ஜீ! சாஹூகார்ஜீ! இதோ தரிசனம் செய்யுங்கள், உட் காருங்கள், சரணமிருதம் பருகுங்கள்; கொஞ்சம் காணிக்கை சமர்ப்பியுங்கள்; மஹராஜ்! சீதா ராம் கிருஷ்ண ருக்மிணி, ராதா கிருஷ்ணன், லக்ஷ்மீ நாராயணன், மஹாதேவ பார்வதி—இவர்களுக்கு மூன்று நாளாக அன்ன பானுதி நிவேதனங்கள் கிடைக்கவில்லை. இன்று இவர் களுக்கு ஒன்றுமேயில்லை. ஹே ராணீ, ஹே சேட்ஜீ! சீதாஜீக்கு ஒரு நத்து சமர்ப்பியுமே; ஸ்ரீராமருக்கும் சீதைக்கும் கொஞ்சம் சாப்பாடு நிவேதிக்க அனுப்புமே. அவர் ஆடை கந்தலானது; ஆடையணிகள் சூட்டுமே. கோயில் மூலை இடிந்தது, கோயில் ஒழுகுகிறது. மூர்த்தி களுக்கு இருந்ததையெல்லாம் துஷ்டர், கள்ளர் திருடிச்

சென்றனர். எலிகள் ஆடையணிகளைக் குதறிவிட்டன. ஒருநாள் பெரிச்சாலிகள் மூர்த்தியின் கண்மலரைப் பறித்துச் சென்றன. என்ன அநியாயம்!! ஒரு வெள்ளிக் கண்மலர் சாத்தக்கூட இங்கே விதியில்லை; ஆதலால் கிளிஞ்சிலை வைத்திருக்கிறோம். இப்படியெல்லாம் இராமனையும் சீதையையும் பற்றிப் பூசாரிகள் பஞ்சப் பாட்டுப் பாடுகிறார்கள். தேர் திருநாட்களில் இராமலீலையும் ராஸமண்டலமும் நடக்கின்றன. சீதாராமரும் ராதா கிருஷ்ணரும் நாட்டியமாடுகிறார்கள்; அவர் சேவகரான அரசனும் மஹந்து முதலானவர்களும் உட்கார்ந்து நாட்டியம் பார்த்து மகிழ்கிறார்கள். கோயிலில் சீதாராமர் நின்று கொண்டிருக்கிறார்கள். பக்தர்களான பூசாரிகள் சுகமாக மெத்தைமேல் திண்டில் சாய்ந்து கொண்டிருக்கிறார்கள். கொடுங் கோடைநாளிலும் சீதா ராமர்களை உள்ளே போட்டடைத்துப் பூட்டுகிறார்கள்; பூசாரிகள் மட்டும் குளிர்ந்த காற்று வருமிடத்தில் மெத்தை விரித்துப் படுக்கின்றனர். பல பூசாரிகள் தமது நாராயணனை டப்பியில் அடைத்துத் துணியைச் சுற்றி, குரங்கு தன் குட்டியைக் கழுத்திற் கட்டிச் சுமப்பது போலச் சுமக்கின்றனர். யாராவது மூர்த்தியை உடைத்துவிட்டால், "ஐயையோ! சீதாராமரை, இராதகிருஷ்ணரை, மஹாதேவ பார்வதிகளை துஷ்டர்கள் உடைத்துவிட்டார்களே! உடனே நல்ல சிற்பியைக்கொண்டு அழகான சலவைக் கல்லுருச் செய்து நாட்டிப் பூசை செய்ய வேண்டுமே" என்று பூசாரி மார்புடைத்தலறுகிறான். நெய்யில்லாமல் நாராயணனுக்கு நிவேதனம் நடக்காது; நிரம்ப இல்லாவிட்டாலும் கொஞ்சம் அனுப்புங்கள், என்று பூசாரிகள் சீதாராமர் பெயரால் கையேந்துகின்றனர். இராஸமண்டலம் அல்லது இராமலீலா முடிவில் ராமன், சீதை, இராதாகிருஷ்ணன் பெயர்களைக் கொண்டு பிச்சை வாங்குகிறார்கள். தேர் திருநாட்களில் ஒரு பொடிப்பையன் தலையில் கிரீடம் வைத்துக் கண்ணனாக்கி, வழியில் அமர்ந்து பிச்சைக் கேட்கச் செய்கிறார்கள். என்ன கஷ்டம்! சீதாராமாதிகள் இப்படிப் பிச்சையெடுக்கும் தரித்திர நிலைக்கா வந்துவிட்டார்கள்? இதெல்லாம் அவர்களை நையாண்டி செய்து நிந்திப்பது தவிர வேறென்ன? நமது வணக்கத்திற்குரிய மஹா

புருஷருக்கு இப்படிப் பழிவருவது வருந்தத்தக்கது! உயிரோடு வாழ்ந்த சீதை, ராமன், ருக்மிணி, லக்ஷ்மி, பார்வதி, கண்ணன் முதலானோரை நடுப்பாதையில் வைத்து அல்லது ஒரு வீட்டில் அடைத்து வைத்து, "ஹே வாருங்கள், வந்து பாருங்கள், காணிக்கைத் தாருங்கள்!" என்று ஏலம் போட்டால், இந்த முட்டாள்தனமான செயலை அவர்கள் சம்மதிப்பார்களா, சும்மா விடுவார்களா? இப்படி அவமான காரியங்களைக் கண்டிக்காது தண்டிக்காது அவர்கள் சும்மா விடுவார்களா? இந்தப் பூசாரிகளின் அட்டூழியத்தைத் தகர்த்தெறிய ஆளில்லாததனால் தான் நெஞ்சுரம் கொண்டு போனார்கள்; விக்ரக ஆராதனைக்கு விரோதிகள் தான் இவர்களைக் கண்டிக்கிறார்கள்; கண்மூடித் தனங்கள் ஒழியுமட்டும் கண்டிப்பார்கள்! பாபத்தின் பயன் துன்பமும் துயருமே! இந்த மூர்த்தி பூஜையால் ஆரியா வர்த்தம் அழிகிறது; உருவணக்கம் மக்களை அடிமையாக்கு கிறது. உருவணக்கத்தால் பெரும் கேடு விளைந்தது, விளைகிறது; இதை ஒழிக்காவிட்டால் இன்னுமின்னும் கொடிய தீமையே வரும்.

## வாமமார்க்கம்

இந்த மூர்த்தி உபாசகரில் மஹா பாபிகள் வாமமார்க்கிகள். அவர்கள் சாதாரண மனிதனைச் சிஷ்யனாக ஏற்கும்போது இந்த மந்திரத்தை உபதேசிக்கிறார்கள்:

दं दुर्गायै नमः। भं भैरवाय नमः।
ऐं ह्रीं क्लीं चामुण्डायै विच्चे॥

வங்காளத்தில் விசேஷமாக

(ह्रीं, श्रीं, क्लीं॥) (சாவர. தந்திரம் ப. ப்ரகீ. ப்ர. 44)

என்ற ஒரெழுத்து மந்திரத்தை உபதேசிப்பர். பணக்காரர் களுக்குப் பூர்ணாபிஷேகம் செய்து தச மஹா வித்யா மந்திரம் உபதேசிப்பர்:

ह्रां, ह्रीं ह्रूं बगलामुख्यै फट् स्वाहा॥ (சாவர. ப்ரகீ. ப்ர. 41).

அல்லது

ह्रूं फट् स्वाहा॥ (காமரத்ன தந்திரம் பீஜமந்திரம் 4).

மாரண, மோஹன, உச்சாடன, வித்வேஷண, வசீகரணாதிப் பிரயோகம் செய்கின்றனர். மந்திரம் பலிக்காவிட்டால் கிரியை

நடத்துகின்றனர். எதிரியைக் கொல்ல நினைக்கிறவனிடம் ஏராளமான பணம் பெற்று, மா அல்லது மண்ணால் எதிரிபோல் உருச் செய்து, அதன் மார்பு, கழுத்து, நாபியில் கத்தியால் குத்துவர்; அல்லது கண், கை, கால்களில் ஆணியடிப்பர். அதன் மேல் பைரவ, துர்க்கா மூர்த்தி பிடித்து திரிசூலம் தந்து, அந்த உருவின் மார்பில் வைக்கின்றனர். பிறகு ஒரு வேதி செய்து மாமிசாதிகளால் ஓமம் செய்கின்றனர். பின்னால் ஒரு கையாளை யனுப்பி எதிரியைத் தந்திரமாக விஷம் வைத்துக் கொல்லச் செய்கின்றனர். இந்த மாரணக் கிரியை நடக்கும் போதே எதிரி ஒழிந்தால், பைரவி தமக்குச் சித்தி கொடுத்து விட்டாள் "भैरवो भूतनाथश्च"—"பைரவீ பூத நாதஸ்ச" என்று மந்திரம் அலறுகின்றனர்.

मारय २, उच्चाटय २, विद्वेषय २, छिन्धि २, भिन्धि २, वशीकुरु २, खादय २, भक्षय २, त्रोटय २, नाशय २, मम शत्रून् वशीकुरु २, हुँ फट् स्वाहा ॥ (காமரத்ன தந்திர உச்சாடன ப்ரகாண மந்திரம் 5-7)

இப்படி ஹம் ஹைம் மந்திரங்களை ஜபித்து மாமிசங்களை வேண்டுமட்டும் உண்டு, புருவ நடுவே நீளமாக குங்குமமிட்டு, வெறியாடுகின்றனர். சில சமயம் ஓர் ஆளைப் பிடித்துக் காளிமூளிக்குப் பலி கொடுத்து ஓமம் செய்து அவன் மாமிசத்தையும் உண்கின்றனர். பைரவீ சக்கரத்திற் சேர்ந்தவன் மது மாமிசம் உண்ண மறுத்தால், அவனைக் கொன்று ஓமம் செய்கின்றனர். அகோர பைரவன் இறந்த பிணத்தின் ஊனையும் உண்பான். அஜிரி பஜிரி செய்வோர் மல மூத்திரங்களையும் உண்பர்.

சோளீமார்க்கம் (ரவிக்கை வழி), பீஜமார்க்கம் (விந்து வழி) என்று இருவகை வாமாசாரிகள் உண்டு. சோளீமார்க்கிகள் ஓர் மறைவிடத்திற் கூடுகின்றனர். கணவன், மனைவி, மகன், மகள், அக்கா தங்கை தாய் மறுமகள்—எல்லாரும் அங்குக் கூடுகின்ற னர்; ஊன்மது வுண்கின்றனர். ஒரு பெண்ணை நிர்வாணமாக்கி அவளுக்குத் துர்க்காதேவி எனப் பெயரிட்டு, ஆண்கள் அவள் யோனியை பூஜை செய்கின்றனர். ஓர் ஆணை நிர்வாணமாக்கிப் பெண்கள் இலிங்க பூஜை செய்கின்றனர். மது வெறி யேறு கிறது; பெண்களின் ரவிக்கைகளை அவிழ்த்து ஓர் பானையிற் போட்டுக் குலுக்குகின்றனர்; பானையில் கை போட்டு ஆடவர் ஒவ்வொரு ரவிக்கை எடுத்துக் கொள்கின்றனர்; அந்த ரவிக்கைக்காரி அவனுடன் போகிறாள். அவள் தாய், தங்கை,

தமக்கை, மறுமகள்—மகளாயினும் சரி; அவள் அவனுக்கு அப்போதே பெண்சாதியாகிருள். அவன் அவளைக் கூடிக் குதூகலிக்கிருன். கள்வெறியும் காமவெறியும் முற்றிப்போனுல் செருப்பெடுத்து ஒருவருக்கொருவர் அடித்துக்கொள்வர். அதிகாலை இருட்டுடன் இவர்கள் வீடு செல்வர். பிறகே தாய் தாய், கன்னி கன்னி, தங்கை தங்கை, மறுமகள் மறுமகள் ஆகின்றனர்.

பீஜமார்க்கிகள் ஆண் பெண் கூடிக்களித்து வீரியத்தை நீரிற் கலந்து குடிக்கிருர்கள், இந்த ஆபாச அனுசாரச் செயல்களை இந்தப் பாமரர் முக்தி மார்க்கமென்று நினைக்கிருர்கள். அறிவாராய்ச்சி நல்லோர் கூட்டம் இவர்களுக் கில்லை.

## சைவம்

வினு: சைவ மதத்தினர் நல்லவர் தாமே?

விடை: எப்படி நல்லவர்? பிரேதநாதன் எப்படி பூதநாதன் அப்படி. வாமமார்க்கிகள் மந்திரோபதேசத்தால் பணம் பறிப்பது போலவே சைவரும் "ஓம் நமச்சிவாய" என்ற பஞ்சாக்ஷரியை உபதேசிக்கின்றனர். விபூதி ருத்ராக்ஷம் தரிக்கின்றனர். கல்லிலும் மண்ணிலும் லிங்கம் பிடித்து வணங்குகின்றனர். ஹர ஹர, பம் பம் பட பட பட என்று ஆட்டுக்கூச்சல் போடுகின்றனர். தாளம் போட்டு பம்பம் என்பதால் பார்வதி பிரசன்னமாகிருளாம்; பரமசிவன் அப்ரசன்னமாகிருனும். இதற்கொரு கதை கட்டுகிருர்கள்: சிவன் பஸ்மாசுரனுக்குப் பயந்தோடும்போது பம்பம் என்று எல்லாரும் கைகொட்டி ஆர்த்தனராம்: பார்வதி தந்தை தக்ஷப்பிரஜாபதி; அவன் தலையைச் சிவன் அறுத்து அதற்குப் பதில் ஆட்டுத் தலையை வைத்தபோது அவன் ஆடுமாதிரியே சத்தமிட்டனும். அதனுல் பம்பம் என்று போட்டால் மிகவும் பிரியமாம். கன்னத்தை உப்பவைத்துக் கையால் அதை அடித்து பம்பம் போட்டால் மிகவும் பிரியமாம். சைவர் சிவராத்திரி விரதம் காப்பர்—இவையெல்லாம் மோட்ச மார்க்கமாக அவர்கள் நம்புகிருர்கள். வாமமார்க்கிகளைப் போலவே சைவரும் மதிமயக்கங் கொண்டிருக்கிருர்கள். *கனபட, நாத், †கிரி, ‡புரி, வன,

* காது துளைத்துக்கொண்டவர்கள். † மலைச்சாதியினர். ‡ பட்டணவாசிகள்.

ஆரண்ய, பர்வத, சாகர, கிரஹஸ்தரும் சைவரே. சிலர் இரட்டைக் குதிரை சவாரிபோல் சைவத்திலும் வாம மார்க்கத்திலும், சைவத்திலும் வைணவத்திலும் நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள்.

अन्तः शाक्ता बहिश्शैवाः सभामध्ये च वैष्णवाः ।
नानारूपधराः कौला विचरन्ति महीतले ॥

இது தாந்திர சுலோகம். உள்ளே வாமமார்க்கி, வெளியே விபூதி ருத்ராக்ஷம் பூண்டு சைவனாகிறான். சபையில் விஷ்ணு உபாசகனை வைஷ்ணவன் என்கிறான். இவ்வாறு வாமமார்க்கிகள் பலவேஷம் போட்டு உலகில் திரிகிறார்கள்.

## வைஷ்ணவம்

வினா: வைஷ்ணவன் நல்லது தானே?

விடை: என்ன நல்லது! எல்லாம் மேற்படி தான். அந்த வைஷ்ணவ லீலையையும் பாரும். வைஷ்ணவர் தம்மை விஷ்ணுதாஸர் என்பர். ஸ்ரீ வைஷ்ணவர்கள் அதாவது சக்கிராங்கிதர்கள் தம்மை மிக வுயர்வெனக் கருதுவர்; அது தவறு.

வினா: ஏன்? ஸ்ரீவைஷ்ணவர் அனைவரின் மேலோரன்றோ? பாருங்கள்! நாங்கள் நாராயண பாதமே நாமமாக நெற்றியில் தீட்டி நடுவே ஸ்ரீ சூர்ணமும்* போடுகிறோம். அதனால் நாங்கள் ஸ்ரீ வைஷ்ணவராவோம். நாராயணனைத் தவிர நாம் யாரையும் நம்போம். நாம் மஹாதேவ லிங்கத்தைப் பாரோம்; ஏனெனில் லிங்கத்தைக் கண்டால் எமது நெற்றியிலிருக்கும் ஸ்ரீ நாணுவாள். நாம் ஆல மந்திராதி ஸ்தோத்திரம் செய்கிறோம். நாராயணனை மந்திர பூர்வமாகப் பூசிக்கிறோம். நாம் ஊன் மது வுண்ணோம். நாமே சிறந்தோர் அன்றோ?

விடை: நீவீர் நாமத்தை நாராயண பாதம், மஞ்சள் கோட்டை ஸ்ரீ என்பது பொருந்தாது. ஏனெனில் நாமம் நீர் நெற்றியில் வரையும் கைவேலை. யானையின் நெற்றிப் பட்டை போல் நீவீர் பட்டை யிழுக்கிறீர். உங்கள் நெற்றியில் விஷ்ணுப் பாதக் குறி எங்கிருந்து வந்தது? யாராவது

* நாராயணன் மனைவிக்கு அடையாளமாகத் தீட்டுவது.

வைகுண்டம் போய் விஷ்ணு பாதத்தை எடுத்து நெற்றியில் பதித்து வந்தாரா?

**விவேகி:** ஸ்ரீ ஜடமா சேதனமா?

**வைஷ்ணவன்:** சைதன்யமே.

**விவேகி:** இந்த நெற்றிக் கோடு ஜடம்; சைதன்யமில்லை; ஸ்ரீயுமில்லை; மேலும் உங்களை கேட்கிறேம், ஸ்ரீ என்பது ஆக்கப்பட்டதா? இயல்பாக உள்ளதா? பின்னதாஞல் நீ யிழுக்கும் கோடு ஸ்ரீ யாகாது; ஏனெனில் நீ அதைத் தினம் கையால் போடவேண்டியிருக்கிறது. நெற்றியில் ஸ்ரீ இருப்பதாஞல், எத்தனையோ வைஷ்ணவர் முகம் அருளற்று ஆபாசமாயிருப்பதேன்? நெற்றியில் ஸ்ரீ யிருந்தால் அவர்கள் வீட்டுக்கு வீடு பிச்சை வாங்குவானேன்? சதாவர்த்தி வாங்கி வயிறு வளர்த்துத் திரிவானேன்? சிரத்தில் திருமகளை வைத்துக்கொண்டே தரித்திரஞ யிருப்பது அவமானம்!

பரிகால் என்ருெரு வைஷ்ணவ பக்த னிருந்தான். அவன் திருட்டுருட்டு, வழிப்பறி, கபடு சூதுகளால் பிறர் பொருளைக் கொள்ளையடித்து வைஷ்ணவருக்கீந்து மகிழ்ந்தான். ஒரு சமயம் அவனுக்குத் திருட்டு கொள்ளை எதுவும் கிடைக்காமல் விசனமுற்றுத் திரிந்தான். நாராயணன் தனது பக்தன் துக்கமுற்றதை யறிந்தான். சேட்ஜீபோல் வேடம் தரித்து மோதிரம் முதலிய அணி குலுங்கத் தேரில் ஏறி, பக்தன் முன்னே தோன்றிஞர். பரிகால் உடனே ரதத்தின் முன்னே வந்தான்; சேட்ஜீயிடம் "எல்லாச் சாமான்களையும் கீழே வை, இன்றேல் கொன்று போடுவேன்" என்ருன். நாராயணன் எல்லாப் பொருள்களையும் தந்தான்; ஆஞல் மோதிரத்தை மட்டும் கழற்ற நேரமானது; பரிகால் நாராயணன் விரலைக் கடித்து மோதிரத்தை எடுத்துக்கொண்டான். நாராயணன் மிக்க மகிழ்ந்து சதுர்புஜங்களுடன் திவ்ய தரிசனமளித்து, "நீ எனது பரம பக்தன்; நீ எல்லாப் பொருளையும் அடித்துப் பிடித்துத் திருடிக் கொள்ளைக் கொண்டு வைஷ்ணவ சேவை செய்வதால் நீயே புனிதன்" என்ருர். பிறகு பரிகால் சென்று கொள்ளைப் பொருள்களையெல்லாம் வைஷ்ணவர்களுக்கே நிவேதித்தான்.

இன்ஞெரு சமயம் பரிகால் ஒரு வியாபாரியிடம் வேலைக்கு அமர்ந்தான். வியாபாரி அவனைக் கப்பலில் தூர தேசத்திற்கு

அழைத்துச் சென்றான். அங்கிருந்து கப்பலில் பாக்கு ஏற்றி வந்தனர். பரிகால் ஒரு 'கொட்டைப் பாக்கை இரண்டாகத் துண்டாக்கி பாதியை வியாபாரியிடம் தந்து, "இந்தப் பாதிப் பாக்கைக் கப்பலில் போடும்; கப்பலில் பாதிப் பாக்கு பரிகாலனது என்றெழுதும்" என்றான். வியாபாரி "அவசிய மில்லை; தாங்கள் ஆயிரம் பாக்கு வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம்" என்றான். "நான் பொய் கிய் பேசி அநியாயம் செய்யமாட்டேன்; எனக்குரிய பாதிப் பாக்கே வேண்டும்" என்றான் பரிகால். வஞ்சமற்ற வியாபாரி அப்படியே எழுதி விட்டான். கப்பல் தன் தேசத் துறைமுகம் சேர்ந்தது. பாக்கும் இறங்கியது. பரிகால், "எனக்குப் பாதிப் பாக்கு உரியது; கொடு" என்றான். வியாபாரி அவனுக்குப் பாதி பாக்குத் துண்டு தந்தான். "என்ன? கப்பல் சரக்கில் பாதி எனக் குரியது; பிரித்துத் தா?" என்று பரிகால் சண்டை போட்டான். சண்டை முற்றி அரசனிடம் போனது. பரிகால் பனியாவின் கையெழுத்தைக் காட்டி, "பாதிப் பாக்கு எனக்குச் சேர வேண்டும்" என்றான். பனியா எவ்வளவு அலறியும் பலிக்க வில்லை. பரிகால் பாதிச் சரக்கைப் பறித்துச் சென்று வைஷ்ண வார்ப்பணம் செய்தான். வைஷ்ணவர் மிக்க மகிழ்ச்சியடைந் தனர். இன்றும் அந்தத் திருட்டுக் கொள்ளைக்கார பரிகால் உருவை வைஷ்ணவாலயங்களில் வைத்திருக்கிறார்கள். இந்தக் கதை பக்தி மாலையில் உள்ளது. வைஷ்ணவர், அவர் சேவகர், நாராயணர் மூவரும் சோர மண்டலமா (திருடர் கூட்டமா), அல்லவா என்பதை அறிவாளர் சிந்திக்கட்டும். மத மதாந்தரங் களில் சிலர் நல்லவர்களா யிருக்கிறார்கள்; ஆனால் அதே வகுப்புவாதத்திலிருந்தால் முழுதும் நல்லவனாயிருக்க முடியாது. வைஷ்ணவரிடையே நாமம் மாலைகளில் வேறுபாடுகள் உண்டு; வேறுபாடுகள் பிரிவினைக்கும் சண்டைக்கும் இடமாகின்றன. இராமனந்திகள் கோபி சந்தனத்தால் நாமமிழுத்து, நடுவே சிகப்புக் கோடு போடுவர். நீமாவதர் இரண்டு மெல்லிய கோடு களுக்கிடையே கருப்புப் பொட்டு வைப்பர். மத்துவர் கரிக் கோடு போடுவர்: கௌட வங்காளிகள் வாள்போலக் குறி வைப்பர்; இராமப் பிரசாதிகள் இரண்டு பிறைக் கோடுகளுக் கிடையே வட்டமாக வெள்ளைப் பொட்டிடுவர். இவர்கள் குறி களுக்கு வித விதமான விளக்கங்களும் உண்டு. இராமானந்திகள் நாராயணன் திருமார்பில் விளங்கும் லக்ஷ்மியின் அறிகுறியே

தங்கள் செங்கோடு என்பர். கோஸாயிகள் ஸ்ரீ கிருஷ்ண சந்திரஜீ மார்பில் விளங்கும் ராதாஜீயின் அறிகுறி என்பர். இப்படிப்பட்ட கதைகள் பலவாகக் கட்டுகிறார்கள்.

பக்த மாலையில் ஒரு கதை உண்டு; ஒரு மனிதன் மரத்தடியில் படுத்துறங்கினன்; உறக்கத்தில் இறந்தான். மேலிருந்து ஒரு காக்கை எச்சமிட்டது. அது அவன் நெற்றியில் விழுந்து திலகம் போல் ஒட்டிக் கொண்டது. அவனை எடுத்துச் செல்ல எமதூதர் வந்தனர். இதற்குள் விஷ்ணு தூதரும் வந்துவிட்டனர். இருவருக்கும் விவாதம் எழுந்தது. எமதூதர் "இவனை எமலோகத்திற்குக் கொண்டு போகவேண்டும்; அது எங்கள் சுவாமி கட்டளை" என்றனர். "எங்கள் சுவாமி இவரை வைகுண்டத்திற்குக் கொண்டுவரக் கட்டளையிட்டார். இவன் நெற்றியில் திலகம் உள்ளதே; நீவிர் எப்படி அவனை எடுத்துச் செல்லலாம்" என்றனர் விஷ்ணு தூதர். இதைக் கேட்ட எமதூதர் பேசாமல் சென்றனர். விஷ்ணு தூதர் அவனைச் சுகமாக வைகுண்டம் கொண்டு சென்றனர். நாராயணன் அவனை வைகுண்டத்தில் இருக்கச் செய்தான். தற்செயலாக ஏற்பட்ட இந்த விட்டைத் திலகத்திற்கே இவ்வளவு பெருமையானல், அதற்கென்று அன்புடன் தன் கையால் போடும் நாமத்தின் மகிமை சொல்லத் தரமா!! அது மனிதனை நரகத்திலிருந்து விடுவித்து வைகுண்ட பதவி தரச் சந்தேகமென்ன? நெற்றியில் சிறிய பொட்டே வைகுண்டமளிக்குமானல், முகமெல்லாம் பூசுவதால், மூஞ்சியெல்லாம் கரிக் கோடு போடுவதால், உடம்பெல்லாம் நீறு பூசுவதால் வைகுண்டத்தையும் தாண்டி அப்பாற் செல்லலாம் அல்லவா? இதெல்லாம் வீண் பிதற்றல்.

## சாம்பலாண்டி கூத்து

காக்கிகள் என்னும் சாம்பலாண்டிகள் லங்கோடு கட்டி, சடை வளர்த்து, சித்த வேஷம் போட்டுத் தீ மூட்டி, அதன் முன் கொக்குப் போல் தியானம் நடிக்கின்றனர். கஞ்சா, அபின், பங்கி போட்டு தம்மடித்துக் கண் சிவக்கின்றனர்; எல்லாரிடமும் கை நிரம்பச் சோறும், மாவும், காசும் பணமும் பிச்சைக் கேட்கின்றனர். நல்ல கிரகஸ்தர் வீட்டுக் குழந்தைகளை மோசம் செய்து சீடராக்குகின்றனர். அவர்களுட் பலர் தொழிலாளர் வகை; படிப்பவரைப் படிக்க விடாமல்,

पठितव्यं तदपि मर्त्तव्यं दन्तकटाकटेति किं कर्त्तव्यम् ।

"சாதுக்கள், சந்தர்கள் ஏன் படிக்க வேண்டும்? படித்தவன், படிக்காதவன் எல்லாரும் சாக வேண்டியதுதானே! பல் கடகடக் கப் படிப்பானேன்? சுற்றித் திரிதல், சந்தர் சேவை, ராம பஜனை—இவையே சாதுக்களின் வேலை" என்று உபதேசிக் கிருர்கள். யாராவது முட்டாள்தனம், அறிவின்மை என்பவை களின் உருவத்தைக் கண்டறியாதவர்கள், இந்தக் காக்கிகளின் தரிசனம் செய்தால் போதும். முட்டாள் மடைவுருப்படிகளே இந்தக் காக்கிகள். அப்படி வருவோர் காக்கிகளின் மாதா பிதாக்களைவிட முதியோராளுலும் அவர்களை 'பச்சா, பச்சி, குழந்தே' என்றுதான் அழைப்பார்கள். ரூகடர், ஸ்ெங்கடர், கோதடியர், ஜமாதர், ஸ்ெத்ரேசாயிகள், அகாலீ, கனபடே, ஜோகி, ஔடதர் முதலியோரும் இந்தக் காக்கிகளின் கூட்டமே. [அடியில் வரும் கதை காக்கிகளின் தன்மையை விளக்கும்]:

ஒரு காகி சிஷ்யன் 'ஸ்ரீ கணேசாய நம:' என்பதற்குப் பதில் 'கணேச ஜன்மே' என்று ஜபித்துக்கொண்டே கிணற்றில் நீரெடுக்கச் சென்ருன். அக்கிணற்றின் அருகே ஒரு பண்டிதர் இருந்தார். அவர், "ஹே சாது, அசுத்தமாக உச்சரிக்காதே, ஸ்ரீ கணேசாய நம: என்று சொல்" என்ருர். அவன் சட் டென்று லோட்டாவை நிரப்பிக்கொண்டு குருஜீயிடம் விரைந்து, 'ஒரு பிராமணன் என் ஜபத்தை அசுத்தம் என்கிருன்' என்ருன். சட்டென்று காகிஜீ கிளம்பிக் கிணற்றண்டை வந்து, பண்டிதரிடம், "யாரடா என் சிஷ்யனைத் தவருன வழியில் திருப்புவது; நீ நாசமாய் போக; நீ குருவின் வாலே; என்னடா படித்திருக்கிருய்? உனக்கு ஒரு பாடம் தெரியும்! நமக்கு மூன்று தெரியுமடா: 'ஸ்ரீ கணேசா ஜன்னமே, ஸ்ரீ கணேஸா யன்னமே, ஸ்ரீ கணேஸா நமே' பார்த்துக் கொள்" என்று மிரட்டினுன்.

பண்டிதர்: கேள் சாதுஜீ; கல்வி கடினம்; கற்ருலன்றி வராது.

காகீ: போடா போ; நான் வித்வான்களை ஒரு கை பார்த்திருக் கிறேன். அவர்களையெல்லாம் பொடியாக்கி கஞ்சா பாங்கில் போட்டு ஊதித் தள்ளிப் புகையோடு பறக்க விட்டிருக் கிறேன். சந்தர் மாளிகையின் பெருமையே பெருமை; உனக்கென்னடா தெரியும், உளறுவாயா!

**பண்டிதர் :** நீ ஏதாவது படித்திருந்தால் இப்படி அபத்தமாக பேசுவாயா ! உனக்குச் சிறிது அறிவிருக்குமே.........

**காசீ :** அடடே ! நீ என் குருவோ ! உன் உபதேசம் இங்கே செல்லாது.

**பண்டிதர் :** எப்படிச் செல்லும் ! புத்தியில்லை ; உபதேசம் கேட்டறியப் படிப்பு வேண்டும்.

**காசீ :** சகல வேத சாஸ்திர பாரங்கதனுனாலும் சந்தரை மதிக்காதவன் ஒன்றும் படித்தவனுகான்.

**பண்டிதர் :** ஆம். நாம் ஸந்தர் சேவை செய்வோர் ; ஆனுல் உன்போன்ற நெறிகெட்டவனை யன்று. ஏனெனில் நல்லோர், அறிஞர், புலவர், தர்மாத்மாக்கள், பரோபகார புருஷரே ஸந்தராவார்.

**காசீ :** பாருங்கள் ! நாங்கள் இரவு பகல் நிர்வாணமாயிருக் கிரேம், தீ வளர்க்கிரேம், கஞ்சு சரஸ்தம் நூறு இழுக் கிரேம், வேளைக்கு மும்மூன்று லோடா பங்க் குடிக்கிரேம், கஞ்ச, பங்கி, ஊமத்தை இலைகளைக் கறியாக்கிச் சாப்பிடு கிரேம். நேர்வாளமும் அபினும் விழுங்குகிரேம். இரவும் பகலும் போதை வெறிகொண்டு கவலையற்று உலகை உணரா திருக்கிரேம் ; உலகைப் பற்றி கவலையற்றுள்ளோம். பிச்சை புகுந்துண்கிரேம். எங்கள் பக்கம் யாரும் படுத்துறங்க முடியாது, அப்படி இரவில் இருமுகிரேம். பார்த்தாயா எங்கள் சாது சித்தியை ! இப்படிப்பட்ட எம்மையா நிந்திக் கிருய் ? உஷார் ! உளருதே ! உன்னைச் சாம்பலாக்கி விடுவோம் !!

**பண்டிதர் :** இவை சாது லட்சணமன்று ; கழிசடைக் கயவர், மூர்க்கர், இலக்கணம்.

“ साप्नोति पराणि धर्मकार्य्याणि स साधुः ”

நல்லறவினை செய்து, பிறர்க்குதவும் சீலரே தீக்குணமற்ற அறிஞர் ; எல்லாருக்கும் மெய்விளக்கம் செய்பவரே சாதுக் களாவார்.

**காசீ :** போடாபோ! நீ சாது தர்மத்தை மகா கண்டாயோ. சாது சந்தர் பெருமையே பெருமை. சந்தரிடம் விளையாடாதே. சிம்டாவால் ஒரே அடி ! மண்டை பிளந்து போகும். உஷார், பார் !

பண்டிதர்: சரி காகீஜீ! போய் உன்னிடத்தில் இரு! அதிகக் கோபமேன்; இப்போது அரசாங்கம் எப்படி தெரியுமா? நீ யாரையாவது அடித்தால் உன்னைக் கைதாக்கிச் சிறையிட்டுப் பிரம்படி கொடுப்பர்; அல்லது யாராவது உன்னை நையப் புடைப்பர்; பிறகு என்ன செய்வாய்; இது சாது லட்சணமில்லை. !

காகீ: வாடா சிஷ்யா வா! இந்த ராக்ஷஸன் முகத்தில் விழிக்கச் செய்தாயே!

பண்டிதர்: நீ எந்த மஹாத்மாவின் சங்கத்தையும் வகித்ததில்லை; வகித்திருந்தால் இப்படி அசட்டு முட்டாளாயிருக்க மாட்டாய்.

காகீ: நாமே மஹாத்மா; எமக்கு இன்னொரு பெரியார் அனுவசியம்!

பண்டிதர்: துர்பாக்கியவான்களுக்கே உன்னைப் போன்ற மடப் புத்தியும் அகம்பாவமும் இருக்கும்.

இவ்வாறு சொல்லி காகீ தன் பீடத்தில் அமர்ந்தான், பண்டிதர் வீடு சென்றார். சாயங்கால ஹாரதி நடந்தது. அந்த காகீயை முதியவரென்று பாவித்து பல காகீகள் குருஜீக்கு தண்டம் சமர்ப்பித்துத் தங்கள் இடத்தில் அமர்ந்தனர். முதிய காகீ, "அப்பா, ராமதாஸியா! இன்று என்ன படித்தாய்?" என்று வினவினான்.

இராமதாஸ்: மஹராஜ் நான் வேஷ்ணு ஸஹஸ்ரநாமம் படித்தேன்.

காகி: அப்பா கோவிந்ததாஸியே நீ என்ன படித்தாய்?

கோவிந்தாஸ்: அந்த காகீயிடம் "ராமஸத்வராஜ்" படித்தேன்.

இராமதாஸ்: மகராஜ் தாங்கள் என்ன படித்தீர்கள்?

காகீஜீ: நாம் கீதை படித்தோம்.

இராமதாஸ்: யாரிடம்?

காகிஜீ: போடா பயலே! நமக்கு யாரடா குரு! "நாம் பராக்ராஜில் (பிரயாகை—அல்லிஹபாத்) இருந்தோம்; எழுத்து வராது; பெரிய வேட்டிகார பண்டிதர்களை "இந்தக் கொம்பெழுத்தின் பெயரென்ன" என்பேன், இப்படியே நான் கீதை பதினெட்டு அத்தியாயமும் படித்தேன். யாரும் எனக்கு குரு வில்லை.

வித்யா சத்துருவின் இருப்பிடத்தை வேறெங்கே தேட வேண்டும்? மடமையின் மூலஸ்தானம்—காகீ.

குடி வெறி போதை, சண்டை, திண்டி, தூக்கம், தாளம் போடல், மணியாட்டல், சங்கு ஊதல், தீ யெரித்தமர்தல், குளித்தல், ஜெபித்தல், திக்கெல்லாம் வீணைகச் சுற்றித் திரிதலே காகியின் வேலைகள். வேறு பயனுள்ள வேலை எதுவும் இல்லை. கல்லுக் குணர்த்தலாம், ஆனால் காகிக்கு எதுவும் உணர்த்த முடியாது. அவன் மண்டையில் அறிவு நுழையாது. ஏனெனில் அவருள் மிகுதியாகக் கூலி வேலைக்காரர், உழவர், நீர் சுமப்போர். இவர்கள் தங்கள் வேலையை விட்டு, சாம்பலை வாரிப் பூசிக் கொண்டு காகி பைராகிகளாகக் கிளம்புகிறார்கள். அவர்களுக்கு வித்தை, ஸத்ஸங்கம் முதலிய நன்மைகளை அறிந்துகொள்ளவும் முடியாது. இவருள் பலவகை மந்திரங்கள் உண்டு. இவர்கள் நாத்துகளுக்கு 'நமசிவாய', காகிகளுக்கு 'நரசிம்மாய நமஃ' இராமவர்த்தருக்கு 'ஸ்ரீ ராமசந்திராய நமஃ' அல்லது 'சீதா இராமாப்யாம் நமஃ' கிருஷ்ணோபாசிகளுக்கு 'ஸ்ரீ ராதா கிருஷ்ணாப்யாம் நமஃ' அல்லது நமோ பகவதே வாசு தேவாய, வங்காளிகளுக்கு 'கோவிந்தாய நமஃ' இந்த மந்திரத்தை காதில் ஓதியதும் சிஷ்யனாக்குகின்றனர். குழந்தைகளுக்குச் சுரக்காய் மந்திரம் ஓதுகின்றனர்.

जल पवितर सथल पवितर और पवितर कुआ ।
शिव कहे सुन पार्वती तूंबा परितर हुआ ॥

நீர் தூயது; நிலம் தூயது, கிணறு தூயது, நீர்ச் சுரக்காயும் தூயது—இது பார்வதிக்குச் சிவன் சொன்னது. பலே! இப்படிப் பட்டவர்கள் சாது வித்வான். உலகோபகாரிகளாக எப்படி முடியும்? காகிகள் இரவு பகலாய் கட்டைகளையும், சுள்ளிகளையும் எரிய விடுகிறார்கள். ஒரு மாதத்தில் பல ரூபாய் விறகை எரித்து வீணாக்குகிறார்கள்; ஒரு மாதம் கட்டைக்குப் போடுவதைக் கம்பளி முதலானவைகளை வாங்கினால் சுகமாய் இருக்கலாமே. அவ்வளவு புத்தி இவர்களுக்கு எங்கிருந்து வரும்? தீ முன் உட்கார்ந்ததுமே தங்களை தபஸ்விகள் என்று நினைக்கின்றனர். இவ்வளவு எளிதானால் காட்டுமிராண்டிகள் கூடத் தபஸ்விகளாகலாமே! சடை வளர்த்து சாம்பல் பூசிப் பொட்டு வைப்பது தவமானால், எவரும் எளிதாகத் தபஸ்வி யாகலாமே! அவர்கள் வெளிக்கே துறவி வேடம் போடுகின்றனர். அவர்கள் உள்ளே உலகாசை பலமாய் இருக்கிறது.

## கபீர் பந்திகள்

**வினு :** கபீர் பந்திகள் நல்லவர்கள் தாமே ?

**விடை :** இல்லை.

**வினு :** ஏன் ? அவர்கள் கல்லுரு முதலிய உரு வணக்கத்தைக் கண்டிக்கின்றனர். கபீர் பூவிலிருந்து தோன்றிப் பூவில் மறைந்தாரே. பிரம்மா விஷ்ணு மகாதேவர் தோன்றிய காலத்திலேயே கபீர் இருந்தாரே. கபீர் மஹா சித்தர் ; வேத புராணுதிகள் அறியாத உண்மையையும் அவர் அறிவாரே. கபீர் காட்டியதே உண்மை வழி. அவரை சத்ய நாம கபீர் என்பர்.

**விடை :** கல்லை விட்டுவிடுவோம் ; கபீரிகள் படுக்கை மெத்தை, திண்டு தலையணை, பாதுகை, விளக்குகளைக் கும்பிடுகிறூர் கள். இது மூர்த்தி பூஜைக்கு அப்பன் அல்லவா ? கபீர் பூவி லிருந்து பிறந்தாராம், இறந்தபின் பூவானுராம்—அவ ரென்ன பூப்பூச்சியா ? கபீரைப்பற்றிய கதை மெய்தான். காசியில் ஒரு சேணியன் இருந்தான் ; அவனுக்குப் பிள்ளை இல்லை. ஒரு நாள் அதிகாலையில் அவன் ஒரு தெருவில் போகும் போது வழியில் ஒரு புஷ்பக் கூடையில் அன் றிரவே பிறந்த குழந்தை இருந்தது. அதை அவன் எடுத்து மனைவியிடம் தந்து வளர்த்தான். குழந்தை பெரியவனுன தும் நெசவுத் தொழில் செய்தான். அவன் சமஸ்கிருதம் படிக்க ஒரு பண்டிதனை அணுகினுன். பண்டிதன், “ நாம் சேணியனுக்குப் படிப்புச் சொல்லித் தரோம் ” என்று இகழ்ந்தான். இப்படியே பல பண்டிதரை அணுகினுன். யாரும் அவனுக்குப் படிப்புச் சொல்லித்தரவில்லை. அவன் உற்றெழுந்து கிராமிய பாஷையில் பாடல்களை இயற்றிச் சேணியர் முதலிய பாமரருக்குப் பாடி வந்தான். தம்பூரா மீட்டி பஜனை பாடினுன். விசேஷமாகவே பண்டிதர் சாஸ்திரம் வேதம் இவற்றை நிந்தித்தான். சில மூடர் அவன் வலையிற் சிக்கினர். செத்த பிறகு மக்கள் அவனைச் சித்தனுக்கினுர். அவன் உயிரோடிருக்கும்போது எழுதிய பாடல்களை யெல்லாம் சிஷ்யர் படித்தனர். காதை மூடிக் கொண்டால் கேட்கும் சத்தமே அனுஹதச் சத்த சித்தாந்தம் என்றனர். மனே விருத்திக்கு ஸுரதி என்றனர். அனுஹத சப்தத்தால் ஸுரதி பந்தனம் செய்பவனே ஸந்தன் ; அதுவே

பரமேஸ்வர த்யானம் ; அதனுல் காலன் அணுகாது வாழலாம் என்றனர். வாள்போல நெற்றிக்கோடும் சந்தன மரத்தாற் செய்த மாலையும் அணிவர் கபீரிகள். நன்ருக சிந்தியுங் கள்—இவற்ருல் ஆன்மா உன்னதியோ, ஞானமோ வளருமா? இவை வெறும் சிறு பிள்ளை விளையாட்டே.

## நானக்கர்

வினு : பஞ்சாபு தேசத்தில் நானக்ஜீ ஒரு மார்க்கம் கண்டார். அவர் மூர்த்தி பூஜையை மறுத்தார் ; ஏராளமான ஜனங்கள் முசல்மான்களாகாது தடுத்தார். அவர் துறவியாக வில்லை ; இல்லறத்திலே யிருந்தார். அவர் உபதேசித்த இந்த மந்திரத்திலிருந்து அவர் உத்தேசம் நல்லது,. அவர் மார்க்கம் உத்தமம் என்று விளங்கவில்லையோ?

ओं सत्यनाम कर्त्ता पुरुष निर्भो निर्वैर अकालमूर्त्त अजोनि सहभं गुरुप्रसाद जप आदि सच जुगादि सच है भी सच नानक होसी भी सच ॥ [जपजी पौड़ी १ ॥]

"கர்த்தா புருஷன் ஸத்யநாமன் ; உண்மையே அவன் பெயர். அவன் பயம் பகையற்றவன் ; அகால மூர்த்தி, காலத்தையும் பிறப்பையும் கடந்தவன் ; சுயம் பிரகாசன் ; குரு கிருபையால் அவனை ஜபம் செய்க. அந்தப் பரமாத் மாவே ஆதியில் உண்மை, இன்றும் உண்மை, இனியும் உண்மை, என்றும் உண்மை "

விடை : நானக்கர் உத்தேசம் சரிதான். ஆனல் அவருக்குச் சிறிதும் படிப்பில்லை. பஞ்சாப் கிராம பாஷையே அவருக்குத் தெரியும். வேதாதி சாஸ்திரமோ, ஸம்ஸ் கிருதமோ அவருக்குச் சிறிதும் தெரியாது. அப்படித் தெரிந்தால் ' நிர்ப்பயம் ' என்பதை ' நிர்பௌ ' என்று எழுதி யிருக்க மாட்டார். அவர் செய்த ஸம்ஸ்க்ருத ஸ்தோத்திரத் தில் அவருக்கு அந்த பாஷையறிவு மட்டமென்பது விளங்கும். தாமும், ஸமஸ்க்ருதம் அறிந்ததாகக் காட்டுகிருர்; படிக்காமல் எப்படி ஸம்ஸ்க்ருதம் வரும்? ஸம்ஸ்க்ருதமே கேட்டிராத பட்டிக்காட்டார் முன்னே வேண்டுமானுல் அவர் தம்மை ஸம்ஸ்க்ருத வித்வான் என்று காட்டலாம். தன் பேருக்கும், புகழுக்குமே அப்படி செய்திருக்கலாம். அப்படி புகழாசையில்லாவிட்டால் "எனக்கு ஸம்ஸ்க்ருதம் தெரி

யாது" என்று ஒப்புக்கொண்டு தன் தாய்பாஷையிலேயே உபதேசம் நடத்தியிருக்கலாமே. சுயாபிமானமும், புகழா சையும் வந்தால் இடம்பமும் தொடரும் அல்லவா ? அதனாலேதான் அவரது கிரந்தத்தில் ஓரிடம் வேத நிந்தை யும் இன்னோரிடம் வேதத் துதியும் காண்கின்றன. அப்படி செய்யாவிட்டால் யாராவது வேத மந்திரத்துக்குப் பொருள் சொல்லச் சொல்லுவார்கள் ; அவர் விழிப்பார் ; குட்டு வெளி யாகும் ; புகழ் போய்விடும். இந்தச் சங்கடத்திற்காகவே அவர் அடி முதல் வேத விரோதமே எழுதிச் சிற்சில இடங் களில் வேதத்தைப் போற்றினர் ; அப்படிச் சொல்ல விட்டால் உலகம் அவரை நாஸ்திகர் என்னுமல்லவா ? ஓர் உதாரணம் பாருங்கள்,

वेद पढ़त ब्रह्मा मरे। चारों वेद कहानि।
सन्त [साध] कि महिमा वेद न जाने ॥

(சுகமனி அஷ்டபதி 7, ப. 8)

नानक ब्रह्मज्ञानी आप परमेश्वर ॥

(சு. அஷ். 8 ப. 6)

வேதம் படித்தவரும் இறந்தார்களாம். நானக்கர் இறக்க வில்லையா ? அவர் அமரரா ? வேதம் சர்வ ஞானச் சுரங்கம் ; அதைக் கட்டுக் கதை என்பவர் சொல்லும் வெறும் கதை தான். வேதத்தின் பெருமையறியாத சாதுவை அறிவிலி என்றே சொல்ல வேண்டும். நானக்ஜீ வேதத்தையே ஏற் றிருந்தால் அவரது சம்பிரதாயம் பலித்திராது. அவர் குருவாய் இருக்கவும் முடியாது. ஏனெனில் ஸம்ஸ்க்ருதம் படிக்காதவர் அதைப் படிப்பித்துப் பிறரைச் சீடராக்க முடியாது. நானக்கர் தோன்றிய போது ஸம்ஸ்க்ருத வித்தை நலிந்தது ; பஞ்சாப், முஸ்லிம்களால் பீடிக்கப்பட் டிருந்தது. அச் சமயம் நானக்கர் சிலரைக் காத்தார். நானக்கர் இருந்தபோது அவர் வழியைப் பின்பற்றிய சீடர் மிகக் குறைவே. இறந்தப் பிறகு அவர்கள் நானக்கரை சித்த புருஷனாக்கினர். இது பாமரர் வழக்கமே. பல பெருமைகளைச் சுமத்திக் கடவுளுக்குச் சமானமாகவும் மனிதனைப் பாமரர் மதிக்கின்றனர். நானக்கர் பெரிய செல்வரும் அல்லர். ஆனால் நானக்க சந்திரோதயத்திலும், ஜென்மசாகியிலும் அவர் சித்தரென்றும் பெரிய செல்வ

ரென்றும் எழுதப்பட்டிருக்கிறது. நானக்ஜீ பிரம்மாதிகளைக் கண்டு பேசி, அவர்களால் மதிக்கப் பெற்றார். நானக்ஜீ கல்யாணத்தில் ஏராளமான யானை, குதிரை, தேர், ஊர்வலம் வந்தன. தங்கம், வெள்ளி, முத்து, இரத்தினாதிகள் குவிந்து கிடந்தனவாம்; பொன் மணித்திரளுக்குக் கணக்கே யில்லையாம். இப்படிக் கதை கட்டியிருக்கிறார்கள். இதெல்லாம் கட்டுக் கதைத் தவிர வேறென்ன? சிஷ்யர் குற்றம்; நானக்கர் குற்றமன்று. நானக்கருக்குப் பிறகு அவர் மகன் உதாஸி, சிஷ்யரையும் இராமதாஸர் நிர்மலரையும் தோற்றினர். பட்டத்திற்கு வந்தவரெல்லாம் தங்கள் பாடல்களை கிரந்தத்தில் புகுத்தினர். பத்தாவது குரு கோவிந்த சிங்கன்; அவனுக்குப் பிறகு கிரந்தத்தில் ஒன்றும் சேர்க்கவில்லை. எனினும் அதுவரையில் இருந்த சிறுசிறு நூல்களையெல்லாம் தொகுத்து 'குருக்ரந்தம்' பெரிதானது.

நானக்கருக்குப் பிறகு எழுந்த நூல்கள் பல; புராண ரீதியில் பொய்க் கதைகள் புனையப்பட்டன. சிஷ்யர் தெய்வ ஞானிகளைப் பரமேசுவரனாக்கி கர்மோபாஸனையை விட்டுக் கெட்டனர். இன்றேல் நானக்கர் வகுத்த பக்திமார்க்கம் நன்றே. இன்று உதாஸிகள் நாமே பெரியர், நிர்மலர் நாமே பெரியர், அகாலிகளும், ஸுதெர்ஹஸாஹிகளும் நாமே எல்லாம் என்கின்றனர். இவருள் கோவிந்தசிங்கன் சூர வீரனாகித் தனது ஜனங்களைத் துன்புறுத்திய முஸல்மான்களைப் பழி தீர்க்க முயன்றான். ஆனால் அவனிடம் வேண்டிய படையோ, படைக்கலமோ இல்லை; முஸல்மான் அரசு உச்ச நிலையிற் பொலிந்தது. குருகோவிந்தன் ஒரு சூழ்ச்சி செய்தான். "சண்டிதேவி எனக்கு ஒரு வாளும், வரமும் தந்தாள்; "போ முஸ்லிம்களை எதிர்; போர் வெல்வாய்," என்று தேவி கட்டளையிட்டாள்" என்றான். ஏராளமான சீக்கியர் அவனைப் பின்பற்றினர். வாமமார்க்கிகளின் பஞ்சமகாரம் போல், சக்ராங்கிதரின் பஞ்ச ஸம்ஸ்காரம் போல இவர்களுக்குப் பஞ்ச ககாரங்கள் போருக்கு உதவியாக ஏற்பட்டன. (1) கேசம்—இது வாளினின்றும் தடியடியினின்றும் தலையைச் சிறிது காக்கும், (2) கங்கன்—அகாலியர் முண்டாஸில் செருகும் இரும்பு வளையம், கடகம் கைகாப்பு—இது கையையும் சிரத்தையும் காக்கும் (3) கச்சம்—இது காலையும், மர்மஸ்தானத்தையும் காப்பாற்றும் சல்லடம். மல்லரும் நடரும்,

களைக்கூத்தரும் அணிவது; ஓட, தாவ, குதிக்க எளிதாக இருக்கும். (4) கங்கம்—தலைவாரும் சீப்பு (5) காரு (கிர்பாணம்)—பகைவனிடம் போர்புரியும் வாள்; இது இரு புறமும் கூரியது. அந்தக் காலத்திற்கேற்றபடி அறிஞன் கோவிந்தன் இந்தக் ககாரங்களை ஏற்படுத்தினான்; இந்தக் காலம் இவை தேவையில்லை. போருக்காகப் பயன்பட்ட இவற்றை இன்று சமயச் சின்னங்களாகக் கருதுவது பொருத்தமில்லை. சீக்கியர் மூர்த்திபூஜை செய்வதில்லை; ஆனால் அதைவிட மும்முரமாக கிரந்தபூஜை செய்கின்றனர். இதுவும் மூர்த்திபூஜைதானே? ஜடபதார்த்தத்திற்குத் தலை வணங்கல் அல்லதுப் பூஜைசெய்தலே மூர்த்தி பூஜையாமே. மூர்த்தி பூஜைக்காரர் தங்கள் கடையைத் திறந்து வயிறு வளர்க்கின்றனர். பூசாரி விக்கிரகத்தைக் காட்டிக் காணிக்கை வசூலிப்பது போலவே, நானக் சிஷ்யரும் கிரந்தத்தை வணங்கிப் பிறரை வணங்கச் செய்து காணிக்கை கொள்கிறார்கள். கிரந்த பக்தர் வேதத்தை அவ்வளவு மதிப்பதில்லை. ஆனால் அவர்கள் வேதத்தைப் படித்ததுமில்லை, கேட்டதுமில்லை. அதனால் வேதத்தை அவர்கள் பாராட்டாதது குற்றமில்லை. வேதம் படித்தால், கேட்டால், துராக்ரகமில்லாத புத்திமான்கள் வேத சம்பிரதாயத்தை மேற்கொள்வார்கள். இவர்கள் உணவு விஷயத்திலே பல வீண் கட்டுப்பாடுகளை விலக்கி யிருக்கிறார்கள். அதேமாதிரி விஷயாசக்திகளையும் துரபிமானத்தையும் விலக்கி, வேத மதத்தை உயர்த்த முன்வந்தால் நலமாகும்.

## தாது பந்திகள்

வினா: தாதூமார்க்கம் நல்லதுதானே?

விடை: நல்லது வேதமார்க்கமே. உறுதியாக அதையே பின்பற்றவேண்டும்; இல்லையேல் சங்கடமே. தாதாஜீ குஜராத்தில் பிறந்தார். ஜயபுரிக்கு அருகேயுள்ள அமேரில் வசித்து எண்ணெய் வியாபாரம் செய்தார். தாதுவையும் மக்கள் வழிபடுவது ஈஸ்வரனின் விசித்திர லீலைதான். இப்போது தாது பந்தாக்காரர் வேதாதி சாஸ்திரங்களை விட்டொழித்து, 'தாதுராம், தாதுராம்' என்பதே முக்தியென நம்புகின்றனர். சத்தியோபதேசகர் இல்லாவிட்டால் இந்தக் கெடுதலே உண்டாகும்.

## இராமநேசர்கள்

ஷாஹபூரியில் சமீபத்திலேதான் 'இராமசிநேஹி' மதம் எழுந்தது. இராமசிநேகர் வேதோக்த தர்மத்தை விட்டு, "ராம், ராம்" என்று முறையிடுவதே நல்லதென்பர். அதில் ஞானம், தியானம், முக்தி எல்லாம் உள்ளது என்பர். ஆனால் பசிக்கு ராமநாமம் ரொட்டி தராது. உணவும் நீரும் இல்லறத்தாரிடமே கிடைக்கும். இவர்களும் மூர்த்திபூஜையை வெறுக்கின்றனர்; என்றாலும் தாங்களே மூர்த்தி பூஜையாய் விடுகின்றனர். அவர்கள் எப்போதும் பெண்கள் சங்கத்தில் வசிக்கின்றனர். ஏனெனில் துணைவியைப் பிரிந்தால் இராமனுக்கு இன்பமில்லையாம். இராமசிநேகரைப் பற்றி இங்கே சிறிது ஆராய்வோம்.

சாது இராமசரண் மேவார்க்கருகேயுள்ள சஹபுரியில் ஒரு மதத்தைக் கிளப்பினார். இராமநாமமே பரம மந்திரம். இவர்கள் சித்தாந்த நூலில் ஸந்ததாஸ் முதலியோர் இவ்வாறு எழுதுகின்றனர்.

भरम रोग तब ही मिटया, रटया निरञ्जन राइ ।
तब जम का कागज फटया, कटया कर्म तब जाइ ॥

சகி. 6 (சுமரன் அங்கம் 17)

இராமநாமம் ஜபித்தால் உடனே பிணிநீங்கும்; ஐயம்தீரும், யமனோலை கிழிந்துபோம்; பாபம் தீரும்; அறிவாளி சிந்திக்கட்டும்: ராம்நாம் என்பதால் அஞ்ஞானத்தால் வரும் ஐயம் நீங்குமாம்; பாப வினையால் வரும் யம தண்டனை விலகுமாம்! என்ன மயக்கம்! கர்ம பலன் வீணாகுமா? இப்படியானால் மனிதர் பாபத்தில் பற்றுண்டு மானிடப் பிறவி வீணாகுமே! இவர்களின் முக்கிய குரு இராமசரணர் வசனங்கள் இவை:

महमा नांव प्रताप की, सुनौ सरवण चित लाइ ।
रामचरण रसना रटौ, क्रम सकल झड़ जाइ ॥ 1 ॥
जिन जिन सुमर्या नांव कूं, सो सब उतरया पार ।
रामचरण जो वीसर्या, सो ही जम के द्वार ॥ 2 ॥

राम बिना सब झूठ बतायो ।
राम भजत छूटया सब क्रम्मा । चन्द अरु सूर देइ परकम्मा ॥
राम कहे तिन कूं भै नाहीं । तीन लोक में कीरति गाहीं ॥

राम रटत जग जोर न लागै ।
राम नाम लिख पथर तराई । भगति हेति औतार ही घरही ॥
ऊँच नीच कुल भेद विचारै । सो तो जनम आपणो हारै ॥
संता के कुल दीसै नांहीं । रांम रांम कह राम सम्हाहीं ॥
ऐसो कुण जो कोरति गावै । हरि हरि जन की पार न पावै ॥
रांम संतां का अन्त न आवै । आप आपकी बुद्धि सम गावै ॥

—(நாம பிரதாப்)

"நாம மகிமையை மனமூன்றிக் கேள்—அன்பா! இராம நாமஜபத்தால் பாபம் போகும். நாமஸ்மரணை செய்பவன் பவசாகரத்தை எளிதே தாண்டுகின்றான். இராமனடியை மறக்கிறவன் எமனிடத்தில் சிக்கிக்கொள்ளுகிறான். இராமனைத் தவிர மற்றதெல்லாம் பொய். இராம பஜனை செய்பவன் எல்லாத் தொழில்களையும் விட்டுவிடுகிறான். சூரிய சந்திரர் அவன்முன் நிற்பர். சொல் 'ராம்' பிறகு யாருக்கும் அஞ்சவேண்டாம். மூவுலகும் உன் கீர்த்தியை இசைக்குமே! சொல் 'ராம்' எமன் கிட்ட வரமாட்டான்; எழுது 'ராம்' கல்லும் மிதக்கும். பக்தரைக் காக்கவே இராமன் அவதரித்தான். கீழ்மேல் குலபேதம் பார்க்கிறவன் பிறவி வீண். ஸந்தர் சாதி குலம் பார்ப்பதில்லை; எங்கும் இராமன்; சும்மா ஜபி—ராம் ராம் ராம்! இராமனைப் பாடுவோனே பெரியவன்; அவன் சக்தி அபாரம்; ஸந்தர் பெருமை அளப்பரிது; அவரவர் அறிவுக்கேற்றபடி இராமநாமத்தை ஜபிக்கக் கடவர்."

## இதற்குக் கண்டனம்

இராமசரண் நூல்களிலிருந்து அவர் படிப் பில்லாத சாதாரண கிராமவாசி என்பது விளங்கும். அவருக்குக் கொஞ்சம் படிப்பிருந்தால் இந்த கப்ஸாக்களைத் திரித்துவிடமாட்டார். ராம், ராம் என்பதால் கர்மம்போகும் என்பது, வீண் மயக்கமே. இப்படி உபதேசிப்பவர் தம் பிறப்பையும் பிறர் பிறப்பையும் வீணுக்கு கிறார்கள். யமபயம் பெரிது; போலீஸ், திருடர், கொள்ளைக்காரர், புலி, பாம்பு, கொசுக்களின் பயமும் அதிகம்; இரவும் பகலும் "ராம் ராம்" என்றாலும் இந்தப் பயம்போகுமா? சர்க்கரை சர்க்கரை என்றால் வாய் இனிக்குமா? வாய்மையும் நல்வினையுமே அச்சந் தவிர்க்கும். "ராம் ராம்" என்பதை இராமன் கேட்ப தில்லை; ஆயுளெல்லாம் ராம் ராம் என்று முறையிட்டாலும் கேட்க

மாட்டான். அப்படிக் கேட்கிறவனுனல் ஒரு தரம் "ராம்" என்ருல் போதுமே; இரண்டாந்தரம் சொல்லத் தேவையில்லையே. பிறரை ஏமாற்றிப் பிழைத்து அவர் வாழ்வைக் கெடுக்கவே இவர்கள் முனைந்திருக்கிருர்கள். இவர்கள் தங்களை இராம நேசர் என்பது வியப்பே! இவர்கள் உண்மையில் விதவா நேசர்கள்! எங்கெங்கு பார்த்தாலும் இந்த ஸந்தர்களைச் சுற்றி விதவைகள், விதவைகள்! இந்தப் பாகண்டரில்லாவிட்டால் ஆரிய வர்த்தம் இப்படி வீழ்ச்சி யடைந்திருக்காது. இவர்கள் சிஷ்யர் களுக்குத் தங்கள் எச்சில் சாப்பாட்டைத் தருகிருர்கள். பெண்கள் இவர்கள் முன் நெடுக்கட்டைபோல் தண்டன் ஸமர்ப்பிக்கிருர்கள். பெண்களுக்கும் சாதுக்களுக்கும் ஏகாந்த லீலையும் நடக்கிறது.

இம்மதத்தின் இரண்டாவது கிளை மார்வாரிலுள்ள கேடாபா (खेडापा) கிராமத்தில் வளர்ந்தது. அதன் கதை இதுவே: இராம தாஸ் என்பவன் ஒருவன் இருந்தான்; அவன் 'தேரா' என்ற திருக்குலம்; மிக சாமர்த்தியசாலி. அவனுக்கு இரண்டு மனைவிகள். அவன் 'அகோரனுகி' பல்லாண்டுகள் நாயுடன் உண்டான். பிறகு 'கூண்டாபந்த' வாமமார்க்கியானுன். பிறகு சாமர வகுப்பைச் சேர்ந்த 'இராமதேவரின்' சீடராகி 'காமடியா' ஆனுன். தன் இரு மனைவிகளுடன் பஜனை பாடி ஊர் ஊராக சுற்றினுன். இப்படி ஊர் ஊராகச் சுற்றும்போது தேரர்களின் குருவான இராமதாஸரை 'சீதலில்'* சந்தித்தார். அவர் இராமதேவ பந்தாவைக் கற்பித்து, அவரைத் தன் சீட ராக்கினுர். இராமதாஸ் கேராபா கிராமத்தில் ஊன்றிக்கொண்டு தன் சம்பிரதாயத்தை வளர்த்தார். சஹபுரியில் இராமசரணர் மதம் வளர்ந்தது. அதன் வரலாறு இவ்வாறு என்று சொல்லு கின்றனர்:

இராமசரணர் ஜயபுரி பனியா; அவர் 'தாந்த்டாகி' கிரா மத்தில் ஒரு துறவியிடம் காவி யேற்று, அவரை குருவாக்கி சஹபுரியில் தன் தலைநகரை நிர்மாணித்தார். அறியா மக்க ளிடையே போலிகள் அதிவிரைவில் வேரூன்றுகிருர்கள். அதே மாதிரி வேரூன்றிக் கொண்டது. இராமசரணர் கொள்கையை பிரமாணமாகக் கொண்டு இன பேதமில்லாமல் பிராமணர் முதல் தீண்டாதார் வரையில் எல்லாரையும் சிஷ்யர்களாக ஏற்ருர். இவர்கள் மண் பானையிலேதான் சமைத்து உண்பர்; ஆகவே

* ஜோத்பூர் ராஜ்யத்தில் உள்ள ஒரு பெரிய கிராமத்தின் பெயர் 'சீதல்' என்பது.

கூண்ட பந்தர்கள். இவர்கள் சாதுக்களின் உச்சிஷ்டத்தைப் பிரசாதமாகக் கொள்வார்கள். வேதத்தைக் கருதமாட்டார்கள்; தாய் தந்தையரையும், தொழிலையும் விட்டு வரச்சொல்லுவார்கள். ராம நாமத்தை சூக்ஷ்ம வேதம் என்று சொல்லி, அதை ஜபிப்பதே போதும் என்பார்கள். இராமநாமத்தை விட வேறு மோட்ச மார்க்கமில்லை. அதுவே பாப நிவர்த்தி; முன் பிறவிகளிற் செய்த பாபங்களையும் போக்கும். ஒவ்வொரு மூச்சுடனும் ராமநாமம் சொல்பவனே பரம குரு; சத்ய குரு; சத்ய குருவே கடவுளைவிடப் பெரியவன் என்று அவன் சிலையை வணங்குகிறார்கள். இந்தச் சாதுக்களின் கால்களைக் கழுவிய பாத தீர்த்தத்தை உட்கொள்ளுகிறார்கள். சிஷ்யன் குருவை விட்டுப் பிரியும்போது குருவின் நகத்தையும் தாடி மயிரில் சிலவும் தன்னுடன் எடுத்துச் செல்கிறான். தினம் அந்த நகத்திற்கும் மயிருக்கும் அபிஷேகம் செய்து தீர்த்தம் கொள்ளுகிறான்! இராமதாஸ் ஹரிராமதாஸ் நூல்களை வேதத்தினும் பெரிதாக மதித்து, சுற்றி வலம் வந்து, எட்டு தடவை தண்டம் சமர்ப்பிக்கிறார்கள். குரு அருகிலிருந்தால் குருவுக்கு தண்டம் சமர்ப்பிப்பார்கள். ஆண் பெண் இருபாலருக்கும் அதே ராம மந்திரோபதேசமே செய்வர். அதுவே இன்பம். இராமஸ்மரணை ஒன்றே மங்களம்; படிப்பது துன்பம் பாபம் எனக் கருதுவர்.

पण्डताई पाने पड़ी, ओ पूरबलो पाप ।
राम २ सुमरयां विनां, रइग्यौ रीतो आप ॥
वेद पुराण पढ़े पढ़ गीता, रामभजन बिन रह गये रीता ।

"கற்பது வீண்; படிப்பது பாபம்; இராமநாம ஜபமின்றிப் புத்தகப் படிப்பு வீண். இராம நாமமின்றி வேத புராண கீதாத் யயனமும் பயனில்லை" என்று அவர்கள் நூலிற் காண்கிறது. பெண்கள் பதி சேவை செய்வது பாபம்; குரு சேவை, சாது சேவை செய்வது புண்ணியம் என்று இவர்கள் நூலில் எழுதியிருக்கிறார்கள். அவர்கள் வருணாசிரம தர்மத்தை மதிப்பதில்லை. இராமஸ்நேகி யில்லாதவன் நல்ல அந்தணனானாலும் அதமன் என்கிறார்கள். இராம சிநேகியான நீச சண்டாளனும் உத்தமன் என்கிறார்கள். அவர்கள் ஒருபுறம் அவதார வாதத்தை மறுக்கிறார்கள். மறுபுறம் பகவான் பக்தர்களுக்காக அவதரிக்கிறார் —भगति हेति औतार हिं धरही ॥ என்கிறார்கள். இந்தப் புரட்டுத் தனமெல்லாம் ஆரிய வர்த்தத்திற்கு அனர்த்தம் விளைவிப்ப

தாயிற்று. இவ்வளவிலிருந்து அறிவாளிகள் உண்மையைத் தெரிந்துகொள்வார்கள்.

## குஸாயி லீலை

**வினு:** கோகுல குஸாயி மதம் மிக்க நல்லதுதானே? பாருங்கள் அவர்கள் எப்படி ஐசுவரியத்தை பிரமாதமாக அனுபவிக்கிருர்கள்! தெய்வ சக்தி யில்லாமல் இந்த ஐசுவரிய லீலை நடக்குமா?

**விடை:** இந்த ஐஸ்வரியம் இல்லறத்தாரது, குஸாயிகள் சொந்தமன்று.

**வினு:** ஊ ஹூம்! எல்லாம் குஸாயி மகிமையால் வந்தவை; ஏனென்ருல் இந்தப் போக வைபவம் பிறருக்கு ஏன் வரவில்லை?

**விடை:** இப்படி ஏமாற்றிப் பிழைக்கத் தெரிந்தால் ஐஸ்வரிய போகத்திற்குச் சந்தேகமென்ன? இதை விட பெரிய மோசடி வஞ்சகர்கள் இன்னும் பெரிய செல்வராகலாம்.

**வினு:** இதில் என்னையா மோசடி கண்டீர்? எல்லாம் கோலோக லீலையல்லவா?

**விடை:** இது கோலோக லீலையில்லை; குஸாயி லீலை; இப்படி லீலை நடந்தால் கோலோகம் இதைவிட மோசமாயிருக்குமே. இந்த மதம் தெலுங்கு நாட்டில் கிளம்பியது. இலட்சுமண பட்டன் என்றொரு தெலுங்கர், விவாகமானவர். ஏதோ காரணத்தால் தாய் தந்தை மனைவியரை நீத்துக் காசிக்குச் சென்று ஸந்யாசம் வாங்கிக்கொண்டார். ஆனால் தமக்கு விவாகமே ஆகவில்லை என்று பொய் சொன்னார். செய்தி கேட்டு தாய் தந்தை மனைவியர் காசிக்குச் சென்றனர். ஸந்யாசம் கொடுத்த குருவிடம் "என் பிள்ளைக்கு ஏன் காஷாயந் தந்தீர்? பாருங்கள் அவரது இள மனைவியை" என்று முறையிட்டார்கள். "என் கணவனை என்னுடன் அனுப்பாவிட்டால் எனக்கும் ஸந்யாசம் தாருங்கள்" என்ருள் மனைவி. குரு சிஷ்யனை அழைத்து "அட புளுகுணி! கலியாணமே ஆகவில்லை என்று என்னிடம் சொல்லிக் காஷாயம் வாங்கிக்கொண்டாயே; ஏன்? போ

மறுபடி இல்லறத்திற்கு—உன் ஸந்யாசம் ஒழிந்தது? போ மனைவியுடன்" என்று சினந்தார். இலட்சுமண பட்டர் பேசாமல் காஷாயத்தை எடுத்தெறிந்து மனைவியுடன் சென்று இல்லறம் நடத்தினர். பொய்யும் வஞ்சமும் இந்த மதத்தின் மூலம். தெலுங்கு தேசத்திற்குச் சென்றதும் பட்டரின் ஜாதியார் அவரை ஏற்கவில்லை. பட்டரும் மனைவியும் வீட்டை விட்டு இங்குமங்கும் திரிந்து காசிக் கருகேயுள்ள சரணூர்கடத்திற்குச் சமீபத்தில் உள்ள சம்பாரண்யத்திற்கு வந்து சேர்ந்தனர். அங்கே யாரோ நாலு புறமும் தீ வைத்து நடுவே ஒரு குழந்தையை விட்டுச் சென்றிருந்தார். பட்டர் மனைவி குழந்தையை எடுத்துத் தன் குழந்தை போல வளர்த்தாள். எல்லாரும் காசியில் வசித்தனர். குழந்தை பெரியவனுனன். பெற்றோர் இறந்தனர். பையன் காசியில் சிறிது படித்து பிறகு விஷ்ணுசாமி கோயிலில் சிஷ்யனுனன். இங்கே கொஞ்சம் கடுபிடியானது; மீண்டும் காசிக்கே வந்து துறவு பூண்டான். அதே மாதிரி சாதி கெட்ட பார்ப்பான் ஒருவன் காசியில் இருந்தான். அவனுக்கு இளம் பெண் உண்டு. அவன் " நீ சன்யாஸத்தை விட்டுவிட்டு என் மகளை மணம் புரிகிருயா?" என்று கேட்டான். அவனும் அப்படியே செய்தான்—அப்பனுக்குச் சரியான பிள்ளை—ஏன் செய்யக்கூடாது? கலியாணமானதும் மனைவியுடன் அவன் விஷ்ணுசாமி கோவிலுக்குச் சென்றுன். விவாகமான அவனை அங்கிருந்து துரத்திவிட்டார்கள். பிறகு மடமை நிரம்பிய விரஜ தேசத்திற்குச் சென்று தன் வஞ்சக் கடையை விரித்தான்; பல சூழ்ச்சிகளால் ஜனங்களிடையே வலைவிரித்தான்; " கிருஷ்ணன் என்னைச் சந்தித்தான்; ஹே பக்தா கோலோகத்திலிருந்து பல திவ்ய ஜீவர்கள் பூலோகத்திற்கு வந்தார்கள்; அவர்களைப் பிரம்ம சம்பந்தத்தால் புனிதராக்கி மறுபடியும் கோலோகம் புகச் செய்" என்று உத்தரவிட்டார். இவ்வாறு அண்டப் புளுகடித்து, பிரசித்திபெற்றுர் பட்டர். பொய்க் கதைகளை நம்பி சுமார் 84 சீடர் வைஷ்ணவராஞர். அவர்களுக்கு அடியிற்கண்ட மந்திரோபதேசம் நடந்தது.

श्री कृष्णः शरणं मम ॥ 1 ॥

क्लीं कृष्णाय गोपीजनवल्लभाय स्वाहा ॥ 2 ॥

—(கோபால சஹஸ்ரநாம)

ஸ்ரீ கிருஷ்ணః சரணம் மம; க்லீம் கிருஷ்ணாய கோபீஜன வல்லபாய ஸ்வாஹாః என்பது சாதாரண மந்திரம். பிரம்ம ஸம் பந்தத்திற்கும் சமர்ப்பணத்திற்கும் பெரிய மந்திரம்—இவ்வாறு:

*श्रीकृष्णः शरणं मम सहस्रपरिवत्सरमितकालजातकृष्णवियोगजनिततापक्लेशानन्ततिरोभावोऽहं भगवते कृष्णाय देहेन्द्रियप्राणान्तःकरणतद्धर्मांश्च दारागारपुत्राप्तवित्तेहपराण्यात्मना सह समर्प्पयामि दासोऽहं कृष्ण तवास्मि ॥

இந்த மந்திரத்தை உபதேசித்து சிஷ்ய சிஷ்யைகளை அடிபணிவிக்கின்றார் வல்லப குரு. க்லீம்க்ருஷ்ணாயேதி என்பது க்லீம் தாந்திர நூலிலிருப்பது. ஆதலால் வல்லப மதம் வாமமார்க்கத்தின் கிளை என்பது தெரியும். இதனாலேதான் குசாயிகள் மிகுதியாகப் பெண்ணுறவு கொள்கின்றனர். கோபீ வல்லப மேதி—கண்ணன் கோபிகைகளின் பிரியன் என்கின்றனரே—என்ன மற்றவரிடம் கண்ணனுக்குப் பிரியமில்லையா என்ன? பெண்ணின்பத்தில் பற்றுக் கொண்டவனே பெண்-பிரியனாவான். கண்ணன் காமுகனா? கண்ணன் பிரிந்து ஆயிரம் ஆண்டுகளாமே? இவர்களுக்கு எப்படித் தெரியும்? வல்லபரும் சீடரும் எல்லாம் அறிந்தவர்களா என்ன? வல்லபரும் அவர் மதமும் உண்டாவதற்கு முன்பு ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக கிருஷ்ண விரகத்தால் மக்கள் வருந்தவில்லையா? அப்படி வருந்தும் ஆன்மாக்களைக் காக்க கோலோகத்திலிருந்து யாரும் அவதரிக்கவில்லையா? மந்திரத்தில் தபம் கிலேசம் என்ற இரண்டு வார்த்தை மிகை; இரண்டிற்கும் ஒரே பொருளே—ஸஹஸ்ரம் அனந்தம் என்பதும் மிகைதான். ஒரு வார்த்தையே போதும். அனந்தம் அல்லது ஸஹஸ்ரம் இருக்கலாம்; இரண்டும் அனாவசியம். அனந்த துக்கம் என்றும் துயரம் என்பதால் வல்லபர் வந்தும் பயனில்லை; துக்கம் இருந்துகொண்டு தானிருக்கும். என்றும் இருப்பதற்கு முடிவேது? மேலும் ஒருவன் உடல் பொருள் ஆவி பொறி புலன், மனம் கரணம், நினைவு வீடு மனைவி மக்கள் செல்வம் எல்லாம் கிருஷ்ணனுக்கு ஏன் அர்ப்பணிக்க வேண்டும்? அவன் புருஷோத்தமன்,

* கண்ணனே சரணம்; ஆயிரம் ஆண்டுகள் அவனைப் பிரிந்து வருந்துகிறேன். ஹே கிருஷ்ணா ' என் பொறிபுலன் மனம் மனைவி மக்கள் செல்வம் எல்லாம் உனக்கே அர்ப்பணம். நீ என் ஆண்டான்; நான் உன் அடிமை;' என்பது இம் மந்திரத்தின் கருத்தாகும்.

ஆப்தகாமன்; வேண்டுதல் வேண்டாமையிலான்; அவனுக்கு இவை எதற்கு? மேலும் பிறர் உடல்மேல் அவனுக்கு ஆசையுண்டா? தலை முதல் நகம் வரையில் உடம்பில் எத்தனையோ அங்கங்கள் உண்டே; இந்த உடலை எப்படிக் கொடுப்பது; அர்ப்பணிப்பது? உடலைக் கொடுப்பது என்றால் அதிலுள்ள மல மூத்திரங்களையும் கொடுப்பதாகுமே. அப்படிச் செய்வதாகுமா? மேலும் பக்தன் தனது புண்ணிய பாபங்களையெல்லாம் கிருஷ்ணார்ப்பணம் பண்ணினால் அவற்றின் வினைப் பயனெல்லாம் கிருஷ்ணனன்றோ அனுபவிக்கவேண்டும்? கிருஷ்ணார்ப்பணம் என்று ஏமாற்றி எல்லாம் தனக்கே அர்ப்பணித்துக் கொள்ளுகிறான் கோஸாயி. சரீரத்தை அர்ப்பணிப்பதாமே; அதிலுள்ள மலமூத்திர நாற்றங்களையும் ஏற்பாரா? ஏன் ஏற்கவில்லை? இனிப்பைச் சப்பு; கசப்பைத் துப்பு என்ற கதைதானே? பிறருக்குக் கூடாதாம்; எல்லாம் கோஸாயிக்கே தரவேண்டுமாமே. என்ன சுயநலம்! பிறர் பொருளைக் கவர எவ்வளவு சூழ்ச்சி! வேத தர்மம் எப்படிப் பாழாகிறது—பாருங்கள் வல்லப வுலகை:

श्रावणस्यामले पक्ष एकादश्यां महानिशि ।
साक्षाद्भगवता प्रोक्तं तदक्षरश उच्यते ॥ 1 ॥

ब्रह्मसम्बन्धकरणात्सर्वेषां देहजीवयोः ।
सर्वदोषनिवृत्तिर्हि दोषाः पञ्चविधाः स्मृताः ॥ 2 ॥

सहजा देशकालोत्था लोकवेदनिरूपिताः ।
संयोगजाः स्पर्शजाश्च न मन्तव्याः कदाचन ॥ 3 ॥

अन्यथा सर्वदोषाणां न निवृत्तिः कथञ्चन ।
असमर्पितवस्तूनां तस्माद्वर्ज्जनमाचरेत् ॥ 4 ॥

निवेदिभिः समर्प्यैव सर्वं कुर्यादिति स्थितिः ।
न मतं देवदेवस्य स्वामिभुक्तिसमर्पणम् ॥ 5 ॥

तस्मादादौ सर्वकार्ये सर्ववस्तुसमर्पणम् ।
दत्तापहारवचनं तथा च सकलं हरेः ॥ 6 ॥

न ग्राह्यमिति वाक्यं हि भिन्नमार्गपरं मतम् ।
सेवकानां यथा लोके व्यवहारः प्रसिध्यति ॥ 7 ॥

तथा कार्यं समर्प्यैव सर्वेषां ब्रह्मता ततः ।
गंगात्वे गुणदोषाणां गुणदोषादिवर्णनम् ॥ 8 ॥

இவை கோஸாயி சித்தாந்த நூல்களில் உள்ள சுலோகங்கள். இவை கோஸாயி மதத்தின் மூல தத்துவங்கள்.

1. ஆவணி ஏகாதசி நிசியில் சாக்ஷாத் கிருஷ்ண பகவானே என்னைப் பார்த்து இப்படிப் பேசினான்: (அடடா! ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இறந்த கிருஷ்ணன் இரவில் வந்து வல்லபரிடம் எவ்வாறு பேசுவாரோ—கோஸாயிஜீயைத் தான் கேட்கவேண்டும்).

2. பிரம்ம ஸ்பர்ஸம் பெற்றதும் உடலும் உயிரும் புனிதமாகும்; எல்லாத் தோஷமும் பறந்தோடும். சபாஷ்! கோஸாயிக்கு சிஷ்யனாகி உடல் பொருள் ஆவியெல்லாம் அர்ப்பணம் செய்ததும், எல்லாத் தோஷமும் நிவர்த்தியாகிறதாமே! மூடரைச் சீடராக்க என்ன வலைவிரிப்பு! கோஸாயிக்கு அடிமைப் பட்ட மாணவ, மாணவிகள் தோஷ நிவர்த்தியடைவதானால் பிணி வறுமையினால் ஏன் வருந்தவேண்டும்?

3. தோஷம் ஐந்து விதமாம்: (1) ஸகஜதோஷம்—இஃது இயல்பான காமக்குரோதாதிகளால் உண்டாவது (2) தேசகாலத்தில் செய்யும் பலவிதமான பாபம் (3) உணவுப் பிழைகள், வேதம் மறுக்கும் பொய் குரலை முதலியன. (4) திருடன், விபசாரி, போன்ற தீநட்பு; சகோதரி கன்னிகை, மருமகள், குருபத்தினி முதலியோரைப் புணர்ந்தால் வரும் பாபம் (5) தீண்டத்தகாதவரைத் தீண்டும் பாபம்.—கோஸாயி மதத்தினர் இந்த ஐந்து பாபங்களைப்பற்றிக் கவலை கொள்ளவேண்டாம், அவர்கள் யதேச்சையாக நடக்கலாம்.

4. கோஸாயி மதத்தில் சேரவேண்டும்; பாபம் போக வேறு வழியே இல்லை. கோஸாயிக்குச் சமர்ப்பணமாகாததைச் சீடர் ஏற்று அனுபவிக்கக்கூடாது. இதனாலேதான் சிஷ்யர் தமது மனைவி, மகள், நாட்டுப்பெண்களையும், பொருள்களையும் கோஸாயிக்கு அர்ப்பணிக்கின்றனர். கோஸாயிக்கு அர்ப்பணம் பண்ணாமல் மனைவியைக்கூட சிஷ்யன் தொடமுடியாது.

5. ஆதலால் சிஷ்யர் எதையும் ஸமர்ப்பணம் செய்தே தான் நுகரவேண்டும். குரு அனுபவித்த பிறகே சிஷ்யர் எதையும் தொடலாம்; அதற்குமுன் கூடாது.

6. ஆதலால் முதலில் எல்லாச் செயல்களையும், எல்லா வஸ்துக்களையும், மனைவியைக்கூட கோஸாயிக்கு ஹரிஸமர்ப்பணம் செய்தே ஏற்கவேண்டும்.

7. கோஸாயி மதந்தவிர வேறுமதப் பேச்சைக்கூட சிஷ்யர் கேட்கக்கூடாது, ஏற்கக்கூடாது. இது கோசாயிகளின் பிரசித்த விவகாரமாகும்.

8. எல்லாம் குரு சமர்ப்பணம் செய்து அனைத்திலும் பிரஹ்மம் உள்ளதென நம்புக. கங்கையிற் கலந்த நீர் கங்கையாவது போலவே, கோஸாயி மதத்திற் சேர்ந்த யாவரும் தீமை நீங்கி நல்லவராகிருர்கள். ஆதலால் வல்லப மதமே பெரிது, மாசற்றது, நல்லது எண்ண வேண்டும். எல்லா மதங்களிலும் வல்லப மதமே சுயநலத்தில் பெரிது—இதை வாசகர் உணர்க. பிரம்மத்தின் ஒரு லட்சணத்தையும் உணராத கோஸாயி சீடர்களுக்கு பிரம்ம ஸ்பர்சம் தருவதெப்படியோ! "நாமே பிரம்மம் நம்மிடம் கூடுவதால் பிரம்மஸ்பரிசம் ஏற்படுகிறது" என்ருல், பிரம்மலக்ஷணம் ஒரு சிறிதும் இல்லாத நீர், என்ன போக விலாசத்திற்குப் பிரமம் என்று ஊரை ஏமாற்றிக்கொண்டிருக்கிறீரா? சிஷ்ய சிஷ்யைகள் தங்கள் ஸமர்ப்பணத்தால் புனிதமாவதாகச் சொல்லுகிறீர்களே; தங்கள் மனைவி மக்கள் யார் ஸமர்ப்பணத்தால் புனிதமாகிருர்கள்; அல்லது ஸமர்ப்பணமில்லாமல் அசுத்தமாயிருக்கிருர்களா? ஸமர்ப்பணம் பண்ணுத உடல் அசுத்தமாயிற்றே; அப்படிப் பட்ட உடலிற் பிறந்த நீரும் அசுத்தந்தாமே; உங்கள் மனைவி, மகள், மறுமக்களைப் பிற மதத்தினரிடம் ஸமர்ப்பணத்திற்கு நீரும் விடவேண்டியதுதான்; அப்போதுதான் புனிதம் வரும். அப்படிச் செய்ய மறுத்தால் நீரும் அன்னிய ஸ்திரீ, அன்னியர் பொருளைத் தீண்டக்கூடாது. போனது போகட்டும்; இனி யாவது நீர் திருந்தி, பொய்யும் புரட்டும் போலித்தனங்களும் விட்டுவிட்டு, அழகான வேத மார்க்கத்திற்குத் திரும்பி, அறம் பொருள் இன்பம் வீடாகிய புருஷார்த்த பலன்களை அனுபவித்துப் பேரின்பம் பெறுங்கள்.

இந்தக் கோஸாயிகள் தங்கள் மதத்தைப் புஷ்டிமார்க்கம் என்பர்—புஷ்டியாகத் தின்று, குடித்துச் கொழுத்துக் கண்ட பெண்களைக் கூடிக் களித்தலோ புஷ்டி மார்க்கம்! இதனுல் பவுத்திரம் முதலிய கொடிய நோய் வாய்ப்பட்டு இவர்கள் எமன் வாய்படும் துயரை அவர்களே அறிவார். அதைப் புஷ்டி மார்க்கம் என்பதைவிடக் குஷ்டி மார்க்கம் என்பதே தகும். குஷ்டரோகிகள். குஷ்டரோகியின் தாதுக்கள் கெட்டு உடல் அழுகிச் சொட்டி அழிவது போலவே போக விலாஸத்திற் புரளும் கோஸாயிகள் நரகவேதனைப் பட்டுச்

சாகிறார்கள். கோஸாயி மதத்தை நரகமார்க்கம் என்பதே பொருந்தும். துன்பமும் துயரும் தருவதே நரகம்; இன்பந் தருவதே சுவர்க்கம்.

இந்தச் கோஸாயிகள் வலைவிரித்துப் பாமரமக்களை வசப் படுத்தித் தங்களைக் கிருஷ்ணாவதாரம், உலகநாயகர் என் கின்றனர். "நாம் புருஷோத்தமன்; கோ லோகத்திலிருந்து உலகிற் பிறந்துள்ள திவ்ய ஜீவர்களைக் காப்பாற்றவே அவதரித் தோம். நாம் சொல்லுகிறபடி நடக்காவிட்டால் கோலோகம் கிட்டாது; அங்கே எல்லாரும் பெண்கள். கண்ணன் ஒருவனே ஆண்!!" என்கிறார் கோஸாயி! பலே கோஸாயி! நல்ல மதம்— சிஷ்யரெல்லாம் கோபிகளாம்! கோஸாயி கண்ணனும்! இரண்டு பெண்சாதிக் காரன் திண்டாட்டம் நமக்குத் தெரியும். புருஷன் ஒருவன்; மனைவியர் கோடியானால் அவன் படும் தொல்லைக்கு எல்லையுண்டா? கண்ணனுக்கு எல்லாப் பெண்களையும் மகிழ் விக்கும் திறமையுண்டு, என்று சொல்வர்; அவன் மனைவிக்கும் கண்ணனைப்போல் எல்லாரையும் மகிழ்விக்கும் திறமையுண்டல் லவா? ஏனெனில் அவளும் கண்ணனின் ஸஹதர்மினி, ஸ்வாமினி யல்லவா? காமவுணர்ச்சி இருவருக்கும் உள்ளதே; ஆணை விடப் பெண்ணுக்கே அதிகம். கோலோகத்திலும் அப்படித் தானே. கண்ணன் மனைவிகளெல்லாம் ஊடலும் சக்களத்திப் போராட்டமும் புரிந்தால் கோலோகத்தைவிட நரகம் வேறே ஏது? கோலோகம் சுவர்க்கமாகவா யிருக்கும்! ஸ்திரீலோலர் பவுத் திரம் முதலிய தீயநோய்களால் வருந்தும்போது கோலோகத் தின் சுகம் அடடா டடடா! என்ன கோஸாயி! என்ன கோ லோகம்! எமலோகம் பரவா யில்லை! இந்த லீலையின் கைகண்ட பலன் வெட்டை நோயே. இந்த போகத்தின் பலன் கொடிய ரோகமே! கோஸாயிக்கு இப்படி விந்து நோய் வரும்போது கண்ணனுக்கும் வந்தே தீரும். ஏனெனில் கண்ணன் பிரதிநிதியே கோஸாயி, இன்றேல் அவன் பிரதிநிதியான கோஸாயிக்கும் நோய் வரக்கூடாது.

வினா: இந்த மண்ணுலகிலே தான் நோய் வரும்.

விடை: கோலோகக் கண்ணனுக்கு நோயே வராது.

भोगे रोगभयम् —"போகே ரோக பயம்" (பர்துருஹரி— வைராக்ய சதகம் 33) போகம் எங்கோ அங்கே ரோகம் வந்தே தீரும். கண்ணனுக்குக் கோடிக்கணக்கான கோபிகைகள் உண்

டானுல் அவர்கள் மூலம் பிள்ளைகளும் உண்டாகுமா? இல்லையா? உண்டானுல் ஆணு பெண்ணு, இரண்டுமா? பெண் பிள்ளைகளானுல் யாரை மணப்பார்கள்! ஏனெனில் கோலோகத்தில் கண்ணன் ஒருவனே ஆண்பிள்ளை—வேறு ஆண் உண்டென்ருல் உன் சொல்லை மறுப்பதாகும். எல்லாரும் ஆண் என்ருலும் அவர்களும் யாரை மணப்பார்கள்? கோபிமாரைத் தவிர எத்தனையோ பெண்கள் உண்டே. மேலும் கண்ணனே ஆண் மற்றவர் பெண் என்பது பொய்க்குமே, பொய்க்குமே! கோலோகத்தில் குழந்தை பிறப்பதில்லையா? கண்ணன் அலியா? அவன் மனைவியர் மலடா? கோலோகம் தில்லி பாதுஷாவின் பீபீப் பட்டாளம்போலிருக்கிறதே, டடடா! மாணவ மாணவிகளின் மனம் தனம் உடல் மூன்றும் கோஸாயிகள் தங்களுக்கு அர்ப்பணம் செய்யச் சொல்லுகிருர்களே. அது சரியா? திருமணம் நடக்கும்போது மனைவி கணவனுக்கு அர்ப்பணமாகிருள். அவள் உடல் அவனுக்கே; அவ்வாறே கணவன் உடல் மனைவிக்கு அர்ப்பணமாகிறது. மனதையும் வேருெருவருக்குத் தரமுடியாதே. மனமும் உடலும் இன்னெருவருக்கு அர்ப்பணிப்பது விபசாரம் என்றுதானே சொல்லவேண்டும். பண விஷயமும் அதே லீலைதான்; மனமில்லாமல் பணம் அர்ப்பணமாகாது. சிஷ்யர் சம்பாதிக்கட்டும். நாம் ஆனந்தமாக அனுபவிப்போம் என்பது தான் இந்தக் கோஸாயிகள் எண்ணம்! வல்லப கோஸாயிகளைத் தெலுங்குப் பிராமணர் சேர்ப்பதில்லை; அவர்களுக்குப் பெண் கொடுத்தவரை ஜாதிப்ரஷ்டம் செய்வார்கள்; ஏனெனில் கோஸாயிகள் ஜாதிப்ரஷ்டமானவர்கள், வித்யாஹீனர்; இரவும் பகலும் போக சுகத்தில் ஆழ்பவர்கள்.

ஒரு வீட்டிற்கு கோஸாயி விஜயம் செய்கிருர்; பாருங்கள் அங்கே பதுமைபோல் அசையாமல் சும்மா உட்கார்ந்திருக்கிருர்! மூடன் திறமை மௌனம் 'मूर्खाणां बलं मौनम्' (மூர்க்காணும் பலம் மௌனம்); பேசினுல் குட்டு வெளியாகும்; பேசாமல் பெண்கள் பக்கம் கண்ணேட்டுகிருர் கோஸாயி; யார் மேல் அவன் கண் பாய்கிறதோ அவள் தன்னை மிகவும் பாக்கியசாலியாகக் கருதிக் களிக்கிருள். அவள் கணவன், சகோதரர், பெற்ருர் உற்ருர் எல்லாரும் மகிழ்ச்சி கொள்கிருர்கள். பெண்கள் அவன் காலைத் தொட்டுத் கும்பிடுகிருர்கள். தனக்குப் பிரியமான பெண் காலைப் பிடிக்கும் போது கட்டைவிரலால் அமுத்துகிருன் கோஸாயி. அவளும் அவள் கணவனும் உறவினரும் இதைப்

பெரும் பேறாகக் கருதுகின்றனர். ''போம்மா, கோஸாயிஜீ பாத சேவைக்கு'' என்று அவர்கள் அனுப்புகிறார்கள். அவர்கள் இப்படிச் சம்மதிக்காவிட்டால் கோஸாயி தன் சேடிகளையும் தூதரையும் கொண்டு காரியத்தை நடத்தியே தீருவான். இந்த ஆட்கள் கோஸாயி கோயிலில் ஏராளம். கோஸாயிகள் சிஷ்ய ரிடம் பணம் பறிக்க இவ்வாறு கூப்பாடு போடுகிறார்கள். ''காணிக்கை கொண்டு வாருங்கள்—கோஸாயிஜீக்கு அவர் மனைவிக்கு, மகனுக்கு, மகளுக்கு, முகமைச் சேவகனுக்கு, வேலை யாளுக்கு, பாகவதருக்கு, கிருஷ்ணபரமாத்மனுக்கு காணிக்கை, காணிக்கை!'' இவ்வாறு பக்தரிடம் பணம் கொள்ளையடிக்கிறார் கள். சாகும் தாஸன் மார்பில் திருவடியை வைக்கிறான் கோஸாயி—அதற்கு வைக்கும் காணிக்கையைச் சுருட்டிக்கொள் கிறான். இது மகாகருமாதிப் புரோகிதன் வேலைதானே! சண்டாளர் வேலை மாதிரி யில்லையா? சில தாஸர் கோசாயி யைக் கலியாணத்திற்கு அழைத்து வதூவரருக்குப் பாணிக்கிரக ணம் பண்ணி வைப்பதுண்டு. சிலர் கோஸாயிக்கு மஞ்சன மாட்டுவர்; அப்போது பெண்கள் அவர்மேல் குங்குமப்பூ கலந்த நறுமண மஞ்சளைப் பூசுவர்; அதன் பிறகு ஒரு பெரிய அண்டா வில் கோஸாயியை வைத்து ஆண்களும் பெண்களும்—முக்கிய மாகப் பெண்கள்—குளிப்பாட்டுவர். பிறகு கோஸாயி ஆடையை அதிலேயே போட்டு அலசிவிட்டுப் பீதாம்பரம் அணிந்து வெளியேறுவார்—கோஸாயிதாஸர் அந்த ஜலத்தை ஆசமனம் செய்வர்; கோஸாயிக்கு நறுமண மசால போட்ட வெற்றிலை பாக்குத் தருவர். கோஸாயி சிறிது சுவைத்து, மிச்சத்தை சீடர்கள் கையில் ஏந்திக்கொண்டிருக்கும் ஒரு வெள்ளிக் கிண் ணத்தில் உமிழ்வார்; அதைப் புனிதமான அப்பட்டமான பிரசாத மென்று தாஸர் உட்கொள்வர்! கண்றாவி! இவர்கள் மனிதர்களா? இதைவிட முட்டாள்தனம் உண்டா! தானம் வாங்கும் கோஸாயி கள் பலர் வைஷ்ணவர் கையாலே தான் சாப்பிடுவார்கள். வேறு சிலர் சாப்பிடுவதில்லை. அவர்கள் விறகைக் கூடக் கழுவுவர். பிறர் தொட்ட மாவு, சர்க்கரை, நெய் முதலியவற்றை உபயோ கிப்பதும் தீட்டுத்தானே; இவற்றையும் கழுவுவரோ? ஏமாந்து கழுவினால் எல்லாம் கரைந்தோடிப்போம். கிருஷ்ணனுக்கு ரங்கராச லீலை நடத்தவே எல்லாம் செலவழிகிறதாம்—எல்லாம் கோஸாயி சுகபோக லீலைக்கே போகின்றன. ஹோலிப் பண்டிகை யில் இவர்கள் வசந்த நீரைப் பெண்களின் மர்மஸ்தானத்தைக்

குறித்து அடிக்கின்றனர். பிராமணர் செய்யக்கூடாத உணவு விற்பனையும் செய்கின்றனர்.

வினு: கோஸாயி கடைவைத்து ரொட்டி, பருப்பு, சோறு, கறி, தர்க்காரி, லட்டு, மிட்டாய் இவற்றை விற்கவில்லையே. இவற்றை இலையில் வைத்துச் சேவகருக்குத் தருகிருர்; சேவகரே விற்கின்றனர்—கோஸாயிகள் விற்பதில்லை.

விடை: சேவகருக்குச் சம்பளம் கொடுத்தால் இலைச்சோறு எதற்கு? அதற்குப் பதில் இதைத் தருகிருர் கோஸாயி; சேவகர் அந்தச் சோறும் பருப்பும் கடையில் விற்கின்றனர். சேவகர் பிராமணர் சோறு விற்கக்கூடாது என்பது சாஸ்திரத்தின் கட்டளை. இவர்கள் சாஸ்திரத்திற்கு விரோதமாக அன்ன விக்கிரியம் செய்வதைவிட கோஸாயியே விற்பது நல்லது. பாபம் அவருடன் போகுமே. தானும் பாபம் பண்ணிப் பிறரையும் பாபத்தில் ஆழ்த்துவானேன். நாதத்வாரம் போன்ற இடங்களில் கோஸாயிஜீயே அன்ன விக்கிரியம் செய்கிருன். இது பெருமையன்று, மட்டமான வேலை. இப்படிப்பட்ட ஆட்களே ஆர்யாவர்த்தத்தை இந்தக் கதிக்குக் கொணர்ந்தனர்.

## சுவாமி நாராயண மதம்

வினு: சுவாமி நாராயண மதம் எப்படி?

விடை: "यादृशी शीतला देवी तादृशो वाहनः खरः" "சீதல தேவிக் கேற்ற கழுதை வாகனம்" என்ற வசனந்தான்! பண கோஸாயி போலத்தான் நாராயணக் கும்பலும்; பண மடிப்பதில் பக்கா! அயோத்திக்கருகே ஒரு கிராமத்தில் ஸஹஜானந்தர் பிறந்தார்; அவர் பிரமசாரியாய் குஜராத்து, காடியவார், கச்சபுஜ் முதலிய தேசங்களிற் சுற்றினுர்; "அந்த நாட்டு மக்கள் அப்பாவிகள்; நாம் ஆட்டிவைத்தபடி ஆடுவார்கள், நமது மதத்தை நம்புவார்கள்" என்று கண்டார் ஸஹஜானந்தர். அங்கே அவருக்கு இரண்டு நான்கு சிஷ்யர் சேர்ந்தனர். அவர்கள் தங்களுள் பேசி வைத்துக்கொண்டு "ஸஹஜானந்தர் ஸ்ரீமந் நாராயணுவதாரம், மஹாசித்தர், பக்தருக்கு நாலு கைப் பெருமாளாகக் காட்சியளிக்கிருர்" என்று விளம்பரம் செய்தனர். காடியவாரில் ஒரு கிராமவாசி; அவர் பெயர்

தாதாகாசர். அவர் ஒரு மிராசுதார்; அவரிடம் சிஷ்யர் ''சதுர்புஜ நாராயண தரிசனம் வேண்டினால், ஸஹஜானந்தரைப் பிரார்த்தியும்'' என்றனர். மெத்தச் சரி என்று அந்த அப்பாவி அப்படியே செய்தான்.

ஒரு சிற்றறையில் ஸஹஜானந்தர் தலையில் மகுடந் தரித்து, சங்கு சக்ர ஹஸ்தராகக் காட்சியளித்தார். இன்னும் இரண்டு கைகளில் பத்மமும் கதையும் இருந்தன; பின்னால் ஆசாமியிருந்து ஸஹஜானந்தர் அக்குள் வழியே நீட்டிய கைகளே இவை—சதுர்புஜ நாராயணன் தத்ரூபமாயிருந்தார்! தாதாகாசர் வியந்தார்; சீடரோ '' ஒரே ஒரு தரம் பார்த்ததும் கண்ணை மூடிக்கொண்டு போய்விட வேண்டும். அதிகம் பார்த்தால் நாராயணருக்குக் கோபம் வரும்'' என்றனர். தங்கள் வஞ்சம் வெளியாய் விடும் என்ற பயந்தான்! மிராசுதாரை அந்த இருட்டறைக்குள் விட்டனர்; அங்கே ஸஹஜானந்தர் பட்டு பீதாம்பர தாரியாய் நின்றார். பளிச்சென்று விளக்கு; நாலுகைப்பெருமாள் தரிசனம்; சட்டென்று விளக்கு மறைந்தது; பக்தர் நாராயணன் காலில் விழுந்து கும்பிட்டு வெளியேவந்தனர். '' நீ அதிட்டசாலி; மஹாராஜர் சிஷ்யனாகு'' என்றனர் தாஸர்; மிராசுதார் அப்படியே ஸஹஜானந்த சிஷ்யனானான். சட்டென்று உரு மாற்றம்; இப்போது ஸஹஜானந்தர் இருகைப் பெருமாளாக அரியணையில் அமர்ந்திருந்தார். ' பாரப்பா இன்னொரு ஸ்வரூபம் எடுத்துவிட்டார் குருநாதர்'' என்றனர் சீடர். மிராசுதார் இவர் வலையில் சிக்கிவிட்டார். அப்போதே அந்த மதம் வேரூன்றி விட்டது. ஏனெனில் தாதாகாசர் ஒரு பெரிய மிராசுதார். ஸஹஜானந்தரும் இங்குமங்கும் சுற்றி உபதேசம் நடத்திப் பல சிஷ்யரைக் கூட்டி, சாதுசங்கமும் சேர்த்தார். அவ்வப்போது சில சாதுக்களுக்கு கழுத்து நரம்புகளை கசக்கி மூச்சுத் திணர வைத்து மயக்கமுண்டாக்கி, அவர்கள் சமாதியில் ஆழ்ந்ததாக எல்லாருக்கும் அறிவித்தார். இந்த வஞ்சனைகளைக் கவடு சூதறியாத காட்டியவாடிகள் நம்பி, அவன் வலையிற் சிக்கினர். அவர் இறந்த பிறகு ஏராளமான சீடர் பொய்க் கதை பரப்பினர், மோசடி செய்தனர். இந்தக் கதையே அதைச் சொல்லும்:

ஒரு திருடன் கையும் களவுமாகப் பிடிப்பட்டான். நீதிபதி அவனது மூக்கை அறுத்து விடும்படி தண்டனை விதித்தார். மூக்கை அறுத்ததும் அந்த துஷ்டன் ஆடிப்பாடிச் சிரிக்கத் தொடங்கினான். '' ஏன் சிரிக்கிறாய்'' என்று ஜனங்கள் கேட்கவே,

"அந்த அதிசயத்தை எப்படிச் சொல்லுவேன்" என்று குதித்தான். "என்னப்பா அதிசயம்? என்று கேட்டனர். "அடடா என்ன ஆச்சரியம்; இந்த ஆச்சரியம் என்றுமே கண்டதில்லை ஆஹா!" என்று துள்ளினான். "என்ன ஆச்சரியம் சொல்லப்பா" என்றனர். "அஹா சதுர்புஜ நாராயணனைக் காண்கிறேன். அவன் என்னை ஆசீர்வதிக்கிறான்; என்ன பாக்கியம்பெற்றேன்; சாக்ஷாத் நாராயணனே என் மூன் நிற்கிறான்." "அடடா எங்களுக்கு அந்தத் தரிசனம் ஏன் கிடைக்கவில்லை" என்று ஜனங்கள் வினவினர். "உங்கள் மூக்கு தடையாயிருக்கிறது. மூக்கை அறுத்துவிட்டால் நாராயண தரிசனம் கிடைக்கும்" என்றான் அவன். ஒரு முட்டாள் மூக்கு போனால் போகட்டும், ஆனால் நாராயணதரிசனம் அவசியம் என்று, மூக்கைத் தருகிறேன் என்று காட்டினான். அந்தப் போக்கிரி இந்த முட்டாளின் மூக்கை அறுத்துவிட்டு நீயும் என்னைப் போலக் குதி; இன்றேல் எல்லாரும் சிரிப்பார்கள் என்று காதில் ஓதினான். போன மூக்கு வராது என்று அவனும் "ஹரே நாராயணா, உன் தரிசனம் என்ன பாக்யம்" என்று ஆடிப்பாடி அலறிக் கூத்தாடினான். இப்படியே மூக்கை நறுக்கிக் கொண்ட கும்பல் ஆயிரக்கணக்காயிற்று. இவர்கள் நாராயண தரிசி என்ற சம்பிரதாயம் ஏற்படுத்தினர். ஒரு முட்டாள் ராஜா அந்த நாராயணதர்சியை அழைத்தார். இவர் ஆடிப்பாடி ஆனந்தங்கொண்டாடி அரசன் முன் நின்றார். அரசன் "என்ன சமாசாரம்" என்று கேட்டான். "அடடா அரசே! நாராயணன் தரிசன மளிக்கிறான்" என்றான் வஞ்சன்.

**அரசன் :** எனக்கேன் தரிசனமாகவில்லை ?

**நாராயணதர்சி :** மூக்கிருக்குமட்டும் தரிசனமாகாது. மூக்கை அறுத்தால் ஆகும்.

**அரசன் :** அப்படியா ! சோதிடரே முகூர்த்தம் பாரும்.

**சோதிடர் :** உத்தரவு, அன்னதாதா! தசமியன்று காலை எட்டு மணிக்கு மூக்கறுத்து நாராயண தரிசனம் காணச் சரியான நேரம்.

[வாஹ்ரே போப்ஜீ, மூக்கறுப்பதற்கும் அறுபடுவதற்குங் கூட உன் பஞ்சாங்கத்தில் முகூர்த்தம் எழுதியிருக்கிறதே—சபாஷ்] மூக்கறுந்த ஆயிரம் பேர் முன் அரசன் வந்ததும் எல்லாரும் ஆடிப்பாடி ஆரவாரஞ் செய்து கூத்தாடத் தொடங்கினர்.

அரசரின் திவானும் மந்திரிகளும் அறிவாளிகள்; அவர்களுக்கு இந்த மடத்தனம் பிடிக்கவில்லை. இந்தத் திவானின் பாட்டனார் 90 வயதுக் கிழவர்; அவரும் முன்னே திவானாயிருந்தவர்; அறிவாளி. அவரிடம் பேரன் விஷயத்தைச் சொன்னான். "இந்தப் போக்கிரியை ஒழிப்பேன்" என்றெழுந்து, கிழவர் அரசனிடம் சென்றார். அரசன் அவரை மரியாதை செய்து அமர்த்தி விஷயத்தைச் சொன்னான்.

கிழவர்: அரசே இது மோசடி; நன்றாக ஆராய்ந்து ஒன்றைச் செய்யவேண்டும்; பிறகு வருந்தக்கூடாது.

அரசன்: அப்படியானால் அந்த ஆயிரம் நாராயண தர்சிகளும் பொய்யரா?

கிழவர்: பொய்யரோ மெய்யரோ—சோதித்தல்லவா சொல்ல வேண்டும்?

அரசன்: எப்படிச் சோதிக்கவேண்டும்?

கிழவர்: சிருஷ்டி நியமம், அறிவு, பிரத்யக்ஷாதிப் பிரமாணங்களால் சோதிக்கவேண்டும்.

அரசன்: அதற்கேற்ற அறிவாளி கிடைக்காவிட்டால்?

கிழவர்: முயற்சியால் ஆகாததில்லை.

அரசன்: என்ன செய்வது? நீரே சொல்லுமே.

கிழவர்: நான் கிழவன்; வீட்டில் விழுந்து கிடப்பவன்; கொஞ்ச நாளே இருப்பேன்; நான் முதலில் பரீக்ஷை பார்க்கிறேன். பிறகு உசிதம் போலச் செய்யலாம்.

அரசன்: மெத்தச்சரி—ஜோதிடரே பழைய திவானுக்கு முகூர்த்தம் பாரும்.

சோதிடர்: இந்த சுக்கில பஞ்சமி பத்து மணிக்கு நல்ல முகூர்த்தமே.

முகூர்த்த நாள் வந்தது; கிழத் திவான் இரண்டாயிரம் சேனை வீரருடன் செல்ல விரும்பினார்.

அரசன்: சேனை எதற்கு?

கிழவர்: உமக்கு அரசாங்க விஷயம் தெரியாது; நான் சொன்னபடி செய்.

சரியாக 9-30க்கு அரசன் மந்திரி சேனை வீரருடன் பவனியாக வந்தான்; நாராயணதர்சிகள் ஆடிப்பாடி ஆரவாரஞ் செய்தனர். அரசன் நராயணதர்சியிடம் "முதலில் இவர் மூக்கறுத்து நாராயணனைக் காட்டும்" என்று முதிய திவானைக் காட்டினர். மணி பத்திற்கு நாராயணதர்சி திவான் மூக்கை அறுத்து ஒரு தட்டில் ஏந்தினர். மூக்கில் இரத்தம் கொட்டியது; திவான் முகம் வாடியது; அந்த வஞ்சன் இந்தக் கிழவர் காதில் "அறுத்த மூக்கு ஒட்டாது; நீயும் நாராயணனைக் கண்டதாகக் கூத்தாடு; இன்றேல் உலகம் சிரிக்கும்" என்று ஒதுங்கினன். திவான் இரத்தத்தைக் கைக் குட்டையால் ஒத்திக்கொண்டிருந்தார். அரசன் "நாராயண தரிசனம் ஆனதா" என்று கேட்டார். திவான் "நான் ஒன்றும் பார்க்கவில்லை; இந்தப் பாவி நிரபராதியான எனது மூக்கை யறுத்தானே; இத்தனை பேரையும் மூக்கறுத்துப் பித்தலாட்டம் செய்தானே" என்று காதுக்குள் சொன்னர். அரசன் "இனி என்ன செய்வது?" என்று கேட்டார். "இத்தனை பேரையும் கைது செய்து தண்டித்து ஆயுட் சிறைகாக்க விடுங்கள்—இவர்களைக் கெடுத்த போக்கிரியைக் கழுதை மேலேற்றி அவமானம் செய்து கொல்லும்" என்று மெல்லச் சொல்லும்போதே சாடையறிந்து நாராயணப் போலிகள் ஓட்டமெடுத்தனர்; அவர்களைச் சூழ்ந்து பிடித்தனர் போர்வீரர். எல்லாரையும் பிடித்து விலங்கிடுங்கள். இந்தப் போலிகளின் தலைவன் முகத்தில் கரிபூசுங்கள். அவனைச் செருப்புமாலை போட்டுக் கழுதைமேலேற்றி ஊர் சிரிக்க நடத்துங்கள். சிறுவர் அவன் மேல் மண்ணும் சாம்பலும் வாரி வீசுக. அவனைச் சந்திக்குச் சந்தி செருப்பாலடித்து, நாய்கள் கடித்துப் பிய்த்துச் சாகச் செய்யுங்கள்; இந்த அயோக்கியனை அடித்துக் கொல்லாவிட்டால் பிறரும் இவனைப் பின்பற்றுவர், கெடுவர்" என்றுன் அரசன். உடனே மூக்கறுப்பு மதம் அவமானப்பட்டு அடியோடொழிந்து மண்ணுனது. இதைப்போன்று வேத விரோதமாகிப் பணம் பிடுங்கும் மதங்கள் பலவாகும்.

சுவாமி நாராயண மதத்தினர் மோசடி, திருட்டுருட்டுகளுடன் பணம் பறிக்கின்றனர். இவர்களின் சம்பிரதாய லீலைகள் பல. சஹஜானந்தர் தினம் வெள்ளைக் குதிரை ஏறிக் கோவிலுக்கு வருகிருராம்; அந்த வெள்ளைக் குதிரைமேல் ஏற்றிச் சாகிறவர்களை சுவர்க்கத்திற்குக் கொண்டு செல்

வாராம்; திருநாளின் போது அவர் கோவிலுக் குள்ளேயே இருப்பாராம். கோயிலுக்குள் பூசாரிக் கும்பலே இருக் கிறது. கீழே கடை திறந்திருக்கிறது. கோயில் கடை இரண்டிற்கும் நடுவே ஓட்டையுள்ளது. யாராவது தேங்காய் படைத்தால் அது ஓட்டைவழியாகக் கடைக்குப் போய் விற்பனை யாகும். அதே தேங்காய் ஆயிரந்தரம் மேலே சென்று கீழே வந்து விற்பனையாகிறது. மற்ற நிவேதனப் பொருள்களும் இப்படியே விற்கின்றன. சாது எந்தச் சாதியோ அந்தச் சாதித் தொழிலையே செய்கிறார்—நாசுகன் சுரைக்கிறான், குயவன் குயத் தொழில், சிற்பி சிற்பம், பனியா வியாபாரம், சூத்திரன் சேவகத் தொழில் செய்கிறான். இம்மதக் குருமார் சிஷ்யரிடம் வரிவசூல் செய்கிறார்கள். அது லட்சக்கணக்கான ரூபாயாகத் தினம் பெருகிக்கொண்டிருக்கிறது. குருபீடம் வகிக்கிறவர் மணம் புரிந்து அணிகள்பூண்டு குடும்பம் நடத்துகிறார். விஜயம் செய்யும் வீடுகளில் கோஸாயிகள் போலவே இவர் தமது மனைவி மக்களுக்கும் வழிபாடேற்கிறார். இம்மதத்தினர் தம்மவரை ஸத்ஸங்கிகள் மற்றோரைக் குஸங்கிகள் என்கின்றனர். எவ்வளவு பெரியவரானாலும் அறிவாளிகளானாலும் பிறமதத்தரை இவர்கள் மதிப்பதில்லை, பணிவதில்லை; அவர்களைப் பணிவது பாபம் என்பர். இந்த மத ஸாதுக்கள் வெளிக்குப் பெண்கள் முகம் பார்ப்பதில்லை; உள்ளுக்குள் எப்படியோ! குட்டு வெளி யாகவில்லை. இங்குமங்கும் சாதுக்கள் பிற மாதரைச் சேரும் லீலை அம்பலமாகிறது. அவருள் பிரபலஸ்தர் இறக்கும்போது சிஷ்யர்கள் அவர்கள் உடல்களைக் கிணற்றில் போட்டுவிட்டு இன்ன மஹராஜ் கூடோடு வைகுண்டம் போனார். அவரை ஸஹஜானந்தர் கொண்டுபோனார். "அவர் இங்கேயே இருக்கட்டும்; எல்லாருக்கும் உபகாரமாகும் என்று மன்றாடி னோம். வைகுண்டத்தில் அவர் சேவை வேண்டியிருக்கிறது என்று ஸஹஜானந்தரே எடுத்துச் சென்றார். ஸஹஜானந்தர் அந்தப் புண்ணியவானை விமானத்தில் வைத்துச் சென்றதைக் கண்ணாரக் கண்டோம்—தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள்" என்பார்கள். யாராவது சாது காயலாகிப் பிழைக்கமுடியாமல் கிடந்தால், அவர் "நாளை நான் வைகுண்டம் போவேன்!" என்பார்; அடுத்த நாள் சாகாவிட்டால் அவரைக் கிணற்றில் எறிந்து கொல்வர்; ஏனெனில், அவன் சொன்னது பொய்க்கக் கூடாது. அதனால் இந்த வேலையும் லீலையும் நடக்கின்றன.

அதே மாதிரி ஒரு கோகுலன் இறந்தால் "கோஸாயிஜீ லீலை விஸ்தாரமாய்விட்டது" என்பர். கோஸாயிகளுக்கும் நாராயண சாமிக் கூட்டத்திற்கும் ஒரே மந்திரமே :

श्री कृष्ण: शरणं मम ஸ்ரீ கிருஷ்ண: சரணம் மம என்பதே. கிருஷ்ணனே என்புகல் என்பது அதன் பொருள். நானே கிருஷ்ணன் புகல் என்றும் பொருளாகும். இவர்கள் மதங்களெல்லாம் சாஸ்திர விருத்தம், இலக்கணப் பிழை நிரம்பியன. இவர் குருமார் கல்வியற்றவர் ; படிப்பு மணமே யற்றவர்.

## மாத்வர்

வினு : மாத்வமதம் நல்லதுதானே?

விடை : மாத்வரும் மற்ற மதத்தினர் போலத்தாம். அவரும் சக்கிராங்கிதரே. சக்கிராங்கிதர் ராமானுஜயத்தர், ஆயுளில் ஒரே தடவை முத்திராதானம் செய்துகொள்பவர் ; மாத்வர் ஆண்டுதோறும் முத்திராதானம் செய்துகொள்வர்! சக்கிராங்கிதர்கள் நெற்றியில் மஞ்சள் கோடு, மாத்வர்கள் கரிக்கோடு போடுவது வழக்கம். ஒரு மகாத்மாவுக்கும் ஒரு மாத்துவ பண்டிதருக்கும் அடியிற்கண்ட சம்பாஷணை நடந்தது.

மஹாத்மா : நீயேன் நெற்றியில் கரிக்கோடும் பிறைக்கோடும் போடுகிருய்?

பண்டிதர் : கிருஷ்ண பகவான் கறுப்பு, அதனுல் கரிக்கோடு போடுகிருேம் ; இதனுல் வைகுண்ட பதவி கிடைக்கும்.

மஹாத்மா : நெற்றியில் கரிக்கோட்டால் வைகுண்ட பதவி கிடைக்குமானுல், முகமெல்லாம் கரி பூசினுல் என்ன கிடைக்கும்? எங்கே போவாய்? கிருஷ்ணன் கறுப்பு ; நீ உடம்பு முழுதும் கறுப்படித்தாலே கிருஷ்ணனுகலாம். மத்வரும் மற்றவர் போலத்தான்.

## இலிங்காங்கிதர்

வினு : இலிங்காங்கிதர் மதம் பற்றி என்ன சொல்லுவீர்?

விடை : சக்கிராங்கிதர் போலவே இலிங்காங்கிதரும் இலிங்கத் தால் சூடு போட்டுக் கொள்ளுகிருர்கள். சக்கிராங்கிதர் நாராயணனைத் தவிர வேறெதையும் மதிப்பதில்லை ; இலிங்

காங்கிதர் இலிங்கச் சூட்டுடன் மஹாதேவனைத் தவிர வேறெதையும் மதிப்பதில்லை. இலிங்காங்கிதர் தங்கம் அல்லது வெள்ளியில் இலிங்கம் செய்து கழுத்தில் கட்டிக் கொள்வர்; இதுதான் விசேஷம். நீர் குடித்தாலும் அதற்குக் காட்டியே குடிப்பர்; அவர் மந்திரமும் சைவ மந்திரமே.

## பிரம்ம ஸமாஜமும் பிரார்த்தனு ஸமாஜமும்

**வினு:** பிரம்ம ஸமாஜமும் பிரார்த்தனு ஸமாஜமும் நன்ருயிருக்கின்றன அல்லவா?

**விடை:** சிற்சில விஷயங்களில் ஒன்று; பற்பல தீது.

**வினு:** பிரம்ம—பிரார்த்தனு ஸமாஜ நியமங்கள் நன்ருயிருக்கின்றன; அவை மற்றெல்லாவற்றையும் விட நலமே.

**விடை:** முற்றும் நன்றில்லை; வேதமறியாதவர் கற்பனைகள் எப்படி முழுவுண்மையாகும்? (1) சிலர் கிறிஸ்து மதத்திற் சேராது காத்திருக்கிருர்கள். (2) உரு வணக்கத்தைத் தடுத்திருக்கிருர்கள். (3) பொய் நூல்களின் வலையினின்று சிறிது ஜனங்களை விடுவித்திருக்கிருர்கள். இவை நன்றே. ஆனுல் (1) இவர்களுக்குச் சுதேச பக்தி கம்மி; அவர்கள் பெரும்படியாகக் கிறிஸ்து ஆசாரத்தைப் பின்பற்றுகின்றனர். உண்ணல், குடித்தல், திருமணச் சடங்குகளிலும் புது விதி ஏற்படுத்திக்கொண்டனர். (2) தேசத்தையும் முன்னேரையும் புகழாது போனுலும் போகட்டும்—இரண்டையும் கண்டபடி நிந்திக்கின்றனர். பிரசங்கத்தில் கிறிஸ்துவரையும் ஆங்கிலரையும் தூக்கிவைத்துப் பேசுகிருர்கள். அவர்கள் பிரம்மாதி முனிவர் பெயரைக் கூடச் சொல்லுவதில்லை; உலகம் உண்டானது முதல் இன்றுவரை ஆங்கிலர் போன்ற அறிவாளிகள் இல்லை என்கிருர்கள். ஆரியவர்த்த மக்கள் உருப்படா மூடர் என்கின்றனர். (3) வேத சாஸ்திரங்களைப் போற்ருது தூற்றுகின்றனர். பிரம்ம ஸமாஜ நூல்களில் ஏசா, மூஸா, முகம்மது, நானக், சைதன்யாதி நாமங்கள் சாதுக்கள் வரிசையில் வரும்; வேத ரிஷி, மஹரிஷிகள் பெயர் காணப்படாது. இதனுல் இவர்களும் இந்தப் பெயர் வழிகளின் மதத்தினர் என்பது விளங்கும். இவர்கள் ஆரியாவர்த்தத்தில் பிறந்து அதன் அன்னபானுதிகளால் உயிர்த்து, தங்கள் தாய், தந்தை, பாட்டன், அனுசரித்த

தர்மத்தை விடுத்து, அன்னிய நாட்டு மதங்களைச் சார்ந்திருக்கிறார்கள். நமது தேசாசாரம் அறியார்; தாங்களே அறிவாளிகள் என்று பெருமையடித்துக் கொள்ளுகிறார்கள். வேத மொழியான ஸம்ஸ்கிருதம் தெரியாமல் மெத்தப்படித்த ஆங்கிலச் செருக்கால் புது மதம் புனைகின்றனர். இவை மனித சமுதாயத்திற்கு நிலையான இன்பத்தை முன்னேற்ற முடியுமா? (4) அவர்கள் விவஸ்தையில்லாமல் ஆங்கிலர், யவனர், பஞ்சமர்களுடன் கலந்துண்பார்கள். இப்படிக் கலந்துண்டு சாதி பேதத்தை ஒழிப்பதால் மட்டும் தாமும் நாடும் திருந்தும் என்று நினைப்பது தப்பு; இவற்றால் அனர்த்தமே விளையும்.

வினா: ஜாதி பேதம் கடவுள் உண்டாக்கியதா மனிதன் உண்டாக்கியதா?

விடை: கடவுளோ மனிதனோ—ஜாதி பேதம் உண்டு.

வினா: கடவுள் உண்டாக்கியது எது? மனிதன் உண்டாக்கியது எது?

விடை: மக்கள், விலங்கு, பறவை, மரம், ஜல ஜந்துக்கள்—எல்லாம் கடவுள் வகுத்த ஜாதி பேதம். விலங்குகளிலும் பசு, குதிரை, யானை முதலிய ஜாதிகள் உண்டு. மரங்களில் ஆல், அரசு, மா முதலியன; பறவைகளில் காக்கை, அன்னம், கொக்கு முதலியன; ஜல ஜந்துக்களில் மச்சமகராதி ஜாதி பேதமுண்டு. அதே மாதிரி மனிதருள் பிரம்ம, க்ஷத்ரிய, வைஸ்ய, சூத்ராதி பேதங்கள் கடவுளால் உண்டானவை. ஆனால் மனிதருள் பிராம்மணாதிகள் பிறவியிலில்லை; மனித சமுதாய வாழ்வில் இந்த நான்கு விசேஷ குண பேதங்கள் உண்டு. பூர்வ வர்ணாஸ்ரம விதிகளிற் கண்டபடியே குண கர்ம சுபாவ வர்ண நியதி அவசியமானதே. இது மனிதன் வகுத்தது; அதனாலே தான் ஜாதி பேதம் மனித சிருஷ்டி என்கின்றனர். அரசனும் அறிஞரும் நன்றாக ஆராய்ந்து அவரவர் குண விசேஷத்திற்கு ஏற்றபடியே பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரரை வகுப்பது அவர்கள் கடமையே. உண்பதிலும் கடவுள் நியமம் மனித நியமம் உண்டு. உதாரணமாக, சிங்கம் ஊனுண்பது; மாடு, காண்டாமிருகம் போன்றவை புல்லுண்பன. இவ் வேறுபாடு கடவுள் வகுத்தது. ஆனால்

மனித உணவு நாட்டிற்கும் பழக்க வழக்கங்களுக்கும் தக்கபடி வேறுபடும். இந்த வேற்றுமை மனிதன் செய்தது.

**வினு:** ஐரோப்பியரைப் பாரும், பூட்ஸ், கோட்டு, கால்சராய் போட்டு ஒட்டலில் எல்லார் கையினுலும் உண்கிருர்கள். அதனுல் அவர்கள் முன்னேறுகிருர்கள்.

**விடை:** நீர் நினைப்பது தப்பு. முஸல்மான்களும் பஞ்சமரும் கண்டவர் தொட்டதைச் சாப்பிடுகின்றனர். ஆனுல் முன்னேறவில்லையே. ஐரோப்பியர் பால்ய விவாகம் செய்வதில்லை. சிறுவர் சிறுமிகளுக்கு நல்ல படிப்பும் பயிற்சியும் தருகிருர்கள். மனங்கொண்ட மணுளரைத் தாமே தேர்ந்து மணம் புரிகின்றனர்—இதுதான் சுயம்வரம். தங்கள் குழந்தைகளைக் கெட்டவருடன் சேர விடுவதில்லை. அறிவிலிகள் சகவாசம் வைத்துக்கொள்வதில்லை. அவர்கள் நன்ருகத் தங்களுள் சிந்தித்து அறிஞர் குழுவுடன் ஆராய்ந்தே எதையும் செய்கிருர்கள். தங்கள் தேச நலத்திற்கே உடல் பொருளாவியைத் தியாகம் செய்கிருர்கள். அவர்கள் சோம்பலை ஒழித்து எப்போதும் சுறுசுறுப்பாயிருக்கிருர்கள். அவர்கள் இந்தியச் செருப்பை கோர்ட்டுகளில் அனுமதிப்பதில்லை. தங்கள் நாட்டில் செய்த ஆங்கில பூட்சை (அல்லது அதே மாதிரி இந்நாட்டிற் செய்ததை) அனுமதிக்கின்றனர். தங்கள் நாட்டு பூட்சுக்குத் தரும் மதிப்புக் கூட அவர்கள் அன்னிய தேச மக்களுக்குத் தருவதில்லை. அவர்கள் நூறு வருஷமாக நமது நாட்டிலிருந்தும் இன்னும் தமது நாட்டில் அணிந்தது போலவே மோட்டா உடைகள் அணிகிருர்கள். தங்கள் தேசாசாரத்தை மாற்றவில்லை. ஆனுல் நம்முள் சிலர் ஐரோப்பியர் போல் உடையணிகின்றனர். அது அவர்கள் சாமர்த்தியத்தையும் உங்கள் மூடத்தனத்தையும் காட்டுகிறது. அறிவாளி பிறரைக் காப்பியடிக்கமாட்டான். அவர்கள் தங்கள் கடமையை மிகக் கருத்துடன் செய்கிருர்கள். மேலதிகாரி கட்டளையைப் பணிந்து நடக்கிருர்கள். வியாபாரம் முதலிய வற்றில் அவர்கள் ஒருவருக் கொருவர் உதவியாயிருக்கிருர்கள்.

இத்தகைய நற்குண நற்செயல்களாலேதான் ஐரோப்பியர் முன்னேறுகிருர்கள். கோட்டு சட்டை பூட்ஸ் போட்டு ஒட்டலில் உண்டு, குடித்து அனுசிதமான காரியங்கள் செய்வதாலன்று.

அவருள்ளும் ஜாதிவேற்றுமையும் உண்டு. எவ்வளவு பெரிய உத்யோகஸ்தனுலும் ஓர் ஐரோப்பியன் ஐரோப்பிய னில்லாத பெண்ணை மணந்தால் அல்லது ஓர் ஐரோப்பினி வேறு ஜாதியனை மணந்தால் மற்ற ஐரோப்பியர் அவன் அல்லது அவளுடன் உறவு வைத்துக்கொள்ள மாட்டார்கள். அவர்களைச் சாதி கெட்டவராகக் கருதுவர். அவர்களுடன் ஒரே மேஜையில் உண்ணுர்; விசேஷங்களுக்கு அவர்களை அழையார். அவர்கள் குழந்தைகளுடன் கொண்டு கொடுத்துச் சம்பந்தம் செய்யார். இதெல்லாம் சாதி வேறுபாடு தவிர வேறென்ன? தம்முள் சாதி பேதமில்லையென்று அவர்கள் அப்பாவிகளான உங்களை ஏமாற்று கிருர்கள். அப்பாவிகளான நீங்கள் முட்டாள்தனமாக அவர்கள் சொல்லுவதை ஒப்புகிறீர்கள். ஆதலால் நீங்கள் செய்வதை நன்ருகச் சிந்தித்துக் கவனமாகச் செய்யுங்கள்; பிறகு வருந்தா தீர்கள்.

நோயாளிக்கே மருந்தும் வைத்தியமும் வேண்டும்; சுகமா யிருப்பவனுக் கன்று. அறிவாளி நோயற்றிருக்கிருன். அறிவிலி மடநோயாளியாகிருன். மடநோய்தீர மெய்யறிவும், உண்மையுப தேசமும் வேண்டும். சாப்பாட்டு விவகாரத்தில் அனுசாரமாஞல் அறங் கெட்டுப்போனதாகச் சிலர் நினைக்கிருர்கள். அதன் பிறகு அப்படிப்பட்டவருடன் பேச்சு வார்த்தை வைத்துக் கொள்வ தில்லை; அவர் சொல்லைக் கேட்பதில்லை. அவர் பக்கம் உட்காருவ தில்லை; அவரையும் தமது பக்கம் அமரவிடுவதில்லை. இப்போது உமது வித்தை சுயநலமா, பரமார்த்தமா?—சொல்லும். பரமார்த்த மாஞல் உனது வித்தையால் அறியாதாருக்குப் பலனில்லை. அவர்கள் கேட்பதில்லை என்ருல் அதுவும் உமது குற்றமே. அவரதன்று; நீர் ஒழுங்காக நடந்தால் அவர்கள் உம்மேல் அன்புகொண்டு உம் அறிவால் பயன் பெறுவார்கள். நீர் சுய நலந்தேடி ஆயிரம்பேர் நலத்தைக் கெடுத்தீர்; பரோபகாரமே நன்மை, பிறருக்குத் தீமை செய்தலே பாபம். ஆதலால் நீர் பாபம் சுமந்தீர். அறிவாளி நன்னடையுடன் அஞ்ஞானிகளும் துன்பக் கடல் கடக்கத் துணைசெய்க. அவன் முட்டாள்தனமான செயலைச் செய்யக்கூடாது. தனக்கும் பிறருக்கும் உன்னத முன்னேற்றமாகும்படி அவன் நடக்கவேண்டும்.

வினு: கடவுள் விளக்கிய நூலில்லை; முழுதும் மெய்ந்நூலில்லை. ஏனெனில் மனிதன் மாருட்டமுள்ளவன்; அவன் செய்த நூல்களும் மாருட்டமானவை. ஆதலால் எந்த நூலி

லிருந்தும் மெய்யைக் கொண்டு பொய்யை விலக்கலாம். வேதம், பைபிள், குரான்—எதில் உண்மை யிருந்தாலும் ஏற்போம்; பொய்யை விலக்குவோமே.

**விடை :** மனிதன் மாருட்டமுள்ளவனுனல் நீரும் மாருட்டமுள்ள மனிதரே; மெய்யென்று பொய்யையும் நம்பக் கூடும். நீர் சொல்வதெல்லாம் முழுவுண்மையாயிருக்க முடியாது; மாருட்டமுள்ளவன் வசனத்தை நம்பமுடியாது. மாருட்ட மொழிகளை விஷான்னம்போல் ஒதுக்கவேண்டும். நீர் சொல்லும் நூல்கள் பிரமாணமாகா. சதுர்வேதிகள் ஆறு வேதிகளாவதற்கு புறப்பட்டராம்; இரண்டை இழந்தார்கள்; மிச்சமானது இரண்டே. இந்த பழமொழி போன்றது உமது கூற்று. நீர் முற்றறிஞரன்று; மனப் பிழையால் நீர் பொய்யை மெய்யென்பீர். ஆதலால் சிற்றறிவாளரான மாந்தர் முற்றறிவான எல்லையற்ற பரம்பொருள் வாக்கை ஏற்கவேண்டும். பரமாத்மா (நாம் 7வது பகுதியிற் சொன்னபடி) எல்லாம் அறிந்தவன், எல்லாம் வல்லவன்; அவன் வாக்கே வேதங்கள். வேதங்களே பிரமாணம். அதை நீர் ஏற்கவேண்டும்; இன்றேல் "यतो भ्रष्टस्ततो भ्रष्टः" இங்குமின்றி அங்குமின்றி மயங்குவீர். வேதவாக்கே முழு உண்மை; அதுவே சரியான பிரமாணம்; அதை ஒப்பாதவர் வீண் மயக்கமடைவர். இதனுலேதான் இந்நாட்டு மக்கள் உம்மைச் சேர்ப்பதில்லை. இந்நாட்டு முன்னேற்றத்திற்கு நீர் ஒரு பயனுமில்லை. ஏனெனில் நீர் வீட்டுக்கு வீடு பிச்சையெடுக்கிறீர். கொஞ்சம் முகம்மதியரிடம், கொஞ்சம் கிறிஸ்தவரிடம் சமயவுண்மையைப் பிச்சை வாங்குகிறீர். அதனுல் உம்க்கும் பிறருக்கும் நன்மை செய்வதாகக் கருதுகிறீர்; அப்படிச் செய்ய உம்மால் முடியாது. பெற்றோர் தமது குழந்தைகளையே ஊட்டி வளர்க்கலாம்; ஊர்க்குழந்தைகளை யெல்லாம் ஊட்டி வளர்க்க முடியுமா? உலகக் குழந்தைகளுக்கெல்லாம் ஊட்டுவதானுல் முடியாத காரியம். தமது குழந்தைகளும் பசியால் வாடும். வேத சாஸ்திரங்களைச் சிறந்த பிரமாணமாக ஒப்பாவிட்டால், நீர் தேச முன்னேற்றத்தை எப்படிச் சாதிக்க முடியும்? மெய்யும் பொய்யும் எப்படி யறிய முடியும். நாட்டிலுள்ள நோய்க்குப் பரிகாரம் வேதவாழ்வே. ஐரோப்பியர் உம்மை மதியார்; சுதேசிகளும் அன்னிய

மதத்தன் என்று உம்மை மதியார். இப்போதும் வேத சாஸ்திரங்களை மதித்து நீர் தேச நலம் பேணலாம்; உண்மை கடவுளிடமிருந்தே வருகிறதென்கிறீர்; கடவுளே ரிஷிகளுக்கு விளக்கிய வேதங்களை நீர் ஒப்பினுலென்ன? நீர் வேதத்தைக் கற்றதுமில்லை, கற்க விரும்பியதுமில்லை; வேதஞானம் உமக்கு எப்படிப் பயனுகும்?

6. உபாதான காரணமில்லாமல் உலகம் உண்டானது; ஜீவனும் படைக்கப் பட்டது என்று நம்புகிறீரோ? இது கிறிஸ்து முஸ்லிம் கொள்கை. இதற்கு 7-ம் 8-ம் அத்தியாயங்களில் விளக்கம் காண்க. காரணமின்றிக் காரியமில்லை; தோன்றியது நலியும்—அது என்றுமிருக்க முடியாது.

7. வழுத்துவதாலும் வருந்துவதாலும் பாப மன்னிப்புக் கிடைக்குமென்னும் உங்கள் கொள்கை பிசகானது. இக் கொள்கையே உலகில் பாபம் வளரக் காரணமானது. தலயாத்திரையால் பௌராணிகரும், நவாகார மந்திர ஜபத்துடன் தல யாத்திரையால் ஜைனரும், கிருஸ்துவை நம்புவதால் கிருஸ்துவரும், "வருந்துகிறேன்" என்று சொல்வதால் முகம்மதியரும் பாபம் பறந்துபோகும் என்கிருர்கள். பாபத் தடைகள் இல்லாததால் இச்சமயங்களில் பாபம் மலிந்துவிட்டது. இந்த விஷயத்தில் பிரம்ம—பிரார்த்தன சமாஜிகளும் பௌராணிகர் போன்றவரே. நீங்கள் வேதத்தைப் படித்தால் பாப புண்ணிய கர்மத்தை அனுபவித்தே தீரவேண்டும் என்றறிவீர்கள். அதனுல் பாபத்திற்கு பயந்து பாபவினையைத் தடுத்துப் பாபவழியிற் செல்லாது அறவழியில் செல்வீர்கள். அனுபவிக்காது ஒரு மனிதன் பாப விடுதலை பெறுவதானுல் கடவுள் நியாயம் தவறியவராவார். ஒருவன் தான் செய்த தீவினைப் பயனை அனுபவிப்பதே தெய்வ சம்மதமாகும்.

8. ஜீவனின் அனந்த உன்னதியை நம்புகிறீர்; ஜீவன் அனந்தமாகாது; அது மட்டுப்பட்டது; அதன் குணகர்ம சுபாவங்களும் மட்டுப்பட்டன.

வினு: பரமேசன் தயாளுவாதலால் சிறு செயலுக்கும் பெரும் பலன் அளிப்பான் அல்லவா?

விடை: அப்படிச் செய்தால் பரமேசன் நீதியே பாழாகும்; பிறகு யாரும் நன்மை செய்யமாட்டார்கள். ஏனெனில் சிறிது நன்மைக்குப் பெரிது பலன் கிடைக்கிறது. வழுத்தி

வருந்துவதால் எத்தகைய பாபமும் போய்விடுகிறது—இந்தப் பேச்சால் பாபம் வளரும் தருமம் தளரும்.

**வினா:** இயலறிவு வேதஞானத்தைவிடப் பெரிதென நாம் நம்புகிறோம். இயலறிவே மெய்யறிவு; அது கடவுள் தந்தது. அஃதின்றி நாம் வேதத்தைக் கற்கவும் கற்பிக்கவும் எப்படி முடியும்? ஆதலால் எங்கள் மதமே மதம்.

**விடை:** இது வீண்பேச்சு. இன்னொருவர் தந்தது இயலறிவாகாது. இயலறிவு நிறை குறையற்றது; இருந்தபடி யிருப்பது. காட்டுமிராண்டிகளிடமும் இயலறிவுண்டு. இருந்தும் அவர்கள் உன்னதியடையவில்லை. கற்றறிவே உன்னதியளிக்கும். நாம் வாலிபத்தில் செய்யத்தக்கது தகாதது, தர்மாதர்மங்களை நன்ருயறிவதில்லை. நாம் வித்வான்கள் கருணையால் படித்துப் புலவரான பிறகே செய்யத் தக்கது தகாதது, தர்மாதர்மங்களை யறிகிறோம். ஆதலால் இயலறிவே சிறப்பாகாது.

## மறுபிறவி

9. நீங்கள் ஆத்மாவிற்கு முற்பிறப்பும் மறுபிறப்பும் இல்லை என்கிறீர்கள்—இது கிருஸ்து முஸல்மான்களிடமிருந்து கடன் வாங்கியதாகும். இதன் விளக்கம் மறுபிறப்பைக் குறித்த ஏழாம் அத்தியாயத்தில் உள்ளது. ஜீவன் நித்தியம் என்பதை அறிக. அதன் கர்மப் பிரவாகமும் நித்தியமே. கருமத்திற்கும் கருமவானுக்கும் நித்திய சம்பந்தமுண்டு. ஜீவன் எங்காவது சும்மா இருந்ததா, இருக்குமா? நீர் சொல்லுவதிலிருந்து பரமேசன் கூடச் சும்மா இருப்பதாகிறதே. முன்—பின் பிறப்பை ஒப்பாவிட்டால் செய்யாத செயலுக்குக் கடவுள் இன்ப துன்பங்களைக் கொடுப்பதாகும். அது கடவுளின் மேல் அநீதி சுமத்தியதாகும். மறுபிறப்பில்லாது, ஜீவன் புண்ய பாப பலன்களை நுகர முடியாது. ஏனெனில் உடல் எடுத்தாலன்றி ஜீவன் சுக துக்க பலா பலன்களைப் புசிக்கமுடியாது. முன் செய்த புண்ய பாபப் பலனின்றி இப்பிறவியில் இன்ப துன்பங்களை எப்படி யனுபவிப்பது? முன் வினைப் பயனை இப்பிறவியில் தராவிட்டால் கடவுள் அநியாயம் செய்பவராவார். இப்பிறவிப் பயனை மறுபிறவியில் நுகர முடியாதுபோகும். ஆதலால் உமது மறுபிறப்பில்லாக் கொள்கை பொருந்தாது.

10. மற்ற தேவர்களை நம்பாமை பொருந்தாது. திவ்ய குணவான்களும் புலவரும் தேவராவார். பரமேசன் மஹாதேவன்; தேவர்களின்றி மஹாதேவன் என்ற பெயர் வருமா ?

11. நீங்கள் அக்னி ஹோத்ரம் முதலிய பரோபகாரமான நற்காரியங்களை மதிப்பதில்லை—இது பிசகு.

12. பூர்வ மஹர்ஷிகள் செய்த உபகாரங்களை நினையாது, பிற்காலம் தோன்றிய ஏசு முதலியோரைச் சார்தல் அழகன்று.

13. காரண வித்தையான வேதங்களின்றியே காரிய வித்தையான விஞ்ஞானங்கள் வந்தன என்பது முடியாத காரியம்.

14. பூணூல் சிகையில்லாது (இவை வித்தையின் சின்னம்) கிறிஸ்து முகம்மதியர் போல உடுப்பணிகிறீர்கள். இத்தனை சட்டை தொப்பிகளைப் பரிசு போல் சுமக்கும் உங்களுக்குப் பூணூல் பாரமானவோ ?

15. பிரம்மாவிலிருந்து ஆரியவர்த்தத்தில் எத்தனையோ புலவர் தோன்றினர். அவர்களைப் போற்றாமல், ஐரோப்பியர் துதியே பாடுவது பட்சபாதம் அல்லது முகத்துதி தவிர வேறென்ன ?

16. நீவிர் பீஜாங்குர நியாயம் போல ஜடசேதனச் சேர்க்கையால் ஜீவன் உண்டாகிறது; உற்பத்திக்கு முன்பு ஜீவதத்துவம் இல்லை; தோன்றியது அழியாது என்பது முன்பின் முரணாகும். படைப்பிற்கு முன் கடவுளைத் தவிர வேறு சடமோ சித்தோ இல்லாவிட்டால் ஜீவன் எதிலிருந்து வந்தது—எதன் சேர்க்கையால் ? ஜடமும் சித்தும் என்றும் இருப்பன என்றால் சரி; ஆனால் சிருஷ்டிக்கு முன்பு கடவுளைத் தவிர வேறில்லை என்கிறீர்; இது உமது கொள்கைக்கு விரோதமே. ஆதலால் தேச முன்னேற்றத்தில் உமக்கு விருப்பமானால் உடனே ஆரிய ஸமாஜத்திற் சேரும்; அதன் விதி நியமங்களை அனுஷ்டியும். இன்றேல் உமது வாழ்வு வீணாகும்; ஒரு லாபமும் பெறாது. தேச நலத்திற்காக உடல் பொருளாவியீந்து அன்புடன் உழைப்போம். நமது தேசம்; நம் உயிர்க்கு உணவு தரும் தேசம், நம்மைத் தாங்கும் தேசம்; இனியும் நம்மைப் பேணும் தேசம் வாழ நாம் ஒன்று சேர்ந்து உழைப்போம். ஆரியவர்த்த உன்னதிக்கு ஆரிய ஸமாஜம் போன்ற வேறு சங்கமோ ஸமாஜமோ இல்லை. நீங்கள் அனைவரும் சேர்ந்து இந்த

ஸமாஜத்திற்கு உதவுவது சிறந்த செயலாகும். ஒருவரால் அன்று; எல்லா அங்கத்தினரும் கைகொடுத்தாலே ஒரு சங்கமோ ஸமாஜமோ பொதுநலம் புரியமுடியும்.

விறு: நீர் எல்லாரையும் கண்டனம் செய்கிறீர். எல்லா மதங்களும் நல்லனவே. ஆதலால் எதையும் கண்டனம் செய்யக் கூடாது. மற்றவரை விட நீர் என்ன விசேஷமாகச் சொல்லி விட்டீர்? அப்படியிருந்தாலும் உமக்கு ஒப்புயர்வற்றவர் இல்லையா? உமக்கு இவ்வளவு ஆகாது. பரமாத்ம சிருஷ்டியில் ஒன்று மற்றொன்றை விட மிஞ்சியிருக்கும். எல்லாம் ஏறக் குறையத்தானிருக்கும். யாருக்கும் வீண் செருக்குக் கூடாது.

விடை: தர்மம் எல்லாருக்கும் ஒன்ரு பலவா? பலவாஞல் ஒன்றுக் கொன்று முரணுகுமா, அல்லவா? மதங்கள் பரஸ்பர விரோதமா அல்லவா? ஒன்றுக்கொன்று விரோதமாஞல், ஏதாவது ஒன்றே உண்மையாகும். எல்லா மதமும் ஒன்றென்ருல் இத்தனை மத பேதங்கள் ஏன்? இதிலிருந்து எல்லாருக்கும் தர்மமும் அதர்மமும் ஒன்றே. இதைத்தான் எல்லாம் வேறு விதமாகச் சொல்லுகின்றன. ஓர் அரசன் உலக மதக் கணக்கெடுத்தால் ஆயிரத்திற்கு மேற்பட்ட மதங்கள் இருக்கும். அவற்றுள் நான்கே முதன்மை— புராணி (புராணம்), கிராணி (கிறிஸ்து), ஜைனி (ஜைனம்), (அல்லது பௌத்தம்) குரானி முகம்மதிய மதங்கள். மற்ற மதங்கள் இந்த நான்கில் அடக்கம்.

ஓர் அரசன் சர்வ மதசபை கூட்டுகிருன். அதில் ஓர் அறிவலன் வாம மார்க்கியைநோக்கிக் கேட்கிருன்.

அறி: ஐயா இதுகாறும் குருவோ தர்மமோ இல்லேன். எந்த தர்மம் உயர்ந்தது சொல்லும்; அதிற் சேருவேன்.

வாம: எம் மதமே உயர்வு?

அறி: மற்ற 999 மதங்கள்?

வாம: எல்லாம் பொய்; நரகவழி. "कौलात् परतरं नहि" "வாமத்திற்கு மிஞ்சின மதமில்லை" என்பது பிரமாணம்.

அறி: உன் தர்மம் என்ன?

வாம: பகவதி வணக்கம், மது மாமிசாதி பஞ்ச மகார நுகர்வு, ருத்ரயாமளாதி 64 தந்திரநூல் கற்றல்—இவையே எமது

தருமம். உனக்கு முக்தி வேண்டுமானல் எமது சிஷ்யனுயிரு.

**அறி:** நான் சில மஹாத்மாக்களைக் கண்டு சந்தேகம் கேட்டு வருகிறேன். எனக்கு எதில் அன்பும் கருத்தும் பதியுமோ அதன் சிஷ்யனுகிறேன்.

**வாம:** ஏனையா வீண்மயக்கம்; இந்த வுலகம் உம்மை ஏமாற்றித் தன் வலையிற் பிடித்துவிடும். யாரிடமும் போகாதீர்; பேசாமல் எம்மைச் சரண்புகும். இன்றேல் வருந்துவீர்—எம்மதத்திலே தான் போகமும் மோக்ஷமும் சேர்ந்திருக்கிறது.

**அறி:** சரி பார்த்து வருகிறேன்.

அறிவாளி சைவனிடம் கேட்டான்—அதே பதில் வந்தது. சிவன் விபூதி ருத்ராக்ஷம், இலிங்க பூஜை—இவையின்றி முக்தி யில்லை—என்ருன் சைவன். அறிஞன் நவீன வேதாந்தியிடம் சென்ருன்.

**அறி:** மஹராஜ்! தங்கள் தர்மம் என்ன சொல்லும்?

**வேதா:** தர்மம், அதர்மம் எல்லாம் எமக்கில்லை. நாம் பிரம்மம்—சாக்ஷாத் பிரம்மம். நமக்குத் தர்மாதர்மம் மேது? எங்கிருந்து வரும்? இவ்வுலகம் மித்தை சுத்தசேதனமாக விரும்பும் ஞானி, ஜீவபாவனையை விட்டு 'அஹம் ப்ரஹ்ம' பாவனையே என்றும் செய்யவேண்டும்; அப்போது நித்திய முக்த ஞகலாம்.

**அறி:** ஐயா நீரே நித்ய முக்த பிரம்மமானுல் பிரம்மனுக்குரிய குண கர்ம சுபாவம் உம்மிடம் இல்லாததேன்? நீர் உடலிற் கட்டுப்பட்டிருப்பதேன்?

**வேதாந்தி:** நீர் உடலைக் காண்கிறீர்; அதனுல் மயங்குகிறீர். நாம் பிரம்மம் தவிர வேறென்றும் காண்பதில்லை.

**அறி:** பார்ப்பவனுன நீர் யார்? எதைப் பார்க்கிறீர்?

**வேத:** பார்ப்பவன் பிரம்மம்; பிரம்மத்தைப் பிரம்மம் பார்க்கிறது.

**அறி:** என்ன இரண்டு பிரம்மம் உண்டோ?

**வேத:** இல்லை. தன்னைத் தானே பார்க்கிறது.

அறி: என்ன உம் முதுகின்மேல் நீர் ஏறி உட்கார முடியுமா? இது வெறும் பைத்தியப் பேச்சில்லையா?

அறிவலன் முன்சென்று ஜைனரைக் கேட்டான். அவரும் மேற்படித்தான் "ஜினதர்மமே தருமம். மற்றெல்லாம் பொய். உலகைப் படைத்த இறைவன் ஒருவனில்லை. அனாதிகாலமா யிருந்தபடியே உலகம் இருக்கிறது. அதை யாரும் படைத்த தில்லை; அப்படியே இயற்கையாக உள்ளது. வாரும் எமது சிஷ்யனாயிரும். ஏனெனில் நாங்களே முற்றிலும் நல்லவர்கள், உத்தமர்கள். எமது கொள்கையே உண்மை; ஜைனந்தவிர மற்றெல்லாம் பொய்."

சரி; அறிவலன் (ஜிக்ஞாசு) முன்சென்று ஈசாயியைப் பார்த்தான். அவனும் வாமமார்க்கி போலத் தான் வினா விடை நடத்தினான்: "மனிதரெல்லாம் பாபிகள்; தனது திறமையால் பாபம் போகாது; ஏசுவைச் சார்ந்து சுத்தமாகியே முக்தி பெறலாம். அனைவர் பாப பரிகாரத்திற்கும் தன்னையே பலிகொடுத்து, ஏசுநாதர் தயவை விளக்கினார். நீர் எமது சிஷ்யனாயிரும், வாரும்" இதுதான் விசேஷம்.

அறிவலன் (ஜிக்ஞாசு) மௌல்வீ சாகேபிடம் போனான். அவரிடமும் இப்படியே வினா விடை நடந்தது. "ஒப்புயர்வில்லா அல்லா, அவனது தூதன் முகம்மது நபி, அவர் அருளிய குரான் ஷெரீப்—இம் மூன்றையும் நம்பினாலே மோக்ஷம், இன்றேல் இல்லை. இம் மதத்தை நம்பாதவன் நரகத்திற்கே போவான்; அவன் காபிர்; அவனை வெட்டிக் கொல்லலாம்." இதுதான் மௌல்வியின் விசேஷவாக்கு. அறிவலன் வைஷ்ணவரிடம் இப்படியே பேசிப் பார்த்தான்; அதே வினா விடை தான்! "எங்கள் நாமமும் முத்திரையும் கண்டே எமராஜன் அஞ்சுவான்" என்றதே விசேஷம். "நாமமும் முத்திரையும் கண்டு கொசு போலீஸ், திருடர் கொள்ளைக்காரர் அஞ்சவில்லையே—எமராஜன் மட்டும் எமதூதர் மட்டும் ஏன் அஞ்சவேண்டும்?" என்று அறிவலன் வியந்து, முன் சென்று வினாவினான். ஒவ்வொரு மதத்தனும் "எனதே உண்மை எனதே மேல்" என்றான். "எங்கள் கபீர் உண்மை, நானக் உண்மை, தாதூ, வல்லபர், ஸஹஜானந்தர், மத்வர், அவதாரம், உண்மை என்று அவரவர் கண்டபடி சொல்லக் கேட்டான். ஆயிரம் மதங்களைக் கண்டான்; ஒன்றுக்கொன்று பகையே கண்டான். இவருள் யாரையும்

குருவாக ஏற்பது பிசகு. ஒருவருக்கு 999 பேர் எதிரிகள். இவர்கள் பிழைப்பும் கடைகாரர், வேசையர், விதூஷகர் போன்று தங்கள் சரக்கை ஏலம் போட்டுப் பெருமை பேசிப் பிறரை இகழும் கும்பல், என்பதை அறிந்தான் ஜிக்ஞாசு.

உடனே முண்டகோப நிஷத்து வாக்கியத்தை நினைத்தான்:

तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् ।
समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम् ॥ 1 ॥
तस्मै स विद्वानुपसन्नाय सम्यक् प्रशान्तचित्ताय शमान्विताय ।
येनाक्षरं पुरुषं वेद सत्यं प्रोवाच तान्तत्त्वतो ब्रह्मविद्याम् ॥ 2 ॥

—(முண்டகம் 1-2-12, 13)

வேத வித்து, பிரம்ம நிஷ்டனை ஞான குருவிடம் மாணவன் வணக்கமுடன் கை குவித்து, சமித்துக்கொண்டு பிரம்ம ஞானத் திற்காகச் செல்க.—போலிகளிடம் செல்லற்க. (1) சாந்த சித்தன், ஜிதேந்திரியன், வித்துவான் ஆகிய குரு, ஞானவேட்கை கொண்ட சீடனுக்குப் பரமாத்மாவின் குண கர்ம ஸ்வபாவங்களை விளக்கும் பிரம்மவித்தையை உபதேசிக்கிறான்; தர்மார்த்த காம மோக்ஷத்திற்கும் பரமாத்ம ஞானத்திற்கும் ஏற்ற சாதனகளையும் பயிற்றுகிறான்(2).

இத்தகைய மஹாபுருஷனிடம் அந்த அறிவலன் (ஜிக்ஞாசு) சென்று, வணங்கி, "மஹராஜ்! இந்த மத சம்பிரதாயங்களின் குழப்பத்தால் மனம் மயங்குகிறேன். ஏனெனில் இந்த ஆயிரம் மத ஸம்பிரதாயங்களில் ஒன்றின் சிஷ்யனானால் மற்ற 999 மதங் களுடன் விரோதியாக நேரும். 999 பகைவனும் ஒரே நண்பனும் கொண்டவன் என்றும் சுகம் பெறமுடியாது. ஆதலால் நான் எதை ஏற்கவேண்டுமென்று தாங்கள் உபதேசியுங்கள்!"

ஆப்தவித்வான்: இந்த மதங்களெல்லாம் மடமையின் பிறப்பு, அறிவின் விரோதிகள். மூடப் பாமர காட்டுமிராண்டிகளை மயக்கிப் பிடித்துச் சுயநலமாக வயிறு வளர்க்கும் மதங்கள் இவை. அந்த அப்பாவிகள் மனிதப்பிறவி எடுத்த பலனை இழந்து வீணாகின்றனர். இந்த ஆயிரம் மதங்களில் ஒருமைப்பாடு ஏதாவதுண்டானால் அது வேத வாசனையால்; பரஸ்பர விரோதமெல்லாம் நாம் ஏற்கமுடியாத கற்பனை அதர்மப் பொய்களே.

**அறிவலன்:** இதை எப்படிச் சோதிப்பது?

**ஆப்த:** நீர் சென்று இந்தக் கேள்விகளைக் கேளும்; எல்லாரும் ஒரேமாதிரியே பதில் சொல்வார்கள்.

ஜிக்ஞாசு ஆயிர மதமண்டலிக்குச் சென்று நின்று இவ்வாறு பேசினன்:—" எல்லாரும் கேளுங்கள். வாய்மையா பொய்மையா எது அறம்?"

**சபை:** வாய்மையே அறம், பொய்மை அதர்மம்.

**அறி:** வித்யாப்யாசம், பிரமசரியம், நல்ல வாலிபத்தில் விவாகம், ஸத்ஸங்கம், புருஷார்த்தம், சத்தியவிவகாரம்—இவை யெல்லாம் தர்மம். அவித்தை, அப்ரம்மசரியம், விபசாரம், தீயர் உறவு, ஆலஸ்யம், அசத்தியம், வஞ்சவிவகாரம், கபடம், ஹிம்சை, பிறருக்குத் தீங்குசெய்தல்—இவை அதர்மம்—என்ன சொல்லுகிறீர்கள்.

**சபை:** ஆம்; வித்யாதிகள் தர்மம் அவித்யாதிகள் அதர்மம்.

**அறி:** அப்படியானால் நீங்கள் அனைவரும் சேர்ந்து தர்மத்தை நாட்டி அதர்மத்தை ஒழிக்காததேன்? பொய் மதத்தை ஒழித்து சத்திய தர்மத்தை நாட்ட எல்லாரும் சேர்ந்து வராததேன்?

**மதவாதிகள்:** அப்படிச் செய்தால் யார் எம்மை மதிப்பர்? சிஷ்யர் எம்மை மதியாது செல்வர்; எங்கள் பிழைப்பே போய்விடும். இப்போது நாங்கள் ஆனந்தம் அனுபவிக்கிறோம்; நாங்கள் உண்மை ஒன்றே கடைப்பிடித்தால் ஆனந்தம் போய்விடும். எங்களுக்கு உண்மை தெரியும்; ஊரை ஏமாற்றிப் பிழைக்கவே அதை ஒளித்துப் பொய் மதம் புனைகிறோம். நன்றாகப் பாரும்—உலகில் நேர்மையான யோக்கியனுக்கு யாரும் எதுவுந் தருவதில்லை. ஊரை ஏமாற்றும் தூர்த்தனே எல்லாம் அடைகிறான்.

**அறிவலன்:** பிறரை இப்படி ஏமாற்றிப் பிழைக்கும் உங்களை அரசன் ஏன் தண்டிக்கவில்லை?

**மதவாதிகள்:** அரசனும் எமது சிஷ்யனாயிற்றே; எங்களை யாரும் தப்பமுடியாது; எங்கள் ஏற்பாடுகள் பக்கா!

**அறி:** பிறரை ஏமாற்றி வஞ்சிக்கும் நீங்கள் கடவுளுக்கு என்ன பதிற் சொல்லுவீர்கள்? நீங்கள் கோரநரகத்தில் விழுவீர்கள்.

அற்ப வாழ்விற்காக இத்தனை பெரிய அபராதம் செய்வதேன்? இதை விட்டாலென்ன?

**மத:** அந்தக் காலம் வரும்போது பார்த்துக் கொள்வோம். நரகமும் பரமேசன் தண்டமும் வரும்போது வரட்டும்—இப்போது ஆனந்தமனுபவிக்கிறோம். ஜனங்களை நாங்களாக பலாத்காரம் செய்யவில்லை. அவர்களே மகிழ்ந்து எங்களுக்குத் தானுதிகளை வழங்குகிருர்கள். அரசர் எங்களை ஏன் தண்டிப்பார்?

**அறி:** ஒரு குழந்தையை ஏமாற்றிப் பறிப்பவனைத் தண்டிப்பது போல், ஜனங்களை வஞ்சித்துத் தானம் வாங்கும் உங்களையும் தண்டிக்கவேண்டும். ஞானமில்லாதவன் குழந்தை; ஞானம் முதிர்ந்தவனே தந்தை.

अज्ञो भवति वै बालः पिता भवति मन्त्रदः ॥ —(மனு. 2-153)

என்பது மனுவாக்கு. அறிவாளியான புலவன் உமது வலையிற் சிக்கமாட்டான். குழந்தை போன்று ஒன்றுந் தெரியாதவரே உங்கள் வலையிற் சிக்குவர். அவர்களை வஞ்சிப்பதற்காக உங்களைத் தண்டிப்பது அரசன் கடமையாகும்.

**மத:** அரசனும் குடிகளும் எங்கள் மதத்தைப் பின்பற்றும் போது யார் எம்மைத் தண்டிப்பது? அந்தக் காலம் வந்தால் எங்கள் சூழ்ச்சியை மாற்றி இன்னொரு விதத்தில் அமைப்போம்.

**அறி:** நீங்கள் சோம்பேறிகளாய்ப் பிறரை ஏமாற்றித் திரிகிறீர்களே. நீங்கள் நல்ல கல்வி கற்று வீடுகளிலுள்ள குழந்தைகளுக்கும் பயிற்றிஞல் உங்களுக்கும் அவர்களுக்கும் அது நலமாகுமே.

**மத:** பிறந்தது முதல் இறப்பது வரையில் அனுபவிக்கும் சுகங்களை விட்டு, இளமையிற் கற்பதாம், பிறகு ஆயுளெல்லாம் பிறருக்கு அறிவைப் புகட்டுவதாம்.—இதனுல் எமக்கென்ன லாபம்? இப்போது நாங்கள் ஒன்றும் செய்யாமலே இலட்சக் கணக்காகச் சம்பாதிக்கிறோம், சுகபோகங்களை அனுபவிக்கிறோம்—இவற்றை ஏன் விடவேண்டும்?

**அறி:** இதன் முடிவு தீமையே; உங்களுக்குக் கொடிய நோய்கள் வருகின்றன, சீக்கிரம் மாண்டு போகிறீர்கள். அறிவாளர் உங்களை இழிவு செய்தும் உணரவில்லையே—

மத: அரே பாயி—

टका धर्मष्टका कर्म टका हि परमं पदम् ।
यस्य गृहे टका नास्ति हा ! टक्रां टकटकायते ॥ 1 ॥
आना अंशकला: प्रोक्ता रूप्योऽसौ भगवान् स्वयम् ।
अतस्तं सर्व इच्छन्ति रूप्यं हि गुणवत्तमम् ॥ 2 ॥

நீர் சிறுபிள்ளை; உலகந் தெரியாதவர். துட்டில்லாது தர்மமில்லை; துட்டில்லாது கர்மமில்லை; துட்டில்லாமல் இகமில்லை; துட்டில்லாது பரமில்லை; வீட்டிலே துட்டில்லாதவன் 'ஹா துட்டே துட்டே' என்று நல்ல பொருள்களைக் கண்டு ஏங்குகிறான் (1). அணு தெய்வாம்சம்; ரூபா சாக்ஷாத் பகவான். பதினாறு கலை வீசும் பகவானை யார் பார்க்கிறார், கேட்கிறார், துதிக்கிறார்? பதினாறு அணாவைக் கலையாகக் கொண்ட ரூபாயையே எல்லாரும் பார்க்கின்றனர். ரூபாயே பகவத் ரூபம்; அதனால் எல்லாரும் ரூபா தேடுகின்றனர்—பணம் பத்தும் செய்யும். பணவானே குணவானும்(2).

அறி: சரி சரி, உமது உட்குட்டு வெளிப்பட்டது! இந்த மோசடியெல்லாம் காசடித்துச் சுயநல போகம் புசிக்கவே; ஐயே! உனது பண லீலையால் உலகம் பாழாகிறதே! சத்தியோபதேசத்தால் உலகிற்கு நன்மை இருப்பது போலவே அஸத்யோபதேசத்தால் தீமை யுண்டாகும். உமக்குப் பணம் வேண்டுமானால் வேலை செய்து, வியாபாரம் செய்து சம்பாதிக்கலாமே.

மத: அதில் உழைப்பு அதிகமே; தீமையும் உண்டே; எங்கள் லீலையைப் பாரும்; இதனால் தீமையில்லை; எப்போதும் லாபத்திற்கு மேல் லாபமுண்டு. துளசி தீர்த்தமும் சரணாமிருதமும் தந்து, துளஸி மாலையும் கொடுத்தால் போதுமே! ஆள் சிஷ்யனாகிறான்; ஆயுளெல்லாம் எமக்கு மாடுபோலப் பாடுபடுகிறான்; நாங்கள் ஒட்டியபடி நடக்கிறான்.

அறி: இந்தச் சனங்கள் உங்களுக்கு எதற்காக கொள்ளைப் பணம் கொட்டுகிறார்கள்?

மத: தர்மம், ஸ்வர்க்கம், முக்திக்காக.

அறி: உமக்கே முக்தியில்லை, முக்தி ஸ்வரூபமும் தெரியாது, சாதனமும் இல்லை—என்றால், உமது தொண்டருக்கு என்ன கிடைக்கும்?

மத: இந்தவுலகில் என்ன கிடைக்கும்? ஒன்றுமில்லை; செத்த பிறகு பரலோகத்திலே சேவா பலன் கிடைக்கும். எங்களுக்கு இவர்கள் எவ்வளவு தருகிறுர்களோ, சேவை செய்கிறுர்களோ அவற்றின் பலனெல்லாம் பரலோகத்திற் கிடைக்கும்.

அறி: இவர்களுக்குக் கிடைக்கிறதோ இல்லையோ; வாங்கிக் கொள்ளும் உங்களுக்கு என்ன கிடைக்கும்? நரகமா இன்னும் வேறு?

மத: நாங்கள் பஜனை செய்கிறேம்; இதன் சுகம் எமக்குக் கிடைக்கும்.

அறி: உமது பஜனை துட்டுக்காகவே. அந்தப் பணம் இங்கே தானிருக்கும். நீ அதனுல் வளர்க்கும் உமது மாமிச பிண்டமும் இங்கே தான் சாம்பலாகி இங்கேயே கிடக்கும். நீ பரமேஸ்வரனையே பஜனை செய்தால் உன் ஆத்மாவும் சுத்தமாகும்.

மத: என்ன நாங்கள் அசுத்தரா?

அறி: உள்ளே முழு அழுக்குப் பிடித்தவரே.

மத: உமக் கெப்படித் தெரியும்?

அறி: உமது வஞ்ச மோசடிகளால்—

மத: மஹாத்மாக்களின் விவகாரம் யானைத் தந்தம் போலும். யானை உண்ண உள்ளே பல் வரிசையுண்டு; வெளியே இரண்டு நீட்டியிருக்கிறது. அதேமாதிரி நாங்கள் அந்தரங்க சுத்தியுடன், லீலா மாத்திரம் வெளியே இப்படிச் செய்கிறேம்.

அறி: உள்ளே சுத்தமானுல் புறச் செயலும் சுத்தமாயிருக்கும். புறச் செயல் அசுத்தமாயிருப்பதால் உள்ளும் அசுத்தமே.

மத: நாங்கள் எப்படியிருந்தாலும் எமது சிஷ்யர் நன்றுகவே யிருக்கின்றனர்.

அறி: எப்படி குருவோ அப்படிச் சீடர்......

மத: எல்லாருக்கும் ஒரே மதம் இயலாது; ஏனெனில் மனிதரின் குண கர்ம சுபாவம் வெவ்வேறு.

அறி: எல்லாரும் பிள்ளைப் பருவத்திலிருந்து வாய்மை போன்ற தருமங் காத்தால், பொய்ம்மை போன்ற அதர்மங்

களை நீத்தால், எல்லாருக்கும் ஒரே மதம் இயலும். உலகில் தர்மாத்மா அதர்மாத்மா என்று இரு வகை மனிதர் இருப்ப துண்மை. தர்மாத்மாக்கள் பெருக, அதர்மிகள் குறைவ தால் உலகில் இன்பமுண்டாகும்; அதர்மிகள் அதிகரித்தால் துன்பமே பெருகும். அறிவாளிகள் அனைவரும் ஒரேமாதிரி உபதேசம் செய்தால், உலகில் ஒரே சமயம் விரைவில் விளங்கும்.

**மத:** இந்தக் கலியுகத்தில் சத்திய யுகப் பேச்சு எதற்கு?

**அறி:** கலியுகம் என்பது ஒரு காலம்; காலம் செயலற்றது. அது தர்மா தர்மத்திற்குச் சாதகமாயிருக்கமுடியாது. ஆனால் நீங்களே கலியுக வடிவாக வந்து ஜனங்களைப் பாழ் பண்ணுகிறீர்கள். உலகில் தர்மாத்மாக்கள் இருந்தால் சத்திய யுகம், அதர்மிகள் மலிருந்தால் கலியுகம். சேர்க்கை வாசனையே குணதோஷமாகிறது; இயற்கையிலன்று.

இத்துடன் ஜிக்ஞாசு ஆப்த ஞானியிடம் சென்று சொன்னான் "மஹராஜ், நீங்கள் என்னை உய்வித்தீர்கள்— இன்றேல் யார் வலையிலாவது விழுந்து நான் பாழாயிருப்பேன். இப்போது நானே இந்த மூடப் போலிகளைக் கண்டிக்கிறேன்; வேதந் தரும் சத்திய மதத்தைப் போற்றுகிறேன்.

**ஆப்த:** இதுவே எல்லா மனிதருக்கும், சிறப்பாகச் சந்யாசி களுக்கும், உரிய பணியாகும். மெய்யைப் போற்றிப் பொய்யைத் தூற்றி, எல்லாருக்கும் சத்தியோபதேசம் செய் தாலே பரமோபகாரமாகும்.

**கேள்வி :—** இன்றுள்ள பிரமாசாரியும் சந்யாசியும் சரியா?

**விடை :—** இந்த ஆசிரமங்கள் சரியே. ஆனால் இன்று இவற்றுள் வெகு கடுபிடி; சூது இருக்கிறது. பிரமசாரி என்று பெயர் வைத்துக்கொண்டு எத்தனையோ பேர் இருக்கிறார்கள்; இவர்கள் நீண்ட ஜடை வளர்த்து, சித்தர் போல வேடம் பூண்டு ஏதோ ஜபத்தை முணுமுணுக்கிறார்கள்; புரஸ் சரணங்களில் ஈடுபடுகிறார்கள். பெயரளவில் கூடக் கல்வி யில்லாமல் இவர்கள் பிரமசாரி நாமத்தை ஏற்கிறார்கள். வேதம் பிரமஸ்வரூபம். இவர்கள் வேதப் பயிற்சியில் சிறிதும் முயற்சி யில்லை. இவர்கள் பிரமசரியம் அஜாக ளஸ்தம் (அலைதாடி) போன்றதே. அதேமாதிரி சந்யாசி

களும் கல்வியேயில்லாமல் தண்டு கமண்டலமேந்திப் பிச்சை யெடுத்தலைகின்றனர்; வேதமார்க்கத்தை உயர்த்த யாதும் செய்வதில்லை. சிறுவயதில் சந்யாசம் பூண்டு படிப்பில் கவனம் செலுத்தாமல் இங்கு மங்கும் சுற்றித் திரிகிருர்கள். இந்தப் பிரமசாரிகளும் சந்யாசிகளும், தீர்த்த தலம், மூர்த்தி தரிசனம் செய்து, விக்கிரகாராதனம் செய்துகொண்டு திரிகின்றனர். கற்றவரும் பிறருக்குப் போதிக்காமல் மௌனம் சாதித்து நன்ருக உண்டு தனியிடங்களில் உறங்கிக் கிடக்கின்றனர். இவர்கள் காவி கட்டி தண்டு கமண்டலம் தாங்கினதுமே எல்லாம் கண்டதாக நினைக் கின்றனர். இவர் மனதில் துவேஷமும், அசூயையும், செருக்கும் குடிகொண்டிருக்கின்றன; இவர்கள் பிறரைக் குறும்புத்தனமாகத் தூற்றுகின்றனர். தங்களையே மிக மேலாகக் கருதுகின்றனர். எந்தக் காரியமும் இவர்கள் செய்யாமல் உண்பதும் உறங்குவதுமாயிருக்கின்றனர். இவர்கள் உலகிற்கு வீண் சுமையாயிருக்கின்றனர். உலகிற்கு உபகாரியாய் வாழும் துறவிகளே உண்மைத் துறவிகள்.

வினு: கிரி, புரி, பாரதீ முதலிய குஸாயிகள் நல்லவர்களன்ருே? அவர்கள் மண்டலியாகப் புறப்பட்டு இங்குமங்கும் சுற்றி நூற்றுக்கணக்கான சாதுக்களுக்கு இன்பமளிக்கிருர்கள். எல்லோருக்கும் அத்வைத மதத்தை உபதேசிக்கிருர்கள். இவர்கள் சிறிது படிக்கிருர்கள், படிப்பிக்கிருர்கள். அதனுல் அவர்கள் பரவாயில்லையே?

விடை: இந்தத் தசநாமங்கள் பிற்காலக் கற்பனைகளே; இவை தொன்று தொட்டானதில்லை. இவர்கள் மண்டலி சாப்பாட்டுக் கூட்டமே. சாப்பாட்டுக்காகவே பல சாதுக்கள் இந்த மண்டலியிற் சேர்ந்திருக்கிருர்கள். இவருள் இடம்பம் மிகவும் உண்டு; இவர்கள் தம்முள் ஒருவரை 'மஹந்து' வாக்குகிருர்கள். அந்த மஹந்து ஒவ்வொரு சாயங்கால மும் தனது பீடத்தில் கொலுவிருக்கிருர். மற்றவர்கள் நின்று கையில் மலர் கொண்டு,

नारायणं पद्मभवं वसिष्ठं शक्तिं च तत्पुत्रं पराशरं च ।
व्यासं शुकं गौडपदं महान्तम् ॥ 4 ॥ —(புஷ்பாஞ்சலி)

இது போன்ற கோஷங்களுடன் மலர் தூவி, சாஷ்டாங்க நமஸ்காரம் போட்டு சேவிக்கின்றனர். அதாவது "நாராயணன், பத்மபவன், வசிஸ்டர், சக்தி, அஷ்டமக்கள்

பராசரர் வியாசர் சுகர் மஹான் கௌடபாதர்களுக்குப் புஷ்பாஞ்ஜலி ” என்று பொருள். இப்படிச் செய்யாதவர் அங்கே இருப்பது கடினம். இந்த இடம்பக் கூத்தெல்லாம் பணம் பறிக்கும் பகட்டுகளே. எத்தனையோ மடாதிபதிகள் சம்சாரிகளாகியும் சந்யாசிகள் என்று செருக்காடுகின்றனர். இவர்கள் எந்தத் தொண்டும் செய்வதில்லை. ஐந்தாவது அத்தியாயத்தில் கண்ட துறவிகள் கடமையை இவர்கள் காப்பதில்லை. இவர்கள் வாணாளை வீணுக்குகிறார்கள். நல்லுபதேசம் செய்யும் சாதுக்களையும் இவர்கள் பகைக்கிறார்கள். இவர்களிற் பலர் விபூதி ருத்ராக்ஷம் தரித்துச் சைவ சம்பிரதாயிகளாயிருக்கிறார்கள். இவர்கள் சங்கராசாரியாரின் சைவத்தைப் போற்றிச் சக்கிராங்கிதத்தைக் கண்டித்துப் பேசுவர். இவர்கள் வேத மதத்தை ஆதரிப்பதில்லை. வேத விரோதமான பொய் மதங்களைக் கண்டிப்பதில்லை. கண்டன மண்டனத்தால் எங்களுக்கு என்ன பலன்; நாங்கள் மகாத்மாக்கள் என்கின்றனர் இந்தச் சந்யாசிகள். இவர்கள் பூமிக்குப் பாரமாயிருக்கிறார்கள். இவர்கள் இப்படியிருப்பதனாலேதான் வேத விரோதிகளான வாமமார்க்காதிகளும், ஜைனரும் கிறிஸ்து இஸ்லாமியரும் நாட்டில் வலுத்தனர், இன்னும் வலுக்கின்றனர். நாடு நாசமாய்ப் போனாலும் இவர்கள் கண் விழிக்க மாட்டார்கள். எப்படி விழிப்பு வரும்? அவர்களுக்குப் பரோபகார புத்தியோ, கடமையுணர்வோ இல்லை. இவர்களுக்குச் சாப்பாடுதான் பெரிது. இவர்கள் உலக நிந்தைக்குப் பயப்பட்டு நமக்கென்ன வம்பு என்றிருக்கிறார்கள். உலகப் புகழை இவர்கள் விரும்புகிறார்கள். இவர்கள் பணம் குவிப்பதில் ஈடுபட்டு போக சுகப் பற்றுக் கொள்கின்றனர். மண் பெண் பொன்னாசைகள் இவர்களிடம் பலமாயிருக்கின்றன. இவர்கள் சிஷ்யக் கூட்டம் சேர்ப்பதில் மோகங் கொண்டவர்கள். இந்த ஆசையிருக்கு மட்டும் இவர்கள் சந்யாசிகள் என்பதெப்படி? இரவு பகலாக பக்ஷபாத மற்ற வேதோபதேசங்களால் உலகிற்கு இன்ப நலம் புரிதலே சந்யாசிகள் கடமையாகும். தங்களுக்குரிய கடமையைச் செய்யாதவர் சந்யாசி என்று பெயர் வைத்துக் கொள்வது வீணாகும். உண்மையான துறவி பக்ஷபாதமற்ற வேத மறிந்து, பயின்று, உலகிற்கு ஓதி, எல்லாரும் இன்புறவே வாழ்வான். துறவிகள் பரோபகாரத்

தில் ஈடுபட்டால் மற்ற ஆசிரமங்களெல்லாம் முன்னேறும். கிரகஸ்தனை விடத் துறவி அதிகமாகப் பொதுநலப் பணி புரியவேண்டும்.

சந்யாசிகளே பாருங்கள்! உங்கள் கண் முன்னேயே போலி மதங்கள் பரவிக்கொண்டிருக்கின்றன. நம்மவர் கிறிஸ்துவராகவும் இஸ்லாமியராகவும் மாறுகிருர்கள். உங்கள் மக்களைக் காப்பாற்றி அவர்களை வேத தர்மத்தில் உய்க்க நீங்கள் சிறிதும் பாடுபடுகிறதில்லையே! மனமிருந்தாலன்ரோ செயலிருக்கும்! ஹே சந்யாசிகளே! நீங்கள் திருந்தி முன்னேருவிட்டால் ஆரிய வர்த்தத்திலும் மற்ற நாடுகளிலும் உள்ள ஜனங்கள் முன்னேற மாட்டார்கள். ஒரு நாடு முன்னேற வேண்டுமானல் வேதாதி சத்திய சாஸ்திரங்களைக் கற்க வேண்டும், கற்பிக்க வேண்டும்; பிரமசரியாதி ஆசிரம விதிகளை முடிந்த மட்டும் கடைப் பிடித்தொழுக வேண்டும். ஹே சந்யாசிகளே! உங்கள் கூட்டத்தில் நடக்கும் வஞ்ச மோசடிகள் உங்களுக்கே தெரியும். ஒரு சாது தன்னைச் சந்யாசி என்று கூறிக்கொண்டு வியாபாரம் நடத்துகிருன். நான் சித்தன், பிள்ளை வரந்தருவேன், என்று விளம்பரப்படுத்திக் கொள்ளுகிருன். இதைக் கேட்டுப் பல பெண்கள் அவனைக் கை குவித்து வணங்கிப் பிள்ளை வரம் கேட்கிருர்கள். அந்தப் போலித் துறவியும் "உங்களுக்குப் புத்திரர் பிறக்கட்டும்" என்று ஆசீர்வதிக்கிருன்; பிள்ளை பிறந்தால் அது பாபாஜீ வாக்குப் பலித்ததாக அப் பெண்களும் கருதுகிருர்கள். "அம்மணிகளே! நாய், பன்றி, கழுதை, கோழிகளுக்கும் குழந்தை பிறக்கிறதே—பாபாஜீ வாக்கினுலோ" என்று அவர்களைக் கேட்க வேண்டும். பதிற் சொல்ல முடியாது. சிலர் செத்தாரை எழுப்புவதாக ஜம்பமடிக்கின்றனர்; மூடர் இதையும் நம்புகின்றனர். செத்தாரை எழுப்பும் சித்துண்டானுல் இவர்களே ஏன் சாகிருர்கள்? பெரிய பெரிய அறிவாளிகளும் ஏமாந்து போகும்படி சிலர் மாயம் புரிகின்றனர். தன்சாரி தக்குகள்போல் இந்தத் தக்குகள் ஐந்து ஏழு பேர் கூடி தூர தேசங்களுக்குச் செல்லுகின்றனர். ஆள் முண்டனுயிருந்தால் அவனை சித்தனென்று தலைவனுக்குகின்றனர். பணக்காரன் இருக்கிற நகரம் கிராமங்களுக்கு அருகேயுள்ள தனிக் காடுகளில் தமது சித்த புருஷனை இருத்திவிட்டு, சாதகர் ஊருக்குள் செல்லுகின்றனர். வழியில் வருகிறவர்களை இன்ன மஹாத்மாவைக் கண்டீர்களா? என்று வினவுகிருர்கள். பொதுஜனங்கள் "எந்த மஹாத்மா,

யார்? எப்படி யிருப்பார்" என்று ஆவலாகக் கேட்டதுமே தமது சரக்கை அவிழ்க்கின்றனர்.

**சாதகர் :** அவர் பெரிய சித்தபுருஷர்; மனத்திலிருப்பதைச் சொல்லிவிடுவார்; அவர் சொன்னது பலிக்கும்; பெரிய யோகீசர்; அவர் தரிசனத்திற்கே நாங்கள் வீடு வாசலை விட்டும் அலைகிறோம். அந்த மஹாத்மா இந்தப் பக்கமே எங்கோ யிருப்பதாக யாரோ சொல்லக் கேட்டோம்.

**கிரஹஸ்தன் :** அந்த மஹாத்மாவை நீங்கள் கண்டால் எங்களுக்கும் சொல்லுங்கள். தரிசனம் செய்கிறோம்; மனதிலிருப்பதைக் கேட்கிறோம்.

இப்படியே பகலெல்லாம் இரண்டு மூன்று நாள் சித்த புருஷனைப் பற்றிப் பிரசாரம் செய்து ஊரைக் கலக்கி விட்டு, இரவில் அதே இடத்திற் கூடி, உண்டு, குடித்து உறங்குகின்றனர். மறுகாலை அவ்வாறே நகரிலும் கிராமத்திலும் பிரசாரம் செய்கின்றனர். பிறகு நான்கு சாதகர் ஒவ்வொரு பணக்காரனிடம் சென்று "அந்த மஹாத்மாவைக் கண்டோம் கண்டோம்; அடடா, தரிசன பாக்யம் வேண்டுமானால் வாரீர் வாரீர்" என்று இழுக்கின்றனர். பணக்காரர் தயாராக வருகின்றனர். சாதகர் அவர்களிடம் "நீங்கள் அந்தச் சித்தரிடம் என்ன கேட்கப் போகிறீர்கள்; எம்மிடம் சொல்லுங்கள்; உங்களுக் கென்ன பிள்ளை வரம் வேண்டுமா, தனம் வேண்டுமா, நோய் தீர வேண்டுமா, சத்துருவை வெல்ல வேண்டுமா? உங்கள் விஷயமெல்லாம் சொல்லுங்கள்" என்று எல்லாம் தெரிந்துவைத்துக் கொண்டு, அவர்களை சித்தனிடம் அழைத்துச் செல்லுகின்றனர். இதெல்லாம் முன்பே சித்தனிடம் அரங்கேறிவிடும்; சித்தனும் குறிப்புணர்த்துவான். பணம் வேண்டுவோனை சித்தரின் வலப் பக்கம், பிள்ளை வேண்டுவோனை முன்னால், பிணிதீர வேண்டுவோனை இடதுபுறம், பகைவெல்ல வேண்டுவோனைப் பின்புறமிருந்து கொண்டுவந்து முன்னால் அமர்த்துவர் சாதகர். நமஸ்காரம் செய்ததுமே சித்தர் தமது சித்தினால் உச்சக் குரலெடுத்து "பிள்ளைவரம் கேட்கவா வந்தாய்; இங்கென்ன பிள்ளை வைத்திருக்கிறேனா? பண வரம் கேட்கவா வந்தாய்; இங்கென்ன பணமூட்டை குவிந்திருக்கிறா? பக்கீர்களிடம் பணம் ஏது? அடே நீ நோய் தீரவா வந்தாய்? நான் என்ன வைத்தியனா? நான் வைத்தியனல்லேன்; போ வைத்தியனிடம்" என்பான். தந்தைக்கு நோயானால் சாதகன் கட்டை விரலை,

தாயானல் சுட்டுவிரல், சகோதரனுல் நடுவிரல், மனைவியானல் மோதிர விரல், கன்னிகையானல் சுண்டுவிரல் குறிப்பாகக் காட்டுவான். உடனே சித்தன் "டேய் உன் தாய்க்கா நோய் (தந்தை, தமயன், தம்பி, மனைவி, மகளுக்கா)" என்பான். வந்தவன் வியந்துபோவான். சாதகன் "அப்படித்தானே" என்று கேட்பான். கிருஹஸ்தன் "ஆமாம் சாமி உண்மை; என் பாக்ய வசத்தால் இந்த மஹான் தரிசனம் கிடைத்தது. இவர் தரிசனத்தால் புனிதரானேம்" என்பான்.

சாதகன்: கேள் அண்ணே! இந்த மஹாத்மா மனேயோகி! இங்கே நீண்ட நாட்கள் இருக்கமாட்டார். இவர் ஆசீர்வாதமே போதும்; நினைத்த காரியம் கைகூடும். ஆசீ வேண்டுமானல் உடல் பொருள் ஆவியெல்லாம் தந்து சேவை செய்யுங்கள். சேவையால் சிந்தித்தது கிடைக்கும். அவர் மனம் குளிர்ந்தால் என்ன வரந்தான் கொடுக்க மாட்டார்? சித்தர் போக்கு அபாரம்! இந்த மாய வார்த்தையின் வலையில் விழுந்து மிக மகிழ்ந்து, கிரகஸ்தன் வீட்டுக்குச் செல்லும்போது சாதகனும் கூடச் செல்லுகிறன்; யாராவது குட்டை வெளிப்படுத்துவான் என்ற சந்தேகத்தால் செல்லுகிறன். பணக்காரன் தன்னிடம் வரும் நண்பருக்கெல்லாம் சித்தர் மகிமையைச் சொல்லுகிறன். சாதகனும் கப்ஸா அடிக்கிறன். நகரெங்கும் செய்தி பரவுகிறது. எல்லாரும் சித்தனைக் காண கூட்டம் கூட்டமாகச் சென்று "மஹராஜ் என் மனேபீஷ்டத்தை நிறைவேற்ற வேண்டும்" என்று மொய்க்கிறர்கள்; கேள்வி மேல் கேள்வி கேட்கிறர்கள். சாதகர் "மஹானைத் தொந்திரவு செய்யாதீர்; இன்று தொல்லை செய்தால் அவர் சட்டென்று கிளம்பிச் செல்வார்" என்று கூச்சலிடுகின்றனர். அவருள் பெரிய பணக்காரன் சாதகரைத் தனித்தழைத்து "என் மனே நிலையை மஹான் சொல்லட்டும், நான் நம்புவேன்" என்கிறர். "உமக்கென்ன?" என்று சாதகர் கேட்கிறர். பணக்காரன் தன் மனத்தைச் சொல்லுகிறன். சாதகர் சித்தனுக்குக் குறிப் புணர்த்திப் பணக்காரனை அமர்த்துகின்றனர். சித்தன் "டேய் நீ இன்னது நினைக்கிறய்" என்று சொன்னதுமே, சபை கேட்டு "அடாடடா பெரிய சித்த புருஷன்" என்று வியக்கிறது. ஒவ்வொருவரும் இயன்ற காணிக்கை கொண்டு வருகிறர். சிலர் மிடாயி, சிலர் காசு, சிலர் ரூபாய், சிலர்

பொன், சிலர் ஆடைகள், சிலர் மா முதலிய பண்டங்கள் கொண்டு படைக்கின்றனர். காணிக்கைகள் வந்து குவி கின்றன. சாதகர் நல்ல கொள்ளையடிக்கின்றனர். புத்தி யில்லாத பணக்காரர் இரண்டொருவர் வருகின்றனர். ஆயிரம் இரண்டாயிரம் காணிக்கை வைக்கின்றனர். சித்தன் பணத்தை வாங்கிக்கொண்டு விபூதி தந்து "உனக்கு மகன் வேண்டுமா; நம்மிடம் உண்மையான பக்தியிருந்தால், மகன் உண்டாவான்" என்பான். இப்படி மோசடித் தக்கர் பலர் உண்டு. நல்லறிவாளரே இவர்கள் மோசத்தைக் கண்டு பிடிக்க முடியும். மற்றவர் முடியாது. கல்வியே மனிதருக்குக் கண்ணாகும். கல்வியின்றி அறிவில்லை. இளமையில் நல்ல கல்விப் பயிற்சி பெற்றவரே பிறகு வித்வான்களாவார்கள். தீய நட்புடையோர் மகா மூர்க்க, மடப்பாவிகளாவார். ஞானமே மனிதனுக்குச் சிறப்பு; அறிஞனே உணர்கிறுன்.

न वेत्ति यो यस्य गुणप्रकर्षं, स तस्य निन्दां सततं करोति ।
यथा किराती करिकुम्भजाता मुक्ताः परित्यज्य बिभर्ति गुञ्जाः ॥5॥

—(சாணக்கிய நீதி 11–12)

இது ஒரு கவி யியற்றிய சுலோகம்: காட்டு வாசிகளான பில்லர் கஜமுத்து மாலையை விட்டுக் கஞ்சா மாலையணிவர்; அது போல் ஒரு பொருளின் அருமை தெரியாதவர் அதை நிந்திப்பர். வித்வான், ஞானி, தார்மிகன், ஸத்புருஷன், ஸத்ஸங்கீயானவன் யோகி, புருஷார்த்தி, ஜிதேந்திரியன், சுசீலன் ஆகிறுனே, அவனே தர்மார்த்த காம மோக்ஷங்களை யடைந்து இம்மை மறுமையில் என்றும் இன்புறுகிறுன். இவ்வாறு ஆரியா வர்த்தி களின் மதங்களைப் பற்றிச் சுருக்கமாக எழுதினேம். இப்போது ஆரிய மன்னரின் வரலாற்றைக் கிடைத்த மட்டும் எழுதுகிறேம். நல்லோர் அறிக.

## ஆரிய மன்னர்

ஸ்ரீமான் யுதிஷ்டிர மஹாராஜா முதல் யசபால மஹாராஜா வரையிற் போந்த ஆரிய நாட்டின் ஆரிய மன்னர் இதிஹாஸத்தை இங்கே தருகிறேம். ஸ்ரீமான் மஹாராஜ ஸ்வாயம்புவ மனு முதல் யுதிஷ்டிரர் வரையிலுள்ள இதிஹாஸம் மஹாபாரதம் முதலிய நூல் களிற்காணும். ஹரிச்சந்திரிகா, மோஹனசந்திரிகா என்ற பிறைப் பத்திரிகைகள் ஸ்ரீ நாதத்வாரத்தினின்று வெளிவந்தன. அவை இராசபுதனம் உதயபுரி சமஸ்தானம் தலைநகரான சித்தூரி

லிருந்து வெளிவருவன. இவற்றிற் கண்டதையே இங்கே மொழி பெயர்த்துத் தருகிறோம். இதேமாதிரி நமது இதிகாசத்தையும் அறிவு நூல்களையும் இப்படித் தேடி ஆராய்ந்து விஷயங்களை வெளியிட்டால் தேசத்திற்குப் பெரிய நன்மையுண்டாகும். அந்த இதழாசிரியர் விக்ரம ஸூ 1782 (கி. பி. 1725)-ல் எழுதிய மிகப் பழைய கையெழுத்துப் பிரதியை ஒரு நண்பனிடமிருந்து வாங்கி, விக்ரம ஸூ 1939 (கி. பி. 1882) மார்க்கசிர சுக்லபக்ஷத்தின் 19, 20 எண்ணுள்ள இரண்டு இதழ்களில் சுருக்கமாக வெளியிட்டார்.

## ஆரியாவர்த்த தேசீய ராஜ வம்சாவளி

இந்திரப்பிரஸ்தத்தில் ஸ்ரீமனுமஹாராஜ யசபாலன் வரையில் ஆரியர் ஆண்டனர். அவருள் ஸ்ரீமத் யுதிஷ்டிர மஹாராஜா முதல் யசபாலர் வரையிற் போந்தவர் 124 மன்னர்; இவர்கள் 4157 ஆண்டு 9 மீ 14 நாட்கள் ஆண்டனர். அதன் விபரமாவது:

ஸ்ரீமத் யுதிஷ்டிர மஹாராஜா முதல் முப்பது மன்னர் 1770 ஆண்டு 11 மீ 10 நாட்கள் இந்திரப்ரஸ்தத்தில் ஆண்டனர். அதன் விபரமாவது:

| எண் | ஆரிய மன்னர் | ஸூ. | மீ. | நா. | எண் | ஆரிய மன்னர் | ஸூ. | மீ. | நா. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | யுதிஷ்டிரர் | 36 | 8 | 25 | 16 | சுசிரதன் | 42 | 11 | 2 |
| 2 | பரிக்ஷித்து | 60 | 0 | 0 | 17 | சூரசேனன் II | 58 | 10 | 8 |
| 3 | ஜனமேஜயன் | 84 | 7 | 23 | 18 | பர்வதசேனன் | 55 | 8 | 10 |
| 4 | அஸ்வமேதன் | 82 | 8 | 22 | 19 | மேதாவி | 52 | 10 | 10 |
| 5 | இராமா II | 88 | 2 | 8 | 20 | சோனசீரன் | 50 | 8 | 21 |
| 6 | சத்ரமல் | 81 | 11 | 27 | 21 | பீமதேவன் | 47 | 9 | 20 |
| 7 | சித்திரரதன் | 75 | 3 | 18 | 22 | ந்ருஹரிதேவன் | 45 | 11 | 23 |
| 8 | துஷ்டசைல்யன் | 75 | 10 | 24 | 23 | பூர்ணமலன் | 44 | 8 | 7 |
| 9 | உக்ரசேனன் | 78 | 7 | 21 | 24 | கரதவீ | 44 | 10 | 8 |
| 10 | சூரசேனன் | 78 | 7 | 21 | 25 | அலம்மிகன் | 50 | 11 | 8 |
| 11 | புவனபதி | 69 | 5 | 5 | 26 | உதயபாலன் | 38 | 9 | 0 |
| 12 | ரணஜிதன் | 65 | 10 | 4 | 27 | துவனமலன் | 40 | 10 | 26 |
| 13 | ரிக்ஷகன் | 64 | 7 | 4 | 28 | தமாதன் | 32 | 0 | 0 |
| 14 | சுகதேவன் | 62 | 0 | 24 | 29 | பீமபாலன் | 58 | 5 | 8 |
| 15 | நரஹரிதேவன் | 51 | 10 | 2 | 30 | க்ஷேமகன் | 48 | 11 | 21 |

ராஜா க்ஷேமகனை பிரதானி விஸ்ரவான் கொன்று அரசை ஆண்டான். இம் மரபைச் சேர்ந்த 14 சக்கரவர்த்திகள் இந்திர பிரஸ்தத்தில் 500 வருஷம் 3 மாசம் 17 நாள் ஆண்டார்கள்:

| ஆரிய மன்னர் | ஸ. | மீ. | நா. | ஆரிய மன்னர் | ஸ. | மீ. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 விஸ்ரவா | 17 | 3 | 29 | 8 கதிருதன் | 42 | 9 | 24 |
| 2 புரசேனி | 42 | 8 | 21 | 9 சஞ்ஜன் | 32 | 2 | 14 |
| 3 வீரசேனி | 52 | 10 | 7 | 10 அமரசூடன் | 27 | 3 | 16 |
| 4 அனங்கசாயி | 47 | 8 | 23 | 11 அமீபாலன் | 22 | 11 | 25 |
| 5 ஹரிஜித் | 35 | 9 | 17 | 12 தசரதன் | 25 | 4 | 12 |
| 6 பரமசேனி | 44 | 2 | 23 | 13 வீரசாலன் | 31 | 8 | 11 |
| 7 சுகபாதாளன் | 30 | 2 | 21 | 14 வீரசாலசேனன் | 47 | 0 | 14 |

வீரசாலசேனனை பிரதானி வீரமஹா கொன்று அரசைக் கைப்பற்றி ஆண்டான். அவன் வம்சத்தில் 16 சக்ரவர்த்திகள் 445 வருஷம் 5 மாதம் 3 நாட்கள் ஆண்டார்கள்:

| ஆரிய மன்னர் | ஸ. | மீ. | நா. | ஆரிய மன்னர் | ஸ. | மீ. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 வீரமஹா | 35 | 10 | 8 | 9 தேஜபாலன் | 28 | 11 | 10 |
| 2 அஜிதசிம்ஹன் | 27 | 7 | 19 | 10 மாணிக்சந்தன் | 37 | 7 | 21 |
| 3 சர்வதத்தன் | 28 | 3 | 10 | 11 காமசேனி | 42 | 5 | 10 |
| 4 புவனபதி | 15 | 4 | 10 | 12 சத்துரு மர்தனன் | 8 | 11 | 13 |
| 5 வீரசேனன் | 21 | 2 | 13 | 13 ஜீவன்லோகன் | 28 | 9 | 17 |
| 6 மஹீபாலன் | 40 | 8 | 7 | 14 ஹரிராவ் | 26 | 10 | 29 |
| 7 சத்துருசாலன் | 26 | 4 | 3 | 15 வீரசேனன் II | 35 | 2 | 20 |
| 8 சங்கராஜன் | 17 | 2 | 10 | 16 ஆதித்யகேது | 23 | 11 | 13 |

மகத தேச ஆதித்யகேது ராஜனை பிரயாகை தன்தரன் மன்னன் கொன்று தானே அரசாண்டான். அவன் மரபில் ஒன்பதரசர் 374 வருஷம் 11 மாதம் 26 நாள் ஆண்டனர்:

| ஆரிய மன்னர் | ஸ. | மீ. | நா. | ஆரிய மன்னர் | ஸ. | மீ. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 தன்தரன் | 42 | 7 | 24 | 6 ஜீவனராஜன் | 45 | 2 | 5 |
| 2 மகரிஷி | 41 | 2 | 29 | 7 ருத்ரசேனன் | 47 | 4 | 28 |
| 3 சனரச்சீ | 50 | 10 | 19 | 8 ஆரீலகன் | 52 | 10 | 8 |
| 4 மகாயுத்தன் | 30 | 3 | 8 | 9 ராஜபாலன் | 36 | 0 | 0 |
| 5 துரநாதன் | 28 | 5 | 25 | | | | |

சாமந்த மகாபாலன் ராஜ ராஜபாலனைக் கொன்று 14 வருஷம் ஆண்டான். அவன் ஆட்சி விளங்கவில்லை. அவந்தி (உஜ்ஜைனி) மன்னன் விக்கிரமாதித்யன் படையெடுத்து மகாபாலனைக் கொன்று, 93 ஆண்டு அரசாண்டான். அவனை சமுத்திரபாலயோகி (சாலிவாகன மந்திரி) கொன்று அரசாண்டான். இவன் விக்கிரமாத்திய ராஜன் காலத்தில் இருந்தான்.

இவன் மரபில் 16 மன்னர், 372 வருஷம் 4 மாதம் 27 நாள் ஆண்டனர்:

| ஆரிய மன்னர் | ஞூ. | மீ. | நா. | ஆரிய மன்னர் | ஞூ. | மீ. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 சமுத்ரபாலன் | 54 | 2 | 20 | 9 அம்ருதபாலன் | 36 | 10 | 13 |
| 2 சந்திரபாலன் | 36 | 5 | 4 | 10 பலிபாலன் | 12 | 5 | 27 |
| 3 சாஹாயபாலன் | 11 | 4 | 11 | 11 மகீபாலன் | 13 | 8 | 4 |
| 4 தேவபாலன் | 27 | 1 | 8 | 12 ஹரீபாலன் | 14 | 8 | 4 |
| 5 நரசிம்மபாலன் | 18 | 0 | 20 | 13 சீசபாலன்* | 11 | 10 | 13 |
| 6 சாமபாலன் | 27 | 1 | 17 | 14 மதனபாலன் | 17 | 10 | 19 |
| 7 ரகுபாலன் | 22 | 3 | 25 | 15 கர்மபாலன் | 16 | 2 | 2 |
| 8 கோவிந்தபாலன் | 27 | 1 | 17 | 16 விக்ரமபாலன் | 24 | 11 | 13 |

விக்கிரமபாலன் மேற்கிந்திய மன்னனுன மலுக்சந்த் போகராவின் மீது படையெடுத்து மைதானத்தில் போர் செய்தான். மலுக்சந்த் விக்ரமாதித்தியனைக் கொன்று இந்திரபிரஸ்தத்தில் அரசாண்டான். அவன் மரபின் 10 மன்னர்கள் 191 வருஷம் 1 மாதம் 16 நாள் ஆண்டனர்:

| ஆரிய மன்னர் | ஞூ. | மீ. | நா. | ஆரிய மன்னர் | ஞூ. | மீ. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 மலுக்சந்த் | 54 | 2 | 10 | 6 கல்யாணசந்த் | 10 | 5 | 4 |
| 2 விக்ரமசந்த் | 12 | 7 | 12 | 7 பீமசந்த் | 16 | 2 | 9 |
| 3 அமீன்சந்த் (மானக்சந்தி) | 10 | 0 | 5 | 8 லோவசந்தர் | 26 | 3 | 22 |
| | | | | 9 கோவிந்த சந்த் | 31 | 7 | 12 |
| 4 ராமசந்த் | 13 | 11 | 8 | 10 ராணி பத்மாவதி | 1 | 0 | 0 |
| 5 ஹரீசந்த் | 14 | 9 | 24 | | | | |

பத்மாவதி ராணி பிள்ளையில்லாமல் இறந்து போனுள். மந்திரிகள் கூடி ஹரிப்ரேம வைராகியை அரியணை ஏற்றினர். 50 வருஷம் 21 நாள் அவன் சந்ததியின் 4 மன்னர்கள் ஆண்டனர்:

| ஆரிய மன்னர் | ஞூ. | மீ. | நா. | ஆரிய மன்னர் | ஞூ. | மீ. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 ஹரிப்ரேம் | 7 | 5 | 16 | 3 கோபால ப்ரேம் | 15 | 7 | 28 |
| 2 கோவிந்த ப்ரேம் | 10 | 2 | 8 | 4 மஹாபாஹு | 6 | 8 | 29 |

மஹாபாஹு காட்டில் தவம் புரிந்தான். உடனே ஆதிசேனன் இந்திரப்பிரஸ்தத்தைக் கைப்பற்றி அரசாண்டான். இவன் மரபின் 12 மன்னர்கள் 151 வருஷம் 11 மாதம் 2 நாள் ஆண்டனர்:

* சில சரித்திரகாரர் இவ்வரசனை 'பீமபாலன்' என்றும் குறித்திருக்கிறுர்கள்.

| | ஆரிய மன்னர் | ஷூ. | மீ. | நா. | | ஆரிய மன்னர் | ஷூ. | மீ. | நா. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | ஆதீனசேனன் | 18 | 5 | 21 | 7 | கலியாண சேனன் | 4 | 8 | 21 |
| 2 | விலாவல சேனன் | 12 | 4 | 2 | 8 | ஹரி சேனன் | 12 | 0 | 25 |
| 3 | கேசவ சேனன் | 15 | 7 | 12 | 9 | க்ஷேம சேனன் | 8 | 11 | 15 |
| 4 | மாதவ சேனன் | 12 | 4 | 2 | 10 | நாராயண சேனன் | 2 | 2 | 29 |
| 5 | மயூரசேனன் | 20 | 11 | 27 | 11 | லக்ஷ்மீ சேனன் | 36 | 10 | 0 |
| 6 | பீமசேனன் | 5 | 10 | 9 | 12 | தாமோதரசேனன் | 11 | 5 | 19 |

ராஜா தாமோதரசேனன் தன்னுடைய பிரபுக்களை மிகவும் துன்புறுத்தினான். தீபசிம்ஹன் என்பவன் படை சேர்த்துப் பொருது அரசனைக் கொன்று ஆண்டான். இவன் மரபில் 6 மன்னர்கள் 107 வருஷம் 6 மாதம் 22 நாள் ஆண்டனர்: விவரம் பின்வருமாறு :—

| | ஆரிய மன்னர் | ஷூ. | மீ. | நா. | | ஆரிய மன்னர் | ஷூ. | மீ. | நா. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | தீபசிம்மஹன் | 17 | 1 | 264 | | நரசிம்ஹன் | 45 | 0 | 15 |
| 2 | ராஜசிம்ஹன் | 14 | 5 | 05 | | ஹரிசிம்ஹன் | 13 | 2 | 29 |
| 3 | ரணசிம்ஹன் | 9 | 8 | 116 | | ஜீவன் சிம்ஹன் | 8 | 0 | 1 |

ராஜா ஜீவன்சிம்ஹன் ஏதோ காரணம் பற்றி படையை வட திசை யனுப்பினான். இதைக் கேட்ட விராடராஜனான பிருதிவி ராஜசௌஹன் படையெடுத்து ஜீவன்சிங்கைச் சண்டையில் கொன்று இந்திரப்ரஸ்தத்தில் ஆண்டான். * இம் மரபில் 5 மன்னர்கள் 56 வருஷம் 20 நாள் ஆண்டனர்:

| | ஆரிய மன்னர் | ஷூ. | மீ. | நா. | | ஆரிய மன்னர் | ஷூ. | மீ. | நா. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | பிருதிவி ராஜன் | 12 | 2 | 19 | 4 | உதயபாலன் | 11 | 7 | 3 |
| 2 | அபயபாலன் | 14 | 5 | 17 | 5 | யசபாலன் | 36 | 4 | 27 |
| 3 | துர்ஜனபாலன் | 11 | 4 | 44 | | | | | |

† கஜினியிலிருந்து சுல்தான் சஹாபுதீன் கோரி படையெடுத்து, யசபாலராஜனை பிரயாகைக் கோட்டையிற் சிறை

* சுல்தான் சஹாபூதீன் கோரி பிரதிவி ராஜன்மேல் படையெடுத்துப் பலமுறை தோற்றோடியதாக சரித்திர நூலில் காண்கிறது. முடிவில் 1249 விக்கிரம ஆண்டில் உட்பகை வலுத்ததால் பிருதிவிராஜனைச் சஹாபுதீன் தோற்கடித்து அந்தனாக்கித் தன் தேசத்திற்குக் கொண்டு சென்றான். டில்லி (இந்திரப்ரஸ்த)யை கோரியே ஆண்டான். முஸல்மான் ஆட்சி 613 ஆண்டுகள் நடந்தது; 45 மன்னர்கள் ஆண்டனர்.

† யசபாலனைப் படையெடுத்தது கோரி யன்று; முகம்மது கஜினி என்பது சரித்திரவுண்மை.

யிட்டு (விக்ரம 1249=கி. பி. 1306) இந்திரப்ரஸ்தத்தை ஆண்டான். இவன் மரபில் 53 மன்னர், 754 வருஷம் 1 மாதம் 17 நாள் ஆட்சி புரிந்தனர். சரித்திர நூல்களில் இதன் விவரம் உள்ளதால் இங்கு அதன் விவரங்களை எழுதவில்லை.

இனி அடுத்த பகுதியில் நாம் பௌத்தஜைன மதங்களை ஆராய்வோம்.

ஸ்ரீமத் தயானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள் அருளிய
சத்தியார்த்த ப்ரகாசத்தில் ஆரியவர்த்த மத
கண்டன மண்டனம் பற்றிய
பதினோராம் அத்தியாயம்
முற்றிற்று.

## பனிரண்டாம் அத்தியாயம்

# முன்னுரை

வேதமே, மெய் இன்னது பொய் இன்னது, என்பதை விளக்கவல்ல நூல். ஆரியாவர்த்த மக்கள் வேதக் கல்வியை விட்டொழித்ததும் மடமை படர்ந்தது; நாட்டில் மத மதாந்த ரங்கள் எழுந்தன; அறிவிற்கு முரணான ஜைன மத போதனை நாட்டில் வேரூன்றியது. வால்மீகி ராமாயணத்திலும் மஹா பாரதத்திலும் ஜைனர் பேச்சேயில்லை. ஆனால் ஜைனர் நூல் களில் இராமாயண பாரதங்கள் போற்றும் இராமகிருஷ்ணாதி களின் முழுக் கதையும் விரிவாக வருகிறது. அதனால் இந்த இதிஹாஸங்களுக்குப் பிற்காலமே ஜைன மதம் கிளம்பியது என்பது தெளிவாகிறது. ஆதலால் ஜைனம் மிகப் பழைய மதமென்று ஜைனர் எழுதுவது சரியன்று. அது மிகப் பழைமை யானால் வால்மீகி முதலிய முனிவர் நூலில் அதன் விஷயம் அவசியம் இடம் பெற்றிருக்கும். இதிலிருந்து ஜைன நூல்கள் இந்த இதிஹாஸங்களுக்குப் பிந்தியன என்பது புலனாகும். ஜைன நூல்களைக் கற்றே வால்மீகி முதலியோர் நூலெழுதினர் என்று சொல்லுவோர் சிலருண்டு; அப்படி எழுதியிருந்தால் வால்மீகியில் ஜைனப் பேச்சே இல்லாததேன்? உங்கள் நூல் களில் இராமாயண பாரதக் கதைகள் காண்பதேன்? என்ன அப்பன் பிறக்கு முன் பிள்ளை பிறக்க முடியுமா? முடியாது; ஆதலால் ஜைன பௌத்த மதங்கள் சைவ சாக்தாதி மதங்களுக் குப் பின்னே எழுந்தவை என்க.

இந்தப் பனிரண்டாம் பகுதியில் ஜைன மத விஷயமாக நாம் எழுதியிருப்பதெல்லாம், அந்த மத நூல்களின் ஆதாரத் தைக்கொண்டே எழுதியிருக்கிறோம். ஜைனர் இதைக் கெடுத லாக நினைக்கக் கூடாது. ஏனெனில் சத்யாஸத்ய நிர்ணயத் திற்காகவே நான் இந்த மத ஆராய்ச்சியிற் புகுந்தேன்—யாரை யும் பகைத்துத் தீங்கு செய்யவன்று. நான் எழுதியதைப் படித்ததும் ஜைன – பௌத்தருக்கு மெய் – பொய்யாராய்ச்சியிற் புகுந்து ஆராயவும் எழுதவும் வாய்ப்புண்டாகும், போதமும் உண்டாகும். வாதி பிரதிவாதிகள் அன்புடன் ஒரு விஷயத்தை

அல்லது நூலைத் தீர ஆராய்ந்தாலே மெய் பொய் உறுதிப் படும்; இன்றேல் உறுதிப்படாது. வித்வான்கள் சத்யா ஸத்ய நிச்சயம் செய்யாவிட்டால் அவித்வான்கள் பேரிருளில் ஆழ்ந்து பெருந் துயரடைவார்கள். இதனால் சத்தியம் வெல்ல அசத்தியம் வீழவே சிநேகபாவத்தில் பேசுதலும் எழுதுதலும் மனித ஜாதியின் முதன்மையான கடமையாகும். இந்தக் கடமை தவறினால் மனிதர் உன்னதியடையவே முடியாது. பௌத்த ஜைன மதத்தர் தமது நூல்களைப் பிற மதத்தர் பார்ப்பது, படிப்பது, எழுதுவது கூடாதென்று மறைத்து வைத்துக்கொண்டிருக்கின்றனர். இந்தப் பகுதியைப் படிக்கும் பிற மதத்தருக்கு பௌத்த ஜைன சமயங்கள் அறிய நல்ல வாய்ப்புக் கிடைக்கும். நான் மிக சிரமப்பட்டேன். சிறப்பாக பம்பாய் ஆரிய ஸமாஜ மந்திரி, சேட் சேவக்லால் கிருஷ்ணதாஸ் முயற்சியால் எனக்கு ஜைன கிரந்தங்கள் சில கிடைத்தன. காசி ஜைன ப்ரபாகர அச்சுக்கூடத்தில் கிடைத்த நூல்களாலும் பம்பாயில் கிடைத்த பிரகரண ரத்னாகரம் என்ற நூலாலும் ஜைன சமய ஆராய்ச்சி எனக்கு எளிதானது. தமது மத நூல் களைத் தாங்களே பார்க்கலாம், பிறர் பார்க்கக்கூடாது என்னும் அசட்டுக் கொள்கையை எந்த அறிவாளியும் ஒப்பமாட்டான். பிற மதத்தர் பார்த்தால் தம் மத நூல்களில் உள்ள ஊழல்களைக் கண்டிப்பார்கள்; அதனால் தம் மதத்தினருக்குச் சிரத்தை குறைந்துபோகும் என்று சந்தேகித்தே பிறருக்குத் தமது நூல்களைக் காட்டுவதில்லை போலும்! இது எப்படியிருந்தாலும் பலருக்குத் தமது குற்றம் தெரிவதில்லை; பிறர் குற்றத்தைப் பார்க்க அவர்கள் தயாராயிருக்கிறார்கள். இது நியாயமன்று. தமது குற்றத்தைக் கண்டு திருத்திய பிறகே பிறர் குற்றத்தைத் திருத்தப் புகவேண்டும். இப்போது பௌத்த ஜைன மத விஷயத்தை நல்லோர் முன் வெளியிடுகிறேன்; கூர்ந்து ஆராய்க.

किमधिकलेखेन बुद्धिमद्वर्य्येषु ।

புத்திமான்களுக்கு இச்சிறு முன்னுரை போதும்.

# பனிரண்டாம் அத்தியாயம்

[சாருவாகம், பௌத்தம், ஜைனம் ஆகிய நாஸ்திக மதங்களின் கண்டன – மண்டன விளக்கம்.]

## சாருவாகம்

ஒரு காலத்தில் பிருஹஸ்பதி என்றவன் இருந்தான்; அவன் வேதம், கடவுள், யக்ஞாதி புண்ணிய கர்மங்களில் நம்பிக்கை யற்றிருந்தான்.

यावज्जीवं सुखं जीवेन्नास्ति मृत्योरगोचरः ।

भस्मीभूतस्य देहस्य पुनरागमनं कुतः ॥ (சர்வதர்சன. சங்., சா. த.)

யாரும் சாவைத் தப்ப முடியாது. ஆதலால் உயிர் உடலில் இருக்குமட்டும் சுகபோகங்களை அனுபவிப்போம். சிலர் அறவொழுக்கத்தைக் கைவிட்டால் மறு பிறப்பில் துன்பம் உண்டாகும் என்பர். அவர்களுக்குச் சாருவாகன் இவ்வாறு விடை தருகிறன்: "அட அப்பாவீ! செத்த பிறகு உடம்பு சாம்பலாகிறதே; சாம்பலாப் போனவன் மறுபடி வந்து உண்டு குடித்து வாழ்வை அனுபவிப்பதில்லையப்பா; மறு பிறப்பு எப்படி யுண்டாகும்? இருக்கு மட்டும் இன்பம் புசிக்கவேண்டும்; உலகை ஒட்டி வாழவேண்டும், பணம் சேர்க்கவேண்டும், இச்சையான போகங்களைச் சுகிக்கவேண்டும்—இக லோகத்திலேயே. பரலோகம் என்பது இல்லையப்பா. மண், நீர், தீ, காற்று ஆகிய நான்கின் சேர்க்கையால் ஆனது இவ்வுடம்பு. இவற்றின் சேர்க்கையால் இதில் அறிவு பிறக்கிறது. கட்குடியுடன் வெறியும் தோன்றுவது போலவே உடலுடன் உயிரும் வந்தது; உடலுடன் உயிரும் சாகிறது; பிறகு பாவ புண்ணிய பலன் யாருக்கு?

तच्चैतन्यविशिष्टदेह एव आत्मा देहातिरिक्त आत्मनि प्रमाणाभावात् ॥ (சர்வ தர். சங்., சா. த.)

இவ்வுடலில் நான்கு பூதச் சேர்க்கையால் ஜீவாத்மா தோன்றி உடலுடன் மறைகிறது. ஏனெனில் செத்த பிறகு சீவனைக் காணும். பிரத்யக்ஷப் பிரமாணமே பிரமாணம்; கண்டதே காட்சி. அனுமானுதிகளை நாம் ஒப்போம். அழகிய பெண்ணையணைவது இன்பந் தருகிறது—இதை நேரே அனுபவிக்கிறோம். இந்தக் கண்ணுக்கு மெய்யானதையே நாம் ஒப்புகிறோம்.—

**விடை:** மண்ணாதி பூதங்கள் ஜடமே; இவற்றின் சேர்க்கையால் சேதன ஜீவன் ஒருக்காலும் வராது. மாதா பிதாக்களின் சேர்க்கையால் தேகம் உண்டாவது போலவே உடலின் வடிவம் பரமன் செயலாலே உண்டாகிறது. வேறு வகையாக உண்டாகாது! ஆத்ம சேதனம் குடிவெறிபோல் ஆகி அழியு மென்பது அறியாமையாகும். ஏனெனில் குடிவெறியும் உள்ளே யுள்ள உணர்விற்கே யன்றி, உடலுக்கன்று. பொருள் மறைகிறதே யொழிய அழிவதில்லை ஜீவன் கட்புலனாவதில்லை; அதனால் அதை இல்லை என மறுக்க முடியாது. உடலெடுக்கும் போது ஜீவாத்மா தேகியாக விளங்குகிறது. ஜீவாத்மா பிரிந்ததும் உடல் உணர்வற்றுப் பிணமாகிறது. இது பிருஹதாரண்யத்திற் காண்கிறது:

न अहं मोहं ब्रवीमि [अविनाशी वा अरे] अनुच्छित्तिधर्मायमात्मेति ॥ (பிரஹ். 5. க 14)

யாக்ஞவல்கர் சொல்கிறார்: "ஹே மைத்ரேயீ, நான் மோகத்தாற் பேசவில்லை. ஆத்மா அழிவற்றது; அதன் சேர்க்கையால் உடல் இயங்குகிறது. ஜீவன் பிரிந்தால் சரீரம் அறிவிழந்த ஜடமாகிறது. இந்த ஜீவன் சூக்ஷ்மம், கட்புலனாகாதது; கண் வெளிப் பொருள்களைக் காணும், தன்னைக் காணாது. அதுபோல் புலன்களுக்கெல்லாம் உணர்வு தரும் ஜீவாத்மா புலன்களால் உணரப்படாது. கண் காண்பதும் ஜீவ சைதன்யத்தினாலே தான். காண்பவன் காண்பவனே, காண்பொருள் காண்பொருளே. ஒன்று மற்றொன்றாக முடியாது. ஆதாரமின்றி ஆதேயமில்லை; காரணமின்றிக் காரியமில்லை; கர்த்தா இன்றிக் கருமமில்லை, அவயவியின்றி அவயவமில்லை; பார்ப்பவனின்றிப் பார்வையில்லை; அதுபோல் பானை ஆடை என்று பார்க்கும் விழிக்குப் பின் ஓர் ஜீவன் உண்டு. ஓர் அழகியைச் சுகிப்பதே புருஷார்த்த பலனாகாது. ஏனெனில் அந்த இன்பம் ஒரு நொடியின்பமே. இதனால் துக்கமுண்டாகிறது; இது பேரின்பத் தடையாகிறது; இது நிரந்தர சுகமில்லை; ஆதலால் பெண் சுகமே வாழ்வின்பமாகாது. முத்தி யின்பமே மானிடத்திற் கின்பம். அதைத் தடுக்கும் எதுவும் மெய்யின்பமன்று. தேக சுகமே சுகமன்று; போக சுகமே சுகமன்று.

**சாருவாகன்:** துன்பங் கலந்ததென்று தேக சுகத்தை நீப்பவன் மூடன். தானியமுள்ளவன் அதில் அரிசியைக்

கொண்டு உமியை நீப்பது போலவே உலகிலும் இன்பத்தைக் கொண்டு துன்பத்தை நீக்கவேண்டும். கண் முன்னிருக்கும் உலகின்பத்தை விட்டுக் கண் காணுத சுவர்க்க சுகத்திற்காக வேதோக்தமான அக்னி ஹோத்ராதி கர்மோபாஸனையும் ஞான காண்ட அனுஷ்டானங்களும் செய்பவர் அறிவிலி மூடர். பரமே இல்லையே; இக சுகத்தை விட்டும் பரசுகம் தேடுவது மடமையே!

अग्निहोत्रं त्रयो वेदास्त्रिदण्डं भस्मगुण्ठनम् ।
बुद्धिपौरुषहीनानां जीविकेति बृहस्पतिः ॥

(சர்வதர்சன சங்க்ரஹ. சா. த.)

அக்னி ஹோத்ரம், மூவேதம், திரிதண்டம், நீறிடுதல் எல்லாம் புருஷார்த்த ஹீனரான மூடர் வயிறு பிழைக்கச் செய்வன என்கிருர் சாருவாக குருவான பிருஹஸ்பதி. முள் குத்திய போதுண்டாகும் வலி போன்றன நரகம். உலகில் பரமனுக்குச் சமமான அரசனுகிச் சுக போக சௌக்கியத்தில் வாழ்ந்து, உடலை நீப்பது மோட்ச சுகமாகும்.

விடை: விஷய சுகத்தையே புருஷார்த்த பலனுகவும் விஷய துக்கந் தவிர்த்தலே மானிடக் கடமையாகவும் கருதுதல் மடமையாகும். அக்னி ஹோத்ராதிகளால் காற்றும் மழையும் நீரும் சுத்தமாகின்றன; அதனுல் சுகமுண்டாகும்; அதனுல் தர்மார்த்த காம மோக்ஷங்களை அனுபவிக்கலாம். இதை யறியாமல் வேதத்தையும் வேதோக்த தருமங்களையும், கடவுளையும் நிந்திப்பது முழு மடமையாகும். தண்டம் விபூதி கண்டனம் சரியே. முள் வலி நரகமானல் மோக வெறியால் வரும் கொடிய நோய்களும் நரகமன்ருே? அரசன் குடிகளை நல்ல முறையில் காத்துத் திருவோங்கினல் சரி; அநியாயம் செய்யும் அரசனையும் பரமன் என்ருல் உம்மைப் போன்ற மூடர் இல்லை என்போம். உடலை விடுதலே மோட்சமாகுமா? நாய் கழுதைகளும் உடலை விடுகின்றன. அவை மோட்சம் பெறுமா? உமக்கும் நாய் கழுதைக்கும் வடிவிலேதான் வேற்றுமை போலும்!

(चारवाक)—अग्निरुष्णो जलं शीतं समस्पर्शस्तथाऽनिलः ।
केनेदं चित्रितं तस्मात्स्वभावात्तद् व्यवस्थितिः ॥ 1 ॥

न स्वर्गो नापवर्गो वा नैवात्मा पारलौकिकः ।
नैव वर्णाश्रमादीनां क्रियाश्च फलदायिकाः ॥ 2 ॥
पशुश्चेन्निहतः स्वर्गं ज्योतिष्टोमे गमिष्यति ।
स्वपिता यजमानेन तत्र कस्मान्न हिंस्यते ॥ 3 ॥
मृतानामपि जन्तूनां श्राद्धं चेत्तृप्तिकारणम् ।
गच्छतामिह जन्तूनां व्यर्थं पाथेयकल्पनम् ॥ 4 ॥
स्वर्गस्थिता यदा तृप्तिं गच्छेयुस्तत्र दानतः ।
प्रासादस्योपरिस्थानामत्र कस्मान्न दीयते ॥ 5 ॥
यावज्जीवेत्सुखं जीवेदृणं कृत्वा घृतं पिबेत् ।
भस्मीभूतस्य देहस्य पुनरागमनं कुतः ॥ 6 ॥
यदि गच्छेत्परं लोकं देहादेष विनिर्गतः ।
कस्माद्भूयो न चायाति बन्धुस्नेहसमाकुलः ॥ 7 ॥
ततश्च जीवनोपायो ब्राह्मणैर्विहितस्त्विह ।
मृतानां प्रेतकार्याणि न त्वन्यद्विद्यते क्वचित् ॥ 8 ॥
त्रयो वेदस्य कर्त्तारो भण्डधूर्त्तनिशाचराः ।
जर्फरीतुर्फरीत्यादि पण्डितानां वचः स्मृतम् ॥ 9 ॥
अश्वस्यात्र हि शिश्नन्तु पत्नीग्राह्यं प्रकीर्त्तितम् ।
भण्डैस्तद्वत्परं चैव ग्राह्यजातं प्रकीर्त्तितम् ॥ 10 ॥
मांसानां खादनं तद्वन्निशाचरसमीरितम् ॥ 11 ॥

(சர்வதர்சன சங்க்ரஹ சா. தர்)

**சாருவாகன்:** தீ சூடு; நீர் குளிர்; சூடும் குளிரும் இரண்டிற்கும் இயல்பு. வஸ்துக்களின் இயற் குணங்கள் பொருந்தி உலகப் பொருள்கள் உண்டாகின்றன; உலகைப் படைக்கும் இறைவன் இல்லை என்பது சாருவாக, பௌத்த ஜைனக் கொள்கையாம். (1)

பௌத்த ஜைன சமயி பரலோகத்தையும் ஜீவாத்மாவையும் ஒப்புகிறான்; சாருவாகன் ஒப்புவதில்லை—இப்படிச் சில வேறுபாடுகள் தவிர, இம்மூன்று மதங்களும் அடிப்படையில் ஒன்றேயாம்.

சுவர்க்கமு மில்லை, நரகமு மில்லை, ஆத்மா பரலோகம் போவதுமில்லை. அதற்கு வர்ணாச்ரம தர்ம பலனுமில்லை. (2)

யாகத்தில் கொன்ற பசு சுவர்க்க மடைவதானால் யாகத் தலைவன் தனது தந்தையைக் கொன்றும் சுவர்க்கமடைய லாமே. (3)

செத்தவர்களுக்கு சிரார்த்த தர்ப்பணங்களால் திருப்தி யுண்டாவதானால், யாத்திரை செல்பவர் அன்ன வஸ்திராதிகளை எடுத்துச் செல்ல வேண்டியதேயில்லையே. வீட்டிலிருக்கும் உற வினர் அன்னபானாதிகளை அவர் பெயரால் அர்ப்பணம் செய்து விட்டால் அந்தத் தேசாந்திரிகளுக்குப் போய்ச் சேருமா? சேரா விட்டால் எங்கோ வுள்ள சுவர்க்கத்திற்கு இவை போவ தெப்படியோ? (4)

செத்தவருக்குச் செய்யும் தான தர்மங்கள் சுவர்க்கவாசி களுக்குத் திருப்தியுண்டாகுமா? அப்படியானால் கீழே தானம் செய்தால் மாடியிலிருப்பவனுக்குச் சேருமா? (5)

ஆதலால் உள்ளமட்டும் சுகிக்கவேண்டும். வீட்டில் சாமான் கள் இல்லையானால் கடன் வாங்கியாவது சுகிக்கவும்; வாங்கின கடனைத் திருப்பித் தரும் கவலைவேண்டாம். ஏனெனில் ஆள் செத்தால் திரும்பி வரப் போவதில்லை; மறுபிறப்பில்லை; என்றால் யார் தருவது; யார் பெறுவது? (6)

செத்த ஜீவன் பரலோகம் போவதானால் பந்து மித்திர பாசத்தால் வீட்டிற்கே வரலாமே; ஏன் அப்படி வருவதில்லை. (7)

ஆதலால் இவையெல்லாம் வயிற்றுப் பிழைப்பிற்காகவே பார்ப்பனர் செய்த சூழ்ச்சி. பிரேதபிண்டம், தசாஸ்து, சிரார்த்தம் எல்லாம் வயிற்றுப் பிழைப்பு லீலையே. (8)

மூன்று வேத கர்த்தாக்கள் கோமாளிகள், கயவர், நிசாசரர். அதாவது ராக்ஷசர், ஜர்பரீ துப்பரீ போன்றவை பண்டிதரின் மூடச் சொற்கள். (9)

பாரும்! வேள்வித் தலைவன் மனைவி அசுவமேத யாகத்தில் குதிரையுடன் புணர்ச்சி கொள்க! அவளைச் சுற்றியிருப்போர் அவள் கன்னியைக் கேலிசெய்க என்றெல்லாம் கயவர் வேதத்தில் எழுதியிருக்கின்றனர். (10)

வேதத்தில் மாமிசம் உண்ண விதித்தவன் அரக்கனாயிருக்க வேண்டும். (11)

**ஆட்சேபம் :**—சைதன்யமான பரமன் கருதாமல் ஜடமான இயற்கைப் பொருள்கள் தாமே கூடி ஒன்றைப் படைக்க முடியாவாம். அப்படித் தாமே படைப்பதானுல் மற்ருெரு சூரியன், சந்திரன், உலகம், வானம் நட்சத்ராதிகள் உண்டாகததேன்? (1) சுகமே சுவர்க்கம், துக்கமே நரகம். ஜீவாத்மா இல்லாமல் சுகதுக்கங்களை யார் அனுபவிப்பது? இந்த உலகைப்போல் அந்த உலகிலும் ஜீவனே சுகதுக்கங்களை நுகர்கிறது. சத்தியம் பரோபகாரம் முதலிய நற்செயல்களும் வர்ணுசிரமிகளுக்குப் பயனற்றுப் போமா? போகமுடியாது. (2)

உயிரைக் கொன்று யாகம் செய்தல் வேதத்தில் எந்த இடத்திலும் காணவில்லை. சிராத்தமும் தர்ப்பணமும் பாகவதாதி புராணிகளின் கட்டுமானமாகும். ஆதலால் இதற்குக் கண்டனம் தேவையில்லை. (3, 4, 5)

உள்ளது அல்லதாகாது; ஜீவன் உள்ளது; அஃது அழியாது. உடல் சாம்பலாகும் ஜீவன் அப்படியாகாது; ஜீவன் மற்ருெருடலிற் பிறந்து கர்மபலனை அனுபவிக்கிறது. இகத்தில் கடன்வாங்கிச் சுகித்தவன் மறுபிறப்பில் துக்கம் அனுபவித்தே தீரவேண்டும்; பாபம் செய்தவன் பாபத்தின் பயனுன துக்கத்தை அடைந்தே தீருவான். (6)

உடல் பிரிந்த ஜீவனுக்குக் குடும்பம் முதலிய பூர்வ ஜன்ம நினைவிராது; ஆதலால் அது தன் குடும்பத்திற்கு வருதல் முடியாத காரியம். (7)

ஆம்! போலிப் பார்ப்பனர் தங்கள் பிழைப்பிற்காகவே இவை வேத சம்மதமில்லை? இவை சடங்குகளைப் புகுத்தினர். கண்டிக்கத் தக்கனவே. (8)

சாருவாகர் வேதாதி சத்திய சாஸ்திரங்களைப் பார்த்தால், கேட்டால், கற்றுநின்ருல், வேத ரிஷிகளைக் கோமாளிகள், தூர்த்தர், அரக்கர் என்று வையமாட்டார்கள். அவர்கள் வாயிலிருந்து இந்த வன்சொல் புறப்பட்டிராது. ஆனுல் மஹீதராதி பாஷ்யக்காரர் கோமாளிக் கொடியரே. இவர்களாலேதான் வேதத்திற்கு வசை வந்தது. சார்வாகர், ஆபாணகர் பௌத்த ஜைனுதிகள் நான்வேத ஸம்ஹிதைகளைக் கேட்டபதில்லை, படித்ததில்லை; எந்த வித்வானிடமும் பயின்றதில்லை—பரிதாபம்! இதனுல் புத்தி கெட்டு, மதி மயங்கி வேதத்தை உபயோகமற்ற

குப்பை என்றிகழ்கிருர்கள். இவர்கள் துஷ்டவாமாசாரிகளின் ஆதாரமற்ற பொய்விளக்கத்தைப் பார்த்து, வேத விரோதிகளாகி அவித்தையென்னும் ஆழக் கடலில் மூழ்கி யிருக்கிருர்கள். (9)

வேள்வித் தலைவன் மனைவி குதிரைக் குறியைக் கூடலும் அவள் மகளைக் கேலியாடலும் மனிதச் செயல் அன்று—வாம மார்க்கிகளின் தீச்செயலேயாம். மஹா பாபிகளான வாமமார்க்கி களைத் தவிர வேறு யாரே இப்படி பிருஷ்ட அசுத்த விபரீத வியாக்யானம் எழுதுவர்? சாருவாகாதிகள் ஆராயாமல் அறி வில்லாமல் வேத நிந்தை செய்தல் புத்தியில்லா மடமையாகும். அவர்களுக்கு கல்வி யில்லை; மெய்—பொய் தெரியவில்லை; மெய் யைப் போற்றிப் பொய்யைத் தூற்றும் ஆற்றலில்லை, பெருந் தன்மையில்லை. ஆராய்ச்சியில்லாமல் தங்கள் அற்ப புத்தியால் வேத நிந்தை செய்து திரிகிருர்கள். (10)

மாமிச முண்பதும் வாம மார்க்க வுரையின் அழிச்சாட்டமே; இதனுல் அதை அரக்கத்தன மென்பது சரிதான். ஆனுல் வேதத் தில் புலாலுண்ணலைப் போற்றும் ஒரு வரிகூட இல்லை. ஆதலால் இப்படிப்பட்ட பொய்யுரைகளின் பாபம் வேதத்தைக் கேட்டறி யாமல் மனம் போனபடி பொய் விளக்கி நிந்திக்கும் பாஷ்யக் காரரையே சாரும்; அதிற் சந்தேகமில்லை. வேதத்தை நிந்தித்த வரும், நிந்திப்பவரும் மடமை யிருட்டுக்குழியில் விழுந்து சுகமிழந்து கொடிய துக்கத்தையே விடாது அனுபவிப்பர். ஆதலால் மாந்தர் வேதானுகூலமாக வாழவேண்டும். (11)

வேதத்தின் பெயரால் வாமமார்க்கிகள் முழுப் புளுகுகட்டி, நன்ருக மது மாமிசங்களைப் புசித்துப் பிறமாதரைக் கூடிக் களித்துக் காமலீலை நடத்துகின்றனர்; இந்தப் பஞ்ச மகார சித்தாந்தத்திற்காக வேதத்தைத் திரித்துக் கூறுகின்றனர். வேதத்தை மாசுறுத்தும் இவர்கள் பேச்சைக் கேட்டே சாருவாக பௌத்த ஜைனரும் வேதநிந்தை செய்யத் தொடங்கினர்; வேத விருத்தமான நாஸ்திக மதத்தைப் பரப்பினர். சாருவாகாதிகள் வேதங்களின் மூலார்த்தத்தை யறிந்தால், பொய் விளக்கங்களை விலக்கிச் சத்திய வேதமதத்தைச் சார்ந்தே யிருப்பர். என்ன செய்வது—"विनाश काले विपरीतबुद्धिः" (சாண. நீ. அ. 16-ஸ்லோ. 5) விநாசகாலே விபரீத புத்தி: என்றபடி நஷ்ட ப்ருஷ்ட மடையும் காலத்தில் மனிதன் புத்தி தலைகீழாகிறது.

இப்போது சாருவாகாதிகளிடையேயுள்ள வேறுபாடுகளை எழுதுவோம் :—

(1) சாருவாகர் உடலுடன் ஜீவனும் தோன்றி அதனுடன் அழிவதாக நம்புகின்றனர்.

(2) மறுபிறப்பையும் பரலோகத்தையும் ஒப்பார்.

(3) பிரத்யக்ஷப் பிரமாணத்தையே ஏற்பர்; அனுமானாதிகளை ஏலார்.

சாருவாகன் என்றால் பேச்சுப் புலி, விதண்டாவாதி என்பதாம். பௌத்த ஜைனாதிகள் பிரத்யக்ஷாதி நான்கு பிரமாணம் : அனாதிஜீவன், புனர்ஜன்மம், பரலோகம், முக்தி ஆகியவற்றை நம்புவர். சாருவாகருக்கும் பௌத்த ஜைனருக்கும் வேறுபாடு இவ்வளவே. ஆனால் நாஸ்திகம், வேதநிந்தை தெய்வ நிந்தை, பரமதத் துவேஷம், ஆறுசெயல், உலகிற்குக் கர்த்தா இல்லை என்பது—ஆகியவற்றில் எல்லாரும் ஒன்றே. சாருவாகமதச் சுருக்கம் இதுவே.

## பௌத்தம்

இப்போது பௌத்த மதத்தைப் பற்றிச் சுருங்கச் சொல்லுவோம் :

कार्य्यकारणभावाद्वा स्वभावाद्वा नियामकात् ।
अविनाभावनियमो दर्शनान्तरदर्शनात् ॥

(சர்வதர்சன சங். பௌத்த தர்சனே)

காரணத்திலிருந்து காரியம், காரியத்தால் காரணம் தோன்றும்; மற்றதை அனுமானிக்க வேண்டும். இந்தக் காரிய காரணமின்றி—எந்த விவகாரமும் உலகில் நிறைவேறாது என்பது பௌத்த சம்மதம்.

பௌத்தம் அனுமானத்தை நம்புகிறது; இதிலேதான் அது சாருவாகத்தினின்று வேறுபடுகிறது. நான்கு வகையான பௌத்தமுண்டு. (1) மாத்யமிகம் (2) யோகசாரம் (3) ஸௌத்ராந்திகம் (4) வைபாஷிகம்

“बुद्ध्या निवर्त्तते स बौद्धः” । “புத்யாநிவர்த்ததே ஸ பௌத்த:”—புத்தியால் சித்தி பெறுவோன் பௌத்தன்; அதா

வது புத்திக்கு எட்டின விஷயத்தைக் கொண்டு, புத்திக்கு எட்டாததை ஒப்பாதவன் பௌத்தன்.

(1) இந்தப் பௌத்தருள் மாத்யமிகர் எல்லாம் சூனியம் என்பர். அதாவது இருப்பதெல்லாம் சூனியம், முதலிலும் சூனியம் முடிவிலும் சூனியம், நடுவில் இருப்பதும் இருப்பதாகத் தோன்றிச் சூனியமாகிறது. உதாரணமாக ஒரு பானை செய்வதற்கு முன் இல்லை; உடைந்த பின்னும் இல்லை; கட ஞானம் விளங்கும்போதே நமது கவனம் வேறொன்றை நினைத்த போதே மறைகிறது. ஆதலால் சூன்யத்வமே சிறந்தது.

(2) யோகாசாரம்: புறச் சூனியத்தைச் சொல்லும். அதாவது எல்லாப் பொருள்களும் உள்ளறிவால் விளக்கும், வெளியறிவால் அன்று. கடத்தின் ஞானம் ஆத்மாவில் உதிக்கிறது; உள்ளே 'இது கடம்' என்றறிவதே புறத்தேயுள்ள பொருளைக் கடம், பானை என்றுணர்கிறது. அகத் தறிவின்றிப் புறத்தறிவில்லை யென்பது யோகாசாரத்தின் சுருக்கமாகும்.

(3) ஸௌத்ராந்திகம்: புறப்பொருள் எதுவும் ஏகதேசம் பிரத்யக்ஷமானாலும் அனுமானத்தாலேதான் அறிய நிற்கும். அனுமானமே புறப்பொருளை அறிவிக்கிறது என்பது இம்மதம்.

(4) வைபாஷிகம்: பொருள் வெளித் தோற்றமே யொழிய உள்ளே யில்லை. இது நீலப்பானை என்றால் நீலப்பானை வடிவம் புறத்தோற்றமே என்கிறது வைபாஷிகம்.

மதம் நாலானாலும் பௌத்தாசாரியன் புத்தனே. சிஷ்யரின் புத்தி பேதத்தால் நான்கு மதக் கிளைகள் விரிந்தன. பொழுது பட்டதும் காமி பரஸ்திரீகமனத்தை நாடுகிறான். வித்துவான் சத்திய பாஷணம் முதலிய சிறந்த செயல்களை நாடுகிறான். சமயம் ஒன்றே; அவரவர் புத்திப்படி வினை வேறாகிறது.

மேற்சொன்ன நான்கு மதங்களில் மாத்யமிகம் அனைத்தையும் க்ஷண பங்குரம் என்கிறது. அதாவது கணத்திற்குக் கணம் புத்தி மாறுவதால் முன்னறிந்த வஸ்து அதே மாதிரி பின்னே இருப்பதில்லை. ஆதலால் அனைத்தும் க்ஷண பங்குரம் என்ன வேண்டும். யோகாசாரர் என்ன பெற்றாலும் மனம் மகிழ்வதில்லை; ஒன்றைப் பெற்றால் மற்றொன்றின் ஆசையுண்டாகிறது; ஆதலால் பிரவர்த்தியெல்லாம் துக்கம் என்கின்றனர். ஸௌத்ராந்திகர், லக்ஷணம் லக்ஷியத்தைச் சார்ந்துள்ளது; பசு உரு

வால் பசுவை, குதிரை வடிவால் குதிரையை அறிகிறோம். ஆதலால் எல்லாப் பொருள்களும் லக்ஷணத்தால் லக்ஷியமாகின்றன என்பர். வைபாஷிகர் எல்லாம் சூனியம் என்பர். மாத்யமிகரும் அவ்வாறே. இங்கே நான்கே பிரிவுகளைச் சொன்னோம். இன்னும் பல விவாதங்கள் பௌத்த சமயத்தில் உள்ளன.

விமரிசை: எல்லாம் சூனியமானால் சூனியத்தை அறிபவனும் சூனியனன்றே; அவன் சூனியனானால் சூனியன் சூனியத்தையறிய முடியாது. ஆதலால் சூனியம், சூனியத்தை அறிவது, ஆகிய இரண்டு பதார்த்தங்கள் சித்திக்கின்றன. யோகாசாரர் புறச் சூனியம் பார்ப்பர்; அப்படியானால் அவருள் ஒரு மலை யிருக்கவேண்டும். அதற்கு அவனுள்ளம் மலைக் கேற்ற இடமுள்ளதாயிருக்க வேண்டும்! அது முடியாத காரியம். மலை புறத்தில் உள்ளது. அதன் பாவனையே அகத்திலுள்ளது. ஸௌத்ராந்திகர் எதையும் பிரத்யக்ஷமாகக் கருதுவதில்லை. எல்லாம் அனுமானம் என்பர். அப்படியானால் இக்கொள்கை, அதைக் கொண்டவன், எல்லாம் அனுமானமே, ஊகமேயாக வேண்டும். "இது பானை" என்று குறிக்கவும் இயலாது. இது பானை என்றும் குறிக்க முடியாது. இது ஏக தேசம் பானை ஏறக்குறைய பானை என்றே சொல்லவேண்டும். அப்படியானால் ஏக தேசத்திற்குப் பானை என்று சொல்லமுடியாது. ஊகப் பானை நீர் மொள்ளுமா? கண்ணுக்கு மெய்யான பொருளே காரியத்திற்குதவும். 'பானையைக் கண்டேன்' என்றால், அதன் முழுப்பாகமும் கண்டேன் என்பதே பொருளாகும்.

வைபாஷிகர் கண்டதே காட்சி என்பதும் சரியன்று. அறிவும் அறிவோனும் சேர்ந்தே புறக் காட்சியும் புலனாகிறது. பிரத்யக்ஷமே போதாது; உருவான ஒன்றைக் கண் காண, உள்ளே மனம் வேலை செய்யவேண்டும்.

இப்போது நான்கு வகையான பௌத்த தத்துவங்களையும் பரிசீலிப்போம்.

(1) காணும் பொருளெல்லாம் க்ஷணிகமானால் இறந்த கால நிகழ்ச்சிகளை நாம் நினைக்கவே முடியாது. ஆனால் நாம் சென்ற காலம் கண்டு கேட்ட நிகழ்ச்சிகளை நினைக்கிறோம். ஆதலால் க்ஷணிக தத்துவம் செல்லாது.

(2) உலகில் எல்லாம் துன்பம்; இன்பமே இல்லை என்பதும் பொருந்தாது. பகலிருந்தாலே இரவின் தன்மை தெரியும்; இரவினால் பகலின் பெருமை புலனாகும்; இன்ப மிருந்தாலே துன்பத் தன்மை தெளிவாகும்.

(3) லக்ஷணம் லக்ஷ்யத்திலே யிருப்பது ஏகதேசமே. ஓர் உதாரணம் காண்போம். கண் எப்போதும் ஒளியைக் காண்கிறது. கண் பார்வை லக்ஷணம்; ஒளி லக்ஷியம். கண் ஒளியினின்று தனிப்பட்டது.

பானை நிறத்தையும் கண்ணையும் உதாரணம் காட்டலாம். கண் வேறு, காண்பது வேறு; மண்ணும் மணமும் சேர்ந்துள்ளன. இவ்வாறு பின்ன—அபின்ன, லக்ஷிய லக்ஷணங்களை அறிதல் வேண்டும். லக்ஷணம் லக்ஷியத்தில் எப்போதும் உறையு மென்பதில்லை.

(4) சூனியத்திற்குப் பதில் முன்பே சொன்னோம். சூனியத்தை அறிபவன் தனித்திருக்கிறான்.

सर्वस्य संसारस्य दुःखात्मकत्वं सर्वतीर्थंकरसंमतम् ॥

(சர்வ த. சங், பௌ. தர்.)

('வாழ்வெல்லாம் துன்பமயம்; இதுவே எல்லா தீர்த்தங்கரர் கொள்கை.) ஜைனர் போற்றும் தீர்த்தங்கரரைப் புத்தரும் போற்றுவர். ஆதலால் இரண்டு சமயங்களும் ஒன்றே. முன் சொன்ன நான்கு பாவனைகளால் வாஸனா நிவர்த்யடைந்து, வினைப்பற்று நீங்கி, சூன்ய ரூபமான நிர்வாணத்தைப் பெறுதலே முக்தி என்பர் பௌத்தர். அவர்கள் சிஷ்யர்களுக்கு யோகாசாரம் உபதேசிக்கின்றனர்; குருவாக்கே அவர்களுக்குப் பிரமாணம். புத்திவாஸனை நிறம்பிய எண்ணக் குழாம். அதில் முதன்மையாக ஐந்து ஸ்கந்தங்கள் உள்ளன. இவையாவன:

रूपविज्ञानवेदनासंज्ञासंस्कारसंज्ञकः ॥ (சர். வ. த. சங், பௌ. தர்.)

(1) ரூபஸ்கந்தம்: இந்திரியங்களால் உருவம் முதலிய விஷயங்களைப் பெறுவது.

(2) விக்ஞானஸ்கந்தம்: நினைப்பின் முனைப்பை யறிவது.

(3) வேதனாஸ்கந்தம்: ரூபவிக்ஞானங்களில் எழுந்த இன்ப துன்ப விவகார உணர்ச்சி.

(4) ஸம்க்ஞாஸ்கந்தம் : பசு முதலிய பெயருக்கும் உருவுக்கும் உள்ள உறவின் அறிகுறி.

(5) ஸம்ஸ்காரஸ்கந்தம் : இராகத்வேஷாதிகளான கிலேசங்களையும், பசி, தாகம், மதம், மோகம், அபிமானம், செருக்கு, தர்மாதர்மாதிகளான உபக்கிலேச விவகாரம். இவை வேதனு ஸ்கந்தத் தொடர்புடையன.

உலகம் துக்க மயம், துன்ப வீடு, உலகவாழ்வே துயரக் குழாம்; இதினின்று விடுபடுவதே முத்தி என்பர் சாருவாகர். புத்தரும் இதை அனுமானிப்பர். உலகம் அநித்தியம், ஜீவன் இல்லை என்பர் புத்தர். பௌத்த நூலில் இவ்வரிகள் காண்கின்றன :

देशना लोकनाथानां सत्त्वाशयवशानुगा: ।
भिद्यन्ते बहुधा लोके उपायैर्बहुभि: किल ॥ 1 ॥
गम्भीरोत्तानभेदेन क्वचिच्चोभयलक्षण ।
भिन्ना हि देशनाऽभिन्ना शून्यताऽद्वयलक्षणा ॥ 2 ॥
अर्थानुपार्ज्य बहुशो द्वादशायतनानि वै ।
परित: पूजनीयानि किमन्यैरिह पूजितै: ॥ 3 ॥
ज्ञानेन्द्रियाणि पञ्चैव तथा कर्मेन्द्रियाणि च ।
मनो बुद्धिरिति प्रोक्तं द्वादशायतनं बुधै: ॥ 4 ॥

(சர்வ தர். சங். பௌ. தா.)

(1) ஞானி, விரக்தன், ஜீவன்முக்தன், பதார்த்த ஸ்வரூபமறிந்தவன், பொருளியல்பைப் பகுத்து விளக்குவோன் தீர்த்தங்கர குரு ஆவான். புத்தர் முதலிய தீர்த்தங்கரரை வணங்குக.

(2) மறைந்தும் திறந்தும் உபதேசிக்கும் சிறந்த லக்ஷிய புருஷரான மாண்புமிக்க குருமார் பலரையும் மதித்துப் போற்றுக.

(3) பன்னிரண்டு ஆயதன பூஜைசெய்தலே முத்தியாகும். பூசைத் திரவியங்களை நிரம்பக்கொண்டு, 12 ஆயதனங்களை அமைத்துக் கருத்துடன் வழிபடுக. வேறு வழிபாட்டில் பயனில்லை.

(4) துவாதசாயதன பூசையாவது: மெய் வாய் கண் மூக்கு செவி ஆகிய ஐந்து ஞானேந்திரியங்கள்; வாக்கு, கை, கால், எருவாய், கருவாய் ஆகிய ஐந்து கர்மேந்திரியங்கள்—இவை பத்துடன், மனமும் புத்தியும் சேர்ந்து, பனிரண்டாகும்—இவற்றிற்கு இன்பமளிப்பது பன்னிரு தொழுகை.

ஆட்சேபம் :—உலகெல்லாம் துக்கரூபமானால் எவ்வுயிரும் இங்கே வாழவிரும்பாது. உயிர்கள் உலகவாழ்வை விரும்பி நுகர்வதைத் தினம் காண்கிறோம். உலகம் துன்பக் காடேயில்லை—இங்கே இன்பமும் துன்பமும் கலந்தே யிருக்கிறது. உலகம் துன்பக் காடே என்னும் பௌத்தர், இந்தத் துன்பவுலகில் வாழ உண்பானேன், பருகுவானேன், உடலைப் பேணுவானேன், நோய் வந்தால் மருந்து கொள்வானேன்? இதெல்லாம் செய்துகொண்டும், எல்லாம் துன்பம் என்றால் பொருந்தாது. ஜீவன் சுகத்தை விரும்புகிறது துக்கத்தை வெறுக்கிறது. உலகில் அறவினை, அறிவுப் பயிற்சி, நல்லோர் கூட்டம் முதலிய சிறந்த செயல்கள் சுகமளிக்கின்றன. பௌத்தரைத் தவிர வேறு எந்த அறிவாளியும் இச்செயல்களைத் துன்பம் என்னான். பஞ்ச ஸ்கந்தங்களும் நிறை குறைவானவையே. ஏனெனில் இப்படி ஸ்கந்த விசாரம் செய்தால் உலகில் ஒவ்வொன்றிற்கும் பல வேறுபாடுகள் தோன்றும். பௌத்தர்கள் தீர்த்தங்கரரையும், குருமாரையும், உபதேசத்தையும் மதிக்கின்றனர்; அனாதி நாதனும், குரோர் (குருவுக்கு) குருவுமான பரமாத்மனை ஏற்பதில்லையே; அவர்கள் தொழும் தீர்த்தங்கரர் அறிவு எங்கிருந்து வந்தது? அறிவுசுயமாக வருவதும் முடியாது. ஏனெனில் காரணமின்றிக் காரியமில்லையே! அப்படியும் என்றால் இன்று கல்வி, கேள்வி, படிப்பு அறிவாளிகளின் சேர்க்கையின்றி யாரும் ஞானியாக முடியவில்லையே, ஏன்? அப்படி ஆனதாகக் கதை கட்டினால் அது ஆதாரமற்ற, அறிவற்ற பேச்சாகும்; ஜன்னி கண்டவன் உளறலாகும். சூனியவாதம் நில்லாது; ஏனெனில் உள்ளது இல்லதாகாது. சூக்ஷ்மகாரண ரூபத்திலும் உள்ளது உள்ளதே; சூனியம் என்பது மதிமயக்கமே.

திரவியங்களைக் கொண்டு துவாதச ஆயதன பூஜை செய்தலே மோட்ச மென்றால், தசப் பிராணனையும், ஜீவாத்மாவையும் ஏன் வழிபடக் கூடாது? இந்திரியங்களையும் அந்தக்

கரணங்களையும் வழி படுதலே மோட்சமென்றால், பௌத்தருக்கும் விஷயவாதிகளுக்கும் வேறுபாடென்ன? இந்திரியங்களுக்கு அடிமைப் பட்டவனுக்கு முக்தி ஏது? அவனுக்கும் முத்திக்கும் சம்பந்த மென்ன? அவனைப் போல் மூடசிகாமணி உண்டா? அஞ்ஞானசிகரத்தில் அவனைக் காண்கிறோம், அவித்தையில் அவனுக் கிணையுண்டோ? வேதத்தையும் ஈசனையும் பகைத்ததின் பலன் இதுவே என்போம்! முதலில் பௌத்தர் உலகெல்லாம் துக்க ரூபம் என்கின்றனர்; பிறகு துவாதசாயதன பூஜை விதிக் கின்றனர். இவர்களுடைய துவாதசாயதன பூஜை உலகப் பொருள்களுக்கு அப்பாற்பட்டதா என்ன? இதனால் முத்தி கிடைக்காது; கண்ணை மூடிக்கொண்டு தேடுகிறவனுக்கு இரத் தினம் கிடைக்காது. வேதத்தையும் ஈசனையும் அவமதித்ததே இந்த மூடலீலையாக முடிந்தது. இப்போதும் இன்பம் வேண்டு மானால் வேதத்தையும் இறைவனையும் சார்ந்து, இவர்கள் பிறவிப் பயனைப் பெறலாம்.

விவேக விலாசம் என்ற நூல் பௌத்த சமயத்தை இவ்வாறு விளக்குகிறது :

बौद्धानां सुगतो देवो विश्वं च क्षणभंगुरम् ।
आर्य्यसत्त्वाख्यया तत्त्वचतुष्टयमिदं क्रमात् ॥ 1 ॥

दुःखमायतनं चैव ततः समुदयो मतः ।
मार्गश्चेत्यस्य च व्याख्या क्रमेण श्रूयतामतः ॥ 2 ॥

दुःखसंसारिणः स्कंधास्ते च पञ्च प्रकीर्त्तिताः ।
विज्ञानं वेदना संज्ञा संस्कारो रूपमेव च ॥ 3 ॥

पञ्चेन्द्रियाणि शब्दाद्या विषयाः पञ्च मानसम् ।
धर्मायतनमेतानि द्वादशायतनानि तु ॥ 4 ॥

रागादीनां गणोऽयः स्यात्समुदेति नृणां हृदि ।
आत्मात्मीयस्वभावाख्यः स स्यात्समुदयः पुनः ॥ 5 ॥

क्षणिकाः सर्वसंस्कारा इति या वासना स्थिरा ।
स मार्ग इति विज्ञेयः स च मोक्षोऽभिधीयते ॥ 6 ॥

प्रत्यक्षानुमानं च प्रमाणद्वितयं तथा ।
चतुःप्रस्थानिका बौद्धाः ख्याता वैभाषिकादयः ॥ 7 ॥

अर्थो ज्ञानान्वितो वैभाषिकेण बहु मन्यते ।
सौत्रान्तिकेन प्रत्यक्षग्राह्योऽर्थो न बहिर्मतः ॥ 8 ॥

आकारसहिता बुद्धिर्योगाचारस्य संमता ।
केवलां संविदं स्वस्थां मन्यन्ते मध्यमाः पुनः ॥ 9 ॥

रागादिज्ञानसन्तानवासनाच्छेदसम्भवा ।
चतुर्णामपि बौद्धानां मुक्तिरेषा प्रकीर्त्तिता ॥ 10 ॥

कृतिः कमण्डलुर्मौण्ड्यं चीरं पूर्वाह्णभोजनम् ।
संघो रक्ताम्बरत्वं च शिश्रिये बौद्धभिक्षुभिः ॥ 11 ॥

(1) பௌத்தர் இந்த நான்கு கோட்பாடுகளை ஏற்பவர்: சுகததேவனை புத்தனையே தொழுவது, உலகை க்ஷணபங்குரம் என்பது, எல்லா ஆண்களும் பெண்களும் நேரிய அறவழி நடத்தல், எல்லாரும் தத்துவநூல்களைக் கற்றல் ஆகிய நான்காம்.

(2) இவ்வுலகம் துக்காலயம் என்றறிந்த பிறகே ஒருவன் முத்திக்கு முன்னேறுவான். இதற்குப் படிகள் இவையே:

(3) ரூபம், விக்ஞானம், வேதனம், சமிக்ஞை, ஸம்ஸ்காரம் ஆகிய ஐந்து ஸ்கந்தங்களை மனிதன் அறிக. இவற்றாலே தான் உலகில் துன்பம் உண்டாகிறது.

(4) பஞ்ச ஞானேந்திரியங்கள் அவற்றிற் குரிய ஸப்தாதி விஷயங்கள், மனம் புத்தி ஆகிய அந்தக்கரணாதிகள் சேர்ந்து தர்மத்தின் பன்னிரண்டு இருக்கைகளாம் (துவாதசாயதனம்).

(5) மனித இதயத்தில் எழும் விருப்பு வெறுப்புகளே சமுதாயம். ஆத்மாவும் ஆத்ம சம்பந்தமான தன்மையும் ஆக்யா எனப்படும்; அதிலும் சமுதாய எழுச்சி யுண்டு.

(6) எல்லா ஸம்ஸ்காரங்களும் க்ஷணிகமே; வாஸனை நீங்கி சூனிய தத்துவம் சூனிய ரூப முதித்தலே மோட்சமாகும்.

(7) பிரத்யக்ஷம் அனுமானம் ஆகிய இரண்டு பிரமாணங்களே உண்டு; நான்கு மதபேதமுண்டு—வைபாஷிகம், ஸௌத்ராந்திகம், யோகசாரம், மத்யமம்.

(8) வைபாஷிகர் உணரும் பொருள்கள் புறவியல்பின என்பர்; ஸௌத்திராந்திகர் எல்லாம் அக இயல்பின, புறத்தில்

இல்லை என்பர். அக ஞானத்தில் உணராததைப் புத்தர் போன்ற சித்தர் ஏலார்.

(9) யோகசாரர் உருவான புத்தியை நம்புவர்; மாத்யமிகர் கேவலம் பொருள்களின் அறிவையே நம்புவர்.

(10) விருப்பு வெறுப்பற்ற வாசனையற்ற சமநிலையே முத்தி என்பதை நான்கு வகையினரும் ஏற்பர்.

(11) மான்தோல், கமண்டலம், முண்டனம், வற்கலம், நண்பகலுக்கு முன்புண்ணல், தனித்திராமை,-செவ்வுடையணிதல்— இவை புத்த பிக்ஷுக்களின் அறிகுறிகளாம்.

ஆட்சேபம் :—சுகதபுத்தரே தெய்வமானால் அவர் குரு யாரோ? உலகம் க்ஷணபங்கானால் நீண்டகாலத்திற்குப் பிறகு முன் பார்த்த பொருளை மீண்டும் பார்க்க முடியாதிருக்கவேண்டும், அதன் நினைவே இல்லாதிருக்கவேண்டும். உலகம் க்ஷண பங்கம் என்பதைப் புத்தர் நம்பினால் அவர் மோட்சமும் க்ஷணபங்கமாயிருக்க வேண்டும். ஞான யுக்தமானதே பொருள் என்றால், ஜடப் பொருளும் ஞானமுள்ளதாக வேண்டும். புலனாற்காண்பது எப்படிச் சூனியமாகும்? புறத்தே கண்ணெதிரே காண்பது பொய்யாகுமா? ஆகாசம் போன்ற புத்திக்கு உருவுண்டானால் தோன்றவேண்டுமே? இதயத்தில் ஞானமே பொருளானால் புறம் பொருள் இன்றால் அது பொய். பொருளின்றிக் காட்சியில்லை; அவற்றின் பாவனையே உள்ளத்தில் உள்ளது. விருப்பு வெறுப்பு வாசனை நீங்கலே முத்தியானால், சுழுத்தியில் முத்தி கிடைக்க வேண்டும். இது அறிவிற்குப் பொருத்த மில்லை; இதை ஒதுக்கித் தள்ளுவோம். இப்படிப்பட்ட ஒரு சில விஷயங்களையே ஆராய்ந்தோம்; இப்படிப் பல முரண்கள் பௌத்த மதத்தில் உண்டு. ஆராய்ச்சியுள்ள அறிஞர் இது எப்படிப்பட்ட மதம் என்பதை ஊகிக்கலாம். ஜைனரும் இக் கொள்கைகளை நம்புகிறார்கள்.

## ஜைனம்

பிரகரண ரத்நாகரம் முதற்பாகம் நய சக்ர ஸாரம்; அதில் இக் குறிப்புகள் காண்கின்றன.

புத்தர் சமயத்திற்கேற்ப நவீன முறையில் (1) ஆகாசம் (2) காலம், (3) ஜீவன், (4) புத்கலம் ஆகிய நான்கு திரவியங்களை

ஏற்பர். ஜைனர் (1) தர்மாஸ்திகாயம், (2) அதர்மாஸ்திகாயம், (3) ஆகாசாஸ்திகாயம், (4) புத்கலாஸ்திகாயம், (5) ஜீவாஸ்தி காயம், (6) காலம் ஆகிய ஆறு திரவியங்களையும் ஏற்பர். இவற்றுள் காலத்திற்கு அஸ்திகாயம் இல்லை. அது உபசாரத் திற்கே திரவியம், உண்மையில் இல்லை என்பர்.

இவற்றுள் தர்மாஸ்திகாயம் பரிணாம கதியில் ஜீவனிலும் புத்கலத்திலும் (சித்திலும் சடத்திலும்) உறைவது. இதுவே பரிணாம வேகத்தைத் தாங்குகிறது. இது எண்ணற்ற இடங் களிலும் உலகங்களிலும் கணக்கற்று மலிந்து கிடக்கிறது.

(1) அதர்மாஸ்திகாயம் ஜீவனிலும் புத்கலத்திலும் நிலைத்து மாறுதலை உண்டாக்குவது.

(2) ஆகாசம்: எங்கும் நிறைந்தது; எல்லாத் திரவியங் களுக்கும் ஆதாரமானது. எல்லாம் அதில் வந்திருந்து சென்று இயங்குகின்றன.

(3) புத்கலம்: காரண ரூபம், சூக்ஷ்மம், நித்தியம், ஏகரஸம். அது வளரும் தளரும். அதை சுவை நிறம் மணத்தால் அறியலாம்.

(4) ஜீவன் அறிவுணர்ச்சி நிரம்பியது, செய்வது, நுகர்வது, பல பல பரிணாமம் பெறுவது.

6) காலம்: மேற்சொன்ன பஞ்சாஸ்திகாயத்தின் பர, அபர, நூதன புராதனச் சின்ன ரூபமானது. அதில் தற்கால நிகழ்ச்சிகளெல்லாம் இயங்கும்.

ஆட்சேபம் :—ஆகாசம், காலம், ஜீவன், பரமாணு ஆகிய நான்கும் புதிது புதிதாக மாறும் என்று புத்தர் சொல்வது பிழையாகும்; ஏனெனில் இவை புதியன பழையன என்ப தில்லை; எப்போதும் உள்ளன. இவை அநாதி; அவிநாசி; உலக வாழ்விற்கே காரணமாகின்றன.

ஜைனரின் கொள்கைகூடச் சரியில்லை. ஏனெனில் தர்மமும் அதர்மமும் திரவியமன்று; இவை ஜீவ குணங்களாம். அவை ஜீவனின் வேறில்லை. ஆதலால் ஆகாசம், பரமாணு, ஜீவன், காலம் ஆகிய நான்கே போதும். ஏனெனில் பிருதிவி முதலிய பஞ்சதத்துவம், காலம், திசை, ஆத்மா, மனம் ஆகிய நவ பதார்த்தங்கள் வைசேஷிகத்திற் காண்கின்றன; இவை சரியே.

ஜீவ சைதன்யத்தை ஒப்பி ஈசனை மறுப்பது பௌத்த ஜைன மதங்களின் பக்ஷபாதமாகும்.

பௌத்த ஜைனர் ஸப்த பங்கி, ஸ்யாத்வாதம் பேசுவர்.

ஏழு பங்கிகள்

(1) ஸந் கட :—வஸ்து உண்டென்பது; உதாரணம் பானை உள்ளது.

(2) அஸந் கட :—வஸ்து இன்றென்பது: பானை இல்லை.

(3) ஸந் அஸந் கட :—இது உண்டு இல்லை என்பது: அது பானை ஆனால் ஆடையில்லை என்பது; முன்னதின் இது வேறானது.

(4) கடோகட் :—வஸ்து உண்டு; ஆனால் இரண்டாவதில்லை. பானை உண்டு; ஆனால் அது இரண்டாவது பானையாயில்லை. அதன் உண்மையும் அன்மையும் சொல்வது (அகட: பட:)

(5) இது அதுவன்று என்பது; இது பானை; ஆடையன்று (கட: அகட:) என்பது. பானையை ஆடை என்பது தகாது. பானை பானைதான்; ஆடை ஆடைதான். அது இதுவாகாது.

(6) உள்ளதை உள்ளபடி சொல்லல். இல்லாததைச் சொல்லா திருத்தல். பானையில்லாததைப் பானை யென்று சொல்லத் தகுதி யில்லை! பானை பானை என்பதே தகும்.

(7) ஸ்யாத் அஸ்தி: சொல்லப் பிரியம் ஆனால் இதுவன்று; மற்றொரு வஸ்துவை அது (பானை) என்பது பொருந்தாது. இது போலவே:

स्यादस्ति जीवोऽयं प्रथमो भङ्गः ॥ 1 ॥

स्यान्नास्ति जीवो द्वितीयो भङ्गः ॥ 2 ॥

स्यादवक्तव्यो जीवस्तृतीयो भङ्गः ॥ 3 ॥

स्यादस्ति नास्तिरूपो जीवश्चतुर्थो भङ्गः ॥ 4 ॥

स्यादस्ति अवक्तव्यो जीवः पञ्चमो भङ्गः ॥ 5 ॥

स्यान्नास्ति अवक्तव्यो जीवः षष्ठो भङ्गः ॥ 6 ॥

स्यादस्ति नास्ति अवक्तव्यो जीवः इति सप्तमो भङ्गः ॥7॥

இதன் விளக்கமாவது :

(1) ஸ்யாத் அஸ்தி : ஜீவன் உள்ளது ; ஆனால் பிணத்தில் இல்லை. (2) ஸ்யாத் நாஸ்தி : ஜீவன் பிணத்தில் இல்லை என்பது. (3) ஸ்யாத் அவக்தவ்யா: ஜீவன் உண்டு ; இன்னதென்று சொல்ல முடியாது. (4) ஸ்யாத் அஸ்தி நாஸ்தி—உடலெடுத்த ஜீவன் விளக்கமுள்ளது ; உடல் பிரிந்த ஜீவன் விளக்கமில்லாதது என்பது. (5) ஸ்யாத் அஸ்தி அவக்தவ்ய: ஜீவன் உள்ளது, உரை கடந்தது. (6) ஸ்யாத் நாஸ்தி அவக்தவ்ய: ஜீவன் புலன்களுக்கு அகோசரமானது ; கட்புலனாகாதது. (7) ஸ்யாத் அஸ்தி நாஸ்தி அவக்தவ்ய: ஜீவன் உள்ளது ; ஊகிக்கலாம் ; ஜீவன் புலனாகாததால் இல்லை. ஜீவன் ஒரேமாதிரி உள்ளது. ஆனால் ஒவ்வொரு நிமிஷமும் பரிணமப்படுகிறது. அதை உண்டு இல்லை, இல்லை உண்டு என்ன முடியாது. இதுவே ஸப்த பங்கி.

இதிலும் நித்யத்வ ஸப்த பங்கி, அநித்யத்வ ஸப்த பங்கி, ஸாமான்ய தர்மம், விசேஷ தர்ம குணம் என்றுண்டு. பரியாயத்தின் ஒவ்வொரு பொருளுக்கும் ஸப்த பங்கி நியாயமுண்டு. திரவியம், குணம், தர்மம், பரியாயங்கள் அனந்தம் ; இவற்றின் ஸப்த பங்கி நியாயமும் அனந்தம். இவ்வாறு பௌத்த ஜைன ஸப்த பங்கி ஸ்யாத் வாதம் கூறுகின்றது.

ஆட்சேபம் : இதெல்லாம் அன்யோன்ய பாவம், ஸாதர்மிய பாவம், வைதர்மிய பாவம் என்பதில் அடங்கும். இந்த எளிய முறையை விட்டுக் கடாமுடா வார்த்தைகளைத் தூக்கிப் போடுதல், அறியா மக்களை வலைப்பிடிக்கும் வித்தையே. பார் ! ஜீவன் ஜடமாக இல்லை ; ஜடம் ஜீவனாக இல்லை. ஜீவனும் உள்ளது ஜடமும் உள்ளது—உள்ளதில் இரண்டும், ஒன்று. இது ஸாதர்மம். ஆனால் ஜீவன் போல ஜடம் சைதன்யமில்லை ; இதனால் இரண்டும் ஒன்றில்லை ; இது வைதர்மம். ஜீவனில் சைதன்யம் உள்ளது. ஜடத்வம் இல்லை. இதே மாதிரி எளிதாக ஆராய்ந்தால் பொருள்களின் உண்மையும், ஏழ்நிலைமையும் புலனாகுமே. இதற்குச் சுற்றி வளைத்த கடமுடா வார்த்தைகள் எதற்கு ? இதில் பௌத்தரும் ஜைனரும் இதே நியாயத்தையுடையவரே—வேற்றுமை மிகச் சிறிது.

## இனி ஜைன மதம்பற்றியே பேசுவோம்

**ஜைனம் :**

चिदचिद् द्वे परे तत्त्वे विवेकस्तद्विवेचनम् ।
उपादेयमुपादेयं हेयं हेयं च कुर्वतः ॥ 1 ॥
हेयं हि कर्तृरागादि तत् कार्य्यमविवेकिनः ।
उपादेयं परं ज्योतिरुपयोगैकलक्षणम् ॥ 2 ॥

(சர்வ. த. சங். ஆர்ஹத தர்ச)

சித், அசித் என்ற இரண்டே பர தத்துவம் என்பர் ஜைனர். சித்து சேதனம் அறிவு. அசித்து ஜடம் அறிவற்றது. இரண்டையும் உள்ளபடி யறிவதே விவேகம்; கொள்ளத் தக்கதைக் கொண்டு தள்ளத் தக்கதைத் தள்ளுவோன் விவேகி, அறிவாளி. (1) விருப்பு வெறுப்பற்ற கடவுளே உலகைப் படைத்தான் என்னும் மூடக் கொள்கையை விடுவது அறிவு; பரம ஜோதிஸ்வரூபமான யோகத்தால் அடைவதே உத்தமம். (2)

இதன் கருத்தென்ன? ஜீவனைத் தவிர வேறு ஈஸ்வர சைதன்யத்தை இவர்கள் ஒப்பவில்லை. ஆதி யந்த மற்ற கடவுளை பௌத்தரும் ஜைனரும் மறுக்கின்றனர். "இதிகாசதிமிர நாசகர்" என்ற நூலில் ராஜா சிவப்பிரகாசர் எழுதுவதாவது: "பௌத்தம் ஜைனம் இரண்டும் ஒன்றே; பெயர்தான் இரண்டு. சில புத்தர் வாம மார்க்கிகளாகி மது மாமிசம் உண்கின்றனர். ஜைனர் அவர்களிடமிருந்து வேறுபட்டனர். மஹாவீர, கௌதம கணதரரை புத்தர் என்பர் பௌத்தர். ஜைனர் அவணகணதரர் இவரை ஜினவரர் என்பர். ஜைனப் பரம்பரையிற் போந்த ராஜா சிவப்பிரகாசர், இதிஹாஸ திமிர நாசகத்தின் மூன்றும் கண்டத்தில் "ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே சங்கராசாரிய சுவாமி இருந்தார்; அவருக்கு முன்பெல்லாம் பாரத வர்ஷம் முழுதுமே பௌத்த ஜைன மதங்களே பரவியிருந்தன" என்றெழுதியிருக்கிறார்.

அடிக் குறிப்பில் அவர் எழுதுகிறார் :—"பௌத்தம் என்றால் வேத-விரோத மதம்; கணதர மஹாவீரர் (கௌதம ஸ்வாமி) முதல் சங்கர ஸ்வாமி வரையில் அது பரவியிருந்தது; அசோகர் சம்பிரதி போன்ற மன்னர் அதைச் சார்ந்தனர். அதில் ஜைன மதமும் பிரிக்க முடியாமல் இணைந்திருந்தது. ஜினன் என்பதி

லிருந்து ஜைனன் என்பதும், புத்தன் என்பதிலிருந்து பௌத்தம் என்பதும் போந்தன. இரண்டும் ஒன்றே.'' அகராதியும் இரண்டிற்கும் ஒரே அர்த்தம் தருகிறது. ஜைனர் பௌத்தர் இருவரும் புத்தனை வணங்குவர். தீபவம்சம் போன்ற புராதன பௌத்த நூல்கள் ஸாக்யமுனி கௌத்தம புத்தரையும் மஹாவீரர் என்றே குறிக்கின்றன. அவர் காலத்தில் இரண்டும் ஒரே சமயமாயிருந்தது. ஐரோப்பியர் புத்த வணக்கம் செய்வோரை பௌத்தர் என்று தமது நூல்களில் எழுதினர். அதனாலேதான் நாமும் புத்த மதத்தினரை ஜைனர் என்னாது பௌத்தர் என்றோம்.

அமர கோஷத்திலும் இவ்வாறு எழுதப்பட்டுள்ளது :

सर्वज्ञः सुगतो बुद्धो धर्मराजस्तथागतः ।
समन्तभद्रो भगवान्मारजिल्लोकजिज्जिनः ॥ 1 ॥

षडभिज्ञो दशबलोऽद्वयवादी विनायकः ।
मुनीन्द्रः श्रीधनः शास्ता मुनिः शाक्यमुनिस्तु यः ॥ 2 ॥

स शाक्यसिंहः सर्वार्थः सिद्धः शौद्धोदनिश्च सः ।
गौतमश्चार्कबन्धुश्च मायादेवीसुतश्च सः ॥ 3 ॥

(அம. கோச. கா. 1 வ 1. ஸ்லோ. 8, 9, 10)

இப்போது பாருங்கள் புத்தர் ஜைனர் இரண்டும் ஒரே பெயரா அல்லவா ? அமரசிங்கர் கூட புத்த ஜைனர் ஒன்றென்பதில் பிழை படுவாரா ? விஷய மறியாத ஜைனரே வேண்டுமென்று பிரித்தெண்ணுவர். அறிவாளர் புத்தரே ஜைனர் பௌத்தமே ஜைனம் என்று ஐயமறச் சொல்வர். ஜைனர் ஜீவனே பரமன் ஆனன் என்பர்; கேவல முக்தியடைந்த தீர்த்தங்கரரைப் பரமேட்டி என்பர்; அனாதி பரமேசன் இல்லை; முற்றறிவன், வீரதராகன், அருகன், கேவலி, தீர்த்தங்கரன், ஜினன், இவை, நாத்திகர் தேவதையின் ஆறு நாமங்களாம்.

சந்திரசூரி ஆப்த நிச்சயாலங்காரத்தில் ஆதி தேவஸ்வரூபம் பற்றி எழுதுகிறார் :—

सर्वज्ञो वीतरागादिदोषस्त्रैलोक्यपूजितः ।
यथास्थितार्थवादी च देवोऽर्हन् परमेश्वरः ॥ 1 ॥

விருப்பு வெறுப்பற்றவன், முற்றறிஞன், மூவுலகும் வணங்கத் தக்கவன், மெய்யறிவை உள்ளபடி விளக்குவோன், அருகன் (அர்ஹன்) தேவன், அவனே பரமேசன்.

தௌதாதிதனும் இவ்வாறே குறிக்கிறன்:—

सर्वज्ञो दृश्यते तावन्नेदानीमस्मदादिभिः।
दृष्टो न चैकदेशोऽस्ति लिङ्गं वा योऽनुमापयेत् ॥ 2 ॥
न चागमविधिः कश्चिन्नित्यसर्वज्ञबोधकः।
न च तत्रार्थवादानां तात्पर्यमपि कल्पते ॥ 3 ॥
न चान्यार्थप्रधानैस्तैस्तदस्तित्व विधीयते।
न चानुवादितुं शक्यः पूर्वमन्यैरबोधितः ॥ 4 ॥

(சர்வ தர். சங்., ஆ. தா.)

(1) இப்போது நாம் முற்றறிவனை இறைவனைக் காண்பதில்லை. அநாதி பரமேசன் பிரத்யக்ஷமா யில்லை. பிரத்யக்ஷப் பிரமாண மின்றி அனுமானமும் இயலாது. ஏனெனில் ஏகதேசம் பிரத்யக்ஷமின்றி அனுமானிப்பது கடினம்.

(2) பிரத்யக்ஷ அனுமானப் பிரமாண மின்றி ஆகமம், அதாவது நித்திய அநாதி ஸர்வக்ஞ பரமேஸ்வரனை அறிவிக்கும் ஸப்தப்பிரமாணமும் இயலாது. இந்த மூன்றும் இயலாதபோது அர்த்தவாத தாத்பர்யமும், அதாவது புராண இதிகாசங்கள் போற்றும் பொருளும் பொருந்தாது.

(3) அன்யார்த்த பிரதானம் அதாவது பஹுவ்ரீஹி ஸமாஸம் போல, பரோக்ஷமான பரமேசனை விளக்கமுடியாது. ஈஸ்வர போதகரின் உபதேசங்களைக் கேட்டாலொழிய நமக்கு உண்மை விளங்காது.

ஆட்சேபம் :—இதைக் கண்டிப்போம்; அநாதி ஈஸ்வரனின்றி உமது அருகதேவனது மாதாபிதாக்களின் உடல்களை யார் செய்தது? எல்லா உறுப்புக்களும் நிறைவா யியங்கும் ஒருடலை உண்டாக்க ஒருவன் வேண்டுமே: அவன் எல்லாப் பகுதிகளையும் கூட்டி உருவாக்க வேண்டுமே. ஜடம் செயலற்றது; உருப்படாதது. முதலில் ராகத்வேஷாதிகளைக் கொண்டிருந்து பிறகு காரிய முக்தி பெற்றவன் சிற்றறிவன் அற்பன்—அவன் சர்வ வியாபி, சர்வக்ஞ பகவானுக முடியாது. அவனும் அவனது காரியமும் அநித்தியமே. அவ

னும் ஜீவன். ஜீவரூபம் ஏகதேச பரிமிதகுண கர்ம சுபாவ முள்ளது, குறைவுள்ளது, நிறைவற்றது, அளவுக்குட் பட்டது; அது எல்லா வித்தையும் அறியாது. எல்லாம் வல்லதாகாது. ஆதலால் உமது தீர்த்தங்கரர் ஒருக்காலும் பரமேச்வரனாக முடியாது. (1)

கண்முன் காண்பதைத்தான் நம்புவீரோ? கண்ணுக்கப் பால் உள்ள நுண் பொருளை நம்பமாட்டீரோ? நிறத்தைக் காது காணாது, ஓசையைக் கண் அறியாது. அதுபோல் அதிசூக்ஷ்ம மான இறைவனைப் புலன்கள் காணா. சுத்த அந்தக்கரணம், சுத்தாத்ம சேதனம், யோகசித்தி, ஞானப் பயிற்சிகளாலேதான் கடவுளை உணரலாம். படிப்பில்லாமல் கல்விப் பயிற்சி யில்லாமல் ஒருவன் வித்துவானாக முடியாது; அதுபோல் யோகத்தால் வரும் ஞான நிறைவில்லாமல் யாரும் கடவுளைக் காணமுடியாது. பூமியை அதன் உருவாலும் குணத்தாலும் அறிவதுபோல் கடவுள் படைத்த இந்த அற்புத உலகைக் கொண்டே அவனை அறியலாம். நாம் ஒரு பாபத்தைச் செய்யும் போது அச்சமும் வெட்கமும் திகைப்பும் நம்மைப் பற்றும். இவ்வுணர்ச்சிகளைத் தருவது அந்தர்யாமியான பரமாத்மனே. இவ்வாறு அனுமானத் தால் நாம் கடவுளை யறிகிறோம். (2)

பிரத்யக்ஷம் அனுமானம் இரண்டுடன் ஆகமப் பிரமாணமும் நித்திய, அனாதி, ஸர்வக்ஞனை ஈசனை உணர்த்த வல்லதாகும். இதற்குமேல் ஸப்தப்பிரமாணமும் உண்டு. பரமேசன் குணங் களைப் போற்றுதலும் சிறப்பே. ஏனெனில் நித்தியப் பொருளான இறைவன் குண கர்ம சுபாவமும் நித்தியமே. இறைவனைப் போற்றி செய்யத் தடையில்லை. (3)

கர்த்தா இன்றிக் கருமமில்லை; இம்மா நிலமும் இறைவனின்றி அமையாது. அதனால் கடவுளுண்மையைப் பற்றி மூடனுக்கும் சந்தேக முண்டாகாது. உபதேசகரிடமிருந்து கேட்டும் பரமாத்ம உண்மையை எளிதில் அறியலாம்.

இதனால் ஜைனர்கள் கண்முன் காணமுடியவில்லை என்று, ஈஸ்வர நிந்தை செய்வது அனுசிதமாகும்.

**கேள்வி :**

अनादेरागमस्यार्थो न च सर्वज्ञ आदिमान् ।
कृत्रिमेण त्वसत्येन स कथं प्रतिपाद्यते ॥ 1 ॥

अथ तद्वचनेनैव सर्वज्ञोऽन्यैः प्रतीयते ।
प्रकल्प्येत कथं सिद्धिरन्योऽन्याश्रययोस्तयोः ॥ 2 ॥
सर्वज्ञोक्ततया वाक्यं सत्यं तेन तदस्तित ।
कथं तदुभयं सिध्येत् सिद्धमूलान्तरादृते ॥ 3 ॥

இடையில் உண்டானது நித்திய நூலாகாது; அநித்திய அசத்தியநூல் நித்திய சத்தியக் கடவுளை எப்படி விளக்கும் (1) பரமன் வாக்கால் பரமனை அறியலாம். அனாதி ஈசனால் சாஸ்திர சித்தி, அனாதி சாஸ்திரத்தால் அனாதி ஈஸ்வர சித்தியடம் தொடர்ந்து கிடைக்கும். (2) முற்றறி முதல்வன் வாக்காதலால் வேதம் சத்தியம். சத்திய வேதத்தால் தெய்வசித்தி கிடைக் கிறது. வேதம் எப்படி ஈஸ்வர சித்தி நல்கும்? வேத சாத்திரத் திற்கும் பரமேச்வர சித்திக்கும் குற்றமற்ற மற்றொரு பிரமாணம் வேண்டும். (3)

விடை :—நாம் பரமேசன் குண கர்ம சுபாவம் அனாதி என்போம். அனாதி நித்திய வஸ்துவுக்கு அன்னோன்ய ஆசிரயம் (ஒன்றைச் சார்ந்து மற்றொன்றிருப்பது) கிடையாது. காரியத்திலிருந்து காரண ஞானமும், காரணத்திலிருந்து காரிய ஞானமும் உண்டாவது போலவே, காரியத்தில் காரண வியல்பும், காரணத்தில் காரியவியல்பும் நித்தியமாகும். பரமனையும் பரமனின் வித்தியாதி குணங்களையும் பரமன் மொழியான வேதம் போதிப்பதால், அது நித்தியம்; அது முடிவான ஆதாரமாகும்.

நீ தீர்த்தங்கரரைப் பரமேட்டி என்பது ஒருக்காலும் பொருந் தாது. பெற்றோரின்றித் தீர்த்தங்கரர் உடல் பெற்றிருக்க முடியாது. அவர்கள் எப்படி தவத்தாலும் ஞானத்தாலும் முத்தி பெறுவர்? சேர்க்கையால் உண்டானது ஆரம்பமுள்ளது; ஏனென்றால், வியோகமின்றி சம்யோகம் (சேர்க்கை) இல்லை. அது முழுமுதலாகாது; ஆதலால் நீ உலக நாதனை கடவுளை நம்பியே தீரவேண்டும். எவ்வளவு பெரிய சித்தனாலும் உடலமைப்பை முற்றிலும் அறியமுடியாது. சுழுப்தி நிலையில் அவன் தன்னை மறக்கிறான்; துக்கம் வரும்போது அறிவுகூடக் குறைகிறது. இப்படி மட்டுப்பட்ட ஒரே இடத்திலிருக்கும் ஜீவனை பரமேச்வரன் என்று நம்பமுடியாது. ஜைனர்களைத் தவிர வேறு யாரும் இதை நம்பமாட்டார்கள். ‘தீர்த்தங்கரர்

பெற்றோருக்குப் பிறந்தார்' என்றால், பெற்றோர் எந்தப் பெற்றோருக்குப் பிறந்தார்? அவர் மாதா பிதாவை யார் உண்டாக்கியது என்ற அனுவசிய கேள்வி யெல்லாம் பிறக்கும்.

## ஆஸ்திகமும் நாஸ்திகமும்

பெரிய பெரிய ஜைனிகளால் அங்கீகரிக்கப்பட்டு பம்பாயில் பிரசுரித்தப் பிரகரண ரத்நாகரம் இரண்டாம் பாகத்தில் காணும் ஆஸ்திக நாஸ்திக விவாதத்தை இங்கே தருவோம்.

**நாஸ்திகன்** :—ஈசன் இச்சையால் எதுவும் நடக்கவில்லை— எல்லாம் கருமத்தால் நிகழ்கிறது.

**ஆஸ்திகன்** :—எல்லாம் கருமத்தால் என்றால் கருமம் யாரால் நடக்கிறது? ஜீவனால் நடக்கிறதா? ஜீவன் காது முதலிய இந்திரியங்களால் கருமம் செய்கிறது; இவை எங்கிருந்து வந்தன? இவை அநாதி காலமாய் இயல்பாக உண்டாகின்றன என்றால், அநாதி காலம் இருப்பது இடையில் நிற்காது; அதனால் முக்தி கிடைக்காது. எல்லாம் முன்பே இருந்ததென்றால், முயற்சி யில்லாமலே நிவிருத்தியும் எய்த வேண்டுமே. கடவுள் கரும பலத்தைத் தராவிட்டால் தண்டனையில்லாத திருடன் போலப் பாபி பாபத்தின் பயனை துன்பத்தை அனுபவிக்காது பாபம் செய்து திரிவான். திருடனை அரச நீதி தண்டிக்கிறது. கடவுள் ஜீவனுக்குப் பாப புண்ணிய பலனைத் தருகிறார். இன்றேல் வினைக் குழப்பம் ஏற்படும்; ஒருவர் வினையை இன்னொருவர் நுகர நேரிடும்.

**நாஸ்திகன்** :—ஈசன் அகர்மி; கர்மம் செய்பவன் கர்ம பலனை யுண்ணவேண்டி வரும். ஆதலால் வினை யுதிர்ந்தவரே முத்தர் என நாம் கருதுகிறோம்; நீயும் அப்படியே நினை.

**ஆஸ்திகன்** :—ஈசன் தொழிலற்றவனன்று; அவனே தொழிலாளி. அவன் சேதனன், சக்திமான்; ஆதலால் கிரியையிலிருந்து பிரிந்திருக்க முடியாத தொழிலோன். நீ சிருஷ்டித்த தீர்த்தங்கரரே கடவுள் என்பதை எந்த அறிஞனும் ஒப்பமாட்டான். தீர்த்தங்கரர் முக்தி பெற்ற மானிடரே. சாதனத்தால் தெய்வ நிலைக்கு உயர்ந்தவனும் ஒரு நாள் சாவான்; அவனும் அநித்தியனே, அன்னியச் சார்புடைய

வனே. தெய்வ நிலை பெற்ற ஜீவன் எல்லாம் வல்ல கடவுளாக முடியாது. அது தன்னியல்பு மாருது. அது முன்னே ஜீவனுனது போல் எக்காலும் இருக்கும். கடவுள் எந்தக் காலமும் நித்திய சுயம்புவாயிருப்பார்...ஜீவன் பாப புண்ய சுக துக்க பலன்களை முக்காலும் அனுபவிக்கும். கடவுள் அப்படி யன்று. கடவுள் தொழிலாளியில்லை யென்ருல் உல கைப் படைத்திருக்க முடியாது. கர்மத்தை ஆரம்பமற்றது, அழிவது என்ருல் அதற்கும் ஆத்மாவுக்கும் தொடர் புண்டோ? சமவாய சம்பந்தமுண்டோ? சமவாய சம்பந்த மில்லாதது, உடன் தொடராதது பற்ருது; அது அநித்திய மாக நிலை நிற்காதழியும். கர்மக் கிரியை யில்லாத போனல் முத்திக் கிரியைக்கு அவசியமில்லையே! முக்த ஜீவன் செய லற்றதென்ருல் அதற்கு அறிவுண்டா, இல்லையா? உணர் வுண்டா இல்லையா? உண்டானல் அதற்கும் உட்செயல் உண்டே, மனச் செயலுண்டே. முத்த ஜீவனுக்கு அறி வில்லையானல் அது ஜடமாக மரம் கட்டைபோல் ஓரிடத்தில் விழுந்து கிடப்பதா? ஆமானல் உனது முத்தி வெறும் சொத்தை, சோம்பல், இருள், பந்தனை நிரம்பியதே.

**நாஸ்திகன்** :—கடவுள் எங்கும் நிறைந்தவர் அன்று. அப்படி யிருந்தால் எல்லாப் பொருள்களும் சேதனமாயிருக்குமே, அறிவுள்ளதாயிருக்குமே. பிறகு பிரம்ம க்ஷத்ரிய வைஸ்ய சூத்திரன் மேல் மத்திமம் கீழ் என்ற வித்தியாசம் எப்படி யிருக்கும்? எல்லாரிடமும் இறைவன் என்ருல் சிறியார் பெரியார் என்ற வேறுபாடே யிராதே.

**ஆஸ்திகன்** :—நிறைவதும் நிறைப்பும் ஒன்றன்று. நிறைப்பு ஏகதேசி; நிறைவது சர்வதேசி. உதாரணமாக, ஆகாசம் எங்கும் நிறைவு. உலகும் கட படாதிகளும் இடக் கட்டுப் பாடுடையன. ஆகாசமும் உலகும் ஒன்றன்று. அதுபோல் உலகும் கடவுளும் ஒன்றன்று. கடபடாதிகளில் ஆகாசம் உள்ளது. ஆனல் அவை ஆகாசமில்லை. பரமேஸ்வர சேதனம், கடவுளுணர்ச்சி அனைத்திடமும் உள்ளது. அனைத் தும் அதுவாகா. அறிஞன் அறிவிலி, அறவோன் அறமிலி அனைவரும் ஒன்ருகார்; அறிவு நற்குணம், வாய்மை, நன்னடைகளில் வேறுபாடுண்டு. அதுபோல் பிரம்ம க்ஷத்ரிய வைஸ்ய சூத்திர அந்தஜருள் வேறுபாடுண்டு.

இந்த வர்ண தர்மத்தை நான்காவது அத்தியாயத்தில் விளக்கியுள்ளோம்; காண்க.

**நாஸ்திகன்** :—படைப்பது கடவுளானால் தாய் தந்தைக்கு வேலையென்ன?

**ஆஸ்திகன்** :—ஈஸ்வர சிருஷ்டிக்கே ஈசன் கர்த்தா; ஜீவ சிருஷ்டிக்கு இல்லை. ஜீவனின் கடமையில் இறைவன் குறுக்கிடுவதில்லை. அதற்கு ஜீவனே கர்த்தா. உதாரணமாக, இறைவன் மரம், பழம், மூலிகை, அன்னபானாதிகளை உண்டாக்கியிருக்கிறான். இவற்றை மனிதனே தீட்டி, அரைத்து, சமைத்து, ரொட்டி தட்டி உண்ணவேண்டும். இவற்றையும் கடவுள் செய்ய முடியுமா? தன் கடமையைச் செய்யாவிட்டால் ஜீவன் ஜீவிக்க முடியாது. ஆதலால் ஆண் பெண் உடல்களை முதலிற் கடவுள் படைத்தார். வமிச விருத்தி இந்த ஆண் பெண் ஜீவன்கள் கடமை.

**நாஸ்திகன்** : பரமாத்மா சாசுவதன், அனாதி, சிதானந்தன், ஞானஸ்வரூபன் என்கிறார்களே; அப்படியானால் அவன் படைத்த உலகில் துக்கம் எப்படி வந்தது? சாதாரண மனிதரும் இன்பத்தை விட்டுத் துன்பத்தைக் கொள்ள மாட்டார்களே; ஈசுவரன் துன்பத்தைக் கொடுப்பானேன்?

**ஆஸ்திகன்** : பரமாத்மா உலகின் துன்பச் சுழலில் வீழ்வதில்லை; அவன் தனது பேரின்ப நிலையை நீப்பதில்லை. துன்பம் ஏகதேசிக்கே, ஸர்வதேசிக்கில்லை. அனாதி, சிதானந்த ஞானஸ்வரூபனான பரமாத்மாவைத் தவிர வேறு யாரே உலகைப் படைக்க முடியும்? ஜீவனுக்கு ஜகத்தைப் படைக்கும் திறமையில்லை. ஜடமான உலகிற்கும் சிருஷ்டி சக்தி கிடையாது. ஆதலால் இறைவனே பரமாணுக்களைச் சேர்த்து, உலகைப் படைக்கிறான்; இன்ப நிலையிலிருக்கிறான்; இது உறுதி; தாய் தந்தையரை நிமித்த காரணமாகக்கொண்டு அவனே குழந்தைகளை உண்டாக்கிக் காப்பாற்றுகிறான்.

**நாஸ்திகன்** : ஈஸ்வரன் முக்தி சுகத்தைவிட்டு உலகைப் படைத்து காத்து அழித்துத் தொல்லைப்படுவானேன்?

**ஆஸ்திகன்** : பரமாத்ம சதாமுக்தன்; உன் தீர்த்தங்கரர் போலே அவன் ஏகதேசியன்று; முத்திக்கு முன் பந்தமுற்

றவனன்று. பந்தப் பட்ட முத்தன் சநாதன பரமாத்ம ஞகான். பரமாத்மா அனந்த குண சின்மயன். சர்வ வல்லபன், சர்வ சக்திமான். அவன் இந்தச் சிற்றுலகை ஆக்கி அளித்து அழித்தல் எளிது; அதனுல் அவன் பந்தப் படுவதில்லை. பந்த மோக்ஷங்கள் விருப்பத்தால் வருவன; அற்றது பற்றெனில் உற்றது வீடு. பற்றேயில்லாத வனுக்கு முத்தி தேடத் தேவையில்லை. ஏகதேச ஜீவனே பந்தன்; அவனே முத்தி பெறவேண்டும். சர்வதேசி, சர்வவியாபி. அனந்த சக்திமானுன பரமேசன் பந்தமுத்த சக்கரத்திற் சுழலத் தேவையே யில்லை. அது உனது தீர்த்தங்கரருக்கே. பரமாத்மா நித்திய முக்தன்.

**நாஸ்திகன்:** கஞ்சாக் குடித்தால் தன்னுல் வெறியுண்டாகிறது; அதுபோல் ஜீவனும் தனது கர்ம பலனைத் தானே அனு பவிக்கிறது; இதற்குக் கடவுள் வேண்டுமா? கரும பலனில் கடவுளுக்கு வேலை யில்லையே.

**ஆஸ்திகன்:** திருடரும், கொள்ளைக்காரரும், துஷ்டரும், தாமே வந்து, தூக்குத் தண்டனை பெறுவதில்லை, சிறை செல்வ தில்லை. அரசன் அவர்களை வலுவில் பிடித்து நியாயம் விசாரித்துத் தண்டிக்கிருன். அதேமாதிரி ஜீவனையும் பிடித்து பரமாத்மா அதன் கர்மானுசாரமாக நியாயமான தண்டனை தருகிருன். ஏனெனில் எந்தச் ஜீவனும் தீச் செயலின் பலனைத் தானே அனுபவிக்க விரும்புவ தில்லை. நியாயந் தீர்க்க ஒரு பரமாத்மா அவசியம் வேண்டும்.

**நாஸ்திகன்:** உலகில் கடவுள் ஒன்றல்ல; முக்த ஜீவர் அனைத்தும் கடவுளாகிருர்கள்.

**ஆஸ்திகன்:** இது வீண் பேச்சு. முதலில் பந்தப்பட்டுப் பிறகு முக்தி பெற்றேர் மீண்டும் பந்தனைப் படலாம். ஏனெனில் ஜீவன் இயல்பாக முக்தனில்லை. உங்கள் 24 தீர்த்தங்கரரும் முதலில் பந்தத்தில் இருந்தே பிறகு முத்தி பெற்றனர்; அவர்கள் மீண்டும் பந்தப்படுவர். கடவுள் ஒன்றே. பல கடவுள் இருந்தால் ஜீவர்களைப்போல அவர்களும் ஒருவருக்கொருவர் சண்டையடித்துத் திரிவார்கள்.

**நாஸ்திகன்:** மூடரே, கடவுள் உலகைப் படைக்கவில்லை; உலகம் தன்னுல் உண்டானது.

ஆஸ்திகன்: இது ஜைனர் புரட்டு! கர்த்தா இன்றிக் கர்மம் உண்டா? கர்மம் இன்றிக் காரியம் உண்டா? கோதுமை வயலில் மனிதன் செய்யாமலே ரொட்டி விளைந்து ஜைனர் வயிற்றிற் போய் விழுமோ? பருத்தி, நூல், ஆடை, சட்டை, பாகை, வேட்டி, துப்பட்டா எல்லாம் ஆள் செய்யாமல் தானே வந்து விளையுமோ? இந்தச் சிறு பொருள்களுக்கே கர்த்தா தேவையாகும் போது இந்த வியனுலகும் அதிற் காணும் பல இயற்கைக் காட்சிகளும் கடவுளின்றி எப்படி யுண்டாகும்? கர்த்தா இல்லாமல் தானே உலகம் உண்டாகும் என்றால் கர்த்தா இல்லாமல் ரொட்டியும் வேட்டியும் உண்டாக்கிக் காட்டுமே! முடியாது. உன் ஆதாரமற்ற பேச்சை எந்த அறிவாளியும் ஒப்பமாட்டான்.

நாஸ்திகன்: கடவுள் விரக்தனா (பற்றற்றவனா), மோகியா (பற்றுள்ளவனா)? விரக்தனானால் உலகையாக்கும் தொல்லை அவனுக் கெதற்கு? அவன் மோகிதனானால் உலகைப் படைக்கும் திறமையிராதே!

ஆஸ்திகன்: பரமன் விரக்தன், மோகிதன் என்பதே பிசகு—அவன் சர்வ வியாபியாதலால் எதைப் பற்றி எதைத் துறந்து நிற்பான்? இறைவன் ஒப்புயர்வற்ற பெருமான். அவனுக்கு எதிலும் மோகமில்லை. விரக்தியும் மோகமும் ஜீவனுக்கு உண்டு.

நாஸ்திகன்: உலகை ஆக்கி உயிர்களுக்குக் கர்ம பலனைக் கொடுக்கும் கடவுள் உலகிற் பற்றுண்டு துன்ப மடைவானே!

ஆஸ்திகன்: மிக நன்றாயிருக்கிறது. கடவுள் அநேக வித கர்மங்களின் கர்த்தா. பிராணிகளுக்கு வினைப்பலனைத் தருபவன், தார்மிகன், நியாயவான், வித்துவான். அவன் கருமத்திற் பிடிபடுவதில்லை. அவன் உலகில் பந்தமுற மாட்டான். பரமேசன் அனந்த சாமர்த்தியன்; அவர் எப்படி உலகிற் சிக்கி ஏன் துக்கியாவன்? ஆம் நீ உன்னையும் உன் தீர்த்தங்கரரையும் போல் கடவுளையும் அக்ஞானத்தால் காண்கிறாய். அது உன் மடமை. உன் மடமை போக வேண்டுமென்றால் வேதாதி சத்திய சாஸ்திரங்களைச் சரண் புகு. நீ மதிமயக்கத்தால் தடுமாறுகிறாய்.

இனி, ஜைன ஸூத்ரங்களைக் கொண்டே ஜைனரின் உலக தத்துவத்தைச் சொல்லுகிறேன். சூத்திரங்களில் மூலார்த்தத்

தைச் சுருங்கச் சொல்லிப் பிறகு பொய் மெய்யை விளக்குகிறேன்.

सामिअणाइ अणन्ते चउगइ संसार घोरकान्तारे ।
मोहाइ कम्म गुरु ठिइ विवार्ग वसउ भमइ जीवरो ॥

(பிரகரண ரத்நாகர பாகம் 2.)

இது பிரகரண ரத்நாகரம் இரண்டாம் பாகத்தில், சம்யக்தவ பிரகாச பிரகரணத்தில் ஆறுவது சகத்தில் கௌதமருக்கும் மஹாவீரருக்கும் நடந்த பூரண சம்வாதச் சுருக்கம்.

இந்த உலகம் அநாதி, அனந்தம்; இது என்றும் உற்பத்தி யானதன்று; என்றும் அழிவதுமில்லை; ஜகத்தை யாரும் ஆக்கவில்லை.

மேற்சொன்ன ஆஸ்திக நாஸ்திக சம்வாதத்தில், 'ஏ மூடனே உலக கர்த்தா யாருமேயில்லை; அதை யாரும் எப்பொழுதும் ஆக்கவில்லை; என்றும் அழிவதுமில்லை.'

விமரிசை: சேர்க்கையால் உற்பத்தியாவது என்றும் அது அநாதி அனந்தமாகாது. ஆக்கமும் அழிவுமின்றி வினை யில்லை. உலகில் உண்டாகும் பொருளெல்லாம் சேர்க்கையால் ஆகியழிவதைக் காண்கிறோம். அப்படியானால் உலகம் ஆகி யழியத் தடையேன்? இதனால் உன் தீர்த்தங்கரருக்குச் சரி யான அறிவில்லை. அவர்களுக்கு நல்லறி விருந்திருந்தால், இப்படி அசம்பாவமாக எழுதமாட்டார். குருவுக்கேற்ற சிஷ்யனே நீ. உன் பேச்சைக் கேட்கிறவனுக்கு ஒருக்காலும் பதார்த்த ஞானம் உண்டாகாது. சேர்க்கையால் உண்டா கும் பொருளை கண்ணுக்கு நேரே காணும்போது அதன் உற்பத்தி, விநாசம் வருவதை ஏன் மறுக்கிறாய்? ஜைன மதக் குருக்களும் போதகரும் பூகோள ககோள சாஸ்திரம் அறியார் என்பது தெளிவாகிறது. இப்போதும் அவர் களுக்கும் அந்த அறிவுகிடையாது. இன்றேல் கீழ்கண்ட நம்பத்தகாத விஷயங்களை எப்படிச் சொல்லுவார்கள்? மண்ணும் ஜீவசரீரம் என்பர் ஜைனர்; உடம்பும் நீரால் ஆகும் என்றும் நம்புகின்றனர். இதை யாரும் நம்ப முடியாது.

இன்னும் பார்; இவர்கள் பொய் மூட்டையை. இவர்கள் தீர்த்தங்கரரை முற்றறிவன் பரமேட்டி என்பர். இது அவர்கள்

பொய்க்கு அத்தாட்சி. இவ்வாறு ரத்னஸார பாகத்தில் உள்ளது. (இந்த நூலை ஜைனர் மதிக்கின்றனர். இது 1879ஆம் ஆண்டு ஏப்ரல் 28வ நானக்சந்து ஜைனியால் காசியில் ஜைனப் பிரபாகர அச்சகத்தில் வெளியிடப் பெற்றது. அதன் 145ஆம் பக்கத்தில் இவ்வாறு கால விளக்கம் காண்கிறது.

சமயம் என்றால் சூக்ஷ்மகாலம். எண்ணற்ற காலத்தை ஆவலி என்பர்; 16770216 ஆவலி ஒரு முகூர்த்தம்—அப்படி முப்பது முகூர்த்தம் ஒரு திவசம், நாள். அப்படி 15 திவசம் ஒரு பக்ஷம். 2 பக்ஷம் ஒரு மாசம். 12 மாசம் ஒரு வருஷம் ஆகும்.

அப்படி 70,00000 × 10,000000 × 56,000 × 10,000000 வருஷங்கள் ஒரு பூர்வம். அப்படி எண்ணற்ற பூர்வங்கள் சேர்ந்து ஒரு பல்யோபம காலமாகும்.

எண்ணற்றதாவது:—நாலு *கோசச் சதுரக் குழி நாலு கோச ஆழம் கிணறு வெட்டி, அதை ஜுகிலி மனிதன் மயிர்ச் சிம்புகளால் நிரப்பவேண்டும். அதாவது தற்கால மனிதனைவிட ஜுகுலி மனிதன் மயிர் 4096 மடங்கு நுட்பமானது. அதாவது ஜுகிலி மனிதரின் 4096 மயிர்களை ஒன்று சேர்த்தால் தற்கால மனிதரின் ஒரு மயிராகும். ஜுகிலி மனிதனின் ஒரு அங்குலம் மயிரை ஏழு தடவை எட்டெட்டுத் துண்டு செய்க; 20,97,152 துண்டாகும். இந்தத் துண்டுகளால் மேற்சொன்ன குழியை நிரப்ப வேண்டும். அதிலிருந்து நூறு வருஷத்திற்கொரு தரம் ஒரு துண்டு வீதம் எல்லாத் துண்டுகளையும் எடுத்து முடித்துக் கிணறு காலியானால் அதுவே அசங்கியாத காலம், எண்ணற்ற காலமாகும். அதினின்று ஒவ்வொரு துண்டையும் எண்ணற்ற துண்டுகளாக்கி அந்தத் துண்டுகளால் அக்கிணற்றை இறுக நிறப்பவேண்டும். அதன்மேல் ஒரு அரசன் படை சென்றாலும் அமுங்கக் கூடாது. அந்த மயிர்த்துண்டுகளினின்றும் நூறாண்டுகளுக்கு ஒரு துண்டு எடுத்து அந்தக் கிணறு காலியானால், அது ஒரு பூர்வமாகும். அப்படிக் கணக்கற்ற பூர்வம் ஒரு பல்யோபமம் ஆகும். இந்தப் பல்யோபம காலத்தைக் கிணற்றின் உதாரணத்தால் அறியலாம்.

10000000 × 100000000 பல்யோபம காலம் ஒரு சாகரோபம காலமாகும்.

---

* ஒரு மைல் $1\frac{3}{4}$ கோசம். இந்தியாவில் சில இடங்களில் கோசம் என்றால் 2 மைல்கள்.

10,000,000×100,000,000 சாகரோபமம் அதாவது உத்ஸர்ப்பிணி காலமாகும்.

ஒரு உத்ஸர்ப்பிணியும் அவஸர்பிணியும் கழிந்தால் ஒரு கால சக்கரமாகும். அனந்த காலசக்கரம் ஒரு புத்கல பராவந்த்தம் ஆகும். ஜன சித்தாந்தத்தில் நவ திருஷ்டாந்தங்களில் சொல்லப்பட்ட காலக் கணக்கைக் கடந்தது அனந்த காலமாகும். அப்படி அனந்த புத்கல காலம் ஜீவன் மயங்கித் திரிகிறது.

கவனியுங்கள்! கணித வித்வான்களே! ஜைன நூல்களிற் சொல்லும் காலக்கணக்கைக் கணிக்க உங்களால் முடியுமா? இதை மெய்யென்றே நம்ப முடியுமா? இவர்கள் தீர்த்தங்கரர் படித்த கணக்கின் அழகு இது! இப்படியானல் குரு சிஷ்யர்—இருவர் மடமைக்கும் எல்லையில்லை. இவர்கள் மடமை—இருளுக்கு அறிகுறியான இன்னும் சில குறிப்புகளை இங்கே தருகிறேன்.

ரிஷப தேவர் முதல் மஹா வீரர் வரையில் 24 தீர்த்தங்கரர் இருந்தனர். இரத்தினசார பாகம் 135-ம் பக்கம் இவர்கள் சொன்ன ஜைன சித்தாந்தம் உள்ளது. அதில் 148ஆம் பக்கத்தில் மண்ணும் கல்லும் மண்ணுயிர் (பிருதிவீ காயம்) ஆகும்; "இவற்றின் உடல் ஒரு விரற் பல கூறுகளில் ஒன்று அதாவது—மிக சூஷ்மமானது" எனச் சொல்லப்படுகிறது. அவற்றின் ஆயுள் 22,000 ஆண்டுகள். ஒரு செடியில் கணக்கற்ற ஜீவர் உண்டு. சாதாரணச் செடிக்கு இவ்வளவு; கந்த மூலங்கள்—அனந்த காயங்கள்; இவற்றின் ஆயுள் அனந்த முகூர்த்தம். முகூர்த்தம் என்றல் முன்னே சொன்ன ஜைன முகூர்த்தம் என்க. சாதாரண மரம் ஸ்பரிச அறிவொன்றே யுடையது, ஒரே ஜீவனுடையது. அதன் உடலளவு 4000 யோஜனை—புராணிகரின் யோஜனை நான்கு கோசம்; ஜைனிகள் யோஜனை 10,000 கோசம். ஈரறிவுயிர்கள் சரீரமும் முகமும் உடையன—சங்கு, பேன் முதலியன. இவற்றின் உடல் 48 கோசம்; இவற்றின் ஆயுள் 12 ஆண்டுகள். அவ்வளவு பெரிய உடலுக்கு இவ்வளவு சிறிய ஆயுள் எழுதியது எழுத்தாளன் பிழை. 48 கோசமுள்ள பேன் ஒருவேளை ஜைனர் தலையிலிருக்கலாம்; அதை அவர்களே பார்த்திருக்க வேண்டும்; வேறு யாரும் காண முடியாது. அவர்களுடைய தேள், முகட்டுப் பூச்சி, ஈ, கொசு எல்லாம் ஒரு யோஜனை நீளம்; அவற்றின் ஆயுள் ஆறு மாதம். எட்டு மைல் நீளமுள்ள தேளை ஜைனரே கண்டிருக்கலாம். எட்டு மைல் நீளமுள்ள தேளும் ஈயும் ஜைன

மதத்தில், ஜைனர் வீட்டிலே தான் உண்டு; உலகில் வேறு யாரும் காணமுடியாது. இவ்வளவு பெரிய தேள் ஜைனரைக் கொட்டினால் அவர் என்ன ஆவாரோ! மீன் போன்ற ஜல ஜந்துக்கள் 1000 யோஜனை உடல் கொண்டவை. ஒரு யோஜனை 10000 கோசம்; ஆதலால் ஒரு ஜல ஜந்து 10,000,000 கோசம் நீளம். அதன் ஆயுள் 10,000,000 பூர்வ வருஷம். ஜைனரைத் தவிர வேறு யாரும் இவ்வளவு பெரிய ஜந்துக்களைக் கண்டிருக்க முடியாது—யானை போன்ற விலங்குகள் 2 முதல் 9 கோசங்கள்; அவற்றின் ஆயுள் 84,000 ஆண்டுகள். ஜைனரே அவற்றைப் பார்த்திருக்கக் கூடும். அவர்களே அப்படி நம்பமுடியும்; எந்த அறிவாளியும் இந்தப் புரட்டுக்களை நம்பமுடியாது.

நீர்வாழ் விலங்குகள் 1000 யோஜனை அல்லது 10000000 கோசம் நீளம். அவற்றின் ஆயுள் ஒரு கோடி பூர்வ வருஷம். இவ்வளவு பெரிய விலங்குகளை ஜைனாசாரியர்களே கண்டிருக்க முடியும்—அடடா என்ன புரட்டு! இப்படியும் உண்டா...!!

இப்போது பூமி யளவைக் கேளுங்கள்! எல்லாம் ரத்ன ஸாரச் சரக்குகளே; பா. 1. பக்கம் 152:

இந்தக் கோணல் உலகில் எண்ணற்ற தீவுகளும் கணக்கற்ற கடல்களும் உள்ளன. எண்ணற்ற (அஸங்க்யாதம்) என்பதின் பொருள், $2\frac{1}{2}$ ஸாகரோபம காலத்தில் எத்தனை காலமாமுள்ளதோ அத்தனை தீவுகள். எல்லாத் தீவுகளுக்கும் நடுவே ஜம்பூ த்வீபம் உள்ளது. அதன் பரப்பளவு லக்ஷம் யோஜனை அல்லது நான்கு லக்ஷ சதுரக் கோசம். இந்தத் தீவைச் சுற்றி உப்புக் கடல் உள்ளது. அதன் அளவு 2 லக்ஷம் யோஜனை அல்லது 8 லக்ஷ கோசம். அதைச் சுற்றி தாதகீ கண்டம் என்னும் தீவுள்ளது—அது 4 லக்ஷம் யோஜனை, 16 லக்ஷ கோசச் சதுர மைல் உள்ளது. அதன் பின்னால் காலோ ததி (காலசமுத்திரம்) 8 லக்ஷம் யோஜனை அல்லது 32 லக்ஷம் கோசம் பரப்பள வுள்ளது. அதற்கப்பால் புஷ்கர, வர்த்தத் தீவுள்ளது. அதன் பிரமாணம் 16 லக்ஷ கோசமுள்ளது. அது பல பாகமாயுள்ளது. அதன் பாதியில் மனிதர் உள்ளனர். அதற்கப்பால் அளவற்ற கடல்களும் தீவுகளும் உள்ளன. அவற்றில் ஊர்வனவுள்ளன.

(ரத்ன சாகரம் பா. 1 பக்கம் 153) ஜம்புத் தீவில்—ஹிமவந்தம், ஐரண்டவந்தம், ஹரிவர்ஷம், ரம்யகம், தேவ குரு, உத்தர குரு ஆகிய ஆறு க்ஷேத்ரங்களுண்டு.

**விமரிசை :** பூகோள சாஸ்திரிகளே கேளுங்கள்! பூகோள அள வில் நீங்கள் பிசகா ஜைனர் பிசகா! ஜைனர் பிழையானால் அவர்களைத் திருந்தத் திருத்துங்கள்; அவர்கள் சரியானால் அறிந்து கொள்ளுங்கள்! சிறிது ஆராய்ந்தால் ஜைன எழுத்தாளரும் ஆசாரியரும், சிஷ்யரும் பூகோள ககோள கணித வித்தை சிறிதும் அறியாதவர் என்பது தெரியும். அவர்கள் படித்திருந்தால் இப்படி ஏன் முழுப் புளுகு புளுகு கிறார்கள்—எல்லாம் கப்ஸா! இப்படிப்பட்ட அறிவிலிகள், உலகம் ஆக்கப்பட்டதில்லை யென்று, இறைவனையும் ஒப்பா திருப்பது வியப்பில்லை. இதனால் ஜைனர், எவ்வளவு வித்து வானானாலும் பிறமதத்தருக்குத் தமது நூல்களைத் தருவ தில்லை. ஏனெனில் தீர்த்தங்கர் எழுதியதாகக் கருதும் பிரமாண நூல்களிலும் இத்தகைய மூடச் சரக்குகள் நிரம்பி யிருக்கின்றன. அதனால் அவற்றைப் பிறர் பார்க்க விடுவ தில்லை; கொடுத்தால் குட்டு வெளிப்பட்டுப்போகுமே! இவர் களைத் தவிர வேறெந்த அறிவாளியும் இந்தப் புரட்டுகளை மெய்யென்றும் நம்பமாட்டார். உலகம் அனாதி என்பதைச் சாதிக்கவே ஜைனர் இப்படிப் பொய்கட்டுகின்றனர். எல்லாம் முழுப்புளுகு! உலகைத் தொகுக்கும் இயற்கைத் திறன் (பிரகிருதி) அனாதியே; ஆனால் அதன் பரமாணுக்கள் ஜடம்; அவை தாமே ஒன்று சேர்ந்து இயங்கா. அவற்றை ஒன்றுகூட்டி இயக்க ஒருசேதன சக்தி வேண்டும். அது ஞான ஸ்வரூபமாயிருக்க வேண்டும். யோசித்துப் பார்! உலகம், ஞாயிறு, முதலிய எல்லாப் புவனங்களையும் முறை வகுத்து நடத்துவது ஞானசேதன பரமாத்மாவின் செயல். பல பொருட் சேர்க்கையான பருவுலகம் அனாதியாக முடியாது. காரிய ஜகத்து நித்தியமானால் காரணமிராது; அதுவே காரிய காரணமாய்விடும், தானே காரியமும் காரணமும் ஆனால் அன்யோன்ய, ஆத்மாச்ரய தோஷ முண்டாகும்; தன் தோளில் தானே நிற்க முடியாது; தானே தந்தையும் தனயனுமாக முடியாது. இப்படிச் சிந்திக்கும்போது உலகை படைத்தவன் ஒருவன் உண்டென்பதே உறுதியாகும்.

**வினா :** உலகைப் படைத்தது கடவுளானால், கடவுளைப் படைத்தது எது?

**விடை :** கர்த்தாவுக்குக் கர்த்தா இல்லை; காரணத்திற்குக் காரண மில்லை. ஆதிகர்த்தாவும் ஆதிகாரணமும் தன்னிகரற்று

விளங்குவதனுலேதான் உலகம் தோன்றுகிறது. ஆதி சம் யோக வியோக காரணமானமூலப் பொருளுக்கு மூலமில்லை. இதன் விளக்கம் எட்டாம் அத்தியாயத்தில் (படைப்பின் விளக்கம்) காணலாம். கேவலம் ஸ்தூல விஷயங்களையே அறியாத இந்த ஜைனர்களுக்குப் பரம சூக்ஷ்மமான சிருஷ்டி வித்யா போதம் எப்படி ஏற்படும்? ஆதலால் சிருஷ்டி திரவிய பரியாயம், குணதேச பரியாயம், பிரதிவஸ்து பரியாயம் எல்லாம் அனுதி அனந்தம் என்பதெல்லாம் பிரகரண ரத்னு கரத்தின் முதல் பாகத்தில் ஜைனர் எழுதியிருக்கிருர்கள்—இவை பொருந்தா. ஏனெனில் மட்டுப்பட்ட பொருள்களெல் லாம் இறுதியுடையன. அனந்தம் என்ருல் எண்ணிறந்தது என்ருலும் பொருந்தாது. ஒரு வேளை இது ஜீவபக்ஷம் பொருந்திருலும் பரமாத்மா முன்னே பொருந்தாது. ஏனெனில் உலகில் கணக்கற்ற பொருள்களும் உருக்களும் உள்ளன. மட்டுப்பட்ட சக்தியால் இவற்றை ஆக்க முடியாது. அளவுக்குட்பட்டது அளவற்றதாகுமா? அனந்தம் அந்தமாகுமா? இப்படி எத்தனையோ அபத்தக் களஞ்சியங்கள் எழுதப்பட்டுள்ளன.

## ஜீவா ஜீவ விசாரம்

இனி ஜீவ அஜீவ பதார்த்தங்கள் பற்றி ஜைனிகள் நம்பிக்கைகளை காண்போம்.

चेतनालक्षणो जीवः स्यादजीवस्तदन्यकः ।
सत्कर्मपुद्गलाः पुण्यं पापं तस्य विपर्ययः ॥

(சர்வ. த. ஸங்க்ர. ஹே. ஆர்ஹதர்ஷனே.)

இது ஜீனதத்தஸூரி வசனம். சேதனமுள்ளது ஜீவன்; அசேதனம் அஜீவன், ஜடம். நல்வினை யணுக்கள் புண்ணியம்; தீவினையணுக்கள் பாபம்.

விமரிசை : ஜீவ—ஜட லட்சணம் சரி; ஆனல் ஜடரூப புத்கலம் (அணு) பாப புண்ணியமுருது; ஏனெனில் பாப புண்ணியஞ் செய்யும் இயல்பே சேதனத்திற்கேயாம்; அசேதனத்திற் கில்லை. ஜீவன் அனுதி என்பது சரி; ஆனல் இந்த அல்ப ஜீவன் முத்தி நிலையில் முற்றறிவு பெறும் என்பது பொய். அற்ப ஜீவனுக்கு அற்பத் திறனே யிருக்கும். உலகம், உயிர்

உயிர்வினை, தளை எல்லாம் அனாதி என்பர். ஜைன தீர்த்தங் கரர் இவ்விதம் சொல்வது தப்பு. ஏனெனில் சேர்க்கை யுலகின் காரிய காரணம், காரியத் தொடர்ச்சி, ஜீவ கர்மம், பந்தம்—எல்லாம் அனாதியாயிருக்க முடியாது. அனாதி நித்திய வஸ்துக்களுக்கு அழிவில்லை. அழிவது நித்திய மில்லை. நித்தியத்திற்கு அழிவுண்டானால் ஜைனர் அனாதி என்பதெல்லாம் அழியவே வேண்டும். அனாதிக்கு நித்தியம் என்று பொருள் கொண்டால், கர்ம பந்தங்களும் நித்திய மாகும். சர்வ கர்ம க்ஷயமும் வேண்டும், கர்ம பந்தங்களும் நித்தியமாக வேண்டும் என்றால் எப்படி? சர்வகர்ம க்ஷயமே முக்திக்கு நிமித்தம் என்றால் அந்தமுத்தி நைமித்திக முத்தியே யாகும்; அது என்றும் நிலைத்திராது. கர்மம் கர்த்தாவைப் பற்றி நிற்குமாதலால் கர்மம் நலியாது தொடரும்; பிறகு உன் முக்தியும் உன் தீர்த்தங்கரர் முக்தியும் நித்தியமே யாகாது.

வினா :—உமி போன நெல்லும் வறுத்த நெல்லும் முளைக்காதது போலவே முக்த ஜீவன் ஜனன மரண சம்ஸாரத்திற்கு மீளாது அல்லவா?

விடை :—ஜீவ–கர்ம சம்பந்தம், உமி–நெல் சம்பந்தமன்று. இரண்டிற்கும் சமவாய சம்பந்தம்; அருந் தொடர்பு. அனாதி காலந் தொட்டு ஜீவன், கருமம், கர்த்தா சக்தி மூன்றிற்கும் சம்மந்தம் உண்டு; கர்ம சக்தியில்லா விட்டால் ஜீவன் கல்லைப் போல ஜடமாகும்; முத்தியை நுகரவும் முடியாது; அனாதி கால கர்மத்தை விட்டு முத்தி பெற்றும் பந்தத்தில் விழ நேரிடும்; ஏனெனில் வினை விடுதலையால் முக்தி வருவ தானால் நித்திய முக்தியினின்று வழுவியும் கர்மத்திற் புகுத லாம். சாதனத்தால் சித்தி யடைந்தது நித்திய முத்தி பெறாது. சாதனமின்றி முக்தி இயலுமானால் கரும மின்றி யும் பந்தனை வரலாமன்றோ? அழுக்கான துணியைத் துவைத்தாலும் மீண்டும் அழுக்கடைவது போலவே, விருப்பு வெறுப்பு மயக்குகளால் ஜீவன் கரும பலத்தைப் பெறுகிறது. நல்லறிவு, நற்காட்சி, நல்லொழுக்கத்தால் சுத்தமுற்ற போதும் அசுத்த காரணங்கள் அதை மாசுறுத்தும். ஆதலால் முக்த ஜீவன் ஸம்ஸாரியாதலும், ஸம்ஸாரி முத்த னாதலும், மலவுயிர் நிமலமாதலும், நிமலம் மலமுறுதலும்

கூடும். ஆதலால் ஜீவனின் பந்த முக்தி பிரவாக ரூபமாக அனுதியே யொழிய, அனந்த நித்திய ரூபத்திலன்று.

வினு :—ஜீவன் என்றும் நிர்மலமாகாது; அது மல சகிதமாகவே யிருக்கும்.

விடை :—அப்படியானுல் ஜீவன் சுத்தமாகவே முடியாது. தூய வெள்ளாடையில் அழுக்குப்பட்டால் அதை வெளுத்தால் அழுக்குப் போகும்; ஆனுல் அதன் சுவபாவிக வெள்ளை நிறத்தை ஒழித்திட முடியாது. வெளுத்தது மறுபடியும் அழுக்கேறும்; அது போல முத்த ஜீவனும் மலமுறும்.

வினு :—ஜீவன் முன்வினைக் கேற்ற உடலை அடைகிறது; எனில் கடவுளை நம்புதல் வீணே யன்ருே?

விடை :—கடவுளின்றி ஜீவனே வினையுடல் எடுக்க முடிந்தால் அது ஒருக்காலும் துன்பப் பிறப்புருது. எப்போதும் நல்ல நல்ல பிறப்பெடுக்கவே விரும்பும். திருடன் தானே பிடி படான், சிறை செல்லான். அரசனே திருடனைப் பிடித்துச் சிறையிட்டுத் தண்டிக்கிருன். அவ்வாறே பரமனே ஜீவ னுக்குக் கர்மானுசாரமான தண்டனை விதிக்கிருன். அந்தப் பரமேசனை நீயும் நம்பவேண்டும்.

வினு :—குடியால் வெறியுண்டாவதைப்போல், கருமத்தால் பலன் உண்டாகிறது; இதற்குக் கடவுள் எதற்கு?

விடை :—தினக் குடியனுக்கு வெறி கம்மி; புதுக் குடியனுக்கு வெறி யதிகமே. அதுபோல் நிதம் பாபபுண்ணியங்களைச் சிறிது செய்பவனுக்கு அதிக பலனும், பெரிது செய்பவ னுக்குச் சிறிது பலனும் கிடைக்குமே?

வினு :—அவனவன் இயல்புக்குத் தக்க பலனன்ருே கிடைக்கும்?

விடை :—அவனவன் இயல்புக் கேற்ற பலன் கிடைப்பதானுல் வினைப் பற்றுமில்லை விடுதலையு மில்லை. அது சுத்த வஸ்தி-ரத்தில் அழுக்குப் பிடிப்பது போலும் நிமித்த மாத்திர மாகும்.

வினு :—தயிர் உண்டாவதற்குப் பாலில் புளிப்புச் சேரவேண்டும்; சேர்க்கையின்றி மாறுதலில்லை, பரிணுமம் இல்லை. ஜீவனும்

கர்மமும் சேர்ந்தாலே கர்ம பரிணமம் (வினைவிளைவு) ஏற்படும் அல்லவா ?

விடை :—பாலையும் புளிப்பையும் சேர்க்க மூன்றுவதாக ஒருவன் வேண்டுமே ; அது போலவே ஜீவனுக்கும் கரும பலனை ஊட்ட மூன்றுவதான ஈசன் ஒருவன் வேண்டும். ஏனெனில் ஜடபதார்த்தங்கள் தாமே சேராவாம். ஜீவன் சிற்றறிவினது; அது தானே தன் வினைப் பயனைப் புசிக்க முடியாது. ஆதலால் இறைவன் ஏற்படுத்திய நியமமில்லாமல் உலகில் வினைப் பயனுண்ணல் இயலாது.

வினு :—கர்ம முக்தி (வினை விடுதலை) யடைந்தவனே ஈசன் எனப்படுகிருனன்ருே ?

விடை :—அனுதி காலந்தொட்டு ஜீவனுடன் கர்மமும் தொடர்வதால், அது என்றும் கர்ம முக்தி யடையாது.

வினு :—கர்ம பந்தம் அனுதி அன்று.

விடை :—அப்படியானுல் ஜீவன் கர்மமே செய்ய முடியாத காலம் இருந்திருக்க வேண்டும். அப்போது கர்மத்தை யாரோ அதன் மேல் சுமத்தி யிருக்கவேண்டும். அப்படியானுல் முக்திமான்களுக்கும் கர்ம பந்தம் உண்டாக வேண்டும். கர்மத்திற்கும் கர்த்தாவிற்கும் உள்ள சம சம்பந்தம் மாருது. நாம் ஒன்பதாவது பகுதியில் எழுதி இருப்பதே சரி. ஆன்மா ஒரு நாளும் கடவுளுக்குச் சமமாகாது. அது எவ்வளவு அறிவும் ஆற்றலும் படைத்திருந்தாலும், அதன் அறிவாற்றல் மட்டுப்பட்டது. அது இறைவனுடைய முற்றறிவுக்கு இணையாகாது. யோக சித்திகளால் ஆத்மா அறிவை மிகவும் வளர்க்கக் கூடும். ஜைன அருகர்கள் தேக பரிணமத்தால் ஜீவ பரிணமமும் வளர்கிறது என்று நினைக்கிருர்கள். இது முழுத் தவறு. அப்படியானுல் ஒரு கொசுவின் ஆன்மா யானையிலும், யானையின் ஆன்மா கொசுவில் இருப்பதும் முடியாததாகும். ஜீவன் அதி நுட்பமானது. அது ஒரு பரமாணுவிலும் இருக்கக்கூடியது. ஆனுல் அதன் சக்தி, நாடி நரம்புகளின் கூட்டுறவால் வெளிப்படையாகிறது. அதனுல் அது உடலில் நடப்பதெல்லாம் அறிகிறது. நல்ல சேர்க்கையால் அது நன்மை யடைகிறது. கெட்ட சேர்க்கையால் கெடுகிறது.

ஜைனர்கள் தர்மத்தைப் பற்றி இப்படி நம்புகிறார்கள் :

मूल—रे जीव भवदुहाइं इक्कं चिय हरइ जिणमयं धम्मं ।
इयराणं पणमंतो सुहकय्ये मूढ मुसिओसि ॥

(ப்ரகரண ரத்னாகர. பா. 2, ஷஷ்டிசதக 61, சூத்ராங்க 3)

ஏ ஜீவா! ஜைனத் துறவிகளால் கூறப்பட்ட தர்மமே தர்மம். அதுவே ஜன்ம துக்க ஜனன மரண துயர்களினின்று உன்னை விடுவிக்கும். ஜைனாசாரியரே சரியான குருமார். அவர்களே தேவர்கள். ரிஷப தேவர் முதல் மஹா வீரர் வரையில் போந்த தீர்த்தங்கரர்களையே வணங்க வேண்டும். மற்றப்படி ஹரி ஹர பிரம்மாதிகளை வணங்கவே கூடாது. அவர்களை வணங்கினால் ஏமாற்றம் தான் மிச்சம். அதாவது நல்ல ஜைன சாதுக்களை பின்பற்றுவதே நலமாகும்; மற்றவர்களை பின்பற்றுவது இன்பமாகாது. ஜைன தர்மமே தர்மம். மற்றதெல்லாம் அதர்மம்.

விமரிசை : ஜைன தர்ம நூல் எவ்வளவு இழிவானதென்பதை இதனின்று வாசகர் அறிந்து கொள்ளலாம்.

मूल—अरिहं देवो सुगुरु सुद्ध धम्मं च पंच नवकारो ।
धन्नाणं कयच्छाणं निरन्तरं वसइ हिययम्मि ॥

(ப்ர. பா. 2, ஷஷ்டி. 61, சூத்ராங்க 1)

அரஹந்தனே, தேவ தேவன், பரிசுத்தமானவன். ஆற்றல் மிக்கவன். சாஸ்திரங்களை உபதேசிக்கத் தகுந்தவன். சுத்த அழுக்கற்ற தயா மூலன். ஜைனனே பரமேஷ்டி! முக்தி தருபவன் நித்திய சுதந்திரம், பாபமற்றவன். அவனே கருணையுள்ளவன்; அருளாளன். தயை, க்ஷமை, நல்லறிவு, நற்காட்சி, நன்னடத்தை இவையே ஜைன தர்மம். இவற்றாலேயே, பரமேஷ்டி வழிபடவேண்டும். மற்ற ஹரிஹராதிகள் சொன்ன தர்ம மெல்லாம் முக்தி தருவாம்.

விமரிசை : கருணை என்பது மனிதனுக்கு மாத்திரம் அல்ல; எல்லா ஜீவர்களிடமும் செல்ல வேண்டும். அதே மாதிரி பொறை. இன்றேல் பயனில்லை. அறிந்தோம் என்று மார் தட்டி அஞ்ஞானியாய் இருப்பது, ஞானக் குருடனாய் இருந்து கொண்டு நற் காட்சி பெற்றதாக பாவித்தல்; ஒழுக்கத்திற்கு பதில் மடத்தனமாக நடப்பது, விரதம் என்று சொல்லி, பட்டினி கிடந்து சாவது இவை யெல்லாம் நல்லறம் ஆகாவாம்.

ஜைன தர்மத்தைப் புகழும் ஸ்லோகத்தைக் கேளுங்கள் :

मूल—जइ न कुणसि तव चरणं न पढसि न गुणोसि देसि नो दाणम्।
ता इत्तियं सक्किकसि जं देवो इक्क अरिहन्तो ॥

(ப்ர. பா 2, ஷஷ்டி சூ. 2)

ஹே மனிதா, நீ நன்னடை தவறினாலும், சூத்ரங்களைப் படிக்காவிட்டாலும், பிரகரண ரத்னாகரத்தைச் சிந்திக்காவிட்டாலும், பாத்திர மறிந்து தராவிட்டாலும், பரவாயில்லை; அரஹந்தனே தெய்வம்; ஜைன குருமாருக்கே வணக்கம், ஜைனமதமே சிறந்தது என்று நம்பினாலே போதும்.—இதுவே சர்வோத்தம தருமம், இதுவே உய்வுக்கு காரணமாகும்.

விமரிசை : தயையும், பொறையும் நலமே. ஆனால், ஓரகம் இருந்தால் தயையும், பொறையும் தீங்கு தரும். ஜீவர்களுக்கெல்லாம் இன்பம் விளைவித்துத் துன்பத்திலிருந்து விடுதலை தருவது ஜீவதயை என்பது ஓரளவு சரியே. ஆனால் எப்போதும் சரியல்ல. ஏனென்றால் துஷ்டனைத் தண்டிப்பதும் தயையே யாகும். ஒரு துஷ்டனுக்குத் தண்டனை யளிக்காவிட்டால் பல மக்களுக்கு துன்பம் விளையும். ஆகவே தவறான தயை துன்பம் தரும், மன்னிப்பு பாபத்தில் முடியும். ஒரு துணியால் வடி கட்டித் தண்ணீரைக் குடிப்பதும், அணுப் பூச்சிகளைக் காப்பது மட்டும் தயவாகாது. ஜீவ இம்சை கூடாதென்று சும்மா பேசி, வாழ்க்கையில் காட்டாவிட்டால் பயனில்லை. ஜாதி வேற்றுமையைப் பாராட்டாமல் பசித்தவனுக்கு உணவு அளித்தலும், பிறமதத்தைச் சேர்ந்தவனாயினும் தக்க புலவனை மதித்தலும், தயவேயாகும்.

ஜைன மதாச்சாரியர்களுக்குத் தயவு என்பதிருந்தால் அடியிற்கண்டபடி நடப்பார்களா?

(1) பிற மதத்துதி செய்யாதே, அவர்களுடைய நல்ல குணங்களையும் சொல்லாதே. (2) பிறம்தப் பெரியாரை வணங்காதே. (3) பிறமதத்தினரோடு அதிகம் பேசாதே. (4) பிறமதத்தானோடு அடிக்கடி பேசாதே. (5) அவனுக்குச் சோறு துணி கொடுக்காதே. (6) அவன் தன் கடவுளை வணங்குவதற் குகந்த புஷ்பாதிகளைக் கொடுக்காதே என்று ' விவேகசாரம் ' 221ஆம் பக்கத்தில் சொல்லப்பட்டுள்ளது. இந்த ஜைனர்களுக்கு மற்ற மதத்தினர் மேல் எவ்வளவு

காழ்ப்பும், வெறுப்பும், பகையும் இருக்கிறது என்று பாருங்கள். பிறமதத்தினரிடம் இவ்வளவு வெறுப்புக் கொண்டவர்களை இரக்க மற்றவர்கள் என்றே சொல்லவேண்டும். தமது குடும்பத்தினருக்கே சேவை செய்வது விசேஷ தர்மமாகாது. தன் மதத்தினர் தன் வீட்டவரைப் போலாகும். அவர்களுக்கு சேவை செய்து பிறரை மதியாதவன் தயாளு என்று அறிவாளிகள் கருதுவார்களா? 'விவேகசாரம்' 108ஆம் பக்கத்தில் ஒரு சம்பவம் குறிக்கப்பட்டுள்ளது. மதுரை அரசன் மந்திரி நமுச்சியை, தமது விரோதியென்று கருதி ஜைனர் கொன்றுவிட்டார்கள். அதற்குப் பிராயசித்தம் செய்ததும் பரிசுத்தமாகிவிட்டார்களாம். இது இரக்கத்தையும், பொறையையும் நாசஞ் செய்வது அல்லவா? பிற மதத்தானைக் கொலை செய்யக் கூடத் துணியும் ஒருவனை இரக்கமுள்ளவனென்று கூறமுடியுமா? அவனை கொடியன் என்றே கூறவேண்டும். 'பரமாகமசாரம்' என்ற ஜைனசாஸ்திரத்தில் நற்சேர்க்கையைப் பற்றி ஜைன முனிவர் இவ்வாறு கூறுகின்றனர்: "நல்ல சிரத்தை, நற்காட்சி, நல்லறிவு, நன்னடை இந்நான்கும் மோக்ஷ சாதனங்களாகும். யோக தேவர் இதை விளக்குகிறார்". ஜீவாஜீவர்களைப்பற்றி—ஜைனக் கிரந்தங்கள் சொல்லுவதெல்லாம் உறுதியாக நம்பவேண்டும்; रुचिर्जिनोक्ततत्त्वेषु सम्यक् श्रद्धानमुच्यते । (சர். த. ஸங். ஆ. த) ஜைன தத்துவங்களில் அசைக்க முடியாத நம்பிக்கை இருக்க வேண்டும். மற்ற மதங்களை நம்பக்கூடாது. இதுதான் ஜைனரின் சரியான சிரத்தையாகும்.

यथावस्थिततत्त्वानां संक्षेपाद्विस्तरेण वा ।
यो ऽवबोधस्तमत्राहुः सम्यग्ज्ञानं मनीषिणः ॥ (சர்வ. தர். ஸங். ஆ. த)

சுருங்கியோ, விரிவாகவோ ஜைன கிரந்தங்கள் கூறும் ஜீவாதி தத்துவங்களையே 'சம்யக்ஞானம்' என்று அறிவாளிகளே சொல்லுகிறார்கள்.

सर्वथाऽनवद्ययोगानां त्यागश्चारित्रमुच्यते
कीर्त्तितं तदहिंसादि व्रतभेदेन पञ्चधा ।
अहिंसासूनृतास्तेयब्रह्मचर्य्यापरिग्रहाः ॥ (சர்வ. தர். ஸங். ஆ. த)

நிந்திக்கத் தக்க பிற மதங்களை ஒழிப்பதே நன்னடையாகும். அகிம்ஸாதி தத்துவங்களும் ஐந்துவகையின:

(1) எவ்வுயிரையும் கொல்லாமை. (அஹிம்ஸ) (2) இன் சொல். (ஸூன்ரத) (3) திருடாமை. (அஸ்தேய) (4) பிரமசரியம். (குறிகளை அடக்கியாளல்) (5) அபரிக்ரஹம் (அதாவது) தியாகம்.

விமரிசை :—இவையெல்லாம் சரிதான். கொல்லாமை,— கள்ளாமை போன்றவை நன்னெறிகளே. ஆனால், பிற மதங்களை நிந்திப்பது போன்ற பிழைகள் நலமில்லை. பற தூஷணை குற்றமாகும். 'ஹரிஹராதிகளின் தர்மமும் உய்வழியில்லை' என்பது பெரும் குற்றமாகும். இதை முதல் சூத்திரத்திலேயே காண்கிறோம். ஜைன கிரந்தங்களைப் பார்த்ததுமே அறிவு நிறைவாகிறது; அறம் கைகூடுகிறது என்று சொல்வது சாமான்யமான குற்றமா?

இயற்கைக்கு விரோதமான விதிகளையும், அறிவிற்கு ஒவ்வாத ஓரகமான கொள்கைகளையும் நாம் நம்ப முடியுமா? அவற்றை உபதேசிக்கும் தீர்த்தங்கரரை வானளாவப் புகழ்வோரின் மதியீனத்தை என் சொல்வது! தம் மதத்தினரே மேலோர், பிற மதத்தினர் கீழோர் என்பவர் சிறு மதியை என்னென்பது! இதனால் இவர்கள் ஆசாரியர் சுயநலமிகள், பூர்ண வித்துவான்கள் அல்லர் என்று தெரிகிறது. ஏனெனில், அவர்கள் எல்லா மதங்களையும் நிந்தியாவிட்டால், தமது பொய்ச் சரக்கு விலை போகாது, பயனாகாது என்று அவர்களுக்குத் தெரியும். இதிலிருந்து ஜைன மதம் எல்லாரையும் படுகுழியில் தள்ளும்; வேத தர்மம் எல்லாருக்கும் உய்வளிக்கும்; ஹரிஹராதிகள் நல்ல தேவர், ரிஷபாதிகள் குதேவர் என்றாகிறது. இதைப் பிற மதத்தினர் சொன்னால் ஜைனர் எப்படிச் சகிப்பார்கள்?

இவர்கள் ஆசாரியாரின் அபத்தத்தைப் பாருங்கள் :

மூல—जिणवर आणा भंगं, उमग्ग उस्सुत्त देसणउ ।
आणा भंगे पावं ता जिणमय दुक्करं धम्मम् ॥

(ப்ர. பா. 2, ஷஷ்டி. ச. 61, சூ. 11 பக்கம் 631)

வீத ராக ரான ஜீனவர தீர்த்தங்கர் காட்டிய வழி தப்பி நடப்பவன் பாபமும் துன்பமும் அனுபவிப்பான். ஜினேஸ்வரன் நியமித்த தர்மத்தை ஆசரிப்பது மிகக் கடினம்; ஆதலால் அவன் ஆணை பிசகாமல் நடப்பதே நலம்.

விமரிசை :—தன் மதத்தையே புகழ்ந்து பிற மதங்களை இகழ்வது அறிவாகாது. பிற மத அறிஞரும் மெச்சிப் போற்று

வதே நன்னெறியாகும். திருடர்கூடத் தம்மைப் புகழ்வர். அதனால் திருட்டுத் தொழில் மெச்சத் தக்கதாகுமா?

இன்னும் கேளுங்கள், ஜீனோபதேசத்தை:

मूल—बहुगुणविज्जा निलओ उसुत्तभासी तहा विमुत्तव्वो
जह वरमणिजुतो विहु विग्घकरो विसहरो लोए ॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 18 பக்கம் 634)

விஷப் பாம்பின் தலைமேலுள்ள மணி தீண்டத் தக்கதன்று; அதே மாதிரியே, அஜைனன் எவ்வளவு பெரிய தார்மிக வித்வானாயினும், அவனை ஜைனன் அணுகாது விடுக்கவேண்டும். (பிரகரண ரத்னமாலை.)

விமரிசை:—பாருங்கள், இந்த ஜைனாசாரியரும் அவர் சீடரும் கற்றறிஞரானால், கற்றறிஞரிடம் அன்பு வைக்க வேண்டும். தீர்த்தங்கரரே கல்லாதவரானால் கற்றோரிடம் அவர்களுக்கு எப்படி மதிப்புண்டாகும்? குப்பையிலிருந்தாலும் தங்கத்தைக் கொள்ளாதவருண்டோ? ஜைனர் போன்ற பக்ஷபாதமும், துராக்ரகமும், அவித்தையும் உள்ளவர் யாரும் இல்லை என்பது தெளிவாகிறது!

मूल—अइसय पाविय पाव धम्मि अपव्वेसु तोविपावरया ।
न चलन्ति सुद्धधम्मा धन्ना किविपाव पव्वेसु ॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 26 பக்கம் 639)

அன்ய தர்சனங்கள் ஜைன விருத்தம்; அவற்றை ஜைனர் பார்ப்பதும் பாபம்! (பிரகரண ரத்னாகரம்).

விமரிசை:—இந்த உபதேசம் எவ்வளவு கெடுதலென்பதை அறிவாளர் சிந்திக்கட்டும்! உண்மையான சமயத்தைச் சார்ந்தவன் பிற மதங்களுக்கு அஞ்ச வேண்டியதே யில்லை. தங்கள் உபதேசம் பொக்கை; அது வாதத்திற்கு நிற்காது என்றறிந்தே பிற மதங்களை நிந்தித்து மூடரைத் தமது வலையிற் பிடிக்கின்றனர்.

मूल—नामं पितस्स असुहं जेण निदिठाइ मिच्छ पव्वाइ ।
जेसिं अणुसंगाउ धम्मीणवि होइ पाव मई ॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 27 பக்கம் 638)

"ஜைன - விருத்தமான மதங்களெல்லாம் மனிதரைப் பாப வழிக்கே கொண்டு செல்கின்றன. ஆதலால் பிற மதங்களை ஒதுக்கி ஜைன மதத்தையே பின்பற்றுவதே நலமாகும்." (பிரகரண ரத்னுகரம்.)

விமரிசை :—பாருங்கள்! ஜைனமல்லாததை வெறுத்தொதுக்கவே ஜைன மதம் உபதேசிக்கிறது. அது ஜனங்களைத் தீச் செயல் என்னும் கடலில் ஆழ்த்துகிறது. இப்படிப் பரம நிந்தனை செய்யும் அதர்மிகளைக் காண முடியாது! தன்னை ஒரேயடியாகப் புகழ்வதும், பிறரை ஒரேயடியாக இகழ்வதும் மனிதத் தன்மையாகுமா? எவர் மதமானாலும் நல்லதை நல்லது, தீயதைத் தீயது என்பதே அறிஞர் இயல்பாகும்.

மூல—हा हा गुरुअ अकज्जं सामीन हु अच्छिकस्स पुक्करिमो।
कह जिण वयण कह सुगुरु सावया कह इय अकज्जं ॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 35 பக்கம் 642)

முற்றறிஞரான ஜைன உபதேச மொழிகள் முன்னும், ஜைனக் குருமார் முன்னும், ஜைன தர்ம முன்னும் பிறமதக் குருமாரும் அவர் மொழியும் வீண் பேச்சாகும்.

விமரிசை : இதன் பொருளென்ன? ஜைனக் குருமாரே தேவர், பிறர் தீய-ஆசிரியர், பிறர் மதம் தீது என்கிறது. தன் திராட்சை புளிப்பானாலும் இனிப்பு, பிறர் கனி இனிப்பானாலும் புளிப்பு என்னும் பழக்காரி பேச்சல்லவா இது! பிற மதத்தினருக்கு நலஞ் செய்வதும் தீதென்கிறது ஜைன மதம்! பாம்பின் மணியை வேண்டாமென்று விடுவது போலப் பிறமத நல்லோரையும் ஒதுங்கிச் செல்லவேண்டுமாம்! ஜைன உபதேசம்! இதை முன்பே சொன்னோம் —இதைவிட இன்னும் ஒரு படி மேலே செல்கின்றனர் ஜைனர்.

மூல—सप्पो इक्कं मरणं कुगुरु अणंताइ देइ मरणाइ ।
तो वरिसप्पं गहियुं मा कुगुरुसेवणं भद्दम् ॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 37 பக்கம் 643)

ஜைன குருமார் தவிரப் பிறரெல்லாம் பொய்யர், பாம்பினுங் கொடியர்! அவரைப் பார்ப்பதும், சார்வதும், அவருக்குப் பணி செய்வதும் தீங்காகும். ஏனெனில் பாம்புக் கடி மனிதனை

ஒரு தரமே கொல்லுகிறது. புறச் சமய குருமார் சேர்க்கையால் பிறப் பிறப்புகள் பலவாகப் பெருகும்; ஆதலால் நல்லோனே! அஜைன குருவின் பக்கமே நாடாதே; அவரைப் பணியாதே; அவரைச் சிறிது பணிந்தாலும் துன்பமே கதி (பிரகரண ரத்நாகரம்).

விமரிசை: பாருங்கள்! ஜைனரைப் போலக் கல் நெஞ்சப் பகைவர், மதிமயக்காளர், வேறு மதத்தில் இருக்கமுடியாது. தம்மையே போற்றிப் பிறரைத் தூற்றித் திரிந்தாலே பிறர் தம்மை மதித்துத் தொண்டு செய்வார் என்று ஜைனக் குருமார் நம்பியே இப்படிப் பரமத நிந்தை செய்கிறார்கள் போலும்! இது அவர்களின் துர்பாக்கியமே! ஏனெனில் உத்தம வித்வச் சங்க சேவை செய்தாலொழிய இவர்களுக்கு மெய்யறிவும், மெய்யறமும் எய்தாவாம். ஜைனர் தங்கள் அறிவிலிப் பேச்சுகளை விட்டு, வேத சம்மதமான மெய்ம் மொழிகளை ஏற்று நடப்பதே இன்ப நலமாகும்.

மூல—किं भणिमो किं करिमो ताण हयासाण विठ्ठुठाणं।
जे दंसिऊण लिंगं खिवंति न रयम्मि मुद्ध जणं॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 40 பக்கம் 645)

"பேரின்ப மிழந்தவன், தீயன், அழிசெயலாளன், துஷ்டன், குற்றவாளி—இவர்களைப் பற்றி என்ன சொல்வது? என்ன செய்வது? இவர்களுக்கு உதவி செய்தால் தீமை தான் வரும்! குருட்டுச் சிங்கத்தின் கண்ணைத் திறந்தால் அது நம்மை உண்டு விடும். அதேமாதிரி பிற சமயக் குருமாரான பொய்யருக்கு உபகாரம் செய்வது நமக்கே தீங்காகும்—அவர்களிட மிருந்து நாம் விலகியிருக்க வேண்டும்."

விமரிசை: ஜைனர் கருதுகிற படியே மற்ற மதத்தினரும் கருதினால், ஜைனர் பாடு திண்டாட்டந்தான்! பிறமதத்தினர் இவர்களுக்கு எந்த உபகாரமும் செய்யாவிட்டால், இவர்கள் காரியம் கைகூடாமல் துன்பமே பெருகும். இதே மாதிரி பிறமதத்தின் பாலும் ஜைனர் ஏன் நினைத்தல் கூடாது? இன்னும் பாருங்கள்!

மூல—जह जह तुट्टइ धम्मो जह जह दुट्ठाण होइ अइ उदउ।
समद्दिठि जियाणं तह तह उल्लसइसमत्तं॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 42 பக்கம் 646)

"பார்க்கச் சகியாதவர், கடும் விரதமே புனிதமாக்கக் கூடிய கொடியர், பாபிகள், குற்றவாளிகள், திரிதண்டிகள், பரிவ்ராஜகர், விப்பிரர் ஆகியவர்களை உலகம் வியந்து பணிந்து வழிபடுவதைப் பார்த்தாலே நல்லறிவும் நற்காட்சியும் படைத்த ஜைன முனிவரின் பெருமை புலப்படும்! அப்படிப் புலப்படா விட்டால் வியப்பே!"

விமரிசை: இதைப் பாருங்கள்! இந்த ஜைனரை விட அதிக அசூயையும் பகையும், வெறுப்பும், வைரபுத்தியும் கொண்ட வருண்டா! பிற மதத்தினருக்கும் வெறுப்பும் அசூயையும் உண்டென்றாலும் ஜைனரைப் போல் அவ்வளவு யாருக்கும் இராது. பாபத்திற்கு மூலம் பகை; ஆதலால் ஜைன ரிடையே பாபாசாரம் பெருகத் தடையென்ன?

मूल—संगोवि जाण अहिउते सिधम्माइ जे पकुव्वन्ति।
मुत्तूण चोरसंगं करन्ति ते चोरियं पावा॥

(ப்ர. பா. 2. ஷஷ், சூ. 75 பக்கம் 661)

திருடரைக் கூடும் மூடர், மூக்கறுப்பு தண்டனைக்கு அஞ்சுவ தில்லை; அதேமாதிரி சமணரல்லாத திருட்டுச் சாமிகளும் அசுப காரியத்திற்கு அஞ்சமாட்டார்.

விமரிசை: மனிதன் தன் மனப் படியே பிறரை அறிகிறான். இது உண்மை. ஜைனமே ஒழுங்கான மதமாம்; மற்றவை திருட்டுச் சமயங்களாம்! தீய வுறவால் கெட்ட மதியினரே பிறரிடம் பகையும் வெறுப்பும் காட்டுவர். ஜைன மதம் போலப் பரமதத் துவேஷம் வேறெதிலும் இல்லை.

मूल—जच्छ पसुमहिस लरका पव्वं होमन्ति पाव नवमीए।
पूअन्ति तंपि सट्ढा हा हीला वीयरायस्स॥

(ப்ர. பாகம் 2, ஷ. சூ. 76 பக்கம் 661)

ஜைனரைத் தவிர மற்றோர் மித்யா த்ருஷ்டிகள், பொய்யர், பாபிகள். ஜைனர் அனைவரும் புண்யாத்மாக்கள்; ஆதலால் மித்யாதிருஷ்டிகளின் மதத்தை நாட்டுவோன் பாவியாவான்.

விமரிசை: பொய் மதம் போற்றுவோன் பொய்யன், பாபி. காளி சாமுண்டி ஜ்வாலா தேவிகளுக்காக துர்க்காநவமி விரதமிருப்பது பாவமானால், மகாகஷ்டமான பஜுசெனுதி

ஜைன விரதங்களும் தீங்குதாமே? வாம மார்க்கிகளின் திரு விளையாடலைக் கண்டிக்கவேண்டியதே; அதேமாதிரி இவர்கள் வணங்கும் சாசனதேவி, மருதேவிகளையும் கண்டனம் செய்வது நலம். எங்கள் தேவி அஹிம்சாதேவி என்பதும் சரியன்று. ஏனெனில் சாசனதேவி ஒரு மனிதன் கண்ணையும், ஆட்டுக் கண்ணையும் பிடுங்கியதுண்மை. இந்த ராக்ஷஸியை துர்க்கா, காளி சகி என்று ஏன் சொல்லக் கூடாது? தமது யச்சகாணுதி விரதங்களைச் சிறந்ததென்பதும், நவமி முதலிய விரதங்கள் இழிவென்பதும் மூடப் பேச்சாகும். பிறர் உபவாசத்தை நிந்திப்பதும் தம் உபவாசத்தைப் புகழ்வதும் மடமையே. உண்மை பேசுதல் முதலிய நல்விரதம் பூண்டவரே உத்தமர்; ஜைனர் முதலிய பிறர் உபவாச மெல்லாம் மெய்யன்று.

மூல—वेसाण वंदियाणय माहण डुंबाण जरकसिरकाणं।

भत्ता भरकठाणं वियाणं जन्ति दूरेणं॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 82 பக்கம் 664)

வேசை, விகடன், பாடகன், பிராம்மணன், யக்ஷன், முதலியோரைப் போற்றுவோன், யாகம் போற்றுவோன், கணேசாதி பொய்த் தெய்வம் போற்றுவோன், அவரை மதிப்பவர்—எல்லாரும் தாமும் அறியாமையில் ஆழ்ந்திப் பிறரையும் அழுத்துவோரே. ஏனெனில் அவர்கள் இந்தப் பொய்ச் சரக்குகளைப் போற்றி வீதராக புருஷரான ஜைன முனிவரை விலகி நிற்கிறார்கள்.

விமரிசை: பிற மதத் தேவதைகள் பொய், தம்மதத் தேவதைகளே மெய் என்னல் பக்ஷபாதமாகும். வாம மார்க்காதி தேவதைகளைக் கண்டிப்பவர் சாசனுவைக் கண்டிப்பதில்லை. ஒருவன் இரவில் சாப்பிட்டானும்; சாசனு அவனைப் புடைத்து கண்ணைப் பறித்தாளாம். பிறகு ஆட்டுக் கண்ணைப் பிடுங்கி அவனுக்கு வைத்தாளாம். இது சிரத்தா தின கிருத்யம் என்ற நூலின் பக்கம் 46-ல் காண்கிறது. இது கொடுமை தானே!

இரத்தின சாகரம் இரண்டாம் பாகம் பக்கம் 67-ல் எழுதியிருப்பதைப் பாருங்கள்:—"வழிப் போக்கருக்குத் துணை செய்யவே மருதேவி கல்லுருக் கொண்டாளாம்! அதே முறையில் அவளையும் மற்றவைகளைப் போல் ஏன் கருதவில்லை?

मूल—किं सोपि जणणि जाओ जाणो जणणी इकिं अविगोद्धिं ।
जइ मिच्छरओ जाओ गुणेसुतहमच्छर वहइ ।

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 81 பக்கம் 663)

ஜைன மத விரோதிகளான மித்யாவாதிகள் அதாவது பிற மதத்தினர் ஏன் பிறந்தார்கள்? பிறந்து ஏன் வளர்ந்தார்கள்? இவர்கள் விரைவில் ஒழிந்தால் நன்றாயிருக்குமே.

விமரிசை: பாருங்கள்! ஜைனரின் தயா தர்மத்திற்குப் பிற மதத்தினர் உயிர் வாழ்வதைக் காண சகிக்கவில்லையே! இது பேச்சளவில் தயா தர்மமாயிருக்கிறது! அதுவும் அணுவுயிர்களுக்கும் விலங்குகளுக்குமே; ஜைனரல்லாத மற்ற மனிதருக் கன்று.

मूल—सुद्धे मग्गे जाया सुहेण गच्छत्ति सुद्ध मग्गंमि ।
जे पुण अमग्गजाया, मग्गे गच्छन्ति तं चुय्यं ॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 83 பக்கம் 664)

ஜைன குலத்திற் பிறந்தவர் முக்தியடைவதில் வியப்பில்லை. ஆனால் ஜைனரல்லாத மித்யா குலத்திற் பிறந்தவர் முக்தி பெற்றால் அது வியப்புத் தான்! இதன் கருத்து: ஜைன மதத்த வருக்கே முக்தியாம்! ஜைனராகாதவருக்கு நரகமே கதியாம்!

விமரிசை: என்ன! ஜைன மதத்தில் தீயரில்லையா? நரகம் புகு வோர் இல்லையா? எல்லாருமே முக்தியடைகிறார்களா? முக்தரைத் தவிர வேறில்லையா? இது பைத்தியப் பேச் சல்லவா? மடையர்களே இதை நம்புவார்கள்; மற்றவர்க ளன்று.

मूल—तिच्छयराणं पूआ संमत्त गुणाणकारिणी भणिया ।
साविय मिच्छत्तयरी जिण समये देसिया पूआ ॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 90 பக்கம் 667)

ஜின மூர்த்தி பூஜையே நலம், மெய் பூஜை; மற்ற மூர்த்திகளைப் பூஜிப்பது நலமன்று, பாபம். ஜின மார்க்கிகளே தத்துவ ஞானிகள்; பிறர் மித்யா ஞானிகள்.

விமரிசை: அடடா! என்ன சொல்வது!! வைஷ்ணவாதி மூர்த்திகள் போலவே உங்கள் மூர்த்திகளும் கல் முதலிய-

வற்றுலானவை தாமே? வைஷ்ணவாதி மூர்த்தி பூஜை போல் உங்கள் மூர்த்தி பூஜையும் பொய்தானே! நீங்களே தத்துவ ஞானிகளா, பிறர் அல்லரா? அப்படியானுல் உங்கள் மதத்தில் தத்துவ ஞானமே கட்டாயம் இல்லை என்போம்.

मूल—जिण आणाए धम्मो आणारहि आण फुडं अहमुत्ति।
इयमुणि ऊणय तत्तं जिण आणाए कुणहु धम्मं॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ- 92 பக்கம் 668)

ஜினதேவன் ஆணையே தயை, மன்னிப்பு நிறைந்த தர்மம்; மற்றதெல்லாம் அதர்மம்.

விமரிசை: இதென்ன அநியாயம்! ஜினதேவனைத் தவிர வேறு தர்மாத்மா, சத்தியவான் இல்லையா? இருக்கிருர்கள்; அவர்களை மதிக்கக்கூடாதா? ஜைனரின் தோலும் நாவும் முகமும் உடலும் மற்ற மனிதரைப்போல் இல்லாவிட்டால், அவர்கள் சொல்வது சரி; தங்கள் நூல், மொழி, சாதுக்களைப் புகழ்வதில் இவர்கள் கூலிக் கூத்தருக்கு அண்ணுக்களாயிருக்கிருர்கள்.

मूल—वन्नेमि नारयाउवि, जेसिं दुरकाइ सम्भरं ताणम्।
भव्वाण जणइ हरि हर, रिद्धि समिद्धीवि उद्घोसं॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 95 பக்கம் 669)

ஹரிஹராதி தேவர்களின் வல்லமை மக்களை நரகத்தில் தள்ளும். அதைக் கண்டு அச்சம் மயிர்க் கூச்செறியும். அரசன் ஆணையை மீறினவருக்குச் சாகுமட்டும் துயரமே கதி; ஜினவரன் ஆணையை மீறினவரை ஜனன-மரண துக்கம் விடாது பற்றும்.

விமரிசை: பாருங்கள் ஜைனுசாரியர்களின் மனப் போக்கு, அதாவது கபட வஞ்ச லீலை! அவர் வெளிப் புரட்டைப் போலவே உள் குட்டும் வெளிப்பட்டது! ஹரி ஹராதி உபாசகர் செல்வம் சிறப்பதைப் பார்க்கவும் சகிக்கவில்லை இவருக்கு; இன்னெரு மதத்தவர் செல்வஞ் செழித்தால் இவர்களுக்கு வயிற்றெரிச்சல். அஜைனர் எல்லாரும் திவாலாகி, அவர்கள் சொத்து சுகமெல்லாம் தமக்கே வர வேண்டுமென்று ஜைனர் விரும்புகிருர்கள் போலும்! அதனுலேதான் அவர் மயிர் பொடிக்கிறது! தங்கள் முனிவர் கட்

டவரை அரசன் ஆணைக்கு ஒப்பிடுகிறார்களே—ஏன்? இவர்கள் பொய்யர், பயங்காளிகள்! உண்மைக்கு முரணுலும் அரசன் ஆணையை யாரும் மீற முடியாது—அதற்கு வணங்கியே தீரவேண்டும். அவ்வளவு கெடுபிடியாக ஜைனுசாரியருக்குப் பணிய வேண்டுமாம். பகையிலும் வெறுப்பிலும் ஜைனரை யாரும் மிஞ்ச முடியாது. இன்னும் பாருங்கள் :

मूल—जो देइ सुद्धधम्मं सो परमप्पा जयम्मि नहु अन्नो ।
किं कप्पद् दुम्म सारिसो इय रतरू होइ कइयावि ॥

(ப்ர. பா, 2, ஷஷ். சூ. 101 பக்கம் 672)

ஜைன தருமத்தை மறுப்பவர் மூடரே; ஜின தர்மோபதேசம் செய்யும் சாதுக்களும், இல்லறத்தாரும், நூலாசிரியரும் தீர்த்தங்கரருக்குச் சமானமானவர்; அவருக்குச் சமானம் எவருமில்லை.

விமரிசை : வேடிக்கைதான்! ஜைனர் சிறுபிள்ளைத்தனமாயிரா விட்டால் இப்படிப் பிதற்றுவார்களா? வேசை பிறரைப் புகழாது தன்னழகையே மெச்சிக் கொள்வாள்; இந்தப் பேச்சும் மேற்படியே!

मूल—मूलं जिणिंद देवो, तव्वयणं गुरुजणं महासयणं ।
सेसं पावट्ठाणं, परमप्पाणं च वज्जेमि ॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 103 பக்கம் 673)

ஜினேந்திரர், ஜைன சித்தாந்தம், ஜைன மதோபதேசிகரிடம் நம்பிக்கை தவறுதல் ஜைனருக்கு அழகன்று.

விமரிசை : இது அறியாமையின் கூற்று. ஜைனரின் ஒரகம், பிடிவாதம். ஜைனமத உண்மைகள் பெரும்பாலும் விலக்கத் தக்கன. கொஞ்சம் அறிவுள்ளவரும் ஜினதேவர், சித்தாந்தம், நூல், போதகர்—எல்லாம் கண்டு கேட்டுச் சிந்தித்தால், அனைத்தையும் விட்டொழிப்பார்—ஐயமில்லை.

मूल—वयणे वि सुगुरु जिणवल्लहस्स केसिं न उल्लसइ सम्मं ।
अह कह दिणमणितेयं उलुआणं हरइ अंधत्तं ॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 108 பக்கம் 675)

ஜைன வசனங்களைப் பின்பற்றி நடப்பவர்களே வணங்கத் தக்கவர்கள்; அதற்கு மாருக நடப்பவர் மதிக்கத்தக்கவர் அன்று. அதாவது ஜைன குருமாரையே வணங்க வேண்டும். மற்றவர்களை மதிக்கக்கூடாது.

விமரிசை: அடடா! அறியா மக்களை அடிமைச் சீடராக்கி ஆடு மாடுகள்போல நடத்தும் இந்தக் குருமார் இல்லாவிட்டால் மனிதர் தாமே நன்ருகச் சிந்தித்து, அடிமை வலையைக் கிழித்தெறிந்து, முக்தி சாதனத்தால் ஜன்ம சாபல்யம் அடைந்திருப்பார்களே. ஹே ஜைஞசாரியரே! உங்களை யாராவது தீநெறியன், தீய குரு, பொய்யன், கெட்ட உபதேசம் செய்கிறவன் என்று திட்டிஞல் எவ்வளவு வருத்தமாயிருக்கும்? அதேமாதிரி நீங்கள் பிறரைத் திட்டும்போது அவர்களுக்கு நோகாதா? உங்கள் மதத்தில் வசை நிரம்பியிருக்கிறதே.

मूल—तिहुअण जणं मरंतं दट्ठूण निअन्ति जे न अप्पाणं ।
विरमंति न पावाउ धिद्धी धिट्ठत्तणं ताणं ॥

(ப்ர. பா. 2, ஷஷ். ஸூ. 109 பக்கம் 675)

சாகுமட்டும் துன்பமாஞலும் சரி ஜைனர் உழவும், வாணிபமும் செய்யக்கூடாது; இந்தத் தொழில்கள் நரகத்திற்குக் கொண்டு தள்ளும்.

விமரிசை: கேளுங்கள் ஜைனரிடம் நீங்கள் ஏன் வாணிகம் செய்கிறீர்கள் என்று. அவர்கள் இவற்றை ஏன் விடவில்லை? விட்டால் உடம்பு வாடுமே? வயிறு பிழைக்கவேண்டுமே? சாப்பாடு நடப்பதெப்படி? இப்படிப்பட்ட துருபதேசங்கள் வீஞகும்; நல்ல படிப்பில்லாமல், நல்லோர் சேர்க்கையில்லாமல் வாய்க்கு வந்தபடி இவர்கள் உளறுகிருர்களே— பாவம்!

मूल—तइया हमाण अहमा कारण रहिया अनाण गव्वेण ।
जे जंपंति उसुत्तं तेसिं दिद्धिच्छ पंडिच्चं ॥

(ப்ர. பா. 2, ஷஷ். ஸூ. 121 பக்கம் 680)

ஜைன—விருத்த சாத்திரங்களை மதிப்பவன் அதமாதமன். தனக்குப் பயனுள்ளதாயினும்சரி; ஜைனமதத்திற்கு எதி

ரானதை நம்பக் கூடாது, நவிலக் கூடாது. பயனுள்ளதாயினும், அன்னிய மதத்தை உதறித் தள்ளவேண்டும்.

விமரிசை : உங்கள் மூல புருஷரிலிருந்து இன்று வரையில் எத்தனையோ ஆசாரியர் போந்தனர்—அனைவரும் பரமத தூஷணையே செய்தனர். இனி வரும் ஜைனாசாரியாரும் மேற்படியே செய்வார். ஆஹா! தங்கள் காரியம் ஆக வேண்டுமானால் ஜைனர் அவ்வப்போது பிற சீடருக்குச் சீடராக தாசானு தாசராக நடிக்கத் தயங்குவதில்லை. இதைப்பற்றி அவர்களுக்கு வெட்கம் மானமில்லை. இது மிக்க வருந்தத்தக்க விஷயம். இன்னொரு சுலோகம் பாருங்கள்.

मूल—जं वीरजिणस्स जिओ मिरई उस्सुत्त लेसदेसणओ ।
सागर कोड कोडिं हिंडइ अइ भीमभवरणे ॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 122 பக்கம் 680)

ஜைன சாதுக்களிடம் உள்ள தருமம் பிறரிடமும் உள்ளது என்று யாராவது சொன்னால் தெரியுமா—அவர் கோடானு கோடி வருஷம் நரகத்தில் விழுந்து மீண்டும் நீச ஜன்மம் எடுக்கிறார்கள்.

விமரிசை : ஹஹா? அறிவின் பகைவரே! பிறர் மறுப்பைத் தடுக்கவே இவர்கள் இந்தப் பயங்கரப் புளுகைக் கட்டிவிடுகிறார்கள்! இது நடக்காது. பிறமதங்களைப் பெரிய 'வசைகூறித் தூற்றித் தமது காரியத்தை யடையப் பார்க்கிறார்கள் —இவர்களுடன் எப்படி வாதாடித் தெளிவு படுத்துவது? பிறரைத் தூற்றுவதும் பிறமதத்தினரை விரோதிப்பதுமே தமது காரிய சித்தி என்று நினைக்கிறார்கள்.

मूल—दूरे करणं दूरम्मि साहणं तह पभावणा दूरे ।
जिणधम्म सद्दहाणं पि तिरकदुरकाइ निठवइ ॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 127 பக்கம் 682)

ஜைன தருமத்தை அனுஷ்டிக்காதவனும் ஜைன தர்மமே உண்மை, மற்றது பொய் என்று உணர்ந்தாலே போதும். இந்த நம்பிக்கையால் துன்ப-விடுதலை கிடைக்கும்.

விமரிசை: சரிசரி! பிறரைத் தமது மத வலையிற் பிடிக்கச் சரியான சூழ்ச்சிதான்! நல்ல கர்மமே செய்யாது முத்தி கைக்கு வந்துவிடுகிறது. இப்படிப்பட்ட மூட மதமும் வேறு உண்டா, உண்டா?

मूल—कइया होही दिवसो जइया सुगुरूणा पायमूलम्मि ।
उस्सुत्त लेसविसलव रहिओ निसुणेसु जिणधम्मं ॥

(ப்ர. பா. 2. ஷஷ். சூ. 128 பக்கம் 682)

ஜைன தத்துவ சூத்ரங்களையே கேட்டுப் பிறமத நூல்களை விரும்பாதவன் துன்பக்கடலைக் கடக்கிறான்.

விமரிசை: அடடா! இந்த விருப்பமே துன்பக்கடலைத் தாண்டுவிக்குமாமே!! கர்ம பலன்களை அனுபவிக்கவேண்டாம் போலும்! இதெல்லாம் பாமர ஜனங்களை ஏமாற்றும் பேச்சு! பூர்வ ஜன்மத்தில் செய்த சஞ்சித பாபங்களை அனுபவிக்காமல் யாரும் விடுதலை பெறமுடியாது. இந்தப் பொய் மூட்டைகளை இவர்கள் எழுதா விட்டால் ஜனங்கள் வேதாதி மெய் நூல்களைப் படித்து, கேட்டு இவர்களுடைய பொய் நூல்களை ஒழித்துக் கட்டுவர். மடையர் இவர் வலையிற் படுகிறார்கள்; நல்லினஞ் சேரும் அறிவாளர் அதைத் தப்புவார்கள்—மூடர் சிக்கிக்கொள்கிறார்கள். இன்னொரு வரியைப் பாருங்கள்.

मूल—जह्मा जिणोहिं भणिय सुयववहारं विसोहियं तस्स ।
जायइ विसुद्ध बोही जिण आणा राह गत्ताओ ॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 138 பக்கம் 687)

ஜினுசாரியார் செய்த சூத்ரம், நிருக்த விருத்தி, இலக்கண விளக்கங்களைக் கற்றவர்களே ஒழுக்கம் உயர்ந்து சுகம் பெறுகிறார்கள். பிற மத நூல்களை பார்த்தாலும் அன்று.

விமரிசை: கொலைப் பட்டினியிருந்து வருந்துதல் ஒழுக்கமா என்ன? பட்டினி கிடத்தலே நல்லொழுக்கமானால் பஞ்சத்தாலும் வறுமையாலும் பட்டினி கிடக்கும் வறியர் தூயராகி மோட்சம் பெறலாமே. இப்படி யாரும் தூயுறமுடியாது. ஜைனரும் முடியாது. இவர்கள் சுகப் படுவதற்குப் பதிலாகப் பித்தாதிகளால் சூடேறி நோயுற்று வருந்துகிறார்கள்.

வாய்மை, நேர்மை, பிரமசரியம் முதலிய ஒழுக்கமே தர்மமாகும். பொய், அநியாய முதலியவை பாபமாகும். அன்புடன் பிறர்க்கு உதவி செய்தல் அனைத்திலும் சிறந்த அறமாகும். ஜைனர்போலப் பசி தாகங்களை அடக்குதல் அறமாகாது. இந்த சூத்ரங்களை ஏற்பவர் துயர்க் கடலில் வீழ்வர். ஏனெனில் இவற்றில் மிகச் சிறிது உண்மையிருந்தாலும் பொய் மூட்டை மலையளவாகும்.

मूल—जइ जाणिसि जिण नाहो लोयायारा विपरकए भूओ ।
तार तं तं मन्नंतो कह मन्नसि लोअ आयारं ॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 148 பக்கம் 692)

நல்ல பேறு பெற்றவர்களே, இருப்பவர்களே, ஜைனமதத்தைப் பின்பற்றுவார்கள், அதாவது ஜைன மதத்தைப் பின் பற்றாதவர் கெட்ட பேற்றினர் என்பதாம்.

விமரிசை: இது பொய் தவிர வேறென்ன; தமக்குப் பேறும்; பிறருக்கு ஊறும்? பிறமதத்தினருக்குப் பேறும் சமணருக்கு ஊறும் வருவதில்லையா? தமக்குள் சண்டை சச்சரவு கூடாது, அன்புடன் நடக்கவேண்டும் என்பர் ஜைன தர்மிகள்; பிற மதத்தினருடன் சண்டை சச்சரவிடுதல் கெடுதல் என்பதை அவர்கள் உணரவில்லை போலும்; இதுவும் பொருத்தமற்றதாகும். ஏனெனில் நல்லோர் நல்லோருடன் அன்பு கொள்வர்; தீயருக்கு நன்மை கூறித் திருத்துவர். பிராமணர், திருதண்டி, பரிவ்ராஜகாசாரியார், சந்யாசி, தவசி, பைராகிகள் அனைவரும் தம்–விரோதிகள் என்றே ஜைனர் கருதுவது அடாது. எல்லாரையும் பகை செய்து நிந்திக்கும் ஜைனரிடம் பொறையும் தயையுமான தருமம் நிலைத்திருக்குமா? ஏனெனில், பிறரை வெறுப்பவனிடம் தயையும் பொறையும் நலியும். துவேஷம் போல் இமிசை வேறில்லை; ஜைனர் போல் துவேஷிப்பவர் மிகச் சிலரே. ரிஷபதேவர் முதல் மஹாவீரர் வரையும் போந்த 24 தீர்த்தங்கரரும், ராக த்வேஷ மித்யாவாதிகள்; ஜைன மதத்தைச் சார்ந்தவர் கொள்ளைக் காய்ச்சல் பிடித்தவர், ஜைன தர்மம் நரகத்திற்கும் விஷத்திற்கும் சமானம் என்றால் ஜைனருக்கு எவ்வளவு வருத்தமாயிருக்கும்! ஜைனர் பரமத நிந்தை வெறுப்பென்ற நரகத்தில் பெருந் துன்பமடைகிறார்கள். இவ் வழக்கத்தை அவர்கள் விட்டுவிட்டால் அவர்களுக்கு நலமே.

## ஜைனரின் உருவழிபாடு

मूल—एगो अगुरू एगो वि सावगी चेइ आणि विवहाणी।
तच्छय जं जिणदव्वं परुप्परं तं न विच्चन्ति ॥

(ப்ர. பா. 2, ஷஷ். சூ. 150 பக்கம் 692)

எல்லாச் சமணருக்கும் (சிராவகருக்கும்) தேவ–குரு தர்மாதிகள் ஒன்றே. அவர்கள் ஜைன வுருக்களையும், ஜைனாலய சொத்துக்களையும் காப்பாற்றி உருவழிபாடு செய்வதே அவர்கள் கடமையாகும்.

**விமரிசை:** உருவழிபாட்டின் தீமைகளெல்லாம் ஜைன மதத்திலிருந்தே வந்தன. ஆதலால் புரட்டுகளுக்கு மூலமே ஜைனமதம்.

சிராத்த தின க்ருத்யை என்னும் நூலின் முதற்பக்கம் மூர்த்தி பூஜையைப் பற்றிய வாக்கியத்தைப் பாருங்கள்:

नवकारेण विवोहो ॥ 1 ॥ अनुसरणं सावउ ॥ 2 ॥ वयाइ इमे ॥ 3 ॥ जोगो ॥ 4 ॥ चिय वन्दणगो ॥ 5 ॥ यच्चरखाणं तु विहि पुच्छम् ॥ 6 ॥

ஜைன சிஷ்யர்கள் (சிராவகர்) கோயில் முதல் வாசலில் நவகாரத்தை ஜபிக்க வேண்டும். (1) பிறகு நான் உண்மையான சிஷ்யன், மெய்யடியான் என்று நினைத்தல் வேண்டும். (2) பிறகு அணு விரதாதிகள் எத்தனை என்று நினைக்க வேண்டும். (3) நான்காவது வாசலில் ஞானாதிகமே மோட்சம் அதுயோகத்தால் வரும்; ஜீவனை நிமல மாக்கும் இந்த ஆறுவழிகளே யோகமாகும். இவற்றை நாம் அடைவோம் என்ன வேண்டும். (4) ஐந்தாவது சைத்யவந்தனம்; அதாவது மூர்த்திமுன் வணங்குதல். பிறகு அதற்கு நிவேதனம் செய்தல், பூஜைபுரிதல், (5) ஆறுவது, ஆறுவதுவாயலில் ஒன்பது பிரமாணக்கதைகளைச் சொன்ன கடமைகளை நினைத்துக் கொள்வது. (6) இதே, நூலில் மாலை சாப்பாட்டிற்கு முன் தீர்த்தங்கரர் மூர்த்தி பூஜையும் கோயில் கதவுகளுக்கு பூஜையும் செய்யவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. கதவு வழிபாடு பெரிய ஆடம்பரமாய் இருக்கும். பழங் கோவில்களைப் புதுப்பித்து கோவில் பணி செய்தால் மோக்ஷம் உண்டாகும். கோவில்களில் வணக்கமாகச் சென்று பணிந்து பூஜை செய்யவேண்டும்.

"नमो जिनेन्द्रेभ्य:" "நமோஜினேந்திரேப்ய:" போன்ற மந்திரங்களைச் சொல்லி அபிஷேகம், பூஜை நடத்தவேண்டும். பிறகு இந்த மந்திரத்தை "जलचन्दनपुष्पधूपदीपनै:" உச்சரித்து சந்தனம் இடவேண்டும். அலங்கார தூப, தீப நிவேதங்களை அளிக்க வேண்டும். 'ரத்தின சாரபாகம்' 12ஆம் பக்கத்தில் சமணப்பூசாரி அரசன் ஆட்சிக்கு அப்பாற்பட்டவன் என்று சொல்லப்படுகிறது.

விமரிசை : இதெல்லாம் முழுப்பொய். ஏனென்றால் எத்தனையோ ஜைனப் பூசாரிகளை ராஜாக்கள் தடை செய்திருக்கின்றனர்.

அதேநூல் 3ஆம் பக்கத்தில் ஜின விக்கரக பூஜையால் பிணி நீங்கி, தீவினைகள் ஒழியும் என்று சொல்லப்படுகிறது. ஐந்து கௌடிக்குப் (காசுகளுக்கு) புஷ்பங்களை வாங்கி ஜினேந்திரனுக்குச் சூட்டியதால் குமார பாலன் என்றவன் பதினெட்டு நாடுகளுக்கு அரசனானும். இவையெல்லாம் பொய் மூட்டைகள். அறியா மக்களை ஏமாற்றும் சூழ்ச்சி. எத்தனையோ ஜைன மக்கள் பூஜை செய்கிறார்கள்; ஆனால் நோயாளிகளாக இருக்கிறார்கள். மூர்த்தி பூஜை செய்த எத்தனையோ சமணர்களுக்கு ஒரு ஏக்கர் நிலம் கூட இல்லாமல் இருக்கிறது. ஐந்து கௌடி புஷ்பத்திற்கு ராஜியமே கிடைப்பதானால், ஐந்தைந்து கௌடிப்பூ சாற்றி எத்தனையோ பேர் உலகையாளலாமே; அப்படி ஏன் நடக்கவில்லை? பலர் ஏன் அரசாங்க தண்டனைக்கு உள்ளாகிறார்கள்? உருத் தொழுகையால் துயர்க் கடலைத் தாண்ட முடியாது; அப்படி முடியுமானால் மெய்யறிவு, நல்லோர் கூட்டம், மெய்வழி ஒழுக்கம் ஆகியவை தேவையில்லையா? இரத்தின சாரம் 13வது பக்கத்தில், கௌதமர் விரலினின்று அமுதம் ஊறும், அவரை நினைத்தவுடனே எண்ணியது கைகூடும் என்று எழுதப் பெற்றுள்ளது.

விமரிசை : இது மெய்யானால் சமணர்களெல்லாம் அமரராயிருக்க வேண்டுமே. அப்படியில்லையே. அதனால் இதெல்லாம் மூடரை மயக்கும் மாயப் பேச்சு என்று விளங்கவில்லையா? இதில் எவ்விதமான உண்மையுமில்லை. இரத்தின சாரபாகம் 52ஆம் பக்கத்தில் உள்ள பூஜாமந்திரத்தைப் பாருங்கள்:

जलचन्दनधूपनैरथ दीपाक्षतकैर्नैवेद्यवस्त्रैः ।
उपचारवरैर्जिनेन्द्रान् रुचिरैरद्य यजामहे ॥

தண்ணீர், சந்தனம், அக்ஷதை, பூ, தூபதீப நைவேதனம், ஆடை முதலிய சிறந்த உபசாரங்களால் தீர்த்தங்கர பூஜை செய்வோம்.

இதை வைத்தே மூர்த்திபூஜை ஜைனரால் வந்தது என்கிறோம்.

"ஜிநாலயத்தில் மோகம் உண்டாவதில்லை, பிறவிக் கடலை நீந்தலாம்" என்பது விவேகசாரம் பக்கம் 21. மூர்த்தி பூஜையால் முத்தி, ஜினமந்திரம் செய்வதால் சத்குணம், ஜல சந்தனாதிகளால் தீர்த்தங்கர பூஜை செய்வதால் நரகத்திலிருந்து தப்பலாம், சுவர்க்கம் புகலாம் (விவேகசாரம் பக்கம் 51, 52). ஜிநாலயத்தில் ரிஷபதேவாதி மூர்த்திகளை வழிபட்டு அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நான்கையும் அடையலாம் (விவேகசாரம் 55). ஜின மூர்த்தி பூஜையால் உலகத் துன்பங்களினின்றும் விடுபடலாம்; மோகம் வராது, பிறவிக் கடலைத் தாண்டலாம், நற்குணம் பெறலாம், நரகத்தைத் தப்பலாம், சுவர்க்கத்தை அடையலாம், அறம் பொருள் இன்பம் வீட்டையடையலாம், துயரமெல்லாம் போய்விடும். (விவேகசாரம் பக்கம் 61).

அப்படியானால் எல்லா ஜைனரும் இன்புறவேண்டுமே; அவர்கள் துன்பவிடுதலை பெறவேண்டுமே? அப்படி ஏன் நடக்கவில்லை; ஜைனர் விரும்பியதெல்லாம் ஏன் அடையவில்லை? ஏன் அவர்கள் வருந்தவேண்டும்? இந்த விவேகசாரம் மூன்றாம் பக்கத்தைப் பாருங்கள். ஜினமூர்த்திகளை—நாட்டியோர் தமது தமது குடும்பம் பிழைக்கும் வழியைக் கண்டுகொண்டார்கள் என்று எழுதியிருக்கிறது. ஆனால் விஷ்ணுமூர்த்திகளை வணங்குவது மிகவும் கெடுதல், நரகவழி என்று விவேகசாரம் பக்கம் 225-ல் காணலாம்.

விமரிசை : சிவ விஷ்ணு மூர்த்திகளால் நரகம் விளையுமானால், ஜைன மூர்த்திகளால் ஏன் நரகம் விளையாது? ஜைன மூர்த்திகள் தியாகிகள் சாந்தமூர்த்திகள்; சுபந் தருவோர். சிவாதி மூர்த்திகள் கெடுதல் என்றால் உங்கள் மூர்த்திகளுக்காக லட்சக் கணக்கில் செலவுசெய்து கோயில்

கள் கட்டி, சந்தனம் கேஸராதிகளை அளிக்கும் போது தியாக மூர்த்திகள் ஆவதெப்படி? சிவாதிமூர்த்திகள் வானத்தின் கீழிருக்கின்றன. அவை தியாகிகள் அல்லவா? சாந்த மூர்த்தியா? ஜடப்பொருள்களெல்லாம் நிச்சல சாந்த மூர்த்திகளே! எல்லா மதங்களின் மூர்த்திபூஜையும் வீணே யாகும்.

**வினு:** ஆடையாபரணங்களால் அலங்கரிக்காத எங்கள் விக்கிர கங்களே சிறந்தவை.

**விடை:** எல்லோருடைய முன்னும் விக்கிரகங்களை நிர்வாண மாக நிறுத்துவது மிருகத்தனமாகும்.

**வினு:**—பெண்ணுருவைப் பார்த்தால் காமவுணர்வு உண்டா கிறது; ஆனுல் சாது யோகிகளின் உருக்களைப் பார்த்தால் நற்குணங்கள் உண்டாகின்றன.

**விடை:** கல்லுருக்களைக் காணும்போது நல்ல குணங்க ளுண்டாகுமானுல் ஜடத்வாதி குணங்களும் உனக்கு வரு கின்றனவே. ஜடபுத்தியால் நீ வீணுவாய். மேலும் உத்தம வித்துவான்களின் சேவையை நீத்தால் மடய ுவாய். இந் நூல் பதினென்ருவது அத்தியாயத்தில் காணும் உரு வணக்கக் குற்றங்களுக் குள்ளாவாய். விக்கிரகப் பூஜையி லுள்ள பொய்ச் சரக்குகள் போலவே அவர் மந்திரங்களிலும் பல அசம்பாவிதங்கள் உள்ளன.

नमो अरिहंताणं नमोसिद्धाणं नमो आयरियाणं नमो उवज्झायाणं नमो लोए सव्वसाहूणं एसो पञ्चनमुक्कारो सव्व पावप्पणासणो मङ्गलाचरणं च सव्वे सिपढमं हवइ मङ्गलम् ॥ 11 ॥

(ரத்னஸார பாகம் 1, பக்கம் 1)

அருஹந்தருக்கு வணக்கம், சித்தருக்கு வணக்கம், ஆசாரி யருக்கு, உபாத்தியாயருக்கு, சாதுக்களுக்கெல்லாம் வணக் கம். இது ஜைனரின் குரு மந்திரம். இதன் பெருமை பெரிதாம். தந்திர புராணுதிகளைக் கூடத் தூக்கியடிக்கும் படி இதன் பெருமையைச் சொல்லுகிருர்கள்.

नमुक्कार तउपढ़े ॥ 9 ॥ जउकव्वं । मन्ताणमन्तो परमो इमुत्ति धेयाणधेयं परमं इमुत्ति । तत्ताणतत्तं परमं पवित्तं । संसारसत्ताण दुहाह-याणं ॥ 10 ॥ ताणं अन्नन्तु नो अत्थि । जीवाणं भवसायरे । बुड्ढूं

ताणं इमं मुत्तुं । न मुक्कारं सुपोययम् ॥ 11 ॥ कव्वं । अणेगजम्म-तरसं चिआणं । दुहाणं सारीरिअमाणुसाणुसाणं । कत्तोय भव्वाण-भविज्जनासो न जावपत्तो नवकारमन्तो ॥ 12 ॥

இது ச்ராத்ததின கிருத்தியம் 3-ஆம் பக்கத்தில் உள்ளது. இது தூய மந்திரம், பரம மந்திரம், தியானத்திற்குத் தலை சிறந்தது. பர தத்துவமானது. கடலைக் கடக்க கப்பலைப் போன்றது (10). நவகார மந்திரம் துயர்க் கடலில் வருந்தும் ஜீவருக்கு உபயோகமானது. இம் மந்திரமுடையோர் பவசாகரந் தாண்டுவோர்; பிறர் அதில் மூழ்குவர். இதுவே துன்பக் கடலைக் கடக்கும் தோணியாகும். பாபங்களிலிருந்து ஜீவனைக் காத்து, துன்ப மொழித்து முக்தி தந்து காக்க வல்ல மந்திரம் இது ஒன்றே (11). அது பல பிறவிகளில் செய்த வினையுடற் பாபங்களை விலக்குகிறது. இம் மந்திரம் பெறுதார் பவக்கடல் கடக்க முடியாது. தீ முதலிய எண்வித பயங்களைத் தீர்க்க இம்மந்திமே துணை; வேறன்று. வைடூரிய மணி போலும், பகை யச்சம் போக்கும் படைக் கலம் போலும்; இந்த நவகார மந்திரம் சுருத கேவலிகளுக்குப் பயனாகிறது. துவாதசங்கத்தில் மிகச் சிறந்தது, இந்நவகாரம் மந்திரமே. இதன் பொருள்:—

(1) சகல தீர்த்தங்கரர்களுக்கும் வணக்கம்—நமோ ஹரி ஹந்தாணம். (2) சகல ஜைன சித்தருக்கும் வணக்கம்—நமோ சித்தணும். (3) சகல ஜைனுசாரியருக்கும் வணக்கம்—நமோ ஆயரியாணும். (4) சகல ஜைன உபாத்தியாயருக்கும் வணக்கம்—நாமோ உவஜ்ஜாயாணும். (5) இவ்வுலகிலுள்ள சகல ஜைன சாதுக்களுக்கும் வணக்கம்—நமோ லோஏ ஸப்ப ஸாஹுணும். மந்திரத்தில் ஜைன பதம் இல்லை. நாம் அதையும் சேர்த்துள் ளோம். ஏனெனில் ஜைனரன்றிப் பிற மதத்தார் எவருக்கும் வணங்கக் கூடாது என்பது பல ஜைன நூல்களில் எழுதப்பட் டுள்ளது. கல்லும், கட்டையும் தெய்வமென்று பூஜிப்பவர்கள் நல்ல பலனைப் பெறுவார்களென்று தத்துவ விவேகம் பக்கம் 169-ல் இருப்பதைக் காண்க. அப்படியானுல் மூர்த்தி தரிசனம் செய்த ஜைனரெல்லாம் ஏன் சுக மடையவில்லை? பார்ஸ்வநாத மூர்த்தி தரிசனத்தால் பாபம் போகும் என்று இரத்தின சாகரம் பக்கம் 10-ல் காண்கிறது. கல்ப பாஷ்யம் பக்கம் 51-ல் இலட்சத்து இருபதினுயிரம் ஆலயங்கள் பழுது பார்க்கப்பட்டதாகக் கண் டிருக்கிறது. மூர்த்தி பூஜைபற்றிச் ஜைனரிடம் பல நூல்கள்

உண்டு. மூர்த்தி பூஜையின் மூல காரணம் ஜைன மதமே என்பது உணர முடிகிறது.

## ஜைன சாதுக்கள் லீலை

(1) ஒரு ஜைன சாது கோசா என்னும் வேசியுடன் சேர்ந்து பிறகு துறந்து சுவர்க்கமடைந்தான் என்று விவேக சாரம் பக்கம் 228-ல் காண்கிறது. (2) இந்த நூலின் 101 (106, 107)-வது பக்கத்தில் அர்ணகமுனி நெறி தவறி தத்தா சேட்டின் வீட்டில் சிற்றின்ப சுகங்களை யனுபவித்த பின்னரே தேவலோகம் சென்ற தாகக் காண்கிறது. (3) ஸ்ரீ கிருஷ்ண குமாரனை டன்டண முனியை ஸ்தாலியா கொண்டு போனான். அவன் ஒரு தெய்வ மானன். (4) இதே நூலில் 156 ஆம் பக்கத்தில், போலிச் சாது வானாலும் ஜைன முனிகளை இல்லறத்தார் வணங்க வேண்டு மென்று காண்கிறது. தூய வொழுக்கத்தானாலும், தீய வொழுக் கத்தானயினும் சரி, இச் சாதுக்கள் வழிபடத் தக்கவர்களே. ஒழுக்க மற்றவனானாலும் ஜைன சாதுவே பிற மதச் சாதுக்களை விடச் சிறந்தவன் (விவேக சாரம் பக்கம் 168). ஒழுக்கமற்ற நெறிகெட்ட சாதுவானாலும் சரி இல்லறத்தார் சமண சாதுவைச் சேவிக்கவேண்டும் (பக்கம் 171). ஒரு திருடன் தன் தலை மயிரைப் பறித்துக்கொண்டு ஒழுக்கம் உயர்ந்தான். அவன் பச்சா தாபத்தால் உண்மையறிவை யடைந்து ஆறு மாதத்தில் சித்த ஞானன் (பக்கம் 216). பெருந் தீவினை செய்த சாதுகூட நல்ல கதியடைந்தானும். ஸ்ரீ கிருஷ்ணன் மூன்ருவது நரகத்தை அடைந்தானும் (பக்கம் 106). பாருங்கள் ஜைன சாது லீலையை. தன்வந்தரி வைதியர் நரகத்தைச் சேர்ந்தார் என்று பக்கம் 145-ல் காண்கிறது. யோகி ஜங்கமன், காஜி, முல்லாக்கள் இவர்கள் எவ்வளவு கடுந்தவம் செய்து கீழ்க்கதியை யடைகிருர்கள் (பக்கம் 48.)

திருபிருஷ்ட்ட வாசுதேவர், துவிப்பிருஷ்ட்ட வாசு தேவர், சுயம்பு வாசுதேவர், புருஷோத்தம வாசுதேவர், புருஷ சிம்ஹ வாசுதேவர், புருஷ புண்டரீக வாசுதேவர், தத்த வாசுதேவர், லக்ஷ்மண வாசுதேவர் ஸ்ரீ கிருஷ்ண வாசுதேவரான நவ வாசு தேவர்களும் 11-வது, 12-வது, 14-வது, 15-வது, 18-வது, 20-வது, 22-வது தீர்த்தங்கரர் காலத்தில் நரகத்தை யடைந் தார்களாம். அச்வக் கிரீவப் பிரதி வாசுதேவர், தாரகப் பிரதி வாசுதேவர், மோதகப்பிரதி வாசுதேவர், மதுப்பிரதி வாசு

தேவர், நிசும்பப்பிரதி வாசுதேவர், பலிப்பிரதி வாசுதேவர், ப்ரஹல்லாத பிரதி வாசுதேவர், ராவணப் பிரதி வாசுதேவர், ஜராசந்தப் பிரதி வாசுதேவர் ஆக நவப்பிரதி வாசுதேவர் களும் நரகத்தையே அடைந்தார்கள் (பக்கம் 171). ரிஷப தேவர் முதல் மகா வீரர் வரையிலுள்ள 24 தீர்த்தங்கரரும் மோக்ஷத்தை யடைந்தார்கள். (கல்ப பாஷியம் பக்கம் 55-86).

**விமரிசை:** சபாஷ்! விபசாரர், தாசி லோலர், திருடர் உள்பட சாதுக்கள். சிராவகர், தீர்த்தங்கரருக்கெல்லாம் மோக்ஷமாம். தர்ம சீலரான ஸ்ரீ கிருஷ்ணுதி மகாத்மாக்களுக்கு நரகமாம். எவ்வளவு கொடிய சொல்! அறிவாளர் சிந்திக்கலாம். உண்மையைச் சொல்லப்போனல், சமணர்களைச் சேர்வதும், காணுவதுங்கூட நல்லோருக்குத் தீங்காகும். ஏனெனில் அந்த நல்லோர் உளத்தும் பொய்ப் புகுந்து விடும். இந்தப் பிடிவாதமான தூர்த்தருடன் கூடுவதால் கெடுதலே விளையும். ஜைனரிடமுள்ள நல்லோருடன் சேருவதில் குற்றமில்லை.

கங்கைமுழுக்கு, காசியாத்திரை முதலியவற்ருல் நன்மை ஏற்படாதாம்; தங்களுடைய கிர்நார், பாலிடாணு, ஆபு ஆகியவைகளைக் கண்டால் முக்திவருமாம் (விவேகசாரம் பக்கம் 55).

**விமரிசை:** சைவ, வைணவரின் மூர்த்தித்தலம் தீர்த்தம் போலவே சமணரதும் ஜட ரூபமே. இங்கே சிறிது ஆலோசித்துப் பாருங்கள். அதில் ஒன்றைத் தூற்றி மற்றென்றைப் போற்றுவது பண்பாகாது.

## சமண முக்தியின் வருணனை

மகாவீர தீர்த்தங்கரர் கௌதமரைப் பார்த்துச் சொல்லுவதாவது (இரத்தினசார பாகம் பக்கம் 23, 24):—மேலுலகில் ஒரு சித்தசிலா ஸ்தானம் இருக்கிறது. சுவர்க்க புரிக்கு மேல் அது உயரமானது. 4500000 யோசனை நீளமும், அவ்வளவே அகலமும் உள்ளது. 8 யோசனை பருமனுள்ளது. முத்தையும், பாலையும் விட ஒள்ளியது. அது தங்கப் பொலிவும், படிகத் தெளிவும் கொண்டது. இந்த சித்த சைலம் பத்தொன்பதாம் அடுக்கில் உள்ளது. அதற்கு மேல் சிவபுரம் இருக்கிறது. இங்கேயும் முக்தபுருஷர் வசிக்கின்றனர். அங்கே பிறப்பு, இறப்பு இல்லை.

எல்லாரும் ஆனந்தமா யிருக்கிறார்கள். அவர்களுக்கு ஜனன மரணாதிகள் இல்லை. கர்மம் உதிர்கிறது. இது ஜைனர் முக்தி நிலை.

விமரிசை: வைகுண்டம், கைலாசம், கோலோகம், ஸ்ரீபுரி முதலியவற்றைப் புராணிகர் கொண்டாடுவர். கிறிஸ்துவர் நான்காம் வானம், முஸ்லீம்கள் ஏழாம் வானம் போற்றுவர். சமணர் சித்தசிலை, சிவபுரி இரண்டையும் முக்தி நிலையமாகக் கொள்வர். ஜைனருக்கு உயர்வாகத் தோன்றுவது, உலகின் சில பகுதியில் வசிப்பவருக்குத் தாழ்வாகத் தோன்றும். உயர்வு தாழ்வு தனி நிலையன்று. இந்தியாவிலுள்ள சமணர்களுக்கு எது உயர்ந்ததா யிருக்கிறதோ அது அமெரிக்கர்களுக்குத் தாழ்ந்ததே யாகும். இப்படியே அமெரிக்காவிலுள்ளவர்கள் விஷயத்திலும். சித்தசிலை 45 லக்ஷ யோஜனை அல்லது அதைவிட இரு மடங்கான 90 லக்ஷம் யோஜனை யிருந்தாலென்ன! அந்த முத்தியும் பந்த நிலையே. ஏனெனில் அந்த நிலையை விட்டதும் முக்தியும் போய்விடும். எப்போதும் அதேயிடத்தில் இருக்க விருப்பமும், அதைவிட்டு வெளிக் கிளம்ப வெறுப்பும் முக்தி ஜீவன்களுக்கும் உண்டாகும். விருப்பு, வெறுப்புள்ள நிலை முக்தி நிலையாகுமா? உண்மையான முக்திநிலையை ஒன்பதாவது அத்தியாயத்தில் சொல்லியுள்ளோம். சமணர்கள் நம்பும் முக்தியும் ஒரு பந்தமே. முக்திவிஷயத்தில் சமணர்கள் மதி மயக்கங் கொண்டுள்ளனர். வேதஞான போதமின்றி முக்தி ஸ்வரூபத்தை யாரும் அறியமுடியாது.

இன்னும் சில அபத்தச் சரக்குகளைக் கேளுங்கள்:

கீழ்க்கண்டவைகளை விவேகசாரத்தில் காணலாம்:—மகாவீரர் பிறந்தவுடன் ஒரு கோடியே ஏழு லட்சத்து கலச நீர் ஆட்டினராம் (பக்கம் 78.). தசார்ண ராஜா மகாவீர தரிசனத்திற்குச் சென்றார். அங்கு இறுமாப்புட னிருக்கவே, அதைக் கண்டிப்பதற்காக 16,777,216,000 இந்திரர்களும், 13,370,572,800,000,000 இந்திராணிகளும் தோன்றினார்கள். இதைக் கண்ட அரசன் ஆச்சரியங் கொண்டான்.

விமரிசை: நமது பூமிபோல எத்தனை உலகங்கள் இந்திரர்களும், இந்திராணிகளும் நிற்கத் தேவையாயிருந்தனவோ!

சிராத்ததின கிருத்தியம் (ஆத்மநிந்தாபாவனு) 31ஆம் பக்கத்தில், குளம், கிணறுகள் வெட்டக்கூடாதென்றும் தடுக்கப் பட்டிருக்கிறது.

**விமரிசை:** எல்லாரும் ஜைனமதத்தை நம்பிக் குளம், கிணறு வெட்டாது போனுல் தண்ணீர் ஜனங்களுக்கு எங்கிருந்து கிடைக்குமோ?

**வினு:**—குளம் கிணறுகளைத் தோண்டுவதினுல் அநேகம் ஜீவராசிகள் மடிந்து பாபம் விளைகிறது. அதனுல் ஜைனர் இதைச் செய்வதில்லை.

**விடை:**—உன் புத்தி இப்படிப் போனதேன்? சிறுசிறு ஜீவன்கள் சாவது பாபமானுல் மனிதர், பசு முதலியவைகளுக்கு தண்ணீர்க் கொடுப்பதினுல் உண்டாகும் பெரும் புண்ணியத்தை ஏன் எண்ணுமலிருக்கிருய்?

நந்தமணிகார் என்னும் செல்வன் தன் ஊரில் ஒரு கிணறு தோண்டினுன். அதனுல் நெறிதவறி பதினுறு கொடிய நோய் களால் பீடிக்கப் பட்டான். மறுபிறப்பில் அதே கிணற்றில் தவளையாய்ப் பிறந்தான். மகாவீரரைக் கண்டவுடன் அத்தவளை முற்பிறப்பை நினைத்தது. "முற்பிறப்பில் செய்த அறவினை யால் இப்போது இவன் என்னை வந்து வணங்கினுன்" என்ருர் மகாவீரர். பிறகு தவளை சிரேணிகனின் குதிரையினுல் மிதிபட்டு இறந்தது. உடனே நல்லெண்ணத்தின் பயனுல் தர்துராங்கன் என்னும் பெயரையுடைய மஹார்திக தேவதையானது. தவளை சேட்டு அவதி ஞானத்தால் மகாவீரனை அறிந்து வணங்கிச் சென்ருனும். (தத்துவ விவேகத்தின் பக்கம் 196).

**விமரிசை:** அறிவிற்கு முரணுன பொருத்தமற்ற பொய்களைக் கூறுவது மகாவீரனின் பெருமைக்கே இழுக்காகும்.

ஒரு சாது பிணத்தின் ஆடையை அணியலாமாம் (பக்கம் 36ஆம் சிராத்தாதிக் கிருத்தியம்).

**விமரிசை:** இச் சாதுக்களும் மகாப் பிராமணர்கள் போலும். ஆடைகளை சாதுக்கள் எடுத்துக் கொண்டால் ஆபரணங் களை (விலையுள்ளதானபடியால்) வீட்டிலிருப்பவர் எடுத்துக் கொள்வார்கள் போலும். இவர்களைக் குறித்து என்ன நினைப்பது!

ரத்தினசாரம் பக்கம் 105-ல் வறுத்தல், அரைத்தல், சாதம் சமைத்தல் முதலியன பாபம் என்று சொல்லப்பட்டுள்ளது.

விமரிசை : இதோ பாருங்கள். இவர்களின் மூடக் கூற்று! இச் செயல்களின்றி மனிதன் வாழ்வதெப்படி? சமணர்களும் சமைத்தல், புசித்தலை விடுத்தால் சாகவேண்டியது தான். இந்நூல் இத்துடன் நிற்கவில்லை.

தோட்டம் வைக்கும் தோட்டக்காரன் லட்சக்கணக்கான பாபம் சம்பாதிக்கிறானும்! (பக்கம் 104).

விமரிசை : தோட்டக்காரனுக்கு லட்சம் பாபமானால் என்ன? உயிர்களுக்கு இலை, கறிகாய்கள், தானியம், நிழல் இனிய பொருள்களையும் தருவதால் பெறும் புண்ணியம் கோடி மடங்கல்லவா? இதை ஏன் ஜைனர் நினைக்கவில்லை? என்ன மதியீனம்.

லப்தி என்னும் சாது ஒருவர் தடுமாறி வேசி மனையடைந்து அறத்தின் பெயரால் பிச்சை கேட்டான். அவள் அங்கே அறத்திற்கு இடமில்லை பொருளுக்கே இட முண்டென்றாள். இதைக் கேட்டு அவள் வீட்டில் $12\frac{1}{2}$ லட்சம் மோகர்களைப் பொழிந்தான் சாது (தத்வ விவேக பக்கம் 202 ).

விமரிசை : மடயனே இதை நம்புவான்!

கல் விக்கிரகம் குதிரைமேலேறி நினைத்ததும் வந்து பாது காக்குமாம்! (ரத்தினசாரம் பக். 67)

விமரிசை : திருடர், கொள்ளைக்காரரர், சத்துருக்கள் தாக்கும் பொழுது இன்று அக் கல்விக்கிரகம் வந்து உங்களைக் காப்பாற்றுமா? அப்படியானால் போலிஸ் ஸ்டேஷனில் முறையிடுவதேன்?

ஜைன சாதுக்களின் குணங்களை ஜினதத்தசூரி சொல்லுகிறார் :—

सरजोहरणा भैक्षभुजो लुञ्चितमूर्द्धजाः ।
श्वेताम्बराः क्षमाशीला निःसङ्गा जैनसाधवः ॥ 1 ॥

लुञ्चिता पिच्छिकाहस्ता पाणिपात्रा दिगम्बराः ।
ऊर्ध्वाशिनो गृहे दातुर्द्वितीयाः स्युर्जिनर्षयः ॥ 2 ॥

भुङ्क्ते न केवलं न स्त्री मोक्षमेति दिगम्बरः ।
प्राहुरेषामयं भेदो महान् श्वेताम्बरैः सह ॥ 3 ॥

(1) வழியைப் பெருக்க ஸரஜோஹாண—சமரிவைத்துக் கொள்ளுதல், பிச்சையெடுத்துண்ணல், தலைமயிரைப் பறித்துக் கொள்ளுதல், வெள்ளாடையணிதல், பொறைபுரிதல், தனிமை காப்பவர். இந் நியமத்திலிருப்பவர் சுவேதாம்பர ஜைனராவார்.

(2) ஆடையணியாமை, தலைமயிரைப் பிடுங்கிக் கொள்ளல், தரையைப் பெருக்கக் கக்கத்தில் நூல் துடைப்பம் கொண்டிருத்தல், கைப் பிச்சையுண்ணல் இவை திகம்பர சாதுக்களின் நியமம் ஆகும். கிரகஸ்தர் சாப்பிட்ட பிறகே சாப்பிடுவோர் ஜினரிஷி சாதுக்களாவார்.

(3) பெண்களுக்கு மோட்சம் உண்டு என்பர் சுவேதாம்பரர்; இல்லையென்பர் திகம்பரர். இருவருக்கும் வேற்றுமை இவ்வளவே.

ஜைனர் சாதுலட்சணம் இவ்வளவே. ஜைனர் தலைமயிரைப் பிடுங்கிக் கொள்வது தெரிந்ததே. ஐந்து கைப்பிடி பிடுங்கிக் கொள்ள வேண்டுமென்று அவர் நூலிற்காணும். விவேகசாரம் பாகம் 2, பக்கம் 216-ல் கைநிறைய ஐந்து பிடி மயிரைப் பிடுங்கிக் கொண்டு சாதுவானுன் என்கிறது. பசு மயிர் போலிருக்கும்படி கேசத்தைப் பறிக்கவேண்டும் (கல்ப சூத்திர பாஷ்யம் பக்கம் 108).

விமரிசை : ஜைனரே ! உம் இரக்கம் எங்கே ? தயா தர்மம் எங்கே ? தானே, குருவோ, பிறரோ மயிரைப் பறித்தால் எவ்வளவு வலியுண்டாகும். ஜீவர்களை வருத்துவதே ஹிம்சை ஆகும்.

விவேகசாரத்தில் (பக்கம் 7, 8) விக்கிரம சகாப்தம் 1633 (கி.பி. 976-ல்) சுவேதாம்பரிகளிடமிருந்து டுண்டியர் (தேடுகிறவர்), டுண்டியரிடமிருந்து தேரஹ்பந்திகள் தோன்றினதாக எழுதப்பட்டிருக்கிறது. டுண்டியர் கல்லுருவைத் தொழார். உருவணக்கத்தை நம்பார். குளிக்கும்போதும், உண்ணும் போதுந் தவிர, மீதி காலங்களில் வாயில் துணிப் பட்டி கட்டிக் கொள்வர். யதிகள் படிக்கும்போது மாத்திரம் வாயில் பட்டிக் கட்டிக்கொள்ளுவர். மீதி நேரத்தில் அன்று.

வினு :—முகப்பட்டி அவசியம்; காற்றில் நுண்ணுயிர்கள் ஏராளமாயுள்ளன. அவை வாய்மூச்சின் உஷ்ணத்தால் இறக்கும். வாயைக் கட்டிக்கொள்ளாவிட்டால் அவற்றின் பாபம் நமக்கு வரும். வாயைக் கட்டிக்கொண்டால் அந்தப் பாபம் பட்டி கட்டாதவருக்குப் போகும்.

விடை :—இது கல்வியறிவிற்கும், காட்சியறிவிற்கும் பொருந்தவில்லையே. ஜீவன் என்றுமுள்ளது. அது வாய் மூச்சால் இறந்துபோகாது. உங்கள் நம்பிக்கையும் இதுதானே?

வினு :—ஜீவன் இறக்காது. ஆனால் வாய்மூச்சின் வெப்பத்தால் அவை வருந்தும். வருத்துவது பாபம். ஆதலால் முகப் பட்டி வேண்டும்.

விடை :—இது முடியாத காரியம். எதையாவது வருத்தாமல் வாழமுடியாது. நீங்கள் கூறுகிறபடியே வாய்மூச்சால் ஜீவ ஹிம்சை உண்டாவதானால், நடத்தல், திரிதல், உட்காருதல், கைதூக்கல், கண்ணிமைத்தல் முதலிய செய்கைகளினாலும் ஜீவஹிம்ஸை விளையவேண்டுமே? எனவே நீங்களும் ஜீவஹிம்சைக்குப் புறம்பில்லை.

வினு :—ஆம். கூடுமானவரை ஜீவராசிகளைக் காத்தல் வேண்டும். காற்று முதலிய பதார்த்தங்களில் எங்கும் உயிர்கள் பரவிக் கிடக்கின்றன. வாயைக் கட்டுவதால் இயன்ற மட்டும் உயிர்கள் தப்புமே. அந்தமட்டில் பாபம் குறையுமே:

விடை :—என்ன அறிவீனம்! துணி மூடிக் கொள்வதினால் பிராணிகளுக்கு, பின்னும் பெருந் துன்பம் விளைகிறது. வாய் கட்டியிருந்தாலும் வெளி மூச்சுக்குப் போக வழியில்லாமல் கட்டுப் பட்டு அதிகச் சூடேறி வாய் ஓரமாகவும் மூக்குத் துவாரங்களின் வாயிலாகவும் வெளிவரும். உஷ்ணமூச்சு அதிக உயிர்த்துன்பம் விளைவிக்கும். கவனியுங்கள்! ஒரு வீட்டுக் கதவெல்லாம் அடைக்கப்பட்டிருந்தால் உள்ளே சூடு அதிகமாகும். திறந்துவிட்டால் சூடிராது. அதேபோல் வாய் அடைபட்டிருந்த வெப்பமூச்சு முழுவேகத்துடன் வெளியில் வருவதனால் பிராணிகளுக்கு அதிக துன்பம் அளிக்கிறது.

ஒருவன் வாயினாலும், மற்றொருவன் குழாயினாலும் நெருப்பை ஊதுகிறான் என்று வைத்துக்கொள்ளுவோம். வாயி

லிருந்து வெளிவரும் மூச்சு விசாலமாகப் பரவிச் சிதறும். அடைத்து வைத்து முழுமூச்சுடன் ஊதும் குழாய்க் காற்று அதிக வாயை மூடிக்கொள்வதின் பயனுக மூக்குமூச்சு பலமாகிச் சூடேறும். அதனுல் பல உயிர்களுக்குத் தீங்காகும். ஆகையால் வாய் கட்டினவர்களைக் காட்டிலும் கட்டாதவர்களே பெரிய தர்மாத்மாக்கள். வாய் பட்டி கட்டிக் கொள்வதால் நாற்றம் பெருகும். உடலுக்குள் எத்தனையோ ஆபாசங்கள் உண்டு; அவையெல்லாம் உள்ளே அடைபட்டிருந்தால் குப்பென்று துர்க்கந்தம் கிளம்பும். காற்றுப் போகும் மல அறையைவிட அடைபட்டது அதிகத் தீய வாடை வீசும். ஜைனர் வாய்கட்டுகிருர்கள். பல் தேய்ப்ப தில்லை, முகங் கழுவு தில்லை, குளிப்ப தில்லை; அழுக்கினுல் நோய் பரப்புகிருர்கள்; கொடிய பாபத்திற்கே ஆளாகிருர்கள். இரவுக் கழிவுகளால் காற்றுக் கெட்டு, காலரா பேதி போன்ற தொத்துநோய்கள் வருகின்றன. தீயநாற்றமில்லா விட்டால் அவை வருவதில்லை. வாய்ப்பட்டியின்றி, பல்விளக்கி, முகங்கழுவி, குளித்துண்டு, ஆடைகளைச் சுத்தமாக வைத்துக் கொண்டால் சுகாதாரமாகும். அப்படி யல்லாதவர் காற்றைக் கெடுத்து நோயை உண்டாக்குகிருர்கள். அசுத்தமானவருடன் கூடாதவர்கள் சுத்தமாவர்; அவர்கள் வாடையில் இருப்பவர் சுகம் கெடும், மதிநலங் கெடும். அதேமாதிரி துர்கந்திகளான உங்கள் சாகவாசத்தால் மதி கெட்டு உடல் நலங் கெடும். புத்தி குறைந்தால் தர்மானுஷ்டானமும் குறையும். தீய வாடை வீசும் உங்கள் உறவு பிறருக்குத் தீங்கே தருகிறது.

**வினு**:—மூடின வீட்டுள் எரியும் தீ வெளி உயிர்களுக்குத் தீங்கு தராது. அதுபோல் முகப் பட்டியால் வெளி ஜீவர்களுக்குத் தீங்குவிளையாது காக்கிருேம். முன்னே அனல் எரியும் போது இருகைகளாலும் முகத்தை மூடிக்கொண்டால் கனல் தாக்குவதில்லை. அதுபோல முகப்பட்டியுமாகும். காற்றுயிர் கள் உடல் கொண்டன, ஆதலால் துன்புறும்.

**விடை**:—இது சிறுபிள்ளை பேச்சு. முதலில் உள்ளே சந்தும் காற்ருேட்டமும் இல்லாத இறுக்கமான வீட்டில் தீ சரியாக எரியாது. உதாரணமாக எரியும் மெழுகு திரியை ஒரு பாத்திரத்தில் வைத்து மூடினுல் அணைந்தே போகும். வெளிக் காற்றில்லாமல் இவ்வுலகில் வாழும் மனிதரும் மற்ற பிராணிகளும் உயிர் வாழமுடியாது. அதுபோலவே தீயும்.

அனலை ஒருபுறம் மூடினால் மற்றொரு புறம் வேகமாகக் கிளம்பும். அதனால் உங்கள் பேச்சு சரியில்லை.

வினா :—சிறியோர் பெரியாரிடம் (காதிற் கடுத்துப்) பேசும்போது வாயைத் துணியால் அல்லது கையால் பொத்திக் கொண்டு பேசுவதேன்? எச்சில் அல்லது நாற்றம் தெறிக்கும் என்றுதானே? புத்தகம் படிக்கும்போதும் எச்சில் தெறிக்கிறதே. அதனால் வாய் கட்டிக்கொள்வது நலமே.

விடை :—ஜீவ ரக்ஷணத்திற்காக வாய் கட்டுவது வீண் செயலே என்பது இதனால் விளங்கும். பெரியோரிடம் இரகசியமாகப் பேசும்போதே வாயைக் கையால் அல்லது துணியால் பொத்திக் கொள்வது வழக்கம். இரகசியத்தைப் பிறர் கேளாதபடியே இப்படிச் செய்கிறார்கள். வெளிப்படையாகப் பேசும்போது இப்படிக் கை வைப்பதில்லை. உங்கள் பல்லில் ஊற்றை நாறுகிறது—பல் விளக்காததால், உங்கள் உடல் நாற்றமடிக்கிறது. பக்கத்தில் அமர்ந்தால் வீச்ச மடிக்கிறது. அதனாலேதான் உங்களிடம் ஜனங்கள் பேசும்போது வாயை மூடிக் கொள்கிறார்கள். காற்று வாக்கில் இரகசியப் பேச்சு பரவக் கூடாதென்றே வாயை மூடுவது வழக்கம். தனியே இருவர் பேசும்போது அப்படிச் செய்வதில்லையே. பெரியவாள் மேல் எச்சில் தெரிக்கக் கூடாதென்று மூடுகிறார்கள்? அப்படியானால் சிறியார் மேல் எச்சில் தெரிக்கலாகுமோ? யார் பேசினாலும் எச்சில் சிறிதாவது தெரித்தே தீரும்—தள்ளி உட்கார்ந்தவர் மீதும் காற்று வாக்கில் நுட்பமாக எச்சில் பரவியேத் தீரும். வாய் வெப்பம் காற்றுப் பூச்சிகளைக் கொல்லும் என்பது வீண்பேச்சு. அப்படியானால் சித்திரை, வைகாசி கடும் வெய்யிலில் எல்லாப் பூச்சிகளும் மாண்டு போயிருக்குமே! அப்படியாகவில்லை. ஆதலால் உங்கள் வாய்க்கட்டிச் சமயம் பொய்யே! உங்கள் தீர்த்தங்கரர் அறிவாளராயிருந்தால் இப்படி வீணுரை கூற மாட்டார்கள்! எல்லா உறுப்புக்களிலும் ஜீவ சக்தி நிறைந்த உயிர்களே ஜீவ-ஹிம்ஸையை உணரக் கூடும். இதற்கு பிரமாணம் :

पञ्चावयवयोगात्सुखसंवित्तिः ॥ (சாங்க்ய அத். 5 சூ. 27)

இது சாங்க்ய சாஸ்திர சூத்திரமாகும். பஞ்சேந்திரியங்களும் பஞ்ச தன்மாத்திரைகளுடன் பொருந்திய போதே

ஜீவன் இன்ப துன்பங்களை உணரும். செவிடனுக்கு வைதால் கேட்காது; குருடன் முன்பு பாம்பு, புலி முதலிய பயமுண்டாக்கும் பிராணிகள் போனாலும் தெரியாது; பாரிச வாயுக்காரனைத் தொட்டால் உணர்விராது; பீனசம் பிடித்தவனுக்கு மணமிராது, நாக்கில்லாதவனுக்குச் சுவைக் காது; அதேமாதிரி இச் சிற்றுயிர்கள் வலியுணர்வதில்லை. ஜீவநிலை இவ்வாறுள்ளது. சுழுப்தி நிலையில் மனிதனுக்குச் சுகதுக்க வுணர்வே கிடையாது; ஏனெனில் சுக துக்கம் மனதில் உள்ளது; அவை உறங்கும் உடலுறுப்புகளுடன் பொருந்தாது தனித்துள்ளன. சத்திர சிகிச்சை, (operation) செய்யும்போது மயக்க மருந்து (குளோரேபாரம்) தருகிறார்கள்; பிறகு கத்திபோட்டு அறுத்தும் கிழித்தும் நோயாளிக்கு நோவில்லை; உணர்வில்லை. மயக்கத்தில் உடல்வலி தோன்றுவதில்லை. இன்ப துன்ப மறிவதில்லை. அதே போலத்தான் காற்றணுக்களும் மரங்களும் சுகதுக்க முணர்வதில்லை. ஆகவே இவைகளை துன்பத்திலிருந்து காப்பாற்றுவது என்பது அர்த்தமற்றது. அவைகளுக்கு சுகதுக்க உணர்ச்சியில்லாதபோது அனுமானாதிகளாவது எப்படி பொருந்தும்?

வினா:—அவையும் ஜீவனாதலால் சுகதுக்கம் அவற்றிற்கும் இல்லையா? ஏன்?

விடை:—கேள் பேதையே! சுழுத்தி நிலையில் நீ இன்ப துன்பம் உணராததேன்? ஆத்மாவிற்கும் அவயவங்களுக்குள்ள பிரசித்த சம்பந்தமே இன்ப துன்பம் உணரக் காரணமாகு மென்று இப்பொழுது தான் சொன்னோம். மயக்க மருந்து கொடுத்துச் சரீர சிகிச்சை செய்யும் மருத்துவர் வெட்டினாலும் கிழித்தாலும் வலி யுணராததேன்? அதேமாதிரி பெரு மயக்க முற்ற உயிர்கள் சுக-துக்கம் உணர்வதில்லை; அதற்கேற்ற சாதனமில்லை, வழியில்லை.

வினா:—நாங்கள் பசுங் காய்கறி கீரை, கந்தமூலங்களை உண்ணோம். ஏனெனில் பசுங்கீரை காய்களில் அணுஜீவர்கள் உள்ளன. கந்தமூலங்களில் கணக்கற்ற சிற்றுயிர்கள் உள்ளன. அவற்றை உண்டால் அத்தனை நுண்ணுயிர்களைக் கொன்ற பாபம் வரும்.

விடை :—இது மடமை. பசுங் காய்கறியுண்பதால் ஜீவஹிம்ஸை எப்படி வரும்? அவை துன்பந் துடிக்கக் காணவில்லையே! உமக்குத் தோன்றினால் காட்டுமே! உமக்கும் தோன்றாது, காட்டவும் மாட்டீர். கண்ணுக்கு மெய்யாகக் காட்ட முடியாமல் உபமானம், சப்த ப்ரமாணம், அனுமானங்களைப் புரட்டிப் பயனில்லை. பெருமயக்கில் ஆழ்ந்த ஜீவருக்கு உணர்ச்சி யிருக்கும் என்று உங்கள் தீர்த்தங்கரர் நம்புவது சரியன்று. மயக்கத்தில் இன்ப துன்ப உணர்வே யில்லை. அறிவுக்கும், புத்திக்கும் முரணானவற்றை உங்கள் தீர்த்தங்கரர்கள் உபதேசித்திருக்கிறார்கள். ஒரு வீட்டிற்கு முடிவு இருக்கும்போது அதில் வசிப்பவர் எப்படி முடிவற்றவரா யிருக்க முடியும்? சிற்றிடத்தில் கணக்கற்ற ஜீவர் எப்படி யிருக்கும்? ஒரு முள்ளங்கியில் எப்படிக் கோடானகோடி ஜீவர் இருத்தல் கூடும்? உமது வாதம் முட்டாள் பிடிவாதமே.

வினா :—இன்னும் பாருங்கள்! நீங்களெல்லாம் காய்ச்சாத தண்ணீர் குடிக்கிறீர்கள். அது மகா பாபம். எங்களைப் போல் தண்ணீரைக் காய்ச்சியே குடிக்கவேண்டும்.

விடை :—இதுவும் வீண்மயக்கமே; காய்ச்சும் போது தண்ணீரில் உள்ள உயிர்களெல்லாம் சாகின்றனவே. அவற்றின் உடலணுக்கள் முழுதும் வெந்நீரில் கலக்கின்றன. அவற்றின் கஷாயத்தையே நீங்கள் குடிக்கிறீர்கள். ஆதலால் நீங்களே மகாபாபிகள்! பச்சைத் தண்ணீர் குடிப்பவர் பாபிகளல்லர். வயிற்றுச் சூடுபட்டதும் நீர் உயிர்கள் மூச்சுவழியே வெளி வந்துவிடும். இருவரும், அதாவது காய்ச்சின நீரை குடிப்பவரும் பச்சைத் தண்ணீர் குடிப்பவரும், குற்றம் செய்யவில்லை. ஏனெனில் நீரணுப் பூச்சிகளுக்கு இன்பதுன்ப உணர்வேயிராது!

வினா :—வயிற்றுச் சூட்டினால் இவை வெளியானால் காய்ச்சும் போதும் ஏன் வெளியேறலாகாது?

விடை :—வெளியேறும். உண்மையே. ஆனால் நீங்கள் உயிர்ப்பினால் உயிர்கள் இறக்கின்றன என்கிறீர்களே; அப்படியானால் நீர் காய்ச்சும்போது இறக்குமே. உங்கள் மதப்படி ஜீவஹிம்ஸையாகும் அல்லது மிகவும் வருந்தி வெளியேறும் அல்லது அவற்றின் உடல் தண்ணீரில் கலந்துபோகும். உங்களுக்குப் பாபம் வரும் அல்லவா?

வினு :—நாங்கள் எங்கள் கையால் வெந்நீர் போடுவதில்லை, இல்லறத்தாரையும் போடச் சொல்வதுமில்லை; ஆதலால் எங்களுக்குப் பாபமேயில்லை.

விடை :—நீங்கள் வெந்நீர் குடிக்காவிட்டால் இல்லறத்தார் காய்ச்ச மாட்டார்களே. ஆதலால் பாபத்திற்கு நீங்களே காரணம். இல்லறத்தாரை விட நீங்களே பெரும் பாவிகள். ஏனெனில், நீங்கள் முன்பே சொன்னுல் ஒரு இல்லறத்தார் மாத்திரம் வெந்நீர் காய்ச்சுவார்கள். சாதுக்கள் வரும்நேரம் தெரியாது. வீட்டுக்கு வீடு சதா வெந்நீர் போட்டுக் காத்திருப்பார்கள். ஆதலால் நீங்களே அந்தப் பாபத்திற்குக் காரணமாவீர்கள். ஆகவே அதிகத் தீ யெரிதல், உணவு சமைத்தல், உழுது பயிரிடல், வாணிகம் முதலியவற்றில் விளையும் பாபங்களுக்குக் காரணமும் நீங்களே; உங்களை நரகத்திற்கு அனுப்ப வேண்டும். உங்கள் உபதேசத்தால் நீரைக் கொதிக்க வைப்பவர் நீரே; காய்ச்சாத நீரை உபயோகிக்கக் கூடாதென்பவரும் நீரே; ஆகவே நீங்களே பாபிகள், உங்களைப் பின்பற்றுவோரும் பாபிகள். நீங்கள் மடமையில் ஆழ்ந்திருேர். அணுவுயிர்களைப் போற்றி அஜைனரைத் தூற்றும் நீங்கள் பாபிகளே யன்ருே?

உங்கள் தீர்த்தங்கரர் மெய்யாளுல், இத்தனை ஆறுகள் ஓடச் செய்வானேன்? இத்தனை நீர்த்தடங்கள் உண்டாவானேன்? உங்களுடைய நம்பிக்கைப்படி கோடிக் கணக்கான ஜீவன்களை வெதுப்பும் சூரியனையும் படைத்திருக்கக்கூடாது. நீங்கள் கடவுள் என்று நம்பும் தீர்த்தங்கரர் சூரிய வெப்பத்தையும் மேகத்தையும் தடுக்க ஏன் தயை செய்யவில்லை? நாம் முன் சொன்னபடி கந்தமூல பலாதிகளில் வாழும் உயிர்கள், சுக துக்கங்களை உணர்வதில்லை. எல்லாவுயிர்களிடமும் தயவு கொள் வது தொல்லையாகும். எல்லா வுயிர்களும் மானிடப் பிறவியடையு மென்று நீங்களும் நம்புகிறீர்கள். திருடரையும் கள்ளரையும் தண்டியாவிட்டால் உலகில் பாபம் பெருகிக் கொண்டு போகுமே. தீயோரைத் தண்டித்து நல்லோரைக் காப்பாற்றுவதே உண்மை யான கருணையாகும். இதற்கு மாறுபடுவது கருணையன்று, மன்னிப்பன்று. வியாபாரத்தில், பொய் சொல்லி, பணம் பறித்து, ஏழைகளை ஏமாற்றும் ஜைனர் பலர் உண்டு. இத்தீய வழக்கங்களை ஒழிக்க நீங்கள் உபதேசிக்காததேன்? வாயை

மூடிச் சூழ்ச்சி செய்வதேன்? (ஆண் பெண் இருபாலர்களுக்கும்) தீட்சை யளிக்கும் பொழுது தலை மயிரைப் பறித்தல், பல நாள் உபவாசம் இருத்தல், முதலான இன்னல்களால் ஆத்ம ஹத்திக்கு ஆளாகிறீர்கள். யானை, குதிரை, ஒட்டகம். இவைகளில் சவாரி செய்வதையும், பிறர் உங்களுக்காக உழைப்பதையும் ஏன் பாபமாகக் கருதுவதில்லை? வடி கட்டிய பொய் புரட்டுகளைக் கூடச் சரியான தென உங்களால் நிரூபிக்க முடியாது; தீர்த்தங் கரர்களினாலுங் கூட அது முடியாததேயாகும். உங்களுடைய சமய நூற்களைப் படிக்கும் பொழுதும், சொல்லும் பொழுதும், உங்கள் நம்பிக்கைப் பிரகாரமே, நீங்களும், உங்களுடைய சீடர்களும் பல பிராணிகளை வதைக்கிறீர்கள். இப் பாபத்தை ஏன் செய்யவேண்டும்? நாம் விரிவாகச் சொல்லாவிடினும் இதை அறிந்து கொள்ளவேண்டியதே. மண், நீர், ஆகாயத்தில் அசைவற்றிருக்கும் நுண்ணுயிர்களுக்கு இன்ப துன்ப வுணர் வில்லை என்பதை அறிக.

இன்னும் ஜைனரின் சில அபத்தங்களைச் சொல்லுவோம்:

மூன்றறை முழம் ஒரு தனுசு. கால அளவை முன்னரே கூறியுள்ளோம். அப்படியே அறிக.

இரத்தின சாரம், முதல் பாகத்தின் 166, 167 பக்கங்களில் காண்பன:

| | பெயர் | சரீரநீளம் | வயது |
|---|---|---|---|
| 1. | இருஷபதேவர் | 500 தனுஷ் | 8,4000,000 பூர்வவருடங்கள் |
| 2. | அஜிதநாதர் | 450 ,, | 7,200,000 ,, |
| 3. | சம்பவநாதர் | 400 ,, | 6,000,000 ,, |
| 4. | அபிநந்தனர் | 350 ,, | 5,000,000 ,, |
| 5. | சுமதிநாதர் | 300 ,, | 4,000,000 ,, |
| 6. | பத்மபிரபா | 140 ,, | 3,000,000 ,, |
| 7. | பார்சுவநாதர் | 200 ,, | 2,000,000 ,, |
| 8. | சந்திரப்பிரபா | 150 ,, | 1,000,000 ,, |
| 9. | ஸுவிதிநாதர் | 100 ,, | 200,000 ,, |
| 10. | சீதளநாதர் | 90 ,, | 100,000 ,, |
| 11. | ச்ரேயாம்சநாதர் | 80 ,, | 8,400,000 ,, |
| 12. | வாசுபூஜ்யசுவாமி | 70 ,, | 7,200,000 ,, |
| 13. | விமலநாதர் | 60 ,, | 6,000,000 ,, |
| 14. | அநந்தநாதர் | 50 ,, | 3,000,000 ,, |

| | பெயர் | சரீரநீளம் | | | வயது |
|---|---|---|---|---|---|
| 15. | தர்மநாதர் | 45 | ,, | 1,000,000 | ,, |
| 16. | சாந்திநாதசுவாமி | 40 | ,, | 100,000 | ,, |
| 17. | குந்துநாதர் | 35 | ,, | 95,000 | ,, |
| 18. | அமரநாதர் | 30 | ,, | 84,000 | ,, |
| 19. | மல்லிநாதர் | 25 | ,, | 5,5000 | ,, |
| 20. | முனிஸுவ்ருத | 20 | ,, | 30,000 | ,, |
| 21. | நமிநாதர் | 14 | ,, | 10,000 | ,, |
| 22. | நேமிநாதர் | 10 | ,, | 10,000 | ,, |
| 23. | பார்சுவநாதர் | 9 | ,, | 100 | ,, |
| 24. | மகாவீரசுவாமி | 7 | ,, | 72 | ,, |

இவ்விருபத்தி நான்கு தீர்த்தங்கரர்களும் ஜைன சமயாசாரியரும் குருமார்களு மாவார்கள். ஜைனர் இவர்களையே பரமேசனுகக் கருதுகிறுர்கள். இவர்களெல்லோரும் மோட்சத்தை யடைந்தவர்கள். மானிடர் இவ்வளவு பெரிய உடலைத் தாங்கி, இவ்வளவு காலம் வாழமுடியுமா என்பதை அறிவாளர் சிந்திக்கட்டும்! இம்மாதிரி யிருந்தால் உலகில் மிகச் சிலருக்கே இடமிருக்கும். இந்த கஜப்புரட்டுகளைப் பின்பற்றி புராணிகர்களும் 1,000, 10,000, 100,000 வருடங்கள் மக்கள் வாழ்ந்திருந்ததாக எழுதி வைத்திருக்கிறுர்கள். இவைகளெல்லாம் வெறும் கப்ஸாக்கள்! ஜைனர் புளுகும் மேற்படியே.

இன்னும் கேளுங்கள் :

1. நாககேது ஒரு கிராமத்தை யொத்தக் கல்லைத் தன் கை விரலில் தாங்கினுன்! (கல்ப்ப பாஷியம் பக்கம் 4.)

2. மகாவீரர் தன் கைவிரலைப் பூமியின் பேரில் அழுத்தவே சேஷ சர்ப்பம் நடுங்கிற்று. (ஷை பக்கம் 37.)

3. பாம்பு மகாவீரரைக் கடித்தது. இரத்தத்திற்குப் பதிலாக பால் வந்தது. பாம்பும் எட்டாம் சுவர்க்கத்தை யடைந்தது. (ஷை பக்கம் 46.)

4. மகாவீரருடைய பாதத்தில் பாற்பாயசம் சமைத்தனர். கால் எரிந்து போகவில்லை. (ஷை பக்கம் 47.)

5. ஒரு சிறிய பாத்திரத்தில் ஒட்டகம் நிற்கச் செய்தனர். (ஷை பக்கம் 16.)

6. உடல் அழுக்கைக் கழுவக் கூடாது, துடைக்கக் கூடாது.
(இரத்தினசாரம் முதற் பாகம் 14 பக்கம்.)

7. மஹாவீரரிடம் பிரியமுள்ள ஜைனசாது தம்சார் வெகுண்டு, உத்வேக ஜனக சூத்திர மந்திரம் ஜபித்ததும், ஒரு நகரம் எரிந்து போனதாம் !
(விவேகசாரம், முதற் பாகம், பக்கம் 215.)

8 அரசன் ஆணையை மதித்தே நடக்கவேண்டும்.
(விவேகசாரம், முதற் பாகம் பக்கம் 227.)

9. கோசா என்னும் வேசி, தட்டில் கடுகு விதைகளை நிரப்பினாள். பூப் பொதிந்த ஊசியை நடுவில் நிறுத்தி, அதன் மேலேறி நடனமாடினாள்; ஊசி காலைக் குத்தவில்லை! விதைகளும்
(ஷை 227.)
சிதறவில்லையாம் !!!

10. ஸ்தூலமுனி இதே வேசியுடன் 12 வருட காலம் கூடி வாழ்ந்தார். பின்னர் தீட்சை பெற்று நற்கதியடைந்தார். பரத்தையும் ஜைன சமயத்தைச் சேர்ந்து பரகதியடைந்தாள்.
(தத்துவ விவேகம் 228.)

11. ஒரு சித்தர் கழுத்தில் தொங்கிய பையானது, தினம் ஒரு வேசிக்கு 500 மோகரா கொடுத்துக் கொண்டே இருந்ததாம்.
(விவேகசாரம், முதற் பாகம், 185.)

12. பலவான், தெய்வம், குரு, பெற்றோர், குலப் புரோகிதர், உற்றார் உறவினர் இவர்களுடைய ஆணையைக் காக்கவேண்டி யும், காட்டிலும், அறம் வழுவி நடந்தபோதிலும், அறப்பயன்
(ஷை பக்கம் 228.)
எய்தும்.

விமரிசை : பாருங்கள் மொட்டைப் புளுகை! ஒரு கிராமம் போன்ற கல்லைத் தூக்குவதும், கை விரலைக் கொண்டு பூமியை அழுத்துவதும், சாத்தியமா? பூமியில் சேஷநாகம் என்பதொன் றில்லாமலிருக்க யார் நடுங்குவது? சமையல் செய்தபொழுது மகாவீரரின் கால்கள் ஏன் எரிந்து போகவில்லையாம்! ஒரு சிறிய பாண்டத்தில் ஒட்டகம் நிற்கமுடியுமா? வாசகர் கவனிக்கட்டும்! உடலழுக்கைக் கழுவாவிட்டால், நாற்றம் சகிக்கமுடியுமா! ஊரை எரித்த சாது கருணையற்ற கல் நெஞ்சராயிருக்கவேண்டும்! மகாவீரர் சேர்க்கையினால் கூட ஆத்ம சக்தியுண்டாகவில்லையே; அவர் மூலம் ஜைனர் நற்கதி அடைவதெப்படி! அவரும் மாண்டு போனாரே! அரசனைக் கீழ்ப்படிவது சிறப்பே. ஆனால் ஜைனர்

பனியாக்கள் ஆனபடியினால் பயத்தினால் இக்கட்டளையை விதித்திருக்கிறார்கள் போலும். கால் குத்தாமலும், விதைகள் சிதறாமலும் ஆடும் வேசி கோசா உடல் அவ்வளவு மெலிவா என்ன! அவள் ஊசிமேல் நின்று நடனமாடியது வெறும் பொய்! என்ன நேர்ந்தபோதும் தர்மத்தைப் போற்றியே நடக்க வேண்டும். துணிப்பை 500 தங்க மோகர்களை அளிக்குமா! இவ்விதமான பொய்களைத் தொகுத்துக் கொண்டுபோனால் ஜைன நூல்களைப் போல் நமதும் விரியும். சிற்சிலவற்றைத் தவிர, ஜைனம் கூறுவதனைத்தும் பொய்யேயாகும். பாருங்கள்!

दो ससि दोरवि पढमे। दुगुणा लवणं मिधाय ईसं मे।
वारस ससि वारस रवि। तप्पभि इनिदिठ ससि रविणो।
तिगुणा पुब्बिल्लजुया। अणंतराणंतरं मिखित्तमि।
कालो ए बयाला। बिसत्तरी पुरकर दूमि॥

(ப்ர. பா. 4, ஸங். சூ. 77, 78.)

ஜம்புத் தீவின் பரப்பு 1,00.000 யோசனைகள் அதாவது 4 லக்ஷம் கோசங்கள். தீவுகளில் முதன்மையானது இதுவே. இதில் இரண்டு சந்திரனும் இரண்டு சூரியனும் ஒளிரும். உப்பு சமுத்திரத்தில் 4 சூரியர். 4 சந்திரர். காதகீ கண்டத்தில் 12 சூரியரும், 12 சந்திரரும் ஒளிரும். 12×3=36. இத்துடன் கூட ஜம்புத் தீவிலுள்ள 2 சூரியரையும் 2 சந்திரரையும், உப்பு சமுத்திரத்திலுள்ள நான்கையும் சேர்க்கவும். ஆகவே கலோததி சமுத்திரத்திலுள்ளவை 42 சந்திரரும் சூரியரும் ஆகும். ஆகமொத்தம் 42×3=126 சந்திர சூரியர். உப்பு சமுத்திரத்திலுள்ள 4 சூரியர், 4 சந்திரர், காதகீ பரப்பிலுள்ள 12, ஜம்புத் தீவிலுள்ள 2, இவற்றைச் சேர்க்கவும். ஆக மொத்தம் புஷ்கரத் தீவிலுள்ளது 144 சந்திரர். இது மனிதர் வாழும் பாதி உலகக் கணக்கேயாகும். மனிதர் வாழாத பரப்புகளில் உள்ள சூரியச் சந்திரர்கள் பல. ஆனால் அவைகள் அசைவற்றிருக்கும். 144×3=432. ஜம்புத் தீவிலுள்ள 2, உப்பு சமுத்திரத்திலுள்ள 4, காதகீயிலுள்ள 12, கலோததியிலுள்ள 42, எல்லாம் சேர்ந்து பார்த்தால், புஷ்கரத்தில் இருப்பது 492 சூரியரும் 492 சந்திரரும் என்று வெளியாகும். இவை யெல்லாம் சித்தாந்த கிரந்தங்களான ஸ்ரீ ஜினபத்திர கணத் க்ஷமாசிரமணர், பெரிய சங்கயணி, யோதீ ஸகரண்டகப் பயன்ன, சந்திரபன்னதீ, சூரபன்னதீ முதலிய சித்தாந்த நூல்களில் சொல்லியிருக்கிறார்.

**விமரிசை:** பூகோள ககோளப்படி புலவர் கவனிக்கவும்! ஒரு கணக்கின்படி இப்பூகோளத்தில் 492 சூரியர், 492 சந்திரர் இருப்பதாகவும், வேறொரு கணக்கின்படி கணக்கிடமுடியாத சூரிய சந்திரர்கள் இருப்பதாகவும் ஜைனர் கூறுவர். வேதத்தில் நம்பிக்கையுள்ள சோதிடர், சூரிய சித்தாந்தம் முதலிய நூல்களைப் படித்து அதிட்டவசமாக உண்மையை அறிந்துகொள்ள முடியும். ஜைன இருளில் சிக்கினால் ஜைனர் போலவே திசை தடுமாறித் தவிக்கவேண்டியதே! ஜம்புத்தீவு முழுதிற்கும் ஒரே சூரியன் சந்திரன் போதாதென்று அந்த மடயருக்கு யாராவது சொல்லியிருக்க வேண்டும். ஏனெனில் ஒரே சந்திர சூரியர் 24 மணி நேரத்தில் இந்தப் பெரிய பூமிக்கு வெளிச்சந் தரமுடியாது. சூரியனைவிடப் பூமி பெரியது என்ற நம்பிக்கை கொண்டவர்கள் இந்த மனக்குறைக்கு ஆளானார். மேலும் ஜைனர் கூறுவதாவது:—

**दो ससि दोरवि पती एगंतरियाछ सठिसंखाया ।**
**मेंरुं पयाहिणंता माणुसखित्ते परिअडंति ॥** (ப்ர. பா. 4, ஸங். 79.)

சூரிய சந்திரத் தொடர்களை குறித்து பேசுவோம். இந்தத் தொடர்களில் இரண்டிருக்கின்றன. 10,000 யோஜனை தூரத்திலிருந்து ஒவ்வொன்றும் நடக்கிறது. சந்திரர் தொடர்பை யடுத்துச் சூரியர் தொடரும், சூரியர் தொடர்பை யடுத்துச் சந்திரர் தொடர்புமிருக்கும். ஆகவே தொடர்ச்சிகளின் எண்ணிக்கை நான்காகின்றன. சூரியத் தொடர்ச்சி ஒவ்வொன்றில் 65 சூரியரும், சந்திரத் தொடர்ச்சி ஒவ்வொன்றில் 66 சந்திரரும் இருக்கின்றன. இந்நான்கு தொடர்ச்சிகளும் ஜம்புத்தீவிலுள்ள மேரு பர்வதத்தை வலம் வந்த பின்பு, மனித சஞ்சாரமுள்ள பூகோளத்தில் திரியும். மேருவிற்குத் தெற்கே யொன்றும், அதற்குத் தெற்கில் மற்றொன்றும் சுற்றும். உப்பு சமுத்திரத்தின் ஒவ்வொரு திசையிலும் இரண்டு சூரியரும், காதகீபரப்பில் 6ம், கலோததியில் 21ம், புஷ்கரத்தில் 26ம் முறையே திரிகின்றன. இவ்விதமாக வடதிசையில் 66 சூரியரும், தென்திசையில் 66 சூரியரும் திரிகின்றன. எல்லாவற்றையும் கூட்டினால் 132 சூரியரும், 132 சந்திரரும், பூகோளத்தில் மனித சஞ்சாரமுள்ள பரப்பில் திரிகின்றன. சந்திரருடைய நக்ஷத்திரங்களின் தொடர்ச்சி மிகப் பலவாம்.

**விமரிசை :** பாருங்கள்! 132 சந்திரர் 132 சூரியர் ஜைனர் இல்லத்தின் மேல் தான் பிரகாசிக்கின்றன போலும்! இருந்தால், அதில் யார் வாழ்வது? எவ்விதம் இவற்றின் குளிரையும், சூட்டையும் பொறுக்கமுடியும்? பூகோள ககோள சாத்திரம் அறியாதவர்களே இப் பொய்யை நம்புவார்கள். நாமிருக்கும் கிரகம் போலப் பலவற்றில் பிரகாசிக்க வல்ல ஒரு சூரியன் இருக்கும்பொழுது, அது நம் பூமிக்கு வெளிச்சங் காட்ட முடியாதென்பதை எவன் சந்தேகிப்பான்? சூரியனைச் சுற்றி பூமியும், பூமியைச் சுற்றி சூரியனும் பிரயாணம் செய்யாமலிருந்தால் பல வருடங்கள் வெளிச்சத்திலேயோ அல்லது இருட்டிலேயோ நாம் வாழ நேரிடும். ஹிமாலயத்திற்குச் சுமேரு என்ற மற்றொரு பெயருண்டு. குடத்தின் முன் கடுகு போலும் சூரியன் முன் பூமி. இந்தச் சமயத்திலுள்ள வரையில், சமணர் ஒன்றும் அறியாமல் இருட்டில் வழிதடவுவர்.

समत्तचरण सहिया सव्वं लोगं फुसे निरवसेसं ।
सत्तय चउदसभाए पंचय सुपदेसविरईए ॥ (ப்ர. பா. 4, ஸங். 135.)

"நன்னடை தேர்ந்த கேவல முத்தர், ஸமுத்தாத அவஸ்தையினால் 14 இராஜ்யங்களிலும் திரிவர். இதற்குக் காரணம் ஆத்மசக்தியே".

**விமரிசை :** ஜைனியர்கள் 14 ராஜ்ஜியங்களை நம்புகிறார்கள். 14ஆவது இராச்சியத்தின் உச்சியில் சர்வார்த்த சித்தி விமானத்தின் கொடி மரத்திற்குக் கொஞ்ச தூரத்திற்கு மேல், ஜைனர் கூறும் வண்ணம், சித்தசிலையும், திவ்விய ஆகாசம் என்னும் படியான சிவபுரியும் இருக்கின்றன. முற்றிலும் பூரண பரிசுத்தமும் அடைந்தவர்களே அவ்விடத்தில் போகமுடியும். அவ்விடத்திலும் தன் ஆத்மபலத்தைக்கொண்டு முற்றறிஞராக வசிக்கமுடியும்.

எல்லைக்குட்பட்டது எங்கும் இருக்காது! விபுவாகாது. எங்கும் பரவியிராதது எல்லாம் அறிந்ததாகாது. ஏகதேச ஆத்மா வந்து சென்று கொண்டேயிருக்கும். அதுவே கட்டும் முக்தியும், ஞானமும், அஞ்ஞானமுமாயிருக்கும். சர்வ வியாபியே சர்வக்ஞனாக முடியும். ஜைனர் தீர்த்தங்கரர் சிற்றுயிரும் சிற்றறிவுங்கொண்டவர்கள்; அவர்கள் ஒருபோதும் முற்றறிஞ

ராக, சர்வ வியாபிகளாக முடியாது. ஆதி யந்தமற்ற சர்வ வியாபி, சர்வக்ஞனை சுத்த, ஞானசுவரூபனை ஜைனர் நம்பாதது வருந்தத்தக்கதே.

மேலும் அவர்கள் சொல்லுவதாவது :—

गब्भनरति पलियाऊ। तिगाउ उक्कोस ते जहन्नेणं।
मुच्छिम दुहावि अन्तमुहु। अंगुल असंख भागतणू॥

(ப்ர. பா. 4, ஸங். சூ. 241.)

மானிடர் இருவகை: (1) கர்ப்பந்தரித்து பிறந்தவர். (2) கர்ப்பந்தரிக்காமல் பிறந்தவர். பின் கூறினவர்கள் 3 பல்யோபம காலம் வசித்து 3 கோச நீளமுள்ளவர்களாகவிருப்பார்கள்.

விமரிசை: இத்துணை ஆயுசும் பரிமாணமும் உள்ள வெகு சிலரே இவ்வுலகில் இருக்கமுடியும். ஆயுள் முழுவதும் ஜீவித்திருந்தால் அவர்களுடைய மக்களும் அவர்களைப் போலவே யிருப்பார்கள். பம்பாயை யொத்த நகரத்தில் இம்மாதிரி 2 மனிதர்களும், கல்கத்தாவில் 3 அல்லது 4 மனிதர்களுமே இருக்கமுடியும்! ஜைனரே, பட்டணங்களில் கோடிக்கணக்கானவர் வசித்தார்களென்கிறார்கள். ஆகையினால் அப்பட்டணங்களுடைய விஸ்தீணம் லக்ஷக்கணக்கான மைல்களிருக்கவேண்டும். பூகோளத்தில் அம்மாதிரி பட்டணம் ஒன்றைக் கூட அமைக்க முடியாதே.

पणयाल लक्खयोयण। विक्खंभा सिद्धिसिल फलिह विमला।
तदुवरि गजोयणंते लोगन्तो तच्छ सिद्धठिई॥

(ப்ர. பா. 4, ஸங். சூ. 258.)

சர்வார்த்த சித்தி விமானத்தின் கொடி மரத்தின்மேல் 12 யோஜனை தூரமுள்ள சித்தசிலையின் விஸ்தீரணம் 45 லக்ஷம் யோஜனைகள். சித்த சிலையில் இயங்கும் சித்தபூமி வெண்ணிறமானது, பளப்பளப்பானது, தங்கமயமானது, படிகத்தைப் போல் பிரகாசிக்கக் கூடியது; சித்தர்களிருக்கும் இடம் இதுவேயாகும். சிலர் இதை ஈஷத், பிராக்பரா என்றும் அறிகிறார்கள். சர்வார்த்தசித்தி விமானத்திற்கு 12 யோஜனைகளுக் கப்பால் அலோகம் (ஸ்பரிசிக்கமுடியாதது) இருக்கிறது. முக்தி புருஷரே

இதன் மர்மத்தை யறியமுடியும். விமானத்தின் மத்திய தேச பரிமாணம் 8 யோஜனைகள். நான்கு திக்குகளிலும் 4 உபதிசைகளிலும் சித்தசிலை அமைக்கப்பட்டு, அங்கிருந்து வளைந்து போகும். அது விரிந்த குடையை யொத்திருக்கிறது; சிறிய ஈயின் இறகைப் போலிருக்கிறது. சிலையின் ஒரு யோஜனைத் தூரத்திற்கப்பால் முக்தியின்பப் பிரதேசத்தின் முடிவாகும். சித்தர்கள் வாழும் இடம் இதுவேயாகும்.

விமரிசை: இப்பொழுது சிந்தியுங்கள்! சர்வார்த்தசித்தி விமானத்தினுடைய கொடி மரத்தின்மேல் இருப்பது ஜைனர் முக்திநிலை. அதன் பரப்பு 45,000,000 யோஜனைகளாம். எத்துணை சிறந்ததாயும், தங்கப் படிகம்போல் நிர்மலமாயும் அந்த விடமிருந்த பொழுதிலும், அதில் வசிக்கும் முக்தி யடைந்த ஜீவர்களை ஒருவிதத்தில் பந்தத்திற்குட்பட்ட தென்றே சொல்லலாம். ஏனெனில் சிலையிலிருந்து வெளி வந்தவுடன், முக்தியிலிருந்து நழுவி விடுகிறதாகிறது. உள்ளே வாசம் செய்யும் வரையில் சுவாசிக்கக் காற்றுகூட கிடையாது. இவைகளெல்லாம் பேதைகளைப் பிடிக்க வீசிய வலைப் பின்னலேயாகும்.

மேலும் சமண நூற்களில் சொல்லுவதாவது:—

[जोयणसहस्स महियं। एगिंदियदेह मुक्कोसं]॥
वितिचउरिंदिस सरीरं। वारस जोयणं तिकोस चउकोसं।
जोयणसहसपणिंदिय। उहे वुच्छंति विसेसंतु॥

(ப்ர. பா. 4, ஸங். சூ. 266, 267.)

ஏகேந்திரியத்தைக்கொண்ட பிராணியின் தேகத்தின் அதிக நீள அளவு 1,000 யோஜனைகள். இரண்டு இந்திரியங்களை (சங்கு முதலானவைகளைப் போன்றது) உடையதின் நீளம் 12 யோஜனை; நான்கு இந்திரியங்களைக் கொண்டதின் அளவு 4 கோசம்; பஞ்சேந்திரியங்களைக் கொண்டதின் அளவு 1,000 யோஜனைகள், அதாவது 4000 கோசம்.

விமரிசை: நான்கு, நான்கு ஆயிரகோச நீளப் பேர்வழிகள் சில நூறு பேர்களைக்கூட உலகம் கொள்ளாதே. அச்சமயத்தில் எங்கு வசிப்பது, எவ்வழி போவது! வாழவும் நடக்கவும் இடமிராது. அந்தப் பெரிய உடலர்கள் ஜைனரிடமே நடக்க மார்க்கமும், இருக்க இடமும் கேட்க வேண்டி

வரும். இப்படிப் பட்ட புளுகுகளை ஜைனர் எழுதியிருப்ப தால் தங்கள் வீட்டிலே இடங்கொடுக்க வேண்டும். 4,000 கோசம் பருமனுள்ள மனிதனுக்குக் குறைந்தது 32,000 கோசம் விஸ்தீரணமான வீடு வேண்டியிருக்கும். இவ்வளவு விசாலமான வீட்டை ஜைனர் எல்லோரும் குவித்து வைத் திருக்கும் பணத்தைக் கொண்டு கூடக் கட்ட முடியாது. 8,000 மைல்களுக்கதிகமான விஸ்தீரணத்தையுடைய கூரை களைத் தாங்க விட்டங்கள் எங்கிருந்து தருவது? இவ்வித வீட்டிற்குத் தூண்கள் வைத்தால் உள்ளே புகுவதெப்படி? எல்லாம் முழுப் பொய்! மீண்டும் இந்நூலிலேயே சொல்லுவ தாவது :—

ते थूला पल्ले विहुसंखिज्जाचे वहुंति सव्वेवि ।
तेहृक्किकक्क असंखे । सुहुमे खम्मे पकप्पेह ॥

(ப்ர. பா. 4, லகுக்ஷேத்ர ஸமாஸ ப்ரகரண. சூ. 4.)

4 கோசம் அகலமும் 4 கோசம் ஆழமுமுள்ள கிணறு, கைவிரல் நீளமுள்ள மயிரினால் நிரப்பட்டிருக்கிறது என்று முன்பு சொன்னபடி, கைவிரல் நீளமான மயிரை மொத்தம் 20,97,152 பாகங்களாகத் துண்டிக்கலாம். 330,762,108,246,562, 542,199,6097,5360,000,00000 இவ்வளவு விசாலமான பல்யோ மத்திலிருக்கும் மயிர்களே சங்கியாத காலமெனப்படும். எண் ணிறந்த மயிரின் பாகங்கள் பலவற்றை ஊகிப்பதே அசங்கி யாத சூக்ஷ்ம ரோமாணு காலமாம்.

விமரிசை : என்ன கணக்கு பாருங்கள்! ஒரு விரல் மயிரை எத்தனை கூறுக்குவது? இது கணக்கில் வருமா அசங்கியாத காலத்தை ஊகித்தறிவதற்கு மயிரின் பாகங்களை மனதில் எண்ணிக்கொள்ளவேண்டுமாமே! கைகளின் உதவியால் (சங்கியாத காலத்தை அறியுங்கால்) முதலில் மயிரை கோடானுகோடித் துண்டுபோட வேண்டுமே! கைகளினால் முடியவில்லையே; மனதை நாடினார்கள். கைவிரல் நீளமான மயிரைச் சங்கியாதப் பாகங்களாக கூடத் துண்டிக்க முடியுமா?

जंबूद्वीपपमाणं गुलजोयाणलरक वट्टविरकंभी ।
लवणाई यासेसा । बलयाभा दुगुण दुगुणाय ॥

(ப்ர. பா. 4, லகு. சூ. 12)

முதலில் ஜம்புத் தீவின் விஸ்தீரணம் 4 லக்ஷம் யோஜனை. நடுவில் பள்ளமாயிருக்கிறது. (முன் சொன்ன மாதிரி) பூமியில் ஜம்புத் தீவைப்போல் ஏழு தீவுகளும் உப்பு சமுத்திரத்தைப் போல் ஏழு நீர் பரப்புகளும் இருக்கின்றன. ஒவ்வொன்றும் பரிமாணத்தில் ஜம்புத் தீவைக்காட்டிலும் பெரியது. அதாவது வரிசைக்கிரமத்தில் முன்னுக்குப் பின்னிருப்பது பெரியது.

விமரிசை: ஜம்புத் தீவைவிடப் பெரியதான இரண்டாவது தீவின் பரப்பு 200,000 யோஜனை; மூன்றாவதின் பரப்பு 400,000; நான்காவதின் பரப்பு 8000,000; ஐந்தாவதின் பரப்பு 10,600,000; ஆறாவதின் பரப்பு 3,2,00,000; ஏழாவது 6,400,000 இதே மாதிரியே அல்லது அதிகமான பரிமாணத்தையுடைய ஏழு சமுத்திரங்கள் இவைகளையெல்லாம் 25000 மைல்கள் சுற்றளவுள்ள பூமி தாங்குமோ?

कुरुनइ चुलसी सहसा । छच्चेवन्तरनईउ पइ विजयं ।
दोदो महा नईउ । चनुदस सहसा उपत्तेयं ॥

(ப்ர. பா. 4, லகு. சூ. 63)

குருக்ஷேத்திரத்திற்குள் 84,000 நதிகள் இருக்கின்றனவே.

விமரிசை: குருக்ஷேத்திரம் ஒரு சிறிய ஊராகும். அவ்விடத்தைச் சென்று பார்க்காமல், ஜைனாசாரியர் இப்படி பொய்யை எழுத வெட்கமில்லையா?

जामुत्तराउ ताउ । इगेग सिंहासणाउ अइपुव्वं ।
चउसु वितासु नियासण, दिसि भवजिण, मज्जणं होई ॥

(பிரகரண, 4, 116)

அந்தச் சிலையின் தெற்கிலும், வடக்கிலும் ஒவ்வொரு அரியணை யிருக்கும். நேர் தெற்கே யிருக்கும் நிலத்தின் பெயர் அதி பாண்டு கம்பலா. நேர் வடக்கே யிருப்பதின் பெயர் அதிரிக்த கம்பலா. இவ்வரியணையின்மேல் தீர்த்தங்கரர் வீற்றிருப்பர்.

விமரிசை: தீர்த்தங்கரருடைய பிறந்த தினத்தைக் கொண்டாடும் இடங்கள் இது. ஜைன சித்தசிலையே முத்தி வீடு.

ஜைன நூற்களில் காணும் கட்டுக்கதைகளைப் பற்றி எவ்வளவு எழுத முடியும்? சொல்லித் தரமில்லை; சொல்லிப் பயனில்லை.

ஜைன சமயத்திலுள்ள மூன்று நல்ல விஷயங்களாவன:—

(1) வடிகட்டின தண்ணீரைக் குடித்தல், (2) பெயரளவிலேனும் சிறிய ஜீவனிடம் கருணை காட்டல், (3) இரவிலுண்ணாமை.

மற்ற உபதேசங்களெல்லாம் வீணே. ஜைன நூற்களின் அபத்தங்களை எழுதினால் புத்தகம் புத்தகமாகச் செல்லும். படிக்கவும் ஆயுள் இல்லை. சிறிய புல் காற்று வீசும் திசையைக் குறிப்பதுபோல, நாம் கொடுத்திருக்கும் உதாரணங்களால் அறிவாளர் அதிகம் உணர்வர். ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம். அறிவாளிக்கு ஒரு சொல் போதும். அதிகம் தேவையில்லை. அடுத்த அத்தியாயத்தில் கிறிஸ்துவ மத விசாரணை செய்வோம்.

ஸ்ரீமத் தயானந்த ஸரஸ்வதி சுவாமிகள் அருளிய
சத்தியார்த்தப் பிரகாசத்தில்
சாருவாகம், பௌத்தம், ஜைனம் ஆகிய
நாஸ்திக மதங்களின் கண்டன மண்டன விளக்கமான
பன்னிரண்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

## பதின்மூன்றும் அத்தியாயம்

## அணிந்துரை (3)

பைபிள் மதத்தைக் கிறிஸ்துவர் மட்டுமின்றி, யூதரும் பிறரும் போற்றுவர். பதின்மூன்றுவது அத்தியாயத்தில் நாம் கிறிஸ்து மதத்தை ஆராய்கிறோம். ஏனெனில் பைபிள் மதத்தில் கிறிஸ்துமதம் முதன்மை பெற்றிருக்கிறது. யூதம் பின்னொதுங்கி நிற்கிறது. முன்னணியை ஆய்ந்தால் பின்னணியும் ஆய்ந்த தாகும். கிறிஸ்துமத ஆராய்ச்சியில் யூதமும் அடங்கும். கிறிஸ்துவரும்—யூதரும் புனித நூலாகப் பாராட்டும் பைபிளையே நாம் இங்கே ஆராய்கிறோம்.

சீரிய புலவர்களான பெரிய பாதிரிகள் பைபிளைப் பல மொழிகளில் ஈந்தனர். நான் படித்தது, சமுஸ்கிரத—இந்தி மொழி பெயர்ப்பிகளே. என் மனதில் எழுந்த ஐயப்பாடுகள் சிலவற்றைப் பொதுமக்கள் பயன் பெறவே பதின்மூன்றும் அத்தியாயத்திற் குறிக்கிறேன். உண்மை—விளக்கம், பொய்—விலக்கம்—இதுவே என்கருத்து. பிறர் மனத்தைப் புண் படுத்தலோ, வீண்குற்றம் காணலோ என் எண்ணமன்று. கிறிஸ்துமதக் கொள்கைகள் இத்தகையன என்று மக்கள் என் எழுத்தால் உணருவார். பொதுமக்கள் பைபிளை அலசிப் பார்த் தறியவும் இதுபயனுகும். சாதக பாதகங்களை இங்கே மனம் விட்டு ஆராய்ந்தால் மக்கள் கிறிஸ்துமத வியல்பை அறிவார்கள். மெய்—பொய்களை அறிந்தபிறகு, மெய்யைப் போற்றி (அதாவது கடமையை போற்றி) பொய்யை (அதாவது கடமையல்லாததை) விலக்கி, மக்கள் சமயத்தைத் தெளிவாக உணர்வார்கள்.

மக்கள் எல்லாச் சமயங்களையும் ஆராய்ந்தறிந்து அவற்றின் கொள்கைகளைத் தேர்வது கடமையாகும். கேட்கவாவது வேண்டும். கற்றல் போலக் கேட்டலும் அறிவை ஊட்டும். பிறருக்கு உணர்த்த முடியா விட்டாலும் கேள்வியால் தாமே உணரலாம்.

ஓரகம் கொண்டவன் தன் பிழையுணரான். பிறர் பிழையும் அறியான். கல்வி கேள்விகளால் மனிதான்மா குறித்த பொருளின் குறைநிறை அறியும். இரண்டு சமயிகள் தமது கருத்துக் களைப் பொதுமக்கள் முன் விளக்கா விட்டால், அஞ்ஞானிகள்

வழி தவறி படுகுழியில் வீழ்ந்து விடுவார்கள். இந்நூலில் இன்று வழங்கும் எல்லாச் சமயங்களையும் ஆய்கிறோம்—பொதுமக்கள் எது உண்மை என்று அறியவே. எல்லா மதங்களின் அடிப்படை உண்மையும் பொதுவே. சில்லறை விஷயங்களைப் பற்றியே விவாதம். ஒரு பக்கம் மெய், மறு பக்கம் பொய்யானால் சண்டை வலுக்கும். உண்மை—விளக்கமே குறிக்கோளானால், இருவரும் ஒரு முடிவுக்கு வரலாம்.

இனி இப் பதின்மூன்றும் அதியாயத்தில் கிறிஸ்து மதத்தைச் சீர்தூக்கிப் பார்த்து முடிவைப் பொது மக்களுக்கே விட்டு விடுவோம்.

அறிவாளிக்கு ஒரு வார்த்தை போதும்.

---

இந்தியா அன்னியர் ஆதிக்கத்தில் உரிமையிழந்து ஒற்றுமையிழந்து வருந்திய நாளில் வேத தருமமும் வேதஉணப் பட்டழிந்தது. நம்மவர் இஸ்லாமிய, கிறிஸ்து மதங் களில் பெருவாரியாகச் சேர்ந்தனர். நமது சமயப் பெருமையை விளக்குவோரில்லை. கிறிஸ்து சமயம் கட்டுக் கோப்பான ஏற்பாடுகளுடன், சமயத் தொண்டர் படையுடன் எங்கும் பரவியது. இந்தச் சமயத்தில் தயானந்த முனிவர் எழுந்து வேத தருமத்தின் பெருமையையும் அனுட்டானத்தையும் விளக்கி, நம்மவருக்குப் புதிய விழிப்பும் எழுச்சியும் தந்தார். பிற சமயங்களின் மயக்கைத் தீர்த்து, வேத சமயத்தை நம்மவர் பின்பற்ற வேண்டியே தயானந்தர் 13, 14ஆம் அத்தியாயங்களைச் செய்தார். நிறை வான சமயம் வேத தருமமே என்பதை நிலைநாட்டவே, தயானந்தர் கிறிஸ்து இஸ்லாம் சமயங்களை ஆராய்ந்தார் என்பதை மனதிற் கொண்டு 13, 14ஆம் அத்தியாயங்களைப் படிக்கவும்.

## பதின்மூன்றும் அத்தியாயம்

# கிறிஸ்து மத ஆராய்ச்சி

**இப்போது கிறிஸ்து மதத்தை ஆராய்வோம். அந்த மதம் சரியா, பைபிள் அருள்நூலா என்பதைக் காண்போம். முதலில் பெண்டாடுஷ் அல்லது தோரேத் ஆராய்ச்சி**

## ஆதியாகமம்

**1. ஆதியில் கடவுள் வானத்தையும் பூமியையும் படைத்தார். பூமி உருவமற்று வெறுமையாயிருந்தது, ஆழத்தின் மேல் இருள் இருந்தது; கடவுளின் ஆவி, தண்ணீர் மேல் அசைவாடிக் கொண்டிருந்தது. (ஆ. 1-1, 2)**

ஆட்சேபணை : ஆதியில் என்றால் என்ன ?

கிறிஸ்துவர் : உலகின் முதற்படைப்பு.

ஆட்சே : இதுதான் முதற்படைப்பா ? இதற்கு முன்னே படைப்பில்லையா ?

கிறி : உண்டோ இல்லையோ எங்களுக்குத் தெரியாது, கடவுளே அறிவார்.

ஆட்சே : தெரியாது போனால் உன் சந்தேகத்தைப் போக்க முடியாத நூலை நம்புவானேன் ? ஐயப்பாடுள்ள மதத்தை மக்களுக்குப் போதிப்பானேன் ? ஐயந் திரிபற்ற தெளிவான வேத தருமத்தை நீங்கள் ஏன் பின்பற்றக் கூடாது ? கடவுளின் படைப்பை அறியாத உங்களுக்குக் கடவுளறிவு எப்படி ஏற்படும் ? ‘ வானம் ’ என்றால் என்ன ?

கிறி : வானும் வெளியும் அப்பால் மேலே உள்ளதும்.

ஆட்சே : வான்வெளி உண்டானது எப்படி ? வான்வெளி மிக நுட்பமாக மேலும் கீழும் எங்கும் பரவியது. அது உண்டாக்கப்படுவதற்கு முன்னே வெளியும் இடமும் உண்டா ? இல்லையா ? இல்லையானால் உலகின் உற்பத்திக்கு காரணமான கடவுளும், உயிருலகும் எங்கே இருந்தன ? இடம் இன்றிப் பொருள் இல்லை; ஆதலால் உன் பைபிள் சொல்வது பொருந்தாது.

கடவுள் உருப்படியாயில்லையா? கடவுளின் அறிவும் செயல்களும் உருப்படியாயில்லையா? அவற்றில் ஓர் ஒழுங்கு உண்டா இல்லையா?

கிறி: கடவுள் செயல் ஒழுங்குள்ளது.

ஆட்சே: பிறகு இறைவன் ஆக்கிய மண்ணுலகம் ஒழுங்காகயில்லை என்று எழுதுவானேன்?

கிறி: ஒழுங்காயில்லை என்றால்...சமனுயில்லை; மேடும் பள்ளமுமாயிருந்தது, மட்டமாயில்லை என்பதாம்.

ஆட்சே: அப்படியானுல் அதைச் சமனுக்கியது யார்? இப்போதும் மேடு பள்ளம் இல்லையா? கடவுளின் படைப்பு உருப்படியற்றதாகுமா? அவர் முற்றறிஞர்; அவர் செயல்கள் குற்றமற்றன. அவர் படைத்தது உருப்படியாயில்லை என்னும் பைபிள், கடவுள் அருளியதாகாது. முதலில்—கடவுளின் ஆவி என்றுல் என்ன?

கிறி: ஒரு சேதனவஸ்து.

ஆட்சே: அவன் உருவனு அருவனு? ...அவன் இருப்பது எங்குமா, ஒரே இடமா?

கிறி: கடவுள் உருவன், அறிவன், எங்கும் உள்ளவன். ஆனுல் முதன்மையாக சனுய்மலை மேல் நான்காவது வானம், முதலிய இடங்களில் விசேஷமாக உள்ளான்.

ஆட்சே: அவன் அருவனுனுல் யாரும் காணமுடியாதே! அவன் எங்கும் நிறைவு என்றுல் நீர்மேல் மட்டும் அலைவானேன்? கடவுளின் ஆவி நீர்மேல் அலைந்த போது, கடவுள் எங்கிருந்தார்? இதனுல் கடவுளின் உடல் வேறிடம் இருந்தது, அவன் ஆவியில் ஒருபகுதி நீர்மேல் அலைந்தது என்றுகிறது. அப்படியானுல் அவன் எங்கும் நிறைந்து, எல்லாம் அறிந்தவன் ஆகான். அவன் எங்கும் நிறைந்தவன்; இன்றேல் உலகைப் படைக்கவோ காக்கவோ அழிக்கவோ முடியாதே. நிலைபொருள் ஓரிடமே இருக்கும்; நிலைவினை ஒரு தன்மையுடனே தானிருக்கும். அது கடவுளாகாது. கடவுள் எங்கும் உள்ளவன், அனந்த குணகர்மவியல்பினன்; அவன் தானேதான், தன்னறிவன், இன்பமயன், (சச்சிதானந்த ஸ்வரூபன்), என்றும் உள்ளவன்,

சுத்தன், சைதன்யன், இயற்கையில் சுதந்தரன், பந்த மற்றவன், ஆதியந்த மற்றவன். இதுவே கடவுளைப் பற்றி வேதம் சொல்லுவது. இதை நம்பு, அப்போதே உனக்கு இன்பமாம்; இன்றேல் இல்லை. (1)

2. வெளிச்சம் உண்டாகுக என்று கடவுள் சொன்னார்; வெளிச்சம் உண்டாயிற்று. வெளிச்சம் நல்லதென்று கடவுள் கண்டார்; வெளிச்சத்தையும் இருளையும் கடவுள் வெவ்வேறாகப் பிரித்தார். (ஆ. 1-3, 4)

ஆட்சே: அசேதனமான ஒளி கடவுளின் பேச்சைக் கேட்டதா? அப்படியானால் சூரியன், விளக்கு, நெருப்பு—இவையெல்லாம் நாம் பேசுவதை அறியாததேன்? ஒளி உணர்வற்றது; அது யார் பேச்சையும் கேட்க முடியாது. ஒளி நலத்தைக் கடவுள் பிறகுதான் அறிந்தாரா? அவருக்கு முன்னறிவில்லையா? முன்னே ஒளியைக் கண்டதில்லையா? முன்பே அறிந்திருந்தால் அது நல்லது என்று அதைப் பார்த்த பிறகு தான் சொல்ல வேண்டுமா? ஒளியை அறியாதவன் கடவுளாவானா? ஆதலால் உன் பைபிள் கடவுள் அருளியதன்று. அது சொல்லும் கடவுளும் எல்லாம் அறிந்தவர் அன்று. (2)

3. தண்ணீர்கள் நடுவே ஆகாய மண்டலம் உண்டாகுக, அது தண்ணீர்களினின்று தண்ணீர்களைப் பிரிக்கக் கடவதென்று கடவுள் சொன்னார். கடவுள் ஆகாய மண்டலத்தை உண்டாக்கினார், படைத்தார்; ஆகாய மண்டலத்தின் மேலுள்ள தண்ணீர்களையும் ஆகாய மண்டலத்தின் கீழுள்ள தண்ணீர்களையும் வெவ்வேறாகப் பிரித்தார். அப்படியே ஆயிற்று. ஆகாய மண்டலத்துக்குக் கடவுள் வானமென்று பேரிட்டார். மாலையும்—காலையுமாயிற்று; இது இரண்டாம் நாள். (ஆ. 1-6, 7, 8)

ஆட்சே: ஆகாசமும் நீரும் கடவுள் சொன்னதைக் கேட்டவா? நீரில் ஆகாசம் இன்றேல் நீர் எங்கே இருந்திருக்கும்? முதல் உபதேசம் ஆகாசம் படைக்கப்பட்டது என்கிறது. அதை மீண்டும் படைக்க அவசிய மென்ன? ஆகாசமே சுவர்க்க மானால் எங்கும் சுவர்க்கம் இருக்கவேண்டுமே! ஏனெனில் ஆகாசம் எங்கும் பரவியது. அப்போது சுவர்க்கம் மேலே தான் இருக்கிறது என்பது பொய்க்குமே. சூரியன் இன்னும் படைக்கப்படாதபோது இரவும் பகலும் எங்கிருந்து வரும்? பைபிளில் இனிவரும் உபதேசங்கள் இவ்வாறு அபத்தமாயிருக்கின்றன: (3)

4. நமது சாயலின்படி நமக்கொப்பாக மனிதனை உண்டாக்குவோமாக; சமுத்திர மச்சங்களையும், ஆகாயத்துப் பறவைகளையும் நாட்டு மிருகங்களையும், பூவுலக முழுவதையும், பூமியிலுள்ள ஊர்வன யாவற்றையும் அவர்கள் ஆளக்கடவர்கள் என்று கடவுள் சொன்னார். கடவுள் மனிதனைத் தமது சாயலாகப் படைத்தார்; ஆணும் பெண்ணுமாகப் படைத்தார். கடவுள் அவர்களை ஆசீர்வதித்தார்.
(ஆ. 1-26, 27, 28)

ஆட்சே: ஆண்டவன் ஆதாமைத் தன் சொரூபமாகச் செய்தானா? அப்படியானால் ஆதாமும் ஆண்டவன் சொரூபம் போலவே சுத்த ஞான ஆனந்த மயனாயிருக்க வேண்டுமே; ஆதாம் அவ்வாறில்லையே. ஆதலால் ஆதாம் ஆண்டவன் சொரூப மில்லை. படைக்கப் பட்ட ஆதாம் தெய்வ சொரூபனானால், அவன் ஏன் அனித்தியனானன்; கடவுள் போல அவனும் நித்தியமாயிருக்க வேண்டுமல்லவா? ஆதாமை எதிலிருந்து ஆண்டவன் படைத்தான்?

கிறி: மண்ணிலிருந்து படைத்தான்.

ஆட்சே: மண் எதிலிருந்து வந்தது?

கிறி: அவர் திறமையிலிருந்து, சக்தியிலிருந்து.

ஆட்சே: ஈசன் திறமை அனாதியா, புதிதா?

கிறி: அனாதி.

ஆட்சே: அவன் அனாதியானால் அவன் படைத்த உலகும் அனாதியாயிருக்க வேண்டுமே. பிறகு உலகு வெறுமையிலிருந்து வந்தது என்பதேன்?

கிறி: உலகப் படைப்பிற்கு முன் கடவுளைத் தவிர வேறு எதுவும் இல்லை—எல்லாம் வெறுமை.

ஆட்சே: எல்லாம் வெறுமையானால் இந்த உலகம் எப்படி வந்தது? ஆண்டவன் ஆற்றல் ஒரு பொருளா, குணமா? பொருளானால் கடவுளுடன் வேறொரு பொருளும் இருந்திருக்குமே. குணமானால், குணத்திலிருந்து பொருள் வராதே. உருவிலிருந்து தீ வருமா? சுவையிலிருந்து நீர் வருமா? ஈசனிடமிருந்து உலகு உண்டானால் அவனைப் போல குண கர்ம சுபாவ முள்ளதாயிருத்தல் வேண்டுமே. ஆதலால் உலகம் கடவுளிட மிருந்தே உண்டானதில்லை. அது பரமாணு முதலிய ஜடப் பொருள்களினின்று வந்தது.

வேதாதி சாஸ்திரங்களில் சொல்லியபடியே இறைவன் உலகைப் படைத்தான் என்பதை நீ நம்பவேண்டும். ஆதாம் உள்ளே ஜீவன்; உடலில் மனிதன்; நீ சொல்வது போல அவன் கடவுள் போலிக்கை யென்றால் கடவுளும் அவன் போலிக்கையாக வேண்டுமே? (4)

5. தரையினின்று எடுத்த மண்ணினாலே கடவுளாகிய கர்த்தர் மனுஷனை (ஆதாமை) உருவாக்கி, ஜீவசுவாசத்தை அவன் நாசியில் ஊதினார்; மனுஷன் உயிருள்ளவனானான். கடவுளாகிய கர்த்தர் கீழ்திசையில் ஒரு தோட்டத்தை உண்டாக்கி, தாம் உருவாக்கின மனுஷனை அங்கே வைத்தார்; பார்வைக்கு இன்பமும் புசிப்புக்கு நலமுமான சகலவித விருக்ஷங்களையும், தோட்டத்தின் நடுவே ஜீவ விருக்ஷத்தையும், நன்மை தீமை அறிவதற்கேதுவான விருக்ஷத்தையும் கடவுளாகிய கர்த்தர் நிலத்தினின்று முளைத்தெழும்பச் செய்தார். (ஆ. 2-7, 9)

ஆட்சே: ஈடன் தோட்டத்தை உண்டாக்கி அங்கே ஆதாமை வைத்த கடவுளுக்கு அதை விட்டு அவனைப் பிற்காலம் துரத்த நேரிடும் என்பது தெரியாதா? கடவுள் ஆதாமை மண்ணிலிருந்து ஆக்கினால் தன்போல் ஆக்கவில்லை; அப்படி நீ இன்னும் சொன்னால், கடவுளும் மண்ணிலிருந்தே உண்டாகியிருக்க வேண்டும் அல்லவா? அவன் மூக்கில் ஆவியை ஊதினார் என்றால் ஆவி கடவுளுடன் ஒன்று, வேறு? ஒன்றானால் கடவுளும் ஆதாமும் ஒன்றே; அப்படியானால் கடவுளும் ஆதாம் போலவே பிறப்பு, இறப்பு, மூப்பு, தளர்வு, பசி, தாகம் இவற்றிற்கு உள்ளாக வேண்டுமே. இத்தோஷங்களால் பாதிக்கப்படும் அவர் நித்தியக் கடவுளாவதெப்படி? ஆதலால் இந்தப் பழைய ஏற்பாட்டின் கூற்று சரியன்று; அந்த நூலும் கடவுள் அருளியதன்று...... (5)

6. கடவுளாகிய கர்த்தர் மனுஷனுக்கு (ஆதாமுக்கு) அயர்ந்த நித்திரை உண்டாகும்படி செய்யவே, அவன் (ஆதாம்) நித்திரை செய்தான். அவர் அவன் விலா எலும்புகளில் ஒன்றை எடுத்து அந்த இடத்தைச் சதையினால் மூடிவிட்டார். கடவுளாகிய கர்த்தர் மனுஷனிலிருந்து எடுத்த விலா எலும்பை மனுஷியாக அமைத்து உருவாக்கி அவளை மனுஷனிடம் அழைத்து கொண்டு வந்தார். (ஆ. 2-21, 22)

ஆட்சே: ஈசன் ஆதாமை மண்ணால் செய்தது போல அவன் மனைவியையும் ஏன் மண்ணால் செய்யவில்லை? அவன் பெண்ணை விலா எலும்பிலிருந்து உண்டாக்கியது போல ஆணையும் ஏன் உண்டாக்கவில்லை? நரனிடம் நாரி உண்டா

ளுல், அதற்குப் பெண்ணினப் பேர் ஏன் வைக்கவில்லை? (பெண்ணிட மிருந்தே ஆண் பிறக்கிறது இயற்கை) இருவரும் ஒருவரை ஒருவர் காதலிக்க வேண்டும். அறிவாளிகளே கவனியுங்கள்! இறைவனின் பதார்த்த வித்தை, அதாவது தத்துவஞானம் எவ்வாறு பிரகாசிக் கிறது! ஆதாமின் விலா எலும்பெடுத்துப் பெண்ணை இறைவன் ஆக்கினுன் ஆனல், ஆண்களுக்கெல்லாம் ஒரு விலா எலும்பு இல்லாமல் இருக்க வேண்டுமே; பெண்களுக் கும் ஒரே விலா எலும்புதான் இருக்கவேண்டுமே. இந்த வுலகமெல்லாம் எதனுல் ஆக்கப்பட்டதோ அதனுலேயே பெண்ணையும் ஆக்கலாகாதா? ஆதலால் பைபிள் சொல்லும் சிருஷ்டிமுறை சிருஷ்டிக் கலைக்கே விருத்த மாயிருக் கிறது. (6)

7. கடவுளாகிய கர்த்தர் உண்டாக்கின சகல காட்டு ஜந்துக்களிலும் சர்ப்பமே தந்திர முள்ளதாயிருந்தது. அது ஸ்திரீயினிடம்: தோட்டத்திலுள்ள எந்த விருக்ஷத்தின் கனியையும் நீங்கள் புசிக்கவேண்டாம் என்று கடவுள் சொன்ன துண்டோ என்றது. ஸ்திரீ சர்ப்பத்தினிடம்: நாங்கள் தோட்டத்திலுள்ள விருக்ஷங்களின் கனிகளைப் புசிக்கலாம்; தோட்டத்தின் நடுவிலிருக்கிற விருக்ஷத்தின் கனியைக் குறித்தோ: நீங்கள் அதைப் புசிக்கவும் தொடவும் வேண்டாம்; புசித்தால் சாவீர்கள் என்று கடவுள் சொன்ஞர், என்ருள். சர்ப்பம் ஸ்திரீயிடம்: நீங்கள் சாவதேயில்லை. நீங்கள் இதைப் புசிக்கும் நாளில், உங்கள் கண்கள் திறக்கப்படும் என்றும், நீங்கள் நன்மை தீமை அறிந்து தேவர்களைப் போல் இருப்பீர்கள் என்றும் கடவுளுக்குத் தெரியும் என்றது. எனவே அந்த விருக்ஷத்தின் கனி புசிக்கிறதற்கு நலமான தென்றும், பார்க்கிறதற்கு இன்பமான தென்றும் விவேகத்தைப் பெறு வதற்கு இச்சிக்கத்தக்க தென்றும், ஸ்திரீயானவள் கண்டு, அதன் கனியைப் பறித்து, தானும் புசித்துத் தன் புருஷனுக்கும் கொடுத்தாள்; அவனும் புசித்தான். புசிக்கவே இருவர் கண்களும் திறக்கப்பட்டன; தாங்கள் நிர்வாணிகள் என்று அறிந்து, அத்தியிலைகளைத் தைத்துத் தங்கள் அரைகளில் கட்டிக் கொண்டார்கள்.

கடவுளாகிய கர்த்தர் சர்ப்பத்தைப் பார்த்து: நீ இதைச் செய்தபடியால், சகல நாட்டு மிருகங்களுக்கும் சகல காட்டு மிருகங்களுக்கும் விலக்கப்பட்டுச் சாபத்திற்குள்ளவாய். உன் வயிற்றினுலேயே நீ நகர்ந்து உயிரோடிருக்கும் நாளெல்லாம் மண்ணைத் தின்பாய்; உனக்கும் ஸ்திரீக்கும் உன் சந்ததிக்கும் அவள் சந்ததிக்கும் பகை உண்டாக்கி வைப்பேன். அது உன் தலையை நசுக்கும், நீ அதன் குதிகாலை நசுக்குவாய் என்ருர். ஸ்திரீயினிடமோ அவர்: நீ கர்ப்பவதியாயிருக்கும் போது உன் வாதையை மிகவும் பெருக்கப் பண்ணுவேன்; வேதனையோடே பிள்ளை பெறுவாய்; என்ருலும் உன் ஆசை உன் புருஷன் மேலிருக்கும், அவன் உன்னை ஆண்டு கொள்வான் என்ருர். பின்பு அவர் ஆதாமிடம்: நீ உன் மனைவியின் சொல்லைக்கேட்டு, புசிக்க வேண்டாம் என்று நான் உனக்கு விலக்கின விருக்ஷத்தின் கனியைப் புசித்தபடியினுலே, நிலம் உன்னிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்; உன் ஜீவ

காலமெல்லாம் நீ அதன் பலனைப் பாடுபட்டுப் புசிப்பாய். அது உனக்கு முள்ளும் குருக்கும் முளைப்பிக்கும்; வயல் வெளியின் பூண்டுகளைப் புசித்துப் பிழைப்பாய்.
(ஆ. 3-1, 2, 3, 4, 5, 6, 7, 14, 15, 16, 17, 18)

ஆட்சே: ஈசன் எல்லாம் அறிந்தவனுனால், இந்தச் சைத்தான் பாம்பை ஏன் படைத்தான்? அவன் பிழைக்கு அவனே வருந்த வேண்டும். சைத்தானை அவன் துஷ்டனுகப் படைக்கா விட்டால் இப்படித் தொல்லை செய்திருக்க மாட்டானே. கிறிஸ்துவர் முற்பிறப்பை நம்புவதில்லை எனில் அபராதமின்றி சைத்தானை துஷ்டனுகப் படைத்ததேன்? உண்மை இதுவே. சைத்தான் பாம்பன்று; மனிதனே. இன்றேல் மனித மொழியில் மனிதனோடு பேச முடியுமா? சைத்தான் என்றுல் பொய் வஞ்சன்; பிறரைத் தப்புவழியில் உய்ப்பவன். இங்கே சைத்தான் உண்மையே சொன்னுன். கடவுளே, 'தடைக் கனி யுண்டால் சாவீர்' என்றுர். அறிவும், அமரத் தன்மையும் அளிக்கும் கனியுண்ண இறைவன் தடுத்ததேன்? ஆதாமும் ஏவாளும் உண்டனர்; இறக்கவில்லை; அதனுல் கடவுளே பொய்யன் வஞ்சன் ஆகிறுன் அல்லவா? அந்தக்கனி மனிதனுக்கு அறிவும், இன்பமும் தந்ததேயொழியச் சாவையும் மடமையையும் தரவில்லையே. கனியை உண்ணக்கூடாது என்றுல், யாருக்காக மரத்தைப் படைத்தான் கடவுள்? தனக்காளுல் கடவுள் அறிவிலியா? மரணம் உள்ளவரா? உலகிற்கு உதவ என்றுல் அதன் கனிகளை உண்ணல் பாபமில்லையே...... இன்று அறிவைத் தந்து, சாவைத் தடுக்கும் மரத்தைக் காணேமே! அதன் விதையையும் அழித்து விட்டாரா கடவுள்? இச் சம்பவங்களால் மனிதன் வஞ்சக் கவடனுனுல், கடவுளும் அவ்வாறு ஆகாததேன்? ஏனெனில் பிறரை வஞ்சித்தவனும் வஞ்சனன்றே? காரணமில்லாமல் கடவுள் இம் மூவரையும் (ஆதம்-ஏவாள்-சைத்தான்) சபித்தார். இது முறையற்றது, நியாயமற்றது; இந்தச் சாபம் கடவுளுக்கே போக வேண்டும். ஏனெனில் அவரே பொய் சொல்லி அவர்களை ஏமாற்றினுர்.

இனி இவர்கள் ஃபிலாசபியைப் பாருங்கள்: எங்காவது இடுப்பு வலியில்லாது கருத்தரித்துக் குழந்தை பெறுவதுண்டா? உழைக்காமல் யாரவது உண்ண முடியுமா? முன்பே முள்ளும் புதரும் உலகில் இல்லையா? கடவுள் மனிதனை உழுதுண்ணச்

சொன்னுரே; பிறகு பைபிளில் புதிய ஏற்பாட்டில் ஊனுண்ணப் புகுந்ததேன்? எதுசரி, எதுபிழை? இரண்டும் சரியாயிருக்க முடியாதே. ஆதாம் செய்த குற்றம் என்ன? அதை நிரூபிக்க முடியாத போது, ஆதாமின் மரபையே குற்றவாளியாக்கு வானேன்? அத்தகைய கடவுளும் நூலும் அறிவாளர் மதிக்கத் தகுமா? (7)

8. அப்பொழுது கடவுளாகிய கர்த்தர்: இதோ, மனுஷன் நன்மை தீமை அறிகிறவனுய் நம்மில் ஒருவரைப் போல் ஆனுன், இனி அவன் தன் கையை நீட்டி, ஜீவவிருக்ஷத்தின் கனியையும் பறித்துப் புசித்து, என்றைக்கும் உயிரோடிருந்தால் என்ன ஆகுமோ என்று சொல்லி, அவன் எடுக்கப்பட்ட மண்ணைப் பண்படுத்தக் கடவுளாகிய கர்த்தர் அவனை ஏதேன் தோட்டத்திலிருந்து துரத்திவிட்டார். அவர் மனுஷனைத் துரத்திவிட்டு ஜீவவிருக்ஷத்துக்குப் போகும் வழியைக் காவல் காக்கும் படி, கேருப்களையும் வீசிக்கொண்டிருக்கிற சுடரொளிப் பட்டயத்தையும் ஏதேன் தோட்டத்துக்கு எதிரே வைத்தார். (ஆ. 3-22, 23, 24)

ஆட்சே: நல்லது! ஆதாம் தன்னைப்போல் அறிவு பெற்றுத் தனக்கு நிகராவதில் ஆண்டவனுக்கு ஏன் ஐயமும் பொருமையும்? இறைவனுக்கு யாரும் இணையாக முடியாது என்பது உண்மையானுல் இந்த ஐயப்பாட்டிற்கே இட மில்லையே. ஆதலால் பைபிள் ஓதும் கடவுள் ஓர் சிறந்த மனிதனே. அவன் மனிதன் போலவே பேசுகிருன். ஆதாமின் அறிவு வளர்ச்சியில் ஆண்டவனுக்கு எவ்வளவு வருத்தம், பொருமை! ஜீவமரக் கனியுண்டது பற்றி எவ்வளவு காழ்ப்பு! ஆதாமை ஈடன் வனத்தில் வைக்கும் போதே அவனைப் பிறகு துரத்த வேண்டிவரும் என்பதை இறைவன் அறியாததேன்? ஆதலால் கிறிஸ்துவக் கடவுள் முற்றறிவன் அல்ல என்ருகிறது. ஜீவமரத்திற்கு எரி—வாளைக் காவல் வைத்தது இறைமையைக் காட்டவில்லை; மனித வியல்பையே காட்டுகிறது. (8)

9. சில நாள் சென்ற பின்பு, நிலத்தின் கனிகளில் சிலவற்றைக் காயீன் (Cain) கர்த்தருக்குக் காணிக்கையாகக் கொண்டு வந்தான். ஆபேலோ (Abel) தன் மந்தையின் தலையீற்றுகளில் கொழுமையான வற்றைக் கொண்டு வந்தான். ஆபேலையும் அவன் காணிக்கையையும் கர்த்தர் கண்ணோக்கினுர். காயீனையும் அவன் காணிக்கையையுமோ அவர் கண்ணோக்கவில்லை. ஆகவே காயீனுக்கு மிகவும் எரிச்சல் உண்டாகி, அவன் முகம் வாடியது. கர்த்தர் காயினிடம் " உனக்கு எரிச்சல் உண்டானதென்ன? உன்முகம் வாடியதென்ன?" என்று கேட்டார். (ஆ. 4-3, 4, 5, 6)

ஆட்சே: கடவுள் ஊனுண்ணு விட்டால் ஆபெலை மதித்து அவன் காணிக்கையான ஆட்டை ஏற்றுக்கொண்டு, காயீனின் கனிகளையும் மறுத்தது ஏன்? அவ்விருவருக்கும் சண்டை நடந்தது. ஆபெல் கொலையுண்டதற்குக் கடவுளால் வந்த இந்த மனக்கசப்பே காரணமாகும். கிறிஸ்துவக் கடவுள் மனிதரைப் போலவே நடக்கிறார்—தோட்டத்திற்கு வருவது, போவது, மரம் நடுவது—முதலியன. இதனால், பைபிள் தெய்வ வாக்கன்று, மனிதன் எழுதியதே என்றாகிறது. (9)

10. கர்த்தர் காயீனிடம்: உன் சகோதரன் ஆபேல் எங்கு என்று கேட்டார்; அவன்: நான் அறியேன்; என் சகோதரனுக்கு நான் காவலாளனோ என்று சொல்ல, அவர்: நீ செய்ததென்ன? உன் சகோதரரின் இரத்தம் பூமியிலிருந்து என்னை நோக்கிக் கூப்பிடுகிறது. கேள். இதோ, உன் சகோதரன் இரத்தத்தை உன் கையிலே வாங்கிக் கொள்ளத் தன் வாயைத் திறந்த நிலத்திற்கு நீ விலக்கப்பட்டுச் சாபத்திற்குள்ளானாய். (4-9, 10, 11)

ஆட்சே: கெயினைக் கேளாமலே ஆபெலுக்கு நேர்ந்ததைக் கடவுள் அறியாரா? அவர் இரத்தமாவது தரையிலிருந்து கதறுமா? இவை யெல்லாம் அறியாதார் செயல்கள். ஆகவே இந்த நூல் அருள் வாக்காகாது; அறிவாளி எழுதியதும் அன்று. (10)

11. ஏனோக்கு (Henoch) மெத்தூசலாவைப் பெற்ற பின் முன்னூறு வருஷம் கடவுளோடு சஞ்சரித்துக் கொண்டிருந்து குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான். (ஆ. 5-22)

ஆட்சே: பலே! கிறிஸ்துவர் கடவுள் மனிதனின்றேல் ஏனோக்குடன் சேர்ந்து உலவுவதேன்? வேதக் கடவுள் நிராகாரம் (அரு), அதை வணங்கினால் கிருத்துவர் உய்வர். (11)

12. மனுஷர் பூமியின் மேல் பெருகத் தொடங்கி, குமாரத்திகளைப் பெற்ற போது, தேவகுமாரர் மனுஷகுமாரத்திகளைச் சௌந்தரியமுள்ளவர்களென்று கண்டு, அவர்களில் தங்களுக்கு இஷ்டமானவர்களைப் பெண்களாகக் கொண்டார்கள். தேவகுமாரர் மனுஷ குமாரத்திகளோடு கூடி வாழ்ந்து இவர்கள் அவர்களுக்குப் பிள்ளைகளைப் பெற்றதினால், அக்காலத்திலும் பிற்காலத்திலும் மகாசரீரிகள் பூமியிலிருந்தார்கள். இவர்களே பூர்வத்தில் பேர்பெற்ற பலவான்கள்.

மனுஷரின் அக்கிரமம் பூமியிலே பெருகிற்றென்றும் அவன் இதயத்து நினைவுகளும் உத்தேசங்களும் எப்போதும் பொல்லாதவைகளே என்றும் கர்த்தர் கண்டார். காணவே, தாம் பூமியில் மனுஷனை உண்டாக்கினதைப்பற்றி கர்த்தர் மனஸ்தாபப்பட்டார்; அது அவர் இருதயத்துக்கு விசனமாயிருந்தது. அப்பொழுது கர்த்தர்:

நான் படைத்த மனுஷனைப் பூமியின்மேல் இருக்கவிடேன்; மனுஷன் முதல் மிருகங்கள் ஊரும் பிராணிகள் ஆகாயத்துப் பறவைகள் வரையுமுள்ள யாவற்றையும் நிக்கிரகம் பண்ணுவேன்; நான் அவர்களை உண்டாக்கினதைப்பற்றி மனஸ்தாபப் படுகிறேன்'' என்றார். (ஆ. 6·1, 2, 4, 5, 6, 7)

ஆட்சே: "ஈசன் மைந்தர் யார்" என்று கிறிஸ்துவரிடம் கேட்க வேண்டும். ஈசனுக்கு மனைவி, மாமியார், மாமனார், மச்சினர், சம்பந்தி—உறவினர் உண்டா? ஆதாம் பெண்களை இறைவன் பிள்ளைகளுக்கு மணம் புரிந்தால், இறைவன் ஆதாமின் சம்பந்தியாகிறான். அவர்களுக்குப் பிறந்த பிள்ளைகள் இறைவனுக்குப் பிள்ளைகளும் பேரன் பேத்திமாரும் ஆகின்றனர். இப்படிக் கட்டி விடுவது தெய்வ நூலா! ...இது கல்வியற்ற காட்டுமிராண்டிகள் இயற்றிய நூல் என்று தெரிகிறது. எல்லாம் அறியாதது கடவுளில்லை; —கடவுள் எல்லாம் அறிவார்; வருங்காலத்தை அறியாதவர் கடவுளில்லை; மனிதர் தான். உலகைப் படைத்த போதே, பிற்காலம் தீயர் வருவதை அவர் அறியாரா? முன் செய்த பிழைகளுக்கு வருந்துதல் (மனஸ்தாபப்படுதல்) கிறிஸ்துக் கடவுளின் ஏற்பாடு. இந்த ஏற்பாடு வேதம் கூறும் இறைவனதல்ல. அவர் பூரணமான வித்வான்; யோகிக்கும் சமானமல்லர். மனச் சாந்தியாலும் விஞ்ஞானத் தெளிவாலும் அவர் துயர்களை மாற்ற முடியவில்லை. பசு பட்சிகளும் தீமையாயினவாம்! எனில் எல்லாம் அறிந்த கடவுள் கலங்குவானேன்? ஆதலால் அவன் கடவுளில்லை; அந்த நூல் கடவுளால் அருளப் பெற்றதும் இல்லை. வேதம் வணங்கும் பரமேசன், பாப சோக துக்க கிலேசங்களின்றி சச்சிதானந்த மயனுவான். இப்போது கூடக் கிறிஸ்துவர் அந்த சச்சிதானந்த மயனை ஏற்று வணங்கினால் ஜன்ம சாபல்யம் எய்துவர். (12)

13. நீ அதைச் செய்யவேண்டிய விதமாவது: பேழையின் நீளம் முந்நூறு முழம், அதன் அகலம் ஐம்பது முழம், அதன் உயரம் முப்பது முழம்...நீயும் உன்னோடுகூட உன் குமாரரும் உன் மனைவியும் உன் குமாரரின் மனைவிகளும் பேழைக்குள் (படகுக்குள்) பிரவேசியுங்கள். மாம்சமான சகலவித ஜீவ ஜந்துக்களிலும் ஆணும் பெண்ணுமாக வகை ஒன்றுக்கு ஒவ்வொரு ஜோடி உன்னுடன் உயிரோடு காக்கப்படுவதற்குப் பேழைக்குள் சேர்த்துக்கொள். ஜாதி ஜாதியான பறவைகளிலும், ஜாதிஜாதியான மிருகங்களிலும் பூமியிலுள்ள சகல ஜாதி ஜாதியான ஊரும் பிராணிகளிலும் வகை ஒன்றுக்கு ஒவ்வொரு ஜோடி உயிரோடு காக்கப்படுவதற்கு உன்னிடம் வரக்கடவது. உனக்கும் அவைகளுக்கும் ஆகாரமாகச்

சகலவித உணவுப் பொருட்களையும் சேர்த்து உன்னிடம் வைத்துக்கொள், என்றார். நோவா (=Noe) அப்படியே செய்தான்; கடவுள் தனக்குக் கட்டளையிட்டபடியெல்லாம் அவன் செய்து முடித்தான். (ஆ 6-15, 18, 19, 20, 21, 22)

ஆட்சே: இந்த அறிவற்ற, நம்பமுடியாத விஷயங்களைப் பேசுகிறவன் கடவுளென்று ஏற்க முடியுமா? படகின் அளவென்ன? அதில் யானை, ஒட்டகம், முதலிய எண்ணிறந்த உயிரினங்களும், குடும்பங்களும், உணவுகளும் அடங்குமா? ஆகவே இது மனிதனியற்றிய புத்தகமாகும். இது கல்லாதவன் எழுதிய நூலெனக் காண்கிறது. (13)

14. அப்பொழுது நோவா கர்த்தருக்கு ஒரு பலிபீடம் கட்டி, சுத்தமான சகல மிருகங்களிலும், சுத்தமான சகல பறவைகளிலும் சிலவற்றைத் தெரிந்தெடுத்து, அவைகளைப் பலிபீடத்தின்மேல் தகனபலிகளாகச் செலுத்தினான். கர்த்தர் சுகந்த வாசனையை முகந்தவராய்: மனுஷனுடைய இருதயத்தின் நினைவுகள் அவன் சிறுவயது தொடங்கிப் பொல்லாதவைகளானபோதிலும், இனி மனுஷன் நிமித்தம் பூமியை நான் சபிப்பதில்லை; நான் இப்பொழுது செய்ததுபோல இனிச் சகல ஜீவன்களையும் சங்கரிப்பதேயில்லை. பூமியுள்ளமட்டும் விதைப்பும் அறுப்பும் சீதளமும் உஷ்ணமும் கோடைகாலமும் மாரிகாலமும் பகலும் இரவும் ஒழிவதில்லை என்று தமது உள்ளத்தில் சொல்லிக்கொண்டார். (ஆ. 8-20, 21, 22)

ஆட்சே: வேதிகை செய்வது, ஓமம் வளர்ப்பது எல்லாம் வேதத்தினின்றே பைபிள் எடுத்துக் கொண்டது போலும். பலி-மணத்தை முகர மூக்குண்டா—முதல்வனுக்கு? கிறிஸ்துவர் கடவுள் மனிதர் போலப் பேசுகிறாரே—என்ன சிற்றறிவு! ஒருதரம் சபிக்கிறார்! பிறகு இரங்குகிறார்!! ஒருதரம் சபியேன் என்கிறார்!!! பிறகு முன்னே சபித்தேன், பின்னும் சபிப்பேன். முதலில் அவன் எல்லாரையும் கொன்றான். இப்போது யாரையும் கொல்லேன் என்கிறான். இதெல்லாம் பிள்ளைப் பேச்சு. அறிவாளிகள் பேச்சும், பிரமாணமும் உறுதி நிலைப்பாயிருக்கும். (14)

15. பின்பு கடவுள் நோவாவையும் அவன் குமாரரையும் ஆசீர்வதித்து: நீங்கள் பலுகிப் பெருகிப் பூமியை நிரப்புங்கள். நடமாடுகிற ஜீவஜந்துக்கள் யாவும் உங்களுக்கு ஆகாரமாகும். பசும் பூண்டுகளை நான் உங்களுக்குத் தந்ததுபோல, இவைகள் எல்லாவற்றையும் உங்களுக்குத் தந்தேன். ஆயினும் மாம்சத்தை அதன் உயிராகிய இரத்தத்தோடே புசிக்க வேண்டாம். (ஆ. 9-1, 3, 4)

ஆட்சே: ஓர் உயிரை வருத்தி இன்னொன்றை அருந்தும் கிறிஸ்துக் கடவுளுக்கு இரக்கம் உள்ளதா? ஒரு மகனைக் கொன்ற ஊனை, இன்னொரு மகனுக்கு ஊட்டும் பெற்றோர்

மகாபாபிகள் அல்லரா? எல்லாரும் கடவுளுக்கு மைந்தரே. கருணையில்லாக் கடவுள் கசாப்புக்காரன் போலும். எல்லாரையும் இம்சிக்கும் கிறிஸ்துக் கடவுள் இரக்கமில்லாப் பாவியன்றோ? (15)

16. பூமியெங்கும் ஒரே பாஷையும் ஒரேவிதமான பேச்சும் இருந்தது... ஆகவே அவர்கள்: நாம் பூமியின் மீதெங்கும் சிதறிப் போகாதபடி நமக்கு ஒரு நகரத்தையும், வானத்தை அளாவும் சிகரமுள்ள ஒரு கோபுரத்தையும் கட்டி, நமக்குப் பேர் உண்டாக்குவோம். வாருங்கள் என்று சொல்லிக்கொண்டார்கள். மனுப்புத்திரர் கட்டுகிற நகரத்தையும் கோபுரத்தையும் பார்க்கிறதற்குக் கர்த்தர் இறங்கினார். அப்பொழுது கர்த்தர்: இதோ, ஜனங்கள் ஒரே கூட்டமாயிருக்கிறார்கள்; அவர்கள் அனைவருக்கும் ஒரே பாஷையும் இருக்கிறது; இது அவர்கள் செய்கைகளின் ஆரம்பம், இனி அவர்கள் செய்ய நினைப்பதொன்றும் அவர்களுக்கு அசாத்தியமானதல்ல. நாமோ இறங்கிப்போய், ஒருவர் பேசுவதை மற்றவர் அறியாதபடி, அங்கே அவர்கள் பாஷையைத் தாறுமாறாக்குவோம் வாருங்கள் என்றார். அப்படியே கர்த்தர் அவர்களை அவ்விடத்திலிருந்து பூமியின் மீதெங்கும் சிதறிப் போகப்பண்ணினார்; அந்நகரம் கட்டுவதை அவர்கள் விட்டுவிட்டார்கள். (ஆ. 11-1, 4, 5, 6, 7, 8)

ஆட்சே: உலகிற்கு ஒரே மொழியிருந்தபோது எல்லாரும் இனிது வாழ்ந்தனர். என்ன துன்பம்! இந்தக் கிறிஸ்துக் கடவுள் எல்லாரையும் மொழிக் குழப்பம் செய்து நாசமாக்கினார். என்ன பொறாமை! என்ன பாவம்!! சைத்தான் வேலையைவிட இது கொடுமையல்லவா? கிறிஸ்துக் கடவுள் ஸனாய் மலை முதலிய இடங்களில் வசித்து, மாந்தர் முன்னேற விரும்பாது, தடுத்தாரே—இது ஒரு கடவுள் செய்யும் காரியமா? கற்ற மனிதன் கூட இப்படிச் செய்யானே. ஆகவே இது எவ்வாறு அருள் நூலாகும்? (16)

17. அவன் (ஆபிராம்) எகிப்துக்குச் சமீபமாய் வந்தபோது, தன் மனைவி சாராயைப் பார்த்து: நீ பார்வைக்கு அழகுள்ள ஸ்திரீ என்பது எனக்குத் தெரியும். எகிப்தியர் உன்னைக் காணும்போது, இவள் அவனுடைய மனைவி என்று சொல்லி என்னைக் கொன்றுபோட்டு உன்னை உயிரோடே வைப்பார்கள். ஆகையால் உன் நிமித்தம் எனக்கு நன்மை உண்டாகும்படிக்கும், உன்னாலே என் உயிர் பிழைக்கும்படிக்கும், நீ உன்னை என் சகோதரி என்று சொல் என்றான். (ஆ. 12—11, 12, 13.)

ஆட்சே: இதோ பார்! ஆப்ரஹாம் கிறிஸ்து—முஸ்லிம்களின் பெரிய தீர்க்கதரிசி! அவர் பொய் சொல்வதும் தவறுனதை செய்வதும் பிசகானது. தன் மனைவியின் கற்பழித்து வியபசாரத்தில் இறக்குவது மிக பிசகானது. இப்படிப் பட்ட தீர்க்கதரிசிகளை நம்பி மக்கள் இன்புறுவதெப்படி? (17)

18. பின்னும் கடவுள் ஆபிரகாமைப் பார்த்து: இதோ, நீ என் உடன்படிக்கையைக் கைகொள்ளவேண்டும்; நீயும் உனக்குப் பின்தலைமுறை தலைமுறையாக வரும் உன் சந்ததியும் அதைக் கைக்கொள்ள வேண்டும். எனக்கும் உங்களுக்கும், உனக்குப் பின்வரும் உன் சந்ததிக்கும் இருக்கிறதும் நீங்கள் கைக்கொள்ள வேண்டியதுமான என் உடன்படிக்கை இதுவே: உங்களுக்குள் இருக்கும் எல்லா ஆண் பிள்ளைகளும் விருத்தசேதனம் பண்ணவேண்டும்; அதுவே எனக்கும் உங்களுக்குமுள்ள உடன்படிக்கைக்கு அடையாளம். தலைமுறை தலைமுறையாக உங்களுக்குள்ளிருக்கும் எல்லா ஆண்பிள்ளைகளும் எட்டாம் நாளிலே விருத்தசேதனம் பண்ணப்படவேண்டும்; வீட்டில் பிறந்த பிள்ளையானாலும் சரி, உன் சந்ததியில்லாத அன்னியனிடத்தில் பணத்திற்குக் கொள்ளப்பட்ட எந்த ஆண்பிள்ளையானாலும் சரி, அப்படியே விருத்தசேதனம் பண்ணப் படவேண்டும். உன்வீட்டில் பிறந்த பிள்ளையும் உன் பணத்திற்குக் கொள்ளப்பட்டவனும் விருத்தசேதனம் பண்ணப்படுவது அவசியம்; இப்படியாக என் உடன்படிக்கை உங்கள் மாம்சத்தில் நித்திய உடன்படிக்கையாக இருக்கும். நுனித்தோலின் மாம்சம் சேதனம் பண்ணப்படாதவன், அதாவது விருத்த சேதனமில்லாத ஆண்பிள்ளை இருந்தால், அவன் தன் ஜனத்திலிருந்து நீக்கப்படுவான்; அவன் என் உடன்படிக்கையை மீறினனே என்றார். (ஆ. 17-9, 10, 11, 12, 13, 14.)

[விருத்தசேதனம் (சுன்னத்) ஆண் குறியின் நுனித்தோலை அறுத்தல்] பாருங்கள் ஈசன் அநியாய ஆணையை! சுன்னத் அவசியமானால் அந்த நுனித்தோலை இறைவன் முதலிலேயே ஆக்கியிருக்கக் கூடாது. அப்படி ஆக்கியிருப்பதால் அது குறியின் பாதுகாப்பிற்காக ஏற்பட்டது. கண்ணுக்கு இமை போல ஆண்குறிக்கு மேல் தோல். இந்த அவயவம் மிக மிருதுவானது. அதன் பாதுகாப்பில்லாது போனால் எறும்பு கடித்தாலும், புண்பட்டாலும் மிகவும் வேதனை தரும். மேலும் அது சிறுநீர் ஆடையில் சொட்டாது பாதுகாக்கிறது. அதை அறுப்பது தீது. மேலும் இன்று கிறிஸ்துவர் அதைச் செய்யாததேன்? இது நித்தியக் கட்டளை; 'கட்டளை எதுவும் சிறிதும் பொய்யன்று' என்றார் ஏசுநாதர். அதை அனுசரிக்க வேண்டும் என்பது அவர் ஆணை. ஆனால் கிறிஸ்துவர் இதைப் பற்றிச் சிறிதும் சிந்திப்பதில்லை. (18)

19. கடவுள் ஆபிரகாமோடு பேசி முடிந்தபின்பு அவர் அவனைவிட்டு உயரப் போய்விட்டார். (ஆ. 17-22.)

ஆட்சே: கடவுள் கீழும் மேலும் வந்து செல்வது சாதாரண மனிதன் அல்லது பறவை போலவா? இது இந்திர ஜாலன் வேலை போலும். (19)

20. பின்பு கர்த்தர் மம்ரேயின் தோப்பில் அவனுக்குத் தரிசனமானார். அவன் பகலின் உஷ்ணவேளையில் கூடாரவாசலில் உட்கார்ந்திருந்து, தன் கண்களை ஏறெடுத்துப் பார்க்கும்போது, இதோ, மூன்று புருஷர் அவனுக்கு எதிரே நின்றார்கள்; அவர்களைக் காணவே, அவன் கூடாரவாசலிலிருந்து, அவர்களுக்கு எதிர்கொண்டு ஓடி, தரைமட்டும் குனிந்து: ஆண்டவனே, உமது கண்களில் எனக்குத் தயவு கிடைத்ததானால், நீர் உமது அடியேனைவிட்டுக் கடந்து போகவேண்டாம். கொஞ்சம் தண்ணீர் கொண்டுவரட்டும், உங்கள் கால்களைக் கழுவி மரத்தடியில் சாய்ந்து கொண்டிருங்கள். அடியேன் இருக்கும் இடத்திற்கு நீங்கள் வந்தபடியால், உங்கள் களைப்பை ஆற்ற நான் சிறிது ஆகாரம் கொண்டுவருகிறேன். சாப்பிட்ட பிற்பாடு நீங்கள் பிரயாணமாகலாம் என, அவர்கள்: நீ சொன்னபடி செய் என்றார்கள். அப்பொழுது ஆபிரகாம் கூடாரத்தில் சாராளிடம் விரைந்துபோய்: நீ சீக்கிரமாய் மூன்றுபடி மெல்லிய மாவு எடுத்துப் பிசைந்து அப்பம் சுடு என்று சொல்லிவிட்டு! மாட்டுமந்தைக்கு ஓடி, ஒரு நல்ல இளங்கன்றைப் பிடித்து வேலைக்காரன் கையிலே கொடுத்தான்; அவன் அதைச் சீக்கிரத்தில் சமைத்தான். தயிரையும் பாலையும், தான் சமைப்பித்த கன்றையும் ஆபிரகாம் எடுத்துவந்து அவர்கள் முன் வைத்து விட்டு, அவர்கள் அருகே மரத்தடியில் நின்றுகொண்டிருந்தான்; அவர்கள் சாப்பிட்டார்கள். (ஆ. 18-1, 2, 3, 4, 5, 6, 7, 8.)

ஆட்சேப: காணுங்கள் நல்லோர்களே! ஈசன் பசுங்கன்றின் ஊனைத் தின்னும் போது, அவனை உபாசிக்கும் மதத்தினர் மாடு, கன்று முதலியவற்றின் புலாலையுண்ணக் கேட்க வேண்டுமா! கருணையின்றி ஊனுண்ணும் தினவு கொண்டவன் கடவுளா? அவன் ஒரு கொடிய மனிதனாயிருக்கலாம். அவனுடன் வந்த இருவர் யாரோ? இதிலிருந்து நாம் அறிய வேண்டிய தென்னவென்றால் காட்டுமிராண்டிகள் குழு ஒன்றிருந்தது; அவர்கள் தலைவனை பைபிள் 'கடவுள்' என்றழைக்கிறது. அறிவாளிகள் அவனைக் கடவுள் என்றோ, இந்த நூல் அருள் வாக்கென்றோ ஒப்பமாட்டார்கள். (20)

21. அப்பொழுது கர்த்தர் ஆபிரகாமைப் பார்த்து: சாராள் சிரித்து, கிழவியாகிய நான் பிள்ளைபெறுவது மெய்யாகுமோ என்று சொல்வானேன்? கர்த்தரால் ஆகாத காரியம் உண்டோ? குறித்த காலமாகிய அடுத்தவருஷம் இதே காலத்தில் நான் உன்னிடம் திரும்ப வருவேன்; அப்பொழுது சாராளுக்கு ஒரு குமாரன் இருப்பான் என்றார். (ஆ. 18-13, 14.)

ஆட்சேப: கிறிஸ்துக் கடவுளின் கேலிக் கிண்டல் லீலைகளைப் பாருங்கள். பெண்களும் குழந்தைகளும் குத்திப் பேசுவது போலிருக்கிறது. (21)

22. அப்பொழுது கர்த்தர் வானத்திலிருந்து அனுப்பிய கந்தகத்தையும் அக்கினியையும் கர்த்தர் சோதோமின் (Sodom) மேலும் கோமொரா (Gomorrha)வின் மேலும் வருஷிக்கப்பண்ணி, அந்தப் பட்டணங்களையும் அந்தச் சமபூமி அனைத்தையும் அந்தப் பட்டணங்களின் குடிகள் எல்லாரையும் நிலத்தின் பயிரையும் அழித்துப் போட்டார். (ஆ. 19-24, 25.)

ஆட்சே: பைபிளீசனின் மற்றொரு லீலையைப் பாரீர்! குழந்தைகள் முதலிய உயிர்களிடம் இரக்க மில்லாதவன்! அவர்கள் என்ன பாவம் செய்தனர். அவர்களை அடியோடு அழித்தானே! இது நீதியா, தயவா, அறிவா! கடவுளே இப்படிச் செய்யும் போது, அவனை உபாசிப்பவர் என்ன தான் செய்ய மாட்டார்கள்? (22)

23. நம்முடைய தகப்பனால் சந்ததி உண்டாகும்படி அவருக்கு மதுவைக் குடிக்கக் கொடுத்து அவரோடு சயனிப்போம் வா என்றாள். அப்படியே அன்று இரவில் தங்கள் தகப்பனுக்கு மதுவைக் குடிக்கக் கொடுத்தார்கள். மூத்தவள் போய்த் தன் தகப்பனோடு சயனித்தாள்; அவள் சயனித்ததையும் எழுந்திருந்ததையும் அவன் உணராதிருந்தான். மறுநாளில் மூத்தவள் இளையவளைப் பார்த்து: நேற்று இராத்திரி நான் தகப்பனோடு சயனித்தேன்; இன்று இராத்திரியும் மதுவைக் குடிக்கக் கொடுப்போம்; நம்முடைய தகப்பனால் சந்ததி உண்டாகும்படி நீ போய் அவரோடு சயனி என்றாள். அப்படியே அன்று இராத்திரியிலும் தங்கள் தகப்பனுக்கு மதுவைக் குடிக்கக் கொடுத்தார்கள். அப்பொழுது இளையவள் எழுந்துபோய் அவனோடு சயனித்தாள்; அவள் சயனித்ததையும் எழுந்திருந்ததையும் அவன் உணராதிருந்தான். இவ்விதமாய் லோத்தின் குமாரத்திகள் இருவரும் தங்கள் தகப்பனால் கர்ப்பவதியானார்கள். (ஆ. 19-32, 33, 34, 35, 36.)

ஆட்சே: பாரீர்! கிறிஸ்துவாதிகள் குடி வெறியால் தந்தை—மகள் என்ற வித்தியாசம் அறியாமல், பாபம் செய்கிறார்கள். குடிகாரர் என்ன தான் செய்யார்? நல்லவர்கள் கட்குடியின் பெயரைக்கூடக் கேட்கக் கூடாது. (23)

24. கர்த்தர் தாம் சொல்லியிருந்தபடியே சாராள்பேரில் அவர் கடாட்சம் வைத்தார்; தாம் உரைத்தப்படியே கர்த்தர் சாராளுக்குச் செய்தருளினார். ஆபிரகாம் முதிர் வயதாயிருக்கையில் சாராள் கர்ப்பவதியாகி, கடவுள் குறித்திருந்த காலத்தில் அவனுக்கு ஒரு குமாரனைப் பெற்றாள் (ஆ. 21–1, 2)

ஆட்சே: சிந்தியுங்கள். அவன் சாராளிடம் வந்தான்; அவள் கருவுற்றாள். இதெல்லாம் எப்படி நடக்கும்? யாராவது மூன்றாவது மனிதன் கரு வைத்தானா? ஈசன் கருணையாலே தான் சாராள் கர்ப்பவதியானாள் என்பது விளங்கவில்லையா? (24)

25. ஆபிரகாம் அதிகாலையில் எழுந்து, ஆகாரமும் ஒரு துருத்தித் தண்ணீரும் எடுத்து *ஆகாரிடம் கொடுத்து, அவள் தோளின்மேல் வைத்து, பிள்ளையையும் ஒப்புக்கொடுத்து அவளை அனுப்பிவிட்டான்; அவள் புறப்பட்டுப்போய், பெயேர்ஷெபாவின் வனாந்தரத்தில் அலைந்து திரிந்தாள். துருத்தியிலிருந்த தண்ணீர் செலவழியவே, அவள் பிள்ளையை ஒரு செடியின் கீழ்விட்டு: பிள்ளை சாகிறதை நான் பார்ப்பேனோவென்று சொல்லி, அம்பு பாயும் தூரத்தில் போய், எதிரே உட்கார்ந்து சத்தமிட்டு அழுதாள். கடவுள் பிள்ளையின் சத்தத்தைக் கேட்டார்; கடவுளின் தூதனானவர் வானத்திலிருந்து ஆகாரைக் கூப்பிட்டு: ஆகாரே, உனக்கு நேரிட்டதென்ன? பயப்படாதே, பிள்ளை இருக்கும் இடத்தில் கடவுள் அவன் சத்தத்தைக் கேட்டார்- (ஆ. 21-14, 15, 16, 17)

ஆட்சே: இப்போது பாருங்கள் கிறிஸ்தீசன் காரியத்தை! ஸாராவிடம் அன்பு காட்டி (அவள் சக்களத்தி) ஆகாரைத் துரத்தினான். ஆகார் அழுகிறாள். அவள் அழுகையைக் கேட்கவில்லை. அவள் பிள்ளை குரலைக் கேட்கிறான். அல்லது ஆகார் குரலைப் பையன் குரல் என்று எண்ணியிருக்கலாம். இது தெய்வ வாக்கா! சாதாரண மனிதன் பேச்சாயிருக்கிறதே. பைபிளில் சில பகுதிகள் தவிர, மற்றவை அர்த்தமற்றவை; சாரமற்றவையெல்லாம் நிறைந்திருக்கிறது. (25)

26. இவைகளுக்குப் பின்பு கடவுள் ஆபிரகாமைப் பரிசோதித்துப் பார்த்தார். அவர் அவனை நோக்கி: ஆபிரகாமே என்றார். அவன்: இதோ, அடியேன் என்றான்...கடவுள் ஆபிரகாமுக்குச் சொல்லியிருந்த இடத்திற்கு அவர்கள் வந்து சேரவே, அவன் ஒரு பலிபீடத்தை அமைத்து, கட்டைகளை அடுக்கி, தன் குமாரன் ஈசாக்கைக் கட்டி அந்தப் பலிபீடத்தில் அடுக்கிய கட்டைகளின்மேல் கிடத்தினான். பின்பு ஆபிரகாம் தன் குமாரனை வெட்டும்படி தன் கையை நீட்டிக் கத்தியை எடுத்தான். அப்பொழுது கர்த்தரின் தூதனானவர் வானத்திலிருந்து: ஆபிரகாமே, ஆபிரகாமே என்று கூப்பிட்டார். அவன்: இதோ அடியேன் என்றான். அவர்: பிள்ளையாண்டான் மேல் உன் கையைப் போடாதே, அவனுக்கு ஒன்றும் செய்யாதே; நீ அவனை உன் புத்திரன் என்றும் உன் ஏகசுதன் என்றும் பாராமல் எனக்காக ஒப்புக்கொடுத்ததினால், நீ கடவுளுக்குப் பயப்படுகிறவன் என்று இப்பொழுது அறிந்திருக்கிறேன் என்றார். (ஆ. 22-1, 2, 10, 11, 12)

ஆட்சே: இப்போது பைபிளீசன் சிற்றறிவன், முற்றறிவனில்லை என நன்றுத் தெரிகிறதல்லவா? ஆப்பிரகாமும் சர்வ சாதாரண மனிதன்; இன்றேல் இப்படிப்பட்ட காரியம் செய்வானா? கடவுள் முற்றறிவனானால் ஆப்பிரகாமின் பக்தியை

* ஆகார் என்பவள் ஆபிரகாமின் அடிமைப் பெண். அவள் மூலம் அவன் ஒரு மகவைப் பெற்றான்.

அறிந்து மதித்திருப்பான். ஆகவே பைபிளீசன் சர்வக்ஞன் (முற்றறிவன்) அல்ல என்று நிச்சயமாகிறது. (26)

27. எங்கள் கல்லறைகளில் முக்கியமானதில் பிரேதத்தை அடக்கம் பண்ணும்; நீர் பிரேதத்தை அடக்கம்பண்ண என் கல்லறையைத் தரமாட்டேன் என்று எங்களில் ஒருவனும் உமக்குத் தடை செய்வதில்லை, என்றார்கள். (ஆ. 23-6)

ஆட்சே: செத்தபிணம் அழுகி நாறி நோய் பரப்பும்; ஆதலால் பிணத்தைப் புதைப்பது தீயது.

வினா: கவனியுங்கள்! நாம் அன்பு வைத்த ஒருவர் உடலை எரிப்பது நலமா? புதைப்பது உறக்குவது போலாகும். புதைப்பதே நல்லது.

விடை: நீ அன்பு வைத்தவன் பிணத்தை வீட்டிலேயே வைத்துக் கொள்ளலாமே. நீ அன்பு வைத்த ஆன்மா போன பிறகு அழுகல் உடம்பை விரும்புவது பொருளற்றது. அதன் மேல் பிரியமானால் பூமியில் புதைப்பானேன்? யாரையாவது குழியை வெட்டிப் புதைப்பேன் என்றால் மகிழ்வாரா? குழியில் வைத்து அதன் வாய், கண், உடல், மார்பில் மண்ணையும், கல்லையும், செங்கலையும் சுண்ணும் பையும் கொட்டி அடக்கம் செய்து, அதன் மேலே ஒரு கல்லை நடுவது அன்பின் அறிகுறியோ? சவத்தைப் பெட்டிக்குள் வைத்து அடக்கம் செய்வது நாற்றம், அசுத்தம், ஆபாசம்; அது காற்றைக் கெடுக்கும், நோய் கொடுக்கும்.

மேலும், ஒரு பிணத்தைப் புதைக்க 6 முழம் நீளம், 4 முழம் அகலம் கொண்ட பூமி வேண்டும். அவ்வாறு நூறு ஆயிரம், இலட்சம், கோடிப் பிணங்களைப் புதைக்க எவ்வளவு நிலம் வீணாகும்? புதைநிலம் வயலோ, வீடோ தோட்டமோ ஆகாது. ஆதலால் புதைப்பது மிகக் கெடுதல். பிணத்தை ஆற்றில் விடுவது சிறிது மேலாகும்; மீன்கள் பிய்த்துண்ணும். அப்போதும் எலும்பு நரம்புகள் நீரை அசுத்தமாக்கித் தீங்கு செய்யும். பிணத்தைக் காட்டில் எறிந்தால் பறவைகளும் விலங்குகளும் உண்ணும்; அப்போதும் எலும்பு தசை நார்—காற்றைக் கெடுத்துப் பொது சுகாதாரத்தைப் பாழாக்கும். எரிப்பதே நல்லது; உடலைச் சாம்பலாக்குவதே சாலச் சிறந்தது. ஏனெனில் நெருப்பால் உடலின் பாகங்கள் தூய அணுவாகி காற்றில் கலந்து விடும்.

வினு : எரிப்பதும் நாற்றத்தைக் கிளப்புமே......

விடை : ஆம் முறைப்படி எரிக்கா விட்டால் நாற்றம் வரும்.
அது கூடப் புதைப்பதை விட நல்லது. வேத விதிப்படி
தகனம் செய்தால் நாற்றமே வராது முதலில் குழி (வேதி)
தோண்டுக—ஆழம் 3 முழம், அகலம் $2\frac{1}{2}$ முழம் நீளம் 5 முழம்
அடியில் $1\frac{1}{2}$ முழம் சதுரம். அது படிப்படியாக மேலே
அகல வேண்டும். உடலின் நிறையளவு நெய் எடுத்து அதில்
ஒருசேர் எடைக்கு ஒருஇரத்தி கஸ்தூரியும், கால் விரா
கனிடை கேசரியும் சேர்க்கவும். குறைந்தது அரை மணங்கு
சந்தனமும் அகில், தகர் கற்பூரம் பலாசக் கட்டைகளையும்
வேதியில் அடுக்கவும். அதன்மேல் பிணத்தை வைத்து,
மேலே சுற்றிலும் ஒரு முழம் சிதை அடுக்குக. பிறகு
நெய்யும், நறு மணச் சரக்குகளும் தூவிக் கொள்ளி வைக்க
வும். இதற்கு அந்தி யேஷ்டி, நரமேதம், அல்லது புருஷ
மேதம் என்பர். ஒரு ஏழையின் உடலுக்கும் இருபது சேர்
நெய் வேண்டும். இதைச் சமுதாயமோ அரசாங்கமோ
வழங்க வேண்டும். முறைப்படி தகனம் செய்ய வேண்டும்.
நெய் முதலியன கிடைக்கா விட்டால் விறகுக் கட்டை
வைத்தே எரிக்கலாம். புதைப்பதை விட இது நல்லது.
இலட்சக் கணக்கான பிணங்களை எரிக்கச் சிறுநிலமே
($\frac{1}{32}$ ஏகர்) போதும். நிலம் வீணுகாது. மேலும் சமாதுகள்
பயங்கரமானவை. புதைப்பது தீது; எரிப்பதே நல்லது. (27)

28. என் எஜமானை ஆபிரகாமின் கடவுளாகிய கர்த்தருக்கு ஸ்தோத்திரம்; என் எஜமானுக்குப் பாராட்டும் கிருபை உண்மையையும் அவர் அவனை விட்டு விலக்கவில்லை; நான் செய்த பிரயாணத்தில் என் எஜமானின் சகோதரர் வீட்டுக்குக் கர்த்தர் என்னை நடத்திக்கொண்டு வந்தாரே என்றான். (ஆ. 24-27)

ஆட்சே : என்ன கடவுள் ஆபிரகாமிற்கு மாத்திரம் உரியவரா? இக்காலம் சேவகரும் வழிகாட்டிகளும் எஜமானனுக்கு முன்னால் போவது போலக் கடவுள் நடத்தினராம். இப்போது ஏன் அவர் அப்படி வழி நடத்த வில்லை? அப்படி ஏன் மனிதருடன் பேசுகிறதில்லை? இதெல்லாம் கடவுளோ, அருள் நூலோ உரைப்பதன்று; காட்டுமிரண்டி கள் பேச்சு. (28)

29. இஸ்மவேலின் மக்களுடைய பேரும், அவரவர் பேரும் சந்ததியுமாவன: இஸ்மவேலுடைய மூத்தமகன் நெபாயோத் (Nabajoth) பின்பு கேதார் (Cedar)

அத்பியேல் (Adbeel), மிப்சாம் (Mabsam), மிஷ்மா (Masma), தூமா (Duma), மாசா (Massa), ஆதாத் (Hadar), தேமா (Thema), யெத்தூர் (Jethur), நாபீஷ் (Naphis), கேத்மா (Cedma). (ஆ. 25-13, 14, 15)

ஆட்சே: இஸ்மவேல் ஆபிரகாமின் தாசி ஆகாரின் மகன். (29)

30. உன் தகப்பனுக்குப் பிரியமாயிருக்கிற ருசியுள்ள பதார்த்தங்களாக நான் அவைகளைச் சமைப்பேன். உன் தகப்பன் தாம் மரணமடையுமுன் உன்னை ஆசீர்வதிக்கும்படி அவர் புசிப்பதற்கு நீ அதை அவரிடம் கொண்டுபோக வேண்டும் என்றான். பின்பு ரெபெக்காள் (Rebecca) வீட்டிலே தன்னிடமிருந்த தன் மூத்த மகனாகிய ஏசாவின் நல்ல வஸ்திரங்களை எடுத்து, இளைய மகனாகிய யாக்கோபுக்கு (Jacob) உடுத்தி, வெள்ளாட்டுக்குட்டிகளின் தோலை அவன் கைகளிலும் ரோமமில்லாத கழுத்திலும் போட்டாள்...அப்பொழுது யாக்கோபு தன் தகப்பனிடம்: நான் உமது மூத்தமகன் ஏசா; நீர் எனக்குச் சொன்னபடியே செய்தேன்; நீர் என்னை ஆசீர்வதிக்கும்படி, நீர் எழுந்து உட்கார்ந்து நான் வேட்டையாடிக் கொண்டு வந்ததைப் புசியும் என்றான். (ஆ. 27-9, 10, 15, 17. 19.)

ஆட்சே: பாரீர்! பொய் வஞ்சகத்தால் ஆசிவாங்கி, பிறகு சித்தர், தீர்க்கதரிசிகள் போல நடிக்கிறார்கள். என்ன விநோதம்; கிறிஸ்து மத மூல புருஷரின் தன்மையே இப்படி? கிறிஸ்துமத மெல்லாம் கெடுபிடி......குழப்பம் ......வேறென்ன? (30)

31. அதிகாலையில் யாக்கோபு எழுந்து, தன் தலையின் கீழ் வைத்திருந்த கல்லை எடுத்து, அதை ஒரு ஸ்தம்பமாக நிறுத்தி, அதன்மேல் எண்ணெய் வார்த்தான். அந்த ஸ்தலத்திற்குப் பெதேல் (Bethel) என்று பெயரிட்டான். கர்த்தரே எனக்குக் கடவுளாவார், நான் ஸ்தம்பமாக நிறுத்தின இந்தக் கல் கடவுளுக்கு வீடாகும்: (ஆ. 28-18, 19, 22)

ஆட்சே: பாரீர் இப்போது காட்டு மிராண்டிகள் வேலை! கல்லைத் தொழுகிறார்கள், மற்றவர்களையும் தொழச் செய்கிறார்கள். முஸ்லீம்கள் ‘இதை பைதயெல் முகத்தஸ் (கடவுள் வீடு)’ என்கின்றனர். என்ன இதே கல்லா கடவுள் வீடு! அதில் மாத்திரமா அவன் இருந்தான்; என்ன விநோதம்! கிறிஸ்துவர்களே! நீங்களே பெரிய உருவணங்கிகள் என்பது தெளிவு! (31)

32. கடவுள் ராகேலை (Rachel) நினைத்தருளினார்; அவளுக்குக் கடவுள் செவி சாய்த்து, அவள் கர்ப்பந்தரிக்கும்படி செய்தார். அவள் கர்ப்பவதியாகி, ஒரு குமாரனைப் பெற்று: கடவுள் என் நிந்தையை நீக்கிவிட்டார், என்றாள். (ஆ. 30-22, 23.)

ஆட்சே: சபாஷ் கிறிஸ்தீசர்! நீர் பெரிய ஸர்ஜன்; அறுவை மருத்துவர்! எந்த ஆயுதம் அல்லது மருந்தினுல் பெண்களின் கர்ப்பாசயத்தைத் திறக்கிறீர்! ......எல்லாம் மடத்தனமான பேச்சு! (32)

33. அன்று இரவு சீரிய தேசத்தானுகிய லாபானுக்குக் கடவுள் சொப்பனத்தில் தோன்றி: நீ யாக்கோபோடு நன்மையா தீமையோ ஒன்றும் பேசாதபடி எச்சரிக்கையாயிரு என்ருர்...ஆகவே உன் தகப்பனுடைய வீட்டிற்குப் போவதற்கு அடக்கமுடியாத வாஞ்சை உனக்கு இருப்பதால் போ; ஆனுலும் என் தெய்வங்களை ஏன் திருடிக்கொண்டு போகவேண்டும் என்று கேட்டான் (ஆ. 41-24, 30).

ஆட்சே: இங்கே ஒரே ஒரு உதாரணம் தருகிருேம். கடவுள் ஆயிரக்கக்கணக்கான பேருக்குக் கனவில் வந்தார், விழிப்பிலும் வந்தார், உண்டார், பருகினுர் பேசினுர், போனுர்......என்கிறது பைபிள். இப்போதும் வந்தார், அக்கடவுள் இருக்கிருன் என்ருல் கனவிலோ நனவிலோ வருவதில்லையே! இந்தக் காட்டாட்கள் கல்லுருக்களைக் கடவுள் என வணங்கினர். அது மட்டுமா......அவர் தெய்வமும் கற்களைக் கடவுள் என்றது; இல்லையென்ருல் தெய்வங்களைத் திருடும் பொருள் என்ன? (33)

34. யாக்கோபு பிரயாணம் பண்ணுகையில் தேவதூதர்கள் அவனைச் சந்தித்தார்கள். யாக்கோபு அவர்களைக் கண்டபோது: இது கடவுளின் சேனை என்று சொல்லி, அந்த ஸ்தலத்திற்கு மகனுயிம் என்று பேரிட்டான் (ஆ. 32-1, 2).

ஆட்சே: கிறிஸ்தீசர் மனிதர் என்பதில் சிறிதும் ஐயமில்லை! ஏனெனில் அவரும் சேனை வைத்திருக்கிருர். சேனை என்னும்போது ஆயுதங்களும் இருக்க வேண்டும்; படையெடுப்பும் நடக்கவேண்டும்; இன்றேல் சேனைக்கு என்ன வேலை! (34)

35. யாக்கோபு பிந்தித் தனித்திருந்தான்; அப்பொழுது ஒரு புருஷன் பொழுது விடியுமளவும் அவனேடு போராடினுர். அந்தப் புருஷன் தாம் யாக்கோபை மேற்கொள்ளமுடியாதது கண்டு, அவன் தொடைச் சந்தைத் தொட்டார். ஆகவே அவரோடு போராடுகையில் யாக்கோபின் தொடைச்சந்து சுளுக்கிற்று. அவர்: நான் போகட்டும், பொழுது விடிகிறது. அவனே: நீர் என்னை ஆசீர்வதித்தாலொழிய உம்மைப் போகவிடேன் என்ருன். அவர்: உன் பேர் என்னவென்று கேட்டார்; யாக்கோபு என்ருன். அவரோ: உன் பேர் இனி யாக்கோபு என்னப்படாமல் இஸ்ரவேல் (Israel) என்னப்படும், நீ கடவுளோடும் மனிதரோடும் போராடி மேற்கொண்டாயே என்ருர். அப்பொழுது யாக்கோபு: உமது நாமத்தை எனக்குத் தெரிவிக்கவேண்டுமென்று கேட்க, அவர்: நீ என் நாமத்தைக் கேட்பானேன் என்று

சொல்லி, அங்கே அவர் ஆசீர்வதித்தார். யாக்கோபு : நான் கடவுளை முகமுகமாய்க் கண்டேன், கண்டும் உயிர் தப்பிப் பிழைத்தேன் என்று சொல்லி, அந்த ஸ்தலத்துக்குப் பெனீயேல் (Phanuel) என்று பேரிட்டான். அவன் பெனுவேலைக் கடந்துபோகையில் சூரியன் உதயமாயிற்று ; அவன் தொடைச் சுளுக்கினிமித்தம் நொண்டி நொண்டி நடந்தான். அவர் யாக்கோபின் தொடைச்சந்து நரம்பைத் தொட்டபடியினால், இஸ்ரவேல் புத்திரர் இந்நாள் வரைக்கும் தொடைச்சந்து நரம்பைப் புசிக்கிறதில்லை (ஆ. 32–24, 25, 26, 27, 28, 29, 30, 31, 32).

ஆட்சே : கிறிஸ்தீசர் மல்யுத்தக்காரராம் ! ஆகவே தான் ஸாராவுக்கும் ராகாலுக்கும் புத்திரரைத் தந்தாரம் ! இப்படிப் பட்டவர் கடவுளா ? இன்னொரு வேடிக்கை பாருங்கள் ! ஒருவர் இன்னொருவர் பேரைக் கேட்கிறார். அந்த ஆள் பெயர் சொல்லவில்லை. கடவுள் யாகோபின் தொடைக் கூட்டில் கைபோட்டு நாடியை முறித்தார். அதனால் குஸ்தியில் ஜெயித்தார். அவர் மருத்துவரானால் தொடையின் நாடியைச் சரிசெய்திருக்க வேண்டும். கடவுளன்புக்குப் பலன் யாக்கோபு கால் நொண்டியானது தானா ? மற்ற பக்தரும் நொண்டியாவது தானா ? அவரைக் காண்பதாம் ; குஸ்தி செய்வதாம் ; அப்படியானால் கடவுளுக்கு உடல் உண்டா ? இதெல்லாம் சிறு பிள்ளைப் பேச்சு ! (35)

36. நான் உமது முகத்தைக் கண்டது கடவுளின் முகத்தைக் கண்டது போலிருக்கிறது (ஆ. 33–10).

ஆட்சே : கடவுளுக்கு முகமிருக்குமானால் மற்ற அவயவங்களும் அவருக்கு கட்டாயம் இருக்க வேண்டுமே ? ஜனன மரணமும் அவருக்குண்டா ? (36)

37. யூதாவின் (Juda) மூத்த மகன் ஏர் (Her) என்பவன் கர்த்தரின் பார்வையில் பொல்லாதவனாயிருந்ததினால் கர்த்தர் அவனை அழித்துப் போட்டார். அப்பொழுது யூதா ஓனா (Onan)னைப் பார்த்து : நீ உன் தமையன் மனைவியைச் சேர்ந்து, அவளை மைத்துனச் சுதந்தரமாய்ப் படைத்து, உன் தமையனுக்குச் சந்ததியை உண்டாக்கு என்றான். அந்தச் சந்ததி தன் சந்ததியிராதென்று ஓனான் அறிந்தபடியினாலே, அவன் தன் தமையனின் மனைவியைச் சேரும்போது தன் தமையனுக்குச் சந்ததி உண்டாகாதபடி தன் விந்தைத் தரையிலே விழவிட்டுக் கெடுத்தான். அவன் செய்தது கர்த்தரின் பார்வையில் தீயதாயிருந்ததினால் அவனை அவர் அழித்துப் போட்டார் (ஆ. 38–7, 8, 9, 10).

ஆட்சே : இது கடவுள் செய்வதா மனிதன் செய்வதா ? அண்ணியுடன் நியோகம் செய்தவனைக் கொன்றதேன் ? அவன் மனதை மாற்றுவதற்கென்ன ? வேத சம்மதமான

நியோகம் அந்த நாட்டிலும், எந்த நாட்டிலும் இருந்திருக்கிறது என்பது நிச்சயமாகிறது. (37)

## தௌராத் யாத்திராகமம் (Exodus)

38. மோசே (Moses) பெரியவனானபோது, அவன் சகோதரரிடம் போய் அவர்கள் சுமை சுமைக்கிறதைப் பார்த்துக்கொண்டிருந்தான். அப்போது தன் சகோதரராகிய எபிரேயரில் (Hebrew) ஒருவனை ஒரு எகிப்தியன் அடிக்கிறதைக் கண்டான். காணவே அங்கும் இங்கும் பார்த்து, ஒருவரும் இல்லை என்று அறிந்து கொண்டு, எகிப்தியனை வெட்டி மணலில் புதைத்துப் போட்டான். அவன் மறுநாளிலும் வெளியே போனபோது, இதோ எபிரேயரில் இரண்டு பேர் சண்டைப் போட்டுக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவன் அநியாயஞ் செய்கிறவனைப் பார்த்து: நீ உன் தோழனை அடிக்கிறது என்னவென்று கேட்க, அவன்: எங்கள் மேல் உன்னை அதிகாரியாகவும் நியாயாதிபதியாகவும் ஏற்படுத்தினவன் யார்? நீ அந்த எகிப்தியனைக் கொன்றுபோட்டது போல என்னையும் கொன்றுபோட நினைக்கிறாயோ என்றான். அந்தக் காரியம் நிச்சயமாகவே வெளியாகிவிட்டது என்று மோசே அறிந்து பயந்தான். (தௌ. யாத். 2-11, 12, 13, 14.)

ஆட்சே: இதோ பாருங்கள்! மூசே புகழ்பெற்ற பைபிள் முக்கிய சித்தன், சமயாசாரியன். அவன் நடத்தையைப் பாருங்கள்! ஆத்திரச் சினத்தால் ஆளைக் கொன்று சர்க்கார் தண்டனைக்குப் பயந்து திருடன் போல தப்பி ஓடினான். கொலையை மறைத்த பொய்யன். இப்படிப் பட்டவன் கடவுளைக் காண்பதாம்; சித்தனும், யூதமத ஸ்தாபகனும். அவன் வணங்கிய கடவுளும் அவனைப் போலத் தானோ? கிறிஸ்து சமய மூலவர் மூஸே போலக் கல்வியற்ற முரடராகத்தான் இருக்க வேண்டும். (38)

39. அவன் பார்க்கும்படி கிட்டவருகிறதைக் கர்த்தர் கண்டார்; முட்செடியின் நடுவிலிருந்து கடவுள்: மோசே, மோசே என்று அவனைக் கூப்பிடவே, அவன்: இதோ, அடியேன் என்றான். அப்பொழுது அவர்: இங்கே கிட்டிச்சேராதே, உன் கால்களில் இருக்கிற பாதரட்சைகளைக் கழற்றிப்போடு; நீ நிற்கிற இடம் பரிசுத்த பூமி என்றார். (யாத். 3-453)

ஆட்சே: பலே! மனிதனைக் கொன்று மணலில் புதைத்து மறைத்து வைத்த ஒரு முரடனின் அன்பராம் கர்த்தர்! இப்படிப்பட்டவனை சித்தப் புருஷன் என்று நம்புகிறார்கள் கிறிஸ்தவர். இது விந்தை! கிறிஸ்தீச்வரன் 'பரிசுத்த பூமியை பாதரட்சை காலோடு மிதியாதே' என்று கட்டளை இட்டிருக்கும் போது கிறிஸ்தவர்கள் அந்தக் கட்டளையை மதிக்காதது ஏனோ?

கிறி : நாங்கள் பாதரட்சைக்குப் பதிலாகத் தொப்பியை எடுக்கிறோமே ?

விடை : இது இரண்டாம் தவறு. தொப்பியை எடுக்க ஈச்வரன் சொல்லவில்லை, உங்கள் புத்தகத்திலும் எழுதப்படவில்லை. எது கழற்றத்தக்கதோ அதை கழற்றாமல், எதை எடுக்கத் தேவையில்லையோ அதை எடுக்கிறீர்கள். இவ்விரு செயலும் உங்கள் பைபிளுக்கு விரோதமானவை.

கிறி : எங்கள் ஐரோப்பாவில் குளிர் அதிகம் ; ஆகவே நாங்கள் பாதரட்சையை கழற்றுவதில்லை.

விடை : ஏன் தலைக்குக் குளிர் படுவதில்லையா ? அப்படிச் செய்ய வேண்டுமானால் ஐரோப்பாவிற்கே செல்லலாமே ? எங்கள் வீட்டுக்குள்ளேயோ படுக்கையறைக்கோ வரும் போது கட்டாயம் பாதரட்சையை கழற்ற வேண்டும். தவறினால் உன் பைபிள் கட்டளையை மீறினவனாவாய் ? நீ அப்படி செய்யக்கூடாது. (39)

40. கர்த்தர் அவனிடம் உன் கையிலிருக்கிறது என்ன என்று கேட்க, இது ஒரு கோல் என்றான். அதைத் தரையில் போடு என்றார் ; அவன் அதைத் தரையில் போடவே, அது பாம்பாயிற்று ; மோசே அதற்கு விலகி ஓடினான். அப்பொழுது கர்த்தர் மோசேயினிடம் : உன் கையை நீட்டி அதன் வாலைப் பிடி என்றார் ; அவன் தன் கையை நீட்டி அதைப் பிடிக்கவே, அது அவன் கையிலே கோலாயிற்று. பின்னும் கர்த்தர் அவனிடம் : உன் கையை உன் மடியில் மூடிக்கொள் என்றார் ; அவன் தன் கையை மடியில் மூடிக்கொண்டான் ; அதைத் திரும்ப வெளியே எடுக்கும்போது, இதோ, அவன் கை உறைந்த மழைநிறமான வெண்குஷ்டம் பிடித்திருந்தது. அவர் : உன் கையைத் திரும்பவும் மடியில் இட்டுக்கொள் என்றார். அவன் தன் கையைத் திரும்பத் தன் மடியில் மூடிக்கொண்டான் ; அவன் அதைத் தன் மடியிலிருந்து திரும்ப வெளியே எடுத்தபோது, அது அவன் மற்றச் சதையைப் போலாயிற்று. இவ்விரண்டு அடையாளங்களையும் அவர்கள் நம்பாமலும் உன் சொல்லைக் கேளாமலும் போவார்களானால், அப்பொழுது நீலநதியிலே நீ தண்ணீர் மொண்டு நிலத்தில் ஊற்றுவாயாக ; நதியில் மொண்ட தண்ணீர் வெட்டாந்தரையிலே இரத்தமாகும் என்றார். (யாத். 4-2, 3, 4, 5, 6, 7, 9.)

ஆட்சே : சபாஷ் ! என்ன ஜால வித்தை ! கிறிஸ்தீச்வரன் பெரியமாய ஜால வித்தை கில்லாடி யாயிருக்க வேண்டும் ! இதை நம்பும் அவன் சீடன் மூஸாவும் மற்றவர்களும் எப்படிப்பட்டவர்கள் ! இக்காலத்து மந்திரவாதிகள் இதை விட குறைவா செய்கிறார்கள் ? இது ஈச்வரச் செயலா ? அவன் பெரிய கில்லாடிதான் ! கற்றவர்கள் இதை எப்படி ஒப்பு

வார்கள்? ஆபிரகாமும், ஈசாக், யாக்கோபு முதலியோர் தன்னைக் கடவுள் என்று முகஸ்துதி செய்வான் பொருட்டு இப்படி செய்துகொண்டு திரிகிறன் பைபிள் பரமேச்வரன். இது உத்தமரின் செயலாகாது, முகஸ்துதி பிரியரின் இழி செயலாகும். (40)

41. ஆட்டுக்குட்டியை எடுத்துப் பஸ்காவாக (இளம் ஆட்டை) அடியுங்கள். ஈசோப்பு (Hyssop)க் கிளைகளின் கொத்தை எடுத்து, கிண்ணத்தில் இருக்கும் இரத்தத்தில் தோய்த்து, அந்த இரத்தத்தை வாசல் நிலைக்கால்களின் மேற் சட்டத்திலும் வாசல் நிலைக்கால்கள் இரண்டிலும் தெளியுங்கள்; விடியற்காலம் வரைக்கும் உங்களில் ஒருவரும் வீட்டுவாசலை விட்டு வெளியே வரவேண்டாம். கர்த்தர் எகிப்தியரை அதம் பண்ணுகிறதற்குக் கடந்துபோவார்; நிலையின் மேற்சட்டத்திலும் வாசல் நிலைக்கால்கள் இரண்டிலும் அந்த இரத்தத்தைக் காணும்போது, உங்களை அதம்பண்ணுகிறதற்கு உங்கள் வீடுகளுக்குள் சங்காரக்காரனைக் கர்த்தர் வரவொட்டாமல் வாசற்படியை விட்டு விலகிக் கடந்துப்போவார்.

(யாத். 12-21, 22, 23.)

ஆட்சே: எல்லாம் யந்திர தந்திர மாய மந்திரம் போலிருக்கிறதே! எல்லாம் அறிந்த ஈச்வரனுயிருக்க முடியாது! இரத்தக் குறியாலே தான் கடவுள் இஸ்ரேலியர் வீட்டை அறிய வேண்டுமா? மற்றபடி முடியாதோ? இது சிறு மதியாளன் வேலையாயிருக்கிறதே. இது கல்வியில்லாத காட்டு மிரண்டியால் எழுதப்பட்டதாகும். (41)

42. நடு ராத்திரியிலே சிங்காசனத்தில் வீற்றிருக்கும் பார்வோ (Pharao) னின் தலைப்பிள்ளை முதல் காவற்கிடங்கில் சிறைப்பட்டவனின் தலைப்பிள்ளை வரைக்கும், எகிப்துதேசத்திலிருந்த முதற்பேறனைத்தையும் மிருகங்களின் தலையீற்றனைத்தையும் கர்த்தர் அழித்தார். அப்பொழுது பார்வோனும் அவன் சகல ஊழியரும் எகிப்தியர் யாவரும் இரவிலேயே எழுந்திருந்தார்கள்; மகா கூக்குரல் எகிப்தில் உண்டாயிற்று; சாவில்லாத வீடு யாதொன்றுமில்லை. (யாத். 12-30. 31.)

ஆட்சே: பயங்கரக் கொடுமை! கிறிஸ்தீசன் கருணையற்ற திருடனைப்போல நள்ளிரவிற்சென்று ஒரு குற்றமும் அறியாத குழந்தைகளையும், கிழவரையும், மாடுகளையுங் கூடக் கொன்றுவிட்டாரே! அவருக்கு அன்பில்லை என்று தெரிகிறதே. எகிப்து முழுதும் அலறுகிறது. ஆனல், கிறிஸ்து கர்த்தரின் கொலைக் கொடுமை தணியவில்லையே? கடவுளை விட்டுவிடுவோம்; சாதாரண மனிதனுவது இப்படிச் செய்வானு? வியப்பென்ன? ‘ मांसाहारिण: कुतो दया ’—ஊனுண்பவருக்கு இரக்கமில்லை. கிறிஸ்தீசர் புலாலுண்பவர். அவர் மனிதரிடம் எப்படி இரக்கம் காட்டுவார்?

43. கர்த்தர் உங்களுக்காக யுத்தம் பண்ணுவார்; நீங்கள் சும்மாயிருங்கள் என்றான். அப்பொழுது கர்த்தர் மோசேயினிடம்: நீ என்னை நோக்கி கூக்குர லிடுவதென்ன? புறப்பட்டுப் போங்கள் என்று இஸ்ரவேலருக்குச் சொல். நீ உன் கோலை ஓங்கி உன் கையைச் சமுத்திரத்தின் மேல் நீட்டி, சமுத்திரத்தைப் பிளந்து விடு; இஸ்ரவேலர் சமுத்திரத்தின் நடுவாக வெட்டாந்தரையில் நடந்து போவார்கள். (யாத். 14-14, 15, 16.)

ஆட்சே: என்னய்யா? முற்காலத்தில் இடையன் தன் ஆடுகளுக்குப் பின்னே செல்வதுபோலவே, கடவுள் இஸ்ரேலியர் பின்னே சென்றார். ஆனால் இப்போது அந்த ஆண்டவன் எங்கு மறைந்தானோ? இப்போது அவன் இருந்தால் கடலுள் தண்டவாளம் போட்டு ரயிலை விடுவானே. உலகுக்கு எவ்வளவோ நன்மை செய்வானே. கப்பல் முதலியவை கட்டும் சிரமம்கூட இராதே. ஆனால் என்ன செய்வது, கிறிஸ்தீசர் இப்போது எங்கே ஒளிந்தாரோ, தெரியவில்லை! பைபிளீசன் மூஸேக்காக இப்படிப் பட்ட நம்பத்தகாத காரியங்களைச் செய்தாராம்! கிறிஸ்தீசர் போலவே, கிறிஸ்து சித்தரும், அவர்கள் நூலும் மேற்படியே—இவற்றினின்று தூர விலகி நிற்பதே நமக்கு நல்லது. (43)

44. உன் கடவுளாகிய கர்த்தராயிருக்கிற நான் எரிச்சலுள்ள கடவுள். என்னைப் பகைக்கிறவர்கள் விஷயத்தில் பிதாக்களின் அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்தில் மூன்றாம் நான்காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவராயிருக்கிறேன். (யாத். 20-5)

ஆட்சே: தகப்பன் குற்றத்திற்கா நான்கு சந்ததி பரம்பரைகளைத் தண்டிப்பது என்ன நீதியோ? நல்ல தகப்பனுக்குக் கெட்ட பிள்ளைகளும், கெட்டவனுக்கு நல்ல பிள்ளைகளும் பிறப்பதில்லையா? நான்கு பரம்பரைகளைத் தண்டிப்பதேன்? ஐந்து, ஆறு மற்ற துஷ்ட பரம்பரைகளை தண்டிக்க மாட்டாரோ? குற்றஞ் செய்யாதவரைத் தண்டிப்பது நீதியில்லை,—அநீதியாகும். (44)

45. ஓய்வு நாளைப் பரிசுத்தமாய் ஆசரிக்க நினைப்பாயாக; ஆறு நாளும் நீ உழைத்து, உன் வேலைகளை யெல்லாம் செய்துகொள், ஏழாம் நாளோ உன் கடவுளாகிய கர்த்தருடைய ஓய்வு நாள்; அதிலே நீயாவது உன் குமாரனாவது, குமாரத்தியாவது, உன் வேலைக்காரனாவது, உன் வேலைக்காரியாவது, உன் மிருகமாவது, உன் வாசல்களுக்குள் இருக்கிற அந்நியனாவது யாதொரு வேலையும் செய்யவேண்டாம். (யாத். 20-8, 9. 10, 11)

ஆட்சே: ஞாயிறே ஒரே புனித நாளா? மற்ற ஆறும் புனித மற்ற நாட்களா? கடவுள் ஆறு நாள் கடும் உழைப் பால் களைத்து, ஏழாவது நாள் உறங்கினரா? ஞாயிறை ஆசீர்வதித்தார் (வாழ்த்தினர்) என்றால் மற்ற நாட்களுக்கு என்ன கொடுத்தார்? அவற்றைச் சபித்தாரா? கடவுளே யன்று, எந்த அறிவாளியும் நாட்களைச் சபிக்கமாட்டானே. மற்ற நாட்களுக்கு இல்லாத சிறப்பு ஞாயிற்றிற்கு என்ன? வாரத்தின் மற்ற நாட்களை ஒதுக்கி ஞாயிறை மட்டும் புனிதம் என்று வாழ்த்துவானேன்? மற்றவை என்ன குற்றம் செய்தன? (45)

46. அயலானுக்கு விரோதமாகப் பொய்ச் சாட்சி சொல்ல வேண்டாம். அயலான் வீட்டை இச்சிக்க வேண்டாம், அயலானின் மனைவியையாவது, அவன் வேலைக்காரனையாவது, அவன் வேலைக்காரியையாவது, அவன் மாட்டையாவது, அவன் கழுதையையாவது, அயலானுக்குள்ள வேறென்றையாவது இச்சிக்க வேண்டாம். (யாத். 20-16, 17)

ஆட்சே: ஆஹா! பலே! அதனாலோ கிறிஸ்துவர், தாகக்காரன் தண்ணீரை, பசித்தவன் உணவை அவாவுவது போலவே, பிற நாட்டார் பொருளை அவாவுகின்றனர்? இந்த நடத்தை ஒரகமானது. சுயநலமுள்ளது. இதே மாதிரியே அவர் கடவுளும் இருப்பார் போலும். எல்லா மனிதரும் அடுத்தவர் என்றால் மனைவி மக்கள், ஆண் பெண் சேவகர் எல்லாரும் அடுத்தவர்கள் தாமே? வேறு எவ்வாறு எண்ணப்படுவார்கள்? இவையெல் லாம் சுயநலக்காரர் பேச்சு; கடவுள் பேச்சல்ல. (46)

47. ஒரு மனிதனைச் சாகும்படி அடித்தவன் கொல்லப்பட வேண்டும். ஒருவன் வேண்டுமென்றே கொல்லாமல் தனக்கு எதிரே வந்தவனைத் தற்செயலாய்க் கொன்றால், அவன் ஓடிப்போய்ச் சேர வேண்டிய ஸ்தலத்தை உனக்கு நியமிப்பேன். (யாத். 21-12, 13)

ஆட்சே: ஈச்வரன் நியதி உண்மையானால் மூசே ஒரு வனைக் கொன்று மண்ணுள் புதைத்து ஓடினனே, அப் பொழுது அவனுக்கு ஏன் தண்டனை அளிக்கவில்லை. கடவுளே இந்தக் கொலையைச் செய்யச் சொன்னாரானால், அவர் நீதியற்றவராவார். மூசேயை அரசன் தண்டித்து நீதி வழங்காது கடவுள் ஏன் தடுத்தார்? (47)

48. கர்த்தருக்குச் சமாதான பலிகளாகக் காளைகளைப் பலியிட்டார்கள். அப்பொழுது மோசே அந்த இரத்தத்தை எடுத்து, பாதியைப் பாத்திரங்களில் வார்த்து பாதியைப் பலிபீடத்தின் மேல் தெளித்தான். அப்பொழுது மோசே இரத்தத்தை எடுத்து ஜனங்களின் மேல் தெளித்து : இந்த வார்த்தைகள் யாவற்றின்படியும் கர்த்தர் உங்களோடு செய்த உடன்படிக்கையின் இரத்தம் இதுவே என்றான். அப்பொழுது கர்த்தர் மோசேயினிடம் : நீ மலையின் மேல் என்னிடத்திற்கு ஏறி வந்து அங்கேயே இரு ! நான் உனக்குக் கற்பலகைகளையும், நீ அவர்களுக்கு உபதேசிக்கும்பொருட்டு நான் எழுதின நியாயப் பிரமாணத்தையும் கற்பனைகளையும் கொடுப்பேன்.

(யாத்- 24 5, 6, 8, 12)

ஆட்சே : இவையெல்லாம் மூர்க்கர் சரக்கல்லவா! கடவுள் மாட்டுப் பலி ஏற்பதாம்...பலி பீடத்தில் இரத்தம் தெளிப்பதாம் ! இவையெல்லாம் மிருகத்தன்மையான அநாகரீகச் செயலல்லவா ? கிறிஸ்தீசர் மாட்டுப் பலி ஏற்கும்போது, அவன் அன்பர் வயிறு நிறைய மாட்டிறைச்சி யடைத்து, உலகுக்குத் தீமை செய்வதில் வியப்பென்ன ? பைபிள் இத்தகைய தீய சரக்குகளால் நிரம்பியிருக்கிறது. ஆகவே, இதெல்லாம் வேதத்திலும் இருக்கிறதென்கிறார்கள். பேரளவிற்கூட அதில் இந்த மாதிரிச் சரக்குகள் காண முடியாது. கிறிஸ்தீசர் மலைவாசி போலும். அவருக்குக் காகிதம், பேனா, மை முதலியன செய்ய முடியாது போலும். ஆகவே தன் கட்டளைகளைக் கற்பலகைமேல் எழுதிக் கொடுத்து கல்லா மாக்களிடையே ‘நானே கடவுள்’ எனத் திரிகிறார். (48)

49. நீ என் முகத்தைக் காணமுடியாது, மனிதன் எவனும் என்னைக் கண்டு உயிரோடிருக்க முடியாது என்றார். பின்னும் கர்த்தர் : இதோ என்னண்டையில் ஓர் இடம் உண்டு ; நீ கன்மலையில் நில்லு ; என் மகிமை கடந்துபோகும்போது, நான் உன்னை அந்தக் கன்மலையின் வெடிப்பிலே வைத்து, நான் கடந்துபோகுமட்டும் என் கரத்தினால் உன்னை மூடுவேன் ; பின்பு என் கரத்தை எடுப்பேன் ; எடுக்கவே என் பின்பக்கத்தை நீ காண்பாய் ; என் முகமோ காணப்படாது என்றார்:

(யாத். 33-20, 21, 22, 23)

ஆட்சே : பாரீர் ! இந்தக் கிறிஸ்தீசர் மனிதன் போல உடலவர். அவர் மூசே முன் கடவுளாகச் சாலம் செய்கிறார். மூசா அவரது முகத்தைப் பார்க்காது முதுகைப் பார்க்கும் போது உருவத்தைக் காணமாட்டானா ? கையினால் மூடப்பட்டிருக்க முடியுமா ? அப்படி மூடப்பட்டபோது கையின் ரூபத்தைப் பார்க்க முடியாதா ? (49)

## லேவியாகமம் (The book of Leviticus)

50. கர்த்தர் மோசேயைக் கூப்பிட்டு, தரிசனக் கூடாரத்திலிருந்து (Tabernacle) அவனோடு பேசி: நீ இஸ்ரவேலரைப் பார்த்து: உங்களில் ஒருவன் கர்த்தருக்குப் பலி செலுத்தவந்தால், மாட்டு மந்தையிலாவது ஆட்டு மந்தையிலாவது ஒரு மிருகத்தைத் தெரிந்தெடுத்து, பலி செலுத்த வேண்டும். (லே. 1-1, 2)

ஆட்சே: இப்போது சிந்தியுங்கள். கிறிஸ்தீசன் பசு, காளை, ஆடு பலி வேண்டுகிறரே; இவற்றின் ஊனை உண்ணத் தினவெடுத்தலைகிறரே; இவரை இரக்கமுள்ளவர் என்பதா? இவர் கடவுளா...? அவர் சாகசமாய்ப் புலாலுண்ணும் சாதாரண மனிதனே. (50)

51. கர்த்தருடைய சந்நிதியில் அந்தக் காளையைக் கொல்ல வேண்டும்; கொன்றபின் அரோனின் (Aaron) குமாரராகிய ஆசாரியார் அதன் இரத்தத்தைத் தரிசனக் கூடார வாசலில் இருக்கிற பலிபீடத்தின்மேல் சுற்றிலும் தெளிக்கவேண்டும். பின்பு அவன் அந்தத் தகனபலியைத் தோலுரித்து அதைச் சந்து சந்தாகத் துண்டிக்க வேண்டும். அப்பொழுது ஆசாரியனாகிய ஆரோனின் குமாரன் பலிபீடத்தின் மேல் அக்கினியைப் போட்டு, அக்கினியின் மேல் கட்டைகளை அடுக்கி, துண்டங்களையும் தலையையும் கொழுப்பையும் பலிபீடத்திலுள்ள அக்கினியிலிருக்கிற கட்டைகளின்மேல் அடுக்கிவைக்க வேண்டும். அதன் குடல்களும் கால்களும் தண்ணீரினால் கழுவப்பட வேண்டும்; அவற்றையெல்லாம் ஆசாரியன் பலிபீடத்தில் தகனபலியாகத் தகனிக்க வேண்டும். இது கர்த்தருக்கு சுகந்த வாசனையான நிவேதனம். (லே. 1-5, 6, 7, 8, 9)

ஆட்சே: சிந்தியுங்கள்! பக்தர் கடவுள் முன் ஒரு காளையைக் கொல்லுவது...கடவுள் கொலையை சம்மதிப்பது. இரத்தத்தைச் சுற்றிலும் வாரித் தூவுவது, மாமிசத்தைத் தீயில் வாட்டுவது. கடவுள் வாசனை பார்ப்பது—இதெல்லாம் கசாயி வீட்டு லீலைக்குக் குறைச்சலா? ஆதலால் பைபிள் அருள் நூல் இல்லை. அந்தக் கடவுளும் காட்டு மனிதன் போல நடக்கிறன். (51)

52. பின்னும் கர்த்தர் மோசேயினிடம்: ஜனத்தைக் குற்றத்திற்குட்படுத்தும் பாவமொன்றை அபிஷேகம் பெற்ற ஆசாரியன் செய்தால், மாட்டு மந்தையில் பிடித்த பழுதற்ற (without blemish) ஒரு காளையைத் தான் செய்த பாவத்தினிமித்தம் பாவ நிவாரண பலியாகக் கர்த்தருக்குப் படைக்கக் கடவன். அவன் அந்தக் காளையைத் தரிசனக் கூடார வாசலில் கர்த்தருடைய சந்நிதியில் அதைக் கொல்ல வேண்டும். (லே. 4-1, 3, 4)

ஆட்சே: பாப பரிகாரம் பாருங்கள்! பாபம் செய்தவன் பிறகு தீங்கற்ற பசு முதலிய நல்ல பிராணிகளைக் கொல்லுகிறன்.

கடவுளும் ஆதரிக்கிருன். இப்படிப் பாதகம் செய்பவனைக் கடவுள் என நம்பி முக்தியும் விரும்புகின்றனரே!!! (52)

53. செய்யக்கூடாதென்று தன் கடவுளாகிய கர்த்தர் விலக்கியவற்றில் ஒன்றையாகிலும் அதிபதி யொருவன் அறியாமல் செய்து பாவத்துக்குட்பட்டுக் குற்றவாளியானுல், தான் செய்தது பாவம் என்று தனக்குத் தெரியவரும்போது, அவன் பழுதற்ற வெள்ளாட்டுக் கடா ஒன்றைப் பலியாகக் கொண்டுவந்து, அந்தக் கடாவின் தலைமேல் தன் கையை வைத்து, கர்த்தருடைய சந்நிதியில் தகன பலியைக் கொல்லும் இடத்தில் அதைக் கொல்லவேண்டும்; இது பாவ நிவாரண பலி. (லே. 4-22,23,24)

ஆட்சே: ஹலலோ அப்படியானுல் கவர்னர், நீதிபர், படைத் தலைவர்—யாரும் பாபத்திற்கு ஏன் அஞ்சவேண்டும்? வேண்டுமட்டும் பாபம் செய்து, பசுக்களையும், கன்றுகளையும், ஆடுகளையும் பலியிட்டால், பரிகாரமாகிவிடுமே. அதனுலேதான் கிறித்துவர் விலங்குகளையோ பறவைகளையோ கொன்றுண்ணக் கூசுவதில்லை. கேளுங்கள் கிறிஸ்துவர்களே, நீங்கள் இந்தக் காட்டு மதத்தைவிட்டு மங்களகரமான வேறு ஒரு மதத்தைத் தழுவுங்கள். அதுவே உங்களுக்கு இன்பம் தரும். (53)

54. ஆட்டுக்குட்டியைக் கொண்டுவர அவனுக்குச் சக்தி யில்லாதிருந்தால், அவன் செய்த குற்றத்தினிமித்தம் இரண்டு காட்டுப் புருக்களையாவது, இரண்டு புருக் குஞ்சுகளையாவது, ஒன்றைப் பாவ நிவாரணப் பலியாகவும், மற்றென்றைத் தகனபலியாகவும் கர்த்தருக்குக் கொண்டுவர வேண்டும். அவைகளை ஆசாரியனிடம் கொண்டுவர வேண்டும், ஆசாரியன் பாவ நிவாரண பலிக்கானதை முதலாவது படைத்து, அதன் தலையைக் கழுத்தினிடத்தில் திருகி அதை இரண்டாக்காமல் வைக்க வேண்டும். மற்றதை நியமத்தின்படியே அவன் தகன பலியாய்ச் செலுத்தி, அவன் செய்த பாவம் நீங்குவதற்கு ஆசாரியன் பிராயச்சித்தம் செய்யவேண்டும்; அப்பொழுது அவன் பாபம் மன்னிக்கப்படும். இரண்டு காட்டுப் புருக்களையாவது இரண்டு புருக் குஞ்சுகளையாவது கொண்டுவர அவனுக்கு சக்தி யில்லாதிருந்தால், தான் செய்த பாவத்தினிமித்தம் படைக்கும் காணிக்கைக்கென்று ஒரு எப்பா அளவான மெல்லிய மாவிலே பத்தில் ஒரு பங்கைப் பாவ நிவாரண பலியாகக் கொண்டுவரவேண்டும்; அது பாவ நிவாரண பலியானதால் அதன் மேல் எண்ணெய் வார்க்கலாகாது. சாம்பிராணி போடலாகாது......—இது பாவ நிவாரண பலி.
(லே. 5-7, 8, 10, 11, 13)

கேண்மோ! கிறிஸ்துவரில் ஏழை பணக்காரர் இருவரும் பாபத்திற்குப் பயப்பட வேண்டியதில்லை. ஏனெனில் எளிதாகப் பாபம் பரிகாரமாகிறது—பாபம் செய்தே பாபம் நீங்கும் என்று கிறிஸ்துவ பைபிள் சொல்லுவது மிக விந்தையாயிருக்கிறது. முதலில் பாபம் செய்கிருன்; இரண்டாவது ஒரு பிராணியைக்

கொன்று பலி கொடுக்கிறான்; அதன் ஊனை மிக ஆனந்தமாக உண்கிறான். பாப பரிகாரம் பெறுகிறான். கிறிஸ்து மதத்தில் பாபம் செய்தவன் புறாவின் கழுத்தைத் திரிகினால் மன்னிப்பாம்! அந்தோ அந்தப் புறாவின் உயிர் கொஞ்சநேரம் எப்படித் துடிக்கும்—இரக்கம் இல்லையா? கடவுளே கொலையில் மகிழும்போது மனிதன் எப்படி இரங்குவான்? பாபங்களுக்கு இவ்வளவு எளிதான பரிகாரம் இருக்கும்போது, கிறிஸ்து பக்தியால் பாபம் நீங்கியது என்பானேன்? கடவுளே துன்பக் கொலைக்குத் தூண்டுதலாயிருக்கும்போது; மனிதருக்கு இரக்கம் எங்கிருந்து வரும்? கிறிஸ்து நம்பிக்கையால் பாபம் நீங்கியதென்பானேன்? எளிதான பரிகாரங்கள் உள்ளவே.* (54)

55. ஒருவனுடைய தகனபலியின் தோல் அந்தத் தகன பலியைச் செலுத்துகிற ஆசாரியனைச் சேரும். அடுப்பில் பாகம் பண்ணப்பட்டதும், பொரிக்குச் சட்டியிலும் தட்டையான சட்டியிலும் சுடப்பட்டதுமான போஜன பலியாவும் அதைச் செலுத்துகிற ஆசாரியனைச் சேரும். (லே. 7-8, 9)

ஆட்சே : இந்துக் கோவில்களில் அம்மனுக்குப் பூசை போடும் பூசாரிகளும் அர்ச்சகருந்தாம் மோசடிப் பேர்வழிகள் என்று நினைத்தோம். கிறிஸ்தீசர், புரோகிதர் வேலைகள் அவற்றினும் ஆயிரம் மடங்கு இழிவாயிருக்கின்றனவே. அவர்கள் தோலையும் விற்று ஊனையும் புசிக்கின்றனர். அவர் வாழ்வு எவ்வளவு சுகமானது—அன்றும், இன்றும்! ஒரு தகப்பன் ஒரு பிள்ளையைக் கொன்று அதன் ஊனை, இன்னொரு பிள்ளைக்கு ஊட்டுவதா? மனிதர், விலங்குகள், பறவைகள் எல்லாம் கடவுளின் மக்களே. இந்தமாதிரி கொலைப்பலி செய்யவே கூடாது. இந்த பைபிள்

---

* விநோதமான கடவுள்! மாடு, கன்று, ஆடு, ஆட்டுக்குட்டி, புறாக்கள் மான்எல்லாம் அவருக்கு பலியாகின்றன. புறாக் குஞ்சின் கழுத்தைத் திருகி ஏற்பதாம்! ஒரு காரியமும் செய்யாமல் அவன் உண்டு கொண்டிருப்பதாம்! நடந்தது இதுதான். படிப்பில்லாக் காட்டுமிராண்டிகளிடையே ஒரு பலே பேர்வழி எழுந்தான். அவன் மலைமேல் அமர்ந்து, தன்னைக் கடவுள் என்று விளம்பரப்படுத்திக்கொண்டான். அவன் இவனைக் கடவுள் என்று நம்பி, அறியா மக்கள் அவன் வலையில் விழுந்தனர். அவன் மக்களை ஏமாற்றி ஆடு, மாடு, பறவை, உணவு எல்லாம் காவு கொடுக்கச் செய்து நன்றாக உண்டு, சுகமாகத் திரிந்தான். அவன் கையாட்கள் சிலர்—தேவதூதர், ஏஞ்ஜல்கள் என்று விளம்பரமானார்கள். ஆடு, மாடு, கன்று, புறாக்கள், சுவையான உணவுகளைக் கொட்டிக்கொள்ளும் பைபிளீசன் எங்கே? எங்கும் நிறைந்து, எல்லாம் அறிந்த, அருளான, பிறப் பிறப்பற்ற எல்லாம் வல்ல, நீதியும் கருணையும் மிக்க வேதக் கடவுள் எங்கே? அறிவாளிகளே சிந்தியுங்கள். (தயானந்தர் குறிப்பு)

அருள்நூல் அன்று, பைபிளீசன் செயல் நலமன்று, இரண்டையும் வழிபடுவோரும் தர்ம மறிந்தார் அல்லர் என்பது விளங்குகிறது. பைபிளினில் உள்ள லேவிடிகஸ் முதலிய நூல்கள் இங்கே விவரிக்கமுடியாத அளவு ஆபாசமாயிருக்கின்றன. (55)

56. கர்த்தருடைய தூதனானவர் உருவினப் பட்டயத்தைத் தமது கையில் பிடித்துக்கொண்டு வழியில் நிற்பதைக் கழுதை கண்டு, வழியைவிட்டு வயலில் விலகிப் போயிற்று; கழுதையை வழியில் திருப்பும்படி பிலேயாம் (Balaam) அதை அடித்தான்......அப்பொழுது கர்த்தர் கழுதையின் வாயைத் திறந்தார். அது பிலேயாமைப் பார்த்து: நீர் என்னை இப்பொழுது மூன்றுதரம் அடித்தீரே, நான் உமக்குச் செய்ததென்ன: என்றது. (எண். 22-23, 28)

ஆட்சே: அந்தக்காலம் கழுதை கூடக் கடவுளையும், அவனது தூதரையும் கண்டதாம். இன்று சிறந்த பாதிரிமாரும், பிஷப்புகளும், சாதாரணமக்களும் சிரேஷ்டரும் மற்றவரும் கூட பார்க்கமுடிவதில்லை! இன்று கடவுளும் அவனது தூதரும் மறைந்துபோயினர். கடவுளும் தூதரும் இன்றும் உண்டா இல்லையா? உண்டு என்றால், ஆழ்ந்து உறங்குகிறார்களா? அல்லது நோயுற்றனரா? அல்லது வேறுலகத்திற்குச் சென்றனரா? அல்லது வேறுகாரியம் பார்க்கிறார்களா? அல்லது கிறிஸ்துவருடன் சினங்கொண்டாரா அல்லது இறந்தே போனாரா? என்ன ஆனாரோ தெரியவில்லையே. இதிலிருந்து நாம் அறிவது என்னவென்றால் அவர்கள் அன்றும் இல்லை, இன்றும் இல்லை, அன்றும் இன்றும் கண்டதும் இல்லை—எல்லாம் கப்சா—மூளையின் கற்பனைகளே! (56)

57. ஆகையால் குழந்தைகளில் எல்லா ஆண் பிள்ளைகளையும் புருஷ சம்போகத்தை அறிந்த எல்லா ஸ்திரீகளையும் கொன்றுபோடுங்கள். ஸ்திரீகளில் புருஷ சம்போகத்தை அறியாத எல்லாப் பெண் குழந்தைகளையும் உங்களுக்காக உயிரோடு வையுங்கள். (எண். 31-17, 18)

ஆட்சே: அடே பாவி! உங்கள் மூசாவும் கடவுளும் பலே புண்ணியாத்மாக்கள்! ஸ்திரீ, குழந்தை, முதியோர், பசு—எல்லோரையும் கொலை செய்வதில் வல்லுனர்!!? மூசா ஒரு சிற்றின்பப் பிரியன் என்று இதிலிருந்து நமக்கு நன்கு தெரிகிறது. அப்படி யில்லாவிட்டால் 'புருஷ சம்போகத்தை அறியாத கன்னிகளை உங்களுக்காக உயிரோடு வையுங்கள்' என்று கருணையற்றக் கட்டளை இடுவதின் கருத்தென்ன? (57)

58. அன்று இரவே கர்த்தரின் வார்த்தை நாத்தானுக்கு வந்தது. நீ போய் என் தாசனாகிய தாவீதை (David)ப் பார்த்து : கர்த்தர் இப்படிச் சொல்லுகிறார் : நான் வாசமா யிருப்பதற்கு நீ எனக்கு ஒரு ஆலயம் கட்டுவாயோ ? நான் இஸ்ரவேலரை எகிப்திலிருந்து கொண்டுவந்த நாள்முதல் இந்நாள்வரைக்கும் நான் ஒரு ஆலயத்தில் வாசம் பண்ணினதில்லை ; கூடாரத்திலும் கூடார வாசஸ்தலத்திலும் வசித்து நடமாடி வந்தேன். (சாமுவேல் II புத்தகம் 7-1, 5, 6)

ஆட்சே: கிறிஸ்தீசர் மனிதர்போல உடல்கொண்டவர், என்
பதில் ஐயமில்லை. "உழைத்தேன், இங்குமங்கும் திரிந்தேன்,
இப்போது எனக்கு இருக்க வீடு வேண்டும். தாவீது வீடு
கட்டினால் அதில் வசிக்கவிரும்புவேன்" என்று முறையிடு
கிறார் கடவுள். இந்தமாதிரிக் கடவுளையும் நூலையும் போற்று
கிறார்களே கிறிஸ்துவர்கள். வெட்கமில்லையா ? ஒருதரம் சிக்
கிக்கொண்டால் சிக்கலிலிருந்து விடுபடுவது கடினமே. (58)

59. ஐந்தாம் மாதம் ஏழாந் தேதியில் நெபுகாத்நேச்சார் (Nebuchodonosor) என்னும் பாபிலோன் (Babylon) ராஜாவின் பத்தொன்பதாம் வருஷத்திலே பாபிலோன் ராஜாவின் ஊழியனாகிய நெபுசரதான் (Nebuzardan) என்னும் மெய்காவலரின் அதிபதி எருசலேமுக்கு (Jerusalem) வந்து, கர்த்தருடைய ஆலயத்தையும் ராஜ அரண்மனையையும் சுட்டெரித்தான் ; எருசலேமின் சகல கட்டடங்களையும், விசேஷமாய்ப் பெரிய வீடுகள் அனைத்தையும் அக்கினியால் சுட்டெரித்து விட்டான். மெய்காவலரின் அதிபதியோடிருந்த கல்தேய (Chaldees) சேனை வீரரெல்லாரும் எருசலேமைச் சுற்றிலுமிருந்த அலங்கங்களை இடித்துப்போட்டார்கள்.
(இராஜாக்கள் II புத்தகம் 25-8, 9, 10)

ஆட்சே: என்ன செய்வது ! தாவீது முதலியோரால் வீடு
கட்டிக்கொண்டார் கடவுள் தன் சுகத்திற்காக. நெபுஃஜார்
ஆதாம் இந்த வீட்டை இடித்தபோது கடவுளும், தூதரும்
எதுவும் செய்யமுடியவில்லையே ! முன்னே கடவுள் பல
போர்கள் புரிந்து வென்றாராமே. இப்போது தனது
வீட்டையே சுட்டு அழிக்கவிட்டாரே—அவர் சும்மா
உட்கார்ந்தாரா ? எங்கே ? அவர் தூதர்கள் எங்கே ஓடிப்
போனார்கள் ? அவர் உதவிக்கு இப்போது யாரும் வர
வில்லையே. தன் ஆற்றலும் ஆண்டவனைவிட்டு விலகியதே !
அப்படியானால் இதுகாறும் அவரைப்பற்றி எழுதிய வெற்றிக்
கதைகளெல்லாம் வெற்றுக் கதைகளே. எகிப்தியச் சிறுவர்
சிறுமியரைக் கொன்றதுடன் அவர் வீரம் நின்றுவிட்டதா ?
வேறு வீரர்கள் முன்னே அவர் ஏன் மௌனமானார் ?
கிறிஸ்தீசன், இந்தமாதிரி தனக்கே அவமானத்தைத் தேடிக்
கொண்டானே. இந்த நூல் இந்தமாதிரி திராபைக் கதை
மயமாயிருக்கிறதே. (59)

## ஜயூர்—இரண்டாம் பகுதி

## முதல் நாட் குறிப்பு

60. ஆகவே, கர்த்தர் இஸ்ரவேலில் கொள்ளை நோயை வரச்செய்தார், அதனால் இஸ்ரவேலில் எழுபதினாயிரம் பேர் மாண்டார்கள்.

(தினவர்த்தமானம் I புத்தகம் 21-14)

ஆட்சே: பாரீர்...இஸ்ரேல் ஈசன்லீலை! முதலில் இஸ்ரேல் மரபுக்குப் பல வரங்களைத் தந்தான்; அதைக் கருத்துடன் காத்தான். இப்போது ஒரு கோபாவேசத்தால் அந்த மரபை ஒழித்து 70000 பேரைக் கொன்றான். ஒரு கவி சொன்னது உண்மையே:

க்ஷணே ருஷ்ட க்ஷணே துஷ்டோ
ருஷ்டஸ் துஷ்ட: க்ஷணே க்ஷணே ।
அவ்யயஸ்தி த சித்தஸ்ய
ப்ரஸா தோ பி பயங்கர:

ஒரு நொடி விருப்பு; மறுநொடி வெறுப்பு. நொடிக்கு நொடி விருப்புவெறுப்பு மாறுவது. மன வுறுதியற்றவர் மகிழ்ச்சி கூடப் பயங்கரமானது—கிறிஸ்தீசன் லீலை போலே. (60)

61. பின்னொரு நாள் தேவதூதர் கர்த்தருடைய சந்நிதியில் வந்துநின்றார்கள்; சாத்தானும் அவர்களோடு கர்த்தருடைய சந்நிதியில் வந்து நின்றான். கர்த்தர் சாத்தானைப் பார்த்து: நீ எங்கேயிருந்து வருகிறாய் என்று கேட்க, சாத்தான்: நான் பூமியெங்கும் போய்ச் சுற்றித் திரிந்து வருகிறேன் என்று கர்த்தருக்குப் பதிலுரைத்தான். அப்பொழுது கர்த்தர் சாத்தானிடம்: நீ என் தாசனாகிய யோபைக் கவனித்தாயா? பூமியிலே அவனைப்போல் உத்தமனும் நேர்மையாளனும் கடவுளுக்குப் பயந்து தீமைக்கு விலகி நடக்கிறவனும் வேறெவனுமில்லை, அவன் இன்னும் தன் உத்தமத்தில் நிலைத்திருக்கிறான். காரணமின்றி அவனை நிர்மூலமாக்கும்படி நீ என்னை ஏவினாயே என்று சொன்னார். அதற்குச் சாத்தான் கர்த்தரிடம்: தோலுக்குப் பதிலாகத் தோல்; தன் ஜீவனைக் காப்பதற்குத் தனக்குரிய யாவற்றையும் மனுஷன் கொடுத்துவிடுவான். நீர் உமது கையை நீட்டி அவன் எலும்பையும் அவன் மாம்சத்தையும் தொடும்; அப்பொழுது அவன் உமது முகத்திற்கு எதிரே உம்மைத் தூஷிக்கமாட்டானோ பாரும் என்றான். கர்த்தர் சாத்தானிடம்: இதோ அவன் உன் கையிலிருக்கிறான்; அவன் பிராணனை மாத்திரம் தப்பவிடு என்றார்.

அப்படியே சாத்தான் கர்த்தரின் சந்நிதியைவிட்டுப் புறப்பட்டுப்போய், யோபின் உள்ளங்காலால் தொடங்கி அவன் உச்சந் தலைமட்டும் கொடிய பருக்களால் அவனை வாதித்தான். (யோபு 2-1 to 7)

ஆட்சே: கிறிஸ்தீசன் சாமர்த்தியத்தைப் பாரீர்! அவன் அன்பனை சைத்தான் வருத்துகிறான். சைத்தானுக்குத்

தண்டனை தரவில்லை. அன்பனையும் காக்கவில்லை. அவனது தூதர் யாரும் சைத்தானை எதிர்க்க முடியவில்லை. ஒரு சைத்தான் எல்லார் மனதிலும் திகிலை உண்டாக்கினன். சைத்தானைக்கொண்டு அன்பன் யோபைச் சோதிக்கவிட்ட கிறிஸ்தீசன் முற்றறிஞனில்லையே. (61)

62. என் மனம் அதிக ஞானத்தையும் அறிவையும் கண்டது என்று நான் எனக்குள் சொல்லிக்கொண்டேன். ஞானம் இன்னதென்று அறிவதற்கும், மூடத்தனமும் மதிகேடும் இன்னவென்று அறிவதற்கும் நான் என் மனதைச் செலுத்தினேன்; இதுவும் காற்றைப் பிடிக்க வேட்டை யாடுவதென்று கண்டேன். ஞானம் மிகவே சஞ்சலமிகும்; அறிவைப் பெருக்கியவன் நோவைப் பெருக்கியவன்.

(பிரசங்கி 1-16, 17, 18)

ஆட்சே: அறிவும் ஞானமும் ஒரு பொருட் சொற்களே. இவர்கள் அதை வெவ்வேறு என்கின்றனர். ஞானம் வளர்ப்பது சோகம், துயரம் என்று கல்லா மாக்களே கொள்ளுவர். ஆதலால் பைபிள் கடவுள் வாக்கன்று, கற்றோர் வாக்குமன்று. (62)

## புதிய ஏற்பாடு

இதுகாறும் பழைய ஏற்பாட்டைச் சுருக்கமாக ஆராய்ந்தோம். இனி மத்தாய் சுவிசேஷத்தை ஆராய்வோம். கிறிஸ்துவர்கள் மத்தாய் முதலிய நான்கு சுவிசேஷங்களையும் சிறந்த பிரமாணங்களாகப் போற்றுகின்றனர். 'காஸ்பெல், சுவிசேஷம்' என்றால் 'நன்மொழி' என்று பெயர். அந்த நூல்களின் இயல்பை ஆராய்வோம்.

## மத்தேயு (Mathew) சுவிசேஷம்

63. இயேசு கிறிஸ்துவினுடைய பிறப்பின் விவரம்: அவருடைய தாயாராகிய மரியாள் (Mary) யோசேப்புக்கு (Joseph) நியமிக்கப்பட்டிருக்கையில், அவர்கள் கூடிவருமுன் அவள் கர்ப்பவதி யானதாகத் தெரியவந்தது; அது பரிசுத்த ஆவியினால் உண்டானது......கர்த்தரின் தூதன் சொப்பனத்தில் அவனுக்கு (யோசேப்புக்கு)த் தோன்றி: தாவீதின் குமாரனாகிய யோசேப்பே, உன் மனைவியாகிய மரியாளைச் சேர்த்துக்கொள்ளப் பயப்படாதே; அவளிடம் உற்பவித்திருக்கிறது பரிசுத்த ஆவியினால் உண்டானது. (மத்தேயு 1-18, 20)

ஆட்சே: பிரத்தியக்ஷாதி பிரமாணங்களுக்கும் சிருஷ்டிக் கிரமத்திற்கும் முரணான இந்தப் பேச்சைக் கற்றறிஞர் யாரும் ஒப்புக்கொள்ளார். இயற்கை, பகுத்தறிவுகளுக்கு

முரணானதை கல்லாக் காட்டுமிராண்டிகளே நம்புவர்; வித்துவான்கள் நம்பமாட்டார்கள். பரமேசன் நியமத்தை யார் மீறமுடியும்? பரம்பொருள் முற்றறிவன், தவறில்லா தவன்; அவன் சட்டத்தை அவனே மீறுவானு? அவன் மீறினுன் என்பது நம்பத் தக்கதன்று; இதை நம்பினுல் கருவுற்ற கன்னியரெல்லாம் கடவுளால் கருவுற்றனர்; கடவுள் தூதர் அவ்வாறு கனவில் வந்து சொன்னுர், என்று புளுகுவார்கள். புராணத்தில் குந்தி சூரியனுல் கருவுற்ருள் என்பதும் நம்பத் தகாததே. செல்வம் கொழுத்த அறிவிலிக் குருடரே இந்த மயக்க வலைப்படுவர். உண்மை யென்ன வென்ருல், ஒரு மனிதனுடன் சேர்ந்தே மேரி கருவுயிர்த் தாள். அவளோ, அவனே, யாரோ கடவுளால் கருவுயிர்த்த தாகக் கட்டிவிட்டனர். (63)

64. அப்பொழுது இயேசு பிசாசினுல் சோதிக்கப்படுவதற்கு ஆவியினுலே வனந்தரத்திற்குக் கொண்டுபோகப்பட்டார். அவர் இரவு பகல் நாற்பது நாள் உப வாசித்த பின் அவருக்குப் பசி உண்டாயிற்று. அப்பொழுது சோதனைக்காரன் அவரிடம் வந்து: நீர் தேவ குமாரனேயானுல், இந்தக் கற்கள் அப்பங்களாகும்படி சொல்லும் என்ருன். (மத்தேயு 4-1, 2, 3)

ஆட்சே: இதனின்று கிறிஸ்தீசன் ஸர்வக்ஞன் அல்ல என்று உறுதியாகிறது. ஸர்வக்ஞனுல் சைத்தானைக் கொண்டு ஏன் சோதிக்கவேண்டும்? உண்மையை ஈசனே அறிய லாமே. இன்று ஒரு கிறிஸ்துவனை நாற்பது இரவு நாற் பது பகல் உணவில்லாது பட்டினி போட்டால் அவன் பிழைப்பானு? ஏசுநாதர் ஈச புத்திரனுமல்ல. அவனிடம் வியன் சித்தி ஏதும் இல்லை என்பது இதிலிருந்து தெளிவா கிறது. அவர் வியன் சித்தரானுல் சைத்தான் எதிரிலேயே கல்லை ரொட்டியாக்கிப் பசியாறியிருக்கலாமே. கடவுள் படைத்தக் கல்லை யாரும் ரொட்டியாக்க முடியாது. கடவுள் கூட பூர்வ-நியமத்தை மாற்றமுடியாது; ஏனெனில் அவர் முற்றறிஞர்; அவர் செய்யுங் காரியங்களெல்லாம் குற்ற மற்றவை. (64)

65. அவர் அவர்களைப் பார்த்து: என் பின்னே வாருங்கள்; உங்களை மனுஷ ரைப் பிடிக்கிறவர்களாக்குவேன் என்ருர். உடனே அவர்கள் வலைகளை விட்டு அவரைப் பின்பற்றினுர்கள். (மத்தேயு 4-19, 20)

ஆட்சே: பழைய ஏற்பாட்டில் பத்து ஆக்ஞைகளில் "உங்கள் தாய் தந்தையரை மதித்துச் சேவை செய்தால் ஆயுள்

பெருகும்'' என்றிருக்கிறது.* ஏசுநாதர் மாதா பிதாக் களுக்குத் தொண்டு செய்யவில்லை, மற்றவரையும் தொண்டு செய்ய விடவில்லை. அதனால் அவர் ஆயுள் குறுகிப் போனது. இயேசு புதியமதம் கண்டு அதன் வலையில் மீன் போல மக்களைப் பிடித்துத் தனக்குப் பயன்படுத்திக் கொண்டார். கிறிஸ்துவே இப்படியிருந்தபோது, கிறிஸ்துப் பாதிரிமார் தங்கள் மதத்திற்குப் பிறரை வலைபோட் டிழுப்பதில் வியப்பில்லை. நிரம்ப மீன்பிடிப்பவனுக்கு நிரம்ப மரியாதையுடன் நல்ல பிழைப்பும் நடக்கிறது; அதுபோல ஏராளமான பேரை மதம் மாற்றுகிற பாதிரிக்குப் பெரிய மரியாதையும் நல்ல சாப்பாடும் கிடைக்கிறது. வேதமோ, சத்திய நூல்களோ ஓதாதவர்களைப் பாதிரிமார் தமது மதத்திற் சேர்த்து, அவர்களைப் பெற்றோரினின்றும் பிரித்து விடுகிறார்கள். ஆதலால் ஆரியர் (இந்தியர் நல்ல அறி வாளர்) அவர் வலையில் தாமும் படாது, பிற அப்பாவி களும் படாது கவனமாயிருப்பது கடமையாகும். (65)

66. பின் அவர் கலிலேயா (Galilee) எங்கும் சுற்றி நடந்து, அவர்கள் ஜெபாலயங்களில் உபதேசித்து, ராஜ்யத்தின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, ஜனங் களில் காணப்பட்ட சகல வியாதிகளையும் சகல நோய்களையும் நீக்கிக் குண மாக்கினர். அவருடைய கீர்த்தி சீரியா எங்கும் பிரபல்யமாயிற்று: பல வியாதி களும், வேதனைகளுமுள்ள சகல பிணியாளிகளையும், பேய் பிடித்தவர்களையும், பைத்தியக்காரர்களையும், திமிர்வாதக்காரரையும் அவரிடம் கொண்டு வந்தார்கள். அவர்களை அவர் குணமாக்கினர். (மத்தேயு 4-23, 24)

ஆட்சே: இன்று மந்திர தந்திரங்களால், ஆசீர்வாதங்களால் வீபூதி தருதலால் பேய் ஓடுவது, நோய் தீருவது உண்மை யானால், பைபிள் கதைகளையும் நம்பலாம். இதெல்லாம் மக்களைப் பிடிக்கும் வலைவீச்சு. கிறிஸ்து இப்படிச் செய்வதை நம்பும் கிறிஸ்துவர், சக்தி உபாசகரான குருக்கள்மாரை ஏன் நம்புவதில்லை? இருவரும் அதே காரியந்தானே செய் கின்றனர்? (66)

67. ஆவியில் தரித்திரர் பாக்கியவான்கள்; பரலோக ராஜ்யம் அவர்களுடை யது;...வானமும் பூமியும் ஒழிந்துபோய் எல்லாம் நிகழும் மட்டும் நியாயப் பிரமாணத்திலுள்ள ஒரு சிறு எழுத்தாகிலும் ஒரு எழுத்தின் உறுப்பாகிலும் ஒழிந்து போகாதென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகையால், மிகச் சிறிதான இந்தக் கற்பனைகளில் ஒன்றை மீறி, அவ்விதமாய் மனுஷருக்குப்

* நீ நெடுநாளிருப்பதற்கு உன் தகப்பனையும் உன் தாயையும் கனம் பண்ண வேண்டும். (யாத். 20-12)

போதிக்கிறவன் எவனும் பரலோக ராஜ்யத்தில் எல்லாரிலும் சிறியவன் எனப்படுவான். (மத்தேயு 5-3, 18, 19)

ஆட்சே: சுவர்க்கம் ஒன்றானால், அதன் அரசனும் ஒருவனே யாவான். அப்படியிருக்க எளியோ ரெல்லாம் சுவர்க்கம் சென்றால் விண்ணரசின் அதிகாரம் யாரிடம்? ஒருவருக் கொருவர் சண்டை சச்சரவு நடந்து அரசாட்சி முறையே தட்டுக் கெட்டுப் போகும். எளியவர் என்றால் காசில்லா வெங்கர் அன்று. எளியோர் என்றால் செருக்கற்றவர் எனினும் பொருந்தாது. எளிமையும் செருக்கின்மையும் ஒரு பொருளை குறிப்பதல்ல. மனத்தில் தீனரானால் மகிழ்ச்சி யிராது, ஆகவே அந்தப் பேச்சும் சரியல்ல. விண்ணும் மண்ணும் போய் விட்டால் தெய்வச்சட்டமும் போய்விடும். இப்படி மாறும் சட்டமும் மனிதச் சட்டமே, ஸர்வக்ஞனை கடவுட் சட்டமன்று: அந்தச் சட்டத்தை மதிக்காதார் விண்ணில் தாழ்ந்திருப்பர் என்பது, ஆசைகாட்டல் அல்லது அச்சுறுத்தலாயிருக்கலாம். (67)

68. அன்றன்று வேண்டிய எங்கள் ஆகாரத்தை இன்று எங்களுக்குத் தாரும்;...பூமியிலே உங்களுக்குப் பொக்கிஷங்களைச் சேர்த்து வைக்க வேண்டாம். (மத்தேயு 6-11, 19)

ஆட்சே: ஏசு பிறந்த நாளில், மக்கள் காட்டுத்தனமாகவும், வறுமையாகவும் இருந்தனர் எனத் தெரிகிறது. ஏசுவும் அவ்வாறு வறியராயிருக்க வேண்டும். அதனாலே தான் தினந் தினம் வேண்டும் உணவைத் தரும்படி இறைவனை வேண்டுகின்றனர். அப்படியே அனைவருக்கும் உபதேசிக் கின்றனர். அப்படியானால் கிறிஸ்துவர் பணம் சேர்ப்ப தேன்? ஏசுநாதர் உபதேசத்தைக் கேட்டு, உள்ள பொருளெல்லாம் தான தருமங்களில், புண்ணியச் செயல்களில் அள்ளி விட்டு, வறுமையை அணியலாமே. (68)

69. என்னை நோக்கி ஆண்டவரே ஆண்டவரே என்று என்னிடம் சொல்லுகிறவன் பரலோக ராஜ்யத்தில் பிரவேசிப்பதில்லை. (மத்தேயு 7-21)

ஆட்சே: இப்போது சிந்தியுங்கள், பெரியபெரிய பாதிரிமாரும் பிஷப்பர்களும், கிறிஸ்தவர்களும் இந்த வாக்கின் உண்மையை நம்பினால் ஏசுவை ஆண்டவன் என்று ஒருக்காலும் அழையாதிருக்க வேண்டும். இந்த உபதேசப்படி நடக்கா விட்டால், அவர்கள் பாபங்களிலிருந்து தப்பமாட்டார்கள். (69)

70. அந்நாளில் அநேகர் என்னை நோக்கி : ஆண்டவரே, ஆண்டவரே, உமது நாமத்தினாலே பேய்களைத் துரத்தினோம் அல்லவா? அப்பொழுது நான் ஒருகாலும் உங்களை அறியவில்லை; அக்கிரமச் செய்கைக்காரரே, என்னைவிட்டு அகன்று போங்களென்று வெளிப்படையாய்க் கூறுவேன். (மத்தேயு 7-22, 2-)

ஆட்சே : காட்டு மக்கள் மனதில் நம்பிக்கையூட்ட விண்ண கத்திற்கூட ஏசு நியாயதிபதியாக இருப்பது போல் காட்டிக் கொண்டார். இது சாதாரண மனிதரை வலைப்பிடிக்கும் சூழ்ச்சியே. (70)

71. அப்பொழுது, குஷ்டரோகி வந்து, அவரைப் பணிந்து : ஆண்டவனே, உமக்குச் சித்தமானால் என்னைச் சுத்தமாக்க உம்மாலாகும் என்று சொல்ல, அவர் தமது கையை நீட்டி அவனைத் தொட்டு : எனக்குச் சித்தமுண்டு, சுத்தமாகும் என் றார். உடனே குஷ்டரோகம் நீங்கி அவன் சுத்தமானான். (மத்தேயு 8-2, 3)

ஆட்சே : அப்பாவிகளை மயக்கும் ஆசை வார்த்தைகள் இவை; ஈசாயிகள் இந்த வித்தைகளையும் இயற்கைக்கு மாறான செயல்களையும் உண்மை என்று நம்புவார்களானால், எங்கள் புராணங்களிலும் மகாபாரதத்திலும் (ஆதிபர்வ. அத். 61) காணும் இத்தகைய செயல்களை ஏன் நம்பக்கூடாது? சுக்கி ராச்சாரியார், தன்வந்திரி, கச்யபர் முதலியோர் இறந்து போன தைத்தியர் சேனைகளை எழுப்பினர். பிருஹஸ் பதியின் மகன் கசனைத் துண்டுதுண்டாக வெட்டி அவன் சதையை விலங்குகளும் மீன்களும் உண்ணச் செய்தனர். சுக்கிராச்சாரியார் அவனை உயிர்ப்பித்தார். முதலில் கசனை சுக்கிராச்சாரியாரே உண்டுவிட்டார். பிறகு அவனை உயிரு டன் வரச்செய்தார். அப்போது சுக்கிராச்சாரியார் இறந் தார்; கசன் அவரை சஞ்ஜீவினி மந்திரத்தால் எழுப்பினான். கச்யபர் தக்ஷப்பாம்பு கடித்த ஒரு மரத்தையும் இறந்த மனிதனையும் உயிர்ப்பித்தார். தன்வந்திரி இலட்சக்கணக் கான பிணங்களை உயிருடன் எழுப்பினார்; கோடிக்கணக் கான தொழு நோயாளரையும் பிணியாளரையும் நலமாக்கி னார். இலட்சக்கணக்கான குருடர் செவிடருக்குக் கண்ணும் காதும் நன்றாக்கினார். இத்தகைய கதைகளைப் பொய் என் பதேன்? பிற மதத்தர் சொல்வது பிழை, தனது பொய்யெல் லாம் உண்மை என்பவன் பிடிவாதக்காரனில்லையா? கிறிஸ் துவர் சொல்வதெல்லாம் அடாபிடியான சிறுபிள்ளைத்தன மாகும். (71)

72. பேய் பிடித்திருந்த இருவர் கல்லறைகளிலிருந்து வெளியேறி அவருக்கு எதிரே வந்தார்கள்; அவர்கள் மிகக் கொடியராயிருந்தபடியால், எவனும் அந்த வழியாகச் செல்ல இயலாதிருந்தது. அவர்கள் சத்தமிட்டுக் கூப்பிட்டு: தேவகுமாரனே, எங்களுக்கும் உமக்கும் என்ன? காலம் வருமுன்னே எங்களை வேதனைப்படுத்தவா இங்கே வந்தீர் என்றார்கள். அவர்களுக்குத் தூரத்தில் ஒரு பெரிய பன்றிக் கூட்டம் மேய்ந்து கொண்டிருந்தது. அப்பொழுது பேய்கள்: நீர் எங்களைத் துரத்துவீரானால், அந்தப் பன்றிக் கூட்டத்திற்குள் எங்களை அனுப்பிவிடுமென்று அவரை வேண்டிக்கொண்டன. அதற்கு அவர்: போங்கள் என்றார். அவைகள் வெளியேறிப் பன்றிகளுக்குள் போகவே அப்பன்றிக் கூட்டம் முழுவதும் மேட்டிலிருந்து கடலில் பாய்ந்து தண்ணீரில் மாண்டன. (மத்தேயு 8-28, 29, 30, 31, 32)

ஆட்சே: இங்கே சிறிது சிந்தித்தால் இம்மொழிகள் பொய்யெனப்புலப்படும். ஏனெனில் செத்தவர் புதை குழியிலிருந்து எழமுடியாது! எவரிடமும் சென்று பேசவும் முடியாது. இவை அறியார் பேச்சு. மடையரே இவற்றை நம்புவர். பன்றிகளைக் கொன்று, பன்றிக்காரனுக்கு நட்டம் உண்டாக்கிய பாபம் ஏசுவைச்சேரும். கிறிஸ்துவர், ஏசுநாதர் பாபங்களை மன்னித்து தீயதைத் தூயதாக்குவார் என்று எதிர்பார்க்கின்றனர். பன்றிக்காரன் நஷ்டத்தை ஏன் அவர் ஈடு செய்யவில்லை? அந்தப் பிசாசுகளை ஏன் பரிசுத்தமாக்கவில்லை? இங்கிலாந்திலுள்ள ஆங்கிலேயர் இந்த கப்சாக்களை நம்புகிறார்களா? நம்பினால் அவர்கள் மயக்க வலையிற் சிக்கினவராவார். (72)

73. அங்கே படுக்கையில் கிடந்த ஒரு திமிர்வாதக்காரனை அவரிடம் கொண்டு வந்தார்கள். இயேசு அவர்கள் விசுவாசத்தைக் கண்டு, திமிர்வாதக்காரனிடம்: மகனே, தைரியமாயிரு, உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன என்றார்...நீதிமான்களையல்ல, பாவிகளையே அழைக்க வந்தேன் என்றார். (மத்தேயு 9-2, 13)

ஆட்சே: முன் சொன்னது போல இதுவும் நம்பமுடியாத காரியம். பாபமன்னிப்பு அறியா மக்களுக்கு வீசும் ஆசை வலையாம். சாராயம், பங்கி, அபின் உண்டவன் தானே போதை கொள்ளுகிறான்; பிறர் அன்று. அதுபோலே ஒருவன் பண்ணிய பாபம் இன்னொருவனுக்குச் செல்லாது. அவனே அதை வருந்தவேண்டும்; பிறர் அன்று. இது கடவுளின் சட்டம். ஒருவன் பாபம் இன்னொருவனுக்குப் போவதென்றால், நீதிபதி தானே அதைச் சுமப்பதானால், பாபிகள் பாவத்திற் கேற்றபடி வருந்தாவிட்டால், கடவுள் அநியாயக்காரர் ஆவார். தருமமே மங்கலம் தருவது, தருமமே தலைகாக்கும். கிறிஸ்துவோ பிறரோ இல்லை. தர்

மாத்மாக்களுக்கு கிறிஸ்து போன்றவர் சிறிதும் தேவை
யில்லை; பாபிகளுக்கும் தேவையில்லை. அனுபவிக்காது
யாருக்கும் பாபம் விலகாது. (73)

74. இப்பொழுது அவர் தம்முடைய சீஷர் பன்னிருவரையும் தம்மிடம்
அழைத்து, அசுத்த ஆவிகளை துரத்தவும் சகல வியாதிகளையும் சகல நோய்களையும்
குணமாக்கவும் அவர்களுக்கு அதிகாரம் கொடுத்தார். (மத்தேயு 10-1)

பேசுகிறவர்கள் நீங்களல்ல, உங்களிலிருந்து பேசுகிறவர் உங்கள் பிதாவின்
ஆவியே. (மத்தேயு 10-20)

பூமியின்மேல் சமாதானத்தை அனுப்ப வந்தேன் என்று எண்ணிக்கொள்ளாதே
யுங்கள்; சமாதானத்தையல்ல, பட்டயத்தையே அனுப்ப வந்தேன். மகனைத் தகப்ப
னுக்கும், மகளைத் தாய்க்கும், மருமகளை மாமிக்கும் விரோதமாய்ப் பிரித்துவிட
வந்தேன். ஒருவனுடைய சத்துருக்கள் அவன் வீட்டாரே.

(மத்தேயு 10-34, 35, 36)

ஆட்சே: இந்தச் சீடரில் ஒருவன் (யூதாசு) 30 ரூபாவுக்காக
ஏசுநாதரை பிடித்துக்கொடுத்த துரோகி. மற்றவர்கள் மனம்
திரிந்து ஓடிப்போனார்கள். இவையெல்லாம் அறிவுரைக
ளன்று. பூதங்கள்வருவது, அவற்றை ஓட்டுவது, மருந்து
பத்தியம்இன்றி நோய்களைத் தீர்ப்பது—எல்லாம் இயற்
கைக்கு விரோதம்; அறிவிலிகளே இவற்றை நம்புவர். உள்ளி
ருந்து ஆத்மா பேசவில்லை—ஈசனே பேசுகிறார் என்றால்,
ஜீவாத்மாவுக்கு என்ன வேலை? ஈசனே உள்ளிருந்து
பேசினால், பேச்சின் மெய்பொய், இன்ப துன்பமெல்லாம்
கடவுளுக்கே போகும், ஜீவாத்மாவுக் கல்ல; இது அனவசிய
மாயப் பேச்சு.

கிறிஸ்து பகையை விதைக்க வந்தாராம். பிரிவினை உண்
டாக்க வந்தாராம்; உலகமெங்குமே கலகமாயிருக்கிறதே! இது
கொடுமை! பகையும் கலகமும் மக்களுக்குத் துன்பமாகும். இது
ஈசாயிகளின் குருமந்திரம் போலும். ஒருவருக்கொருவர் பகை
மூட்டுவது கிறிஸ்துவுக்கு மகிழ்ச்சியானால், அவனைப் பின்பற்று
வோரைப்பற்றிக் கேட்கவேண்டுமா? வீட்டில் ஒருவருக்கொருவர்
பகை மூட்டுவது உத்தமர் செயலன்று. (74)

75. இயேசு: உங்களிடம் எத்தனை அப்பங்கள் உண்டென்று கேட்டார்.
அவர்கள்: ஏழு அப்பங்களும் சில மீன்களும் உண்டு என்றார்கள். அப்பொழுது
அவர் ஜனங்களைத் தரையில் பந்தியிருக்கக் கட்டளையிட்டு, அந்த ஏழு அப்பங்
களையும், ஏழு மீன்களையும் எடுத்து, கடவுளுக்கு நன்றி செலுத்தி, விட்டு, சீஷரிடம்

கொடுத்தார், சீஷர் ஜனங்களுக்குப் பரிமாறினார்கள். எல்லாரும் சாப்பிட்டுத் திருப்தியடைந்தார்கள்; மிஞ்சின துணிகளை ஏழு கூடை நிறைய எடுத்தார்கள். சாப்பிட்டவர்கள், ஸ்திரீகள், பிள்ளைகள் தவிர, நாலாயிரம் புருஷர்.

(மத்தேயு 15-34, 35, 36, 37, 38)

ஆட்சே: இப்போது பாருங்கள்! இன்று காணும் பொய்ச் சித்தர் இந்திரஜாலர் போன்ற மாய வேலையாயிருக்கிறதே! உள்ள ஏழு அப்பங்களுக்குமேல் மற்றஅப்பங்கள் எங்கிருந்து வந்தன? கிறிஸ்துவுக்கு இவ்வளவு அற்புத சக்தியிருந்தால் அவர் பசியால் வருந்தி ஒரு அத்திப்பழத்தைத் தேடி உண்ண ஏன் அலைந்தார்? தன் பசிக்குண்ண, மிட்டாய்கள், ரொட்டித்துண்டுகள் எல்லாம், இனிய தண்ணீர் அல்லது கற்களிலிருந்து உண்டாக்கியிருக்கலாமே. எத்தனையோ பைராகிகள் மாயவித்தையால் அறியா மக்களை மயக்கி ஏமாற்றுவது போல், இவையும் சிறுபிள்ளை விளையாட்டு மாயமே. (75)

76. அப்பொழுது அவனவன் செய்கைக்குத் தக்கபடி அவனுக்குப் பிரதி பலனளிப்பார். (மத்தேயு 16-27)

ஆட்சே: வினைக்கேற்ற பயன் விளையும்; ஆதலால் கிறிஸ்துவரின் பாப மன்னிப்பு பொருளற்றதாகும். பின்னதே உண்மையானால் முன்னது பொய்யாகும். மன்னிக்கத்தக்கதே மன்னிக்கப்படும், தகாதது மன்னிக்கப்படாது என்றாலும் குற்றமே. ஏனெனில் எல்லா வினைகளுக்கும் ஏற்ற பலனைத் தருதலே நியாயமும் தயவும் ஆகும். (76)

77. விசுவாசமில்லாத மாறுபாடுள்ள சந்ததியே, எதுவரைக்கும் உங்களிடத்தில் பொறுமையாயிருப்பேன்? அவனை இங்கே என்னிடம் கொண்டு வாருங்கள் என்றார்...கடுகு விதையளவு விசுவாசம் உங்களுக்கிருந்தால் நீங்கள் இந்த மலையைப் பார்த்து: இவ்விடம் விட்டு அப்புறம் போ என்று சொல்ல, அது அப்புறம் போம்; உங்களுக்கு முடியாத காரியம் ஒன்றுமிராதென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். (மத்தேயு 17-17, 20, 21)

ஆட்சே: ஈசாயிகள் இப்போது "வாருங்கள்; எங்கள் மதத்தில் சேருங்கள், பாப மன்னிப்பை பெறுங்கள், முக்தியடையுங்கள்" என்று உபதேசித்துத் திரிவது மாயமாகும். பாபத்தை மன்னிக்கவும், நம்பிக்கை உண்டு பண்ணவும், அசுத்தரைத் தூயராக்கவும் கிறிஸ்துவுக்குத் திறமையுண்டானால், அவரது சீடர்களின் ஆன்மாக்களைப் பாப

மற்ற தூய விசுவாசிகளாக்கி யிருக்கலாமே. அவனுடன் திரிந்த சீடர்களைப் பாப மற்ற தூய விசுவாசிகளாக்க முடிய வில்லையே. இறந்த பிறகு அவன் எங்கேயிருக்கிறான் என்று அறியமுடியாத நிலையில் அவன் எப்படி எவரையும் பரிசுத்த மாக்குவான்? அவனிடம் துளிக்கூட விசுவாசமில்லாத சீடர் எழுதிய நூலுக்கு என்ன மதிப்பிருக்கும்? நம்பிக்கை தூய்மை, அறவுணர்ச்சியில்லாதவர் எழுதின நூலைக்கற்றால் இன்பம் வருமா?

கிறிஸ்து சொல்லுவது உண்மையானால், கிறிஸ்துவரிடம் கடுகளவும் விசுவாசம் இல்லை. உண்டானால் மலையை நகரச் செய்யட்டும்! மலையை நகர்த்தினாலும் முழு விசுவாசம் ஆகாது. அதுவும் கடுகளவு தான். அப்படி மலை நகராவிட்டால் அந்தக் கடுகளவு நம்பிக்கை, அன்பு, மத விசுவாசமும் அவர்களிடம் இல்லை யென்றாகும்.

"மலை" என்பது செருக்கு முதலிய தீய உணர்ச்சிகளை குறிப்பது என்று யாராவது சொன்னால், அதுவும் சரியன்று. அப்போது செத்தாரை எழுப்புதல், குருடு, செவிடு, குட்டம், பேய் தீர்த்தல் முதலியவற்றையும், தத்துவமாக அஞ்ஞானிகள், காமிகள், வழி தவறியவர்களுக்கு நல்லுணர்ச்சி வரச்செய்தல் என்னலாம். இதுவும் சரியில்லை; ஏனெனில், அவர் சீடருக்குத் திருத்தம் வரவில்லை. மடமையைத்தான் இவைகாட்டுகின்றன. ஏசு சிறிது படித்திருந்தாலும் இப்படி அர்த்தமில்லாது பேசி யிருக்க மாட்டார். 'यत्र देशे द्रुमो नास्ति तत्रैरण्डोऽपि द्रुमायते' மரமில்லா ஊரில் ஆமணக்கு எல்லாவற்றையும் விடபெரிதும் சிறந்ததுபோல, கல்லாத காட்டாட்கள் வசித்த நாட்டில் கிறிஸ்து பெருமை பெற்றார். இந்தநாட்களிலும் அவரை எப்படி மதிக் கின்றனர்? (77)

78. நீங்கள் மனந்திரும்பிப் பிள்ளைகளைப் போலானாலொழிய, பரலோக ராஜ்யத்தில் பிரவேசிப்பதில்லை. என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லு கிறேன். (மத்தேயு 18-3)

ஆட்சே: தானே சுயேச்சையாக மனத்தை திருப்புவதால் விண்ணக மளிக்கும்; இன்றேல் நரகமே கதி—என்றால் ஒருவர் தானே பிறர் பாப புண்ணியங்களைச் சுமக்க முடியாது. மாந்தரைச் சிறுபிள்ளைகளாகச் சொல்லுதல்

இயற்கைக்கும் விஞ்ஞானத்திற்கும் பொருந்தாது. தான் சொல்லுவதை ஆராய்ச்சி யில்லாமல், சோதிக்காமல், அப்படியே குருட்டுத்தனமாக, சிறுபிள்ளைகள் போல ஏற்க வேண்டும் என்பதே ஏசுவின் எண்ணம். பல கிறிஸ்துவர் குழந்தைகள் போலவே அறிவாராய்ச்சியின்றி நடக்கின்றனர். இல்லாவிட்டால் இவ்வுபதேசத்தை அவர்கள் ஏன் ஏற்கிருர்கள்? ஏசுவும் குழந்தைபோலவா? இன்றேல் குழந்தையாக வேண்டும் என்று பிறருக்கு உபதேசித்திருக்க மாட்டார். தான் எப்படியோ அப்படியே பிறரும் இருக்க வேண்டும் என்று ஒவ்வொருவரும் நினைக்கிருர்கள். (78)

79. அப்பொழுது இயேசு தம்முடைய சீஷரிடம்: ஐசுவரியவான் பரலோக ராஜ்யத்தில் பிரவேசிப்பது அரிதென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். மேலும் ஐசுவரியவான் கடவுளுடைய ராஜ்யத்தில் பிரவேசிப்பதைப் பார்க்கிலும் ஒட்டகம் ஊசியின் காதில் நுழைவது எளிதென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்ருர். (மத்தேயு 19-23, 24)

ஆட்சே: இப்படி எழுதியதிலிருந்து ஏசு வறியர்; செல்வர் அவரை மதிக்கவில்லை என்று தெரிகிறது. இதன் கருத்து சரியில்லை: ஏனெனில் ஏழைகளிடமும், பணக்காரிடமும் நல்லவரும் உண்டு கெட்டவரும் உண்டு. நல்ல காரியம் செய்பவர் நல்லவர்; கெட்ட காரியம் செய்பவர் கெட்டவர். வானரசு தனது தேசத்தில் உள்ளதென நம்பினுர்; அது உலகளாவியது எனச்சொல்லவில்லை. கடவுளரசு எங்கும் உள்ளது. அதில் நுழைவது நுழையாதது எல்லாம் வெறும் பேச்சு. பணக்காரரெல்லாம் நரகத்திற்கென்ருல் கிறிஸ்தவர்கள் பலர் பணக்காரர்களிருக்கிருர்கள். அவர்களெல்லாம் நரகத்திற்கே போகிறவர்களா? ஏழைகளெல்லாம் சுவர்க்கத்திற்கே போவார்களோ? ஒன்று அவர் கவனிக்கவேண்டும். பணக்காரர் ஏழைகளைவிடச் செழிப்புள்ளவர். அவர்கள் பணத்தை நல்ல சிந்தனையுடன் நல்லகாரியங்களிற் செலவிட்டால் அவர்கள் ஏழைகளைவிட எவ்வளவோ முன்னேற்ற நலம் பெற அவர்களுக்கு வாய்ப்புண்டு. (79)

80. இயேசு அவர்களிடம் யாவும் புதிப்பிக்கப்படும் காலத்தில் மனுஷ குமாரன் தமது மகிமையுள்ள சிங்காசனத்தில் வீற்றிருக்கும்போது, என்னைப் பின் பற்றின நீங்களும் இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரங்களையும் நியாயந் தீர்க்கிறவர்களாகப் பன்னிரண்டு சிங்காசனங்களில் வீற்றிருப்பீர்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். என் நாமத்தினிமித்தம் வீட்டையாவது, சகோ

தரரையாவது, சகோதரிகளையாவது, தகப்பனையாவது, தாயையாவது, பிள்ளைகளை யாவது, நிலங்களையாவது விட்டவன் எவனோ, அவன் பல மடங்கு பெற்று, நித்திய ஜீவனையும் சுதந்தரித்துக்கொள்ளுவான்; ஆகிலும் முந்தினோர் அனேகர் பிந்தினோரும், பிந்தினோர் அனேகர் முந்தினோரும் ஆவார்கள். (மத்தேயு 19-28, 29, 30)

ஆட்சே: பாருங்கள் ஏசுவின் அந்தரங்க இரகசியச் சூழ்ச்சி
களை! இறந்த பிறகுகூட மக்கள் அவன் வலையைத் தப்பக்
கூடாது! கேவலம் முப்பது வெள்ளிக்காக குருவைக்
காட்டிக் கொடுத்த கொடிய பாபி யூதாசும், அவனுடன்
அரியணையில் அமர்வானும். இஸ்ரேல் மரபுக்குத் தனிச்
சலுகை; அதன் பாபம் மன்னிக்கப்படும். இஸ்ரேலியர்
பிறருக்கு நடுவராவார். அதனாலேதான் கிறிஸ்துவர்
கிறிஸ்துவருக்கு மிகவும் பட்சாபாதச் சலுகைகாட்டி யாரா
வது ஒரு வெள்ளையன் ஒரு கறுப்பனைக் கொன்றால் அவன்
குற்றவாளி இல்லை என்று விடுதலை பெறுகிறான் போலும்.
இதே நீதிதான் ஏசுவின் சுவர்க்கத்திலும் போலும். இதனால்
பெரிய குறை ஏற்படுகிறது. இந்தத் திட்டத்தையே மறுக்க
வேண்டும். ஒருவன் உலகம் ஆரம்பமானதும் இறந்திருக்க
லாம்; இன்னொருவன் மறுதீர்ப்புக்கு முன்னாள் இரவு
சாகிறான்; முன்னவன் இறுதி மட்டும் ஆரம்பமுதல் தீர்ப்பு
நாள்வரை நீண்டகாலம் காத்திருக்கவேண்டும்; பின்னவன்
உடனே நியாயம் பெறுகிறான். எவ்வளவு பெரிய அநியாயம்!
நரகத்திற்குப் போனவன் எல்லையற்ற துன்பம் அனுபவிக்
கிறான். சுவர்க்கத்திற்குப் போனவன் எப்போதும் இன்புறு
கிறான். இதுவும் கொடிய அநீதி. மட்டான வினைகளுக்கு
மட்டான பலன் கிடைக்கவேண்டும்.

இரண்டு ஆன்மாக்கள் ஒரே மாதிரியான நலந்தீதுடையன
வன்று. அவை படிப்படியான நலந் தீதுடையவை. அவற்றிற்
கேற்ற சுவர்க்க நரகங்களின் இன்பதுன்பங்கள் அனுபவிக்க
வேண்டும். ஆகவே பல சுவர்க்கங்களும் பல நரகங்களும் இருக்க
வேண்டும்; கிறிஸ்து நூல்களில் அப்படியில்லை. ஆதலால்
பைபிளும் கடவுள் விளக்கியதன்று; ஏசுவும் கடவுள் மைந்தன்
அன்று. வீடு, தாய் தந்தையரை விட்டு வருபவனுக்கு நூறு
மடங்கு பெருகுமாம். இதுபிசகு! எவருக்கும் ஒருதாய், ஒரு
தந்தை தான் உண்டு. நூறு தாயரும், நூறு தந்தையரும்
யாரும் பெறமுடியாது. இஸ்லாமிய நூலில் ஒரு மனிதன் சுவர்க்
கத்தில் எழுபத்திரண்டு மனைவிகளைப் பெறுவான் என்று எழுதி

யுள்ளது; அது இந்த பைபிளிலிருந்து எடுத்தாண்ட கருத்தா யிருக்கலாம். (80)

81. காலையில் அவர் நகரத்துக்குத் திரும்பி வருகையில், அவருக்குப் பசியுண் டாயிற்று. அப்பொழுது வழியருகே ஒரு அத்திமரத்தைக் கண்டு, அதனண்டை போய், அதிலே இலைகளேயின்றி வேறொன்றையும் காணுமல்: இனி ஒருகாலும் உன்னிடத்தில் கனி உண்டாகாதிருப்பதாக என்றுர். உடனே அத்திமரம் பட்டுப் போயிற்று. (மத்தேயு 21-18, 19)

ஆட்சே: கிறிஸ்துவப் பாதிரிமார் 'கிறிஸ்து அமைதியானவர், அமைதிசெய்பவர், சினம் போன்ற குறையற்றவர்' என்கின்றனர். ஆனுல் இச்செய்கையிலிருந்து அவர் சினங் கொதிப்பவர், பருவகால அறிவுகூட அவருக்கில்லை, அவர் காட்டுத்தனமாக நடந்துக்கொண்டார் என்று தெரிய வருகிறது. மரம் ஜடப்பொருள்; அதை அவர் சபித்த தேன்? அது என்ன தப்பு செய்தது? அது உடனே பட்டுப் போனதாம்: சாபத்தாலா? இல்லை. ஏதோ ஒரு நச்சு மருந்தால் என்றுல் ஆச்சரியமில்லை. (81)

82. அந்நாட்களில் உபத்திரவம் முடிந்தவுடனே சூரியன் அந்தகாரப்படும், சந்திரன் தன் ஒளியைக் கொடாதிருக்கும், நட்சத்திரங்கள் வானத்திலிருந்து விழும், வானத்தின் சத்துவங்கள் அசைக்கப்படும். (மத்தேயு 24-29)

ஆட்சே: சபாஷ் ஏசு! விண்மீன்கள் விழும் என்று எந்த விஞ்ஞானம் உனக்குச்சொன்னது? ஆகாசப்படை எது? எப்படி அசைக்கப்படும்? ஏசுவுக்குச் சிறிது கல்வி யிருந் தால் விண்மீன்கள் கோளங்கள், அவை விழமுடியாது என் பதை அறிந்திருப்பார். ஏசு தச்சர் குடும்பத்திற் பிறந்தவர், என்பது தெரிகிறது. அவர் மரங்களை அறுத்தல், இழைத்தல், துண்டாக வெட்டுதல், சேர்த்தல் ஆகிய தொழிலறிவார். திடீரென்று இந்த நாகரிகமற்ற நாட்டிற்குத் தீர்க்கதரிசியாக வேண்டுமென்று அவர் மனதில் ஆசைஅலை எழுந்தது; உடனே பல நல்லமொழிகளையும் பேசினுர். பல தீயமொழி களையும் பேசினுர். அந்த நாட்டுக் காட்டாட்கள் அவற்றை நம்பினர். இன்று போலே அன்று ஐரோப்பியர் கல்வி யறிவு பெற்றிருந்தால், இவரது சித்துக்கள் சிறிதும் பலித்திரா. இப்போது அவர்கள் பெரிதும் கல்வியறிவு பெற்றிருக் கிறுர்கள். அரசியல் விவகாரத்திலும் பிடிவாதத்தாலும்

அவர்கள் இந்த வெற்று மதத்தை விட்டு, வேத தருமத்தைப் பின்பற்ருதது ஒரு பெரும்குறை என்போம். (82)

83. வானமும் பூமியும் ஒழிந்துபோம், என் வார்த்தைகளோ ஒருபோதும் ஒழிந்துபோவதில்லை. (மத்தேயு 24-35)

ஆட்சே: இதுவும் கல்லா மூடப்பேச்சு. நுட்பமான வானம் எங்கே ஒழியும்? அது விழுவதை யார் காணமுடியும்? தற் புகழ்ச்சி நல்லவர் பாங்கில்லை. (83)

84. இடது பக்கத்தில் நிற்பவர்களைப் பார்த்து அவர்: சாபத்துக்குட்பட்டவர்களே, என்னை விட்டு, பிசாசுக்கும் அவன் தூதருக்கும் ஆயத்தம் பண்ணப் பட்டிருக்கிற நித்திய அக்கினிக்குள் போங்கள். (மத்தேயு 25-41)

ஆட்சே: தன் சீடருக்கு விண்ணகம்! மற்றவருக்கு முடிவில்லா நெருப்பு! எவ்வளவு கொடிய ஓரகம்! ஆகாசமே ஒழிந்தால் நித்திய நெருப்பும்–சுவர்க்க–நரகமும் எங்கிருக்கும்? சைத் தானையும் அவன் தூதரையும் கடவுள் படைக்காவிட்டால் இத்தகைய நரகத்தை உண்டாக்கும் சிரமமும் அவருக்கு இருந்திருக்காதே! ஒரு சைத்தானை அச்சுறுத்த முடியா தவர் என்ன கடவுள்? சைத்தான் கடவுளின் தூதனுகவே யிருந்தான்! புரட்சி செய்தான். கடவுள் அவனைப் பிடித்துச் சிறையிட்டுக் கொல்லமுடியவில்லை! கடவுட் சக்தி எங்கு சென்றது? நாற்பது நாள் பட்டினி போட்டுத் துன்பம் உண் டாக்கினுனே; அவர் தெய்வத் தன்மை எங்கே? சோதனை ஒன்றும் செய்ய முடியாதவன் கடவுள் மைந்தனு யிருப்பதிற் பயனென்ன? ஆதலால் ஏசு ஈசன் மகனில்லை; பைபிளீச னும் கடவுளில்லை. (84)

85. அப்பொழுது பன்னிருவரில் ஒருவனுகிய யூதாஸ்கரியோத்து (Judas Iscariot) என்பவன் பிரதான ஆசாரியரிடத்திற்குப் போய்: நான் அவரை உங் களுக்குக் காட்டிக் கொடுக்கிறேன், நீங்கள் எனக்கு என்ன கொடுக்கிறீர்கள் என்ருன். அவர்கள் அவனுக்கு முப்பது வெள்ளிக்காசை நிறுத்திக் கொடுத் தார்கள். (மத்தேயு 26-14, 15)

ஆட்சே: ஏசுநாதரின் தெய்வத் தன்மை, அற்புதங்கள் அனைத் தையும் யூதாஸ் வெட்ட வெளிச்சமாக்கிவிட்டான். ஏசுவின் உறவால் நெருங்கிய முக்கிய சீடன்கூட நல்ல வழிக்கு வர வில்லையே! இறந்த பிறகு அவன் பிறரை நன்மை யாக்குவது எப்படி? ஏசு முக்தி தருவார் என்று நம்பிய

பக்தருக்கு இது பெரிய ஏமாற்றம்! தன்னுடன் இருந்த சீடனை நல்வழிப்படுத்த முடியாதவன் இறந்த பிறகு பிறருக்கு என்ன நன்மை செய்வான்? (85)

86. அவர்கள் போஜனம் பண்ணுகையில், இயேசு அப்பத்தை எடுத்து, ஆசீர்வதித்து, அதைப் பிட்டு, சீஷருக்குக் கொடுத்து: வாங்கி புசியுங்கள், இது என்னுடைய சரீரம் என்றார். பின்பு பாத்திரத்தை எடுத்து, நன்றி செலுத்தி, அவர்களுக்குக் கொடுத்து: எல்லாரும் இதிலே பானம் பண்ணுங்கள்; இது உடன்படிக்கைக்குக்குரிய என்னுடைய இரத்தம். பாவமன்னிப்புக்கென்று இது அநேகருக்காகச் சிந்தப்படுகிறது. (மத்தேயு 26-26, 27, 28)

ஆட்சே: சாப்பிடத் தகுந்த அப்பம் தன் உடலாம்; பானம் இரத்தமாம்—சீடருக்கு இப்படிச் சொல்லுவது பண்புடையான் சொல்லல்ல; கல்லாக் காட்டான் பேச்சு. இதை இன்று கிறித்துவர் இறுதியுண்டி என்பர். அவர்கள் எது உண்டாலும் குடித்தாலும் ஏசு கிறிஸ்துவின் ஊனும் குருதியுமெனக் கருதி சாப்பிடுவர், குடிப்பர். என்ன பயங்கரம்! தமது குருவின் ஊனையும் உதிரத்தையும் தமது உணவும் குடியுமாகக் கருதும் இவர், பிறரை எப்படி விட்டு வைப்பர்? (86)

87. பேதுரு (Peter)வையும், செபெதேயுவின் குமாரர் இருவரையும் கூட்டிக்கொண்டு போய் துக்கமடையவும் வியாகுலப்படவும் தொடங்கினார். அப்பொழுது அவர் அவர்களிடம்: என் ஆத்துமா மரணத்துக்கேதுவான பெருந் துக்கங்கொண்டிருக்கிறது; நீங்கள் இங்கே தங்கி என்னோடு விழித்திருங்கள் என்று சொல்லி, சற்று அப்பால் போய் முகம்குப்புற விழுந்து: என் பிதாவே, இந்தப் பாத்திரம் என்னை விட்டு நீங்கக்கூடுமானால், நீங்குவதாக; ஆகிலும், என் சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது என்று ஜெபம் பண்ணினார்.
(மத்தேயு 26-37, 38, 39)

ஆட்சே: பாருங்கள். ஏசுகிறிஸ்து சாதாரண மனிதனே. அவர் கடவுள் மகன், முக்கால அறிஞர், கல்விமானாயிருந்தால் இப்படிச் சஞ்சலப்பட்டிருக்கமாட்டார். தேவபுத்திரர், முக்கால அறிஞர், பாப மன்னிப்பாளர் என்பதெல்லாம்—சீடர் செய்த ஏமாற்ற வேலை. அவர் புலவரோ, யோகியோ, சித்தரோ இல்லை; அவர் சர்வ சாதாரண மனிதர். கல்லாதவர். (87)

88. அவர் இன்னும் பேசிக்கொண்டிருக்கையில், பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ் வந்தான்; அவனோடு பிரதான ஆசாரியரும் ஜனத்தின் மூப்பரும் அனுப்பின

திரளான ஜனங்கள் பட்டயங்களையும் தடிகளையும் பிடித்துக்கொண்டு வந்தார்கள்.
அவரைக் காட்டிக் கொடுக்கிறவன்: நான் எவனை முத்தமிடுவேனோ அவன்தான்
அவனைப் பிடித்துக்கொள்ளுங்கள் என்று அவர்களுக்கு அடையாளம் சொல்லியிருந்
தான். உடனே அவன் இயேசுவினிடம் போய்: நபீ, வாழ்க என்று சொல்லி அவரை
முத்தமிட்டான்...அப்பொழுது அவர்கள் கிட்ட வந்து இயேசுவின்மேல் கைப்போட்டு
அவரைப் பிடித்தார்கள்...அப்பொழுது சீஷரெல்லாரும் அவரை விட்டு ஓடிப்
போனார்கள். கடைசியில் இருவர் (பொய்சாட்சிகள்) வந்து: கடவுளின் ஆலயத்தை
இடித்துப் போட்டு மூன்று நாளுக்குள்ளே அதைக் கட்ட என்னால் ஆகும் என்று
இவன் சொன்னான் என்றார்கள். அப்பொழுது பிரதான ஆசாரியன் எழுந்திருந்து
அவரைப் பார்த்து: நீ ஒன்றும் பதில் சொல்லுகிறதில்லையா? இவர்கள் உனக்கு
விரோதமாய்ச் சொல்லுகிற சாட்சி என்ன என்றான். இயேசுவோ பேசாமலிருந்
தார். அப்பொழுது பிரதான ஆசாரியன் அவரிடம்: நீ தேவகுமாரனாகிய கிறிஸ்து
தானா? ஜீவனுள்ள கடவுள்பேரில் உன்னை ஆணையிட்டுக் கேட்கிறேன்; அதை
எங்களுக்குச் சொல் என்றான். அதற்கு இயேசு: ஆம், நீர் சொன்னபடிதான்;
அன்றியும் மனுஷ குமாரன் சர்வ வல்லவருடைய வலதுபாரிசத்தில் வீற்றிருப்பதையும்
வானத்தின் மேகங்கள் மேல் வருவதையும் இது முதல் காண்பீர்களென்று உங்
களுக்குச் சொல்லுகிறேன் என்றார். அப்பொழுது பிரதான ஆசாரியன் தன்
வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு: இவன் பேசினது தேவதூஷணம்; இனி
நமக்குச் சாட்சிகள் எதற்கு! பாருங்கள், இப்பொழுது இவன் தூஷணத்தைக்
கேட்டீர்களா; உங்களுக்கு எப்படி தோன்றுகிறது என்று கேட்க, அவர்கள்: இவன்
மரண தண்டனை பெறத் தக்கவன் என்றார்கள். அப்பொழுது அவர் முகத்தில் துப்பி,
அவரைக் குட்டினார்கள்; சிலர் அவரை அறைந்து: கிறிஸ்துவே, உன்னை அடித்த
வன் யார்! அதை ஞானதிருஷ்டியினால் எங்களுக்குச் சொல் என்றார்கள். பேதுரு
வெளியே அரண்மனை முற்றத்தில் உட்கார்ந்திருந்தான். அப்பொழுது வேலைக்காரி
ஒருத்தி அவனிடம் வந்து, கலிலேயனாகிய இயேசுவோடு நீயும் இருந்தாய் என்று
சொல்ல, அவன்: நீ சொல்லுகிறது எனக்குத் தெரியவில்லை என்று எல்லாருக்கும்
முன்பாக மறுதலித்தான். அவன் வாசல் மண்டபத்திற்குப் போனபொழுது
வேறொருத்தி அவனைக் கண்டு: இவனும் நசரேயனாகிய இயேசுவோடிருந்தான்
என்று அங்கே இருந்தவர்களுக்குச் சொன்னாள். அவனோ: அந்த மனுஷன்
எனக்குத் தெரியாது என்று சொல்லி, சபித்துக்கொள்ளவும் சத்தியம் பண்ணவும்
தொடங்கினான்.

(மத்தேயு 26-47, 48, 49, 50, 56, 60, 61, 62, 63, 64, 65, 66, 67, 68, 69, 70,
71, 72, 74)

ஆட்சே: இப்போது பாருங்கள். தனது சீடர்களுக்கு உறுதி
ஊட்டும்படியான அருட்சக்தி கூட இயேசு கிறிஸ்துவுக்கு
இல்லையே. அப்படி யிருந்தால் பொய் ஆணையிட்டு அவரை
இவ்வளவு கொடுமையாக மறுத்திருக்க முடியாது; இவ்வளவு
மோசமான துரோகம் செய்திருக்கமாட்டார்கள். தங்கள்
உயிரைக் கொடுத்தும் குருவைக் காத்திருக்க வேண்டும்.
மேலும் இயேசுவிடம் எந்த அற்புத சக்திகளும் இல்லை.

பழைய ஏற்பாட்டில் எழுதப்பட்டிருப்பதாவது : லாட்டின் வீட்டில் தீயர் புகுந்து அங்கிருந்த விருந்தினரைக் கொல்லப் புகுந்தனர். இரண்டு தெய்வதூதர் வந்து அவர்கள் கண்ணைக் குருடாக்கிவிட்டனர். இது பொய்க் கதைதான்! எனினும் இவ்வளவு வல்லமை கூட இயேசுவுக்கு இல்லையே. கிறிஸ்துவர்கள் இயேசுநாதர் சக்திகளை மிகைப்படுத்தி விளம்பரம் செய்கின்றனர். எவ்வளவு அவமானச் சாவு! இதை விட யோக சமாதியாலோ மற்ற வழியாலோ உடலை விட்டிருந்தால் பெருமையாயிருக்குமே. ஞானமில்லாதவருக்கு இது எப்படிப் புலனாகும்? இயேசு சொல்வதைக் கேளுங்கள். (88)

89. நான் என் பிதாவினிடம் வேண்டிக்கொண்டால் அவர் பன்னிரண்டு * லேகியோனுக்கு அதிகமான தூதரை இப்பொழுதே எனக்கு உதவியாக அனுப்ப மாட்டார் என்று நினைக்கிறாயோ? (மத்தேயு 26-53)

ஆட்சே : இப்படி மிரட்டித் தற்புகழ் பேசி, தந்தையின் பெருமையைத் தம்பட்ட மடித்த இயேசு, இப்போது ஒன்றும் செய்ய முடியவில்லையே; என்ன விநோதம்! பிரதான ஆசாரியன் "சொல்லு பதில்; உனக்கு எதிராக இத்தனை பேர் சாட்சி கூற, நீ சும்மா இருப்பதேன்" என்றபோது, உண்மையைச் சொல்லி யிருக்கவேண்டும். தற்புகழ் நல்லதன்று. ஆனால் ஒன்று; அவர் மேல் பொய்க் குற்றம் சுமத்திக் கொன்றவர்களும் நேர்மையாக நடக்கவில்லை. இவ்வளவு கொடிய தண்டனைக்கு இயேசு கிறிஸ்து எந்தக் குற்றமும் செய்யவில்லை. அந்த மனிதர்களும் காட்டாட்களே. அவர்களுக்கு நீதியுணர்வில்லை. இயேசு தன்னைக் கடவுள் மகன் என்னாமல், அவர்களும் இப்படிக் கொடுமை செய்யாமல் இருந்திருந்தால் நலமாகும். ஆனால் இந்த அறிவும், இவ்வளவு நேர்மையும், நீதியுணர்வும் எங்கிருந்து இவர்களுக்கு வரும்? (89)

90. இயேசு தேசாதிபதிக்கு முன் நின்றார். தேசாதிபதி அவரைப் பார்த்து: நீ யூதருடைய ராஜாவா என்று கேட்க, இயேசு: ஆம், நீர் சொல்லுகிறபடிதான் என்றார். பிரதான ஆசாரியரும் மூப்பரும் அவர் மேல் குற்றஞ்சாட்டுகையில், அவர் பதில் ஒன்றும் சொல்லவில்லை. அப்பொழுது பிலாத்து (Pilate) அவரைப் பார்த்து: இவர்கள் உன்மேல் எத்தனையோ குற்றங்களைச் சாட்டுகிறார்களே, நீ அவைகளைக்

* சுமார் 6000 போர்ச்சேவகர் அடங்கிய சேனைப்பிரிவு.

கேட்கவில்லையா என்றான். அவரோ ஒரு வார்த்தைக்கும் பதில் சொல்லவில்லை; அதைக் கண்டு தேசாதிபதி மிகவும் ஆச்சரியப்பட்டான்.

அப்போது பிலாத்து: அப்படியானால், கிறிஸ்து எனப்பட்ட இயேசுவை நான் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டான். அவனைச் சிலுவையில் அறையும் என்று எல்லாரும் சொன்னார்கள். அப்பொழுது அவன் பரபாசை அவர்களுக்கு விடுதலை செய்து, இயேசுவையே வாரினால் அடிப்பித்து, சிலுவையில் அறையும்படிக்கு ஒப்புக் கொடுத்தான்.

அப்பொழுது தேசாதிபதியின் போர்ச்சேவகர் இயேசுவைக் கோட்டை மாளிகைக்குள்ளே கொண்டுபோய் பட்டாளம் முழுவதையும் அவரிடம் கூட்டி, அவர் வஸ்திரங்களைக் கழற்றி, சிவப்பான மேலங்கியை அவருக்கு உடுத்தி, முள்ளுகளால் ஒரு முடியைப் பின்னி அவர் சிரசின்மேல் வைத்து, அவர் வலது கையில் ஒரு நாணற் கோலைக் கொடுத்து, அவர் முன்பாக முழங்காற்படியிட்டு: யூதருடைய ராஜாவே, வாழ்க என்று அவரைப் பரிகாசஞ்செய்து, அவர் மேல் துப்பி, கோலை எடுத்து சிரசில் அடித்தார்கள். அவரைப் பரிகாசஞ் செய்த பின்பு, அவருக்கு உடுத்தின மேலங்கியைக் கழற்றி, அவருடைய வஸ்திரங்களை அவருக்கு உடுத்தி, அவரைச் சிலுவையில் அறைய நடத்திக்கொண்டு போனார்கள்.

கபாலஸ்தலம் என்று அர்த்தங்கொள்ளும் கொல்கொதா (Golgotha) என்னும் இடத்துக்கு அவர்கள் வந்தபோது, கசப்புக் கலந்த காடியை அவருக்குக் குடிக்கக் கொடுத்தார்கள்; அவரோ அதை ருசிபார்த்து, குடிக்கச் சம்மதிக்கவில்லை. அவரை சிலுவையில் அறைந்துவிட்டு, சீட்டுப் போட்டு அவருடைய வஸ்திரங்களை அவர்கள் பங்கிட்டுக்கொண்டார்கள்.

அன்றியும் அவர் குற்றத்தைக் காட்டும்படி: இவன் யூதருடைய ராஜாவாகிய இயேசு என்று எழுதி, அவர் சிரசுக்கு மேல் வைத்தார்கள். அப்பொழுது அப்பொழுது அவருடைய வலது பக்கத்தில் ஒருவனும் அவருடைய இடது பக்கத்தில் ஒருவனுமாக இரண்டு கொள்ளைக்காரர் அவரோடு கூடச் சிலுவைகளில் அறையப்பட்டார்கள். அந்த வழியாய் நடந்து போகிறவர்கள் தங்கள் தலைகளைக் குலுக்கி: தேவாலயத்தை இடித்து மூன்று நாட்களில் கட்டுகிறவனே, நீ தேவகுமாரனானால் உன்னை நீயே இரட்சித்துக்கொள்; சிலுவையிலிருந்து இறங்கி வா, என்று அவரைத் தூஷித்தார்கள். பிரதான ஆசாரியரும் அப்படியே வேத பாரகரோடும் மூப்பரோடும் சேர்ந்து பரிகாசம் பண்ணி: மற்றவர்களை இரட்சித்தான்; தன்னைத்தான் இரட்சித்துக்கொள்ளத்திராணியில்லை; இவன் இஸ்ரவேலின் ராஜாவாமே! இப்பொழுது சிலுவையிலிருந்து இறங்கி வரட்டும். அப்பொழுது இவனை நம்புவோம். கடவுள் மேல் நம்பிக்கையாயிருந்தானே, அவன் இவன்மேல் பிரியமாயிருந்தால் இப்பொழுது இவனை மீட்டு விடட்டும், இவன் தன்னைக் கடவுளின் குமாரனென்று சொல்லிக் கொண்டானே என்றார்கள். அவரோடு கூடச் சிலுவைகளில் அறையப்பட்ட கொள்ளைக்காரரும் அப்படியே நிந்தித்தார்கள்.

ஆறாம் மணி நேர முதல் ஒன்பதாம் மணி நேரம் வரைக்கும் பூமியெங்கும் அந்தகாரம் உண்டாயிற்று. ஏறக்குறைய ஒன்பதாம் மணி நேரத்தில் இயேசு: ஏலீ, ஏலீ, லமா சபக்தான் (Eli Eli lama Sabach thani?) என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார்; அதற்கு, என் கடவுளே, என் கடவுளே, ஏன் என்னைக் கைவிட்டீர் என்று அர்த்தமாம். அங்கே நின்றவர்களில் சிலர் இதைக் கேட்டு

பொழுது: இவன் எலியாவைக் கூப்பிடுகிறான் என்றார்கள். உடனே அவர்களில் ஒருவன் ஓடி, கடற்காளானை எடுத்து, காடியிலே தோய்த்து, அதை ஒரு கோலில் மாட்டி அவருக்குக் குடிக்கக் கொடுத்தான்.

இயேசு மறுபடியும் மகா சத்தமாய்க் கூப்பிட்டு, ஆவியை விட்டார். (மத்தேயு 27-11, 12, 13, 14, 22, 23, 26, 27, 28, 29, 30, 31, 33, 34, 35, 37, 38, 39, 40, 41, 42, 43, 44, 45, 46, 47, 48, 50)

ஆட்சே: அத்துஷ்டர்கள் இயேசுவை மிகவும் கொடுமைப் படுத்தினார்கள். இயேசுவிடத்திலும் குறை இருந்தது. கடவுளின் மகனென்று யாருங் கிடையாது; அவர் யாருக்கும் தகப்பனுமல்ல. தகப்பன் மகன் என்ற சம்பந்தமிருக்குமானால் மாமன், மச்சான்கூட அவர் ஆவார்! இது பொய். ஆளுநர் கேட்டபோது இயேசு உண்மை பேசி யிருக்கலாம். இவர் முன்பு செய்த அற்புதங்கள் உண்மையா யிருக்கு-மாயின், சிலுவையிலிருந்து இறங்கி, எல்லா துஷ்டர்களையும் தன் சீடர்களாக்கி யிருப்பார். தேவகுமாரர் என்பது சரியானால் இறைவன் அவனைக் காப்பாற்றி யிருப்பார். முக்கால அறிஞனும்! கசப்புக் கலந்த காடியைச் சுவைத்து வைத்ததேனோ? அதன் இயல்பை முன்பே உணராததேன்? அற்புத சக்தி யிருந்தால் அலறிச் சாவானேன்? மனிதன் எவ்வளவு கெட்டிக்காரனானாலும் முடிவில் மெய் மெய் யாகிறது, பொய் பொய்யாகிறது! கடவுள் மகன், அற்புத சக்திமான் என்பதெல்லாம் புருடா! இருந்தாலும் ஏசுநாதர் மற்றவர்களைவிட மேலானவரே. அவர் தமது இயற் குணத்துடன் மனிதப் பான்மையுடன் நடந்திருந்தால் இப்படி வருந்தியிருக்கமாட்டார். (90)

91. இதோ, பெரிய பூமி அதிர்ச்சியுண்டாயிற்று; கர்த்தருடைய தூதன் வானத்திலிருந்து இறங்கி வந்து வாசலிலிருந்து கல்லை உருட்டித் தள்ளி, அதன் மேல் உட்கார்ந்தான்...அவர் இங்கே இல்லை; தாம் சொன்னபடியே உயிர்த்தெழுந்தார். அவரை வைத்த இடத்தை வந்து பாருங்கள்; அவர்கள் அவருடைய சீஷருக்கு அறிவிக்க ஓடினார்கள். ஓடவே, இயேசு தாமே அவர்களுக்கு எதிர்பட்டு: வாழ்க என்றார். அவர்கள் கிட்ட வந்து அவர் பாதங்களைத் தழுவி அவரைப் பணிந்துக் கொண்டார்கள். இயேசு அவர்களிடம்: பயப்படாதிருங்கள்; நீங்கள் போய், கலிலேயாவுக்குப் போகும்படி என் சகோதரருக்குச் சொல்லுங்கள்; அங்கே என்னைக் காண்பார்கள் என்றார்.

பதினொரு சீஷருமோ இயேசு தங்களுக்குக் குறித்திருக்கும்படி கலிலேயாவிலுள்ள மலைக்குப் போனார்கள். அங்கே அவர்கள் அவரைக் கண்டு பணிந்துக் கொண்டார்கள். சிலரோ சந்தேகப்பட்டார்கள். அப்பொழுது இயேசு கிட்டவந்து

அவர்களை நோக்கி: வானத்திலும் பூமியிலும் சகல அதிகாரமும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது...நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசியுங்கள். இதோ யுக முடிவு பரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனே கூட இருக்கிறேன் என்றார்.

(மத்தேயு 28-2, 6, 9, 10, 16, 17, 18, 20)

ஆட்சே: இதுவும் ஒப்பமுடியாதது; இயற்கைக்கும் அறிவிற்கும் மாறுனது. கடவுளுக்குத் தூதர் பலர்; அவர்களை அவன் இங்குமங்கும் அனுப்புவது. அவனே உலகிற்கு இறங்கிவருவது—இது தவறு; கடவுள் என்ன கலெக்டரா, தாசில்தாரா? கிறிஸ்து அதே உடலுடன் சுவர்க்கம் சென்றுரா? உயிர்த்தாரா? பெண்கள் திருவடி தொட்டுக் கும்பிட்டபோது அதே உடலுடன் இருந்தாரா? மூன்று நாளில் உடல் கெடாததேன்? விண்ணும் மண்ணும் எல்லா சக்திகளும் எனக்கே உண்டு என்பது வீண் செருக்கல்லவா? டம்பாச்சாரி பேச்சு! சீடரைக் கண்டு பேசியது எப்படி? இதெல்லாம் உண்மையானுல் இன்னும் இறந்தவர் எழாததேன்? அதே உடலுடன் விண் செல்லாததேன்? (91)

இது மத்தாய் சுவிசேசம்; இனி மார்க்கின் சுவிசேசம் காண்போம்:

## மார்க்கின் (Mark) சுவிசேசம்

92. இவன் தச்சனல்லவோ? (மார்கு 6-3)

ஆட்சே: யோசேபு தச்சன் என்பது மெய்தான். ஆதலால் இயேசுவும் தச்சனே. பல வருட காலம் அந்தத் தொழிலைச் செய்தான். பிறகு தீர்க்கதரிசியாக (பைகம்பர்) விரும்பி, தேவகுமாரனென்று சொல்லிக்கொண்டான். பண்படாத காட்டாட்கள் அவனை நம்பினர். அவன் தந்திர வித்தைகளைக் காட்டினுன். முரணும், கலகமும் விதைப்பதே அவன் வேலை. (92)

## லூகா (Luke) சுவிசேசம்

93. அதற்கு இயேசு: நீ என்னை நல்லவரென்று சொல்வானேன்? கடவுள் ஒருவர் தவிர நல்லவர் ஒருவருமில்லையே. (லூக்கா 18-19)

ஆட்சே: கிறிஸ்துவர் இயேசுவே இரண்டற்ற ஒரு கடவுளை நம்புகிறுர் எனில், கிறிஸ்துவர் பரிசுத்த ஆவி, தந்தை,

மகன் என்று முப்பொருள் நம்பிக்கை கொள்வா னேன்? (93)

94. அவர் (பிலாத்து) ஏரோதுவினிடத்திற்கு அவரை அனுப்பினுன். ஏரோது (Herod) இயேசுவைக் கண்டபோது, மிகவும் சந்தோஷப்பட்டான். அவரைப்பற்றி அநேக காரியங்களைக் கேள்விப்பட்டிருந்ததினால், அவர் செய்யும் ஏதாவது அடை யாளத்தைப் பார்க்க வேண்டுமென்று விரும்பி, அவரைக் காணும்படி வெகுநாளாய் ஆசித்து நோக்கியிருந்தான். ஆகவே அவரிடம் அநேக கேள்விகளைக் கேட்டு விசாரித்தான். அவர் அவனுக்கு மறுமொழி ஒன்றும் சொல்லவில்லை.

(லூக்கா 23-7, 8, 9)

ஆட்சே : மத்தாய் சுவிசேசத்தில் இந்தச் செய்தியில்லை. சாட்சி களில் ஒற்றுமை இருக்க வேண்டும். ஆதலால் சாட்சி சரி யில்லை; நம்பத் தகுந்ததல்ல. ஏசுவிடம் அறிவும் அற்புத மும் இருந்திருந்தால் ஏரோதிற்கு விடை கூறி காட்டியிருக் கலாமே. அவரிடம் இரண்டும் இல்லை என்பது தெளிவு. (94)

## யோவான் (John) சுவிசேசம்

95. ஆதியிலே வார்த்தை இருந்தது; அந்த வார்த்தை கடவுளோடிருந்தது; அந்த வார்த்தை கடவுளுமாயிருந்தது. அவர் ஆதியிலே கடவுளோடிருந்தார்.

சகலமும் அவர் மூலமாய் உண்டாயிற்று; உண்டானதொன்றும் அவரை யல்லாமல் உண்டாகவில்லை. அவரின் ஜீவன் இருந்தது. அந்த ஜீவன் மனுஷருக்கு ஒளியாயிருந்தது. (யோவான் 1-1, 2, 3, 4)

ஆட்சே : ஆதியில் வக்தா (பேசுவோன்) இன்றி வார்த்தை இருக்கமுடியாது. வார்த்தை கடவுளோடு இருந்தது என்றால், ஆதியில் இருந்தது வார்த்தை என்பது பொருளற் றதாகும். வார்த்தை கடவுள் ஆகாது. வார்த்தையே கடவுள், அது கடவுளோடிருந்தது என்றால், ஆதியில் இருந்தது வார்த்தை என்பதும் பொருந்தாது. அதுவே கடவுள் என்பதும் பொருந்தாது. காரணமின்றிக் காரியம் இல்லை. வார்த்தையே உலகை ஆக்கமுடியாது. உலகைப் படைத்த வன் வார்த்தையே இல்லாமல் மௌனமாகவே படைக்கலாம். உயிர் என்பது என்ன? அஃது எங்கே யிருந்தது? "அவருள் உயிர் இருந்தது" என்றால், உயிர் என்றும் இருந்தது என்றாகும். இது மெய்யானால் கடவுள் தன் மூச்சை ஆதாம் மூக்கில் ஊதினார் என்பது பிழையாகும். ஜீவன் மனிதனுக்கு மட்டுமா ஒளி; விலங்குகளுக்கும் இல்லையா? (95)

96. அவர்கள் போஜனம் செய்து கொண்டிருந்தார்கள். (அது முடிந்ததும்) அவரைக் காட்டிக் கொடுக்கும்படி சீமோன் (Simon) குமாரன் யூதாஸ்கரியோத்தின் இருதயத்தைப் பிசாசு தூண்டிவிட்டிருந்தான். (யோவான் 13-2)

ஆட்சே : இது உண்மையாகாது. ஏனெனில் சைத்தான் எல்லாரையும் மயக்கினுன் என்றுல் 'சைத்தானை மயக்கியது யார்!' என்று கிறிஸ்துவர்களைக் கேளும். தானே மயங்கினுன் என்றுல் மக்களும் அவன் இடையீடின்றித் தாமே மயங்கலாம் அன்றே? அப்படியானுல் சைத்தானை இடையே புகவிடுவதேன்? கடவுளே சைத்தானைப் படைத்து அவனையே மயக்கினுல், பிறகு கிறிஸ்தீசரே சைத்தானுக்கும் சைத்தானுகிருர். சைத்தான் மூலம் எல்லாரையும் மயக்குவது கடவுளேயாகிருர். கடவுள் இந்தக் காரியம் செய்வாரா? கிறிஸ்து நூல்களை எழுதினேர், இயேசு கடவுள் மகன் என்போர்—இவர்களே சைத்தான்கள் போலும்? அந்த நூலும் அருள் நூலில்லை; அதன் கடவுளும் மெய்க் கடவுளில்லை. இயேசுவும் கடவுள் மகனில்லை. (96)

97. உங்கள் இருதயம் கலங்காதிருப்பதாக. கடவுளில் விசுவாசமாயிருக்கிறீர்களே, என்னிலும் விசுவாசமாயிருங்கள். என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு; அப்படியில்லாதிருந்தால், நான் உங்களுக்குச் சொல்லியிருப்பேன்; ஒரு ஸ்தலத்தை உங்களுக்காக ஆயத்தம் பண்ணப் போகிறேனே. நான் போய் உங்களுக்காக ஸ்தலத்தை ஆயத்தம் பண்ணுவேனேயாகில், நானிருக்கிற இடத்திலே நீங்களும் இருக்கும்படி நான் மறுபடியும் வந்து உங்களை என்னிடம் சேர்த்துக்கொள்ளுவேன். நான் போகிற இடத்திற்கு வழி உங்களுக்குத் தெரியும் என்றுர். வழியும் சத்தியமும் ஜீவனும் நானே; என்னுலேயன்றி ஒருவனும் பிதாவினிடம் வரான். என்னை அறிந்துகொண்டீர்களானுல், என் பிதாவையும் அறிந்திருப்பீர்கள். (யோவான் 14-1, 2, 3, 4, 5, 6, 7)

ஆட்சே : பாருங்கள்; ஈசாவின் பேச்சு போப் லீலைக்குக் கம்மியல்ல. இவ்வளவு தந்திரப் பேச்சில்லாவிட்டால் அவர் மதத்தில் யாரே சேருவார்?

பரமபிதா இயேசுவின் தனியுரிமையா? பிதா இயேசுவையே சார்ந்தவரானுல் அவர் ஈசனுக முடியாது. அவர் இயேசுவுக்கு ஆளா யிருப்பார். கடவுள் எவர் சிபார்சும் வேண்டாதவர். கிறிஸ்துக்கு முன்னுல் கடவுளை அடைந்தவர் இல்லையா? அப்படியானுல் கிறிஸ்து இடக் கவர்ச்சிக் கட்டுவதேன்? " நானே வழி, உண்மை, உயிர் " என்பது அகந்தையாகும், இடம்பமாகும். ஆதலால் இந்தப் பேச்சு என்றும் உண்மையாகாது. (97)

98. மெய்யாகவே மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் : நான் பிதாவிடம் போகிறபடியினால், என்னில் விசுவாசம் வைக்கிறவன் நான் செய்கிற கிரியைகளைத் தானும் செய்வான்; இவைகளைப் பார்க்கிலும் பெரியவைகளையும் செய்வான். (யோவான் 14-12)

ஆட்சே : கிறிஸ்துவருக்கு கிறிஸ்துவிடம் முழு நம்பிக்கையுண்டானால், அவர்களும் பிணத்திற்கு உயிர் தரலாமே ? நம்பிக்கையால் இவர்கள் அற்புதங் காட்டாவிட்டால் இயேசுவும் அற்புதம் செய்யவில்லை என்றாகும். அவரே தன்னினும் பெரிய அற்புதங்கள் செய்வார்கள் என்கிறாரே. செத்தாரை எழுப்புவது போன்ற அற்புதத்தை கிறிஸ்து செய்தார் என்று நம்பமுடியுமா ? (98)

99. மெய்யான ஒரே கடவுள். (யோவான் 17-3)

ஆட்சே : கடவுள் ஒன்றே ; இரண்டற்றது எனும்போது கிறிஸ்துவரின் முப்பொருள் பொருளற்றதாகும். புது ஏற்பாட்டில் இத்தகைய பிழைகள் பல உண்டு. (99)

## யோவானின் தரிசனம்

இப்பொழுது யோவானின் அதிசயப் பேச்சுகளைக் கேளுங்கள் :

100. தங்கள் தலைகளில் பொற் கிரீடம் சூடியவர்கள். சிங்காசனத்தின் முன் ஏழு தீவட்டிகள் எரிந்துக்கொண்டிருக்கின்றன ; அவைகள் கடவுளின் ஏழு ஆவிகள். அந்த சிங்காசனத்தின் முன், பளிங்குக்கொப்பான கண்ணாடிக் கடல் போன்ற தொன்று இருந்தது. சிங்காசனத்தின் மத்தியிலும் சிங்காதனத்தைச் சுற்றிலும் நான்கு ஜீவன்கள் இருந்தன. அவைகள் முன்புறமும் பின்புறமும் கண்கள் நிறைந்தவை. (யோ. தரிசனம் 4-4, 5, 6)

ஆட்சே : கிறிஸ்துவர் சுவர்க்கம் ஒரு நகரம்போலும். அதில் கடவுள் எரிசுடர் விளக்குப்போலும். கடவுள் தங்கக் கிரீடம் தரித்தாராம். நான்கு விலங்குகள் (சிங்கம், இளங்காளை, மனிதமுகங் கொண்ட விலங்கு, பறக்கும் கழுதை) முன்னும் பின்னும் கண்ணுள்ளனவாம் ! யாராவது நம்புவார்களா ? (100)

101. சிங்காசனத்தில் வீற்றிருக்கிறவரின் வலது கரத்தில் ஒரு புஸ்தகத்தைக் கண்டேன், அதில் உட்புறமும் பின்புறமும் எழுதியிருந்தது. அதற்கு ஏழு முத்திரைகளிடப்பட்டிருந்தன. புஸ்தகத்தை விரிக்கவும் அதன் முத்திரைகளை உடைக்கவும்

ஏற்றவன் யார்...? புஸ்தகத்தை விரிக்கவும் அதைப் பார்க்கவும் கூடியவன் வானத்திலாவது பூமியிலாவது பூமியின் கீழாவது ஒருவனுமில்லை. புஸ்தகத்தை விரிக்கவும் அதைப் பார்க்கவும் ஒருவரும் ஏற்றதாகக் காணப்படவில்லையே என்று நான் மிகவும் அழுதேன். (யோ. தரி. 5-1, 2, 3, 4)

ஆட்சே : கிறிஸ்துவ சுவர்க்க சிம்மாசனச் சிறப்பையும் மனிதர் வைபவத்தையும் பாரீர்! பல முத்திரைகளிட்ட நூல்; விண்ணிலோ மண்ணிலோ அதை திறந்து படிப்பார் இல்லை; யோவான் அழுகிறார். 'கிறிஸ்துவே அந்த நூலைத் திறப்பார்' என்று ஒரு மூப்பர் சொல்லுகிறார். என்ன பிரயோஜனம்! 'மாப்பிள்ளை யாராகுலும் மங்கலப் பாட்டுண்டு!' எல்லா மாண்பும் இயேசுவுக்கே! வெறும் பேச்சே! (101)

102. சிங்காசனத்திற்கும் நான்கு ஜீவன்களுக்கும் மூப்பர்களுக்கும் மத்தியிலே ஒரு ஆட்டுக்குட்டி நிற்கக் கண்டேன்; அது அடிக்கப்பட்டிருந்ததுபோல் காணப்பட்டது. அதற்கு ஏழு கொம்புகளும் ஏழு கண்களுமிருந்தன; அந்தக் கண்கள் கடவுளின் ஏழு ஆவிகளாம். (யோ. தரி. 5-6)

ஆட்சே : பாருங்கள் யோவானின் மனக் கட்டுமானம்! சுவர்க்கத்தில் இருப்பது கிறிஸ்துவர், நான்கு விலங்குகள், இயேசு இவ்வளவே. வேறு யாரும் இல்லை. என்னே வியப்பு! மண்ணுலகில் இயேசுவுக்கு இரண்டு கண்கள் இருந்தன. விண்ணுலகில் ஏழு கொம்புகள் ஏழு கண்கள்! அவை கடவுளின் ஏழு ஆவிகளாம்—கிறிஸ்துவர் இதை எப்படி நம்புகிறார்கள்! பகுத்தறிவு எங்கே! கொஞ்சம் புத்தியைப் பயன்படுத்தக்கூடாதா? (102)

103. அதை அவர் எடுத்தபோது, நான்கு ஜீவன்களும் இருபத்துநான்கு மூப்பரும் ஒவ்வொருவரும் சுரமண்டலத்தையும் பரிசுத்தவான்களின் ஜெபங்களாகிய தூபவர்க்கங்கள் நிறைந்த பொற்கலசங்களையும் உடையவர்களாய் ஆட்டுக்குட்டியின் முன் சாஷ்டாங்கமாய் விழுந்தார்கள். (யோ. தரி. 5-8)

ஆட்சே: இயேசு சுவர்க்கத்திலில்லாதபோது இந்த அப்பாவிகள் தூபம், தீபம், நைவேதியம் ஆரத்தியை யாருக்கு செய்தனர்? பிராட்டஸ்டண்டு கிறிஸ்தவர்கள் மூர்த்தி பூஜையைக் கண்டிக்கிறார்கள்; ஆனால் இவர்கள் சுவர்க்கம் மூர்த்தி பூஜைக்கு இருப்பிடமாயிருக்கே? (103)

104. ஏழு முத்திரைகளில் ஒன்றை ஆட்டுக்குட்டியானவர் உடைக்கக் கண்டேன்; அப்பொழுது நான்கு ஜீவன்களில் ஒன்று: வா என்று இடி முழக்கம்போல் சத்தமிட்டுச் சொல்லக் கேட்டேன். நான் பார்த்தபோது, ஒரு வெண்ணிறமான

குதிரை காணப்பட்டது, அதன் மேல் ஏறியிருந்தவன் வில்லைப் பிடித்துக்கொண்டிருந்தான்; அவனுக்கு ஒரு கிரீடம் கொடுக்கப்பட்டது; அவன் ஜெயிக்கிறவனாகவும் புறப்பட்டான்.

இரண்டாம் முத்திரையை அவர் உடைத்தபோது, இரண்டாம் ஜீவன்: வா என்று சொல்லக் கேட்டேன். அப்பொழுது செந்நிறமான வேறொரு குதிரை புறப்பட்டது; மனுஷர் ஒருவரையொருவர் கொன்று போடும்படி சமாதானத்தைப் பூமியிலிருந்து எடுத்துவிட அதன்மேல் ஏறியிருந்தவனுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது; ஒரு பெரிய பட்டயமும் அவனுக்குக் கொடுக்கப்பட்டது.

மூன்றாம் முத்திரையை அவர் உடைத்தபோது...ஒரு கருப்புக் குதிரை காணப்பட்டது.

நான்காம் முத்திரையை அவர் உடைத்தபோது...மங்கின நிறமான ஒரு குதிரை காணப்பட்டது; அதன் மேல் ஏறியிருந்தவனுக்கு மரணம் என்று பெயர்.

(யோ. தரி. 6-1, 2, 3, 4, 5, 6, 7, 8)

**ஆட்சே:** இது புராணப் புளுகை மிஞ்சிவிட்டதல்லவா? ஒரு நூலின் முத்திரைக்குள் குதிரைகளும், சவாரி செய்வோரும் எப்படி யிருக்கமுடியும்? இந்தக் கனவுப் பேத்தல்களையும் உண்மை என்று நம்பும் முட்டாள்தனத்தை என்னவென்பது! (104)

105. அவர்கள் மிகுந்த சத்தமிட்டு: பரிசுத்தமும் உண்மையுமுள்ள ஆண்டவரே, எதுவரைக்கும் நியாயந் தீர்க்காமலும், பூமியில் குடியிருக்கிறவர்களிடத்தில் எங்கள் இரத்தப் பழியை வாங்காமலும் இருப்பீர் என்று முறையிட்டார்கள். அப்பொழுது அவர்களில் ஒவ்வொருவருக்கும் வெள்ளையங்கி கொடுக்கப்பட்டது; அன்றியும், அவர்களைப்போல் கொல்லப்படவேண்டியவர்களாகிய அவர்கள் உடன் ஊழியரும் சகோதரருமானவர்களின் தொகை நிறைவாகுமளவும் இன்னும் கொஞ்சக் காலம் இளைப்பாற வேண்டுமென்று அவர்களுக்குச் சொல்லப்பட்டது.

(யோ. தரி. 6-10, 11)

**ஆட்சே:** கிறிஸ்துவர் ஆனோர் விசாரணைக் கைதிகளான போது, தங்கள் வழக்குத் தீர்ப்புக்காக கதறிக் கண்ணீர் விட வேண்டும். வேதவழி பற்றினவர் உடனே நியாயம் பெறுவர். கிறிஸ்துவர்களைக் கேட்கிறோம். ஈசன் கச்சேரி இப்போது மூடப்பட்டிருக்கிறதா? நியாயம் வழங்காமல் நீதிபர் சும்மா உட்கார்ந்திருக்கிறார்களா? இதற்கும் அவர்கள் சரியான பதில் சொல்லமுடியாது. அவர் கடவுளுக்கு மாறாட்டம் கூட உண்டுபோலும்! பகைவர் சொன்ன பிறகே பழி வாங்குகிறார். பழி வாங்குவதும் செத்த பிறகே. அவர்களுக்கு அமைதியில்லை. அமைதியில்லாதார் துன்பத்தை அளக்கமுடியுமா? (105)

106. பெருங்காற்றினால் அசையும் அத்திமரத்தின் காய்கள் உதிர்வதுபோல, வானத்தின் நட்சத்திரங்களும் பூமியிலே விழுந்தன. வானமும் புஸ்தகச் சுருள் போல் சுருண்டு மறைந்தது. (யோ. தரி. 6-13, 14)

ஆட்சே: பாருங்கள் யோவான் குறி சொல்வதை! கல்வியில்லாததால் இப்படிப் பேசுகிறான். கோளங்களான விண்மீன்கள் எப்படி மண்மேல் விழும்? சூரியனின் கவர்ச்சித் திறன் அவற்றை விழவொட்டாதே! ஆகாயம் பாய் என்று நினைத்தான்போலும். அதைச் சுருட்ட முடியுமா? ஆகாசத்திற்கு உருவில்லையே? யோவான் முதலானோர் காட்டு மனிதர்; அவர்களுக்கு என்ன அறிவிருக்கும்? (106)

107. முத்திரை போடப்பட்டவர்களின் தொகையைச் சொல்லக் கேட்டேன். இஸ்ரவேல் புத்திரரான சகல கோத்திரங்களிலும் முத்திரை போடப்பட்டவர்கள் இலட்சத்து நாற்பத்து நாலாயிரம் பேர். யூதா கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் பன்னீராயிரம். (யோ. தரி. 6-4, 5)

ஆட்சே: பைபிளீசன் இஸ்ரயேல் மக்களுக்கே உரியவரா, உலகிற் கெல்லாம் உரியவரா? அவ்வாறில்லாவிட்டால் இந்தக் காட்டுமிராண்டிகளை அவர் ஆதரித்திருக்கமாட்டார். அவர்களுக்கு மட்டும் உதவிப் பிறரை மறப்பவன் கடவுளாக மாட்டான். இஸ்ரயேலரை முத்திரை வைத்தது யோவான் மடமன மயக்கமே. (107)

108. ஆனபடியால், இவர்கள் கடவுளின் சிங்காசனத்திற்கு முன் இருந்து, இரவும் பகலும் அவருடைய ஆலயத்திலே அவரை ஆராதிக்கிறார்கள். (யோ. தரி. 7-15)

ஆட்சே: இது பெரிய உருவணக்கம் அல்லவா? அவர் கடவுள் மனிதன்போல உருக்கொண்டவன் அல்லவா? ஆகவே ஓர் இடத்தில் இருப்பவர். கிறிஸ்தீசர் இரவில் உறங்குவதில்லையா? அப்படியானால் அவரை இரவில் வணங்கியது எப்படி? அவருக்குத் தூக்கம் கெடாதா? இரவும் பகலும் விழித்திருந்தால் அவர் நலங் குலைந்து நோய் வருந்துவாரே! (108)

109. வேறொரு தூதனும் வந்து, தூபங்காட்டும் பொற்கலசத்தைப் பிடித்துக் கொண்டு பலி பீடத்தினண்டையில் நின்றான்...சகல பரிசுத்தவான்களின் ஜெபங்களோடுங்கூட அவர் செலுத்தும்படி மிகுதியான தூபவர்க்கங்கள் அவனுக்குக் கொடுக்கப்பட்டன. அப்படியே பரிசுத்தவான்களின் ஜெபங்களோடு சேர்ந்த தூப

வர்க்கங்களின் புகை தூதனுடைய கையிலிருந்து கடவுளுக்கு முன்பாக எழும்பிற்று. பின்பு அந்தத் தூதன் தூப கலசத்தை எடுத்து, அதை பலி பீடத்து நெருப்பினால் நிரப்பி, பூமியில் கொட்டினான். கொட்டவே இடி முழக்கங்களும், சத்தங்களும், மின்னல்களும் பூமியதிர்ச்சியும் உண்டாயின் (யோ. தரி. 8-3, 4, 5)

ஆட்சே: பாருங்கள். சுவர்கத்திற் கூட வேதியும், தூபதீப நைவேத்தியமும், எக்காளச் சத்தமும் உள்ளனவாம். கிறிஸ்துவர் சுவர்க்கம் பைராகிகளின் ஆலயங்களைவிட மட்டமல்ல! தூம்தாம், தடபுடல் இடம்பம் பலமாயிருக்கிறதே! (109)

110. முதலாம் தூதன் ஊதவே, இரத்தங் கலந்த கல் மழையும் அக்கினியும் பூமியிலே கொட்டுண்டன; பூமியில் மூன்றில் ஒரு பங்கு வெந்து போயிற்று, மரங்களில் மூன்றில் ஒரு பங்கு வெந்து போயிற்று, பசும்புல்லெல்லாம் வெந்து போயிற்று. (யோ. தரி. 8-7)

ஆட்சே: கிறிஸ்து தூதர் வினோதம் பாரீர்! ஈசன், தீர்க்க தரிசிகள், தூதர், எக்காளம், பிரளயலீலை—எல்லாம் சிறு பிள்ளை விளையாட்டா யிருக்கிறதே! (110)

111. ஐந்தாம் தூதன் (எக்காளம்) ஊதவே, வானத்திலிருந்து பூமியின்மேல் விழுந்து கிடந்த நட்சத்திரம் ஒன்றைக் கண்டேன்; பாதாளக் குழியின் திறவுகோல் அவனுக்குக் கொடுக்கப்பட்டது. அவன் பாதாளக் குழியைத் திறந்து வைத்தான்; திறக்கவே, பெருஞ்சூளையின் புகை போன்ற புகை அந்தக் குழியிலிருந்து எழும்பிற்று;...அந்தப் புகையிலிருந்து வெட்டுக்கிளிகள் கிளம்பிப் பூமியின்மேல் வந்தன. பூமியிலுள்ள தேள்களுக்குரிய வல்லமை போன்ற வல்லமை அவைகளுக்குக் கொடுக்கப்பட்டது. தங்கள் நெற்றியில் கடவுளின் முத்திரையில்லாத மனுஷரையே சேதப்படுத்தி...ஐந்து மாதமளவு அவர்களை வேதனைப்படுத்தலாம் என்றும் அவைகளுக்கு விதிக்கப்பட்டது. (யோ. தரி. 9-1, 2, 3, 4, 5)

ஆட்சே: எக்காளங் கேட்டு விண்மீன் அதே வானக தூதர் மீதும் அதே சுவர்க்கத்தின் மீதும் விழுந்திருக்கலாம்! பூமியில் விழவில்லைபோலும்? அடேயப்பா! குழியையும் வெட்டுக்கிளிகளையும் பிரளயத்திற்காக ஈசன் வளர்த்துக் காப்பாற்றி வைத்தாரோ? நெற்றி முத்திரையை அவை அறியுமா? அவர்களைக் கடிக்கக் கூடாதென்று அவை உணருமா? எல்லாம் கிறிஸ்து பாதிரிகள் பயமுறுத்தி அப்பாவி மக்களை மதம் மாற்றும் வேலையே இது! இத்தகைய பிதற்றல்கள் பண்பாடற்ற நாடுகளிலே தான் செல்லும். ஆரிய வர்த்தத்தில் அன்று. இது பிரளயப் பேச்சாகுமோ? (111)

**112.** குதிரைச் சேனையின் தொகை இருபது கோடி. (யோ. தரி. 9-16)

**ஆட்சே :** அடேயப்பா! இத்தனை குதிரைகள் சுவர்க்கத்தில் எங்கே நிற்கும், எங்கே புல் மேயும், எங்கே வசிக்கும், எவ்வளவு லத்தி போடும்; அந்த லத்தியின் நாற்றம் சுவர்க்கத்தில் எவ்வளவு மூக்கைத் துளைக்குமோ? ஆரியர்களான நாம் இத்தகைய சுவர்க்கம், இத்தகைய கடவுள், இத்தகைய சமயத்திற்கு எள்ளுத் தண்ணீர் இறைத்துவிட்டோம். கடவுள் இந்தக் கச்சடாக்களினின்று கிறிஸ்துவர்களையும் விடுவித்தால் நன்ருயிருக்குமே! (112)

**113.** பின்பு வல்லமையுள்ள வேருெரு தூதன் வானத்திலிருந்து இறங்கிவரக் கண்டேன். மேகமே அவனுக்கு ஆடை; அவன் சிரசின் மேல் வானவில் (Rainbow); அவன் முகம் சூரியன் போன்றது; அவன் கால்கள் அக்கினி ஸ்தம்பங்கள் போன்றன. விரிக்கப்பட்ட ஒரு சிறு புஸ்தகத்தை அவன் தன் கையில் வைத்திருந்தான். அவன் தன் வலது பாதத்தைச் சமுத்திரத்தின் மேலும் தன் இடது பாதத்தைப் பூமியின் மேலும் வைத்தான். (யோ. தரி. 10-1, 2, 3)

**ஆட்சே :** பாருங்கள் தூதர் கதையை. அவை புராணப் புளுகுகளையும் பாணர் பாட்டையும் மிஞ்சிவிட்டன. (113)

**114.** பின்பு, ஊன்றுகோல் போன்ற ஒரு நாணற்கோல் என்னிடம் கொடுக்கப் பட்டது. அப்பொழுது: நீ எழுந்து கடவுளின் ஆலயத்தையும் பலி பீடத்தையும் அதில் தொழுது கொள்ளுகிறவர்களையும் அளந்துவிடு. (யோ. தரி. 11-1)

**ஆட்சே :** மண் மீது மட்டுமா? கிறித்துவர் விண் மேலும் கோயில் கட்டி அளவிடுகிருர்கள். பலே! அவரது சுவர்க்கம் போலத்தான் சொல்லும் இருக்கும். அதனாலேதான் சுவாமி போஜனத்தில் கிறிஸ்துவின் உடல், அவரது அவயவம், அவர் மாமிசம், அவரது இரத்தம் என்று எண்ணிக் கறி தின்று குடிக்கிருர்கள். சர்ச்சுகளில் ஏராளமான சிலைகள் உள்ளனவே. இவை உருத் தொழுகை அன்ரே? (114)

**115.** அப்பொழுது பரலோகத்திலுள்ள கடவுளின் ஆலயம் திறக்கப்பட்டது. அவருடைய ஆலயத்தில் அவர் உடன்படிக்கைப் பெட்டகம் காணப்பட்டது. (யோ. தரி. 11-19)

**ஆட்சே :** சுவர்க்கத்தில் கோயிலாம்; மூடிக் கிடப்பதாம். ஒவ்வொரு சமயத்தில் திறப்பதாம்! பரமேசனுக்கும் கோயில் உண்டோ? வேதோக்தமான பரமாத்மன் எங்கும் உள்ளவன். அவனுக்குக் கற்கோயில் இருக்க முடியாது. ஆம்!

கிறிஸ்தீசன் உருவன். ஆகவே விண்ணிலோ மண்ணிலோ அவனுக்குக் கோயில் இருக்கலாம். இங்கே டாண் டாண் பூம் பூம் என்று மணியோசையும் டங்கா அடித்தலும் இருப்பதுபோல கிறிஸ்து சுவர்க்கத்திலும் இருக்க வேண்டும். உடன்படிக்கைப் பேழையும் கிறிஸ்துவர் சமயா சமயங்களில் மட்டுமே பார்க்கலாம் போலும்! அதனால் என்ன பலனடைகிறார்களோ? உண்மை யாதெனில் இப் பேச்செல்லாம் பிறரைக் கவரும் மாய வார்த்தைகளே. (115)

116. பெரிய அடையாளம் ஒன்று வானத்தில் காணப்பட்டது; அதென்னவெனில், சூரியனை அணிந்த ஒரு ஸ்திரி. அவள் பாதங்களின் கீழ் சந்திரன், அவள் சிரசின்மேல் பன்னிரண்டு நட்சத்திரங்களுள்ள கிரீடம். அவள் கர்ப்பவதியாயிருந்து பிரசவவேதனைப்பட்டு, பேறுகால வருத்தத்தால் அலறினாள். வேறொரு அடையாளமும் வானத்தில் காணப்பட்டது: இதோ, அக்கினி மயமான பெரிய வலு சர்ப்பம். அது ஏழு தலைகளும் பத்து கொம்புகளும் தலைகளின் மேல் ஏழு முடிகளும் உடையது. அதன் வால் வானத்தின் நட்சத்திரங்களில் மூன்றில் ஒரு பங்கை இழுத்து, அவைகளைப் பூமியில் விழத் தள்ளிற்று. (யோ. தரி. 12-1, 2, 3, 4)

ஆட்சே: பாருங்கள் நீளமான கப்சாக்கள்! சுவர்க்கத்திலும் பிரசவ வேதனையால் ஒரு பெண் அலறுகிறாள். அவள் துக்கத்தைக் கேட்பாரில்லை; துயரை விலக்குவாரில்லை. பறவை நாகத்தின் வால் எவ்வளவு நீளமோ! அது மூன்றிலொரு பங்கு விண்மீன்களை பூமி மேல் அடித்துத் தள்ளியதாம்? பலே! உலகம் சிறிது. விண்மீன்கள் எவ்வளவோ பெரியன. ஒரு விண்மீனைக் கூட பூமி தாங்காது. மூன்றிலொரு பங்கு விண்மீன்கள் இந்தக் கட்டுக்கதையை எழுதினவன் வீட்டில் விழுந்திருக்க வேண்டும். மூன்றிலொரு பங்கு விண்மீன்களை இழுத்துத் தள்ளக்கூடிய வலுவுள்ள வாலைக் கொண்ட பறவை நாகமும் அவன் வீட்டிலேதான் இருந்திருக்க வேண்டும். (116)

117. மேலும் வானத்தில் யுத்தம் உண்டாயிற்று; மிகவேலும் (Michael) அவருக்குத் தூதரும் வலு சர்ப்பத்தோடு யுத்தம் பண்ணினார்கள். வலு சர்ப்பமும் அதன் தூதரும் யுத்தம் பண்ணியும், ஜெயங்கொள்ளவில்லை. (யோ. தரி. 12-7)

ஆட்சே: கிறிஸ்துவ சுவர்க்கத்திற்குச் சென்றவர் எல்லாம் போர்த் துயரை அனுபவிக்கவேண்டும். அப்படிப்பட்ட விண்ணகம் நமக்குத் தேவையில்லை. அதற்கு விடை கொடுத்து, அமைதியாக அமர்வோம். அமைதி குலைக்கும் அமர்க்கள சுவர்க்கம் ஏசுவின் சீடருக்கே சரியானதாகும். (117)

118. பழைய பாம்பாகிய பெரிய வலு சர்ப்பம் எறியுண்டது; அதற்குப் பிசாசு (Devil) என்றும் சாத்தான் (Satan) என்றும் பேர் வழங்கும். உலகமனைத்தையும் வஞ்சிப்பது அதுவே. (யோ. தரி. 12-9)

ஆட்சே: சைத்தான் சுவர்க்கத்தில் இருந்தபோது மக்களை மயக்கவில்லையா? அவனை ஆயுளெல்லாம் சிறையிட்டுக் கொல்ல வில்லை? அவனை ஏன் பூமியில் தள்ளினர்? உலகை யெல்லாம் மயக்கும் சைத்தானை மயக்கியது யார்? சைத்தான் தானே மயங்குவான்; ஆனால், மக்களும் சைத்தான் இல்லா மல் தாமே மயங்கலாமே? சைத்தானை மயக்குவோன் ஆண்டவனாயின், அவன் உண்மைக் கடவுளா யிருக்க முடியாது.

கிறிஸ்தீசன் சைத்தானுக்கு அஞ்சுவதுபோலக் காண்கிறது. அவன் சைதானைவிட சக்திமான் ஆனால், பாபம் செய்ததும் அவனை ஏன் தண்டிக்கவில்லை? உலகில் சைத்தான் ஆட்சியி லிருப்பதில் ஆயிரத்தில் ஒரு பங்குகூடக் கடவுளிடம் இல்லையே! கடவுள் ஏன் அவனைத் தள்ளக்கூடாது? கிறிஸ்து கவர்னர் திருடரையும் குற்றவாளிகளையும் தண்டிக்கிறரே. அவர்களை விடக் கடவுள் மட்டமா என்ன? இதெல்லாம் பார்க்கப்போனல் வேதநெறியைவிட்டு, போலித்தனமான கிறிஸ்து மதத்திற் புகுதல் எவ்வளவு மடமை எனத் தெரிகிறது. (118)

119. பூமிக்கும் சமுத்திரத்திற்கும், ஐயோ, ஆபத்து வரும்...பிசாசு உங்களிடத்தில் இறங்கிவிட்டானே. (யோ. தரி. 12-12)

ஆட்சே: கடவுள் அந்த இடத்தினரின் இரட்சகர்மட்டுமா? அவர் உலகம், மக்கள், உயிரினங்களின் இரட்சகர் அல்லவா? அவர் உலக ரட்சகர், அரசர் ஆனால் சைத்தானை ஏன் அழிக்கவில்லை? கடவுள் சாகின்றார்; சைத்தான் ஏமாற்றித் திரிகிறன்! அவர் அவனை ஒழிக்கவில்லை. ஒரு நல்ல கடவுளுக்கு எதிராக இரண்டாவது தீய, துஷ்ட கடவுள் இருக் கிறர்போலும். (119)

120. நாற்பத்திரண்டு மாதமளவும் தன் இஷ்டப்படி (யுத்தம் செய்ய) அதற்கு (மிருகத்திற்கு) அதிகாரம் கொடுக்கப்பட்டது. அது கடவுளுக்கு விரோதமாய்த் தூஷணங்களைச் சொல்லவும், அவர் நாமத்தையும், அவர் கூடாரத்தையும், அதாவது பரலோகக் கூடாரத்திலிருக்கிறவர்களையும் தூஷிக்கவும் தன் வாயைத் திறந்தது. மேலும், பரிசுத்தவான்களோடு யுத்தம் பண்ணி அவர்களை ஜெயிக்க அது இடம் பெற்றதுமல்லாமல், சகல கோத்திரங்கள் மேலும் ஜனங்கள் மேலும் பாஷைக்காரர் மேலும் ஜாதிகள் மேலும் அதிகாரமும் பெற்றது. (யோ. தரி. 13-5, 6, 7)

ஆட்சே : சைத்தானையும், விலங்குகளையும் அனுப்பி உலக மக்களை மயக்கி, தூய மனிதருடன் அவர்கள் போராடச் செய்வது கொள்ளைக்காரக் கூட்டத் தலைவன் செயலல்லவா இது! இது கடவுள் செயலும் அல்ல; கடவுளன்பர் செயலு மாக முடியாதே! (120)

121. பின்னும் நான் பார்த்தபோது, சீயோன் மலையின் மேல் ஆட்டுக்குட்டியானவர் நின்று கொண்டிருந்தார். அவரோடு இலட்சத்து நாற்பத்து நாலாயிரம் பேர் இருந்தார்கள். இவர்கள் நெற்றிகளில் அவர் நாமமும் அவர் பிதாவின் நாமமும் எழுதப்பட்டிருந்தன.

ஆட்சே : பாருங்கள்! இயேசப்பன் இருந்த அதே சீயோன் மலை மேல் மகனும் அப்பனுடன் வசித்தானும். 144000 பேரை எப்படிக் கணக்கிட்டார்? சுவர்க்கவாசிகள் 144000 பேர்தாமா? மற்றக் கோடானுகோடி கிறிஸ்துவருக்கு முத்திரைக் குத்தவில்லையா? அவர்களெல்லாம் நரகத்திற்குப் போனார்களா? கிறிஸ்துவர் சீயோன் மலைமேல் ஏறி அங்கே ஏசுவின் அப்பாவும் சேனைகளும் இருக்கிறார்களா என்று பார்க்கவும். இருந்தால் சொன்னது சரி; இன்றேல் பொய். இன்னோர் இடத்திலிருந்து வந்தார் என்றால்...... எந்த இடத்திலிருந்து அவர் வந்தார். வானத்திலிருந்தா? அப்படியானால் அவரும் அவ்வளவு பெரிய சேனையும் மேலும் கீழும் பறக்க இறக்கை முளைத்த பறவைகளா? அவர் வருவதும் போவதும் ஆனால், ஒரு ஜில்லா நியாயாதிகாரி போலும்! அப்படியானால் ஒருவர் போதாது. இரண்டு மூன்று பேர் இருந்தாலும் போதாதே. ஒவ்வொரு பூகோளத்திற்கும் ஒவ்வொரு கடவுள் இருக்க வேண்டுமே. ஒன்றிரண்டு மூன்று அதிகாரிகள் போதாவாம். எல்லா வுலகங்களையும் சுற்றிப் பார்த்து தனித்தனி நீதி வழங்கப் பல கடவுள்களல்லவா வேண்டும்? (121)

122. ஆம், அவர்கள் தங்கள் உழைப்பினின்று இளைப்பாறுவார்கள். அவர்களுடைய கிரியைகள் அவர்களோடு கூடப்போகுமென்று ஆவியானவரும் சொல்லுகிறார். (யோ. தரி. 14-13)

ஆட்சே : பாருங்கள் கிறிஸ்தீசன் அவரவர் வினைக்கேற்ற பலன் கிடைக்கும் என்கிறார். ஆனால் இவர்கள் கிறிஸ்து, இவர்கள் பாவத்தை ஏற்றுக்கொண்டு மன்னிப்பருளுவார் என்கிறார்கள். கடவுள் சொல்வது உண்மையா அல்லது கிறிஸ்து

சொல்வது உண்மையா என்று அறிவாளர் சிந்திக்க வேண்டும். இரண்டும் ஒரே சமயத்தில் உண்மையாயிருக்க முடியாது; ஒன்றே உண்மையாகும்; மற்ருென்று பொய் யாகவே இருக்க வேண்டும். கிறிஸ்தீசர் பொய்யா அல்லது கிறிஸ்துவரே பொய்யா என்ற விவகாரம் நமக்கு வேண்டாம். (122)

123. அப்பொழுது அந்தத் தூதன் தன் அரிவாளைப் பூமியின் மேல் நீட்டி பூமியின் திராட்சைக்குலைகளை அறுத்து, கடவுளுடைய கோபாக்கினியின் பெரிய ஆலையில் இட்டான். நகரத்திற்கு வெளியே ஆலை மிதிக்கப்பட்டது. அந்த ஆலை யிலிருந்து ஆயிரத்து அறுநூறு * ஸ்தாதி தூரமளவும் குதிரையின் கடிவாள உயர மாக இரத்தம் பெருகிற்று. (யோ. தரி. 14-19, 20)

ஆட்சே: புராணப் புளுகை மிஞ்சிவிட்டது இவர்கள் கட்டுக் கதை! கோபம் வந்தபோது கிறிஸ்தீசர் மிகவும் சங்கடப் படுகிருர். அவரது ஆலைகளும் சினம் நிறைந்து விழுகின் றன. இந்தக் கோபம் நீரா வேறு? இரத்தம் இருநூறு மைல் களுக்கு வழிந்தோடுவது நம்பத்தகாதது. காற்றுப்பட்டதும் இரத்தம் கட்டிப் போகுமே. ஆதலால் இதெல்லாம் பொய்ச் சரக்கு. (123)

124. இவைகளுக்குப் பின்பு நான் பார்த்தபோது, பரலோகத்தில் சாட்சிய கூடாரமாகிய ஆலயம் திறக்கப்பட்டது. (யோ. தரி. 15-5)

ஆட்சே: கிறிஸ்தீசன் எல்லாம் அறிந்தவனுனல் சாட்சிக்கு அவசியமில்லையே. முற்றறிவால் அனைத்தையும் உணர்ந் திருக்கலாமே. ஆதலால் அவர்கள் ஈசன் எல்லாம் அறிந்த வன் அன்று, மனிதரைப் போலவே சிற்றறிவன் என்பது தெளிவாகிறது. அவன் எப்படிக் கடவுளாகச் செயல்பட முடியும்? முடியாது! ஒருக்காலும் முடியாது!! இதே மாதிரி தூதர்களைப்பற்றியும் கட்டுக்கதைகள் பல; அவற்றை உண்மையென்று நம்பவே முடியாது. இந்த அத்தியாயம் கணக்கிட முடியாத கப்ஸாமயம். எல்லாம் பொய். எவ்வளவு எழுதமுடியும். (124)

125. அவள் அநியாயங்களைக் கடவுள் நினைத்துக்கொண்டார். அவள் கொடுத்தபடியே அவளுக்குக் கொடுத்துத் தீருங்கள். அவள் செய்கைகளுக்கு இரட்டிப்பாகவும் செய்து விடுங்கள். (யோ. திரி. 18-5, 6)

* ஸ்தாதி = சுமார் 200 கஜம்.

ஆட்சே: பாரீர் கிறிஸ்தீசரின் அநியாயம்! வினைக்கேற்ற விளைவு என்பது நியாயம். அதைவிடக் குறையான, மிகையான தண்டனை தருவது அநியாயம். அநியாயக் கடவுளைத் தொழுவோர் எப்படி நியாயவானுவார்? (125)

126. ஆட்டுக்குட்டியானவருடைய கலியாணம் வந்துவிட்டது. அவர் மனைவி தன்னை ஆயத்தம் பண்ணிக்கொண்டாள். (யோ. தரி. 19 7)

ஆட்சே: கேளுங்கள்! கிறிஸ்துவர் சுவர்க்கத்தில் விவாகமும் நடக்கிறது. அங்கேயே ஏசுகிறிஸ்துவின் கலியாணத்தைக் கடவுள் நடத்திவிட்டார். அவரது மாமியார், மாமனுர், மச்சினன் வகையரு யாரோ? கேட்க வேண்டும். அவருக்கு எத்தனை குழந்தைகள்? வீரிய நாசத்தால், புத்தி, பலம், பராக்ரமம், ஆயுள், எல்லாம் மெலிந்து, இயேசு அங்கேயே உடல் நீத்திருக்க வேண்டும். ஏனெனில் தொகுப்புடல் வீரிய நாசத்தால் பகுப்பாகி நலியும். கிறிஸ்துவர் இதுவரை மாயையில் பிடிபட்டு ஏமாந்தார்கள். இன்னும் எவ்வளவு காலம் ஏமாந்திருப்பார்களோ? (126)

127. பிசாசென்றும் சாத்தானென்றும் சொல்லப்பட்ட பழைய பாம்பாகிய வலுசர்ப்பத்தை அவன் பிடித்து, அதை ஆயிரம் வருஷமளவும் கட்டி வைத்து, பாதாளக் குழியில் எறிந்து விட்டான்; அந்த ஆயிரம் வருஷம் முடியுமளவும் இனி அது ஜனங்களை வஞ்சிக்க அவன் அதை அடைத்து, மேலே முத்திரை போட்டான்.

(யோ. தர். 20-2, 3)

ஆட்சே: சாத்தானை வெகு கஷ்டப்பட்டுப் பிடித்தே ஆயிரம் ஆண்டுகள் சிறையில் அடைக்கப்பட்டான். ஆனல் வெளி வந்த பிறகு அவன் மறுபடியும் மயக்கு வேலை செய்வானே! அத்தகைய துஷ்டனை ஆயுட்சிறை வைக்க வேண்டும் அல்லது வதைக்க வேண்டும்.

ஆனல் சைத்தான் இருக்கிறுன் என்பது கிறிஸ்துவரின் பிரமைதான். உண்மையில் இல்லை. இது மக்களைப் பயமுறுத்தி வலைப் பிடிக்கும் சூழ்ச்சியே. ஒரு தூர்த்தன், ஜனங்களைப் பார்த்து "என் பின் வாருங்கள்; கடவுளைக் காட்டுகிறேன்" என்ருன். அவனை நம்பி மக்கள் பின் சென்றனர். அவர்களைத் தனியிடம் கொண்டு சென்ருன். அங்கே ஒரு புதரில் நாலு கைகள் இணைந்த ஒரு மனிதனை ஒளிய வைத்தான். "கண்ணை மூடுங்கள் என்பேன், மூடவேண்டும்; திறக்கச் சொல்

லுவேன், திறக்க வேண்டும். இப்போது கண்ணை மூட வேண்டும். நான் சொன்னபடி செய்யாவிட்டால் கண் குருடாகி விடும்'' என்றான். மூடினர். அந்த நாலு கை மனிதனை மெல்ல வரச் சொன்னான். ''கண்ணைத் திறந்து பாருங்கள்''—ஹா நாராயணன்—இதைப் போலத் தான் பாதிரிமார் வேலை. தங்கள் மதத்தைத் தழுவாதார் அனைவரும் சைத்தான் வலைப்படுவார்கள், என்று மிரட்டுகிறார்கள். இந்த வலைவீச்சில் யாரும் சிக்கக் கூடாது. (127)

128. பூமியும் வானமும் அவர் சமூகத்தை விட்டு அகன்று போயின. அவைகளுக்கு இடமில்லாமற்போயிற்று. மரித்தோராகிய சிறியோரையும் பெரியோரையும் சிங்காசனத்துக்கு முன் நிற்கக் கண்டேன்; புஸ்தகங்கள் விரிக்கப்பட்டன; ஜீவ புஸ்தகம் என்னும் வேறொரு புஸ்தகமும் விரிக்கப்பட்டது. அந்தப் புஸ்தகங்களில் எழுதியவைகளைக் கொண்டு மரித்தோர் தங்கள் தங்கள் செய்கைகளுக்குத் தக்கபடி தீர்ப்புப் பெற்றார்கள். (யோ. தரி. 20 11, 12)

ஆட்சே: பாருங்கள் பிள்ளைத்தனத்தை! மண்ணும் விண்ணும் எப்படி மறைந்து ஓடிப்போகும்; அப்படியானால் அவர்கள் எங்கே நிற்பார்கள்? யார் முகத்திலிருந்து மண்—விண் மறைந்தன. அப்படியானால் அவன் அரியணை எங்கே, எங்கே நின்றான்? செத்தவர் தன் முன்னே நின்ற போது, கடவுள் நின்றானா, அமர்ந்தானா? கடவுள் கடைக் கச்சேரி விவகாரம் போலப் பேரேடு வைத்துச் செயல் புரிகிறாரா? அத்தனை ஆத்மாக்களின் குறிப்புகளையும் கடவுள் எழுதினானா? அவன் குமாஸ்தா எழுதினானா? இப்படிப் பட்ட பிதற்றல்களால் கிறிஸ்துவர் ஈசனை அனீசனாகவும், அனீசனை ஈசனாகவும் செய்கின்றனர். (128)

129. ஏழு தூதரில் ஒருவன் வந்து என்னோடு பேசி: இங்கே வா, ஆட்டுக் குட்டியானவருடைய மனைவியாகிய மணவாட்டியை உனக்குக் காண்பிப்பேன் என்று சொன்னான். (யோ. தரி. 21-9)

ஆட்சே: பலே! கிறிஸ்துவுக்கு சுவர்க்கத்தில் நல்ல மனைவி கிடைத்துவிட்டாள். மவுசுதான்! சுவர்க்கத்திற்குப் போனவருக்கெல்லாம் பெண்கள் கிடைத்து மக்களும் பிறப்பார்கள்! கூட்டம் பெருத்து நோய் வாய்ப் பட்டும் இறப்பார்கள். இப்படிப்பட்ட சுவர்க்கம் வேண்டாம்; நாம் விலகி இருப்போம். தூரத்திலிருந்து கை கூப்புவோம். (129)

130. அவன் அந்த கோலினால் நகரத்தை அளந்தான்; அதன் அளவு பன்னீராயிரம் ஸ்தாதி; அதன் நீளமும் அகலமும் உயரமும் சமம். அவன் மதிலை அளந்த அளவு நூற்று நாற்பத்து நான்கு முழம். இது மனுஷ அளவு; தூதனின் அளவும் அதுவே. அதன் மதில் வச்சிரக்கல்லால் கட்டியிருந்தது; நகரம் சுத்தமான கண்ணாடிக்கொப்பான பசும் பொன்னாயிருந்து நகரத்து மதிலின் அஸ்திவாரங்கள் சகலவித இரத்தினங்களினாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. முதல் அஸ்திபாரம் வச்சிரக்கல், இரண்டாவது நீலம், மூன்றாவது மாணிக்கம், நான்காவது மரகதம், ஐந்தாவது கோமேதகம், ஆறாவது பதுமராகம், ஏழாவது சுவர்ணரத்தினம், எட்டாவது படிகப்பச்சை, ஒன்பதாவது டஷ்பராகம், பத்தாவது வைடூரியம், பதினோராவது இந்திர நீலம், பன்னிரண்டாவது சுகந்தி. பன்னிரண்டு வாசல்களும், பன்னிரண்டு முத்துக்கள். ஒவ்வொரு வாசலும் ஒவ்வொரு முத்தாலானது. நகரத்தின் வீதி தெளிவான கண்ணாடி போன்ற பசும்பொன்.

(யோ. தரி. 21-16, 17, 18, 19, 20, 21)

ஆட்சே: கேளுங்கள் ஈசாயிகளின் சுவர்க்க வர்ணனை! அத்தனை கிறிஸ்துவர் சாகின்றனர், பிறக்கின்றனர்; அவர்கள் எப்படி அந்தஅளவுள்ள நகரில் அடங்குவார்கள்? அங்கே வருகிறவர்கள் மிகுதி, போகிறவர்கள் இல்லையே— அந்த நகரும் விலையுயர்ந்த நவரத்தினங்களால் ஆனதாம், தங்க மயமாம். இதெல்லாம் மக்களை மயக்கித் தமது மதத்திற் சேர்க்கும் லீலையே! நகரின் நீளஅகலம் அப்படியிருக்கலாம். ஆனால் 750 கோசங்கள் (1500 மைல்) உயரம் ஒருக்காலும் இருக்கமுடியாது—எல்லாம் கற்பனைப் புளுகு! அவ்வளவு பெரிய முத்துக்கள் எங்கிருந்து வந்தன? ஒரு வேளை இப்படி எழுதினவன் வீட்டிலிருக்கும் அண்டாக்களிலிருந்தா? இது புராணகதைகளுக்கு அப்பனாயிருக்கிறதே! (130)

131. அசுத்தமான எதுவும், அருவருப்பையும் பொய்யையும் நடப்பிக்கிற எவனும் அதில் பிரவேசிப்பதேயில்லை. (யோ. தரி. 21-27)

ஆட்சே: அப்படியானால், பாபிகளும் கிறிஸ்து மதத்தைத் தழுவினால் சுவர்க்கத்தை அடையலாம் என்று கிறிஸ்துவர் சொல்லுவதேன்? அது சரியன்று. அப்படியானால் இந்தப் பொய்க் கனவுகளைக் கட்டி விட்ட யோவான் ஒருக்காலும் சுவர்க்கத்திற் புகமுடியாது. இயேசுவும் புகமுடியாது. ஏனெனில் அவர் எல்லாருடைய பாபங்களையும் சுமக்கிறவர் அல்லவா? (131)

132. இனி ஒரு சாபமுமிராது. கடவுளும் ஆட்டுக்குட்டியானவருமிருக்கிற சிங்காசனம் அதிலிருக்கும்; அவர் அடியார் அவரைச் சேவித்து, அவருடைய சமூ

கத்தைத் தரிசிப்பார்கள்; அவர் நாமம் அவர்கள் நெற்றிகளிலிருக்கும். இனி இராக் காலமிராது; விளக்கு வெளிச்சமும் சூரிய வெளிச்சமும் அவர்களுக்கு வேண்டுவதில்லை; கடவுளாகிய கர்த்தரே அவர்கள்மேல் ஒளி வீசுவார்; அவர்கள் என்றென்றைக்கும் அரசாளுவார்கள். (யோ. தரி. 22-3, 4, 5)

ஆட்சே: ஈசாயிகளின் சுவர்க்க வாசத்தைப் பாருங்கள்! ஈசனும் இயேசுவும் எப்போதும் சிம்மாஸனத்திலேயே உட்கார்ந்திருப்பார்களா என்ன? அவர் தொண்டர் எப்போதும் அவர் முன்னே அவர் முகத்தையே பார்த்துக்கொண்டே யிருப்பாரா என்ன? ஈசன் முகம் எப்படிப்பட்டது? ஐரோப்பியர் போல வெண்மையா, ஆப்பிரிக்க நீக்ரோவர் போலக் கறுப்பா? அல்லது பிற நாட்டார் முகம் போலா? உங்கள் சுவர்க்திலும் சிறியார் பெரியார் வேறுபாடிருப்பதால், பந்தமும் துக்கமும் அங்கும் இல்லாது போகுமா? முகவுருப்பிருப்பவர் சர்வக்ஞனை ஈசனாக முடியவே முடியாது. (132)

133. சீக்கிரம் வருகிறேன்; ஒவ்வொருவனுக்கும் அவனவன் செய்கைகளுக்குத் தகுந்தபடி நான் அளிக்கும் பலன் என்னோடிருக்கிறது. (யோ. தரி. 22-12)

ஆட்சே: கருமத்திற்கேற்ற பலன் என்பது உண்மையானால் பாபமன்னிப்பு என்பது நடவாது. அப்படி மன்னிப்பதானால் மேற்கண்ட பைபிள் வாக்கு பொய்க்கும்; பாப மன்னிப்பும் பைபிளில் உள்ளது என்றால் அது முன்பின் முரண் ஆகும்; இதை விட்டொழியுங்கள். (133)

இன்னும் எவ்வளவுதான் எழுதுவது? பைபிளில் மெச்சத் தக்க பல விஷயங்கள் உள்ளன. மறுக்கத் தக்க பல விஷயங்கள் உள்ளன. கிறிஸ்துவர் பைபிளிலிருந்து மாதிரிக்குச் சிலவற்றைச் சொன்னோம். அறிவாளிகளிகளுக்கு இத்தனை போதும். பைபிளில் சில உண்மை; பலபொய்; பொய்யின் சேர்க்கையால் உண்மையும் பழுதுறும். ஆதலால் பைபிளையும் ஒப்புக்கொள்ள முடியாது. அதிலிருக்கும் உண்மை வேதத்திலும் இருக்கிறது. வேதமே போதும்.

ஸ்ரீ மத் தயானந்த ஸரஸ்வதி சுவாமிகள் அருளிய
சத்தியார்த்தப் பிரகாசத்தில்
கிறிஸ்துவ மத பரிசீலனைப் பற்றிய
பதின்மூன்றும் அத்தியாயம்
முற்றிற்று.

# பதினான்காம் அத்தியாயம்

## அணிந்துரை (4)

இந்தப் பதினான்காம் அதிகாரம் முஸ்லீம் மத ஆராய்ச்சியாகும். இது குரானையே ஆதாரமாகக் கொண்டது, வேறு கிரந்தகளை அல்ல. ஏனெனில் அதுவே முஸ்லிம் சமயத்திற்கு அடிப்படையாகும். பல வகுப்பு வாதங்களால் சொல் விளக்கம் வேறு படலாம். இருப்பினும் குரான் ஆதாரம் ஒன்றே. குரான் அரபியில் உள்ளது. அதை மௌல்விகள் உருதுவில் மொழி பெயர்த்துள்ளனர். அதையே தேவநாகரி எழுத்தில் ஆரிய பாஷையில் ஆக்கி, அரபிப் புலவர் சரிபார்த்து திருத்தப்பட்டவை. இந்த விளக்கத்தை யாராவது மறுப்பதானால், அவர்கள் முதலில் மௌல்விகளின் மொழி பெயர்ப்பை மறுக்கவேண்டும். பிறகே நமது விளக்கத்தை மறுக்கவேண்டும். மனிதர் உண்மையறிந்து, நலம் பெற்று, எல்லா மதங்களையும் பற்றிச் சிறிது அறிந்து, தீயதை விலக்கி நல்லதை ஏற்கவேண்டும் என்று கருதியே இந்த ஆராய்ச்சியை எழுதுகிறோம். இந்த மதத்தையோ வேறு எதையோ பொய்ப்பழி தூற்றும் எண்ணம் எமக்கில்லை. யாரையும் பொய்ப்பழி தூற்றாமல், உண்மையின் வழியை மறிக்காமல், மெய்மெய், பொய்பொய் என்றுணர்ந்து நலந்தீதை அறிந்து, தெளிவு பெறவேண்டும் என்பதே எமது கருத்த. மெய்—பொய் இன்னதென்று உணர்த்திய பிறகும், நம்புவதோ நம்பாதிருப்பதோ அவரவர் பான்மையைப் பொறுத்த தாகும். யாரையும் வற்புறுத்துவதில்லை பிறரிடமும் தம்மிடமும் உள்ள குண—தோஷங்களைக் கண்டறிந்து, குற்றம் நீங்கி, குணத்தைத் தாங்கி, மதவெறியர் வெறியை ஒழிப்பது தான் நல்லோர்க் கழகு. அடம் பிடித்த மதவெறியர் பட்சபாதத்தால் முன்னை விளைந்த கொடுமைகள் இனி விளையாமல் கவனமாயிருக்க வேண்டும். ஜீவன் நிலையற்றது, கணபங்கமாவது. இந்த ஜீவனில், பிறருக்குத் தீமைசெய்து, தமக்குப் மற்றவருக்கும் கேடுசூழ்வது மனிதத்தன்மையாகாது. இங்கே எழுதியிருப்பதில் மாறுபாடிருந்தால், நல்லோர் காட்டுக; தக்கதை ஏற்போம். இந்த அதிகாரம், மதவெறிக் கொடுமை, தூராக்கிரகம், பொறாமை (மாச்சரியம்), பகை, வெறுப்பு, வீண் சண்டை, வாத விரோதங்

களை ஒழிக்கவே எழுந்தது; இத்தீமைகளை வளர்க்க அன்று. ஒருவருக்கொருவர் தீதிழைக்காமல், நலம் வளர்ப்பதே நமது கருத்து. இப்போது இந்தப் பதினான்காம் அதிகாரத்தில் முஸ்லீம்களின் சமய ஆராய்ச்சியை நல்லோர் அனைவருக்கும் நிவேதிக்கிறேன். நன்றாகச் சிந்தித்து, விருப்பை ஏற்று, வெறுப்பை விலக்குக.

அறிஞருக்கு ஒருசொல்; அதுபோதும். இஃது அணிந்துரை.

# பதின்மூன்காம் அத்தியாயம்

# முஸ்லிம் மத ஆராய்ச்சி

1. அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால். (மன்ஜில் 1 : ஸிபாரா 1 : ஸூரத் 1)

ஆய்வு: முஸ்லிம்கள் குரான் தெய்வவாக்கு என்பர். ஆனால் இந்த வரியால் அதை ஆக்கியோன் வேறு என்று தோன்றுகிறது. கடவுளே ஆக்கியிருந்தால் "அல்லா பெயரால் தொடங்கிறோம்" என்றிராதே; "மனிதருக்கு வழிகாட்டத் தொடங்குகிறோம்" என்றிருக்கலாம். மாந்தர் முற்படியே சொல்லவேண்டும் என்றால் சரியன்று; ஏனெனில் கடவுள் பெயரால் பாபமும் தொடங்கும்; கடவுள் பெயரே மாசுறும். கடவுள் அருளாளன், மன்னிக்கும் தயாளன் ஆனால், மனிதர் மற்றுயிர்களைக் கொன்றுண்பதை அல்லது கொன்றதை உண்பதை அனுமதிக்கலாமா? மனிதன் மகிழப் பிறவுயிர்களைக் கொன்றுண்பது கொடூரம் அன்றோ? ஒரு பாபமும் அற்ற அந்த உயிர்களையும் கடவுளே படைத்தான் அன்றோ? "கடவுள் பெயரால் நல்வினை தொடர்வோம்; தீவினை அன்று" என்றே சொல்லியிருக்க வேண்டும். அதுவே தகவு. சோரம், ஜாரம், பொய்கள் போன்ற அதர்மச் செயலைக்கூடக் கடவுள் பெயராலே தொடங்க வேண்டுமா என்ன? இதனாலே தான் காசாயிக்காரரும், பிறமுஸ்லிம்களும் "பிஸ்மில்லா" போட்டு, கடவுள் பெயரால் பசுக்களையும் மற்றவுயிர்களையும் கழுத்தறுத்து வதைக்கின்றனர். இப்படியானால் அல்லா பெயரால் பொல்லாங்கும் புரியலாம் அல்லவா? உயிர்க் கருணையில்லாக் கடவுளை (குதாவை) நம்புவோருக்குக் கருணை ஏது? முஸல்மான்களுக்கு விளங்காத இந்த வாக்கை விளம்புதல் வீணே. இதற்கு அவர்கள் வேறு பொருள் செய்தால் உண்மைப் பொருள்தான் என்ன? (1)

2. எல்லாப் புகழும் அல்லாவுக்கே உரியது. அவன் அனைத்துலகங்களுக்கும் இறைவன் ஆவான். அவன் தயாளு, மன்னிப்பவன்.

(மன்ஜில் 1 : ஸிபாரா 1 : ஸூரதுல்ஃபதீஹா 1)

ஆய்வு: குரான்-கடவுள், உலகையெல்லாம் தாங்குவோன், தயாளு, குற்றத்தை மன்னிப்பவன் ஆனால் பிற மதத்தின

ரையும், பிராணிகளையும் முஸ்லிம்கள் வதைக்க அனுமதிப்பாரா? மன்னிப்பவரானல் மகாபாவிகளையும் பொறுப்பாரா? "காபிரிகளை கொல்" அதாவது குரானை நம்பாதவரை, நபியை ஏற்காதவரை வதைக்கச் சொன்னதேன்? ஆதலால் குரான் தெய்வ வாக்கில்லை எனக்காண்போம். (2)

3. தீர்ப்புநாளின் அதிபதியே, உன்னையே நாங்கள் வணங்குகிறோம். உன்னிடம் மட்டுமே நாங்கள் உதவிகேட்கிறோம். எங்களுக்கு நீ நேரான வழிகாட்டியருள்வாயாக! (ம. I. சி, 1 : சூ. 1 : V. 3, 4, 5.)

ஆய்வு: கடவுள் என்றும் நியாயம் கூறுவதில்லையா? ஏதோ குறித்த ஒரே நாள் தான் நியாயம் கூறுவாரா? என்ன இருள்மயம்! அவரை அன்பு செய்து, துணைவேண்டுவது சரியே. ஆனல் தீமைக்கும் அவர் துணைவேண்டுவதா? அது முஸ்லிம்களுக்கேயா, மற்றவருக்குமா? முஸல்மான்கள் ஏன் நேர்வழி பற்றக்கூடாது? அல்லது தீமைக்கே நேரான வழி பற்றுகின்றனரா? நல்லது எல்லாருக்கும் ஒன்றுனல், முஸ்லிம்களுக்கு மட்டும் அதைக் குறிப்பதேன்? பிறர் நலம் கருதாதார் ஓரவஞ்சரல்லவா? (3)

4. எவருக்கு நீ அருள்புரிந்தாயோ அவர்கள் சென்றவழி உனது கோபத்திற்கு ஆளாகாமல், நெறிதவறிப் போகாதவர்களின் வழி. (ம. I : சி. 1 : சூ. 1 : V. 6, 7.)

ஆய்வு: முஸ்லிம்கள் முற்பிறவியை நம்புவதில்லை; முற்பவத்திற் செய்த நன்மை தீமைகளையும் கருதுவதில்லை; எனில் இறைவன் சிலருக்குக் கருணையும் சிலருக்குக் கடுமையும் காட்டுவது ஓரகமன்றோ! அவரவர்செய்த புண்ய பாபங்களுக்கேற்றபடியே இன்ப துன்பங்களை விதிக்காவிட்டால், அது அநியாயமன்றோ? காரணமில்லாமல் ஒருவருக்குக் கனிவும், மற்றவருக்குச் சினமும் காட்டுவது இயற்கைக்கே விரோதமாகும். முன்வினை (நல்வினை தீவினை) யின்றி ஒருவர் பால் தயவும், இன்னொருவர் பால் குரோதமும் காட்டுவது பொருத்தமாகாது. இந்தச் சூருவிளக்கத்தில், "மனிதர் இந்தச் சூருவை இவ்வாறே வாயார வழுத்த வேண்டுமென்று இறைவனே நேரில் தன் வாயால் கற்பித்தார்" என்றிருக்கிறது. அப்படியானல் கடவுளே அகர முதல் எழுத்தையும் கற்பித்திருக்க வேண்டும். எழுத்தறிவில்லாமலே இந்தச்சூரு கற்பிக்கப்பட்டது என்றால், அதைப் படிப்பதெப்படி? அவரே வாயாலே சொல்லிப் பிறர் திருப்பிச் சொல்லச் செய்தாரா?

அவ்வாருனல், அவ்வாறே குரான் முழுதையும் அவரே கற்பித்திருக்கவேண்டும். இவ்வாறு முரணும் ஓரகமும் மூண்ட நூல் கடவுள் நூல் ஆகாதே. இந்நூல் அரபியிலேயே அருளியதாளுல், அம்மொழி தெரிந்த அரபியருக்கு எளிதாகும், அம்மொழி அறியாதாருக்குப் புரியாதே. இது கடவுள் ஓரகங் காட்டுவதாகுமே. கடவுள் எல்லா மாந்தருக்கும் தெளிவுற விளக்கிஞர் என்ருல் ஓரகமிராது. நமது வேதமோ சமுஸ்கிரதத்தில் அருளப் பெற்றது. அது மற்ற எல்லா மொழிகளினின்றும் வேறுபட்டது. இது எல்லாருக்கும் பொதுமொழி. எல்லாரும் முயன்று கற்றுக்கொள்ள வேண்டும். இதில் பாரபட்சமில்லை; எல்லாருக்கும் இது நலமாகும். (4)

5. இந்த நூல் ஐயந்திரிபற்றது; பக்தருக்குப் பாதை காட்டுவது; ஈமான் கொண்டு தொழுகையைக் கடைப்பிடிப்பவர், முன்னும் இன்றும் நாயகவாக்குகளில் நம்பிக்கைவைத்து நடப்பவர், உய்வு பெறுவர். நயம்பயம் இல்லாக் காப்பிர்கள் நன்னம்பிக்கை கொள்ளார். அவர்களுடைய இதயத்திலும், அவர்களுடைய செவிப் புலன்களிலும் அல்லாஹ் முத்திரை வைத்துவிட்டான். மேலும் அவர்களுடைய பார்வையின் மீதும் திரை விழுந்துவிட்டது. தவிர அவர்கள் கடுமையான வேதனைக்கு உள்ளாவார்கள். (ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 2, 3, 4, 5, 6, 7.)

ஆய்வு : இறைவன் தானே தனது நூலைப் புகழ்வது ஜம்பமடிப்பதல்லவா ? நல்ல அறவோர் இயல்பாகவே நல்வழி நடக்கிருர்கள். பொய்வழிச் செல்வோருக்கு நல்வழி காட்டித் திருத்தாத இக் குராஞற் பயனென்ன ? பாப புண்ய புருஷார்த்த மின்றியே, தனது கஜாஞவிலிருந்தே, இறைவன் அள்ளிவிடுகிருஞ என்ன ? அள்ளிக் கொடுப்பவன் எல்லோருக்கும் ஏன் அள்ளிக் கொடுக்கவில்லை ? அப்படியாளுல் முஸ்லீம்கள் ஏன் உழைக்கிருர்கள் ? முன்னெழுந்த பைபிள், இஞ்சில் வேதங்களையும் நம்ப வேண்டுமாஞல், முஸ்லீம்கள் குரானை மட்டுமே நம்புவானேன் ? பிற மறைகளையும் நம்பிஞல் குரானுக்கு அவசியமென்ன? அது மிகையல்லவா? குரானில் அதிக விஷயங்கள் உள்ளதென்ருல், கடவுள் முன்னூல்களில் அவற்றைச் சொல்ல மறந்தாரா ? அப்படி மறக்காவிட்டால் குரான் செய்தது வீண் அல்லவா ? மேலும் பல துறைகளில் பைபிளும் குரானும் ஒத்துப் போகின்றன. மிகச் சில இடங்களிலேதான் வேறுபடுகின்றன. வேதம் போல ஒரே நூலாக ஏன் இறைவன் செய்யவில்லை ? மீண்டு

யிர்ப்பிலேயே (கயாமத்) நம்பிக்கை வைக்கவேண்டுமா? மற்றவற்றை நம்பவேண்டாமா? கிறிஸ்துவரும் முஸ்லீம் களுமே அறவோரா? பிறரும் அல்லவா? அவருள்ளும் பாபிகள் இல்லையா? கிறிஸ்து—இஸ்லாம் பாபிகளுக்கும் உய்வுண்டா? மற்ற மதங்களில் உள்ள நல்லோருக்கு உய்வில்லையா? இது நியாயமா? இது ஓரவஞ்சனை யில்லையா? என்ன அஞ்ஞான இருள்? முஸ்லிம் அல்லா தாரை காபிர் என்றிகழ்வது அறிவா? அது அநியாய மல்லவா? கடவுளே அவர்கள் நெஞ்சிலும் காதிலும் முத்திரை போட்டுக் கண்ணிலும் திரை போட்டார் என்றால், பாபம் செய்வது அவர் குற்றமில்லை, அஃது கடவுளின் குற்ற மல்லவா? அதற்காக அவர்களைத் தண்டிப்பதேன்? ஏனெனில் அவர்கள் தாமே சுதந்திரமாக குற்றம் செய்யாத போது தண்டனை ஏது? கண்டனை ஏது? (5)

6. நம்பார் நெஞ்சில் ஒரு நோய் உள்ளது; அல்லாஹ் இந்நோயை அவர் களுக்கு இன்னும் அதிகப்படுத்திவிட்டான். (ம. 1 : சி. 1 : சூ. 2 : ஆ. 6.)

ஆய்வு : ஆஹா! ஒரு அபராதமும் இல்லாமல், அல்லா அவர்கள் நோயை அதிகமாக்கினுைம்! அல்லாவுக்கு இரக் கம் இல்லையா? எவ்வளவு துன்பம் அவர்களுக்கு? இது சைத்தானைவிடக் கொடிய சைத்தான் வேலை யல்லவா? சிலர் மனதில் முத்திரையாம்! சிலர் நோயை அதிகரிப்பதாம்! இது கடவுள் செயலாகுமா? நோய் வளர்வது பாபத்தால் அல்லவா? (6)

7. அவனே பூமியை உங்களுக்கு ஒரு விரிப்பாகவும், வானத்தை ஒரு முகடாகவும் ஆக்கினுன். (ம. 1 : சி. 1 : சூ. 2 : ஆ. 22.)

ஆய்வு : வானம் யாருக்காவது முகடாகுமா? ஆகயம் முகடு என்பது அறியாமை. உலகில் ஏதாவது பாகத்தில் வீட்டுக் கூரையைக் குறித்தால் பொருந்தும். (7)

8. நாம் நபிகளுக்கு இறக்கியுள்ள இவ்வேதத்தைப் பற்றிச் சந்தேகம் இருந்தால், இதைப்போன்ற ஒரு அத்தியாயத்தையேனும் (சூரத்) அமைத்துக் கொண்டுவாருங்கள். உங்களை ஆமோதிப்பவர்கள் அனைவரையும் உதவிக்கு அழைத்துக்கொள்ளுங்கள். அத்துடன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவர் உதவி யையும் பெற்றுக்கொள்ளுங்கள். உங்கள் உண்மையைப் பார்ப்போம். நிச்சயமாக உங்களால் ஒருபோதும் அவ்வாறு செய்யமுடியாது. காபிர்களுக்கென நரகநெருப்பு தயாராக உள்ளது; மனிதரும், கற்களும் அதன் எரிபொருள். அஞ்சுங்கள்.
(ம. 1 : சி. 1 : சூ. 2 : ஆ. 22, 23.)

ஆய்வு : பலே பலே ! இதைப்போல சூரத் (செய்யுள்) கோக்க முடியாதாம்! பாதுஷா அக்பர் காலத்தில் ஃபாய்ஃஜீ (Faizi) என்ற மௌல்வீ புள்ளியில்லாது ஒரு குரான் செய்ய வில்லையா ? நரக நெருப்பென்பது என்ன ? இந்த பயங்கர நெருப்புக்கு அஞ்சவேண்டாமா ? அதில் விழுவதெல்லாம் பஸ்மமே! காபிர்களுக்கு நரகம் என்று குரான் சொல்லுவது போலவே புராணங்களும் மிலேச்சர்களுக்கு கோர நரகம் என்கிறது. எது உண்மை என்று நீங்களே சொல்லுங்கள். ஒவ்வொரு மதமும் தன்னவருக்கு சுவர்க்கம், பின்னவருக்கு நரகம் என்கிறது. இந்த விவாதங்களெல்லாம் வெறும் குப்பை. நல்லவருக்கு இன்பம், பொல்லாதவருக்குத் துன்பம் என்பது எல்லா மதத்திற்கும் ஒத்ததாகும். (8)

9. நபியே இவ்வேதத்தில் நம்பிக்கைகொண்டு நலம்புரிவோருக்கு, ஒலித்தோடும் ஆறுகள் கொண்ட சுவனத்தோப்புகள் உண்டு எனும் நற்செய்தியைக் கூறுவீராக! அங்கே உண்ண இனிய கனிகள் உண்டு. உண்பவர் முன்னே நுகர்ந்தவைபோலும் என்று நினைப்பார். இன்னும் அவர்களுக்குத் தூய பீபிகள் (அழகிய பெண்கள்) எப்போதும் அங்கே தயார். (ம. 1 : சி. 1 : சூ. 2 : ஆ 24)

ஆய்வு : பலே, குரான்-சுவனம் உலகினும் மேல் ஆவதெப்படி ? ஏனெனில் உலகின் போக வஸ்துக்களே முஸ்லீம்-சுவர்க்கத்திலும் உள்ளன. உலகில் மக்கள் பிறந்து இறப்பர்—வந்து செல்வர் ; சுவனத்தில் அப்படியில்லை ; அதுவே வித்தியாசம். இங்கே மனைவியர் எப்போதும் உயிரோடிருப்பதில்லை. அங்கே புனித பீபிகள் என்றும் இருப்பர். தீர்ப்பு இரவு (கயாமத்) வரும்வரையில் அவர்கள் நாட்களை எப்படிக் கழிப்பார்களோ ? கடவுள் அருள் புரிந்தால், அவன் பாதுகாப்பில் அவர்கள் வாழ்ந்தால் சரி. முஸ்லீம்-சுவர்க்கம் கோகுல கோசாயிகளின் கோவிலும் கோலோகமும் போலக் காண்கிறது. அங்கும் பெண்களுக்கே சலுகை. இங்கும் ஆண்களைவிடப் பெண்களே தனிச் சலுகையை அனுபவிக்கின்றனர். கடவுளும் அந்த மனைவியரையே நிரந்தரமான சுவர்க்க வாசிகளாக்குகிறார் ; ஆண்களை யன்று. கடவுளின் இச்சையின்றி அந்த பீபிகள் சுவர்க்கத்தில் எப்படி இருக்கக் கூடும் ? அப்படியானால் கடவுளும் பெண்ணாசையிற் சிக்கியிருக்கவேண்டும். (9)

10. கடவுள் எல்லாப் பொருள்களின் பெயர்களையும் ஆதத்துக்குக் கற்றுக் கொடுத்தான். பிறகு அவற்றை அவ்வானவர் முன்பாக்கி, " நீங்கள் நினைத்தது

சரியாக இருப்பின். இவற்றின் பெயர்களைச் சற்று சொல்லுங்கள்" எனக் கூறினன். இறைவன் 'ஆதமே! நீ அவர்களுக்கு அவற்றின் பெயர்களை அறிவி' என்றார். ஆதாம் அப்படியே பெயர்களை அறிவித்தான் வானங்களிலும் பூமியிலும் உங்களுக்கு மறைந்திருக்கும் உண்மைகளை யெல்லாம் நிச்சயமாக நான் நன்கு அறிவேன். நீங்கள் அகமும் புறமும், மறைவாகவும், வெளியாகவும் செய்வதெல்லாம் நான் அறிவேன். (ம. : 1 சி. : 1 சூ. 2 : ஆ. V. 81, 3.)

ஆய்வு : வானோரை ஏமாற்றித் தற்புகழ்வது கடவுள் செய்யும் காரியமாயிருக்க முடியாதா? இது வீண் இடம்பம்; எந்த அறிஞரும் இதை ஏலார்; இப்படித் தற்பெருமை யாடார். இப்படிப் பேசியா கடவுள் தன் சித்தியைக் காட்டவேண்டும்! ஆம்! இது பண்பற்றவரை மயக்கும்; பண்டிதரை யன்று. (10)

11. பின்னர் "ஆதத்துக்குப் பணியுங்கள்" என்று நாம் கட்டளையிட்டோம். வானவர் பணிந்தனர்; இப்லீஸ் (சைத்தான்) மட்டும் பணியாது செருக்குற்றான்; ஏனெனில் அவனும் காபிரிதான். (ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 34)

ஆய்வு : அல்லா முற்றறிஞன் இல்லை என்பது இதனால் விளங்குகிறது. அவர் திரிகால ஞானியல்லர். சென்ற நின்ற தூன்றும் காலமறிந்தவரானால், சைத்தானைப் படைத்ததேன்! சைத்தான் அவரைப் பணிய மறுத்தான். கடவுள் அவனைத் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஒரு சைத்தான் காபிரி, கடவுளைத் திக்குமுக்காட வைத்தானே! முஸ்லிம்கள் கோடிக் கணக்கான காப்பிரிகள் இருப்பதாகச் சொல்லுகிறார்களே; அவர்களை அல்லா எப்படி அடக்குவாரோ? கடவுள் சிலருக்கு நோய் தரலாம், சிலரை மதி மயக்கலாம். ஆனால் இந்த வேலைகளைக் கடவுள் சைத்தானிடம், சைத்தான் கடவுளிடமே கற்றிருக்க வேண்டும். ஏனெனில் சைத்தானுக்கு வாத்தியார் கடவுளாகத்தான் இருக்கமுடியும்; மற்றெவரும் அல்ல! (11)

12. ஆதமே! நீரும் உம் மனைவியும் ஜன்னத்தில் (சுவர்க்கத்தில்) வசித்திருங்கள். நீங்கள் வேண்டியவற்றை விரும்பிய இடத்தில் உண்ணுங்கள். ஆனால் இம் மரத்தைமட்டும் நெருங்காதீர்கள். நெருங்கினால் பாவிகளாவீர் என்று கூறினோம். ஆனால் சைத்தான் அம்மரத்தின் மீது ஆசைகாட்டி, அவ்விருவரும் நமது கட்டளையை மீறச் செய்தான். அவர்கள் விண்ணின்பத்தை இழந்தார்கள். "நீங்கள் இங்கிருந்து இறங்கிவிடுங்கள். நீங்கள் ஒருவருக்கொருவர் பகைவர்கள். இனிச் சிலகாலம் நீங்கள் பூமியில் தங்கி அங்கேயே வாழ்க்கையை நடத்துங்கள்." என்று உத்தரவிட்டோம். ஆதம் இறைவனிடமிருந்து சில வாக்குகளைக் கற்றுக் கொண்டு பூமிக்கு வந்தான். (ம. : 1 : சி. 1 : சூ. 2 : V. 35, 36, 37.)

ஆய்வு : கடவுளின் குறுகிய அறிவைக் காணீர் ! முதலில் ஆதாம் ஈடனில் வசிக்கச் செய்தார். பிறகு அதை விட்டுப் போகச் சொன்னர். வருங்காலத்தை அறியாது வரங் கொடுத்ததேன் ? துரோகி சைத்தானைத் தண்டிக்க அவரால் முடியவில்லையே ! அந்த மரத்தை அவர் யாருக்காக உண் டாக்கினர் ? தனக்கா, பிறருக்கா ? பிறருக்கு என்றால் தடை விதிப்பதேன் ? ஆதலால் இத்தகைய நடத்தை தெய் வீகமாகாது, அருள் நூல்களுக்கும் தகாது. மேலும் ஆதாம் சாகெபு இறைவனிடம் என்ன கற்றார் ? அவர் உலகிற்கு எப்படி இறங்கினர் ? அந்த சுவர்க்கம் இருப்பது மலை மேலா ? வானிலா ? அங்கிருந்து ஆதாம் சாகெபு பட்சி போலப் பறந்து வந்தாரா ? கல்லைப்போல் விழுந்தாரா, குதித்தாரா ? ஆதாம் சாகெபு மண்ணால் செய்யப்பட்டா ராமே ; அப்போது சுவர்க்கத்திலும் மண் இருக்கவேண்டும். அங்கிருக்கும் விண்ணவரும் மண்ணுருவாக வேண்டும். தேகமில்லாது போகமில்லை. சரீரம் இருப்பவருக்குச் சாவும் உண்டு. செத்தால் எங்கே செல்வார் ? இறவாதவரானல் பிறவாதவராக வேண்டும். பிறந்தவர் இறந்துபோவது இயற்கை. இது தடுக்க முடியாதது. இறப்பு இன்றியமை யாதது ; அப்படியானல் சுவர்க்க பீபிகள் எப்போதும் தயா ராயிருப்பர் என்பது பொய்யாகும். அவர்களும் இறக்கவே வேண்டும். சுவர்க்கம் புகுவோரும் சாவைத் தப்ப முடியாது. (12)

13. இன்னும் ஒரு நாளைக் குறித்து நீங்கள் பயந்துகொள்ளுங்கள். அந் நாளில் எவரும் எதையும் மற்றேர்க்குக் கொடுத்துதவ முடியாது. எவரிடமிருந்து, எந்த வித சிபார்சும்—பரிந்துரையும் ஏற்றுக்கொள்ளப் படமாட்டாது. எவ்விதமான மீட்புப் பணமும் பெற்றுக்கொண்டு விடுதலை செய்யப் படமாட்டாது.

(ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 43)

ஆய்வு : என்ன இன்றும் அஞ்சுவதில்லையா ? தீமை செய்ய எந்நாளும் அஞ்சவேண்டியதே. சிபார்சு செல்லாது என்றால், நபி சொன்னல் கடவுள் சுவர்க்க மளிப்பார் என்பது எப்படி மெய்யாகும் ? கடவுள் வானகத்தாருக்கே துணை செய்வதா அல்லது நரகத்திலிருப்பவருக்கும் துணை செய் வாரா ? அப்படியானல் அவர் ஓரகங் கொண்டவரே. (13)

14. நாம் மூஸாவுக்கு வேதத்தையும் அற்புதங்களையும் அருளினேம்.

ஆய்வு : மூஸாவுக்கு முன்பே நூல் அருளினால் பிற்காலம் குரானுக்குப் பயன் இல்லையே. குரானிலும் பைபிளிலும் இறைவன் மூஸாவுக்கு அற்புத சக்தி யருளினான் என்பது பொருந்தாது. அப்படி அப்போது நடந்திருந்தால் இப்போதும் நடக்கவேண்டுமே. இப்போது நடவாதது அப்போது எப்படி நடந்திருக்கும் ? படியாதார் முன் சுயநலமிகள் படித்தவர்போல நடத்தலைப்போல், ஏதோ மோசடி நடந்திருக்கவேண்டும். இன்றும் கடவுளுண்டு, அவன் அடியார் உண்டு. எனில் விதியின் சக்திகளைக் காணேமே. மூஸாவுக்கு நூல் அருளிய பிறகு மீண்டும் குரான் தரும் அவசியம் என்ன ? இன்னது செய்க, இன்னது செய்யற்க என்று மீண்டும் மீண்டும் சொல்லவேண்டுமா ? அது கூறியதே கூறும் குற்றமன்றோ ? கடவுள் மூசைக்கீந்த நூலில் ஏதாவது மறந்தாரோ ? அதை மற்றொரு நூலில் சுரந்தாரோ ? (14)

15. "மன்னித்தருளும்" என்று வேண்டுக; உமது பாபங்களையும், மிதும் நலம்புரிவோர் பாபங்களையும் நாம் மன்னிக்கிறோம். (ம. 1 : சி. 2 : சூ. 2 : V. 58)

ஆய்வு : கடவுளின் இந்த உபதேசம் எல்லாரையும் பாபிகளாகத் தூண்டவில்லையா ? ஏனெனில் "மன்னிப்பு" என்றதும் பாபம் போவதானால், நற்செயல் யாரே புரிவர் ? பாபம் செய்ய யாரும் பயப்பட மாட்டார். இப்படிச் சொல்லுகிறவர் கடவுளில்லை. அவர் நூலும் கடவுள் வாக்கில்லை. கடவுள் நியாயவான். மன்னிப்பு என்பதால் பாபம் போவதானால் அது அநியாயமாகும். பாபத்தை அனுபவித்தே தீர வேண்டும். (15)

16. மக்களுக்குத் தண்ணீர் வேண்டும் என்றான் மூஸா ; "உனது தடியால் இந்தப் பாறையில் குத்து" என்றோம். உடனே பன்னிரண்டு ஓடைகள் பொங்கி வந்தன. (ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 60)

ஆய்வு : பொருந்தாத பேச்சு ! இப்படி யார் பேசுவார் ? ஒரு தடியைப் பாறையில் குத்தினால் பன்னிரண்டு ஊற்றுகள் பொங்கி வருமா ? பாறையில் குழி யெடுத்து நீர் நிரப்பி, பன்னிரண்டு ஓட்டை பண்ணினால் ஒருவேளை தண்ணீர் பொசியலாம். வேறு வகையில்லை. (16)

17. 'நியமத்தை முறித்த நீங்கள் குரங்குகளாய்விடுங்கள்' என்று கூறினோம். அக்காலத்தவருக்கும் பிற்காலத்தவருக்கும் ஓர் எச்சரிக்கையாகவே, பயபக்தருக்கு நல்லுபதேசமாகவே அருளினோம். (ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 53, 65, 66.)

ஆய்வு : குரங்குகளாகச் சபிப்பது வெறும் மிரட்டலா, பொய்யா, வஞ்சமா ? இப்படிப் பிதற்றுவோன் கடவுளா ? அவனது நூல் அருள் வாக்கா ? (17)

18. இப்படி அல்லாஹ் மரித்தவர்களை உயிர்ப்பிக்கிறன்; இன்னும் நீங்கள் உய்த்துணர்வதற்காக தன்னுடைய அத்தாட்சிகளை அவன் உங்களுக்குக் காண்பிக்கிறன். (ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 73)

ஆய்வு : அன்று கடவுள் மரித்தவர்களை உயிர்ப்பித்தாலும்; இன்றும் ஏன் அப்படிச் செய்ய முடியவில்லை? கயாமத் (தீர்ப்புநாள்) இரவுமட்டும் அவர்கள் புதை குழியிலே கிடப்பார்களோ ? இப்போது அவர்களைப் பூட்டி வைத்திருக்கிறரா ? இத்தனையும் கடவுளின் அத்தாட்சிகளா ? இவ்வுலகம், சூரிய சந்திராதிகள் அத்தாட்சிகள் ஆகவா ? உலகில் உயிர் வகைகள் உலப்பிலவே ; கடவுளின் அத்தாட்சி அத்தனை போதாவா ? (18)

19. ஈமான் கொண்டவர்கள் என்றென்றும் சுவர்க்கத்தில் தங்கிவிடுவார்கள். (ம. 1 : சி. 1 : சூ. 2 : ஆ. 82)

ஆய்வு : எந்த ஜீவனும் எல்லையற்ற பாபம் செய்யமுடியாது, எல்லையற்ற காலம் சுவர்க்க நரக வாசியா யிருக்கவும் முடியாது. அது அநியாயம் ; அப்படிச் செய்யும் கடவுள் நியாயவானுக முடியாது. மனிதரின் பாப புண்ணியத்திற் கேற்ற தீர்ப்பே நியாயம். வினைக்கேற்ற தீர்ப்பே பொருந்தும். அஃதின்றி எல்லாரையும் தீர்ப் பிரவு மட்டும் அடைத்துப் போடுதல் அறிவாகுமா ? உலகமே ஏழு அல்லது எட்டாயிரம் ஆண்டுகளாக உயிர்க்கிறது என்பர். இதற்கு முன் கடவுள் சும்மா உட்கார்ந்திருந்தாரா ? கயாமத்தின் பிறகும் சும்மா அமர்வாரா ? இதெல்லாம் பிள்ளைப் பேச்சு; கடவுளின் செயல் என்றும் நிகழ்வது. அவர் ஆன்மாவின் வினைக்கேற்ற பலனைத் தருகிறர். ஆதலால் குரானின் இக் கூற்று சரியன்று. (19)

20. உங்களிடையே நீங்கள் இரத்தம் சிந்தாதீர்கள். உங்கள் வீடுகளிலிருந்து ஒருவரை யொருவர் வெளியேற்றதீர்கள் என்று உங்களிடம் வாக்குறுதி வாங்கினேம் ; உங்கள் சம்மதிக்கு நீங்களே சாட்சி. அப்படியிருந்தும், உங்கள் சொந்த சகோதரர்களையே நீங்கள் கொலை செய்கிறீர்கள் ; அவர்களை வீடுகளிலிருந்து விரட்டுகிறீர்கள். (ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 84, 85.)

ஆய்வு : பலே ! வாக்குறுதி தருவதும் பெறுவதும் சிற்றறிஞர் செயல் ! தெய்வத்தின் செயலன்று ! முற்றறி கடவுள் சிற்றறி

மனிதர் போல, சாதாரண உலகினர்போல நடக்கிறாரே! மாந்தர் தம்முள் இரத்தம் வடித்தலும், தம்மவரை வீடுகளிலிருந்து துரத்தலும் இருக்கட்டும், பிற மதத்தினரைக் கொன்று இரத்தம் வடித்தலும், அவர்களை வீட்டை விட்டுத் துரத்தலும் மதவெறி மடமை! கொடுமை! அவர்கள் இப்படி நடப்பார்கள் என்பதைக் கடவுள் அறியாரோ? குரான் கடவுளும் கிறிஸ்து கடவுள் போலத்தான்! சில இடங்கள் தவிரக் குரானும் பைபிள்போன்ற நூலே! (20)

21. மறுமை வாழ்வை விற்று இம்மை வாழ்வைக் கொள்வினை செய்துகொண்டவர்கள் இவர்களே. ஆகவே அவர்களுடைய தண்டனை குறைக்கப்படமாட்டாது. அவர்களுக்கு எவ்வுதவியும் கிடையாது. (ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 86)

ஆய்வு : இம்மாதிரிக் கடும் பகைப் பொறாமை சொற்கள் கடவுளுக்கு ஆகுமா? பாபம் குறைத்தல், உதவி செய்தல்—யாருக்கு? பாவிகளைத் தண்டிக்காமல் பரிவு காட்டல் நியாயமன்று. இரக்கத்துடன் குற்றத்திற் கேற்ற தண்டனையும் தருவது தகவே. தண்டனைக்குப் பிறகு இரக்கம் காட்டலாம். உத்தமர் உத்தமர் செய்யும் பாபவினை எளிதில் விலகும். உத்தமர் மகிழவேண்டும்; பாவிகள் தீவினைக் கேற்ப அநுபவிக்க வேண்டும். (21)

22. மேலும் நிச்சயமாக மூசாவுக்கு வேதத்தை அருளினோம். அவருக்குப் பின் தொடர்ச்சியாக நபிமார்களையும் அனுப்பினோம். மர்யத்தினுடைய மகன் ஈசாவுக்குத் தெளிவாக அத்தாட்சிகளையும் ஆச்சரியங்களையும் கொடுத்தனுப்பினோம். புனிதான்மாவினால் (Holy Ghost) அவருக்கு வலுவூட்டினோம். எந்த ஒரு தூதரும் உங்களுடைய விருப்பத்திற்கு இணக்கமில்லாத ஒன்றைக் கொண்டு வரும்போதெல்லாம் நீங்கள் ஆணவங்கொண்டு புறக்கணிக்கவில்லையா. சிலரை நீங்கள் மறுத்தீர்கள்—சிலரை ஒறுத்தீர்கள். (ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 87)

ஆய்வு : மூஸாவுக்கு நூல் கொடுத்ததைக் குரான் ஒப்புகிறது. அப்படியானால் முஸ்லிம்கள் அந்த நூலை நம்புவது கடமை. அதிலிருக்கும் குற்றங்களும் இஸ்லாமுக்குரியதே. ஆச்சரியங்கள் அப்பாவிகளை மயக்கும் பொய் வேலை. அறிவுக்கும் இயற்கைக்கும் புறம்பானதெல்லாம் கட்டுக் கதை. அந்தக் காலம் நிகழ்ந்த அற்புதம் இந்தக் காலம் நிகழ்வதற்கென்ன? இப்போது இல்லை என்றால் அப்போதும் இல்லைதான். இதில் சிறிது சந்தேகமில்லை. (22)

23. அவர்கள் நிராகரிப்போர் மீது வெற்றியளிக்கும்படி பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார்கள். அது வந்ததற்ந்தும் அவர்கள் நம்பாதவரானுர். நம்பாது நிராகரிப்பவர்மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாவதாக; (ம. 1 : சி. 1 : சூ. 2: V. 89)

ஆய்வு : மற்ற மதத்தினரை (நம்பாதாரை) காப்பிரிகள் என்பது போல உங்களையும் பிற மதத்தார் காப்பிரிகள் என்னுரா? அதேமாதிரி ஆண்டவன் சாபத்தை உங்கள்மேல் ஏவாரா? எது உண்மை எது பொய்? ஆராய்ந்து பார்த்தால், எல்லா மதங்களிலும் பொய் கலந்துள்ளது. உண்மை எல்லா மதங்களுக்கும் பொதுவே. இந்தச் சண்டையெல்லாம் முரட்டு மடமையால் வருவன. (23)

24. ஈமான் கொண்டவருக்கே இன்பக் குரான்......அல்லாஹ்வுக்கும், மலக்குகளுக்கும் (வானவர்) அவனது தூதருக்கும், ஜிப்ரீலுக்கும், மீகாயீலுக்கும் பகைவனுயிருப்பவருக்கு அல்லாஹ் பகைவனுயிருக்கிறுன். (ம. 1: சி. 1: சூ. 2 : V. 97, 98.)

ஆய்வு : அல்லாஹ் தனி முதல் என்பர் முஸல்மானுர். அவருடன் இத்தனை வானவரைச் சேர்த்து மதிப்பதேன்? வேறு பகைவர் அல்லாவின் பகைவருங் கூடவா? இது பொருந்தாது; ஏனெனில் இறைவன் யாரையும் பகைப்பதில்லை. (24)

25. அல்லாஹ் தனி முதல்வன்; அவர் கருணை அவர் விரும்பினவருக்கே வரும். (ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 105)

ஆய்வு : கருணைக்குப் பாத்திரமில்லாதவருக்குக் கூட அவர் கருணை வருமோ? அப்படியானுல் கடவுள் ஆராய்ச்சியில்லாதவராகிறுர். பிறகு யார் நல்லது செய்வார்? பொல்லதை நீப்பார்? நல்லது பொல்லதின் பலன் கடவுள் விருப்பமாவதால் செயலுக்கு மதிப்பில்லை. இது கர்ம பலனையே ஒழித்து விடுமே. (25)

26. நம்பாத காப்பிரிகள் உங்கள் நம்பிக்கையைக் கெடுக்கப் பார்ப்பார்கள். ஏனெனில் அவர்களிடையே ஈமான் கொண்டவருக்கு நண்பரும் இருக்கிறுர்கள். (ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 109)

ஆய்வு : பாருங்கள்! கடவுளே "உங்கள் நம்பிக்கையைக் காப்பிரிகள் அசைக்காமல் கவனம்" என்கிறுர். முற்றறிஞரானுல் இப்படிப் பேசுவாரா? (26)

27. நீவிர் எங்கே முகத்தைத் திருப்பினுலும் அந்தத் திசையில் அல்லாஹ் இருக்கிறுன். அல்லாஹ் விசாலமானவன். (ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 115)

ஆய்வு: இது உண்மையானால் முஸ்லீம்கள் கிப்லேயை (மெக்கா) நோக்கியே முகம் திருப்புவானேன்? கிப்லாவை நோக்கித் தொழ ஆணை யுள்ளது என்றால் இங்கே எங்கும் முகம் வைத்துத் தொழ ஆணை யுள்ளதே! அது மெய், இது பொய்யா? கடவுளுக்கு முகம் உண்டா! இருந்தால் எல்லாப் பக்கமும் திரும்பி யிராதே; ஒரே திசையில் தான் முகம் திரும்பி இருக்கும். எல்லாப் பக்கமும் இராது. (27)

28. வானமும் பூமியும் படைத்தவன் அவனே. அவன் எதனையும் உண்டாக்க நாடினால், "ஆகுக" என்று கூறுகிறான். அது உடனே ஆகிவிடுகிறது. (ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 117)

ஆய்வு: அல்லாஹ் "ஆகுக" என்பதை யார் கேட்டார்? யாருக்கு உரைக்கப்பட்டது? என்ன நடந்தது? எதற்காக? எப்படி? எதனால் நடந்தது? எது எந்தப் பொருளாக மாறியது? படைப்பிற்கு முன்னே அல்லாஹ் ஒருவரே இருந்தால் வேறு யாரும் இல்லை என்றால், உலகம் எப்படி வந்தது? காரணம் இன்றிக் காரியம் ஆமா? ஆதி காரணமின்றி இந்தப் பேருலகம் உண்டானதா? எங்கிருந்து? சிறு பிள்ளைத்தனமாகப் பேசுவது வெறும் பிதற்றலே.

கேள்வி: இல்லை இல்லை, உலகம் இறைவன் இச்சையிலிருந்து உண்டானது.

பதில்: என்ன உன் இச்சையால் ஒரு ஈயின் காலாவது உண்டாகுமா? அகண்ட வுலகெல்லாம் கடவுள் இச்சையால் எப்படி உண்டாகும்?

கேள்வி: கடவுள் சர்வசக்திமான்; எல்லாம் வல்லவர்; அவர் நினைத்ததைச் செய்வார்.

பதில்: சர்வ சக்திமான் என்றால் என்ன பொருள்?

கேள்வி: நினைத்ததைச் செய்யும் வல்லமை.

பதில்: அப்படியானால் கடவுள் இன்னொரு கடவுளைப் படைப்பாரா? கடவுள் தாமே சாவாரா? கடவுள் முட்டாள், நோயாளி, மடயரா யிருப்பாரா?

கேள்வி: ஒருக்காலும் மாட்டார்.

பதில்: அதனால் கடவுள் பிறர் குண கர்ம சுபாவத்திற்கு எதிராக எதையும் செய்யமாட்டார். உலகில் எதை ஆக்கவும் இம் மூன்றும் அவசியமாகும்: (1) ஆக்குவோன் (உதார

ணம் குயவன்) (2) அமை பொருள் (குடம் அமைக்கக் களி மண்) (3) அமை கருவி (தண்ட சக்கரம்). மண்ணைச் சக்கரத்தில் சுழற்றிக் குயவன் பானை வனைகிறான். இந்த மூன்றும் இருந்தாலே பானை வரும். அதுபோலவே சிருஷ்டிக்கு முன்னரே பிரகிருதி (இயற்கை), அதன் குணங்கள் எல்லாமே வேண்டும். குணகர்ம சுபாவங்கள் அனாதி; ஆதலால் குரான் கூறுவது நடவாது! (28)

29. நாம் (கஃபத்துல்லாஹ் எனும்) காபாவை அமைதியின்பம் நிலவும் புனித நிலையமாக்கினோம். இப்ராஹிம் வணக்கத்துக்காக நின்ற இடத்தை நீங்கள் நிரந்தரமாகத் தொழும் இடமாக வைத்துக்கொள்ளுங்கள். (ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 125)

**ஆய்வு :** காபாவுக்கு முன்னால் கடவுள் எந்தப் புனித இடத்தையும் ஆக்கவில்லையா? அப்படி ஆக்கியிருந்தால் காபாவுக்கு அவசியமில்லையே. அப்படியானால் முன்னே தொழுதவருக்கெல்லாம் புனித இடம் இல்லையா? புனித இடம் ஒன்று முன்பே அமைக்கக் கடவுளுக்குத் தோன்றவில்லையா? (29)

30. தன்னைத்தானே மூடனாக்கிக் கொண்டவனைத் தவிர, இப்ராஹீமுடைய வழியை இப்பொழுது எவன் புறக்கணிப்பான்? நிச்சயமாக நாம் இப்ராஹீமை இவ்வுலகில் நமது பணிக்காகவே தேர்ந்தெடுத்தோம். இன்னும் நிச்சயமாக மறு உலகிலும் அவர் நல்லோரைச் சேர்ந்தவராகவே யிருப்பார்.
(ம. 1 : சி. 1 : சூ. 2 : V. 130)

**ஆய்வு :** இப்ராஹாமின் மதத்தைச் சேராதவரெல்லாம் முட்டாள்களா? இப்ரஹாமை மட்டும் கடவுள் நேர் செய்வானேன்? அவனையே தேர்வானேன்? அவர் தர்மாத்மா என்றால் மற்றும் பலர் தர்மாத்மாக்களாக இருக்கிறார்களே. தர்மாத்மா ஆகாத துராத்மாவைத் தேர்ந்தால் அது அநியாயமாகும். தர்மாத்மாக்களே கடவுளுக்குப் பிரியமானவர், மற்றவர் இல்லை என்பது சரியான பேச்சு. (30)

31. நபியே, உமது முகம் அடிக்கடி வானத்தை நோக்குவதை நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். இதோ நீர் எந்த கிப்லாவை விரும்புகிறீரோ, நிச்சயமாக அதன் பக்கமே நாம் உம்மைத் திருப்பிவிடுகிறோம். (ம. 1 : சி. 2 : சூ. 2 : V. 144)

**ஆய்வு :** இது சிறிய உருத் தொழுகையா என்ன? மிகப் பெரிதே!

**கேள்வி :** நாங்கள் முஸல்மான்கள்; உரு வணக்கம் செய்யோம். நாங்கள் விக்கிரகங்களை உடைப்பவர்கள். நாங்கள் கிப்லாவைக் கடவுளென மதிப்பதில்லை.

பதில் : நீங்கள் உரு வணங்கிகள் என்பவரும் உருக்களைக் கடவுள் என்பதில்லை. உருக்கள் முன் அருவான கடவுளையே வணங்குகின்றனர். நீங்கள் உரு வுடைப்பவரானால் அந்தப் பெரிய உருவான கிப்லாவை உடைப்பதற்கென்ன ?

கேள்வி : ஏன் ? கிப்லாவை நோக்கித் தொழுதல் குரானின் ஆணை. வேதத்தில் அவ்வாறில்லை. எனில் நாம் எப்படி உரு வணங்கிகள் ஆவோம் ? கடவுள் ஆணையை நாங்கள் கடைப்பிடிக்க வேண்டும்.

பதில் : உங்களுக்குக் குரான் கட்டளை போல அவர்களுக்குப் புராணக் கட்டளை யுள்ளது. நீங்கள் குரானைக் கடவுள் மொழி என்பீர். அவர்கள் புராணங்களை வியாசர் வாக்கு என்பர். வியாசர் கடவுள் அவதாரம் என்பர். உரு வணக்கத்தில் உங்களுக்கும் அவர்களுக்கும் வேறுபாடில்லை. அவர் தம்பி ; நீர் அண்ணை. பூனையைத் துரத்தி ஒட்டகத்தை வீட்டுக்குள் விட்டதுபோல, முகம்மது சிறிய உருக்களை ஒழித்து, மலைபோன்ற மெக்கா மசூதியை முஸ்லீம்களின் வணக்கத்தில் இணைத்தார். இதென்ன சாமானிய உரு வணக்கமா ? எங்களைப் போல நீங்களும் வேதவழி நின்றால் உருத் தொழுகையிலிருந்து விடுதலை பெறலாம். அந்தப் பெரிய உருவை விடுமட்டும் நீங்கள் உரு வணங்கிகளே. நீங்கள் மற்ற உரு வணங்கிகளை நிந்திப்பது பொருந்தாது. உரு வணக்கத்திலிருந்து முற்றும் விடுபட்டுத் தூயராக வேண்டும். (31)

32. இன்னும் அல்லாஹ்வின் பாதையில் கொல்லப்பட்டவர்களை இறந்தவர்கள் எனக் கூறுதீர்கள். மாறாக அத்தகையோர் உண்மையில் உயிரோடிருக்கிறார்கள்.
(ம. 1 : சி. 2 : V. 154)

ஆய்வு : கடவுள் வழியில் கொல்லவும் இறக்கவும் அவசியம் என்ன ? இதெல்லாம் சுயநல சூழ்ச்சி என்று ஒப்புக்கொள்வதற்கென்ன ? இப்படி ஆசைக் காட்டினால் அவர்கள் படு போர் புரிவர் ; நீங்கள் வெற்றி முழங்குவீர்கள் ; அவர்கள் சாவுக்கு அஞ்சார். கொள்ளை யடித்தால் அதிகாரமும் போக சுகமும் பெறலாம் என்பதே அவர்கள் ஆசை. சுயநலத் தூண்டுதலே இத் தவறான செயல்களுக்குக் காரணமாகும். (32)

33. அல்லா கடுமையான தண்டனை கொடுப்பவன். மனிதர்களே சைத்தானுடைய அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள். அவன் உங்களுடைய பகிரங்க விரோதியாவான். நிச்சயமாக அவன் பாபத்தையும், இழிவான செயல்களையும் செய்யவே உங்களை ஏவுகிறான். இன்னும் உங்களுக்குத் தெரியாதவற்றையெல்லாம் அல்லாஹ்வின் மீது ஏற்றிச் சொல்லுமாறு அவன் உங்களுக்குப் போதிக்கிறான்.

(ம. 1 : சி. 2 : சூ. 2 : V. 165, 168, 169.)

ஆய்வு : கடவுள் தயாளு; அவர் கடுந் துன்பந் தருவது பாபிகளுக்கா? அல்லது முஸல்மான் அல்லாதவர்களுக்கு மட்டுமா? அவர் தயவு முஸல்மான்களுக்கு மட்டுந்தானா? அப்படியானால் அவர் கடவுளாயிருக்க முடியாது. கடவுள் பாரபக்ஷமில்லாதவர். அவர் தர்மவானுக்குத் தயாளு, அதர்மியைத் தண்டிப்பவர் ஆனால், முகம்மது சாகேபு அல்லது குரானின் இடையீடு தேவையே யில்லை. சைத்தான் மனித சத்துரு. எல்லாரையும் தீவழி உய்ப்பவன் என்றால் அவனைக் கடவுள் ஏன் படைத்தார்? அவர் எதிர்காலம் அறியாதவரா? தெரியும்; ஆனால் பரீக்ஷார்த்தமாகவே படைத்தார் எனினும் பொருந்தாது; ஏனெனில் பரீட்சை சிற்றறிஞர் வேலை. முற்றறிவனான இறைவன் ஜீவன்களின் நல்வினை தீவினைகளை நன்றாக அறிவார். சைத்தான் எல்லாரையும் ஏமாற்றுகிறான்; சைத்தானை யார் ஏமாற்றுகிறார்? அவன் தானே ஏமாறுகிறான் என்றால் மற்றவரும் தாமே வழி தவறி நடக்கலாமே. இடையே சைத்தான் எதற்கு? கடவுளே சைத்தானைத் தீநெறி யுய்க்கிறார் என்றால் கடவுள் சைத்தானைவிடப் பெரிய சைத்தானாயிருக்க வேண்டும். கடவுளைப் பற்றி அப்படிச் சொல்ல முடியாது. தீநட்பு, அறியாமை ஆகியவற்றாலேதான் ஒருவன் வழிதவறி நடக்கிறான். (33)

34. முஃமின்களே நீங்கள் செத்ததும், பன்றியின் மாமிசமும், அல்லாஹ் அல்லாதவர் பெயர் சொல்லி அறுக்கப்பட்டவையும் விலக்கவேண்டும். இவை ஹராம்.

(ம. 1 : சி. 2 : சூ. 2 : V. 165, 168, 169.)

ஆய்வு : சிறிது ஆலோசித்துப் பாருங்கள். கொல்லப்பட்டாலும் அல்லது தானாக இறந்தாலும் எல்லாம் ஒரே பிணமே. வேற்றுமை இருக்கலாம்; எனினும் செத்தது செத்த பிணமே. இதில் பேதமில்லை. பன்றிக் கறி உதவாது என்றால் மனித மாமிசம் உண்ணலாமா? கடவுள் பெயரால் பிற பகைவரையும் வருத்திக் கொல்லலாமோ? இது நற்செயலாகுமோ? இது கடவுள் பெயருக்கு இழிவாகும். முன்னே தீங்கு

செய்யாத உயிர்களை முஸ்லிம்கள் வதைத்துக் கொல்லச் செய்ததேன்? அவைகள் மீது அவன் கருணைப் பார்வை விழவில்லையா? அவையும் தன் மக்களெனக் கருதவில்லையா? மக்களுக்கு மிகப் பயனுள்ள பசுக்களை வதைப்பதேன்? கடவுள் இப் படுகொலையைத் தூண்டுவாரா? கொலைப் பாபம் கடவுளைப் பற்றும் அல்லவா? இதெல்லாம் கடவுட் செயலே இல்லை; இப்படிப் பேசும் நூலும் தெய்வ நூல் ஆகாது. (34)

35. நோம்புக்கால இரவில், நீங்கள் உங்கள் மனைவியருடன் கூடுவது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது. அவர்கள் உங்களுக்கு ஆடையாகவும் (பர்தா), நீங்கள் அவர்களுக்கு அடையாகவும் இருக்கிறீர்கள். நீங்கள் இரகசியமாக தம்மைத் தாமே வஞ்சனை செய்து கொண்டிருக்கிறீர்கள் (வ்பசாரம் செய்கிறீர்கள்) என்பதை அல்லாஹ் அறிந்து, உங்கள்மீது இரக்கங்கொண்டு உங்களுக்கு மன்னிப்பு அளித்துவிட்டான். இனி நீங்கள் அவர்களுடன் கூடி சுகானுபவங்களைத் தேடிக் கொள்ளலாம் (கர்பதானம் செய்யலாம்). இன்னும் விடியற்காலை வெள்ளை நூலையும் கறுப்பு நூலையும் பிரித்தறிய முடியும் வரையில் நீங்கள் உண்ணுங்கள், குடியுங்கள், (ம. 1 : சி. 2 : சூ. 2 : V. 187)

ஆய்வு : இஸ்லாம் உண்டானபோதோ அதன் முன்பே, இந்து புராணம் சொல்லும் ஒரு மாத சாந்திராயண விரதம் (பிறை நோன்பு) ஏதோ ஒரு பௌராணிகரால் முஸ்லீம்கள் கேட்டு அறிந்திருக்கவேண்டும். வளர் பிறை தேய்பிறைக் கேற்றபடி பிறை பார்த்து உணவைப் பெருக்கியோ, சுருக்கியோ, கொள்ளுதல் முறை. அதையே முஸ்லீம்கள் முறை தவறி அனுஷ்டிக்கலானூர் போலும்! ஆகவே பிறை பார்த்தே உண்ணுதல் முஸ்லிம்களுக்கும் வழக்கமானது. ஆனால் சாந்திராயண விரதத்தில் பெண் சேர்க்கை கூடாது. குரான் இறைவன் "மனம்போல் உங்கள் மனைவியருடன் கூடலாம், பலமுறை சாப்பிடலாம்" என்று சொல்லிவிட்டார். இராத்திரி நன்ருகச் சாப்பிட்டுச் சிற்றின்பம் துய்த்தல் என்ன விரதமோ? அல்லாவின் ஆணை அப்படி? பகலில் பட்டினி, இரவில் பக்கா விருந்து என்பது இயற்கைக்கே விரோதமானதே! (35)

36. உங்களைச் சண்டைக்கிழுப்போருடன், நீங்களும் அல்லாஹ்வின் பாதையில் போர் புரியுங்கள். சிக்கின இடங்களிலெல்லாம் அவர்களைக் கொல்லுங்கள், கொலையினும் கொடிது ஃபித்னு (கொடிய கொல்லை). தொல்லை யொழிந்து, தீன் அல்லாவினுடைய மதம் ஓங்கு மட்டும் போராடுங்கள். உங்கள்மீது எவரேனும் கை ஓங்கினல்,

அவ்வாறே நீங்களும் அவர் மீது கை ஓங்குங்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சி அடிபணிந்து வ ழுங்கள். (ம. 1 : சி. 2 : சூ. 2 : V. 190, 191, 193, 194.)

ஆய்வு : குரானில் இப்படிக் கொடுங் கட்டளை யிடாவிட்டால், பிற மதத்தினருக்கு முஸ்லீம்கள் இவ்வளவு கொடுமை செய்திருக்க மாட்டார்கள். நிரபராதிகளைக் கொன்ற பாபம் அவர் மேல் சுமந்துள்ளது. முஸ்லிம் மதத்தை ஏலாதவரை காபிரிகள் என்கின்றனர். தமது மதத்தை நம்பாதவரைக் கொலை செய்வதே மேலெனக் கருதுகின்றனர். இப்படி மதத்திற்காகப் போர் புரிந்து அரசு முதலியவற்றை இழந்தனர். பிற மதத்தினருக்கு முஸ்லிம் மதத்தினர் கொடுமை செய்கின்றனர். திருடர், தீயர் எவ்வளவு கொடுமை செய்கிறார்களோ, அவ்வளவு நாமும் கொடுமை செய்யவேண்டுமா ? திருட்டுக்குத் திருட்டே பதிலாமா ? இது அநியாயம். அறிவிலி வைதால் நாமும் திருப்பி வைவதா ? இது கடவுள் கட்டளையாகுமா? இக்கட்டளை கடவுளன்பருக்கோ தெய்வ நூலுக்கோ தகுமா ? இது சுயநல மடயர் பேச்சாகும். (36)

37. அல்லாஹ் சண்டைக் குழப்பத்தை உவப்பதில்லை. நம்பும் மாந்தர்கள் இஸ்லாமிற் சேருங்கள். (ம. 1 : சி. 2 : சூ 2 : V. 205, 208.)

ஆய்வு : கடவுள் சண்டைக் குழப்பத்தை உவப்பதில்லை எனில் அவன் முஸ்லிம்களைச் சண்டைக்குத் தூண்டுவதேன் ? சண்டை பிடிக்கும் முஸ்லிம்களுடன் அவன் நட்பாடுவதேன் ? இஸ்லாமிற் சேருவதே அவனுக்கு மகிழ்ச்சியெனில், அல்லாதாரைப் பகைப்பவனாகும். இதனால் குரான் அருள் நூல் அன்று, அது பேசும் கடவுளும் உண்மையான கடவுளன்று என்பது தெளிவாகும். (37)

38. தன்னை நாடுவோருக்கு அல்லாஹ் கணக்கின்றி அளிப்பான். (ம. 1 : சி. 2 : சூ. 2 : ஆ : 212)

ஆய்வு : புண்ணிய பாபங்களை ஆராயாது, அல்லா இஷ்டப்படி அள்ளித் தருகிறாரா என்ன ? அப்படியானால் புண்ணியமும் பாபச் செயலும் ஒன்றுதான் ! இன்ப துன்பங்கள் அல்லாவின் விருப்பப்படியானால் முஸ்லிம்கள் புண்ணியத்தை மறுத்து விருப்பப்படி நடக்கலாமா ? இதை நம்பாது நல்வழி நடக்கும் அறவோரும் உண்டு. (38)

39. இன்னும் மாதவிடாய் பற்றியும் உம்மிடம் கேட்கிறார்கள். அது ஓர் அசுத்தமான நிலை. அதனால் மாதவிடாய்க் காலத்தில் பெண்களை விட்டு விலகி

யிருங்கள். அவர்கள் சுத்தமாகும் வரையில் அணுகாதீர்கள். குளித்த பிறகு அவர் விதிப்படி அணுகுங்கள். உங்கள் மனைவியர் உங்களுக்குரிய பண்ணை. எனவே நீங்கள் விரும்பும் முறையில் உங்கள் பண்ணைக்குச் செல்லுங்கள். அதற்கு உங்களுக்குப் பூரண உரிமையுண்டு. வீண் சபதங்களை அல்லாஹ் பொருட்படுத்த மாட்டார். (ம. 1 : சி. 2 : சூ. 2 : ஆ. 222, 223, 224.)

ஆய்வு : தூரஸ்திரிகளுடன் சேரக்கூடாது என்பது சரியே. மனைவியர் பண்ணைகள்—அவர்களுடன் கண்டபடி போகிக்கலாம் என்பது விஷய-விபரீதமாகும்! காமவெறியாகும்! பொறுப்பற்ற சபதங்களைச் சும்மாவிட்டால், பொய்ச் சபதம் கூறி மாந்தர் ஏமாற்றுவார். கடவுளும் பொய்யைப் போற்றுவோராவார். (39)

40. அல்லாஹ்வுக்குக் கடன் கொடுப்போர் யார் உளர்? அப்படிக் கொடுத்தால் அல்லாஹ் அதனை எத்தனையோ மடங்காகத் திருப்பிக் கொடுப்பான்.

(ம. 1 : சி. 2 : சூ. 2 : ஆ. 245)

ஆய்வு : பலே! அல்லாஹ் கடன் வாங்கவேண்டிய அவசியம் என்னவோ? உலகையெல்லாம் படைத்த கடவுள் மனிதனிடம் கடன் கேட்பாரா என்ன? ஒருக்காலும் மாட்டார். இது வீண் பேச்சு. அவனது கஜானா காலியா என்ன! வியாபார விஷயமாக அவர் உண்டியல் காலியாய் விட்டதா? கடன் முதலுக்கு இரண்டு பங்கு தருவது வட்டிக் கடை வேலை யல்லவா? கண்டபடி செலவு பண்ணிக் கை வரண்ட திவால் பேர்வழிகளின் காரியமல்லவா இது; இது கடவுள் செய்யும் காரியம் அல்லவே. (40)

41. அவர்களில் ஈமான் கொண்டோரும் உளர். நிராகரிப்போரும் உளர். மேலும் அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் ஒருவருக்கொருவர் போரிட்டுக்கொண்டிருக்கமாட்டார்கள். ஆனால் அல்லாஹ் தான் நாடியவற்றையே செய்கிறான்.

(ம. 1 : சி. 3 : சூ. 2 : ஆ. 253)

ஆய்வு : உலகில் நடக்கும் போராட்டமெல்லாம் கடவுள் இச்சைப் படியே நடப்பதா என்ன? அவர் இச்சை அதர்மங்களைக்கூடச் செய்யுமா என்ன? அப்படியானால் அவர் கடவுளில்லை. சண்டை மூட்டிச் சமாதானத்தைக் கெடுத்தல் நல்ல மனிதர் செயலன்று. இதனால் குரான் தெய்வ வாக்குமன்று தார்மிக மனிதர் சொல்லுமன்று என்பது தெளிவாகிறது. (41)

42. விண்ணிலும் மண்ணிலும் இருப்பதெல்லாம் அவனுரிமையே. அவனது நாற்காலி, (குரிச்சி) ஆகாயத்திலும் பூமியிலும் நிரம்பிக் கிடக்கிறது.

(ம. 1 : சி. 2 : சூ. 2 : ஆ. 255)

ஆய்வு : கடவுள் பூர்ணகாமன். நிறை முதல்வன் ; அவனுக்கு வேண்டிய பொருள்கள் எதுவும் இல்லை. அவன் படைத்த பொருள்கள் எல்லாம் ஆன்மாக்களுக்கேயாம். அவனுக்கு ஒரு பொருளும் தேவையில்லை. அவனுக்குக் குரிச்சி (நாற்காலி) இருந்தால் அவன் ஏகதேசி; குறுகியவன் ஆவான். குறுகிய தன்மையுள்ளவன் கடவுளன்று. கடவுள் எங்கும் நிறைந்தவன், அனந்தன். (42)

43. அல்லாஹ் சூரியனைக் கிழக்கிலிருந்து உதிக்கச் செய்கிறன். நீ அதை மேற்கிலிருந்து உதிக்ச் செய் என்றதும் காஃபிர் திகைத்துப் போனான். கடவுள் பாபிகளுக்கு நேர்வழி காண்பிப்பதில்லை. (ம. 1 : சி. 3 : சூ. 2 : ஆ. 258)

ஆய்வு : அறிவற்ற பேச்சைப் பாருங்கள்! சூரியன் கிழக்கிலிருந்து மேற்கோ, மேற்கிலிருந்து கிழக்கோ ஒருக்காலும் செல்லுவதில்லை. பரிதி தன் வட்டத்திலேயே சுழல்கிறது. இதனால் குரான்-கர்த்தாவுக்கு பூகோளமோ ககோளமோ தெரியாது என்றாகிறது. முஸல்மான் குதா பாபிகளுக்கு வழி காட்டா விட்டால், புண்யாத்மாக்களுக்கு வழி காட்டத் தேவையில்லையே. ஏனெனில் தர்மாத்மாக்கள் தர்ம மார்க்கத்திலே இயல்பாக நடப்பார்கள். வழி தவறினவருக்கே அறவழி காட்டவேண்டியது கடமை; இக் கடமை தவறினால், குரான்-கர்த்தா பெரும் பிழை செய்தவராவார். (43)

44. நீர் நான்கு பிராணிகளைத் (பறவைகளை என்கிறது குரான்) தேர்ந்து பழக்கு ; அவற்றின் உருவங்களைக் குறித்துக் கொள்க. அவற்றின் ஒவ்வொரு பாகத்தையும் ஒவ்வோர் மலைமேல் கொண்டுவைக்கவும். அதன்பிறகு அவற்றைக் கூப்பிடுக; அவை உம்மிடம் விரைந்து வந்து சேரும். (ம. 1 : சி. 3 : சூ. 2 : ஆ. 260)

ஆய்வு : பேஷ்! பேஷ்! முஸல்மான்-கடவுள் ஜாலக்காரன்போல விளையாடுகிறார். இதுவா கடவுளின் தெய்வத் தன்மை? அறிவாளிகள் இத்தகைய கடவுளை தூர விலகி நிற்பர். முட்டாள்களே இந்த ஜாலத்தில் மாட்டிக்கொள்வர். இது வியக்கத் தக்கதல்ல ; வெறுக்கத் தக்கதே. (44)

45. தான் நாடியவருக்கு அல்லாஹ் நீதி (ஞானம்) அளிக்கிறன்.

(ம. 1 : சி. 3 : சூ. 2 : ஆ. 269)

ஆய்வு : விரும்பின பேருக்கே நீதி யளிக்கிறானும் அல்லாஹ்! விரும்பாத பேருக்கு அநீதியா? இது தெய்வத் தன்மையாகுமா? பட்சபாதமில்லாமல் நீதி வழங்குவோனே பகவான், ஆப்தன்; பட்சபாதி பகவான் ஆகான். (45)

46. வட்டி வாங்கும் குற்றத்தைச் செய்தால் அவர்கள் நரக வாசிகளே யாவர்; அதில் அவர்கள் என்றென்றும் தங்கி விடுவார்கள். (ம. 1 : சி. 3 : சூ. 2 : ஆ. 275.)

ஆய்வு : அவர்கள் நரகத்திலேயே கிடப்பார்களா என்ன! எத்தனை நாள், வருஷம்? இப்படிப்பட்ட அசம்பாவித பேச்செல்லாம் இறைவன் அருளிய நூலில் இருக்கமுடியாது; அறிவு வளர்ச்சியற்றவரால் எழுதப் பெற்றதேயாகும். (46)

47. அல்லாஹ் தான் விரும்பியோரை மன்னிப்பான்; யாரை வேண்டுமானாலும் தண்டிப்பான். அல்லாஹ் அனைத்துப் பொருள் மீதும் பேராற்றலுடையவன். (ம. 1 : சி. 3 : சூ. 2 : ஆ. 284)

ஆய்வு : தக்காரைத் தண்டிப்பதாம், அயோக்கியரை மன்னிப்பதாம், இது பேத-புத்தி-அரசன் செயலல்லவா? தான் விரும்பின பேரையே ஆண்டவன் பாபியாகவோ புண்ணியனாகவோ செய்வதென்றால் ஜீவன் மேல் பாப புண்ணியம் சுமத்துவானேன்? ஆண்டவன் இச்சைப்படியே நடப்பதென்றால் ஜீவனுக்கு சுக துக்கப் பொறுப்புக் கூடாது. கடவுளே இன்ப துன்பம் தருவதானால், ஜீவனுக்கு அந்தச் சுமை ஏன்? ஒரு போர்வீரன் சேனைத் தலைவன் ஆணைப்படியே யாரையும் கொல்லுகிறான், அல்லது காக்கிறான். அதன் பலா பலன் அவனுக் கன்று. அவன் அதற்கு பொறுப்பாளியல்லன். அதுபோலவே இங்கும். (47)

48. *தெய்வ-பயம் உள்ளவருக்கு இதைவிட என்ன நற்செய்தி வேண்டும்; கடவுள் சுவர்க்கத்தைப் படைத்தார்; அதில் ஆறுகள் பாய்கின்றன. அங்கே தூய பீபிகள் அல்லாவின் அருளால் வசிக்கிறார்கள். அல்லாஹ் தனது அன்பருடன் நோக்குகிறார். (ம. 1 : சி. 3 : சூ. 3 : ஆ. 14)

ஆய்வு : இது சுவர்க்கமா, வேசை வனமா? அவனை இறைவன் என்பதா பெண் வேடுவன் என்பதா? எந்த அறிவாளி

---

* இதுகாறும் தாவுத்ஷாவின் தமிழ் மொழிபெயர்ப்பையும், சென்னை ஜமைத் இஸ்லாமி மன்றின் புதிய மொழிபெயர்ப்பையும் கொண்டு குரான் வரிகளைக் கோட்டினோம். ஆனால் இவற்றில் முதல் இரண்டு பாகங்களே உள்ளன. இன்னும் முப்பது பாகங்கள் உண்டு. மௌல்வி முகம்மதாலியின் அரிய அரபிமூலத்துடன் கூடிய ஆங்கில விரிவுரையைக் கொண்டு மற்றப் பகுதிகளை இங்கே எடுத்தாண்

யாவது இதைத் தெய்வ நூல் என்று மதிப்பானு? இந்த ஓரகம் ஏன்? அங்கே எப்போதும் உள்ள பீபிகள் இந்த உலகிலே பிறந்து அங்கே சென்றூர்களா அல்லது சுவர்க்கத் திலேயே பிறந்தார்களா? இங்கே பிறந்து அங்கே சென் ரூர்கள் என்ருல் தீர்ப்பு இரவுக்கு (கயாமத்) முன்பே இந்த பீபிக்களை கடவுள் அங்கே அழைத்திருக்க வேண்டும். அப்படியானல் அவர்களுடைய கணவன் மாரை (காவிந்து) ஏன் அழைக்கவில்லை? கயாமத் இரவில் அனைவருக்கும் நியாயம் செய்வது, இந்த விஷயத்தில் ஏன் மீறப்பட்டது? அவர்கள் சுவர்க்கப் பிறவிகள் என்ருல், கயாமத் வரை எப்படி நிர்வாகம் செய்தனர்? அங்கே அவர்களுக்குப் புரு ஷரும் உண்டானல், இங்கிருந்து போகும் புருஷருக்கு எப்படி பீபிகளை அல்லாஹ் இணைப்பார்? சுவர்க்கத்தில் நித்திய மனைவியரைப் படைத்த ஈசன் நித்திய புருஷரை யும் ஏன் படைக்கக் கூடாது? ஆதலால் முஸ்லிம் கடவுள் அநியாயக்கார அறிவிலி என்பது புலனுகிறது. (48)

49. தீன் இஸ்லாம் அல்லாஹ் அளித்ததே—இது மெய்.

(ம. 1 : சி. 3 : சூ. 3 : ஆ. 18)

ஆய்வு : அல்லாஹ் என்ன முஸ்லிம்களுக்கு மட்டுமா ஆண்ட வன், மற்றவருக்கில்லையா? பதின்மூன்று நூற்ருண்டுகளுக்கு முன்பு தெய்வீகச் சமயம் இருந்ததா? இல்லையா? ஆதலால் குரான் இறைநூல் இல்லை; ஏதோ பட்சபாதன் எழுதி வைத்த குறை நூல். (49)

50. ஒவ்வொரு ஜீவனுக்கும் சம்பாதித்த வினைப்பயன் அளிக்கப்படும். யாருக்கும் அநீதி இராது. 'ஹே அல்லாஹ், நீயே உலகிற்கு இறைவன். யார்மேல் விருப்பமோ அவருக்குத் தருகிருய்; உன் விருப்பப்படி ஒருவரிடமிருந்தும் எடுத்துக் கொள்ளுகிருய். உன் மனப்படியே ஒருவனை உயர்த்துகிருய், ஒருவனைத் தாழ்த்து கிருய். எல்லார் நன்மையும் உன் கையில் உள்ளது. நீயே எல்லாவற்றை ஆளும் இறைவன்.

நீ இரவைப் பகலாக்குவாய், பகலை இரவாக்குவாய். செத்தாரை உயிர்க்க வைப்பாய், உயிர்த்தாரைச் சாகவும் வைப்பாய். விரும்பியபேருக்கு அளவற்ற ஆக்கம் உணவு) தருவாய். தீனிஸ்லாமியர் காபிரிகளுடன் நட்பாடாதீர். ஈமானிய ருடனேயே நட்புரிமை கொள்ளுங்கள். இன்றேல் அல்லாஹ் பக்கம் இல்லீர்;

டுள்ளோம். சுவாமி தயானந்தரின் அழகான இந்தியைப் பின்பற்றியே மொழி பெயர்த்துள்ளோம். குரானில் 7 மன்ஜில், 114 சூராக்கள், 6247 ஆயாத்துகள் 113 பிஸ்மில்லாக்கள். அதாவது 6360 வசனங்கள் உள்ளன. சுவாமிகள் இவற்றை அலசிப் பிழிந்து குணதோஷங்களை ஆராய்கிருர்.

*அல்லாஹ் காவார். அல்லாஹ் மனம்வைத்தால் உம்மை மன்னிப்பார்; பாபம் போக்குவார்; அல்லாஹ் கருணையர்; அல்லாஹ் உமது பாபம் போக்குவார். அவர் சர்வசக்திமான்.* (ம. 1 : சி. 3 : ரு. 3 : ஆ. 24, 25, 26, 27, 30.)

**ஆய்வு :** ஒவ்வொரு ஜீவனுக்கும் வினைக்கேற்ற பலனைத் தருவதானால், மன்னிப்புக் கிடையாது. மன்னிப்பதானால் கர்ம பலன் இல்லை; கர்மபலன் அனுபவிக்காது மன்னித்தல் அநியாயமாகும். உத்தம கர்ம பலனின்றி அரசைத் தருவது அநியாயம். செத்தது உயிர்க்குமா? உயிர்த்தது சாகுமா? தெய்வ நியமம் மாறாது, மாறியாது, வேறாது. மதவெறியைப் பாருங்கள் பட்சபாதத்தை—தீன் இஸ்லாமில் சேராதார் காபிரிகளாம்; அவருள் நல்லவரைக் கூட நட்பாடக்கூடாதாம்! முஸ்லிம்களுள் தீயருடன் கூட நட்பாடலாமாம்! இத்தகைய உபதேசம் தெய்வத்தைக்கூட அதெய்வமாக்குகிறது. இதனால் குரான், குரான்-தெய்வம், இஸ்லாமியர்—எல்லாம் இருள் வெறிமயம் என்றாகிறது. இதனால் முஸ்லிம்கள் அறியாமையில் ஆழ்ந்து இருக்கிறார்கள். முகமது சாகெபின் லீலையைப் பாருங்கள். "நீங்கள் என் பக்கம் இருங்கள்; அல்லா உங்கள் பக்கம் இருப்பார். நீங்கள் ஓர வஞ்சனைப் பாபம் செய்தாலும் அவர் மன்னிப்பார்." முகம்மதுக்கு அந்தகரண சுத்தியில்லை; தனது காரியம் நிறைவேறவே அவர் குரானை எழுதினார் அல்லது எழுதுவித்தார் என்பது இதிலிருந்து தெளிவாகிறது. (50)

51. *ஓ மேரி, அல்லாஹ் உன்னைத் தேர்ந்தான் சுத்தமாக்கினான், உலக மாதருக்கு மேலாக வைத்தான்—என்று வானோர் பேசினர்.*

(ம. 1 : சி. 3 : ரு. 3 : ஆ. 41.)

**ஆய்வு :** கடவுளும், வானோரும் இன்று யாருடனும் பேச வரக் காணோமே! அப்படியானால் அந்த நாள் எப்படி வந்தனர், பேசினர்? அந்தக்கால மக்கள் புண்யாத்மாக்களா யிருந்தனர், இப்போது அப்படி யில்லை என்றால் பொருந்தாது. ஏனெனில், கிறிஸ்து, முகம்மதிய மதம் எழுந்த காலத்தில் அந்த நாடு கல்வி யற்ற காட்டுமிராண்டிகளின் நிலமா யிருந்தது. அதனாலேதான் இத்தகைய மூடக் கொள்கை நிரம்பிய மதப் பிரசாரம் சாத்தியமானது. இப்போது கற்றறிஞர் மிகுதி; ஆதலால் இத்தகைய மதங்கள் முன்னேற முடியாது. அப்படி இருக்கும் மதங்களும் அருகி வருகின்றன. அவை வளர முடியாது. (51)

52. அவன் 'ஆகுக' என்றால் ஆகிறது. காப்பிரிகள் ஏமாற்றினர்; ஈசனும் ஏமாற்றினான்; ஈசன் படலே சமத்காரன்! (ம. 1 : சி. 3 : சூ. 3 : ஆ. 46-53)

ஆய்வு : ("மனிதன் தொடாக் கன்னி நான்; எனக்கு எப்படி மகன் வருவான்" என்று மேரி கேட்கிறாள். அதற்கே ஈசன் "நான் ஆகுக" என்றால் மகப்பேறு உண்டாகும்" என்கிறார்.) முஸ்லிம்கள் கடவுளைத் தவிர வேறெதையும் நம்புவதில்லை என்றால், கடவுள் யாரிடம் சொன்னார்? சொன்னதும் அவர் இச்சையால் போந்தது யார்? இதற்குப் பதில் முஸ்லிம்கள் ஏழு ஜன்மத்திலும் சொல்லமுடியாது. ஏனெனில் உபாதான காரணமின்றிக் காரியம் பலிக்காது. காரணமின்றிக் காரியம் நடப்பது, அம்மா—அப்பா இல்லாமல் என் உடல் பிறந்தது என்பது போலாகும். தானும் ஏமாந்து, பிறரையும் ஏமாற்றி ஜம்ப மடிப்பவன் என்றும் கடவுளாக முடியாது. உத்தம புருஷர்கூட இப்படிப்பட்டக் காரியம் செய்யார். (52)

53. 'கடவுள் உனக்கு மூவாயிரம் வானோரைத் துணையனுப்புவார்' என்றது போதாதா? (ம. 1 : சி. 4 : சூ. 3 ஆ. 123.)

ஆய்வு : முஸ்லிம்களுக்கு அப்போது மூவாயிரம் வானோர் துணை தந்த அல்லாஹ், இப்போது எங்கே? முஸ்லிம் அரசுகள் (பாதுஷாஹி) நஷ்டப்பட்டு மறைந்தன, மறைந்து கொண்டிருக்கின்றனவே. அல்லாஹ் துணை எங்கே! ஆதலால் இதெல்லாம் மயக்குப் பேச்சு—அறியாரை வலைப் பிடிக்கும் அநியாயப் பேச்சு! (53)

54. ஆண்டவனே, காப்பிரிகளை எதிர்க்க எமக்குத் துணைதாரும். அல்லாஹ் உமது உத்தம சகாயர், துணைவர், காரியகர்த்தா! அல்லாஹ் வழியல் நீர் இறந்தாலும் சென்றாலும் அல்லாஹ் தயவு உங்களுக்கு நிரம்ப உண்டு.

(ம. 1 : சி. 4 : சூ. 3 : ஆ. 146, 149, 156.)

ஆய்வு : முஸ்லீம்களின் பிழையைப் பாருங்கள்! பிற மதத்தினரைக் கொல்ல அல்லாஹ் துணை வேண்டுமாம்! கடவுள் ஏமாளியா! இந்தப் பேச்சை அவர் கேட்பாரா, கொள்வாரா? அல்லாஹ்வே முஸல்மான்களின் ஆணையாளர் ஆனால், அவர்கள் காரியம் ஏன் நஷ்டமாகிறது? முஸல்மான் மோகத்தில் கடவுளும் சிக்கினார் போலும்! இந்த ஓரகத் தெய்வம் தர்மாத்மாக்கள் உபாசிக்கத்தக்க தல்லவே—அல்லவே அல்ல! (54)

55. கட்டுப்பாடற்ற பொருளின் அறிவை அல்லாஹ் உங்களுக்கு அருள
மாட்டார்; பைகம்பர் (தீர்க்கதரிசி)களுக்கே அதைத் தருவார். அவர் விரும்பிய
பேருக்கே அருளுவார். கடவுளிடமும் ரசூலிடமும் நம்பிக்கை கொள்ளுங்கள்.

(ம. 1 : சி. 4 : சூ. 3 : ஆ. V. 178)

ஆய்வு : முஸல்மான்கள் கடவுளைத் தவிர வேறெவரிடமும்
நம்பிக்கை யில்லாதவர்கள். கடவுளுடன் வேறெவரையும்
வைத்து எண்ணுதவர் நபியையும் கடவுளுடன் சேர்ப்
பானேன்? நபியையும் நம்பவேண்டும் என்றால் அல்லா
வுடன் நபியையும் சமமாக இணைப்பதாகிறது. அப்போது
கடவுளும் நபியுடன் பங்கு கொள்பவராகிறது. முகம்மதின்
அவசியம் என்ன? முகம்மது நபியின்றித் தனது காரியங்
களை சாதிக்க முடியாதென்றால் கடவுளுக்கு நிறைவான சக்தி
இல்லை என்றாகிறதே. (55)

56. இஸ்லாமியரே, மகிழுங்கள்! ஒருவருக்கொருவர் ஒத்திருங்கள். பிடிவாத
மாகப் போராடுங்கள். கடவுளை அஞ்சுங்கள்—அவர் மோட்சமளிப்பார்.

(ம. 1 : சி. 4 : சூ. 3 : ஆ. 200)

ஆய்வு : குரான் கடவுளும், நபியும்—இருவரும் சண்டைக்
காரர். சண்டை தூண்டும் எவரும் சார்தத்தைக் கெடுப்
பவரே. கடவுளை அஞ்சினால் மட்டும் மோட்சம் வருமா?
அதர்மப் போரை அஞ்சி நடந்தால் வருமா? முன்னதானால்
அதர்மத்தை அஞ்சினாலும் அஞ்சாவிட்டாலும் ஒன்றுதான்.
பின்னதானால் நேர்மையாகும். (56)

57. இதுதான் அல்லாவின் கட்டுப்பாடு. அல்லாவையும் நபியையும் பணி
வோர் நீர்வளம் பொழியும் சுவர்க்கம் சேர்வார். அதுதான் பெரிய காரியம். அல்லா
வையும் முகம்மதையும் பணியாதார், அணையாத் தீச்சுடரில் வேவார். அச்சத்
தொல்லை அவரை விடாது. (ம. 1 : சி. 4 : சூ. 4 : ஆ. 13, 14.)

ஆய்வு : அல்லாஹ்வின் சரிசமன் முகம்மது சாகெபு என்று
அல்லாவே குரானில் எழுதியுள்ளார். 'குதா' எப்படி
பைகம்பர் வலையில் சிக்கியிருக்கிறார் என்று பாருங்கள்!
சுவர்க்கத்திலும் ரசூல் தனது பங்காளியாம்; பைகம்பர்
ஆகிய முகம்மதின் மேல் அல்லாஹ் அவ்வளவு மோகங்
கொண்டுள்ளார்! கடவுள் தனித் தலைவன், பூரண சுதந்திரன்
அல்லவா? அவ்வாறில்லா விட்டால், அவன் பிறச் சார்பன
ால் அவனை லாசரீக் (தானே தானான தனி முதல்வன்)
என்பது எப்படி? இதெல்லாம் கடவுள் எழுதிய நூலே
அன்று. (57)

58. அல்லாஹ் ஓர் அணுக்கூட அநியாயம் செய்யமாட்டார். நன்மை செய்யும் எவருக்கும் இரு படங்கு நலம் புரிவார். (ம. 1 : சி. 5 : சூ. 4 : ஆ. 40)

ஆய்வு : இம்மி கூட அநியாயம் செய்யாத அல்லாஹ் நன்மைக்கு இரண்டு மடங்கு தருவானேன்? முஸல்மான்களுக்கு மட்டுமே சலுகை காட்டுவானேன்? நியாயத்திற்கு மீறி இரு பங்கோ சிறு பங்கோ தருவதால் இறைவன் அநியாயக்காரன் ஆகவில்லையா? (58)

59. உன்னிடமிருந்து அயலே சென்று உன் சொல்லுக்கு மாறு செய்வோர் தீமைகளை அல்லாஹ் எழுதி வைக்கிறார். அவர்கள் ஈட்டியதற்கேற்றபடி அவர்களை மாறு வழியில் திருப்பிவிடுகிறார். அவர் திருப்பிவிட்டவர்களை நேர்வழிப் படுத்த உன்னால் முடியுமா? அவர் திருப்பிவிட்டவரை யாரும் வழிப்படுத்த முடியாது. (ம. 1 : சி. 5 : சூ. 4 : ஆ. 81, 88)

ஆய்வு : இப்படி எழுதி வைத்துப் பேரேடு செய்பவன் எல்லாம் அறிந்தவனாக முடியாது! எல்லாம் அறிந்தவன் எழுதி வைப்பானேன்? எல்லாரையும் ஏமாற்றியே சைத்தான் தீயவனென் என்று முஸல்மான்கள் சொல்லுகிறார்கள். கடவுளே ஜீவர்களை மாறுவழியில் திருப்புவதானால் அவருக்கும் சைத்தானுக்கும் என்ன பேதம்? ஒரு பேதம் உண்டு; கடவுள் பெரிய சைத்தான்; சைத்தான், இவன் சின்ன சைத்தான். ஏனெனில் ஏமாற்றுகிறவன் சைத்தான் என்று முஸல்மான்கள் சொல்லுகிறார்கள். இதன்படி கடவுளும் சைத்தானாகிறார். (59)

60. அவர்கள் கை தணிக்காவிட்டால் சிக்கிய இடத்தில் சக்கையாகக் கொல்லுங்கள். முஸ்லிமை முஸ்லிம் கொல்லுவது முறையாகாது. தெரியாது கொன்றால் மற்றொரு முஸ்லிம் கழுத்தை இரத்தம் சிந்தாமல் காக்கவேண்டும். வெட்டப்பட்டவன் குடும்பத்திற்கு இரத்தக் காணிக்கை செலுத்தவேண்டும். தெரிந்தே ஒரு முஸல்மானைக் கொல்லுகிறவன் என்றும் நாகத்தில் வருந்துவான். அல்லாஹ் அவனைச் சினப்பார், சபிப்பார். (ம. 1 : சி. 4 : சூ. 4 : ஆ. 91, 92, 93.)

ஆய்வு : பாருங்கள் மதவெறிக் கொடுமையை! முஸல்மானைக் கொல்லாதே; முஸல்மான் அல்லாதானைக் கண்ட இடத்தில் உடனே கொலை செய். தவறுதலாக முஸ்லீமைக் கொன்றால் பரிகாரம் உண்டு; அல்லாதானைக் கொன்றால் சுவர்க்கமாம்! இத்தகைய உபதேசங்களைக் கிணற்றில் எறிய வேண்டும். இத்தகைய புத்தகம், இத்தகைய பைகம்பர், இத்தகைய தெய்வம், இத்தகைய மதங்களால் தீமையே ஒழிய,

நன்மையே இல்லை. இவற்றை விடுப்பதே நலம். அறிவாளிகள் இவற்றை விலகி பொய்யாமொழியான வேத வழிச் செல்வதே நல்லது. வேதத்தில் இம்மியும் பொய்யில்லை. முஸல்மானைக் கொன்றால் நரகமாம், மற்ற மதத்தினரும், முஸல்மானைக் கொன்றால் சுவர்க்கம் என்றால் யாரை நம்புவது? யாரை விடுவது? இத்தகைய மூட மதங்களை ஒழித்து, அறிவாளிகள் வேத வழியே ஆரியரான சீரிய நல்லோரையே பின்பற்றி, துஷ்ட தஸ்யுக்களை நீக்க வேண்டும். (60)

61. உபதேசம் வெளிப்பட்ட பிறகு, ரசூலுக்கு எதிர் செய்பவர், முஸல்மான்களுக்கு எதிர்ப்பக்கம் சேர்பவர்—இவர்களை நான் நரகத்திற்கே அனுப்புவேன். -

(ம. 1 : சி. 5 : சூ. 4 : ஆ. 115)

ஆய்வு: குதா (கடவுள்), முகம்மது பேசும் ஓரகத்தைப் பாரீர்! முகம்மது முதலியோர், கடவுளின் பெயரால் இத்தகைய உபதேசங்களை எழுதாவிட்டால் தங்கள் மதம் தழைக்காது, தங்கள் புகழ் பரவாது, தங்களுக்குப் பொருளும் போகமும் கிடைக்காது என்றே இப்படி எழுதி வைத்தனர். அவர்கள் பலே சுய நலவாதிகள், பிறர் நலத்தைக் கெடுப்பவர்; அவர்கள் புரட்டுவாதம் புலவர் முன் பலிக்காது. (61)

62. அல்லாஹ், வானோர், நூல்கள், ரசூல், கயாமத் இவற்றை எதிர்ப்பவர் தப்பு வழியினர். கடவுள் அவர்களை மன்னிக்க மாட்டார், நல்லவழியில் நடத்தமாட்டார்; முதலில் நம்பிப் பிறகு மாறுபட்டவர், முதலில் ஈமான் கொண்டு பிறகு காபிரியானவரை அல்லாஹ் மன்னிக்க மாட்டார், நல்வழி உய்க்க மாட்டார்.

(ம. 1 : சி. 5 : சூ. 4 : ஆ. 134, 135.)

ஆய்வு: இப்போதும் கடவுளுக்கு லாஷெரீக் (உடன் வசிப்பவர்) உண்டா என்ன? கடவுளை லாஷெரீக் என்பதும் அதே சமயம் அவனது சகபாடிகளை ஒப்புக்கொள்வதும் அசம்பாவிதமாயில்லையா? மூன்று தடவைக்குமேல் கடவுள் மன்னிப்பதில்லையா? மூன்று தடவை அபராதம் செய்த பிறகு மன்னிப்பதில்லையா? நாலாவது தடவை நேர்வழி காட்டுவதில்லையா? நான்கு நான்கு தடவை எல்லோரின் மத விரோதம் பல தடவையாகப் பெருகும். (62)

63. அல்லாஹ் தீயரையும், காபிரிகளையும் நரகத்தில் கூட்டுவது உறுதி. தீயர் அல்லாஹ்வை ஏமாற்றுகிறார்கள்; அல்லாஹ் அவர்களை ஏமாற்றுகிறார். ஈமானர்களே, முஸல்மானரைத் தவிர வேறு காபிரிகளை நட்பாடாதீர்.

(ம. 1 : சி. 5 : சூ. 4 : ஆ. 140, 142, 144.)

ஆய்வு : முஸ்லிம்களுக்கு சுவர்க்கமாம் ; மற்றவருக்கு நரகமாம் —ஆதாரம் என்ன ? வாஹ் ஜீவாஹ் ? ஆஹா ! ஐயா ஆஹா ! ஏமாந்து, ஏமாற்றும் கடவுள் நம்மை விட்டு விலகி நிற்கட்டும் ; ஏமாற்றுவோருடன் அவன் கூடுக ; அவர்கள் அவனுடன் கூடட்டும். இனம் இனத்துடன் கூடும். ஏமாற்றும் கடவுளுக்கு ஏமாற்றும் அன்பரே (பக்தரே) சரி.

" यादृशी शीतला देवी तादृश: खरवाहन: "

யாத்ரு சீ சீதளாதேவீ தாத்ரு ச கர்வாஹன :

சீதாலா தேவிக்குச் சிறந்தது கழுதை வாகனம். தீய முஸ்லிமை உவப்பதாம் ! தூய மற்றவனைப் பகைப்பதாம் !! இது அறிவாகுமா ? (63)

64. உலகீரே, ஆண்டவனிடமிருந்தே உண்மையைக் கொண்டு பைகம்பர் (நபிகள்) உங்கள் முன் வந்துள்ளார். அவர்மேலேயே ஈமான் கொள்ளுங்கள்.

(ம. 1 : சி. 6 : சூ. 4 : ஆ. 176, 171.)

ஆய்வு : நபிமேல் நம்பிக்கை வைப்பதானால் அல்லாவுடன் நபியும் சரி நிகர் என்றாகிறது. அல்லாவிடமிருந்தே பைகம்பர் வந்து செல்வதானால் அவர் எங்கும் நிறைந்த ஈசனாவதெப்படி ? ஓரிடத்தில் அவர் எங்கும் நிறைவு என்று, இன்னோரிடத்தில் ஏகாதேசி (ஓரிடத்தார்) என்பது பொருந்தாது. இதனால் குரான் ஒருவர் எழுதினதன்று ; பலர் எழுதிய நூல் என்றாகிறது. (64)

65. செத்த பன்றிக்கறி, அல்லாஹ் தவிர வேறு பெயர் சொல்லி அறுத்த மாமிசம், தடியால் அடித்துக் கொன்றது, கழுத்தைப் பிசைந்து கொன்றது, மேலிருந்து விழுந்து இறந்தது, கொம்புகுத்தியது, புண்பட்டிறந்தது இவையெல்லாம் ஹராம்—விலக்கப்பட்டவை. (ம. 5 : சி. 6 : சூ. 5 : ஆ. 3)

ஆய்வு : இவைதாம் விலக்கா ? வேறு பல விலங்குகள், பூச்சி, புழுக்களெல்லாம் முஸல்மான்களுக்கு (ஹலால்) உவக்கும் போலும். இதெல்லாம் மனிதர் கற்பனை—தெய்வ வாக்கன்று ; இந்நூல் பிரமாணமன்று. (65)

66. அல்லாவுக்கு நல்லகடன் செலுத்துங்கள். நான் தீமைநீக்கி உங்களை சுவர்க்கத்தில் உய்ப்பேன். (ம. 2 : சி. 6 : சூ. 5 : ஆ. 12)

ஆய்வு : வேடிக்கைதான் ! அல்லா வீடு காலி, பணம் இல்லை போலும் ! இன்றேல் அவர் கடன் கேட்பதேன் ? கடன்

தருவோன் பாவம் நீக்கி சுவர்க்கத்திற்கு அனுப்புவாராம்! அல்லா பெயர் வைத்து முகம்மது சாகேபு தன் காரியத்தைச் சாதிக்கிறார் என்று தெரிகிறது. (66)

67. *அல்லாஹ் நினைத்த பேரை மன்னிக்கிறார்; நினைத்த பேருக்குத் துன்பந் தருகிறார். யாருக்கும் தராததை அவர் உனக்குத் தந்தார்.*
(ம. 2 : சி. 6 : சூ. 5 : ஆ. 18, 20.)

ஆய்வு: சைத்தானும் நினைத்த பேரைப் பாபி யாக்குகிறான். முஸல்மான் கடவுளும் அவ்வாறே ஆக்கி சைத்தான் வேலையையே செய்கிறார். அப்படியானால் நல்லதோ பொல்லதோ செய்யும் கடவுளே, சுவர்க்கத்திற்கோ நரகத்திற்கோ செல்லவேண்டும். ஏனெனில் ஜீவன் பராதீனமாயுள்ளது. சேனாபதி கட்டளைப்படியே போர்வீரன் சிலரைக் காக்கிறான்; சிலரை வதைக்கிறான்; நல்லதும் பொல்லதும் அவனுக்கில்லை; சேனாபதிக்கேதான். அதே மாதிரியே ஜீவன் பராதீனன்; அவன் செயற் பயன் அல்லாவுக்கேயாம். (67)

68. அல்லாவின் ஆணையை, ரசூலின் ஆணையைப் பணிக!
(ம. 2 : சி. 7 : சூ. 5 : ஆ. 92)

ஆய்வு: பாருங்கள்! கடவுளும் நபியும் சரி நிகர் எனக்குறிக்கிறது. கடவுள் நிகரற்றவர் என்பதை மறுக்கிறது. (68)

69. நடந்துபோனதை அல்லாஹ் மன்னிக்கிறார். யாராவது மீண்டும் அப்படிச் செய்தால் பதிலடி கொடுப்பார். (ம. 2 : சி. 7 : சூ. 5 : ஆ. 95)

ஆய்வு: பாபத்தை மன்னிப்பது மீண்டும் பாபம் செய்யத் துணிவு தருகிறது. பாப மன்னிப்பு நூலை எந்த ஆண்டவனும் அறிவாளியும் எழுதியிருக்க முடியாது. அது பாபத்தைப் பிரசாரம் செய்வதாகும். ஆம், இனிமேல் பாபம் செய்யாது பிரார்த்தனை நடத்தலாம்; ஆனால் அந்தப் பாபத்தை ஒழித்துக் கட்ட உள் எழுச்சி வேண்டும். பாபச் செயலை விடாமல், வருத்தம் மட்டும் தெரிவிப்பதாற் பயனொன்றுமில்லை. (69)

70. அல்லாஹ்மேல் பொய் சுமத்தி, தன்னுள்ளும் அருள் வாக்கு இறங்கியுள்ளது, அல்லாஹ் போலவே தானும் அருள் வாக்குப் பெறமுடியும் என்பவனைப் போலப் பாபி இல்லை. (ம. 2 : சி. 7 : சூ. 6 : ஆ. 94)

ஆய்வு: கடவுளின் ஆயத்து (அருள் வாக்கு) தன்னுள் இறங்கியது என்று முகம்மது சாகெபு சொல்லுவது இதில்

உறுதியாகிறது. வேறு யாரும் தன்னுள் அருள்வாக்கு இறங்குவதாகவும், தானும் நபி என்று சொல்லுவதும் தடுக்கவே, முகம்மது சாகெபு இப்படிச் சூழ்ச்சி செய்தார் போலும். (70)

71. நாம் உன்னைப் படைத்தோம் : உன் உருவைச் செய்தோம். "ஆதாமைப் பணிமின்" என்று வானோருக்கு ஆணையிட்டோம். அவர்கள் வணங்கினர் ; வணங்காதாரில் ஒருவன் சைத்தான் "என் ஆணையைப் பணியாது உன்னைத் தடுத்தது யார்" எனக் கேட்டோம். "அவனை விட நான் மேல் ; நீ அவனை மண்ணால் ஆக்கினை ; என்னைத் தீயினின்று ஆக்கினை...நானே உயர்ந்தவன்" என்றான்.

கடவுள் : "நீ தற்புகழோன்—இந்த இடத்திற்குத் தக்கவனில்லை ; இதைவிட்டு இறங்கிச் செல்" என்றார்.

சைத்தான் : அவர்கள் புதைகுழியிலிருந்து எழும்புமட்டும் ஓய்வு கொள்க ;

கடவுள் : "நல்லது ஓய்வு கொண்டோருள் நீயும் ஒருவனே" என்றார்.

அவன் : "நீ என்னை வஞ்சித்தாய். நான் அவர்கள் நேர்வழிச் செல்லாமல் குறுக்கே அமர்வேன். உனக்கு யாரும் வந்தனம் செலுத்தமாட்டார்கள்" என்றான்.

கடவுள் : "உனக்கு துர்தசை, கெட்ட காலம்! போ இதை விட்டு! உன் பக்கம் சேர்ந்தவர்களையெல்லாம் நரகத்தில் கொண்டு நிரப்புவேன்" என்றான்.

(ம. 2 : சி. 8 : சூ. 7 : ஆ. 11-12.)

ஆய்வு : சிந்தித்துக் கேளுங்கள்! சாமிக்கும் சைத்தானுக்கும் சண்டை! ஒரு சைத்தான் சப்ராஸி (சேவகன்) போன்றவானோன். அவனை அடக்கமுடியவில்லை ; அவன் ஆத்மாவை தூயுறுத்தவும் முடியவில்லை. கடவுள் அவன் புரட்சி கிளப்பி மக்களைப் பாபிகளாக்கினான். இது சாமியின் குற்றம். சைத்தான் எல்லாரையும் வஞ்சிக்கிறவன் ; கடவுள் சைத்தானை வஞ்சிக்கிறவன். சாமியே சைத்தானுக்குச் சைத்தானாகிறான். "என்னை நீ தப்பு வழியில் நடத்தினாய்" என்று சைத்தான் சாமிக்கு வெளிப்படையாகச் சொல்லுகிறான். "சாமிக்குத் தூய்மையில்லை; அவனே பாவங்களுக்கு முதற் காரணம்" என்றாகிறது. இப்படிப்பட்டவன் முஸ்லிம் சாமியாகத் தான் இருக்கமுடியும். வேறு நல்ல அறிவாளர் சாமியாக முடியாது. முஸல்மான் சாமி வானோருடன் ஒரு மனிதன் போலப் பேசுதலால், அவருக்கும் ஓர் உடம்பிருந்திருக்கவேண்டும். அவர் அறிவு அற்பமாகவும் நியாயமற்றதாகவும் இருக்கவேண்டும். ஆகவே இப்பேர்ப்பட்ட இஸ்லாம் மதத்தை அறிவாளிகள் ஒப்புவதில்லை. (71)

72. அல்லாஹ்வே உங்கள் எஜமான்; இஃது உறுதி. அவனே மண்ணையும் விண்ணையும் படைத்தான்; விண்ணிற் குடிகொண்டான். உங்கள் முதல்வனைப் பணிவுடன் கூவுங்கள். (ம. 2 : சி. 8 : சூ. 7 : ஆ. 54, 55.)

ஆய்வு: உலகை ஆறுநாளில் உண்டாக்குவதாம்! பரஒளி அரியணையில் இளைப்பாற அமர்வதாம்—இந்தச்சாமி சர்வ சக்திமானு? எங்கும் நிறைந்தவரா? இல்லை; அவரைச் சாமி என முடியாது. கடவுள் செவிடரா? உரக்கக் கூவினுலே கேட்பாரா? இதெல்லாம் அவர் தெய்வ மில்லை, குரான் தெய்வ நூல் இல்லை என்பதைக் காட்டுகின்றன. உலகை ஆறு நாளில் படைத்து ஏழாவதுநாள் அர்ஷ் என்ற உயர் விண்ணில் அமைதியாக இளைப்பாறினுராம். அவர் இப்போது உறங்குகிருரா? விழித்திருக்கிருரா? விழித் திருந்தால், ஏதாவது வேலை செய்கிருரா—அல்லது சும்மா குஷியாக விளையாடித் திரிகிருரா? (72)

73. உலகில் சும்மா கலகஞ் செய்து திரியாதீர். (ம. 2 : சி. 8 : சூ. 7. ஆ. 74.)

ஆய்வு: இது நல்லதே; ஆனுல் மற்ற இடங்களில் ஜெஹாத் நடத்தவும், முஸ்லிம் அல்லாருடன் போராடவும், காப்பிரி களைக் கொல்லவும் தூண்டுகிறதே குரான். இதற்கும் அதற்கும் முழு முரணுயிருக்கிறதே. தமது நிலைமை மோச மானதும் முகம்மது இந்த வழியில் இறங்கி விட்டார் போலும். பலமா யிருந்தபோது அவர் சண்டையைக் கிளப்பினுர். இரண்டு நிலையும் எதிரிடை யானதால், இரண்டும் உண்மையில்லை. (73)

74. இப்போது தனது கோலை எறிந்தார்; ஆ, அது ஒரு பாம்பானது. (ம. 2 : சி. 9 : சூ. 7 : ஆ. 107.)

ஆய்வு: சாமியும் முகம்மது சாகெபும் இத்தகைய புளுகுகளை நம்பினுர் என்று இதனுல் தெரிகிறது. ஆகவே இருவரும் படிப்பற்றவர்களா யிருக்கவேண்டும்; கண் காணுததை காது கேட்காததை நம்புவது வெறும் ஜாலக்கே! (74)

75. இப்போது நாம் அவன்மேல் புயலை ஏவினேம்; வெட்டுக்கிளி, பேன், தவக்களை, இரத்தம் எல்லாம் வாரியடித்தோம். பழிக்குப்பழி வாங்கினேம்; அவர்களை ஆற்றில் முழுக்கடித்தோம். இஸ்ரேலியரை ஆற்றைத் தாண்டச் செய்தோம். அவர்கள் மதமும் பொய், செயலும் பொய். (ம. 2 : சி. 9 : சூ. 7 : ஆ. 133, 136, 138, 139.)

ஆய்வு: இப்போது பாருங்கள்! இதெல்லாம் போலிப் பாகண்டிவேலை. பாம்பெறிந்து கொல்லுவேன் என்றது மிரட்டல் வேலை. இப்படிச் செய்பவன் அனியாயச் சாமி யல்லவா? ஒரு சமுதாயத்தை ஆற்றில் முழுக்குவதாம் இன்னொன்றை இழுத்துவிடுவதாம். ஆயிரக்கணக்கான, இலட்சக்கணக்கான அன்பர் வாழும் இன்னொரு மதத்தைப் பொய், தன்மதமே மெய் என்னும் மதத்தினும் பொய் மதம் உண்டா? எல்லாரும் நல்லவர் எல்லாரும் பொல்லவர் என்று எந்த மதத்தவரும் இல்லை. இவ்வாறு ஓரகம் நிறைந்தது மகா மூர்க்க மதமாகும். தௌரத், ஃஜபூர் ஆகிய அவர்கள் சமயம் பொய்யா? அல்லது அவர்கள் வேறு பொய் மதம் புகுந்தாரா? வேறு மதமானால் குரானில் இருந்து அதன் பெயரைச் சொல்லுமே. (75)

76. அப்போதே என்னை நீ காண முடியும். மலையை நோக்கி இறைவன் ஒளிப்பிழம்பு பாய்ந்தது. மலை தவிடுபொடியானது; மூஸா மயங்கிக் கீழே விழுந்தான். (ம. 2 : சி. 9 : சூ. 7 : ஆ. 143.)

ஆய்வு: கண்ணுறக் காணப்படுபவன் எங்கும் நிறைந்திருப் பவனாயிருக்க முடியாது. அப்போது இந்த சமத்காரங்களைச் செய்து திரிந்த கடவுள் இப்போதும் அப்படிச் செய்வதற் கென்ன? பகுத்தறிவுக்குப் புறம்பான இவற்றை நாம் ஒப்ப முடியாது. (76)

77. பயபக்தியுடன் பணிவுடன் காலை மாலை நினைந்து மெல்லிய குரலால் வணங்குக. (ம. 2 : சி. 9 : சூ. 7 : ஆ. 205.)

ஆய்வு: சில இடங்களில் "கடவுளை உரக்கக் கூவுக" என்கிறது குரான். சில இடங்களில் "மெல்லிய குரலால் கடவுளை நினைக" என்கிறது. இவற்றில் எது உண்மை? எது பொய்? ஒன்றுக் கொன்று முரணாயிருப்பது பித்தன் கீதம் போல் கோர்வை யில்லாதிருக்கிறது. தெரியாது பிழை செய்ததை ஒப்புக்கொண்டால் கவலையில்லை. (77)

78. கொள்ளையடித்ததுபற்றி அவர்கள் கேள்வி கேட்கிறார்கள். கொள்ளைப் பொருள் அல்லாவுக்கும் ரசூலுக்கும் என்று சொல்லுக...அல்லாவை அஞ்சுக.
(ம. 2 : சி. 9 : சூ. 8 : ஆ. 1.)

ஆய்வு: வழிப்பறிக்காரன் போலக் கொள்ளையடித்து தம்மை கடவுள், பைகம்பர் என்பது வியப்புத்தான்! இவர்கள்

யோக்கியர்கள் என்பதும் வியப்புத்தான்! ஒருபுறம் அல்லாவை அஞ்சுங்கள் என்கிறார்கள்—இன்னொரு புறம் திருடுங்கள், தீது செய்யுங்கள் என்றும், 'உத்தம மதம் நமதே' என்றும் வெட்கமில்லாமல் சொல்லுகிறார்கள். மத வெறியை விட்டு அவர்கள் சத்திய வேத தருமத்தைச் சேராதது அருங்கேடாகும். (78)

79. கடவுள் காப்பிரிகளின் வேரைச் சிதைப்பார். நான் உங்களுக்குத் துணை தருவேன்; உங்கள் பின் ஆயிரம் வானோர் தொடர்வார். காப்பிரிகள் நெஞ்சில் நான் பயம் உண்டாக்குவேன். அவர்கள் கழுத்தை: வெட்டுங்கள் விரல்களை.
(ம. 2 : சி. 9 : சூ. 8 : ஆ. 7, 9, 12.)

ஆய்வு: வாஹ்வாஜீ! என்ன கடவுள்! என்ன பைகம்பர்! தயவெங்கே! முஸ்லிம் அல்லாதாரை (காப்பிரிகளை) வேரோடு ஒழிப்பதாம்! "கழுத்தை வெட்டு, கைகால் பூட்டுகளை நறுக்கித் தள்ளு" என்னும் கடவுள் இலங்கேச னுக்குக் குறைந்தவரா? இந்தக் கொடுமைகள் குரான் செய்தவர் வேலை; கடவுட் காரியம் அன்று. இதெல்லாம் கடவுள் சொன்ன தென்றால் அந்தக் கடவுள் எங்களிட மிருந்து மிக தூர விலகியிருக்கட்டும்; அவரிடமிருந்து நாமும் விலகி நிற்போம். (79)

80. அல்லாஹ் முஸ்லிம்களுடன் இருக்கிறார். ஈமான் கொண்டவர்களே, அல்லா—ரசூல்—அழைப்பை ஏற்று நடங்கள். ஈமான் கொண்டவர்களே திருடாதீர்—அல்லாவுக்கும் ரசூலுக்கும் எதிராகவும் உங்கள் பொறுப்புக்கு எதிராகவும் களவு செய்யாதீர்கள். அல்லாஹ் அவர்களுக்கு எதிராக மக்கர் செய்தார். அல்லா பலே மக்கர்வாலர்! (ம. 2 : சி. 9 : சூ. 8 : ஆ. 9, 24, 27, 30.)

ஆய்வு: அல்லாஹ் என்ன முஸல்மான்கள் பக்கமே இருக்கிறாரா? அப்படியானால் அது அதர்மமில்லையா? கடவுள் எல்லா வுலகுக்கும் இறைவனே. எங்கும் நிறைவே. அவர் செவிடா? கூவாமல் கேளாரா? கடவுளுக்குச் சரிசமானமாக ரசூலை வைப்பது தீதல்லவா? அல்லாவின் எந்த கஜானா நிறைந் துள்ளது—கொள்ளை போக? திருடுவது கடவுள், பைகம்பர், தனது பொறுப்பு—இவற்றிடந்தானா மறுக்கப்பட்டது? மற்றவர்களைத் திருடலாமா, கொள்ளையடிக்கலாமா? இப்படிப் பட்ட உபதேசங்கள் அவித்யா—அதர்மிகளிடமிருந்தே வரக் கூடும்? கடவுள் வஞ்சர், மோசர், அதர்மர், சூழ்ச்சிக்காரர், மக்கர் பேர்வழியின் கூட்டாளியாம்? ஐயோ கடவுளே!

இந்தக் குரான் தெய்வ வாக்கா? அதை எழுதினவர் கவடு, வஞ்ச மக்கர் பேர்வழிகளாகவே இருக்கவேண்டும். இல்லா விட்டால் இப்படி ஏன் எழுதவேண்டும்? (80)

81. போடுங்கள் சண்டை; எதிரிகள் யாரும் எஞ்சாதவரையில், காப்பிரிகளின் பலம் ஒடுங்கி அல்லா—நம்பிகளே எஞ்சு மட்டும் போடுங்கள் சண்டை. நீங்கள் அடிக்கும் கொள்ளையில் ஐந்தில் ஒரு பங்கு அல்லாவுக்கும் ரசூலுக்கும் ஆகும். (ம. 2 : சி. 9 : சூ. 8 : ஆ. 39, 41.)

ஆய்வு: முகம்மது சாமி தவிர வேறு யார் இவ்வளவு அமைதி கெடும் அநியாயப் போர் வெறியராயிருக்க முடியும்? பாருங்கள் இந்த மதத்தை! சாமிக்கும் ரசூலுக்கும் உலகைக் கொள்ளை யடிப்பதும், கொள்ளை அடிக்கச் செய்வதும் திருட்டுப் பயல்கள் சேட்டை யல்லவா? கொள்ளையில் பங்காம்! அது கடவுளையும் திருடனுக்குகிறதே! இத்தகையை கொள்ளைக்காரருடன் கடவுள் கூடினால் கடவுள்-தன்மைக்கே அவமானமாகும்! சண்டை மூட்டி உலக சமாதானத்தைக் கெடுத்து மனிதருக்குக் கேடு சூழும் இத்தகைய நூலும் சாமியும் நபியும் எங்கிருந்து உதித்தன? வியப்பினும் வியப்பு! இத்தகைய சமயங்கள் இல்லாவிட்டால் உலகம் அமைதியாக ஆனந்தத்துடன் நடக்குமே! (81)

82. வானவர் காப்பிரிகளைப் பிடித்து முகத்திலும் முதுகிலும் அறைந்து, தீயில் வேகும் தண்டனையை அனுபவியுங்கள் என்பதை எக்காலமும் காண்பீராக. பாபத்தில் அவர்களை அழித்தோம். ஃபிர்ஔன் மரபை மூழ்க்கினோம் அவர்களுக்கு எதிராகக் கூடிய பலத்தைச் சேருங்கள். (ம. 2 : சி. 9 : சூ. 5 : ஆ. 50, 54, 60.)

ஆய்வு: என்ன ஐயா! துருக்கியை ரஷ்யாவும், எகிப்தை இங்கிலாந்தும் வென்றபோது இந்த வானோர் எங்கே தூங்கினர்? தன் அடியார் பகைவரைக் கடவுள் மூழ்க்குவது உண்மையானால் இப்போதும் அப்படிச் செய்ய வேண்டுமே; அப்படி நடக்கவில்லையே; ஆதலால் இந்தப் பேச்சு செல்லாது. இன்னும் பாருங்கள்: 'மற்ற மதத்தினருக்கு முடிந்த மட்டும் தொல்லை கொடுங்கள்' என்ற கட்டளை எவ்வளவு கெடுதல்! இத்தகைய தீய கட்டளை அறமும் பரிவும் கொண்ட அறிவாளியிடம் பிறக்காது. இதற்குமாறாகக் கடவுள் கருணை வள்ளல் என்றும் அவர்கள் எழுதுகின்றனர். இதனால் நீதி, இரக்கம் முதலிய பெருந்தன்மைகள் முஸ்லிம் சாமியிடமிருந்து வெகு தூரம் தள்ளியிருப்பது புலனாகிறது. (82)

83. ஏ. நபி! உனக்கு அல்லாஹ்வே போதும். உன்னைப் பின்பற்றும் முஸ்லிம் களுக்கும் அல்லாஹ்வே போதும். ஏ நபி! முஸ்லிம்களைப் போர் செய்யத் தூண்டு. உங்களுள் இருபது பேர் உறுதியாய் இருந்தால் இருநூறு பேரை வெல்லலாம். நீங்கள் அடித்த கொள்ளையிலிருந்து சாப்பிடுங்கள். நன்றாகவும் சுத்தமாகவும் சாப் பிடுங்கள். கடவுளை அஞ்சுங்கள். அவர் கருணையுள்ளவர். மன்னிப்பவர்.

(மா. 2 : சி. 10 : சு. 8 : ஆ. 64, 65, 69.)

ஆய்வு: என்ன நியாயம்! என்ன வித்தை! என்ன நேர்மை! அவன் பக்கத்தில் சேர வேண்டுமாம். அவனுடைய காரியம், அநியாயமானாலும் உதவ வேண்டுமாம்! ஜனங்களிடம் சண்டை தூண்டுவது, போராடச் சொல்லுவது, கொள்ளை யடித்த பொருளை நியாயம் என்பது—இப்படிப்பட்ட கடவுளைக் கருணையுள்ளவர், மன்னிப்பவர் என்பதா? இப்படிப்பட்ட உபதேசம், எந்த நல்ல மனிதனும் செய்ய மாட்டானே! கடவுள் செய்வாரா? இதனால் குரான் தெய்வ மொழி இல்லை என்பது புலனாகிறது. (83)

84. எப்போதும் அதிலேயே அவர்கள் இருக்கிறார். அது என்பது பெரிய நன்மை. ஓ ஜனங்களே! ஈமான் கொண்டவர்களே! காப்பிரிகள், நம்பாதவர்கள் உங்கள் தந்தையரானாலும் சரி, சகோதரர்களானாலும் சரி, அவர்களிடம் நட்பு வைத்துக்கொள்ள வேண்டாம்.

பிறகு அல்லாஹ், அவருடைய நபியின் மேல், தனது, உறுதிப்பாட்டை இறக் கினார். முஸ்லிம்களும் அதை உணரச் செய்தார். பிறகு, படைகளைக் கொண்டு வந்தார். நீங்கள் அவர்றைப் பார்க்கவில்லை. அவர்களைத் துன்புறுத்தினால், காப்பிரி களுக்கு இது நல்ல தண்டனை. அல்லாஹ், தனது அன்பர் பக்கம் இருக்கிறார். தன்னை நம்பாதவருக்கு எதிராகச் சண்டை போடுகிறார்.

(ம. 2 : சி. 10 : சு. 9 : ஆ. 22, 23, 26, 27, 29.)

ஆய்வு: கடவுள் சுவர்க்க வாசியுடன் இருப்பதானால், அவர், எங்கும் நிறைந்தவராக இருக்க முடியுமா? அவர், எங்கும் நிறைந்தவராக இல்லாவிட்டால், எப்படி சிருஷ்டி கர்த்தாவாக இருக்கமுடியும்? எப்படி நியாயவானாக இருக்க முடியும்? தந்தை, தாய், சகோதரர், அல்லது நண்பரை ஒருவர் மேல் ஒருவர் மோத விடுவது அநியாயம். அவர் களுடைய கெட்ட உபதேசத்தைப் பின்பற்றக் கூடாது தான். ஆனால், அவர்களைக் கவனிக்க வேண்டியது முறை யாகும். முன்னே, கடவுள், "முஸல்மான்களிடம் பிரியமாய் இருந்தார். அவர்களுக்குத் துணையாகப் படைகளை அனுப்பினார்." என்றால், இப்போது ஏன் அப்படி நடக்க வில்லை? முன்னே நம்பிக்கை இல்லாதவர்களை அவர்

தண்டித்தார். பிறகு அவர்கள்பால் சென்றார்; என்றால், இப்போது அவர் எங்கே? சண்டை போடாமல் கடவுள் நம்பிக்கை உண்டுபண்ண முடியாதா? இப்படிப்பட்ட கடவுளிடமிருந்து நாம் எப்பொழுதும் விலகி இருப்போம். அவர் கடவுளே இல்லை. அற்பத்தனமாக நடப்பவர். (84)

85. அல்லா, நேராகவோ, நமது மூலமாகவோ, உங்களை தண்டிக்கும் காலத்தை எதிர்பார்க்கிறோம். (ம. 2 : சி. 10 : சு. 9 : ஆ. 52.)

ஆய்வு: முஸ்லிம்கள் மட்டும்தானா கடவுளுக்கு போலீஸ்? மற்ற மதத்தினரை தன் கையால், அல்லது முஸ்லிம்கள் கையால் பிடிப்பது, ஒழிப்பது அவர் கடனா? முஸ்லிம்கள் அல்லாத கோடானுகோடி மக்கள், கடவுளுக்குப் பிரியமானவர் இல்லையா? பாவம் செய்யும் முஸ்லிம்களிடமும் கடவுளுக்குப் பிரியமா? அப்படியானால், இது இருட்டு நகரில் பித்தம் பிடித்த ராஜாவின் ஆட்சி போலாகும். அறிவாளிகளான முஸ்லிம்கள் கூட ஆதாரமற்ற, அறிவுக்குப் பொருந்தாத, இந்த மதத்தைப் பின்பற்றுவது ஆச்சரியமாய் இருக்கிறது! (85)

86. ஈமான் கொண்டவருள், ஆண்களுக்கும் பெண்களுக்கும் அல்லாஹ், நீரோட்டமுள்ள சுவர்க்கவாசத்தை வாக்களித்தார். அவர்கள் எப்போதும் அங்கே இருப்பார்கள். அங்கே, சுத்தமாக வீடுகள் இருக்கும். கடவுளின் இன்பமே, அவர்களுக்கு ஆசியாகும். அவர்களுடைய விருப்பமெல்லாம் நிறைவேறும். இது, மகத்தான செயல் அல்லவா? இப்போது அவர்கள் கடவுளை 'டாடா' செய்கிறார்கள். கடவுள், அவர்களை 'டாடா' செய்தார். (ம. 2 : சி. 10 : சு. 9 : ஆ. 72, 79.)

ஆய்வு: இது சுயநல விருப்பத்திற்காக, ஆண்களுக்கும் பெண்களுக்கும் கடவுள் காட்டும் வசியமாகும். இப்படி வசியம் காட்டாவிட்டால், யாரும் முகமதின் வலைகளில் விழுந்திருக்க மாட்டார்கள். மற்ற மதங்களும் இதையே செய்கின்றன. மனிதர் ஒருவருக்கொருவர் நிந்திப்பது இயற்கையே. அவ்வாறே, கடவுளும் நிந்திப்பது பிழையாகும். குரான் என்பது விளையாட்டு நூல் இல்லையா? (86)

87. நபியும், அவரை நம்பியவர்களும் மதப் போர்களில் பங்கு கொண்டு தங்கள் பொருளையும் உயிரையும் ஈந்தார்கள். அவர்களுக்கே ஆசிகள்! அல்லா அவர்களுடைய உள்ளங்களில், முத்திரை போட்டார். அதனால்தான் அது அவர்களுக்குத் தெரியாது. (ம. 2 : சி. 10 : சு. 9 : ஆ. 8, 93.)

ஆய்வு: பாருங்கள் இந்தச் சுயநலப் பாட்டை! முகமதை நம்புகிறவர்களே நல்லவர்களாம்! நம்பாதார் கெட்டவராம்!

இது மடத்தனமான ஓரகம் அல்லவா? கடவுள், அவர்கள் உள்ளத்தில் முத்திரை போட்டு விட்டதால், பாபங்களுக்கு அவர்கள் பொறுப்பில்லை. உள்ளங்களில் முத்திரை போட்டு நன்மை செய்யாமல் தடுத்தது அல்லாவின் பெருங் குற்றம்! எவ்வளவு அநியாயம்!! (87)

88. அவர்களுடைய பொருள்களை யெல்லாம் தருமமாக எடுத்துக்கொள். அவர்களை உள்ளும் புறமும், அதனால் சுத்தமாக்குக. அல்லாஹ், முஸ்லிம்களிடமிருந்து உயிர்களையும் பொருள்களையும் வாங்கிக்கொண்டு, அவற்றிற்குப் பதிலாக சுவர்க்கத்தைக் கொடுத்தார். அவர்கள், கடவுளுக்காகப் போர்புரிந்து கொல்லவோ, சாகவோ, உரியர். (ம. 2 : சி. 11 : சூ. 9 : ஆ. 103, 111.)

**ஆய்வு:** ஆகா! மகமது சாகெபூ! பலே! உமக்கும் கோகுல கோஸாயிகளுக்கும் வேறுபாடில்லை. அவர்களும் பக்தர்களின் பொருள்களை எடுத்துக்கொண்டு, அவர்களைச் சுத்தமாக்குகிறார்கள். பலே, கடவுளே! உமது வியாபாரம், எளிய மக்களை முஸ்லிம்களால் கொல்லச் செய்கிறது. எளிய அநாதைகளைக் கொல்லும் முஸ்லிம்களுக்கு மோட்சம் கொடுப்பதால், அல்லாஹ் கருணைக்கும் நீதிக்கும் கைகழுவி விட்டார்! இது கடவுட் தன்மைக்கே அவமானம்! அறிவாளிகளும் நீதிமான்களும் இதை அருவருக்கின்றனர். (88)

89. ஓ! ஜனங்களே! ஈமான் கொண்டவர்களே! உங்களுக்கு அருகில் உள்ள காபிர்களுடன் சண்டைபோடுங்கள். உங்கள் உறுதியை அவர்கள் அறியட்டும். ஆண்டுக்கு இரண்டொரு முறை அவர்கள் துன்பப்படுவதை நீங்கள் பார்க்கவில்லையா? அவர்கள் வருந்துவதும் இல்லை, திருந்துவதும் இல்லை.
(ம. 2 : சி. 11 : சூ. 9 : ஆ. 123, 126.)

**ஆய்வு:** இப்போது பாருங்கள்! நம்பிக்கை மோசடியை! அல்லாஹ் முஸ்லிம்களுக்குக் கற்பிக்கிறார். ஒரு மனிதன், பக்கத்து வீட்டுக்காரனானாலும் சரி, சேவகனானாலும் சரி, தொண்டன் ஆனாலும் சரி, அவனோடு சண்டை போட்டு, சமயம் வந்த போதெல்லாம் அவனை மோசம் செய்ய வேண்டுமாம்! முஸ்லிம்கள் அடிக்கடி இப்படிச் செய்கிறார்கள். முஸ்லிம்கள் குரானை நன்றாக ஆராய்ந்து, குரான் சொல்லும் தீங்குகளை விட்டொழித்தல் மிக்க நல்லது. (89)

90. அல்லாஹ் ஆறுநாட்களில் மண்ணையும் விண்ணையும் படைத்தார். பிறகு சுவர்க்க அரியணையில், சுகமாக இருந்தார். அவரே, உங்களைக் காப்பவர். அவர் நல்ல காரியத்தைச் சிந்திக்கிறார். (ம. 3 : சி. 11 : சூ. 10 : ஆ. 3.)

ஆய்வு: முதலில், ஆகாயமோ, அந்தரமோ அனுதியாய் என்றும் உள்ளது. அவை யாராலும் படைக்கப் பட்டதன்று. அவை, படைக்கப்பட்டதாகச் சொல்லுவது, குரான் ஆசிரியருக்கு 'பதார்த்த வித்தை' தெரியவில்லை என்பதைக் குறிக்கிறது. ஆறு நாளில் கடவுள் உலகைப் படைக்கிறரா? அப்படியானுல், அதுவும் குரானுக்கு விரோதமே. குரானில் "ஆகட்டும் என்ற என் கட்டளையால் உடனே ஆகிறது" என்று சொல்லுகிறது. அதனுல், ஆறுநாள் ஆகாது. ஆறு நாளில் உலகைப் படைப்பதற்கு ஆயிற்று என்பது பொய்யாகும். கடவுள் எங்கும் நிறைவானுல், வானத்தில் உட்காருவது ஏன்? ஒரு காரியத்திற்காக அவர் திட்டம் போடவேண்டுமானுல், அவர் சாதாரணமானவரே. முற்றறிவர் இல்லை. கடவுளை அறியாத, படிப்பில்லாத, யாரோ ஒருவர் எழுதிய நூல் இது. (90)

91. கல்வியும், தயவும் முஸல்மான்களுக்கே. (ம. 3 : சி. 11 : சூ. 10 : ஆ. 57.)

ஆய்வு: கடவுள் முஸல்மான்களுக்கு மட்டுமா? மற்றேருக்குமா? அப்படியானுல், அவர் ஓரகர். முஸல்மான்களுக்கு மட்டும் தயவு காட்டுபவர்! மற்றேருக்கு இல்லை. முஸல்மான்கள் என்ருல், நம்புகிறவர்கள் என்பதானுல், அவர்களுக்கு உபதேசம் தேவையேயில்லை. முஸல்மான் அல்லாதவர்களுக்கு அவருடைய அறிவுரை இல்லையென்ருல், கடவுள் அறிவே பயனில்லை. (91)

92. உங்களுள் யார் காரியத் திறமை உள்ளவர்கள் என்பதை அல்லா பார்க்கிருர். சாவிற்குப் பிறகு, நீங்கள் எழுந்துவிடுவீர்கள் என்று அப்போது சொல்லுகிறேன். (ம. 3 : சி. 11 : சூ. 11 : ஆ. 7.)

ஆய்வு: காரியங்களை சோதிப்பதானுல், அவர் எல்லாம் அறிந்தவரன்று. செத்த பிறகு எழுப்புவதானுல், அவர்களை தீர்ப்புக்காக வைத்திருப்பதும், யாருக்கும் மறுபிறப்பு இல்லை என்பதையும், மறுப்பதாகும். இது, கடவுளுக்கே அவமானமாகும். (92)

93. 'ஓ, பூமியே! தண்ணீரை எல்லாம் குடித்துவிடு. ஓ, வானே! மழை பெய்யாதே!' என்றதும் தண்ணீர் வற்றிப்போயிற்று.

இந்தப் பெண் ஒட்டகம், உங்களுக்கு ஒரு அறிகுறி. அதைச் சும்மாவிட்டு விடுங்கள். கடவுளின் பூமியில் அது உண்டு திரியட்டும்.

(ம. 3 : சி. 11 : சூ. 11 : ஆ. 44, 64)

ஆய்வு : என்ன சிறு பிள்ளைத்தனம்! பூமியும் வானும் கேட்ப
துண்டா? கடவுளுக்கு பெண் ஒட்டகம் இருந்தால், ஆண்
ஒட்டகமும் இருக்க வேண்டுமே! யானை, குதிரை, கழுதை
எல்லாம் இருக்கவேண்டுமே! பெண் ஒட்டகம் மட்டும்
வயல்களை மேயும்படி விடுவது நல்லதா? அவர் பெண்
ஒட்டகத்தின் மேல் சவாரி செய்கிறாரா? அப்படியானால்,
கடவுளும் நவாபுகளைப்போல, தடபுடல் தர்பார் நடத்துகிறார்
என்றாகிறது. (93)

94. விண்ணும் மண்ணும் உள்ளவரையில் அவர்களும் இருப்பார்கள்.
அவர்கள் திருப்தியுள்ளவர்கள். சுவர்க்கத்தில் அனுமதிக்கப்படுவார்கள். அங்கும்,
விண்ணும் மண்ணும் உள்ளவரையில் அவர்கள் வாழ்வார்கள்.
(ம. 3 : சி. 12 : சூ. 11 : ஆ. 108, 109.)

ஆய்வு : கயாமத்திற்குப் (மீண்டும் எழுதல்) பிறகு எல்லோரும்
நரகத்திற்கோ, சுவர்க்கத்திற்கோ செல்வார்களாம்! அப்படி
யானால், மண்ணும் விண்ணும் எதற்காக? அவர்கள் நரகத்
திலும் சுவர்க்கத்திலும் வசிப்பது மண்ணும் விண்ணும்
இருக்குமட்டும் என்றால், அவர்கள் எப்பொழுதும் சுவர்க்க
நரகத்தில் இருப்பார்கள் என்பது பிசகு. இவை படிக்காத
வர்களின் சொற்கள். இவற்றைக் கடவுளோ, புத்திமான்
களோ சொல்லமாட்டார்கள். (94)

95. "என் தந்தையை என்கனவில் கண்டேன்" என்று யோசேப்பு தன் தந்தை
யிடம் கூறினபோது... (ம. 3 : சி. 12 : சூ. 13 : ஆ. 4-16.)

ஆய்வு : இந்த அதிகாரத்தில், தந்தைக்கும் மகனுக்கும், வினா-
விடையாக ஒரு கதை இருக்கிறது. அதனால், குரான்,
தெய்வ வாக்கல்ல. மனிதர் வரலாற்றை ஏதோ ஒரு மனிதன்
சொல்லுவதேயாகும். (95)

96. அல்லாஹ்வே தூண்கள் இல்லாமல் சுவர்க்கத்தை அமைத்து அரியணை
வகித்தார். அவரே சூரிய சந்திரரைக் கடமைக்கு ஏவினார். அவரே பூமியுலகை
ஆக்கினார். அவரே வானின்று மழைநீர் பொழிந்து ஆறுக அளவாக ஓடச்செய்தார்.
அல்லாஹ்வே தன் விருப்பப்படி உணவை ஒருவருக்கு நிறைவாகவோ, ஒருவருக்குக்
குறைவாகவோ தருகிறார். (ம. 3 : சி. 13 : சூ. 15 : ஆ. 2, 3, 17, 26.)

ஆய்வு : முஸல்மான் கடவுளுக்கு பௌதிக ஞானம் சிறிதும்
இல்லை போலும்! தெரிந்தால் தூண்கள் பற்றிப் பேச
மாட்டார். ஏனெனில், வான் கனமானதில்லை. கடவுள்
வானத்திலேயே அரியணை வகித்து அமர்ந்தால் எங்கும்

இருப்பதும், எல்லாம் அறிவதும் பொய்யாகுமே. கடவுளுக்கு மேக விஞ்ஞானம் தெரிந்தால் வானிலிருந்து நீர் இறங்கியதை சொன்னவர், முதலில் உலகைச் சுற்றிய கடலிலிருந்தே மேகம் உயரச் செல்வதைக் குறித்திருப்பார். குரான் எழுதியவருக்கு மேகம் உண்டாகும் விதம் தெரியாது போலும். முன்வினைப் பயனில்லாமல் இஷ்டப்படி சுக துக்கங்களைத் தருவது ஓரகமும் அறியாமையும் அநியாயமுமாகும். (96)

97. விரும்பியவரை அல்லாஹ் குமார்க்கத்தில் உய்ப்பார். தன்பால் திரும்பினோரைத் தன்னிடமே உய்ப்பார். (ம. 3 : சி. 13 : சூ. 13 : ஆ. 27.)

ஆய்வு : அல்லாஹ் ஒருவரைக் குமார்க்கத்தில் உய்த்தால், அவருக்கும் சைத்தானுக்கும் பேதமென்ன? தீ வழி நடத்தும் சைத்தானைக் கண்டிப்பவர் அதே மாதிரியே நடக்கும் அல்லாஹ்வை ஏன் கண்டிக்கக் கூடாது? தீ வழி நடத்தும் அவரை ஏன் நரகத்தில் தள்ளக்கூடாது? (97)

98. நற்செய்தி தருவதே நின் கடன்; கணக்கு வைத்து விசாரிப்பது எனது கடமை. (ம. 3 : சி. 13 : சூ. 13 ஆ. : 37, 40.)

ஆய்வு : குரான் எந்தப் பக்கத்திலிருந்து இறங்கியது? கடவுள் மேலேதான் இருக்கிறாரா? அவர் எல்லைக்குட்பட்டிருந்தால் கடவுள் ஆகார். கடவுள் மேலேதான் இருக்கிறாரா? அப்படியானால் அவர் ஏகதேசி; சர்வதேசியன்று. ஒரே இடத்தவன் கடவுளல்லன். ஏனெனில் கடவுள் எங்கும் இருப்பவர். செய்தி அனுப்புவது சிறுவிஷயம். ஏதாவது ஏகதேச மனிதர் மூலம் அதை அனுப்பலாம். கணக்குத் தருவதும் பெறுவதும் மனிதர் காரியம்; கடவுள் காரியம் அன்று. ஏனெனில் கடவுள் எல்லாம் அறிந்தவர். இதனால் குரான் ஏதோ சிற்றறி மனிதன் செய்தது எனத் தெரிகிறது. (98)

99. அவனே சூரிய சந்திரரை எப்போதும் சுற்றச் செய்தான். நிச்சயமாக மனிதன் அநியாயப்பாவி. (மா. 3 : சி. 13 : சூ. 14 : ஆ. 33, 34.)

ஆய்வு : சூரியனும் சந்திரனும் சுற்றுகின்றனவா? உலகம் சுற்றவில்லையா? உலகம் சுழலாவிட்டால் இரவும் பகலும் பல்லாண்டு இராவே. மனிதன் இயல்பாகவே அநியாயப் பாவியானால், குரானைப் போதிப்பது வீணே. இயல்பிலேயே மனிதர் பாவிகளானால் அவருள் புண்ணியவானே இருக்க

மாட்டான். நாம் புண்ணியரையும் பாவிகளையும் பார்க்கி றோம். ஆதலால் இந்தப் பேச்சு கடவுள் நூலுக்குப் பொருந்தாது. (99)

100. நாம் ஆதாமை உருவாக்கி அவனுள் நமது ஆவியை ஊதினோம். அவனை நீ விழுந்து வணங்கு.

(பிசாசு) ஏ கடவுளே, நீ என்னை வஞ்சித்த நாளும் அவர்களை வஞ்சித்து வசப் படுத்தி, உன்னை வணங்காமற் செய்வேன். (ம. 3 : சி. 14 : சூ. 15 : ஆ. 29, 39.)

ஆய்வு : ஆதாம் சாகெபுள் கடவுள் தன் ஆவியை ஊதினால், அவனும் கடவுளாகிறான். அப்படி யில்லாவிட்டால் தனக்குச் சரியாக அவனை ஏன் வணங்கச் சொல்லுகிறார். கடவுளே சைத்தானை வஞ்சிப்பவரானால் கடவுள் பெரிய சைத்தானாக, அவனுக்கும் அண்ணாவாக, குருவாக இருக்கவேண்டும்! நான் வஞ்சிப்பேன், என்று செருக்காடும் சைத்தானை அவர் ஏன் தண்டிக்கவில்லை; அல்லது சிறையிடவில்லை, கொல்ல வில்லை? (100)

101. நிச்சயமாக ஒவ்வொரு சமுதாயத்திற்கும் ஒரு நபியை அனுப்பியுள்ளோம். எதற்கும் நமது பேச்சு "ஆகுக" என்பது; நாம் விரும்பியது ஆகும். (ம. 3 : சி. 14 : சூ. 16 : ஆ. 36, 40.)

ஆய்வு : எல்லாச் சமுதாயங்களுக்கும் நபி (பைகம்பர்)களை அனுப்பியுள்ளாராம். அப்படியானால் அவரவர் தீர்க்க தரிசிகளைப் பணிவோரைக் காபிரிகள் என்பதேன்? உமது நபியைத்தான் மதிக்கவேண்டுமா என்ன? எல்லாச் சமுதா யங்களுக்கும் நபிகளை அனுப்பியபோது ஆரிய நாட்டிற்கு எந்த நபியை அனுப்பினார்? ஆகவே இவ்வார்த்தைகள் நம்பத் தகுந்தவையல்ல. 'உலகே ஆகுக' என்றாராம். உலகு ஜடம்; அது கேட்குமா? கேளாவிட்டால் கடவுள் ஆணை நடக்குமா? கடவுளைத் தவிர வேறெதிலும் நம்பிக்கை யில்லாதபோது, ஆணையைக் கேட்டது எது? ஆனது என்ன? இதெல்லாம் மடமை; அறிவிலிகளே இவற்றை நம்புவர். (101)

102. 'அல்லாஹ்வுக்குத் தூய பெண்கள் இருப்பதாகச் சொல்லுகிறார்கள். தூதர்களை அனுப்பியுள்ளோம். அவரவர் ஆசை அவரவருக்கு கடவுளாணை! (ம. 3 : சி. 14 : சூ. 16 : ஆ. 57, 63.)

ஆய்வு : அல்லாஹ் புத்திரிகளை வைத்துக் கொண்டு என்ன செய்வார்? மனிதருக்குப் புத்திரிகள் வேண்டும். புத்திரரை

ஏன் சொல்லவில்லை? புத்திரிகள் ஏன்? காரணம் என்ன? ஆணை வைப்பது பொய்யர் வழக்கு. கடவுளுக்கு வழக்கில்லை. பொய்யரே ஆணை வைக்க உலகிற் காண்கின்றோம். சத்தியவான் ஏன் ஆணை வைக்க வேண்டும்? (102)

103. மனம், காது, கண்களில் அல்லாஹ் முத்திரை வைத்தவர் இவர்களே. இவர்கள் மதிட பற்றவர்கள். ஒவ்வொரு ஜீவனும் வினைக்கேற்ற விளைவைப் பெறும். ஏதும் அநியாய முறுது. (ம. 3 : சி. 14 : சூ. 16 : ஆ. 108, 111.)

ஆய்வு: கடவுளே முத்திரை வைத்தாராம்! அப்பாவி ஜீவர்! ஒரு பாபமும் அறியார். வதையுண்டார்! அவர்கள் ஏதும் செய்ய முடியவில்லை! என்ன அநியாயம்! அததன் செயலுக்கேற்ற பலனே ஒவ்வொரு ஜீவனும் பெறுமாம்; இதில் குறை நிறையிராது. அவர்களுக்குப் பாபம் செய்யும் உரிமையில்லை. அவர்கள் செய்ததெல்லாம் கடவுள் செயல்; அவர்கள் பராதீனர்! அவரவர் செயலுக்கேற்றபடி அளவாகத் தரப்படுமாம். அவர்கள் பாபம் செய்யவும் சுதந்திரமில்லை. அதுகூடக் கடவுளின் இச்சைப்படியே. ஆதலால் தண்டனை அவர்களுக்குக் கூடாது. கடவுளுக்கே தகும். அவர்களுக்கு முழுதாகக் கொடுத்த பிறகு மன்னிப்பால் பயனென்ன? மன்னிப்பதும் நியாயமில்லை. இப்படிப்பட்ட அட்டூழியங்களை இறைவன் என்றும் செய்யான்; அறியாப் பையன்கள் செய்வதேயாகும். (103)

104. (1) நம்பாதாரைச் சிறையிட நரகத்தை ஆக்கினோம். (2) அவரவர் விதி அவரவர் கழுத்தில்; மீட்பு நாளொன்று ஒரு புத்தகத்தைத் திறந்து தருவோம். (3) நோவாவுகுப் பிறகு எத்தனை தலைமுறைகள் கழிந்தன!

ஆய்வு: (1) குரான், நபி, குரான் அல்லாஹ், ஏழு சொர்க்கங்கள், நமாஸ்—இவற்றை நம்பாதவர்கள் காப்பிரிகளாம்! அவர்களுக்கு நரகமாம். இது அநியாயம்! ஏனென்றால் குரானை நம்புகிறவர்கள் எல்லோரும் நல்லவர்களில்லை. நம்பாதவர்களும் கெட்டவர்கள் இல்லை. (2) 'ஒவ்வொருவர் கழுத்திலும் கர்மப் புத்தகம் தொங்கவிட்டிருக்கிறது' என்பது சிறு பிள்ளைத்தனமாக இருக்கிறது. கர்ம புத்தகத்தை நாம் யார் கழுத்திலும் பார்க்கவில்லை. கர்ம பலன் என்று வைத்துக்கொண்டால், பிறகு மனதிலும் கண்ணிலும் முத்திரை போடும் மூடத்தனமேன்? பாபங்களை மன்னிப்பதாம்? தீர்ப்பு நாளில் புத்தகத்தை, விவரித்துக் காட்டு

வாராம். அந்தப் புத்தகம் இப்போது எங்கே? கடவுள் அதை ஒரு பேங்கரின் பேரேடு போல எழுதுகிறாரா? மறு பிறப்பு இல்லை என்றால், முன் வினைகளையெல்லாம் கணக்கிடுவதில் என்ன பயன்? செயல்கள் இல்லாமல், கணக்கு வைப்பதில் நியாயம் இல்லை. முன் வினைகள் இல்லாமல் இன்ப துன்பங்கள் எப்படி வந்தன? கடவுள் தன் இச்சைப் படி நடக்கிறார் என்பது நியாயமாகாது. நல்லது, பொல்லதை, குறை நிறையைக் கவனிக்காமல், பலனைத் தருவது சரியன்று. இன்னொரு விஷயம். கடவுள் இந்தக் கர்ம நூலை தானே படிக்கிறாரா? அல்லது படிப்பதற்கு ஒரு குமாஸ்தா வைத்திருக்கிறாரா? (3) கடவுள் நோவாவுக்குப் பிறகு வந்த நீண்ட பரம்பரைகளை அழித்தார் என்றால் அது அநியாயம். அநியாயக்காரன் கடவுளாய் இருக்கவே முடியாது. (104)

105. (1) நான் சமுதுக்கு பெண் ஒட்டகத்தைக் காட்டித் தந்தோம்.

(2) முடிந்தவர்களை எல்லாம் வசப்படுத்துக.

(3) ஒருநாள் எல்லாரையும் அவர்களுடைய பேரேட்டுடன் அழைப்போம். ஒவ்வொருவருக்கும் அவருடைய வலது கையில் புத்தகம் கொடுக்கப்படும்.

(ம. 4 : சி. 15 : சூ. 17 : ஆ. 59, 64, 71.)

**ஆய்வு :** (1) என்ன விநோதம்! கடவுள் இருக்கிறார் என்பதைக் காட்ட எத்தனையோ தெய்வீக அற்புதங்கள் இருக்கின்றனவே. அல்லாஹ் தன் வல்லமையை ருசுபடுத்த ஒரு பெண் ஒட்டகத்தைக் காட்டுகிறார்! (2) அல்லாஹ், சைத்தானுக்கு ஏமாற்றும் கட்டளை தந்தார் என்றால், அவர் ஏன் சைத்தான் தலைவராய் இருக்க வேண்டும்? அவரே பாபத்தை ஏன் தூண்டவேண்டும்? அப்படிப்பட்டவரை முட்டாள்களே 'கடவுள்' என்பார். (3) தீர்ப்பு நாள் அன்று தான் நபிகளையும், அவர்கள் உபதேசத்தைப் பின்பற்றுவோரையும், அல்லாஹ் நியாயம் தருவதற்கு அழைக்கிறாராம்! என்றால், அந்தப் பிரளயம் வரும் வரையில் அவர்கள், விசாரணையிலே இருப்பார்களா? நீண்டகாலம் விசாரணையில் இருப்பது மிகத் தொல்லை அல்லவா? நீதிபதிகள் வழக்குகளை 'சட்பட்' என்று தீர்ப்பது முக்கிய கடமை. குரான் சொல்லும் நீதி வாப்பன் பாய் நீதிபோல இருக்கிறதே. எல்லாக் குற்றவாளிகளும் நல்லது செய்வோரும் கூட, 50 வருடம் கழித்து விசாரணைக்கு கூட்டப்படுவார்கள்

என்றால், அப்போதுதான் அவர்களுக்கு, நல்ல தீர்ப்பும் தண்டனையும் தரப்படும் என்றால்—இது கேலிக் கூத்தாகும். ஒருவன் 50-வருடம் விசாரணையில் இருப்பான், இன்னொருவன் குற்றம் நடந்த அன்றே கைது செய்யப் படுவான் என்பது நியாயமில்லை. வேதத்திலும், மனுஸ்மிருதியிலும் உண்மையான நீதிமுறை உள்ளது. அதில் ஒவ்வொரு நொடியும், ஒவ்வொரு மனிதனும், தனது புண்ணிய பாவங்களுக்கு உடனுடன் நன்மையும், தண்டனையும் பெறுகிறான். இதுதான் நியாயம். விசாரணையின் போது, சாட்சிக்காக நபிகளும் இருக்கிறார் என்றால், கடவுளின் முற்றறிவிற்கு இது மாசாகும். இத்தகைய நூல், தெய்வ நூலாக இருக்க முடியாது. அத்தகைய உபதேசமளிக்கும் நூலின் ஆசிரியரும் கடவுளாக இருக்க முடியாது. (105)

106. அவர்களுக்கு, நீரோட்டமுள்ள தோட்டங்கள் என்றும் உள்ளன. அவர்களுக்கு பொன்னணிகள் சூட்டப்படும். பச்சை பட்டுடைகள் அணிவிக்கப்படும். அவர்கள் அங்கே அரியணை வகிப்பார்கள். ஆகா! என்ன பரிசு! எவ்வளவு சுகமான படுக்கை! (ம. 4 : சி. 15 : சூ. 18, ஆ. 32)

**ஆய்வு:** பலே! குரானின் சொர்க்கம் போலித்தனமாக இருக்கிறதே! தோட்டங்கள், அணிமணிகள், பட்டுகள் தலையணைகள், மெத்தைகள் எல்லாம் சுகவாசத்திற்காக. சிறிது சிந்தித்துப் பாருங்கள். இங்கே இருக்கும் சுகபோகங்களில் சுவர்க்கத்தில் ஏதாவது அதிகம் இருக்கிறதா? அநீதிதான் அதிகம். அவர் செயல் குறுகியது. பலன் மிகுதியானது. ஒவ்வொரு நாளும், மிட்டாய் சாப்பிட்டுக் கொண்டே இருந்தால், அது விஷம்போல் தெவிட்டிப் போகாதா? ஓயாத போகத்தால் போகமே துன்பமாய் விடும். ஒரு மகா கல்பம் வரையில், மோட்சத்தை அனுபவித்தாலும், மறுபிறப்பு உண்டென்பதே உண்மை. (106)

107. அந்த ஊர்களை எல்லாம் நாம் அழித்தோம். அந்த அநியாயக்காரரை அழிக்க, காலம் குறித்திருந்தோம். (ம. 4 : சி. 15 : சூ. 18 : ஆ. 59)

**ஆய்வு:** எல்லா நகர்களிலும் பாவிகளே இருக்க முடியுமா? பாவத்திற்குப் பிறகு அவர்களுடைய அழிவை குறித்தார் என்றால், கடவுளுக்கு முற்றறிவு இல்லை என்றாகிறது. பாபத்தை கண்டறிந்த பிறகே, தண்டனைக்குக் காலம்

குறித்தார்; அதற்கு முன் அவர் அறியவில்லை. இது அவர் இரக்கமின்மையைக் காட்டுகிறது. (107)

108. (1) பெற்றோர்கள், ஈமான் கொண்டவர்கள். பிள்ளை, இளைஞன். அவன் அவர்களை, காட்பிரகளாக்கி, கிளர்ச்சி செய்வான்—என்று நாம் அஞ்சுனேம்.

(2) சூரியன் அஸ்தமனமாகும் இடத்திற்கு அவன் வரும் வரையில்.

(3) ஓ துல்கர்னேன்—கடவுளும், தொண்டரும், நாட்டில் சமாதானத் தைக் கெடுக்கிறார்கள். (ம. 4 : சி. 16 : சூ. 18 : ஆ. 80, 86, 94.)

ஆய்வு : (1) இந்த கடவுள் எவ்வளவு அறிவற்றவர்! அந்த வாலிபன் தன் பெற்றோரைத் தன் (அல்லாஹ்வின்) மார்க்கம் விட்டு வேறு தப்பு வழியில் நடத்துவான், என்று சந்தேகிக் கிறார்; அவனை ஒழிக்க சூழ்ச்சி செய்கிறார். கடவுள் இப்படிச் செய்பவரா? (2) இன்னொரு மடமையைப் பாருங்கள்: சூரியன் ஒரு ஏரியில் அஸ்தமித்து, காலையில் எழுந்திருக்கிறதாம். பூமியைவிடச் சூரியன் எவ்வளவோ பங்கு பெரியது. அது எப்படி ஒரு ஆறு, ஏரி, அல்லது கடலில்கூட மூழ்கமுடியும். இது, குரான் ஆசிரியருக்கு பூகோளமோ, வான நூலோ தெரியாதெனா விளக்குகிறது. அவருக்கு அப்படி அறிவிருந்தால் இந்த மாதிரி எழுதி யிருக்கமாட்டார். இந்த நூல்களை நம்புகிறவர்களும், விஞ் ஞான அறிவில்லாதவர்கள். இன்றேல், அவர்கள் இப்படி அர்த்தமற்ற விஷயங்களை நம்பி இருக்கமாட்டார்கள். (3) கடவுளின் அரசாட்சியைப் பாருங்கள். அவரே, உலகைப் படைத்தவர். அவரே அரசன், அவரே நீதிபதி, அவரே முரடரை ஏவி, உலகில் முரட்டுத்தனமான கலகங் களைக் கிளப்புகிறார்! இது கடவுளின் தன்மையா? முற் றிலும் கடவுள் தன்மைக்கு விரோதமானது? படிப்பில்லா தவர்கள் தான் இப்படிப்பட்ட நூல்களை மதிப்பார்கள். வித்வான்கள் மதிக்கவே மாட்டார்கள். (108)

109. (1) புத்தகத்தில், மேரியை நினையுங்கள். அவள் குடும்பத்தினின்று விலகி, கிழக்கே ஓரிடம் செல்லுகின்றாள்.

(2) அவள், அவர்களிடமிருந்து. ஒரு படுதாவை எடுத்துச் செல்லுகிறாள். நமது ஆவியை, அவளுக்கு அனுப்பினோம். அந்த ஆவி, ஒரு பூரண மனிதனுக் காட்சியளித்தது.

(3) உன்னிடமிருந்து ஓடி, இரக்கமுள்ள ஒருவனைப் புகலடைவேன்—என்றாள். நீ புனிதன்.

(4) அவன், உன் கடவுளின் தூதன். நான் உனக்கு ஒரு புனிதமான மகனைத்தரவே வந்தேன்.

(5) அவள், நான் ஏகபடாக் கன்னி. எப்படி மகனைப் பெறுவேன்? நான் விபசாரி இல்லை.

(6) அவள் கருவுற்றாள். அவனுடன், காட்டிற்குச் சென்றாள்.

(ம. 4 : சி. 16 : சூ. 19 : ஆ. 16, 17, 18, 19, 20, 22)

ஆய்வு : தூதர்கள் கடவுளின் ஆவியானால், அவனிடமிருந்து வேறல்லர். கன்னி மேரி எப்படிக் கர்ப்பமானாள்? இது அநியாயம். அவள் யாருடனும் சேர விரும்பவில்லை. தேவதூதன், கடவுள் கட்டளைப்படி, அவளைக் கர்ப்பவதி ஆக்கினான். இது நியாயத்திற்கு முரணானது. இதைப் பற்றிப் பல முரணான பண்பற்ற விஷயங்கள் எழுதப்பட்டுள்ளன. இங்கே அவற்றை விவரிக்க நான் விரும்பவில்லை. (109)

110. காபிரிகளுக்கு எதிராக சைத்தான்களை ஏவி விடுகிறோமே; ஏவிவிட்டு அவர்களைத் தூண்டுகிறோம் உனக்குத் தெரியாதா?

(ம. 4 : சி. 16 : சூ. 19 : ஆ. 83)

ஆய்வு : கடவுளே சைத்தான்களைத் தூண்டுவிடுகிறாராம்; பிறகு காப்பிரிகள் குற்றவாளிகளா? தண்டனைக்கு உரியவரா? சைதான்களும் தண்டனைக் குரியவரல்லர். ஏனெனில் அவர்களும் கடவுள் தூண்டுதலின்படியே நடக்கின்றனர். தண்டனை கடவுளுக்கே. நேர்மையானவனானால் கடவுளே நரக வேதனைப்படவேண்டும். அநியாயியானால் அவரே பாபியாவார். (110)

111. ஈமான்கொண்டு, பிழை வருந்தினோருக்கு என் அருள் கூடும். அவர்கள் தருமத்தை நேர்மையாகக் கடைப்பிடிப்பவர் ஆவார்.

(ம. 4 : சி. 16 : சூ. 20 : ஆ. 82)

ஆய்வு : பிழைவருந்த மன்னிப்பது குரானில் உள்ளது; அது மனிதரை இன்னும் பாவிகளாக்கும். மன்னித்தல் மீதும் பாபத்தைத் தூண்டும்; இந்த நூலும், அதன் ஆசிரியரும் மக்களைப் பாபம் செய்யவே தூண்டுகின்றனர். ஆதலால் இது தெய்வ நூல் அன்று; அதன் கடவுளும் கடவுளன்று. (111)

112. உலகம் அசையாதபடி இடையே மலைகளை வைத்தோம்.

(ம. 4 : சி. 17 : சூ. 21 : ஆ. 31)

ஆய்வு : மலையை வைத்ததால் உலகம் அசையவில்லையாம்! உலகம் சுற்றுவதைக் குரான் ஆசிரியர் அறிந்தால் இப்படிச் சொல்லியிருக்கமாட்டார். மலையிருப்பதால் உலகம் அசையாதாம்! பூகம்பத்தால் பூமி அசைவதேனோ? (112)

113. யோனியைப் பாதுகாக்கப் பெண்களுக்குக் கற்பித்தோம். அதில் நமது ஆவியை ஊதினோம். (ம. 4 : சி. 17 : சூ. 21 : ஆ. 91)

ஆய்வு : தெய்வ நூலில் இந்தக் கொச்சையா! பண்பாடுள்ள மனிதர் நூலிற் கூட இப்படி யிராதே! மனிதர் இப்படி எழுதத் தகாது; எனில் கடவுள் எப்படி எழுதினாரோ! இது குரானுக்கே கெட்ட பெயர். அதில் நல்லது இருந்தால் வேதம் போலப் பெருமை பெற்றிருக்குமே. (113)

114. (1) மண்ணிலும் விண்ணிலும் எல்லாம் கடவுளை வணங்குவன— அறியாயா? இரவு, மதி, நாண்கள், மலைகள், மரங்கள், விலங்குகள்—எல்லாம்!

(2) அவையெல்லாம் தங்கக் காப்புகள், முத்துக்கள், பட்டுடைகளால் அணிவிக்கப்படும்.

(3) வருகிறவர் இருக்கிறவர், நிற்பவருக்காக என் வீட்டைச் சுத்தம் செய்து வை.

(4) பிறகு குப்பையை நீக்கி, பலிக் கடமை செலுத்தி, அந்தப் பழைய வீட்டை விடவேண்டும்.

(5) அவர்கள் கடவுள் பெயரைக் கொண்டாடலாம்.

(ம. 4 : சி. 17 : சூ. 22 : ஆ. 18, 23, 26, 39, 34.)

ஆய்வு : (1) அஃறிணைப் பொருள்கள் அறிவற்றவை; அவை எப்படிக் கடவுளை அணியுறுத்தும்? ஆதலின் இது தெய்வ நூல் அன்று; அறிவற்றவன் செய்தது. (2) தங்க நகைகள், முத்து, பட்டணிகள் மிளிரும் சுவர்க்கம் அழகுதான்! ஆனால் இந்த சுவர்க்கம் அரசர் அரண்மனையைவிட மேலானதாக தெரியவில்லையே! (3) கடவுளுக்கு வீடிருந்தால் அவர் அதில் வசிக்க வேண்டுமே. இது உருவணக்கம் அல்லவா? மற்றவர் உருத் தொழுகையை ஏன் நீர் ஏசுகிறீர்? கடவுள் நேத்திக் கடனை ஏற்கிறார்; உண்ண உயிர்க் கொலையைச் சம்மதிக்கிறார்; என்றால் இது பலிபோடும் இந்துக் கோயில்களைப் போலத்தான். சிற்றுருவினும் மசூதி பேருருவாகும். அப்படியானால் முஸ்லிம்கள் பெரிய உருவணங்கிகள்; புராண இந்துக்கள் சிறிய உருத்தொழுகையராவார் எனத் தெரிகிறது. (114)

115. பிறகு கயாமத்து நாளில், நிச்சயமாக நீ மீண்டெழுவாய்.

(ம. 4 : சி. 18 : சூ. 23 : ஆ. 16)

ஆய்வு : மீண்டு எழுமட்டும் (கயாமத்வரை) பிணம் புதைகுழி யில் அப்படியே இருக்குமா? அல்லது வேறு இடத்திலா? புதைகுழியில் அப்படியே இருக்குமானால், நல்லவர்கள் கூட அந்த அழுகல் நாற்றப் பிணமாகத்தான் இருந்து துன்புறு வார்கள். இந்த நீதி, அநீதியாகும். இந்த நாற்றம் நோய் தரும். முஸ்லிம்களும் அவர் அல்லாவுமே இந்தப் பாவத் திற்குப் பொறுப்பாவர். (115)

116. (1) ஒரு நாள் அவர்களுடைய நாவே, அவர்களுக்கு எதிராகச் சாட்சி சொல்லும். அவர்களுடைய கை கால்களே, அவர்கள் செயலைக் கூவும்.

(2) அல்லாஹ்வே, மண்ணுக்கும் விண்ணுக்கும் ஒளி. அது ஒரு கூண்டில் கண்ணாடி விளக்குபோல ஒளிரும். கண்ணாடி நட்சத்திரம் போல மின்னும். அது, ஒரு இன்பமான ஆலிவ் எண்ணெயால் ஏற்றப்படும். அந்த எண்ணெய் கிழக்கிலும் மேற்கிலும் கிடையாது. அந்த எண்ணெய் சிறிது இருந்தாலே போதும். அது ஒளிக்கு ஒளியாக தீப்பிழம்பாகப் பொலியும். நெருப்பின்றியே அது எரியும். கடவுள், தனக்கு விருப்பமானவரை, அந்த ஒளியை நோக்கி நடத்துவார்.

(ம. 3 : சி. 18 : சூ. 24 : ஆ. 24, 34.)

ஆய்வு : கையும் காலும் உயிரற்ற ஜடங்கள். அவை சாட்சி சொல்ல முடியாது. இது இயற்கைக்கு விரோதமான பொய். கடவுள் தீயா, மின்சாரமா? இந்த உதாரணம் கடவுளுக்குப் பொருத்தமில்லை. இது உருவான ஒன்றிற்கே பொருத்தமாகும். (116)

117. (1) கடவுள், எல்லா நீர்வாழும் உயிர்களையும் படைத்தார். அவற்றில் ஒன்று வயிற்றால் ஊருகிறது.

(2) 'கடவுளைப் பணி. ரசூலைப் பணி.' என்று சொல்.

(3) உனக்கு இரக்கம் வேண்டுமென்றால், ரசூலைப் பணிந்து நட.

(ம. 4: சி . 18 : சூ. 24 : ஆ. 45, 52, 54, 55)

ஆய்வு : (1) இது என்ன தத்துவம்? நீரிலிருந்தே உயிர்கள் உண்டாக்கப்பட்டனவாம். எல்லாம் உயிர்களும் பஞ்சபூதச் சேர்க்கைகளே. ஆகவே இது அறிவற்றபேச்சு (2) ரசூலைப் பற்றி அடிக்கடி சொல்லுவானேன்? அவரை அல்லாஹ் பெய ருடன் சேர்ப்பானேன்? அவர் அல்லாஹ்வுடன் சரிநிகரா? அப்படியானால், கடவுள் இணையற்றவர், நிகரற்றவர் என்று குரான் சொல்லுவதேனோ? (117)

118. (1) அந்த நாளில் வானம் மேகங்களால் பிளக்கும். வானோர், கீழே அனுப்பப்படுவர்.

(2) காப்பிரிகளைப் பணியாதீர். அவர்களை எதிருங்கள். பலமாக எதிருங்கள்.

(3) அவர்களுடைய தீமைகளை நன்மைகளாக கடவுள் மாற்றுவார்.

(4) பிழைவருந்தி, நேர்மையாக நடப்பவர், அல்லாஹ்வுடன் அளவளாவுவர். அவர்கள், கடவுளின்பால் திரும்புவர்.

(ம. 4 : சி. 19 : சூ. 25, ஆ. 25, 52, 70, 71.)

ஆய்வு : (1) மேகங்கள் வானைப் பிளப்பது ஒருக்காலும் உண்மையாகாது. வானம் ஒரு உருப்பொருள் அன்று; அது பிளக்காது. (2) முஸ்லிம்களின் குரான், சண்டையைத் தூண்டி அமைதியைக் கெடுக்கிறது. அதனாலே தான் அறிவாளிகள் அதை நம்புவதில்லை. (3) நன்மைக்கும் தீமைக்கும் மாற்று உண்டா? (பாபம் புண்ணியமாகவும், புண்ணியம் பாபமாகவும் மாறுவதுண்டா?) அவை, எள்ளும் பருப்பும் போன்ற சாமான்கள் இல்லை. (4) பிழை வருந்துவதால் பாபம் போகுமானால், அதனால் கடவுளை அடைவதானால், பாபம் செய்ய யாரும் அஞ்சமாட்டார்கள். அதனால் இவை யெல்லாம் பகுத்தறிவிற்கு விரோதமானவை. (118)

119. (1) நான் மூசாவிற்கு அருள் விளக்கிப் பேசினேன். இரவில் எனது சேவகருடன் முன்னே செல். ஏனெனில் நம்மைப் பகைவர் பின் தொடர்கிறார்கள்.

(2) பரோவா நகர நடுவே, கூட்டம் கூட்டுகிறார்.

(3) யார் என்னைப் படைத்தவர்? யார் என்னை நடத்துகிறார்?

(4) எனக்கு, உணவையும் நீரையும் கொடுப்பது யார்?

(5) தீர்ப்பு நாளன்று என் பாவங்களை மன்னிப்பது யார்?

(ம. 5 : சி. 19 : சூ. 26 : ஆ. 52, 53, 78, 79, 82.)

ஆய்வு : (1) கடவுள் மூசாவுக்கு முன்பே அருள் விளக்கம் செய்தும், அதன் பிறகும் மறுபடியும் தாவீது, கிறிஸ்து, முகமது—ஆகியோருக்கு நூல்களை அனுப்ப வேண்டிய அவசியம் என்ன? கடவுளின் மொழி மாற்ற முடியாதது. அவர் சொல் தவறாது. குரான் விளக்கங்கள், முன் விளக்கங்களெல்லாம் குறையுள்ளவை, தவறானவே என்பதைக் காட்டுகின்றன. முன் மூன்று நூல்கள் உண்மையானால், குரான் பொய்யாக வேண்டும். நான்கு நூல்களும் ஒன்றிற்கொன்று முரணுள்ளதாக இருந்தால், அவை உண்மையைச் சார்ந்தவை ஆகா.

கடவுள் ஜீவர்களைப் படைத்தார். அவை ஒருநாள் இறக்கும். அவை ஒன்றுமில்லாமல் போகும். இது உண்மையா? கடவுளே மனிதர்களையும், மற்ற உயிர்களையும் படைத்தால், அவை நோயுறக்கூடாது; எல்லா உயிர்களும் போதிய உணவை அடையவேண்டும். அரசன் நல்ல உணவும், பிச்சைக்காரன் தாழ்ந்த உணவும் அடையமாட்டார். கடவுளே ஜீவர்களை ஊட்டி வளர்ப்பதானால், ஒருவரும் பிணியுற மாட்டார். ஆனால் முஸ்லிம்கள் கூடப் பிணியால் வருந்துகின்றனர். கடவுளே நோய் தீர்ப்பதானால், முஸ்லிம்களுடைய உடம்புகள் நோயில்லாது இருக்க வேண்டுமே. ஆனால் அவர்கள் நோயால் வருந்துகிறார்களே. அதனால் கடவுள் நல்ல வைத்தியரில்லை என்பது தெளிவு. கடவுளே ஜீவர்களைப் படைத்து அழிக்கிறார் என்றால், ஜீவர்களின் புண்ணிய பாவங்களுக்கும் அவரே பொறுப்பாளியாக வேண்டும். ஆனால், முன் வினைப்படி அவர் பலனைக் கொடுத்தால், அது சரியாகும். அவர் பாவங்களை மன்னித்து, தீர்ப்பு நாளன்றே தண்டனை கொடுப்பதென்றால், கடவுள் பாபங்களைப் பெருக்குகிறார். அவரே பாவி ஆகிறார். அவர் மன்னிக்காவிட்டால், குரான் சொல்வதையே அவர் பொய்யாக்குகிறார். (119)

120 (1) எம்மைப்போல நீயும் ஒரு மனிதர். நீ சொல்வது உண்மையானால், அதற்கு அடையாளம் ஒன்று காட்டு.

(2) சாலேஹ் சொல்கிறான். "இது பெண் ஒட்டகம். இதற்கு தண்ணீரில் பங்குண்டு" (ம. 5 : சி. 19 : சூ. 26 : ஆ. 154-155.)

ஆய்வு: கற்களிலிருந்து ஒரு பெண் ஒட்டகம் உண்டாயிற்று! இதை யார் நம்புவார்? இதை நம்புகிறவர் காட்டுமிராண்டியாய் இருக்க வேண்டும். பெண் ஒட்டகத்தை அடையாளமாகக் காட்டுவது, கடவுளுக்கு ஏற்றதல்ல; காட்டுமிராண்டிகளுக்கே ஏற்றது. குரானைக் கடவுள் செய்திருந்தால் இந்தப் பிதற்றல் எல்லாம் இராது. (120)

121. (1) ஓ மூசே! நானே கடவுள்! நானே எல்லாம் வல்லவன். உன் கோலைக் கீழே போடு. மூசா, தன் கோலைப் பார்த்தான். அது, பாம்பு போல நெளிந்தது.

(2) ஓ! மூசே! பயப்படாதே! எனது தூதர் என் முன் அச்சத்தால் கலங்கமாட்டார்கள்.

(3) அல்லாஹ்—அவனைத் தவிரக் கடவுள் கிடையாது. அவனே சுவர்க்க அரியணையில் விளங்கும் இறைவன்.

(4) எனக்கு எதிர் செய்யாதீர். முஸ்லிம்களாகி என்னைச் சரணடையுங்கள். (ம. 5 : சி. 19 : சூ. 27 : ஆ. 9, 10, 26, 31.)

ஆய்வு : கடவுள் தன்னைத் தானே பெருமைப்படுத்திக் கொள்ளுகிறார். நல்லவர்கள் கூட தற்புகழ்ச்சி செய்துகொள்ள மாட்டார்கள். கடவுள் தற்பெருமை பேசுகிறார். இப்படித் தான் இந்திர ஜாலங்களால் பாமர ஜனங்களுக்கிடையே அவர் கடவுளானார். தெய்வ நூலில் இப்படியெல்லாம் இராது.

அவர், சொர்க்க சிம்மாசனத்தின் தலைவனாக அமர்ந்தால், ஏழாவது விண்ணில் அவர் உட்கார்ந்திருப்பாரானால், எங்கும் நிறைந்த ஈச்வரனாயிருக்க முடியாது. கிளர்ச்சி தீயதென்றால் அல்லாஹ்வும் முகமதுவும் குரான் முழுதும் கிளர்ச்சி கொண்டு தற்புகழ்ச்சியாய் இருப்பதேன்? முகமது பலரைக் கொன்றார். அது கலகம் அல்லவா? குரான் முழுதும் சொன்னதையே திருப்பிச் சொல்லும் முரண்பாடுகளைக் கொண்டிருக்கிறது. (121)

122. நீ மலைகள் உறுதியாக ஊன்றி நிற்பதைக் காண்கின்றாய். ஆனால், அவை ஒருநாள் மேகங்கள் போல மறைந்துவிடும். கடவுளின் காரியம் அனைத்திலும் நிலையானது. நீ செய்வதைக் கடவுள் நன்றாக அறிவார்.

(ம. 5 : சி. 20 : சூ. 27 : ஆ. 88)

ஆய்வு : மலைகள் மேகங்கள் போலப் பறந்து மறைவது, குரான் எழுதியோர் நாட்டில் இருக்கலாம்! வேறெங்கும் காண முடியாது. கடவுளின் கவனம் சைத்தான் உதாரணத்தால் தெரிகிறது. கலகக்காரனாகிய சைத்தானை அவர் கைது செய்யவும் முடியவில்லை; விசாரித்துத் தண்டிக்கவும் முடியவில்லை. ஒரு கலகக்காரனைக் கண்டித்து தண்டிக்க முடியாத கடவுளின் மெலிவை என் சொல்வது? (122)

123. (1) மூசா, அவனை முஷ்டியால் குத்தி உயிரை வாங்கிவிட்டார்.

(2) பிறகு மூசா "கடவுளே, நான் அநியாயம் செய்துவிட்டேன். என்னுடைய ஆத்மாவைக் கொன்றுவிட்டேன். என்னை மன்னியும்" என்றான். கடவுள் அவனை உடனே மன்னித்துவிட்டார். ஏனெனில் அவர் மன்னிப்பவர், தயாளு.

(3) கடவுள் நினைத்ததைப் படைக்கிறார், விரும்பியதைக் கொள்ளுகிறார்.

(ம. 5 : சி. 20 : சூ. 28 : ஆ. 15, 16, 63.)

ஆய்வு : முஸ்லிம்கள், கிறிஸ்துவர்—இவர்கள் கடவுளையும் நபியையும் பாருங்கள்! மூசா (இஸ்லாம்) கொலை செய்கிறார். கடவுள் அவனை மன்னிக்கிறார். இரண்டும்

அநியாயம் அல்லவா? கடவுள் இஷ்டப்படி படைக்கிறாரா? அவர் விருப்பப்படி ஒருவனை அரசனாகவும், மற்றொருவனைப் பிச்சைக்காரனாகவும், ஒருவனை வித்வானாகவும், மற்றொருவனை மடையனாகவும் ஆக்குகிறாரா? அப்படியானால் குரான் உண்மை நூல் அல்ல. அநீதி செய்யும் கடவுளும் கடவுள் அல்ல. (123)

124. (1) மனிதர் தாய், தந்தையருக்கு அன்பு காட்டி உதவி செய்யவேண்டும் என்று நாம் பணித்தோம். ஆனால், அவர்கள் எனக்குச் சம்மதமில்லாத விஷயத்தை வாதாடினால் அவர்களைப் பணியவேண்டாம்.

(2) நாம் நோவாவை, மக்களிடையே அனுப்பினோம். அவன் 50 குறைய ஆயிரம் ஆண்டுகள் அவர்களிடையே இருந்தான்.

(ம. 5 : சி. 20 : சூ. 29, ஆ. 18, 16.)

ஆய்வு: பெற்றோர்களுக்கு அன்பு காட்டுவது நல்லதுதான். கடவுளைத் தவிர வேறு யாரையும் வணங்கச் சொன்னால், மறுப்பது நல்லது. பெற்றோர்கள் பொய் சொல்லச் சொன்னால், பணிவதா? ஆகையால், மேற்சொன்ன உபதேசம் சிறிது நல்லது; சிறிது கெட்டது. கடவுள், நோவா போன்ற நபிகளைமட்டுமா அனுப்புகிறார்? அப்படியானால் மற்றவர்களை யார் அனுப்பியது? மற்ற அனைவரையும் அவரே அனுப்பினால் அவர்களும் ஏன் நபிகள் இல்லை? பண்டை மக்கள் 1000 ஆண்டுகள் இருந்தார்களாம். இப்போது ஏன் அப்படியில்லை? அதனால், இது அறிவுக்கு ஏற்றதல்ல. (124)

125. (1) கடவுள் முதலில் உயிர்களைப் படைத்தார். மறுதரம் அப்படியே படைப்பார். பிறகு நீங்கள் அவரிடம் திரும்பலாம்.

(2) கயாமத் நாளில், பாவிகள் செய்வதறியாமல் திகைப்பார்கள். நம்பிக்கையுடன் நேர்மையாக நடப்பவர்கள் ஈமான் கொண்டு நலம் புரிவோர், ஒரு இன்பப் பொழிலில் சேருவார்கள். ஒரு காற்றை அனுப்பி, நாம் அவர்களுடைய வயல்களைப் பாழாக்கச் செய்வோம்.

(3) இவ்வாறு அறியாதவர் உள்ளங்களில் கடவுள் முத்திரை போட்டார்.

(ம. 5 : சி. 21 : சூ. 30 : ஆ. 11, 12, 15, 51, 59.)

ஆய்வு: (1) கடவுள் இரண்டு தரம் சிருஷ்டிக்கிறார். மூன்று தரம் இல்லை என்றால், முதல் சிருஷ்டிக்கு முன்னும், இரண்டாவது சிருஷ்டிக்குப் பின்னும் அவர் வேலையில்லாமலே சும்மா இருக்கிறாரா? அப்போது அவருடைய சக்தி

(4) எனக்கு எதிர் செய்யாதீர். முஸ்லிம்களாகி என்னைச் சரணடையுங்கள். (ம. 5 : சி. 19 : சூ. 27 : ஆ. 9, 10, 26, 31.)

**ஆய்வு :** கடவுள் தன்னைத் தானே பெருமைப்படுத்திக் கொள்ளுகிறார். நல்லவர்கள் கூட தற்புகழ்ச்சி செய்துகொள்ள மாட்டார்கள். கடவுள் தற்பெருமை பேசுகிறார். இப்படித் தான் இந்திர ஜாலங்களால் பாமர ஜனங்களுக்கிடையே அவர் கடவுளானார். தெய்வ நூலில் இப்படியெல்லாம் இராது.

அவர், சொர்க்க சிம்மாசனத்தின் தலைவனாக அமர்ந்தால், ஏழாவது விண்ணில் அவர் உட்கார்ந்திருப்பாரானால், எங்கும் நிறைந்த ஈச்வரனாயிருக்க முடியாது. கிளர்ச்சி தீயதென்றால் அல்லாஹ்வும் முகமதுவும் குரான் முழுதும் கிளர்ச்சி கொண்டு தற்புகழ்ச்சியாய் இருப்பதேன்? முகமது பலரைக் கொன்றார். அது கலகம் அல்லவா? குரான் முழுதும் சொன்னதையே திருப்பிச் சொல்லும் முரண்பாடுகளைக் கொண்டிருக்கிறது. (121)

122. நீ மலைகள் உறுதியாக ஊன்றி நிற்பதைக் காண்கின்றாய். ஆனால், அவை ஒருநாள் மேகங்கள் போல மறைந்துவிடும். கடவுளின் காரியம் அனைத்திலும் நிலையானது. நீ செய்வதைக் கடவுள் நன்றாக அறிவார்.

(ம. 5 : சி. 20 : சூ. 27 : ஆ. 88)

**ஆய்வு :** மலைகள் மேகங்கள் போலப் பறந்து மறைவது, குரான் எழுதியோர் நாட்டில் இருக்கலாம்! வேறெங்கும் காண முடியாது. கடவுளின் கவனம் சைத்தான் உதாரணத்தால் தெரிகிறது. கலகக்காரனாகிய சைத்தானை அவர் கைது செய்யவும் முடியவில்லை; விசாரித்துத் தண்டிக்கவும் முடியவில்லை. ஒரு கலகக்காரனைக் கண்டித்து தண்டிக்க முடியாத கடவுளின் மெலிவை என் சொல்வது? (122)

123. (1) மூசா, அவனை முஷ்டியால் குத்தி உயிரை வாங்கிவிட்டார்.

(2) பிறகு மூசா "கடவுளே, நான் அநியாயம் செய்துவிட்டேன். என்னுடைய ஆத்மாவைக் கொன்றுவிட்டேன். என்னை மன்னியும்" என்றான். கடவுள் அவனை உடனே மன்னித்துவிட்டார். ஏனெனில் அவர் மன்னிப்பவர், தயாளு.

(3) கடவுள் நினைத்ததைப் படைக்கிறார், விரும்பியதைக் கொள்ளுகிறார்.

(ம. 5 : சி. 20 : சூ. 28 : ஆ. 15, 16, 63.)

**ஆய்வு :** முஸ்லிம்கள், கிறிஸ்துவர்—இவர்கள் கடவுளையும் நபியையும் பாருங்கள்! மூசா (இஸ்லாம்) கொலை செய்கிறார். கடவுள் அவனை மன்னிக்கிறார். இரண்டும்

அநியாயம் அல்லவா? கடவுள் இஷ்டப்படி படைக்கிறாரா? அவர் விருப்பப்படி ஒருவனை அரசனாகவும், மற்றொருவனைப் பிச்சைக்காரனாகவும், ஒருவனை வித்வானாகவும், மற்றொருவனை மடையனாகவும் ஆக்குகிறாரா? அப்படியானால் குரான் உண்மை நூல் அல்ல. அநீதி செய்யும் கடவுளும் கடவுள் அல்ல. (123)

124. (1) மனிதர் தாய், தந்தையருக்கு அன்பு காட்டி உதவி செய்யவேண்டும் என்று நாம் பணித்தோம். ஆனால், அவர்கள் எனக்குச் சம்மதமில்லாத விஷயத்தை வாதாடினால் அவர்களைப் பணியவேண்டாம்.

(2) நாம் நோவாவை, மக்களிடையே அனுப்பினோம். அவன் 50 குறைய ஆயிரம் ஆண்டுகள் அவர்களிடையே இருந்தான்.

(ம. 5 : சி. 20 : சூ. 29, ஆ. 18, 16.)

ஆய்வு: பெற்றோர்களுக்கு அன்பு காட்டுவது நல்லதுதான். கடவுளைத் தவிர வேறு யாரையும் வணங்கச் சொன்னால், மறுப்பது நல்லது. பெற்றோர்கள் பொய் சொல்லச் சொன்னால், பணிவதா? ஆகையால், மேற்சொன்ன உபதேசம் சிறிது நல்லது; சிறிது கெட்டது. கடவுள், நோவா போன்ற நபிகளைமட்டுமா அனுப்புகிறார்? அப்படியானால் மற்றவர்களை யார் அனுப்பியது? மற்ற அனைவரையும் அவரே அனுப்பினால் அவர்களும் ஏன் நபிகள் இல்லை? பண்டை மக்கள் 1000 ஆண்டுகள் இருந்தார்களாம். இப்போது ஏன் அப்படியில்லை? அதனால், இது அறிவுக்கு ஏற்றதல்ல. (124)

125. (1) கடவுள் முதலில் உயிர்களைப் படைத்தார். மறுதரம் அப்படியே படைப்பார். பிறகு நீங்கள் அவரிடம் திரும்பலாம்.

(2) கயாமத் நாளில், பாவிகள் செய்வதறியாமல் திகைப்பார்கள். நம்பிக்கையுடன் நேர்மையாக நடப்பவர்கள் ஈமான் கொண்டு நலம் புரிவோர், ஒரு இன்பப் பொழிலில் சேருவார்கள். ஒரு காற்றை அனுப்பி, நாம் அவர்களுடைய வயல்களைப் பாழாக்கச் செய்வோம்.

(3) இவ்வாறு அறியாதவர் உள்ளங்களில் கடவுள் முத்திரை போட்டார்.

(ம. 5 : சி. 21 : சூ. 30 : ஆ. 11, 12, 15, 51, 59.)

ஆய்வு: (1) கடவுள் இரண்டு தரம் சிருஷ்டிக்கிறார். மூன்று தரம் இல்லை என்றால், முதல் சிருஷ்டிக்கு முன்னும், இரண்டாவது சிருஷ்டிக்குப் பின்னும் அவர் வேலையில்லாமலே சும்மா இருக்கிறாரா? அப்போது அவருடைய சக்தி

பொருளற்றதாகும். (2) தீர்ப்பு நாள் அன்று, பாவிகள் வேதனைப்படுவது சரி. இது முஸ்லிம் அல்லாதவர்களைப் பாவிகளாகவும், வேதனைப்படுவதாகவும் சொல்வதில்லையா! குரானில் பல இடங்களில், பாவிகள் என்பது முஸ்லிம் அல்லாதவரையே குறிக்கிறது. (3) தோட்டத்தில் வசிப்பதும், அணிமணிகள் பூணுவதும் இஸ்லாமிய சுவர்க்கமென்றால், அதுவும் உலகத்தைப் போலவே தானே! அங்கும் தோட்டக்காரரும் தட்டார்களும் உண்டா? அல்லது கடவுளே இந்தக் கடமைகளைச் செய்கிறாரா? யாருக்காவது குறைவாக லாபம் கிடைத்தால் திருடவும் செய்வார். அந்தத் திருடர்களை நரகத்தில் தள்ளுவார். எப்போதும் சுவர்க்கத்தில் இருப்பார்கள் என்பது பொய்யாகும். (4) கடவுள் விவசாயம் செய்கிறாரா? அது அனுபவமுள்ள தொழிலாளிக்குத்தான் முடியும். கடவுளுக்கு எல்லாம் தெரியும் என்பது தற்புகழ்ச்சியே யாகும். (5) அல்லாஹ் அவர்களுடைய உள்ளத்தில் முத்திரை போட்டால், அவர்களுடைய பாவத்திற்கு அவரே பொறுப்பாளி அந்தப் பாவம் அவரையே சேரும். ஒரு சண்டையில் தோல்வி அதன் போர்த் தலைவனுக்கே சேரும். (125)

126. (1) இந்த ஆயத்துகள், அறிவாளிகளின் நூலில் இருக்கிறது. அறிவாளி என்பது கடவுள்.

(2) தூணில்லாமல் அவன் வானைப் படைத்தான். பாரீர்! அவன், பூமி அசையாமல், மலைகளை ஊன்றினான்.

(3) கடவுள், இரவைப் பகலிலும், பகலை இரவிலும் புகுத்துவதைப் பார்க்கவில்லையா?

(4) அல்லாஹ் அருளினால்தான், கப்பல்கள் கடலிற் செல்கின்றன. அல்லாஹ், தனது அடையாளத்தைக் காட்டுகிறார். (ம. 5 : சி. 21 : சூ. 31 : ஆ. 2, 10, 29, 31.)

**ஆய்வு :** ஆகா! என்ன பித்தலாட்ட அறிவு நூல்! வானைப் படைத்ததும், தூணில்லாமல் அது நிற்பதும், உலகம் நிலையாக (அசைவற்று) இருக்க மலைகளை அழுத்தி வைப்பதும் என்ன விஞ்ஞானம்! சிறிது கற்றவர்களும் கூட இவ்வாறு எழுதமாட்டார்கள்; இவற்றை நம்பமாட்டார்கள். இன்னொரு புத்திசாலித்தனத்தைப் பாருங்கள்! பகலாய் இருந்தால் இரவில்லை. இரவாய் இருந்தால் பகல் இல்லை. அப்படியானால், இதை அதில் நுழைப்பது எப்படி? இது

அறியாதார் பேச்சு. குரான், அறிவு நூல் ஆகாது. கப்பல் கடலிற் செல்வது கடவுள் அருளாலா? மனிதன் ஓட்டுவதாலா? இது, பகுத்தறிவுக்கு முரணாக இல்லையா? இரும்பு அல்லது கல்லாற் செய்யப்பட்ட கப்பலை கடலில் ஓட்டுகிறார்கள். அப்போது, கடவுளின் குறிப்பு மறைவதில்லையா? அதனால், இந்த நூல் தெய்வ நூல் அன்று. அறிவாளியின் நூலும் அல்ல. (126)

127. (1) அவன், வானிலிருந்தே, உலகத்தை ஆளுகிறான். உலகில் உள்ள எல்லாவற்றையும் ஆளுகிறான். அவை மீண்டும் அவனிடம் திரும்பும். அந்தத் திரும்பும் நாள், ஆயிரம் ஆண்டுகளாகும். (2) இவனே, நிகழ்காலத்தையும், வருங்காலத்தையும் அறிவான். இவனே தயாளு, சர்வவல்லவன். (3) பிறகு அவனை ஆக்கி, அவனுக்குள் தன் ஆவியை ஊதினார். (4) அவனே, சாவை ஏவி உங்களைச் சாகடிக்கிறான். (5) நாம் விரும்பினால் ஒவ்வொரு ஜீவனுக்கும் வழிகாட்டுவோம். நமது சொல் உடனே நிறைவேறும். நாமே ஜனங்களையும் ஜீவன்களையும் கொண்டு, அதை நிரப்புகிறோம். (ம. 5 : சி. 21 : சூ. 32 : ஆ. 5, 6, 9, 11, 13.)

ஆய்வு : முஸ்லிம் கடவுள் மனிதரைப் போலவே ஒரே இடத்தில் வசிக்கிறார். அவர் எங்கும் நிறைந்தவர் இல்லை என்பது விளங்கிவிட்டது. அவர் எங்கும் நிறைந்தவரானால், ஒரே இடத்திலிருந்து ஆளுவதும், இறங்குவதும், ஏறுவதும் முடியாத காரியம். கடவுள் ஒரு தூதனை அனுப்புவதும் அவர் ஒரே இடத்தில் இருப்பதாகும். அவர் ஆகாயத்தில் ஒரே இடத்தில் தொங்குகிறார். தேவர்களை அங்குமிங்கும் ஓடவிடுகிறார். தேவதூதர் லஞ்சம் வாங்கிக் காரியங்களை குழப்பி, சாகும் சிலரை விட்டு விடுகிறார்கள் என்பதைக் கடவுள் அறிவாரா? அவர் அறிவதில்லை; அப்படித் தானே அறிந்தால், தூதர்களை ஏன் அனுப்பவேண்டும்? இவ்வளவு சோதனைகளையும் ஏன் நடத்த வேண்டும்? ஆயிரம் வருஷங்கள் என்பதும் தன் ஆட்சிக்காக தூதர்கள் போவதும் வருவதும், கடவுளின் முற்றறிவை முறியடிக்கின்றன. எமதூதர் இருப்பது உண்மையானால், இந்தத் தூதர்களை எந்த எமன் கொண்டு போகிறான்? இந்த தூதன் சிரஞ்சீவி ஆனால், சிரஞ்சீவியான கடவுளுக்குச் சமானமாவான். ஒரே தூதன், ஒரே காலத்தில் எல்லாரையும் நரகத்திற்கு கொண்டு போய் நிரப்ப முடியாது. தனது இனிய இச்சைப்படி, நரகத்தை நிரப்புகிறாராம். ஒருவருடைய முன்வினைகள், புண்ணிய பாவங்கள்—இவற்றைப் பார்க்காமல், தயவின்றி, மனிதரை நரகத்தில் தள்ளுவது சரி

யில்லை. எந்த அறிவாளியும் இப்படி எண்ணமாட்டான், இவற்றை போதிக்கும் நூல் தெய்வ நூல் அன்று. அன்பும் நீதியும் அற்றவன் கடவுளாய் என்றும் இருக்க முடியாது. (127)

128. (1) சொல்; ஓடுவதால் பயனில்லை. சாவினின்றோ, கொலையினின்றோ ஓடுவதால் பயனில்லை. (2) ஓ, நபியின் பீபீகளே! வெட்கமில்லாமல், நீங்கள் யாராவது வெளியேவந்தால், இரண்டுபங்கு தண்டனை கிடைக்கும். அல்லாவுக்கு இந்தத் தண்டனை தருவது எளிது. (ம. 5 : சி. 21 : சூ. 31 : ஆ. 14, 30.)

ஆய்வு : சாவின் பயத்தால் போரிலிருந்து யாரும் ஓடக்கூடாது என்பதற்காகவே, முகமது சாகெபு இதை எழுதியிருக்கிறார். தான் போரை வென்று, வளமை பெற்று, தனது மதத்தைப் பரப்பவே அப்படி எழுதியிருக்கிறார். பீபிகள் வெட்க மில்லாமல் வருவதானால், நபியும் அப்படியே வெட்க மில்லாமல் வருவாரா? பீபிகளை மட்டும் தண்டித்து, நபியை சும்மா விட்டுவிடுவது என்ன நியாயம்? (128)

129. (1) வீட்டில் அமைதியாக உட்காருங்கள். (2) அல்லாஹ்வையும் ரசூலையும் பணிந்து நடங்கள். வேறுகதி இல்லை. (3) ஃஜெயிது (Zaid), அவளுடன் கூடிய பிறகு, நாம் உனக்கு அவளைக் கூட்டினோம். ஈமான் கொண்டவர்களின் குடும்ப வாழ்க்கை இடர்ப்படலாகாது. கடவுளின் ஆணை நிறைவேற வேண்டும். (4) அதில் ரசூலுக்கு எந்தவிதமான கஷ்டமும் இல்லை. (5) மகமது உங்களில் எவர் தந்தையும் அன்று. (6) ஈமான் கொண்ட எந்தப் பெண்ணும் தன்னை முகமதுக்கு அர்ப்பணித்துக் கொள்ளலாம். அதற்குச் சீதனம் கேட்கக் கூடாது. (7) எந்த மனைவியையும் நீ விரும்பினபடி படுக்கைக்கு அழைக்கலாம். எந்த மனைவியையும், ஒதுங்கச் செய்யலாம். (8) இதனால் உமக்குப் பாவமில்லை. (9) ஈமான் கொண்டவர்கள், ரசூலின் வீட்டிற்குள் கண்டபடி புகாதீர்கள்.

(ம. 5 : சி. 22 : சூ. 33 : ஆ. 35, 37, 38, 40, 50, 51, 53.)

ஆய்வு : பெண்களை வீட்டில் கைதிகள் போலச் சிறையடைத்து, ஆண்கள் மட்டும் சுதந்திரமாகச் செல்வது அநியாயம். பெண்களுக்கு நல்ல காற்று வேண்டாமா? வெளியே சென்று உலாவ வேண்டாமா? இயற்கை அழகை அனுபவிக்க வேண்டாமா? இதனாலேதான் முஸ்லிம் வாலிபர்கள் கண்ட படி திரிந்து சுகம் தேடுகிறார்கள்.

அல்லாஹ்வின் ஆணையும், ரசூலின் ஆணையும் ஒன்று தானா? அல்லது, வெவ்வேறா? ஒன்றானால் இரண்டு பேரையும் பணியச் சொல்லுவானேன்? முரணானால், ஒன்று உண்மையாய் இருக்க வேண்டும்; மற்றொன்று பொய்யாய் இருக்க வேண்டும். ஒன்று

கடவுள் ஆணையாய் இருக்கவேண்டும். மற்றொன்று சைத்தான் ஆணையாய் இருக்கவேண்டும். அல்லது இரண்டும் சரிநிகராய் இருக்கவேண்டும். அடேயப்பா! இந்தக் குரான் கடவுள், பைகம்பர், குரான் பிரதாபம்!

கடவுள், ரசூல், குரான்—மூன்றையும் பாருங்கள். மற்றவர் காரியங்களுக்கு இடர்செய்து, தங்கள் சுயநலத்தை சாதிப்பதை விரும்புகிறார்கள். இப்படிப்பட்ட லீலையை அவர்கள் நடத்துகிறார்கள். இது மகமதுவைச் சுகபோகி காமுகன் என்று காட்டுகிறது. அப்படி இல்லாவிட்டால் தன்னுடைய தத்துப் பிள்ளையின் மனைவியை, அதாவது மருமகளை, பெண்டாள மாட்டார். இந்த அநியாயத்தை அவருடைய கடவுளும் சரி யென்றாரே! காட்டுமிராண்டிகள் கூட மகன் மனைவியைப் பெண்டாள மாட்டான். ரசூலின் போக லீலைக்குத் தடையே இல்லையா? என்னே அநியாயம்! ரசூல், எவருக்கும் தந்தை இல்லையாம். அப்படியானால், (Zaid) ஃஜெயிதை ஏன் அவன் மகன் என்று எழுதி வைத்திருக்கிறார்? தன் மகன் மனைவியை தன் மனைவியாகக் கருதும் ரசூல், மற்ற பெண்களை எப்படி விலகி இருக்க முடியும்? இந்தப் பழியை யாரும் தப்ப முடியாது. எவன் மனைவிக்கும் ரசூலைப் பிடித்திருந்தால் மணம் புரியலாமா? அது குரானுக்கு உடன்பாடா? ரசூல் எந்த மனைவியையும் கைவிடலாம். ஆனால், அவன் குற்றம் செய்தாலும் மனைவி அவனைக் கைவிட முடியாது. யாரும் கெட்ட நினைப்புடன், மகமதின் வீட்டில் நுழையக்கூடாது. மகமதும் அதேமாதிரி நடந்துகொள்ள வேண்டும். அவர் எந்த வீட்டிற்குள்ளும் நுழையலாம் என்றால் மரியாதை ஆகுமா? இந்தக் குரானை, கடவுள் சொன்னது என்று எப்படிக் குருட்டுத்தனமாக நம்புவது? ஏதோ ஒரு ஜந்துவைக் கடவுள் என்று குரான் சொல்கிறது. மகமதை நபி என்று எப்படி நம்புவது? அரபேயாவின் பழைய மக்கள் இப்படித் தாறுமாறான மதக் கொள்கைகளை நம்பியது வியப்புத்தான்! (129)

130. (1) நபிநாயகத்திற்கு எவ்விதமான தொல்லையும் தரக்கூடாது. அவர், கடவுளின் தூதர். அவருக்குப்பிறகு அவர் மனைவிகளை, யாரும் பெண்டாளக் கூடாது. இது கடவுளுக்குச் செய்யும் கொடிய பாவமாகும். (2) கடவுளையும் ரசூலையும் புண்படுத்தினவரை, அல்லாஹ் சபிக்கிறார். (3) ஆணானாலும் சரி, பெண்ணானாலும் சரி, ஈமான் கொண்டவர்களைத் துன்புறுத்தினால், அநியாயமாகப் புண்படுத்தினால், கொடிய அவதூறும் அநியாயமும் செய்தவர்கள் ஆவார்கள்.

(4) அவர்கள் சபிக்கப் படுவார்கள். அவர்களை எங்கே கண்டாலும், பிடித்து, கொன்று, அதம் செய்யத்தகும்.

(5) அவர்களுக்கு, ஓ, கடவுளே! இரண்டு மடங்கு தண்டனை தாருங்கள். அவர்களைப் பலமாகச் சபியுங்கள்.

(ம. 5 : சி. 22 : சூ. 33 : ஆ. 53, 57, 58, 61, 68.)

ஆய்வு : (1) கடவுள், தன்னுடைய தெய்வத் தன்மையை எப்படிக் காட்டுகிறார், பாருங்கள்! நபிக்கு யாரும் தொல்லை கொடுக்கக்கூடாது என்பது சரிதான். ஆனால், இந்த நபி, மற்றவருக்குத் தொல்லை கொடுக்காமல் இருக்கவேண்டுமே; அப்படி ஏன் தடுக்கவில்லை? (2) கடவுளும், மற்றோர்களால் தொல்லைப்படுகிறாரா? கடவுளும் பிறருக்குத் தொல்லை கொடுக்கிறாரா? அப்படியானால், அவர் கடவுள் இல்லை. (3) அல்லாவும், ரசூலும், எவனுக்குத் தொல்லை கொடுக்கலாமாம். எந்த மனிதனும்? பிறரைத் துன்புறுத்தலாமாம்! (4) முஸ்லிம் ஆண்களுக்கும் பெண்களுக்கும், இடர் செய்யக் கூடாது என்ற சட்டம், மற்ற ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடர் செய்யக்கூடாது என்பதையும் ஒப்பவேண்டும். இதை ஒப்பாவிட்டால் ஓரகமாகும். (5) அல்லாவும், நபியும் அநீதியாளர்கள். உலகத்தில் இவர்களைப்போல இரக்கமற்றவர்கள் மிகச் சிலரே இருப்பார்கள். முஸ்லிம் அல்லாதவர்களைக் கண்ட இடமெல்லாம் சிறை பிடித்துக் கொல்ல வேண்டும் என்று எழுதியிருக்கிறது குரானில். அதே மாதிரி முஸ்லிம்களைக் கண்ட இடத்தில் பிடித்துக் கொல்ல வேண்டும் என்று எழுதினால், முஸ்லிம்கள் எதிர்க்கமாட்டார்களா? பலே! பைகம்பர் முதலானோர் எப்படிப்பட்ட இம்சை செய்பவர்கள்! மற்றவர்களுக்கு இரண்டு பங்கு தண்டனை என்றால் அது அநியாயம் அல்லவா? அது நேர்மையற்ற சுயநலம். சில முஸ்லிம் வெறியர்கள் கூசாமல் இப்படிச் செய்கின்றனர். கல்வியற்ற மனிதன் விலங்குக்குச் சமானம் என்பது உண்மையே! (130)

131. (1) அல்லாதான் காற்றை அனுப்புகிறார், மேகங்களைச் செய்கிறார். அதனால், பூமிவளம் பெறுகிறது. வரண்ட நிலம் தளிர்க்கிறது. அதே மாதிரித்தான், மீண்டு எழுப்புதலும்.

(2) அவர் அருளினால், அமைதியான நிலையில் வசிக்கிறோம். அங்கே, உழைப்புமில்லை, களைப்புமில்லை. (ம. 5 : சி. 22 : சூ. 35 : ஆ. 9, 35.)

ஆய்வு: காற்றை அனுப்பி, முகிலைக் கிளப்பி செத்தாரை எழுப்புவது, என்ன கடவுள் தத்துவம்? இது கடவுள் செயல் ஆகாது. ஏனெனில், கடவுளின் காரியம் எங்கும் ஒன்றாய் இருக்கும். கட்டிடமில்லாமல் வீடு அமையாது. கட்டியது, எப்பொழுதும் நிலையாக இருக்காது. உடல் கொண்டவர் களுக்கு, அனுஷ்டான பயிற்சியில்லாவிட்டால் நோய் உறுதி. ஒரு மனைவியோடு வாழும்போதே நோய்வாய்ப் படுகிறான். பல பெண்களை போகிக்கிறவன் நிலை எப்படி இருக்கும்? ஆதலால், சுவர்க்கம் முஸ்லிம்களுக்கே ஒருக் காலும் நித்தியசுகத்தைத் தராது. (131)

132. குரான்மேல் ஆணையாகச் சொல்லுகிறேன். நீ என் தூதர்களில் ஒருவன். எல்லாம்வல்ல கருணைக் கடவுளின் அருள் வாக்கை உலகிற்கு விளக்கி நேரான வழி காட்ட இறங்கி வந்தவன். (ம. 5 : சி. 23 : சூ. 36 : ஆ. 2, 3, 4, 5.)

ஆய்வு: பாருங்கள்! குரானை ஆண்டவர் அருளி யிருந்தால் அதன்மேல் ஆணையிடுவானேன்? மகம்மதை ஆண்டவர் அனுப்பியிருந்தால் தனது தத்துப் பிள்ளையின் மனைவி மேல் மோகித்திருக்கமாட்டார். குரானை நம்புகிறவர்கள் மட்டுமே நேராக நடக்கிறார்கள் என்பது வெறும் கதை. வாய்மை, மெய்மை, உண்மை, ஓரகமற்ற நீதி, அறநெறி ஒழுக்கம் இவற்றை போற்றுவதும், இதற்கு விபரீதமானதை விடுவதும் நன்னெறியாகும். குரானிலோ, முஸ்லிம்களிடமோ அல்லது குரான்-கடவுளின் இயல்பிலோ நாம் நேர்மையைக் காண வில்லை. முகம்மது சாகெபு உயர்ந்த மனிதரானால், அதிக வித்துவானாயிருக்க வேண்டும். நல்ல குணவானாய் இருக்க வேண்டும். ஏன் அப்படி இல்லை? ஒவ்வொரு பழ வியாபாரி யும் தனது பேரிக்காயே இனிப்பு, இனிப்பு என்பது போலத்தான், இந்தப் பேச்சும். (132)

133. (1) தூரியம் ஊதினவுடன், புதைகுழியிலிருந்து அவர்கள் எழுந்து இறை வனிடம் ஓடுவார்கள்.

(2) அவர்களுடைய நடையைப் பார்த்து அவரவர் செய்த வினையை அறியலாம்.

(3) ஆகுக என்றால் உடனே ஆகும். இதுதான் கடவுளின் ஆணை. அவன் விரும்பியது நிறைவேறும். (ம. 5 : சி. 23 : சூ. 36 : ஆ. 51, 65, 82.)

ஆய்வு: இந்தப் பிதற்றலைப் பாருங்கள்; கால்கள் என்றாவது சாட்சி சொல்லுமா? ஆணை இடும்போது கடவுளைத் தவிர,

யார் அங்கே இருந்தனர்? யார் ஆணையைக் கேட்டனர்? அதனால் ஆனது என்ன? ஒன்றுமில்லா விட்டால் இந்தப் பேச்சு பொய்யாகும். ஏதாவது இருந்தால் சரியல்ல. கடவுளைத் தவிர வேறு ஒன்றும் இல்லை என்பதும் சரியல்ல; கடவுளே எல்லாவற்றையும் உண்டாக்கினான் என்பது பொய்யாகும். (133)

134. (1) சுத்தமான பானக்கிண்ணம் அவர்களுக்குச் சுற்றி அனுப்பப்படும். அந்தப் பானம் அவர்களுக்கு போதை தரும்.

(2) அருகே சுவர்க்க சுந்தரிகள் முட்டைப் போன்ற பெரிய கருவிழிகளுடன் அமர்ந்திருப்பார்கள்.

(3) நாம் ஒருதரம் செத்த பிறகு மீண்டும் சாவோமா?

(4) லாட்டும் நம்மால் அனுப்பப்பட்டவனே. அவனும் தேவதூதன். அவனுக்கும் அவனுடைய குடும்பத்திற்கும் முக்தி கொடுத்தபோது ஒரு கிழவிக்கு முக்தி கொடுக்கவில்லை.

(5) பிறகு மற்றவர்களை யெல்லாம் கொன்று விட்டோம்.
(ம. 6 : சி. 23 : சூ. 37 : ஆ. 45, 46, 49, 53, 133, 134, 135, 136).

ஆய்வு : வேடிக்கைதான்! முஸ்லிம்கள் இங்கே சாராயத்தை மறுக்கின்றனர். ஆனால், அவரது வானில் சாராய நதிகளே ஓடுகிறது. இங்கே குடிமறுப்பது சரிதான். ஆனால் அங்கே சுவர்க்கத்தில் இதற்கும் சேர்த்துக் குடிக்கிறார்களே. அவர்களுடைய சுவர்க்கம் மிகவும் இழிந்தது. பெண்கள் கூட்டுறவு அவர்களது மனதைக் கலக்கும்; அதனால் நோயுண்டாகும். அவர்களுக்கு உடல் உண்டானால் ஒருநாள் இறக்க வேண்டும். உடல் இல்லையானால் எப்படி போகிப்பார்கள்? ஆகவே, அவர்கள் சுவர்க்கத்திற்குச் செல்வது வீணே. லாட்டும் நபியானால் அவனுக்கு இரண்டு மக்கள் தனது பெண்கள் வழியாகவே பிறந்தார்கள் என்று பைபிள் சொல்லுகிறதே! இதை நம்புகிறீர்களா, இல்லையா? நம்பினால் அவனை எப்படி நபி என்பது? இப்படிப்பட்ட ஆசாமிகளுக்கும், அவர்களது கூட்டாளிகளுக்கும் கடவுள் முக்தி கொடுத்தால் அவரும் அதே பேர்வழியாகத்தான் இருக்க வேண்டும். ஒரு கிழவியின் கதையைச் சொல்லி மற்றவர்களை கொடுமையாக கொல்லுகிறவன் கடவுளாக முடியாது. இப்படிப்பட்ட கடவுள் முஸ்லிம்கள் வீடுகள் தவிர வேறு எங்கும் இருக்கமாட்டார்கள். (134)

135. (1) எப்போதும் வசிப்பதற்கு சுவர்க்கவாசல் அவர்களுக்குத் திறக்கிறது. அங்கே அவர்கள் சுகமாகப்படுத்து வேண்டிய கனிகளையும் பானங்களையும் கேட்கிறார்கள். அருக, சமவயதுள்ள கன்னிப் பெண்கள், கண்பார்க்கின்றனர்.

(2) எல்லா வானோரும் அவனை வணங்குகின்றார்கள். ஆனால் சைத்தான் செருக்கினால் காப்பிரி ஆய்விட்டான்.

(3) ஓ, சைத்தானே! என் கையால் ஆக்கிய, இவனை "நீ ஏன் வணங்கவில்லை? உனக்கு அவ்வளவு செருக்கா? உன் பெருமை அவ்வளவா?" என்கிறார் அல்லா; சைத்தான் சொல்லுகிறான்: "அவனைவிட, நான் உயர்ந்தவன். நீ என்னை நெருப்பிலிருந்து உண்டாக்கினாய். அவனை மண்ணிலிருந்து உண்டாக்கினாய்."

(4) போ, வெளியே! உன்னை ஒழித்து விட்டேன். தீர்ப்புநாள் வரையில் என் சாபத்தை அனுபவி.

(5) "தேவா! கயாமத் நாள் வரையில் என்னைச் சும்மா இருக்கவிடு" என்றான் சைத்தான். தீர்ப்பு நாள் வரையில் நான் சும்மா விட்டு வைப்பவர்களில் நீ ஒருவன்—என்றார் கடவுள். "உன் வல்லமையால் அவர்கள் எல்லாரையும் நான் மயக்கி விடுவேன்" என்றான் சைத்தான்.

(ம. 6 : சி. 23 : சூ. 38 : ஆ. 50, 51, 57, 73, 82.)

ஆய்வு: (1) குரான் எழுதுகிறபடி சுவர்க்கத்தில், தோப்பு, பொதும்பர், ஆறு, வீடுகள் இருந்தால்—அவை எப்போதும் இருக்கமுடியாது. அவை இருக்குமா என்பதும் சந்தேகந்தான். கட்டப்பட்டது அழியும். அஃது அதற்கு முன்பும் இல்லை. அது விழுந்த பின்பும் இல்லை. சுவர்க்கமே நித்தியமில்லை. அதில் இருப்பவர்கள் எப்படி நித்தியமாய் இருப்பார்கள். அங்கே மெத்தைகளும், திண்டுகளும், கனிகளும், குடிகளும் உண்டாம். அரேபியாவில் இஸ்லாம் உண்டான போது, அது செழித்த நிலம் இல்லை. இந்த மாதிரி மெத்தை, தலையணை ஆசை காட்டி, ஏழை மக்களை முகமது வசப்படுத்தி யிருக்கிறார்.

பெண்கள் கூடியிருக்குமிடத்தில் என்றும் நிரந்தர இன்பமிராது. இந்தப் பெண்கள் எங்கிருந்து வந்தார்கள்? அல்லது அவர்கள் சுவர்க்கத்திற்கு உரியவர்களா? மற்ற இடங்களிலிருந்து அவர்கள் வந்திருந்தால், அவர்கள் ஒருநாள் அங்கே திரும்பிச் செல்ல வேண்டும். அவர்கள் எப்போதும் அங்கே இருக்கிறார்கள் என்றால், கயாமத்திற்கு முன்பு என்ன செய்தார்கள்? அவர்கள் வீணாகக் காலம் கழித்தார்களா?

(2) கடவுளின் மகிமையைப் பாருங்கள்! 'ஆதாமை நமஸ்காரம் செய்யுங்கள்' என்ற அவருடைய ஆணையைச் சைத்தான் தவிர எல்லாரும் பணிந்தார்கள். 'ஆதாமை

என் கையாலேயே ஆக்கினோம். நீ கர்வம் கொள்ளாதே' என்று கடவுள் சைத்தானுக்குச் சொன்னார். குரான் கடவுளுக்கு இரண்டு கைகள் இருப்பதாகத் தெரிகிறது. அதனால், அவர் எல்லாம் வல்லவராயும், எங்கும் இருப்பவராயும் ஆகமாட்டார். (ஏனென்றால், அவருக்கும் உரு இருக்கிறது). 'ஆதாமைவிட நான் சிறந்தவன்.' என்று சைத்தான் சொல்வது சரியே. அல்லாவுக்கு ஏன் கோபம் வரவேண்டும்? கடவுளின் வீடு சுவர்க்கத்தில் மட்டுமா? உலகத்திலும் இல்லையா? குரானில், 'காபாவே கடவுளின் வீடு' என்று எழுதியிருப்பதேன்? கடவுள், சைத்தானைத் தன்னிடமிருந்தும் சுவர்க்கத்திலிருந்தும் ஓட்டுவானேன்? கடவுள் சுவர்க்கத்தின் மிராசுதார்—என்றாகிறது. கடவுள் சாபம் வைத்து சிறையிலடைத்தார் சைத்தானை. சைத்தான், 'கயாமத் நாள் வரையில் என்னைச் சும்மா விட்டு வையும்' என்றார். கடவுள் மகிழ்ச்சி கொண்டு அப்படியே செய்தார். விடுதலை ஆனதும் சைத்தான், 'இப்பொழுது நான் எல்லாரையும் வசப்படுத்துகிறேன். கலகம் செய்கிறேன்' என்று கிளம்பினான். உடனே கடவுள் 'உன்னை நரகத்தில் தூக்கிப் போடுகிறேன். நீ மயக்கினவர்களையும் நரகத்தில் தூக்கிப் போடுகிறேன்' என்றான். நல்லோர்களே! கடவுளே சைத்தானை மயக்கினாரா? அல்லது, அவர் தானே மயங்கி, ஏமாந்தாரா? அவரே மயக்கினால், தானே சைத்தானுக்கும் சைத்தானாகிறார். சைத்தான் தானே மயங்கினால், மற்ற ஆத்மாக்களும் அப்படியே மயங்கலாம். அப்போது சைத்தான் வேண்டியதில்லை. சைத்தானைச் சும்மா விட்டதனால், அவன் செய்த பாவங்களுக்கெல்லாம் கடவுளே உடந்தை ஆகிறார். தானே திருட்டைத் தூண்டி, தானே, தண்டனையும் விதித்தால், அநீதிக்கு எல்லை உண்டா? (135)

136. (1) கடவுள், எல்லாப் பாபங்களையும் மன்னிக்கிறார். ஏனெனில், அவர்
கருணையும் இரக்கமும் கொண்டவர். (2) முழு உலகமும் மிகப் பெரிது. கயாமத்து
நாளன்று அவன் உலகம் முழுதும், தன் கையில் அடக்குகிறான். அவனுடைய வலது
கையில் வானை முழுதும் சுருட்டி வைத்துக்கொள்ளுகின். (3) இறைவன் ஒளியால்
இந்த உலகம் விளங்குகிறது. நூலைத் திறந்து வைத்து, தீர்க்கதரிசிகள் அனைவரும்
சாட்சிக்காகக் கொண்டு வரப்படுகிறார்கள். பிறகு தீர்ப்பு வழங்கப்படும்.
(ம. 6 : சி. 24 : சூ. 39 : ஆ. 52, 67, 69.)

ஆய்வு: (1) கடவுள் பாபங்களை மன்னிப்பதனால், உலகம் முழுவதும் பாபக் காடாகும். இது அவருக்குத் தயவில்லை

என்பதைக் காட்டுகிறது. ஒரு பாவிக்கு அன்பு காட்டினால், அவன் மேலும் தீங்கு செய்வான். பல நல்லவர்களையும் துன்புறுத்துவான். சிறிய பாவத்தை மன்னித்தாலும், உலகம் பாவக் காடாகும். கடவுள் தீப்போல விளங்குகிறாரா? விதி புத்தகம் எங்கே வைக்கப்பட்டிருக்கிறது? அதை எழுதியது யார்? கடவுள் தீர்ப்பு செய்வதற்கு, நபிகளையும், சாட்சிகளையும் சார்ந்திருந்தால், அவர் எல்லாம் அறிந்தவர் ஆகமாட்டார். எல்லாம் வல்லவர் ஆகமாட்டார். முன் வினைப்படிதான் அவர் நீதியோ, அநீதியோ செய்ய முடியும். இந்த வினைகள் பல பிறவிகளில் நிகழ்ந்திருக்க வேண்டும். அப்போது மன்னிப்பதும், மனத்தில் முத்திரை போடுவதும், சைத்தான் மயக்குவதும், கடவுள் வழி காட்டாது விசாரணையில் வைப்பதும், அநீதியாகும். (136)

137. "அறிவுக் கடவுளே! குரான், ஆயத்துகளை விளக்கம் செய்தார்."

(ம. 6 : சி. 24 : சூ. 40 : ஆ. 2, 3)

ஆய்வு: இதெல்லாம் அல்லாவின் பெயரால், சாதாரண மக்கள் இந்த நூலை மதிக்கச் செய்வதற்குச் சூழ்ச்சிகளாகும். ஏதோ சில உண்மைகள் இருக்கின்றன. மற்றதெல்லாம் கட்டுக் கதை. பொய்களினால் உண்மை கூட திரிபுற்றது. ஆதலால், குரான் கடவுளும், அதை நம்புவோரும், பாபத்தை வளர்ப்பவராவார், தீமையைத் தூண்டுவோராவார். பாவங்களை மன்னிப்பது பெரிய அநீதி. அதனாலே தான் முஸ்லிம்கள் பிறர் அமைதியைக் கெடுத்து, பாபம் செய்யக் கூசுவதில்லை. (137)

138. (1) இரண்டு நாளில் ஏழு வான்களாகப் பிரித்தார். ஒவ்வொரு வானுக்கும் அததன் கடமையை நியமித்தார். (2) அவர்களுடைய விசாரணை வரும் நாளில் அவர்களுடைய காதுகள், அவர்களின் கண்கள், அவர்களின் தோள்கள்கூட அவர் செய்த கர்மங்களுக்கு சாட்சி கூறும். "நீங்கள் ஏன் எங்களுக்கு எதிராகச் சாட்சி கூறுகிறீர்கள்?" என்று அவர்கள் தங்கள் தோள்களை நோக்கிக் கேட்பார்கள். "கடவுளே எங்களைப் பேசச் சொன்னார். கடவுளே எல்லாவற்றிற்கும் பேச்சைத் தருகிறார்" என்று அந்தத் தோள்கள் பதிற் சொல்லும். (3) அவர், நிச்சயமாகப் பிணத்தை எழுப்புவார். (ம. 6 : சி. 24 : சூ. 41 : ஆ. 12, 20, 21, 39.)

ஆய்வு: (1) ஓ, முஸ்லிம்களே! பாருங்கள் உங்கள் கடவுளை! அவரைச் சர்வவல்லவன் என்கிறீர்கள். இரண்டு நாட்களில் ஏழு வான்களைப் படைத்தாராம்! சர்வ சக்திமான் ஒரு நொடியில் எல்லாவற்றையும் உண்டாக்குவான். காது,

கண், தோள் இவையெல்லாம் உயிரற்றவை. அவை எப்படிச் சாட்சி சொல்லும்? கடவுள் அவற்றை ஜடமாகவே உண்டாக்கினர். அவை சாட்சி சொல்லுவதானல் ஏன் ஜடமாகப் படைத்தார்? ஏன் அவருடைய நியமத்தைத் தலைகீழாகத் திருப்பினர்? இதைவிடப் பெரிய பொய் ஒன்று இருக்கின்றது. தோள்கள் ஜீவர்களுக்கு எதிரிடையாகச் சாட்சி சொல்லும்போது, ஜீவர்கள், 'எங்களுக்கு விரோதமாக ஏன் சாட்சி சொல்லுகிறீர்கள்?' என்று கேட்டனவாம். அப்பொழுது தோள், "கடவுள் தான் அப்படிச் செய்யச் சொன்னர். நாங்கள் என்ன செய்வோம்" என்று சொல்லும். இது நடக்கிற காரியமா? செத்தாரை எழுப்புவது, 'மலடி மகனைப் பார்த்தேன்' என்பது போலாகும். அவளுக்கு மகன் இருந்தால், அவள் மலடி அன்று. மலடி ஆனல் மகன் இருக்காது. இது கட்டுக் கதை. அவர் செத்த பிணத்தை எழுப்புவதானல், அவர்களை ஏன் சாகடிக்கிருர்? அவனும் பிணமாக முடியுமா? இன்றேல் பிணத்தை வெறுப்பதேன்? கயாமத் இரவு வரையில் எந்தப் பிணம் முஸ்லிம் வீட்டிலேயே இருக்கும்? குற்றமில்லாமல் அவர்களைக் கடவுள் விசாரணைக் கைதியாக வைப்பானேன்? உடனுடன் ஏன் தீர்ப்புச் சொல்லவில்லை? இவையெல்லாம் கடவுள் தன்மைக்கே மாசாகும். (138)

139. (1) மண், விண்—இரண்டின் கொத்துச் சாவிகளும் அவனுடையவை. அவர் விரும்பிய பேருக்கு, நிரம்ப உணவு தருகிருர். மற்றவருக்குத் தன் இஷ்டப்படி குறைத்துத் தருகிருர். (2) எது விருப்பமோ, அதைப் படைக்கிருர். யாருக்கு வேண்டுமோ, அவருக்கு மகளைத் தருகிருர். யாருக்கு வேண்டுமோ அவருக்கு மகனைத் தருகிறர். அவர் விருப்பப்படியே சிலருக்கு ஆண் பிள்ளைகளையும், பெண் பிள்ளைகளையும் சேர்த்துத் தருகிருர். யாரை வேண்டுமென்ருலும், குழந்தை இல்லாமல் ஆக்குகிருர். (3) கடவுள் நேராகப் பேசும்படியாக யாருக்கும் அவ்வளவு வல்லமை இல்லை. என் வாக்குகள் மூலமாகத்தான் அவர் பேசுகிருர்.* அவர் திரை மறைவிலிருந்து பேசுகிருர். அல்லது ஒரு நபியை அனுப்பி அவர் மூலம் அல்லாஹ் அருளுகிருர். (ம. 6 : சி. 25 : சூ. 42 : ஆ. 12, 49, 50, 51

* (1) இந்த ஆயத்தை விளக்கும்போது, "தக்ஸீரே ஹுஸேன்" எழுதுவதாவது : "முகமது, இரண்டு திரைகளுக்குப் பின்னல் இருந்தார். அவர் கடவுளுடைய குரலைக் கேட்டார். ஒரு திரை, ஜரிகை வேலையால் ஆனது. மற்றொன்று, முத்துக்களால் ஆனது. இரண்டிற்கும் இடையே எழுபது ஆண்டு பிரயாணம் இருக்கிறது."

இப்போது அறிவாளிகள் சிந்திக்கட்டும். அல்லா கடவுளா? அல்லது பர்தாப் பெண்ணா? இவர்கள் கடவுளைத் துர்த்தசைக்கு கொண்டு வந்துவிட்டார்கள்.

ஆய்வு: (1) அல்லாவிடம் கொத்துக் கொத்தாகச் சாவிகள் இருக்கவேண்டும்! ஏனென்றால் அவர் கணக்கற்ற கதவு களைத் திறக்கவேண்டியிருக்கிறது. இது சிறுபிள்ளைத் தனமாய் இருக்கிறது! புண்ணிய பாவங்களைப் பார்க்காமல், அவர் எவருக்கும் செல்வம் தருகிறாரா? அவரவர் வினை களைப் பார்க்காமல், எல்லாருக்கும் சலுகை தருகிறாரா? அப்படியானால், அவர் பெரிய அநியாயவாதியே. (2) குரான் செய்தவனின் சாதுர்யத்தைப் பாருங்கள். அவர் மனிதரை வலைபிடிக்கிறார். அவர் நினைத்ததை ஆக்குவதானால், இன்னொரு கடவுளை உண்டாக்கமுடியுமா? இன்றேல் அவ ருடைய முற்றறிவிற்கு முற்றுப்புள்ளி வைக்கவேண்டியது தான். அவர் நினைத்தவருக்கு, மகனையும், மகளையும் தருகிறாராம். அப்படியானால், கோழிகள், மீன்கள், பன்றிகள் ஏராளமான ஆண், பெண் குட்டிகளைப் போடுகின்றனவே; அவற்றையும், அல்லாஹ்தான் தந்தாரா? ஆண், பெண் சேர்க்கை இல்லாமல், அவர் குழந்தைகளைத் தருவாரா? சில பெண்களை அவர் மலடாக்குவதேன்? (3) கடவுள் முன் னிலையில் யாரும் பேசக் கூடாதாம். அவர் அவ்வளவு தேஜஸ்வியாம். ஆனால், படுதாவுக்குப் பின்னிருந்தும், வானோர் மூலமும், நபிகள் மூலமும் அவர் பேசுவாராம். இந்த வானோர்களும், நபிகளும், இப்படித் தங்கள் காரியத் தைச் சாதிக்கிறார்கள். கடவுள் எல்லாம் அறிந்தவரானால், எங்கும் நிறைந்தவர் ஆனால், படுதாவிற்குப் பின்னிருந்து, பேசுவதும் அல்லது தபால் மூலமாக உரையாடுவதும் நம்பத் தகாததாகும். அவர் அப்படிச் செய்தால் கடவுளல்ல. ஏதோ, அறிவாளியாய் இருக்கலாம். ஆதலால், குரான் தெய்வ வாக்கில்லை. (139)

---

வேதமும் உபநிஷத்தும் விளம்பும் கடவுள் எங்கே? படுதாவிற்குப் பின் நின்று பேசும் குரான் கடவுள் எங்கே? உண்மை என்னவென்றால், அராபியர்கள் படிப் பில்லாதவர்கள். அதனால் சரியாக, உண்மையை ஊகிக்க முடியாதவர்கள்.—(சுவாமி தயானந்தர்).

(2) தஃப்ஸிரே ஹுஸேன், உருதுவில், "தஃப்ஸீரி காதிரி" என்ற பெயரால், மௌலானா ஃபக்ருதீன் அகமது பாதிரியால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. அதன் ஐந்தாவது பதிப்பை, 1896-ஆம் வருடம், (ஹிஜ்ரி 1307-ல் லக்னோ நாவல் கிஷோர் அச்சகத்தில் வெளியிட்டிருக்கிறார்கள். அதன் இரண்டாவது பாகம் 3?8-வது பக்கம் பார்க்கவும்.)

140. ஏசுநாதர், கண்ணுக்கு மெய்யான ஆச்சரியங்களைச் செய்து வந்தார்.
(ம. 6 : சி. 25 : சூ. 43 : ஆ. 63.)

ஆய்வு: ஏசுவும் கடவுள் தூதரானால், அவருக்கு எதிராகக் கடவுள் ஏன் குரானைச் சொல்லவேண்டும்? இஞ்சில் (பைபிள்) வேறு, குரான் வேறு; இரண்டுமே கடவுள் நூல் இல்லை. (140)

141. (1) அவனைப் பிடித்து இழுத்து நாகத்திலே தள்ளு.
(2) அகன்ற விழியுள்ள அழகான மாதரை, அவர்களுக்கு மனைவியராகத் தந்தோம். (ம. 6 : சி. 25 : சூ. 44 : ஆ. 4 , 54.)

ஆய்வு: ஆட்களைப் பிடித்து இழுத்துச் செல்லும் கடவுளின் நியாயம் என்னே! முஸ்லிம் கடவுளே அப்படியானால், அவருடைய அன்பர்கள், அனாதைகளையும், ஏழைகளையும், இழுத்துச் செல்வதில் ஆச்சரியமில்லை. உலகோர் போலவே அவரும் திருமணங்களைச் செய்கிறார். அவர் முஸ்லிம்களின் புரோகிதரா? (141)

142. (1) காபிரிகளைக் கண்டதும், கழுத்தை வெட்டுங்கள். அவர்களைக் கட்டிக் கொன்று குவியுங்கள்.
(2) உன்னைத் துரத்திய ஊரைக் காட்டிலும், மிகவும் பலம் பொருந்திய ஊர்கள் எத்தனையோ இருந்தன. இருப்பினும், அவற்றை நாம் அழித்துவிட்டோம். அவர்களுக்கு உதவி செய்ய யாருமே இல்லை.
(3) ஈமான் கொண்டவர்களுடைய சுவர்க்கத்தின் வர்ணனை: "அங்கே, தெளிவான ஆறுகள் ஓடும். பாலாறுகள் எப்போதும் பாயும். சாராய நதிகள் ஓடும். குடிப்பவர் இன்புறுவர். அங்கே, தெளிந்த தேனருவி ஓடும். வேண்டிய கனிகள் எல்லாம் இருக்கும். எல்லாம் ஆண்டவன் தருபவை.
(ம. 6 : சி. 26 : சூ. 47, ஆ. 4, 13, 15.)

ஆய்வு: இதனாலேதான் கடவுளும், குரானும், முஸ்லிம்களும், சட்டத்தை மீறி எல்லாரையும் தொல்லை செய்து, இரக்கமில்லாமல் சுயநலம் சாதிக்கிறார்கள் என்கிறோம். இதேவிதமாக மற்ற மதத்தினர் முஸல்மான்களை நடத்தினால், அவர்கள் துன்புறமாட்டார்களா? கடவுள் பெரிய ஓரக பேர்வழி! மகமதை விரட்டி யடித்தவரை அவர் அழித்து விட்டார். குரானின் சுவர்க்கத்தில் தெளிந்த நீரும், பாலும், கள்ளும், தேனும் நதிபோல் ஓடுகிறதாம்! இது, உலகை விட எப்படி மேலானது? பாலாறு எங்காவது உண்டா? அது

சிறிது நேரத்தில் கெட்டு திரிந்து போகுமே? இதனால்தான், குரான் மதத்தை அறிவாளிகள் ஏற்பதில்லை. (142)

143. (1) பூமி பலமாக அலுங்கிக் குலுங்கும்போது, மலைகள் குலைந்து சாய்ந்து தூள் தூளாகும்போது (2) வலக்கைப்புறம் தோழர் (3) இடக்கைப்புறம் தோழர் (4) பொன்னும் மணியும் பொலியும் மெத்தைகளில் எதிரெதிர் அமர்ந்து, சுகமா யிருப்பார்கள். என்றும் இளைஞர் சாராயக் கோப்பைகளுடனும் கூஜாக்களுடனும் சுற்றிவருவார்கள். சாராயம் நிரம்பக் குடிப்பதால் அவர்கள் தலைநோகாது, சுழலாது, மயங்காது அத்துடன் அவர்கள் விரும்பிய கனிகளும், பறவைக்கறிகளும் நிரம்பக் கிடைக்கும். சிப்பியில் முத்துப்போல இளங்கருவிழி மாதர் அவர்களுடன் இருப்பார்கள். (5) உயர்ந்த மெத்தைகளே (6) தனித்திறமையால் நாங்கள் தனியழகு பொலியும் பெண்களை என்றும் கன்னிகளாகப் படைத்தோம். சமவயதுள்ள கணவர் அவர்களைக் காதலிப்பார்கள். (7) உங்கள் வயறுகளை அவ்வாறு நிரப்புவார்கள். (8) வீழும் நட்சத்திரங்கள் மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறோம்.

(ம. 7 : சி. 27 : சூ. 56 : ஆ. 4, 5, 6, 8, 9, 15, 16, 17, 18, 19, 20, 21, 22, 23, 34, 35, 36, 37,, 53, 75.)

ஆய்வு: குரான் செய்தவரின் லீலையைப் பாருங்கள். உலகம் இப்போதும் அசைகிறது; அப்பொழுதும் அசைந்துக் கொண்டுதான் இருந்தது. குரான் செய்தவர் உலகம் அசையாது என்கிறார். என்ன மலைகளும் பறவைகளைப் போலப் பறக்குமா? அவை சிறு சிறு விட்டில்கள் போலப் பறப்பதனால் அவற்றுக்கு உடல்கள் இருக்க வேண்டுமே. அப்படியானால் மறுபிறப்பு உண்டல்லவா? கடவுளுக்கு உடல் இல்லாவிட்டால், அவர்கள் அவருடைய வலப்புறமும், இடப்புறமும் எப்படி அமர்ந்திருக்க முடியும்.

அவர்களுடைய மெத்தை தங்கச் சரிகையினால் ஆனவாம். அப்படியானால் அங்கே தச்சரும் பத்தர்களும் இருப்பார்களே; அந்த மெத்தைகளில் முகட்டுப் பூச்சிகள் புகுந்தால் அவர்கள் இரவில் அமைதியாக உறங்க முடியாதே.

சுவர்கத்தில் அவர்கள் திண்டுகளில் சாய்ந்துகொண்டு சோம்பேறியாய் இருக்கிறார்களா அல்லது வேலை செய்கிறார்களா? அவர்கள் சும்மாயிருந்தால் தின்ற சோறு செறிக்காதே. அவர்கள் நோயுற்று இறப்பார்களே. அவர்கள் அங்கே வேலை செய்கிறார்கள் என்றால், உங்கள் சுவர்க்கமும் உலகத்தைப் போலத்தான். இங்கே வேலை செய்தால் கூலி கிடைக்கும். அங்கும் அதே மாதிரியானால் உலகத்தை விட சுவர்க்கம் என்ன உயர்வு?

அங்கே இளைஞர் எப்போதும் இருக்கிறார் என்றால் அவர் பெற்றோர், உறவினர், மாமியார், மாமனார் எல்லாரும் இருக்க வேண்டுமே. அப்போது அது பெரிய ஊராகிவிடுமே. அப்போது மல மூத்திராதிகள் நிறைந்து நோய் உண்டாகுமே!

அவர்கள் கனிகளுண்டு, கோப்பைகளில் நீர் பருகி, கிண்ணங்களில் சாராயம் குடித்து, பட்சிகள், மிருகங்களின் மாமிசங்களைத் தின்று, கண்டபடி திரிந்தால் அதற்கேற்ற தொல்லையும் உண்டாகுமே? மாமிசத்திற்காக பட்சிகளையும் விலங்குகளையும் கொல்லவேண்டும். அவற்றின் எலும்புகள் இங்கும் அங்கும் சிதறிக் கிடக்கும். மாமிசம் விற்க கசாய்க் கடைகளும் அங்கு இருக்கவேண்டும். சுவர்க்க வர்ணனை மிக நேர்த்தி! அது அராபியாவை விட ஒரு படி மேலே போகிறது!! அவர்கள் ஊனுண்டு சாராயம் குடித்து போதை ஏறினால், சுகபோகத்திற்கு பெண்களும் யுவர்களும் இருக்கவேண்டும். இன்றேல் அவர்கள் மதமேறி கண்டபடி காமப் பித்தராவார்கள். அத்தனை ஆண் பெண் இருப்பதால் படுக்கை அதிகமாகத்தான் இருக்கவேண்டும். கடவுள், சுவர்க்கத்தில் கன்னிகளைப் படைத்ததால் இளங் காளைகளையும் படைத்திருக்க வேண்டும். இவ்வுலகிலிருந்து போகும் நபர்களுக்கு அவர்களைத் திருமணம் செய்து வைப்பதாகக் கடவுள் எழுதுகிறார். நித்திய யுவர்கள் கதியென்ன? அவரும் கன்னிகைகளுடன் மணங்கொள்வரோ? அல்லது மேற்சொன்ன நபர்களிடம் தரப்படுவார்களோ? அதைப்பற்றிக் கடவுள் பேசாததேனோ? சம வயதுப் பெண்கள் உண்டானால் அவர் கணவர் மனைவியரைவிடப் பாதி அதிகம் வயதுள்ளவராவாரே? முஸ்லிம் சுவர்க்க வர்ணனை இதுதான்!

நரகத்தில் இருப்பவர்கள் முட்கனிகள் உண்டு சுடு தண்ணீர் குடிப்பார்களோ? நரகத்தில் முட்செடிகளே அதிகமாயிருக்கலாம்.

சத்தியம் செய்வது பொய்யர் வேலை. கடவுள் சத்தியம் செய்தால் அவரும் பொய்யிலிருந்து தப்ப முடியாதே. (143)

144. போர்க்கோலத்தில் தன்மதத்திற்காகப் போரடுவோர் அல்லாஹ்வுக்குப் பிரியமானவராவார். (ம. 7 : சி. 28 : சூ. 61 : ஆ. 4.)

ஆய்வு : இந்த மாதிரி உபதேசமே அராபியரிடையே போர் மூட்டித் துயர் விளைத்தது. மதத்தின் பெயரால் சண்டையும் பிரிவினையும் செய்பவன் கடவுளா? சமுதாயத்திற் சண்டை மூட்டுவோன் துன்பம் செய்பவனாவான். (144)

145. (1) நபியே, கடவுள் ஹலால் (நலப்) என்பதை நீ ஹராம் (தீது) என்பதேன்? அல்லா தயவுடன் மன்னிப்பார். நீ நின் மனைவியருடன் சுகபோகம் நுகரவேண்டும். (2) உன்னை அவர் விலக்கினால் அல்லாஹ் ஈமான்கொண்ட இன்னும் நல்ல மனைவியரை அவனுக்குத் தருவார். அவர் பக்தியும் பணிவும், உண்மையும், திண்மையும் கொண்டு நோன்புறுதியுடனிருப்பார்கள்.

(ம. 7 : சி. 28 : சூ. 66 : ஆ. 1, 5.)

ஆய்வு: இவற்றைக் கவனமாக நோக்குக. இவர் கடவுளா, அல்லது முகம்மது வீட்டுப் பணியாளரா? இந்த ஆயத்தைப் பற்றிய இரண்டு கதைகள் உள்ளன. முகம்மதுக்குத் தேன் சரபத்து மிகவும் பிரியம். அவருக்குப் பல மனைவியர் உண்டு. ஒரு மனைவி வீட்டில் சரபத்து குடித்து வெகு நேரம் இருந்துவிட்டார். இதனால் மற்ற மனைவியர் கசந்தனர்; முகம்மது இனி அவ்வாறு சரபத் குடித்துத் தாமதிப்பதில்லை என்று சபதம் செய்தார்.

இன்னொரு கதை: பல மனைவியருள் ஒருத்தி மிகப் பருமன்; அவள் வீட்டிற்கு ஓர் இரவு சென்றார். அவள் அங்கே இல்லை; தன் தந்தை வீடு சென்றிருந்தாள். முகமது ஒரு லவண்டியை அதாவது தாசியை அழைத்து அருள் புரிந்தார். மனைவி இதையறிந்து சினங்கொண்டாள். இனிமேல் அப்படிச் செய்வதில்லை என்று சத்தியம் செய்து இதை வேறு யாரிடமும் சொல்ல வேண்டாம் என்று முகம்மது மனைவியை வேண்டினார். மனைவி ஒப்பினாள். ஆனால் இதை இன்னொரு மனைவியரிடம் ஓதினாள். அதை ஒட்டியே இந்த ஆயத்து கடவுளிடமிருந்து இறங்கியது. "நபியே, கடவுள் உனக்கு அளிப்பதில் விலக்கில்லையே; ஏன் ஐயம்?" வீட்டு விவகாரத்தைத் தீர்ப்பது கடவுள் வேலையா என்று அறிவாளிகள் சிந்திக்கட்டும். முகம்மதின் நடத்தை தெரிந்ததே. இத்தனை மனைவியரைக் கொண்டவன் எப்படி பக்தனாகவோ, கடவுளின் நபியாகவோ இருக்க முடியும்? ஒருத்தியை அவமதித்து, இன்னொருத்தியை மதிப்பவன் அதர்மனாகிறான். இத்தனை மனைவியர் இருந்தும் பணிப் பெண்ணைச் சேருகிறவன் வெட்கமோ, அச்சமோ அறமோ இல்லாதவனே.

कामातुराणां न भयं न लज्जा ॥
(காமாதுராணாம் ந பயம் ந லஜ்ஜா)
காமுகனுக்கு அச்சமோ வெட்கமோ இல்லை.

கடவுள் முகம்மதுக்கும் அவர் மனைவியருக்கும் இடையே சண்டை தீர்ப்பவராகிறார்! இந்தக் குரான் கடவுளாலோ, அறிவாளியாலோ ஆக்கப்பட்டதல்ல என்பது தெளிவு!

இரண்டாவது ஆயத்தால் முகம்மது மனைவியருள் ஒருத்தி மனக்கசப்புடையவள் எனத் தெரிகிறது. இந்த மாதிரி மனங் கசந்தால் முகம்மதுக்கு அல்லாஹ் மிக அழகான பெண்ணைத் தருவார் என்று இந்த ஆயத்து அச்சுறுத்துகிறது. இதெல்லாம் கடவுள் செய்வதில்லை என்பது சிற்றறிவினரும் ஏற்பர். இதெல் லாம் கடவுள் செயலாயிருக்கவே முடியாது. இது சுயநலக்காரன் சொல்லுவது. கடவுள் சொல்லவேயில்லை. கடவுள் பெயரால் தனது காரிய சாதனைக்காக இடம் பொருள் ஏவலறிந்து முகம்மதே சொன்னது. முகம்மதுக்கு மனைவியரைக் கூட்ட கடவுள் என்ன நாசுகரா? (அந்தக் காலம் நாசுகரே பெண்ணைக் கூட்டுவது—நமது நாட்டில்). (145)

145. ஓ நபியே, காபிரிகளைத் தாக்குங்கள்; பகைவருக்கு கொடுமை செய்யுங்கள். (ம. 7 : சி. 28 : சூ. 66 : ஆ. 9.)

ஆய்வு : முஸ்லிம் கடவுளின் லீலையைப் பாருங்கள்! முஸ்லிம் அல்லாதவர்களுடன் போர்புரிய நபியையும், முஸ்லிம் களையும் தூண்டுகிறார். அதனுல்தான் முஸ்லிம்கள் தொல்லை செய்கிறார்கள். தொல்லை செய்யாமல் எல்லாருடனும் அவர்கள் நேசமாய் இருக்க பரமாத்மா அருளட்டும். (146)

147. (1) அந்தநாள் வானம் வெடித்து தூள்தூளாக உதிரும்; வானவர் பக்கத்தி லிருந்து அல்லாஹ்வின் சிம்மாசனத்தை மேலே தாங்கி நிற்பார்கள். அன்று றக்குத் தான் கடவுள் முன் எல்லாரும் விசாரணைக்கு வரவேண்டும். யாரும், எதையும் ஒளிக்க முடியாது. ஒவ்வொருவனுக்கும் அவனது வலக்கையில் கர்மபத்திரம் தரப்படும். அவன் கர்மபத்திரத்தை படியுங்கள் எனச் சொல்லுவான்.

(2) கர்மபத்திரத்தை இடதுகையில் பெற்றவன், 'ஐயோ, இந்த கர்ம பத்திரத்தை நான் பெறுமல் இருந்தால், நல்லதாயிருக்குமே' என்பான்.

(ம. 7 : சி. 29 : சூ. 69 : ஆ. 16, 17, 18, 19, 25.)

ஆய்வு : என்ன தத்துவம்! என்ன நீதி!! ஆகாயம் கிழிந்து விழுவதாம். அது என்ன துணியா? மேலே இருக்கும் உலகங்கள் ஆகாசம் என்பதும் அறியாமையாகும். இப்பொழுது குரான் கடவுளுக்கு உடம்பு இருப்பது உறுதி யாகிறது. ஏனென்றால் அவர் எட்டுப் பேர் தாங்கும் அரியணையில் அமர்ந்திருக்கிறார். இவையெல்லாம் உருவுள்ள

ஒருவர் தன்மையே. முன்னால் வருவதும், பின்னால் வருவதும், நிற்பதும், அமர்வதும், காரியம் செய்வதும் ஒரு உருவம் இருந்தாலொழிய முடியாத காரியம். உடல் இருக்கும் ஒருவன் ஒரே சமயத்தில் ஒரே இடத்திலேதான் இருக்க முடியும். அவன் எல்லாம் அறிந்தவனாக இருக்கமுடியாது. எங்கும் நிறைந்திருக்க முடியாது; எல்லாம் வல்லவனாக இருக்கமுடியாது; எல்லார் உயிர்களின் செயலை அறியவும் முடியாது. புண்யாத்மாக்களுக்கு கர்ம பத்திரத்தை வலது கையில் கொடுப்பது; அதை படித்த பிறகு சுவர்க்கத்திற்கு அனுப்புவது; பாபிகளுக்கு இடது கையில் கர்ம பத்திரம் தந்து அவர்களை நரகத்திற்கு அனுப்புவது; கர்ம பத்திரத்தைப் படித்த பிறகு திருப்பிச் சொல்வது எல்லாம் விநோதமாக இருக்கிறது. இவை எல்லாம் அறிந்த ஒருவர் செயலா? இல்லவே யில்லை; இவை சிறுபிள்ளை விளையாட்டே! (147)

148. (1) வானோர் மேலேறிச் செல்கிறார்கள். கபிரியேல் ஆவியும் ஒரேநாளில் மேலே செல்கிறது. சாபம் பெற்றவர்கள் ஐம்பதினாயிரம் ஆண்டுகள் தாமதிக்கிறார்கள். (ஒரு நாள் = 50 ஆயிரம் ஆண்டுகள்.)

(2) புதை குழியிலிருந்து அவர்கள் ஓடி வருகிறார்கள்-உருத் தொழுகைக்கு வருவது போல். (ம. 7 : சி. 29 : சூ. 70 : ஆ. 4, 43.)

ஆய்வு: ஒரு தினம் ஐம்பதினாயிரம் ஆண்டுகள் என்றால் இரவுகளும் அப்படித்தான் இருக்கவேண்டும். இரவு இல்லாமல் பகல் இல்லை. கடவுளும், வானோரும், கர்ம பத்திரங்களும், 50,000 ஆண்டு வரை நிற்பார்களா, அமர்வார்களா, உறங்குவார்களா, விழித்திருப்பார்களா? சரியாக இளைப்பாறவிட்டால் அவர்கள் நோயுற்று மெலிந்து சாவார்களே. புதை குழியிலிருந்து எழுந்து கடவுளின் மன்றத்திற்கு விரைந்தோடுவார்களாமே? எப்படி? அவர்களுக்கு யார் கட்டளை அனுப்புவார்கள்? அந்த கட்டளைகள் புதை குழிக்கு எப்படிப் போய்ச் சேரும்? நல்லவர்களும், பொல்லாதவர்களும், அவ்வளவு நீண்டகாலம் சிறையில் இருப்பதா? அது வரையில் கடவுளின் மன்றம் மூடியிருக்குமா? வானோர் சும்மா உட்கார்ந்திருப்பார்களா அல்லது என்ன வேலை செய்து கொண்டிருப்பார்கள்? அல்லது அவர்கள் தங்கள் இருக்கையில் அமர்ந்திருப்பார்களா, இங்கும் அங்கும் உலாவுவார்களா, உறங்குவார்களா, நாட்டியம் பார்ப்பார்களா, தமாஷா பார்ப்பார்களா அல்லது இளைப்பாறிக்

கொண்டிருப்பார்களா? இதைப் போலச் சிக்கலான இருள்மய குழப்பங்களை அறிவாளிகள் யாரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். (148)

149. உங்களை அவர்கள் பலவிதமாகப் படைத்திருக்கிறார். ஏழு வானங்களை அடுக்கடுக்காக உண்டாக்கி அவற்றிற்கு வெளிச்சம் உண்டாக்கி சந்திரனை வைத்தார். சூரியனை விளக்காக ஏற்றி வைத்தார்.
(ம. 7 : சி. 29 : சூ. 31 : ஆ. 14, 15, 16.)

ஆய்வு : ஜீவர்கள் கடவுளால் படைக்கப்பட்டார்கள்; என்றாலும் அமரத்தன்மை பெற்றவர்கள் இல்லை. ஆகவே அவர்கள் சுவர்க்கத்தில் எப்பொழுதும் எப்படி இருக்க முடியும்? ஆக்கப் பட்டது அழிந்தே தீரும். அடுக்கடுக்காக வானங்கள் எப்படி உண்டாக்க முடியும்? வானம் என்றால் ஆகாசம். அது எங்கும் பரவியது; உருவற்றது. வானங்கள் வேறு வகையானால் ஆகாசம் என்பதேன்? வானங்கள் ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கப்பட்டால், அவற்றிற்கு நடுவே சூரியனும் சந்திரனும் இருக்க முடியாது. அப்படியிருந்தால் அந்த இடம் மட்டும் வெளிச்சமாயிருக்கும், மற்றவை இருட் டாயிருக்கும். ஆதலால் இந்தப் பேச்சு பிசகாகும். (149)

150. இந்த மசூதிகள் அல்லாஹ்வுக்கே உரியன. அதில் அல்லாஹ்வைத் தவிர வேறு எதையும் வேண்டக்கூடாது. (ம. 7 : சி. 29 : சூ. 72 : ஆ. 18)

ஆய்வு : எந்தப் பெயரையும், அல்லாவுடன் வைத்துத் தொழக் கூடாதாம். அப்படியானால் கலிமாவில் "லா இலாஹ இல்லில் லாஹ மகமத் ரசூலல்லா"......என்று அல்லா பெயருடன் முகமது சாகெப்பையும் வைத்து ஓதவானேன்? இது குரான் உபதேசத்திற்கு விரோதமில்லையா? இல்லையென்றால் இந்த ஆயத்து பொய்யாகும். மசூதி கடவுள் வீடானால் அது பெரிய மூர்த்தி பூஜையாகும். பௌராணிகளும், ஜைனர்களும் சிறு மூர்த்திகளை வழிபடுகின்றனர். அவர் களை உருவணங்கிகள் என்னும்பொழுது இவர்களை (முஸ்லிம்களை) ஏன் சொல்லக்கூடாது? (150)

151. சூரியனும் சந்திரனும் ஒன்றாய் இருக்கும்.
(ம. 7 : சி. 29 : சூ. 75 : ஆ. 9)

ஆய்வு : சூரியனும் சந்திரனும் எப்போதாவது ஒன்றாய் இருக்க முடியுமா? இதென்ன பிதற்றல்? சூரியன் சந்திரன்

மட்டுமென்ன? எல்லா உலகங்களும் ஒன்ருய் இருக்கக் கூடாது? காரணம் என்ன? இவை அசம்பவமானவை. இவை கடவுள் மொழியாக இருக்கமுடியாது. எந்த அறிவாளியும் இப்படி பேசமாட்டான். இது படிக்காதவர் பேச்சு. (151)

152. (1) வாடா இளமையர் அவர்களைச் சூழ்ந்துலாவுவர். பார்த்தால் முத்துக்கள் உருளுவது போலிருக்கும்.

(2) அவர்கள் வெள்ளிக் கங்கணம் அணிவார்கள். அவர்களுக்கு ஆண்டவன் மிகத் தெளிந்த சாராயம் தருவார்.

(ம. 7 : சி. 2) : சூ. 70 : ஆ. 19, 21.)

ஆய்வு : முத்தழகு வாலிபர் அங்கே ஏன் இருப்பது? அவர்களுக்கு ஐவான்கள் சேவை செய்யாரா? இளம் பெண்கள் அவர்களைத் திருப்தி செய்யாரா? துஷ்ட கில்லாடிகள் இந்த வாலிபருடன் மிக நீச்ச சேஷ்டை செய்வதற்கு, இந்த குரான் வசனங்களே மூலகாரணம், என்பதில் வியப்பில்லை! சுவர்க்கத்தில் எஜமான், சேவகன் என்ற வேற்றுமையுள்ளது. எஜமான் இன்புறுவது, சேவகன் துன்புறுவது என்ற வேறுபாடு ஏன்? கடவுளே அவர்களுக்குச் சாராயம் ஊற்றித் தரும்போது அவரும் சேவகராகிருர். அப்படியாளுல், கடவுளின் பெருமையென்ன? சுவர்க்கத்தில் ஆண் பெண் சேர்க்கை, பிரசவம், மக்கட்பேறு எல்லாம் உண்டோ? இன்றேல் அவர் சேர்க்கை பயனற்றது. உண்டேல், அவர்கள் ஜீவன் எங்கிருந்து வருகிறது? முதலில் கடவுளுக்குத் தொண்டு செய்யாமல் சுவர்க்கத்திற்கு ஏன் வருகிருர்கள்? அவர்கள் சுவர்க்கத்திலே பிறந்தவராளுல், முதலில் கடவுளை நம்பி அன்பு செய்யாமல் எப்படி சுவர்க்க பதவி கிடைத்தது? நம்பினவருக்கே சுவர்க்கம், புண்ணியம் செய்யாதவருக்கும் சுவர்க்கம் என்பது என்ன நியாயம்? (152)

153. அவரவர் கருமானுசாரமான பலன் கிடைக்கும். கிண்ணம் நிறைய கிடைக்கும். கேப்ரியேல், வானோர், அனைவரும் காத்துக் கொண்டிருப்பார்கள்.

(ம. 7 : சி. 3) : சூ. 28 : ஆ. 26, 34, 38.)

ஆய்வு : கருமத்திற்கேற்ற பலன் உண்டாவதளுல் சுவர்க்கத்தை ஹௌரிகளுக்கும், வானோர்களுக்கும், முத்தழகான யுவர்களுக்கும் எந்த நன்மைக்காக சுவர்க்கம் அளிக்கப்பட்டது? அவர்கள் கிண்ணங் கிண்ணமாக மதுபானம் செய்து

போதையில் சண்டை போட மாட்டார்களா? இங்கே காப்ரியேல் என்பது வானோருக்குத் தலைவன்; கடவுளுக்கு இந்த வானோர் படை சேர்த்து நிற்கிறார்களா? இந்தப் படை ஜீவர்களைத் தண்டிக்கவா? அங்கே கடவுள் நின்று கொண்டிருப்பாரா? உட்கார்ந்து கொண்டிருப்பாரா? இவ்வளவு படைகளையும் சேர்த்து சைத்தானைக் கைது செய்து தீர்ப்பு நாள் வரையில் காவலில் வைத்திருந்தால் அவர் அரசு அபாயமில்லாமல் இருக்குமே! அநியாயம் நடக்காமல் இருக்குமே? (153)

154. சூரியன் மடிப்புண்டு, நட்சத்திரங்கள் நிலை புரண்டு, மலைகள் குலைந்து ஆகாயம் தோல் உரிந்து வருந்தும். (ம. 7 : சி. 30 : சூ. 81 : ஆ. 1, 2, 3, 11.)

ஆய்வு: என்ன அறிவீனம்! உருண்டையாய் இருக்கும் சூரியனை மடிப்பதாம்; நக்ஷத்திரங்களை குலைப்பதாம்; மலைகளை உலுக்குவதாம்; ஆகாயம் ஒரு விலங்கா தோல் உரிக்க? எல்லாம் அறிவிலி பேச்சு! (154)

155. ஆகாயம் பிளக்கும்; நக்ஷத்திரங்கள் உதிரும்; ஆறுகள் கிழியும்; புதை குழிகள் திறக்கும், அவற்றிலிருந்து பிணங்கள் எழுந்திருக்கும்.
(ம. 7 : சி. 30 : சூ. 82 : ஆ. 1, 2, 3, 4.)

ஆய்வு: (1) குரான் ஆசிரியன் தத்துவ ஞானம், அடாடா! ஆகாயம் எப்படிப் பிளக்கும்? நக்ஷத்திரங்கள் எப்படி உதிரும்? மரங்களைப் பிளப்பதுபோல ஆறுகளைப் பிளக்க முடியுமா? புதை குழியிலிருந்து செத்தழுகிய பிணங்கள் எழுந்திருப்பதுண்டா? எல்லாம் சிறுபிள்ளைத்தனம்! (155)

156. (1) கோபுரம் கொண்ட வானத்தின்மேல் ஆணை;
(2) குரான் மகத்தானது; கல்லில் பதிவு செய்யப்பட்டது.
(ம. 7 : சி. 30 : சூ. 85 : ஆ. 1, 21, 22.)

ஆய்வு: (1) குரான் ஆசிரியருக்கு பூகோளமோ, வான நூலோ (ககோளம்) தெரியாது போலும்; தெரிந்தால் வானத்தைக் கோபுரம் கொண்ட கோட்டை எனமாட்டார். கோபுரம் என்றால் மேஷாதி ராசிகள் என்று வைத்துக்கொண்டாலும், மற்ற நட்சத்திரங்கள் ஏன் கோபுரம் ஆகவில்லை; உண்மையில் இந்த நட்சத்திரங்கள் எல்லாம் வானுலகங்கள்.
(2) குரான் கடவுளிடத்தில்தான் இருக்கிறதா? அது கடவு

ளால்தான் ஆக்கப்பட்டதா, அப்படியானால் அதில் உள்ள அபத்தங்கள் படுமோசமாக இருப்பதேன்? (156)

157. உண்மையாகவே அவர்கள் ஜாலக் செய்கிறார்கள். நானும் ஜாலக் செய்கிறேன். (ம. 7 : சி. 30 : சூ. 86 : ஆ. 15, 16.)

ஆய்வு : 'ஜாலக்' என்றால் ஏமாற்றுவது. கடவுள் ஏமாற்றுவாரா? திருட்டுக்குத் திருட்டு, பொய்க்குப் பொய்யே பதிலா? ஒரு கனவான் வீட்டில் திருடன் திருடினால் அந்தக் கனவானும் திருடன் வீட்டிலே திருடவேண்டுமா? குரான் ஆசிரியரே—பலே! பலே! (157)

158. முதல்வன் வரும்பொழுது வானோரும் வரிசை வரிசையாக வருவார்கள்; அன்றைய தினம் நரகமும் கொண்டு வரப்படும்.

(ம. 7 : சி. 30 : சூ. 89 : ஆ. 22, 23.)

ஆய்வு : கடவுள் ஒரு கோட்டைத் தலைவரா? அவர் படை படையாக தனது சேனையுடன் உலா வருகிறாரா? நரகமென்பது ஒரு ஜாடியா? அதை நினைத்த இடத்திற்கு கொண்டு போகலாமா? அது அவ்வளவு சிறிதானால் அதில் எண்ணற்ற கைதிகள் எப்படி அடங்கி இருக்க முடியும்? (158)

159. கடவுளின் தூதர் அவர்களுக்குச் சொன்னார்: "கடவுளின் பெண் ஒட்டகத்தை கவனமாகப் பார்த்துக்கொள்ளுங்கள். அதற்கு தண்ணீர் ஊட்டுங்கள்." ஆனால் அவர்கள் அவனைப் பொய்யனென்று கூறி ஒட்டகத்தின் காலை வெட்டிக் கொன்றுவிட்டார்கள். அதனால் அவர்களுக்கு ஆண்டவன் படுநாசத்தை செய்தான்.

(ம. 7 : சி. 30 : சூ. 91 : ஆ. 13, 14.)

ஆய்வு : கடவுள் கூட பெண் ஒட்டகத்தில் ஏறிச் சுற்றுகிறாரா? இன்றேல் அவர் ஏன் அதை வைத்துக்கொண்டிருக்கிறார்? தீர்ப்பு நாளைக்கு முன்பே ஏன் அவர் அழிவை அனுப்பினார்? தண்டனை என்பது தீர்ப்பு நாள் தானே வரவேண்டும்? இது வழக்கமான நீதியை பொய்யாக்க வில்லையா? பெண் ஒட்டகத்தைக் குறித்தது மற்ற மிருகங்களைவிட ஒட்டகங்கள் அரேபியாவில் அதிகமாக இருப்பதனாலேதான். அதனால் குரானை ஒரு அரேபியர் எழுதியிருக்கிறார் என்று தெரிகிறது. (159)

160. (1) அவன் பொறுக்காவிட்டால் அந்த பாவியின் குடுமியை பிடித்து வீழ்த்துவோம். (2) நரக தூதரையும் அழைப்போம்.

(ம. 7 : சி. 30 : சூ. 96 : ஆ. 15, 16, 17.)

ஆய்வு : தலைமயிரை இழுத்து வீழ்த்துவது கீழ்மக்கள் வேலை. இதை அல்லாஹ் செய்யலாமா? தலைமயிர் என்ன பாபம் செய்தது? தலைமயிர் பொய் சொன்னதா? பொய்யும் பாபமும் ஜீவனுக்கே. சிறைக் காவலனை நரகத்திலிருந்து அழைப்போன் கடவுளாவானா? இது சாதாரண உலக அரசர் செய்வதல்லவா? (160)

161. (1) நிச்சயமாக நாம் அல்காதர் இரவில் குரானை அனுப்பினோம்.

(2) அல்காதர் இரவு என்றால் என்ன? அதை எப்படி அறிவது?

(3) அப்போது கேப்ரியலுடன் இறைவன் உத்திரவுப்படி வானவர் இறங்கி வருவர். எந்தக் காரியமும் அவர்களால்தான் நடக்கவேண்டும்.

(ம. 7 : சி. 30 : சூ. 97 : ஆ. 1, 2, 4.)

ஆய்வு : குரான் ஒரு இரவில் தான் இறங்கினது என்பது, அந்த வாசகம் மட்டும் இரவில் வந்தது, மற்றதெல்லாம் படிப்படியாக வந்தது என்பதைப் பொய்யாக்குகின்றது. இரவு இருண்டது என்பதில் ஐயமில்லை. ஆனால் மேலும் கீழும் என்பது பொருந்தாது. வானோரும், கேப்ரியலும், அல்லா ஆணைப்படி உலக விவகாரங்களை நடத்த வந்தார்களாம். இது கடவுள் ஏகதேசி என்பதைக் காட்டுகிறது. இது வரையில் கடவுள், வானோர், நபி என்ற மூன்றைப் பற்றியே பேச்சு. இப்பொழுது புனித ஆவி (கேப்ரியல்) நுழைந்துள்ளது. இந்த நாலாவது புனித ஆவி என்ன? கிறிஸ்தவர்கள் பரமபிதா, மகன், பரிசுத்த ஆவி இந்த மூன்றைப் பற்றியே பேசுகிறார்கள். இங்கே நாலாவது ஒன்று வந்திருக்கிறது. இந்த நாலாவது தத்துவம் தனியானால் கடவுள், வானோர், நபி, எல்லாரும் புனித ஆவிகளன்றோ? அவர்கள் புனித ஆவிகளானால் தனியாக ஒன்றைச் சொல்லுவானேன்? குதிரை, விலங்குகள், இரவு, பகல், குரான் முதலிய பொருள்களின் மேல் கடவுள், சத்தியம் செய்கிறார். அப்படிச் செய்வது நல்ல மனிதருக்கு அழகில்லை. (161)

இதுகாறும் குரான் ஆராய்ச்சி புத்திமான்கள் முன்னே நிவேதிக்கப்பட்டது. இதிலிருந்து குரான் எப்படிப்பட்ட நூல் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். என்னைக் கேட்டால் குரான் கடவுளால் அருளப்பட்டதன்று. ஒரு அறிவாளி எழுதியது மன்று. அறிவு நூலு மன்று என்பேன். அதிலிருந்து சில

குறைகளை மட்டும் எடுத்துக் காட்டினேன். இந்த நூலைப் படித்து மக்கள் காலத்தை வீணாக்க வேண்டாம் என்பேன். அதிலிருக்கும் சில உண்மைகள் வேதத்திலும், மற்ற மெய் நூல்களிலும் உள்ளன. அவற்றை பட்சபாதம் இல்லாமல் அறிவாளிகள் மற்ற மதத்தினர் ஒப்புக்கொள்ளலாம். மற்றப்படி இந்த நூலில் உள்ளவை மடமையும், மயக்கமும் நிறைந்தவை. அவை மனிதனை விலங்காக்கி, அமைதியைக் கெடுத்து, குழப்பமும், கலகமும் உண்டாக்கும். சொன்னதைத் திருப்பித் திருப்பிச் சொல்கிறோம் என்றால் குரானும் கூறியதைக் கூறிக் கொண்டே இருக்கிறது. ஆண்டவன் கருணை கூர்ந்து எல்லாரிடமும் அன்பு கொள்ளவும், உண்மையாக எல்லார் நலத்திற்கும் பணி செய்யவும் நமக்கு அருளுக! நமது மதமாயினும் சரி, பிறமதமாயினும் சரி, துவேஷம் இல்லாமல் வெறியில்லாமல் நல்லது, பொல்லதை ஆராய்ந்து நல்லதைக் கொள்ளவேண்டும். அறிவாளிகள் அப்படிச் செய்தால் பகை, அசூயை இல்லாமல் ஒருவருக்கொருவர் அன்பாயிருந்து, உண்மை நிலையை அடையலாம்.

இங்கே குரானைப் பற்றி சிறிது எழுதினோம். அறிவாளிகள், அறவோர்கள் ஆசிரியரின் பண்பை யறிந்து அதனால் பயனடையட்டும். ஏதாயினும் தப்பாக எழுதப்பட்டிருந்தால் சரியாகத் திருத்திக் கொள்ளட்டும்.

இன்னும் ஒன்றுமட்டும் சொல்ல வேண்டியிருக்கிறது. பல முஸ்லிம்கள் அதர்வண வேதத்தில் குரானைப் பற்றி குறிப்பு உள்ளதாக நாட்டுகிறார்கள். அதர்வண வேதத்தில் பெயரளவில் கூட குரானைப் பற்றி ஒரு வார்த்தை கூட கிடையாது.

கேள்வி : அதர்வண வேதத்தை முழுதும் நீர் பார்த்ததுண்டா? அதில் அல்லோபநிஷத் படித்ததுண்டா? படித்திருந்தால் தெளிவாக குரானைப் பற்றி உள்ளது. குரானைப் பற்றியும், இஸ்லாமைப் பற்றியும் இல்லையென்று நீ எப்படி துணிந்து சொல்கிறாய்?

अथाऽल्लोपनिषदं व्याख्यास्यामः ॥

अस्माल्लां इल्ले मित्रावरुणा दिव्यानि धत्ते ॥

इल्लल्ले वरुणो राजा पुनर्द्दुः ।

हया मित्रो इल्लां इल्लल्ले इल्लां वरुणो मित्रस्तेजस्कामः ॥ १ ॥

होतारमिन्द्रो होतारमिन्द्र महासुरिन्द्रः ।
अल्लो ज्येष्ठं श्रेष्ठं परमं पूर्णं ब्रह्माणं अल्लाम् ॥ २ ॥
अल्लोरसूलमहामदरकबरस्य अल्लो अल्लाम् ॥ ३ ॥
आदल्लाबूकमेककम् ।
अल्लाबूकं निखातकम् ॥ ४ ॥
अल्लो यज्ञेन हुतहुत्वा अल्ला सूर्य्य चन्द्रसर्वनक्षत्राः ॥ ५ ॥
अल्ला ऋषीणां सर्वदिव्यां इन्द्राय पूर्वं माया परममन्तरिक्षाः ॥ ६ ॥
अल्लः पृथिव्या अन्तरिक्षं विश्वरूपम् ॥ ७ ॥
इल्लाँ कबर इल्लाँ कबर इल्लाँ इल्लल्लेति इल्लल्लाः ॥ ८ ॥
ओम् अल्लाइल्लल्ला अनादिस्वरूपाय अथर्वणाश्यामा हुँ ह्रीं जना-
नपशूनसिद्धान् जलचरान् अदृष्टं कुरु कुरु फट् ॥ ९ ॥
असुरसंहारिणी हुँ ह्रीं अल्लोरसूलमहमदरकबरस्य अल्लो अल्लाम्
इल्लल्लेति इल्लल्लाः ॥ १० ॥

इत्यल्लोपनिषत् समाप्ता ॥

அல்லோப நிஷத்தை அப்படியே தருகிறோம் பாருங்கள் :

அத அல்லோப நிஷதம் வ்யாக்யா ஸ்யாம :
அஸ்மால்லாம் இல்லே மித்ரா வருணு திவ்யானி தத்தே ॥
இல்லல்லே வருணோ ராஜா புனர்த்தது ॥
ஹயாமித்ரோ இல்லாம் இல்லல்லே இல்லாம் வருணோ
மித்ரஸ் தேஜஸ் காம : ॥ (1)

ஹோதாரமிந்த்ரோ ஹோதார மிந்த்ர மஹாஸுரிந்த்ரா : ॥
அல்லோ ஜ்யேஷ்டம் ஶ்ரேஷ்டம் பரமம் பூர்ணம்
ப்ரஹ்மாணம் அல்லாம் ॥ (2)

அல்லோரஸுலே மஹாமத ரக பரஸ்ய அல்லோ
அல்லாம் ॥ (3)

ஆதல்லா பூகமேககம் । அல்லா பூக நிகாதகம் ॥ (4)

அல்லோ யக்ஞேன ஹுத ஹுத்வா ॥
அல்லோ ஸுர்ய சந்த்ர ஸர்வ நக்ஷத்ரா ॥ (5)

அல்லா ருஷிணும் ஸர்வதிவ்யாம் இந்த்ராய பூர்வம் மாயா
பரமந்த ரிக்ஷா : ॥ (6)

அல்ல : ட்ருதிவ்யா அந்தரிக்ஷ விஸ்வரூபம் ॥ (7)
இல்லாம் கபர இல்லாக்ம் கபர இல்லாம் இல்லல்லேதி
இல்லல்லா : ॥ (8)

ஓம் அல்லா இல்லல்லா அனுதிஸ்வரூபாய அதர்வணுஸ்யாமா ஹ்ராம் ஹ்ரீம் ஜனுை பசுனஸித்தான் ஜலசரான் அத்ருஷ்டம் குரு குரு பட் ॥ (9)

அஸுர ஸம்ஹாரிணீ ஹ்ரூ ஹ்ரீம் அல்லோரஸூல் மஹமதரக வரஸ்ய அல்லோ அல்லாம் இல்லல்லேதி
இல்லல்லா : ॥ (10)

இத்யல்லோபநிஷத் ஸமாப்தா ॥

இங்கே முகம்மது நபியைப் பற்றித் தெளிவாகச் சொல்லப் படுகிறது. இதனுல் இஸ்லாம் வேதத்திலிருந்து வந்ததென்பதை குறிக்கிறது.

பதில் : நீர் அதர்வண வேதத்தைப் பார்க்கவில்லையானுல் நம்மிடம் வாரும். தொடக்கம் முதல் இறுதி வரை பாரும். அல்லது அதர்வண வேதப் பண்டிதரிடம் சென்று, இருபது சாகைகளுள்ள அதர்வண வேத மந்திரங்களை அலசிப் பாரும். நபியைப் பற்றியோ, உங்கள் இஸ்லாமைப் பற்றியோ ஒரு வரிகூட இராது. இந்த அல்லோபநிஷத் அதர்வண வேதத்திலோ, கோபத ப்ராம்மணத்திலோ எந்த சாகையிலும் இல்லை. இது அக்பர் காலத்தில் யாரோ கட்டிவிட்டதாகத் தெரிகிறது. சமஸ்கிருதமும், அரபியும் தெரிந்த ஒருவர் கட்டுமானமே இது. ஏனென்ருல் அதில் அரபியும் சமுஸ்கிருதமும் கலந்துள்ளன. பாட்டைப் பாருங்கள் ; அஸ்மல்லான், இல்லா இரண்டும் அராபி ; மித்ர, வருண், திவ்யாணி தத்தே இவையெல்லாம் சமஸ்கிருதம். இதை எல்லா இடத்திலும் காணலாம். அல்லோப நிஷத்தை ஆக்கினவருக்கு கொஞ்சம் சமஸ் கிருதமும், அரபியும் தெரியும். ஆனுல் அதன் பொருளை ஆராய்ந்தால் அது அபத்தம், குதர்க்கம், அயுக்தம், வேத விரோதம், இலக்கணப் பிழை நிரம்பியதாக இருக்கிறது. இப்படி பல மதத்தினர், பல உபநிஷத்துகளை உண்டாக்கி யிருக்கிருர்கள். உதாரணமாக, ஸ்வரோபநிஷத், நரசிங்க தாபனி, ராமதாபனி, கோபால தாபனி முதலியன.

**கேள்வி :** உனக்கு முன் இப்படி யாரும் சொன்னதில்லையே! நீர் சொல்வதை எப்படி நம்புவது?

**பதில் :** நீ நம்பினாலும், நம்பாவிட்டாலும் என் உரையை மறுக்க முடியாது. உனது அல்லோப நிஷத்தை அதர்வண வேதத்திலோ கோபதத்திலோ அல்லது எந்த சாகையிலோ காட்டுமே. இருந்தால் ஒப்புகிறோம்.

**கேள்வி :** எங்கள் மதம் எவ்வளவு சுகமானது பாருங்கள். அதில் எல்லாவிதமான இன்பங்களையும் அனுபவித்து முடிவில் முக்தியும் பெறலாமே.

**பதில் :** ஐயா, எல்லா மதங்களும் தமதே நல்லது, பிற மதங்கள் தீயவை, என்றே சொல்லுகின்றன. தங்கள் மதத்தைச் சார்ந்தாலே முக்தி என்கின்றன. உங்களை நம்புவதா? அவர்களை நம்புவதா? உண்மை, அஹிம்சை, கருணை முதலிய குணங்கள் கொண்ட எல்லா சமயமும் நல்லதே. தர்க்க வாதம், சண்டை, பொறாமை, பகை, பொய் இவை எந்த மதத்திலிருந்தாலும் அது கெட்டதே. உமக்கு உண்மையான சமயத்தை பின்பற்ற விரும்பினால் வேதத்தை பின்பற்றவும்.

இனி சுருக்கமாக நமது கொள்கைகளென்ன, மறுப்புகளென்ன, என்பவை விளக்கப்படும்.

ஸ்ரீமத் தயானந்த ஸரஸ்வதியவர்கள் அருளிய
சத்தியார்த்தப் பிரகாசத்தில்
இஸ்லாமைப்பற்றி ஆராய்ந்த
பதினான்காம் அத்தியாயம்
முற்றிற்று.

ஓம்

# நாம் ஒப்புவதும் ஒப்பாததும்

ஸநாதன தருமமே நித்திய தருமம்; அதுவே உலகெலாம் போற்றும் சித்தாந்தம். அது எல்லா நாடுகள், எல்லா மாந்தருக்கும் முன்னும், இன்றும், பின்னும், என்றும், எவர்க்கும் உரியது. அதை யாரும் எதிர்க்க முடியாது. அறியாதார், ஒரு சம்பிரதாய விசேஷத்தால் குறித்த சமயத்தால் மயக்குண்டவர், அவர் பிரசாரங்களை வித்வான்கள் தர்மமென்று ஒத்துக்கொள்ள முடியாது. ஆழ்ந்த கல்வி, உண்மை, வாய்மை, மெய்ம்மை, பரோபகாரம், பாரபக்ஷமின்மை கொண்ட வித்துவான்கள் கொள்கை, உபதேசங்களை எல்லாரும் ஏற்கவேண்டும். இத்தகைய வித்துவான்கள் ஏற்கத் தகாவை என்று ஒக்கித் தள்ளிய வற்றை நாம் நம்பமுடியாது. வேதங்கள், மற்ற உண்மை நூல்கள், பிரம்மா முதல் ஜைமினி வரையில் மகான்கள் நம்பிய இறைவன் முதலிய அனைத்தையும் நான் ஒப்புகிறேன் என்று அறிவாளர் சகல நல்லோர் முன் அறைகூவுகிறேன். முக்காலும், எக்காலும், எல்லா மாந்தரும் ஏகமாக ஏற்ற கொள்கைகளே எனது கொள்கைகளாகும். நான் ஒன்றும் புதிதாகப் புகுத்த வில்லை; புது மதம் காணவில்லை. உண்மை எதுவோ அதை நம்பவேண்டும் என்பதே என் விருப்பம். பொய்யை அறவே விலக்க வேண்டும் என்று மற்றவரைக் கேட்டுக் கொள்கிறேன். எனக்கு ஓரகம் இருந்தால், சுயநலம் இருந்தால், ஆரியாவர்த்தத்தில் வழங்கும் ஏதாவது ஒரு மதத்தைப் பற்றிக் கொண்டிருப்பேன். இந்திய மதமானாலும் சரி, வேறு மதமானாலும் சரி, அதர்மத்தை நான் ஒருக்காலும் ஒப்பமாட்டேன். தர்ம யுக்தமான உபதேசங்களைத் தப்பமாட்டேன். நல்லதை மறுப்பது மனிதர்க்குத் தகாது. பிறர் இன்ப துன்பங்களையும் லாப நஷ்டங்களையும் தனதாக உணரும், சிந்தனைச் செல்வனே மனிதனாவான். அவன் அநியாயம் செய்யான். பலவான் ஆனாலும் அஞ்ச மாட்டான்; மெலிந்த தர்மவானை மதித்து நடப்பான். இது மட்டுமன்று; துணையற்று, மெலிவுற்று, திறமையற்று, வருந்தும் தருமவான்களை அவன் அறிந்து, போற்றி தன் சாமர்த்தியத்தால் அவர்களைக் காப்பாற்றி, அவர்கள் முன்னேற்றத்தைப் போற்றி, அவர்கள் அன்பிற்கு பாத்திரனாகவேண்டும். வலிவுள்ள

உலக அரசாக இருந்தாலும் கெட்டிக்காரனுக இருந்தாலும், தீங்கு செய்கிறவனை, பொல்லாதவனை, அடக்கி ஒழிக்கவேண்டும். தருமவான்களை பலமாக ஆதரித்து அதர்மப் பதர்களை வீழ்த்தி ஒழிக்க அயராது பாடுபட வேண்டும். இதன்பால் அவன் எல்லா இடர்களையும் துயர்களையும் பொறுத்து, தன் உயிரையும் தியாகம் செய்து தனது கடமையை விடாது காக்க வேண்டும். எனது கொள்கையைப் போற்ற பர்த்ருஹரி முதலிய மகான்களின் வாக்கை இங்கே தருகிறேன் :

1. निन्दन्तु नीतिनिपुणा यदि वा स्तुवन्तु,
लक्ष्मीः समाविशतु गच्छतु वा यथेष्टम् ।
अद्यैव वा मरणमस्तु युगान्तरे वा,
न्याय्यात्पथः प्रविचलन्ति पदं न धीराः

(பர்த்ருஹரி நீதி சதகம் 84)

நீதி நிபுணர்கள் நிந்திக்கட்டும்; அல்லது புகழட்டும். மகா லக்ஷ்மி செல்வத்தை கொண்டு வரட்டும் அல்லது செல்லட்டும். மரணம் இப்போது வரட்டும் அல்லது பல்லாண்டுகளுக்குப் பிறகு (யுகாந்திரத்தில்) வரட்டும். தீரர்கள் நியாயமான வழியிலிருந்து தவறி நடக்க மாட்டார்கள்.

2. न जातु कामान्न भयान्न लोभाद्,
धर्मं त्यजेज्जीवितस्यापि हेतोः ।
धर्मो नित्यः सुखदुःखे त्वनित्ये,
जीवो नित्यो हेतुरस्य त्वनित्यः

(மகாபாரதம் உத்யோக பர்வம் 40-12)

காமம், பயம், லோபம், இவற்ருல் வழி தவறி, தருமத்தை விலகக் கூடாது. அதர்மம் செய்து தன் உயிரைக் காப்பாற்ற முடியும் என்ற நிலையிலும் தருமத்தை விடக்கூடாது. தர்மம் நித்தியம்; சுக துக்கங்கள் அநித்தியம். ஜீவோபாயம் மாறினுலும் ஜீவன் நித்தியமானது. (மகாபாரதம்)

3. एक एव सुहृद्धर्मो निधनेऽप्यनुयाति यः ।
शरीरेण समं नाशं सर्वमन्यद्धि गच्छति

(மனுஸ்மிருதி 8-15)

தர்மமே ஒருவன் நண்பன்; இறந்த பிறகும் தர்மம் நமது கூட வரும்; மற்றதெல்லாம் உடலுடன் அழிந்து போகும். (மனுஸ்மிருதி)

4. सत्यमेव जयते नानृतं सत्येन पन्था विततो देवयानः ।
येनाक्रमन्त्यृषयो ह्याप्तकामा यत्र तत्सत्यस्य परमं निधानम्

(முண்டக 4-3-1-6)

சத்தியமே வெல்லும்; அசத்தியம் வெல்லாது. அறிவாளிகள் உண்மை வழியிலேயே நடப்பார்கள். ஆப்த காமர்களான (வேண்டிய வேண்டியாங்கு எய்தியவர் ஆன) முனிவர்கள் பின் பற்றிய வழியே சத்திய வழியாகும். அது உயர்ந்த பயனைத் தரும். (உபநிடதம்)

5. नहि सत्यात्परो धर्मो नानृतात्पातकं परम् ।
नहि सत्यात्परं ज्ञानं तस्मात् सत्यं समाचरेत्

சத்தியத்தினும் உயர்ந்த தருமம் இல்லை. பொய்யினும் மகா பாதகம் இல்லை. சத்தியத்தை விட பரம ஞானம் இல்லை; அதனால் சத்தியமே என்றும் பயிலுக: (உபநிடதம்)

எல்லாரும் இந்த மகான்களின் உபதேசங்களைப் பின்பற்ற வேண்டும். இப்பொழுது நான் எதை நம்புகிறேன், எதை நம்பவில்லை என்பதை சுருக்கமாக விளக்குகிறேன். விவரங்களை இந்த நூலில் விரிவாக விளக்கியிருக்கிறேன்.

1. முதலில் கடவுளைப் பற்றி: கடவுளை ஈச்வரன், பிரம்மம், பரமாத்மன் முதலிய பேர்களால் அழைக்கிறோம். அவன் சச்சி தானந்த தன்மையுடையவன். அவனது குணகர்ம சுபாவம் மிகத் தூயன. அவன் எல்லாம் அறிந்தவன், நிர்க்குணன், நிரா காரன் (அருவன்) எங்கும் நிறைந்தவன். பிறவா முதல்வன், அனந்தன், சர்வ சக்திமான், நியாயகாரி. சர்வ சிருஷ்டி கர்த்தா. எல்லாவற்றையும் படைத்து, காத்து, துடைத்து ஜீவர்களின் வினைக்கு ஏற்ற பலனை சத்திய நியாயப்படி தருகிறவன். அவனையே நான் பரமேசனாக ஏற்கிறேன்.

2. நான்கு வேதங்கள்: வேத சம்ஹிதை அறிவு நிரம்பி யது. தர்ம யுக்தமான கடவுள் வாக்கு. அதன் மந்திர பாகம் மிகச் சிறந்தது. சிறிதும் மயக்கற்ற தெளிவான வேதத்தையே

நான் பிரமாணமாகக் கருதுகிறேன். அதையே பிரமாணமாக ஏற்றதனால், மற்ற நூல்களை அலட்சியம் செய்யவில்லை. வேதங்கள் தாமே தமக்கு அத்தாட்சியானவை. மற்ற எந்த நூல் களையும் சார்ந்தவை அன்று. சூரியனும், விளக்கும் தாமே ஒளி மயமாய் இருந்து உலகிற்கும் ஒளி தருகின்றன, அதே மாதிரி நான்கு வேதங்களும். நான்கு வேதங்களின் பிராம்மணங்கள்; ஆறு அங்கங்கள், ஆறு உபாங்கங்கள், நான்கு உபவேதங்கள். 1127 வேத சாகைகள் இவை எல்லாம் பிரம்மாதி மகரிஷிகளால் அருளப்பெற்று விரி உரையும் கோலப் பெற்றவையாம். வேதத் திற்கு அனுகூலமானவையே பிரமாணமாகும். வேதத்திற்கு எதிரானவை பிரமாணம் அன்று என்று உறுதிகூறுகிறேன்.

3. பட்சபாதமின்றி, நியாயமான, நேர்மையான உண்மை யான, கடவுளுக்கும் வேதத்திற்கும் விரோதமில்லாத ஒழுங்கான வாழ்க்கை நெறியே தருமம் ஆகும்: அதற்கு எதிராக, பட்ச பாதம், அநியாயம், பொய்மை, கடவுள் ஆணையை மீறியது, வேத விருத்தமானது—அனைத்தும் அதர்மம் என நினைக்கிறேன்.

4. ஜீவன் : விருப்புவெறுப்பு, இன்பதுன்பம், முதலிய குணமுள்ள சிற்றறிவினது; நித்தியமானது. (படைக்கப்பட்ட தன்று)—இதையே ஜீவன் என்கிறேன்.

5. ஜீவனும் ஈசுவரனும் இயற்கையில் வெவ்வேறு; ஆனால் வியாப்பியத்திலும், நிறைவிலும், தன் அறத்திலும் ஒன்றானவை. உதாரணம்: உருவான எல்லாப் பொருள்களும் ஆகாசத்தி லிருந்தும் முன்னும், இன்றும், என்றும் வேறு பட்டதில்லை. ஆனால் பொருளும் ஆகாசமும் என்றும் வேறு வேறு; அதே மாதிரியே பரமேசன் ஜீவருள்ளே நிறைந்திருக்கிறான். ஆனால் ஜீவன் வேறு ஈசன் வேறு. ஜீவன் உபாசகன்; இறைவன் ஜீவன் உபாசிக்கும் கடவுள். தந்தைக்கும் மகனுக்கும் எப்படி உறவோ அப்படியே ஜீவனுக்கும் இறைவனுக்கும்.

6. அனாதி வஸ்துக்கள் மூன்று: (1) ஈசன், (2) ஜீவன், (3) இயற்கை யுலகம் இவை என்றும் உள்ளன. நித்திய பதார்த் தங்கள்: என்றும் உள்ள பொருள்கள். முப்பொருளின் குண கர்ம சுபாவம் என்றும் உள்ளவை.

7. இவை மூன்றும் தன்மையில் அனாதி, சேர்க்கையால் (சம்யோகத்தால்) உண்டாகும் பொருள் (திரவியம்), குணம், சுபாவம் பிரிந்த (வியோகத்தின்) பிறகு இருப்பதில்லை; அவை

பிரிந்து போகின்றன. ஆனால், முதல் சேர்க்கை எதனால் உண்டானதோ அந்த சம்யோக ஆதிசக்தி (தன்மை) எப்போதும் நிலையானது. அவை மறுபடியும் கூடும்; அவ்வாறே பிரியும். ஆகவே, இம்மூன்று அனாதி வஸ்துக்கள் என்று நம்புகிறேன்.*

8. சிருஷ்டி என்பது நானாவஸ்த்துக்கள் ஞான-யுக்திக் கேற்றவாறு கலப்பதால் ஆகும் பல உருக்கள் ஆவது தான்.

9. சிருஷ்டியின் பயன் இறைவனின் குணகர்ம சுபாவங் களை அறிந்து ஜீவன் உய்வதேயாம். 'கண்ணின் பயன் என்ன?' என்று ஒருவன் கேட்டால் 'காண்பது' என்று பதில் சொல்லு வோம். அதேமாதிரி கடவுளின் சக்தி உலகத்தை ஆக்குவது விளக்கமாகிறது. வினைப்பயனை நுகர்வதே ஜீவனின் நோக்க மாகும்.

(சுவாமி தயானந்தர் இரண்டு தத்துவங்களை நாட்டுகிறார். (1) கடவுள் உலகை ஏன் படைக்கவேண்டும்? (2) உலகம் படைப்பால் நன்மை என்ன?)

10. இறைவனே உலகை படைக்கும் முதல்வன். உலகின் படைப்பணி பார்த்து இறைவனின் பெருமையை அறியலாம். விதையைப் போன்ற ஜடவஸ்துக்கள் ஒருவர் ஊன்றி வளர்த் தாலே முளைப்பதுபோல், உலக வளர்ச்சிக்கும், எழுச்சிக்கும் ஓர் இறைவன் வேண்டும்.

11. பந்தம் அவித்தையால் வருவது பாப கர்மங்கள்; கடவுளைத் தவிர வேறு பொருள்களை வணங்குதல் மடமை— இவற்றாலே துன்பம் விளைகிறது. நாம் விரும்பாமலே அதை அனுபவிக்கவேண்டி யிருப்பதால், பந்தம்-கட்டு, தளை எனப் படுகிறது.

12. முக்தி—என்பது பந்த விடுதலை; துன்பமற்ற வாழ்க்கை. கடவுளுணர்வுடன் உலகில் கட்டுமுட்டில்லாமல் வாழ்வது. முக்தி யின்பத்தைக் குறித்த காலம் அனுபவித்து மீண்டும் உலகிற்கே ஜீவன் வரவேண்டும். (மீளா-விடுதலை, நித்திய முக்தியால் தயானந்தருக்கு நம்பிக்கையில்லை; தொடங்கியதற்கு முடிவு முண்டு என்கிறார்.)

---

* சுவாமி தயானந்தர் ஜீவனும் ஈசனும் ஒன்று என்பதை ஒத்துக்கொள்வதில்லை. முக்திக்குப் பிறகுகூட அவை ஒன்றல்ல. ஜீவன் என்றும் இறைவனாகாது. இறைவன் ஆண்டான். ஜீவன் என்றும் இறைவனை வணங்குவதற்கே உரியது. இறைவன் தந்தை; ஜீவன் மகன்; உறவில் ஒன்றாயினும் உள்ளே தனித்தனிதான். சங்கராச்சாரி யார் ஜீவனே பிரம்மம் என்பதை தயானந்தர் நம்பவில்லை. ஜீவன் இறைவனின் அம்சம் என்று இராமானுஜர் சொல்வதையும் அவர் ஒத்துக்கொள்ளவில்லை*

13. முக்தி சாதனம்—இவையே: (1) ஈசுவரோபாசனை, (2) யோகாப்யாசம், (3) தர்மானுஷ்டானம், (4) பிரம்மசரியத்துடன் வித்தியாப்பியாசம், (5) நல்ல வித்துவான்களின் சங்கம், (6) ஸத்விசாரம் நன்னினைவு, (7) அறம்பொருள் இன்பம் வீடான புருஷார்த்தங்களைப் பெறுதல்—இவையேயாம்.

14. அர்த்தம்: நேர்மையாக உழைத்துப் பெறுதலே அர்த்தம் அல்லது பொருள் ஆகும். தீய வழியிலே பொருள் சேர்ப்பது அனர்த்தமாகும்.

15. காமம் என்பது தர்மத்தாலும் அர்த்தத்தாலும் பெறும் இன்ப நுகர்வாகும்.

16. வர்ணாசிரமம்: நான்கு வர்ணம், நான்கு ஆசிரமங்களை நான் நம்புகிறேன். குணகர்மத்திற் கேற்றபடியே வர்ணாசிரமம் அமையும்.

17. அரசன் என்பவன் குணகர்ம சுபாவத்தில் தூயவனாகி, பட்சபாதமில்லாமல் நீதி செலுத்தி தர்மத்தைக் காத்து, மக்களுக்குத் தந்தைபோல நலம் புரிவோன். தந்தை மக்களுக்கு எல்லா நன்மையும் செய்வது போலவே, அரசன் குடிமக்கள் செழிப்புக்கு எப்போதும் பாடுபடுகிறான்.

18. பிரஜைகள் அல்லது குடிகள் தூய குண கர்ம சுபாவத்துடன் ஓரகமில்லாத நேர்மையுடன் அறநெறி ஒழுக்கத்துடன், அரசனும் நாடும் ஆக்கமோங்க நலம்புரிவோர் ஆவார். கிளர்ச்சியும் புரட்சியுமின்றி மக்கள் அரசனைத் தந்தையெனக் கருதி நடக்கவேண்டும்.

19. நன்றாகச் சிந்தித்து பொய் விலக்கி மெய் போற்றி, அநீதி யின்றி நீதி செய்து, எல்லார் நன்மையையும் தனது நன்மைபோலக் கருதும் நேர்மையாளனே நியாயகாரி (நீதிமான்) ஆவான்.

20. தேவன் என்றால் நல்ல கல்விமான்; அசுரன் கல்லாத மூடப்பாவி; தீய பாபி அரக்கன்; பிசாசன் அனாசாரன்.

21. தேவபூஜை என்பது வித்துவான், மாதா, பிதா, ஆசிரியர், விருந்தாளி, நீதிமான், அரசன், தர்மாத்மா, பதிவிரதை, பத்னிவிரதை இவர்களுக்கு மரியாதை செய்வதே தேவபூஜையாகும். உருவணக்கம் (மூர்த்திபூஜை) கல் முதலிய ஜடவுருக்களைத் தொழுதல்—இவை பூஜைக்கு மாறாகும்.

22. சிக்ஷை: கல்வி, ஒழுக்கம், நன்னடை, அறம், நெறி, புலனடக்கம் இவற்றை வளர்க்கும், வித்தையானது. மடமையைப் போக்குவது.

23. புராணம்: பிராமணங்கள்—அதாவது பிரம்மா அருளிய ஐதரேயம் முதலியன, இதிகாசம், கல்பம் (சடங்கு முறை). காதா (வரலாறு) பெரியார் பெருமை, இவற்றைச் சொல்லும் பழைய அருள் நூல்களையே நான் புராணம் என்கிறேன். பாகவதம் முதலிய பதினெண் புராணங்களையும் நான் ஏற்பதில்லை.

24. தீர்த்தம் என்பது துன்பக்கடலிலிருந்து கரையேற்றுவது; உண்மை பேசுவது, கல்வி, யம நியமாதி யோகப்பியாசம், நான்கு புருஷார்த்தம், வித்தியாதானம் முதலிய நற்கடமைகளையே தீர்த்தம் என்று அறிகிறேன். இதர ஜல ஸ்தலாதிகள் அன்று.

25. புருஷார்த்தம் பிராரப்தத்தை விடப் பெரியது. ஏனெனில் புருஷார்த்தமம் சஞ்சிதப் ப்ராரப்தங்களைத் தீர்மானிக்கிறது. நல்ல முயற்சி வெற்றியைத் தருகிறது. முயற்சி வீணானால் எல்லாம் வீணாகும். முயற்சி திருவினையாக்கும். தளரா முயற்சி ஊழையும் வெல்லும்.

26. எல்லாரையும் ஆத்ம சமானமாகக் கருதும் மனிதன் மிக உயர்ந்தவன். இன்பம் துன்பம், லாபம் நஷ்டம், சிறப்பு இழிவு அனைத்திலும் அவன் சம புத்தியுடன் தன்னைப்போலப் பிறரைக் கருதி உதவுவான். இதற்கு எதிரானது தீயது என்கிறேன்.

27. ஸம்ஸ்காரம் என்பது பரிசுத்தப்படுத்தும் சடங்குகள் ஆகும். அது உடல் மனம் ஆத்மா அனைத்தையும் உத்தமமாக்குகிறது. கர்பதானம் முதல் சாகும் வரையில் 16 சம்ஸ்காரங்கள் உள்ளன. இந்த சம்ஸ்காரங்களை ஒவ்வொருவரும் செய்வது கடமை. ஆனால் இறந்த பிறகு, உடம்பு எரிந்த பிறகு திவசம் முதலிய சம்ஸ்காரங்கள் தேவையில்லை.

28. யஜ்ஞம் (வேள்வி) என்பது வித்துவான்களை உபசரித்தல், சில்ப இரசாயன பதார்த்த விஞ்ஞான வித்தைகளை வளர்த்தல், கல்வியைப் போற்றுதல், தான தருமங்கள் செய்தலாம். யஜ்ஞம் காற்று, மழை, தண்ணீர், மூலிகைகள் இவற்றைப் பரிசுத்தமாக்கும். அக்கினி ஹோத்திரம் என்பது மாந்தர் இன்புறும் நல்ல காரியங்களைச் செய்வதாகும்.

29. ஆரியன் என்பவன் சீரியன். தஸ்யூ என்பவன் தீயன். இந்த வார்த்தைகளை இவ்வாறே கருதுகிறேன்.*

30. ஆரியாவர்த்தம் என்பது உலகம் உண்டானது முதல் ஆரியர்கள் (இந்தியர்) வசித்துவந்த இடமாகும். அதன் வடக்கே இமாலயம், தெற்கே விந்தியம், மேற்கே அட்டக், கிழக்கே பிரம்ம புத்திராநதி சூழ்ந்த இடமெல்லாம் ஆரியாவர்த்தமாகும். இதில் வசிப்பவர்கள் எல்லாரும் ஆரியரே.

31. ஆசாரியர் என்பவர் வேத வித்தையை முற்றப் பயின்று மெய்யொழுக்கங் கொண்டு பொய்யொழுக்கத்தை நீத்தவர் ஆவார்.

32. சீடர் என்பவர் சத்திய தருமத்தைப் பயின்று நல்ல கல்வியை வளர்த்து அறிவைப் போற்றும் தருமாத்மாக்களாகி ஆசாரியர் மகிழும்படி நடப்பவர்.

33. குரு என்பது தாய் தந்தையருக்கும் பொருந்தும். சத்தியத்தை வளர்த்து அசத்தியத்தை நீக்கும் நல்லோர் குரு ஆவான்.

34. புரோகிதன் யஜமானுக்கு இதம் செய்கிறவன். சத்தியத்தை உபதேசிப்பவன்.

35. உபாத்தியாயர் வேதத்தில் எந்தக் கிளையையும் பயிற்றுவோன்.

36. சிஷ்டாச்சாரம் என்பது பிரமசரியம் காத்து கல்வி பயின்று அறவொழுக்கம் மேற்கொண்டு பிரத்யக்ஷாதி பிரமாணங்களால் மெய், பொய் இன்னதென்று அறிந்துகொண்டு பொய்யை விலக்கி மெய்யைப் போற்றுதல். இந்த ஒழுக்கம் உள்ளவன் சிஷ்டன் எனப்படுகிறான்.

37. நான் பிரத்யக்ஷாதிப் பிரமாணங்களை (நேர்முக அத்தாட்சிகளை) ஒப்புக்கொள்ளுகிறேன்.

---

* [ஆரியர் என்பது ஒரு ஜாதியையோ வகுப்பையோ குறிப்பதல்ல. ஆரியர் பழங்குடி மக்களாகிய தஸ்யூக்களை வென்று அடிமைப்படுத்தினர்கள் என்ற கதையை தயானந்தர் ஒப்பவில்லை. நல்ல தன்மையுள்ள நேர்மையுள்ள மனிதரே ஆரியர் என்பது அவரது நம்பிக்கை.]

38. ஆப்தன் என்பவன் உண்மைபேசி நேர்மையாக நடந்து எல்லாருக்கும் இன்பமளிக்கும் அறவோன்.

39. பரீட்சை என்பது ஐந்து வகைப்படும். (1) வேத சாஸ்திரப்படி கடவுளின் குணகர்ம விபாகங்களை அறிதல். (2) ப்ரத்யக்ஷம் முதலிய எட்டு பிரமாணங்களை அறிதல். (3) ஒழுக்க விதிகள் (சிஷ்டசார கர்மம்) (4) ஆப்தர்களின் நடைமுறை (5) ஆத்மசுத்தியைத் தரும் வித்தை. இந்த ஐந்து பரீட்சைகளால் மெய், பொய் இன்னதென்று அறிந்து பொய்யை விட்டு மெய்யைப் பின்பற்றவேண்டும்.

40. பரோபகாரம் என்பது எல்லா மனிதர்களும் துக்க துராசாரங்களை விட்டு உயர்ந்த இன்பம் நல்கும் நல்லொழுக்கங்களைப் பயின்று நன்மை செய்தலாகும்.

41. சுதந்திரம் பரதந்திரம்: ஜீவன் கர்மம் செய்வதில் சுதந்தரமுள்ளது. கர்மபலனை விதிப்பது கடவுள். ஆதலால் கர்மானுபவத்தில் பரதந்திர முடையது. ஈசன் தனது சத்தியாசார காரியங்களில் சுதந்தரனுவான்.

42. சுவர்க்கம் விசேஷ சுகானுபவமும், அதற்குரிய பொருள்களை அடைதலுமே சுவர்க்கம் ஆகும்.

43. நரகம் என்பது மிகவும் துக்கபோகமும் அதற்கிசைந்த பொருள்களை அடைவதுமாகும்.

44. பிறவி என்பது ஜீவன் உடலெடுப்பது. அது முன், நடு, பின் என்று மூன்று வகையாகும்.

45. ஜீவனும் தேகமும் சேர்வது பிறப்பு; பிரிவது இறப்பு.

46. விவாகம் என்பது விதிப்படி மனமொப்பிக் கைப் பிடித்தல் (பாணிக்கிரகணம்)

47. நியோகம் என்பது திருமணத்திற்குப் பிறகு, கணவன் அல்லது மனைவி இறந்தால், பிரிந்தால், அலியானால், மலடானால் தீராப்பிணியுற்றால், தனது வருணத்தைச் சேர்ந்த மற்றொரு ஆண் அல்லது பெண்ணால் சந்ததி பெறுவதாகும். ஆண் தனது வருணப் பெண்ணுடன், பெண் தனது வருண ஆணுடனே நியோகம் கொள்ளலாம்.

48. ஸ்துதி என்பது நற்குணங்களைப் பாடுதல், கேட்டல். இதன் பலன் மகிழ்வித்தல் முதலியவாம்.

49. பிரார்த்தனை என்பது ஒருவன் தன் முயற்சியெல்லாம் செய்த பிறகு, இறைவனை ஒரு நல்ல காரிய சித்திக்காக இறைஞ்சுவது. அதனால் செருக்கு முதலிய தீமைகள் குறையும்.

50. உபாஸனை என்றால் கடவுளின் குண கர்ம சுபாவங்களை உணர்ந்து அப்படியே தன் குணகர்ம சுபாவமும் விளங்க யோகப் பயிற்சி செய்தலாம். கடவுள் எங்கும் நிறைந்தவர். அவர் நம்முள் இருக்கிறார். நாம் அவருள் இருக்கிறோம். ஆத்ம ஞானமே உபாசனைப் பலன்.

51. சகுண நிர்க்குண ஸ்துதி என்பது கடவுளுக்கு இன்ன குணம் உள்ளது, இன்னது இல்லை என்பதாம். சகுண நிர்க் குணப் பிரார்த்தனையாவது நல்ல குணங்கள் ஓங்கவும் தீய குணங்கள் நீங்கவும் இறைவனை இறைஞ்சலாம். எல்லா நற்குணங்களும் கடவுளிடம் உள்ளன. அவரிடம் குறைகள் எவையும் இல்லை, அவர் மாசற்றவர் என்றுணர்ந்து, அடைக்கல மாக்குவதே சகுண நிர்க்குண உபாசனையாம்.*

இவையே எனது சொந்த சித்தாந்தச் சுருக்கமாகும். இதன் சிறப்பான விளக்கம் இதே சத்தியார்த்தப் பிரகாசத்தின் சகல அத்தியாயங்களிலும் உள்ளது. ருக்வேதாதி பாஷ்ய பூமிகா என்னும் நூலிலும் உள்ளது காண்க.

வாய்மை எல்லாருக்கும் உகந்தது, பொய்மை கசந்தது. இவ்வாறு எல்லாரும் ஏற்கும் சித்தாந்தங்களையே இங்கே போற்று கிறேன். மத மதாந்தரங்களிடையே பரஸ்பர விரோதங்கள் உள்ளன. அவற்றை நான் ஒப்பவில்லை. அவை எனக்கு உவந்தன இல்லை. வகுப்புவாதிகள் விரோதம் பேசி மனிதருக்கு மனிதர் பகை மூட்டினர். இந்தப் பகை-விரோதங்களை விலக்கி, மனிதரை ஒற்றுமைப்படுத்தி, வெறுப்பை ஒழித்து, எல்லாரும் இன்புறவே அன்பை வளர்ப்பதே எனது கொள்கையாகும், முயற்சியாகும். சர்வ சக்திமானான பரமாத்மா அருள்துணை

* சகுணம் என்பதை உருவணக்கம், நிர்க்குணம் என்பதை அருவான தியான வழிபாடு என்பர்; தயானந்தர் அவ்வாறு கொள்ளவில்லை. நீரின் இயல்பு-குளுமை, ஓட்டம், சூடு, கனம் என்பது நீரின் குணமன்று. அப்படியே கடவுளுக்கு இயல்பான கருணை, மாசற்ற தூய்மை முதலியன சகுணம்; கடவுளிடம் இல்லாத குறுகல் குறைவுகளை நீத்து அவரது சத்தியம், ஞானம்; அனந்தம் முதலிய குணங்களை நினைத்து அவருக்கு ஆத்ம ஸமர்ப்பணம் செய்வதே சகுணநிர்க்குண உபாசனை என்பது ரிஷியின் கருத்தாகும். (ஏழாம் அத்தியாயம் பார்க்கவும்)

யால், அறிவும் அன்பும் நிறைந்த வித்துவான்களின் சகாயத்தால். இந்தச் "சத்திய சித்தாந்தம் பூகோளமெங்கும் விரைவில் பரவி விளங்குக" என்று வேண்டுகிறேன். அதனால் எல்லாரும் இயல்பாகவே அறம், பொருள், இன்பம், வீடு (தர்மார்த்த காம மோக்ஷம்) அடைந்து, பரமானந்தம் பெறுதலே எனது நூலின் முதன்மையான பயனாகும். அறிவாளருக்கு இவ்வளவு போதும்.

ॐ शन्नो मित्रः शं वरुणः शन्नो भवत्वर्यमा। शन्न इन्द्रो बृहस्पतिः शन्नो विष्णुरुरुक्रमः॥ नमो ब्रह्मणे नमस्ते वायो त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि। त्वामेव प्रत्यक्षं ब्रह्म वदिषम् ऋतं वदिषम् सत्यं वदिषम् तन्मामावीत् तद्वक्तारमावीत्। अवीन्माम् आवीद्वक्तारम्॥ ओ३म् शान्तिः शान्तिः शान्तिः॥ 1 ॥ *

ஓம் சன்னோ மித்ரஃ சம் வருணஃ
சன்னோ பவத்யர்யமா॥
சன்ன இந்த்ரோ ப்ருஹஸ்பதிஃ।
சன்னோ விஷ்ணுருருக்ரமஃ॥
நமோ ப்ரஹ்மணே। நமஸ்தே வாயோ
த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி।
த்வாமேவ ப்ரத்யக்ஷம் ப்ரம்மா வாதிஷம்
ருதம வாதிஷம் ஸத்யம வாதிஷம்।
தன்மா மாவீத்। தத்வக்தார மாவீத்
ஆவீன்மாம் ஆவீத்வக்தாரம்—
ஓம் சாந்திஃ சாந்திஃ சாந்திஃ

[ஓம் அருளுக நலமே மித்திரன் வருணன்
ஆக்குக நலமே அரியமானன்
இந்திரன் பிருஹஸ்பதி இலக்குக நலமே!
நிறைந்த விஷ்ணு நிலவுக நலமே
வணக்கம் பரமா! வாயுவே வணக்கம்

* । இதன் மொழி பெயர்ப்பு நூல் தொடக்கத்தில் உள்ளது. அங்கே உண்மை யைப் பேச உறுதி பூண்டார்—இங்கே உண்மை பேசிவிட்டோம் என்று உவகை கூறுகிறார்.]

நீயே பிரம்மம்; நேர்வரும் இறைவன்
உறுதி கூறினேன் உண்மை யுரைத்தேன்
அது எனை ஆளுக! ஆளுக குருவை
என்னையும் குருவையும் இனிதாளுகவே
அமைதி ஓம் எங்கும் அமைதி அமைதியே]

இது ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரியார், பரமவித்வான்
ஸ்ரீவிரஜானந்த ஸரஸ்வதீஸ்வாமிகளின் சிஷ்யர்
ஸ்ரீமத் தயானந்த ஸரஸ்வதி இயற்றிய
நான் ஒப்புவதும் ஒப்பாததும்
என்ற அத்தியாயம் முடிவுற்றது.
இத்துடன் சத்தியார்த்தப் பிரகாசம்
முற்றிற்று.



